# வில்லி பாரதம்

ஆதி - சபா பருவங்கள் கொண்ட

## முதல் புத்தகம்



கலா நிலயம்

கே. ராஜகோபாலாச்சாரியார்



ஸ்டார் பிரசுரம்
72, பெரிய தெரு
திருவல்லிக்கேணி—சென்னை-600 005.
போன் 844740

முதற்பதிப்பு—செப்டம்பர், 1970.
இரண்டாம் பதிப்பு — டிசம்பர், 1985.


**விலை ரூ. 95-00**

BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Language | : | Tamil |
| Title of the Book | : | Villi Bharatham — 1 |
| Author | : | K. Rajagopalachariar |
| Translator | : | |
| First Edition | : | September, 1970 |
| Second Edition | : | December, 1985 |
| Copyright Holder | : | Star Publications, Madras-5. |
| Paper Used | : | 16kg. |
| Size of the book | : | 22×14 Cms. |
| No. of Copies | : | 1200 |
| Printing Points | : | 10 and 12 points |
| No. of pages | : | 912 |
| Binding | ; | Straw-Board |
| Printer | : | Vettri Achagam, Madras-14. |
| Price | : | Rs. 95-00 |
| Publisher | : | STAR PUBLICATIONS<br>72, Big Street,<br>Madras-600 005. |
| Subject | : | Epic - Literature |

# பதிப்புரை

பாரதம் வியாசரால் எழுதப் பெற்ற பெரிய நூலாகும். அதிலேயே இந்து மதத்தின் கண்ணாடி போன்ற ஸ்ரீமத் பகவத் கீதை உள்ளது. திருமாலின் ஆயிரம் பெயர்களைப் பேசிப் புகழும் விஷ்ணு சகஸ்ரநாமம் உள்ளது; காவியம் எழுதுவோருக்கு வழி காட்டி நூலாக உள்ளது; காவிய அணிகளும், நீதியுரைகளும் நிரம்பியுள்ளது. இவற்றையெல்லாம் எண்ணியே மகா பாரதம் என்று அதனைப் பெருமைப்படுத்திச் சொல்கின்றனர். 'மகா' என்ற அடைமொழி வேறு எந்தப் பழம்பெரும் நூலுக்கும் இல்லை.

மகாபாரதத்தின் பெரும் பிரிவு 'பருவம்' என்று கூறப்படும். இராமாயணப் பிரிவு 'காண்டம்' எனப்படுவது போலாகும் இது.

மொத்தம் பதினெட்டுப் பருவங்கள் உள்ளன பாரதத்தில். அவையாவன :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆதி | பருவம் | 10. | சௌப்திக | பருவம் |
| 2. | சபா | ,, | 11. | ஸ்த்ரீ | ,, |
| 3. | வன | ,, | 12. | சாந்தி | ,, |
| 4. | விராட | ,, | 13. | அனுசாசன | ,, |
| 5. | உத்யோக | ,, | 14. | அசுவமேத | ,, |
| 6. | பீஷ்ம | ,, | 15. | ஆரம | ,, |
| 7. | துரோண | ,, | 16. | மௌசல | ,, |
| 8. | கர்ண | ,, | 17. | மகாப்ரஸ்தான | ,, |
| 9. | சல்ய | ,, | 18. | ஸ்வர்க்கா ரோஷண | ,, |

இந்தப் பதினெட்டுப் பருவங்களும் பாண்டவர்களின் வரலாற்றினைக் கூறுவனவேயாகும். இவற்றுள் பத்துப் பருவங்களி

லுள்ள பாண்டவர் வரலாற்றினை மட்டுமே பாடி தருமபுத்திர னின் பட்டாபிஷேகச் செய்தியொடு தம் நூலை முடித்தார் வில்லி புத்தூரார். கண்ணன் புகழும் பெருமையும் இந்தப் பத்துப் பருவங்களிலுமே மிகுதியாக விரவி வருவதால் இவற்றைப் பாடினதாகத் தொடக்கத்தில் சொல்லித் தம் நூலைத் தொடங் குகிறார், தீவிர விஷ்ணு பக்தராகிய அவர். வடமொழியிலும் மிக வல்லுநராயிருந்த அவர் மிகச் சிறந்த முறையில் வடசொல் தமிழ்ச் சொற் கோவை அமைத்தும், படிப்போருக்கு உற்சாகத் தையும் எழுச்சியையும் ஊட்டும் சந்தப் பாக்கள் அமைத்தும் மிகவும் சிறப்பாக நூலைப் பாடியுள்ளார். இன்றும் கிராமப் புறத்து மக்களும் இவர் பாடல்களைப் பாடியும், தெருக்கூத்தாக ஆடியும் மகிழ்கின்றனர்.

மொத்தம் பத்துப் பருவங்கள் கொண்ட வில்லி பாரதத்தின், இத் தொகுதியில் முதல் இரண்டு பருவங்கள், அதாவது ஆதி பருவம், சபா பருவம் அடங்கியுள்ளது. பழுத்த தமிழறிஞர் திரு. கே. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள், செய்யுள் சந்தி பிரித்துச் சொற்களைக் காட்டுதல், கடின பதங்களுக்கு பொருள் விளக்கம், பாடல்களில் பயிலும் அணி விளக்கம், கடைசியில் கருத்து விளக்கம் என்ற முறையில் உரை எழுதி உள்ளார்கள். ஓரளவு தமிழ் கற்றவர்கள் கூட, இப் பாடல்களை எளிதில் படித்துப் பொருள் உணர்ந்து கொள்ளலாம்.

அடுத்த பருவங்கள், முறையே இரண்டாவது, மூன்றாவது தொகுதிகளாக வெளிவந்துள்ளன.

ஸ்டார் பிரசுரம்

# முன்னுரை

திருவுடைய நம் பாரத நாடெங்கும் பண்டைக் காலந் தொட்டுப் பரவி நிலை நின்றுள்ள கதை இராமாயணமும், பாரதமும் ஆகும். இந்த இரு பெரும் நூல்களையும் **இதிகாசம்,** என்று சிறப்பித்துக் கூறுவர். இவற்றில், பாரதத்தைத் "**தூது சென்றவன் ஏற்றங் கூறும் நூல்,**" என்றும், "**கீதை பிறக்க நிலைக்களனாய நூல்,**" என்றும், "**மறை நாலோடு ஒத்த சிறப் புடைய ஐந்தாம் வேதம்,**" என்றும், பெரியோர் போற்றுவர்.

இப் பெரு நூலை வடமொழியில் யாத்தவர், வேதவியாசர் என்ற முனிபுங்கவர். இவரது நூலோடு, **அகத்திய பட்டர்** என்ற வித்தகரால் வடமொழியில் பாடப் பெற்ற **பாலபாரதம்** என்னும் நூலையும் மூலமாகக் கொண்டு, இதைப் பாடி யருளியவர், வில்லிபுத்தூர் **ஆழ்வார்,** என்று அழைக்கப்படும் அந்தணர் குலச் செம்மலாவார்.

இப் பெரியார் தமிழில் பாடிய இப் பாரதத்தை முதன் முதல் அச்சேற்றி வெளியிட்டவர், யாழ்ப்பாணச் செல்வரான **ஸ்ரீ ஆறுமுக நாவலர்** என்ற சைவப் பெருமகனார். இந்நூலை அழியாமல் பாதுகாத்து உதவிய பெருமை அவரதாகின்றது. எனவே, அவர் தமிழ் இலக்கிய உலகத்தோடு, வைணவ சமூகத் தையும் தமக்குக் கடப்பாடுடையதாகச் செய்து கொண்டவர் ஆகின்றார். வாழி அவர்!

ஆனால், நாவலர் உதவிய பதிப்பில் மதாபிமானத்தின், இடையீட்டால், சொற்களும், செய்யுளடிகளும் பல இடங்களில் மாற்றப் பட்டுள்ளன, என்பது, பின்வந்த பதிப்புக்களிலிருந்து தெரிய வருகின்றது. சேற்றூர் சுப்பிரமணியக் கவிராயர், என்ற அறிஞர், அவரது பதிப்பின் முகவுரையில் "சுவமதக் கொள்கை பரம துவேஷம் என்பவற்றை உட்கொண்டு, பாடங்கள் சிதை யாமல், பிரதிகளில் உள்ளவற்றை உள்ளவாறே ஆராய்ந்து பிறழாால் பாடங்கள் வெளியிடப்பட்டன," என்று கூறி யிருத்தல், நாவலர் பதிப்பில் 'மதங்காரணமான இடைச் செருகல்கள் நேர்ந்துள' என்பதற்குச் சான்றாகின்றது.

"தீர்ந்த வைணவரான வில்லிபுத்தூரர் கூறத்துணியாதன, நூலில் இடங்கொண் டிருக்கின்றனவே," என்று எண்ணிய

வித்வான், வி. பூதூர் வேங்கடசாமி ரெட்டியார், என்ற தமிழறிஞர், தீர ஆய்ந்து, **வில்லி பாரதத்தில் வினோதத் திருத்தங்கள்** என்ற தலைப்புடைய ஒரு நூலில், சரியான பாடங்களைத் தந்து, வைணவ உலகத்தைக் கடன் கொண்டு விட்டார். மேலும், அவர் அந்நூலில், தாம் தேடிக் கண்ட திருத்தங்களுடன் வில்லி பாரதப் பதிப்பொன்று வரவேண்டும் என்ற, தமது விருப்பத்தையும் தெரிவித்துள்ளார்.

இந்நிலையில், ரெட்டியார் அவர்களது அவாவை நிறைவேற்றி வைக்கச் சைவப் பெருமகனாரும், ஸ்டார் பிரசுராலயத் தலைவருமான **திரு இராமநாதன் செட்டியார்** அவர்கள், நூலை ஓரிலக்கியச் செல்வமாகக் கருதி, வெளியிட முன் வந்தார். திரு. செட்டியார் அவர்கள், நூலுக்குச் சுருக்கமான உரையெழுதும் பணியை எம்மிடம் ஒப்புவித்தார்.

யாம் மேற்கொண்ட உரைமுறை புதியது. ஓதுவார் செய்யுள்களின் பொருள் தெளிந்து கொள்வதற்கு வேண்டியபடி, பதம் பிரித்தும், அன்வயங் கூறியும், அவசியமான இடங்களில் பொழிப்பும் கருத்துங் கூறியும், அரிய சொற்களுக்கும் வடமொழிச் சொற்களுக்கும் உரை தந்தும், உரை விளக்கம் செய்துள்ளோம். தமிழ் எழுதவும் படிக்கவும் தெரிந்தோர், சிறிது முயற்சி யுளதேல், செய்யுள்களின் பொருளை இவ்வுரை கொண்டு தெளிதல் எளியதே. இவ்வழி முயன்று படிப்போர், எந்தச் செய்யுள் நூல்களையும் பதவுரையின் துணையின்றிப் பொருள் காணும் பயிற்சியும் பெறுவர்.

பாரதம் என்னும் இப் பெருங்காப்பியம் பாடிய, வில்லிபுத்தூரர், திருமுனைப்பாடி நாட்டில் சனியூர் என்ற சிற்றூரில். வீரராகவன், என்ற பெரியாருக்கு மகனாய்த் தோன்றியவர், தென்மொழியோடு வடமொழியிலும் புலமையுடைய இப் பெரியார், **ஆசு**, **மதுரம்**, **சித்திரம்**, **வித்தாரம்** என்ற நால்வகைக் கவிகளையும் எளிதில் பாடும் ஆற்றலர் என்றும், இவரது புலமையை வியந்து தமிழ்நாட்டு மூவேந்தரோடு, தமிழறிஞர்களும் இவரைக் கொண்டாடினர் என்றும் அறிகின்றோம். கம்பனுக்குச் சடையப்பர் அமைந்ததுபோல், வரபதி ஆட்கொண்டான் என்ற சிற்றரசன் அமைந்து, இவரை ஆதரித்து வந்தான் என்றும், அவனது விருப்பத்திற்கு இணங்கியே, இம் மாகாவியத்தைத் தமிழில் சந்தம் செறிந்த விருத்தப் பாக்களினால், தருமனது பட்டாபிஷேகத்தோடு முடியும் பத்துப் பருவங்களையும் பாடி

முடித்தார், என்றும், அறிகின்றோம். ஆறாயிரஞ் செய்யுள்களால் பதினெட்டுப் பருவங்களும் இவரால் பாடப் பெற்றனவென்றும், பிந்தியவான எட்டுப் பருவங்கள் கிடைக்காமற் போயின என்றுங் கூறுவாருமுளர்.

இவரது காலம் பதினான்காம் நூற்றாண்டின் இடைப் பகுதி என்று அறிஞர் கருதுகின்றனர். இவருக்குப்பின் வந்த நல்லாப்பிள்ளை என்ற வித்தகர், வில்லிபுத்தூரரின் பாடல்களில் நாலாயிரம் பாடல்களை எடுத்துக் கொண்டு, பதினோராயிரம் பாடல்களால் பதினெட்டுப் பருவங்களையும், விரிவாகப் பாடி முடித்தார் என்று தெரிகின்றது. மகாபாரதம் தவிர வேறு எந்த நூலும் இவரால் பாடப் பெற்றதாகத் தெரியவில்லை.

இவரது நூலில் வடமொழிச் சொற்கள் தனிமொழியாகவும், தொடர் மொழியாகவும், திரிந்தும், மொழி பெயர்ந்தும் இடம் பெற்றிருக்கக் காண்கின்றோம். இக் காவியத்தில் உவமை, உருவகம், தற்குறிப் பேற்றம், பிறிதுமொழிதல் முதலிய பொருளணிகளோடு, யமகம் திரிபு பிராசம் முதலிய சொல்லணிகளும் அமைந்திருக்கக் காண்கின்றோம். போர் பாடுவதில் வல்லவர் என்று புலவர்கள் இவரைக் கொண்டாடுவர்.

இம் முதல் புத்தகம் முன்னுரையோடு, 912 பக்கங்களையும், 23 பாயிரச் செய்யுள்களோடு 1258 செய்யுள்களையும் கொண்டதாகும். ஆரண்ய, விராட, உத்தியோக பருவங்களைக் கொண்ட இரண்டாம் புத்தகம் 1448 செய்யுள்களையும்; வீட்டும துரோண கர்ண, சல்லிய, சௌப்திக பருவங்களைக் கொண்ட மூன்றாம் புத்தகம், 1654 செய்யுள்களையும் தாங்கி வெளிவந்துள்ளன.

இந்த இதிகாச நூல் வெளியிடுவதில், எமக்கு ஊக்கந் தந்த வழக்கறிஞர் திரு. கோவிந்தசாமி பிள்ளை அவர்களுக்கும், புதுவைச் செல்வர் திரு. ஆனந்தரங்கம் கிருஷ்ணபிள்ளை அவர்களுக்கும், எமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

இந்த நூலை நல்ல முறையில் அச்சியற்றித் தந்த வெற்றி அச்சகத்தாரையும், அவர்களது தொழில் திறமையையும் பனமாரப் பாராட்டுகின்றோம்.

பெரும் பொருட் செலவில் வெளிவரும், இப் பெருங் காப்பியத்தைத் தமிழன்பர்கள் ஏற்றுப் போற்றுவர், என்று நம்புகின்றோம்.

ஆசிரியன்

# பொருளடக்கம்

# வில்லிபாரதம்

## பாரதம்

சந்திர குலத்தினனான துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் மகனாய்த் தோன்றிய பரதன் என்பானது வம்சத்தைப் பற்றிய நூல் **பாரதம்**. பரத வம்சத்தில் தோன்றியவர் **பாரதர்** ஆகின்றனர். பஞ்சபாண்டவரும் துரியோதனாதியரும் அவ்வம்சத்தினராதலால், அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல் **பாரதம்** என்ற பெயரினதாயிற்று.

இகத்திற்கும் பரத்திற்குமான உறுதிப் பொருள்களை இது கூறுவதாலும், **பகவத் கீதை** என்ற சிறந்த நூலைத் தன்னிடத்தே கொண்டிருப்பதாலும், வேதங்கள்-நான்கினோடு ஐந்தாவதாகும் சிறப்பினதாகின்றது, இச்சிறப்புப் பற்றியே அறிந்தோர், நூலின் மேம்பாடு தோன்ற **மஹா பாரதம்** என்று அழைத்தனர் போலும்.

இராமாயணத்தோடு இதுவும் ஓர் இதிகாச நூல். உபதேச பரம்பரையில் வழங்கி வந்த பழைய சரித்திரத்தை, உறுதிப்பயன் அளிக்கவல்ல பல கிளைக் கதைகளோடு விரித்துக் கூறுவது **இதிகாசம்.** உலகத் தோற்றம், ஒடுக்கம், முனிவர் அரசர் மரபு, அன்னவர் சரித்திரங்கள். மநுவந்தரம் என்னும் ஐந்து விஷயங்களைத் தன்னிடத்தே கொண்டது புராணம். இப்புராண இதிகாசங்கள் வேதப் பொருளை விளக்கி வைத்தல் பற்றி, வேதத்திற்கு **உபப் பிராஹ்மணங்கள்** என்று அழைக்கப்படுகின்றன. **உபப் பிராஹ்மணம்** என்பது வளர்ப்பது என்ற பொருளது. அதாவது வேதக் கருத்தை எல்லோரும் அறியும்படி விளக்கி வளர்க்கும் கருத்தது, **உபப் பிரஹ்மணம்.**

## பாயிரம்

பாயிரம் என்பது நூலுக்குப் புறம்பாய் அமையும் முன்னுரை. இதை முகவுரை, அணிந்துரை, பதிகம், நூன்முகம், புனைந்துரை என்றும் அழைப்பர். ஆக்கியோன் பெயர், நுதலிய பொருள், நூற்பயன், நூலெழக் காரணம் முதலியன பாயிரத்திற்குரிய விஷயங்கள்.

நூலைச் சிறப்பித்துப் பிறர் பாடுவதைச் **சிறப்புப் பாயிரம்** என்றும், கடவுள் வாழ்த்தும், செயப்படு பொருளும் எய்த

நூலாசிரியனே பாடுவதைத் **தற்சிறப்புப் பாயிரம்** என்றும் கூறுவர். இந்நூலுக்குப் பாயிரம் பாடியவர், நூலாசிரியரின் திருக்குமாரரான **வரந்தருவார்** என்பவர். அவர், சிறப்புப் பாயிரத்தில், நூலாசிரியரின் சிறப்பையும், நூல் பாடற்கமைந்த காரணத்தையும் இருபத்து மூன்று பாக்களில் கூறியுள்ளார்.

## சிறப்புப் பாயிரம்

நூலுக்கு முகவுரை போன்றது பாயிரம். இப் பாயிரச் செய்யுள்களைப் பதம் பிரித்தும், அவசியமான குறிப்புரைகளுடனும் தருகின்றோம்.

1. பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து, சங்கத்(து)
இருப்பிலே யிருந்து, வைகை
ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர்
நினைவிலே நடந்து ஓரேன
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளரு கின்றாள்.

[ பொருப்பு - அகத்தியரின் வாழிடமான பொதியமலை. பேதை - தமிழாகிய குழந்தை. ஏனம் மருப்பிலே பயின்ற பாவை - பூமாதேவி. பேதை பாவை மருங்கிலே வளர்கின்றாள் என்று கூட்டுக. ]

2. அகத்தியன் பயந்த செஞ்சொல்
ஆரணங்கு அம்பு சாதன்
முகத்தினில் வாழும் அந்த
மொய்குழல் அருளி னாலே,
பகைத்துஎதிர் பொருத தெய்வப்
பாரத கதை இம்முந்நீர்ச்
செகத்தினில் விருத்த யாப்பால்
செய்க எனச் செய்ததன்றே.

[ அம்புசாதன்-தாமரை மலரினின்று தோன்றிய நான்முகன். முகத்தினில் வாழும் மொய்குழல்-சரஸ்வதி, முகம்-நாக்கு. விருத்த யாப்பு, என்றது பாவினப் பொதுப் பெயர். ]

3. தேடினார் யாவரேகொல் எழுவகையானுஞ் சீர்த்தி
நீடினார் அவரே, என்பர், நீள்நிலத்து உயர்ந்த
மாந்தர்;
பாடினார் யாவர்? யாவர் பாடுவித்தார் கொல்? என்று
நாடினார் தெளியும் வண்ணம் நவையற
நவிலலுற்றேன்.

[ஈதல், குளம் வெட்டல், அன்ன சத்திரங்களை அமைத்தல், அந்தணர்க்கு இருக்கை அமைத்தல், நந்தவனம் நிறுவல், தேவாலயத் திருப்பணி செய்தல், பாடல் ஆகிய இவ்வேழு வழிகளால் மாந்தர் அழியாத புகழைத் தேடுவர். இவற்றுள் நூல் செய்தல் (பாடல்) புலவர்களுக்கு உரியது. 'நூல் செய்து புகழ் பெற்றவர் யார்?' என்று கூற வந்தவர், நூல் பாடுவித்த, **வக்கபாகை வரபதி ஆட்கொண்டானையும்** கூறுவாராகின்றார். ]

4. நாள் நிரைத்து அநேக தாரகா கணமாம்
நவமணியுடன் நவ விதங்கொள்
கோள் நிரைத்து ஈரேழ் புவனமும் வலஞ்செய்
கொற்ற நேமியின் வரு கொண்டல்
வாள் நிரைத்து இரவி விதிர்ப்பபோல் மின்னி
வான் முகடுற நெடும் பளிக்குத்
தூண் நிரைப்பன போல் நந்திமால் வரையின்
குழலில் தாரை கொண்டதுவே.

[திருமுனைப்பாடி என்ற நாட்டினர் நூலாசிரியரான வில்லிபுத்தூரர். அந்நாட்டினைக் கூறலுற்ற புலவர், அதன்கண் ஓடும் பெண்ணையாற்றையும், அதன் உற்பத்தி ஸ்தானமான நந்தி மலையையும் கூறுவாராயினார். நாள்-நட்சத்திரங்கள், தாராகணம்-நட்சத்திரக் கூட்டங்கள், கோள்-சூரியன் முதலிய கிரகங்கள். கொற்ற நேமி:திருமால், கொண்டல் - நீர் கொண்ட மேகம். இரவி வாள் நிரைத்து விதிர்ப்பபோல் மின்னி என்று இயைக்க; சூரியனைப்போன்ற ஒளியுடைய வாளை நிரைத்து, விதிர்ப்பபோல் மின்னி, (விதிர்த்தல்-அசைத்தல் நடுங்கல், ஆடல்) தூண்-மழைத்தாரை, நந்திவரை-குடகுமலை)

5. வம்பு அறா மலரும் செம்பொனும் மணியும்
மருங்கெலாம் நெருங்கும் அக்குன்றின்

உம்பர் ஆர்ப்பெழ பாரளவும் நின்றோங்கி
உள்ளுறத் துள்ளி வீழருவி,
அம்புராசியை மால் மந்தரஞ் சுழற்றி
அமுதுஎழக் கடைந்த நாள் அதற்குத்
தம்பமாம் மதியை அதனுடன் பெயர்த்துச்
சார்த்தி வைத்தென்னலாம் தகைத்தே.

[ வம்பு-பரிமளம். உம்பர்-மேலிடம். அம்பு (அப்பு) நீர். அம்புராசி- (இங்கே) பாற்கடல். தம்பம்-(ஸ்தம்பம்) தூண். மதி (இங்கே) அடைதூண், அதாவது, பாற்கடல் கடைகையில் தூணான மந்தர மலைக்கு அடை தூணான சந்திரன். வைத் தால், என்பது வைத்து என்று திரிந்துளது. ]

6. வெண்ணெயே கமழும் பவளவாய் விமலன்
மெய்யெனக் கருகி மெல்லியலார்
கண்ணையே யனைய நெடுங்கடல் முகந்து
ககனமுந் திசைகளும் விழுங்கி
பண்ணை சூழ்ந்து இலகுந் திருமுனைப் பாடி
பழைய நாடனைத்தையும் ஒருதன்
பெண்ணையே கொண்டு போகம் உய்த்திடுமாற்
புயல் எனும் பெயருடைப் பெரியோன்.

[ நந்தி மலையில் மழை பெய்தலால் திரண்டு பெருகிய ஜலம் பெண்ணைமாநதியாய்த் திருமுனைப்பாடியில் பாய்தல் கூறப் பெறுகின்றது. மால் புயல்விமலன் - கரிய புயல் என்று சொல்லப் படும் திருமால். ககனம்-ஆகாசம். திருமுனைப்பாடியை நடு நாடு என்றும் சொல்லுவர். பெண்ணையேகொண்டு-பெண்ணை நதியைக் கொண்டு. போகம், என்பது விளைபொருள் மிகுதி, இன்பம் என்ற பொருள்களது. ]

7. தொடுத்த நாள் மலர் வேய்ந்து அகிலளைந்து உந்திச்
சுழிவயின் இலங்க மெய்த்தனங்கள்
எடுத்து மேல்வீசி மணிமருங்கு அலைய
இனம்கொள் வண்டொடு சிலம்பு இரங்க
அடுத்த நீள் சுரத மகளிரின் தடங்கண்
நிறம் சிவப்புறக் கரை யழிந்து
படுத்த பேரணைப் போர் புரிந்ததால், அந்தப்
பண்ணையம் கானல்சூழ் பெண்ணை.

[ சிலேடை வாயிலாகப் புலவர் பெண்ணையாற்றைச் சுரத மகளிர்க்கு ஒப்பாகக் கூறுகின்றார், (சுரதமகள்-கணிகை). அகில்-அகில்கட்டை, அகிற்புகை, வயின்-இடம், வயிறு. தனம்-பொன் (பொருள்), முலை. மருங்கு-பக்கம், இடை. வண்டு-வண்டுகள், கைவளை. சிலம்பு இரங்க-மலை எதிரொலி செய்ய, காற்சிலம்பு கள் சப்திக்க. தடங்கள் (ண்)-வாவிகள், பெரிய கண். கரை அழிந்து-கரையைக் கடந்து, வரம்பு கடந்து. அணைப்போர்-அணைக்கட்டை உடைக்கும் முயற்சி, கலவிப்போர், பண்ணை-வயல். கானல்-சோலை, ]

8. அவ்வைப் பாடலுக்கு நறுநெய் பால்பெருகி
அருந்தமிழ் அறிவினால் சிறந்து
பௌவ நீராடை தரணிமான் மார்பில்
பயிலும் உத்தரியமும் போன்று
மொய்வரால் கெண்டை வாளை சேல்மலங்கு
முதலிய சனம் எதிர்கொள்ளத்
தெய்வமா நதிநீர் பரக்கும் நாடு அந்தத்
திருமுனைப் பாடி நன்னாடு.

[திருமுனைப்பாடியில் பாயும் பெண்ணை நதியை ஒரு பெண் அணிந்த உத்தரியம் போன்றது என்றார். ஔவை பாடலுக்குப் பெண்ணையில் நெய்யும் பாலும் பெருகியது என்பது கதை. மீன் சனம்-பலவகைப்பட்ட மீன்களின் கூட்டம்]

9. பா அருந்தமிழால் பேர்பெறு பனுவல்
பாவலர் பாதிநாள் இரவில்
மூவரும் நெருக்கி மொழிவிளக்கு ஏற்றி
முகுந்தனைத் தொழுத நன்னாடு
தேவரும் மறையும் இன்னமுங் காணாச்
செஞ்சடைக் கடவுளைப் பாடி
யாவரும் மதித்தோர் மூவரில் இருவர்
பிறந்த நாடு, இந்த நன்னாடு.

[ பனுவல் பாவலர் - பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற முதலாழ்வார்கள். நான்காம் அடியிலுள்ள மூவர், ஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர், என்ற மூவர். அப்பரும் சுந்தரரும் திருமுனைப்பாடி நாட்டில் பிறந்தவர். ]

10. அந்தத் திருநாட்டு அந்தநதி
அமுதம் பெருகி இருகரையும்
சந்தத்துடன் கார் அகில்கமழத்
தடங்கா அகம்சூழ் தடம்நிறைப்ப
கந்தக் குவளை மேய்பகட்டின்
காலால் நெரிந்து கதிர்முத்தம்
சிந்தச் சிந்தக் கொழுமுனைக்கு
முன்ஏர் உழுவ செய்ச்சங்கம்.

[ திருமுனைப்பாடியின் நீர்வளத்தைக் கூறும் இது. சந்தம்-சந்தனம். தடங்கா அகம் சூழ்தடம்-பெரிய சோலையிடத்தே அமைந்துள்ள தடாகம். பகடு-ஆண் எருமை. செய்-வயல். ]

11. கொழுநீர் மதுவுண் கடைசியர்தம்
குழைதோய் விழியி னெழுநிழலைக்
கழுநீர் மலரென்று ஒருபகலும்
காலால் மயக்கிக் களைதுவைப்பார்
முழுநீ ரூடு தமதுநிழல்
முழுதுங் கண்டு தொழுதுஇறைஞ்சி
செழுநீர் அரமங் கையர்என்று
திகைப்பார் நகைப்பார் செறுவெல்லாம்.

[ இதுவும் நீர்வள வருணனை, ஒவ்வொரு நாளும் களை பறிக்கும் உழத்தியர், தங்கள் நிழலை அரமங்கையர் என்று மயங்கித் திகைத்து நகைப்பர், என்க. செறு-வயல். ]

12. கரும்புங் கமுகும் தலைதெரியாக்
கழனிச் செந்நெற் களையாகி
அரும்புங் குவளை நறுமலர்த்தேன்
ஆறாய் எங்குஞ் சேறாக
விரும்புஞ் சுருதி இசைகேட்டு
வேலைக் கழிக்கா னலம்கைதை
சுரும்புந் தும்பி களும்அருந்த,
மாறாது என்றும் சோறுஇடுமால்.

[ இது நிலவளம் கூறும். தலைதெரியா-வேற்றுமை தெரியாத, கானல்-கடற்கரை. அம் கைதை-அழகிய தாழை. சோறு

என்பது, உணவு; தாழையின் உட்பகுதி அல்லது மகரந்தப் பொடி, என்ற பொருள்களது. ]

13. கம்பலைக் கழனிச் சேனைக்
காவலர் கரங்கள் நீக்கிப்
பைம்புலத்து உழுநர் தங்கள்
பலவகை விளைவு மீட்டி
ஐம்புலத் தவர்க்கும் ஈந்து, ஆங்கு
அறத்தினை வளர்த்த லாலே
செம்புலக் கிழத்திக்கு ஆவி
அன்னதுஅச் செல்வ நாடே.

[ நாட்டுச் சிறப்பைக் கூறும் இது. ஐம்புலத்தார்-தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்ற ஐவர். புலக்கிழத்தி - பூதேவி. ]

14. எண்ணுமா கடல் ஏழும் அன்று இருகட லாகப்
பெண்ணை மாநதி நறுநெய்பால் பெருகும்அப் பழனப்
பண்ணை நீள்வளம்பல்குசீர்ப் பழைய நன்னாட்டில்
வண்ணம் நான்கினும் உயர்ந்துளோன் ஒரு முனி வந்தான்.

[ அந்நாட்டில் வில்லிபுத்தூரர் தோன்றியதைக் கூறும் இது. வண்ணம் - சாதி. ]

15. ஐந்து பாவுடை நால்வகைக் கவிக்கு அதிபதியாய்
வந்து வட்டமா மணியினன் மணிமுடி புனைந்து
பைந்துழாய் முடிப் பரமனைப் பலகவித் துறையும்
சிந்தையான் மொழிந்து அன்பர்தம் திருவுளம் பெற்றோன்.

[ ஐந்துபா - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா. நால்வகைக் கவி-ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம். முடிபுனைந்து - கவிகளுக்கு அதிபதி என்ற பட்டம் பெற்று. அன்பர் திருவுளம் பெற்றோன்-திருமால் அடியார்களால் நன்கு மதிக்கப் பெற்றவன்.

16. தென்னர் சேரலர் செம்பியர் எனப் பெயர் சிறந்த
மன்னர் மூவரும் வழங்கிய வரிசையால் உயர்ந்தோன்

முன்னர் எண்ணிய முத்தமிழ்ப் பாவலர் எவரும்
பின்னர்வந்து ஒருமுடிவு கொண்டனர் எனப்
பிறந்தோன்.

[ தென்னர் - பாண்டியர். சேரலர் - சேர நாட்டினர், செம்பியர் - சோழர். வரிசை - சிறப்பு. ]

17. தார காயன வண்டு அலை தண்டலைச் சனியூர்
வீர ராகவன் அருள்பெறு வில்லிபுத் தூரன்
ஊர் அராமுடி மண்மிசை உயர்புகழ் நிறுத்தி
தீர காகளம் பெறுதலின் யாரினும் சிறந்தோன்.

[ தாரகாயன வண்டு - தாரம் என்ற இசைபாடும் வண்டு. அலை தண்டலை - சஞ்சரிக்கின்ற சோலை. தீரகாகளம் - மனத் திண்மை குறிக்கும் வெற்றிச் சின்னம். ]

18. எங்குமிவன் இசைபரப்பி வரும் நாளில்
யாமுரைத்த இந்த நாட்டில்
கொங்கர்குல வரபதியாட் கொண்டான் என்று
ஒருவண்மைக் குரிசில் தோன்றி
வெங்கலியின் மூழ்காமல் கருநடப்பேர்
வெள்ளத்து விழாமல் நான்காம்
சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல்
கலங்காமல் தலைகண் டானே.

[ வில்லிபுத்தூரரைக் கொண்டு பாரதம் பாடுவித்த வரபதியாட் கொண்டானது சிறப்பைக் கூறும் இது. கொங்கு நாட்டிற்கு அயலிலுள்ள கருநாடகநாட்டின் கன்னடமொழியில் மனம் செல்லாமல், தமிழில் மனம் பதியப்பெற்றவனானான் வரபதியாட் கொண்டான் என்பதை, ''கருநடப்பேர் வெள்ளத்து மூழ்காமல்'' என்பதால் குறித்தார். 'சங்கத் தமிழ் நூல்களை நிலை கலங்காமல் காத்து அவன், தன் நாட்டில் நான்காம் சங்கம் என்று சொல்லும்படி புலவர் கூட்டத்தைத் தன் அவையில் வைத்துப் போற்றினான்' என்க. ]

19. மற்று அவன் இப்புவியாளும் வளவனுக்கு
முடிகவித்து வழுதித் தெவ்வைச்
செற்று அவனுக்கு அவனியெலாம் செங்கோன்மை
நிலையிட்டுச் செல்வ மெல்லாம்

கற்றவருக்கு இருகையுடைக் கற்பகம்போல்
இனிதளித்துக் கமல மாதும்
கொற்றவையும் மனங்களிப்பத் தன்நாமம்
மேருவினுங் கோட்டி னானே.

[ வழுதி - பாண்டியன். தெவ் - பகைவன். வளவன் - சோழன். சோழனது பகையான பாண்டியனை வென்று சோழனுக்கு அரசளித்து என்றதால், சோழனுக்கு அடங்கிய ஒரு சிற்றரசன் வரபதி ஆட்கொண்டான் என்பது பெறப்படுகின்றது. கொற்றவை - வீரலட்சுமி. கமலமாது - லட்சுமி. ]

20. தென்னாட்டில் வடநாட்டில் குடநாட்டில்
குணநாட்டில் தெவ்வ ரோட
கல்நாட்டி அமர்பொருது கங்கைநீர்
ஊட்டுவித்துக் கண்டன் வேங்கை
எந்நாட்டும் எழுதி அவன் திருமரபோர்
பெற்ற புகழ் யாவர் பெற்றார்
அந்நாட்டுக் கொற்றமெலாம் அக்குரிசில்
புகழொடு அவதரித்தது அன்றோ.

[ கண்டன் - சோழன். வேங்கை - புலி; புலியைக் கொடியில் உயர்த்தியவன் சோழன், எனவே, வேங்கை, கொடியைக் குறிக்கும். சோழன் தென்னாடு வடநாடுகளிலுள்ள பகை அடக்கி, அப்போர்களில் வீரங்காட்டி மடிந்த வீரர்களுக்குக் கல்நாட்டி, அக்கற்களைக் கங்கை நீரால் அபிஷேகம் செய்வித்ததைக் கூறும் செய்யுள். ]

21. ஆற்றியமெய்ச் செல்வத்தால் அளகையை
வென்று இருங்கவினால் அமரரூரை
மாற்றிய பொன் தடமதில்சூழ் வக்கபா
கையின்அறத்தின் வடிவம் போலத்
தோற்றிய அக் கொங்கர்பிரான் சூழ்தமிழான்
ஆட்கொண்டான் சுற்றத்தோடு
போற்றியஇப் புவிமுழுதும் தன்திருப்பேர்
மொழிகொண்டே புரந்தான் அம்மா!

[ வரபதி ஆட்கொண்டானது தலைநகராகிய வக்கபாகை, தேவலோக நகரை மேம்பாட்டினால் வென்றது என்க. ஆற்றிய மெய்ச் செல்வம் - அறவழியில் ஈட்டிய செல்வம். ]

22. பிறந்துஉய்யக் கொண்டவன் இப் பேருலகம்
பெருவாழ்வு கூரும் நாளில்
நிறைந்தபுகழ்ச் சனிநகர் வால் வில்லிபுத்தூ
ரனைநோக்கி நீயும் நானும்
பிறந்ததிசைக்கு இசைநிற்பப் பாரதமாம்
பெருங்கதையைப் பெரியோர் தங்கள்
சிறந்தசெவிக் கமுதமெனத் தமிழ்மொழியின்
விருத்தத்தால் செய்க என்றான்.

[ பிறந்து உய்யக் கொண்டவன் - தான் பிறந்ததால் உலகம் உய்யுமாறு செய்த வரபதி ஆட்கொண்டான். அவன், வில்லிபுத்தூரரைப் பாரதம் பாடுமாறு செய்தான் என்க, சனி(ஜனி) - பிறப்பு. ]

23. இருக்காதி மறைமொழிந்தோன் இயம்பிய இப்
பெருங்கதையை யாருங் கேட்பச்
சுருக்காகப் புராணமுறை சொல்லுக, என்றபின்
அவனும் சொல்ல லுற்றான்;
பெருக்காளர் முதலாய பெருங்குலத்தோர்
இக்கதையின் பெற்றி கேட்டார்;
செருக்காக அவன் மைந்தன் வரந்தருவான்
இப்பதிகம் செப்பி னானே.

[ இருக்காதி மறை மொழிந்தோன்-வியாச முனிவன். பெருக்காளர் - செல்வர்; அறிவுச் செல்வரையும் குறிக்கும். செருக்கு - கல்வியால் வரும் பெருமிதம். ]

## தற்சிறப்புப் பாயிரம்

கடவுள் வாழ்த்து, அறம் போற்றல், அவையடக்கம், நூல் பாடக் காரணம் ஆகியவற்றை, ஆசிரியர் இந்தத் தற்சிறப்புப் பாயிரத்தில் கூறியுள்ளார்.

### கடவுள் வாழ்த்து

1. நீடாழி யுலகத்து மறைநாலொ
டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன்
மாபாரதஞ் சொன்னநாள்

ஏடாக வடமேரு வெற்பாக
வங்கூரெ ழுத்தாணிதான்
கோடாக வெழுதும்பி ரானைப்
பணிந்தன்பு கூர்வாமரோ.

[ நீடு ஆழி உலகத்து மறை நாலொடு ஐந்து என்று நிலை நிற்கவே, வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதம் சொன்ன நாள், ஏடு ஆக வடமேரு வெற்பு ஆக, அம் கூர் எழுத்தாணி நன் கோடு ஆக, எழுதும் பிரானைப் பணிந்து அன்பு கூர்வாம் : அரோ: ஈற்றசை. ]

**விளக்கம் :**—பொழிப்புரை வேண்டாச் சுலபத்தினது இது. இதை, வில்லிபுத்தூராழ்வாரது பாடல் அன்றென்றும், நாலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடிய வரந்தருவாரது பாடல் என்றும் அறிஞர் சிலர் கூறுகின்றனர். வேதம் நான்கினோடு ஐந்தாவதாக அறிஞர் சிறப்பித்துக் கூறல் பற்றி, நாலொடு ஐந்தென்று நிலை நிற்கவே,' என்றாராயிற்று.

வாடாத தவ வாய்மை-அழிவில்லாத **மெய்த்தவம்.** அதாவது 'லாபம் கருதிய **செய்தவம்** அன்று,' என்ற குறிப்பினது. முனிராசன் - முனிவர்க்கரசாகிய வியாசன். செய்யுளின் மூன்றாவது அடியை, 'வடமேரு வெற்பாக ஏடாக,' என்று அன்வயித்துக் கொள்க. வெற்பு ஆக - வெற்பு முழுவதும். (ஆக, என்பது, எல்லாம், முழுதும் என்ற பொருளானது.) 'வெற்பு ஏடாக ஆகவம் கூர்தன் கோடு...' என்றும் பிரித்துக் கொள்ளலாம். ஆகவம் - போர். கூர், மிகுதிப் பொருளது. ஆகவம் கூர் கோடு - பேராற்றல் மிக்க கோடு [தந்தம்], அன்பு கூர்வாம்- அன்பு மிகுந்தவராவோம்.

இதைப் பாடியவர் யாவரேனும், வினாயகர் மகாபாரதம் எழுதிய கடவுளாதல் பற்றி, ஏற்புடைக் கடவுள் துதியாக இதை அவர் பாடினார் என்க. 'வடமேரு' என்பதற்குப் பதிலாக 'மாமேரு' என்றும் பாடமுளது.

செய்யுளின் இரண்டாவது அடி கருத்தின் ஆழத்தினது. மெய்த்தவம் என்ற பொருளதாய **தவவாய்மை** என்ற தொடரில் தவத்தைப் பற்றிய கம்பரது கருத்தின் எதிரொலியைக் கேட்கின்றோம். விரும்பியவாறு பெறுவதற்கமைந்த கருவியாக வள்ளுவரும் வான்மீக முனிவரும் கொண்ட தவமோ, கம்பர் கையில் மெய்ம்மையின் மேன்மையை எய்துவதாகின்றது. திருவள்ளுவர்,

''வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.''

என்று கூறுவதில் விரும்பியன விரும்பியவாறு பெறுதற்குரிய கருவியாகத் தவத்தினை முயலும்படி வற்புறுத்தும் கொள்கையினராகின்றார். வான்மீக முனிவரின் கை வளர்ந்த தண்டக வனம் வாழ் முனிவர்களும் ஊதியக் கருத்தில் தவம் முயன்ற செய் தவத்தினரே ஆகின்றனர்.

தவம் மெய்யின் சிறப்பை எய்துவது முயல்வோர்க்கு அது பயக்கும் ஊதியத்தால் அன்று. ''பெருமையுடைய வொன்று, காட்டப்படுங் காரணத்தால் பெருமை குறைவதாகும்,'' என்பது ஆன்றோர் கண்ட விதி. எனவே, ''வேண்டியவற்றை அடையும் பொருட்டுச் செய்ய வேண்டுவது தவம்,'' என்ற கருத்தினாலும், அக்கருத்தைக் காரணமாகக் கூறும் முறையினாலும், தவத்தின் மாண்பிற்கு இக் குறட்பா ஓரளவு அயலாதலைக் கண்ட கம்பர், பயனில் பிரிவு செல்லாத் தமிழறத்தில் தோய்ந்த கம்பர், தமது இராம காவியத்தில் இராமனைச் சரணடைய வந்த முனிவர்களை, ''வேண்டின வேண்டினர்க்கு அளிக்கும்மெய்த்தவம் பூண்டவராய் மாற்றிய அருமையோ பெரியது. தமக்கென ஒன்று நாடிக் கொள்ளலைக் குறிக்கும் எய்தல் என்ற சொல்லை விளக்கி, அளிக்கும் என்ற சொல்லால், அளித்தலன்றி வேறெதையும் அறியாத வாழ்க்கையே மெய்யான தவம் என்று வற்புறுத்தும் கருத்தினைப் புலவர் கூற்றில் காண்கின்றோம். எனவே தான், வள்ளுவரது செய்தவம் இங்கே மெய்த்தவமாய் மாறியது. இன்னபடி தவத்தின் சிறப்பினை உயர்வற உயரச் செய்த கம்பரின் புலமையோ பெரியது! தனது மெய்த்திறம் விளங்கும்படி கம்பரது மெய் பொதிந்த நாவிலே வளர்வதற்குத் தவம் செய்த தவமும் பெரிதேயாக வேண்டும்! வேதத்தை வகை செய்து அளித்த வியாச முனிவனுக்கு அடையாக வந்த வாடாத தவ வாய்மை என்ற சொற்றொடர் கம்பரது இக் கருத்தை உட் கொண்டதே யாகும்.

2. முருகார்ம லர்த்தாம முடியோனை
யடியார்மு யற்சித் திறம்
திருகாமல் விளைவிக்கு மதயானை
வதனச்செ ழுங்குன் றினைப்

புருகூதன் முதலாய முப்பத்து
முக்கோடி புத்தேளிரும்
ஒருகோடி பூதேவ ருங்கைதொ
ழுங்கோவை யுறவுன்னுவாம்.

[ முருகு ஆர் மலர் தாமம் முடியோனை அடியார் முயற்சி திறம் திருகாமல் விளைவிக்கும் மதயானை வதனம் செழும் குன்றினைப் புருகூதன் முதலாய முப்பத்து முக்கோடி புத்தேளிரும் ஒரு கோடி பூ தேவரும் கை தொழும் கோவை உற உன்னுவாம். ]

**விளக்கம் :** விநாயக வணக்கமாகும் இச் செய்யுளும் சுலப மானதே. முருகு - வாசனை, முயற்சித்திறம் - பலதிறப்பட்ட முயற்சி. திருகாமல் - மாறுபடாமல், கெடாமல். விளைவிக்கும்- பயன் தரும். குன்றினை - குன்று போன்ற வினாயகக் கடவுளை. புருகூதன் - இந்திரன். புத்தேளிர் - தேவர். பூதேவர்-அந்தணர். 'கோடி' என்பது மிகப்பல என்னும் பொருளது. உற உன்னு வாம் - ஆழ்ந்து தியானிப்போம்.

ஏடுகளில் இச் செய்யுள் காணப்படாமையின், இது இடைச் செருகலாய் வந்ததாகவேண்டும் என்று அறிஞர் கருதுகின்றனர். அடுத்த செய்யுள் முதற் கடவுள் வழிபாடாகும்.

### வேறு

### கலித்துறை

3. ஆக்கு மாறய னாமுத லாக்கிய வுலகம்
காக்கு மாறுசெங் கண்ணிறை கருணையங் கடலாம்
வீக்கு மாறர னாமவை வீந்தநா ளுந்திப்
பூக்கு மாமுத லெவனவன் பொன்னடி போற்றி.

[ ஆக்குமாறு (ஆக்கும் - ஆறு) அயன் ஆம், முதல் ஆக்கிய உலகம் காக்குமாறு செம் கண் நிறை கருணை அம் கடலாம், வீக்குமாறு அரன் ஆம்; அவை வீந்த நாள் உந்திபூக்கும் மாமுதல் எவன்; அவன் பொன்னடி போற்றி. ]

**விளக்கம் :** 'எவன்' என்பதை, 'ஆக்குமாறு அயனாம்.... கடலாம்,...அரனாம்.'' என்பவற்றோடும் கூட்டுக. அயனாவான் எவனோ, கருணையங் கடலாவான் எவனோ, அரனாவான் எவனோ, என்று பொருள் கொள்க. ஆக்குமாறு-படைக்கும்படி; காக்குமாறு - ரக்ஷிக்கும்படி; வீக்குமாறு - அழிக்கும்படி. அவை

வீந்த நாள் - சிருஷ்டிப் பொருள்கள் அழிந்த காலத்து. 'உலகம்' என்பது படைப்புப் பொருள்களைக் குறிக்கும். உந்தி - திருநாபி. பூக்கும் - மலரச் செய்யும், உண்டாக்கும். மாமுதல் - முழுமுதற் கடவுள்.

'வீந்த நாள் உந்தி' என்று கொண்ட பாடமே சரியான பாடமாக வேண்டும். வேத்திரகீயச் சருக்கத்திலும், கிருஷ்ணன் தூது சருக்கத்திலும் ''சகம் மலர்ந்த திருவுந்திமால்'' என்றும், ''உலகெலாம் உதவும் உந்தியான்'' என்றும் வந்திருத்தல் காண்க.

அடுத்த செய்யுளில் புலவர் அறம் முதலியவற்றை வாழ்த்துகின்றார்.

4. ஏழ்பெ ருங்கடன் மாநில மெங்கு நல்லறமே
சூழ்க வண்டமி ழோங்குக தேங்குக சுருதி
வீழ்க பைம்புயல் விளங்குக வளங்கெழு மனுநூல்
வாழ்க வன்புடை யடியவர் மன்னுமா தவமே.

[ஏழ்பெரும் கடல் மாநிலம் எங்கும் நல் அறமே சூழ்க; வள் தமிழ் ஓங்குக; தேங்குக சுருதி; வீழ்க பைம்புயல்; விளங்குக வளம் கெழு மனு நூல்; வாழ்க அன்புடை அடியவர் மன்னுமா தவமே.]

**விளக்கம் :** புருஷார்த்தம் கைவர இனிதே வாழ்வதற்குத் துணை செய்வனவான தர்மம், தமிழ் வேதம், புயல், மனுதர்மம் மெய்யன்புடைய அடியவர்கள் மேற்கொண்டுள்ள அருளுடைய வாழ்க்கையாகிய மெய்த்தவம் ஆகியவை சிறந்து ஓங்கட்டும், என்று புலவர் வாழ்த்தினாராயிற்று. 'மன்னுமாதவம்' என்ற தொடர், பயன் கருதிச் செய்யப்படும் செய்தவத்தை விளக்கும் கருத்தாகும்.

## அவையடக்கம்

5. கன்ன பாகமெய் களிப்பதோ ரளப்பிறொல் கதைமுன்
சொன்ன பாவலன் றுகளறு சுகன்றிருத் தாதை
அன்ன பாரதந் தன்னையோ ரறிவிலே னுரைப்ப(து)
என்ன பாவமற் றென்னையின் றென்சொலா துலகே.

[ கன்ன பாகம் மெய் களிப்பது ஓர் அளப்பு இல் தொல் கதை முன் சொன்ன பாவலன் துகள் அறு சுகன் திரு தாதை; அன்ன பாரதம் தன்னை ஓர் அறிவிலேன் உரைப்பது என்ன பாவம்! மற்று, என்னை இன்று என் சொலாது உலகே. ]

**விளக்கம் :** அவைக்குத் தான் அடங்கியிருத்தலைத் தெரிவித்தல் **அவையடக்கம்.** கன்ன பாகம் - (கர்ண பாகம்) காதின் பகுதி, மெய்களிப்பது அளப்பு இல் ஓர் தொல் கதை - உண்மையான, அல்லது காதோடு உடலும் களித்தற்குக் காரணமான, அளத்தற்கு அரிய சிறப்புடைய ஒரு பழமையான கதை. பாவலன் - கவி. துகள் அறு - குற்றமற்ற. சுகன் திருத்தாதை - சுகப்பிருமத்தின் சிறந்த தந்தையாகிய வியாசமுனிவன். அன்ன - அத்தகைய. என்ன பாவம் - என்ன பாவச் செயல். உலகு - உலகினர். என் சொலாது - என்ன சொல்லி இகழமாட்டார், (இகழ்வார் என்றபடி). மற்று : அசை.

6. மண்ணி லாரண நிகரென வியாதனார் வகுத்த
எண்ணி லாநெடுங் காதையை யானறிந் தியம்பல்
விண்ணி லாதவன் விளங்குநீ டெல்லையை யூமன்
கண்ணி லாதவன் கேட்டலுங் காண்டலுங் கடுக்கும்.

[ மண்ணில் ஆரணம் நிகர் என வியாதனார் வகுத்த எண் இலா நெடும் காதையை யான் அறிந்து இயம்பல், விண்ணில் ஆதவன் விளங்கு நீடு எல்லையை, ஊமன் கண் இலாதவன் கேட்டலும் காண்டலும் கடுக்கும். ]

**விளக்கம் :** மண் - பூமி. ஆரணம் - வேதம். வகுத்த - செய்த, பாடிய. ஆதவன் - சூரியன். விளங்கு நீடு எல்லை - விளங்குகின்ற மிக நீண்ட (சூரிய மண்டல) எல்லையை. 'ஊமன் கேட்டலும், கண் இலாதவன் காண்டலும்,' என்று அன்வயித்துக் கொள்க; நிரல் நிறைப் பொருள்கோள். கடுக்கும் - ஒக்கும்.

7. முன்சொ லாகிய சொல்லெலா முழுதுணர் முனிவன்
தன்சொ லாகிய மாப்பெருங் காப்பியந் தன்னைத்
தென்சொ லாலுரை செய்தலிற் செழுஞ்சுவை
யில்லாப்
புன்சொ லாயினும் பொறுத்தருள் புரிவரே புலவோர்.

[ முன் சொல் ஆகிய சொல் எல்லாம் முழுது உணர் முனிவன் தன் சொல் ஆகிய மாபெரும் காப்பியம் தன்னை தென் சொலால் உரை செய்தலின், செழும் சுவை இல்லா புன்சொல் ஆயினும் பொறுத்து அருள் புரிவரே புலவோர். ]

**விளக்கம் :** முன் சொல் - எல்லாவற்றிற்கும் முன்னதாகச் சொல்லப்பட்ட வேதம். முழுது உணர் முனிவன் தன் - நன்றாக

உணர்ந்துகொண்ட வியாச முனிவனுடைய. செழும் சுவை - மிக்க சுவை. புன்சொல் - இழிவான சொல்.

"தன் சொல் புன் சொல்லாயினும், தமிழில் சொல்லப்படுவ தென்ற காரணத்தாலும், சொல்லப்படும் விஷயத்தின் மேன்மை கருதியும், புலவர்கள் பொறுத்து என்பால் பரிவு கொள்வர்" என்று ஆசிரியர் கூறுங் கருத்தது செய்யுள்.

சொல் - ஆகிய, என்பது செய்யுளானபடியால் மெய்விரியாமல் **சொலாகிய** என்று புணர்ந்துளது.

8. முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கும்
என்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்.

[ முன்னும் மாமறை முனிவரும் தேவரும் பிறரும் பன்னும் மாமொழி பாரதம் பெருமையும் பாரேன்; மன்னும் மாதவன் சரிதமும் இடை இடை வழங்கும் என்னும் ஆசையால் யானும் ஈது இயம்புதற்கு இசைந்தேன். ]

**விளக்கம் :** முன்னும் - நினைந்து ஓதும். மறை முனிவர் - வேத வித்தகரான முனிவர்கள். பன்னும் - ஆராயும், மன்னும் - நிலையான பெருமை பொருந்திய. ஈது - இந்தப் பாரதத்தை.

புலவர், இச்செய்யுளில், தாம் பாரதம் பாடற்கான காரணத்தைக் கூறினாராயிற்று. செய்யுள்கள் எல்லாம் சுலபமானவை. பதப்பிரிவும், விளக்கமுங் கொண்டு ஓதுவார் பொருள் தெளிதல் எளியதே. இனி நூலினுட் செல்வோம்.

# 1. ஆதி பருவம்

## 1. குருகுலச் சருக்கம்

மகாபாரதம், பதினெட்டுப் பருவங்களைக் கொண்டது. இவற்றுள் வில்லிபுத்தூரரால் பாடப்பெற்றவை முதல் பத்துப் பருவங்கள். முதல் பருவமான ஆதிபர்வம் எட்டுச் சருக்கங்களைக் கொண்டது. சருக்கம் என்பது பெரிய பகுப்பினிற்குட்பட்ட சிறு பகுப்பு. ஸர்க்கம் என்ற வடமொழிச் சொல்லின் திரிபு சருக்கம்.

### சந்திரகுல வரலாறு

**கலித்துறை**

1. எங்கண் மாதவ னிதயமா மலர்வரு முதயத்
திங்கண் மாமர பினிற்பிறந் திசையுடன் சிறந்தோர்
அங்கண் மாநிலத் தரசர்பல் கோடியவ் வரசர்
தங்கண் மாக்கதை யானறி யளவையிற் சமைக்கேன்.

[ எங்கள் மாதவன் இதயம் மாமலர் வரும் உதயம் திங்கள் மா மரபினில் பிறந்து இசையுடன் சிறந்தோர், அம்கண் மா நிலத்து அரசர் பல்கோடி; அவ் வரசர் தங்கள் மாக் கதை யான் அறி அளவையின் சமைக்கேன். ]

**விளக்கம் :** மாதவன் - திருமால் இதய மாமலர் வரும் - நெஞ்சமாகிய சிறந்த தாமரையில் உண்டாகிய. உதயம் திங்கள்- தோற்றத்தை உடைய சந்திரன். மாமரபு - சிறந்த வம்சம். அம் கண் மாநிலத்து இசையுடன் சிறந்தோர் அரசர் பல்கோடி, (கோடிக்கணக்கினரான அவ்வரசர்கள் மாக் கதையை யான் அறிந்த அளவினில்.) செய்கேன் - அமைத்துச் சொல்வேன்.

சந்திரன் திருமாலின் மனத்தினின்று தோன்றியவன் என்பர். திருமால், புலவரின் வழிபடு கடவுளாதலால் அவர், **எங்கள் மாதவன்** என்றாராயிற்று. 'கோடி' என்பது எண்ணலளவை ஆகுபெயராகும்.

மா - தவன்,—இலட்சுமிநாயகன். 'தவன்' என்பது இங்கே கணவன் என்ற பொருளது; வடசொல்.

2. பொருந்த வானுறை நாள்களை நாடொறும்
புணர்வோன்
அருந்த வானவர்க் காரமு தன்புட னளிப்போன்
திருந்த வானவர்க் கரியவன் செஞ்சடை முடிமேல்
இருந்த வானவன் பெருமையை யார்கொலோ
விசைப்பார்.

[பொருந்த வான் உறை நாள்களை நாள்தொறும் புணர்வோன், அருந்த வானவர்க்கு ஆர் அமுது அன்புடன் அளிப்போன் திருந்து அவ் வானவர்க்கு அரியவன் செம்சடை முடிமேல் இருந்த வானவன் பெருமையை யார்கொலோ இசைப்பார்? ]

**விளக்கம் :** 'வான் பொருந்த உறைநாள்களை' என்று இயைக்க. நாள் - நட்சத்திரம். நாள்தொறும் புணர்வோன் - தினந்தோறும் அந்தந்த நாளுக்குரிய நக்ஷத்திரத்தைக் கூடுவோன் (நக்ஷத்திரங்களின் கணவன் சந்திரன் என்பது நூற் கொள்கை.) வானவர்க்கு அருந்த ஆர் அமுது அன்புடன் அளிப்போன் - தேவர்கள் உண்ணும்படி அரிய தன் கலையாகிய அமிர்தத்தை அன்புடன் அளிப்போன், (சந்திரன், தேய்பிறையில் தேவர்களுக்குத் தினம் ஒரு கலை வீதம் கொடுத்துக் கலை குறைந்தவனாகின்றான், என்பது நூற் கொள்கை) திருந்து அவ்வானவர்க்கு அரியவன் செம் சடைமுடி—(சந்திரனது அமிர்த கலையை உட்கொள்வதால்) செம்மையுற்ற அந்தத் தேவர்களுக்கு அரியவனான சிவபெருமானது செவ்விய சடைகொண்ட முடி. அச்சடை முடிமேல் இடங்கொண்டவன் சந்திரன், நட்சத்திரங்களை நாள்தோறும் புணர்பவனும், தேவர்களுக்கு அமுத கலையைக் கொடுப்பவனும், சிவபெருமானது சடைமுடியில் இருப்பவனுமாகிய வானவனது (சந்திரனது), பெருமையை எடுத்துச் சொல்ல வல்லவர் யாவர்? சொல்லால் பாராட்டற்கரிய பெருமையினன் சந்திரன், என்றபடி. ]

'திருந்த வானவர்' என்பதை திருந்து - அ-வானவர், என்று பிரிக்காமல், 'சடைமுடி மேல் 'திருந்த இருந்த' என்று இயைத்து, 'சிறப்புறத் தங்கியிருந்த' என்றும் பொருள் கொள்ளலாம்.

3. மண்ட லம்பயி லுரகர்பே ருயிர்ப்பினாள் மயங்கி
மண்ட லம்பொர வருந்திய பெருந்துயர் மாற

மண்ட லந்தனை நிழலெனு மரபினாற் றனது
மண்ட லம்பொழி யமிழ்தின்மெய் குளிரவே
வைத்தோன்.

[ மண்டலம் பயில் உரகர் பேர் உயிர்ப்பினால் மயங்கி, மண்டு அலம் பொர வருந்திய பெரும் துயர் மாற, மண் தலந்தனை நிழல் எனும் மரபினால் தனது மண்டலம் பொழி அமிழ்தின் மெய் குளிரவே வைத்தோன். ]

**விளக்கம்:—** மண்டலம் பயில் - மண்டலம் கதியாக ஊர்கின்ற, அதாவது, வளைந்து வளைந்து செல்கின்ற, உரகர் - பாம்புகள். பேர் உயிர்ப்பு - பெரிய மூச்சுக்காற்றினால், மண்டு அலம் பொரமயங்கி வருந்திய, 'என்று கூட்டுக; (மூச்சுக்காற்றி னால் வெளிப்படும்) மிகுதியான விஷம் தாக்குவதினால் மயங்கி வருந்திய, என்பது பொருள், மாற - அகல, மண்தலந்தனை - மண்மயமான பூமியை. நிழல் என்னும் - நிலவு எனப்படும் முறைமையினால், தனது மண்டலம் பொழி அமிழ்தின் - தனது வட்டவடிவமான உருவம் பொழி அமிழ்தினாலும் மண்ணுல கத்தைக் குளிரச் செய்தவன்.

''பாம்புகளின் உயிர்ப்போடு வெளிப்பட்ட விஷத்தினால் வெம்மை அடைந்த பூமியைச் சந்திரன், நிலவினாலும், தன்னிட மிருந்து வெளிப்படும் அமுத கலைகளினாலும் உடல் குளிரச் செய்யும் சிறப்பை உடையவன்,'' என்பது கருத்து.

'மயங்கி' என்பதற்குக் 'கலந்த அல்லது ஒன்றுபட்ட, என்ற பொருள் கொள்ளின், ''உயிர்ப்போடு கலந்து வெளிப்படும் மண்டு அலம்,'' என்பது, பொருளாகும்.

'மண்டலம்' என்ற சொல்லே உருவ வேறுபாடு அடையாமல் நான்கடிகளிலும் மடங்கி வந்திருப்பது, யமகம் என்ற சொல்லணி ஆகும்.

4. பைம்பொன் மால்வரை மத்தினிற் பணிவடம்
பிணித்திட்டு
உம்ப ரானவர் தானவ ருடன்கடைந் திடவே
தம்ப மானது மன்றியத் தழல்விடந் தணிய
அம்பு ராசியி னாரமு துடனவ தரித்தோன்.

[பைம்பொன் மால்வரை மத்தினில் பணிவடம் பிணித்திட்டு, உம்பர் ஆனவர் தானவருடன் கடைந்திடவே, தம்பம் ஆனதும் அன்றி அ தழல் விடம் தணிய, அம்பு ராசியின் ஆர் அமுதுடன் அவ தரித்தோன்.]

**விளக்கம்:**—பைம்பொன் மால்வரை- மந்தரமலை. (அதை மத்தாகக் கொண்டு), பணிவடம் பணி - பாம்பு, (படத்தை உடையது என்பது அவயவப் பொருள்]. உம்பர் - தேவர். தானவர் - அசுரர். அப்போது சந்திரன்) தம்பமானதும் அன்றி, (தம்பம்-அடைதூண்) தழல் விடம் தணிய (அம்பு) ராசியின் ஆரமுதுடன் அவதரித்தோன். தழல்விடம் - நெருப்புப் போன்ற வெம்மையுடைய விஷம். அம்புராசி - பாற்கடல், (ஜலத்தின் திரளையுடைய கடல்).

துர்வாசரின் சாபத்தால் இழந்த செல்வத்தை மீண்டும் பெறத் தேவர்கள் மந்தர மலையை மத்தாகக் கொண்டு கடைந்த பொழுது, சந்திரன், அம்மத்திற்கு அடை தூணாய் இருந்தது மல்லாமல், கடலில் தோன்றியவனும் ஆகின்றான்.

5. பத்தி ரட்டியி லீரிரண் டொழிந்தபல் கலையோன்
மித்தி ரற்கவை கொடுத்துமுன் மீளவுங் கவர்வோன்
அத்தி ரிப்பெய ரந்தண னம்பகந் தனிலும்
சித்தி ரக்கனன் முகத்தினும் பிறந்தொளி சிறந்தோன்.

[பதது இரட்டியில் ஈர் இரண்டு ஒழிந்த பல் கலையோன் மித்திரற்கு அவை கொடுத்து, மீளவும் கவர்வோன்; அத்திரி பெயர் அந்தணன் அம்பகந்தனிலும் சித்திரம் கனல் முகத்தினும் பிறந்து ஒளி சிறந்தோன்.]

**விளக்கம்:**—பத்து இரட்டி - இருபது. ஈர் இரண்டு- நான்கு. இருபதில் நான்கு ஒழிந்த பல் கலையோன் - பதினாறாகிய பலவான கலைகளை உடைய சந்திரன். மித்திரற்கு (மித்திரன் கு)- சூரியனுக்கு. தேய்பிறையில் (சூரியனுக்கு) அவற்றைக் கொடுத்து, வளர்பிறையில் மீணடும் அவற்றைப் பெற்றுக் கொள்பவன். அத்திரிப்பெயர் அந்தணன்-அத்திரிஎன்ற பெயருடைய முனிவன். அம்பகம் - கண், (அத்திரி முனிவனின் கண்ணினின்று சந்திரன் தோன்றினான் என்பது நூற் கொள்கை). சித்திரக் கனல் - விசித்திரமான ஜோதியை உடைய அக்கினி. அத்திரியின் கண்ணி

லிருந்தும் அக்கினியின் முகத்திலிருந்தும் தோன்றியவன் சந்திரன், என்பர்.

'மித்திரர்க்கு,' என்றோர் பாடமுளது. அது பாடமாயின், தேவர்களைக் குறிக்கும்.

நான்கு பாடல்களால் சந்திரனைப் பாராட்டிய புலவர் அடுத்துச் சந்திரனுக்குப் பிறந்தமை கூறுவார்.

### புதன் பிறப்பு

6. அந்தி யாரணம் மந்திரத் தன்புட னிவனை
வந்தி யாதவர் மண்ணினும் வானினு மில்லை
புந்தி யாலுயர் புதனெனும் புதல்வனை மகிழ்வால்
தந்தி யாவருங் களிப்புற விருக்குநா ளன்னில்.

[அந்தி ஆரணம் மந்திரத்து அன்புடன் இவனை வந்தியாதவர் மண்ணினும் வானினும் இல்லை; புந்தியால் உயர் புதன் எனும் புதல்வனை மகிழ்வால் தந்து யாவரும் களிப்பு உற இருக்கும் நாள்தன்னில். அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும்.]

**விளக்கம்:—** ஆரண மந்திரம் - வேத மந்திரம். வந்தியாதவர்- வழிபடாதவர். புந்தி- புத்தி. மகிழ்ச்சியால் தந்து- மகிழ்ச்சியோடு தாரையினிடமாகப் பெற்றளித்து, யாவரும் களிப்புற- புதனுடைய அறிவைக் கண்டு எல்லோரும் மகிழ்ச்சி கொள்ள, இருக்கும் நாளில், அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்.

தேவ குருவான பிரகஸ்பதியினிடம் குருகுலவாசம் செய்து படித்த சந்திரன், அவரது மனைவியான தாரையினிடம் நட்புக் கொண்டு, அவளோடு கூடிப் பெற்ற புதல்வன் புதன் என்பது புராணக் கதை.

குற்றுகரத்தின் பின் யகரம்வர, உகரம் இகரமாகத் திரியுமாதலால் தந்து- யாது, என்பது தந்தியாது என்றாயிற்று.

7. வளை நெடும்சிலைக் கரத்தினன் மநுவருண் மைந்தன்
உளையெ ழூப்பரித் தேரின னுறுவதொன் றுணரான்
விளைய ருந்தவ விபினமுற் றம்பிகை விதியால்
இளையெ னும்பெயர் மடவர லாயின னென்ப.

[வளை நெடும்சிலை கரத்தினன் மநு அருள் மைந்தன், உளை எழும்பரி தேரினன் உறுவது ஒன்று உணரான்; விளை அரும் தவம் விபினம் உற்று அம்பிகை விதியால் இளை எனும் பெயர் மடவரல் ஆயினன் என்ப.]

**விளக்கம்:—** வளை நெடும் சிலை- வளைந்த பெரிய வில், மநு அருள் மைந்தன்-மநு என்ற அரசன் பெற்றளித்த **இளன்** என்ற பெயருடைய புதல்வன். உளை எழும்பரி-பிடரி மயிர் ஓங்கி வளர்ந்த குதிரை. தேரினன் - தேரில் செல்பவன். உறுவது ஒன்று உணரான்-தனக்கு நேரக்கூடிய தீங்கைச் சிறிதும் அறியாத வனாய். (இங்கே வந்தோர் பெண்ணாகக் கடவர், என்று அம்பிகை விதித்திருந்த) விளை அரும்தவ விபினம் உற்று- வளரும் அரிய தவம் செய்வதற்குரிய காட்டை அடைந்து, (விபினம்- காடு), அம்பிகை விதியால்- **உமாதேவி** விதித்த விதியின்படி. மடவரல் - பெண், மடமைக் குணம் வருதலை உடைய பெண். (அம்பிகையின் விதிப்படி 'இளன்' என்பான் 'இளை' என்ற பெயருடைய பெண் ஆனான்) என்ப- என்று கூறுவர்.

8. மார காகள மெழுவதோர் மதுமலர் காவில்
தார காபதி புதல்வனத் தையலைக் காணா
வீர காமபா ணங்களில் மெலிவுற மயங்கித்
தீர காமமுஞ் செவ்வியு மிகும்படி திளைத்தான்.

[மாரன் காகளம் எழுவது ஓர் மதுமலர் காவில் தாரகாபதி புதல்வன் அ தையலை காணா வீரம் காம பாணங்களின் மயங்கி தீர காமமும் செவ்வியும் மிகும்படி திளைத்தான்.]

**விளக்கம்:—** ''மன்மதனது **காகளம்** என்னும் ஊது கருவியின் ஓசை (தன்னிடத்தே) எழப் பெற்று இருப்பதாகிய ஒரு தேன் மலிந்த மலர்களைக் கொண்ட சோலையில்,'' என்பது முதலடியின் பொருள். மாரகாகளம்- (மாரன் காகளம்) மன்மதனது ஊது கருவி; குயிலை மன்மதனது **காகளம்** என்பர்.

தாரகாபதி- சந்திரன். அவன் புதல்வன் புதன். தையல்- இளை என்னும் பெண். காணா- கண்டு. வீர காம பாணம்- **(வீரம் காமம் பாணம்)** வீரத்தன்மை வாய்ந்த மன்மத சரத்தால். மயங்கி- காமத்தால் மயங்கி, தீர காமம்- (தீரம் காமம்) மிக்க

காமம். செவ்வி-அழகு (காமமும், அழகும் இளை என்பாளுக்கு மிகுமாறு செய்து) திளைத்தான் - அவளைக் கூடி மகிழ்ந்தான்.

'காகளம்' என்பது இங்கே, ஆகுபெயராய்க் குயிலின் ஓசையைக் குறித்து நின்றது.

### புரூரவசுவின் தோற்றம்

9. புதனு மந்தமென் பூவையும் புரூரவா வினைத்தம்
சுதனெ னும்படி தோற்றுவித் தனரவன் றோன்றி
இதந லம்பெறு மழகினுந் திறலினு மிலங்கி
மதன னுங்கலை முருகனு மெனும்படி வளர்ந்தான்.

[புதனும் அந்த மெல் பூவையும் புரூரவாவினை தம் சுதன் எனும்படி தோற்றுவித்தனர்; அவன் தோன்றி, இதம் நலம் பெறும் அழகினும் திறலினும் இலங்கி, மதனனும் கலை முருகனும் எனும்படி வளர்ந்தான்.]

**விளக்கம்:—** பூவை-நாகணவாய்ப் புள்; இங்கே, அதைப் போன்ற இனிய குரலையுடைய இளை என்பாளை, ஆகுபெயராய்க் குறிக்கும். சுதன்- மகன். தோற்றுவித்தனர்- உண்டாக்கினர். இதம் (நன்மை) - நன்மைக் குணம். நலம் பெறு அழகு. திறல்-வலிமை, போற்றல். இலங்கி-விளங்கி. அழகில் மன்மதனும், போர்க் கலையில் முருகக் கடவுளும் என்று (உலகினர்) சொல்லும்படி (புரூரவசு) வளர்ந்தான்.

அழகிற்கு மன்மதன் உவமை. அழகு, திறல் இரண்டிற்கும் முருகன் உவமை. அல்லது, சிவபெருமானையே மன்மதன் கலங்கச் செய்தவனாதலால், அழகு திறல் என்ற இரு தன்மையிலும் இருவரையும் உவமையாகக் கொள்ளலும் அமையும்.

10. பொருப்பி னைச்சிற கரிந்தவன் புரத்துமங் கையருள்
உருப்ப சிப்பெய ரொண்டொடி யுருவினிற் சிறந்தாள்
தருப்பொ ழிற்பயில் காலையிற் றானவர் காணா
விருப்பு றக்கவர்ந் தேகின ரவளுடன் விசும்பில்.

[பொருப்பினை சிறகு அரிந்தவன் புரத்து மங்கையருள் உருப்பசிப் பெயர் ஒள்தொடி உருவினில் சிறந்தாள், தரு பொழில்

பயில் காலையில் தானவர் காணா, விருப்பு உற கவர்ந்து ஏகினர் அவளுடன் விசும்பில்.]

**விளக்கம் :**—பொருப்பினைச் சிறகு அரிந்தவன் - இந்திரன், புரம் - இந்திரனது தலைநகராகிய அமராவதி நகரம். "உருவினில் சிறந்தாள்(ஆகிய) உருப்பசிப் பெயர் ஒண்டொடி," என்று இயைக்க, ஒள்தொடி - அழகிய வளையல் பூண்ட பெண். தரு பொழில் பயில் காலையில் - மரங்கள் செறிந்த சோலையில் சஞ்சரிக்கும்பொழுது, தானவர் - அசுரர். காணா - கண்டு. விருப்புஉற - (அவளிடம்) விருப்பம் ஏற்பட, விசும்பு - ஆகாயம். ஏகினர் - சென்றனர்.

முற்காலத்தில் மலைகள் சிறகு பெற்றனவாய் இருந்து, அவை ஊர்களில் இறங்கி அவற்றை அழித்து வரவே, முனிவர் முதலியோர் வேண்ட, இந்திரன் தனது வச்சிரப் படையால் அவற்றின் சிறகுகளை அகற்றினான் என்று புராணம் கூறும்.

'உருப்பசி' என்று 'ஊர்வசி' என்ற வடசொல்லின் திரிபு, காச்யபருக்கும் தனு என்பவளுக்கும் தோன்றியவர், தானவர்.

11. கொண்டு போதலு மபயமென் றுருப்பசி கூவ
அண்டர் யாவரு மஞ்சின ரவருட னடுபோர்
வண்டு சூழ்குழ லணங்கையிம் மதிமகன் மகனும்
கண்டு தேர்நனி கடவின னசுரர்மெய் கலங்க.

[கொண்டு போதலும் அபயம் என்று உருப்பசி கூவ, அண்டர் யாவரும் அஞ்சினர் அவருடன் அடுபோர்; வண்டு சூழ் குழல் அணங்கை இம்மதி மகன் மகனும் (இ - மதி - மகன் மகனும்) கண்டு தேர் நனி கடவினன் அசுரர் மெய் கலங்க.]

**விளக்கம் :**—'அபயம்' என்று 'பயம் இல்லாது ரக்ஷிக்கப்படும் பொருளாவேன்', என்ற பொருளது. அண்டர் - தேவர். 'அவருடன் அடுபோர் அஞ்சினர்,' என்று இயைக்க. அத் தானவருடன் அழிவைத் தரவல்ல போரைச் செய்தற்கு அண்டர் அஞ்சினர். வண்டு சூழ் குழல் அணங்கு - உருப்பசி. மதிமகன் மகன் - சந்திரனுடைய மகனான புதனுக்கு இளையினிடம் வந்த புரூரவசு. (அசுரர் மெய் கலங்க) தேர் நனி கடவினன் - (புரூரவசு) தேரை வேகமாய்ச் செலுத்தினான்.

'கொண்டு போதலும்' என்பதிலுள்ள போதலும் என்பது, 'உம்' ஈற்று வினையெச்சம்; 'கவர்ந்து சென்ற அளவில்' என்பது பொருள்.

12. நிறந்த ருங்குழ லரிவையை நிறுத்திவா ளவுணர்
புறந்த ரும்படி புரிந்தபின் புரந்தரன் றூதால்
மறந்த ருங்கழன் மன்னவன் மண்மிசை யணைந்து
சிறந்த வன்பொடத் தெரிவையை நலம்பெறச்
சேர்ந்தான்.

[நிறம் தரும் குழல் அரிவையை நிறுத்தி, வாள் அவுணர் புறம் தரும்படி புரிந்தபின், புரந்தரன் தூதால் மறம் தரும் கழல் மன்னவன் மண்மிசை அணைந்து சிறந்த அன்பொடு அ தெரிவையை நலம்பெறச் சேர்ந்தான்.]

**விளக்கம் :**—நிறம் - ஒளி. 'புரந்தரன் தூதால்,' என்பது இந்திரன் ஒரு தூதன் மூலம் பணித்தபடி, என்ற பொருளது. "தானவர்களிடமிருந்து ஊர்வசியைப் புரூரவசு மீட்டதை அறிந்த இந்திரன், அவனிடம் அவளை மணந்து பூமியில் சிலகாலம் வாழ்ந்திருக்குமாறு தூதுவன் மூலம்பணிக்க, அவனும் அவ்வாறே செய்தான்,'' என்பது கதை. மறம் தரும் - வீரத்தைப் புலப் படுத்திய. 'நலம்,' என்பது இன்பம் என்ற பொருளது.

### ஆயு ஜனனம்

13. மாய னூருவின் வந்தரு ளந்தமான் வயிற்றில்
ஆயு வென்றொரு செம்மலை யம்மக னளித்தான்
தேயு வும்பல தேவரு மகிழமற் றிவனே
மேய வண்புகழ் வேந்தரில் வேள்வியான் மிக்கோன்.

[மாயன் ஊருவின் வந்து அருள் அந்த மான் வயிற்றில் ஆயு என்று ஒரு செம்மலை அ மகன் அளித்தான்; தேயுவும் பல தேவரும் மகிழ, மற்று இவனே மேய வண் புகழ் வேந்தரில் வேள்வியால் மிக்கோன்.]

**விளக்கம் :**—மாயன் - திருமால். ஊரு - தொடை. மான்- (உவமையாகு பெயர்) உருப்பசி. ஒரு காலத்தில் பத்ரிகாச்ர மத்தில் திருமால் நாராயணஸ்வரூபியாய்த் தவம் செய்து

கொண்டிருக்கையில், அவரது தவத்தைக் கெடுக்க மேனகை முதலிய தேவமாதர்கள் வரலும், அவர் தன் ஊருவினின்றும், (தொடையினின்றும்) நேரில்லா அழகி ஒருத்தியைப் படைத்தார் என்பதும், அவளைக் கண்டு நாணி அத் தேவமாதர்கள் வந்த வழியே சென்றனர் என்பதும் வரலாறு. நாராயணரின் ஊருவினின்று தோன்றியதால் **ஊர்வசி** என்ற பெயரினள் ஆனாள். அச்சொல் உருப்பசி என்று தமிழில் திரிந்தது.

செம்மல் - செம்மைக் குணம் உடையவன். அம்மகன் - அந்தப் புரூரவசு. தேயு - அக்கினி தேவன். மற்று: அசை. வண்புகழ் மேய வேந்தரில்,' என்று இயைக்க.

வேள்விகள் பல செய்தவதனால் பற்றி, ஆயு வேள்வியால் மிக்கோன் ஆயினான். அவி உணவு மிகுதியாகக் கிடைத்தல் பற்றித் தேவர்களும், வேள்வியில் முதலிடம் பெற்ற அக்கினி தேவனும், மகிழ்பவராயினர்.

## ஆயுவின் மகன் நகுடன்

14. முகுட மும்பெருஞ் சேனையுந் தரணியு முற்றும்
சகுட நீரெனச் சதமகம் புரியருந் தவத்தோன்
நகுட நாமவே னராதிப னாகருக் கரசாய்
மகுட மேந்திய குரிசிலா யுவின்திரு மைந்தன்.

(முகுடமும் பெரும் சேனையும் தரணியும் முற்றும் சகுடம் நீர் என சதமகம் புரி அரும் தவத்தோன், நகுடன் நாமம் வேல் நராதிபன் நாகருக்கு அரசாய் மகுடம் ஏந்திய குரிசில் ஆயுவின் திரு மைந்தன்]

**விளக்கம்:**—முகுடம் - கிரீடத்தின் ஓர் உறுப்பு; ஆகு பெயராய்க் கிரீடத்தைக் குறித்தது. **முகுடம்**, அரச சின்னம். **சேனை**, ஆளுகைக்குத் துணையாகும் கருவி. **தரணி**, ஆளப்படும் உலகம். முற்றும் - (முகுடம், சேனை, தரணி ஆகிய) யாவற்றி லும். சகுடம் நீர் என-சேம்பின் இலையின் நீர்போலப் பற்றற்ற வனாய். சதமகம் - நூறு அச்வமேத யாகம். நகுட நாமவேல் நராதிபன்-நகுடன் என்ற பெயர் கொண்ட வேல் ஏந்திய அரசன். நாகர் - தேவர். குரிசில்-சிறந்தவன்; (அவன் ஆயுவின் திருமகன்), சகுடம் - சேம்பு, இங்கே ஆகுபெயராய் இலைக்கு ஆயிற்று.

15. புரந்த ரன்பதம் பெற்றபின் புலோமசை முயக்கிற்(கு)
இரந்து மற்றவ ளேவலின் யானமுற் றேறி
வரந்த ருங்குறு முனிமுனி வாய்மையான் மருண்டு
நிரந்த ரம்பெரும் புயங்கமா னவனுமந் நிருபன்.

[புரந்தரன் பதம் பெற்றபின் புலோமசை முயக்கிற்கு இரந்து மற்று, அவள் ஏவலின் யானம் உற்று ஏறி வரம் தரும் குறுமுனி முனி (ந்து கூறிய) வாய்மையால் மருண்டு நிரந்தரம் பெரும் புயங்கம் ஆனவனும் அ நிருபன்.]

**விளக்கம்:**—புரந்தன் பதம் - இந்திரபதவி. புலோமசை - இந்திராணி, முயக்கிற்கு - தழுவி மகிழ்தற்கு. இரந்து - அவளை வேண்டி. மற்று - அதன்பின். யானம் - பல்லக்கு. குறுமுனி- அகத்தியமுனி. முனி வாய்மையால்- சினந்து கூறிய (சாபச்) சொல்லால். மருண்டு - மனம் கலங்கி. நிரந்தரம் - நிலையாக. புயங்கம் - பாம்பு.

நூறு அச்வமேதம் செய்ததின் பயனாய் இந்திர பதவி பெற்ற நகுடன் இந்திராணியை இச்சிக்க, அவள் பணித்தபடி, சப்தரிஷி களால் தூக்கப்பெற்ற பல்லக்கில் ஏறிச் சென்றபொழுது, விரைவில் இந்திராணியின் மனையை அடைய வேண்டும் என்னும் எண்ணத்தில், ஸர்ப்ப, ஸர்ப்ப (ஓடு ஓடு) என்று பல்லக்குத் தூக்கும் ரிஷிகளைத் தூண்டினான் என்றும், அதனால், கோபங் கொண்ட அகத்தியர், சர்ப்பமாகும்படி அவனைச் சபிக்க, அவனும் பாம்பாய்ப் பூமியில் விழுந்தான், என்றும் வரலாறு கூறும்.

### நகுடன் மகன் யயாதி

16. மற்ற வன்திரு மைந்தன் வின் மைந்தினா லுயர்ந்த
கொற்ற வன்றிறற் கொற்றவைக் கிருபுயங்
கொடுத்தோன்
முற்ற வன்பகை முகங்கெட முகந்தொறுந் திசையின்
செற்ற வன்பெருஞ் செற்றமில் குணங்களிற்
சிறந்தோன்.

[மற்று அவன் திரு மைந்தன், வில் மைந்தினால் உயர்ந்த கொற்றவன்; திறல் கொற்றவைக்கு இரு புயம் கொடுத்தோன்;

முற்றவல் பகை முகம் கெட முகந்தொறும் திசையின் செற்றவன்; பெரும்செற்றம் இல் குணங்களில் சிறந்தோன்]

**விளக்கம்:**—அவன் திருமைந்தன் - நகுடனது திருமைந்தனாகிய **யயாதி.** மைந்து - வலிமை. கொற்றவை - ஜயலக்ஷ்மி; அவளுக்கு யயாதி தனது இரு புயங்களையும் இருப்பிடமாகக் கொடுத்தவன். வல்பகை முற்ற - வலிய பகை முழுதையும். திசையின் முகந்தோறும் முகம் கெடச் செற்றவன் - திக்குகளிலுள்ள எல்லா இடங்களிலும் நிலை குலைந்து ஓடும்படு (பகைவரின் வலி) அழித்தவன். செற்றம் இல் - வயிரம் (க்ஷாத்திரம்) இல்லாத. பெருங் குணங்களில் சிறந்தோன்' என்று இயைத்துப் பொருள் செய்க.

கொற்றவை - வெற்றியின் அதிதேவதை; எனவே, வீரர்களின் புயத்தை வாழும் இடமாகக் கொண்டவளாகக் கூறுவது கவிமரபு. 'பகை', ஆகுபெயராய்ப் பகைவரைக் குறிக்கும்.

17. யயாதி யென்றுகொண் டிவனையே யெவரினுஞ் சிறக்க
வியாத னும்புகழ்ந் துரைத்தது மற்றிவன் மேனாள்
புயாச லங்களுக் கிசையவே புகரவன் புதல்வி
குயாச லந்தழீஇ யிருவர்வெங் குமரரை யளித்தான்.

[யயாதி என்று கொண்டு இவனையே எவரினும் சிறக்க வியாதனும் புகழ்ந்து உரைத்தது; மற்று இவன் மேல் நாள் புய அசலங்களுக்கு இசையவே புகரவன் புதல்வி குய அசலம் தழீஇ இருவர் வெம் குமரரை அளித்தான்.]

**விளக்கம்:**—இவனையே யயாதி என்றுகொண்டு. வியாதன்- வியாச முனிவன். மற்று: அசை. "இவன் மேனாள், புகரவன் புதல்வி(தனது)புயாசலங்களுக்கு இசையவே,(அவளது)குயாசலங்களைத் தழீஇ வெம் குமரர் இருவரை அளித்தான்," என்று அன்வயித்துக் கொள்க. புய அசலம்-புஜங்களாகிய மலைகள் அதாவது மலை போன்ற புஜங்கள். குய அசலம் - முலைகளாகிய மலைகள், அதாவது மலை போன்ற மூலைகள். புகரவன் புதல்வி - சுக்கிராசாரியின் மகளான தெய்வயானை.

**யதுவும், துருவசு** என்பானும் யயாதியின் குமாரர். அவர் தந்தைக்கு அடங்காதவராதல் பற்றி, 'வெம் குமரர்' எனப்பட்டனர்.

18. அன்ன காலையி லிவடன தாருயிர்த் துணையாய்
முன்னி சைந்தபே ரிசைவினா லேவலின்
முயல்வாள்
நன்ன லந்திகழ் கவிதனக் குரைகெழு நண்பாம்
மன்ன வன்றரு மடவர லிவனுழை வந்தாள்.

[அன்ன காலையில் இவள் தனது ஆர்உயிர் துணை ஆய் முன் இசைந்த பேர் இசைவினால் ஏவலின் முயல்வாள், நல்நலம் திகழ் கவி தனக்கு உரைகெழு நண்பாம் மன்னவன் தரு மடவரல் இவனுழை வந்தாள்.]

**விளக்கம்:**—அவள் - தேவயானை. துணை - தோழி. முன்னம் (தான் இழைத்த பிழைக்குப் பரிகாரமாய்) இசைந்த (சம்மதித்த) பேர் இசைவினால் (தள்ளத்தகாத உடன்பாட்டின்படி) ஏவலின் முயல்வாளாகிய, நல்நலம் திகழ்...மடவரல் (சன்மிட்டை)யயாதியாகிய இவனுழை (யயாதியினிடம்) வந்தாள். கவி - அசுர குருவாகிய சுக்கிரன். உரைகெழு நண்பாம் மன்னவன் – (சுக்கிரனுக்கு) புகழ்ந்து கூறப்படும் (அதாவது சிறந்த) நண்பனான விடபன்மன் (விருஷபர்வன்) என்னும் அசுர மன்னன்.

விடபன்மன் மகள், சன்மிட்டை. அவள் ஒரு சமயம், தன்னைத் தேவயானை பழித்தாள் என்ற காரணத்தால், வெகுண்டு அவளைக் கிணற்றில் தள்ளினாளாக, அதற்குப் பரிகாரமாக, அவள் தகப்பனான விடபன்மன் தன் மகளைத் தேவயானைக்குப் பணிப் பெண்ணாய் இருக்கச் செய்தான், என்பது வரலாறு,

சுக்கிரனின் பெயர்களில் கவி, என்பது ஒன்று.

19. ஆழி மன்னனவ் வணங்கினை யணங்கெனக் கண்டு
பாழி வன்புயம் வலந்துடித் துடலுறப் பரிந்து
வாழி தன்மனை மடவர லறிவுறா வண்ணம்
யாழி னோர்பெரும் புணர்ச்சியி னிதயமொத்
திசைந்தான்.

[ஆழி மன்னன் அ அணங்கினை அணங்குஎன கண்டு, பாழி வல்புயம் வலம் துடித்து உடல் உறப் பரிந்து வாழி தன் மனை

மடவரல் அறிவுறா வண்ணம் யாழினோர் பெரும் புணர்ச்சியின் இதயம் ஒத்து இசைந்தான்.]

**விளக்கம்:**—ஆழி மன்னன் - யயாதி. அணங்கினை - சன்மிட்டையை. அணங்கு எனக் கண்டு - தெய்வப் பெண் போன்ற அழகினை உடையவளாகக் கண்டு. பாழி - அகலம், பெருமை. தோள் ஆடவர்களுக்கு வலம் துடித்தல், வரவிருக்கும் சுபத்தைக் குறிக்கும் நன்னிமித்தம். உடலுறப் பரிந்து - சன்மிட்டையின் சரீரத்தோடு சம்பந்தங் கொள்ள விரும்பி. தன்மனை மடவரல் - தன் மனைவியாகிய தேவயானை. யாழினோர் பெரும்புணர்ச்சி - எண்வகை மணங்களில் ஒன்றான காந்தர்வம். தன் மனைவி அறியாதபடி சன்மிட்டையைக் கூடினான், என்பதாம். வாழி: அசை.

தேவயானையை யயாதி மணந்தபொழுது, சுக்கிராசாரியர், தன்மகளுக்குத் தோழியும் பணிப் பெண்ணுமாகிய சன்மிட்டையை (சர்மிஷ்டையை) அழைத்துச் செல்லுமாறும், ஆனால் அவளை மணக்கக் கூடாதென்றும் சொல்லியதாக வியாச பாரதம் கூறும்.

20. சாரு மன்பினிற் கற்பினிற் சிறந்தசன் மிட்டை
சேரு மைந்தினு முயர்வினுந் தேசினுஞ் சிறந்து
மேரு வென்றிட மேதினி யாவையுந் தரிப்பான்
பூரு வென்றொரு புண்ணியப் புதல்வனைப்
பயந்தாள்.

[சாரும் அன்பினில் கற்பினில் சிறந்த சன்மிட்டை, சேரும் மைந்தினும் உயர்வினும் தேசினும் சிறந்து, மேரு என்றிட மேதினி யாவையும் தரிப்பான், பூரு என்றொரு புண்ணியம் புதல்வனை பயந்தாள்.]

**விளக்கம்:**—சாரும், சேரும் - பொருந்திய. மைந்து - வலிமை. தேசு- தேஜஸ், ஒளி. மேரு என்றிட - மேருமலை என்று சொல்லும்படி. தரிப்பான் - தாங்குபவனாகிய (பூரு).

பூமியின் மேலிருந்து, அதைத் தாங்குதல் பற்றி, மலைகளைப் **பூதரம்** என்பர். பூமியைத் தாங்கும் மலைகளில் மிகச் சிறந்தது, வடமேரு. 'அந்த மேருவே இவன்', என்று சொல்லும்படி பூரு பூதலம் முழுவதையும் தாங்கினான், என்றபடி.

தந்தைக்கு அடங்கிய புதல்வனாதல் பற்றி இவன், 'புண்ணியப் புதல்வன்' எனப்பட்டான்.

21. மருவி ளங்கொடி யனையமென் மருங்குலாள்
பின்னும்
இருவர் மைந்தரைப் பயந்தன ளிறைமனை காணா
உருவி ளங்கிய வுலகுடை நிருபனுக் கிவண்மேல்
திருவு ளங்கொலென் றழன்றுதன் றாதையிற்
சென்றாள்.

[மருவு இளம் கொடி அனைய மெல் மருங்குலாள் பின்னும் இருவர் மைந்தரை பயந்தனள்; இறை மனை காணா, உரு விளங்கிய உலகு உடை நிருபனுக்கு 'இவள் மேல் திருவுளங் கொல்' என்று அழன்று தன் தாதை இல் சென்றாள்.]

**விளக்கம் :** — மருவு - பொருந்திய. மருங்குல் - இடை. இறை மனை - அரசனாகிய யயாதியின் மனைவியான தேவயானை. காணா - (சன்மிட்டையின் புதல்வரை) கண்டு. உருவிளங்கிய உலகு உடை நிருபன் - வடிவழகினால் விளங்கிய வனும், உலகைத் தனதாக உடையவனுமாகிய அரசன் (யயாதி). இவள் மேல் - சன்மிட்டையின் மேல். அழன்று - சினந்து.

சன்மிட்டையின் புத்திரர்களிடம் யயாதியின் சாயலைக் கண்டு, அவள்பால் அரசன் காதல் கொண்டு இப் புதல்வரைப் பெற்றனன் போலும், என்று ஊகித்துக் கொண்ட தேவயானை, தன் தந்தையின் மனை சென்றாள், என்பது வரலாறு.

இறை மனை, என்பதிலுள்ள **மனை** இடவாகு பெயராய் மனைவிக்கு ஆயிற்று.

திருஹ்யுவும், அனுவும், சன்மிட்டையின் மற்றை இரு புதல்வர் என்பதும், பூரு என்பவன் கடைசிப் புதல்வன் என்பதும், வியாச பாரதத்தால் தெரிகின்றன.

22. சென்று தாதையைப் பணிந்திது செப்பலுஞ்
சினவேல்
வென்றி மன்னனை விருத்தனாம் வகையவன்
விதித்தான்
அன்று தொட்டிவ னைம்முதற் பிணியினா லழுங்கி
இன்று நூறென நரைமுதிர் யாக்கையோ டிருந்தான்.

[சென்று தாதையை பணிந்து இது செப்பலும், சினம் வேல் வென்றி மன்னனை விருத்தன் ஆம் வகை அவன் விதித்தான்; அன்று தொட்டு இவன் ஐ முதல் பிணியினால் அழுங்கி, இன்று நூறு என நரைமுதிர் யாக்கையோடு இருந்தான்.

**விளக்கம் :** —விருத்தன் - வயது முதிர்ந்தவன். ஐ முதல் பிணி - சிலேட்டுமத்தை ஆதாரமாகக் கொண்ட நோய்கள். அழுங்கி - வருந்தி, சுக்கிரனது சாபத்தால், யயாதி நரையும் திரையும் முதிர்ந்த யாக்கையுடைய கிழவனானான்.

'வ்ருத்தன்' என்ற வடசொல் விருத்தன் என்று திரிந்தது. ஐ - கோழை, சிலேட்டுமம் (சிலேஷ்மம்). வயது முதிரமுதிரத் தலையெடுப்பதால் இருமல் முதலிய வியாதிகள் தோன்றல் இயற்கை.

23. அந்த மன்னவன் மைந்தரை யழைத்தெனக் குசனார்
தந்த மூப்பை நீர் கொண்மினும் மிளமைதந் தென்ன
மைந்தர் யாவரு மறுத்திடப் பூருமற் றவன்றன்
இந்த மூப்பினைக் கவர்ந்து தன் னிளமையு மீந்தான்.

[அந்த மன்னவன் மைந்தரை அழைத்து எனக்கு உசனார் தந்த மூப்பை நீர் கொள்மின் நும் இளமை தந்து என்ன, மைந்தர் யாவரும் மறுத்திட, பூரு மற்று அவன் தன் இந்த மூப்பினை கவர்ந்து, தன் இளமையும் ஈந்தான்.

**விளக்கம் :**— உசனார் - சுக்கிராசார்யர். சபிக்கப்பெற்ற மன்னன், சாப விமோசனம் வேண்டச் சுக்கிரன், இந்த மூப்பை அயலார்க்குக் கொடுத்து, அவரது இளமையைப் பெற்றுக் கொள்ளலாம்,' என்று கூறியருளினார். இளமை தந்து மூப்பை நீர் கொள்மின் என்ன, என்று இயைக்க. மற்று: அசை.

24. விந்தை பூமகண் முதலிய மடந்தையர் விரும்ப
முந்தை மாமணம் யாவையும் பலபகன் முற்றிச்
சிந்தை யாதரந் தணிந்தபின் சிந்தனை யின்றித்
தந்தை மீளவு மிளமைதன் றனயனுக் களித்தான்.

[விந்தை பூமகள் முதலிய மடந்தையர் விரும்ப முந்தை மாமணம் யாவையும் பல பகல் முற்றி சிந்தை ஆதரம் தணிந்த பின், சிந்தனை இன்றி தந்தை மீளவும் இளமை தன் தனயனுக்கு அளித்தான்.]

**விளக்கம் :**—விந்தை - வீரலக்ஷ்மி. 'தந்தை முந்தை மாமணம் யாவையும்', என்று கூட்டுக. தந்தை - யயாதி, முந்தை மாமணம் யாவையும் - பழமையான காமநூலில் கூறப் பெற்ற சிறந்த கரணங்கள் எல்லாவற்றையும். முற்றி - நன்றாக அனுபவித்து, சிந்தை ஆதரம் - மனத்தில் எழுந்த காம இச்சை. சிந்தனை இன்றி - காமத்தில் நசை இல்லாமல், அதாவது நசை ஒழிய (இளமையைத் தன் மகனுக்குக் கொடுத்து விட்டான்.)

வந்த இளமையோடு வீரம் முதலியனவும் வந்து பொருந்த லின் வீரத்திற்குரிய தேவதையாகிய விந்தையும், வீரத்தால் காக்கப்படும் பூமகளும் யயாதியை விரும்பினாராயிற்று. மணம், என்பது கலவி வகைகளைக் குறிக்கும். பூமகள் - பூமாதேவி.

25. இடியு மாறுகொ ணெடுமொழி யயாதியன் றிவற்கே
முடியு மாலையு முத்தவெண் கவிகையு முரசும்
படியும் யாவையும் வழங்கியெம் பனிமதி மரபிற்(கு)
அடியு நீயினி யெனமகிழ்ந் தளியுட னளித்தான்.

[இடியும் மாறு கொள் நெடுமொழி யயாதி அன்று இவற்கே முடியும் மாலையும் முத்தம் வெண் கவிகையும், முரசும் படியும் யாவையும் வழங்கி, எம் பனி மதி மரபிற்கு அடியும் நீ இனி, என மகிழ்ந்து அளியுடன் அளித்தான்.]

**விளக்கம் :** இடியும் மாறு கொள் நெடுமொழி யயாதி - இடியும் மாறுகொள்ள வல்ல கம்பீரத் தொனியோடு கூடிய சொற்களையுடைய யயாதி. அன்று - (இளமையை மகனுக்குத் திருப்பிக் கொடுத்த) அக்காலத்தில். "எம் பனி மதி மரபிற்கு 'அடியும் நீ இனி' என, 'முடியும்...இவற்கே மகிழ்ந்து வழங்கி அளியுடன் அளித்தான்,'' என்று கூட்டுக.

பனி மதி மரபு - சந்திரவமிசம். அடி - ஆதாரம். யாவையும் - (அரசற்குரிய தசாங்கங்களில் இங்கே கூறப்பெற்றன போக, மற்ற) எல்லாவற்றையும். அதாவது, மலை, ஆறு, யானை,

குதிரை, செங்கோல் ஆகியவற்றை, யாவையும் என்பது குறிக்கும் இவற்கே என மகிழ்ந்து வழங்கி - இக் கடைமைந்தன் பூருவுக்கே உரியன என்று மகிழ்ந்து கூறி. அளி - அன்பு.

### பூருவின் குலம் வந்த பரதன்

26. விரத மிஞ்சிய வேள்வியாற் கேள்வியான் மிக்கான்
சுரத மங்கையர் முலைக்குவ டணைவரைத்
தோளான்
பரத னென்றொரு பார்த்திபன் பரதமு மிசையும்
சரத மின்புற வக்குலந் தனிலவ தரித்தான்.

[விரதம் மிஞ்சிய வேள்வியால், கேள்வியால், மிக்கான், சுரதம் மங்கையர் முலை குவடு அணை வரை தோளான், பரதன் என்று ஒரு பார்த்திபன், பரதமும் இசையும் சரதம் இன்புற அ குலந்தனில் அவதரித்தான்.]

**விளக்கம் :—**விரதம் மிஞ்சிய - விரதத்தை மிகுதியாக அனுஷ்டிக்க வேண்டிய, சுரத மங்கையர் - புணர்ச்சிக்குரிய மகளிர். குவடு - உச்சி. அணைவரை தோளான் - (முலைக்குவடு) அணையப் பெற்ற மலை போன்ற தோளான். பரதம் - நாட்டிய சாத்திரம். இசை - சங்கீதம். சரதம் இன்புற - மெய்யே இன்ப மடைய, அதாவது உண்மையான இன்பம் அடைய.

பூருவின் குலத்தில் வந்த துஷ்யந்தனுக்கும் மேனகையின் மகளான சகுந்தலைக்கும் மகனாய்த் தோன்றிய பரதன் இவன். வேள்வியாலும் கேள்வியாலும் மிக்கானாகிய இச்செம்மல், சங்கீத நாட்டியக் கலைகளிலும் மிக்கானாய் இருந்தான். இவன் பிறந்ததினால் இவ்விரு கலைகளும் எய்திய சிறப்போ பெரியது. இதைத்தான் புலவர், "பரதமும் இசையும் சரதம் இன்புற அக் குலந்தனில் அவதரித்தான்," என்ற வாசகத்தால் தெரிவிக்கின்றார்.

'கேள்வி' என்பது, 'சுருதி' என்ற வடசொல்லின் பொருளதாகும். அதாவது, 'வேத வித்தையிலும் மிக்கான்,' என்று அவனைப் பாராட்டுங் கருத்தது.

27. சுரச மூகமுஞ் சுராரிகள் சமூகமுஞ் சூழ
விரசு பூசலின் வாசவ னடுங்கிவெந் நிடுநாள்
அரசர் யாவரு மறுமுகக் கடவுளென் றயிர்ப்பப்
புரசை நாகமுன் கடவின னாகமும் புரந்தோன்.

[சுர சமூகமும் சுராரிகள் (சுர - அரிகள்) சமூகமும் சூழ, விரசு பூசலின் வாசவன் நடுங்கி வெந் இடும் நாள், அரசர் யாவரும் அறுமுகக் கடவுள் என்று அயிர்ப்ப புரசை நாகம் முன் கடவினன், நாகமும் புரந்தோன்.]

**விளக்கம் :**—சுரர் - தேவர். சமூகம் - கூட்டம். சுராரிகள் - தேவர் பகைவரான அசுரர்கள். விரசு பூசலின் - நெருங்கிச் செய்த போரில். வாசவன் - இந்திரன். வெந் இடு நாள் - முதுகு காட்டி ஓடிய காலத்தில், புரசை - (புரோசை என்பதின் சிதைவு) யானை கட்டுங் கயிறு. நாகம் - யானை, தேவலோகம்.

தேவாசுர யுத்தத்தில் தேவர்கள் புறங்காட்டி ஓடிய நாள், இப் பரதன் யானையைச் செலுத்தி அசுரரை வென்று, தேவ லோகத்தையும் அசுரரின் வசப்படாது காத்தான் ஆகின்றான்.

தேவரைக் காத்த காரணத்தால், இவன், தேவசேனாபதி யாகிய முருகக் கடவுளுக்கு ஒப்பாகக் கூறப்பட்டான்.

## அத்தி என்பான் ஜனனம்

28. முக்கு லத்தினுமதிக்குலமுதன்மைபெற் றதுவென்(று)
எக்கு லத்தினி லரசும்வந் திணையடி யிறைஞ்ச
மைக்கு லத்தினிற் புட்கலா வர்த்தமா மெனவே
அக்கு லத்தினி லத்தியென் பவனவ தரித்தான்.

[முக் குலத்தினும் மதிக்குலம் முதன்மை பெற்றது என்று, எ குலத்தினில் அரசும் வந்து இணை அடி இறைஞ்ச, மை குலத்தி னில் புட்கலாவர்த்தம் ஆம் எனவே, அ குலந்தனில் அத்தி என்பவன் அவதரித்தான்.]

**விளக்கம் :**—முக்குலம் - சூர்ய, சந்திர, அக்கினி வம்சங்கள். மை குலம் - மேகக் கூட்டங்கள். புட்கலாவர்த்தம் - சப்த மேகங் களில் ஒன்று; பொன்மழை பொழிவது அது என்பர். (மேகக் கூட்டங்களில் புட்கலாவர்த்தம் சிறந்ததாவதுபோல், முக் குலங்

களில் சந்திர குலம் சிறந்தது, என்றபடி) அத்தி, ஹஸ்தி, என்ற வட சொல்லின் தமிழ் உருவம்.

29. கொண்டல் வாகனுங் குபேரனு நிகரெனக் குறித்துப்
புண்ட ரீகன்முன் படைத்தவப் புரவல னமைத்த(து)
எண்டி சாமுகத் தெழுதுசீ ரியக்கர்மா நகரும்
அண்டர் தானமு முவமைகூ ரத்தினபுரியே.

[கொண்டல் வாகனும் குபேரனும் நிகர் என குறித்து, புண்டரீகன் முன் படைத்த அ புரவலன் அமைத்தது, எண் திசா முகத்து எழுது சீர் இயக்கர் மாநகரும், அண்டர் தானமும் உவமை கூர் அத்தினாபுரியே.]

**விளக்கம் :**—கொண்டல் வாகன் - இந்திரன். நிகர் என குறித்து - இவனுக்கு நிகர் ஆவான் என மதித்து, புண்டரீகன் - பிரும்மா. புரவலன் - அத்தி என்னும் அரசன். அமைத்தது - தலைநகராக அமைத்த நகரம். எண் திசாமுகத்து எழுது சீர் இயக்கரின் மாநகரம் - எட்டுத் திசைகளிலும் பரவிய கீர்த்தியை உடைய யக்ஷரின் பெரிய நகரமாகிய அளகாபுரி. அண்டர் - தேவர். தானம் - (ஸ்தானம்) வாழும் இடம், அதாவது அமராவதி. உவமைகூர் - உவமையாகப் பெற்ற.

அளகை, யக்ஷர் தலைவனான குபேரனது ராஜதானி செல்வத்தால் மிக்கது. தேவர் தலைநகர் அமராவதி, அழகால் மிக்கது. அதாவது, செல்வத்தால் அளகையையும், தோற்றத்தால் அமராவதியையும் ஒத்தது அஸ்தினாபுரம், என்றபடி. அத்தியால் உண்டாக்கப்பெற்ற நகரம் அத்தினாபுரியாயிற்று.

30. மீன மாகிய விண்ணவன் விந்தைமுன் பயந்த
யான மீதெழுந் தருளிவந் திருபதம் வழங்கக்
கான நாண்மலர்க் கயத்திடைக் கயமுவெங் கராமும்
ஆன மானவ ரிருவரு மக்குலத் தவரே.

[மீனம் ஆகிய விண்ணவன் விந்தை முன் பயந்த யானம்மீது எழுந்து அருளி வந்து இருபதம் வழங்க, கானம் நாள் மலர் கயத்திடை கயமும் வெம் கராமும் ஆன மானவர் இருவரும் அகுலத்தவரே.]

**விளக்கம் :—**மீனம் ஆகிய விண்ணவன் - மச்சாவதாரம் செய்த திருமால். விநதை முன் பயந்த யானம் - விநதை என்பாள் முன்னே பெற்றளித்த கருடனாகிய வாகனம். இரு பதம் வழங்க - திருவடிகள் இரண்டையும் (காட்சியாகத்) தர. கானம் நாள் மலர்கயம் - நறுமணம் உடைய புதிய தாமரை மலர் களைக் கொண்ட பொய்கை. கயம் - யானை. வெம் கராம் - கொடிய முதலை. கயமும், கராமும் ஆனவர் இக்குலத்தினர்.

'இந்திரத்யும்நன்' என்பவனும், 'அநுரு என்பவனும், யானையும், முதலையும் ஆயினர், என்பர்; (அதாவது, கஜேந் திரனும், அதைப் பற்றிய முதலையும்). குருகுலச் சிறப்பைப் பாராட்டுமிடத்துச் சாபத்திற்காளான இருவரைப் பற்றி இடையே கூறுவது, குலத்தின் சிறப்பைக் குன்றச் செய்யுமாதலா லும், சாபமுற்ற இவ்விருவரும் இக்குலத்தினர் என்று கொள்ளப் போதிய சான்று முதனூலிலும், வேறு நூல்களிலும் இல்லாமை யாலும், இச் செய்யுள் இடைச் செறுகலாயிருக்குமோ என்று அறிஞர் சிலர் கருதுவது அமைவதொன்றே. கயம் - (கஜம்) யானை.

### குருவின் ஜனனம்

31. பொருபெ ரும்படைத் தொழில்வயப் புரவிதேர் மதமா
மருவ ருந்தொழில் மன்னர் நீதியின் தொழில்
வளங்கூர்
சுருதி யின்றொழின் முதலிய தொழிலனைத்
தினுக்கும்
குருவெ னும்புகழ்க் குருவுமக் குலத்திலங் குரித்தான்.

[பொரு பெரும் படை தொழில் வயம் புரவி தேர் மதம் மா, மருவு அரு தொழில் மன்னர் நீதியின் தொழில் வளம் கூர் சுருதியின் தொழில் முதலிய தொழில் அனைத்தினுக்கும் குரு எனும் புகழ் பெற்ற குருவும் அ குலத்தில் அங்குரித்தான்.]

**விளக்கம் :—**பொரு பெரும் படை (நடத்தும்) தொழிலிலும், வயப்புரவி, தேர், மா (முதலியவற்றை நடத்தும்) மருவு அருந் தொழிலிலும், மன்னர் நீதியின் தொழிலிலும் வளங் கூர்வானாகி (மிக்கானாகி) சுருதியின் தொழில் முதலிய அனைத்தினுக்கும் குரு

எனும் (என்று சொல்லத்தக்க) புகழ்க் குருவும் அக் குலத்தில் அங்குரித்தான்.

மா - யானை. மருவு அரும் - பொருந்துவதற்கு அரிய. மன்னர் நீதியின் தொழில் - அரச நீதியின் தொழில் முறை. சுருதி- வேதம். சுருதியின் தொழில் - வேள்வித் தொழில். புகழ்குரு - புகழையுடைய குரு' என்ற அரசன். அங்குரித்தான் - தோன்றி னான், பிறந்தான்.

''போர்த் தொழில், நீதி செலுத்தும் தொழில், வேள்வித் தொழில் முதலிய தொழில்கள் அனைத்தினுக்கும் குரு,'' என்ற புகழினனாதலால், குரு என்ற பெயர் பொருத்தமானதா கின்றது, என்று புலவர் கூறியது நயமுடையது. 'சவ்வருணன்' என்பான் இவனது தந்தை எஎ்பர்.

32. வருகு லத்தவ ரெவரையும் வரிசையா லின்றும்
குருகு லத்தவ ரெனும்படி பேரிசை கொண்டான்
இருகு லத்தினு மாசறு தேசினா லிவனுக்(கு)
ஒருகு லத்தினு முரைப்பதற் குவமைவே றுண்டோ.

[வரு குலத்தவர் எவரையும் வரிசையால் இன்றும் குரு குலத் தவர் எனும்படி பேர் இசை கொண்டான்; இரு குலத்தினும் மாசு அறுதேசினால் இவனுக்கு ஒரு குலத்தினும் உரைப்பதற்கு உவமை வேறு உண்டோ.]

**விளக்கம் :—** வரு குலத்தவர் - இவனுக்குப் பின் தோன்றிய இவனது வம்சத்தினர். வரிசையால் - வழிவழியாக, சிறப்பாக. இரு குலம் - சூர்ய குலமும், அக்கினி குலமும். ஒரு குலத்தினும் - வேறு எந்தவொரு குலத்தினும். உவமை உரைப்பதற்கு - உவமை யாகச் சொல்லுவதற்கு. வேறு உண்டோ - வேறு ஒருவர் இருக் கின்றாரோ? இல்லை, என்றபடி.

'இரு குலம்' என்பதைத் தாய் தந்தையரின் குலமாகவும் கொள்ளலாம். 'மாசறு தேசு' என்பது குற்றமற்ற கீர்த்தியாகிய பிரகாசம், என்ற பொருளது. 'ஒரு குலம்' என்பது சிற்றரசர் குலத்தையும் குறிக்கலாம். 'இவனுக்கு ஒப்பாவார் எங்கும், எக் குலத்திலும் இலர்,' என்பது கருத்து.

## வேறு

## கலிவிருத்தம்

## சந்தனுவின் தோற்றம்

33. அந்தநன் மரபினி லமுத வெண்டிரைச்
சிந்துவின் மிசைவரு திங்க ளாமெனச்
சந்தனு வெனும்பெயர்த் தரணி காவலன்
வந்தன னவன்செயல் வகுத்துக் கூறுவாம்.

[அந்த நல் மரபினில் அமுதம் வெள்திரை சிந்துவின் மிசை வரு திங்களாம் என, சந்தனு எனும் பெயர் தரணி காவலன் வந்தனன்; அவன் செயல் வகுத்துக் கூறுவாம்]

**விளக்கம் :—** அமுத வெள்திரை சிந்து - பாற்கடல். திங்கள் - சந்திரன். பாற்கடலில் சந்திரன் தோன்றுவதுபோல், குருகுலத்தில் சந்தனு தோன்றினான், குருகுலத்திற்குப் பாற்கடலும், சந்தனுவுக்கு அங்கே தோன்றிய திங்களும் உவமை.

இக் குலத்தினனான 'பிரதீபன்' என்பானுக்கும், சிபிச் சக்ரவர்த்தியின் வம்சம் வந்த 'சுகந்தி' என்பாளுக்கும் பிறந்தவன் சந்தனு. இவனது தமயனான 'தேவாபி' என்பவன் இளம் பிராயத்திலேயே தவ வாழ்க்கையை மேற்கொண்டு கானகம் சென்றதால், அரசுரிமை இவனதாயது. 'பாஹ்லிகன்' என்பான் இவனுக்கு இளையவன்.

34. வேனிலா னிவனென விளங்கு காலையில்
கானக வேட்டைபோ யிளைத்த காவலன்
ஆனமென் குளிர்புன லாசை யான்மணித்
தூநிறக் கங்கையாள் சூழ லெய்தினான்.

[வேனிலான் இவன் என விளங்கு காலையில் கானகம் வேட்டை போய் இளைத்த காவலன் ஆன மெல் குளிர் புனல் ஆசையால் மணி தூநிறம் கங்கையாள் சூழல் எய்தினான்.]

**விளக்கம் :—** வேனிலான் - மன்மதன். குளிர் ஆன மெல் புனல் என்று இயைக்க. மணி தூ நிறக் கங்கையாள் சூழல் - அழகிய வெள்ளிய நிறம் பொருந்திய கங்கா நதியின் கரை.

வேட்டையின் களைத்த காவலன் நீர் வேட்கையுற்றுக் கங்கையின் கரை சேர்ந்தான், என்க. காம விருப்பினை மிகுவிக்குங் காலமாகிய வேனிலுக்கு உரியனாதல் பற்றி மன்மதனை வேனிலான் என்பர். 'மணி' என்பதற்கு 'முத்து' என்றும் பொருள் கொள்ளலாம்.

35. மருவருங் குழல்விழி வதனம் வார்குழை
இருதனந் தோள்கழுத் திதழொ டின்னகை
புருவ வண் புறவடி பொற்பப் பாவையர்
உருவுகொண் டனடன துடைமை தோன்றவே.

[மரு வரும் குழல், விழி, வதனம், வார்குழை, இருதனம், தோள், கழுத்து, இதழொடு இன் நகை, புருவம், வள் புற அடி, பொற்ப பாவையர் உருவு கொண்டனள், தனது உடைமை தோன்றவே.]

**விளக்கம் :**—மரு - வாசனை. வதனம் - முகம். வார்குழை - நீண்ட காது. வள் - எழிலின் வளம் உடைய. பொற்ப - (மேலே கூறிய உறுப்புகள்) அழகின் நலம் பெற்றவாய் இருக்க. தனது உடைமை தோன்றப் பாவையர் உருவு கொண்டனள் - பெண் வடிவம் தனக்குரியது என்பது தோன்ற, (கங்கை) பெண் வடிவத்தை மேற்கொண்டாள்.

காதணியாகிய குழை, இங்கே காதைக் குறித்து நின்றது. 'பாவையர்,' உயர்வுப் பன்மை.

36. கங்கையின் வெள்ளமேற் கருத்து மாறியிம்
மங்கைதன் பேரொளி வனப்பின் வெள்ளமே
தங்கிய சோகமுந் தாப முங்கெடப்
பங்கய விழிகளாற் பருகி னானரோ.

[கங்கையின் வெள்ளம் மேல் கருத்து மாறி, இ மங்கை தன் பேர் ஒளி வனப்பின் வெள்ளமே, தங்கிய சோகமும் தாபமும் கெட பங்கயம் விழிகளால் பருகினான்; அரோ.]

**விளக்கம் :**—வேட்டை முயற்சியினால் வந்து பொருந்திய சோக தாபங்கள் கெட நீர் பருக வந்த வேந்தன், பெண் உருக்

கொண்ட கங்கையின் வனப்பு வெள்ளத்தைக் கண்களால் பருகித் தானுற்ற சோக தாபங்கள் தீரப் பெற்றவனானான், என்ற கருத்தது செய்யுள்.

சோகம் - களைப்பினால் எழுந்த துன்பம். தாபம் - வெம்மை, நீர் வேட்கை. அரோ : ஈற்றசை.

பிரும்ம சாபத்திற்காளான வருணனே இச் சந்தனு மஹா ராஜன். ஒரு நாள் பிரும்மா தமது சபையில் தேவர்களோடு வீற்றிருக்கையில், கங்காதேவி அவண் வந்தாள். அப்பொழுது வாயு வீசவே அவளது ஆடை சிறிது விலகியது. எல்லாத் தேவர் களும் கண்களை மூடிக் கொள்ள, வருணன் மாத்திரம் விருப் புடன் அவளை நோக்கினான். இதனால் வெகுண்ட பிரும்மா, "நீ மண்ணுலகில் மானிடனாய்ப் பிறக்கக் கடவாய்." என்று சபித்ததோடு, நாணி நின்ற கங்கையை நோக்கி. "நீயும் மானிடப் பெண்ணாய்த் தோன்றி, அவனை மணந்து சில காலம் வாழ்ந்தபின் மீள்வாய்," என்று அவளுக்கும் விதித்தார். இதுவே. இவர்களது பூர்வ சரித்திரம்.

37. வையக மடந்தைகொல் வரைம டந்தைகொல்
செய்யபங் கயமலர்த் திரும டந்தைகொல்
துய்யவண் கலைவிதச் சொன்ம டந்தைகொல்
ஐயமுற் றனனிவ ளார்கொ லென்னவே.

[வையகம் மடந்தை கொல்? வரை மடந்தை கொல்? செய்ய பங்கயம் மலர் திரு மடந்தை கொல்? துய்ய வள் கலை விதம் சொல் மடந்தை கொல்? ஐயம் உற்றனன், இவள் ஆர்கொல் என்னவே?]

**விளக்கம் :**—வையக மடந்தை - பூதேவி. வரை மடந்தை - மலை மகள் (பார்வதி). பங்கய மலர்த் திருமடந்தை - இலக்குமி. துய்ய வள் விதம் கலை சொல் மடந்தை - வெள்ளிய செழுமையுடைய பல திறப்பட்ட கலைகளின் தெய்வம் என்ற சொல்லுக்கு உரியளான சரஸ்வதி.

கங்கையின் வடிவில் மயங்கிய சந்தனு, இவள் தெய்வ மடந்தையரில் ஒருத்தியா? அல்லாக்கால், வேறு யாவளாய் இருப்பாள்? என்று அயிர்த்தலைக் கூறும் இச் செய்யுள். இது

காட்சிக்குப் பின்னதான ஐயம் என்ற துறையின் பாற்படும் முன்னைய செய்யுள் காட்சி.

38. கண்ணிமைத் திருநிலங் காலுந்தோய் தலால்
பெண்ணிவண் மானுடப் பிறப்பி னாளென
எண்ணமுற் றவளரு கெய்தி யாவர்செய்
புண்ணிய நீயெனப் புகழ்ந்து போற்றினான்.

[கண் இமைத்து இரு நிலம் காலும் தோய்தலால். பெண் இவள் மானுடம் பிறப்பினள் என எண்ணம் உற்று, அவள் அருகு எய்தி, யாவர் செய் புண்ணியம் நீ என புகழ்ந்து போற்றினான்.]

**விளக்கம் :**—இது தெளிதல் என்ற துறையின்பாற்படும். கண் இமைத்தல், கால் நிலம் தோய்தல் அணிந்த மாலை வாடுதல் ஆயவை மானிடச் செய்தி. எனவே, 'மானிடப் பெண் இவள்,' என்று தெளிவு கொள்கின்றான். இத்தகைய பேரழகு வாய்ந்த ஒரு பெண்ணை மகளாகப் பெற்றோர் பெரும் புண்ணியம் செய்திருக்க வேண்டும் என்ற கருத்தில், "யாவர் செய் புண்ணியம் நீ?" என்று கேட்டானாயிற்று.

39. போற்றிய குரிசின்மெய் புளக மெய்தவே
ஏற்றிய விழியின ளிளகு நெஞ்சினள்
சாற்றிய மலரயன் சாப மிவ்வழித்
தோற்றிய தெனவுறு துயர நீங்கினாள்.

[போற்றிய குரிசில் மெய் புளகம் எய்தவே, ஏற்றிய விழியினள், இளகும் நெஞ்சினள், சாற்றிய மலர் அயன் சாபம் இ வழி தோற்றியது என உறு துயரம் நீங்கினாள்.]

**விளக்கம் :**—குரிசில் - ஆடவரில் சிறந்தவன் (சந்தனு). ஏற்றிய - நோக்கிய. சாற்றிய - கூறிய. மலர் அயன் - திருமாலின் நாபிக் கமலத்தில் இருக்கும் பிரும்மதேவன். இவ்வழித் தோற்றியது - (பிரும்மாவின் சாபம்) இவ்விடத்தே (சந்தனுவின் உருவில்) தோன்றுகிறது போலும். தானுற்ற சாபம் நிறைவேறித் தேவலோகம் செல்லும் நாளை எதிர்பார்த்தவளாய் வருந்திக் கொண்டிருந்த கங்கை, சந்தனுவைக் கண்டதும் துயரம் நீங்கப் பெற்றவளானாள், என்க.

அவள் போக்கிய அன்புடைய பார்வையால், சந்தனுவின் மெய் புளகம் எய்தியது. புளகம் எய்தல் - மயிர்க்கூச்சு அடைதல்.

40. பொங்கிய மதர்விழிப் புரிவு மாதரம்
தங்கிய முகிண்முலைத் தடமு நோக்கியே
இங்கித முறைமைநன் றென்று வேந்தனும்
அங்கித முடனவட் கன்பு கூரவே.

[ பொங்கிய மதர் விழி புரிவும், ஆதரம் தங்கிய முகிழ் முலை தடமும் நோக்கியே, 'இங்கிதம் முறைமை நன்று,' என்று, வேந்தனும் அங்கு இதமுடன் அவட்கு அன்பு கூரவே. ]

**விளக்கம் :**—பொங்கிய - பூரித்த, மிகுந்த. புரிவும் - (கண்) புரிந்த குறிப்பு நோக்கமும். ஆதரம் - விருப்பம். "ஆதரம் தங்கிய பொங்கிய மதர் விழிப் புரிவும்," என்று இயைக்க. இங்கித முறைமை நன்று -(அவள் போக்கிய பார்வையாலும், பூரித்தலையுற்ற முலைகளாலும் 'தன்பால் அருள் உடையாள்,' என்பதைக் கண்டு அவள் தன் உள்ளக் கிடக்கையைக் குறிப்பிக்கும் முறை இனிதாக உளது (என்று சந்தனு மகிழ்கின்றான்). அவட்கு - அவள்பால். அன்புகூர - அன்புமிக.

வேந்தனும் அன்பு மிகுந்தவனாய், இதமுடன், "உசாவினான்," என்று, அடுத்த செய்யுளோடு முடியும். இங்கிதம் - குறிப்பின் தெரிவிக்கும் உறுப்பின் தொழில்.

41. கன்னியே யாகெனிற் கடிகொள் பான்மையை
என்னின்மற் றுயர்ந்தவ ரில்லை மண்ணின்மேல்
உன்னினை வுரையென வுசாவி னானிகல்
மின்னிலை வடிகொள்வேல் வேந்தர் வேந்தனே.

[ கன்னியே ஆம் எனில் கடிகொள் பான்மையை, என்னின் மற்று உயர்ந்தவர் இல்லை மண்ணின்மேல்; உன் நினைவு உரை என உசாவினான், இகல் மின் இலை வடிகொள் வேல் வேந்தர் வேந்தனே. ]

**விளக்கம் :**—கடிகொள் பான்மையை - மணம் செய்துகொள்வதற்கு உரிமை உடையவளாய் இருக்கின்றாய். (பான்மையை : முன்னிலை யொருமைக் குறிப்பு வினைமுற்று.) நினைவு - எண்

ணம். உரை - சொல். வடிகொள் வேல் - கூர்மை கொண்ட வேல். அது, இகலுக்கு (போருக்கு) உரியதும், மின்னலைப்போல் ஒளி விடுவதும், இலைவடிவு உடையதுமான வேல். (அத்தகைய வேற்படையை உடைய வேந்தன்) உசாவினான் - கேட்டான். கன்னியே ஆம், என்பதில், ஆம் அசை.

42. நாணின ளாமென நதிம டந்தையும்
பூணுறு முலைமுகம் பொருந்த நோக்கினள்
சேணுறு தனதுமெய்த் தேசு போனகை
வாணில வெழச்சில வாய்மை கூறுவாள்.

[ நாணினள் ஆம் என நதி மடந்தையும் பூண் உறு முலை முகம் பொருந்த நோக்கினாள்; சேண் உறு தனது மெய் தேசு போல் நகை வாள் நிலவு எழ, சில வாய்மை கூறுவாள். ]

**விளக்கம் :—**பூண் உறு - ஆபரணங்கள் பொருந்திய. முலை முகம் பொருந்த நோக்கினாள், என்பது, "நாணத்தால் தலை கவிழ்ந்த வண்ணம் இருந்தாள்," என்ற பொருளது. சேண் உறு - வெகுதூரம் வரைப் பரவி விளங்குகின்ற. மெய்த்தேசு - தேக காந்தி, நகை - இளமுறுவல், பற்களுமாம். வாள் - பிரகாசம். 'வாய்மை,' என்பது வார்த்தை என்ற பொருளது. கங்கை வெண்மை நிறத்தவள், (நாணினள்) ஆம் : அசை.

43. இரிந்துமெய்ந் நடுங்கிட யாதி யாதுநான்
புரிந்தது பொறுத்தியேற் புணர்வ லுன்புயம்
பரிந்தெனை மறுத்தியேற் பரிவொ டன்றுனைப்
பிரிந்தகன் றிடுவனிப் பிறப்பு மாறியே.

[ இரிந்து மெய் நடுங்கிட யாது யாது நான் புரிந்தது பொறுத்தியேல் புணர்வல் உன் புயம்; பரிந்து எனை மறுத்தியேல் பரிவொடு அன்று உனை பிரிந்து அகன்றிடுவன் இ பிறப்பு மாறியே.]

**விளக்கம் :—**இரிந்து - அஞ்சி. நான் புரிந்தது யாது யாது - நான் செய்வது எதுவாயினும், (புரிந்தது : காலவழு). பரிந்து - இரக்கமுற்று. எனை மறுத்தியேல் - என் செயலை மறுப்பாயாயின், அதாவது, தடுப்பாயாயின். பரிவொடு - மன வருத்தத்தோடு. இப் பிறப்பு மாறி - எடுத்த இப்பெண் பிறவியை மாற்றிக்கொண்டு.

"நான் செய்வது எதுவாயினும், அதைப் பொறுத்திருப்பா யேல், உன்னை மணப்பேன். என்றாவது என் செயலை மறுப் பாயாயின், அன்று மன வருத்தத்தோடு உன்னைப் பிரிந்து சென் றிடுவேன்," என்றபடி.

44. மெய்தரு விதியினேன் விரத மற்றிவை
எய்தரி தொருவரா லெய்த வல்லையேல்
கைதரு கெனப்பெருங் காத லாளனும்
உய்வரி தெனவிசைந் துடன்ப டுத்தினான்.

[மெய்தரு விதியினேன் விரதம் மற்று இவை எய்த அரிது ஒருவரால்; எய்த வல்லையேல் கை தருக என, பெரும் காதலா ளனும் உய்வு அரிது என இசைந்து உடன் படுத்தினான்.]

**விளக்கம் :**—விதி - வகுக்கப்பெற்ற முறை, நியமம். மெய்தரு விதி-உண்மை பொருந்திய விதி; அதாவது, கடக்கக்கூடாத நியமம். விரதம் - செய்கடன். அந்த நியமத்தினளான எனது செய்கடன் (கடமையாகச் செய்ய வேண்டிய கருமம்) இவை-நான் செய்யப் போகும் காரியங்கள். மற்று : அசை. 'எய்தல்' என்பது 'செய்தல்' என்ற பொருளது. ஒருவரால் எய்தல் அரிது - ஒருவ ராலும் (பொறுத்து இருத்தலைச்) செய்தல் அரியது. எய்த வல்லையேல் - (அதை நீ) செய்ய வல்லையாகில். கை தருக - அவ்வாறு செய்வதாகக் கையடித்துக் கொடுப்பாயாக. உய்வு அரிது - (அவளது நிபந்தனைக்கு உடன்பட்டு அவளை மணக்கா விட்டால்) உயிர் பிழைத்தல் அரிது. இசைந்து உடன் படுத்தி னான் - சம்மதித்துத் தனக்கு மனைவியாதற்கு அவளைச் சம்மதிக்கச் செய்தான்.

விவாகத்தை வடமொழியில் பாணிக் கிரஹணம் என்பர். எனவே, 'கை தருக' என்பது 'மணந்து கொள்க' என்ற பொருளதுமாம். கங்கையின் நிபந்தனைக்கு உட்பட்டு மணந்து கொள்ள இசைந்ததால், 'பெருங் காதலன்' எனப்பட்டான்.

45. எனதுயி ரரசுவாழ் வென்ப யாவையும்
நினதுநின் னேவலி னிற்பன் யானென
வனிதையை மருட்டினான் மன்ற லெண்ணியே
தனதனு நிகரிலாத் தனம கீபனே.

[எனது உயிர் அரசு வாழ்வு என்ப யாவையும் நினது; நின் ஏவலின் நிற்பன் யான், என வனிதையை மருட்டினான் மன்றல் எண்ணியே, தனதனும் நிகர் இலா தனம் மகீபனே.]

**விளக்கம் :**—என்ப யாவையும் - என்று சொல்லப்படுபவை எல்லாவற்றையும். என்ப யாவையும் நினது, என்ற முடிபு, ஒருமைப் பன்மை மயக்கம். மருட்டினான் - தன்பால் அவள் மனம் மயக்கமுறச் செய்தான். மன்றல் - திருமணம். தனதன் - தநதன்) குபேரன், செல்வத்தைத் தனதாக உடையவன்· குபேரனும் நேராகாச் செல்வமுடைய அரசனான சந்தனு என்பது, சுற்றடியின் பொருள்.

46. அருமறை முறையினா லங்கி சான்றெனத்
திருமணம் புரிந்துளந் திகழ வைகினான்
இரதியு மதனனு மல்ல தில்லைமற்(று)
ஒருவரு முவமையென் றுலகு கூறவே.

[அருமறை முறையினால் அங்கி சான்று என திருமணம் புரிந்து உளம் திகழ வைகினான்; இரதியும் மதனனும் அல்லது இல்லை மற்று ஒருவரும் உவமை என்று உலகு கூறவே.]

**விளக்கம் :**—இரதியும் மன்மதனும் அல்லாமல், ஒப்பாவார் வேறொருவர் இலர் என்று உலகினர் சொல்லும்படி, சந்தனு கங்கையை வேத முறைப்படி அங்கி சான்றாக மணந்து உளம் மகிழ்ந்தவனாய் வாழ்வின் வைகினான், என்ற பொருளது செய்யுள். திகழ - மகிழ்ச்சி தோன்ற.

47. மருவுறச் சிலபகன் மணந்து மான்விழி
கருவுயிர்த் தனளென களிகொள் காலையில்
பருவமுற் றன்புடன் பயந்த மைந்தனைப்
பொருபுனற் புதைத்தனள் புவனங் காணவே.

[மருவு உற சில பகல் மணந்து மான் விழி கரு உயிர்த்தனள் என களிகொள் காலையில், பருவம் உற்று அன்புடன் பயந்த மைந்தனை பொருபுனல் புதைத்தனள் புவனங் காணவே.]

**விளக்கம் :**—மருவு உற மணந்து - பொருந்தக் கூடியிருந்து. கரு உயிர்த்தனள் - சூல் கொண்டாள். பருவம் உற்று - கரு

முதிரும்படி பத்துமாதம் அதை வயிற்றில் சுமந்து. பொருபுனல் புதைத்தனள் - மோதும் அலைகளையுடைய கங்கா நதியில் எறிந்து கொன்றாள். மான்விழி,' என்பது உவமைத் தொகையின் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; (மான்போன்ற விழியை உடைய கங்கை). பிறந்த குழந்தையைக் கங்கையில் வீழ்த்திக் கொன்றாள், என்பதாம்.

48. கண்டுளம் வெருவிமுன் கதித்த வாசகம்
கொண்டுரை யெடுத்திலன் கொண்ட காதலால்
ஒண்டொடி யுடன்மணந் துருகி வைகினன்
பண்டையி னெழுமடி பரிவு கூரவே.

[கண்டு உளம் வெருவி முன் கதித்த வாசகம் கொண்டு உரை எடுத்திலன், கொண்ட காதலால் ஒள் தொடியுடன் மணந்து உருகி பண்டையின் எழு மடி பரிவு கூரவே.]

**விளக்கம் :**—வெருவி - பயந்து. முன் கதித்த வாசகம் - மணந்தபோது கூறிய நிபந்தனை வாசகம். உரை எடுத்திலன் - அவள் செயலுக்கு எதிராய் ஒன்றும் கூறினானல்லன். முன் கதித்த வாசகத்தாலும், அவள்பால் கொண்ட பெருங் காதலாலும் உரை எடுத்திலன். மணந்து - கூடி. உருகி - மனம் உருகி. பண்டையின் எழுமடி - முன்னே இருந்ததைவிட ஏழு மடங்கு. அன்பு கூர - (அவள்பால்) அன்பு மிக.

பண்டையின்...ஒள்தொடியுடன் மணந்து உருகி வைகினான், என்று இயைக்க.

49. பின்னரு மறுவரைப் பெற்ற தாய்மனம்
முன்னரின் மும்மடி முரண்டு மாய்க்கவே
மன்னவ னவற்றினும் வாய்தி றந்திலன்
நன்னகர்ச் சனமெலா நடுந டுங்கவே.

[பின்னரும் அறுவரை பெற்ற தாய் மனம் முன்னரின் மும்மடி முரண்டு மாய்க்கவே, மன்னவன் அவற்றினும் வாய் திறந்திலன் நல் நகர் சனம் எலாம் நடு நடுங்கவே.]

**விளக்கம் :**—முன்னரின் - (ஐந்தாம் வேற்றுமைப் பொருளதாய ஓரிடைச் சொல்) முன்பு இருந்ததைக் காட்டிலும். மனம்

மும்மடி முரண்டு - மூன்று மடங்கு மனம் மாறுபட்டு, அதாவது தாய்மை உணர்ச்சி நீங்கிய மனத்தினளாய். அவற்றினும் - குழந்தைகளைக் கொன்ற) அப்பொழுதெல்லாம்.

தாய்ப்பாசம் அற்றுக் குழந்தைகளைக் கொன்ற காலத்து, நகர மக்கள் நடுநடுங்கி நின்ற நிலையிலும், சந்தனு முன்னர் ஏற்ற நிபந்தனையை நினைத்து வாய் பேசாதிருந்தான், என்றபடி.

50. வழுவறு குருகுல மன்னன் மைந்தரோர்
எழுவரை முருக்கின ளீன்ற தாயெனப்
பழுதறு மகப்பல பயந்த மங்கையர்
அழுதனர் கட்புன லாறு பாயவே.

[ வழு அறு குருகுலம் மன்னன் மைந்தர் ஓர் எழுவரை முருக்கினள் ஈன்ற தாய் என, பழுது அறு மக பல பயந்த மங்கையர் அழுதனர் கண் புனல் ஆறு பாயவே. ]

**விளக்கம் :**—வழுவறு - குற்றமற்ற. முருக்கினள் - (நீரில் எறிந்து) கொன்றாள். கண்ஆறு பாய அழுதனர் - கண்களிலிருந்து ஆறுபோல் நீர் பெருக, (மகவு பல பயந்த மங்கையர் சோகத்தால்) அழுதனர்.

'வழுவறு' என்ற அடையைக் குருகுல மன்னனுக்குக் கொடுத்தது, ''ஈன்ற குழந்தைகளைக் கொல்லும் ஈரமற்ற பாதகியை மனைவியாகக் கொள்ளும் கதி அரசனுக்கு நேர்ந்ததே,'' என்று மங்கையர் இரங்கினர்'' என்ற குறிப்பினது.

'வழுவறு' என்பதை மைந்தரோடு கூட்டி, ''குற்றமில்லாத அழகிய மைந்தரை,'' என்றும் பொருள் கொள்ளலாம். அப்பொழுது, ''மகவு பலவுடையோரும், அங்கக் குறைவுடைய ஒரு மகவு மாய்ந்தாலும் பொறாராக, வழுவற்ற ஏழு குழந்தைகளை ஈன்ற தாய் கொன்றனளே!'' என்று மங்கையர் புலம்பினர், என்பது பொருளாகும். 'வழுவறு' என்பதை ஈரிடத்தும் கூட்டிப் பொருள் கொள்ளல் சிறக்கும்.

51. கங்கையென் றுலகெலாங் கைதொ ழத்தகும்
மங்கையங் கனந்தரம் வயிறு வாய்த்துழி
வெங்கய கடகரி வேந்தன் மாமனப்
பங்கயந் துறந்தது பழைய வின்பமே.

[கங்கை என்று உலகு எலாம் கை தொழ தகும் மங்கை அங்கு அனந்தரம் வயிறு வாய்த்துழி, வெம் கய கடகரி வேந்தன் மாமனம் பங்கயம் துறந்தது பழைய இன்பமே.]

**விளக்கம் :—** அங்கு : அசை. அனந்தரம் - பிறகு. வயிறு வாய்த்துழி (வாய்த்தஉழி) - கருக்கொண்ட காலத்து. வெம் - கொடிய. **கய :** பெருமைப் பொருளதான உரிச்சொல். கடம் - யானையின் கன்னம், இங்கே ஆகுபெயராய் அவ்விடமிருந்து பெருகும் மதநீரைக் குறித்தது. மனப்பங்கயம் - மனமாகிய தாமரை. பழைய இன்பம் துறந்தது - இதன்முன் அனுபவித்த இன்பத்தை இப்பொழுது வெறுத்து விட்டது.

எட்டாவது முறையாகக் கங்கை கருக்கொண்டபோது, மன்னவன் மனம் சிற்றின்பத்தில் வெறுப்புக்கொண்டதாயிற்று, என்ற பொருளது செய்யுள்.

52. மதலையைப் பயந்தனண் மடந்தை யென்றலும்
கதுமெனச் சென்றுதாய் கைப்ப டாவகை
இதமுறப் பரிவுட னெடுத்து மற்றவள்
பதயுகத் தாமரை பணிந்து பேசுவான்.

[மதலையை பயந்தனள் மடந்தை என்றலும் கதுமென சென்று, தாய் கை படாவகை இதம் உற பரிவுடன் எடுத்து, மற்று அவள் பதயுகம் தாமரை பணிந்து பேசுவான்.]

**விளக்கம் : —** கதுமெனச் சென்று - விரைந்து சென்று. தாய்கைப் படாவகை - தாயின் கையில் அகப்படாதபடி. இதமுற - நன்மையுண்டாக, அதாவது, குழந்தைக்குச் சாகாமையாகிய நன்மை உண்டாகுமாறு. பதயுகம் - உபய பாதங்கள்.

அவன் தன் தேவியின் பதயுகத் தாமரை பணிந்தது, அவளது மனத்தைத் தன் கருத்தின் வழி மாற்றும் பொருட்டு, என்க. மற்றக் குழந்தைகளைப்போல் இதையும் அவள் கொல்லாமல் காக்கும் பொருட்டு, அரசன் கதுமெனச் சென்று தாயின் கைப்படா வகைக் குழந்தையை எடுத்தனன் என்பதாம்.

53. நிறுத்துக மரபினை நிலைபெ றும்படி
வெறுத்தெனை முனியினும் வேண்டு மாவிது
மறுத்தனன் யானென மனஞ்செ யாதினிப்
பொறுத்தருள் புரிகவிப் புதல்வன் றன்னையே.

[நிறுத்துக மரபினை நிலை பெறும்படி, வெறுத்து எனை முனியினும் வேண்டும் (ஆல்) இது; மறுத்தனன் யான் என மனம் செயாது இனி, பொறுத்து, அருள் புரிக இ புதல்வன்தன்னையே]

விளக்கம் :—"எம் வம்சம் இடையறாது நிலைத்து நிற்கு மாறு செய்க," என்று மன்னன் கங்கையை வேண்டிக்கொள்ளும் பொருளது, முதலடி. இரண்டாவது அடி, நீ என் கருத்திற்கு இசையையாயினும், நான் இம்முறை மகவைக் கொல்வதற்கு ஒருப்படேன்," என்று மன்னன் தன் மன வுறுதியைத் தெரி விக்கும் கருத்தது.

(வெறுத்து நீ முனியினும்) இது வேண்டும் - குழந்தையைக் காத்தலாகிய இது செய்யப்பட வேண்டும். யான் மறுத்தனன் - (உன் மனத்தின் வழி காரியம் நடத்தலை) நான் தடுத்தேன். மனம் செயாது - மனத்தில் (கோபம்) கொள்ளாது. இனி - இப்பொழுது. (என்னை) பொறுத்து அருள் புரிக, இப்புதல்வனை அருள் புரிக - என்னைப் பொறுத்தருள் புரிவதோடு, இப்புதல் வனையும் (எனக்குத் தந்து) அருள் புரிக, ஆல்; அசை,

இச் செய்யுளால், மகனைத் தருப்படி வேண்டிக்கொள்வ தோடு, அவள் கருத்தின் வழி காரியம் நடவாதபடி காக்கும் தனது தீர்மானத்தையும் தெரிவித்தல் காண்க.

54. என்றுபற் பலமொழி யிவனி யம்பவே
நன்றுநன் றவனிப நவின்ற வாசகம்
இன்றுநின் றிரங்கினை யெழுவர் மைந்தரைக்
கொன்றவன் றென்செய்தாய் கொடியை
யென்னவே.

[என்று பல் பல மொழி இவன் இயம்பவே, நன்று நன்று அவனிப, நவின்ற வாசகம்; இன்று நின்று இரங்கினை; எழுவர் மைந்தரை கொன்ற அன்று என் செய்தாய், கொடியை என்னவே.]

விளக்கம் : எட்டாவது குழந்தையைக் காக்க வேண்டி அரசன் பல படியாக வேண்டலைக் கேட்ட கங்கை, "அவனிப, (எது செய்யினும் மறுக்கேன் என்று) நவின்ற வாசகம் நன்று, நன்று; அதாவது நவின்ற வாசகத்தை நீ காப்பாற்றும் விதம் மிக நன்றாயிருந்தது" என்றாள். நன்று நன்று என்ற அடுக்கு வெகுளி யோடு இகழ்ச்சியையும் குறிக்கும்.

''இன்று இறங்குகின்ற நீ, ஏழு குழந்தைகளை நான் கொன்றக்கால், கொடியவனே, ஏன் பேசாதிருந்தாய்?'' என்று கங்கை இடித்துரைக்கும் கருத்தினை ஈற்றடிகளில் காண்க. அடுத்த செய்யுளோடு குளகமாய்த் தொடரும்.

55\. அரசனு முணர்ந்து நீ யார்கொல் பாலரைத்
திரைசெறி புனலிடைச் செற்ற தென்கொலாம்
உரைசெய வேண்டுமென் றுரைப்ப வஞ்சியும்
வரிசையி னுயர்ந்ததன் வரவு கூறுவாள்.

[அரசனும் உணர்ந்து ''நீ யார் கொல்? பாலரை திரை செறி புனல் இடை செற்றது என் கொல் ஆம்? உரை செய வேண்டும்'' என்று உரைப்ப, வஞ்சியும் வரிசையின் உயர்ந்த தன் வரவு கூறுவாள்.]

**விளக்கம் :**—அரசனும் உணர்ந்து - அரசனும் உணர்ச்சி தோன்றப்பெற்று; அதாவது, இதனில் ஏதோ இரகசியம் உளது, என்ற உணர்ச்சி தோன்றப் பெற்று. செற்றது என் கொலாம் - (நீரில் எறிந்து) கொன்றது என்ன காரணம்பற்றிச் செய்ததாகும்? வரிசையின் - முறைப்ப, வரிசையாக. உயர்ந்த தன் வரவு கூறினாள்-மேம்பாடுடைய தன் வரவை (தான் இங்கே வந்து பிறந்த சரித்திரத்தை) அது நிகழ்ந்த முறைப்படி கூறினாள்.

'வரவு என்பது தொழிலாகு பெயராய்க் கங்கை மண்ணுலகம் வந்து பிறந்த சரிதையை உணர்த்திற்று, ''பெருமையினால் உயர்ந்த'' என்பது பொருளாகும்.

## கங்கையின் வரலாறு

56\. வான்முக மதியமும் புதிய மாலிகைக்
கான்முக விதழியுங் கமழுங் கங்கையாள்
தேன்முகம் பொழிதரு செய்ய தாமரை
நான்முகன் பேரவை நண்ணி னாளரோ.

[வான்முகம் மதியமும், புதிய மாலிகை கான் முகம் இதழியும் கமழும் கங்கையாள், தேன்முகம் பொழிதரு செய்ய தாமரை நான் முகன் பேர் அவை நண்ணினாள், அரோ: ஈற்றசை.]

**விளக்கம் :**—'முகம்' இடப்பொருளது, மதியம் - பிறைச் சந்திரன். கான் - மணம். இதழி-கொன்றை, கமழும் - நறுமணம் வீசுகின்ற "வானிடத்தே உள்ள சந்திரனும், புதிய மலர்களால் கட்டப்பெற்ற வாசனையைத் தன்னிடத்தே கொண்ட கொன்றையும் மணம் வீசுகின்ற கங்கையாள்," என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

தேமுகம் பொழிதரு செய்ய தாமரை நான்முகன் - தேனைத் தன்னிடத்திருந்து பொழியும் சிவந்த தாமரையில் வதியும் பிரும்மதேவன். பேர் அவை-அவனுடைய பெரிய சபை. நண்ணினாள் - அடைந்தாள். கங்கை தனது தெய்வ ரூபத்தில் சத்திய லோகத்திலுள்ள பிரும்மசபை சென்றதைக் கூறும் இச் செய்யுள். அவள் தன்னைப் படர்க்கையாக வைத்துத் தனது வரலாற்றைக் கூறுகின்றாள். சிவனது முடியில் உறைதலால், "கங்கையினிடம் மதியமும் இதழியும் கமழும்," என்று கூறப்பட்டது. 'மதியம் கமழும்.' என்பது உபசார வழக்கு. மாலிகை - மாலை.

'வால் முகமதியம்' என்று பிரித்து, 'வெள்ளிய வளர்தலுற்ற பிறைச்சந்திரன்' என்றும் பொருள் கொள்ளலாம்.

57. இருங்கலை யிமையவ ரெதிரி றைஞ்சுவாள்
மருங்கலை மதியினை மதிக்கு மாறுபோல்
அருங்கலை யயலுற வதிர்ந்து வீசினான்
பொருங்கலை யெனுமிகற் புரவி வீரனே.

[இரு கலை இமையவர், எதிர் இறைஞ்சுவாள் மருங்கு, அலைமதியினை மதிக்கும் ஆறு போல் அரு கலை அயல் உற அதிர்ந்து வீசினான் பொரும் கலை எனும் இகல் புரவி வீரனே.]

**விளக்கம் :**—"இருங்கலை இமையவர் அலை மதியினை மதிக்குமாறு போல், பொருங்கலை...வீரன், எதிர் இறைஞ்சுவாள் மருங்கு அருங்கலைஅயலுற அதிர்ந்து வீசினான்," என்பது அன்வயம்.

இருங்கலை இமையவர் - கல்வியில் மிக்காரான தேவர்கள். எதிர் இறைஞ்சுவாள்-பிரும்மாவின் எதிரிலே வணங்கினளாகிய கங்கை. 'மருங்கு' என்பதோடு 'அருங்கலை' என்பதைக் கூட்டுக; "கங்கையின் இடையில் உடுத்தியுள்ள வஸ்திரம்," என்பது பொருள். அலைமதியினை மதிக்குமாறுபோல் - தேவர்களின் சஞ்சலிக்கும் புத்தியை அளந்து அறியும் பொருட்டுச் செய்தது.

போல்; அயல் உற - (கங்கையின் வஸ்திரம்) சிறிது விலகும்படி. அதிர்ந்து - ஒலி செய்து. பொரும் கலை எனும் இகல் புரவி வீரனே - போர் செய்ய வல்ல கலைமான் என்று சொல்லப்படும் வலிய வாகனத்தை உடைய வீரனான வாயு பகவான், (இகல் புரவி - வலிய வாகனம். குதிரை என்ற பொருளுடைய புரவி, என்ற சொல், ஊர்தி என்ற பொருளதாயிற்று).

வாயு வீசிய செய்தியில், தேவரின் மனத்தின் நிலையை அளந்தறிதலாகிய ஒரு பயனைப் புலவர் ஏற்றிக் கூறுவதால், இது **பயன் தற்குறிப்பேற்றம்** ஆகின்றது.

செய்யுளடிகளின் ஓரடியில் சீர் முதலாய் வந்த எழுத்துக்களின் முதல் எழுத்துத் தவிர மற்ற எழுத்துக்கள், மற்ற அடிகளிலும் பொருள் வேறுபாட்டோடு இருங்கலை, மருங்கலை, அருங்கலை, பொருங்கலை, என்று ஒன்றி வரலின் **திரிபு** என்ற சொல்லணியும் இதில் அமைந்துளது.

58. திருத்தகு மவயவந் திகழ்ந்து தோன்றவே
கருத்துட னவைக்கணோர் கண்பு தைக்கவும்
மருத்தினை மனனுற மகிழ்ந்து காதல்கூர்
உருத்தகு முரிமையோ டொருவ னோக்கினான்.

[திரு தகும் அவயவம் திகழ்ந்து தோன்றவே கருத்துடன் அவைக்கணோர் கண் புதைக்கவும், மருத்தினை மனன் உற மகிழ்ந்து, காதல் கூர் உரு தகும் உரிமையோடு ஒருவன் நோக்கினான்.]

**விளக்கம் :**—திருத்தகு அவயவம்-அழகு விளங்கும் அவயவம். திகழ்ந்து - விளங்கி. அவைக்கணோர் கருத்துடன் கண் புதைக்கவும் - அவையில் இருந்த தேவர்கள் மனத்தோடு கண்ணையும் மூடிக்கொள்ளவும். மருத்து - வாயு தேவன் - மனன் உற மகிழ்ந்து - ஆடை விலகச் செய்த வாயுவை) மனப்பூர்வமாய்க் கொண்டாடி. காதல்கூர் உரு - காதல் மிகுவதற்கு ஆதாரமான அந்த அவயவப் பிரதேசத்தை. தகும் உரிமையோடு - பார்த்தல் தக்கதாகிய தனது உரிமையே என்ற எண்ணத்தோடு, (ஒருவன் நோக்கினான்.) அவன் வருணன் என்பதை அடுத்த செய்யுள் கூறும்.

59. நோக்கிய வருணனை நுவல நான்மறை
ஆக்கிய முனியுருத் தழன்று பார்மகள்

தாக்கிய மென்னவுற் பவிக்க நீயெனத்
தாக்கிய வுருமெனச் சபித்த காலையே.

[நோக்கிய வருணனை நுவலும் நான்மறை ஆக்கிய முனி உருத்து அழன்று, பார்மகள் பாக்கியம் என்ன உற்பவிக்க நீ என, தாக்கிய உரும் என சபித்த காலையே.]

**விளக்கம்** :—நுவலும் - ஓதும், ஓதற்குரிய. நால்மறை ஆக்கிய முனி - பிரும்மதேவன். உருத்து அழன்று - மிகவும் வெகுண்டு. பார்மகள் பாக்கியம் என்ன உற்பவிக்க - பூமி செய்த பாக்கியம் என்று உலகினர் எண்ணும்படி பூமியில் பிறக்கக் கடவாய். தாக்கிய உரும் என - மோதிய இடிபோல், அதாவது மனம் அதிகம் வருந்தும்படி. '**சபித்த காலை**,' என்பது அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும்.

60. கோனிட நினைவொடு குறுகி நீயுநன்
மானிட மடந்தையாய் மணந்து மீள்கென
வானிடை நதியையும் வழுவி னாலவள்
தானிட ருறும்வகை தந்தை யேவினான்.

[கோன் இடம் நினைவொடு குறுகி நீயும் நல் மானிடம் மடந்தை ஆய் மணந்து மீள்க என, வானிடை நதியையும் வழுவி னால் அவள் தான் இடர் உறும் வகை தந்தை ஏவினான்.]

**விளக்கம்** :—கோனிடம் நினைவொடு-அரசனாக மண்ணில் பிறக்கப்போகும் வருணனிடம் அன்புடைய மனத்தோடு. வானிடை நதி - கங்கை. வழுவினால் - வருணன் செய்த பிழையினால். அவள்தான் இடர் உறும் வகை - கங்கை துயரம் அடையும்படி (தான் - அசை). தந்தை - படைத்தற் கடவுளான பிரும்மா. ஏவினான் - விதித்தான்.

'நினைவொடு குறுகி' என்பதற்கு, "முன் ஜன்ம உணர்ச்சியோடு மண்ணை அடைந்து," என்றும் கொள்ளலாம். 'வழுவினால் என்பதைக் கங்கையோடு இயைத்து, "தன்னை நோக்கிய வருணனைத் தானும் விருப்புடன் நோக்கிய பிழையினால்," என்றும் பொருள் செய்யலாம்.

61. பாரினு நமக்கொரு பதமுண் டென்றவள்
ஈரமுற் றிழிதரு மெல்லை வானகத்(து)

ஓரிடை யுடன்விழு முற்கை போன்முகம்
வாரொளி மழுங்கினர் வசுக்க டோன றினார்.

[பாரினும் நமக்கு ஒரு பதம் உண்டு என்று அவள், ஈரம் உற்று இழிதரும் எல்லை, வானகத்து ஓரிடை உடன் விழும் உற்கை போல் முகம் வார் ஒளி மழுங்கினர் வசுக்கள் தோன்றினார்]

விளக்கம்:—"பிரும்ம சாபத்தின்படி, கங்கை மண்ணில் இறங்குகையில், வானிடத்தே ஓரிடத்தில் வானிருந்து விழும் கொள்ளிக் கட்டைகளைப் போல், முகவொளி மங்கினராய் மண் நோக்கி இறங்கும் வசுக்கள் என்னும் தேவர்களை அவள் கண்டாள்," என்பதைக் கூறும் இச் செய்யுள்.

பாரினும் நமக்கு ஒரு பதம் உண்டு. பூமியிலும் தனக்கு ஏற்றமான ஓரிடம்; அதாவது, "ஆகாச நதியாக இருந்த கங்கை, பகீரதனால் பூமிக்குக் கொண்டு வரப்பெற்று, எல்லோரும் பொற்றும் ஸ்தானத்தைப் பூமியிலும் பெற்றதனால், அவள் 'பாரிலும் நமக்கு ஓரிடம் உண்டு,' என்று கருதினாள்." என்பது பொருள். 'அவ்வாறு கருதியதால், சாபத்தால் உண்டான துன்பம் குறையப் பெற்றவளானாள்." என்பது குறிப்பு,

'ஈரம் உற்று' என்பது 'மனக்கிலேசம் நீங்கப் பெற்று.' என்ற பொருளது. கொள்ளிக் கட்டை - விண்வீழ்கொள்ளி, வசுக்கள்: தேவ கணங்களில் ஒரு வகையினர்.

62. என்னையிங் கிழிந்தவா றெங்கண் மாநதி
அன்னையென் றவளடி யவர்வ ணங்கலும்
தன்னையங் கயனிடு சாபங் கூறினாள்
பின்னையங் கவருந்தம் பெற்றி பேசுவார்.

[என்னை இங்கு இழிந்த ஆறு எங்கள் மாநதி அன்னை, என்றும் அவள் அடி அவர் வணங்கலும், தன்னை அங்கு அயன் இடு சாபம் கூறினாள், அங்கு அவரும் தம்பெற்றி பேசுவார்]

விளக்கம்:—வானிருந்து மண்ணோக்கி இறங்கும் கங்கையை நோக்கி வசுக்கள் "எங்கள் மாநதி அன்னாய், இங்கே இறங்கிய காரணம் யாது?" என்று கேட்டு அவளடி வணங்கலும், அவள் தனக்குச் சத்தியலோகத்தில் நேர்ந்த பிரும்ம சாபத்தைக்

கூறினாள். அவர்களும் பின்னர் அவ்விடத்தே தமது விருந்தாந்தத்தைக் கூறலுற்றார்—என்பது செய்யுளின் பொருள்.

மூன்றாவது அடி—அங்கு சத்தியலோகம். நாலாவது அடி அங்கு-அவ்விடத்தே அப்பொழுது. என்பது 'விருத்தாந்தம் என்ற பொருளில் வந்துள்ளது. அன்னை: அண்மை விளி.

63. உற்றுறை யெங்களு ளொருவன் றன்மனை
பொற்றொடிக் கழிந்தவள் புன்மை வாய்மையால்
சற்றுமெய் யுணர்வறத் தகாதொன் றெண்ணினான்
மற்றெழு வருமவன் வயத்த ராயினோம்.

[உற்று உறை எங்களுள் ஒருவன் தன்மனை பொன் தொடிக்கு அழிந்து அவள் புன்மை வாய்மையால் சற்று மெய் உணர்வு அற, தகாத ஒன்று எண்ணினான், மற்று எழுவரும் அவன் வயத்தர் ஆயினோம்.

**விளக்கம்:—**''வானலோக வாசியான எங்களில் ஒருவன் மனைவி சொல் கேட்டு அறிவு நீங்கினனாய்த் தகாத செயல் எண்ணினான்; நாங்கள் ஏழு பேரும் அவனுக்கு உடந்தையாயினோம்.

உற்று உறை வானுலகத்தில் பொருந்தி வாழும் ஒருவன்- 'பிரபாசன்' என்பான் ஒருவன். தன் மனை பொற்றொடிக்கு- தன் மனைவியாகிய பெண்ணின் விஷயத்தில் அழிந்து மன உறுதி கெட்டு அவள் புன்மை வாய்மையால்: அவள் கூறிய இழிவுடைய வார்த்தையினால், சற்றும் சிறிதும். மெய் உணர்வு அற- நல்லறிவு கெட. தகாதொன்று- தகாததான ஒன்றைச் செய்ய. எழுவரும் அவன் வயத்தர் ஆயினோம்-நாங்கள் ஏழுபேரும் (அக்காரியத்தில் அவனுக்கு) உடன் நிற்பவராயினோம்.

பொற்றொடி- வேற்றுமைத் தொகைப் புறத்ததான அன்மொழித் தொகை. பிரபாசன் என்பானுக்குத் துணைநின்ற எழுவர்-—அனலன், அனிலன், ஆபன், சோமன், தரன், துருவன் பிரத்யூஷன்' என்பவர்.

64. தூநகை மொழிப்படி சோர ராகியே
வானவர் வணங்கு தாள் வசிட்டன் வாழ்மனைத்
தேனுவை யிரவினிற் சென்று கைக்கொளா
மீனெறி கரந்தென மீள வேகினோம்.

[தூநகை மொழிப்படி சோரர் ஆகியே வானவர் வணங்கு தாள் வசிட்டன் வாழ் மனை தேனுவை இரவினில் கைகொளா, மீன் நெறி கரந்து என மீள ஏகினோம்.]

**விளக்கம்:**—தூநகை-பிரபாசன் மனைவி, (பண்புத் தொகைப் புறத்ததான அன்மொழித் தொகை). தேனு-காம தேனு. கைக் கொளா-கைப்பற்றி. மீன் நெறி சுரந்தென-நீரில் மீன் சென்ற வழி ஒளித்தது போல்; அதாவது மீனின் செல் நெறி தெரிய முடியாமல் தெரியாதபடி காரியத்தை முடித்துக்கொண்டு) மீண்டும் எமதிடம் சென்றோம்.

காமதேனுவைக் களவாடிய வசுக்கள், சென்ற சுவடு தெரி யாமல் காரியத்தை முடித்து மீண்டமையின், மீன்னெறி உவமை ஆயிற்று.

65. பசுக்கவர்ந் தனரெனப் பயிலு மாதவம்
முசுக்குல மனையமெய்ம் முனிவர் கூறலும்
சிசுக்களி னறிவிலாச் சிந்தை செய்தவர்
வசுக்களென் றருந்ததி மகிழ்ந னெண்ணினான்.

[பசு கவர்ந்தனர் என பயிலு மாதவம் முசு குலம் அனைய மெய் முனிவர் கூறலும், சிசுக்களின் அறிவு இலா சிந்தை செய் தவர் வசுக்கள் என்று அருந்ததி மகிழ்நன் எண்ணினான்.]

**விளக்கம்:**-மாதவம் பயிலும்- பெருந் தவத்தைத் செய்து வரும். முசுக் குலம் அனைய மெய் முனிவர்-முசு என்ற வானர ஜாதியை (தோற்றத்தில்) ஒத்த உடலை உடைய முனிவர். சிசுக் களின் அறிவிலாச் சிந்தை செய்தவர்-குழந்தைகளைப் போல் அறிவில்லாமல் (களவாடுதலை) எண்ணியவர். அருந்ததி மகிழ் நன்-வசிட்டன். எண்ணினான் - ஞானதிருஷ்டியால் தெரிந்து கொண்டான்.

"காமதேனு கவரப்பட்டதை முனிவர் கூறுதலும், அக்காரி யத்தைச் செய்தவர் வசுக்கள் என்பதை வசிட்டன் ஞானதிருஷ்டி யால் தெரிந்தான்," என்பதைக் கூறும் செய்யுள்.

தேகம் ஒட்டியும், மயிர் அடர்ந்தும் இருத்தல் பற்றி, முசுக் குலம், முனிவர்க்கு உவமை ஆயிற்று. களவை வெளிப்படுத்திய முனிவர் பால் எழுந்த வெகுளி காரணமாய், அவர்களை, முசுக் குலம் அனைய மெய்முனிவர், என்றார், என்க. முசு-குரங்கின

தில் ஒருவகை, அறிவு இலா, என்பதிலுள்ள இலா என்பது, ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் அன்று; 'இல்லாது அல்லது இல்லாமல்' என்ற பொருளது; அது, 'சிந்தை செய்தவர்' என்பதிலுள்ள செய் என்ற வினையுடன் சேரும் எதிர்மறை வினையெச்சம். அருந்ததி மகிழ்நன்-அருந்ததியின் கணவன்.

66. உம்பத மிழிந்துநீ ருததி மண்ணுளோர்
தம்பதம் பெறுகெனச் சாபங் கூறலும்
எம்பதம் பெறுவதென் றினியெ னாவவன்
செம்பத மெமதுபூஞ் சென்னி யேந்தினேம்.

[உம் பதம் இழிந்து நீர் உததி மண் உளோர் தம் பதம் பெறுக என சாபம் கூறலும், எம் பதம் பெறுவது என்று இனி எனா, அவன் செம்பதம் எமது பூ சென்னி ஏந்தினேம்.]

விளக்கம்:—உம் பதம்-வசுக்களாய் இருக்கும் பதவி. உததி - (வடசொல்) கடல். அவன் செம் பதம்-வசிட்டனது அழகிய பாதங்கள். பூஞ்சென்னி அழகிய எங்கள் தலையில் ''சாபவிமோசனம் விழைந்து, வசிட்டனது திருவடிகளில், வசுக்கள் விழுந்து வணங்கினார்,'' என்றபடி.

'உததி' என்ற வடசொல் 'நீரை உடையது' என்ற பொருளது; எனவே, நீரையுடைய கடலைக் குறிக்கின்றது.

67. அன்புடை முனிமுனி வாறி மானுடப்
புன்பிறப் பெழுவரும் புரிந்து மீளுதிர்
மின்புரை தெரிவைசொல் விழைந்த நீயவண்
இன்பமற் றநேகநா ளிருத்தி யென்னவே.

[அன்பு உடை முனி முனிவு ஆறி மானுடம் புல் பிறப்பு எழுவரும் புரிந்து மீளுதிர்; மின்புரை தெரிவை சொல் விழைந்த நீ அவண் இன்பம் அற்று அநேகம் நாள் இருத்தி என்னவே.]

விளக்கம்:—எழுவரும் மானுடப் புல் பிறப்பு புரிந்து மீளுதிர்-பிரபாசனின் காரியத்தில் துணைநின்ற ஏழுபேரும் புல்லிய மானிடப் பிறவியை எடுத்து (உடனே சாபம் நீங்கி உங்களது பதவிக்கு) மீளுங்கள். மின்புரை தெரிவை சொல் விழைக்த நீ - மனைவி சொல்லை விரும்பிக் கேட்டுக் களவைச் செய்த நீ மாத்திரம். மின்புரை - மின்னலை ஒத்த.

பெண் சொல் கேட்டுக் களவு செய்த பிரபாசன், பூமியில் நெடு நாள் மனைவியின்பம் இல்லாதவனாய் வாழ்ந்திருந்து, பிறகு வசுப்பதவியை அடையும்படியும், அவனுக்கு உடந்தையாயிருந்த எழுவரும் பிறந்த உடனேயே தம் பதம் மீளும்படியும், முனிவு ஆறிய வசிட்ட முனிவர் விதித்தார், என்க.

68. விண்வரு செல்வமும் விழைவு மேன்மையும்
எண்மரு மிழந்தன மென்செய் வேமென
மண்வரு தையலை வணங்கத் தையலும்
பண்வரு மொழிசில பகர்ந்து தேற்றினாள்.

[விண் வருசெல்வமும் விழையும் மேன்மையும் எண்மரும் இழந்தனம்; என் செய்வோம்? என, மண்வரு தையலை வணங்க' தையலும், பண் வரு மொழி சில பகர்ந்து தேற்றினாள்.]

**விளக்கம்**—:"வானுலகச் செல்வம், போகம், மேன்மை ஆகியவற்றை இழந்தனம், என் செய்வோம்?" என்று கூறித் தன்னை வணங்கிய வசுக்களுக்குக் கங்கை, இனிய வார்த்தைகள் சில சொல்லித் தேற்றலுற்றாள். பண் வருமொழி சில பகர்ந்தாள்-இனிய இதமொழி சில கூறினாள்,

69. வலத்துயர் தடம்புய வருண னுங்குரு
குலத்தினி லயன்வரங் கொண்டு தோன்றுமால்
நலத்துட னவன்மனை நண்ணு மெல்லையில்
நிலத்திடை யென்வயி னீருந் தோன்றுவீர்.

[வலத்து உயர் தடம் புயம் வருணனும் குரு குலத்தினில் அயன் வரம் கொண்டு தோன்றும் (ஆல்)· நலத்துடன் அவன் மனை நண்ணும் எல்லையில், நிலத்திடை என் வயின் நீரும் தோன்றுவீர்,]

**விளக்கம்:**—அயன் வரம்- பிரும்மதேவன் இட்ட சாபம். நலத்துடன்-சிறப்புடன். அவன் மனை நண்ணும் எல்லையில்-(அவனது மனைவியாகி) நான் அவன் மனை அடையும்போது. என் வயின் தோன்றுவீர்-எனது பிள்ளைகளாய்ப் பிறப்பீராக.

70. அஞ்சன்மி னும்மைநா னவனி தோயுமுன்
எஞ்ச வீட் டிடுவனிவ் விறைவன் றன்னையும்

நெஞ்சுறத் தந்தைபா னிறுத்தி நானுமவ்
வஞ்சகப் பிறப்பினை மாற்று வேனென்றாள்.

[அஞ்சன்மின் உம்மை நான் அவனி தோயும் முன் எஞ்ச வீட்டிடுவன்; இ இறைவன் தன்னையும் நெஞ்சு உற தந்தை பால் நிறுத்தி நானும் இவஞ்சகம் பிறப்பினை மாற்றுவேன், என்றாள்]

**விளக்கம்:**—அஞ்சன்மின். (பூமியில் எப்படி வாழ்வது என்று) அஞ்சாதீர், அவனி தோயுமுன்-பிறந்த அந்தக் கணத்திலேயே. எஞ்ச-உயிர் ஒடுங்கும்படி அல்லது சாபம் நீங்கும்படி. வீட்டிடுவேன் - கொன்றிடுவேன். இ இறைவன் தன்னையும் வசுகணத் தலைமை பெற்ற இப் பிரபாசனையும். தந்தை பால் நெஞ்சு உற நிறுத்தி - தந்தையினிடம் அவனது மனத்தொடு பொருந்தியிருக்குமாறு பூமியில் இருக்கச் செய்து. நானும்.— வஞ்சகப் பிறப்பினை-தீமையால் விளைந்த இந்த மானிடப் பிறவியை, (நீக்கிக் கொள்வேன்)

71. நாலிரு வசுக்களு நதிம டந்தைசொல்
பாலிரு செவிபடப் படாத நற்றவம்
சாலிரு நிலத்திழி தாயை யன்புடன்
காலிரு கரத்தினாற் கசிந்து போற்றினார்.

[நால் இரு வசுக்களும் நதி மடந்தை சொல் பால், இரு செவி பட, படாத நல்தவம் சால் இரு நிலத்து இழி தாயை அன்புடன் கால் இருகரத்தினால் கசிந்து போற்றினார்,]

**விளக்கம்:**—சொல் பால்-சொல்லாகிய அமுதம். படாத நல் தவம் சால்-அழியாத சிறந்த பயனுடைய தவம் நிலைத்து; (சால் மிகுதிப் பொருளதான உரிச்சொல்). தாயை அன்புடன் கால் (விழுந்து) கசிந்து இரு கரத்தினால் போற்றினார் - தாயை அன்போடு அவள் காலில் விழுந்து மனமுருகி, இரு கரங்களினாலும் வணங்கினார். போற்றல் - வந்தித்தல், வணங்கல்.

தவம் செய்வதற்கும், அதன் பயனைப் பெறுவதற்கும் உரிய இடம் பூலோகம், ஆதலால், 'படாத நல்தவம் சால் இரு நிலம்,' என்றார், 'படர்ந்த நல்லறம்,' என்றும் பாடமுளது. 'தர்மம் படர்ந்து நிலைத்த (பூமி)' என்பது அதன் பொருளாகும்.

72. சதையமின் கடவுளுஞ் சசிகுலத்துநல்
விதையென மேதினி மீது தோன்றினான்
துதையளி செறிகுழற் றோகை யாயினாள்
இதையமுற் றுயர்நதி யென்னு மின்னுமே.

[சதையம் மீன் கடவுளும் சசி குலத்து நல்விதை என, மேதினி மீது தோன்றினான்; துதை அளி குழல் தோகை ஆயினாள், இதையம் உற்று உயர் நதி என்னும் மின்னுமே.

**விளக்கம்:**—சதய மீன் கடவுள் - சதயம் என்னும் நட்சத்திரத்தின் தேவனான வருணன். சசிகுலம் - சந்திர வம்சம். நல் விதையென - (அக் குல வளர்ச்சிக்கான) நல்ல விதை போல, மேதினி - பூமி. 'இதயம் உற்று உயர் நதி என்னும் மின்னும், அளிதுதை செறி குழல் தோகை ஆயினாள்,' என்று அன்வயிக்க. இதையம் உற்று அருள் பொருந்திய, மின்னும்'- (ஆகுபெயர்) மின்னலை ஒத்த (கங்கை என்னும்) பெண்ணும். அளி துதை - வண்டுகள் நெருங்கிய. செறிகுழல் - அடர்ந்த கூந்தலையுடைய, தோகை ஆயினாள் - மானுடப் பெண் ஆனாள்; (தோகை: பெண்ணுக்கு ஆகுபெயர்) கங்கை மானிடப் பெண்ணானதையும், வருணன் சந்திரகுலத்தில் பிறந்ததையும் இது கூறும்,

சந்திரகுல மன்னனானபிரதீபன் என்பவனுக்குஇரண்டாவது மகனான சந்தனுவாக வருணன் பிறந்தான். முதல் மைந்தனான தேவாபி என்பவன் போல், இவன் தவம் பூண்டு கானகம் செல்லாமல் இல்லறத்தை மேற்கொண்டு குல வளர்ச்சிக்குக் காரணமாயிருந்தமையின், நல்விதை, எனப்பட்டான்.

நட்சத்திரங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு தேவதை உண்டு. சதயத்தின் கடவுள் வருணன்.

வண்டுகள் மொய்த்தல் என்பது தேவ மாதர்க்கு இல்லாமையின் "துதை அளி செறி குழல் தோகை," என்றது மானிடப் பெண்ணைக் குறிப்பதாயிற்று.

73. தவமுறக் குடதிசை தலைவன் றாரமாம்
அவள்வயிற் றுதித்தன ரந்த வெண்மரும்
உவகையிற் பெருமநீ யுணர்ந்து கொள்கென
இவடிருக் கணவனு மின்ன கூறுவான்.

[தவம் உற குடதிசை தலைவன் தாரம் ஆம் அவள் வயிற்று உதித்தனர் அந்த எண்மரும்; உவகையின் பெரும நீ உணர்ந்து கொள் எனா, இவள் திரு கணவனும் இன்ன கூறுவான்.]

**விளக்கம் :** குடதிசை தலைவன் தாரமாம் அவள் வயிற்று, அந்த எண்மரும் தவம் உற உதித்தனர், என்று இயைக்க. குட திசைத் தலைவன் - வருணன். அவனது தாரமாகிய கங்கையின் வயிற்றில், அந்த வசுக்கள் எண்மரும் தவம் உடைமையால் வந்து பிறந்தனர், என்பது பொருள். தவம் உற - தவம் அல்லது நல் வினை பொருந்தி இருத்தலால். பெரும நீ உவகையின் (மகிழ்ச்சி யோடு) உணர்ந்து கொள். எனா - என்று கூறலும்; இவன் திரு (சிறந்த) கணவனான சந்தனுவும் இன்ன (இவ்வாறான வார்த் தைகளை) கூறுவான்.

தனது சரித்திரங் கூறலுற்ற கங்கை, சந்தனு இன்னான் என்பதையும், கொல்லப்பெற்ற எழுவரும் வசுக்கள் என்பதை யும், எட்டாவது குழந்தைக்கு இரங்கித் தடுத்ததற்குக் காரணத் தையும் தெரிவித்தவாறு காண்க.

74. அறப்பய னென்னுமா றறிவி லாவெமைப்
பிறப்புணர்த் தினைமகப் பேறு செய்துநீ
இறப்பவ ரெழுவரோ டேக லாவுயர்
சிறப்புடை யினையவன் செய்வ தென்னென்றான்.

[அறம் பயன் என்னும் ஆறு அறிவிலா எமை பிறப்பு உணர்த் தினை மகப்பேறு செய்து நீ; இறப்பவர் எழுவரோடு ஏகலா உயர் சிறப்பு உடை இனையவன் செய்வது என்? என்றான்.]

**விளக்கம் :—**அறப் பயன் என்னுமாறு, நீ மகப்பேறு செய்து, அறிவிலா எமை பிறப்பு உணர்த்தினை. என்று அன்வயித்துக் கொள்க. (எமது) அறப்பயன் என்று கருதும்படி, நீ (இங்கே வந்து) எனக்குப் புத்திர பாக்கியத்தை உண்டாக்கி, அறிவிலா எமக்குப் பிறப்பு உணர்த்தினை,—என்பது பொருள். எமை : உருபு மயக்கம்; மகனையும் உளப்படுத்தி எமை எனப்பட்டது. இறப்பவர் எழுவர் - இறந்து படலையுடையரான எழுவர், அல்லது இறந்துபட்ட எழுவர். ஏகலா - தனது வசுப் பதவிக்குச் செல்லும் உரிமை இல்லாத. இனையவன் - இந்த எட்டாவது மகன். செய்வது என் - செய்ய வேண்டுவது யாது?

75. முக்குலத் தரசினு முதன்மை யாலுயர்
இக்குலத் திவனலா தில்லை மாமகார்
அக்குலத் தவமுனி யருளி னாலிவன்
மெய்க்குலத் தந்தையாம் விழைவு மில்லென்றாள்.

[முக்குலத்து அரசினும் முதன்மையால் உயர் இ குலத்து இவன் அலாது இல்லை மா மகார்; அ குலம் தவம் முனி அருளி னால் இவன், மெய் குலம் தந்தை ஆம் விழைவும் இல் என்றாள்.]

**விளக்கம் :**—முக்குலம் சூர்ய, சந்திர, அக்கினி குலங்கள். அக் குலம் தவமுனி - அந்த சிறந்த தவத்தை உடைய வசிட்ட முனிவன், (குலம் - சிறந்த). அருளினால் - சாப விமோசனம் வேண்டிய வசுக்களுக்கு அவன் உரைத்தருளிய மொழியினால், "அவன் பிறந்த மெய்யுடைய குலத்தில் தந்தையாகும் விருப்பம் உடையவன் ஆகான்," என்றாள், — என்பது ஈற்றடியின் பொருள்.

76. மன்னவர் தொழுகழன் மன்னன் மைந்தனோடு
இன்னமு மொருவனை யினித ளித்துநாம்
பன்னக நெடுமுடிப் பார்க ளிக்கவே
பொன்னக ரிருவரும் போது மென்னவே.

[மன்னவர் தொழு கழல் மன்னன் மைந்தனோடு இன்னமும் ஒருவனை இனிது அளித்து நாம், பன்னகம் நெடு முடி பார் களிக் கவே பொன் நகர் இருவரும் போதும் என்னவே.]

**விளக்கம் :**—இதுவும் இதைத் தொடரும் இரு செய்யுள்களும் ஒரு தொடர். "மன்னவர்...மைந்தனோடு, பன்னக பார் களிக்கவே, இன்னம் ஒரு...அளித்து, நாம் இருவரும் பொன்னகர் போதும்; என்ன (ஏ : அசை)," — என்பது அன்வயம்.

மன்னவர்......மன்னன் - சந்தனு. பன்னகம் - ஆதிசேஷன். பூமியை ஆதிசேஷன் தன் தலையில் தாங்குகிறான், என்ற நூற் கொள்கை பற்றி, பன்னக நெடு முடிப்பார், எனப்பட்டது. பொன் நகர் போதும் - தேவலோகம் போவோம். என்ன - என்று சந்தனு தன் கருத்தைச் சொல்லவும், - கங்கை பதில் மொழிவாள்.

'அளித்து நாம்', என்பது 'அளித்தும் நாம்' என்றும் பிரிய லாம். அப்பொழுது, 'அளித்தும்' தன்மைப் பன்மை வினை முற்றாகின்றது.

### கங்கையின் பதில்

77. போயிருந் தென்பயன் போகம் பல்வகை
ஆயிருந் தனவெலா மருந்தி யின்னமும்
மாயிருந் தரணியின் மன்னு சில்பகல்
நீயிருந் தரசிய னிறுத்தி மீளுவாய்.

[போய் இருந்து என் பயன்? போகம் பல்வகை ஆய் இருந்தன எலாம் அருந்தி இன்னமும் மா இரு தரணியில் மன்னு சில் பகல் நீ இருந்து, அரசியல் நிறுத்தி மீளுவாய்]

**விளக்கம் :** சந்தனுவுக்கு உடனே வான் செல்ல வேண்டும் என்ற விருப்பம் இல்லாமையை எண்ணியும், அவன் இங்கே செய் வதற்குரிய காரியம் இருக்கின்றபடியாலும், "போயிருந்து என் பயன்?" என்றாள். பல்வகையாய் இருந்தன போகம் எலாம் - பல திறப்பட்டனவாய் இருந்த போகங்களை எல்லாம். அருந்தி - துய்த்து. அரசியல் நிறுத்தி - நல்லரசாட்சியை நிலை நிறுத்தி, மீள்வாய் - (அதன்பின்) விண் திருப்புவாய்.

இதனால், கங்கை, தன்னைச் சிலநாள் தங்குமாறு வேண்டிய சந்தனுவுக்குத் தான் உடனே வான் செல்லப் போவதைக் குறிப்பின் தெரிவிக்கின்றாள்.

78. இப்புதல் வனுமினி யென்னொ டேகியே
மெய்ப்படு காளையாம் பதத்து மீள நின்
கைப்படுத் துவலெனாக் கணவ னைத்தழீஇ
அப்பெரும் புதல்வனோ டவளு மேகினாள்.

[இ புதல்வனும் இனி என்னொடு ஏகியே மெய் படு காளை ஆம்பதத்து மீள நின் கை படுத்துவல், எனா, கணவன் தழீஇ, அ பெரு புதல்வனொடு அவளும் ஏகினாள்.]

**விளக்கம் :** மெய் படு காளை ஆம் பதம் - மெய்யில் பருவ முதிர்ச்சிக்கான சின்னங்கள் உண்டாகும் காளைப் பருவத்தில்

நின் கை படுத்துவல் - உன் கையில் ஒப்படைப்பேன். தழீஇ-தழுவி. 77-வது செய்யுளின் என்னவே, என்ற ஈற்றுச் சொல், (கைப்படுத்துவல்) எனா, என்பதோடு இயைந்தும், அந்த 'எனா' என்பது தழீஇ ஏகினாள் என்று தொடர்ந்தும் முடியும். எனா - என்று சொல்லி.

வேறு

எழுசீர் ஆசிரிய விருத்தம்

79. அன்றுதொட் டவனு மகன்றபூங் கொடியை
யழகுற வெழுதிமுன் வைத்தும்
ஒன்றுபட் டுவமைப் பொருள்களாற் கண்டு
முரைத்தவை யெடுத்தெடுத் துரைத்தும்
மன்றலிற் றலைநாள் விழைவொடு மணந்த
மடந்தையர் வதனமு நோக்கான்
என்றினிக் கிடைப்ப தென்றுளம் வருந்தி
யெண்ணுநா ளெல்லையாண் டிருந்தான்.

[ அன்று தொட்டு இவனும் அகன்ற பூங்கொடியை அழகு உற எழுதி முன் வைத்தும், ஒன்றுபட்டு உவமை பொருள்களால் கண்டும் உரைத்தவை எடுத்து எடுத்து உரைத்தும், மன்றவில் தலைநாள் விழைவொடு மணந்த மடந்தையர் வதனமும் நோக்கான்,—என்று இனி கிடைப்பது என்று உளம் வருந்தி எண்ணும் நாள் எல்லை ஆண்டு இருந்தான்.]

**விளக்கம் :**—கங்கை தன்னைப் பிரிந்த நாள் முதல், சந்தனு, முன் மணந்த மனைவியரைக் கண்ணெடுத்தும் பாராமல், பிரிந்த பூங்கொடியைப் படத்திலே எழுதியும், மின்னல், பூங்கொடி, மயில் போன்ற உவமைப் பொருள்களால் ஒருவாறு அவளைக் கண்டும், அவள் தன்னொடு வாழ்ந்த காலத்துக் கூறிய மொழிகளைப் பல முறை வாய்விட்டுக் கூறியும், அவள் மகனொடு வரும் நாளில் மனம் வைத்தவனாய்க் காலங் கழித்தான், என்ற பொருளது செய்யுள்.

அகன்ற பூங்கொடி - கங்கை. ஒன்றுபட்டு - மனம் அவள் நினைவில் நிலைத்து. தலைநாள் - முன்னாள் (கங்கையை

மணக்குமுன்), மன்றலில் மணந்த -கல்யாணம் செய்துகொண்ட. என்று இனி கிடைப்பது என்று - அவளைக் காணும் நாள் கிட்டுவது எப்பொழுதோ என்று எண்ணி. எண்ணும் நாள் எல்லை- (காளையாம் பதத்து (மகனை) நின் கைப்படுத்துவல்,'' என்று கங்கை கூறிய அந்த) எண்ணுதற்குரிய நாளின் எல்லையில் (மனம் வைத்து). ஆண்டு இருந்தான். அரசு புரிந்து இருந்தான், அல்லது தனது நகரில் காலங்கழித்து வருபவனாய் இருந்தான்.

### சந்தனுவின் பிரிவுத் துயரம்

80. பின்னொரு தினத்தி லமைச்சரும் பிறரும்
பெரும்படைத் தலைவருஞ் சூழ
முன்னொரு தினத்தின் வனத்துமா வேட்டை
முன்னினன் முயன்றுபோய் முற்றி
மின்னொரு வடிவு கொண்டெனச் சிறந்த
மெல்லியன் மீண்டுறை மறையும்
தன்னொரு மதலை யாக்கமுங் கருதிச்
சானவித் தடங்கரை யணைந்தான்.

[பின் ஒரு தினத்தில் அமைச்சரும் பிறரும் பெரும் படை தலைவரும் சூழ, முன் ஒரு தினத்தின் வனத்து மா வேட்டை முன்னினன் போய் முற்றி, மின் ஒரு வடிவு கொண்டு என சிறந்த மெல் இயல்tமீண்டு உறை மறையும் தன் ஒரு மதலை ஆக்கமும் கருதி, சானவி தட கரை அடைந்தான்.]

விளக்கம்:—''முன்னொரு தினத்தில் (வேட்டையின் விருப் பங்கொண்டு சென்றது) போல, பின்னொரு தினத்தில்... சூழ' வனத்து மாவேட்டை முன்னினன் முயன்று போய் முற்றி...'', என்று அன்வயிக்க.

முன்னொரு நாள் வேட்டை மேல் சென்றதுபோல், பின்னொரு நாள் வேட்டை முன்னினனாய் அமைச்சர், படைத் தலைவர் முதலியவர் உடன்வரக் கான் சென்று, வேட்டைத் தொழிலைச் செய்து முடித்த பின் சந்தனு தான் மணந்த கங்கையையும், அவளோடு உறை மறைந்து சென்ற தன்னொரு மகனின் ஆக்கத்தை அறியக் கருதியும் கங்கைக் கரை அடைந் தான்,—என்பது பொருள்.

பின்பு ஒரு தினம் - முன் சென்றதற்குப் பின்னதாகிய ஒரு தினம்; இபபொழுது. முன் ஒரு தினத்தின் - ஒரு நாள், அதாவது கங்கையைக் காண நேர்ந்த தினத்தில் வேட்டையாடச் சென்றது போல். முன்னினன் - எண்ணினனாய். போய் முயன்று முற்றி - (கானகம்) போய் வேட்டைத் தொழிலை நன்கு முடித்து. மின் ஒரு வடிவு கொண்டென சிறந்த மெல் இயல் - கங்கை. உறை மறையும் - (கங்கையின் உறைவிடமாகிய) நீரினுள் மறைந்து சென்று. ஆக்கம் - வளர்ச்சி. சானவி -கங்காநதி.

பகீரதனால் பூமிக்கு அழைக்கப்பெற்ற கங்கை, வழியில் ஜஹ்னு என்ற முனிவரின் யாக சாலயை அழிக்கவே, வெகுண்ட முனி அதைக் குடித்துப் பின் பகீரதனது வேண்டு கோளுக்கு இரங்கித் தன் காதின் வழி, அதை வெளிப்படுத்திய காரணத்தால், கங்கைக்குச் சானவி என்ற பெயர் ஏற்பட்டது என்பர்.

கங்கைக் கரை சென்றால், மனைவியையும், மகனையும் காண நேரலாமோ, என்ற ஆசையில், மன்னவன், வேட்டை முடிந்தபின், அங்கே சென்றான், என்றவாறு.

81. பண்டுதா னவளை யெதிர்ப்படுங் கனகப்
பைங்கொடிப் பந்தர்வா னிழலும்
வண்டறா நறைபூஞ் சோலையுந் தடமும்
மருங்கலை மலையமா ருதமும்
புண்டரீ கமுஞ் செங் காவியுங் கமழும்
புளினமும் புளினமென் றுறையும்
கண்டுகா ரிகையை யிம்மையி லின்னுங்
காண்டுமோ வென மனங் கசிந்தான்.

[பண்டு தான் அவளை எதிர்ப்படும் கனகம் பைங்கொடி பந்தர் வான் நிழலும், வண்டு அறா நறை பூஞ்சோலையும், தடமும், மருங்கு அலை மலைய மாருதமும், புண்டரீகமும், செம் காவியும் கமழும் புளினமும், புள் இனம் மென் துறையும் கண்டு, காரிகையை இம்மையில் இன்னும் காண்டுமோ, என மனம் கசிந்தான்.]

**விளக்கம்:—** எதிர்ப்படும்-எதிர்ப்பட்ட (காலவழு). கனகம். (பொன்போல்) அழகிய; அல்லது கானகத்திடத்தே உள்ள. பந்தர் - பந்தல். வான் - சிறந்த. வண்டு அறா - வண்டுகள் நீங்காத. தடம் - கங்கையின் கரை. மலைய மாருதம் அலை மருங்கும் - தென்றல் வீசும் பக்கங்களிலும். புண்டரீகம் - வெள்ளைத்தாமரை. புளினம் - மணல் திட்டு. புள் இனம் மெல்துறை - பறவைக் கூட்டங்கள் தங்கும் நல்ல நீர்த்துறை. இம்மையில் காண்குமோ - இப்பிறப்பில் காண்போமோ.

சந்தனு, கானிடத்துள்ள கொடிப் பந்தர் நிழல், பூஞ்சோலை, கங்கையின் கரை, தென்றல் வீசும் இடம், வெண்டாமரையும் செங்காவியும் கமழும் மணல்திட்டு, பறவைகள் தங்கும் துறை முதலிய இடங்களையுங் கண்டு, கங்கையை எதிர்ப்படல் நேருமோ என்று அலைந்தான்,—என்பது பொருள். அதாவது, கங்கையின் நினைவன்றி வேறு எதிலும் மனஞ் செல்லாதவனாய் வாழ்ந்து வந்தான், என்பது கருத்து. மலைய மலையினின்று வீசும் காற்று, மலைய மாருதம்; தென்றல்.

82. பிரிந்தநா ளெண்ணிப் பகீரதிப் பெருக்கைப்
பேதுறுங் குறிப்பொடு நோக்கிக்
கரிந்தபா தவம்போ னின்றவப் பொழுதிற்
கால்பொரக் குனித்தகார் முகமும்
தெரிந்துமேன் மேலுந் தொடுத்தசா யகமுஞ்
சிலம்பெனத் திரண்டதோ ளிணையும்
விரிந்தநூன் மார்பு மாகிமுன் னடந்தான்
விழிகளித் திடவொரு வீரன்.

[பிரிந்த நாள் எண்ணி பகீரதி பெருக்கை பேதுதுறும் குறிப்பொடு நோக்கி, கரிந்த பாதவம்போல் நின்ற அப்பொழுதில், கால் பொர குனித்த கார்முகமும், தெரிந்து மேன்மேலும் தொடுத்த சாயகமும், சிலம்பு என திரண்ட தோள் இணையும், விரிந்த நூல் மார்பும் ஆகி முன் நடந்தான் விழி களித்திட ஒரு வீரன்.]

**விளக்கம் :—** பகீரதிப் பெருக்கு - கங்கை வெள்ளம். பேதுறல்-புத்தி கலங்கல். பேதுறும் குறிப்பொடு. புத்தியின் கலக்கமுற்ற நிலையைக் காட்டுங் குறிப்போடு. கரிந்த-தீய்ந்து

போன. பாதவம்-மரம். கால்-வில்லின் இருமுனை. பொரக் குனிந்து-பொருந்தும்படி வளைத்த. கார்முகம்-வில், தெரிந்து-பொறுக்கிஎடுத்துக் கொண்டு. சாயகம்-அம்பு; (தொடுத்த சாயகம்-தொடுத்துக் கொண்டிருந்த அம்பு). சிலம்பு-மலை. ஆகி-உடையவனாகி.

கங்கையைப் பிரிந்த காலத்தைக்கணக்கிட்டவனாய்ச் சந்தனு மனக் கலக்கத்தோடு, கங்கா நதியைப் பார்த்த வண்ணம் வாடிய மேனியோடு நின்ற சமயம், அங்கே ஒரு வீரன் வில்லொடு சரமும் தாங்கினனாய்ச் சந்தனுவின் கண்களிக்கும் எழில் பொலிய வந்தான்.—என்றவாறு.

83. வியந்திட வருமக் குரிசிலை யிவனே
விடையவன் குமரனென் றயிர்க்கும்
வயந்தனி னுலவு மதன்கொலோ வென்னும்
வாசவன் மதலையென் றெண்ணும்
உயர்ந்தவ ரிவனின் வின்மையி னில்லை
யொருவரு முலகின்மே லென்னும்
பயந்ததன் வடிவின் படியெனத் திகழும்
பான்மையை நினைந்திலன் பயந்தோன்.

[வியந்திட வரும் அ குரிசிலை இவனே விடையவன் குமரன் என்று அயிர்க்கும், வயந்தனின் உலவும் மதன்கொலோ என்னும், வாசவன் மதலை என்று எண்ணும்; உயர்ந்தவர் இவனின் வின்மையின் இல்லை ஒருவரும் உலகின்மேல் என்னும், பயந்த தன் வடிவின்படி என திகழும் பான்மையை நினைந்திலன் பயந்தோன்.]

**விளக்கம் :** —வியந்திட-வியந்து கொண்டாட, விடையவன் குமரன்-முருகக் கடவுள். வயந்தனில் - வசந்த காலத்தில். வின்மை - (வில்-மை) வில்தொழில். தன் வடிவின்படி - தனது வடிவத்தின் பிரதி, அல்லது அச்சுப் போன்ற வடிவம். பான்மை -தன்மை. பயந்தோன்-அந்தக் குமரனைப் பெற்றவனாகிய சந்தனு.

“வயந்தனில் உலவு மதன்கொலோ-தென்றலாகிய தேரில் ஊரும் மன்மதனோ,” என்றும் பொருள் கொள்ளலாம்.

வயந்தன்-தென்றல். மதன்-மன்மதன்; காமமாகிய மதத்தை உண்டாக்குபவன், எனினுமாம். வாசவன் - வசுக்களுக்குத் தலைவனான இந்திரன். வசுக்கள், தேவஜாதியில் ஒரு வகையினர்.

முதலடியிலுள்ள, 'இவனே விடையவன் குமரன்,' என்பதை 'இவன் விடையவன் குமரனே,' என்று இயைத்துப் பொருள் கொள்க.

84. தந்தையென் றிவனை யுணர்கிலா மதியாற்
சராசனந் தழுவுற வளைத்து
மைந்தனு மொருபோர் மோகனக் கணையான்
மறையுடன் மார்புற வெழுதி
இந்திர தனுவோ டிந்திர னெழிலி
யிடைமறைந் தனனெனப் புடையே
சிந்திய திவலைச் சிந்துவின் மறைந்தா
னரசனு மகிதலஞ் சேர்ந்தான்.

[தந்தை என்று இவனை உணர்கிலா மதியால் சராசனம் தழுவுற வளைத்து, மைந்தனும் ஒரு போர் மோகனம் கணையால் மறைவுடன் மார்பு உற எழுதி, இந்திரதனுவோடு இந்திரன் எழிலி இடை மறைந்தனன் என, புடையே சிந்திய திவலை சிந்துவின் மறைந்தான், அரசனும் மகிதலம் சேர்ந்தான்.

**விளக்கம்** :—சராசனம்-வில். தழுவுற-(வில்லின்) இரு முனையும் பொருந்தும்படி, ஒரு போர் மோகனக் கணை-ஒப்பற்ற போர் செய்வதற்குரிய மோகனாஸ்திரம். மறை-அக்கணைக்குரிய மந்திரம். மார்புற எழுதி-மார்பில் அழுந்தும்படி பிரயோகித்து. இந்திரதனு-இந்திரனுடைய வில். எழிலி-மேகம். புடை-பக்கம். சிந்திய திவலை சிந்து-சிந்துகின்ற நீர்த்துளிகளை உடைய கங்கை. மகிதலம்-பூமி.

கங்கைக் கரை தோன்றிய மைந்தன், தன் தந்தையின் மேல் மோகனக் கணையைப் பிரயோகம் செய்து, அதன்பின் கங்கையில் மறைந்தான்; தந்தையும் பூமியில் உணர்வற்றுச் சாய்ந்தான், —என்க, இந்திரவில்லோடு மேகத்தில் இந்திரன் மறைந்தான் போலும் என்னும்படி சிந்துவின் மறைந்தான்,—என்பது மூன்றாவது அடியின் பொருள்.

85. காதல னயர்வுந் திருமகன் புனலிற்
கரந்ததுங் கண்டுள முருகி
மேதகு வடிவு கொண்டுமற் றந்த
வெஞ்சிலை விநோதனுந் தானும்
ஓதவெண் டிரையின் மதியிட னுதித்த
வொண்மலர்க் கொடியென வோடித்
தூதுளங் கனிவாய் மலர்ந்தினி தழைத்துச்
சூடகச் செங்கையா லெடுத்தாள்.

[காதலன் அயர்வும் திருமகன் புனலில் கரந்ததும் கண்டு உளம் உருகி, மேதகு வடிவு கொண்டு, மற்று அந்த வெம் சிலை விநோதனும் தானும் ஓதம் வெள் திரையின் மதியுடன் உதித்த ஒள் மலர் கொடி என ஓடி, தூதுளை கனிவாய் மலர்ந்து இனிது அழைத்து, சூடகம் செம் கையால் எடுத்தாள்.

**விளக்கம்:**—மற்று மேதகு வடிவு கொண்டு-பிறகு மேன்மையின் தக்கதான உருவத்தை மேற்கொண்டு. ஓதம் - ஜலம், இங்கே, நீரின் பெருக்கைக் குறிக்கும். வெள் திரையின் மதியுடன் உதித்த-வெள்ளிய அலைகளை உடைய பாற்கடலில் தோன்றிய சந்திரனுடன் உதித்த. தூதுளங்காய் கனிவாய்-தூதுளங்கனி போல் சிவந்த வாய். சூடகம்-வளையலில் ஒரு வகை.

'திரை,' கடலுக்கு ஆகுபெயர். 'கொடியென' என்பது 'இலக்குமியைப் போன்ற, என்ற பொருளது. பாற்கடலில் சந்திரனோடு தோன்றியதிருமகளைப்போல்,கங்கைநதியினின்று, கங்கை, தன் மகனுடன் வெளிவந்தாள்.

'சிலைவிநோதனும் தானும் எடுத்தாள்," என்ற முடிபு, கங்கையின் மேன்மை பற்றியதாகும்.

86. வரடிய தருவின் மழைபொழி வதுபோன்
மடவரல் கருணை நீர் பொழியக்
கூடிய வுணர்வோ டெழுந்தகா வலனைக்
கொங்கைமார் புறத்தழீக் கொண்டு

நாடிய கருமம் வாய்த்ததென் றுவகை
நலம்பெறத் தந்தைபைங் கழற்கால்
சூடிய மகவைக் கைகொடுத் தவளுந்
தோன்றலோ டிவையிவை சொன்னாள்.

[வாடிய தருவில் மழை பொழிவது போல் மடவரல் கருணை நீர் பொழிய, கூடிய உணர்வொடு எழுந்த் காவலனை கொங்கை மார்பு உற தழீஇக் கொண்டு, நாடிய கருமம் வாய்த்தது என்று உவகை நலம்பெற, தந்தை பைங் கழல் கால் சூடிய மகவை கை கொடுத்து அவளும் தோன்றலோடு இவை இவை சொன்னாள்.]

விளக்கம்—: மடவரல்-கங்கை; கூடிய உணர்வோடு-வந்து சேர்ந்த உணர்வோடு; அதாவது உணர்வு வரப்பெற்று. கொங்கை மார்பு உற- முலைகளோடு கூடிய மார்பில் அழுந்தும்படி. நாடிய கருமம் வாய்த்தது என்று உவகை-கருதிய கருமம் சித்தித்தது, என்ற உவகையோடு. பைங்கழல்- பசும்பொன்னாலான வீரக்கழல், கால் நலம் பெறச் சூடிய- (மன்னவனின்) கால்களைத் தன் முடியில் நன்றாக அழுந்தும்படி சூடிக்கொண்ட. மகவை கை கொடுத்து-மகனைத் (தந்தையினிடம்)ஒப்படைத்து. தோன்றலோடு - சந்தனுவினிடம். இவை இவை - இவ்வார்த்தைகளை.

82-வது செய்யுளில் -கரிந்த பாதவம் போல் நின்ற,' என்றதற்கேற்ப, வாடிய தருவின் மழை பொழிவது போல்', என்றது நயமுடையது,

தந்தையிடம் மகனைச் சேர்ப்பிக்க வேண்டும், என்ற தன் கருத்துச் சுலபமாய் இப்பொழுது கை கூடியது பற்றிக் கங்கை உவகை கொண்டாளாயிற்று.

அல்லது, மனைவியையும் மகனையும் காண விழைந்த மன்னன் முன் கங்கை தோன்றி, மகனை அவனிடம் சேர்ப்பித்தாளாதலின், சந்தனு, 'நாடிய கருமம் வாய்த்தது'' என்று உவகையாகிய நலம் பெற்றானாயினான். என்று கொள்ளலாம்.

87. வேந்தகே ளிவனுன் மதலையே தேவ
விரதனென் றிவன்பெயர் பல்லோர்
ஆய்ந்தநூல் வெள்ளங் கடந்தனன் கரைகண்
டருந்ததி பதிதிரு வருளால்

பூந்துழாய் மாலைப் போர்மழுப் படையோன்
பொன்னடி பொலிவுற வணங்கி
ஏந்து நீள் சிலையும் பலகணை மறையு
மேனைய படைகளும் பயின்றான்.

[வேந்த, கேள்; இவன் உன் மதலையே; தேவவிரதன் என்பது இவன் பெயர். பல்லோர் ஆய்ந்த நூல் வெள்ளம் கடந்தனன் கரை கண்டு அருந்ததி பதி திரு அருளால்; பூந்துழாய் மாலை, போர் மழு படையோன் பொன் அடி பொலிவுற வணங்கி, ஏந்து நீள் சிலையும், பல கணை மறையும், ஏனைய படைகளும் பயின்றான்.]

**விளக்கம்:**—தேவ விரதன் என்று-தேவ விரதன் என்பது. பல்லோர்...கரை கண்டு கடந்தனன்-பெரியோர் பலர் ஆய்ந்த நூற் கடலின் கரையைக் கண்டு, அதைக் கடந்தவன். அருந்ததி பதி-வசிட்டன், வசிட்ட முனிவன் அருளால் நூல் வெள்ளத்தின் கரையைக் கடந்தவன்.— என்றபடி. பூந்துழாய் மாலைப் போர் மழுப்படையோன்- பரசுராமன், திருமாலின் தசாவதாரங்களில் பரசுராமன் ஏழாவது ஆதலால் பூந்துழாய் மாலையோன் எனப்பட்டான். மறை-அஸ்திரங்களுக்குரிய மந்திரம்.

''கங்கை மைந்தனான தேவவிரதன் வசிட்டனது அருளால் வேதாதி நூல்களிலும்; பரசுராமனது அருளால் சரக்கலையிலும் பயிற்சி பெற்றவன்.,' என்ற பொருளது செய்யுள்.

பெருவீரனும் ஞான வித்தகனுமாகச் சிறப்புற்ற பீஷ்மன் வணங்கிய பாதங்களாதலால், பரசுராமனது பாதங்கள் பொலிவுறுவனவாயின.

88. மகப்பெறு மவரி லொருவரும் பெறாத
மகிழ்ச்சியும் வாழ்வுமெய் வலியும்
மிகப்பெறுந் தவநீ புரிந்தனை நின்னை
வேறினி வெல்லவல் லவரார்
உகப்புற விவனோ டவனியா ளுகவென்
றோரடிக் கோரடி புரிந்து
தகப்பெறு மயிலுந் தலைவன்மே லுள்ளந்
தகைவுறத் தடம்புனல் புகுந்தாள்.

[மக பெறும் அவரில் ஒருவரும் பெறாத மகிழ்ச்சியும் வாழ்வும் மெய் வலியும் மிக பெறும் தவம் நீ புரிந்தனை; நின்னை வேறு இனி வெல்ல வல்லவர் ஆர்? உகப்புஉற இவனொடு அவனீ ஆளுக, என்று ஓர் அடிக்கு ஓர் அடி புரிந்து, தக பெறு மயிலும் தலைவன் மேல் உள்ளம் தகைவு உற தடம் புனல் புகுந்தாள்]

**விளக்கம் :**—"மகப் பேறு பெற்றாரில், வேறொருவரும் இது வரை பெற்றிராத மகிழ்ச்சி, வாழ்வு, பகை கடக்கும் வலி ஆகிய வற்றை மிகுதியாகப் பெறுவதற்கான தவத்தை நீ செய்துள்ளாய்; இனி உன்னை வெல்ல வல்லவர் வேறு யாவர் இருக்கின்றனர்?" என்ற பொருளது முதல் இரண்டு அடிகளும். உகப்பு உற - மனத்தில் சந்தோஷம் பொருந்த; அதாவது மிகுந்த மகிழ்ச்சியோடு. தகப்பெறும் மயில்-நல்ல தகவு (குணம்) வாய்க்கப் பெற்ற கங்கை (மயில், உவமை ஆகுபெயர்.) ஓரடிக்கு ஓரடி புரிந்து - அடிமேல் அடி வைத்தலைச் செய்து; அதாவது, பிரிவாற்றாமையினால் மெல்ல நடந்து. தலைவன் மேல் உள்ளம் தகைவு உற - புருஷனான சந்தநுவினிடம் அவள் மனம் செல்லாமல் தடைப்பட்டு நிற்க. தடம் புனல் - கங்கா நதி.

89. மனைவியைக் கண்டு மீளவும் பிரிந்த
வருத்தமெய்த் திருத்தகு கேள்வித்
தனையனைக் கண்ட மகிழ்ச்சியா லருக்கன்
றன்னெ திரிருளெனத் தணப்ப
நினைவினிற் சிறந்த தேர்மிசை புதனும்
நிறைகலை மதியுமே நிகர்ப்பப்
புனைமணிக் கழலா னவனொடுந் தனது
புரமெதிர் கைதொழப் புகுந்தான்.

[மனைவியை கண்டு மீளவும் பிரிந்த வருத்தம், மெய்திரு தகு கேள்வி தனையனை கண்ட மகிழ்ச்சியால் அருக்கன் தன் எதிரில் இருள் என தணப்ப, நினைவினில் சிறந்த தேர்மிசை புதனும் நிறை கலைமதியும் (ஏ) நிர்ப்ப புனை மணி கழலான், அவனொடும்தனது புரம் எதிர் கை தொழ புகுந்தான்.[

**விளக்கம்:**—சூரியன் முன் இருள்போல், மனைவியைப் பிரிந்த துன்பம் மகனைக் கண்ட மகிழ்ச்சியால் அகல, மகனோடு மன்னவன் தன் நகர் அடைந்தான், என்றபடி. மெய் திருதகு கேள்வித் தனையன் - மெய்யான சிறப்பின் தகுதியால் விளங்கு

இன்ற நூல் ஆராய்ச்சியை உடைய மகன். அருக்கன் - சூரியன், தணப்ப - அகல. நினைவினில் சிறந்த தேர் - மனோவேகத்தினும் வேகத்தில் சிறந்த (அதாவது வேகமாகச் செல்லக்கூடிய) தேர். புதன் - சந்திரனுக்கும் குரு பத்தினியான தாரைக்கும் பிறந்தவன். மணிபுனை கழலான் - வீரக்கழல் அணிந்த மகனான தேவ விரதன். அவன் - சந்தனு. 'ஒடு' என்பதைக் 'கழலானொடு என்று இயைக்க. எதிர் கை தொழ - நகர மக்கள் எதிர்வந்து வணங்க. (புரம் புகுந்தான்.)

மன்னவன் தண்ணளி உடையான்', என்பது தோன்ற அவனுக்குப் பூர்ண சந்திரனும், ''மகன் வித்தகச் செல்வன்,' என்பது தோன்ற அவனுக்குப் புதனும் உவமையாகும்.

'மகனைக் கண்ட மகிழ்ச்சியால், மனைவியைப் பிரிந்த துன்பம் முற்றிலும் அகலப் பெற்றவனானான்,'' மன்னவன் என்பது. ''அருக்கன் முன் இருள் தணப்பதுபோல்,'' என்ற தொழிலுவமையால் விளக்கப்பட்டது, காண்க.

90. தானுமம் மகனுந் தரியலர் வணங்கத்
தங்குநன் னாளிலங் கொருநாள்
தேனுறுந் தொடைய லிளவர சனைத்தன்
றிகழரி யாசனத் திருத்திக்
கானுறு விலங்கி னுயிர்கவர் நசையாற்
காற்றெனக் கூற்றென நடந்து
பானுவின் மகளாங் காளிந்தி நதியின்
பாரமெய் தினன்விறற் படையோன்.

(தானும் அ மகனும் தரியலர் வணங்க தங்கும் நாளில் அங்கு ஒரு நாள் தேன் உறும் தொடையல் இள அரசனை தன் திகழ் அரி ஆசனத்து இருத்தி, கான் உறு விலங்கின் உயிர் கவர் நசையால் காற்று என, கூற்று என நடந்து பானுவின் மகள் ஆம் காளிந்தி நதியின் பாரம் எய்தினன் விறல் படையோன்].

**விளக்கம் :**—தரியலர் - பகைவர். அங்குதங்கும் நல்நாளில் ஒரு நாள் என்று இயைக்க. அங்கு - தலைநகரில். தங்கும் நாள் - தங்கியிருக்கையில். கான்உறும்......நசையால் - வேட்டை விருப்பத்தால். காற்றென கூற்றென நடந்து - விரைந்து சென்று.

பானு - சூரியன், அவனது மகள் காளிந்தி நதி, அல்லது யமுனா நதி. பாரம்-காளிந்தியின் கரை. விறல் - வலிமை, 'படையோன்' என்பது வேட்டை வீரர்களை உடையவன்; அதாவது வேட்டையில் வல்லவரான பரிவாரங்கள் உடன்வரக் கொண்டவனாகிச் சந்தனு விரைந்து யமுனைக்கரை சென்றான், - என்றவாறு.

'காற்று,' வேகத்தையும், 'கூற்று' அவன் மேற்கொண்டுள்ள கொடுந் தொழிலையும் குறிக்கும்.

**சந்தனு யோசனகந்தியைக் காணல்**

91. பாசறை முழுது மொருபெருங் கடவுட்
பரிமள மொல்லெனப் பரப்பி
யோசனை யளவுங் கரையிரு மருங்கு
முயிர்க்குமெல் லுயிர்ப்பெதி ரோடித்
தாசர்தங் குலத்துக் கதிபதி யளித்த
தையலைத் தரணிபர்க் கெல்லாம்
ஈசனு முருகிக் கண்டுளங் களியா
விலங்கிழை யார்கொனீ யென்றான்.

[ பாசறை முழுதும் ஒரு பெரும் கடவுள் பரிமளம் ஒல்லென பரப்பி யோசனை அளவும் கரை இரு மருங்கும் உயிர்க்கும் மெல் உயிர்ப்பு எதிர் ஓடி, தாசர் தம் குலத்துக்கு அதிபதி அளித்த தையலை தரணிபர்க்கு எல்லாம் ஈசனும் உருகி கண்டு உளம் களியா, இலங்கு இழை யார் கொல் நீ என்றான். ]

**விளக்கம் :**—பாசறை - படைவீடு. ஒரு பெருங் கடவுள் பரிமளம் - ஒப்பற்ற மிகுதியான் தெய்வத் தன்மையுள்ள, (அசாதாரணமான) வாசனை. 'ஒல்லென' என்பது இங்கே விரைவுப் பொருளது. யோசனை - எல்லை அளவு (ஏறக்குறையப் பத்து மைல் தூரம்). உயிர்க்கும் மெல் உயிர்ப்பு எதிர் ஓடி - வீசுகின்ற மெல்லிய காற்றுக்கு எதிரே சென்று. தாசர் குலம்-மீனவர் குலம். அதிபதி - தலைவன். தரணிபர்க்கு ஈசன் - அரசர்க்கு அரசன் (சந்தனு). கண்டு உளம் உருகி களியா - கண்டு மனம் குழைந்து மகிழ்ந்து.

காளிந்தியின் இரு கரையிலும் ஒரு யோசனை தூரம் நறுமணம் வீசிக்கொண்டு வந்த காற்றுக்கு எதிர்முகமாகச் சென்ற

சந்தனு, வலைஞர் குலத்தலைவனது பெண்ணைக் கண்டு, அவளது அழகில் மனம் இழந்தவனாய், அவளை நீ யார்?' என்று வினவினான், -என்றவாறு.

மீன்முடை வீசும் காரணத்தால் **மச்சகந்தி** என்று அழைக்கப் பெற்ற வலைஞர் குலப்பெண், பராசர முனிவரது அனுக்கிரகத் தால் ஒரு யோசனை தூரம் நறுமணம் வீசும் **யோசனைகந்தி** ஆனாள். இவளை, **வாசவி, சத்தியவதி, காளி** என்றும் அழைப்பர் இவளை வளர்த்த வலைஞர் குலத் தலைவனது பெயர் **உச்சை சிரவஸ்** என்று வியாச பாரதம் கூறும். பராசரருக்கு இவளிடம் உண்டான பிள்ளையே வியாசர்.

'யோஜன கந்தி' என்ற வடசொல்லின் திரிபு யோசனைகந்தி; ஒரு யோசனை தூரம் பரிமளம் வீசும் மேனியை உடையவள், என்ற பொருளது.

92. நிருபன துரைகேட் டஞ்சின ளொதுங்கி
நின்றுகை நினைவுறக் குவியா
இருதுறை நெறியில் வருநரை நாவா
யேற்றுவ லெந்தையே வலினென் (று)
உரைசெயு மளவில் வேட்கையா லுள்ள
முருகிமெய் மெலிந்தொளி கருகி
அரிவையை யளித்தோன் பக்கம தடைந்தா
னவனுவந் தடிமலர் பணிந்தான்.

[ நிருபனது உரைகேட்டு அஞ்சினள் ஒதுங்கி கை நினைவு உற குவியா, இரு துறை நெறியில் வருநரை நாவாய் ஏற்றுவல் எந்தை ஏவலின் என்று உரை செயும் அளவில், வேட்கையால் உள்ளம் உருகி மெய் மெலிந்து ஒளி கருகி' அரிவையை அளித் தோன் பக்கம் அது அடைந்தான்; அவனும் வந்து அடி மலர் பணிந்தான். ]

**விளக்கம்:**—நினைவு உறக் கை குவியா - பெரியோரைக் கண்டக்கால் வணங்க வேண்டும் என்ற நினைவு வரக் கை கூப்பி வணங்கி. இருதுறை நெறியில் வருநர் - இந்தப் பெரிய நீர்த் துறையைக் கடக்க வருபவர். நாவாய் - ஓடம், மரக்கலம். பக்கம் அது - வாழும் இடத்தை.

உள்ளம் உருகுவதோடு. உடல் மெலிதல். ஒளி மழுங்கலாய வற்றிற்கும் வேட்கை (காம இச்சை) காரணமாகும். பக்கமது, என்பதிலுள்ள அது பகுதிப் பொருள் விகுதி.

'கண்ட நங்கை, வலைஞர் தலைவனது மகள்,' என்பது அறிந்த அரசன், அவளது தந்தையின் மனை அடைந்தான்,— என்றவாறு.

93. பாகனை யரசன் குறிப்பினா லேவப்
பாகனும் பரதவர் பதியை
ஓகையோ டிருத்தி நின்னுழை வதுவை
யுலகுடை நாயக னயந்தான்
தோகைசெய் தவமோ நின்பெருந் தவமோ
தொல்குலத் தவர்புரி தவமோ
ஆகுமிவ் வாழ்வென் றுரைத்தன னவனு
மாகுமா றவனுட னுரைப்பான்.

[பாகனை அரசன் குறிப்பினால் ஏவ, பாகனும் பரதவர் பதியை ஓகையோடு இருத்தி, நின்னுழை வதுவை உலகு உடை நாயகன் நயந்தான்; தோகை செய் தவமோ, நின் பெரும் தவமோ, தொல் குலத்தவர் புரிதவமோ ஆகும் இ வாழ்வு, என்று உரைத்தனன்; அவனும் ஆகுமாறு அவனுடன் உரைப்பான்.]

விளக்கம் :—பரதவர்பதி - வலைஞர் தலைவன். ஓகையோடு இருத்தி - மகிழ்ச்சியோடு உட்காரச் செய்து. வதுவை நயந்தான்- மணத்தை விரும்பினான்; அதாவது உன் மகளை மணந்து கொள்ள அரசன் விரும்பினான். தோகை - அவன் மகள். தொல் குலத்தவர் - பழமையான பரத குலத்தவர். இவ் வாழ்வு ஆகும் - (அரசன் உன்னிடம் வதுவை நயந்த) இவ் வாழ்ச்சி, (தோகை செய் தவத்தாலோ) உண்டானதாகும். அவனும் ஆகுமாறு அவனுடன் உரைப்பான் - பரதர் தலைவனும் (மன்னவன் கருத்து) நிறைவேறுவதற்கான வழியைப் பாகனிடம் கூறுவா னானான்.

அரசன், பாகன் மூலம் மகள் வினவியது, தாழ்ந்தாரோடு நேரே பேசவாகாதென்ற அரச விதியின் (Protocal) பாற்படும்; அல்லது, நாணத்தால் எனினுமாம்.

94. பூருவின் மரபிற் பிறந்தகோ மகனென்
புன்குல மகள்குயம் பொருந்தல்
மேருவு மணுவு நிறுக்குமா றொக்கும்
மேலினி யிவைபுகன் றென்கொல்
யாருவ கையினா லாளுதற் கிருந்தான்
பகீரதி மகனிவள் பயந்த
சீருடை மகன்மற் றென்செய்வா னிசைமின்
செய்கைதான் திருவுளங் குறித்தே.

[பூருவின் மரபில் பிறந்த கோமகன் என் புன் குலமகள் குயம் பொருந்தல், மேருவும் அணுவும் நிறுக்கும் ஆறு ஒக்கும்; மேல் இனி இவை புகன்று என் கொல்? பார் உவகையினால் ஆளுதற்கு இருந்தான் பகீரதி மகன், இவள் பயந்த சீர் உடை மகன் மற்று என் செய்வான்? இசைமின், செய்கைதான் திரு உளம் குறித்தே.]

விளக்கம் :—குயம் பொருந்தல் - முலைகளைத் தழுவுதல். (பூரு வம்சத்து அரசன் என் மகளை மணப்பது) மேருவும் அணுவும் நிறுக்குமாறு ஒக்கும் - மேரு மலையையும் அணுவையும் ஒரு தராசில் இட்டு நிறுத்து அளக்கும் வழியை ஒக்கும். (ஆகவே) மேல் இனி இவை புகன்று என் கொல் - இனி இவ் விஷயங்களைப் பற்றி மேலே தொடர்ந்து பேசி என்ன பயன்? (நாடாளப் பகீரதி மைந்தன் இருக்கின்றான்; இவள் மகன் என் செய்வான்?) செய்கை திருவுளம் குறித்து இசைமின் - செய்யப் போவதை நன்கு ஆலோசித்துச் சொல்லுங்கள். 'செய்கை' என்பதற்கு இவள் மகன் செய்ய வேண்டியதை' என்றும் பொருள் கொள்ள லாம்.

செய்யுளின் ஈற்றடி இரண்டும், 'என் மகள் வயிறு வாய்க்கும் மகனுக்கு அரசு அளிக்க உடன்பட்டால் வதுவைக்கு இசை வேன்,'' என்று கூறும் குறிப்பின.

பகீரதி மகன் இருந்தான், இவள் பயந்த என்ற இறந்தகால வினைகள் காலவழு; இயல்பினால் நிகழ்காலமும், எதிர்காலமும் இறந்த காலமாயின. இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

95. என்னமுன் னிறைஞ்சி யிவன்மொழி கொடுஞ்சொ
லிறையவன் கேட்டலு மிரண்டு
கன்னமு மழற்கோல் வைத்தொத் திதயங்
கருகிவே றொன்றையுங் கழறான்
முன்னமுன் மதத்தான் முனியிடு சாப
முடிந்ததென் றாகுல முற்றி
அன்னமுங் குயிலும் பயிலுநீள் படப்பை
யத்தின புரியைமீண் டடைந்தான்.

[என்ன, முன் இறைஞ்சி, இவன் மொழி கொடும் சொல் இறையவன் கேட்டலும், இரண்டு கன்னமும் அழற்கோல் வைத்தது ஒத்து, இதயம் கருகி வேறு ஒன்றையும் கழறான்; முன்னம் உன்மதத்தால் முனி இடு சாபம் முடிந்தது என்று ஆகுலம் முற்றி, அன்னமும் குயிலும் நீள் படப்பை அத்தினபுரியை மீண்டு அடைந்தான்.]

**விளக்கம்** :—இவன் மொழி கொடுஞ் சொல் - இப் பரதவன் சொல்லிய கொடிய சொல். அழல் கோல் - கொள்ளிக் கட்டை. இதயம் கருகி - நெஞ்சு வெந்து. கழறான் - சொல்லாதவனாய். முன் உன்மதத்தால் முனி இடு சாபம் முடிந்தது- முன்னம் காம தேனுவைக் கவர்ந்ததற்காக வசிட்ட முனிவன் பொங்கிய சினத்தால் இட்ட சாபம் பயனை விளைவிக்க வந்தது போலும், (உன்மதத்தால் - மிகுந்த கோப மயக்கத்தால்). ஆகுலம் முற்றி - துன்ப மிகுதியோடு. படப்பை -சோலை.

வசிட்ட முனிவனது சாபமே, இவ்வலைஞன் வாய்வழி தன்னை முற்றுவித்துக் கொள்கின்றது போலும்! என்று எண்ணி, வருத்தமிகுந்தவனாய் அத்தினபுரி அடைந்தான்,—என்க.

96. கங்கையா ளிடத்தி லாதர மெலிந்த
காலையிற் கனிந்தவெற் பளித்த
மங்கையா றென்ன நின்றபூங் கொடிமேல்
வைத்தபே ராதர மலியப்
பங்கையா னனந்தான் முறைமுறை குறையும்
பான்மதி யெனவழ கழிந்த
சங்கையான் மைந்தன் வினவலு நிகழ்ந்த
தன்மையைச் சாரதி புகன்றான்.

[கங்கையாளிடத்தில் ஆதாரம் மெலிந்த காலையில், கனிந்த வெற்பு அளித்த மங்கை ஆம் என்ன நின்ற பூங்கொடி மேல் வைத்த பேர் ஆதரம் மலிய, பங்கய ஆனனம் தான் முறை முறை குறையும் பால்மதி என அழகு அழிந்த சங்கையால் மைந்தன் வினவலும், நிகழ்ந்த தன்மையை சாரதி புகன்றான்.]

**விளக்கம்:—** ''மகனைத் தன்னிடம் ஒப்படைத்துப் பிரிந்து சென்ற கங்கையாளின் நினைவு மெலிவுற்ற நிலையில், கனிந்த வெற்பு அளித்த காளிந்தி (யமுனை) நதியின் பெண் தெய்வம் போல் நின்ற யோசனை கந்தியிடம் விருப்பம் மிகவே, அரசனது முகம் நலங்கெடலாயிற்று; அது கண்டு அஞ்சிய மைந்தன் வினவ சாரதி நிகழ்ந்த விஷயத்தைக் கூறினான். என்பது செய்யுளின் பொருள்.

ஆதரம் மெலிந்த காலையில் - விருப்பம் குறைவுற்ற காலத்தில். கனிந்த வெற்பு - கனிந்த மலை. அளித்த மங்கை - தந்த காளிந்தி, அல்லது யமுனை நதியின் பெண்தெய்வம். பேர் ஆதரம் மலிய - (யமுனைத் தெய்வம்போல் முன் நின்ற யோசனைகந்தியின்மேல்) மிக்கதான விருப்பம் மேலும் மிகவே. பங்கயானனம் (பங்கய - ஆனனம்) தாமரை மலர்போன்ற (அரசனது) முகம். தான் : அசை. முறை முறை குறையும் - நாள்தோறும் கலை முறையே தேயப்பெறும், பால்மதி - சந்திரன். அழகு அழிந்த சங்கையால் - அழகு கெட்டதால் உண்டான அச்சத்தால். 'சங்கை' என்பதற்கு **அச்சம்** (abbrehension) என்ற பொருளும் உளது. நிகழ்ந்த தன்மை - விஷயம் நிகழ்ந்த விதம்.

'கனிந்த வெற்பு அளித்த மங்கையாம் என்ன நின்ற பூங்கொடி.' தற்குறிப்பேற்றம் ஆகும்.

**வலைஞனிடம் மகன் பெண் வினவல்**

97\. கேட்டவக் கணத்திற் கடற்புறத் தரசைக்
கேண்மையோ டடைந்திள வரசும்
பாட்டனீ யெனக்குப் பெற்றதாய் தானும்
பகீரதி யல்லணின் மகளே
நாட்டமின் றுனக்கியா ததுநிலை யிந்த
ஞாலமு மெம்பியர் ஞாலம்
நீட்டமற் றின்றே திருமண நேர்வாய்
நீதிகூர் நிருபனுக் கென்றான்.

[கேட்ட அ கணத்தில் கடல் புறத்து அரசை கேண்மையோடு அடைந்து, இள அரசும், "பாட்டன் நீ எனக்கு, பெற்ற தாய் தானும் பகீரதி அல்லள், நின்மகளே; நாட்டம் இன்று உனக்கு யாது, அது நிலை : இந்த ஞாலமும் எம்பியர் ஞாலம்; நீட்டம் அற்று இன்றே திருமணம் நேர்வாய் நீதி கூர் நிருபனுக்கு" என்றான்.]

**விளக்கம்:**—கடல்புறத்து அரசு - பரதவர் தலைவன். கேண்மையோடு -உறவு முறை பாராட்டுங் கருத்தோடு. இன்று உனக்கு நாட்டம் யாது - இப்பொழுது உனக்கு விருப்பம் எதுவோ. அது நிலை - அது நிச்சயமாய் அடையக்கூடியதே. நீட்டம் அற்று - கால தாமதம் செய்தல் இல்லாமல்; உடனே என்றபடி. நீதி கூர் நிருபன் - நீதியின் நிலைத்த அரசனாகிய என் தந்தை.

இவ்வாறு, தந்தையின் பொருட்டு வலைஞர் தலைவனிடம் மகள் வினவிய மைந்தனுக்கு. வலைஞன் ஒருவேளை தனக்குப் புத்திரன் பிறந்தால், அரியணை கை மாறுமே, என்று அஞ்சக் கூடும் என்ற எண்ணம் தோன்றலும், அவன் தொடர்ந்து கூறியதைக் கூறும் அடுத்த செய்யுள்.

98. விரதமுற் றியவா றனைவருங் கேண்மின்
மெய்யுயிர் வீடுமன் றளவும்
சரதமுற் றியமெய்த் தாதுவு மூலத்
தழலுடன் மீதெழுந் தகைத்தே
இரதமுற் றியசொன் மகப்பெறா தவருக்
கில்லையென் றியம் புநற் கதியும்
சுரதமுற் றியவென் தந்தைதன் பொருட்டாற்
பெறுவலென் றின்னதுஞ் சொன்னான்.

[விரதம் முற்றிய ஆறு அனைவரும் கேண்மின்; மெய் உயிர் வீடும் அன்று அளவும் சரதம் முற்றிய மெய் தாதுவும் மூலம் தழலுடன் மீது எழும் தகைத்தே; இரதம் முற்றிய சொல் மக பெறாதவருக்கு இல்லை என்று இயம்பும் நல் கதியும், சுரதம் முற்றிய என் தந்தை தன் பொருட்டால் பெறுவல் என்று இன்னதும் சொன்னான்.]

**விளக்கம் :—**இது சிறிது கஷ்டமான பாட்டே. விளக்கு வோம். விரதம்...கேண்மின் (கேள்-மின்)—யான் மேற்கொண்ட விரதத்தை முடிக்கத் தீர்மானித்த வகையை யாவரும் கேளுங்கள். மெய் உயிர் வீடும் அன்று அளவும்-உடலைவிட்டு உயிர் அகன்று செல்லும் நாள் வரையில். சரதம்-நிச்சயமாக. மெய் முற்றிய தாதுவும்-என் தேகத்தில் மிகுந்துள்ள சுக்கிலமும், மூலம் தழலுடன்-மூலாதார அக்கினியுடன், மீது எழும்தகைத்தே -மேல் நோக்கி எழும் தன்மையதாகும். மகப் பெறாதவருக்கு இல்லை என்று இயம்பும் இரதம் முற்றிய சொல்-மக்களைப் பெறாதவர்களுக்கு இல்லையென்று சொல்லப்படும் இரஸம் (இனிமை) முதிர்ந்த மழலை இன்பமும், நல் கதியும்-மறுமைக் குரிய நல்ல கதியும். சுரதம் முற்றிய என் தந்தை தன் பொருட்டால்-புணர்ச்சி விழைவு மிகுந்த என் தந்தை காரண மாக, (அதாவது, தந்தையை மணந்துகொள்ளச் செய்வதால்,) பெறுவல்-அடைவேன்; என்று,—இன்னதும் சொன்னான் முன் செய்யுளில் கூறியதோடு இந்தச் சொல்லையும் சொன்னான்.

விரதம்-நோன்பு, அதாவது ஒன்று **செய்தலையும்-செய்யாமையையும்** மேற்கொண்டு அதை அனுஷ்டிப்பதாகச் சங்கல்பித்துக் கொள்ளல். தாது-சுக்கிலம். மூலத்தழல்-மூலாதார அக்னி.

குய்யம்-ஆண்குறிப் பிரதேசம். குதம்-மலம் கழியும் இடம் (Anus). இவ்விரு இடங்களுக்கும் இடையே தாமரை மலர் போன்ற வட்டவடிமான உறுப்பை **மூலாதாரம்** என்பர். அதனிடத்தேயுள்ள அக்னி **மூலாக்னி** எனப்படும். அந்த மூலாக்னியோடு ஆண் தாது மேல்நோக்கி எழல் பிரும்மசரிய விரதம் பூண்ட தவசியர்க்கே உரியது, என்பர்.

"உயிர் மெய்...தகைத்தே," என்றது, இளவரசன், தான் சாகும்வரை பிரும்மசரியம் பூண்டொழுகப் போவதையும், "சுரதம் முற்றிய...தந்தை தன் பொருட்டால்," என்றது, தந்தை மணப்பதின் பயனாய் விருத்தியாகும் சந்ததியால் மழலையின்பத்தையும், பரகதியையும்தான் அடையமுடியும் என்பதையும் தெரிவித்தபடி.

'முற்றிய' என்ற சொல் செய்து முடிக்க, மிகுந்த, முதிர்ந்த என்ற பொருள்களில் வந்துளது.

## இளவரசன் வீடுமன் ஆதல்

99. இவன்மொழி நயந்து கேட்டுழி யவையி
னிருந்ததொன் மனிதரே யன்றித்
தவமுனி வரருந் தேவருங் ககனந்
தங்குமா மங்கையர் பலரும்
உவகையோ டிவனுக் கேற்றபே ருரைசெய்
தொளிகெழு பூமழை பொழிந்தார்
அவனியி னிருபர் வெருவருந் திறலா
னரியசொற் பொருணிலை யறிந்தே.

[இவன் மொழி நயந்து கேட்டுழி அவையின் 'இருந்த தொல் மனிதரே அன்றி தவ முனிவரரும் தேவரும் ககனம் தங்கும் மாமங்கையர் பலரும் உவகையோடு இவனுக்கு ஏற்ற பேர் உரை செய்து ஒளி கெழு பூ மழை பொழிந்தார், அவனியில் நிருபர் வெருவரும் திறலான் அரிய சொல் பொருள் நிலை அறிந்தே.]

**விளக்கம்;** —நயந்து கேட்டுழி-விரும்பிக் கேட்டபொழுது. ககனம்-வானுலகம். நாலாவது அடிக்குப் பின் மூன்றாவது அடியை இயைத்துப் பொருள் கொள்க. வெருவரும்-அஞ்சும். திறல், என்பது இங்கே மனவலிமையைக் குறிக்கும். திறலான் அரிய சொல்-(அவனியில் நிருபர் அஞ்சும் இளவரசனது) உடல் வலிமையோடு மனவலியையும் தெரிவிக்கும் நினைத்தற்கும் அரிய தான (முன் செய்யுளில் கூறிய) சொல்லின், பொருள்நிலை அறிந்து-பொருளினது நிலைமையை உணர்ந்து, உவகையோடு இவனுக்கு ஏற்ற பேர் உரை செய்து-மகிழ்ச்சியோடு இவனுக்குத் தக்க பேராக (வீடுமன் என்பதை)ச் சொல்லி, ஒளி கெழு பூமழை பொழிந்தார். ஒளிகெழு - வளம் மிக்க,

'பீஷ்மன்' என்பது தமிழில் 'வீடுமன்' ஆயிற்று. 'பீஷ்மன்' என்பது பயங்கரமானவன், என்ற பொருளது; அதாவது, பயங்கரமான விரதத்தை மேற்கொண்டவன், என்பது பொருள்.

''இளவரசன் மேற்கொண்ட இந்தப் பயங்கரமான விரதத்தைக் கேட்ட பரதவர் தலைவனின் சபையிலிருந்தோரும் இருடியரும் தேவரும், பீஷ்மப் பெயரை இவனுக்கு அளித்து, மலரையும் இவன் மேல் சொரிந்தனர்,'' என்பது பொருள்,

100. மெய்ம்மகிழ் கடவுட் பூமழை யுடனே
வீடும னெனும்பெய ரெய்திக்
கைம்மகிழ் விரிவிற் றாசபூ பதியுங்
கன்னிகை காளியுந் தானும்
மொய்ம்மணங் கமழு மன்றல்வே னிலின்வாய்
முனிவருங் கிளைஞருஞ் சூழச்
செய்ம்மகிழ் பழனக் குருநில முடையான்
றிருமனை விரைவுடன் சேர்ந்தான்.

[மெய் மகிழ் கடவுள் பூ மழையுடனே வீடுமன் எனும் பெயர் எய்தி, கை மகிழ் விரிவில் தாச பூபதியும், கன்னிகை காளியும் தானும் மொய் மணம் கமழும் மன்றல் வேனிலின்வாய், முனிவரும் கிளைஞரும் சூழ, செய்மகிழ் பழனம் குருநிலம் உடையான் திருமனை விரைவுடன் அடைந்தான்.]

**விளக்கம் :**—மெய் மகிழ் கடவுள் பூ மழை - மெய்யான மகிழ்ச்சி கொண்ட தேவர்களின் பூமாரி. மகிழ் வரிவில் கை தாச பூபதி - மகிழ்ச்சி கொண்ட வரிவில்லைக் கையில் ஏந்திய வலைஞர் தலைவன். கன்னிகை காளி - யோசனை கந்தி. மொய் மணம் - நெருங்கிய மணம். அதாவது மிகுந்த மணம் (வீசும்), மன்றல் வேனிலின் வாய் - மணம் செய்தற்குரிய இளவேனில் காலத்தில். செய் மகிழ் பழனம் - வயல்கள் நிறைந்த மருத நிலம். பழனக் குருநிலமுடையான் - நீர்வள நிலவளச் செழிப்புடைய குரு வம்சத்தாருக்குரிய நாட்டை உடையான். 'பழனம்' இங்கே, நீர்வள நிலவளமுடைமையைக் குறித்து நின்றது.

தாச பூபதியும் காளியும், தானும் **சேர்ந்தான்**, என்ற முடிபு சிறப்பினால் முடிந்த **பால் வழு அமைதி**. வேனில், விவாகத்திற் குரிய காலமாதலால் 'மன்றல் வேனில்' எனப்பட்டது.

101. பரிமள வடிவப் பாவையை யரசன்
பாலளென் றொருபுடை நிறுத்தி
இருபதந் தொழுது நின்றமா மகனை
யிதயமோ டிறுகுறத் தழுவித்
தருமணங் கமழுஞ் சென்னிமேல் வதனந்
தாழ்த்துமோந் துருகிமுன் றந்தைக்(கு)
உரியதன் னிளமை கொடுத்தகோ மகனு
முனக்கெதி ரல்லனென் றுரைத்தான்.

[பரிமளம் வடிவம் பாவையை அரசன் பாலன் என்று ஒரு புடை நிறுத்தி, இரு பதம் தொழுது நின்ற மா மகனை இதய மோடு இறுகுற தழுவி, தருமணம் கமழும் சென்னிமேல் வதனம் தாழ்ந்து மோந்து. உருகி, முன் தந்தைக்கு உரிய தன் இளமை கொடுத்த கோமகனும் உனக்கு எதிர் அல்லன் என்று உரைத் தான்.]

**விளக்கம் :**—பரிமள வடிவப் பாவை - வாசனையின் உருவம் போன்றவளான வலைஞன் பெண்ணை. அரசன் பாலன் - அரசனுக்கு உரியவள். தருமணம் கமழும் சென்னி - கற்பக மல ரின் மணம் வீசும் தலை. வதனம் தாழ்ந்து மோந்து - (மகனின்) உச்சி மோந்து. முன் தந்தைக்கு...எதிர் அல்லன் - இதன் முன் தந்தைக்குத் தனக்குரிய இளமையை உதவிய **பூரு** என்பவனும் (உனக்கு) எதிராகான்.

'தரு' என்பது சிறப்பினால் கற்பக மரத்தையும், ஆகுபெய ராய் மலரையும் குறித்தது. முன் செய்யுளில், 'கடவுள் பூ மழை' என்றதற்கு ஏற்ப, இங்கே 'தருமணம் கமழும் சென்னி' என்று கூறிய நயம் காண்க.

102. தந்தையர்க் குதவு முதவியி னெனக்குச்
சதமடங் குதவினை யுனக்கு
மைந்தருக் குதவு முதவியிற் சிறிது
மாதவஞ் செய்திலே னுதவச்
சிந்தையிற் றுறக்கம் வேண்டுமென் றெண்ணிச்
செல்லுமன் றல்லதுன் னுயிர்மேல்
முந்துறக் காலன் வரப்பெறா னென்றே
முடிவிலா வொருவர மொழிந்தான்.

[தந்தையர்க்கு உதவும் உதவியின் எனக்கு சதம் மடங்கு உதவினை; உனக்கு, மைந்தருக்கு உதவும் உதவியின் சிறிதும் மா தவம் செய்திலேன் உதவ; சிந்தையில் துறக்கம் வேண்டும் என்று எண்ணி செல்லும் அன்று அல்லது, உன் உயிர்மேல் முந்துற காலன் வரப் பெறான் என்றே முடிவு இலா ஒரு வரம் மொழிந் தான்.]

**விளக்கம் :**—எனக்கு (நீ) தந்தையர்க்கு (மகன்) உதவும் உதவியைக் காட்டிலும் ;சத மடங்கு (நூறு மடங்கு) உதவினை;

(தந்தை) மைந்தருக்கு உதவும் உதவியைப்போல் உனக்கு (நான்) உதவுவதற்குச் சிறிதும் மாதவம் செய்திலேன்; சிந்தையில் துறக்கம் (சுவர்க்கம்) செல்ல வேண்டுமென்று எண்ணி (நீயே) செல்லும் அந்த நாள் அல்லாமல் உன் உயிர்மேல் காலன் முந்துற வரப்பெறான், என்று, முடிவிலா ஒரு வரம் மொழிந்தான்,— என்பது பொருள்.

முந்துற - சுவர்க்கம் செல்ல நினைப்பதற்கு முன், வரப் பெறான் - வாரான். முடிவு இலா - விருப்பம் இன்றிச் சாதல் இல்லாமையாகிய. ஓர் வரம் - ஒப்பற்ற வரத்தை. மொழிந் தான் - வாய் மொழிந்து தந்தான்,

### வலைஞன் மகளின் வரலாறு கூறல்

103. அம்புவி யரசன் மாமனு மரச
னடிபணிந் தவயவத் தழகால்
உம்பரும் வியக்குங் கிளியைமுன் நிறுத்தி
யொடுங்கினன் வாய்புதைத் துரைத்தான்
எம்பெரு மார்னீ கேட்டரு ளுனக்கே
யிசைந்தமெய்த் தவம்புரி யிவளை
வம்பவிழ் மலர்மா தென்பதே யன்றி
வலைஞர்மா மகளெனக் கருதேல்.

[அம்புவி அரசன் மாமனும் அரசன் அடி பணிந்து அவயவத்து அழகால் உம்பரும் வியக்கும் கிளியை முன் நிறுத்தி, ஒடுங்கினன் வாய் புதைத்து உரைத்தான்; எம்பெருமான் நீ கேட்டருள்; உனக்கே இசைந்த மெய் தவம் புரி இவளை வம்பு அவிழ் மலர் மாது என்பதே அன்றி, வலைஞர் மாமகள் எனக் கருதேல்.]

**விளக்கம்:**—சுலபமான செய்யுளே இது. இது முதலாக வுள்ள நான்கு செய்யுள்களால் தாசபூபதி தன் மகளின் வரலாறு கூறுகின்றான். ஒடுங்கினனாய்- ஒடுங்கிய உடலால் தன் அடக் கத்தைக் காட்டிய வண்ணம். இசைந்த-பொருந்திய. வம்பு அவிழ் மலர் மாது-திருமகள்.

'அவயவம்' என்பது அவயவங்களை உடைய சரீரத்தைக் குறித்து நின்றது. மாமன்-மாதுலனாகிய வலைஞன்.

104. வாசவனளித்த விமானமீ தொருவன்
வசுவெனுஞ் சேதிமா மரபோன்
கேசர னெனப்போம் விசும்பிடை மனையாள்
திரிகையை நினைந்துடல் கெழுமி
நேசமொ டிதய முருகுமக் கணத்தி
னினைவற விழுந்தவீ ரியமெய்த்
தேசவ னளித்த நதியிடைத் தரளத்
திரளெனச் சிந்திய தொருபால்.

[வாசவன் அளித்த விமான மீது ஒருவன் வசு எனும் சேதி மா மரபோன், கேசரன் என போம் விசும்பு இடை மனையாள் திரிகை என்பவளை நினைந்து உடல் கெழுமி நேசமொடு இதயம் உருகும் அ கணத்தில், நினைவு அற விழுந்த வீரியம் மெய் தேசவன் (தேசு-அவன்) அளித்த நதி இடை தரளம் திரள் என சிந்தியது ஒரு பால்.]

**விளக்கம்:**—வாசவன்-இந்திரன். சேதி மா மரபோன் வசு எனும் ஒருவன்-சேதிவம்சத்தினனான வசுஎனும்ஒருவன். கேசரன் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தேவன். உடல் கெழுமி-விரகங் கொண்டு. நினைவு அற விழுந்த வீரியம்-மனைவியின் நினைவு அகலும்படி விழுந்த சுக்கிலம் அல்லது தானே விழுந்த வீரியம். மெய் தேசவன்-ஒளி மேனியனான சூரியன். (அவன்) அளித்த நதி-காளிந்தி அல்லது யமுனை. தரளம்-முத்து.

சேதி வம்சத்தினனான வசு என்பவன், இந்திரன் அருளால் பெற்ற விமானத்தில் செல்லுகையில், மனைவியின் நினைவினால் எழுந்த காமத்தின் பயனாய் உண்டான வீரியம் காளிந்தி நதியில் விழுந்து,— என்றபடி, இதன் விரிவை வியாச பாரதத்தில் காண்க.

வசு செய்த தவத்தை மெச்சி இந்திரன் அவனுக்கு விமானம் அளித்தான், என்பது கதை.

105. ஒருமுனி முனிவா லரமக ளொருத்தி
மீனமா யுற்பவித் துழல்வாள்
இரையென வதனை விழுங்குமுன் கருக்கொண்
டின் முதிர் காலையி லதனைப்

பரதவர் வலையி னகப்படுத் தரியப்
பாலக னொருவனு மிவளும்
இருவரு மிந்த மீன் வயிற் றிருந்தார்
யமுனையும் யமனுநே ரெனவே.

[ஒரு முனி முனிவால் அர மகள் ஒருத்தி மீனமாய் உற்பவித்து உழல்வாள். இரை என அதனை விழுங்குமுன் கருக் கொண்டு, ஈன் முதிர் காலையில், அதனை பரதவர் வலையின் அகப்படுத்து அரிய பாலகன் ஒருவனும் இவளும், இருவரும் இந்த மீன் வயிற்று இருந்தார், யமுனையும் யமனும் நேர் எனவே.[

**விளக்கம்:**—ஒரு முனி - பிரும்ம தேவன். அரமகள் - தேவமாது, அதாவது, பிரும்ம சாபத்தினால் மீனாகிய அத்திரிகை என்ற தேவ கன்னி. உற்பவித்து - தோன்றி, ஈன்முதிர் - கருமுதிர்ந்து ஈனும் பருவத்தில் இருக்கையில். அகப்படுத்து - அகம்படுமாறு செய்து பாலகன் ஒருவனும் இவளும் (ஆகிய) இருவரும் யமனும் யமுனையும் நேர் என, இந்த மீன் வயிற்று இருந்தார்.

'யமனும் யமுனையும் சூரியனுக்குப் புதல்வனும் புதல்வியும் ஆவர். எனவே, மீன் வயிற்றில் தோன்றிய புதல்வனுக்கும் புதல் விக்கும் யமனையும், யமுனையையும் உவமையாக்கினார்.

106. மானவர் பதியாம் வசுவினுக் கிவரை
மகிழ்வுறக் காட்டலு மகனை
மீனவ னெனப்பேர் கொடுத்தனன் கொண்டு
மெல்லிய லிவளைமீண் டளித்தான்
யானுமின் றளவு மென்மக ளென்னு
மியற்கையா லினிமையின் வளர்த்தேன்
கானமென் குயில்போல் வந்துமீ ளவுந்தன்
காவலர் குலத்திடைக் கலந்தாள்.

[மானவர் பதி ஆம் வசுவி[illegible]வுக்கு இவரை மகிழ்வு உற காட்டலும், மகனை மீனவன் என பேர் கொடுத்தனன் கொண்டு, மெல் இயல் இவளை மீண்டு அளித்தான்; யானும் இன்று அளவும் என் மகள் என்னும் இயற்கையால் இனிமையின் வளர்த்தேன்; கானம் மென் குயில் போல் வந்து, மீளவும் தன் காவலர் குலத்திடை கலந்தாள்.]

**விளக்கம்** :—மானவர் பதி - மானிடர்க்குத் தலைவன், அரசன். மீனவன்...கொடுத்தனன் கொண்டு - மீனவன் என்று பெயரிட்டு (மகனை) தன்னிடம் வைத்துக்கொண்டு. குயில்போல் வந்து - குயிலைப்போல் என்னிடம் வளர்ந்து வந்து.

வசுஎன்பானின் வீரியத்தால் மீன்வயிறு வந்த குழந்தைகளை அவனிடம் தாசபூபதி காட்ட, அரசன் ஆண்மகனைத் தன்னிடம் வைத்துக்கொண்டு, பெண்ணை வலைஞனிடமே கொடுத்து விட்டான். பெண்ணும் குயிலென அவனிடமே வளர்ந்து, வயது முதிர்ந்ததும் அரசர் குலத்தோடு கலந்து விட்டாள்,—என்பது பொருள். காக்கையால் குஞ்சு பொரித்து வளர்க்கப்படும் குயில், வயது முதிர்ந்ததும் தன் இனத்தைச் சேரும் இயல்பினது. அவ்வாறே, வலைஞரிடை வளர்ந்து, பின், அரசர் குலத்தில் கலந்த மீனவர் மகளுக்குக் குயில் ஏற்ற உவமை ஆகின்றது.

### வேறு

### கலிவிருத்தம்

#### சந்தனு யோசனைகந்தியை மணத்தல்

107. என்று கூறிவி டுத்தன னேந்தலும்
அன்ற வைக்கண வன்மொழி கேட்டு(வந்து)
இன்று நற்றின மென்றிளந் தோகையை
மன்ற லெய்தினன் மாநிலம் வாழ்த்தவே.

[ என்று கூறி விடுத்தனன்; ஏந்தலும், அன்று அவைக் கண் அவன் மொழி கேட்டு உவந்து, 'இன்று நல் தினம்' என்று இளந் தோகையை மன்றல் எய்தினன், மாநிலம் வாழ்த்தவே. ]

**விளக்கம்**:—''பெண்ணெனத் தன்னிடம் வளர்ந்த யோசனை கந்தியின் வரலாறு இது,'' என்று கூறிப் பெண்ணை தாசபூபதி அரசனிடம் கொடுக்க, அவனும் அவளை உவந்து மணந்தான். என்ற பொருளது செய்யுள்.

தான் விழைந்த பெண் அரசர் குலப் பெண், என்பதறிந்த தால், சந்தனு உவந்தவனாவான்.

108. காளி வந்துக லந்தனள் கங்கைவேய்த்
தோளி யும்புயந் தோய்ந்தனண் முன்னமே
வாளி வெம்பரி மாநெடுந் தேருடை
மீளி தானும் விடையவ னாதலால்.

[ காளி வந்து கலந்தனள், கங்கை வேய் தோளியும் புயம் தோய்ந்தனள் முன்னமே, வாளி வெம் மா நெடும் தேருடை மீளி தானும் விடையவன் ஆதலால். ]

**விளக்கம்:**—சுலபமான செய்யுளே. செய்யுளின் 3, 4 அடிகளுக்குப்பின் முதல் 2 அடிகளைக் கூட்டிப் பொருள் கொள்க, மீளி - வீரன். இங்கே சந்தனு. 'விடையவன்' என்பது ரிஷபம் 'போன்றவன்' என்றும், ரிஷபத்தை வாகனமாக 'உடையவன்' என்றும் பொருள்படும். விடையவனான சிவபெருமானை, அம்பிகையின் அம்சமான காளிமணந்தும், கங்கை சடையில் தங்கியும் இருத்தல் போல், விடையவனான சந்தனுவை, முன்னம் தங்கையும், இப்பொழுது காளி என்ற பெயருடைய யோசனை கந்தியும் மணந்தனர். கலந்தனள் - மணந்தனள். 'தோய்ந்தனள்' என்பது 'மணத்தல்' தங்கியிருத்தல்.' என்ற பொருளது.

'விடையவன்' என்பது ரிஷபக் குறியை உடைய வருணனது அம்சமான சந்தனு என்ற பொருளதாகக் கொள்ளலும் ஒன்று.

109. கங்கை யின்கரைக் கண்ணுறு காரிகை
கொங்கை யின்பங் குலைந்தபின் மற்றவள்
எங்கை யென்ன யமுனையின் பால்வரும்
மங்கை யின்ப மகிழ்ந்தனன் மன்னனே.

**விளக்கம்:**—பதப் பிரிவு வேண்டாச் சுலபத்தினது இது. கண்ணுறு - கண்ணுற்ற. குலைந்தபின்-கங்கா தேவியின் பிரிவால் அழிந்த பின். மற்றவள் கங்கையின் எங்கை என்ன- மற்றவளான காளி கங்கையின் தங்கை என்னும்படி. யமுனைக் கரையின் பால் வந்த மங்கையாகிய யோசனை கந்தியோடு, மன்னன் இன்பம் மகிழ்ந்து இருந்தான், என்க.

110. வீடு மன்கழல் வேந்தர்வ ணங்கிட
நாடு நன்னெறி நாளுந டத்திட
நீடு மன்னனு நேரிழை மேன்மலர்த்
தோடு மன்னு சுரும்பென வீழவே.

[ வீடுமன், கழல் வேந்தர் வணங்கிட, நாடும் நல்நெறி நாளும் நடத்திட, நீடு மன்னனும் நேர் இழைமேல் மலர்தோடு மன்னு சுரும்பென வீழவே. ]

**விளக்கம்:**—கழல் வேந்தர் (தன்னை) வணங்கிட வீடுமன், நாடும் நல்நெறி - ஆய்ந்து செய்வதற்குரியதான செங்கோல் முறையை, நாளும் நடத்திட - தவறாமல் எப்பொழுதும் நடத்த, நீடு மன்னன் - பெருமையால் நீண்ட சந்தனு. மலர்த்தோடு மன்னு சுரும்பென - மலர் இதழில் வீழ்ந்து மொய்க்கும் வண்டு போல். மன்னன் அவளோடு பழகி வந்தான், என்க. 'வீழ்தல்' என்பது விருப்பங் காரணமாக நெருங்கல், பழகல், என்ற பொருளது. 'வீழவே' என்பது அடுத்த செய்யுளைத் தொடர்ந்து முடியும்.

வண்டு, மலர், தேன் ஆகியவை முறையே மன்னனுக்கும், யோசனைகந்திக்கும், போகத்திற்கும் உவமையாம். வீடுமனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்து, மன்னன் சிற்றின்பத்தில் ஆழ்ந்திருந் தான், என்பது கருத்து.

111. அன்ன நாளி லருக்கனுந் திங்களும்
என்ன மைந்த் ரிருவரை யீன்றனள்
மன்ன னாவி வடிவுகொண் டன்னமெய்க்
கன்ன பூரங் கலந்தசெங் கண்ணியே.

[அன்ன நாளில் அருக்கனும் திங்களும் என்ன மைந்தர் இருவரை ஈன்றனள். மன்னன் ஆவி வடிவு கொண்டு மெய் கன்னபூரம் கலந்த செங்கண்ணியே].

**விளக்கம்:**—3, 4 அடிகளின் பின் முதல் இரண்டு அடிகளை யும் இயைக்க. மன்னவன் ஆவி...கண்ணி - சந்துனுவின் உயிர் உருவம் கொண்டது போன்ற யாக்கையை உடையவளாய், காதணியோடு உறவு கொண்ட (காது வரை நீண்ட) செவ்வரி படர்ந்த கண்களையுடைய யோசனைகந்தி. அருக்கனும் திங்களும் - சூரியனும் சந்திரனும். மைந்தர் இயற்கையான தேசுடையவர்கள் என்பது பற்றி, அருக்கனையும் திங்களையும் உவமையாக்கினர். கன்னபூரம் - (கர்ணபூரம்) காதணி; வடமொழிச் சொல்.

112. சித்தி ராங்கதன் செப்பு நலனுடை
மெய்த்த சீர்த்தி விசித்திர வீரியன்
இத்தி றத்தரி ருவருந் தம்முனால்
ஒத்த கல்விய ராயி னருண்மையே.

[சித்திராங்கதன் செப்பு நலன் உடைமெய்த்த சீர்த்தி விசித்திர வீரியன், இ திறத்தர் இருவரும் தம்முன்னால் ஒத்த கல்வியர் ஆயினர் உண்மையே.]

**விளக்கம்:**—வீடுமன், தனது தம்பியர்களுக்குக் கல்வி பயிற்று வித்தலைக் கூறும் இது. சித்திராங்கதன் இறந்துபோக, விசித்ர வீரியனே அரசை ஏற்றதால், 'மெய்த்த சீர்த்தி' என்ற அடைக்கு அவன் உரியவனானான்.

செப்பு நலனுடை - பாராட்டிப் பேசுவதற்குரிய நலனை உடைய, மெய்த்த சீர்த்தி - உண்மையான புகழ், இத்திறத்தர் - இப்படிப்பட்டவர், உண்மை(ஏ) என்பது, 'இதே உண்மை,' என்ற பொருளுடைய அசைச் சொல்.

### விசித்ர வீரியன் அரியணை ஏறல்

113. மதிநெ டுங்குல மன்ன னரையினால்
விதிய னந்தரம் விண்ணுல கேற்றினான்
நதியின் மைந்தனு நம்புவிக் கெம்பியே
அதிப னென்றரி யாசனத் தேற்றினான்.

[மதி நெடும் குல மன்னன் நரையினால் விதி அனந்தரம் விண் உலகு ஏற்றினான்; நதியின் மைந்தனும் நம் புவிக்கு எம்பியே அதிபன் என்று அரி ஆசனத்து ஏற்றினான்].

**விளக்கம்:**—மதி நெடும் குலம் - சந்திரவம்சம், நரையினால், (அதாவது கிழத்தனம் காரணமாக) விதி சந்தனுவை விண்ணுலகு ஏற்றினான்; நதியின் மைந்தன், (வீடுமன்) புவிக்கு எம்பியே அதிபன் என்று தம்பியை அரியாசனத்து ஏற்றினான். அனந்தரம் - பின்பு; அதாவது புத்திரர்கள் பிறந்த பின்பு. முதுமை காரணமாக மயிர் வெளுத்தல் நரை.

''விதி சந்தனுவை விண்ணேற்றினான்: நதி மைந்தன் தம்பியை அரியாசனம் ஏற்றினான்,'' என்று; காரண காரியத் தொடர்புடைய இரு நிகழ்ச்சிகளை உடன் நிகழ்வதுபோல் ஒன்றாகப் புணர்த்திக் கூறியுள்ள நயம் காண்க.

114. எங்க ணாம மிவன்கவர்ந் தானெனக்
கங்குல் வந்தொரு கந்தரு வாதிபன்
தொங்கன் மாமுடி சூடிய வேந்தனை
அங்கை யான்மலைந் தாருயிர் கொள்ளவே.

[எங்கள் நாமம் இவன் கவர்ந்தான் என கங்குல் வந்து ஒரு கந்தருவ அதிபன் தொங்கல் மாமுடி சூடிய வேந்தனை, அம் கையால் மலைந்து ஆர் உயிர் கொள்ளவே]

**விளக்கம்:—** கங்குல் - இரவு. கந்தருவாதிபன் - (கந்தருவ - அதிபன்) கந்தர்வர் தலைவன். வேந்தனை - சித்திராங்கதனை. இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.

115. எம்மு னன்றி யிறந்தன னென்றுதாய்
விம்மு நெஞ்சின் மிகுதுனி மாறவே
தெம்முன் வல்ல விசித்திர வீரனைத்
தம்முன் மீளத் தனிமுடி சூட்டினான்.

[எம்முன் அன்றி இறந்தனன் என்று தாய் விம்மு நெஞ்சின் மிகு துனி மாறவே, தெம்முன் (தெவ்முன்) வல்ல விசித்திர வீரனை நம்முன் மீள தனிமுடி சூட்டினான்.]

**விளக்கம் :—** எம்முன் அன்றி - எம் கண்ணெதிர் இல்லாமல். துனி - துன்பம். தெம்முன் (தெவ் - முன்) வல்ல - பகைவர் முன் வல்லமை காட்டவல்ல. தம்முன் - அண்ணனாகிய வீடுமன், மீள - மறுபடியும்.

116. சிற்பொ ருட்பர மானபொ ருட்கெதிர்
உற்ப விக்குமு பாயம தென்னவே
விற்ப டைத்திறல் வீடுமன் வாய்மையால்
பொற்பு றப்புவி பூபதி யாளுநாள்.

[சித்பொருள் பரம் ஆன பொருட்கு எதிர் உற்பவிக்கும் உபாயம் அது என்னவே, வில் படை திறல் வீடுமன் வாய்மை யால் பொற்பு உற புவி பூபதி ஆளும் நாள். இது அடுத்த செய்யுளைத் தொடர்ந்து முடியும்.]

**விளக்கம்:—** சித் - ஞானம். "ஞான ரூபியான பரம் பொருளுக்கு எதிரே, (அதன் இச்சை வழி ஆன்மா) நாம ரூபங்களை எடுக்கும் தன்மைபோல," என்பது முதல் இரண்டடிகளின் பொருள். 'உற்பவிக்கும்' என்ற வினைக்கு எழுவாய் ஆன்மா என்று கொள்க, உபாயம் அது என்ன - அத்தன்மை போல. விற்படை வீடுமன் சொற்படி பூபதி (விசித்ரவீரியன்) புவியை

நன்றாக ஆளுங்காலத்தில்,'' என்பது ஈற்றடிகளின், பொருள். விற்படை வீடுமன் - வில் படைத் தொழிலில் வல்லவனான வீடுமன்.

''பரம்பொருளின் சங்கற்பத்தின்படி சராசரங்கள் இயங்குதல் போல், வீடுமன் மொழிப்படி, விசித்ரவீரியன் செங்கோல் செலுத்தினான்,'' என்பது கருத்து.

**காசி மன்னன் கன்னியர் சுயம்வரம்**

117. காசி மன்னவன் கன்னியர் மூவரும்
தேசின் மிக்கவர்ச் சேர்வரென் றாள்விட
மாசி றொல்குல மன்னவ ரீண்டினார்
மூசி வண்டின மொய்ப்பது போலவே.

[காசி மன்னவன் கன்னியர் மூவரும் தேசில் மிக்கவர் சேர்வர், எனறு ஆள்விட, மாசு இல் தொல்குல மன்னவர் ஈண்டினார், மூசி வண்டு இனம் மொய்ப்பது போலவே.]

**விளக்கம் :** —தேசில் மிக்கவர் - போராற்றலில் மிக்கவர். சேர்வர் - (பெண்கள்) மணப்பர். ஆள்விட - தூதுவரை எங்கும் அனுப்ப. ஈண்டினர் - கூடினர். வண்டு இனம் மூசி (நெருங்கி) மொய்ப்பது போல், அரசர்கள், கன்னியரை விரும்பிக் காசி நகரில் கூடினர், என்க.

118. வரித்த மன்னர் மறங்கெட வன்பினால்
திரித்து மெம்பியைச் சேர்த்துவல் யானெனாத்
திரித்த வில்லொடுந் தன்னிள வேந்தொடும்
விரித்த வெண்குடை வீடும னேகினான்.

[வரித்த மன்னர் மறம் கெட வன்பினால் திரித்தும் எம்பியை சேர்த்துவல் யான் என, தரித்த வில்லொடும் தன் இளவேந் தொடும், விரித்த வெண்குடை வீடுமன் ஏகினான்.]

**விளக்கம்:**—யான், — வன்பினால் - எனது வல்லமையினால். திரித்தும் - தோற்றுஓடச் செய்தாயினும், (உம்மை, உயர்வு சிறப்பினது). எம்பியை சேர்த்துவல் - தம்பியை (அக்கன்னியரோடு) சேர்த்து வைப்பேன். இளவேந்து - தம்பியான விசித்ர

வீரியன். வீடுமன், சுயம்வரத்திற்குத் தன் தம்பியோடு சென்ற தாக வியாச பாரதம் கூறக் காண்கிலம்.

119. அரவ மாநதி யன்னையுந் தன்மகன்
வரவ றிந்து வழியிளைப் பாற்றினாள்
பரவி வந்து பனிமலர்த் தென்றலை
விரவு நுண்டுளி மீதெறி யூதையால்.

[அரவம்மா நதி அன்னையும் தன் மகன் வரவு அறிந்து வழி இளைப்பு ஆற்றினாள், பரவி வந்து பனிமலர் தென்றலை விரவு நுண் துளி மீது எறி ஊதையால்.]

**விளக்கம்:**—ஊதையால், வழி இளைப்பு ஆற்றினாள், என்று இயைக்க. அரவம் மாநதி அன்னை - கங்கை (அரவம் - ஒலி) பனிமலர் தென்றலை விரவு நுண்துளி - குளிர்ந்த மலரின் மணத் தோடு பரவி வரும் தென்றலோடு கலந்துள்ள நீர்த்துளி. ஊதை - காற்று.

இயற்கையாய் வீசிய காற்றில், கங்கை மகனை இளைப் பாறச் செய்தலை ஏற்றிக் கூறுவதால், இது, தற்குறிப்பேற்றம் ஆகும்.

120. கஞ்ச வாவி கலைமதி கண்டென
நெஞ்ச ழிந்து நிருபர்கு ழாந்தொழ
வெஞ்ச ராசன வீரனுந் தம்பியும்
மஞ்ச மேறி மணித்தவி சேறினார்.

[கஞ்சம் வாவி கலைமதி கண்டு என, நெஞ்சு அழிந்து நிருபர் குழாம் தொழ வெம் சராசன வீரனும் தம்பியும் மஞ்சம் ஏறி மணி தவிசு ஏறினர்.]

**விளக்கம்:**—கஞ்ச வாவி - தாமரைக்குளம். கலைமதி - கலை நிரம்பிய பூரண சந்திரன். கண்டென - (கலைமதியைக்) கண்ட தாமரை மலர் போல. நெஞ்சு அழிந்து - மனம் உடைந்து. சராசன வீரன் - வீடுமன். மஞ்சம் - அரசர்க்கென்று அமைக்கப் பெற்று அரசுக் கட்டில்' (elevated platform) தவிசு ஆசனம்.

121. குருத்த லந்தனிற் கூறிய வஞ்சினம்
ஒருத்த ரன்றறி வாருல கோர்பலர்
விருத்தன் வந்தனன் மேலினி யேதிவன்
கருத்தெ னாமனங் காளையர் கன்றினார்.

[குரு தலந்தனில் கூறிய வஞ்சினம் ஒருத்தர் அன்று, அறிவார் உலகோர் பலர்; விருத்தன் வந்தனன், மேல் இது ஏது இவன் கருத்து எனா, மனம் காளையர் கன்றினார்.]

**விளக்கம்:**—குரு தலந்தனில்-குரு நிலத்தில். வஞ்சினம் - சபதமொழி. (வீடுமன் இப்பிறவியில் மணப்பதில்லை என்று வலைஞனுக்குக் கூறிய) வஞ்சினத்தை, ஒருத்தர் அன்று; உலகோர் பலர் அறிவர். அவ்வாறாக, விருத்தன் (வயது முதிர்ந்த வீடுமன்) சுயம்வரத்திற்கு வத்துள்ளான். 'இப்பொழுது இங்கே அவன் வந்த நோக்கம் யாதோ?' - என்று சுயம்வரத்திற்கு வந்த அரசகுல மைந்தர் (காரணம் தெரியாமையினால்) மனம் கன்றினார், அதாவது மனவாட்டங் கொண்டனர்.

அவையிருந்தோர். 'பிரும்மசரிய விரதம் பூண்ட இக்கிழவன் வஞ்சினம் பிழையுற இங்கே வந்தான்!' என்று கை கொட்டிச் சிரித்தனர், என்று வியாசர் நூல் கூறும்.

மேல் இனி - இனிமேல், (அவன் செய்ய நினைத்தது யாதோ!)

122. இருந்த மன்ன ரிவரிவ ரென்றுளம்
பொருந்த மற்றவர் பொற்புடைத் தேசெலாம்
திருந்த நின்று செவிலியர் கூறவே
முருந்த வாணகை மூவருந் தோன்றினார்.

[இருந்த மன்னர் இவர் இவர் என்று உளம் பொருந்த (மற்று) அவர் பொற்பு உடைதேசு எலாம் திருந்த நின்று செவிலியர் கூறவே, முருந்து அ வாள் நகை மூவரும் தோன்றினார்,]

**விளக்கம்:**—செவிலியர் (கன்னியர் முன்) நின்று, இருந்த மன்னர்...திருந்தக் கூறவே, மூவரும் தோன்றினார்,—என்பது அன்வயம்.

உளம் பொருந்த-மனத்தில் பதியும்படி, பெர்ற்புடை. தேசு-சிறப்பின் நலம் வாய்ந்த பராக்கிரமம். திருந்த-செவ்வையாக, விளக்கமாக, முருந்து-மயிலிறகின் வெள்ளிய அடிப்பக்கம். நகை-பல். தோன்றினார்-சுயம்வர மண்டபம் வந்தனர்.

முருந்த வாணகை-முருந்தம் வாண்நகை,—என்றும் பிரியும். அப்பொழுது அம் சாரியையாகும்.

123. கையின் மாலை யிவற்கெனக் கன்னியர்
வெய்ய நெஞ்சொடு மின்னென வந்தவர்
வைய மன்னன் வயநிலை நோக்கியே
ஐய முற்றனரன்புறு காதலார்.

[கையில் மாலை இவற்கு என கன்னியர் வெய்ய நெஞ்சொடு மின் என வந்தவர், வைய மன்னன் வயநிலை நோக்கியே ஐயம் உற்றனர் அன்பு உறு காதலார்.]

**விளக்கம்:**—வெய்ய - விருப்பமுடைய. வயநிலை - (வயஸ்) நிலை-வயதின் முதிர்ந்த நிலை. வீடுமனது பராக்ரமங் கேட்டு, (அவன்பால்) அன்புறு காதலராய் இருந்தும், அவன் வயதுநிலை கண்டு, ஐயம் உற்றனர்; அதாவது வயதின்நிலை நோக்கி, 'இவனை எப்படி மணப்பது?' என்று சங்கித்துப் பின்வாங்கினர், —என்றபடி, 'வயஸ்நிலை' என்ற வடசொல் 'வயநிலை' எனத் திரிந்து நின்றது.

**கன்னியரோடு வீடுமன் நகர் அடைதல்**

124. ஏனை வேந்த ரெதிரிவ ரைப்பெருந்
தானை சூழ்மணிச் சந்தனத் தேற்றியே
சோனை மாமதஞ் சோருங் கடதட
யானை யென்ன விளவலோ டேகினான்.

[ஏனை வேந்தர் எதிர் இவரை பெரும் தானை சூழ் மணி சந்தனத்து ஏற்றியே, சோனை மாமதம் சோரும் கடதடம் யானை என்ன இளவலோடு ஏகினான்.]

**விளக்கம்:**—சந்தனத்து ஏற்றி - தேரில் ஏற்றி. சோனை - விடாது பெய்யும் மழை, சோரும்-பெருகும், கடதடம் -

கபோலம், கதுப்பு, (அதாவது மதம் பெருகுதற்குரிய இடமான கபோலம்) அத்தகைய யானையைப் போல் வீடுமன் இளவலோடு ஏகினான்.

125. முறையி னாலன்றி மொய்ம்பிற் கவர்வதெக்
குறையி னாலெனக் கோக்குலங் கூடிவந்(து)
இறைவ னோடெதி ரெற்றவவ் வீரரைப்
பிறைமு கக்கணையாற்பிளந் தோட்டினான்.

[முறையினால் அன்றி மொய்ம்பின் கவர்வது எகுறையினால் என கோகுலம் கூடி வந்து இறைவனோடு எதிர் எற்ற, அ வீரரை பிறைமுகம் கணையால் பிளந்து ஓட்டினான்.]

**விளக்கம்:—**முறை-சுயம்வரத்திற்குரிய முறைமை. மொய்ம்பு-வலிமை. எக்குறையினால்- (தம்மிடம் உள்ள) எந்தக் குறையினால், அதாவது, குறைவற்ற வலிமையுடையவராய் நாம் இருக்க, வீடுமன் கன்னியரை முறையிலாவழி கவர்ந்து செல்வது என்ன காரணத்தால் - என்றபடி, ''வீரர் நாம் இருக்க, மொய்ம்பினால் அவன் கவர்ந்து செல்வது தக்கதன்று; நாம் தடுக்க வேண்டும்.'' என்பது கருத்து. இறைவன் - வீடுமன். எதிர்த்தாரைக் காயமுறச் செய்து விரட்டினான், என்க,

126. முந்து றப்பெறு மூவரோ டாடமர்
விந்தை தன்னையும் வேந்தர் கொடுத்தலால்
சந்த னுப்பெயர்த் தார்முடி மன்னவன்
மைந்தர் தங்கள் வளநகர் மன்னினார்.

[முந்துற பெறும் மூவரோடு ஆடு அமர் விந்தை தன்னையும் வேந்தர் கொடுத்தலால், சந்தனு பெயர் தார் முடி மன்னவன் மைந்தர் தங்கள் வளநகர் மன்னினார்.]

**விளக்கம்:—**முந்துற பெறும் மூவரோடு முன்னமேயே கவர்ந்து பெற்ற மூன்று கன்னிகையரோடு. ஆடு அமர் விந்தை-ஜயலட்சுமி. (ஆடு-போர் செய். அமர்-போர்; எனவே, ஆடு அமர்-கொல்லுதல் செய்தலையுடைய போர்; அமர் விந்தை-போருக்குரிய விஜயலட்சுமி.) மன்னினார்- சேர்ந்தார்கள்.

''முன்னே கன்னியரையும், அதன்பின் போரெழுந்த மன்னர் உற்ற தோல்வியால் ஜயலட்சுமியையும் கொடுத்தனர்.'' என்பது முதல்இரண்டு அடிகளின் பொருள். விந்தை-(வீரலட்சுமி, அல்லது ஜயலட்சுமி) விந்திய மலையை வாழுமிடமாகக் கொண்டவள்.

127. சமரின் முந்திய சாலுவன் மேன்மனம்
அமர நின்ற தறிந்துழி யம்பையை
எமர்க ளுக்கிஃ தியற்கையன் றென்னவே
அமர ழிந்த வவனுழைப் போக்கினான்.

[சமரின் முந்திய சாலுவன் மேல் மனம் அமர நின்றது அறிந்துழி, அம்பையை. 'எமர்களுக்கு இஃது இயற்கை அன்று' என்னவே, அமர் அழிந்த அவனுழை போக்கினான்.]

**விளக்கம்;**—வீடுமனோடு நிகழ்ந்த போரில் தோற்றானேனும், வலிமையில் சிறிது அவனையும் விஞ்சியவனாய்ப் போர் முயன்ற சாலுவ நாட்டு அரசனிடம் அம்பையின் மனம் சென்று நிலைத்திருந்ததை அறிந்த காலத்தில், 'பிறன் பால் மனம் சென்ற கன்னியரை மணங் கொள்ளல் குரு குலத்தவர்க்குத் தக்கதன்று' என்று சொல்லி, அவளை வீடுமன் சாலுவனிடம் அனுப்பி வைத்தான்,...என்பது பொருள்.

சாலுவநாட்டு அரசன் பெயர் பிரமதத்தன், வீடுமனையும் போரில் விஞ்சினான் என்று கூறும்படி போர் செய்த,—என்ற பொருளது. 'சமரின் முந்திய' என்ற தொடர், சாலுவனைத் தான் மனத்தால் வரித்துள்ளதை அம்பை பீஷ்மனிடம் கூறியதாக வியாசர் நூல் கூறும்,

128. அம்பி கைக்குமம் பாலிகைக் கும்பதி
எம்பி யேயெழி லாலென் றிசைவுறத்
தம்பி தன்னைத் தனஞ்சயன் றன்னெதிர்
வம்பி னான்மிகு மாமணஞ் சேர்த்தினான்.

[அம்பிகைக்கும் அம்பாலிகைக்கும் பதி எம்பியே எழிலால் என்று இசைவு உற, தம்பி தன்னை, தனஞ்சயன் தன் எதிர் வம்பினால் மிக்க மா மனம் சேர்த்தினான்.]

;—அம்பிகை அம்பாலிகைகளுக்கு அழகால் தம்பியே ஏற்றவன், என்று (வீடுமன்) சொல்லி, (அப்பெண்கள்) இசைவுற (சம்மதிக்க) அக்கினி. சாட்சியாகத் தன் தம்பிக்கு மணம் புரிவித்தான். தனஞ்சயன்-அக்கினி. வம்பு-வாசனை சிறப்பு,

சாலுவன் மறுக்கத் திரும்பிய அம்பை

129. சென்ற வம்பையைத் தீமதிச் சாலுவன்
வென்று தெவ்வர் கவர்ந்தநின் மெய்தொடேன்
என்றி கப்ப விவனுழை மீளவும்
மன்றல் வேண்டினள் மன்றலங் கோதையாள்.

[சென்ற அம்பையை தீ மதி சாலுவன் வென்று தெவ்வர் கவர்ந்த நின் மெய் தொடேன், என்று இகப்ப, இவனுழை மீளவும் மன்றல் வேண்டினள், மன்றல் அம் தோகையாள்.]

**விளக்கம்:**—தெவ்வர்-பகைவர். இகப்ப-ஏற்க மறுத்து அகலச் செய்ய. இவனுழை - வீடுமனிடம், மன்றல் - திருமணம்; லாசனை.

மனம் புகுந்தவனைக் கற்பால் மணக்க வந்த கன்னியை ஏற்க மறுத்தலால், **தீமதிச்** சாலுவன், எனப்பட்டான்.

130. கங்கை மைந்தன் கடிமணங் காதல்கூர்
மங்கை தன்னை மறித்தபின் மங்கையும்
செங்க ணீரெழச் சிந்தைசெந் தீயெழச்
சங்கை யோடுதன் றாதையை நண்ணினாள்.

[கங்கை மைந்தன் கடி மணம் காதல் கூர் மங்கை தன்னை மறுத்தபின், மங்கையும் செங்கண் நீர் எழ, சிந்தை தீ ஏழ சங்கையோடு தன் தாதையை நண்ணினாள்.]

**விளக்கம்:**—காதல் கூர் மங்கை -விவாகத்தில் விருப்பம் மிக்க வளான அம்பை. வீடுமனால் மறுக்கப்பெற்ற நங்கை கண்களில் நீர் பெருகவும். மனத்தில் கோபம் கனற்றவும் சங்கையோடு தந்தையைச் சேர்ந்தாள், சங்கை-தகப்பன் என்ன சொல்வானோ என்ற பயம்.

வேறு

எழுசீர் ஆசிரிய விருத்தம்

131. தந்தை தாளினில்வி ழுந்து சந்தனுவின்
மைந்த னின்னலுரை தந்ததும்
கோதை யாலுறவு கொண்டு கைதரல்
குறித்த கோமகன் மறுத்ததும்
பேதை கூறமன நொந்தி ரங்கியவன்
மிக்க நண்பினொடு பின்னையும்
தூதை யேவிமண முற்றி ரந்தனன்
விசும்பு லாவுநதி சுதனையே.

[தாதை தாளினில் விழுந்து சந்தனுவின் மைந்தன் இன்னல் உரை தந்ததும், கோதையால் உறவுகொண்டு கைதரல் குறித்த கோமகன் மறுத்ததும், பேதைகூற, மனம் நொந்து இரங்கியவன், மிக்க நண்பினோடு பின்னையும் தூதை ஏவி மணம் உற்று இரந்தனன் விசும்பு உலாவு நதி சுதனையே.]

**விளக்கம்:**—தந்தை தாளில் விழுந்து, கோதையால் உறவு கொண்டு கைதரல் குறித்த கோமகன் மறுத்ததும், சந்தனுவின் மைந்தன் இன்னல் உரை தந்ததும் பேதை கூற... ஏவி (அத் தூதுவர் மூலம்) விசும்பு உலாவுநதி சுதனை உற்று, மணம் இரந்தனன்.—என்று அன்வயம் கொள்க,

இன்னல் - துன்பம், கோதையால் உறவு கொண்டு கைதரல் குறித்த கோமகன் - மணமாலை மூலம் உறவு கொண்டு பாணிக் கிரகணம் செய்து கொள்ளலை எண்ணிய சாலுவன். விசும்புலாவு நதிசுதன் - ஆகாச கங்கை மகனான வீடுமன். 'பின்னையும்' என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியது.

132. போன தூதுவர் வணங்கி யிம்மொழி
புகன்ற போதுமொழி பொய்யுறா
மீன கேதனனை வென்று தன்கொடிய
விரதமே புரியும் வீடுமன்
மான வேனிருபன் மகள் குறித்த திரு
மன்றல் வன்பொடும றுத்தலான்
ஆன வாதரவொ டாகு லம்பெருக
வம்பை தந்தைதன தருளினால்.

[போன தூதுவர் வணங்கி இ மொழி புகன்றபோது, மொழி பொய் உறா மீனகேதனனை வென்று தன் கொடிய விரதமே புரியும் வீடுமன், மானவேல் நிருபன் மகள் குறித்த திரு மன்றல் வன்பொடு மறுத்தலான், ஆன ஆதரவொடு ஆகுலம் பெருக அம்பை தந்தை தனது அருளினால்.]

**விளக்கம்:**—இதுவும், இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும் ஒரு தொடர். இம் மொழி - மணந்துகொள்ள வேண்டும் என்ற வார்த்தை. மொழி பொய்யுறா - மணக்கேன் என்று தாச பூபதிக்குச் சொன்ன சொல் தவறாதபடி. மீன கேதனன் - மீனக் கொடியோனான மன்மதன். மானவேல் நிருபன்: காசிராஜன். குறித்த - எண்ணிய. ஆன ஆதரவோடு - மகளின் மணம் பற்றி எழுந்த விருப்பத்தோடு. ஆகுலம் - துன்பம்.

(தந்தை) தனதுஅருளினால், 'தவம் புரிதி என்று கூறினான்' என்று 134-வது செய்யுளோடு இயையும். காம இச்சையைக் கடத்தல், மீனகேதனனை வென்றபடியாகும்.

### தந்தை உபாயம் கூறல்

133. வரிசை யாலுயர நேக மண்டல
மகீபர் சொன்னசொல் மறுக்கினும்
பரசு ராமனருண் மொழிம றானவன
திருப தத்திடைப்ப ணிந்துநீ
உரைசெய் தாலவனு ரைத்த சொல்லின்வழி
யொழு கிவந்துநினை யுவகையால்
விரைசெய் மாலைபுனை யாது வீடுமன்
மறுத்து மீளவும் விளம்புமேல்.

[வரிசையால் உயர் அநேகம் மண்டலம் மகீபர் சொன்ன சொல் மறுக்கினும் பரசுராமன் அருள்மொழி மறான்; அவனது இரு பதத்திடை பணிந்து நீ உரை செய்தால், அவன் உரைத்த சொல்லின் வழி ஒழுகி வந்து நினை உவகையால் விரை செய் மாலை புனையாது வீடுமன் மறுத்து மீளவும் விளம்புமேல்.]

**விளக்கம்:**—மண்டல மகீபர் - அரசர்கள். விரை செய் மாலை - நறுமணம் வீசும் மணமாலை. 'விளம்புமேல்,' என்பது 'தவம் புரிதி' என்பதோடு இயைந்து முடியும். பரசுராமன்

ஆசாரியனாதலால் அவன் சொல்லை வீடுமன் மறான், என்று அம்பையின் தந்தை கருதினான் ஆயிற்று.

134. பின்னை யெண்ணிய பெருந்த வம்புரிதி
யென்று கூறியபி தாவையும்
அன்னை தன்னையும் வணங்கி நீடுசது
ரந்த யானமிசை யம்புயப்
பொன்னை வென்றொளிகொள் சாய லாளிரு
புறத்து மாதர்பலர் பொலிவுடன்
தன்னை வந்துபுடை சூழ வேகியம
தங்கி மைந்தனகர் சாரவே.

[பின்னை எண்ணிய பெரும் தவம் புரிதி, என்று கூறிய பிதாவையும் அன்னையையும் வணங்கி, நீடி சதுரந்தயானம்மிசை அம்புயம் பொன்னை வென்று ஒளி கொள் சாயலாள் இரு புறத்தும் மாதர் பலர் பொலிவுடன் தன்னை வந்து புடை சூழ ஏகி, யமதங்கி மைந்தன் நகர சாரவே.]

**விளக்கம்:**—132-வது செய்யுளிலுள்ள 'தந்தை அருளினால், பின்னை எண்ணிய பெருந்தவம் புரிதி.'' என்று கூறினான் என்று வருவித்து முடிக்கவும். பிறகு, 'கூறிய பிதாவை...' என்று தொடரும்.

அம்புயப் பொன்னை...சாயலள்-அழகினால் இலக்குமியை வென்ற ஒளிகொண்ட மெல்லியலாள். சதுரந்த யானம்-பல்லக்கு. யமதங்கி மைந்தன்- ஜமதக்னி முனிவனது மகனான பரசுராமன்.

தந்தை சொற்படி அம்பை, பல்லக்கில் பல மாதர் புடை சூழ, பரசுராமன் இருக்குமிடம் சென்று சேர்ந்தாள்,— என்றவாறு.

135. காசி ராசன்ம களென்று வந்தனளோர்
கன்னி யென்றுகடைக் காவலோர்
வாச நாறுதுள வோனு டன்புகல
வருக வென்றபின் மடந்தைபோய்

ஆசி னாலுரைவ குத்து முற்செய
லனைத்து மண்ணலடி தொழுதுபின்
பேசி னாளவனும் யாமு டிக்குவமி
தென்று மெய்ம்மையொடு பேசினான்.

[காசிராசன் மகள் என்று வந்தனள் ஓர் கன்னி என்று கடைகாவலோர் வாசம் நாறு துளவோனுடன் புகல, வருக என்றபின், மடந்தை போய். ஆசினால் உரை வகுத்து முன் செயல் அனைத்தும் அண்ணல் அடி தொழுது, பின் பேசினாள்; அவனும் யாம் முடிக்குவம் இது என்று மெய்ம்மையொடு பேசினான்.]

**விளக்கம்:**—கடைக்காவலோர் வாசம் நாறு துளவோனுடன், காசிராசன்...ஓர் கன்னி வந்தனள் என்று புகல. வருக என்றபின் மடந்தை (பரசுராமனிடம்) போய், ஆசினால் உரை வகுத்து, அண்ணல் அடி தொழுது, பின் முன்செயல் அனைத்தும் பேசினாள்; அவனும் பேசினான்,—என்று அன்வயம் கொள்க.

வாசநாறு துளவோன்- பரசுராமன், ஆசினால் உரை வகுத்து-வாழ்த்தி, வாழ்த்துரை கூறி. கடவுள் அரசர் பெரியோர் ஆயவரை வாழ்த்தல் முறை. மெய்ம்மையொடு பேசினான் - உறுதி மொழி கூறினான்.

### பரசுராமன் வீடுமனை அடைதல்

136. வரதன் வீரமழு வால நேககுல
மன்னர் வேரறம லைந்தகோன்
இரத மீதவளு டன்க ணப்பொழுதி
னேறி யையிருதி னத்தினில்
விரத மாயரண மெனவ ணிந்ததிறல்
வீடு மன்பதியின் மேவலும்
சரத மாகவெதிர் கொண்ட வன் சிர
மிவன்ப தத்தினிடை சாத்தினான்.

[வரதன் வீரம் மழுவால் அநேக குலம் மன்னர் வேர் அற மலைந்த கோன் இரதமீது அவளுடன் கணப்பொழுதின் ஏறி ஐ இரு தினத்தினில் விரதம் ஆபரணம் என அணிந்த திறல் வீடுமன்

பதியின் மேவலும், சரதம் ஆக எதிர்கொண்டு அவன் சிரம் இவன் பதத்தினிடை சாத்தினான்.]

**விளக்கம்:** வரதன்-வரத்தைக் கொடுப்பவன். வரதனும் வீர மழுப்படையால் அநேக குலமன்னர் வேரொடு அழியும்படி போர் செய்த தலைவனுமான பரசுராமன், என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள்,

விரத வீடுமன்-விரதத்தையே ஆபரணம் என அணிந்த, திறலுடைய வீடுமன். மேவலும்- (பரசுராமன்) வந்து சேரலும் சரதமாக-மெய்யான அன்போடு. சாத்தினான் - சேர்த்தான்.

137. தனக்கு வின்மைநிலை யிட்ட கோவையொரு
தமனி யத்தவிசில் வைத்து நீ
எனக்கு நன்மைதர வந்த நற்றவ
மிருந்த வாவெனவி ருந்தபின்
கனக்கும் வெண்டரள வடமு லைப்பெரிய
கரிய கண்ணியிவள் காதலால்
உனக்கு மன்றல்பெற வுரிய ளாகுகென
வுவகை யோடவனு ரைக்கவே,

[தனக்கு வின்மை (வில் - மை) நிலையிட்ட கோவை ஒரு தமனிய தவிசில் வைத்து, நீ எனக்கு நன்மை தர வந்த நல்தவம் இருந்த வா என, இருந்தபின், கனக்கும் வெள் தரளம் வடம் முலை, பெரிய கரிய கண்ணி இவள் காதலால் உனக்கு மன்றல் பெற உரியள் ஆகுக, என, உவகையோடு அவன் உரைக்கவே.]

**விளக்கம் :**—வின்மை நிலையிட்ட - வில் தொழிலை (என்பால்) நிலைத்திருக்குமாறு உணர்த்திய. தமனியத் தவிசு - பொன்னால் ஆன ஆசனம். இருந்தவா - இருந்ததானது என்னே, என் - என்று (வீடுமன்) முகமன்கூற, இருந்தபின் - (பரசுராமன்) தமனியத் தவிசில் அமர்ந்தபின் தரளவடம் (அணிந்த) கனக்கும் (பருத்த) முலைகளையும், கரிய பெரிய கண்களையும் உடைய அம்பை,—என்பது மூன்றாவது அடியின் பொருள். மன்றல் பெற உரியள் ஆகுக - மணந்து கொள்ளற்கு உரியள் ஆகட்டும். அவன் உரைக்க - பரசுராமன் கூற,— (வீடுமன் பதில் மொழிவான்).

### வீடுமன் மணக்க மறுத்தல்

138. இன்சொ லாலவனி கொண்ட வெந்தைமுத
லின்ப மன்றலினி தெய்தநான்
வன்சொ லாலிரத மணமு றேனென
மனத்தி னால்விரத மன்னினேன்
நின்சொல் யாவருமறாரெ னக்கருதி
நீயு ரைப்பினுநி கழ்ந்தவிப்
புன்சொ லானதினி மாத வத்தின்மிகு
புனித வென்செவிபொ றுக்குமோ.

[இன் சொலால் அவனி கொண்ட எந்தை முதல் இன்பம் மன்றல் இனிது எய்த, நான் வன்சொலால் இரதம் மணம் உறேன் என மனத்தினால் விரதம் மன்னினேன்; நின் சொல் யாரும் மறார் என கருதி நீ உரைப்பினும், நிகழ்ந்த இ புன்சொல் ஆனது இனி மாதவத்தின் மிகு புனித, என் செவி பொறுக்குமோ.]

**விளக்கம் :** —முதல் - முதலிலே, முன்னே. வன்சொல் - சபதச் சொல், வஞ்சினம். இரதம் மணம் உறேன் - மனைவி இன்பம் அனுபவித்தற்குரியதான விவாகத்தை ஏற்கமாட்டேன். மன்னினேன் - பொருந்தி இருந்தேன், நிலைத்து இருந்தேன். நின்சொல்...நீ உரைப்பினும், மாதவத்தின் மிக்க புனித, நிகழ்ந்த புன் சொலானது இனி என் செவி பொறுக்குமோ,—என்று அன்வயிக்க. நிகழ்ந்த - நீ சொல்லிய.

வீடுமன் பூண்ட விரதத்திற்கு விரோதமான சொல்லைப் பரசுராமன் கூறியதால், '**புன்சொல்**' எனப்பட்டது. புணர்ச்சி என்ற பொருளதான **ரதம்** என்ற வடசொல், இகரவுயிர் பெற்று இரதம் என நின்றது. 'பொறுக்குமோ' என்றது 'என் செவி ஏற்காது,' என்ற பொருளது.

139. களம்பு குந்தவரை மீள வேகுதல்கொ
டாத கார்முகவி னோதகேள்
உளம்பு குந்தினி திருக்கு நற்கடவு
ளுன்னை யன்றியிலை யுண்மையே
வளம்பு னைந்தவநு ராக போகமிகு
மாதர் மங்கையர்பொ ருட்டினால்
விளம்பு மிந்தமொழி யொழிக வென்றனுயிர்
வேண்டு மென்னினும்வ ழங்குவேன்.

[களம் புகுந்தவரை மீள ஏகுதல் கொடாத கார்முகம் விநோத, கேள்; உளம் புகுந்து இனிது இருக்கும் நல் கடவுள் உன்னை அன்றி இலை, உண்மையே; வளம் புனைந்த அநுராகம் போகம் மிகு மாதர் (அழகிய) மங்கையர் பொருட்டினால், விளம்பும் இந்த மொழி ஒழிக; என் தன் உயிர் வேண்டும் என்னினும் வழங்குபவன்.]

**விளக்கம் :—** 'என் நெஞ்சுறை கடவுள் நீயே. உயிரையும் வேண்டுமெனின் ஈவேன். மற்று, இவளை மணத்தலோ முடியாது' என்று வீடுமன் பரசுராமனுக்குக் கூறினான்,— என்றவாறு. வளம் புனைந்த அநுராகபோகம் மிகு மாதர் மங்கையர் பொருட்டினால்-மிகுந்த ஆசையினால் உண்டாகும் சிற்றின்ப நுகர்ச்சிக்குரிய அழகு மிகுந்த மங்கையரின் சார்பில். அநுராகம்-ஆசை.

### பரசுராமன் போரெழல்

140. மறுத்தி வன்புகல வீரி யன்புயமொ
ராயி ரந்துணிசெய் மழுவினான்
வெறுத்த னந்தரமெ ழுந்தி ருந்துகரை
யழியும் வேலைநிகர் வெகுளியன்
கறுத்த நெஞ்சினன்வெ ளுத்த மேனியனு
றச்சி வந்தவிரு கண்ணினன்
பொறுத்த வில்லினன்வி ரைந்து தேர்மிசைபு
குந்த னன்பெரிது போர்செய்வான்.

[மறுத்து இவன் புகல வீரியன் புயம் ஓர் ஆயிரம் துணிசெய் மழுவினான், வெறுத்து அனந்தரம் எழுந்து இருந்து, கரை அழியும் வேலை நிகர் வெகுளியன், கறுத்தநெஞ்சினன், வெளுத்த மேனியன், உற சிவந்த இரு கண்ணினன், பொறுத்த வில்லினன், விரைந்து தேர்மிசை புகுந்தனன் பெரிதும் போர் செய்வான்.]

**விளக்கம்:—**வீரியன் - கார்த்த வீரியன். அனந்தரம் - பிறகு. கரை அழியும் வேலை நிகர் வெகுளியன் - கரையை அழித்துச் செல்லும் சமுத்திரத்தை ஒத்த சினத்தினன். உற சிவந்த - மிகச் சிவந்த. பொறுத்த வில்லினன் - கையில் தாங்கிய வில்லினன். போர் செய்வான்... தகுந்தனன் - போர் செய்வதற்குத் தேரின் மேல் ஏறினான்.

செய்யுளின் மூன்றாவது அடி, முரண் தொடை.

தன் தந்தையைக் கார்த்த வீரியன் கொன்றதற்காகப் பரசுராமன் அவனைக் கொன்றான், என்க.

141. வெருவு டன்றொழுது கங்கை மைந்தனடி
வீழ வுஞ் சினமி குத்தலால்
உருவு டன்றனியி ருக்கு நீள்விரதம்
வழுவி நானரக முறுவதின்
குருவு டன்பொருது மடித னன்றெனநி
னைந்து தாலமுயர் கொடியினன்
செருவு டன்றிடுத லுன்னி யேறினன
மைந்து நின்றதொரு தேரின்மேல்.

[வெருவுடன் தொழுது கங்கை மைந்தன் அடி வீழவும், சினம் மிகுத்தால் உருவுடன் தனி இருக்கும் நீள் விரதம் வழுவி நான் நரகம் உறுவதின், குருவுடன் பொருது மடிதல் நன்று என நினைந்து, தாலம் உயர் கொடியினன் செரு உடன்றிடுதல் உன்னி, ஏறினன் அமைந்து நின்றது ஒரு தேரின் மேல்.]

**விளக்கம்:**—கங்கை மைந்தன் வெருவுடன் (பரசுராமனைத்) தொழுது, அவன் அடி வீழவும், (அதாவது விழுந்து வேண்டிக் கொள்ளவும்), சினமே (அவன் பால்) மிகுத்தலால்... அமைந்து நின்ற தொரு தேரின் மேல் ஏறினான்,—என்க.

வெருவுடன் - அச்சத்துடன். சினம் மிகுத்தலால் - சினம் மிகுதியாகக் கொண்டதால். உருவுடன் தனி இருக்கும் நீள் விரதம் - பிறருக்குப் பயங்கரமாகத் தோன்றும் நிலையுடைய சிறந்தபிரும்மசரிய விரதம். தாலம் உயர் கொடியினன் - வீடுமன். தாலம் - பனை. **தாலகேதனன்**, என்றும் **தாலத்துவஜன்** என்றும் பீஷ்மனை அழைப்பர்.

142. அவ்வி ராமனும றுத்த மன்னவனு
மையி ரண்டுதின மிகலுடன்
வெவ்வி ராவுமொழி யாது வெஞ்சமர்வி
ளைத்த காலையடல் வீடுமன்
கைவி ராயசிலை யோடு மெய்வலிக
வர்ந்து முன்றளர்வு கண்டபோர்
அவ்வி ராமனிக ரென்னு மாறிவனை
யஞ்சி நின்றெதிர டர்க்கவே.

[அ இராமனும் மறுத்த மன்னவனும் ஐ இரண்டு தினம் இகலுடன் வெவ் இராவும் ஒழியாது வெம் சமர் விளைத்த காலை, அடல் வீடுமன், கை விராய சிலையோடு மெய் வலி கவர்ந்து, முன் தளர்வு கண்ட, போர் அவ் இராமன் நிகர் என்னு மாறு இவனை அஞ்சி நின்று எதிர் அடர்க்கவே.]

**விளக்கம்:**—கை விராய சிலையோடு முன் மெய் வலி கவர்ந்து தளர்வு கண்ட போர் (ஆற்றல் மிக்க) அந்த (தசரத) ராமன் நிகர் என்னுமாறு, இவனை எதிர் நின்று அடர்க்கவே அஞ்சி..., என்று 3, 4 அடிகளை அன்வயிக்க. இது அடுத்த செய்யு ளோடு சேர்ந்து ஓடி ஊர் புகுந்தனன், என்று முடியும். கை விராய- கையில் பொருந்திய. நிகர் என்னுமாறு - நிகராவான் என்று சொல்லும்படி, இவனை - வீடுமனை.

பரசுராமனது வலி கவர்ந்தவன் தசரத ராமன், என்பது இராமாயணம்.

**143.** ஓடி மீளமழு மேவு பாணிதன
தூர்பு குந்தன னு வந்துபல்
கோடி பேரரசர் துதியெ டுக்கநதி
குமர னுந்தனகர் குறுகினான்
நாடி மாலையிட வந்த காசிபதி
நல்கு மொல்குமிடை நவ்வியும்
வாடி வாடியினி யமையு மென்றுதவ
வனம டைந்தனண் மடங்கியே.

[ஓடி, மீள மழு மேவு பாணி தனது ஊர் புகுந்தனன், உவந்து பல்கோடி பேர் அரசர் துதி எடுக்க நதி குமரனும் தன் நகர் குறுகினான்; நாடி மாலை இட வந்த காசிபதி நல்கும் ஒல்கும் இடை நவ்வியும், வாடி வாடி இனி அமையும் என்று தவ வனம் அடைந்தனள் மடங்கியே.]

**விளக்கம்:**—ஒல்கும் - தளர்ந்து மெலியும். நவ்வி - மானை யொத்த அம்பை. மடங்கி - மணக்கும் முயற்சியினின்று மடங்கி, அதாவது மணக்கும் முயற்சியை விட்டு விட்டு. அமையும் என்று - (இனிமேல்) தவம் செய்தலே தனக்குப் பொருதும் என்றுந்

எண்ணி, 'மழு மேவுபாணி'—என்பது அன்மொழித் தொகை யாய்ப் பரசுராமனைக் குறிக்கும்.

144. வெம்பை யாடரவ மாய வென்றிடுவி
கங்க ராசனென வீடுமன்
தும்பையா டமரின் மாய வெல்ல வல
சூர னாகுவனி யானெனா
வம்பை மோதுமுலை வம்பை வீசுகுழல்
வம்பை மன்னுமெழில் வரிகொள்கூர்
அம்பை மானும்வி ழியம்பை யென்பவளு
மரிய மாதவமி யற்றினாள்.

[வெம்பை ஆடு அரவம் மாய வென்றிடு விகங்கராசன் என, வீடுமன் தும்பை ஆடு அமரின் மாய, வெல்ல வல சூரன் ஆகுவன் யான் எனா, வம்பை மோது முலை, வம்பை வீசு குழல், வம்பை மன்னும் எழில், வரி கொள் கூர் அம்பை மானும் விழி அம்பை என்பவளும் அரிய மாதவம் இயற்றினாள்.]

**விளக்கம்:—** பை - படம். விகங்கராசன்-கருடன். தும்பை-பொரச் செல்வோர் அணியும் தும்பை மாலை. 'வம்பை என்னும் சொல், **கச்சு, வாசனை, புதுமை** என்னும் பொருள்களில் வந்துள்ளது. எனவே இது **சொற்பின் வருநிலை அணி.** வரி கொள் கூர் அம்பை மானும் விழி அம்பை-செவ்வரி படர்ந்த கூரிய சரத்தைப் போன்ற விழிகளை உடைய அம்பை. மானும்-ஒத்த.

தன்னை மணத்தின் ஏற்க மறுத்த பீஷ்மனை வெல்லும் வல்லமையுடைய சூரனாக வேண்டி, அம்பை அரிய தவம் முயன் றாள். என்ற கருத்தது செய்யுள்.

அரவம் பீஷ்மனுக்கும், விகங்கராசன், அம்பைக்கும் உவமை.

145. தாளி ரண்டினிலொர் தாண்ம டக்கியொரு
தாளில் வைத்தமை சமைத்தபொன்
தோளி ரண்டினையு மீதெ டுத்துநனி
தொழிதி யக்கிதுணை யடியிலே
வாளி ரண்டனைய விழிம லர்த்திநிறை
வாவி நீரினிடை வானுளோர்
நாளி ரண்டதனொ டையி ரண்டுமொரு
நாளெ னும்படிந டக்கவே,

[தாள் இரண்டினில் ஓர் தாள் மடக்கி ஒரு தாளில் வைத்து அமை சமைத்த பொன், தோள் இரண்டினையும் மீது எடுத்து நனி தொழுது இயக்கி துணை அடியிலே வாள் இரண்டு அனைய விழிமலர்த்தி, நிறை வாவி நீரினிடை, வான் உளோர் நாள் இரண்டு அதனோடு ஐ இரண்டும் ஒரு நாள் எனும்படி நடக்கவே.]

**விளக்கம்:**—அம்பை செய்த செயற்கரிய தவத்தைக் கூறும் இது. நீரில் நின்று கொண்டு, ஒரு காலின் மேல் ஒரு காலை வைத்து, கைகளைத் தூக்கிக் குவித்துக் கொண்டு, பாதங்களை நோக்கிய வண்ணம், பன்னிரண்டு வருஷங்கள் ஒரு நாள் என்று சொல்லும்படி நடக்க, அம்பை கடுந்தவம் முயன்றாள், என்ற பொருளது.

அமை சமைத்த பொன் தோள்-மூங்கிலைப் போன்ற அமைப்புடைய அழகிய தோள். 'தோள்', என்பது கையைக் குறிக்கும். இயக்கி - தர்ம தேவதை, யக்ஷமாது. இயக்கி துணை அடி-யக்ஷ ஜாதிப் பெண்ணின் பாதங்கள் போன்ற இணையான அடிகள். விழிமலர்த்தி - கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு. நாள் இரண்டு அதனோடு ஐ இரண்டும் - பன்னிரண்டு வருஷங்களும். நடக்க - கழிய. வானுளோர் நாள், நமக்கு ஒரு வருஷம். பன்னிரண்டு வானுளோர் நாள், ஒரு நாளாக, அம்பை தவம் செய்தாள், என்றபடி.

'இயக்கி' என்பதற்கு, தர்மதேவதை, காளி என்றும் பொருள் கூறுவர். 'நடக்கவே,' என்பது அடுத்த செய்யுளில், 'தவம் முயன்ற பின்' என்பதோடு தொடரும்.

146. முயலி லாமதிமு கத்தி னாளொருவர்
முயல ருந்தவமு யன்றபின்
புயலி லாதமின லொத்த மெய்யிலொளி
புரியி யக்கிதன தருளினால்
மயில னாடனது வடிவ கற்றியிகல்
யாக சேனனது வயினிடைச்
செயலி லாறுமுக னிகரெ னத்தகு
சிகண்டி யாயினள் சிறக்கவே.

[முயல் இலா மதி முகத்தினாள், ஒருவர் முயல் அரும் தவம் முயன்றபின், புயல் இலாத மினல் ஒத்த மெய்யில் ஒளி புரிஇயக்கி தனது அருளினால் மயில் அனாள் தனது வடிவு அகற்றி இகல் யாக சேனனது வயினிடை, செயலில் ஆறுமுகன் நிகர் என தகு சிகண்டி ஆயினள் சிறக்கவே.]

**விளக்கம்:**—முயல் இலாத மதி முகத்தினாள் - அம்பை, (முயல் - களங்கம்). புயல் இலாத...இயக்கி-மேகத்தில் இல்லாத மின்னலைப் போன்ற உடலில் ஒளிவீசும் தர்மதேவதை. இகல்-வலிமை. யாகசேனன் - துருபதராஜன். 'வயினிடை,' இடப் பொருளது.

செய்தவப் பயனாய், அம்பை பீஷ்மனைக் கொல்ல வடிவம் நீங்கி முருகக் கடவுளை நிகர்த்த ஆற்றலோடு,சிகண்டிப் பெயரில் துருபதனிடம் தோன்றினாள், என்றபடி. முயல் இலா மதி, புயல் இலாத மினல்,—இல்பொருள் உவமை.

### விசித்திர வீரியன் மறைவு

147. மணிமு டிக்குரிய நிருப னுங்கடிகொண்
மாதர் தங்களைம கிழ்ச்சியால்
அணிபெ றத்தழுவி யின்ப வேலையின
ழுந்தி நாள்பலக ழிந்தபின்
பிணிக ளுக்கரசெ னும்பெ ரும்பிணிபி
ணித்து வாழ் வினிந ணித்தெனப்
பணிமு டிப்புவியி ரங்க வைகியொரு
பற்றி லாதநெறி பற்றினான்.

[மணி முடிக்கு உரிய நிருபனும் கடிகொள் மாதர் தங்களை மகிழ்ச்சியால் அணிபெற தழுவி இன்ப வேலையின் அழுந்தி நாள் பல கழிந்தபின், பிணிகளுக்கு அரசு எனும் பெரும் பிணி பிணித்து வாழ்வு இனி நணித்து என, பணிமுடி புவி இரங்க வைகி ஒரு பற்று இலாத நெறி பற்றினான்.]

**விளக்கம்:**—மணிமுடிக்கு உரிய நிருபன் - விசித்ர வீரியன். கடிகொள் மாதர் - மணத்தில் கொண்ட மனைவியர். பிணிகளுக்கு அரசு எனும் பெரும் பிணி - போக மிகுதியினால் உண்டாகும் ராஜயக்ஷ்மா என்ற க்ஷய நோய். மிகக் கொடிய

நோயாதல் பற்றி இது, பிணிகளுக்கு அரசு எனப்பட்டது. வாழ்வு இனி நணித்து என- வாழ்வின் முடியுங்காலம் இனி சமீபித்து விட்டது என்று எண்ணி. பற்று இலாத நெறி - பற்று நீக்கி அடையப்படும் இடமான வானுலகம்.

போகத்தில் ஆழ்ந்ததால் உண்டான ராஜயக்ஷமா, என்ற க்ஷய நோயால் இறந்தான்,—என்க.

குருகுலச் சருக்கம் முற்றும்.

## 2. சம்பவச் சருக்கம்

கதாநாயகர்களான தருமன் துரியோதனனாதியரின் பிறப்பையும், வளர்ச்சியையும் பற்றிக் கூறும் சருக்கம் இது, சம்பவம் (ஸம்பவம்) என்ற சொல் தோற்றம், பிறத்தல் என்ற பொருளது.

### கடவுள் வாழ்த்து

அறுசீர் ஆசிரிய விருத்தம்

1. அரிய கங்குலி னன்னைதன் வடிவுகொண்
டலகையா கியநங்கை
பரிவு பொங்கவந் தெடுத்தணைத்
துவந்துளம் பரிந்துடன் பாராட்ட
உருகு மாமுலைப் பாலுட
னவளுயி ருண்டழு முருகார்மெய்
கரிய கோவலன் செய்யதாள்
மலர்களென் கருத்தைவிட் டகலாவே.

[அரிய கங்குலின் அன்னை தன் வடிவு கொண்டு அலகை ஆகிய நங்கை பரிவு பொங்க வந்து எடுத்து அணைத்து உவந்து உளம் பரிந்து உடன் பாராட்ட, உருகும் மாமுலை பாலுடன் அவள் உயிர் உண்டு அழும் முருகு ஆர் மெய் கரிய கோவலன் செய்ய தாள் மலர்கள் என் கருத்தை விட்டு அகலாவே.]

**விளக்கம்:** — செய்யுள் சுலபமானதே. அரிய கங்குல் - இருளின் மிகுதியை உடைய இராப்பொழுது. அலகை - பேய். பரிவு - அன்பு, உளம் உவந்தது, காரியம் கை கூடுகையை

எண்ணியோ அல்லது, கிருஷ்ண சம்பந்தத்தால் எழுந்ததாகவோ இருக்கலாம், பரிந்து - இரங்கி. இக் குழந்தையைக் கொல்ல வேண்டியிருக்கின்றதே, என்ற எண்ணத்தால் இரங்கினவள் ஆகலாம். உடன்பாராட்ட -அந்த இரக்கத்தோடு குழந்தையைக் கொஞ்சா நிற்க, (பாராட்டல் - கொண்டாடல், கொஞ்சல்) உருகும் - பெருகும். முருகு - இளமை, அழகு. கோவலன் - ஆயர் செல்வனான கிருஷ்ணன்.

கிருஷ்ணனது திருவடித் தாமரைகளை என்றும் சிந்தித்த வண்ணம் இருப்பேன் என்றபடி. பால் உண்ணும் வியாஜத்தினால் பூதனைப் பெயரளான அலகையின் உயிரைக் கிருஷ்ணன் குடித்தான், என்க,

### வருந்திய வீடுமனுக்குத் தாய் கூறியது

2. இறந்த மைந்தனுக் குரியதென்
புலத்தவர் யாவருங் களிகூரச்
சிறந்த நான்மறை விதியினா
லுலகியல் செய்தபின் செழுந்திங்கள்
மறைந்த யாமினி நிகரெனக்
குருகுல மன்மயக் குறுமெல்லை
அறந்த வாவகை துறந்துவா
ழரசனுக் கன்னைமற் றிதுசொன்னாள்.

[இறந்த மைந்தனுக்கு உரிய தென் புலத்தவர் யாவரும் களி கூர, சிறந்த நால்மறை விதியினால் உலகு இயல் செய்தபின், செழும் திங்கள் மறைந்த யாமினி நிகர் என குருகுலம் மன் மயக்கு உறும் எல்லை, அறம் தவாவகை துறந்து வாழ் அரசனுக்கு அன்னை மற்று இது சொன்னாள்.]

**விளக்கம் :—**'உரிய' என்பதோடு 'உலகியல்' என்பதைக் கூட்டுக. உலகியல் - ஈமச் சடங்குகள். யாமினி - இரவு. மன் - வீடுமன். மயக்கு உறும் எல்லை - சோக மயக்கத்தை அடைந் திருந்தபோது. அறம் தவா வகை - வாய்மை விரதம் கடவாமை யாகிய தர்மம் தவறாதவாறு, துறந்து வாழ் அரசன் - மண்ணை யும் பெண்ணையும் துறந்து வாழ்ந்து வந்த வீடுமன்.

இறந்துபட்ட தம்பிக்காக வருந்தி மயங்கிய பீஷ்மனுக்கு, மதி மறைந்ததால் இருண்டு விளக்கமற்று இருக்கும் **யாமினி** (இரவு) உவமையாயிற்று.

3. மைந்த கேட்டிநின் றுணைவன்வா
னடைந்தபின் மதிமுத லெனத்தக்க
இந்த மாமர பரும்பனிப் பகைச்சிரத்
தெழிலியொத் ததுமன்னோ
முந்தை நான்மறை முதலிய நூல்களின்
முறைமை நீ யுணர்கிற்றி
எந்த நீர்மையி னுய்வதென் றறிகிலே
னிடரினுக் கிருப்பானேன்.

[மைந்த, கேட்டி, நின் துணைவன் வான் அடைந்தபின், மதி முதல் என தக்க இந்த மா மரபு அரும் பனி பகை சிரத்து எழிலி ஒத்ததுமன்னோ; முந்தை நால் மறை முதலிய நூல்களின் முறைமை நீ உணர்கிற்றி : எந்த நீர்மையின் உய்வது? என்று அறிகிலேன், இடரினுக்கு இருப்பு ஆனேன்.]

**விளக்கம்** :—மதிமுதல் என தக்க - சந்திரனே குலத்தின் முதல்வன் என்று கூறும் தகுதியைப் பெற்ற. அரும் பனிப்பகை - சூரியன், எழிலி - மேகம். எழிலி சிரத்து அரும் பனிப்பகை - மேகத்திற்கு மேலே இருக்கும், (அதாவது மேகத்தால் மறைக்கப் பெற்ற) சூரியன். உணர்கிற்றி - உணரவல்லாய். எந்த நீர்மையின் உய்வது - (இக்குலம்) எந்த முறையால் அழியாது நிலைத்திருப்பது? இடரினுக்கு இருப்பு - துன்பத்தின் இருப்பிடம்.

'மேகத்தினால் மறைக்கப்பட்ட சூரியன்போல், உன்தம்பி இறந்தமையால், இச் சந்திரகுலம் ஒளி மழுங்கிக் கிடக்கின்றது,' என்பது முதல் இரண்டடிகளின் பொருள், மன்னோ : அசை; இரக்கப் பொருளதுமாம்.

அரும்பனி அச்சிரத்து, என்றும் பாடம் உளது. அச்சிரம் - முன்பனிக்காலம்.

4. ஈண்டு தேவர நீதியிற் கொழுந்திய
ரெழின்மகப் பெறநின்னால்
வேண்டு மாலிது தாயர்சொற் புரிதலின்
விரதமுங் கெடாதென்ன

மூண்டு வானுரு மெறிந்தபே ரரவென
முரிந்திரு செவிபொத்தி
மீண்டு மாநதி வயின்மிசைப் புரியினென்
விரதமுந் தபுமென்றான்.

[ ஈண்டு தேவர நீதியின் கொழுந்தியர் எழில் மக பெற நின்னால் வேண்டும் (ஆல்); இது தாயர்சொல் புரிதலின் விரதமும் கெடாது என்ன, மூண்டு வான் உருமு எறிந்த பேர் அரவு என முரிந்து, இரு செவி பொத்தி, மீண்டு மாநதி வயின்மிசை புரியின் என் விரதமும் தபும் என்றான். ]

**விளக்கம்** :—ஈண்டு - (எனது இடர் நீங்க) இப்பொழுது. தேவர நீதி - தேவரனால் சந்ததி விருத்தி செய்து கொள்ளும் முறை. தேவரன் - கணவனோடு பிறந்தவன். வான் உருமு - இடி. (வான் உருமு மூண்டு) எறிந்த - தாக்கிய. முரிந்து - மனம் உடைந்து. மீண்டு மாநதி வயின்மிசை புரியின் என் விரதமும் தபும் - மறுபடியும் உயர்ந்த நதியாகிய கங்கையின் வயிற்றில் பிறத்தலைச் செய்வதானால் அப்பொழுது எனது பிரும்மசரிய விரதமும் கெடல் ஆகும். ''அதாவது, விரதம் கெட நீ விரும்பியதைச் செய்தால், பெண்ணின்பம் இல்லாது வாழுமாறு விதித்த வசிஷ்ட சாபம் நிறைவேற, நான் மீண்டும் பூமியில் பிறக்க வேண்டியவனாவேன்,'' என்று வீடுமன் தனது உடன்பாடின்மை அன்னைக்குத் தெரிவித்தபடி.

தேவரநீதி : கணவனை இழந்த மகப்பேறில்லாத கைம் பெண் சந்ததி விருத்திக்காகத் தேவரனைக்கூடி மகவைப் பெற்றுக் கொள்ளலாம், என்ற விதி.

5. மழுவெ னும்படை யிராமனான்
மனுகுல மடிந்துழி யவர்தத்தம்
பழுதின் மங்கையர் முனிவர
ரருளினாற் பயந்தனர் மகவென்பர்
எழுது நன்னெறி முறைமையின்
விளைப்பதே யியற்கையென் றிருகையால்
தொழுது சொன்னபின் மனந்தெளிந்
தன்னையுந் தோன்றலுக் குரைசெய்வாள்.

[மழு எனும் படை இராமனால் மனு குலம் மடிந்துழி, அவர் தத்தம் பழுதில் மங்கையர் முனிவரர் அருளினால் பயந்தனர் மகவு என்பர். எழுது நல்நெறி முறைமையின் விளைப்பதே இயற்கை என்று இரு கையால் தொழுது சொன்னபின், மனம் தெளிந்து அன்னையும் தோன்றலுக்கு உரை செய்வாள். ]

**விளக்கம் :**—எழுது நல்நெறி முறைமையின் விளைப்பதே இயற்கை - ஸ்மிருதிகளில் கூறப்பட்டுள்ள நல்ல வழியின் முறைமையினால் சந்ததியை விளைத்துக் கொள்வதே, இயற்கையின் பாற்பட்ட செயலாகும். தோன்றலுக்கு - வீடுமனுக்கு.

தன் தந்தையைக் கார்த்த விரியன் கொன்ற பிழைக்காக, அரச குலத்தை வேரோடு அழித்த பரசுராமனால் மனுவம்சம் க்ஷீணமடைந்த நிலையில், அரச மகளிர் முனிவர்களைச் சேர்ந்து குலவிருத்தி செய்து கொண்டதுபோல், சந்ததி விருத்தி செய்வதே முறை, என்று வீடுமன் கூற, அன்னையும் மனத் தெளிவுகொண்டு தன் கருத்தைத் தெரிவிப்பதானாள், — என்ற பொருளது செய்யுள்.

காமத்தாலன்றிக் குலவிருத்தி காரணமாக முனிவரைக் கூடல் சாஸ்திர சம்மதமான காரியமாதலால், அவ்வாறு செய்த அரச மாதர் கற்பு நெறி கடவாத **பழுதில் மங்கையர்** ஆயினர்.

6. பரிதி தந்தமா நதிமருங்
கொருபகற் பராசரன் மகப்பேறு
கருதி வந்துகண் டென்னையு
மெனதுமெய் கமழ்புல வையுமாற்றிச்
சுருதி வாய்மையின் யோசனைப்
பரப்பெழு சுகந்தமு மெனக்கீந்து
வருதி நீயெனப் பனியினான்
மறைத்தொரு வண்டுறைக் குறைசேர்ந்தான்.

[பரிதி தந்த மாநதி மருங்கு ஒரு பகல் பராசரன் மகப்பேறு கருதி வந்து, கண்டு என்னையும் எனது மெய் கமழ் புலவையும் மாற்றி, சுருதி வாய்மையின் யோசனை பரப்பு எழு சுகந்தமும் எனக்கு ஈந்து, வருதி நீ என பனியினால் மறைத்து ஒரு வள் துறை குறை சேர்ந்தான்.]

**விளக்கம் :**—பருதி தந்த மாநதி - யமுனை. பராசரன்... வந்து, என்னையும் கண்டு, சுருதி வாய்மையின் எனது மெய் கமழ் புலவை மாற்றி, யோசனைப் பரப்பு எழு சுகந்தமும் எனக்கு ஈந்து...குறை சேர்ந்தான், — என்று அன்வயிக்க. சுருதி வாய்ந் தமையின் - வேதம் ஓதும் தனது தவறாத வாக்கினால் (புலவு நீக்கி, சுகந்தம் ஈந்தான்). பனியினால் மறைத்து - தங்களைப் பிறர் அறியாதபடி பனியினால் மறைக்கச் செய்து. வள் துறை குறை - வளம் மிக்க நீர்த்துறையிடத்ததான திட்டு .

''மீன் வயிற்றில் பிறந்ததால் மச்ச கந்தியா யிருந்த என்னை யோசன கந்தியாக்கி யமுனையின் நீர்த் துறையருகே ஒருதிட்டில் என்னைப் பராசர முனிவன் கூடினான்,'' என்றாள் என்க. அத் திட்டு அதன் கரு நிறம் பற்றிக் கிருஷ்ணத்வீபம், எனப்பட்டது. அங்கே தோன்றிய காரணத்தால் வியாசரைக் **கிருஷ்ணத்வை பாயனர்** என்றும் அழைப்பர். குறை - திட்டு.

7. முரணி றைந்தமெய்க் கேள்வியோ
னருளினான் முஞ்சியும் புரிநூலும்
இரணி யஞ்செழுங் கொழுந்துவிட்
டனவென விலங்குவே ணியுந்தானும்
தரணி யெங்கணும் வியாதனென்
றுரைகெழு தபோதன முனியப்போ(து)
அரணி யின்புறத் தனலென
வென்வயி னவதரித் தனனம்மா.

[முரண் நிறைந்த மெய் கேள்வியோன் அருளினால் முஞ்சி யும் புரிநூலும், இரணியம் செழும் கொழுந்துவிட்டன என இலங்கு வேணியும் தானும், தரணி எங்கணும் வியாதன் என்று உரைகெழு தபோதன முனி அப்போது அரணியின் புறத்து அனல் என, என் வயின் அவதரித்தனன், அம்மா.]

**விளக்கம் :**—முரண் நிறைந்த மெய் கேள்வியோன் - பராசர முனிவன். முரண் - வலிமை. முஞ்சி - முஞ்சிப் புல்லாலான அரை நாண். புரிநூல் - முப்புரிநூல். இரணியம் செழுங் கொழுந்து விட்டன என - பொன் (சுவர்ணம்) செழுமையான கொழுந்துவிட்டு எரிவதுபோல், இலங்குவேணி - விளங்கும் ஜடைமுடி. வியாதன் என்று உரை கெழு தபோதன முனி -

வியாசன் என்று அழைக்கப்படும் கீர்த்தியால் சிறந்த தவத்தையே செல்வமாகக் கொண்ட முனிவன். அரணியின் புறத்து அனல் என என்வயின் அவதரித்தான் - அரணிக் கட்டையிலிருந்து தோன்றும் அனல்போல், என்னிடம் தோன்றினான். அம்மா : வியப்பிடைச் சொல்.

அரணியில் தோன்றும் அக்கினிபோல், புல்லிய தன் வயிற்றில், பிரும்மசாரிக் கோலத்தோடு மகா முனிவன் தோன்றியதால் எழுந்த அவளது வியப்பை, அம்மா என்ற இடைச்சொல் குறிக்கும்.

8. சென்னி யாலெனை வணங்கியா
தொருபகற் சிந்திநீ சிந்திக்கும்
முன்னி யானரு குறுவலென்
றுரைசெய முனிமகன் முனிமீளக்
கன்னி யாகென விதித்துடன்
கரந்தனன் கையறு கனிட்டன்றன்
பன்னி யானவ ரிடத்தினி
லவன்வரிற் பலித்திடு நினைவன்றே.

[சென்னியால் எனை வணங்கி யாது ஒரு பகல் சிந்தி, நீ சிந்திக்கும் முன் யான் அருகு உறுவல், என்று உரை செய முனி மகன், முனி மீள கன்னி ஆகுக என விதித்து, உடன் கரந்தனன் : கை அறு கனிட்டன் தன்பன்னி ஆனவர் இடத்தினில் அவன் வரின் பலித்திடும் நினைவு அன்றே.]

**விளக்கம் :**—முனிமகன் சென்னியால் எனை வணங்கி, 'யாது ஒரு பகல் சிந்தி; நீ சிந்திக்கும் முன் யான் அருகு உறுவல்; என்று உரை செய, (பராசர)முனி மீளக் கன்னி ஆகென விதித்து, (அந்த மகன்) உடன் கரந்தனன். கையறு கனிட்டன் தன் பன்னியானவரிடத்தினில் அவன் வரின் நினைவு அன்றே பலித்திடும்,— என்பது அன்வயம்.

சிந்திக்கும்முன் - சிந்திக்கும் முன்னே. கரந்தனன் - மறைந்தனன். கையறு - (கணவனை இழந்த சோகத்தால்) செயலற்ற. கனிட்டன் - (கனிஷ்டன்) இளையவனாகிய விசித்ரவீரியன். அன்றே - அப்பொழுதே. முன் - யாது - முன்னியாது, என்று புணரும்.

### வியாசன் வரல்

9. எனக்கு மைந்தகே ணினைவிதுன்
றுணைவனென் னேவலு மறானிவ்வா(று)
உனக்கு நெஞ்சுற வருங்கொலோ
வறிகிலே னுண்மைநீ யுரையென்ன
மனக்கி சைந்ததென் றவன்வியந்
தேகலும் வழுவற மனஞ்செய்யக்
கனக்க ருங்குழன் மகிழ்வுற
முதற்பெறு காதன்மைந் தனும்வந்தான்.

[எனக்கு மைந்த கேள், நினைவு இது, உன் துணைவன் என் ஏவலும் மறான்; இவாறு உனக்கு நெஞ்சு உறவருங்கொலோ? அறிகிலேன், உண்மை நீ உரை என்ன, மனக்கு இசைந்தது என்று அவன் வியந்து ஏகலும், வழு அற மனம் செய்ய, கனம் கருங் குழல் மகிழ்வு உற முதல் பெறு காதல் மைந்தனும் வந்தான்.]

**விளக்கம் :**—எனக்கு நினைவு இது. உன் துணைவன் - வியாச முனிவன். உனக்கு நெஞ்சுற வருங்கொலோ - உன் மனத் திற்கு இது ஏற்றதாகுமோ, அன்றோ. மனக்கு - மனத்திற்கு. கனம் கருங்குழல் வழுவற மனம் செய்ய, (அவள்) மகிழ்வுற... மைந்தனும் வந்தான், — என்பது அன்வயம். கனம் (மேகம்) கருங்குழல்-யோசனகந்தி. மனம்செய்ய - நினைக்க. முதல் பெறு காதல் மைந்தன் - வியாசன்.

10. தொழுது நெற்றியின் வியர்வையா
லன்னைதன் றுணையடித் துகணீக்கி
விழுது டைத்தனி யாலென
விருந்ததொல் வியாதனை முகநோக்கிப்
பழுது பட்டதிக் குருகுலம்
மீளநின் பார்வையாற் கடன்ஞாலம்
முழுது முய்த்திடு மகவரு
ளெனப்பெரு முனியுமக் குறைநேர்ந்தான்.

[தொழுது நெற்றியின் வியர்வையால் அன்னை தன் துணை அடி துகள் நீக்கி, விழுது உடை தனி ஆல் என இருந்த தொல்

வியாதனை முகம் நோக்கி, 'பழுது பட்டது இ குருகுலம். மீள நின்பார்வையால் கடல் ஞாலம் முழுதும் உய்த்திடும் மகவு அருள்,' என, பெரு முனியும் அ குறை நேர்ந்தான்.]

**விளக்கம் :—** விழுது...வியாதனை முகம் நோக்கி - விழுது களை உடைய ஒப்பற்ற ஆலமரம்போல் தொங்கும் சடைமுடி யோடு இருந்த பழமையான வியாசனின் முகம் நோக்கி. உய்த் திடும் - பரிபாலனம் செய்யவல்ல. குறை நேர்ந்தான் - குறை தீரச் செய்ய சம்மதித்தான்.

'நெற்றியின் புழுதியால்' என்றோர் பாடம் உள்ளது. பூத்த கத்தில் அச்சேறியுள்ள 'விபூதியால்' என்ற பாடம் மதப்பற்று நிகழ்த்தி வைத்த செருகலேயாக வேண்டும். ஏனெனில், நூலா சிரியர் வைணவர்; புழுதியோ, அல்லது வியர்வையோதான் அவரது பாடமாயிருக்க வேண்டும்.

### திருதராட்டிரன் ஜனனம்

11. அழைத்த மாமக னப்பொழு
தவருழை யணுகுவ மெனப்போகத்
தழைத்த நெஞ்சின ளனந்தர
மிழந்தபொற் றாலிமா தரைத்தேற்றி
உழைத்த துன்பமு முன்னுளோர்
பலருல கியற்கையு முறக்காட்டி
இழைத்த பாவையி னிருந்தவர்க்
கந்நினை விசையுமா றிசைவித்தாள்.

[அழைத்த மா மகன் அப்பொழுது, அவருழை அணுகுவம் என போக, தழைத்த நெஞ்சினள் அனந்தரம் இழந்த பொன் தாலி மாதரை தேற்றி, உழைத்த துன்பமும் முன் உளோர் பலர் உலகு இயற்கையும் உற காட்டி, இழைத்த பாவையின் இருந்த வர்க்கு அ நினைவு இசையும் ஆறு இசைவித்தாள்.]

**விளக்கம் :—** அவருழை அணுகுவம் - கருத்தரித்தற்கு உரிய ருது காலத்தில் அவரைச் சேருவோம்,—(என்று சொல்லி வியாசன் அவ்விடம் விட்டகன்றான்.) தழைத்த நெஞ்சினள் - மகிழ்ச்சியால் செழித்த நெஞ்சையுடைய யோசனகந்தி. அனந்தரம் - பிறகு. இழந்த பொன்தாலி மாதர் - அம்பிகையும்

அம்பாலிகையும், உழைத்த துன்பம் - மகனின் மறைவினால் நேரிட்டுள்ள துன்பம். முன் உளோர் பலர் உலகு இயற்கை - முன்னுளோர் பலர் கையாண்ட உலகினர் இயற்கை. உறக்காட்டி - மனத்தில் பதியும்படி எடுத்துக்காட்டி. இழைத்த பாவையின் இருந்தவர்க்கு - செய்யப்பட்ட பதுமைபோல் சலனமற்று இருந்த அக் கைம்பெண்களுக்கு. அந்நினைவு - (தான் நினைத்த) அந்த எண்ணம். இசையுமாறு இசைவித்தாள் - சம்மதிக்கும்படி செய்தாள்.

12. கனையு நீடிரு ளணைமிசை
யிருவருங் கணவனை மறவாது
நினையு நெஞ்சினர் பயின்றுழிப்
புன்மண நிறைந்தொளி குறைந்தொல்கப்
புனையு மெய்யொடும் பொழுதொடும்
புரிதவன் போதலு மிகவஞ்சி
அனைய காலையி லம்பிகை
மலர்ந்தில ளம்பக மொருக்காலும்.

[கனையும் நீடு இருள் அணைமிசை இருவரும் கணவனை மறவாது நினையும் நெஞ்சினர் பயின்றுழி, புல்மணம் நிறைந்து ஒளி குறைந்து ஒல்க புனையும் மெய்யொடும், பொழுதொடும் புரிதவன் போதலும், மிக அஞ்சி, அனைய காலையில் அம்பிகை மலர்ந்திலள் அம்பகம் ஒருக்காலும்.]

**விளக்கம் :—**கனையும் நீடு இருள் - அடர்ந்த மிகுதியான இருளில். பயின்றுழி - தங்கி வாழ்கையில். 'புல்மணம் நிறைந்து ஒளி குறைந்து ஒல்கப் புனையு மேனியொடும்,' என்பது பள்ளியறை சென்ற வியாச முனிவனை வர்ணித்தபடியாகும். 'புல்மணம் நிறைந்து', என்பது கலவைச் சந்தனத்தின் நல்மணம் இல்லாதபடி, என்ற கருத்தது. ஒளி குறைந்தது - எழிலின் விளக்கம் இல்லாமல், அதாவது மீசை தாடியோடு. ஒல்கப் புனையும் - சுருங்கிய (மேனியோடு.) பொழுதொடும் - கலவிக் குரிய காலத்தில். புரிதவன் - வியாசன். (வியாசன் பள்ளி யறைக்குப் போதலும்) அனைய காலையில் - அந்தச் சமயத்தில். (மிக அஞ்சி) அம்பிகை அம்பகம் ஒருக்காலும் மலர்ந்திலள் - அம்பிகை கண்களை ஒரு சிறிதும் திறந்திலள். அம்பகம் - கண்.

13. பராச ரன்தரு முனிநினை
வொடுகருப் பதித்துமீ ளவுஞ்சென்று
நிராசை நெஞ்சின னவசரத்
தவளிடை நிகழ்ந்தமெய்க் குறிதன்னால்
கராச லம்பதி னாயிரம்
பெறுவலிக் காயமொன் றினிற்பொற்றோள்
இராச குஞ்சரம் பிறந்திடும்
விழிப்புல னில்லைமற் றதற்கென்றான்.

[பராசரன் தரு முனி நினைவொடு கரு பதித்து, மீளவும் சென்று, நிராசை நெஞ்சினன் அவசரத்து அவளிடை நிகழ்ந்த மெய் குறி தன்னால், கராசலம் பதினாயிரம் பெறுவலி காயம் ஒன்றினில் பொன் தோள் இராச குஞ்சரம் பிறந்திடும், விழிபுலன் இல்லை மற்று அதற்கு என்றான்.]

**விளக்கம் :**—பராசரன் தரு முனி, நிராசை நெஞ்சினன் நினைவொடு கருப்பதித்து, மீளவும் (தாயினிடம்) சென்று, அவசரத்து...குறி தன்னால் காயம் ஒன்றினில் கராசலம் பதினாயிரம் பெறுவலியோடு பொன் தோள் இராச குஞ்சரம் பிறந்திடும்; மற்று, அதற்கு விழிப்புலன் இல்லை, என்றான்,—என்பது அன்வயம்.

நிராசை நெஞ்சினன் - ஆசையற்ற நெஞ்சினன், அதாவது காம இச்சையின்றித் தாய் சொல்லுக்கு அடங்கி அம்பிகையைச் சேர்ந்தான், என்ற குறிப்பினது. அவசரத்து - அவளை நெருங்கியபோது. கராசலம் - யானை. காயம் - தேகம். இராஜ குஞ்சரம் - அரசசிரேஷ்டன். 'அவஸரம்' என்பது, **வேளை, காலம்** என்ற பொருளுடைய வடசொல். விழிப்புலன் இல்லாத மகவு பிறக்கும் என்றான், என்க.

14. மீள வுந்தலைப் புதல்வனை
நோக்கியே மிகமகிழ் வுறாவன்னை
தூள வண்சடைத் தோன்றலம்
பாலிகை சுதனொரு வனைநல்க
நாள பங்கயப் பதியென
மதியென நலந்திகழ் கவிகைக்கீழ்
ஆள வம்புவி யவனென
நினைந்தினி யளிக்கவென் றருள்செய்தாள்.

[மீளவும் தலை புதல்வனை நோக்கியே, மிக மகிழ் உறா அன்னை, தூள வள் சடை தோன்றல், அம்பாலிகை சுதன் ஒருவனை நல்க, நாளம் பங்கயம் பதி என, மதி என, நலம் திகழ் கவிகை கீழ் ஆள அம்புவி அவன் என நினைந்து, இனி அளிக்க என்று அருள் செய்தாள்.]

**விளக்கம்:**—மகிழ்வு மிக உறா அன்னை, - பிறக்கும் மைந்தன் கண்ணிலாதவனாவான், என்றமையால், அன்னை அதிக மகிழ்ச்சி அடையாதவளானாள். தூளவண் சடைத் தோன்றல் - புழுதி படிந்த சடைமுடியுடைய வியாசன், அதாவது, யாக்கை பிரக்ஞையிலாது இறை நினைவினில் வாழும், என்ற கருத்தது. சுதன் (மகன்) ஒருவனை அம்பாலிகை நல்கவும் (பெறவும்). நாள பங்கயம் பதி - சூரியன். (நாளபங்கயம் - தண்டையுடைய தாமரை.) (சூரியனைப் போலவும், சந்திரனைப் போலவும்) அவன், நலம் திகழ்குடைக்கீழ் அம்புவி ஆளவும், என நினைத்து, இனி அளிக்க... என்பது அன்வயம். நலம் திகழ் கவிகை - அழகு விளங்குகின்ற வெண்கொற்றக்குடை. அருள் செய்தாள் - (மகனாகிய வியாசனுக்கு) அன்னை கூறியருளினாள். அம்புவி - பூமி.

## பாண்டு ஜனனம்

15. கிளைத்தி டுந்துகிர்க் கொடிநிகர் சடையவன்
 கேட்டுநுண் ணிடையேபோல்
இளைத்தி டுங்கவின் மெய்யுடை யவண்மனை
 யெய்தலு மிவனைக்கண் (டு)
உளைத்தி டுங்கருத் துடன்வெரீஇ வருபய
 னொன்றையு நினையாது
விளைத்தி டுங்கரு விளையுமுன் மடவரன்
 மெய்யெலாம் விளர்த்திட்டாள்.

[கிளைத்திடும் துகிர் கொடிநிகர் சடையவன், (அன்னை சொல்) கேட்டு, நுண்இடையேபோல் இளைத்திடும் கவின் மெய்யுடையவள் மனை எய்தலும், இவனை கண்டு உளைத்திடும் கருத்துடன் வெரீஇ வருபயன் ஒன்றையும் நினையாது, விளைத்திடும் கரு விளையுமுன் மடவரல் மெய் எலாம் விளர்த்திட்டாள்].

**விளக்கம்:—**கிளைத்திடும்... சடையவன் - பல கிளைகளை விடும் பவளக் கொடியை ஒத்தசடைமுடியோடு கூடிய வியாசன். கவின் - அழகிய. உளைத்திடும் கருத்துடன் - வருந்தும் மனத்தோடு. வெரீஇ - (வியாசனைக் கண்டு) அஞ்சி. விளைத்திடும் கரு விளையுமுன் - உண்டாக்க இருக்கும் கருப்பம் பலிக்குமுன். மடவரல் - பெண் (அம்பாலிகை). மெய்யெலாம் விளர்த்திட்டாள் - தேகம் முழுதும் வெளுத்தவளானாள்.

16. அருந்த போநிதி யவளிடத்
 தினுங்கரு வருளியக் கணத்தேகி
இருந்த வாறுத னன்னையோ
 டினிதுரைத் திமையவ னெனச்சென்றான்
பெருந்த ராதலந் திறலினா
 லொருதனி பெறுமுறை யவன் பெற்ற
முருந்த வாணகை மருட்சியால்
 விளர்த்திடு முழுவது முடலென்றே.

[அரும் தபோநிதி அவளிடத்தினும் கரு அருளி, அ கணத்து ஏகி, இருந்தவாறு தன் அன்னையோடு இனிது உரைத்து, இமையவன் என சென்றான், பெரும் தராதலம் திறலினால் ஒரு தனி பெறும் முறையவன், பெற்ற முருந்த வாள் நகை மருட்சியால் விளர்த்திடும் முழுவதும் உடல் என்றே.]

**விளக்கம்—:**அருந் தபோநிதி.... ஏகி, பெருதராதலம்... முறையவன், பெற்ற... மருட்சியால் உடல் முழுவதும் விளர்த்திடும், என்றே, இருந்தவாறு... இமையவன் எனச் சென்றான், — என்பது அன்வயம்.

இருந்தவாறு - தான் சென்றபோது (அம்பாலிகை) இருந்த நிலையை. இமையவன் எனச் சென்றான் - தேவன்போல் மறைந்திட்டான். திறலினால் - ஆற்றலால். ஒரு தனி பெறும் முறையவன்-பிறர் துணை இல்லாது தானே பெற்று ஆளவல்ல முறையவனான குமாரன். முருந்தம் வாள் நகை - அம்பாலிகை, (முருந்தம் - மயில் இறகின் அடிப் பகுதி.) மருட்சியால் - மருட்சி காரணமாகத் தேகம் வெளுத்துப் போனதால்,—மைந்தனும் உடல் முழுவதும் வெளுத்தவனானான்.

17. வேத புங்கவ னகன்றுழி வலியுடை
விழியின்மைந் தனும்யாரும்
பாதபங்கயந் தொழத்தகுந் திறலுடைப்
பாண்டுவென் பவன்றானும்
பூத லம்பெருங் களிப்புறக் குருகுலம்
பொற்புறப் பொழுதுற்றுச்
சாத ராயின ரவ்விரு மகவையுஞ்
சத்திய வதிகண்டாள்.

[வேத புங்கவன் அகன்று வலியுடை விழியில் மைந்தனும் யாரும் பாதபங்கயம் தொழ தகும் திறலுடை பாண்டு என்பவன்தானும் பூதலம் பெரும் களிப்பு உற குருகுலம் பொற்பு உற பொழுது உற்று, சாதர் ஆயினர், அ இரு மகவையும் சத்யவதி கண்டாள்.]

**விளக்கம்** :—வேத புங்கவன் - வியாசன், (புங்கவன் புருஷ சிரேஷ்டன்). பொற்பு உற - அழகுற, சிறக்க. பொழுது உற்று- பிரசவகாலம் வரவே, சாதர் ஆயினர் - தோன்றினர் ஆயினர், பிறந்தனர். சத்தியவதி, —யோசனகந்தியின் பெயர்களில் ஒன்று. பாட்டியான சத்தியவதி குழந்தைகளைக் கண்டாள். —என்றபடி. சாதர் - (ஜாதர்) தோன்றியவர் (வடசொல்.)

### மீண்டும் வியாசன் வரல்

18. காண லும்பெரி துவகையற் றின்னமுங்
கருதுது மெனவெண்ண
சேண டைந்தமா முனிவரன் வருதலுஞ்
சிந்தனை யுறச்சொல்ல
நாண லந்திக ழம்பிகை யிடத்திவ
னண்ணலு மவளஞ்சிப்
பூண லம்பெறு தோழிமற் றொருத்தியைப்
பூவணை யணைவித்தாள்.

[காணலும் பெரிது உவகை அற்று இன்னமும் கருதுதும் என எண்ண, சேண் அடைந்த மாமுனிவரன் வருதலும், சிந்தனை உற சொல்ல, நாண் நலம் திகழ் அம்பிகை இடத்து இவன்

நண்ணலும் அவள் அஞ்சி, பூண் நலம் பெறு தோழி மற்று ஒருத்தியை பூ அணை அணைவித்தாள். ]

**விளக்கம் :**—கண்ணிலாமலும், வெளுத்த மேனியுடனும் பிறந்த குழந்தைகளைக் கண்டு உவகையிழந்த சத்தியவதி, பின்னும் தலைமுதல் மகனை அழைத்துத் தன் கருத்தைத் தெரி விக்க, அவனும் இசைந்து அம்பிகை மனை செல்ல, நாணிய அந்நங்கை, தன் பரிசாரகப் பெண்ணைப் படுக்கைக்கு அனுப்பி னாள், —என்பது பொருள். இன்னமும் கருதுதும் - இன்னமும் வியாசனை நினைப்போம்.

நாண் நலம் திகழ் அம்பிகை - நாணம் மிக்க அம்பிகை. பூண் நலம் பெறு தோழி மற்று ஒருத்தியை - அணிகலன்களால் அழகு உற்ற தன்னிலும் வேறான, ஒரு பணிப் பெண்ணை, (படுக்கை செல்லச் செய்தாள் . )

19. வந்த காலையின் மனங்கலந் தனங்கநூன்
மரபின்மெய் யுறத்தோய்ந்து
சந்த னாகருப் பரிமளத் தனதடந்
தயங்குமார் பினின்மூழ்க
இந்தி ராதிபர் போகமுற் றிசைதலும்
மின்பமுற் றியபின்னர்
அந்த ணாளனவ் விரவிடை மீளவந்
தன்னையோ டுரைசெய்வான்.

[ வந்த காலையில் மனம் கலந்து அனங்க நூல் மரபின் (அவளிடம்) மெய் உற தோய்ந்து, சந்தனம் அகரு பரிமளம் தன தடம் தயங்கு மார்பினில் மூழ்க, இந்திராதிபர் போகம் உற்று இசைதலும், இன்பம் முற்றிய பின்னர் அந்தணாளன் அ இரவிடை, மீளவந்து அன்னையோடு உரை செய்தான் . ]

**விளக்கம் :**—அனங்க நூல் - காம சாஸ்திரம். சந்தனம் அகரு பரிமளம் - சந்தனம் அகில் ஆகியவற்றின்வாசனை. மூழ்க- அழுந்தும்படி. இந்திராதிபர் போகம் - தேவேந்திர போகம், சிறந்த இன்பம். இசைதலும் - மனம் பொருந்தி போகித்திருத் தலும். இன்பம் முற்றிய பின்னர் - போகம் பூர்த்தியானபின். அந்தணாளன்: வியாசன்.

அம்பிகை அனுப்பிய பணிப்பெண், முனிவனை மகிழ்விக்க அவனும் காம வயத்தனாய் இன்பம் அனுபவித்தான், என்பதை முதல் மூன்று அடிகள் கூறும்.

### விதுரன் ஜனனம்

20. அம்பி கைக்கொடி தோழியை விடுத்தன
ளவள்புரி தவந்தன்னால்
உம்ப ரிற்பெறு வரத்தினாற் றருமன்வந்
துதித்திடும் பதம்பெற்றாள்
வெம்ப டைத்தொழில் விதுரனென் றவன்பெயர்
மேலினி மகவாசை
எம்பு ணர்ப்பினா னொழிகென வனநெறி
யேகினன் விடைகொண்டே.

[ அம்பிகை கொடி தோழியை விடுத்தனள்; அவள் புரிதவந் தன்னால், உம்பரின் பெறு வரத்தினால், தருமன் வந்து உதித் திடும் பதம் பெற்றாள், வெம் படை தொழில் விதுரன் என்று அவன் பெயர், இனிமேல் மகவு ஆசை எம் புணர்ப்பினால் ஒழிக என, வனம்நெறி ஏகினன் விடைகொண்டே. ]

**விளக்கம் :**—அம்பிகை அனுப்பிய தோழி செய்துள்ள தவத்தி னாலும், தேவர்களிடம் பெற்ற வரத்தினாலும், தர்ம தேவதையே மகனாகப் பிறக்கும் பதத்தைப் பெற்றாள்,— என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். எம் புணர்ப்பினால்- எனது சம்பந்தத்தால்.

தோழி தேவர்களிடம் வரம் பெற்றது பற்றிய வரலாறு தெரியவில்லை.

21. மருவ ருங்குழற் றாசிபெற் றெடுத்தவிம்
மைந்தனு முதற்பெற்ற
இருவ ருங்குரு குலப்பெருங் கிரியிசை
யிலங்குமுக் குவடென்னப்
பொருவ ருந்திறற் படைகளுங் களிறுதேர்
புரவியும் புவிவேந்தர்
வெருவ ரும்படி பலகலை விதங்களும்
வீடும னிடங்கற்றார்.

[மருவரும் குழல் தாசி பெற்று எடுத்த இ மைந்தனும், முதல் பெற்ற இருவரும் குருகுலம் பெரும் கிரிமிசை இறங்கும் முக் குவடு என்ன பொரு அரும் திறல் படைகளும் களிறு தேர் புரவியும், புவி வேந்தர் வெருவரும்படி பலகலை விதங்களும் வீடுமனிடம் கற்றார்.]

**விளக்கம்:** தோழி பெற்ற மைந்தனும், முன் பிறந்த இருவரும் குரு குலமாகிய மலை மேல் மூன்று சிகரங்கள் போல் தோன்றி படைக் கலங்களோடு, பலவிதக் கலைகளையும் புவிவேந்தர் அஞ்சும்படி வீடுமனிடம் கற்றனர்.— என்பதாம்.

**முதல் மைந்தன் முடிசூடல்**

22. ஆன திக்கிரு நாலும்வந் தடிதொழ
வம்பிகை மகன் தன்னை
வான தித்திரு மகனொரு தினத்தினின்
மங்கல முடிசூட்டிப்
பானி றத்திறற் பாண்டுவே சேனையின்
பதிமுழு மதிமிக்க
கானி றத்தொடை விதுரனே யமைச்சனிக்
காவலற் கெனவைத்தான்.

[ஆன திக்கு இருநாலும் வந்து அடி தொழ, அம்பிகை மகன் தன்னை வான் நதி திருமகன் தன்னை ஒரு தினந்தனில் மங்கல முடி சூட்டி, பால் நிறம் திறல் பாண்டுவே சேனையின் பதி, முழு மதி மிக்க கான் நிறம் தொடை விதுரனே அமைச்சன் இ காவலற்கு என வைத்தான்.]

**விளக்கம்:—** நல்ல நாளொன்றில், வீடுமன், அம்பிகை மகனான திருதராட்டிரனுக்கு முடி சூட்டி, அம்பாலிகை மகன் பாண்டுவைச் சேனாதிபதயாகவும், விதுரனை அமைச்சனாகவும் இருக்கச் செய்தான்,

வான் நதித் திருமகன் - வீடுமன். பால் நிறத்திறல் பாண்டு-பால் போன்ற நிறத்தையும் ஆற்றலையும் உடைய பாண்டு. முழுமதி மிக்க-நிரம்பிய அறிவாற்றலால் சிறந்த. கான் நிறத் தொடை விதுரன்- நறுமணத்தையும், அழகிய நிறத்தையும் உடைய மாலை சூடிய விதுரன்.

முடிசூட்டப் பெற்ற திருதராட்டிரனுக்குக் கண்ணில்லாமையின், சேனாதிபதியான பாண்டுவே அரசு செலுத்தினான், என்று முதல்நூல் கூறும்,

திருதராட்டிரன் மணத்தல்

23. நதிய ளித்தவ னேவலிற் றூதர்போய்
நயந்துடன் காந்தார
பதியளித்த மெய்க் கன்னியைத் தருகபூ
பதிக்கென மண நேர்ந்தான்
மதிய ளித்ததொல் குலத்தவன் விழியிலா
மகனெனத் தமர்சொல்ல
விதியளித்ததென் றுளமகிழ்ந் தனள்வட
மீனெனத் தகுங்கற்பாள்.

[நதி அளித்தவன் ஏவலின் தூதர் போய், நயத்துடன் காந்தாரபதி அருளிய மெய் கன்னியை தருக (எம்) பூபதிக்கு என மணம் நேர்ந்தான்; மதி அளித்த தொல் குலத்தவன் விழி இலா மகன் என தமர் சொல்ல, விதி அளித்தது என்று உளம் மகிழ்ந்தனள், வடமீன் என தகும் கற்பாள்.]

**விளக்கம்:** நதி அளித்தவன் - வீடுமன், மெய்க்கன்னி-யாக்கை அழகுடைய கன்னி. மணம் நேர்ந்தான் - மணத்திற்குச் சம்மதித்தான், தமர்- உறவினர். வடமீன் எனத் தகும் கற்பாள் - அருந்ததி போன்ற கற்பினளான காந்தாரி.

கண்ணிலான். என்ற பின்னும் காந்தாரி வருந்தாது உளம் மகிழ்ந்தது, அவள் நேரில்லாக் கற்பினள் என்பதைக் காட்டும்.

24. இமைத்த கண்ணிணை மலர்ந்தினி நோக்கலென்
யானொரு வரையென்று
சமைத்த பட்டமொன் றினிற்பொதிப் பெதும்பையைத்
தந்தையுந் தனயோரும்
அமைத்த ருங்குல முனிவரு மறைமுறை
யருங்கடி விளைத்திட்டார்
சுமைத்த ராபதி மதியிவ ளுரோகிணி
யென்னவே தொழத்தக்காள்.

[இமைத்த கண் இணை மலர்ந்து இனி நோக்கலேன் யான் ஒருவரை என்று, சமைத்த பட்டம் ஒன்றினில் பொதி பெதும்பையை தந்தையும் தனயோரும் அமைத்து அரும் குல முனிவரும் மறைமுறை அருங்கடி விளைத்திட்டார்; சுமைதராபதி மதி இவள் உரோகிணி என்னவே தொழத்தக்காள்.]

**விளக்கம்:**—மலர்ந்து - விழித்து. சமைத்த பட்டம்- செய்யப் பட்ட பொன்னாலான பட்டம், பொதி - மறைத்து. பெதும்பை- பெதும்பைப் பருவத்தினளான காந்தாரி. தனயோர் - சகுனி முதலிய புதல்வர்கள். அமைத்து - விவாகத்திற்கு வேண்டிய வற்றைச்சித்தம் செய்து. அரும்கடி-விவாகம். விளைத்திட்டார்- செய்து முடித்தார். சுமை தராபதி மதி - சந்திரன் (பாரமுடைய பூமியைத் தனது ஒளியினால் பரிபாலிக்கும் அரசனாகிய சந்திரன்.) உரோகிணி என்ன, இவள் தொழத்தக்காள். (சந்திரனுக்கு) உரோகிணி போல் இவள் தொழுது கொண் டாடத் தக்கவள் ஆனாள்.

சந்திரனுக்குரிய மனைவியராய் இருபத்தேழு நட்சத்திரங்கள் இருப்பினும், உரோகிணியே அவர்களில் சிறத்தல் போல், திருதராட்டிரனது மனைவியர்களில், காந்தாரியே யாவரினும் சிறந்தவளானாள்,—என்றபடி.

## குந்தியின் வரலாறு

25. புந்தி யாலருங் கலைமகள் பொற்பினாற்
பூந்திரு புனைகற்பால்
அந்தி வாயருந் ததிபெரும் பொறையினா
லவனிமா னிகரென்னக்
குந்தி போசரிற் சூரனென் பவன்மகள்
குருகுலந் தழைத்தோங்க
வந்தி யாவரும் பிரதையென் றடிதொழ
மதியென வளர்கின்றாள்.

[புந்தியால் அரும் கலைமகள், பொற்பினால் பூந் திரு, புனை கற்பினால் அந்திவாய் அருந்ததி, பெரும் பொறையினால் அவனிமான் நிகர் என்ன. குந்திபோசர் இல், சூரன் என்பவன் மகள் குருகுலம் தழைத்து ஓங்க, வந்து, யாவரும் பிரதை என்று அடி தொழ, மதி என வளர்கின்றாள்.]

**விளக்கம்—:** சூரன் என்பவன் மகள், புந்தியால்...என்ன, குந்தி போசர் இல் வந்து, குருகுலம் தழைத்து ஓங்க, யாவரும் **பிரதை** என்று அடிதொழ வளர்கின்றாள்.—என்று அன்வயிக்க.

புந்தி - புத்தி. பொற்பு - அழகு. புனைகற்பு - பூஷணமாக அணிந்த கற்பு. அந்திவாய் அருந்ததி - இரவில் தோன்றும் வடமீனாகிய அருந்ததி. பொறை - பொறுமை. அவனிமான் - பூமாதேவி. மதி என - வளர்பிறைச் சந்திரன் போல்.

பெண்மைக்கு அணிகலனாகும் கற்பு, என்பவர். ஆகவே, அலங்காரமாக அணிந்த கற்பு, என்ற பொருளது **புனைகற்பு** என்ற தொடர். சூரன் என்ற பெயருடைய யதுகுலத்துத் தோன்றலின் மகள் **பிரதை** என்பவள். தன் அத்தை மகனான குந்தி போசனுக்கு மகவு இல்லாமையினால், சூரன் தன் மகளை, அவனுக்கு உதவினான். குந்திபோசன் கையில் வளர்ந்தமையால். **பிரதை** என்பாள் **குந்தி** என்ற பெயரினளானாள்,

26. அந்த மாதிள மடமயி லெனவிளை
யாடுமெல் லையிலென்றும்
முந்த மாதவம் புரிதுரு வாசமா
முனியுமவ் வழிவந்தான்
வந்த மாதவ னடிபணிந் திவனைநீ
வழிபடு கெனத்தந்தை
இந்த மாதவன் மொழிப்படி புரிந்துகுற்
றேவலின் வழி நின்றாள்.

[அந்த மாது இள மட மயில் என விளையாடும் எல்லையில் என்றும் முந்த மாதவம் புரி துருவாச மாமுனியும் அ வழி வந்தான்; வந்த மாதவன் அடி பணிந்து, இவனை நீ வழி படுக என தந்தை, இந்த மாதவன் மொழிப்படி புரிந்து குறு ஏவலின் வழி நின்றாள்.]

**விளக்கம்:—** தந்தையாகிய குந்திபோசன், வந்த மாதவன் அடி பணிந்து, (மகளை நோக்கி) இவனை நீ வழிபடுக என்று கூறலும், (அவளும்) இந்த மாதவன் மொழிப்படி (பணி விடை) புரிந்து, (அவன்) ஏவிய வழியிலே சிறு தொழில்களைச் செய்பவளாய் நடந்து கொண்டாள்,—என்பது ஈற்றடிகளின் பொருள். என்றும் முந்தமாதவம் புரி துருவாசன் - எப்பொழுதும்

யாவரையும் முந்தும்படி சிறந்த தவத்தைச் செய்பவனான துருவாசன்,

27. கழங்கு கந்துக மம்மனை யாடலுங்
கனகமென் கொடியூசல்
வழங்கு தண்புன லாடலுந் துறைவரி
வண்டலா டலுமாறி
முழங்கு சங்கினந் தவழ்தரு பனிநிலா
முன்றிலுஞ் செய்குன்றும்
தழங்கு செஞ்சுரும் பெழுமலர்ச் சோலையுந்
தனித்தனி மறந்திட்டாள்.

[கழங்கு கந்துகம் அம்மனை ஆடலும், கனகம் மெல் கொடி ஊசல் வழங்கு தண் புனல் ஆடலும், துறை வரி வண்டல் ஆடலும், மாறி, முழங்கு சங்கு இனம் தவழ்தரு பனிநிலா முன்றிலும், செய்குன்றம், தழங்கு செம் சுரும்பு எழு மலர் சோலையும், தனித்தனி மறந்திட்டாள்.

**விளக்கம்:**—துர்வாச முனிவனது ஏவலின் நின்ற குந்தி, தனது விளையாட்டுக்களையெல்லாம் மறந்து, அவனுக்குப் பணி விடை செய்பவளாயினள், என்றபடி.

கழங்கு, பந்து, அம்மானை முதலிய ஆடல்கள், பொன்மய மான கொடி ஊசல் ஆடுதல். வழங்கு தண் புனல் ஆடல் - ஓடிக் கொண்டிருக்கும் ஆற்று நீரில் குளித்து விளையாடல், துறை வரி வண்டல் ஆடல் - நீர்த்துறைகளில் அழகிய மணலால் சிற்றில் கோலி விளையாடல். கந்துகம்-பந்து.

சப்திக்கின்ற சங்கினம் தவழும் தண்ணிய நிலவினைக் கொண்ட வீட்டின் முன்னிடமும், செய்குன்றும் ஒலிக்கும் அழகிய வண்டுகள் மொய்த்து எழும் மலர்ச்சோலையும் ஆகிய ஒவ்வொன் றையும் மறந்து, முனிவனது பணியில் ஈடுபட்டாள்;—என்ற பொருளது செய்யுளின் ஈற்றடிகள்.

28. தொழுது தாளினைச் செய்யபஞ் செழுதினுந்
தோளினைச் செழுந்தொய்யில்
எழுதி னும்பொறா விளமையண் முதுக்குறைந்
தியாதியா துரைசெய்தான்

முழுது நெஞ்சுறு கோபமே மிகமிகு
முனிவரன் மகிழ்வெய்தப்
பழுதி லன்புட னியற்றின ளொன்றுபோல்
பன்னிரு மதிசேர.

[தொழுது தாளினை செய்ய பஞ்சு எழுதினும், தோளினை செழும் தொய்யில் எழுதினும் பொறா இளமையள், முதுக் குறைந்து யாது யாது உரை செய்தான், முழுது நெஞ்சு உறு கோபமே மிகமிகு முனிவரன் மகிழ்வு எய்த பழுது இல் அன்புடன் இயற்றினள் ஒன்று போல் பன்னிரு மதி சேர.[

**விளக்கம் :**—தொழுது...இளமையள் - தோழியர் தொழுது பாதங்களில் செம்பஞ்சு ஊட்டினாலும், தோள்களில் தொய்யில் எழுதினாலும் (அவற்றைப்) பொறுக்க மாட்டாத இளமைப் பருவத்தினளான பிரதை. நெஞ்சு உறு கோபமே மிக மிகும் முனிவரன் மகிழ் வெய்த (அவன்) யாது உரை செய்தானோ, (அவற்றை) முதுக்குறைந்து, ஒன்று போல் சேர பழுதில் அன்புடன் பன்னிருமதி இயற்றினாள்,— என்று அன்வயிக்க.

முதுக்குறைந்து - புத்திசாலித்தனத்தோடு. ஒன்றுபோல் சேர - ஒரே மாதிரியாகப் பொருந்தும்படி, அதாவது செய்முறை தவறாமல். பன்னிரு மதி - பன்னிரண்டு மாதங்கள்.

'யாது யாது சொன்னான்,' என்பது, அவன் சொல்லிய கருமம் அரியதாயினும், தாழ்ந்ததாயினும் (பழுதில் அன்புடன் செய்தாள்) என்று பொருள்படும்.

### முனிவன் மந்திரம் அருளல்

29. பிரதை தன்னையத் தபோநிதி வருகெனப்
பெரிதுவந் தெனதேவல்
அரிதெ னாதுநீ யியற்றினை நெடுங்கட
லவனிமேல் யார்வல்லார்
தெரிவை கேளெனச் செவிப்படுத் தொருமறை
தேவரில் யார்யாரைக்
கருதி நீவர வழைத்தனை யவரவர்
கணத்துநின் கரஞ்சேர்வார்.

[பிரதை தன்னை அ தபோநிதி வருக என, பெரிது உவந்து, எனது ஏவல் அரிது எனாது நீ இயற்றினை; நெடும் கடல் அவனி மேல் யார் வல்லார்? தெரிவை கேள், என, செவிப்படுத்து ஒரு மறை, தேவரில் யார் யாரை கருதி நீ வர அழைத்தனை அவர் அவர் கணத்து நின்கரம் சேர்வார்].

**விளக்கம்:**—அத் தபோநிதி (அவளது பணி விடையால்) பெரிது உவந்து, பிரதை தன்னை வருக என (தன்னருகு அழைத்து) ''தெரிவை, கேள்; எனது ஏவல் அரிது எனாது நீ இயற்றினை. நெடும் கடல் அவனிமேல் யார் (அவ்வாறு) செய்ய வல்லார்?'' என, ஒரு மறை (அவள்) செவிப்படுத்து, தேவரில் யார் யாரைக் கருதி நீவர அழைத்தனை, அவரவர் கணத்து நின் கரம் சேர்வார்,—என்பது அன்வயம்.

மறை - மந்திரம். செவிப்படுத்து - காதில் ஓதி, உபதேசித்து. நின்கரம் சேர்வார் - உன் கை அடைவர், அதாவது உனக்கு வசப்படுவர்.

30. **தம்மை யொப்பதோர் மகவையுந் தருகுவர்**
**தவப்பய னெனப்பெற்ற**
**இம்ம றைப்பய னிம்மையி லுனக்குவந்**
**தெய்திய தெனக்கூறி**
**அம்மு னிப்பெருங் கடவுளுந் தபோவன**
**மடைந்தன னவளுந்தான்**
**செம்ம னத்தொடு பயின்றர மகளெனச்**
**செல்வமா மனைசேர்ந்தாள்.**

[தம்மை ஒப்பது ஓர் மகவையும் தருகுவர்; தவப் பயன் என (யான்) பெற்ற இ மறை பயன், இம்மையில் உனக்கு வந்து எய்தியது. என கூறி, அ முனி பெருங் கடவுளும் தபோவனம் அடைந்தனன்; அவளும் தான் செம் மனத்தொடு பயின்று அரமகள் என செல்வம் மாமனை சேர்ந்தாள்.]

**விளக்கம்** :—(மேலும், அழைத்த தேவர்) தம்மை... தருகுவர். தவப் பயன் எனப் பெற்ற - செய்தவப் பயன் என்று சொல்லும்படி நான் அரிதின் பெற்ற. முனிப் பெருங் கடவுள் - தெய்வத்தன்மை பொருந்திய துர்வாச முனிவன். பயின்ற-கற்ற. அரமகள் - தெய்வப்பெண்.

தந்தை சொற்படி முனிவனுக்குப் பணிவிடை செய்து கொண்டு அவன் இருந்தவிடத்தில் இருந்த பிரதை, முனிவன் சென்றபின், தனக்குரிய மனை அடைந்தாள்,—என்க.

**கன்னியின் மந்திர சோதனை**

31. ததையும் வண்டிமிர் கருங்குழற் கன்னியத்
தனிமறை பயன்காண்பான்
சுதைநி லாவெழு மாளிகைத் தலத்திடைத்
தூநிலா வெழு முன்றில்
இதைய மாமலர் களிக்கநின் றன்பினோ
டியம்பலு மெதிரோடி
உதைய பானுவு மலர்மிசை யளியென
வொருகணந் தனில்வந்தான்.

[ ததையும் வண்டு இமிர் கரும் குழல் கன்னி அ தனி மறை பயன் காண்பான், சுதை நிலா எழு மாளிகை தலத்திடை, தூ நிலா எழு முன்றில் இதயம் மாமலர் களிக்க நின்று, அன்பினொடு இயம்பலும் எதிர் ஓடி உதயபானுவும் மலர்மிசை அளி என ஒரு கணந்தனில் வந்தான். ]

**விளக்கம்** :—மாளிகையின் மேன்மாடத்தின் கண்ணதான நிலா முற்றத்தில் நின்றுகொண்டு பிரதை முனிவன் தந்த மந்திரத்தைச் சோதிக்கும் எண்ணத்தில், சூரியனை உத்தேசித்து மந்திரத்தை உச்சரித்ததும், சூரியனும் விரைந்து அவள் எதிரே வந்தான்,— என்றபடி.

ததையும் - நெருங்கிய. இமிர் - ஒலிக்கும். தனி மறை - ஒப்பற்ற மந்திரம். நிலா எழு சுதை மாளிகைத்தலம் - நிலவு போன்ற ஒளி வீசும் சுண்ணாம்பு பூசிய மாளிகையின் மேன் மாடம். தூ நிலா எழு முன்றில் - நிலா முற்றம். இதய மா மலர் களிக்க - உள்ளம் களிக்க. உதயபானு - சூரியன். ஓடி எதிர் வந்தான் - விரைந்து (அவளுக்கு) எதிரே வந்து தோன்றினான். மலர் மிசை அளிஎன - மலரை நாடி வண்டுவருவது போல.

32. செம்பொ னாடையுங் கவசகுண் டலங்களுந்
திகழ்மணி முடியாரம்
பைம்பொ னங்கதம் புனையவ யவங்களும்
பவளமே னியுமாகி

வம்ப றாதமெய்ப் பதுமினி யெனச்செழு
மறைநுவன் மடப்பாவை
அம்பு யானன மலர்வுறக் கரங்களா
லணைத்தன னழகெய்த.

[செம்பொன் ஆடையும், கவசம் குண்டலங்களும் திகழ் மணி முடி ஆரம், பைம்பொன் அங்கதம் புனை அவயவங்களும் பவளம் மேனியும் ஆகி, வம்பு அறாத மெய் பதுமினி என, செழு மறை நுவல் மடம் பாவை, அம்புயம் ஆனனம் மலர்வு உற கரங்களால் அணைத்தனன் அழகு எய்த]

**விளக்கம்:**— பைம்பொன் அங்கதம் புனை அவயவங்கள் - பசும் பொன்னாலான தோள்வளைகள் அணிந்த புஜங்கள். வம்பு அறாத மெய் பதுமினி என - மணம் நீங்காத (இயற்கை மண முடைய) பதுமினிச் சாதிப் பெண் என்று சொலத்தக்க. செழு மறை நுவல் - பயன் விளைக்கும் மந்திரத்தை உச்சரித்த. மடப் பாவை - குந்தி. அம்புயானனம் - (அம்புயம் ஆனனம்), தாமரை மலர் போன்ற முகம் அழகு எய்தக் கரங்களால் அணைத்தான் - (தாமரை மலரை முகம் மலரும்படி தனது கிரணங்களால் தழுவுவதுபோல், குந்தியின் அம்புயானனம் புதுப் பொலிவு எய்தும்படி அவளைக் கரங்களால் அணைத்துக் கொண் டான்.

மாதர், **பதுமினி, சித்தினி அத்தினி, சங்கினி** என்ற நான்கு வகையினர் என்றும், பதுமினி ஜாதிப் பெண்கள் நறுமணம் நீங் காத யாக்கையர் என்றும் வாத்ஸியாயனம் முதலிய நூல்கள் கூறும்.

33. கன்னி கன்னியென் கைதொடேன் மடந்தையர்
கற்புநீ யறியகிற்றி
என்ன மெய்குலைந் தல்மர நாணினா
ளிதயமும் வேறாகி
அன்ன மென்னடை யஞ்சின ளரற்றலு
பருகுறான் விடப்போய்நின்(று)
உன்னி யென்னை நீயழைத்ததென் பெறவென
வுருத்தன னுரைசெய்வான்.

[கன்னி கன்னி, என் கை தொடேல், மடந்தையர் கற்பு நீ அறியகிற்றி, என்ன, மெய் குலைந்து அலமர நாணினாள் இதயமும் வேறு ஆகி, அன்னம் மெல் நடை அஞ்சினள் அரற்றலும், அருகு உறான் விடப் போய் நின்று, உன்னி என்னை நீ அழைத்தது என் பெற? என, உருத்தனன் உரை செய்வான்.]

**விளக்கம் :—** (சூரியன் தோன்றி அணைக்க) அன்ன மெல் நடை, மெய் குலைந்து அலமர நாணினாள், இதயமும் வேறாகி அஞ்சினாள். "கன்னி கன்னி, என் கை தொடேல். மடந்தையர் கற்பு நீ அறியகிற்றி," என்ன அரற்றலும், (சூரியன்) அருகு உறான், விடப்போய் நின்று, "உன்னி என்னை நீ அழைத்தது என் பெற?" என்று உருத்தனன் உரை செய்வான்,—என்று அன்வயிக்க.

அன்னம் மெல் நடை - குந்தி. அலமரல் - வருந்தல், சுழலல், அறியகிற்றி - அறிவாய் அன்றோ? விடப்போய் நின்று-சூரியன் விலகிபோய் நின்று. உருத்தனன் உரை செய்வான் - கோபித்தவனாய்க் கூறுவான்.

34. உருக்கொள் சாயையு முழையுமங் கறிவுறா
தொளித்துநான் வரவே நீ
வெருக்கொ ளாவெனை மறுத்தனை யுனக்குமுன்
மெய்ம்மறை யுரைசெய்த
குருக்க ளென்படா ரென்படா தரிவைநின்
குலமெனக் கொடித்திண்டேர்
அருக்கன் மெய்யினு மனமிகக் கொதித்தன
னாயிர மடங்காக.

[உருகொள் சாயையும் உழையும் அங்கு அறிவுறாது ஒளித்து நான் வரவே, நீ வெருக்கொளா எனை மறுத்தனை; உனக்கு முன் மெய் மறை உரை செய்த குருக்கள் என்படார்? என் படாது, அரிவை நின் குலம்? என கொடி திண் தேர் அருக்கன் (அவன்) மெய்யினும் மனம் மிக கொதித்தனன் ஆயிரம் மடங்காக,]

**விளக்கம்:** சாயை (சாயாதேவி, உழை (உஷாதேவி) ஆய இருவரும் சூரியனின் மனைவியார். 'சாயை' என்பது நிழல் அல்லாமை குறிக்க, 'உருக்கொள் சாயை' எனப்பட்டது. வெருக்கொள - அஞ்சி. மெய் மறை உரை செய்த குருக்கள்

என்படார்? பிழையாது பலிக்கும் இம் மந்திரோபதேசம் செய்த உன் குருமார்கள் (என் சாபத்தால்) என்ன கஷ்டம் அடையார் (அடைவார் என்றவர் என்றபடி), என்படாது நின்கதுலம் - என்ன தீங்கை அடையாது உன் குலம் அழிந்திடும் என்றபடி.) அருக்கன் (சூரியன்) தன் மெய்யினும் ஆயிரம் மடங்காக மனம் மிகக் கொதித்தான்.

'உனக்கு மறை உரைத்த குருவோடு, உன் குலமும் அழிந்திடும்' என்று சூரியன் சினந்து கூறினான் என்க.

35. உனைய ளித்தவன் முனியுமென் றஞ்சனீ
உடன்படு முணர்வானல்
வினை யளித்ததென் றணைதியே லின்பமும்
விழைவுறும் படிதுய்த்தி
எனைய ளித்த தொல் லதிதியி னுனக்கிசை
யெய்துமா றிகன்மைந்தன்
தனைய ளித்திமற் றென்னினு மிருநிலந்
தாடொழத் தக்கோனே.

(உனை அளித்தவன் முனியும் என்று அஞ்சல் நீ; உடன்படும் உணர்வால் நல்வினை அளித்தது என்று அணைதியேல் இன்பமும் விழைவு உறும்படி துய்த்தி; எனை அளித்த தொல் அதிதியின் உனக்கு இசை எய்துமாறு, இகல் மைந்தன் தனை அளித்தி; மற்று, என்னினும் இருநிலம் தாள் தொழதக்கோன்.]

**விளக்கம்:—** "உனை அளித்தவன் முனியும் என்று அஞ்சல்," என்பது, "மீண்டும் நீ கன்னியேயாய் விடுவாய்; எனவே, அஞ்சற்க," என்ற குறிப்பினது. இன்பமும் விழைவுறும்படி துய்த்தி; இன்பமும் திருப்தியுண்டாகும்படி அனுபவிப்பாய்.

என்னை அளித்த அதிதியைப்போல், உனக்குக் கீர்த்தி உண்டாகும்படி இகல் மைந்தனை நீ உண்டாக்குவாய்; மேலும், அம் மைந்தன், என்னைக் காட்டிலும், உலகத்தாரால் தாள் தொழத் தக்க மேன்மையனாவான்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

36. ஆயிரங்கரத் ததிபதி புகழ்ந்துநூ
றாயிர முகமாகப்
போயிரந்திவை யுரைத்தபின் மதர்விழிப்
புரிவுமூ ரலுநல்கி

வேயி ருந்தடந் தோளிடந் துடித்திட
மெல்லியன் மதன்வேதப்
பாயி ரங்கொலென் றையுற வவனொடும்
பனிமல ரணைசேர்ந்தாள்.

[ஆயிரம் கரத்து அதிபதி புகழ்ந்து நூறு ஆயிரம் முகம் ஆக போய் இரந்து இவை உரைத்தபின், மதர்விழி புரிவும் மூரலும் நல்கி, வேய் இரும் தடம் தோள் இடம் துடித்திட மெல்லியல் மதன் வேதம் பாயிரம் கொல், என்று, ஐயுற அவனொடும் பனி மலர் அணை சேர்ந்தாள்.]

**விளக்கம்:**— ஆயிரம் கரத்து அதிபதி - சூரியன், நூறாயிரம் முகமாக - பலபடியாக, புகழ்ந்துபோய் இரந்து உரைத்தபின் - புகழ்ந்தும், மிக இரந்தும் (முன் செய்யுளில் கூறியபடி) சொல்லிய பின். மெல்லியல் (பிரதை) தன் மதர்விழியின் மூலமாக (புரிவும் மூரலும் நல்கி,— என்று அன்வயிக்க. (புரிவு - விருப்பம். மூரல் - இளநகை). நல்கி - தோற்றுவித்து. வேய் (மூங்கில் போன்ற) இரும் தடந்தோள் இடம் துடித்திட, '(அது) மன்மத வேதத்தின் பாயிரம் கொல்?' என்று, (அவள் மனத்தில்) ஐயம் எழ, அவனோடும்... சேர்ந்தாள்.

நூலுக்குத் தோற்றுவாய் பாயிரம். இங்கே, தோள் இடம் துடித்தது, மன்மத வேதத்திற்குப் பாயிரம், ஆயிற்று. மன்மத வேதம் - காம நூல்; இங்கே, காமநூல் கூறுங் கரணங்களை, ஆகுபெயராய்க் குறிக்கும்.

### கர்ணன் ஜனனம்

37. தினக ரன்சுடர் வடிவமு மமிர்தெழு
திங்களின் வடிவாகத்
தனத டந்திரு மார்புறத் தழீஇயபின்
றையறன் னினைவெய்த
மனம கிழ்ந்ததும் வந்தது மணந்ததும்
வரங்கொடுத் ததுமெல்லாம்
கனவெ னும்படி கரந்தனன் பெருந்தகை
கன்னியுங் கருக்கொண்டாள்.

[தினகரன் சுடர் வடிவமும் அமிர்து எழு திங்களின் வடிவாக தன தடம் திரு மார்பு உற தழீஇய பின், தையல் தன் நினைவு எய்த, மனம் மகிழ்ந்ததும் வந்ததும் மணந்ததும் வரம் கொடுத்ததும் எல்லாம் கனவு எனும்படி கரந்தனன் பெருந்தகை; கன்னியும் கரு கொண்டாள்.]

**விளக்கம்:**—சூரியனது சுடர் மயமான வடிவமும், அமிர்தம் பெருகும் சந்திரனது தண்ணிய வடிவமாக மாறி,—என்பது முதலடியின் பொருள்.

தன தடம்...தழீய பின் - தனது இடமகன்ற அழகிய மார்பு அழுந்திப் பொருந்தும்படி (சூரியன், பிரதையைத்) தழுவியபின், 'தனம்' தடம்...தழீயபின்,' என்று பிரிந்துக் கொண்டால், (கன்னியின்) கொங்கைப் பிரதேசம் (தனது) அழகிய மார்பிடத்திலே பொருந்து மாறு (சூரியன்) தழுவியபின் என்பது' பொருளாகும்,

(தையல் தன்னினைவு எய்தியதும்) மனம் மகிழ்ந்ததும் - (தனது உடன்பாடு காரணமாகச் சூரியன்) மனம் மகிழ்ந்ததும், வந்ததும் - (அவன் தன்னை) நெருங்கியதும், மணந்ததும். தன்னைக் கூடியதும், வரங்கொடுத்ததும்-மீண்டும்கன்னியாமாறு அவன் வரம் கொடுத்ததும்,—ஆகிய எல்லாம், கனவெனும்படி பெருந்தகை (சூரியன்) கரந்தான் (மறைந்தான்) கன்னியும் கருக் கொண்டாள். பெருந்தகை, என்பதைக் கன்னியோடும் சேர்க்கலாம்.

33. அந்தி யாரழ லெனப்பரி தியி னொளி
யடைந்தபின் னணிமாடக்
குந்தி போசன்மா மடமக ளெழிநலங்
கொண்டகொள் கையளாகி
இந்தி ராதிய ரவரவர் முகமலர்ந்
திரந்தன தரத்தக்க
மைந்த னானவ னொருவனைப் பயந்தனள்
மாசிலா மணியென்ன.

[அந்தி ஆர் அழல் என பரிதியின் ஒளி அடைந்தபின், அணி மாடம் குந்திபோசன் மா மடமகள் எழில் நலம் கொண்ட

கொள்கையள் ஆகி, இந்திர ஆதியர், அவர் அவர், முகம் மலர்ந்து இரந்தன தரத்தக்க மைந்தன் ஆனவன் ஒருவனை பயந்தனள் மாசு இலா மணி என்ன].

**விளக்கம்:**—பரிதியின் ஒளி அடைந்தபின் - சூரியனின் ஒளி மயமான கரு (தன் வயிறு) சேர்ந்தபின். அணிமாடக் குந்தி போசன்...மகள் அந்தி ஆர் அழல் என, எழில் நலம்...கொள்கையள் ஆகி —என்று அன்வயிக்க. அந்தி ஆர் அழல் - அந்திக் காலத்து விளக்கம் மிகுந்த அக்கினிபோல். கொள்கையளாய் - தன்மை உடையவளாய். இந்திராதியர், அவரவர் இரந்தன முகம் மலர்ந்து தரத்தக்க மைந்தனானவன் ஒருவனை, மாசிலாமணி என்ன பயந்தனள். சமுத்திரம் மணிகளில் சிறந்ததான குற்றமற்ற கேட்டதைக் கொடுக்கும் சிந்தாமணியைப் பெற்றதுபோல்' குந்திபோசன் வளர்ப்புப் பெண் ஒப்பற்ற ஒரு மகவைப் பெற்றாள்,—என்க.

அந்திப் பொழுதில் சூரியனின் ஒளியை அக்கினி பெறுகின்றான் என்பது நூற் கொள்கை.

39. சூரன் மாமகள் சூரன தருளினாற்
றுலங்குகன் னிகையாகி
வார மாமணிக் கவசகுண் டலத்துடன்
வருமகன் முகநோக்கிப்
பார மாமர பினிற்பிறந் தவர்மொழி
பழுதினுக் கழுதஞ்சிப்
பூர மாநதிப் பேடகத் திடை நனி
பொதிந்தொழுக் கினண்மன்னோ.

[சூரன் மா மகள், சூரனது அருளினால் துலங்கு கன்னிகை ஆகி, வாரம் மா மணி கவச குண்டலத்துடன் வரு மகன் முகம் நோக்கி, பாரம் மா மரபினில் பிறந்தவர் மொழி பழுதினுக்கு அழுது அஞ்சி, பூரம் மாநதி பேடகத்திடை நனி பொதிந்து ஒழுக்கினள் மன்னோ.]

**விளக்கம்:**—யது குலத்தினனான சூரனது மா மகள் சூரியனது அருளினால் விளங்கும் கன்னியாகி,—என்பது முதலடியின் பொருள். வாரம் - அன்பு. பாரம் - பெருமை. மொழி பழுதினுக்கு அஞ்சி அழுது - பழிச் சொல்லுக்கு அஞ்சி, (மகனுக்காக) அழுது.

மாநதிப் பூரம் - சிறந்த கங்கையின் பெருக்கில், (பூரம் - வெள்ளம், பெருக்கு). பேடகம்- பெட்டி. பொதிந்து ஒழுக்கினள்- (மகவை) இட்டுச் செலுத்தினாள்.

மகவை வைத்த பெட்டியை அந்தரங்கத் தோழியர் மூலம், அசுவநதியில் விட்டதாகவும், அது சர்மண் நதியிலும், அது யமுனையிலும், அது கங்கையிலும் கொண்டு சேர்த்ததாகவும் முதல் நூல் கூறும். மன்னோ : அசை; இரக்கப் பொருளதுமாம்.

40. குஞ்ச ரத்திளங் கன்றெனச் சாபவெங்
கோளரி யெனப்பைம்பொன்
பஞ்ச ரத்திடை வருதிரு மதலையைப்
பகீரதி யெனுமன்னை
அஞ்ச ரத்திரைக் கரங்களா லெடுத்தெடுத்
தசையவே தாலாட்டி
வெஞ்ச ரச்சிலைச் சூதநா யகன்பதி
மேவுவித் தனளன்றே.

[குஞ்சரத்து இளம் கன்று என, சாபம் வெம்கோளரி என, பைம் பொன் பஞ்சரத்திடை வரு திரு மதலையை பகீரதி எனும் அன்னை, அம்சரம் திரை கரங்களால் எடுத்து எடுத்து அசையவே தாலாட்டி, வெம்சரம் சிலை சூத நாயகன் பதி மேவுவித்தனள் அன்றே.]

**விளக்கம்:**—குஞ்சரம் - யானை. வெம் கோளரி சாபம் - கொடிய சிங்கத்தின் குட்டி. பஞ்சரம் - பெட்டி. அம் சரம் திரை கரம் - அழகிய அலைதலையுடைய அலைகளாகிய கைகள். சூத நாயகன் - தேர்ப்பாகர் தலைவன். (அவனுடைய பதியில்) அன்றே மேவுவித்தனள் - அன்றைய தினமே (கங்கை) சேர்ப்பித்தாள்.

41. கோட கப்பட வரும்புனல் விழைவினாற்
குளிர்துறை மருங்குற்றோர்
பேட கத்திடை யொழுகிய தினபதி
பெருங்கும ரனைக்கண்டு
சூட கக்கையம் புயமல ரிராதையுஞ்
சூதபுங் கவன்றானும்
ஆட கக்குல மடைந்ததொத் தரும்பெற
லாதரத் தொடுகொண்டார்.

[கோடு அகம்பட வரும் புனல் விழைவினால் குளிர் துறை மருங்கு உற்றோர், பேடகத்திடை ஒழுகிய தினபதி பெரும் குமரனை கண்டு, சூடகம் கை அம்புயம் மலர் இராதையும் சூத புங்கவன் தானும் ஆடகம் குலம் அடைந்தது ஒத்து, அரும்பு பெறல் ஆதரத்தொடு கொண்டார்.]

விளக்கம்:—கோடு - நீர்க்கரை, கோடு அகப்பட வருபுனல் - இரு கரையையும் நிறைத்துக் கொண்டு வரும் நீர்ப்பெருக்கு. புனல் விழைவு -புனலைக் காணும், அல்லது ஆடும் விருப்பினால். அந்தக் குளிர் துறை மருங்கு உற்றோராகிய (அடைந்தவராகிய) இராதையும், அவள் கணவனான சூதபுங்கவன் தானும்,— பேடகத்திடை ஒழுகிய (நீரால் அடித்துக்கொண்டு வரப்பெற்ற) தினபதி (சூரியனின்) பெருங் குமரனை கண்டு, ஆடகக்குலம் (பொற்குவியல்) அடைந்தது ஒத்து ஆதரத்தோடு (ஆசையோடு) கொண்டார், அதாவது, அக் குழந்தையைத் தமக்கு வாய்த்த மகனாகக் கொண்டார்.

சூதபுங்கவன், அதிரதன் என்ற பெயரினன். அவன் மனைவி இராதை. வளர்த்தவர் இக் குழந்தைக்கு இட்ட பெயர் வசுஷேணன். குண்டலக் காதுகளுடன் பிறந்ததால் கர்ணன் என்ற பெயரினனானான் என்றும், அசரீரி வழங்கிய பெயர் இது என்றும் கூறுவர்.

42. அதிர தன்றிரு மனையினில் விழைவுட
னரும்பிய பனிக்கற்றை
மதியெ னும்படி வளர்த்துதிண் டிறல்புனை
மழுவுடை வரராமன்
பதயு கந்தொழூஉ வரிசிலை முதலிய
பலபடை களுங்கற்றுக்
கதிர வன்தரு கன்னனென் றுலகெலாங்
கைதொழுங் கவின்பெற்றான்.

[அதிரதன் திரு மனையினில் விழைவுடன் அரும்பிய பனி கற்றை மதி எனும்படி வளர்ந்து, திண் திறல் புனை மழு உடை வரம் ராமன் பதயுகம் தொழூஉ, வரிசிலை முதலிய பல படைகளும் கற்று கதிரவன் தரு கன்னன் என்று உலகு எலாம் கை தொழும் கவின் பெற்றான்].

விளக்கம் :—விழைவுடன் - (சுக்லபக்ஷத்தில்) வளரும் விருப்பத்தோடு. அரும்பிய - தோன்றிய. பனி கற்றை மதி - குளிர்ந்த

கதிர் கற்றையை உடைய பிறைச் சந்திரன். திண்திறல்... வரராமன் - மிகுந்த வலிமையைத் தனதாகக் கொண்ட மழுவை ஆயுதமாகக் கொண்ட சிறந்த பரசுராமன், (வரம் - சிறந்த). பதயுகம் தொழூஉ - உபய பாதங்களையும் தொழுது. கவின் பெற்றான் - சிறப்பைப் பெற்றான்.

'படைகளும் கற்று,' என்பதிலுள்ள உம்மை எச்சப்பொருளது. 'சிலைக் கலையோடு மற்றக் கலைகளையும் கற்று,' என்பது பொருள்,

பீஷ்மனிடம் தோல்வியுற்ற பரசுராமன் 'இனி க்ஷத்திரியர்களுக்கு விற்கலை போதிப்பதில்லை, என்ற சங்கல்பத்தினனாக இருந்ததால், கர்ணன், அந்தண வடிவங்கொண்டு சிலைக்கலை கற்றான் என்றும், அவன் க்ஷத்திரியன் என்பது தெரியவரலும் பரசுராமன், சமயத்தில் சரவித்தை உதவாமல் போகும்படி சாபங் கொடுத்தார் என்றும் முதல் நூல் கூறும்.

வேறு

குந்தி சுயம்வரம்

43. கன்னற் பயந்த கதிர்வெம்முலைக் கன்னி தன்னை
முன்னர்ப் பயந்தோன் முகவோலை யுவகை யோடு
மன்னர்க் கெழுத மடப்பாவை வரிக்கு மென்று
சென்னற் படைவேன் முடிமன்னவர் சென்று
சேர்ந்தார்.

[கன்னன் பயந்த கதிர் வெம்முலை கன்னி தன்னை முன்னர் பயந்தோன், முகம் ஓலை உவகையோடு மன்னர்க்கு எழுத, மடப்பாவை வரிக்கும் என்று செல் நல் படைவேல் முடி மன்னவர் சென்று சேர்ந்தார்.

விளக்கம் :—முகம் ஓலை - (சுயம்வரம்பற்றிய) திருமுக வோலை. மடப்பாவை வரிக்கும் என்று - மடப்பாவை (பிரதை) தமக்கு மாலை சூட்டும் என்று. செல் நல் படைவேல் முடிமன்னவர் - பகைமேல் செல்லுதலைச் செய்யும் சிறந்த வேல் படையைக் கையேந்திய முடிமன்னர். செய்யுள் சுலபமானதே.

44. உருவஞ் சிறந்து பலகோளு முதிக்க மேனும்
மருவுங் குமுத மதிகண்டு மலரு மாபோல்
பருவஞ்செய் பைம்பொற் கொடியன்னவள் பாண்டு
வெனனும்
நிருபன் தனக்கே மணங்கூர்பெரு நேய முற்றாள்.

[உருவம் சிறந்து பல கோளும் உதிக்குமேனும், மருவும் குமுதம் மதி கண்டு மலருமாபோல், பருவம் செய் பைம்பொன் கொடி அன்னவள் பாண்டு என்னும் நிருபன் தனக்கே மணம்கூர் பெருநேயம் உற்றாள்.]

**விளக்கம் :**—வானில் கிரஹங்கள் பல தோன்றுமேனும், குமுத மலர் மதிகண்டு மலர்வதுபோல், மன்னர் பலர் இருக்கக் குந்தி பாண்டுவுக்கே, மணந்து கொள்ளுதற்குரிய அன்பினை உற்றவளானாள்,—என்ற பொருளது செய்யுள்.

உருவப் சிறந்த பலகோள் - உருவத்தால் மேம்பாடுடைய பல கிரகங்கள். உதித்தல் - தோன்றல். மருவும் குமுதம் - நீரில் நிலைகொண்ட ஆம்பல். பருவம் செய் - மணத்திற்குரிய பருவம் எய்திய. மணம்கூர் பெரு நேயம் உற்றாள் - (பாண்டுவுக்கே) மணந்துகொள்ளற்குரியதான மிக்க அன்பை உற்றவளானாள்.

### மாத்திரியைப் பாண்டு மணத்தல்

45. தானே யுவந்து தனித்தார்புனை தையல் வென்றி
ஆனே றனையா னுயிர்க்காரமிர் தான பின்னர்
யானே தருவன் னெனமத்திர ராச னல்க
மானே யனைய விழியாளை வதுவை செய்தான்.

[தானே உவந்து தனி தார் புனை தையல் வென்றி ஆன் ஏறு அனையான் உயிர்க்கு ஆர் அமிர்து ஆன பின்னர், யானே தருவன் என மத்திர ராசன் நல்க, மானே அனைய விழியாளை வதுவை செய்தான்.]

**விளக்கம் :**— தானாகவே உவந்து ஒப்பற்ற சுயம்வர மாலையைச் சூட்டிய குந்தி, வெற்றி பொருந்திய ரிஷபம்போன்ற பாண்டுவின் உயிர்க்கு அரிய அமிர்தம் ஆனபின், மத்திர தேசாதிபதியின் மகளான மாத்திரியையும் பாண்டு மணந்தான்,—என்ற பொருளது.

மத்ரராசன், பாண்டுவிற்குத் தானாகவே தன் பெண்ணை அளித்தான், என்று இந்த நூல் கூற, வியாச பாரதம், பீஷ்மன் வேண்ட, மத்திராதிபதி மகள்தர இசைந்தான், என்று கூறும்.

46. எண்ணுற்ற சூர னிகன்மத்திர ராச னென்ன
மண்ணுற்ற சீர்த்தி வயமன்னர் மகளி ரோடும்
கண்ணுற்ற கானில் விளையாடல் கருதி யம்பொன்
விண்ணுற்ற சார லிமயம்புற மேவி னானே.

[எண் உற்ற சூரன், இகல் மத்திரராசன் என்ன மண் உற்ற சீர்த்தி வயம் மன்னர் மகளிரோடும், கண் உற்ற கானில் விளையாடல் கருதி, அம் பொன் விண் உற்ற சாரல் இமயம்புறம் மேவினான், ஏ.]

விளக்கம் :—எண் உற்ற சூரன் - நன் மதிப்பைப் பெற்ற (யதுகுல மன்னனான) சூரன். மண் உற்ற சீர்த்தி - உலகத்தால் கொண்டாடல் பொருந்திய கீர்த்தி. கண்ணுற்ற கானில் - கண்ணில்பட்ட கானில். விளையாடல் - வேட்டையாடி விளையாடல். அம்பொன்...இமயப்புறம்—அழகிய, பொன்னைத் தன்னிடத்தே கொண்டு வானளாவிய தாழ்வரைகளையுடைய இமயமலையினிடத்தே.

குந்தி, மாத்திரி என்ற மனைவியோடு பாண்டு வேட்டையாடி மகிழும் கருத்தில் இமயத்தை அடைந்தான்,—என்க.

47. கானத் திலுள்ள கலைமானினங் காட்சி யாமா
ஏனத் திரள்வெம் புலியெண்குடன் யாளி சிங்கம்
தானப் பகடு முதலாய சனங்க ளெல்லாம்
மானச் சரத்தாற் கொலைசெய்தனன் வாகை
வில்லான்.

[கானத்தில் உள்ள கலைமான் இனம், காட்சி ஆமா, ஏனம் திரள், வெம்புலி எண்குடன் யாளி சிங்கம், தானம் பகடு முதலாய சனங்கள் எல்லாம், மானம் சரத்தால் கொலை செய்தனன் வாகை வில்லான்.]

விளக்கம் :—காட்சி ஆமா - காட்சிக்கு இனிய காட்டுப் பசு, ஏனத்திரள் - பன்றியின் கூட்டம். எண்கு - கரடி. தானப் பகடு- மதசலம் பெருகும் ஆண்யானை. சனம் - கூட்டம். மானச்சரம்- சிறந்த அம்புகளால். வாகை வில்லான் - வெற்றியில் ஏந்திய பாண்டு.

48. மெய்யிற் றெறித்த குருதித்துளி மேரு வில்லி
சையத் தலர்ந்த கமழ்குங்குமத் தாது மானக்
கையிற் சிலையோ டுலவுங்கழற் காளை தேகம்
பையத் தணித்தா னிமநாக பவன னென்பான்.

[மெய்யில் தெறித்த குருதி துளி, மேரு வில்லி சையத்து அலர்ந்த கமழ் குங்குமம் தாது மான, கையில் சிலையோடு உலவும் கழல்காளை தேகம் பைய தணித்தான் இம நாகம் பவனன் என்பான்.]

**விளக்கம் :**—வேட்டையாடிய பாண்டுவின் வெண்ணிற மேனியில் தெறித்த விலங்குகளின் இரத்தத்துளி, மேரு மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானது வெள்ளிமலையில் மலர்ந்த மணக்கும் குங்குமப்பூவின் தாது சிந்தியதைப்போல் தோன்ற,— என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

சையம் - (சைலம்) மலை, இங்கே வெள்ளிய கைலாச மலை. மான - போன்ற, ஒத்த கழல் காளை - வீரக்கழல் அணிந்த பாண்டு. கேதம் - இளைப்பு. இமநாக பவனன் என்பான் பையத் தணித்தான் - இமயமலையில் தோன்றிய வாயுபகவான் (பாண்டுவின் களைப்பை) மெல்லத் தணித்தான்.

'பவனன் என்பான்,' — என்பான் முதல் வேற்றுமைச் சொல்லுருபு.

பாண்டு சாபம் உறல்

49. பொன்னங் கழலா னெதிரவ்விடைப் போகம் வேட்டு
மன்னுங் கலையும் பிணைமானு மகிழ்ச்சி கூர
மின்னுங் கணையா லிவனெய்திட வீழ்ந்த போதின்
முன்னின்ற தந்த வுயிர்வந்தொர் முனிவ னாகி.

[பொன் அம்கழலான் எதிர் அ விடை போகம் வேட்டு, மன்னும் கலையும் பிணைமானும் மகிழ்ச்சி கூர, மின்னும் கணையால் இவன் எய்திட, வீழ்ந்த போதில், முன் நின்றது அந்த உயிர் வந்து ஓர் முனிவன் ஆகி.]

**விளக்கம் :**—அ இடை அம்பொன் கழலான் எதிர்....மகிழ்ச்சி கூர,—என்று அன் வயிக்க. அவ்விடை - இளைப்பாறிய அந்த

இடத்திலே. போகம் வேட்டு - புணர்ச்சி விரும்பி. மன்னும் கலையும் பிணைமானும் - (வேடங்கொண்ட) பெருமையுடைய ஆண்மானும் பெண்மானும். மகிழ்ச்சி கூர - மிக மகிழ்ந்து நிற்க. அந்த உயிர் ஓர் முனிவனாகி முன்வந்து நின்றது,—என்பது ஈற்றடியின் அன்வயம். அந்த உயிர் - (அம்பினால் அடியுண்ட) அந்த உயிர்ப்பிராணி, அதாவது கலை (ஆண்)மான்.

முனிவனாகி, என்றதனால் அடியுண்டது கலைமான் ஆயிற்று.

50. நாரிக் கொருகூ றரனார்முத னல்க வெய்த
வேரிக் கணையான் மிகநொந்துழி வேட மாறிப்
பூரித்த காம நலமெய்தும் பொழுது நின்கைச்
சோரிக் கணையா லறையுண்டுயிர் சோர்ந்து
வீழ்ந்தேன்.

[நாரிக்கு ஒரு கூறு அரனார் முதல் நல்க, எய்த வேரி கணையால் மிக நொந்துழி வேடம் மாறி, பூரித்த காமம் நலம் எய்தும் பொழுது, நின் கை சோரி கணையால் அறையுண்டு உயிர் சோர்ந்து வீழ்ந்தேன்.]

**விளக்கம் :—** நாரிக்கு...நல்க - உமைக்குத் தன் வாம பாகத்தைத் தந்த சிவபிரான் முன்னம் (எதிர்த்து அழித்த மன்மதனை) உயிர் பிழைக்கச்செய்தருளிய, (அம்மன்மதன்)எய்த வேரிக் கணையால் மிக நொந்துழி - செலுத்திய தேன் நிரம்பிய புஷ்பபாணங்களால் மிக வருந்தியபொழுது பூரித்த - மிகுந்த. சோரி - இரத்தம்.

'வேடம்'மாறி,' மான் வேஷம் கொண்டு என்ற பொருளது. காம மிகுதியால் பீடிக்கப்பட்ட முனிவன், கட்டுப்பாடின்றிச் சுகிக்கும் கருத்தில். மனைவியோடு தானும் மான்வேடம் கொண்டான் ஆயிற்று. 'நாரிக்கொரு கூறரனார்... வேரிக் கணை,' என்பது கடவுளர்களானாலும் கடக்க முடியா வன்மையது மன்மத பாணம், என்ற குறிப்பினது.

அடியுண்ட முனிவன் தன் வரலாறு கூறலைக் கூறும் இது. இதுவும், அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

51. என்போ லவின்பத் திடைநீயு மிறத்தி யென்னா
அன்போ டிறந்தான் முதற்கிந்தம னான பேரோன்
தன்போன் மகிழ்ந னுடனேசெந் தழலி னெய்திப்
பின்போ யினள்மென் பிணையானவப் பேதை
தானும்.

[என்போல் இன்பத்திடை நீயும் இறத்தி என்ன, அன்போடு இறந்தான் முதல் கிந்தமன் ஆன பேரோன்; தன்போல் மகிழ் நனுடனே செந்தழலின் எய்தி பின் போயினள் மெல்பிணையான அ பேதை தானும்.]

**விளக்கம்:—** கிந்தமன் என்ற பெயரினனான முனிவன், 'என்னைப் போல் நீயும் பெண்ணின்பம் அனுபவிக்கையில் இறப்பாய்,' என்று சபித்து, முற்றாத காதலோடு இறந்தான். புருஷன் கிரீடிக்கும் பொருட்டுப் பெண்மானான அவன் மனைவியும், கணவனைத் தகனிக்க மூட்டிய தீயில் தன்னை அழித்துக் கொண்டாள்.—என்பது பொருள்.

தன்போல் மகிழ்நன்- தனக்கு ஒத்தவனாகிய கணவன். (மென் பிணையான அப் பேதையும்) பின் போயினள்-முன்னே இறந்த கணவனைத் தொடர்ந்து, அவனுக்கும் பின்னே போயினாள்.

கணவனோடு உடன் கட்டை ஏறினோர், அவன் சென்ற உலகம் செல்வர்,— என்பர்.

**பாண்டு தபோவனம் சேரல்**

52. நினைவற்ற சாப நிலைபெற்றபி னெஞ்சின் வே
றோர்
இனைவற்று நன்மை யிதுவேயினி யென்று தேறி
மனைவைத்த காதன் மடவாருடன் மன்றல்
வேந்தன்
முனைவைத்த வாய்மை முனிக்கான முயன்று
சேர்ந்தான்.

[நினைவு அற்ற சாபம் நிலை பெற்றபின் நெஞ்சின் வேறு ஓர் இனைவு அற்று, நன்மை இதுவே இனி என்று தேறி, மனை

வைத்த காதல் மடவாருடன் மன்றல் வேந்தன் முனை வைத்த வாய்மை முனி கானம் முயன்று சேர்ந்தான்.]

**விளக்கம்:**—நினைவு அற்ற சாபம் நிலை பெற்றபின்-அறியாமல் செய்த செயலின் பயனாய்ச் சேர்ந்த சாபம் (தன்னை) வந்து நிலைத்த பின், வேறோர் இனைவு அற்று-வேறு எந்த விதமான துன்ப நினைவும் இல்லாமல். காதல் வைத்த மடவாருடன்- 'தன்னால் காதலிக்கப் பெற்ற மனைவிமாருடன். மன்றல் வேந்தன்- கிரஹஸ்தனான பாண்டு, முனை வைத்த வாய்மை- தர்மங்களில் முதன்மையாகக் கருதப்படும் வாய்மை அறத்தை மேற்கொண்ட. முனிக்கானம்- முனிவர் களுக்குரிய தான கானகம், சேர்ந்தான். 'முயன்று' என்பது 'பின் வாங்காமல்' என்ற பொருளதாகும்.

53. காண்டற் கரிய மணிப்பைம்பொற் கலனொ டாடை
வேண்டற் கரிய விடங்களின் வேட மாற்றித்
தீண்டற் கரிய திருமேனியன் றேவ ராலும்
பூண்டற் கரிய பெருமாதவம் பூண்டு கொண்டான்.

[காண்டற்கு அரிய மணி பைம்பொன் கலனொடு ஆடை, வேண்டற்கு அரிய விடயங்களின் வேடம் மாற்றி தீண்டற்கு அரிய திருமேனியன், தேவராலும் பூண்டற்கு அரிய பெரு மாதவம் பூண்டு கொண்டான்.

**விளக்கம்:**— வேண்டற்கு அரிய விடயங்களின் வேடம் மாற்றி - வேண்டிப் பெறுதற்கு அரிய இந்திரிய சம்பந்தமான விஷயங்களோடு அரசக் கோலத்தையும் ஒழித்து. தீண்டற்கு அரிய திருமேனியன்-(பிறரால்) அடைதற்கு அரிய திருமேனி விளக்கத்தை உடைய பாண்டு. ஆடை அணிகலன்களையும், இந்திரிய இச்சைகளையும் விட்டு, அரிய தவத்தைப் பாண்டு மேற் கொண்டான், என்பது பொருள்.

54. உற்றுப் புறத்துப் பகையாடி யுடன்ற வெல்லாம்
செற்றுப் புவியிற் றனியாழி செலுத்து நீரான்
பற்றற்ற யோகப் படையாலுட் பகைக ளாறும்
முற்றத் துறந்து பெருஞான முதல்வ னானான்.

[உற்று புறத்து பகை ஆடி உடன்ற எல்லாம் செற்று புவியில் தனி ஆழி செலுத்தும் நீரான், பற்று அற்ற யோகம் படையால் உள் பகைகள் ஆறும் முற்ற துறந்து பெரு ஞானம் முதல்வன் ஆனான்.]

விளக்கம்:—பகை ஆடி புறத்து உற்று உடன்ற எல்லாம்—பகைகொண்டு புறத்தே வந்தடைந்து மாறுபட்ட எல்லாப் பகை வரையும். செற்று - அழித்து. நீரான் - தன்மையன். பற்று அற்ற யோகப்படை-பற்று அறுவதனால் எய்தும் யோகமாகிய ஆயுதத்தால். உட்பகை ஆறு- காமம், குரோதம், லோபம், மதம், மாற்சரியம், என்பன. முற்றத் துறந்து-(உட்பகை ஆறையும்) அறவே ஒழித்து. பெருஞான முதல்வன் ஆனான்-சிறந்த ஞானமுனியானான்.

புறப்பகை வென்று தனியாணை செலுத்திச் சிறந்த பாண்டு, இப்பொழுது, உட்பகை வென்று ஞானமுனியாகிச் சிறந்தான்,—என்க.

55. ஆரக் குழம்பி லளைந்தார மணிந்து விம்மும்
பாரக் குசங்கள் பலதைவரும் பான்மை நீங்கி
நாரக் கமல கரசோதி நகங்கண் மீள
ஈரக் குசங்கள் கிழிக்குந்தொழிற் கேற்ற வாலோ.

[ஆரம் குழம்பில் அளைந்து ஆரம் அணிந்து விம்மும் பாரம் குசங்கள் பல தைவரும் பான்மை நீங்கி, நாரம் கமலம் கரம் சோதி நகங்கள் மீள, ஈரம் குசங்கள் கிழிக்கும் தொழிற்கு ஏற்ற (ஆல், ஓ)—அசைகள்.]

விளக்கம்:— ஆரம் குழம்பு - சந்தனக் குழம்பு. அளைந்து - தோய்ந்து; ஆரம் அணிந்து - முத்துமாலை அணிந்து. குசம் - கொங்கை. தைவரும் - வருடி மகிழும். நாரக் கமல கரசோதி நகங்கள் - நீரிலுள்ள தாமரை போன்ற கையிலுள்ள ஒளி நலம் கொண்ட நகங்கள், ஈரக்குசங்கள் - ஈரமுள்ள தருப்பைபுற்களை, கிழிக்கும் - கொய்யும், பறிக்கும். ஏற்ற - ஏற்றவாயின.

'குசம்' என்ற சொல், முலை, தருப்பை என்ற பொருள்களில் வந்துளது.

'முலை வருடி மகிழும் நகங்கள் இப்பொழுது தருப்பை கொய்வதற்கு ஏற்ற நிலையதாயின' என்று கூறும் கருத்தது செய்யுள்.

56. நாமக் கலவி நலங்கூர நயந்து நாளும்
காமக் கமலை வளர்க்கின்ற கருத்து மாற்றித்
தாமக் குழலா ரிருவோரொடு தானு மொன்றி
ஓமக் கனலே வளர்த்தானுணர் வுண்மை கண்டான்.

[நாமம் கலவி நலம் கூர, நயந்து நாளும் காமம் கனலை வளர்க்கின்ற கருத்து மாற்றி, தாமம் குழலார் இருவோரொடு தானும் ஒன்றி ஓமம் கனலே வளர்த்தான் உணர்வு உண்மை கண்டான்]

**விளக்கம் :—** நாமம் கலவி நலம் கூர - சிறந்த கலவி இன்பம் மிக. நாளும் நயந்து - நாள்தோறும் விரும்பி. தாமம் குழலார் - குந்தி, மாத்திரி. ஒன்றி - ஒன்றுபட்டு. உண்மை உணர்வு கண்டான் - மெய்யுணர்வு கண்டான், அதாவது தத்துவ ஞானம் எய்தினான், என்றபடி.

காமக் கனலை வளர்த்தலை விட்டு, தவத்தினர்க்குரிய ஓமக் கனலை வளர்த்து மெய்ஞானம் எய்தினான், என்பது கருத்து.

57. இவ்வா றரிய தவநாடொறு மேறு மெல்லைக்
கைவா ளொழிந்து சமித்தேந்திய காவன் மன்னன்
மைவா ணெடுங்கண் வரசூரன் மகளை நோக்கிச்
செவ்வாய் மலர்வான் புவிமேலுறை தெய்வ
மன்னான்.

[இ ஆறு அரிய தவம் நாடொறும் ஏறும் எல்லை கை வாள் ஒழிந்து சமித்து ஏந்திய காவல் மன்னன் மை வாள் நெடும் கண், வரசூரன் மகளை நோக்கி செவ்வாய் மலர்வான் புவிமேல் உறை தெய்வம் அன்னான்.]

தவம் ஏறும் எல்லை - தவம் முதிர்ந்து வரும் காலத்தில். சமித்து - உலர்ந்த அரசங்குச்சி. மை வாள்...மகள் - குந்தி. செவ்வாய் மலர்வான் - கூறுபவனானான்.

58. பூந்தார் வியாத முனிதாளிணை போற்றி யன்பு
கூர்ந்தார்வ முற்றி யவன்பால்வரங் கோட லெய்திக்
காந்தாரி நூறு மகவான கருப்ப மொன்று
வேந்தா தரிக்கத் தரித்தாள்வட மீனொ டொப்பாள்.

[பூந்தார் வியாத முனிதாள் இணை போற்றி, அன்புகூர்ந்து, ஆர்வம் முற்றி, அவன்பால் வரம் கோடல் எய்தி, காந்தாரி நூறு மகவு ஆன கருப்பம் ஒன்று வேந்து ஆதரிக்க தரித்தாள் வட மீனொடு ஒப்பாள்.[

**விளக்கம்:--** வியாச முனிவனைப் பூசித்ததன் பயனாய்க் காந்தாரி கருக்கொண்டதறிந்த பாண்டு மகப்பேறு பெற வேண்டும் என்னும் இச்சையினால், குந்திக்கு இது கூறினான், —என்க. ஆதரம் - அன்பு,

59. கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லா லுருக்கி யழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்
இல்லா தவர்க்கு மனைவாழ்வி னினிமை
யென்னாம்.

[கல்லா மழலை கனி ஊறல் கலந்து கொஞ்சும் சொல்லால் உருக்கி, அழுது ஓடி தொடர்ந்து பற்றி, மல் ஆர் புயத்தில் விளை யாடும் மகிழ்ச்சி மைந்தர் இல்லாதவர்க்கு மனை வாழ்வின் இனிமை என் ஆம்.]

**விளக்கம்:—** கல்லா மழலை - இயற்கையாய் அமையும் மழலைச் சொல்; அல்லது கற்றுப் பெற முடியாத மழலை. மல் ஆர் புயம் - வலிமை பொருந்திய தோள்.

மகப்பேறு இல்லாதார்க்கு மனை வாழ்க்கையின் இன்பம் இல்லை.—என்றபடி.

60. மெய்தானம் வண்மை விரதந்தழல் வேள்வி நாளும்
செய்தாலு ஞாலத் தவர்நற்கதி சென்று சேரார்
மைதாழ் தடங்கண் மகவின்முக மன்னு பார்வை
எய்தா தொழியிற் பெறுமின்ப மிவணு மில்லை.

மெய், தானம், வண்மைவிரதம், தழல் வேள்வி, நாளும் செய்தாலும் ஞாலத்தவர் நல் கதி சென்று சேரார்; மை தாழ் தடம் கண் மகவின் முகம் மன்னு பார்வை எய்தாது ஒழியின், பெறும் இன்பம் இவணும் இல்லை.]

விளக்கம் :—உண்மை பேசல், கொடுத்தல், சிறந்த விரதங்களை அனுஷ்டித்தல், தழல் வேள்வி (யாகம்) செய்தல் ஆகியவற்றை நாளும் செய்தாலும் மக்கள், மை வழியும் விசாலமான கண்களை உடைய மகவின் முகத்திலே பொருந்திய இனிய பார்வையை அடையாமற் போவாரேல். நல்ல கதியைப் பெறார்; பெறும் இன்பம் இவணும் (இவ்வுலகத்திலும்) இல்லை,—என்பது பொருள்.

இவணும். என்பதிலுள்ள உம்மை மறுமையோடு இம்மையும் இல்லை.—என்ற குறிப்பினது.

61. மென்பா லகரைப் பயவாதவர் மெய்ம்மை யாகத்
தென்பா லவர்தம் பசித்தீநனி தீர்க்க மாட்டார்
என்பா னிகழ்ந்த வினையாலிட ரெய்தி நின்றேன்
நின்பா லருளுண் டெனினுய்வ னெடுங்க ணல்லாய்.

[மெல் பாலகரை பயவாதவர் மெய்ம்மை ஆக தென்பாலவர் தம் பசி தீ நனி தீர்க்க மாட்டார்; என்பால் நிகழ்ந்த வினையால் இடர் எய்தி நின்றேன்; நின்பால் அருள் உண்டு எனின் உய்வன், நெடும் கண் நல்லாய்.]

விளக்கம் :— தென்பாலவர் - பிதிரர்கள். என்பால்... நின்றேன் - கிந்தம முனிவன் சாபத்தால் துன்பம் எய்தினவனானேன். நெடுங்கண் நல்லாய் - (விளி) குந்தியே. நின்பால் அருள் உண்டெனின் உய்வேன்-உன்னிடம் கருணை உண்டாயின் உய்வேன்; அதாவது, முனிவர், அல்லது தேவர் மூலம் சந்ததி விருத்தி செய்துகொள்,—என்றபடி.

62. இல்வாழ் பவர்க்கு மடவாரல தியாவ ரின்பம்
நல்வாழ்வு தேசு புகழ்யாவு நடத்து கிற்பார்
தொல்வா னவரின் மறையோரிற் றுறக்க பூமி
செல்வார் பெறும்பே றினிநீயருள் செய்தி யென்றான்.

[இல் வாழ்பவர்க்கு மடவார் அலது யாவர், இன்பம், நல் வாழ்வு, தேசு, புகழ் யாவும் நடத்துகிற்பார்? தொல் வானவரின் மறையோரின், துறக்கம் பூமி செல்வார் பெறும்பேறு இனி நீ, அருள் செய்தி என்றான்.]

**விளக்கம் :**—நடத்துகிற்பார் - செய்து வைக்கக் கூடியவ ராவர். துறக்க பூமி - சுவர்க்கம்.

"தேவர் அல்லது மறைவேதியர் மூலமாக நீ மகவு தரின், நான் நற்கதி பெறுவேன். அதற்கு நீ இசைய வேண்டும்," என்று பாண்டு குந்தியை வேண்டிக் கொள்ளலைக் கூறும் இது.

**மறுத்த பொன் பின்னர் இசைதல்**

63. பொற்பாவை கேள்வன் மொழிகேட்டலும்
பொன்ற நாணிச்
சொற்பால வல்லாப் பழிகூருரை சொல்வ தென்னே
வெற்பார் நதிகள் சிறுபுன்குழி மேவி னன்றோ
இற்பா லவர்க்குப் பிறர்மேன்மன மேற்ப தென்றாள்.

[பொன் பாவை கேள்வன் மொழி கேட்டலும் பொன்ற நாணி, சொல் பால அல்லா பழி கூர் உரை சொல்வது என்னே! வெற்பு ஆர் நதிகள் சிறு புன்குழி மேவின் அன்றோ, இல் பாலவர்க்கு பிறர் மேல் மனம் ஏற்பது என்றாள்.

**விளக்கம் :**—பொன்ற நாணி - உயிரழிவாள்போல் நாணி. சொற் பால அல்லா - சொல்லத்தகாத. வெற்பு ஆர் நதி - மலை யில் உற்பத்தியாதல் பொருந்திய நதி. சிறுபுன்குழி-சிறு குட்டை. இற்பாலவர் - மனைவியர்.

பிறர் மூலம் மகப்பேறு பெறல் தக்கதன்று என்று, பொற் பாவை போன்ற குந்தி உடன்பட மறுத்ததைக் கூறும் இது. நதிகள் கடலிற் பாய்தலே இயல்பு. அது புன் குட்டையில் பாய்ந்து நிலைத்தல் உண்டானால், பெண்மனம் பிறரை நாடும்; அதாவது, அது தக்கது அன்று என்று கூறியபடி.

64. பின்னும் பலகால் வருட்டிப்பிறர் பெற்றி காட்டி
மன்னன் புகல மடமாது மறுக்க மாட்டாள்
கன்னன் பிறந்த தொழியச்செழுங் கன்னி யாகி
முன்னம் பெறுமா மறைமேன்மை மொழிந்திட்டாளே.

[பின்னும் பலகால் வருட்டி பிறர் பெற்றிகாட்டி மன்னன் புகல மட மாது மறுக்க மாட்டாள், கன்னன் பிறந்தது ஒழிய செழும் கன்னி ஆகி. முன்னம் பெறு மா மறை மேன்மை மொழிந்திட்டாள் (ஏ : அசை.) ]

விளக்கம் :—வருட்டி - வற்புறுத்தி இசையுமாறு கூறி. பெற்றி - தன்மை. பிறர் பெற்றி காட்டி - பிறர் (மறை வேதியர் மூலம்) மகப்பேறு பெற்ற தன்மையைக் கூறி. மறுக்க மாட்டாள்- மறுக்க முடியாதவளாய். முன்னம் பெறு மா மறை - முன்னம் (துர்வாசரிடமிருந்து) பெற்ற மந்திரம்.

வியாசர் மூலம் தானும், திருதராட்டிரன். விதுரன் ஆ பவரும் பிறந்ததையும், சௌதாஸன் என்பவன், தன் மனைவியிடம் வசிஷ்டர் மூலம் அச்மகன் என்ற புதல்வனைப் பெற்றதையும் பாண்டு குந்திக்கு எடுத்துக் கூறினான், என்க.

'பலகால் வருட்டி' என்பதற்குப் பதிலாக வகுந்தி என்னும் பாடமுளது; பிரார்த்தித்து. என்பது பொருள்.

65. மருமாலை வல்லி யுரைகேட்டு மகிழ்ச்சி கூரும்
பெருமா தவத்தோன் பணித்தேவிய பின்னர்
முன்னர்த்
தருமா திபனைக் கருத்தான்மடத் தைய லுன்னி
அருமா மறையா லழைத்தாண்மற் றவனும்வந்தான்.

[மரு மாலை வல்லி உரை கேட்டு மகிழ்ச்சி கூரும் பெரு மா தவத்தோன் பணித்து ஏவிய பின்னர், முன்னர் தருமாதிபனை கருத்தால் மடம் தையல் உன்னி, அரும மா மறையால் அழைத்தாள்; மற்று அவனும் வந்தான்.]

விளக்கம்:—மரு மாலை வல்லி - குந்தி. உரை கேட்டு - (அவள்) கூறியதைக் கேட்டு. மகிழ்ச்சி கூரும்... பின்னர்-மகிழ்ச்சி மிகக் கொண்ட பெரு மாதவத்தோனாகிய பாண்டு தன் சம்மதத்தைத் தெரிவித்து, ஏவிய பின்னர். மடத் தையல் தருமாதிபனை கருத்தால் உன்னி - குந்தி யமதர்மராசனை மனத்தால் நினைத்து, (துர்வாசன் தந்த) அரிய சிறந்த மந்திரத்தால் அழைத்தாள்; அவனும் வந்தான், என்றபடி. மற்று:அசை.

66. வந்தித்த தெய்வ மெதிர்வந்துழி மன்னு கேள்வன்
சிந்தித்த சிந்தை யினளாய்மலர்ச் சேக்கை சேர்ந்து
குந்தித் தெரிவை நிறைமாமதிக் கூட்ட முற்ற
அந்தித் தெரிவை நிகரென்ன வழகின் மிக்காள்.

[வந்தித்த தெய்வம் எதிர் வந்துழி மன்னு கேள்வன் சிந்தித்த சிந்தையினளாய், மலர் சேக்கை சேர்ந்து, குந்தி தெரிவை நிறை மா மதி கூட்டம் உற்ற அந்தி தெரிவை நிகர் என்ன அழகின் மிக்காள்.]

**விளக்கம் :**—வந்தித்த....வந்துழி, குந்தி தெரிவை, மன்னு கேள்வன் சிந்தித்த... சேர்ந்து, நிறைமதி கூட்டம் உற்ற... அழகின் மிக்காள்,—என்பது அன்வயம்.

வந்தித்த - வணங்கி அழைத்த, மன்னு கேள்வன்—பொருந்திய கணவன், நிறை மாமதி கூட்டம் உற்ற அந்தித் தெரிவை - பூர்ணசந்திரனின் |கலவியைப் பெற்ற அந்தி என்னும் பெண்ணுக்கு (அழகில்) நிகர் என்று சொல்லும்படி, அழகின் மேம்பாடு உடையவளானாள்.

மன்னு கேள்வன் சிந்தித்த சிந்தையளாய்ச் சேக்கை சேர்ந்து, என்றது. அவள் பழுதற்ற கற்பினள் என்பதைக் குறிக்கும். தேவ சம்பந்தத்தால், அழகின் மிக்காளாயினாள்,

## அறுசீர் ஆசிரியவிருத்தம்

### தருமன் பிறத்தல்

67. சிவமுற முகூர்த்தம் வாரந் தினந்திதி கரணம் யோகம்
நவமென வழங்கு கோளும் நன்னிலை நின்ற
போதில்
அவனியை யொருகோ லோச்சி யாளுமென்
றறிவின் மிக்க
தவநெறி முனிவர் கூறப் பிறந்தனன் றருமன்
மைந்தன்.

[சிவம் உற முகூர்த்தம் வாரம் தினம் திதி கரணம் யோகம் நவம் என வழங்கும் கோளும், நல் நிலை நின்ற போதில்,

அவனியை ஒருகோல் ஓச்சி ஆளும் என்று அறிவின் மிக்க தவம் நெறி முனிவர் கூற பிறந்தனன் தருமன் மைந்தன்.]

**விளக்கம் :**—(முகூர்த்தம்....யோகம்) சிவம் உற - மங்களகரமாய் அமைந்திருக்க. தினம் - நட்சத்திரம். நவம் என... கூறத் தருமன் மைந்தன் பிறந்தனன். நவம் என வழங்கும் கோள் - ஒன்பது என்று சொல்லப்படும் கிரகங்கள்.

யமதர்மராஜனது அருளின் பிறந்த மைந்தனாதலால், தர்மபுத்தரன் என்று இவன் அழைக்கப்படலானான். யுதிஷ்டிரன் என்பது இவன் பெயர். ஐப்பசி மாதம் சுக்லபக்ஷ பஞ்சமியில், கேட்டை தினத்தில் பிறந்தான் என்று முதல் நூல் கூறும்.

68. உதிட்டிரன் பிறந்த காலை யுலகினி லுயர்ந்தோர் யாரும்
வதிட்டனை முதலா வெண்ணு முனிவரும் வானு ளோரும்
நிதிப்பயன் பெற்றார் போல நேயமோ டுவகை கூர்ந்தார்
மதித்தநன் னிமித்தம் யாவும் மங்கல நிகழ்ந்த வன்றே.

[உதிட்டிரன் பிறந்த காலை உலகினில் உயர்ந்தோர் யாரும் வதிட்டனை முதலா எண்ணும் முனிவரும் வான் உளோரும், நிதி பயன் பெற்றார்போல நேயமோடு உவகை கூர்ந்தார்; மதித்த நல் நிமித்தம் யாவும் மங்கலம் நிகழ்ந்த அன்றே.]

**விளக்கம் :**—நேயமோடு - சினேக உணர்ச்சியோடு. மதித்த- நல்லனவாகக் கருதப்பெற்ற. மங்கலம் நிகழ்ந்த - மங்களமாக நிகழ்ந்தன. அன்றே,—அசையோடு தேற்றமும் ஆகும்; அல்லது, பிறந்த அத் தினத்திலே, என்றும் கொள்ளலாம்.

69. தண்பிறை யெழுச்சி கண்ட சலநிதி யெனவே மைந்தன்
பண்புடை வதன நோக்கிப் பார்த்திவன் பாண்டு வென்பான்
கண்பனி துளிப்ப நெஞ்சங் கனிந்தினி துருக மேனி
வண்புள கரும்ப மேன்மேல் வரம்பிலா மகிழ்ச்சி கூர்ந்தான்.

[தண் பிறை எழுச்சி கண்ட சலநிதி எனவே வளரலான் மைந்தன் பண்பு உடை வதனம் நோக்கி பார்த்திவன் பாண்டு என்பான், கண் பனி துளிப்ப, நெஞ்சம் கனிந்து இனிது உருக, மேனி வள் புளகு அரும்ப, மேல்மேல் வரம்பு இலா மகிழ்ச்சி கூர்ந்தான்.]

**விளக்கம்:** சலநிதி - சமுத்திரம். பார்த்திவன் - (பார்த்திபன்) அரசன். மேனி வள் புளகு அரும்ப - உடம்பில் மயிர்க்கூச்சு எழ.

சலநிதி-ஜலநிதி (கடல்). மதி கண்ட கடல் பொங்குவது போல், பாண்டு மகிழ்ந்தான் என்றுங் கொள்ளலாம்.

70. **அற்றனடுயர மெல்லா மருந்தவப் பயனான் மைந்தன்**
**பெற்றனள் குந்தி யென்னும் பேருரை கேட்ட வன்றே**
**உற்றனள் பொறாமை கல்லா லுதரமுட் குழம்பு மாறு**
**செற்றன டனதுகேடு மாக்கமுஞ் சிந்தி யாதாள்.**

[அற்றனள் துயரம் எல்லாம் அரும் தவ பயனால் மைந்தன் பெற்றனள் குந்தி, என்னும் பேர்உரை கேட்ட அன்றே (காந்தாரி) உற்றனள் பொறாமை, கல்லால் உதரம் உள் குழம்புமாறு செற்றனள் தனது கேடும் ஆக்கமும் சிந்தியாதாள்.]

**விளக்கம்:**—'அருந்தவப் பயனால் குந்தி மைந்தனை பெற்றாள்; அதனால் துயரமெல்லாம் அற்றவளானாள்,' என்கிற எங்கும் பரவிய சொல்லைக் கேட்ட அப்பொழுதே, காந்தாரி பொறாமை கொண்டாள், (செய்யப் போகும் செயலால் நேரக் கூடியது) கேடாகுமோ, ஆக்கமாகுமோ என்பதை நினையாதவளாய்க் காந்தாரி சூல் கொண்ட தன் உதரத்தை (வயிற்றை)க் கல்லால் அது உட்குழம்புமாறு செற்றனள் (மோதிக் கொண்டாள்),—என்பது பொருள்.

காந்தாரியின் கருப்பம் நூறு மகவைக் கொண்ட கருப்பமாதலால், அது இரண்டாண்டு கழிந்தும் வெளிப்படவில்லை. அதை அவள் அறியாது, குந்திக்கு மகன் பிறந்த செய்தி கேட்டுப் பொறாமையால், வயிறு உட்குழம்புமாறு செய்து கொண்டாள், —என்க.

**குழம்பிய கரு தரை வீழல்**

71. **மையறு சுபலன் கன்னி வயினிடைக் கருப்பஞ்சேரப்**
**பையொடு குருதி பொங்கப் பார்மிசை விழுந்த தாகச்**

செய்யவன் விழுந்த திக்கிற் செக்கர்வா
னென்னச் சென்று
மெய்யுடை யரிய கேள்வி வேள்விகூர் வியாதன்
கண்டான்.

[மை அறு சுபலன் கன்னி வயினிடை கருப்பம் சேர பையொடு குருதி பொங்க, பார்மிசை விழுந்தது ஆக, செய்யவன் விழுந்த திக்கில் செக்கர் வான் என்ன, சென்று மெய் உடை அரிய கேள்வி, வேள்வி கூர் வியாதன், கண்டான்.]

**விளக்கம்:**—மை அறு சுலபன் கன்னி வயினிடை கருப்பம் பையொடு சேர, செய்யவன் விழுந்த திக்கில் செக்கர் வான் என்ன, குருதி பொங்க பார்மிசை விழுந்ததாக, மெய்யுடை அரிய கேள்வி, வேள்வி கூர் வியாதன், சென்று கண்டான்,— என்பது அன்வயம்.

சுபலன் மகளான காந்தாரியின் கரு, கருப்பப்பையோடு பூமியில் விழலும், அதை வியாச முனிவன் சென்று கண்டான்,— என்பது பொருள். செய்யவன் (சூரியன்) விழுந்த திக்கின் செக்கர் வானம், குருதி பெருக விழுந்த கருப்பப் பைக்கு உவமை ஆயிற்று.

மெய்யுடை...வியாதன் - மெய்யான அரிய கேள்வியினாலும் யாகம் செய்தலினாலும் மிக்கானான வியாச முனிவன்.

72. சஞ்சல மான கோசத் தசையினைத் தாழி தோறும்
எஞ்சல வாக நூறு கூறுசெய் திழுதி லேற்றி
நெஞ்சலர் கருணை யாள னின்றவக் குறையுஞ்
சேர்த்தி
அஞ்சில்வார் குழலி யாகென் றாங்கொரு கடத்தில்
வைத்தான்.

[சஞ்சலம் ஆன கோசம் தசையினை தாழி தோறும் எஞ்சல ஆக நூறு கூறு செய்து இழுதில் ஏற்றி, நெஞ்சு அலர் கருணை ஆளன். நின்ற அ குறையும் சேர்த்தி அம் சில் வாரி குழலி ஆக என்று ஆங்கு ஒரு கடத்தில் வைத்தான்]

**விளக்கம்**—நெஞ்சு அலர் கருணையாளன், சஞ்சலமான கோசத் தசையினை எஞ்சலவாக நூறு கூறு செய்து தாழி தோறும (இடப் பெற்றுள்ள) இழுதில ஏற்றி, நின்ற அக்குறை

யும், அஞ்சில் வார்குழலி ஆகென்று, ஒரு கடத்தில் சேர்த்தி வைத்தான்.—என்று அன்வயிக்க.

சஞ்சலமான - குழம்பிக் கெட்ட. கோசத் தசை - கர்ப்பப் பையினுள் இருந்த மாமிசம். எஞ்சலவாக - குறையறாதனவாக, தாழிதோறும் (உள்ள) இழுதில் ஏற்றி - எல்லாச் சிறு பானைகளிலும் இடம்பெற்ற நெய்யில் வைத்து. நெஞ்சு அலர் கருணையாளன் - வியாச முனிவன். நின்ற அக்குறை - எஞ்சியிருந்த மாமிச பாகம். அம்சில் வார் குழலி - பெண். கடத்தில் சேர்த்தி வைத்தான் - ஒரு பானையில் இட்டு வைத்தான்.

73. கருவுறு தாயை நோக்கிக் கையறு மென்று கன்றி
வெருவுறல் கற்பின் மிக்காய் வேறுசெய் தசைகள் யாவும்
உருவுற நிரம்பித் தாமே யுற்பவிப் பளவுங் கையால்
மருவுறல் வழுவு றாதென் வரமென வரதன் போனான்.

[கரு உறு தாயை நோக்கி கையறும் என்று கன்றி வெருவுறல் கற்பின் மிக்காய், வேறு செய் தசைகள் யாவும் உரு உற நிரம்பி தாமே உற்பவிப்பு அளவும் கையால் மருவுறல், வழு உறாது என் வரம் என, வரதன் போனான்.]

**விளக்கம்:**— கறு உறு தாய்-காந்தாரி. கையறும் - (கருப்பம்) கெட்டு அழியும். கன்றி - மனம் அழிந்து, சோர்ந்து. வெருவுறல் - அஞ்சாதே. வேறு செய் - வேறு வேறாகப் பிரிக்கப் பெற்ற. உருவுற நிரம்பி - உருவம் அடையும்படி வளர்ந்து. தாமே உற்பவிப்பளவும்-தாமே வெளிப்படும் வரையில். கையால் மருவுறல் - கையால் தொடாதே. என் வரம் வழு உறாது என்று சொல்லி வரதன் (வியாசன்) போனான்,—என்க.

'தாழியின் இட்ட தசைகள் உருக்கொண்டு தாமே வெளி வரும் வரை, அவற்றைக் கைபடாது காப்பாற்றுக,' என்று கூறி வியாசன் அகன்றான்,—என்றவாறு.

74. காம்பென நிறந்த தோளாள் கருவயிற் றிருப்ப தொப்பத்
தேம்பயி னறுநெய் பெய்த கலங்களைச் சேம மாக

ஆம்பரி வுடனே யாற்றி யீற்றளை யடைந்து வைகும்
பாம்பெனப் பருவ நோக்கி யிருந்தனள்

பழுதி லாதாள்.

[கம்பு என நிறத்த தோளாள் கரு வயிறு இருப்பது ஒப்ப, தேம்பயில் நறு நெய் பெய்த கலங்களை சேமம் ஆக, ஆம் பரிவு டனே ஆற்றி, ஈற்று அளை அடைந்து வைகும் பாம்பு என பருவம் நோக்கி இருந்தனள் பழுது இலாதாள்.]

**விளக்கம்:—** பழுது இலாதாள் (ஆன) காம்பு என நிறத்த தோளாள், தேம் பயில் நறு நெய் பெய்த கலங்களை, கரு வயிறு இருப்பது ஒப்ப, சேமமாக, ஆம் பரிவுடன் ஆற்றி, ஈற்று அளை அடைந்து வைகும் பாம்பென, பருவம் நோக்கி இருந்தாள்,— அன்வயம்.

காம்பு என நிறத்த தோளாள் - மூங்கில் போன்ற பளபளப்புள்ள தோள்களைஉடைய காந்தாரி. தேம் பயில் நறுநெய் - இனிமை பொருந்திய நல்ல மணமுள்ள நெய். சேமமாக - க்ஷேமமாக, பத்திரமாக, ஆம் பரிவுடன் ஆற்றி-எழுந்ததாகிய மனப்பரிவுடன் பாதுகாத்து. ஈற்று - ஈனப்பட்டதாகிய முட்டைகளை, அளை-(தன்னிடத்தே கொண்ட) புற்றினை, அடைந்து வைகும்-அடைந்து (பாம்புக் குட்டிகள் வெளிப்படலை எதிர்நோக்கித்) தங்கியிருக்கும், பாம்பு என, பருவம் நோக்கி இருந்தாள் பாம்பு போல-கரு உருக்கொண்டு வெளிப்படும் காலத்தை எதிர்பார்த்தவளாய் இருந்தாள்.

'பாம்பென,' என்ற உவமையில் கொடுமை தொனித்தல் காண்க. ஈனப்பட்டது, ஈற்று. எனவே, அது 'ஈன்ற முட்டை' என்ற பொருளதாகின்றது.

### வீமன் தோற்றம்

75. ஈண்டுறு நிகழ்ச்சி கேட்டே யாதவன் மகளை

நோக்கிப்

பாண்டும னிரந்து பல்காற் பணித்தலும் பவனன்

றன்னை

மீண்டுமம் மறையா லுன்னி யழைத்தனள் விரைவி

னோடி

ஆண்டுவந் தவனும் பூத்த கொடியனா ளாகந்

தோய்ந்தான்.

[ஈண்டு உறு நிகழ்ச்சி கேட்டே யாதவன் மகளை நோக்கி பாண்டு மன் இரந்து பல்கால் பணித்தலும், பவனன் தன்னை மீண்டும் அ மறையால் உன்னி அழைத்தனள்; விரைவின் ஓடி ஆண்டு வந்து அவனும் பூத்த கொடி அனாள் ஆகம் தோய்ந் தான்.]

விளக்கம்:—யாதவன் மகள் - யது குலப் பெண்ணான குந்தி. பாண்டு மன் பல் கால் இரந்து பணித்தலும் - பாண்டு மன்னன் பல முறை பிரார்த்தித்துக் கூறலும். பவனன் - வாயு பகவான். அவனும் அப்பொழுது விரைவின் ஓடிவந்து, பூத்த கொடியனாளைக் கூடினான்,—என்றபடி.

76. நெஞ்சுற மணந்து மீள நெடுங்கலை வாக னேகச்
செழுஞ்சுட ருச்சி யெய்திச் சிறந்ததோர் முகூர்த்தந் தன்னில்
அஞ்சனை யளித்த பெற்றோ ளனுமனே யுவகை யென்ன
வெஞ்சின வீமன் றன்னைப் பயந்தனள் விரத மிக்காள்.

[நெஞ்சு உற மணந்து மீள நெடும் கலை வாகன் ஏக, செம் சுடர் உச்சி எய்தி சிறந்தது ஓர் முகூர்த்தம் தன்னில், அஞ்சனை அளித்த பொன் தோள் அனுமனே உவமை என்ன, வெம்சினம் வீமன் தன்னை பயந்தனள் விரதம் மிக்காள்.]

விளக்கம்: —நெடுங்கலை வாகன் - ஆண்மானை வாகனமாக உடைய வாயு பகவான். (அவன்) நெஞ்சுற மணந்து மீள ஏக - மனம் பொருந்தக் கூடி மகிழ்ந்து மீண்டு செல்லவும். செஞ்சுடர் உச்சி எய்தி சிறந்ததோர் முகூர்த்தம் தன்னில் - சூரியன் உச்சியை அடைந்ததால் சிறந்ததாகிய ஒரு நல்லவேளையில். விரதம் மிக்காள் - விரதானுஷ்டானங்களால் சிறந்தவளான குந்தி.

இரவிலோ பகலிலோ பதினைந்து இருபது நாழிகைக்குள் ஜனிப்பவர் உலகில் பிரகாசிப்பர், என்று சோதிட சாத்திரம் கூறும்.

77. தண்பரி மளமென் சாயற் றந்தையுந் திசை கடோறும்
எண்பெறு முயிர்கட் கெல்லா மிதமுறு பொலிவின்வீச

நண்புடை யனலன் றானு நலமிகு நண்பு தோன்றப்
பண்புற வலம்வந் தோங்கிப் பரிவுடன் விளக்கஞ்
செய்தான்.

[தண் பரிமளம் மெல் சாயல் தந்தையும் திசைகள் தோறும் எண் பெறும் உயிர்கட்கு எல்லாம் இதம் உறு பொலிவின் வீச நண்பு உடை அனலன் தானும் நலம் மிகு நண்பு தோன்ற, பண்பு உற வலம் வந்து ஓங்கி பரிவுடன் விளக்கம் செய்தான்.]

**விளக்கம்** —: தண் பரிமள மென் சாயல் தந்தை - வாயு பகவான், (சாயல் - ஸ்பரிசம், (touch, contact), எண் பெறும் உயிர்கள் - (புத்தியின் இயக்கம் உடையவனாக) மதிக்கப்படும் பிராணிகளாகிய மக்கள். இதம் உறு பொலிவின் வீச - நன்மை, அல்லது இனிமை அதிகம் உண்டாகுமாறு வீச. நண்புடை அனலன் - (வாயுவோடு) நட்புடைய அக்கினி. பண்பு உற - நல்ல சகுனமாக. வலம் வந்து ஓங்கி பரிவுடன் விளக்கம் செய்தான் - (அக்கினிகாரியம் செய்வோர் மனையில்) வலமாகச் சுழலும் சுவாலையுடன் மேலோங்கி எழுந்து அன்பு கொண்டவனாய் விளங்கினான்.

'இதம் உறு பொலிவு,' என்பதிலுள்ள, உறு, பொலிவு என்பன, மிகுதிப் பொருளன. காற்று இனிமையாய் வீசலும், அக்கினி வலமாகச் சுழலலும், சுப நிமித்தங்கள் என்பர்.

### துரியோதனாதியர் தோன்றல்

78. அன்னநா ளனிலன் மைந்தன் பிறந்தன னாக
வற்றை
முன்னைநா ளருக்கன் வேலை முழுகிய முகூர்த்தந்
தன்னில்
இன்னநா ளுருவ முற்றியெழில்பெறு மென்று
முன்னோன்
சொன்னநாள் வழுவு றாமற் சுயோதனன் றோன்றி
னானே.

[அன்ன நாள் அனிலன் மைந்தன் பிறந்தனன் ஆக, அற்றை முன்னை நாள் அருக்கன் வேலை முழுகிய முகூர்த்தம் தன்னில், இன்னநாள் உருவம் முற்றி எழில் பெறும் என்று முன்னோன் சொன்ன நாள் வழு உறாமல் சுயோதனன் தோன்றினானே]

**விளக்கம்:**—அனிலன் - வாயு. 'அற்றை முன்னை நாள் சுயோதனன் தோன்றினான் - இந்த நாளில் (கரு) உருவம் முதிர்ந்து அழகிய மகவு ஆகும் என்று (முன்னோனாகிய) வியாசன் சொன்ன நாள் தவறாமல் சுயோதனன் தோன்றி, னான் (ஏ: அசை).

இதனால் துரியோதனன் தருமனுக்குப் பின்னவனும், வீமனுக்கு முன்னவனும் ஆகின்றான்.

79. வாரியி னதிர்ந்து விம்மு மங்கல முழவ மேன்மேல்
ஓரியின் குரலா லோதை யொடுங்கின விடங்க டோறும்
பாரிய குலத்தோர் கண்ணி னுவகை நீர் பனிக்கு முன்னே
சோரியந் தரத்தி னின்றுஞ் சொரிந்தது சோனை மேகம்.

[வாரியின் அதிர்ந்து விம்மும் மங்கலம் முழவம், மேன்மேல் ஓரியின் குரலால் ஓதை ஒடுங்கின; இடங்கள் தோறும் பாரிய குலத்தோர் கண்ணின் உவகை நீர் பனிக்கும் முன்னே, சோரி அந்தரத்தில் நின்றும் சொரிந்தது சோனை மேகம்.]

**விளக்கம்:**—வாரியின்......ஓசை ஒடுங்கின - சமுத்திரம்போல் அதிர்ந்து முழங்கும் மங்கல முரசங்கள், ஓரியின் (நரியின்) குரலால், ஓசை அடங்கினவாயின. இடங்கள் தோறும் - அத்தின புரியின் எல்லாவிடங்களிலும். பாரிய குலத்தோர் - பெருங்குல மக்கள். உவகைநீர் - ஆனந்தக் கண்ணீர். "சோனை மேகம் அந்தரத்தினின்றும் சோரி சொரிந்தது," என்பது ஈற்றடியின் அன்வயம். சோனைமேகம் - இடையறாத பெருமழை பொழியும் மேகம். சோரி - இரத்தம்.

துரியோதனன் தோன்றியபொழுது உண்டான தீ நிமித்தங்கள் இவை. 'பாரிய' என்பது 'பருமை' என்ற பண்புச் சொல்லின் அடியாக வந்த குறிப்புப் பெயரெச்சமாகும்.

80. கோள்களி னிலையாற் றீமை கொண்டன முகூர்த்தந் தன்னில்
தேள்களிற் கொடிய மற்றைச் சிறுவருஞ் சேர வோரோர்

நாள்களிற்பிறந்த பின்னர் நங்கையு மொருத்தி
வந்தாள்
தோள்களிற் கழையை வென்ற துச்சளை யென்னும்
பேராள்

[கோள்களின் நிலையால் தீமை கொண்டன முகூர்த்தம் தன்னில் தேள்களின் கொடிய மற்றை சிறுவரும் சேர ஓர் ஓர் நாள்களில் பிறந்த பின்னர், நங்கையும் ஒருத்தி வந்தாள், தோள்களின் கழையை வென்ற துச்சளை என்னும் பேராள்],

**விளக்கம்:**—கோள்கள் - கிரஹங்கள், கொண்டன - கொண்டனவான. சிறுவர் - தம்பியர், தொண்ணூற்றொன்பதின்மர். சேர ஓரோர் நாள்களில் பிறந்த பின்னர் - அடுத்தான ஒவ்வொரு நாள்களில், அதாவது அடுத்தடுத்து ஒருவராக (தொண்ணூற்றொன்பதின்மரும்) பிறந்த பிறகு,—துச்சளை பிறந்தாள். தோள்களில் (தோள்களினால்) கழையை (மூங்கிலை) வென்ற துச்சளை பேராள் (ஆகிய) நங்கையும் ஒருத்தி வந்தாள், என்றபடி.

துரியோதனன், பீமனுக்கு முன் பிறந்தவன். அவன் தம்பியர் பீமனுக்குப் பின் பிறந்தவர்,

81. பின்னிய புதல்வ ராலும் பிறந்தமென் புதல்வி யாலும்
துன்னிய மகிழ்ந னாலுந் துலங்கிய சுபலன் பாவை
தன்னிகர் பரிதி யாலும் சதவித ழாலுஞ் செம்பொற்
கன்னிகை யாலுஞ் சோதி கலந்தசெங்கமலம்
போன்றாள்.

[பின்னிய புதல்வராலும், பிறந்த மெல் புதல்வியாலும் துன்னிய மகிழ்நனாலும் துலங்கிய சுபலன் பாவை, தன் நிகர் பரிதியாலும், சதம் இதழாலும், செம் பொன் கன்னிகையாலும் சோதி கலந்த செம்கமலம் போன்றாள்].

**விளக்கம்—:**பின்னிய - நெருங்கிய. துன்னிய - அன்பின் நெருங்கிய. துலங்கிய - விளங்கிய. சுபலன் பாவை - காந்தாரி, தன் நிகர் பரிதி - தனக்குத் தானே நிகராகும் சூரியன். சதம் இதழ்- நூறு இதழ்கள். கன்னிகை - பொகுட்டு, தாமரைப் பூவினில் ஓர் உறுப்பு. சோதி கலந்த - பிரகாசம் பொருந்திய. கமலம் - தாமரை.

தாமரை விளக்கம் பெறுவது, சூரியனாலும், நெருங்கிய இதழ்களாலும், கன்னிகையாலும் (கன்னிகை - பொகுட்டு). அதைப்போல், கமலம் போன்றவளான காந்தாரி, புதல்வர், கணவன், கன்னிகை (புதல்வி) ஆயவர்களால் பொலிவு பெற்று விளங்கினாள்,—என்றபடி,

சதவிதழ், புதல்வர்; பரிதி, மகிழ்நன்; கன்னிகை (பொகுட்டு) புதல்வி; கமலம், காந்தாரி.

அருச்சுனன் பிறத்தல்

82. பான்மொழிக் குந்தி மீண்டும் பாண்டுவி னேவல் பெற்று
வான்மொழி மறையா லுன்னி வானவர்க் கரசை நோக்க
மேன்மொழி வதுமற் றென்கொல் விடுவனோ விரைவின் வந்து
தேன்மொழித் தெரிவை மெய்யுஞ் சிந்தையுங் களிக்கச் சேர்ந்தான்.

[பால் மொழி குந்தி மீண்டும் பாண்டுவின் ஏவல் பெற்று வான் மொழி மறையால் உன்னி வானவர்க்கு அரசை நோக்க மேல் மொழிவது மற்று என்கொல்? விடுவனோ விரைவின் வந்து தேன் மொழி தெரிவை மெய்யும் சிந்தையும் களிக்க சேர்ந்தான்.]

**விளக்கம்:**—வான் மறை மொழியா வானவர்க்கு அரசை உன்னி நோக்க (எதிர் நோக்கி நிற்க),— மற்று, மேல் மொழிவது என் கொல் - இனி மேலே நிகழ்ந்ததை (நாம்) சொல்ல வேண்டுமோ! விடுவனோ (மந்திரத்திற்கு அடங்கி வாராது) விடுவானோ! வந்தான், என்றபடி, விரைவில் வந்து அவளைக் கூடினான்.

83. எங்குநன் நிமிந்தஞ் செல்ல விருநில மகிழ்ச்சி கூரப்
பங்குனி நிறைந்த திங்க ளாதபன் பயிலு நாளில்
வெங்குனி வரிவில் வாகை விசயனும் பிறந்தான் வென்றிப்
பங்குன னென்று நாமம் பகுதியாற் படைத்திட் டானே.

[எங்கும் நல் நிமித்தம் செல்ல, இரு நிலம் மகிழ்ச்சி கூர, பங்குனி நிறைந்த திங்கள் ஆதபன் பயிலும் நாளில், வெம் குனி வரிவில் வாகை விசயனும் பிறந்தான்; வென்றி பங்குனன் என்னும் நாமம் பகுதியால் படைத்திட்டானே.]

**விளக்கம்:**—(நல் நிமித்தம்) செல்ல - உண்டாக, தோன்ற. பங்குனி நிறைந்த திங்கள் - பங்குனி மாதத்தில் நிறைமதியைக் கொண்ட பௌர்ணமியில், ஆதபன் பயிலும் நாளில் - சூரியன் உத்திரத்தில் தோன்றும் பங்குனி உத்தர நாளில்,—விசயன் பிறந்தான். பங்குனன் - பல்குனன். பகுதியால் - பிறந்த தினத்தின் தன்மையால்.

பங்குனி உத்திரத்தில் பிறந்ததால் அவன் பல்குனன், என்ற பெயரினன் ஆனான், பல்குனன், என்பது பங்குனன் எனத் திரிந்து நின்றது. உத்திர நட்சத்திர தேவதை சூரியன்; எனவே அந்நாள், 'ஆதபன் பயிலும் நாள்' எனப்பட்டது.

84. கற்பக மலர்கள் சிந்திக் கடவுளர் கணங்க ளாட
வெற்பக முனிவ ரீண்டி மங்கல வேதம் பாடப்
பொற்பக முழவு விம்மப் புரிவளை முழங்கி யார்ப்ப
நற்பக லிதுவென் றெல்லா வுலகமு நயந்த வன்றே.

[கற்பகம் மலர்கள் சிந்தி கடவுளர் கணங்கள் ஆட, வெற்பு அகம் முனிவர் ஈண்டி மங்கலம் வேதம் பாட, பொற்பு அகம் முழவு விம்ம, புரிவளை முழங்கி ஆர்ப்ப, நல் பகல் இது என்று எல்லா உலகமும் நயந்த அன்றே.]

**விளக்கம் :**—பொற்பு அகம் முழவம் விம்ம - அழகைத் தன்னிடத்தே கொண்ட முரசுகள் சப்திக்க. புரிவளை - உட்சுழியுள்ள சங்கு. முழங்கி ஆர்ப்ப - பேரொலி செய்து ஒலிக்க. நல்பகல் இது என்று உலகமும் நயந்த - நல்ல நாள் இது என்று உலகத்தார் எல்லோரும் விரும்பிப் போற்றினர். அன்றே: அசை, தேற்றமும் ஆகும்.

பல்குனன் பிறந்த பொழுது உண்டான நன்னிமித்தங்களைக் கண்டு, உலகத்தோர் மகிழ்ந்தனர்,—என்க.

நகுல சகதேவர் தோற்றம்

85. இறைவனு மகிழ்ந்து பின்னும் யாதவிக்
குரைப்ப வந்த
மறையினை முறையிற் பெற்ற மத்திர ராசன் கன்னி

குறைவற விருவர் வேண்டுங் குமரரென் றுன்னி
நின்றாள்
நிறையுடை யிரவி மைந்த ரிருவரு நினைவின்
வந்தார்.

[இறைவனும் மகிழ்ந்து பின்னும் யாதவிக்கு உரைப்ப, அந்த மறையினை முறையில் பெற்ற மத்திரராசன் கன்னி, குறைவு அற இருவர் வேண்டும் குமரர் என்று உன்னி நின்றாள்; நிறை உடை இரவி மைந்தர் இருவரும் நினைவின் வந்தார்.]

**விளக்கம் :**—யாதவிக்கு உரைப்ப - மந்திரத்தை (மாத்திரிக்கு உபதேசிக்குமாறு பாண்டு) குந்திக்குச் சொல்ல. குறைவு அற - (தனக்குப் பிள்ளை இல்லாக்) குறை நீங்க. 'குமரர் இருவர் வேண்டும்' என்று உன்னி நின்றாள். நிறை உடை இரவி மைந்தர் - நற்குணங்களால் நிறைவினை உடைய சூர்ய புத்திரர் களான அச்வினி தேவர்க்ள். நினைவின் வந்தார் - அவள் நினைத்தபடியே வந்தனர்.

அச்வினி தேவர் இரட்டையராவர்.

86. மருவருங் குழலி யாயு மறையினால் வரிசை பெற்ற
இருவரு மொருவர் போல வின்புற மணந்த போதில்
பருவரல் யாது மில்லாப் பாலக ரிருவர் சேரக்
கருவிளைந் துதித்தார் யாருங் கண்ணெனக்
காணு நீரார்.

[மருவரும் குழலி ஆயும் மறையினால் வரிசை பெற்ற இருவரும் ஒருவர்போல இன்புற மணந்தபோதில் பருவரல் யாதும் இல்லா பாலகர் இருவர் சேர கருவிளைந்து உதித்தார்; யாரும் கண் என காணும் நீரார்.]

**விளக்கம் :**—மரு வரும் குழலி - மாத்திரி. ஆயும் - தியானித்து உச்சரித்த. வரிசை பெற்ற இருவரும் - (தேவ வைத்தியர்கள் என்ற) சிறப்பைப் பெற்ற அச்வினி தேவர் இருவரும். இன்புற - (மாத்திரி) இன்பம் அடையும்படி, பருவரல் - துன்பம். பாலகர் இருவர் சேர கரு விளைந்து உதித்தார் - இரண்டு குழந்தைகளும் சேர்ந்து கருப்பத்தில் முதிர்ந்து பிறந்தனர். அக் குழந்தைகள் எல்லோராலும் கண்போல் மதிக்கப்படும் நற்குண சீலர்கள்.

87. சசிகுல நகுல னென்றுந் தம்பிசா தேவ னென்றும்
விசயனோ டெண்ணும் வீமன் மேதகு
தரும னென்றும்
அசைவறு சிங்க சாப மனையவ ரைவ ராலும்
வசையறு தவத்தின் மிக்கான் மகிழ்ச்சியால்
வாழ்வு பெற்றான்.

[சசிகுலம், நகுலன் என்றும், தம்பி சாதேவன் என்றும், விசயனோடு எண்ணும் வீமன், மேதகு தருமன் என்றும், அசைவு அறு சிங்க சாபம் அனையவர் ஐவராலும் வசை அறு தவத்தின் மிக்கான் மகிழ்ச்சியால் வாழ்வு பெற்றான்.]

**விளக்கம்:**—சசிகுலம் - சந்திர வம்சம். எண்ணும் வீமன் - (விசயனோடு) சேர்த்து மதிக்கப்படுகின்ற வீமன், மேதகு-மேன்மையில் சிறந்த. அசைவு அறு சிங்க சாபம் - தளராத சிங்கக் குட்டி. மைந்தர் ஐவரால் பாண்டு மகிழ்ந்து வந்தான்,— என்றபடி.

88. தாதியர் மருங்குந் தந்தை தடமணி மார்பும் பெற்ற
பேதையர் கரமு நீங்காப் பெற்றியின் வளர்ந்த
பின்னர்ப்
போதக மடங்கல் புல்வாய் புலிமுதல்
விலங்கொ டோடி
வேதியர் முன்றி றோறும் விழைவிளை யாட லுற்றார்.

[தாதியர் மருங்கும் தந்தை தடம் மணி மார்பும், பெற்ற பேதையர் கரமும் நீங்காபெற்றியின் வளர்ந்த பின்னர், போதகம் மடங்கல் புல்வாய் புலி முதல் விலங்கொடு ஓடி (வேதியர் முன்றில் தோறும் விழை விளையாடல் உற்றார்.]

**விளக்கம்:**—குழந்தைகள், நடக்கும் பருவத்திற்கு முன்னும் நடக்கும் பருவத்திலும் 'எவ்விதம் வளர்ந்தனர்?' என்பதை இது கூறும்.

தாதியர் மருங்கு-செவிலித் தாயாரின் இடுப்பு; பக்கமுமாம். பெற்ற பேதையர்- தாயர். போதகம்-யானைக்குட்டி. புல்வாய்-மான். விழை விளையாடல்-விரும்பிய விளையாட்டு. விளையாடல் உற்றார்-விளையாடுதலில் பொருந்தினார்.

89. செய்தவ முனிவர் தம்மாற் சிகையுடன் புரிநூல்
சாத்திக்
கைதவ மின்றி யெண்ணெண் கலைக்கடற் கரையுங்
கண்டு
மெய்தவம் விளங்க வேழ வில்லியும் விழைந்து
நோக்க
மைதவழ் சிகரி யன்ன வளர்ச்சியின் வனப்பின்
மிக்கார்.

[செய்தவம் முனிவர் தம்மால் சிகையுடன் புரிநூல் சாத்தி, கைதவம் இன்றி எண் எண் கலை கடல் கரையும் கண்டு, மெய் தவம் விளங்க, வேழம் வில்லியும் விழைந்து நோக்க, மைதவழ் சிகரி அன்ன வளர்ச்சியின், வனப்பின் மிக்கார்.]

**விளக்கம்:**—பாண்டவர் பூணூல் பூண்டு, வித்தை பயின்று. மன்மதனும் விரும்பி நோக்குமாறு யௌவன பருவம் அடைந்தனர்,—என்பதைக் கூறும் இது.

சிகை-குடுமி, கைதவம்- வஞ்சனை, எண்]எண் கலை- அறுபத்து நான்கு கலைகள். வேழம் வில்லி-கரும்பு வில்லையுடைய மன்மதன். மைதவழ் சிகரி-மேகம் தவழும் மலைச் சிகரம். தீதிலாத நல்வாழ்க்கை தோன்ற அவர்கள் வாழ்ந்ததை, மெய்த் தவம் விளங்க என்பதால் குறித்தபடி.

'மெய்த்தவம்' என்பது செய்யுள் நோக்கி மெய் மிகவில்லை.

90. மார்பினு மகன்ற கல்வி வனப்பினு நிறைந்த சீர்த்தி
போர்வரு தெரியன் மாலைப் புயத்தினு முயர்ந்த
கொற்றம்
சீர்தரு வாய்மை மிக்க கண்ணினுஞ் செங்கை
வண்மை
பார்வளஞ் சுரக்குஞ் செல்வப் பரப்பினும் பரந்த
வன்றே.

[மார்பினும் அகன்ற கல்வி, வனப்பினும் நிறைந்த சீர்த்தி; போர் வரு தெரியல் மாலை புயத்தினும் உயர்ந்த கொற்றம், சீர் தரு வாய்மை மிக்க கண்ணினும், செம்கை வண்மை பார் வளம் சுரக்கும் செல்வம் பரப்பினும் பரந்த அன்றே.]

**விளக்கம்:—** (பாண்டவர் பெற்ற) கல்வி, (அவர்களின் அகன்ற) மார்பினும் அகன்றது; கீர்த்தி அவர்களது அழகினும் நிறைந்ததாயிற்று; போரில் அணியப்படும் வெற்றி மாலையுடைய அவர்களது தோள்களைக் காட்டிலும், அவர்களது வெற்றி மிக்க தாயிற்று. (அவர் மேற்கொண்ட) சிறப்புப் பொருந்திய வாய்மை கடவாமை என்னும் தர்மம், (அவர்தம்) கண்ணினும் அருமை யால் மிக்கதாயிற்று: (அவர்தம்) செங்கை வன்மையோ, பூமியில் செழிப்பைத் தரும் சிறந்த இடப் பரப்பினும், மிக்கதாயிற்று,— என்பது பொருள்.

அகன்ற கல்வி, நிறைந்த புகழ், ஆற்றல், சொற்கடவாமை, வண்மையாகிய சிறந்த குணங்களை உடையவர் பாண்டவர்,— என்பது கருத்து.

சீர்த்தி-மிகுந்த புகழ். தெரியல் மாலை - சிறந்த மாலை. உறுப்புக்களில் அரியதென்று பாராட்டப்பெறும் கண்போல். அவர் பூண்டு ஒழுகும் வாய்மை, அவர்களது நற் பண்புகளில் சிறந்ததாகப் பாராட்டப் பெறுதற்குரியது; அதாவது, வாய்மை கடவாப் பண்பினால் சிறந்தவர், என்பது கருத்து.

### வசந்தகால வருணனை

91. ஆரமு மாரச் சேறு மரும்பனி நீரும் பூவும்
ஈரவெண் மதிநி லாவு மிதம்பெறு தென்றற் காலும்
ஓருயி ரிரண்டு மெய்யா யுருகுவா ருருகும் வண்ணம்
மாரனை மகுடஞ் சூட்ட வந்தது வசந்த காலம்.

[ஆரமும் ஆரம் சேறும் அரும் பனிநீரும் பூவும், ஈரம் வெள் மதிநிலாவும், இதம் பெறு தென்றல் காலும், ஓர் உயிர் இரண்டு மெய் ஆய் உருகுவார் உருகும் வண்ணம் மாரனை மகுடம் சூட்ட வந்தது வசந்த காலம்.]

**விளக்கம்:—** ஆரம் - முத்துமாலை. ஆரச்சேறு - சந்தனச் சேறு. காலும் - காற்றும். பிரிந்த காதலர் வருந்தும்படி வசந்த காலம் வந்தது; மன்மதனும் முடிசூடி ஆட்சிசெலுத்தலாயினான், என்ற கருத்தது செய்யுள்.

(பிரிவின்கண்) ஓருயிரும் இரண்டு உடலுமாய் இருந்து வருந்தியுருகும் காதலர் மேலும் வருந்தியுருகும்படி என்பது மூன்றாமடியின் பொருள். மன்மதனை மகுடம் சூட்டிக்கொண்டு

ஆட்சி செலுத்துமாறு செய்ய வசந்தம் வந்தது,—என்பது ஈற்றடியின் பொருள்.

92. விதுநலம் பெறுகா வெங்கு மெய்சிவப் பேறவண்டு
புதுமையின் முரன்று மொய்ப்பப் புதுமணம் பரந்து லாவக்
கதுமெனத் தலைந டுங்கக் காறடு மாறிற் றம்மா
மதுவயர்ந் தவரில் யாவர் மண்ணின்மேன் மயக்கு றாதார்.

[விது நலம் பெறும் கா எங்கும் மெய் சிவப்பு ஏற, வண்டு புதுமையின் முரன்று மொய்ப்ப, புதுமணம் பரந்து உலாவ, கதுமென தலை நடுங்க கால் தடுமாறிற்று, அம்மா! மது அயர்ந்தவரில் யாவர் மண்ணின் மேல் மயக்கு உறாதார்?]

**விளக்கம்:**—மது அயர்ந்தாரின் தன்மையை வசந்தகாலத்துச் சோலையினிடத்தே ஏற்றிக் கூறும் நயத்தது இச் செய்யுள்.

விது-சந்திரன், இங்கே நிலவு. மெய் சிவப்பு ஏற-(கட்குடித்தவனின் முகம் சிவப்புறல் போல் வசந்தமாகிய கள்ளை உண்ட) சோலையின் முகப் (மேற்புறம்) (புதிய தளிர்களாலும் மலர்களாலும்) செந்நிறம் பெற்றுத் தோன்ற.

புதுமணம் பரந்து உலாவ, வண்டு புதுமையின் முரன்று மொய்க்க,—என்று இயைக்க. (கட்குடித்தாரிடமிருந்து) கள்ளின் புது மணம் வியாபித்தலும், அம் மணத்தின் புதுமையினால் ஈர்க்கப்பெற்று வண்டுகள் அவர்களைச் சூழ்ந்து மொய்த்தலும் இயல்பாதல் போல், வசந்தமாகிய மதுவுண்ட காவில். புது மலர்களின் மணம் எழுந்து பரவலும், அம் மணத்தின் புதுமையினால் அழைக்கப் பெற்ற வண்டுகள் முரன்று மொய்த்தலும் நிகழலாயின.

கள்ளுண்டாரிடம் தலை அசைதலும், கால் தடுமாறலும் நிகழ்தல் போல், காவின் மேலிடம் கதுமென (விரைவாக) அசைதலும், கால் (காற்று) நிலையில்லாமல் வீசலும் ஆகிய காரியம் நிகழ்ந்தது. அம்மா,—வியப்பின் குறிப்பினதான இடைச்சொல். மது அயர்தல் - கள் குடித்தல், மயக்கம், (என்பது)நிலை மாற்றம் என்ற பொருளது.

(மது அயர்ந்தாரில் யாவர் மயக்குறாதார்,' என்ற பொதுப் பொருளால் சிலேடையின் துணைகொண்டு, சோலையினிடத்த

தான நிலை வேறுபாடாகிய சிறப்புப் பொருள் சாதிக்கப் பெறு வதால், இது, வேற்றுப்பொருள் வைப்பணி ஆதல் காண்க.

93. பைந்தடம் தாளான் முன்னம் பருகிய புனலை மீளச்
செந்தழ லாக்கி யந்தண் சினைதொறுங் காட்டுஞ்
சீரால்
முந்திய வசோகு சூத முதலிய தருக்க ளெல்லாம்
இந்திர சாலம் வல்லோ ரியற்கையி னியற்று மாலோ.

[பைந்தடம் தாளால் முன்னம் பருகிய புனலை மீள செம் தழல் ஆக்கி, அம் தண் சினைதொறும் காட்டும் சீரால், முந்திய அசோகு சூதம் முதலிய தருக்கள் எல்லாம் இந்திரசாலம் வல்லோர் இயற்கையின் இயற்றும்; (ஆல் ஓ: வியப்பிடைச் சொற்கள்.)

**விளக்கம் :**—முன்னே தாளால் உண்ட நீரை கிளைகள் தோறும் மீண்டும் (தளிரும் மலருமாகிய) செந்தழல் செய்து காட்டலால், (முன்னமேயே அங்குள்ள) அசோகு, சூதம் (மா) முதலிய மரங்கள் எல்லாம், இந்திரசாலம் வல்லோர் இயல்பினில் செயற்படுவதாயின,—என்று தளிர்த்தும் அரும்பியும் நின்ற சோலை வருணிக்கப் பெற்றது.

இந்திரசாலம் - மாயவித்தை. கிளைகள் தோறும் தோன்றிய செந்நிறத் தளிர்களைச் செந்தழலாகக் கூறியது, தற்குறிப்பேற்றம் ஆகும். 'தாளுண்ட நீரை மீளச் செந்தழலாக்கிய சீர்,' என்றதில் தீயிலிருந்து நீர் வரல் முறையாக, அதை மாற்றி நீரிலிருந்து தீ உண்டாகியது என்று தொனித்தலின் நயம் காண்க.

94. பரந்தெழு சூதம் புட்ப பராகநல் லிராக மிஞ்ச
முரண்படு சிலைவேள் விட்ட மோகனச் சுண்ணம்
போன்ற
புரிந்ததொல் யோக மாக்கள் புந்திநின் றுருகத்
தொட்ட
அருந்தழற் கணைகள் போல வலர்ந்தன
வசோக சாலம்.

[பரந்து எழு சூதபுட்ப பராகம் நல்இராகம் மிஞ்ச முரண்படு சிலைவேள் விட்ட மோகனம் சுண்ணம் போன்ற. புரிந்த தொல் யோகம் மாக்கள் புந்தி நின்று உருக தொட்ட அரும் தழல் கணைகள் போல அலர்ந்தன அசோகசாலம்.]

**விளக்கம் :**—சோலையெங்கும் பரவிய மாம்பூவின் தூளிகள் மன்மதன் காமம் மிகும்படி ஏவிய மோகனக் கணையை ஒத்தன, என்பது முதல் இரண்டடிகளின் பொருள். சூத புட்ப பராகம் - மாம்பூவின் மகரந்தப் பொடி. (பராகம்-கந்தப்பொடி, the polien of flowers.) இராகம் . காதல், காம இச்சை, மோகனச்சுண்ணம்- மோகிக்கச் செய்யும் கணை; அல்லது மேலே பட்ட அளவில் மோகத்தை உண்டாக்கும் (மாயப்)பொடி.

யோகத்துறை படிந்தோர் மனம் உருகித் தளரும்படி (மன் மதன்) தொடுத்த அக்கினியாஸ்திரம்போல் அசோகின் மலர்த் திரள் அலர்ந்தன, என்பது ஈற்றடிகளின் பொருள். தொல் யோகம் புரிந்த மாக்கள் - பழமையான யோக மார்க்கத்தை மேற்கொண்டு ஒழுகிய யோகிகள். புத்தி நின்று உருகி-அறிவு கெடா நின்று உருகித் தளர்ந்து. சாலம் - கூட்டம்.

'யோகம்' என்பதை 'வியோகம்' என்பதின் முதற் குறை யாகக் கொள்ளின், பிரிவு, என்பது பொருளாகும். அணி, தற்குறிப்பேற்றம்.

விரகமுற்ற பாண்டு மாளல்

95. வேனிலின் விளைவி னாலும் வேனிலான்
விழவி னாலும்
மாநலந் திகழு மூரன் மாத்திரி வனப்பி னாலும்
தானல முறுத லெண்ணிச் சாபமு மறந்து மற்றப்
பானலங் கண்ணா ளோடும் பாண்டுவும் பரிவு
கூர்ந்தான்.

[வேனிலின் விளைவினாலும் வேனிலான் விழவினாலும், மா நலம் திகழும் மூரல் மாத்திரி வனப்பினாலும், தான் நலம்உறுதல் எண்ணி, சாபமும் மறந்து மற்று, அ பானல் அம் கண்ணா ளோடும் பாண்டுவும் பரிவு கூர்ந்தான்.]

**விளக்கம் :**—வேனில் - வசந்த காலம். வேனிலான் - மன்ம தன். விழவு - விளையாட்டு, (விரகத்தை விளைத்தல் அவனது விளையாட்டு.) மூரல் - பல். பானல் - கருங்குவளை. பரிவு கூரல்- காதல் மிகல். பாண்டுவும், — சிறப்பு உம்மை; எச்சப் பொருளது மாகும்.

96. அருந்தளிர் நயந்து நல்கி யலகுட னலகு சேரப்
பொருந்துமுன் னவச மாகிப் போகமென் குயிலும் பேடும்
இருந்துமெய் யுருகுங் காவி லிரதியு மதனு மென்ன
வருந்திய காத லோடு மாதவிப் பந்தர் சேர்ந்தார்.

[அருந் தளிர் நயந்து நல்கி அலகுடன் அலகு சேர பொருந்து முன் அவசமாகி போகம் மென்குயிலும் பேடும் இருந்து மெய் உருகும் காவில், இரதியும் மதனும் என்ன வருந்திய காதலோடும் மாதவி பந்தர் சேர்ந்தார்.]

விளக்கம் :—ஆண் குயிலும் அதன் பேடும் போகத்தில் ஆழ்ந் திருந்த சோலையில் பாண்டுவும் மாத்திரியும் காம இச்சையுடன் இரதியும் மதனும்போல் மாதவிப் பந்தரை அடைந்தனர், — என்ற பொருளது.

அருந்தளிர் நயந்து நல்கி - அரிய தளிரைத் தன்பேடைக்கு விருப்பத்தோடு கொடுத்து. பொருந்து முன் - முயங்கு முன், அதாவது முயங்கியவுடன். அவசமாகி - தன் வயம் இழந்து. வருந்திய காதல் - வருத்தத்திற்குக் காரணமான விரக மிகுதி. இக் காதல் துன்பத்திற்குக் காரணமாகப் போதலை 'வருந்திய' என்ற சொல் குறிப்பதாகும்.

97. பஞ்சின்மெல் லடியினாளுங் கணவனும் பழங்க ணோட்டம்
நெஞ்சினை நலிய மேன்மே னேயமுற் றுருகி யாங்கண்
எஞ்சிய கால மெல்லா மென்செய்தே மென்றெ னெண்ணி
வெஞ்சிலை யநங்க வேத முறைமையான் மேவி னாரே.

[பஞ்சின் மெல் அடியினாளும் கணவனும் பழங்கண்ணோட்டம் நெஞ்சினை நலிய, மேன்மேல் நேயம் உற்று உருகி ஆங்கண் 'எஞ்சிய காலம் எல்லாம் என் செய்தேம்?' என்று எண்ணி வெம் சிலை அநங்க வேதம் முறைமையால் மேவினாரே.]

விளக்கம் :—பழங்கண்ணோட்டம் - நெடுநாளாக இருந்த புணர்ச்சி விருப்பம். மேல் மேல் நேயம் உற்று - மேலும் மேலும்

அன்பு கொண்டு. ஆங்கண் - அச் சோலையினிடத்தே. எஞ்சிய காலம் - (கலவியின்றி) வீணே கழிந்த காலம். என் செய்தேம் - இன்பம் நுகராது காலத்தைக் கழித்து என்ன செய்தேம். அநங்க வேதம் - காம நூலில் கூறப்பெற்ற கரணங்கள். மேவினார் - கூடி மகிழலாயினர்.

98. பூவிய லமளி பொங்கப் புணர்முலை புளக மேற
மேவிய கலவி யின்ப மெய்யுறு மகிழ்ச்சி முற்றிக்
காவியங் கண்ணி கேள்வன் கமழ்வரை
மார்பி னன்போ(டு)
ஓவிய மென்ன வுள்ள முருகின ளயர்ந்து வீழ்ந்தாள்.

[பூ இயல் அமளி பொங்க, புணர் முலை புளகம் ஏற, மேவிய கலவி இன்பம் மெய் உறு மகிழ்ச்சி முற்றி, காவி அம் கண்ணி கேள்வன் கமழ் வரை மார்பின் அன்போடு ஓவியம் என்ன உள்ளம் உருகினள் அயர்ந்து வீழ்ந்தாள்.]

**விளக்கம் :**—மலர்களினால் இயன்ற படுக்கை பொலிவின் பொங்க (விளங்க)வும், நெருங்கிய முலைகளினிடத்தே மயிர்க் கூச்சு எழவும், — என்பது முதலடியின் பொருள். விரும்பி நுகர்ந்த கலவி இன்பத்தினால் மெய்யின் எழுந்த மகிழ்ச்சி முற்றி, — என்பது இரண்டாவது அடியின் பொருள். கருங்குவளை போன்ற அழகிய கண்களையுடைய மாத்திரி, கணவனது சந்தனம் மணக்கும் வரை போன்ற மார்பினிடத்தே அன்போடு உள்ளம் உருகினளாய் அவசமுற்றுச் சித்திரப்பாவை என்று சொல்லும்படி விழுந்து கிடந்தாள், — என்பது ஈற்றடிகளின் பொருள்.

புணர்ச்சியின் பின் மாத்திரி கணவன் மார்பில் உயிரற்ற ஓவியப் பாவைபோல் விழுந்து கிடந்தாள், — என்று கூறும் கருத்தது செய்யுள். அயர்ந்து - தன் வசம் துறந்து.

99. அரும்பிய விழியுந் தொண்டை யமுதுறு பவள வாயும்
விரும்பிய சுரத போக மேவரு குறிப்பு மாகிப்
பொரும்படை மதன னம்பாற் பொன்றினன் போல
மன்றல்
சுரும்பின மிரங்கி யார்ப்பத் தோன்றலுஞ் சோர்ந்து
வீழ்ந்தான்.

[அரும்பிய விழியும் தொண்டை அமுது உறு பவளம் வாயும், விரும்பிய சுரதம் போகம் மேவரு குறிப்பும் ஆகி, பொரும் படை மதனன் அம்பால் பொன்றினன்போல, மன்றல் சுரும்பு இனம் இரங்கி ஆர்ப்ப தோன்றலும் சோர்ந்து வீழ்ந்தான்.]

**விளக்கம் :**—உயிர் அகன்ற பாண்டுவின் யாக்கை இருந்த நிலையைக் கூறும் இது. சிறிது திறந்த விழியும், தொண்டையி னின்று நீர் சுரக்கும் பவளவாயும், விரும்பிய புணர்ச்சி இன்பத் தின் பால் செல்லும் மனநிலையைத் தோற்றுவிக்கும் முகக் குறிப்பும் உடையனாகி, தோன்றலும் உயிர் மாய்ந்து வீழ்ந் தான். — என்பது பொருள்.

மன்றல் சுரும்பு இனம் இரங்கி ஆர்ப்ப - மணம் நாடும் வண்டுகள் (பாண்டுவிற்காக) இரங்குவது போல் ஒலிக்க. பொன்றினன் - இறந்தான். மன்றல் - வாசனை. தோன்றல் - பாண்டு. சோர்ந்து - உயிர் ஒடுங்கி.

'பெரும் படை மதனன் அம்பால் பொன்றினன்,' என்றது, **தற்குறிப்பேற்றம்**, பாண்டுவின் இறப்பிற்குப் புணர்ச்சி காரண மாதலின், இது, ஏதுத் **தற்குறிப்பேற்றம்** ஆகும்.

**கலிவிருத்தம்**

100. கொஞ்சுகிளி யன்னமொழி குமுதவித ழமுதால்
எஞ்சினன ராதிபதி யீதெனவி யப்போ
அஞ்சுதரு தீவினையி னாரமுது நஞ்சாம்
நஞ்சுமமு தாமுரிய நல்வினையின் மாதோ.

[கொஞ்சு கிளி அன்ன மொழி, குமுதம் இதழ் அமுதால் எஞ்சினன் நர அதிபதி ஈது என வியப்போ! அஞ்சுதரு தீவினை யின் ஆர் அமுதும் நஞ்சாம்; நஞ்சும் அமுதாம் உரிய நல்வினை யின் மாதோ.]

**விளக்கம் :**—மாத்திரியின் குமுத வாய் இதழ் சுரந்த அமுதால் நராதிபதி (பாண்டு) எஞ்சினன் (மாண்டான்). 'ஈது என வியப்போ,' என்பது 'இது வியத்தற்குரிய தொன்று அன்று,' என்ற பொருளது. 'அஞ்சுதரு தீவினையின் ஆரமுதும் நஞ்சாம்,' என்ற பொதுப் பொருளால், முதல் இரண்டடியின் 'அமுதம் கொன்றதாகிய' சிறப்புப் பொருள் சாதிக்கப் பெற்றி ருப்பது காண்க. எனவே, இது **வேற்றுப் பொருள் வைப்பு** ஆகும். அஞ்சுதரு - அஞ்சத்தக்க.

'நஞ்சும் நல்வினையின் அமுதாம்' என்ற ஈற்றடி, மூன்றாமடியின் மறுதலைப் பொருளைக் கூறுவதாகும். நராதிபதி - அரசன்.

101. சித்திரை வசந்தன்வரு செவ்வியுடன் மகிழா
மத்திரி யெனுங்கொடிய வாட்கண்விட மன்னாள்
முத்திரை யுணர்ந்திலள் முயக்கமுறு மின்ப
நித்திரை கொலாமென நினைந்தருகி ருந்தாள்.

[சித்திரை வசந்தன் வரு செவ்வியுடன் மகிழா, மத்திரி எனும் கொடிய வாள் கண் விடம் அன்னாள், முத்திரை உணர்ந்திலள், முயக்கம் உறும் இன்பம் நித்திரை கொல் ஆம், என நினைந்து அருகு இருந்தாள்.]

விளக்கம் :—சித்திரை வசந்தன் வரு செவ்வியுடன் மகிழா - சித்திரை மாதத்தில் வசந்தத்தின் வருகையால் தோன்றும் இயற்கை வனப்போடு கணவனையும் மகிழ்ந்து. மத்திரி - மாத்திரியின் குறுக்கம். முத்திரை - உயிர் அகன்ற அடையாளம், சாவின் குறி. முயக்கம் உறும் இன்ப நித்திரை கொலாம் - புணர்ச்சி முற்றியதால் உண்டாய இன்ப நித்திரை போலும்!

இறந்துபோன பாண்டுவை மாத்திரி 'அவன் இன்ப நித்திரையில் இருப்பதாக நினைத்திருந்தாள்,' என்று கூறும் கருத்தது.

பாண்டுவின் சாவுக்கு மாத்திரி காரணமாயதால், 'விடம் அன்னாள்' எனப்பட்டாள். முனிவரின் சாபத்தை எண்ணிப் புணர்ச்சிக்கு உடன்பட மறுக்காமையின், அவள், பாண்டுவின் சாவுக்குக் காரணமாயினாள்.

102. செயிர்த்தவரை யாவிகவர் தீயுமிழும் வேலான்
உயிர்த்திலன் விழித்திலனு ணர்ந்துமில னென்னா
அயிர்த்தனள ழைத்தனள ரற்றினளி ரங்கா
வயிர்த்தனணி லத்தினுயிர் வானமினி தென்பாள்.

[செயிர்த்தவரை ஆவி கவர் தீ உமிழும் வேலான் உயிர்த்திலன், விழித்திலன், உணர்ந்தும் இலன், என்னா அயிர்த்தனள், அழைத்தனள், அரற்றினள் இரங்கா, வயிர்த்தனள் நிலத்தின் உயிர் வானம் இனிது என்பாள்.]

**விளக்கம் :**—கணவன் இறந்ததை அறிந்து அழுது அரற்றிய மாத்திரி 'இறத்தலே இனியது,' என்று தீர்மானித்ததைக் கூறும் இது. செயிர்த்தவர் - பகைவர். நிலத்தின் உயர் வானம் இனிது என்பாள் - பூமியில் உயிர் வாழ்வதைக் காட்டிலும் உயர்ந்த வானுலகம் செல்வதே (தனக்கு) இனியது என்று நினைப்பவளாகி, வயிர்த்தனள் – (இறக்கத்) தீர்மானித்தாள்.

103. புந்தியிலன் மன்றல்பெறு பூவைகுரல் கேளா
முந்தியகடும்பழிமுடிந்ததுகொலென்னாக்
குந்தியும் விரைந்துதன் குமாரரோடு புக்காள்
அந்தியரவிந்தமென வணிகுலை முகத்தாள்.

[புந்தி இலள் மன்றல் பெறு பூவை குரல் கேளா முந்திய கடும் பழி முடிந்தது கொல் என்னா, குந்தியும் விரைந்து தன் குமாரரோடு புக்காள்; அந்தி அரவிந்தம் என அணி குலை முகத்தாள்.]

**விளக்கம் :**—(முனிசாபம் பற்றிய) எண்ணம் இல்லாதவளாய் (கணவனது) சேர்க்கையைப் பெற்ற நாகணவாய்ப் புள் போன்றவளான மாத்திரியின் அழுகுரல் கேட்டு, — என்பது முதலடியின் பொருள். முந்திய கடு பழி முடிந்தது கொல் - முந்தியதான முனியின் கொடிய சாபம் நிறைவேறியதோ? குந்தியும், அந்தி அரவிந்தம் என அணி (அழகு) குலைந்த முகத்தினளாய்ப் புக்காள், — என்றவாறு. புக்காள் - (பாண்டு இருந்தவிடம் வந்து) சேர்ந்தாள்.

104. உற்றது மருங்கொழு நனுயிருறுநலத்தால்
இற்றதுமுணர்ந்திவளிரங்கியழு மெல்லைக்
குற்றமகலும்படி குணங்களை நிறுத்தும்
நற்றவர் புகுந்துருகி நைந்துள நெகிழ்ந்தார்.

[உற்றதும் அருங் கொழுநன் உயிர் உறும் நலத்தால் இற்றதும் உணர்ந்து இவள் இரங்கி அழும் எல்லை, குற்றம் அகலும்படி குணங்களை நிறுத்தும், நல் தவர் புகுந்து உருகி நைந்து உளம் நெகிழ்ந்தார்.]

**விளக்கம் :**—ஏற்பட்டதாகிய தனது கைம்மை நிலையையும், அரிய கணவன் உயிர் அவன் அனுபவித்த இன்பத்தால் இறந்ததையும் இவள் (குந்தி) உணர்ந்து இரங்கி அழுதபொழுது, — என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

குற்றம் அகலும்படி குணங்களைத் தம்மிடம் நிலைக்கச் செய்யும் நல்ல தவமுடைய மேன்மக்கள் அங்கே வந்து உளம் நைந்து உருகி நெகிழ்ந்தார், (நெகிழ்தல் - இளகல்), என்பது ஈற்றடிகளின் பொருள்.

குற்றம் அகலும்படி குணங்களைத் தம்மிடம் நிலைக்கச் செய்யும் நல்ல தவமுடைய மேன்மக்கள் அங்கே வந்து உளம் நைந்து உருகி நெகிழ்ந்தார், (நெகிழ்தல் - இளகல்), என்பது ஈற்றடிகளின் பொருள்.

105. அழுகுரல்வி லக்கியபி னைம்மகவையுங் கொண்டு
எழுகடல்நி லத்தரசை யீமவிதி செய்யப்
புழுகுகமழ் மைக்குழலி பொற்புடைமு கத்தாள்
முழுகினள னற்புனலின் மொய்ம்பனை விடாதாள்.

[அழுகுரல் விலக்கிய பின் ஐ மகவையும் கொண்டு எழுகடல் நிலத்து அரசை ஈமம் விதி செய்ய, புழுகு கமழ் மை குழலி பொற்பு உடை முகத்தாள் முழுகினள் அனல் புனலின் மொய்ம்பனை விடாதாள்.]

**விளக்கம் :—** ஈமவிதி - அந்திமக் கடன். பொற்பு - அழகு. அனல் புனல் - (சிதையில் மூட்டிய) அனலாகிய நீர். மொய்ம்பன் - கணவன். நீரில் முழுகுவதுபோல் மாத்திரி சிதைத் தீயில் முழுகினாள், — என்க.

106. தங்கையவள் வானுலகு தலைவனுட னெய்திக்
கங்கைவன மூழ்கியுயர் கற்பவனம் வைகப்
பங்கையநெ டுந்துறைப டிந்துதன்ம காரான்
மங்கையிவ ளுங்கடன்மு டித்தனள்வ னத்தே.

[தங்கையவள் வான் உலகு தலைவனுடன் எய்தி கங்கை வனம் மூழ்கி உயர் கற்ப வனம் வைக, பங்கையம் நெடும்துறை படிந்து தன் மகரால் மங்கை இவளும் கடன் முடித்தனள் வனத்தே.]

**விளக்கம் :—** கங்கை வனம் - ஆகாச கங்கையாகிய நீர் (வனம் - நீர்). பங்கய நெடுந்துறை - பெரிய தாமரைக் குளம். மங்கை - குந்தி.

தங்கையாகிய மாத்திரி தேவருலகம் செல்ல, மங்கையாகிய குந்தியும், அவ்வனத்தில் தன் மக்களைக் கொண்டு ஈமக்கடன் களைச் செய்து முடித்தாள், — என்க.

### குந்தி அத்தினபுரி சேரல்

107. காசிபன் முதற்கடவுள் வேதியர்க ருத்தால்
ஆசிபெறு மப்புதல்வ ரைவரொடு மன்றே
ஏசில்பி ரதைக்கொடியை யிறைநகரி னுய்த்தார்
தேசிகரின் முற்றொழுத குஞ்சதசி ருங்கர்.

[காசிபன் முதல் கடவுள் வேதியர் கருத்தால் ஆசி பெறும் அ புதல்வர் ஐவரொடும் அன்றே ஏசு இல் பிரதை கொடியை இறை நகரின் உய்த்தார், தேசிகரின் முன் தொழுதகும் சதசிருங்கர்.]

**விளக்கம் :**—காசிபன்.........கொடியை, தேசிகரின் முன் தொழத் தகும் சதசிருங்கர் இறைநகரின் உய்த்தார், — என்று அன்வயிக்க.

காசிபன் முதல்......புதல்வர் ஐவர் - காச்யபன் முதலிய தெய்வத் தன்மை பொருந்திய அந்தணோத்தமர்கள் மனப்பூர்வ மாய்க் கூறும் ஆசீர்வாதத்தைப் பெற்ற ஐந்து புதல்வர்கள். ஆசு இல் பிரதைக் கொடி - குற்றமில்லாத குந்தி. இறை நகர் - தலைநகரான அத்தினாபுரி. தேசிகரின்முன் தொழுதகும் சதசிருங்கர் - ஆசாரியரைப் போல் முதலிலே தொழத்தக்காரான சதசிருங்க பர்வதத்திலே வாழும் முனிவர்கள். அன்றே; ஈற்றசை; ஈமக்கடன் முடிந்த அன்றைய தினமே, எனினுமாம்.

சதசிருங்கர் என்ற முனிவர் மக்களோடு குந்தியை இறைநகர் உய்த்தார், — என்றும் பொருள் கொள்ளலாம்.

பாண்டுவின் மரணத்திற்குப்பின் பாண்டவர் அத்தினா புரியை அடைந்தபோது, தருமனுக்கு வயது பதினாறு, பீமனுக்குப் பதினைந்து, அருச்சுனனுக்கு வயது பதினான்கு, நகுலசக தேவருக்கு வயது பதின் மூன்று என்று முதல் நூல் கூறும்.

108. இறந்ததுணை வற்குளமி ரங்குநில மன்னன்
சிறந்தசர ணத்தில்வி முசிறுவரை யெடுத்துப்
புறந்தழுவி யப்பொழுது புண்ணியந லத்தால்
பிறந்தபொழு தொத்துமகிழ் பெற்றியின னானான்.

[இறந்த துணைவற்கு உளம் இரங்கும் நிலம் மன்னன் சிறந்த சரணத்தில் விழு சிறுவரை எடுத்து, புறம் தழுவி, அப்பொழுது புண்ணியம் நலத்தால் பிறந்த பொழுது ஒத்து மகிழ் பெற்றி யினன் ஆனான்.]

விளக்கம் :—நில மன்னன் - திருதராட்டிரன். புறந்தழுவி - முதுகை (அன்புடன்) தடவி, புண்ணிய நலத்தால் பிறந்த பொழுது ஒத்து மகிழ் பெற்றியினனானான் - புண்ணியப் பயனால் (அவர்கள்) பிறந்த காலத்தை, அதாவது பிறந்த வேளையில் பெற்றோர் மகிழ்ந்ததை ஒப்ப, (திருதராட்டிரன்) மகிழும் தன்மையன் ஆனான்.

தம்பி இறந்ததற்காக வருந்திய திருதராட்டிரன், தன் பாதங் களில் விழுந்து வணங்கிய சிறுவர்களைத் தழுவி, அவர்கள் பிறந்த பொழுது ஒத்து மகிழ் பெற்றியினனானான் - புண்ணியப் பயனால் (அவர்கள்) பிறந்த காலத்தை, அதாவது பிறந்த வேளையில் பெற்றோர் மகிழ்ந்ததை ஒப்ப, (திருதராட்டிரன்) மகிழும் தன்மையன் ஆனான்.

தம்பி இறந்ததற்காக வருந்திய திருதராட்டிரன், தன் பாதங் களில் விழுந்து வணங்கிய சிறுவர்களைத் தழுவி, அவர்கள் பிறந்த பொழுது பெற்றோர் உற்ற மகிழ்ச்சியை ஒத்த மகிழ்ச்சியினன் ஆனான், — என்பது பொருள்.

109. வியனதிம கன்சிலைவல் விதுரன்முத லுள்ளோர்
பயனுடைவி சும்புபயில் பாண்டுவைநி னைந்தும்
சயநிலைபெ றுந்தகைய தனயரையு கந்தும்
நயனமிரு பைம்புனலு நல்கினர்ந யந்தார்.

[வியன் நதி மகன் சிலைவல் விதுரன் முதல் உள்ளோர் பயன் உடை விசும்பு பயில் பாண்டுவை நினைந்தும், சயம் நிலை பெறும் தகைய தனயரை உகந்தும், நயனம் இரு பைம்புனலும் நல்கினர் நயந்தார்.]

விளக்கம் :—வியன்நதி மகன் - வீடுமன். பயன் உடை விசும்பு பயில் பாண்டு - புண்ணியத்தின் பயனாய் அடைதலை உடைய சுவர்க்கம் சென்ற பாண்டு. சயநிலை - வெற்றி நிலை. நயனம் - கண். இரு பைம்புனல் - (துன்பக் கண்ணீர், ஆனந்தக் கண்ணீராகிய) இருவகைக் கண்ணீர். நயந்தார் - நயப்பை (அன்பை) தெரிவித்தார்.

வியன் : பெருமைப் பொருளது. ஆகாசம் என்ற பொருளுடைய வியத் என்ற வடசொல்லின் திரிபு என்றும் கூறுவர்.

110. அநுசநிரு பன்புதல்வ ரைவருமகீபன்
தனயரொரு நூற்றுவரு மன்பினொடு தழுவிக்
கனகுலமு கந்துபெய்க ருங்கயநெ ருங்கும்
வனசமல ருங்குமுத மலருமென வளர்வார்.

[அனுச நிருபன் புதல்வர் ஐவரும் மகீபன் தனயர் ஒரு நூற்றுவரும் அன்பினொடு தழுவி, கனகுலம் முகந்து பெய் கருங் கயம் நெருங்கும் வனச மலரும் குமுத மலரும் என வளர்வார்.]

**விளக்கம் :**—அனுச நிருபன் - தம்பியான பாண்டு. மகீபன் - திருதராட்டிரன். கனகுலம் - (கனம் - மேகம்) மேகக் கூட்டம். முகந்து பெய் கருங்கயம் - (கடல் நீரை) முகந்து கொண்டு வந்து பெய்வதால் நிறையும் பெரிய தடாகம். வனசம் - தாமரை.

ஒரு நீர்நிலையில் நெருங்கி இருக்கும் தாமரையும் குமுதமும் போல் பாண்டவரும் திருதராட்டிர புத்திரர்களும் வளர்ந்து வரலானார், — என்க.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

111. இன்னணம் வளருங் காலை யெறிகட லுடுத்த
வல்குல்
மின்னெனு மருங்குல் கொங்கை வெற்புடை
வேய்கொள் மென்றோள்
பொன்னெனு நிறத்தி னோடும் பொற்பழி யாகு
லத்தாள்
தன்னெண முடிப்பான் வந்த தலைவனைத்
தந்தகோமான்.

[இன்னணம் வளரும் காலை எறி கடல் உடுத்த அல்குல், மின் எனும் மருங்குல், கொங்கை வெற்பு உடை வேய்கொள் மென்தோள், பொன் எனும் நிறத்தினோடும், பொற்பு அழி ஆகுலத்தாள் தன் எணம் முடிப்பான் வந்த தலைவனை தந்த கோமான்.]

**விளக்கம் :—**பூமியின் பாரம் தீர்க்கும் பொருட்டு, மண் வந்த கண்ணனை மகனாகப் பெற்ற வசுதேவனும் மற்றவரும் அத்தின புரி வந்ததை இதுவும் இதைத் தொடரும் செய்யுளும் கூறும்.

'எறிகடல்...பொற்பு அழி ஆகுலத்தாள்,' என்பது, பூமிதேவி யின் வர்ணனை. கடல், அல்குல் பிரதேசம் மறைய அவள் உடுத்த ஆடை; இடை, மின்னல்; மலை, கொங்கை; பூமியினிடம் வளர்ந்துள்ள மூங்கில்கள் அவளது தோள்; பொன்னை ஒத்த நிறம் உடையவள்; (பூ பாரத்தினால் அவள் பொற்பு (அழகு) அழிந்த ஆகுலத்தாள். (துன்பமுடையவள்). தன் எண்ணம் - (பூ பாரம் தீர வேண்டும் என்ற) அவளுடைய எண்ணம். முடிப் பான் - அவ் வெண்ணத்தை முடித்து வைக்கும் பொருட்டு. வந்த தலைவனை - அவதரித்த கிருஷ்ணனை. தந்த கோமான் - பெற்றளித்த வசுதேவன். வசுதேவனும் மற்ற உறவினரும் அத்தினபுரி வந்துற்றார் என்று அடுத்த செய்யுளில் முடியும்.

112. குந்திபோ சன்றன் றெய்வக் குலத்துளோர்
களுமநேக
இந்திர ரவனி தன்னி லெய்தின ராகு மென்னக்
கந்தவான் கொன்றை தோயுங் கங்கையாள் குமரன்
வைகும்
அந்தமில் சுவர்க்க மன்ன வத்தினா புரிவந்
துற்றார்.

[குந்தி போசன் தன் தெய்வம் குலத்து உளோர்களும்) அநேக இந்திரர் அவனி தன்னில் எய்தினர் ஆகும் என்ன, கந்தம் வான் கொன்றை தோயும் கங்கையாள் குமரன் வைகும், அந்தம் இல்சுவர்க்கம் அன்ன அத்தினாபுரி வந்து உற்றார்.]

**விளக்கம் :—**குந்தியின் வளர்ப்புத் தந்தையான குந்தி போசனும், அவனது தெய்வச் சிறப்பு வாய்ந்த குலத்தினரும், அநேக இந்திரர்கள் பூமியில் வந்தனர் என்று சொல்லும்படி, — என்பது முதல் இரண்டடிகளின் பொருள். (ஆகும் : அசை).

சிவபெருமான் முடியில் இருத்தல் பற்றி, 'கந்தவான் கொன்றை தோயும் கங்கையாள்', எனப்பட்டது. கந்தம் - வாசனை. வான் - சிறந்த. கொன்றை தோயும் - கொன்றை மலர் படிந்திருக்கும். அவள் குமரன் - வீடுமன். (அவன் தங்கி யிருக்கும்) அந்தமில் சுவர்க்கம் அன்ன - அழிவில்லாத சுவர்க்கம் போன்ற, (அத்தினாபுரி வந்துற்றார்.)

குந்தியையும் அவளது மக்களையுங் காண, உறவின் முறை யாரான வசுதேவனும் குந்திபோசனும், அவனைச் சேர்ந்தாரும் அத்தினபுரி வந்தனர், என்பதை இதுவும் முன்னைய செய்யுளும் கூறும்.

### பூமி ஆளல்பற்றி ஆலோசனை

113. வெண்ணில மதிய மன்ன விடலையுங் கரிய மேக
வண்ணனும் வள்ள றன்னைத் திருவயிற் றுயிர்த்த மாதும்
எண்ணிலா வுவகை யோடுங் குந்தியை யெய்தி யெல்லாப்
புண்ணிய நலமு மெண்ணிப் பூமியாள் முறையுங் கோத்தார்.

[வெள்நிற மதியம் அன்ன விடலையும், கரிய மேகம் வண்ணனும், வள்ளல் தன்னை திரு வயிறு உயிர்த்த மாதும், எண் இலா உவகையோடும் குந்தியை எய்தி, எல்லாம் புண்ணியம் நலமும் எண்ணி பூமி ஆள் முறையும் கோத்தார்.]

**விளக்கம் :—** விடலை - (திண்ணியன், ஆண் மகன்) பலராமன். கரிய மேக வண்ணன் - கிருஷ்ணன். வள்ளலை திரு வயிறு உயிர்த்த மாது. கிருஷ்ணனைத் தன் திருவயிற்றிலே தோன்றச் செய்த பெண்ணாகிய தேவகி. எண் இலா - அளவு கடந்த, 'புண்ணிய நலம் எலாமும் எண்ணி', என்று இயைக்க. புண்ணியத்தினால் உண்டான சந்ததி விருத்தியாகிய நலங்கள் எல்லாவற்றையும் நினைத்து, என்பது பொருள். பூமி ஆள் முறையும் கோத்தார்-பூமியை ஆளும் முறைமை பற்றியும் ஆலோசித்தனர்.

சாபமுற்ற பாண்டுவிற்குத் தேவர்கள் அருளால் சந்ததி உண்டானது, புண்ணியத்தின் பயனாய் விளைந்த நன்மையாகும், என்றபடி.

114. எம்பிரா னாதி மூல மிந்திரன் முதலோர்க் கெல்லாம்
தம்பிரான் பாண்டு வீன்ற தருமதே வதையை நோக்கி
அம்புரா சிகளுட் பட்ட வவனிக ளனைத்து நாமே
இம்பர்நோ யகற்றி யெல்லா வெண்ணமு முடித்து மென்றான்.

[எம்பிரான் ஆதிமூலம், இந்திரன் முதலோர்க்கு எல்லாம் தம்பிரான், பாண்டு ஈன்ற தரும தேவதையை நோக்கி, அம்பு ராசிகள் உள்பட்ட அவனிகள் அனைத்தும் நாம் இம்பர் நோய் அகற்றி, எல்லா எண்ணமும் முடித்தும் என்றான்.]

**விளக்கம் :**—எம்பிரான்...தம்பிரான் - எமது வழிபடு கடவுளும், மூலத்தின் மூலமானவனும், இந்திராதி தேவர்களின் வழிபடு கடவுளுமாகிய கிருஷ்ணன். தருமதேவதை - யுதிஷ்டிரன். அம்பு ராசிகள் உட்பட்ட அவனிகள் - சமுத்திரத்தால் சூழப் பெற்ற பூ மண்டலம் முழுதும். இம்பர் நோய் - மண்ணுலக வாழ்க்கையில் நேரக்கூடிய துன்பம்.

'எல்லா எண்ணமும்,' என்பது, பூபாரம் தீர்க்கும் எண்ணத்தையும், பாண்டவர்களுக்கு ஞாதிகளால் நேரவிருக்கும் துன்பங்களை அகற்றி வைக்கும் எண்ணத்தையும் குறிக்கும்.

தர்மபுத்திரனுக்கு யுதிஷ்டிரன் என்ற பெயரும் உண்டு. தர்மம் கடவா மேன்மையனாதல்பற்றி, அவன் தரும தேவதை எனப்பட்டான்.

'நாமே முடித்தும்' என்றது தேவ ரகசியத்தைக் கண்ணன் குறிப்பிக்கும் தொனியது. அதாவது, ''உன்னைக் கருவியாகக் கொண்டு நான் வந்த காரியத்தை முடிப்பேன்,'' என்ற கருத்தினது.

115. முகுரவா னனனும் வேத்து முனிவனு மனஞ்சொற் காயம்
பகிர்விலா விதுரன் றானும் பாந்தளே றுயர்த்த கோவும்
நிகரிலாத் துணைவர் தாமு நீரொடு நீர்சேர்ந் தென்னத்
தகைவிலா வன்பி னோடுந் தழுவினர் கெழுமி னாரே.

[முகுரவானனனும், வேத்து முனிவனும், மனம் சொல்காயம் பகிர்வு இலா விதுரன் தானும், பாந்தள் ஏறு உயர்த்த கோவும். நிகர் இலா துணைவர் தாமும், நீரொடு நீர் சேர்ந்து என்ன தகைவு இலா அன்பினோடும் தழுவினர் கெழுமினாரே.]

**விளக்கம் :—**முகுரவானனன் - திருதராட்டிரன். வேத்து (வேந்து) முனிவன் - அரசனாயிருந்தும் முனிவன்போல் வாழும் பீஷ்மன். மனம்...விதுரன் - மனோவாக்குக் காயம் என்னும் திரிகரணங்களும் வேறுபடாது ஒன்றுபட்டு நிற்கும் மேன்மையனான விதுரன். பாந்தள் ஏறு உயர்த்த கோ - கொடியில் சர்ப்பத்தை உயர்த்திக் (கொண்ட) துரியோதனன். நிகரில்லாத் துணைவர் - அவனது தம்பியர். தகைவு இலா அன்பு - தளர்வு இலா அன்பு; மனம் பொருந்திய அன்பு, என்றபடி. தழுவினர் கெழுமினார் - தழுவினராய் நட்புப் பாராட்டினர்.

''அத்தினாபுரி வந்தவர்களைத் திருதராட்டிரன் முதலியோர் தழுவிக் கொண்டு மகிழ்ந்தனர்,'' என்ற கருத்தது செய்யுள்.

முகுரம் - கண்ணாடி. ஆனனன் - முகத்தை உடையவன். முகுர வானனன் - கண்ணாடி போன்ற பளபளப்பான முகத்தை உடைய திருதராட்டிரன். கண்ணாடிபோல். தான் பிறரால் பார்க்கப்பட்டும், தான் பிறரைக் காணாதவனான பிறவிக் குருடன், என்ற பொருளையும் அத் தொடர் தரவல்லது.

'நீரொடு பால் சேர்ந்தன்ன,' என்றும் பாடம் உளது.

**116.** **தன்பதி வந்தோர் தம்மைத் தாதை தன் றாதை யான**
**முன்புடைக் கங்கை மைந்தன் முதலிய முதல்வ ரெல்லாம்**
**அன்பொடு கண்டு கண்டு கண்களித் தார்வம் விஞ்சி**
**மன்பதை மகிழ்ச்சி கூர வரம்பிலா விருந்து செய்தார்.**

[தன்பதி வந்தோர் தம்மை தாதை தன் தாதை ஆன முன்பு உடை கங்கை மைந்தன். முதலிய முதல்வர் எல்லாம், அன்பொடு கண்டு கண்டு கண் களித்து, ஆர்வம் விஞ்சி மன்பதை மகிழ்ச்சி கூர வரப்பு இலா விருந்து செய்தார்.]

**விளக்கம் :—**தாதை தன் தாதை ஆன - பாட்டன் முறையினன் ஆகிய. முன்பு - வலிமை. முதல்வர் - முதன்மை பெற்றவர். மன்பதை - மக்கள் தொகுதி. வரம்பிலா விருந்து செய்தார் - விருந்தினர்க்குச் செய்யும் உபசாரத்தை அளவு கடந்த வழியில் செய்தனர்.

117. நூற்றுவ ரைவ ரென்னு நுதியுடை சமர வைவேல்
கூற்றுவ ரனையோர்க் கியாருங் கொடுங்கடும்
போரிலாற்றார்
ஆற்றுவரேனு முங்க ளுதவியுண் டருளு முண்டு
தோற்றமு முண்டு நுங்கள் சுமையிவர் சுமையு
மென்றார்.

[நூற்றுவர் ஐவர் என்னும் நுதி உடை சமரம் வை வேல் கூற்றுவர் அனையோர்க்கு யாரும் கொடும் கடும் போரில் ஆற்றார், ஆற்றுவர் ஏனும் உங்கள் உதவி உண்டு, அருளும் உண்டு, தோற்றமும் உண்டு, நுங்கள் சுமை இவர் சுமையும் என்றார்.]

**விளக்கம் :**—வசுதேவன் முதலியோர்க்கு வீடுமன் முதலியோர் கூறிய முகமன் இது.

'சமரசம் வை நுதியுடை வேல்' — என்று இயைக்க. வை - கூர்மை. நுதி - நுனி. போரில் ஆற்றார் - போரில் எதிர் நிற்கும் ஆற்றலுடைய ராகார். தோற்றமும் உண்டு - (உங்களுடைய சம்பந்தத்தினால்) கண்ணியமும் உண்டு. இவர் சுமையும் நுங்கள் சுமை, — என்று இயைக்க. 'என்றார்,' என்பதற்கு எழுவாய் முன் செய்யுளில் உள்ள 'கங்கை மைந்தன் முதலியோர்,' என்பது.

118. இனிமையின் பலவு மாற்றம் யாவர்க்கு மியாவுஞ்
சொல்லித்
தினகரற் றொழுத பின்னர்த் தேர்பரி கரிக டோறும்
மனனுறத் தக்க செல்வம் வகைதொறும் வழங்கி
யன்றே
தனதனைப் போல்வார் தம்மைத் தம்பதி யடைவித்
தாரே.

[இனிமையின் பலவும் மாற்றம் யாவர்க்கும் யாவும் சொல்லி, தினகரன் தொழுத பின்னர் தேர் பரி கரிகள் தோறும் மனன் உற தக்க செல்வம் வகை தொறும் வழங்கி, அன்றே, தனதனை போல்வார் தம்மை தம் பதி அடைவித்தாரே.]

**விளக்கம் :**—யாவர்க்கும் இனிமையின் மாற்றம் பலவும் யாவும் சொல்லி, — என்று இயைக்க. மாற்றம் பலவும் -

உபசார வார்த்தை பலவற்றையும். யாவும் - சொல்லவேண்டிய வேறு விஷயங்கள் எல்லாவற்றையும். தினகரன் - சூரியன். தேர் பரி கரிகள் தோறும் - தேர், குதிரை, யானை ஆகியவை எல்லா வற்றிலும். மனன் உற தக்க செல்வம் - மனத்தால் நினைத்து மகிழத் தக்க செல்வம். வகை தொறும் - பல வகையில்; அதாவது, ஆடை, அணிகலன், தேர், குதிரை, யானை முதலிய பல வகையில். தனதன் - குபேரன்.

தம் பதி வந்தவர்களை பீஷ்மன் முதலியோர் உபசரித்தும், பரிசுப் பொருள்களை வழங்கியும் அவர் பதி அனுப்பி வைத்தார்கள், — என்பது பொருள். அன்றே, ஏ, - அசைகள்.

வேறு

119. எயின லம்புனை கோபுர மாபுரத்
தெழுதுமா ளிகைதோறும்
வெயினி லாவுமிழ் கனகநீள் வீதியில்
விலாசமுற் றிடுநாளில்
பயினன் மேல்வரு கல்லெனச் செறிந்தமெய்ப்
பவனன்மைந் தனுமொத்தான்
வயின தேயனைக் காத்திர வேயரை
மன்னன்மைந் தருமொத்தார்.

[எயில் நலம் புனை கோபுரம் மா புரத்து எழுது மாளிகை தோறும் வெயில் நிலா உமிழ் கனகம் நீள் வீதியில் விலாசம் உற்றிடும் நாளில், பை இனன் மேல் வரு கல் என செறிந்த மெய் பவனன் மைந்தனும் ஒத்தான் வயின தேயனை; காத்திர வேயரை மன்னன் மைந்தரும் ஒத்தார்.]

**விளக்கம் :**—நலம்புனை எயில் கோபுரம் - அழகின் நலம் தோன்ற அலங்கரிக்கப் பெற்ற மதிள் அரணையுடைய கோபுரம். மா புரம் - அத்தினாபுரி. எழுது மாளிகை - கட்டப்பெற்ற மாளிகை. வெயில்...வீதி - மாளிகைகளில் பதிக்கப்பெற்ற நவமணிகள் வீசும் வெயில் போன்ற பிரகாசத்தையும், நிலவு போன்ற தண்மையையும் பரப்பும் பொன்மயமான நீண்ட வீதி. விலாசம் - விளையாட்டு. பயினன் - பை இனன் (இனம்). பை இனன் - பாம்பின் படக் கூட்டம்; இங்கே, ஆதிசேஷனின் ஆயிரம் படங்கள். மேல் வரு, கல் என செறிந்த பவனன் மைந்தன் -

(அப் படங்கள்) தன்மேல் வரப்பெற்றதான மேரு பர்வதம் போன்ற திண்மை செறிந்த தேகத்தைப் பெற்ற வாயு புத்திர னான வீமன். (அவன்) வயினதேயனை ஒத்தான் - விநதையின் புதல்வனான கருடனை ஒத்தான். மன்னன் மைந்தர் - திருத ராட்டிர புத்திரர்கள். (அவர்கள்) காத்திரவேயரை ஒத்தார் - கத்திருவின் புதல்வர்களாகிய நாகங்களை ஒத்தார்.

''வீமன் கருடனையும், துரியோதனாதியர் நாகங்களையும் ஒத்தார்,'' என்றது, அவர்களுக்கிடையே எழுந்த பகையையும், வீமனை வெல்லும் ஆற்றல் துரியோதனாதியர்க்கு இல்லையென் பதையும் குறிப்பதாகும்.

ஒரு காலத்தில் ஆதிசேஷனுக்கும் வாயு பகவானுக்கும் பலப் பரிட்சை நேர்ந்த பொழுது ஆதிசேஷன் தனது ஆயிரம் படங் களால் மேருமலையைப் பற்றிக்கொண்டான் என்றும், வாயு பகவான் மேருவின் ஆயிரம் சிகரங்களில் மூன்றைப் பாம்பின் பிடியினின்று பறித்தான் என்றும் கூறுவர்.

காச்யப முனிவரின் பத்தினிகளில் ஒருத்தியான விநதை என்பாளுக்குப் பிறந்தவன் கருடன் என்பதும், மற்றொருத்தி யான கத்துரு என்பாளுக்குப் பிறந்தவர் நாகர்கள், என்பதுங் கதை.

சம்பவச் சருக்கம் முற்றும்.

## 3. வாரணாவதச் சருக்கம்

பாண்டவரைத் துரியோதனாதியர் **வாரணாவதம்** என்ற ஊருக்குச் செல்லுமாறு செய்ததையும், பாண்டவர் அடைந்த அவ்வூரில் நடந்தவற்றையும் கூறும் சருக்கம் என்பது தலைப்பின் பொருள்.

**கடவுள் வணக்கம்**

**கலி விருத்தம்**

1. அருமறை முதல்வனை யாழி மாயனைக்
கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்
திருமக டலைவனைத் தேவ தேவனை
இருபத முளரிக ளிறைஞ்சி யேத்துவாம்.

**விளக்கம் :**—மிக மிக சுலபமான செய்யுள். எனவே பதப் பிரிவு செய்யவில்லை. இருபதம் முளரிகள் - இரண்டு பாதங்களாகிய தாமரைகள். இறைஞ்சி ஏத்துவாம் - வணங்கித் துதிப்போம்.

புலவர், தமது வழிபடு கடவுளாகிய கிருஷ்ணனை இச் செய்யுளால் வணங்குகின்றார். மறை முதல்வன், — வேத முதற் பொருளும், உலகிற்கு வேதங்களைத் தந்தவனும், என்ற பொருளது. மாயன், — பிறரால் செய்ய முடியாததைச் செய்ப வன்; அல்லது வியக்கத்தக்க குணம் செயல்களை உடையவன்.

தேவதேவனை என்பது இரண்டன் விரியாதலால், முளரிகள், என்ற சினையை ஏழன் தொகையாகக் கொள்க; அதாவது, தேவதேவனை அவனது உபய பாத முளரிகளில் இறைஞ்சி ஏத்துவாம், என்க.

**துரியோதனன் வீமனுக்குத் தீங்கு இழைத்தல்**

2. ஆங்கவ ரம்முறை யயரு மாயிடை
தீங்கொரு வடிவமாந் திறற்சு யோதனன்
பாங்கிவ னமக்கெனப் பரிதி மைந்தனை
வாங்குபு தழீஇயினன் வலிமை கூரவே.

[ஆங்கு அவர் அ முறை அயரும் ஆ இடை தீங்கு ஒரு வடிவம் ஆம் திறல் சுயோதனன், பாங்கு இவன் நமக்கு என பரிதி மைந்தனை வாங்குபு தழீஇயினன் வலிமை கூரவே.]

**விளக்கம் :—** ஆங்கு (அத்தினபுரியில்) பாண்டவரும் துரியோதனாதியரும் அவ்வாறு விளையாடுங்கால், தீங்கின் வடிவம் போன்ற துரியோதனன், தன் பக்கம் பலமிகும் பொருட்டுக் கர்ணனைத் தனக்கு ஏற்ற துணைவனாக்கிக் கொண்டான், — என்பது பொருள்.

அயர்தல் - விளையாடல். நமக்கு இவன் பாங்கு என - நமக்கு இவன் தக்க துணைவன் என்று. வாங்குபு - அழைத்து (இது செய்பு என்னும் வாய்பாட்டினது.) தழீஇயினன் - சேர்த்துக்கொண்டான்.

3. ஒருபக னிலமக ளுய்ய மங்குலின்
வருபகீ ரதிநதி வாச நீர்படிந்(து)
இருதிறப் புதல்வரு மியைந்த கேண்மையால்
கரையடைந் தனரிளங் கடவு ளோரனார்.

[ஒரு பகல் நிலமகள் உய்ய மங்குலின் வரு பகீரதி நதி வாசம் நீர் படிந்து, இரு திறம் புதல்வரும் இயைந்த கேண்மையால் கரை அடைந்தனர் இளம் கடவுளோர் அனார்.]

**விளக்கம் :—** இளம் கடவுளோர் அனார் இரு திறம் புதல் வரும் இயைந்த கேண்மையால், ஒரு பகல் நிலமகள் உய்ய, மங்குலின் வரு, பகீரதி நதி வாசம் நீர் படிந்து கரை அடைந்தனர், — என்பது அன்வயம்.

நிலமகள்...பகீரதி நதி - பூலோகத்தினர் பாபம் நீங்கி நற்கதியடையும்படி செய்ய ஆகாயத்திலிருந்து வந்த கங்காநதி. மங்குல்- ஆகாயம். வாசம் - வாசனை. (பல மலர்களை அடித்துக் கொண்டு வருதலால் வாசநீர் ஆயிற்று). படிந்து - நீராடி மகிழ்ந்து. இருதிறப் புதல்வர் - பாண்டவரும் துரியோதனாதியரும். கேண்மை - நட்பு. இளம் கடவுளோர் அனார் - தேவ குமாரர்களைப் போன்றவர் (ஆகிய).

4. தைவரு நவமணிச் சயில மென்னவே
ஐவகை நிறங்களு மமைத் தியற்றிய
தெய்வவா டகமனைச் செல்வப் போனகம்
கைவர நுகர்ந்தபின் கண்ணுந் துஞ்சினார்.

[தைவரு நவமணி சயிலம் என்னவே ஐவகை நிறங்களும் அமைத்து இயற்றிய தெய்வம் ஆடகம் மனை செல்வம் போனகம் கைவர நுகர்ந்தபின், கண்ணும் துஞ்சினார்.]

**விளக்கம் :**—சாணையில் இட்டுச் சுத்தம் செய்யப்பெற்ற நவமணிகளைத் தன்னிடத்தே கொண்ட மலை என்று சொல்லும் படி, — என்பது முதலடியின் பொருள். ஐவகை நிறங்களும்... ஆடக மனை - பஞ்ச வர்ணங்களையும் பொருத்திக் கட்டப் பெற்ற பொன்மயமான மாளிகை. செல்வம் போனகம் - உயர்ந்த ஆகாரங்கள். கைவர நுகர்தல் - நன்றாக உண்ணல்.

**சைலம்**, என்பது முதற்போலியாய்ச் **சயிலம்** என நின்றது. **போஜநம்** என்ற வடசொல் **போனகம்** ஆயிற்று.

5. கண்படைக் கங்குலிற் கன்ன சௌபலர்
எண்படைக் குமரனோ டெண்ணிப் பாவகன்
நண்பன்மெய்ப் புதல்வனை தார்கொள் வல்லியால்
திண்பதத் தொடுபுயஞ் சிக்க யாத்தபின்;

[கண் படை கங்குலில் கன்ன சௌபலர் எண்படை குமர னோடு எண்ணி பாவகன் நண்பன் மெய் புதல்வனை நார் கொள் வல்லியால், திண் பதத்தொடு புயம் சிக்க யாத்த பின், — அடுத்த செய்யுளில் முடியும்.]

**விளக்கம் :**—கண்படை கங்குல் - தூங்கும் இரவு. கன்ன சௌபலர் - கர்ணனும் சகுனியும் ஆயவர். எண்படைக் குமரன் - (நூற்றுவர் என்ற) எண்ணிக்கையின் தொகுதியை உடைய குமரனான துரியோதனன். பாவகன் நண்பன் மெய் புதல்வன் - அக்னியின் நண்பனான வாயுவின் மெய்யன்பிற்குரிய புதல்வனான வீமன். பதம் - பாதம். இதுவும் அடுத்த செய்யுளும், குளகம்.

6. அரவினிற் பிணித்தெழு மரவம் பொங்கிட
உரனுடைப் பொருப்பையன் றும்பர் நாயகன்
பரவையிற் செறித்தெனப் பயனில் செய்கையான்
விரவுமப் பெருநதி யூடு வீழ்த்தினான்.

[அரவினில் பிணித்து எழும் அரவம் பொங்கிட உரன் உடை பொருப்பை அன்று உம்பர் நாயகன் பரவையில் செறித்து என, பயன் இல் செய்கையான் விரவும் அ பெரு நதியூடு வீழ்த்தினான்.]

**விளக்கம் :**—உம்பர் நாயகன் அன்று உரன் உடை பொருப்பை அரவினில் பிணித்து, எழும் அரவம் பொங்கிட பரவையில் செறித்து என, பயன் இல் செய்கையான் (வீமனை) விரவும் அப்பெரு நதியூடு வீழ்த்தினான், — என்பது அன்வயம்.

அமுதம் கடைவதற்காகத் திருமால் மந்தர மலையை வாசுகி என்னும் பாம்பினால் பிணித்துப் பாற்கடலில் இட்டதுபோல், பயனற்ற செய்கையினனான துரியோதனன் வீமனைக் கங்கையில் தள்ளினான், — என்பது பொருள்.

எழும் அரவம் பொங்கிட - அதிகமான ஓசை உண்டாகும்படி. உரன் உடை பொருப்பு - வலிமை உடைய மந்தர மலை. உம்பர் நாயகன் - திருமால். பரவை - சமுத்திரம், இங்கே, பாற்கடல். செறித்தது என - இட்டதுபோல். விரவும் அப் பெரு நதி - கங்கை, (விரவு - கலப்பு, பிற நதியின் நீர்க் கலப்பை உடைய.)

அமுதம் கிடைத்ததால் திருமால் மந்தர மலையைக் கடலில் இட்டது பயனுடைய செயல். அம் மலைபோன்ற வீமன் அத்தீங்கினின்று விடுவித்துக்கொண்டு பிழைத்தமையால், துரியோதனன் செயல் பயன் அற்ற செயலாயிற்று.

7. வீழ்ந்தவ னந்தர நிமிர்ந்து மெய்யுறச்
சூழ்ந்தன பிணிகளைத் துணிக ளாக்கியே
ஆழ்ந்நில னேறிமீண் டவசத் தோடவண்
தாழ்ந்தன னிராகவன் றம்பி போன்றுளான்.

[வீழ்ந்தவன் அந்தரம் நிமிர்ந்து மெய் உற சூழ்ந்தன பிணிகளை துணிகள் ஆக்கியே, ஆழ்ந்திலன் ஏறி மீண்டு அவசத்தோடு அவண் தாழ்ந்தனன், இராகவன் தம்பி போன்று உளான்.]

**விளக்கம் :—** அந்தரம் நிமிர்ந்து - நீரின் மேலே வந்து. மெய் உற - உடம்பில் அழுந்தும்படி. சூழ்ந்தன பிணிகளை - சுற்றிக் கட்டப் பெற்றனவாகிய கட்டுக்களை. துணிகள் ஆக்கி - துண்டு துண்டாக அறுத்து. ஆழ்ந்திலன் ஏறி - நீரில் அழுந்தி விடாதவனாய்க் கரை ஏறி. மீண்டு - மறுபடியும். அவசத்தோடு - தூக்க மயக்கத்தினால். அவண் - கங்கைக் கரை. தாழ்ந்தனன் - ஆழ்ந்து துயின்றான்.

இராமன் தம்பி இலக்குவன் இந்திரசித்தின் நாகபாசத்திலிருந்து விடுபட்டதுபோல், நார்கொள் வல்லியின் பந்தத்திலிருந்து விடுபட்டமையால், இலக்குவன் போன்றுளான் ஆயினான்.

'இராவணன் தம்பி போன்றுளான்,' என்ற பாடமும் உளது. அப்பொழுது, கும்பகர்ணன்போல் துயின்றான், என்பது பொருளாகும்.

8. வாளிர வியையொளி மறைக்கும் வெஞ்சினக்
கோளர வனையன கொடிய நெஞ்சினன்
நீளர வினங்களா னித்தி ராலுவை
மீளவுங் கொல்லுவான் வீர னேவினான்.

[வாள் இரவியை ஒளி மறைக்கும் வெம் சினம் கோள் அர வனை அன, கொடிய நெஞ்சினன், நீள் அரவு இனங்களால் நித்தி ராலுவை மீளவும் கொல்லுவான் வீரன் (பாம்புப் பிடாரர்களை) ஏவினான்.]

**விளக்கம்:**—வாள் இரவியை...கோள் அரவன் - ராகு. நித்தி ராலு - தூங்கிக் கொண்டிருக்கும் வீமன். கொல்லுவான் - கொல்வதற்கு.

இராகுவால் பீடிக்கப்பெற்ற சூரியன், அப் பீடையினின்று விடுபட்டு விளங்குதல்போல், அரவினங்களால் கடிக்கப்பெற்ற வீமனும் அழிவின்றி எழுந்தான், என்ற கருத்துத் தோன்ற வந்த உவமை. நித்திராலு - (வடசொல்.) தூங்குபவன். வீரத்தா லன்றி வஞ்சனையால் வீமனை வீழ்த்த முயன்ற துரியோதனனை **வீரன்** என்றது இகழ்ச்சிக் குறிப்பினதாகும். அன - அனைய.

9. கடித்தன பன்னக நகங்கொள் கைகளால்
துடித்திட மற்குணத் தொகுதி போற்பிசைந்(து)
இடித்திடு முகிலென வெழுந்து மா நகர்
வடித்தவேற் றுணைவரோ டெய்தி மன்னினான்.

[கடித்தன பன்னகம் நகம் கொள் கைகளால் துடித்திட மற்குணம் தொகுதிபோல் பிசைந்து, இடித்திடும் முகில் என எழுந்து மா நகர் வடித்த வேல் துணைவரோடு எய்தி மன்னினான்.]

**விளக்கம் :**—கடித்தன பன்னகம் - கடித்தனவாகிய பாம்பு களை. நகம் கொள் கை - கூரிய நகங்களைக் கொண்ட கை. மற்குணம் - (மத்குணம்) மூட்டுப்பூச்சி. தொகுதி - கூட்டம். வடித்த - கூராக்கப் பெற்ற. துணைவர் - சகோதரர். மாநகர் எய்தி மன்னினான் - அத்தினபுரி போய்ச் சேர்ந்தான்.

கடித்த பாம்புகளை, மூட்டுப் பூச்சிகளைக் கொல்வதுபோல லபமாய்க் கொன்றான், என்க. பன்னகம் - (பந்நகம் - பத் நகம்) கால்களால் செல்லாது மார்பினால் ஊர்வது, என்ற பொருளது.

10. வேறொரு பகற்கழு நிறைத்து வீமனோடு
ஆறுபாய்ந் திருவரு மாடும் வேலையில்
தேறலான் வஞ்சகந் தேறி வண்டினால்
ஏறினான் கடந்தரி யேறு போன்றுளான்.

[வேறு ஒரு பகல் கழு நிரைத்து வீமனோடு ஆறு பாய்ந்து இருவரும் ஆடும் வேலையில், தேறலான் வஞ்சகம் தேறி வண்டினால் ஏறினான் கடந்து அரி ஏறு போன்றுளான்.]

**விளக்கம் :**—தேறலான் வேறு ஒரு பகல் என்று கூட்டுக. தேறலான் - பகையுடையவனான துரியோதனன். கழு - சூலம். நிரைத்து - (நதியில் கூரிய முனை மேற்புறம் இருக்கும்படி) வரிசையாக நட்டு. வண்டினால் வஞ்சகம் தேறி - கழு முனையில் உட்கார்ந்திருந்த வண்டுகளினால் (துரியோதனனுடைய) வஞ்சனையை அறிந்து. அரி ஏறு போன்றுளான் கடந்து ஏறினான் - ஆண் சிங்கம் போன்றவனான வீமன், (அக் கழுவரிசையைக்) கடந்து கரை ஏறினான்.

கழுக்கள் வரிசையாக நாட்டப்பெற்ற நீர்த்துறைக்குத் துரியோதனன் வீமனை அழைத்துச் சென்று ஆறு பாய்ந்தாடுகையில், கழுமுனை தோறும் வீற்றிருந்த வண்டினால், வஞ்சனை உணர்ந்த இளவல், கழுவரிசையைக் கடந்து கரை ஏறினான், — என்க.

11. பின்னரு மொருபகற் பெற்றம் பெற்றவன்
தன்னையம் மகீபதி தனய னாதரித்(து)
இன்னமு தருத்துவான் போல யாவையும்
துன்னிய விடங்களாற் றுய்ப்பித் தானரோ.

[பின்னரும் ஒரு பகல் பெற்றம் பெற்றவன் தன்னை, அம் மகீபதி தனயன் ஆதரித்து, இன் அமுது அருத்துவான்போல், யாவையும் துன்னிய விடங்களால் துய்ப்பித்தான்; (அரோ : அசை.]

**விளக்கம் :**—பெற்றம் பெற்றவன் - வாயு பகவான் பெற்றவனான வீமன். மகீபதி தனயன் - அரசனான திருதராட்டிர குமாரன், துரியோதனன். ஆதரித்து - அன்பு கொண்டவன் போல் நடித்து. அமுது அருத்துவான் போல - இனிய உணவை உண்பிப்பான்போல. யாவையும் - எல்லா வகை உணவுகளை

யும். துன்னிய விடங்களால் துய்ப்பித்தான் - கொடிய விஷங்க ளோடு கலந்து உண்பித்தான்.

12. விடத்திலே யழிந்தறி வொழிந்த வீமனை
வடத்திலே பிணித்தனன் கங்கை வாரியின்
இடத்திலே யமிழ்த்தின னிதய மொத்தவர்
திடத்திலே முதிர்ந்தகிங் கரர்தி றங்களால்.

[விடத்திலே அழிந்து அறிவு ஒழிந்த வீமனை வடத்திலே பிணித்தனன். கங்கை வாரியின் இடத்திலே அமிழ்த்தினன், இதயம் ஒத்தவர் திடத்திலே முதிர்ந்த கிங்கரர் திறங்களால்.]

**விளக்கம் :**—(துரியோதனன் தன்) இதயம் ஒத்தவர்கள் (ஆகிய) திடத்திலே முதிர்ந்த கிங்கரர் திறங்களால், விடத்திலே... பிணித்தனன்; (பின்னர்) கங்கை வாரியின் இடத்திலே அமிழ்த்தினன், — என்பது அன்வயம்.

இதயம் ஒத்தவர் - தன் கருத்தின் வழி நிற்பவர், ஒத்த கருத்தினர். திடம் - வலிமை. கிங்கரர் திறங்களால் - ஏவலாளர் கூட்டங்களின் தொகை வலியினால். ஏகாரங்கள், அசை.

### வீமன் பாதாளலோகம் அடைதல்

13. ஓதவான் கடலிடை யொளித்த வெற்பெனப்
பாதலந் தனில்விழு பவன சூனுவை
வேதனைப் படுத்தினர் விடங்கொள் கூரெயிற்(று)
ஆதவப் பணமணி யரவி னஞ்சிறார்.

[ஓதம் வான் கடலிடை ஒளித்த வெற்பு என பாதலம்தனில் விழு பவன சூனுவை வேதனை படுத்தினர் விடம் கொள் கூர் எயிறு ஆதவம் பண மணி அரவின் அம் சிறார்.]

**விளக்கம் :**—ஓதம் - அலை; ஒலி. ஒளித்த - மறைந்த பவன சூனு - வாயு குமாரனான வீமன். விடங்கொள்... அரவின் அம் சிறார் வேதனை படுத்தினர் - விஷத்தைக் கொண்ட கூரிய பற்களையும், சூர்யப் பிரகாசம் போன்ற விளக்கமுடைய படத்தினிடத்தே உள்ள ரத்தினத்தையும் உடைய நாகர்களின் இளம் பிள்ளைகள் கடித்துத் துன்பம் செய்தனர்.

ஆதவம் - (ஆதபம்) வெயில், ஒளி. நாகர் - படத்தொடு வாலும் மனித வடிவமும் கொண்ட தெய்வப் பிறப்பினரான சர்ப்ப ஜாதியர்.

14. முற்படு கொடுவிட முளையெ யிற்றுகும்
பிற்படு விடத்தினாற் பெயர்ந்து போதலின்
மற்படு புயகிரி வடப்பி ணிப்புமற்(று)
அற்படு மிருள்புல ரலரி யாயினான்.

[முன்படு கொடுவிடம் முளை எயிறு உகும் பின் படு விடத்தினால் பெயர்ந்து போதலின், மல்படு புயம் கிரி வடம் பிணிப்பும் அற்று, அல் படும் இருள் புலர் அலரி ஆயினான்.]

**விளக்கம் :**—முற்படு கொடு விடம் - முன்னே துரியோதனன் ஊட்டிய கொடிய விஷம். முளை எயிறு உகும் பிற்படு விடத்தினால் - நாகரின் இளம் பிள்ளைகளின் முளைத்த இளம் பற்களினின்று வெளிப் படும் பிந்திய விஷத்தினால். பெயர்ந்து போதலின் - நீங்கினமையின். மல்படு புயம் கிரி வடப்பிணிப்பும் அற்று - வலிமை செறிந்த தோள்களாகிய மலைகளைப் பிணித்த கயிற்றின் பிணிப்பும் (அவனது வலியினால்) துண்டுபட்டு நீங்கலுற்று. அல்படும் இருள் புலர் அலரி - இரவில் உண்டாகும் இருளை அகலச் செய்யும் சூரியன்.

விஷமும், பிணிப்பும் நீங்கப் பெற்ற பீமனுக்கு, இருள் அகலச் செய்து உதிக்கும் சூரியன் உவமை கூறப்பெற்றது. துரியோதனன் இழைத்த தீமை வீமனுக்கு நன்மை தருவதாயிற்று, — என்றபடி.

### வாசுகி வீமனுக்கு அமுது ஊட்டல்

15. வாசுகி தனக்கிவன் வரவு ணர்த்தலும்
ஆசுகன் மதலையென் றறிந்து மற்றவன்
தேசுறு பொற்குடந் தெரிந்து பற்றினால்
ஏசறு மமுதெலா மினிதி னூட்டினான்.

[வாசுகி தனக்கு இவன் வரவு உணர்த்தலும் ஆசுகன் மதலை என்று அறிந்து, மற்று அவன், தேசு உறு பொன்குடம் தெரிந்து, பற்றினால் ஏசு அறும் அமுது எலாம் இனிதின் ஊட்டினான்.]

**விளக்கம் :**—ஆசுகன் மதலை - வாயு புத்திரன். மற்று - அசை. அவன் - வாசுகி. தேசு - ஒளி. தெரிந்து - (பொன் மயமான அமுத கலசத்தைத்) தேர்ந்தெடுத்து. பற்றினால் - அன்பினால். ஏசு அறும் - குற்றமற்ற, சிறந்த. அமுது எலாம் - அக் கலசத்திலிருந்த அமுதம் முழுதையும்.

குந்திக்கு வாசுகி தாய்வழி உறவினன் என்றும், ஆகவே' ஆயிரம் யானையின் வலிமை தரவல்ல ரசத்தை வீமனுக்கு அளித்தான் என்றும் வியாச பாரதம் கூறும்.

பாம்புகளுக்கு ஆகாரமாய் அமைந்து, அவற்றை இரட்சிக்கும் வாயுவின் குமாரன் என்று அறிந்த அவனுக்கு வாசுகி அன்போடு அமுதம் ஊட்டினன்,—என்றுங் கொள்ளலாம்.

16. வெங்கனல் கொளுத்தலின் வெந்த வான்புலம்
மங்குல்பெய் மாரியால் வயங்கு மாறுபோல்
அங்கெரி விடநுகர்ந் தழிந்த பேருடல்
இங்கமு தருத்தலா லெழில் புரிந்ததே.

[வெம் கனல் கொளுத்தலின் வெந்த வான் புலம் மங்குல் பெய்மாரியால் வயங்குமாறு போல், அங்கு எரி விடம் நுகர்ந்து அழிந்த பேர் உடல் இங்கு அமுது அருத்தலால் எழில் புரிந்ததே.

**விளக்கம்;**—மங்குல்-மேகம். வயங்குமாறு போல்-தழைத்து விளங்கல்போல். அங்கு - துரியோதனன் போனகம் அளித்த விடத்தே. அருத்தலால் - உண்பிக்கப் பெற்றதால்.

வெப்பம் மிகுந்த சூரிய கிரணத்தினால்கொளுத்தப் பெற்றுத் தீய்ந்து போன பயிரை உடைய பெரிய நிலம் தழைத்தல்போல், என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

17. ஆயிரம் பதின்மடங் கரசு வாக்களின்
மாயிருந் திறல்வலி மலிந்த மேனியான்
ஏயிருந் தவப்பய னென்ன வெண்பகல்
மேயிருந் தனன்பணி வேந்தன் கோயிலே.

[ஆயிரம் பதின் மடங்கு அரசு உவாக்களின் மா இரும் திறல் வலி மலிந்த மேனியான், ஏய் இருந் தவம் பயன் என்ன, எண் பகல் மேய் இருந்தனன் பணி வேந்தன் கோயில்.]

**விளக்கம்:**—உவாக்களின் அரசு மா இருந்திறல் ஆயிரம் பதின் மடங்கு வலி மலிந்த மேனியான் - அரசு யானைகளின் மிகப்பெரிய ஆற்றலின் பதினாயிரமடங்கு அதிகமாகப் பொருந்திய மேனியானாகிய வீமன். ஏய் இருந்தவப் பயன் என்ன-பொருந்திய சிறந்த தவத்தின் பயன் என்று சொல்லும்படி. எண் பகல் பணி வேந்தன் கோயில் மேய் இருந்தனன் - எட்டு நாட்கள் நாகராஜனாகிய வாசுகியின் வாழிடத்தில் தங்கியிருந்தான்.

மனிதனுக்குக் கிட்டாததாகிய நாகலோகவாசம் வீமனுக்குக் கிட்டியது பற்றி, ''ஏய் இருந்தவப் பயன் என்ன,'' எனப்பட்டது.

உத்தம லக்ஷணங்கள் பொருந்திய யானையை 'உவா அரசு' என்பர். கால்கள், துதிக்கை, வால், கோசம் ஆகிய உறுப்புக்கள் நிலம் தோய்ந்து இருத்தலும், ஏழு முழ உயரமும், ஒன்பது முழ நீளமும், பதின்மூன்று முழச் சுற்றளவும் உடையதாய், முன் பக்கம் உயர்ந்து, பின்பக்கம் தாழ்ந்து இருத்தலும், உவா அரசின் உத்தம இலட்சணங்களாகும்.

18. இவனையந் நதியிடை யிட்ட பாவியும்
தவனனை யுததியிற் சாய்த்த மாலைபோல்
அவனிப னகரியி னரச வெள்வளைத்
துவனிசெந் தழல்விளக் கெடுப்பத் துன்னவே.

[இவனை அ நதியிடை விட்ட பாவியும் தவனனை உததியில் சாய்த்த மாலைபோல், அவனிபன் நகரியின் அரசர் வெள்வளை துவனி செம் தழல் விளக்கு எடுப்ப துன்னவே.]

**விளக்கம்:** சூரியனைக் கடலில்வீழ்த்திய மாலைவேளைபோல், வீமனைக் கங்கையில் வீழ்த்திய பாவியாகிய துரியோதனன், திருதராட்டிரனது நகரினிடத்தே (மாலையில்) அரசர்க்குரிய சங்கங்கள் முழங்கவும், (பெண்கள்) மங்கள தீபங்களை ஏந்தி நிற்கவும் வந்து சேரவே,—அடுத்த செய்யுளில் முடியும்.

தவனன்-சூரியன். உததி-கடல். அவனிபன்-திருதராட்டிரன். நகரி - தலைநகரான அத்தினபுரி., அரசர் வெள்வளை - அரசர்கள் வெளியே செல்லும் பொழுதும், திரும்பிவரும் பொழுதும் ஊதப்படும் வெள்ளிய சங்கம். துவனி - (சங்க முழக்கமாகிய) ஒலி, (Clamorous sound). செம் தழல் விளக்கு - மங்களதீபம். எடுப்ப - துரியோதனன் நகர் அடைந்ததும் (பெண்கள்) மங்கள தீபம் ஏந்தி நிற்க. துன்ன - வந்து சேர, (ஏ : அசை.)

சங்கம் முழங்கலும் மங்கள தீபம் எடுத்தலும் அரசர்க்குரிய மரியாதையின் சின்னங்கள்.

(செம்மை எய்திய) சூரியனைக் கடலிற் சாய்த்த மாலைப் பொழுதைப் புலவர், (செம்மைக்குணம் உடைய) வீமனைக் கங்கையில் வீழ்த்திய உளம் கறுத்த துரியோதனனுக்கு உவமையாக்கியது, தக்கதே.

மாலை, இங்கே இருளைக் குறித்து நின்றது. தன்னை வீழ்த்திய இருளை அழித்துக் கொண்டு சூரியன் தோன்றுவதுபோல், வீமன், அழியாமையையும், விரைவில் துரியோதனன் அழிவுறுதலையும், உவமை குறிப்பிக்கும் நயம் காண்க.

### குந்தி முதலியோர் வருத்தம்

19. கண்டில ளுதிட்டிரன் கனிட்டற் கண்ணுற
உண்டில டரித்தில ளோரி ராவினும்
கொண்டில டுயிலிளங் குமரர் தம்மொடும்
விண்டில ளுரையுளம் விம்மு குந்தியே.

[கண்டிலள் உதிட்டிரன் கனிட்டன் கண் உற, உண்டிலள் தரித்திலள், ஓர் இராவினும், கொண்டிலள் துயில், இளம் குமரர் தம்மொடும் விண்டிலள் உரை உளம் விம்மு குந்தியே.]

**விளக்கம்:**—உதிட்டிரன் கனிட்டன் கண் உறக்கண்டிலளாய் உளம் விம்மு குந்தி உண்டிலள்; தரித்திலளாய் ஓர் இராவினும் துயில் கொண்டிலள்; இளம் குமரர் தம்மொடும் உரையும் விண்டிலள்—என்று அன்வயிக்க.

தரித்திலள்-பொறுக்க மாட்டாதவளாய். ஓர் இராவினும்- அவளைக் காணாத நாட்களில் ஓர் இரவுகூட. உரை விண்டிலள்- பேசினாளில்லை.

20. வீடின னாமெனத் துணைவர் வேறுவே(று)
ஓடினர் கானதி யோடை யெங்கணும்
தேடினர் காண்கிலஞ் செய்வ தென்னென
நாடினர் நடுங்கினர் நடுக்கில் சிந்தையார்.

[வீடினன் ஆம் என துணைவர்வேறு வேறு ஓடினர்; கான் நதி ஓடை எங்கணும் தேடினர், காண்கிலம், செய்வது என் என நாடினர், நடுங்கினர் நடுக்கு இல் சிந்தையார்]

**விளக்கம்:**—நடுக்கு இல் சிந்தையாரான துணைவர் வேறு வேறு ஓடினர், நான் நதி ஓடை எங்கணும் தேடினர்; காண்கிலம் செய்வது என் என நாடினர்; வீடினன் ஆம் என (சங்கை கொண்டு), நடுங்கினர்,—என்று அன்வயிக்க.

நடுக்கில் சிந்தையார்- கலங்குதல் இல்லா நெஞ்சினர், துணைவர் - உடன் பிறந்தவர். வேறு வேறு ஓடினர் - வேறு வேறாய்ப் பிரிந்து (வீமனைத் தேட) ஓடிச் சென்றவராய். நாடினர் - ஆலோசித்தனர். (ஒன்றும் விளங்காது போகவே) வீடினனாம் எனச் சங்கித்து நடுங்கினர். வீடினன் ஆம் என - இறந்தனன் போலும் என்று.

21. கூற்றன சுயோதன குமர னேயிவன்
ஆற்றிலின் வெரீஇ யழுக் கற்ற சிந்தையான்
ஏற்றதை யுணர்கில மென்று தந்தையாம்
காற்றினு மலமருங் கருத்த ராயினார்.

[கூற்று அன சுயோதன குமரனே இவன் ஆற்றலின் வெரீஇ அழுக்கற்ற சிந்தையான் ஏற்றத்தை உணர்கிலம் என்று, தந்தை ஆம் காற்றினும் அலமரும் கருத்தர் ஆயினார்]

**விளக்கம்:**—கூற்று அன சுயோதன குமரனே, அழுக்கு அற்ற சிந்தையான் (ஆகிய) இவன் ஆற்றலின் வெரீஇ ஏற்றத்தை உணர்கிலம் என்று......,—என்று அன்வயிக்க.

கூற்று அன - யமனை ஒத்த, சுயோதனகுமரன் - துரியோதன னாகிய அரசகுமாரன். அழுக்கு அற்ற சிந்தையான் இவன் - குற்றம் நீங்கிய நெஞ்சினனாகிய வீமன். ஆற்றலின் வெரீஇ - ஆற்றலுக்கு அஞ்சி. ஏற்றத்தை - (அத் துரியோதனன்) மேற்கொண்ட செயலை. அலமரல் - சுழல்தல். காற்றைக் காட்டிலும் விரைந்து சுழலும் மனத்தினராயினர் துணைவர், என்க.

விரகறியா வீமனுக்கு, அவனது ஆற்றலை அஞ்சிய கபடனான துரியோதனன், எத்தீங்கு இழைத்தலை மேற்கொண் டனனோ, என்று, உடன் பிறந்தோர் சங்கித்துக் - கலங்கினர்,— என்ற பொருளது செய்யுள்.

22. ஊதையில் பூதமொத் துள்ளம் வெம்பிய
தாதையில் சிறுவரைத் தாதை தாதைபால்
கோதையில் குழலினாள் கொண்டு சேறலும்
வாதையின் றவற்கென வருத்த மாற்றினான்.

[ஊதைஇல் பூதம் ஒத்து உள்ளம் வெம்பிய தாதை இல் சிறுவரை தாதைபால் கோதை இல் குழலினாள் கொண்டு சேறலும். வாதை இன்று அவற்கு என வருத்தம் மாற்றினாள்.]

**விளக்கம்:**—ஊதை - காற்று; இங்கே, உயிர்ப்பு. பூதம்-இங்கே பிராணிகள் என்ற பொருளது. ஊதையில் பூதம் ஒத்து - உயிர்ப்பு நீங்கிய பிராணிகள் போன்று. உள்ளம் வெம்பிய - வீமனைக் காணாமையால் மனம் அழிந்து தவித்த, தாதையில் சிறுவர் - தருமன் முதலிய நால்வர். தாதைதாதை - பாண்டுவின் பெரிய தந்தையான வீடுமன். அவற்கு வாதை இன்று - வீமனுக்கு தீங்கு ஒன்று இல்லை.

கணவனை இழந்தவளானபடியால் குந்தி, கோதையில் குழலினாள் எனப்பட்டாள்.

23. தருமமன் னனுநகர்ச் சனங்கள் யாவையும்
தெருமர றேற்றவுந் தெய்வங் கூறவும்
பெருமித நிமித்தங்கள் பெற்றி பேசவும்
வரும்வரு மெனமனம் மறுகி வைகினாள்.

[தரும மன்னனும் நகர் சனங்கன் யாவையும் தெருமரல் தேற்றவும், தெய்வம் கூறவும் பெரும் இதம் நிமித்தங்கள் பெற்றி பேசவும் வரும் வரும் என மனம் மறுகி வைகினாள்.]

**விளக்கம்:**—"வரும் வரும், என, தரும மன்னனும்..." என்று கூட்டுக. தரும மன்னன்-உயிர்க்கும் தர்மம் என்று போற்றப்படும் விதுரன்; அல்லது, யமதர்மனது அமிசமான விதுரன். சனங்கள் யாவையும் - நகர மக்கள் எல்லோரும். தெருமரல் தேற்றவும் - மனக் கலத்தைத் தெளிவிக்கவும். தெய்வம் கூறல் - தெய்வங்கள் ஆவேசித்து 'வீமனுக்குத் தீங்கு இலது' என்று கூறவும். பெருமிதம் நிமித்தம் - மிக்க நன்மைக்கு உரிய சகுனம். பெற்றி பேசவும் - (சகுனங்கள் நன்மைக்கு உரிய) அடையாளங்களைத் தெரிவிக் கவும். மனம் மறுகி வைகினாள் - (குந்தி) மனம் கலங்கிய வளாய் இருந்தாள்.

உயர்திணைப் பொருளதான **சனம்** என்பது சொல்லளவில் இருதிணைக்கும் பொதுவாதல் பற்றி. **'சனங்கள் யாவையும்'** என்று அஃறிணையால் கூறினார், என்க.

பேசல் என்பது, உணர்த்தல், தெரிவித்தல், என்ற பொருளது. வரும், வரும், என்ற அடுக்கு, நம்பிக்கையைக் குறிப்பதாகும்.

24. இருந்திளைப் பகன்றபி னிவனை மற்றைநாள்
அருந்திறற் போகிக ளரச னேவலால்
வருந்தியுற் றெடுத்துமுன் வந்த நீர்வழிப்
பொருந்திரைக் கங்கையின் கரையிற் போக்கவே.

[இருந்து இளைப்பு அகன்ற பின் இவனை மற்றை நாள் அரும் திறல் போகிகள் அரசன் ஏவலால் வருந்தி உற்று எடுத்து, முன் வந்த நீர் வழி பொரும் திரை கங்கையின் கரையில் போக்கவே,—இது முதல் மூன்று செய்யுள்கள் ஒரு தொடர்.]

**விளக்கம்:**—வீமன் நாகர் உலகில் எட்டு நாள் தங்கி இளைப் பாறியபின், அடுத்த நாள், அதாவது ஒன்பதாம் நாள், அரசனது ஏவலால், அரிய வலிமையுடைய நாகங்கள், இவனைச் சிரமத் தோடு சுமந்து எடுத்து, (அவன்) முன் வந்த நீரின் வழியே கொண்டு வந்து கங்கைக் கரையில் சேர்க்கவே,—என்பது பொருள்.

மற்றை நாள் - அடுத்த நாள். போகி - நாகம். அரசன் - வாசுகி. பொரும் திரை கங்கை - மோதுகின்ற அலைகளை உடைய கங்கை. போக்கவே - சேர்க்கவே, செலுத்தவே,

25. பாழியம் புயகிரிப் பாண்ட வன்றனைச்
சூழிகற் பணிக்குலஞ் சுமக்க வல்லவோ
வாழியக் குலங்களின் மன்ன னல்லனோ
ஏழிரு புவனமு மினிதி னேந்துவான்.

[பாழி அம் புயகிரிப் பாண்டவன் தனை சூழ் இகல் பணி குலம் சுமக்க வல்லவோ? வாழி, அ குலங்களின் மன்னன் அல்லனோ ஏழ் இரு புவனமும் இனிதின் ஏந்துவான்]

**விளக்கம்;**—பாழி - வலிமை. பாண்டவன் - வீமன். சூழ் இகல் பணி குலம் - மண்டலம் இடும் இயல்பினவான பாம்புக் கூட்டம். வாழி; அசை, ஏழ் இரு புவனமும் இனிதின் ஏந்துவான் அக் குலங்களின் மன்னன் அல்லனோ, என்று இயைக்க. ஏழ் இரு புவனம் - பதினான்கு லோகங்கள். ஏந்துவான் - தாங்குப வனாகிய ஆதிசேடன்.

ஏழிரு புவனங்களையும் தாங்கும் ஆதிசேடன், பாம்புகளின் மன்னன் ஆதலால், பாம்புகளுக்கு வீமனைச் சுமக்கும் ஆற்றல் உளது,—என்று புலவர் கூறியபடி.

'பாண்டு மைந்தனை,' என்றும் பாடம் உளது.

### வீமன் மீளல்

26. விதியினா லொளித்தலி னுயங்கி மீளவும்
நதியினால் வருதலி னலங்கொண் மேனியான்
பதியினால் விளங்குமென் பங்க யங்களும்
மதியினாற் குளிர்நெடு வானு மாயினான்.

[விதியினால் ஒளித்தலின் உயங்கி, மீளவும் நதியினால் வருதலின் நலம் கொள் மேனியான், பதியினால் விளங்கும் மெல் பங்கயங்களும், மதியினால் குளிர் நெடு வானும் ஆயினான்.]

**விளக்கம்:**—கங்கையில் வீமன், கரை அடைந்த பொழுது முன்னினும் அதிக விளக்கமுடைய மேனியினனாய்ப் பொலிந்தான், என்று கூறும் கருத்தது இது.

விதியினால் ஒளித்தலின் உயங்கி - விதியின் பயனால் (கங்கையில் தள்ளப்பட்டு) மறைந்து போனதினால் உடல் மெலிவுற்று. மீளவும் - மறுபடியும். அதன் பின், நதியினால் வருதலின் நலம் கொள் மேனியான் - நதியிலிருந்து மீண்டு வந்ததால் விளக்கமாகிய நலத்தை எய்திய மேனியனான வீமன்.

நீரில் அழுந்தியக்கால் மெலிவுற்றும், கரை மீண்டக்கால் விளக்க முற்றும் பொலிந்த மேனியனான வீமன், "பதியினால் (சூரியனால்) விளங்கும் மெல் பங்கயமும், மதியினால் குளிர்ச்சியாகிய நலத்தை எய்திய வானமும் போன்றவனாயினான்," என்றது நயமுடையது.

சூரியனைக் கண்டு தாமரை மலரும் இயல்பினதாதல் பற்றி, சூரியனைக் கணவன் என்ப. பங்கயங்கள் : பயனில் பன்மை.

27. வேதியர் குரவர்வில் விதுரன் வீடுமன்
ஆதியர் துணைவரந் நகரு ளார்களென் (று)
ஓதிய சனங்களுக் குவகை நல்கினான்
ஞாதியர் கிளைக்கெலா நடுக்க நல்கியே.

[வேதியர் குரவர் வில் விதுரன் வீடுமன் ஆதியர், துணைவர், அ நகர் உளார்கள் என்று ஓதிய சனங்களுக்கு உவகை நல்கினான் ஞாதியர் கிளைக்கு எலாம் நடுக்கம் நல்கியே.]

**விளக்கம்:**—குரவர் - தாய், தமையன் முதலிய பெரியோர். துணைவர் - தம்பிமார். ஞாதியர்கிளை - துரியோதனனும் அவன் தம்பியரும் ஆகிய கூட்டம். "உவகை நல்கினான், நடுக்கம் நல்கியே," முரண் தொடை.

வீமன் மீண்டு வருகை உற்ஞர்க்கு மகிழ்ச்சியையும் உறாதார்க்குப் பயத்தையும் விளைத்தது,—என்பது கருத்து.

28. குந்தியை மகிழுரை கூறிக் கற்பினால்
அந்திமீ னனையவ ளருளின் வாழ்த்தவே
செந்திரு மகளுறை செல்வ மாநகர்
வந்திவன் முன்புபோல் வளரு நாளிலே.

[குந்தியை மகிழ் உரை கூறி கற்பினால் அந்தி மீன் அனையவள் அருளின் வாழ்த்தவே, செம்திருமகள் உறைசெல்வம் மாநகர் வந்து இவன் முன்புபோல் வளரும் நாளிலே.]

**விளக்கம் :**—செந்திருமகள்—இவன் வந்து, குந்தியை மகிழ் உரை...வாழ்த்தவே, முன்புபோல்...என்று அன்வயிக்க.

செந்திருமகள்...மாநகர்-இலக்குமி வாசம் செய்யும் செல்வம் நிறைந்த சிறந்த அத்தினபுரி. குந்தியை - தாயாகிய குந்திக்கு. அந்தி மீன் அனையவள் - (கற்பினுல்) அருந்ததியை ஒத்தவளான குந்தி. இதுவும், தொடரும் இரண்டு செய்யுள்களும் ஒரு தொடர். குந்திக்கு வீமன் மகிழ்ச்சிக்குரிய வார்த்தைகளைச் சொல்ல அவள் வாழ்த்தினாள் என்க.

29. 9காதமன் மகன்மகன் குனிவி லாதியாம்
மேதகு படைக்கலம் யாவும் வீறொடம்
மாதவன் வயிற்பயில் வரதன் வன்றிறல்
கேதமில் சிந்தையான் கிருப னென்றுளான்.

[கோதமன் மகன் மகன் குனிவில் ஆதி ஆம் மேதகு படைகலம் யாவும் வீறொடு அ மாதவன் வயின் பயில் வரதன், வன் திறல் கேதம் இல் சிந்தையான், கிருபன் என்று உளான்.]

**விளக்கம் :**—கோதம முனிவனது மகனின் மகன்; (அவன்) குனிவில் முதலாய சிறந்த ஆயுதங்களை எல்லாம் சிறப்பொடு, (தன் தந்தையாகிய) அந்தப் பெரிய தவமுடைய முனிவனிடம் கற்ற வரதனும், வலிய ஆற்றலையும், களங்கம் அற்ற

வி. பா.—14

சிந்தையையும் உடையவனும் ஆகிய கிருபன் என்று அழைக்கப் பட்டவனாய் இருந்தான்,—என்பது பொருள்.

குனிவில் - வளைக்கப்படும் வில். வீறொடு - சிறப்போடு. மாதவன் - கோதமனின் மகனாகிய முனிவன். பயில் - பயின்ற, கற்ற. வரதன் - வேண்டினர் வேண்டிய வரத்தைக் கொடுக்க வல்லவன். கேதம் - களங்கம், குற்றம்.

கோதமனது பேரன் கிருபன். கோதமனது மகன் அம்பு களுடன் பிறந்ததால், அவன் சரத்துவான் (சரத்வாந்) என்று அழைக்கப்பட்டான். வேத வித்தையிலும், விற்கலையிலும் தேர்ச்சி பெற்றபின், தவத்துறை படிந்து வாழ்பவனானான். அவனது தவத்தைக் கெடுக்க இந்திரனால் ஏவப்பெற்ற தேவ கன்னிகை அவண்வர, முனிவன் அவள் மேல் மோகங் கொண்டான். அதன் பயனாய் ஓராண் மகவும் ஒரு பெண்ணும் உண்டாயினர். தன்னிலையெய்திய முனிவன், தனது தவம் குலைந்ததற்கு வருந்தி அக் குழந்தைகளை நாணற் காட்டில் தனது வில் அம்புகளோடு விட்டுவிட்டுச் சென்றான். வேட்டையின் மேற்சென்ற சந்தனு மகாராசன், கதியற்ற அக் குழந்தைகளை வழியில் கண்டு, அவற்றைத் தன் மனை எடுத்துச் சென்று வளர்த்தான். கிருபையினால் எடுத்துச் சென்று வளர்க்கப்பட்டமையின், அக் குழந்தைகள் **கிருபன்** என்றும், **கிருபி** என்றும் அழைக்கப்பட்டனர். சில காலஞ்சென்றபின், குழந்தைகளின் தந்தையான சரத்துவான் என்ற அம் முனிவன், அத்தினபுரி வந்து. தன் மகனுக்கு வில் வித்தைப் பயிற்சி அளித்துச் சென்றான். ஆகவே, கிருபன் என்பான் சிறந்த வில்லாசிரி யனாகத் திகழ்ந்தான், என்பது வரலாறு.

கௌதம குலத்தினரான அந்தணர்களுக்கு ஆதியில் க்ஷத்திரிய சம்பந்தம் இருந்தமையின், அவர்கள் மேலும் ஓதலோடு படைக் கலப்பயிற்சிக்கு உரியராயினர்,—என்பர்.

30. மற்றிவன் சந்தனு மைந்த னேவலால்
கொற்றவ ரருள்குரு குலகு மாரரை
வெற்றிகொள் சிலையும்வெவ் வேலும் வாளமும்
பற்றலர் வெருவரும் படிப யிற்றினான்.

[மற்று இவன் சந்தனு மைந்தன் ஏவலால் கொற்றவர் அருள் குருகுல குமாரரை வெற்றி கொள் சிலையும் வெம் வேலும் வாளமும் பற்றலர் வெருவரும்படி பயிற்றினான்.]

**விளக்கம்:—** மற்று: அசை. சந்தனு மைந்தன்-வீடுமன், கொற்றவர் அருள் குருகுல குமாரர் - அரசர்களாகிய திருதராட்டிரனும், பாண்டுவும் பெற்ற குருகுலத்திற்குரிய வயது வந்த துரியோதனாதியரும் பாண்டவரும் ஆகிய நூற்றைவர். (அவர்களுக்குக் கிருபன்) வில், வேல், வாளம் (வாள்) ஆகிய படைப் பயிற்சியைப் பற்றலர் (பகைவரும்) வெருவரும்படி (அஞ்சும்படி) பயிற்றினான் (கற்பித்தான்.)

பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்கும் கிருபன் படைக் கலப் பயிற்சி அளித்தான் என்பதாம்.

31. பரிவுட னிவன்படை பயிற்றப் பின்னரும்
குருபதி வேறொரு குருவைத் தேடினான்
இருளற மதிநில வெறித்த தாயினும்
பரிதியை நயக்குமிப் பரவை ஞாலமே.

[பரிவுடன் இவன் படை பயிற்ற; பின்னரும் குருபதி, வேறு ஒரு குருவை தேடினான்; இருள் அற மதி நிலவு எறித்தது ஆயினும், பரிதியை நயக்கும் இ பரவை ஞாலம் (ஏ; அசை.]

**விளக்கம்:—** சந்திரன் நிலவினால் இருள் அகற்றிய போதிலும், உலகம் சூரியனை விரும்புவதுபோல், குருகுலக் குமரருக்குப் படைப் பயிற்சி அளித்து வருகையில், வீடுமன், வேறொரு குருவைத் தேடினான்,—என்ற பொருளது செய்யுள்

பயிற்ற-ஆயுதப் பயிற்சி தந்துவர. பின்னரும்- (மேலும் நல்ல பயிற்சி கொடுப்பதாக) அதன் பின்பும்; குருபதி-குரு குலத்தின் தலைவனான வீடுமன். பரவை ஞாலம்- கடல் சூழ்ந்த மண்ணுலகம்.

இச் செய்யுள், எடுத்துக்காட்டுவமையை உட்கொண்டது: உபமான உபமேயம் எது எது, என்று தோன்றாதபடி வாக்கியங்களை அமைத்தல் இவ்வணிக்கு அவசியமாகும். அதாவது, உவம உருபு கொடாமல், ஒன்று கூறப்படும் விஷயமாகும், மற்றது உதாரணம் போலவும் வாக்கியங்கள் அமைய வேண்டும் அவ்வாறு செய்யுள் அமைந்திருப்பது காண்க.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

### துரோணன் வரலாறு

32. பரத நாத வேத பரத்து வாச னென்பான்
விரத வேள்வி தன்னின் மேன கையா லான

சுரத தாது வீழ்ந்த துரோண கும்பந் தன்னில்
வரத னொருவன் வந்தான் வசிட்டமுனியை
யொப்பான்.

[பரதம் நாதம் வேதம் பரத்துவாசன் என்பான் விரதம் வேள்வி தன்னில், மேனகையால் ஆன சுரத தாது வீழ்ந்த துரோண கும்பம் தன்னில் வரதன் ஒருவன் வந்தான்; வசிட்ட முனியை (அவன்) ஒப்பான்.]

**விளக்கம்:**—பரத நாத வேத பரத்துவாசன்-தாளத்தோடும் இசையோடும் சம்பந்தங் கொண்ட வேதங்களில் வல்லவனான பரத்துவாச முனிவன். விரத வேள்வி-விரதானுஷ்டானத்தோடு கூடிய வேள்வி. தன்னில்- (அத்தகைய வேள்வியில்) ஈடுபட்டிருக்கையில், மேனகையால் ஆன-மேனகை என்னும் தேவமாதினிடத்தே கொண்ட மோகத்தின் பயனாய் உண்டான. சுரத தாது-(ஸுரத தாது) இன்பானுபவத்தோடு கூடிய வீரியம். வீழ்ந்த துரோண கும்பந்தன்னில் இருந்து வசிட்ட முனிவனை ஒப்பானாகிய வரதன் (வரந்தரவல்லவன்) ஒருவன் தோன்றினான்.—என்றவாறு.

அங்கிரஸ் என்னும் முனிவனது குலத்தினன் பரத்துவாச முனிவன். கங்கைக் கரையில் அவன் வேள்வி செய்து கொண்டிருக்கையில், அங்கே நீராட வந்த தேவப் பெண்ணின்பால் மோகங் கொண்டான் என்றும், அதன் பயனாய் நெகிழ்ந்த வீரியம் விழப்பெற்ற கலசத்திலிருந்து ஒரு குமாரன் உண்டானான் என்றும் கூறுவர். துரோண கும்பத்திலிருந்து தோன்றியதால், அவன் துரோணன் என்ற பெயரினனானான்.

பரதம்-நாட்டிய சாத்திரம். அது இங்கே இலக்கணையாய் நாட்டியத்தின் அங்கமான தாளத்தைக் குறிப்பதாயிற்று.

33. ஈரேழ் விஞ்சைந் திறனு மீன்றோன் றன்பா லெய்தி
நீரே ழென்ன யாவு நிறைந்த கேள்வி நெஞ்சன்
பாரே ழெண்ணும் படைகள் பரசு ராமன் தன்பால்
ஓரேழ் பகலி னுலகுக் கொருவ னென்னக் கற்றான்.

[ஈர் ஏழ் விஞ்சை திறனும் ஈன்றோன் தன்பால் எய்தி, நீர் ஏழ் என்ன யாவும் நிறைந்த கேள்வி நெஞ்சன், பார் ஏழ் எண்ணும் படைகள் பரசுராமன் தன்பால் ஓர் ஏழ் பகலின் உலகுக்கு ஒருவன் என்ன கற்றான்.]

**விளக்கம் :**—ஈர் ஏழ் விஞ்சை - வேதம் நான்கு, வேதாங்கம் ஆறு, உபாங்கம் நான்கு ஆகிய பதினான்கு வகையினவான வித்தைகள். நீர் ஏழ் என்ன யாவும் நிறைந்த கேள்வி நெஞ்சன் - எழுகடல்போல் (ஆழமும் அகலமுமுள்ள) கேள்விகள் எல்லாம் (கேட்டு) நிறைந்த மனப் பண்பினன். பார் ஏழ் எண்ணும் படைகள் - ஏழுலகமும் மதித்துப் போற்றத்தக்க அஸ்திரசஸ்திரங்கள். ஓர் ஏழ் பகலின் - ஏழு நாள் அளவில். உலகத்திற்கு இவன் ஒருவனே சிறந்த வில்லாளி என்று சொல்லும்படி (பரசுராமனிடம்) கற்றுத் தேர்ந்தான்,— என்றவாறு.

ஈரேழ்விஞ்சை :—ருக், யசுஸ், சாமம், அதர்வணம்—வேதம் 4; சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், சோதிடம், கல்பம்—என்ற வேதாங்கம் 6; மீமாம்சை, தர்க்கம், புராணம், தர்மசாஸ்திரம்— உபாங்கம் 4.

34. வெற்பின் வலிய திண்டோள் வேந்த னேவுந் தூதால்
அற்பின் மிக்க சிந்தை யறஞ்சான் மொழியவ் வாசான்
கற்பின் பன்னி யோடுங் கையின் மதலை யோடும்
பொற்பி னமரா வதியே போலு நகரி புக்கான்.

[வெற்பின் வலிய திண்தோள் வேந்தன் ஏவும் தூதால், அற்பின் மிக்க சிந்தை, அறம் சால் மொழி அ ஆசான், கற்பின் பன்னியோடும் கையின் மதலையோடும் பொற்பின் அமராவதியே போலும் நகரி புக்கான்].

**விளக்கம் :**—வீடுமன் அனுப்பிய தூதால், அன்பு நிறைந்த நெஞ்சத்தையும், அறம் நிறைந்த சொல்லையுமுடைய அந்த துரோணாசார்யன் பத்தினியோடும் மதலையோடும் அழகினால் அமராவதியை ஒத்த அத்தினபுரி வந்து சேர்ந்தான்,— என்பது பொருள். அற்பு - அன்பு. பொற்பு - அழகு. அமராவதி- தேவலோக நகர்.

கிருபனோடு தோன்றிய கிருபி என்பாள் துரோணனின் மனைவி. அச்வத்தாமன் என்பான் அவர்களது குழந்தை. ''கையின் மதலை,'' என்றதில் கை என்பது 'கைக் குழந்தை, என்பதுபோல் இளம் பிராயத்தைக் குறிக்கும்.

35. வந்தான் வரதனெனலு மந்தா கினியாண்
மைந்தன்
பைந்தா ரசைய வெதிர்போய்ப் பணித்து பூசை
பண்ணிச்
சிந்தா சனத்தொ டொக்குஞ் சிங்கா தனத்தி னேற்றி
எந்தாய் வரநீ யடியே னென்ன தவத்தே
னென்றான்.

[வந்தான் வரதன் எனலும் மந்தாகினியாள் மைந்தன் பைந்தார் அசைய, எதிர் போய் பணிந்து பூசை பண்ணி சிந்தா சனத்தொடு ஒக்கும் சிங்காதனத்தின் ஏற்றி, எந்தாய், வர நீ அடியேன் என்ன தவத்தேன் என்றான்.]

**விளக்கம் :—** மந்தாகினியாள் மைந்தன் - வீடுமன். சிந்தா சனம் - மனமாகிய ஆசனம், அதாவது, வரதனாகிய துரோணன், வேத வித்தையோடு வில்வித்தையிலும் நிகரிலான் என்று மதித்து, அவனைத் தன் மனத்தில் இருத்தியிருந்தான் என்றபடி. அவனது மனத்தில் துரோணன் நிலை கொண்டிருந்ததால், அவன் இப் பொழுது அளித்த சிங்காதனத்துக்கு சிந்தாசனம் உவமை யாயிற்று.

36. மூசி வண்டு மொய்க்கும் முருகார் செவ்வி மாலை
வாசி மான்றேர் வெம்போர் மன்னர் மன்னன்
றன்னை
ஏசில் கடவுள் வாய்மை யிருக்கா லெண்ணில் கோடி
ஆசி யன்பா லோதி யருள்செய் திருந்த பின்னர்.

[மூசி வண்டு மொய்க்கும் முருகு ஆர் செவ்வி மாலை வாசி மான் தேர் வெம் போர் மன்னர் மன்னன் தன்னை, ஏசு இல் கடவுள் வாய்மை இருக்கால் எண்ணில் கோடி ஆசி அன்பால் ஓதி அருள் செய்து இருந்த பின்னர்.]

**விளக்கம் :—**வண்டு மூசி மொய்க்கும். மூசி - நெருங்கி. முருகு - தேன். செவ்வி - அழகு. வாசிமான் - (இருபெயரொட்டு) குதிரை. மன்னர் மன்னன் - வீடுமன். ஏசில் கடவுள் வாய்மை இருக்கால் - குற்றமில்லாத தெய்வத் தன்மை வாய்ந்த சத்திய வாக்கான வேத மந்திரங்களால். (ஆசி கூறியிருந்த) பின்னர்,— அடுத்த செய்யுளில் முடியும்.

வாசி - (வாஜி என்ற வடசொல்லின் திரிபு) குதிரை. மான். குதிரை, விலங்கு, வாசிமான் - குதிரையாகிய விலங்கு, குதிரை.

37. வேத முனிவ னிருந்த வேந்து முனியை நோக்கிப்
பூதந் தன்னி னிகழ்ந்த புன்மை மொழியொன்
றுரைப்பான்
ஏத மெய்பெற் றனைய யாகசேன னென்பான்
போத மில்லா னென்பாற் பூட்டு நண்பு பூண்டான்.

[வேதம் முனிவன் இருந்த வேந்து முனியை நோக்கி, பூதந் தன்னில் நிகழ்ந்த புன்மை மொழி ஒன்று உரைப்பான், ஏதம் மெய் பெற்று அனைய யாகசேனன் என்பான் போதம் இல்லான் என்பால் பூட்டும் நண்பு பூண்டான்.]

**விளக்கம்:**—வேத முனிவன் - துரோணன். இருந்த வேந்து முனி - அயலிலிருந்த அரச இருடியான வீடுமன். பூதந் தன்னில் - (பூதம் - இறந்த காலம்) கடந்துபோன காலத்தில். புன்மை மொழி - தாழ்மையைப் புலப்படுத்தும் விருத்தாந்தம். ஏதம் - குற்றம், தீமை. மெய் - உருவம், ஏதம் மெய் பெற்றனைய - தீமை உருவம் எடுத்தாற் போன்ற. போதம் - அறிவு. பூட்டும் நண்பு பூண்டான் - பிரிக்கமுடியாதபடி இணைக்குந் தன்மையதான நட்புக் கொண்டான்.

பாஞ்சால நாட்டு அரசன் யாகசேனன்; துருபதன் என்றும் அழைக்கப்படுவான். அவனது தந்தை பிருஷதன் என்ற பெயரினன். பரத்துவாச முனிவனும், பிருஷத ராஜனும் மனம் பொருந்திய நண்பர். எனவே, பரத்துவாசரின் புதல்வனான துரோணனிடம் யாகசேனன் இளமையில் நெருங்கிய நட்பு உடையவனாய் இருந்தான்.

38. யானு மவனு முறையா லிளையோ மான வெல்லைப்
பானு நிகர்தொல் லங்கி வேசன் பாதம் பணிந்து
வானு மண்ணும் வியக்க மறைவெம் படைகள்
கற்றுத்
தானும் வல்ல னாகித் தன்போ லென்னை
வைத்தான்.

[யானும் அவனும் முறையால் இளையோம் ஆன எல்லை, பானு நிகர் தொல் அங்கிவேசன் பாதம் பணிந்து வானும் மண்

ணும் வியக்க மறை வெம் படைகள் கற்று, தானும் வல்லவன் ஆகி தன்போல் என்னை வைத்தான்]

**விளக்கம்:**—பானுநிகர் தொல் அங்கிவேசன் - சூரியனைப் போல் பிரகாசிக்கும் குலத் தொன்மை உடைய அங்கிவேசன் என்னும் முனிவன். மறை வெம் படை - உரிய மந்திரத்தோடு கொடிய அஸ்திரங்கள். தானும் வல்லவனாகி - (என்னைப் போல்) அவனும் சரக்கலையில் வல்லவனாய், தன்போல் என்னை வைத்தான் - தன்னைப்போலவே (அரசனாகிய அவன்) ஏழைப் பிராமணனாகிய என்னை நடத்தினான்.

அங்கிவேசன் - அக்னியினின்று தோன்றியதால் அங்கிவேசன் என்ற் பெயரினனானான். இவன், பரத்துவாச முனிவனிட மிருந்து பெற்ற ஆக்நேயாஸ்திரத்தைத் துரோணனுக்கு அளித் தான், என்று முதல் நூல் கூறும்.

39. பின்னை யிரவும் பகலும் பிரியே மாகித் திரியத்
தன்னை யடைந்த நண்பின் றகவான் மிகவா தரியா
என்னை வான மெய்தி யானே யிறைவ னானால்
உன்னை யாள வைப்பே னுலகிற் பாதி யென்றான்.

[பின்னை இரவும் பகலும் பிரியேம் ஆகி திரிய, தன்னை அடைந்த நண்பின் தகவால் மிக ஆதரியா, என் ஐ வானம் எய்தி, யானே இறைவன் ஆனால், உன்னை ஆள வைப்பேன் உலகில் பாதி என்றான்.]

**விளக்கம்:**—திரிய-(ஒருவரை யொருவர் பிரியாது) ஒழுகிவர. தன்னை அடைந்த நண்பின் தகவால் - என்னிடமிருந்து அவனை அடைந்த சீரிய நட்பின் விசேஷத்தால். என் ஐ - என் தந்தை உலகில் (நாட்டில்) பாதியை ஆளும்படி உன்னை அமர்த்துவேன், என்றான்,—என்பது ஈற்றடியின் பொருள்

40. நன்று நன்றுன் வாய்மை நன்றா நண்புக் கினியாய்
என்று போந்து நானு மியன்ற தவத்தி னிருந்தேன்
வென்று கொண்ட புவியை வேந்தன் மகவுக் களித்துச்
சென்று வானம் புகுந்தான் சிறுவன் தலைவ னானான்.

[நன்று நன்று உன் வாய்மை நன்று ஆம், நண்புக்கு இனி யாய், என்று, போந்து நானும் இயன்ற தவத்தின் இருந்தேன்.

வென்று கொண்ட புவியை வேந்தன் மகவுக்கு அளித்து, சென்று வானம் புகுந்தான்: சிறுவன் தலைவனானான்.]

**விளக்கம்:**—(அவன் அவ்வாறு கூற) நானும், நன்று நன்று, நட்பிற்கு இனியாய், உன் வாய்மை (வாய்மொழி) நன்றாம், என்று எதிர் மொழிந்து (அதன் பின்பு) ஆசாரியனிடத்து விடை பெற்றுக் கொண்டு சென்று, (என் வகுப்பிற்கு) இயன்றதான தவத்தின் அமர்ந்திருந்தேன்; அரசனான பிருஷதன் தான் வென்று தனதாகக் கொண்ட இராச்சியத்தை மகனுக்கு உதவி இறந்து சென்று வானுலகை அடைந்தான். சிறுவனான யாக சேனன் அரசன் ஆனான்,—என்பது பொருள்.

இயன்ற - (சாதிக்குப்) பொருந்திய. சென்று - இறந்து. 'சிறுவன்' என்பது பிராயத்தால் இளையவன், என்பதோடு, அவனது புன்மைக் குணத்தையும் உணர்த்தும்.

41. தனத்தி லாசை யின்றித் தவமே தனமென்
றெண்ணி
வனத்தி லுண்டி கொண்டே மகிழ்வுற் றொருசார்
வைகிச்
சனத்தி லருளா லில்வாழ் தருமந் தவறா வண்ணம்
இனத்தின் மிக்க கிருபற் கிளையா ளிவளை
வேட்டேன்.

[தனத்தில் ஆசை இன்றி தவமே தனம் என்று எண்ணி வனத்தில் உண்டி கொண்டே மகிழ்வு உற்று ஒரு சார் வைகி, சனத்தில் அருளால் இல் வாழ் தருமம் தவறா வண்ணம் இனத்தின் மிக்க கிருபற்கு இளையாள் இவளை வேட்டேன்.]

**விளக்கம்** :—வனத்தில் உண்டி கொண்டு - வனத்தில் கிடைக்கும் காய் கிழங்கு இலைகளை உணவாகக் கொண்டு. ஒருசார் வைகி - அவ்வனத்தில் ஒரு புறம் இருந்து. சனத்தில் அருளால் - சனங்களிடத்தே உண்டான கருணையினால். இல் வாழ் தருமம் - கிருகஸ்தாசிரம தர்மம். இனத்தின் மிக்க - குலத்தினால் சிறந்த. வேட்டேன் - மணந்து கொண்டேன்.

நால்வகை ஆச்ரமங்களில், கதியற்ற ஏழைகளுக்கும், பிரும்ம சாரி, வானப் பிரஸ்தன், சந்யாசி ஆகிய மூன்று ஆச்ரமத்தார்க்கும் உண்டி, உடை கொடுத்து உதவுதற்குரியது கிருகஸ்தாசிரம மாதலால், அது காரணமாக இல்லறம் பூண்டேன், என்பதை

அவன் 'சனத்தில் அருளால்' என்ற தொடரால் குறித்தா னாயிற்று,

42. கந்த மகவை யீன்ற காள கண்ட னருளால்
வந்த மகவிம் மகவும் வறுமை வளர வளர்ந்தான்
இந்த மகவு மையாண் டிளமை யறியா தெனலால்
தந்த மகவை நோக்கித் தாயும் பெருகத்
தளர்ந்தாள்.

[கந்தன் மகவை ஈன்ற காளகண்டன் அருளால் வந்த மகவு, இ மகவும்; வறுமை வளர வளர்ந்தான் இந்த மகவும் ஐ ஆண்டு இளமை அறியாது, எனலால், தந்த மகவை நோக்கி தாயும் பெருக தளர்ந்தாள்.]

**விளக்கம் :**—இ மகவும் கந்த மகவை ஈன்ற காளகண்டன் அருளால் வந்த மகவு, இந்த மகவும் வறுமை வளர ஐ ஆண்டு இளமை அறியாது வளர்ந்தான்; எனலால், தந்த மகவை... தளர்ந்தாள்'—என்பது அன்வயம்.

கந்த மகவை...காளகண்டன் - முருகக் கடவுளை ஈன்ற சிவ பெருமான். இந்த மகவும் - (சிவனருளால் வந்த) குழந்தையும். வறுமை வளர - வறுமை அதிகரிக்க. ஐ ஆண்டு - ஐந்து வயது அளவும். இளமை அறியாது - இளமைப் பருவத்திற்குரிய எந்த வித இன்ப நலங்களையும் அறியாமல். எனலால் - என்ற இக் காரணத்தால். தாய் மிகவும் தளர்ந்தாள், என்றபடி.

கிருபியின் அழகைக் கண்டு காமங் கொண்ட சிவனது அரு ளால் ஒரு குதிரையினிடம் தோன்றிய குழந்தை அச்வத்தாமன், என்பர். கிருபியிடம் துரோணனுக்குச் சிவாம்சமாகப் பிறந்த பிள்ளை அச்வத்தாமன், என்றும் கூறுவர்.

'இளமை' என்பது, குழந்தைப் பருவத்திற்குரிய பாலுண் ணல், ஆடை ஆபரணங்கள் அணிதல் ஆகிய இன்ப நுகர்ச்சிக் குரியவற்றை ஆகுபெயராய்க் குறிக்கும்.

'கந்தன் - மகவு - கந்தமகவு,' என்று ஈறுகெட்டது,

43. மாவின் பாலே யன்றி மரபுக் குரிய மைந்தன்
ஆவின் பால்கண் டறியா னதனால் வருந்தி யந்தக்
கோவின் பாலெய் துதலுங் கோமான் யார் நீ
யென்ன
நாவின் பாலர னடுங்கி நானுன் னண்ப னென்றேன்.

[மாவின் பால் அன்றி மரபுக்கு உரிய மைந்தன் ஆவின் பால் கண்டு அறியான்; அதனால், வருந்தி அந்த கோவின் பால் எய்து தலும் கோமான் 'யார் நீ?' என்ன, நாவின் பாலால் நடுங்கி 'நான் உன் நண்பன்' என்றேன்.]

**விளக்கம் :—**மாவின்பால் - மாவினால் ஆன கஞ்சி. மரபு - வமிசம். கோவின் பால் - யாகசேனனிடம். நாவின் பாலால் - அவனது வாய்ச் சொல்லின் தன்மையினால். நடுங்கி - வியந்து கூசி.

'நாவின் பாலால்' என்பதற்கு, (விருப்பமில்லாமல் துரோணன் தன்) வாயால் (கூறினான்) என்றும் பொருள் கொள்ளலாம்.

44. மன்னன் யானீ முனிவன் மரபா லெனக்கு முனக்கும்
என்ன நண்புண் டென்ன வேசிநகைசெய்
திகழ்ந்தான்
அன்ன துருபன் தன்னை யவையி லரசர் கேட்பச்
சொன்ன வாய்மை நீயே சோர்ந்தா யானோ
சோரேன்.

[மன்னன் யான், நீ முனிவன், மரபால் எனக்கும் உனக்கும் என்ன நண்பு உண்டு, என்ன, ஏசி நகை செய்து இகழ்ந்தான்; அன்ன துருபன் தன்னை அவையில் அரசர் கேட்ப, சொன்ன வாய்மை நீயே சோர்ந்தாய், யானோ சோரேன்.

**விளக்கம் :—** மரபு - சாதி. சோர்ந்தாய் - தவறினாய். சோரேன் - (நான்) தவற மாட்டேன். துருபதன், என்பது யாகசேனனது மற்றோர் பெயர். 'துருபதன்,' என்பதின் விகாரம் துருபன்.

"பாதி ராஜ்யம் கொடுப்பதாக முன்பு நீ சொன்ன சொல் சோர்ந்தாய். இப்பொழுது நான் உன் விஷயமாய்ச் சொல்லும் சொல்லைத் தவறாமல் நிறைவேற்றுவேன்," என்று துரோணன் தெரிவிக்கும் கருத்து ஈற்றடி.

'அன்ன நிருபன்' என்றும் பாடம் உளது.

45. புகன்ற படிநீ யாளும் புவியும் பாதி கொள்வேன்
இகன்ற சமரி லுன்னை யிரதத் துடனே கவர்வேன்

அகன்ற மெய்ம்மை யுடையா யறிதி யென்றே
னென்று
சுகன்றன் ஞானம் பெற்ற துரோணன் சொல்லக்
கேட்டான்.

[புகன்றபடி நீ ஆளும் புவியும் பாதி கொள்வேன், இகன்ற சமரில் உன்னை இரதத்துடனே கவர்வேன், அகன்ற மெய்மை உடையாய். அறிதி என்றேன், என்று சுகன் தன் ஞானம் பெற்ற துரோணன் சொல்ல கேட்டான்.]

**விளக்கம்:**—இகன்ற சமர்- பகைத்துச் செய்யும் போர். அகன்ற மெய்மை உடையாய்-சொன்ன சத்திய மொழி தவறின வனே. சுகன் தன் ஞானம்-சுக முனிவனுக்குள்ள மெய்யறிவு போன்ற அறிவைப் பெற்ற (துரோணன்). துரோணன் சொல்ல (வீடுமன்) கேட்டான்.

வியாச முனிவனது புதல்வன் சுகன். வியாசனினும் சிறந்த ஞான வித்தகன்; எனவே. அவனை, 'சுகப் பிரும்மம்' என்று அழைப்பர்.

46. கேட்ட வரச னழைக்கக் கிருப னுடன்வந்
திறைஞ்சும்
பூட்டு வரிவிற் றடக்கைப் புதல்வர் புதல்வர் தம்மைக்
காட்டி நீயே யிவரைக் கடிதிற் படைமைக் கல்வி
மூட்டி நின்வஞ் சினமு முடித்தி யென்று
மொழிந்தான்.

[கேட்ட அரசன் அழைக்க, கிருபனுடன் வந்து இறைஞ்சும் பூட்டு வரிவில் தடம் கை புதல்வர் புதல்வர் தம்மை காட்டி, நீயே இவரை கடிதின் படைமை கல்வி மூட்டி நின் வஞ்சினமும் முடித்தி என்று மொழிந்தான்.]

**விளக்கம்:**— கேட்ட அரசன்- வீடுமன். பூட்டு வரிவில்- நாண் ஏற்றப்பெற்ற கட்டமைந்த வில். புதல்வர் புதல்வர்- பேரப்பிள்ளைகளாகிய துரியோதனாதியரும் பாண்டவரும். படைமைக் கல்வி-ஆயுதவித்தை. மூட்டி-அளித்து. வஞ்சினம்- சபதம்.

47. முனிநீ யையா விதற்கு முன்ன மின்று முதலா
இனியிவ் வுலகுக் கரசா யெம்மி லொருவ னாகிக்
குனிவில் வலியா லமருங் கோடியென்று கொடுத்தான்
பனிவெண் குடையு நிருபற் குரிய வரிசை பலவும்.

[முனி நீ ஐயா இதற்கு முன்னம், இன்று முதலா இனி இ உலகுக்கு அரசாய் எம்மில் ஒருவன் ஆகி குனிவில் வலியால் அமரும் கோடி, என்று கொடுத்தான் பனிவெண் குடையும் நிருபற்கு உரிய வரிசை பலவும்.]

**விளக்கம்:**—அமரும் கோடி-போர் செய்தலையும் மேற் கொள்வாயாக. குடை, கொடி, படை, தேர். யானை, குதிரை முதலியன நிருபர்களுக்கு உரிய வரிசை.

சிஷ்யனது உடைமை ஆசார்யனுக்கு உரியது, என்ற முறைமை சற்றி, "இனி இவ்வுலகுக்கு அரசாய் இரு," என்று வீடுமன் கூறினான், என்க. இது உபசார மொழியின் பாற்படும்.

**குருகுல மைந்தர் துரோணரிடம் கற்றல்**

**எழுசீர் ஆசிரிய விருத்தம்**

48. அன்றுமுத லாகவரி வெஞ்சிலைமு தற்படைக
ளானவை யனைத்து மடைவே
தொன்றுபடு நூன்முறையின் மறையினொடு திட்டிரசு
யோதனர்களாதி யெவரும்
ஒன்றியது ரோணனரு ளாலும்வலி யாலுமுய
ருணர்வுடைமை யாலுமுதலே
நின்றகுறை யாலுமொரு வர்க்கொருவர் கல்வியினி
ரம்பினர்வரம்பி னிதியோர்.

[அன்று முதலாக வரி வெம்சிலை முதல் படைகள் ஆனவை அனைத்தும் அடைவே தொன்று படு நூல் முறையின் மறையினொடு உதிட்டிர சுயோதனர்கள் ஆதி எவரும், ஒன்றிய துரோணன் அருளாலும், வலியாலும், உயர் உணர்வு உடைமை யாலும், முதலே நின்ற குறையாலும் ஒருவர்க்கு ஒருவர் கல்வியின் நிரம்பினர் வரம்பில் நிதியோர்.]

**விளக்கம்:**—அன்று முதலாக. வரம்பில் நிதியோர் (ஆன) உதிட்டிர சுயோதனர்கள் ஆதி எவரும், வரி வெஞ்சிலை முதல் படைகள் அனைத்தும் அடைவே, தொன்றுபடு நூல் முறையின் மறையினொடு, ஒன்றிய துரோணர் அருளாலும்......குறை யாலும் (கற்று) ஒருவருக்கு ஒருவர் கல்வியின் நிரம்பினர்,— என்பது அன்வயம்.

அடைவே- கிரமப்படி, முறையாக. தொன்று படுநூல் முறையின்-பழமை பொருந்திய நூல்களில் கூறப்பெற்ற முறை பிழையாமல். மறை—(அஸ்திரங்களுக்கு உரிய) மந்திரம். ஒன்றிய துரோணன்- குருகுலத்தோடு ஒன்றிவிட்ட துரோணன். வலி-தேக பலம். உயர் உணர்வு- இயற்கையாய் அமைந்த சிறந்த அறிவு; முதலே நின்ற குறையாலும், (எளிதே கற்றுத் தேர்ந்து),ஒருவர்க்கு ஒருவர் கல்வியின் நிரம்பினர்-ஒருவர் போலவே ஒருவர், அதாவது எல்லோரும் கல்வியினால் நிறைந் தவர் ஆயினர்.

முன்ஜன்மத்தில் கற்று விட்ட குறையினால், ஒருவருக்கு முற்றிய கல்வி ஏற்படுகின்றது, என்பர். முதலில் கிருபனிடம் கற்றுக் குறையாய் நின்றதைத் துரோணனிடம் கற்று முற்றிய கல்வியர் ஆயினர்,—என்றும் பொருள் கொள்ளலாம்.

49. வெஞ்சிலையி னாலிவனி ராகவனை யொக்குமென
விசயன்வி சயத்தின் மிகவே
எஞ்சியகு மாரர்கள் பொறாமையின் மிகுந்தனர்க
ளிரவியெதிர் மின்மினி கள்போல்
அஞ்சொன்மு னிதானுமிவன் மேலெவரி
னும்பெருக வன்புடைய னாகியகலான்
நெஞ்சுறவ ருங்கலைகள் கற்குமவர்தம்மளவில்
நேயநிக ழாதவர் கள்யார்.

[வெம் சிலையினால் இவன் இராகவனை ஒக்கும் எனவிசயன் விசயத்தின் மிகவே, எஞ்சிய குமாரர்கள் பொறாமையின் மிகுந்த னர்கள் இரவி எதிர் மின்மினிகள் போல், அம் சொல் முனி தானும் இவன் மேல் எவரினும் பெருக அன்பு உடையன் ஆகி, அகலான் : நெஞ்சு உற அரும் கலைகள் கற்கும் அவர் தம் அளவில் நேயம் நிகழாதவர்கள் யார்?]

**விளக்கம் :**—விசயன் விசயத்தில் மிகவே - அருச்சனன் வெற் றிக்குரிய சரக்கலைத் தேர்ச்சியில் மேம்பட்டு விளங்க. எஞ்சிய குமாரர்கள்-பாண்டவர் ஒழிந்த மற்றவரான துரியோதனாதியர். இரவியின் எதிர் மின்மினிபோல் பொறாமையின் மிகுந்தனர்கள். அம் சொல்முனி - துரோணன். பெருக - மிகுதியான. அகலான் - (விசயனிடம் கொண்ட அன்பினின்று) நீங்காதவனானான்.

"அரிய கலைகளை மனத்தில் ஆழ்ந்து நிலைக்கும்படி கற்கும் மாணவரிடத்து அன்பு உண்டாகப் பெறாத ஆசிரியர் யாவர்?" என்பது ஈற்றடியின் பொருள். அதாவது, நன்றாகக் கற்கும் மாணவரிடத்து அன்பு கொள்ளல் ஆசிரியர்களின் இயல்பு.

இச் செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பு என்ற அணியை உட்கொண்டது. இதன் இலக்கணத்தை முன்னம் பலவிடங்களில் கூறியுள்ளோம். பொதுப் பொருளால் சிறப்புப் பொருள் சாதிக்கப் பெற்றிருப்பது காண்க.

50. ஏகலைவ னென்றொருகி ராதன்மு னியைத்தனியி
றைஞ்சியிவனேவ லின்வழான்
ஆகலைய டைந்துமிகு பக்தியொடு நாடொறும்
மருச்சுனனை யொத்து வருவான்
மேகலைநெ டுங்கடல்வ ளைந்ததர ணிக்கணொரு
வில்லியென வின்மை யுடையான்
மாகலைநி றைந்துகுரு தக்கிணைவ லக்கையினில்
வல்விரல் வழங்கி யுளனால்.

[ஏகலைவன் என்று ஒரு கிராதன் முனியை தனி இறைஞ்சி இவன் ஏவலின் வழான் ஆகலை அடைந்து, மிகு பக்தியோடு நாள்தொறும் அருச்சுனனை ஒத்து வருவான், மேகலை நெடும் கடல் வளைந்த தரணிக்கண் ஒரு வில்லி என வின்மை உடையான், மாகலை நிறைந்து குருதக்கணை வலக்கையினில் வல் விரல் வழங்கி உளன், ஆல் : அசை.]

**விளக்கம் :**—ஏகலைவன் என்றொரு கிராதன் (வேடன்) முனியை மிகு பக்தியோடு தனியே இறைஞ்சி (வணங்கி) இவன் (இத்துரோணனது) ஏவலின் வழான் ஆகலை அடைந்து நாள் தொறும் அருச்சனனை ஒத்து வருவான்,—என்பது முதல் இரண்டடிகளின் அன்வயம்.

மேகலை - இடையணி. தரணி - பூமி. பூமிதேவியின் மேகலாபரணம் என்று கடலைச் சொல்வது கவி மரபு. வின்மை - (வில் - மை) விற்கலைத் தேர்ச்சி. மாகலை நிறைந்து - பெரிய அஸ்திரக் களைத் தேர்ச்சியால் நிறைந்து. தக்கிணை - தக்ஷிணை. வலக்கையினில் வல்விரல் - வலது கைப் பெருவிரல்.

ஏகலைவன் என்ற வேடன், துரோணரை அடைந்து, தனக்குப் படைக்கலை போதிக்குமாறு வேண்ட, அவனுக்குக்

கற்பிக்க விரும்பாத அவர் "என்னைக் குருவாக நினைத்து நீயே பயின்று கொள்," என்று கூறலும், அவன் துரோணர் போன்ற ஒரு பிரதிமை செய்து, அதற்குப் பூசை செய்ததின், பயனாய், அஸ்திர வித்தையில் அர்ச்சுனனையும் விஞ்சுபவனாயுளான். ஈதறிந்த விசயன், குருவை அடைந்து "என்னை விஞ்சுபனான உங்கள் சிஷ்யன் ஒருவன் இருக்கின்றானே" என்று சொல்ல, அவர் விசயனோடு ஏகலைவன் இருக்குமிடஞ் சென்று, குருதக்ஷிணை கொடுக்குமாறு அவனைக் கேட்டார். அவனும் அவர் விரும்பியபடி உவகையோடு தன் வலக்கைப் பெருவிரலைத் துணித்துக் கொடுத்தான். இதனால், விசயன், விற்கலையில் தன்னேர் இல்லாதவனாயினான்,— என்பது கதை.

51. அங்குலிக மொன்றுபுன லாழ்தருகி ணற்றில்விழ
வந்தமுனிதேடு மினெனப்
புங்கமொடு புங்கமுற வெய்திவனெ டுத்தமைபு
கன்றருகு நின்ற வரைநீர்
இங்கிதனி லைத்தொகைகள் யாவுமுரு வப்பகழி
யேவுமினெனாமுன் விசயன்
துங்கவில்வ ளைத்தொருக ணத்தினில்வ டத்திலைது
ளைத்தனனி லக்கி றொடையால்.

[அங்குலிகம் ஒன்று புனல் ஆழ்தரு கிணற்றில் விழ, இந்த முனி தேடு மின் என, புங்கமொடு புங்கம் உற எய்து இவன் எடுத்தமை புகன்று அருகு நின்றவரை, "நீர் இங்கு இதன் இலை தொகைகள் யாவும் உருவ பகழி ஏவுமின்," எனா முன், விசயன் துங்கம் வில் வளைத்து ஒரு கணத்தினில் வடத்து இலை துளைத்தனன் இலக்கு இல் தொடையால்.]

**விளக்கம்:—**அங்குலிகம் - மோதிரம். ஆழ்தரு - ஆழமான. புங்கமொடு புங்கம் உற - பாணத்தோடு பாணம் பொருந்தும் படி. இவன் எடுத்தமை புகன்று - வியாசன் (மோதிரத்தை) எடுத்ததற்குப் பாராட்டி: இதன் இலை தொகைகள் யாவும் - இந்த ஆலமரத்தின் இலைக் கூட்டங்கள் யாவும். துங்கவில் - சிறந்த வில். வடத்து இலை - ஆலமரத்து இலை. இலக்கு இல் தொடையால் - எதிர் இல்லாத பாணத்தால்.

'அங்குலியகம்' என்ற வட சொல்லின் திரிபு அங்குலிகம், (விரலில் அணியப்படுவது, என்பது பொருள்). புங்கம், துங்கம், வடம்: இவை வடமொழிச் சொற்கள். 'எடுத்தமை புகன்ற (பாராட்டிய) குரு.

இதில் கூறப் பெற்ற வரலாறு முதல் நூலிலிருந்து சிறிது மாறுபடுவதாகின்றது.

52. முத்திமுனி தாளிணையை நீர்படித டந்துறையின்
முதலைகவர் வுற்ற தெனலும்
சித்திரவில் வீரர்பல ருந்தமவெ றுங்கையொடு
சென்றருகு நின்று விடவே
பத்தியின்வி ரைந்துபொது வேயிபம ழைக்கவொரு
பறவைமிசை வந்த நெடுமால்
கைத்திகிரி போற்கணையின் விசயனத னைப்பழைய
கார்முதலை யிற்று ணிசெய்தான்.

[முத்தி முனி தாள் இணையை நீர் படி தடம் துறையின் முதலை கவர்வுற்றது எனலும், சித்திரம் வில் வீரர் பலரும் தம வெறும் கையொடு சென்று அருகு நின்று விடவே, பத்தியின் விரைந்து பொதுவே இபம் அழைக்க ஒரு பறவை மிசை வந்த நெடுமால் கை திகிரிபோல் கணையின் விசயன் அதனை பழைய கார் முதலையின் துணி செய்தான்.]

முத்தி முனி - முத்தி பெறுதற்குரிய ஞானத்தையும் ஒழுக்கத்தையும் உடைய துரோணன். நீர்படி தடந்துறை - நீராடுவதற்குரிய பெரிய நீர்த்துறை. கவர்வுற்றது - பற்றிக் கொண்டது. சித்திரம் வில் - அழகிய வில் (இகழ்ச்சியின் பாலது.)

பத்தியின் விரைந்து பொதுவே இபம் அழைக்க - பக்தியோடு அவசரமாக (ஆதிமூலமே என்று) பொதுவாக (முதலை வாய்ப்பட்ட) கஜேந்திரன் என்ற யானை அழைக்க. பறவை - கருடன். திகிரி - சக்கரம். விசயன் அதனை பழைய கார் முதலையின் துணி செய்தான் - விசயன் அம் முதலையை, திருமாலின் சக்கரம் பிளந்த கரிய முதலையைப் போல் பிளந்து வீழ்த்தினான். முதலை பற்றிய குருவின் காலுக்குத் தீங்கு நேராமல் முதலையை விசயன் கொன்றமை பற்றி, 'திகிரிபோல் கணை' எனப்பட்டது.

'பொதுவே இபம் அழைக்க' என்றது, 'மூலப்பொருள் திருமாலே' என்ற குறிப்பினது. "வேழம் அழைக்க வெளியான துவே," என்றார் பிறரும்.

53. ஒருதனுவி னாலிதய மகிழ்குருவி னுக்கிவனு
முயருத வினானு தவலும்
குருவுமிவ னுக்குநிலை யாலுமறை யாலும்வலி
கூர்பகழி யொன்று தவினான்

இருவருந யந்த ருளும் வினயமுமி குந்தனர்க
ளின்னுயிரு மனமு மென்மேல்
மருவிவரு நல்வினைவ யத்தின்வழி வந்தபயன்
மற்றொருவருக்கு வருமோ.

[ஒரு தனுவினால் இதயம் மகிழ் குருவினுக்கு இவனும் உயிர் உதவினான், உதவலும், குருவும் இவனுக்கு நிலையாலும் மறையாலும் வலி கூர் பகழி ஒன்று உதவினான்; இருவரும் நயந்து அருளும் வினயமும் மிகுந்தனர்கள், இன் உயிரும் மனமும் என் மேல் மருவி வரும் நல்வினை வயத்தின் வழி வந்த பயன் மற்று ஒருவருக்கு வருமோ.]

**விளக்கம்:**—அர்ச்சுனனும் ஒப்பற்ற தனது சிலைக்கலைத் திறமையால் குருவுக்கு உயிர் உதவினான். குருவும் இவனுக்குப் பிரசிரஸ் என்ற தடுக்க வொண்ணாத நிலையினதான அஸ்திரத்தை மந்திரத்தோடு கொடுத்தான்,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

இருவரும் உயிரும் உணர்வும்போல் (ஒன்றி) ஒருவரையொருவர் விரும்பி, (குரு) அருளிலும், (சிஷ்யன்) வழிபாட்டிலும் மிகுந்தனராயினர்,—மூன்றாவது அடியின் பொருள்,

மேல் மருவி வரும் நல்வினை வயத்தின் வழி வந்த பயன் மற்றொருவருக்கும் வருமோ - முன்ஜன்மத்தில் செய்யப்பட்டுத் தொடர்ந்து வரும் புண்ணிய வசத்தால், முறையே மறுபிறப்பில் வந்து பொருந்தும் பயன் (இவரல்லாத) மற்றவர்க்கு உண்டாகுமோ, உண்டாகாது என்றபடி.

மாணாக்கருக்கு நல்லாசிரியரும், ஆசிரியருக்கு நல்ல மாணாக்கரும் கிடைப்பது முன் ஜென்மம் செய்த நல்வினையின் பயனாகும், என்பது ஈற்றடியின் கருத்து.

### வித்தை அரங்கேற்றம்

54. சிலைக்குருவி றற்குருகு லக்குமர
ருக்குவரு சிரமநிலைகாண்மி னெனவே
அலைக்கலைநி லாவெழுக திர்ப்புதல்வ
ருக்குநல்ல றக்கடவுளுக்கு முரையா

நிலைப்படுவி சாலமணி யணிதிகழ
ரங்கின்மிசை நிகழ்பலிகொடுத்த ரியுடன்
கலைப்புரவி யூர்திருவை யுந்தொழுது
புக்கனன கத்துணர்வுமிக்க கலையோன்.

[சிலை குரு விறல் குருகுல குமரருக்கு வரு சிரமம் நிலை காண்மின் எனவே, அலை கலை நிலா எழு கதிர் புதல்வருக்கும் நல் அறம் கடவுளுக்கும் உரையா, நிலைபடு விசாலம் மணி அணி திகழ் அரங்கின் மிசை நிகழ் பலி கொடுத்து, அரியுடன் கலை புரவி ஊர் திருவையும் தொழுது புக்கனன், அகத்து உணர்வு மிக்க கலையோன்,]

**விளக்கம் :—** அகத்து உணர்வு மிக்க கலையோன் சிலை குரு-ஆன்மஞானம் மிகுந்த கலைகளில் வல்லானாகிய வில்லாசிரியன், (துரோணன்). விறல் - வலிமை. சிரம நிலை - படைக்கலப் பயிற்சியின் நிலை. கலை நிலா எழு அலை கதிர் புதல்வர் - கலைகள் நிரம்பிய ஒளியாகிய நிலவோடு கடலினின்றும் தோன்றும் கதிரியின் (சந்திரனின்) குலம் வந்த புதல்வர், (அதாவது வீடுமனும் திருதராட்டினும்) அறக் கடவுள்-எமதர்ம ராஜனது அமிசமாய்த் தோன்றிய விதுரன். உரையா - உரைத்து. நிலைபடு விசால மணி அணி திகழ் அரங்கு - நிலையாகப் பதிக்கப் பெற்ற மணிகளின் அழகு விளங்கும் போரரங்கம். நிகழ் பலி கொடுத்து - பலி கொடுத்தற்குரிய பலி கொடுத்து. அரியுடன் கலை புரவி ஊர் திரு - துர்க்கை. சிங்கமும் கலைமானும் துர்க்கையின் வாகனங்கள். புரவி, என்பது வாகனம் என்ற பொருளது.

துர்க்கை போருக்குரிய தேவதையாதலால், யுத்த பூமியில் புகுவோர் அதற்குப் பலி கொடுத்து வழிபடல் மரபு.

### வித்தை அரங்கேற்றம்

55. புரியிலறி வோர்சனப தத்திலறி
வோர்புவிபு ரக்குமவர் தம்மி லறிவோர்
வரிபடவ யங்குகொடி மஞ்சவித
மெங்கணும்வ னப்புற விருந்த பொழுதில்
தெரிவுறுவி மானமனை தோறுமுறை
தேவர்பலர் சித்தர்முத லோர்ப லரொடும்
கரியநெடு மால்பிரம னிந்திரன்மு
தற்பலர்க லந்தவகல் வானி கருமே.

[புரியில் அறிவோர் சனபதத்தில் அறிவோர் புவி புரக்கும் அவர் தம்மில் அறிவோர், வரிபட வயங்கு கொடி மஞ்சம் விதம் எங்கணும் வனப்பு உற இருந்தபொழுதில், தெரிவுறு விமான மனை தோறும் உறை தேவர் பலர் சித்தர் முதலோர் பலரொடும் கரிய நெடுமால் பிரமன் இந்திரன் முதல் பலர் கலந்த அகல் வான் நிகருமே.]

**விளக்கம் :**—புரி - அத்தினபுரி. சனபதம் - (ஜநபதம்) நாடு. புவி புரக்குமவர் - அரசர். வரிபட - வரிசையாக. கொடி மஞ்ச விதம் - நீண்ட ஆசன வகை. தெரிவுறு - விளங்குகின்ற. விமான மனை - விமானங்களாகிய மனைகள். சித்தர் - யோக சித்தி பெற்றவர். கலந்த - வந்து கூடிய.

'அறிவோர்' என்று படைக்கலப் பயிற்சியில் மிக்காரைக் குறிக்கும். அரங்கேற்றத்திற்கு அமைந்த பூமி, விமான வீடுகளில் வசிக்கும் தேவர், எண்வகை சித்திகள் கைவந்த சித்தர், திருமால், பிரும்மன், இந்திரன் முதலிய பலர் ஒன்றுபட்டுக் கூடிய வானத்தை ஒத்திருந்தது,—என்றபடி.

அஷ்டமாசித்திகள் :—அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்,

**அணிமா :**—பிரகிருதி தத்துவம் முதல் பிரும்ம தத்துவம் ஈறாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களிலும் உள்ளும் புறமும் வியாபித்தல்.

**இலகிமா :**—பரமாணுவைப் போல் மிகவும் இலேசாகச் செய்து கொள்ளல்.

**கரிமா :**—மலைபோல் கனமுறுதல்.

**பிராப்தி :**—பிரும்மலோகம் முதலிய இடங்கள் செல்லும் திறமை.

**பிராகாமியம் :**—பரகாயப் பிரவேசம் செய்தல், விண்ணில் சஞ்சரித்தல், விரும்பிய போகங்களைத் தன்னிடம் வரச் செய்தல், முக்கால அறிவு.

**ஈசத்துவம் :**—நவக்கிரகங்களை ஏவல் கொள்ளல்.

**வசித்துவம்:**—அசுரர், பறவை, விலங்கு, தேவர், திக்பாலர் ஆகியவைகளைத் தன்வசப்படச் செய்தல்.

56. ஆற்றின்வழு வாமனுமு றைத்தருமன்
மைந்தன்முத லாகியகுமார ரடைவே
போற்றியட லாசிரிய ரிருவரையு
மன்பினுயர் பூசைபல செய்து புரிநாண்
ஏற்றியச ராசனம்வ ணக்கிவடி
வாளியினி லக்கமவை நாலும் வகையான்
மாற்றினர்பி ளந்துபெரு வண்மைசிறு
நுண்மைசல நிச்சலமெ னச்செயல் வகையே.

[ஆற்றின் வழுவா மனு முறை தருமன் மைந்தன் முதலாகிய குமாரர் அடைவே, போற்றி அடல் ஆசிரியர் இருவரையும் அன்பின் உயர் பூசை பல செய்து, புரிநாண் ஏற்றிய சராசனம் வணக்கி, வடி வாளியின் இலக்கம் அவை நாலும் வகையான் மாற்றினர் பிளந்து பெரு வண்மை, சிறு நுண்மை, சலம் நிச்சலம் என செயல் வகையே.]

விளக்கம்:—ஆற்றின் வழுவா- நன்னெறியினின்றும் வழுவாத. மனுமுறை- மனுதர்ம நூல்கூறும் நீதிகள். தருமன் மைந்தன்-தருமனாகிய மைந்தன், தருமபுத்திரன். போற்றி- தொழுது. அடல்-வலிமை. ஆசிரியர் இருவரும் - கிருபனும் துரோணனும். அன்பின் - உயர்ந்த அன்போடு. புரி நாண் ஏற்றிய-முருக்கமைந்த நாணை ஏற்றுவதற்காக. சராசனம் வணக்கி - வில்லை வளைத்து. பெருவண்லம, சிறு நுண்மை, சலம், நிச்சலம் எனச் சொல்வகையே இலக்கம் அவை நாலும் வடிவாளியின் வகையான் பிளந்து மாற்றினர் என்று அன்வயிக்க.

பெருவண்மை- பெரிய இலக்ஷியம். சிறு நுண்மை-மிகச் சிறிய இலக்ஷியம். சலம்- அசையும் இலக்ஷியம், நிச்சலம்-அசையாத இலட்சியம். என சொல் வகை-என்று வகைப்படுத்திச் சொல்லப் பெற்ற. இலக்கியம் அவை நாலும்-நான்கு வகை இலட்சியங்களையும். வடி வாளியின்- கூரிய அம்புகளால். வகையான்-முறைப்படி பிளந்து மாற்றினர்-பிளந்து வீழ்த்தினர்.

தருமன் முதலான குமரர்:—பஞ்ச பாண்டவரும், துரியோதனாதியரும் ஆகிய நூற்றைவரும்.

57. ஆயுதம நேகவித மானவையெ
னைப்பலவு மழகுறவியற்றி யுமதம்
பாயுமிப மாவிரதம் வாசியொரு
வர்க்கொருவர் பலகதி வரக்க டவியும்
சேயுயரு மாடநிலை தெற்றியினி
ருந்தவர்தெ ளிந்துளம கிழ்ந்து நவைதீர்
வாயுகதி யல்லதும னித்தர்கதி
யல்லவென வல்லனபுரிந்த னரரோ.

[ஆயுதம் அநேக விதம் ஆனவை எனை பலவும் அழகு உற இயற்றியும், மதம் பாயும் இபம் மா இரதம் வாசி ஒருவர்க்கு ஒருவர் பலகதி வர கடவியும், சேய் உயரும் மாடம் நிலை தெற்றியின் இருந்தவர் தெளிந்து உளம் மகிழ்ந்து நவைதீர் வாயு கதி அல்லது மனித்தர் கதி அல்ல என, வல்லன புரிந்தனர்,— அரோ: ஈற்றசை,]

**விளக்கம்:**—எனை அநேக விதமானவை (ஆகிய) ஆயுதம் பலவும் அழகுற இயற்றியும்,—என்பது அன்வயம். 'எனை' ஏனை என்ற இடைச் சொல்லின் குறுக்கம்; 'மற்றும், மேலும்,' என்ற பொருளது. அழகுற இயற்றி-நன்றாக உபயோகித்துக் காட்டி. (அதன்பின்) சேய் உயரும்...அல்ல என ,(என்று சொல்லும்படி பாயும் இபம்... கடவியும் வல்லன புரிந்தனர்,— என்பது அன்வயம்.

மாடம் நிலை-(மாளிகைகளின்) மாடங்கள். (நிலை-இடம்). தெற்றி-மண்டபங்கள். தெளிந்து-கண்டு. நவைதீர்- குற்றம் தீர்ந்த. வாயுகதி அல்லது மனித்தர் (மனிதர்) கதி அல்ல என்று (கண்டவர்) சொல்லும்படி. மதம் பெருகும் இபம் (யானை) மா இரதம் (பெரிய தேர்) வாசி (குதிரை) (ஆகியவற்றையும்) ஒருவர்க்கு ஒருவர் (பின்னிடாதாராய்) பலகதிவர (பலவித நடை விகற்பங்கள் தோன்ற) கடாவி (செலுத்தி) வல்லன புரிந்தனர் (பயிற்சித் திறமைகளைச் செய்து காட்டினர்),— என்க.

கதி-நடை விசேஷம். 'மாட நிலைத்தோறும் அவையிருந் தவர்' என்றோர் பாடம் உளது. "மாடங்கள் தோறும் சபை யாகக் கூடியிருந்தார்'' என்பது பொருள்.

**கதைப்போர்**

58. ஒத்தவலி யோர்வலியு மொத்ததிற லோர்திறலு
மொத்தவினை யோர்வி னையும்வன்
சித்தமனன் மூளமுக வம்புயம லர்ந்தரசன்
மகனுமனி லன்சி றுவனும்
கைத்தல மலர்ந்தகதை கொண்டெதிர் நடந்தனர்க
ளிப்புடனி ரண்டு தறுகண்
மத்தகயம் வேரொடும ராமரமெ டுத்தமர்ம
லைந்தனைய கோல மறவோர்.

[ஒத்த வலியோர் வலியும் ஒத்த திறலோர் திறலும் ஒத்த வினையோர் வினையும் வல் சித்தம் அனல் மூள முகம் அம்புயம் மலர்ந்து அரசன் மகனும் அனிலன் சிறுவனும் கைத்தலம் அமர்ந்த கதை கொண்டு எதிர் நடந்தனர், களிப்புடன் இரண்டு தறுகண் மத்த கயம் வேரொடும் மராமரம் எடுத்து அமர் மலைந்து அனைய கோல மறவோர்.]

**விளக்கம் :**—ஒத்த வலியோர் வலியும், ஒத்த திறலோர் திறலும், ஒத்த வினையோர் வினையும் (உடைய) அரசன் மகனும் அனிலன் சிறுவனும் (ஆகிய) கோல மறவோர்; தறுகண் மத்த கயம் இரண்டு களிப்புடன் வேரொடும் மராமரம் எடுத்து மலைந்தனைய, வல் சித்தம் அனல் மூள, முக அம்புயம் மலர்ந்து, கைத்தலம் அமர்ந்த கதை கொண்டு எதிர் நடந்தனர்,—என்பது அன்வயம்.

ஒத்த வலியோர்...வினையும் - ஒத்த வலி உடையோரின் வல்லமையையும், ஒத்த பராக்கிரமத்தையுடையோரின் பராக்கிரமத்தையும், ஒத்த படைத் தொழில் ஆற்றலுடையோரின் தொழிலாற்றலையும் (உடைய). அரசன் மகனும் அனிலன் சிறுவனும் ஆகிய கோல மறவோர் திருதராட்டிர குமாரனாகிய துரியோதனனும், வாயு குமாரனான வீமனும் ஆகிய போர்க் கோலங்கொண்ட வீரர், (அனிலன் - வாயு). தறுகண் - அஞ்சாமை. மத்தகயம் - மதம் பிடித்த யானைகள். களிப்புடன்- மதக் களிப்புடன். மராமரம்- சால விருக்ஷம். வல் சித்தம் அனல் மூள - வலிய மனத்தில் கோபக் கனல் மூண்டு எழ. முக அம்புயம் மலர்ந்து - போர்க் களிப்பினால் முகமாகிய தாமரை

மலரப்பெற்று. எதிர் நடந்தனர் - ஒருவரை ஒருவர் எதிர்த்தனர்.

வீமன், துரியோதனன், கீசகன், ஜராசந்தன், பகாசுரன் என்போர் சமபலம் உடையோர். கதைகளை ஏந்தி நிற்கும் வீரருக்கு மராமரத்தை ஏந்தி நிற்கும் யானைகள் உவமையாயின

59. தண்டின்முனை யொன்றினுட னொன்றுருமெ
றிந்தனைய தன்மையொடு டற்ற விலகு
மண்டலவி தங்களும்வி யப்புறந
டந்தபின்ம றத்தொடுசெயிர்த்து வயிரம்
கொண்டிருவ ரும்பொருத லுன்னுபொழு
தத்தவர்கு றிப்பினையிமைப்ப ளவையிற்
கண்டுகுரு வின்சிறுவன் வன்பொடுவி
லக்கினன்மெய் கல்விகரை கண்ட பெரியோன்.

[தண்டின் முனை ஒன்றினுடன் ஒன்று உரும் எறிந்து அனைய தன்மையொடு உடற்ற, விலகு மண்டல விதங்களும் வியப்புற நடந்த பின், மறத்தொடு செயிர்த்து வயிரம் கொண்டு இருவரும் பொருதல் உன்னு பொழுதத்து, அவர் குறிப்பினை இமைப்பு அளவையில் கண்டு, குருவின் சிறுவன் வன்பொடு விலக்கினன் மெய் கல்வி கரை கண்ட பெரியோர்.]

**விளக்கம் :**—தண்டு - கதை. உரும் எறிந்தனைய - இடி இடித்தாற் போன்ற. உடற்ற - (ஒருவரை ஒருவர்) தாக்க. விலகு மண்டல விதங்கள். மறம் - வீரம். செயிர்த்து - கோபித்து. வயிரம் - நிலைத்த பகை, க்ஷாத்திரம். பொருதல் உன்னு பொழுதத்து - போர் செய்ய நினைத்தபொழுது. குருவின் சிறுவன் - துரோணரின் புதல்வனான அச்வத்தாமன்.

"மெய் கல்வி கரை கண்ட பெரியோனாகிய குருவின் சிறுவன்," என்றும், அல்லது "குருவின் சிறுவனும், மெய்க் கல்வி கரை கண்ட பெரியோனும் ஆகிய அச்வத்தாமன்," என்றும் பொருள் கொள்ளலாம். 'மெய் கல்வி' என்று வல்லினம் மிகாமை ஓசை இன்பம் கருதி, என்க. "வலசாரி, இடசாரி, மண்டலம், பரிவு," என்பவை மண்டல விதங்கள்.

60. மீளிமக வான்மதலை யாயுதபு ரோகிதன்வி
லோசனமு ணர்ந்த வன்மலர்த்
தாளின்மு டிவைத்தெதிர்த ரித்தனனி டங்கைவரி
சாபகவ சத்தி னனிபம்
யாளியர வங்கருடன் வன்னிசலி லந்திமிர
மிரவியிவை யேக டவுளாம்
வாளியின்வி னோதமுற வெய்தனனி ருந்தமுடி
மன்னவர்ம திக்கும் வகையே.

[மீளி மகவான் மதலை, ஆயுத புரோகிதன் விலோசனம் உணர்ந்து, அவன் மலர் தாளில் முடி வைத்து. எதிர் தரித்தனன் இடம் கை வரி சாபம் கவசத்தினன், இபம் யாளி அரவம் கருடன் வன்னி சலிலம் திமிரம் இரவி இவையே கடவுள் ஆம் வாளியின் வினோதம் உற எய்தனன், இருந்த முடி மன்னவர் மதிக்கும் வகையே.]

**விளக்கம் :**—அரங்கு இருந்தோர் வியக்குமாறு அருச்சுனன் வில் தொழில் திறமை காட்டியதைக் கூறும் இது.

மீளி மகவான் மதலை - திண்ணியனான இந்திர குமாரனாகிய அருச்சுனன். ஆயுத புரோகிதன் - துரோணன். விலோசனம் உணர்ந்து- கண் குறிப்பை உணர்ந்து, எதிர் - குருவுக்கு எதிரிலே, கவசத்தினன் :இடங்கை வரிசாபம் தரித்தனன் - கவசம் பூண்டவனாகிய விசயன் இடக்கையில் கட்டமைந்த வில்லை ஏந்தினான்.

இபம் யாளி - யானையும் அதற்குப் பகையான யாளியும். அரவம் கருடன் - பாம்பும் அதற்குப் பகையான கருடனும், வன்னி சலிலம் - அக்கினியும் அதற்குப் பகையான ஜலமும், திமிரம் இரவி - இருளும் அதற்குப் பகையான சூரியனும், (என்ற). இவை - இவையாகிய, கடவுளாம் வாளியின் - தெய்வத் தன்மை பொருந்திய திவ்யாஸ்திரங்களினால், வினோதம் உற - கண்டார்க்கு வியப்பு உண்டாகும்படி, இருந்த முடி மன்னவர் (தன்னை) மதிக்கும் வகை எய்தனன் —என்று முடிக்க. எய்தனன் - அஸ்திரப் பிரயோகம் செய்தான்.

ஓர் அஸ்திரத்தால் யானையைத் தோற்றுவித்து, அதை யாளியாலும், பாம்பைக் கருடனாலும், நெருப்பை நீராலும்,

இருளைச் சூரியனாலும் தணித்தலாகிய வினோதங்களைப் புரிந்து, எல்லோரையும் வியக்கச் செய்தான்,—என்க,

மகவான் - (மகவாந்) இந்திரன். நூறு அசுவமேதம் செய்து பெறும் பதவியாதலால், இந்திரனுக்கு 'மகவான்' என்பதும் ஒரு பெயராயிற்று. மகம் - யாகம்,

**கர்ணன் கல்வித்திறன் காட்டல்**

எழுசீர் ஆசிரிய விருத்தம்

61. மங்குல் சூழ்வி மான முன்றின் மஞ்ச கோடி திகழவே
அங்கண் வான மீன மென்ன வவையி ருந்த வரசர் முன்
சிங்க மென்னு மாறெழுந்து சிங்க நாத முஞ்செய் தான்
பங்க சாத பரிம ளங்கொள் பானு ராச சூனுவே.

[மங்குல் சூழ் விமானம் முன்றில் மஞ்சம் கோடி திகழவே, அம்கண் வானம் மீனம் என்ன அவை இருந்த அரசர்முன், சிங்கம் என்னும் ஆறு எழுந்து சிங்க நாதமும் செய்தான், பங்க சாத பரிமளம் கொள் பானு ராச சூனுவே.]

**விளக்கம்:**—மேகம் படிந்த (உயர்ந்த மேல் பாகத்தை உடைய) மண்டபத்தின் முன்னிடத்தே (இடப் பெற்ற) கணக்கில் அடங்காத மஞ்சங்கள் விளக்கமுறும்படி,—என்பது முதலடியின் பொருள். மங்குல் - மேகம். மஞ்சம் - ஆசனம். கோடி: மிகுதிப் பொருளது. மஞ்சம் விளக்கமுற்றது, அதனில் வீற்றிருந் தவர்களால்,—என்க.

அழகிய இட விலாசத்தையுடைய ஆகாசத்தைஅலங்கரிக்கும் நட்சத்திரங்களைப்போல் (அங்கே) கூட்டமாய்த் திரண்டிருந்த அரசர்களின் முன்னே,—என்பது இரண்டாவது அடியின்பொருள் கூட்டத்தை உடையது சபை. சபையிருந்த - கூட்டமாகக் கூடியிருந்த.

பங்கசாத பரிமளம் கொள் பானுராஜ சூனு(ஏ) சிங்கம் என்னு மாறு எழுந்து சிங்கநாதமும் செய்தான்,—என்று அன் வயிக்க.

பங்கசாத (பங்கஜாத) பரிமளம் பானுராஜ சூனு - (பாநு ராஜஸூநு) தாமரை மலர்களை (அதன்) மணத்தை உட் கொள்

னும் பொருட்டு அலர்த்தும் சூரியனாகிய தலைவனது மகனான கர்ணன். சிங்கநாதம் - வீரர் இடும் வீரமுழக்கம். சூனு -(ஸூநு) மகன்.

62. சிந்தை யன்பு டன்ப ணிந்து தேசி கேச னருளினால்
வந்து வெஞ்ச ராச னம்வ ணக்கி வீர வாளியால்
இந்தி ரன்கு மாரன் முன்னி யாதியாதி யற்றினான்
அந்த வந்த நிலையு மேவு மவனின் விஞ்ச
லாயினான்.

[சிந்தை அன்புடன் பணிந்து தேசிக ஈசன் அருளினால் வந்து, வெம் சராசனம் வணக்கி வீரவாளியால் இந்திரன் குமாரன் முன் யாதுயாது இயற்றினான், அந்த அந்த நிலையும் ஏவும் (ஏ-உம்) அவனின் விஞ்சல் ஆயினான்.

**விளக்கம்:**—வில் தொழில்ல் விசயனையும் கர்ணன் விஞ்சினான், என்று கூறும் கருத்தது இது.

தேசிகேசன் - (தேசிக ஈசன்) குரு சிரேஷ்டனாகிய பரசுராமன். (அவனை) சிந்தை அன்புடன் பணிந்து - மனப் பூர்வமான அன்பினால் மானஸீகமாகத் தொழுது. அருளினால் - (அவன்) போதித்தருளிய வித்தையினால். வந்து-அரங்கேற்ற பூமி வந்து. அருச்சுனன் முன்பு தனது வீர வாளிகளால் என்ன என்ன தொழில் செய்தானோ, அவற்றை, அததற்குரிய நிலையிலும், உரிய கணைகளை செலுத்துதலும் அவனினும் (கர்ணன் மேம்பாடு உடையவனானான். ஏ-அம்பு.

63. கணைகள் போயி லக்க டைந்த வுறுதி கண்டு
கண் களித்(து)
இணையில் வீர னென்ற தன்றி ருந்த ராச மண்டலம்
பிணையன் மாலை விசய னண்ணல் பெற்றி பற்றி
நாணினான்,
துணைவ ரோடு வரிக ழற்சு யோத னன்க ளிக்கவே.

[கணைகள் போய் இலக்கை அடைந்த உறுதி கண்டு கண் களித்து, இணை இல் வீரன் என்றது அன்று இருந்த ராச மண்டலம், பிணையல் மாலை விசயன் அண்ணல் பெற்றி பற்றி நாணினான், துணைவரோடு வரிகழல் சுயோதனன் களிக்கவே.]

**விளக்கம்:**—கணைகள் போய் இலக்கை அடைந்த, திறனைக் கண்டு, அன்று (அப்பொழுது இருந்த, அங்கே கூடியிருந்த) அரசர்.

தம்பியரோடு துரியோதனன் களிக்க, விசயன், அண்ணலான கர்ணனது சரக்கலைத் திறமை குறித்து நாணினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

பிணையல் மாலை-பின்னப் பெற்ற அல்லது தொடுக்கப் பெற்ற மாலை. அண்ணல் -பெரியோன், வள்ளல், 'பெற்றி,' என்பது, திறமை என்ற பொருளது. வரி கழல் சுயோதனன்- கட்டப் பெற்ற வீரக்கழலையுடைய துரியோதனன்.

**கர்ணன் விசயனைப் போருக்கு அழைத்தல்**

64. **மருவ நின்ற ருக்கன் மைந்தன் வான நாடன் மகனை நாம்**
**இருவ ருந்த னுக்கொள் போரி யற்ற வம்மி னென்றலும்**
**குருகு லந்த ழைக்க வந்த குமர னன்பு கூரவே**
**உருகி நன்றெ னத்த ழீஇயு கந்து ளந்த ருக்கினான்.**

[மருவ நின்று அருக்கன் மைந்தன் வான நாடன் மகனை, 'நாம் இருவரும் தனு கொள் போர் இயற்ற வம்மின்' என்றலும், குருகுலம் தழைக்க வந்த குமரன் அன்பு கூரவே உருகி நன்று என, தழீஇ உகந்து உளம் தருக்கினான்.]

**விளக்கம்:**—மருவ நின்று - அருகே வந்து நின்று, அருக்கன் மைந்தன்-கர்ணன். வான நாடன் மகன்-விசயன். தனுகொள் போர்-வில்போர். வம்மின் என்றலும் - 'ஐய வருவீர்' என்று அழைத்த அளவில், குருகுலம் தழைக்க வந்த குமரன்- துரியோதனன். அன்புகூர - அன்புமிக. தழீஇ உளம் உகந்து தருக்கினான்-கர்ணனைத் தழுவிக் கொண்டு உள்ளம் மகிழ்ந்து பெருமை கொண்டான்.

துரியோதனாதியர் நூற்றுவ ராதலினால் தொகை கருதித் துரியோதனன், "குருகுலம் தழைக்க வந்த குமரன்," எனப் பட்டான், என்க. விசயனுக்கு எதிரியானவனை நண்பனாகப் பெற்றதால் துரியோதனன் மகிழ்ந்தவனானான்.

65. அனந்த ரம்பொர ற்கு நீகொ லந்த ரம்மெ னக்
கெனாத்
தனஞ்ச யன்செ யிர்த்தல் கண்டு தபனன் மைந்தன்
மீளவும்
முனைந்த போரின் முடிது ணித்துன் முகசரோரு
கத்தினால்
சினந்த ணிந்த ரங்க பூசை செய்வ னென்று
சீறினான்.

[அனந்தரம் பொரற்கு நீ கொல் அந்தரம் எனக்கு? எனா தனஞ்சயன் செயிர்த்தல் கண்டு, தபனன் மைந்தன் மீளவும் முனைந்த போரில் முடி துணித்து உன் முக சரோருகத்தினால் சினம் தணிந்து அரங்க பூசை செய்வன் என்று சீறினான்.]

**விளக்கம்:**—அனந்தரம்- பிறகு. எனக்கு நீ கொல் அந்தரம்- எனக்கு நீயா எதிர்? செயிர்த்தல்-சினத்தல். தபனன்-சூரியன். மீளவும்-மறுபடியும். முக சரோருகம்-முகமாகிய தாமரை.

கர்ணன் போருக்கு அழைக்கவே, அருச்சுனன், நீயா எனக்கு எதிர்?'' என்றும், அதற்கெதிர் கர்ணன், மேற்கொண்டு செய்யும் போரில் உன்னைக் கொன்று சினமாறுவேன்,'' என்றும் வீரவசனம் கூறினார்,—என்றபடி.

### கிருபன் இடையிடல்

66. அதிரு கின்ற வெழிலி போல ருச்சு னன்ற
னைக்குறித்(து)
எதிரு கின்ற வின்மை கண்டி யாவ ருந்தி கைக்கவே
முதிரு கின்ற மெய்ய னாகி முன்னி ருந்த
கௌதமன்
உதிருகின்ற வமுத விந்து வொக்கு மென்ன
வுரைசெய்வான்.

[அதிருகின்ற எழிலிபோல் அருச்சுனன் தனை குறித்து எதிருகின்ற வின்மை கண்டு யாவரும் திகைக்கவே, முதிருகின்ற மெய்யன் ஆகி முன் இருந்த கௌதமன் உதிருகின்ற அமுத விந்து ஒக்கும் என்ன உரை செய்வான்.]

சிந்தும் அமுதத்தின் துளியை ஒத்தது என்று சொல்லும்படி வார்த்தை சில கிருபன் கூறுவானாயினான்.

கிருபனது பேச்சு துரியோதனாதியர் ஒழிந்த மற்றவர்க்கு இன்பம் விளைத்ததால், அப் பேச்சிற்கு அமுதத் துளி உவமையாயிற்று.

67. சூதன் மைந்தன் வேலை யேழு சூழு மேதி
னிக்கெலாம்
நாதன் மைந்த னுடன்வெ குண்டு நவிலு தற்கு
நண்ணுமோ
ஏத முண்டு சால வென்ன ராச ராச னிகலியக்
கோத மன்ற னக்கு ளங்கொ திக்கு மாறு கூறுவான்.

[சூதன் மைந்தன் வேலை யேழு சூழும் மேதினிக்கு எலாம் நாதன் மைந்தனுடன் வெகுண்டு நவிலுதற்கு நண்ணுமோ? ஏதம் உண்டு சால என்ன, ராசராசன் இகலி அ கோமகன் தனக்கு உளம் கொதிக்குமாறு கூறுவான்.]

விளக்கம்:—சூதன் - தேர்ப்பாகன். வேலை ஏழு.....நாதன் மைந்தன் - அருச்சுனன். வெகுண்டு நவிலுதற்கு நண்ணுமோ - பகைத்து வீரவாதம் பேசிப் போருக்கு அழைத்தல் தக்கதாகுமோ (ஆகாது, என்றபடி). ஏதம் சால உண்டு - இவ்வாறு பேசல் குற்றம் மிக உடையதாகும். என்ன - என்று கிருபன் கூறவும், ராசராசன் - துரியோதனன். இகலி - (கிருபனோடு) மாறுபட்டு. 'நவிலுதற்கு,' என்ற வினையெச்சம் 'நவிலுதல்' என்ற தொழிற் பெயரின் தன்மை ஏற்று நண்ணுமோ, என்ற வினைக்கு எழுவாயாகும்.

'நெருங்குதல், கிட்டுதல், என்ற பொருளதான 'நண்ணுதல்' இங்கே 'பொருந்துதல், தக்கதாதல்' என்ற பொருளதாயிற்று,

68. கற்ற வர்க்கு தலனி றைந்த கன்னி யர்க்கும்
வண்மைகை
உற்ற வர்க்கும் வீரரென் றுயர்ந்த வர்க்கும்
வாழ்வுடைக்
கொற்ற வர்க்கு முண்மை யான கோதின் ஞான
சரிதராம்
நற்ற வர்க்கு மொன்று சாதி நன்மை தீமை
யில்லையால்.

[கற்றவர்க்கும், நலன் நிறைந்த கன்னியர்க்கும், வண்மைகை உற்றவர்க்கும், வீரர் என்று உயர்ந்தவர்க்கும் வாழ்வு உடை கொற்ற வர்க்கும், உண்மை ஆன கோது இல்ஞான சரிதர் ஆம் நல் தவர்க்கும் ஒன்று சாதி நன்மை தீமை இல்லை (ஆல்)]

**விளக்கம்:**—வண்மை கையுற்றவர் -ஈகைக் குணம் கைவரப் பெற்றவர், வாழ்வுடை கொற்றவர் - போகாதி வாழ்க்கை யுடைய அரசர். ஞான சரிதர் - மெய்யான அறிவோடு அதற் கேற்ற ஒழுக்கத்தையும் உடையவர். சாதி ஒன்று, நன்மை தீமை இல்லை - சாதி ஒன்றே; அவர்களுக்குள் உயர்வு தாழ்வு என்ற வேறுபடு நிலை இல்லை. ஆல்; அசையோடு தேற்றமுமாம்.

நன்மை - தீமை, என்பவை, உயர்வு - தாழ்வு என்ற பொருளன.

69. அரிபி றந்த தன்று தூணி லரனும் வேயி லாயினான்
பரவை யுண்ட முனியு மிப்ப ரத்து வாசன்
மைந்தனும்
ஒருவ யின்கண் முன் பிறந்த தொண்ச ரத்தி
னல்லவா
அரிய வென்றி முருக வேளு மடிக ளும்பி றந்ததே.

[அரி பிறந்தது அன்று தூணில், அரனும் வேயில் ஆயினான், பரவை உண்ட முனியும் இ பரத்துவாசன் மைந்தனும் ஒரு வயின் கண் முன் பிறந்தது, ஒள் சரத்தின் அல்லவோ அரிய வென்றி முருகவேளும் அடிகளும் பிறந்ததே]

**விளக்கம்:**—அன்று (முன்னொரு காலத்தில் பிரகலாதனுக் காக) அரி பிறந்தது தூணில், அரனும் வேயில் (அதன் முத்தாகித்) தோன்றினான். பரவை உண்ட முனி-அகத்தியன். பரத்துவாசன் மைந்தன்-துரோணன். ஒரு வயின் கண்-கும்பமாகிய) ஓரிடத்தில், சரம் -நாணல். அடிகள்-கிருபன், (பெரியோரை 'அடிகள்' என்னல் மரபு).

''திருமால், அரன் முதலியோர் பிறந்தவிடம் பற்றி இழிவுறாமை போல், கர்ணனும் இழிவுறுதற்கு உரியன் அல்லன்,'' என்று எடுத்துக் காட்டியபடி.

பிரளய காலத்தில் தாம் அழியாமல் இருக்கும் பொருட்டு, வேதங்கள், சிவபெருமானை நோக்கி, ''பிரளயத்தின்போது அழி

வில்லாத தாமிர சபையில் நீ செய்யும் திரு நடனத்தை நாங்கள், அங்கே மூங்கிலாய் நின்று, காண வேண்டும்; எங்களிடம் நீ முத்தாய்த் தோன்றி, எங்களுக்குப் புதல்வனும் ஆகவேண்டும்,'' என்று வேண்டிக்கொள்ள அவனும் 'ஓம்' என்றான் என்பதுகதை.

அகஸ்தியர் குடத்திலிருந்து உண்டானார் என்பதும், அது பற்றி அவர் கும்பமுனி என்று அழைக்கப்பட்டார் என்பதும் கதை. துரோணர் கும்பத்தில் பிறந்த வரலாறு முன்னரே கூறப்பட்டது. முருகனும் கிருபனும் நாணலில் பிறந்தார்—என்பர்.

சூரபத்மாதி அசுரர்களை அழிக்க, ஒரு புதல்வனை உண்டாக்க எண்ணிய சிவபெருமானது திருமேனியினின்று வெளிப்பட்ட ஒளியை வாயுவும் அக்னியும் கங்கையில் செலுத்த, நாணற் காட்டிற்கு அருகிருந்த கங்கையின் மடுவாகிய சரவணப் பொய்கையிலிருந்து முருகன் தோன்றினான். என்பது வரலாறு.

கிருபர், நாணற் கட்டையிலிருந்து தோன்றியது முன்னரே கூறப்பட்டது.

தேவர் பகைவனாகிய விருத்திராசுரன் தன்னைச் சேர்ந்த அசுரர்களுடன் கடலில் புகுந்து ஒளிந்து கொண்டான் என்றும், அப்பொழுது இந்திரனது வேண்டுகோளுக்கு இணங்கி அகத்தியர் கடல் நீரை உட்கொண்டார் என்றும், அசுரர்கள் அழிந்தபின், தேவர்கள் வேண்டிக் கொண்டபடி, நீரை உமிழ்ந்தார் என்றும் கூறுவர்.

### கர்ணன் அரசனாதல்

70. என்று நல்ல வுரையெ டுத்தி யம்பி யேனை
யிழிவினோ(டு)
ஒன்றி நின்ற வாட கத்தையோட வைக்கு மாறுபோல்
அன்று சூதன் மதலை தன்னை யங்க ராச
னாக்கினான்
மின்ற யங்கு முடிக வித்து வேந்தெ லாம்வி யக்கவே.

[என்று நல்ல உரை எடுத்து இயம்பி, ஏனை இழிவினோடு ஒன்றி நின்ற ஆடகத்தை ஓட வைக்கும் ஆறுபோல், அன்று சூதன் மதலை தன்னை அங்கராசன் ஆக்கினான், மின் தயங்கு முடி கவித்து வேந்து எல்லாம் வியக்கவே.

**விளக்கம்:**—நல்ல உரை - (முன் செய்யுள்களில் கூறப்பெற்ற) நல்ல வார்த்தைகள்: அதாவது, பிறந்தவிடம் கருதி இழிவு உண்டாகாமையாகிய நல்லவுரை. ஏனை இழிவினோடு...ஓட வைக்கு மாறு போல் -மற்ற (செம்பு வெள்ளி போன்ற) இழிந்த உலோகங்களோடு கலந்து நின்ற பொன்னைத் (தீயிலிட்டு) சுத்தப் படுத்தும் தன்மைபோல், (ஆடகம் - பொன்)

அன்றே கர்ணனைச் சுயோதனன் அங்க தேசாதிபதி ஆக்கினான், என்பது ஈற்றடிகளின் பொருள். துரியோதனன் கூறிய உரை, அவனுக்கும் கர்ணனுக்கும் அனுகூலமாயதால் நல்ல உரை, 'இழிவு' ஆகு பெயராய் இழிந்த உலோகங்களைக் குறித்தது.

71. தானி ருந்த வரிமு கஞ்செய் தாள்சுமந்த தவிசின் மேல்
ஊனி ருந்த படையி னானை யுடனிருத்தி வண்டுசூழ்
தேனிருந்த மாலை வாகு சிகர மீது தெண்டிரைக்
கானி ருந்த மண்ட லங்க ருத்தினா லிருத்தினான்.

[தான் இருந்த அரிமுகம் செய்தாள் சுமந்த தவிசின்மேல் ஊன் இருந்த படையினானை உடன் இருத்தி வண்டு சூழ் தேன் இருந்த மாலை வாகு சிகரம் மீது தெள் திரை கான் இருந்த மண்டலம் கருத்தினால் இருத்தினான்.]

**விளக்கம்:**— அரி முகம் செய் தாள்சுமந்த தவிசு - சிங்கத்தின் உருவம் தோன்றும்படி செதுக்கப்பெற்ற கால்கள் தாங்கிய ஆசனம், சிங்காதனம். ஊன் - மாமிசம். ஊன் இருந்த படையினான் - பகைவர் மாமிசம் தோய்வதற்குரிய ஆயுதங்களை உடைய கர்ணன். வண்டு சூழ்தேன் இருந்த மாலை வாகு சிகரம் - வண்டுகள் சுற்றி மொய்க்கும் தேனைத் தன்னிடத்தே கொண்ட மாலை அணிந்த தோள்களாகிய குன்றங்கள். தெண் திரைகான் - கடல், (கான் என்பது நீரின் மிகுதியைக்குறித்தபடி) (கடலின் நடுவே) இருந்த மண்டலம் - பூமி. கருத்தினால் - முழு மனதோடு. மண்டலம் இருத்தினான் - பூமியைப் பரிபாலித்தலாகிய சுமையை (கர்ணனது தோள்களின் மேல்) இருத்தினான்.

கர்ணனுக்குத் துரியோதனன் அர்த்தாசனம் கொடுத்ததைக் கூறும் இது. தனது ஆசனத்தில் இடம் அளித்தல் அரசர்கள் செய்யும் பெரிய மரியாதையாகும்.

''கர்ணனுக்கு அர்த்தாசனம் அளித்து, (அதனால்) இந்நில வுலகத்தை ஆளும் சுமையை, அவனொடு தன் தோள்களில் துரியோதனன் இருத்திக் கொண்டான்,'' என்றும் செய்யுள் பொருள் தரும். வாகு சிகரம் - (பாஹு சிகரம்) தோள்களாகிய மலை,

72. தவனன் மைந்த னுஞ்சு யோதனனுமி சைந்து
தனதனும்
சிவனு மென்ன நண்பு கொண்டுதிறலு டன்சி
றந்துளார்
பவன னும்பர் நாய கன்ப யந்த வீர ரஞ்சவே
அவனி யெங்கு நமதெ னக்கொள் பெருமி தத்த
ராயினர்.

[தவனன் மைந்தனும் சுயோதனனும் இசைந்து தனதனும் சிவனும் என்ன நண்பு கொண்டு திறலுடன் சிறந்துளார், பவனன் உம்பர் நாயகன் பயந்த வீரர் அஞ்சவே அவனி எங்கும் நமது என கொள் பெருமிதத்தர் ஆயினர்]

**விளக்கம்:**—தவனன் - சூரியன். இசைந்து - இயைந்து, ஒன்று பட்டு. தனதன் - குபேரன். சிறந்துளார் - சிறந்தவர் களாய். பவனன் - வாயு. உம்பர் நாயகன் - இந்திரன், பயந்த வீரர் - பெற்ற வீரர்களாகிய வீமார்ச்சுனர்கள். பெருமிதத்தர் ஆயினர் - செருக்கு உடையவர் ஆயினர்.

வள்ளலாகிய கர்ணனுக்குக் குபேரன் உவமை. அவனுக்கு அரசு அளித்த துரியோதனனுக்குக் குபேரனுக்கு நட்பை அளித்த சிவபிரான் உவமை.

**துரோணர் குருதட்சணை கேட்டல்**

73. ஆன காலை யெண்ணு கின்ற வாயுதங்கள்
யர்வையும்
யானை வாசி யிரத மான யான முள்ள யாவையும்
சேனை யோடு தெவ்வ ரைச்செ குக்கவல்ல வீரமும்
மான வீரர் வல்ல ரென்று மறைவலாளன் மகிழ்வுறா.

[ஆன காலை எண்ணுகின்ற ஆயுதங்கள் யாவையும், யானை வாசி இரதம் ஆன யானமுள்ள யாவையும் சேனையோடு தெவ்

வரை செருக்கவல்ல வீரமும் மானம் வீரர் வல்லர் என்று மறை வலாளன் மகிழ்வு உறா. இதுவும் இதைத் தொடரும் இரண்டு செய்யுள்களும் குளகம்.]

**விளக்கம்:**—ஆன காலை - குருகுலக் குமரர் தம் கல்வித் திறன் காட்டிய பொழுது, எண்ணுகின்ற ஆயுதங்கள் யாவையும்- எண்ணப்படும் எல்லாவிதமான படைக்கல வித்தையிலும். யானை வாசி இரதம் ஆன யானமுள்ள யாவையும் - யானை குதிரை தேர் ஆகிய வாகனங்களாயுள்ள எல்லாவற்றையும் செலுத்தலிலும். மானம் வீரர் சிறந்த வீரர் - மறைவலான் - துரோணன். மகிழ்வு உறா - மகிழ்ச்சியுற்று.

74. வம்மி னாதி குருகு லந்த ழைக்க வந்த மைந்தர்காள்
தம்மி னாளை யேயெ மக்க ளிக்க நின்ற தக்கிணை
எம்மி னானொ ருத்தன் வேறி யாகசேன
னென் றுளான்
நும்மி னாடி யவனை யிம்பர் நோதல் செய்து
கொணர்மினே.

[வம்மின், ஆதி குருகுலம் தழைக்க வந்த மைந்தர்காள்; தம்மின் நாளையே எமக்கு அளிக்கநின்ற தக்கிணை: எம் இனான் ஒருத்தன் வேறு யாகசேனன் என்று உளான்; நும்மில் நாடி அவனை.இம்பர் நோதல் செய்து கொணர்மினே]

**விளக்கம்:**—தம்மின் - தாருங்கள். நாளையே - விரைவில். யாக சேனன் என்று எம் இனான் (வேறு) ஒருத்தன் உளான். இனான் - இனியன் அல்லாதவன், பகைவன். வேறு: அசை. நும்மில் நாடி - உங்களில் ஒருவன் சென்று. இம்பர் - இங்கே. நோதல் செய்து - வருந்தச் செய்து, அதாவது கொல்லாமல் தேரில் பிணித்து,

தக்கிணை, தக்ஷிணா என்ற வட சொல்லின் திரிபு, 'வேறு,' என்பதை தக்கிணை' என்பதோடு சேர்த்து, 'நான் விரும்பும் தக்கிணை வேறு வகையானது,' என்றும் பொருள் செய்யலாம்.

## குருகுலக் குமரர் பாஞ்சாலம் செல்லல்

75. என்று தஞ்சி லைப்பு ரோகி தன்கனன்றி யம்பவே
அன்ற வன்ப தம்ப ணிந்த ளித்த சொற்ற லைக்கொளா
வென்றி நீடு படைக ளோடும் விரவு மங்க நாலொடும்
சென்று தங்க ணாட கன்று தெவ்வுநாடு குறுகினார்.

[என்று தம் சிலை புரோகிதன் கனன்று இயம்பவே, அன்று அவன் பதம் பணிந்து அளித்த சொல் தலைக்கொளா, வென்றி நீடு படைகளோடும் விரவும் அங்கம் நாலொடும் சென்று, தங்கள் நாடு அகன்று தெவ்வு நாடு குறுகினர்.]

**விளக்கம்:—**அளித்த சொல் - பணித்தருளிய சொல். தலைக் கொளா - தலைமேற் கொண்டு, அதாவது மிகவும் மதித்து. வென்றி நீடுபடைகள் -வெற்றிக்குரிய சிறந்தஆயுதங்கள். விரவும் அங்கம் நாலோடும் - பொருந்திய யானை, குதிரை, தேர் காலாள் என்னும் நால்வகைப் படைகளோடும், சென்று - பிரயாணப்பட்டு, தெவ்வு நாடு குறுகினார் - பகைவனான பாஞ்சாலனது நாட்டை நெருங்கினர்.

சிலையாசிரியனான துரோணன் சொல்லை ஏற்று, யாக சேனனைப் பிணித்துவர குருகுல மைந்தர் சேனையோடு சென்று பாஞ்சாலத்தை அடைந்தனர், என்ற பொருளது இது.

76. ஆளி மொய்ம்ப ரம்மு னைக்க ணானபோதனீகினித்
தூளி கண்பு தைத்த சென்று செவிபுதைத்த துவனி போய்
ஒளி கொண்ட செம்பொன் வெற்பி னுடல் புதைத்த வெழிலிபோல்
வாளி கொண்ட விருதர் மாம திற்புறம்பு தைக்கவே.

[ஆளி மொய்ம்பர் அ முனைக் கண் ஆன போது அனீகினி தூளிகண் புதைத்த சென்று செவி புதைத்த துவனி போய்; ஒளி கொண்ட செம்பொன் வெற்பின் உடல் புதைத்த எழிலிபோல் வாளி கொண்ட விருதர் மாமதில் புறம் புதைக்கவே]

**விளக்கம்:—**குருகுலக் குமரர் பாஞ்சாலன் அரண்மனையை முற்றுகை சூழ்ந்ததைக் கூறும் இது.

ஆளி - சிங்கம். மொய்ம்பு - வலிமை. அம்முனைக் கண் ஆன போது -போர் செயற்குரிய அந்த இடம் அடைந்தபொழுது. அனீகினித் தூளி - படையின் செலவால் எழுந்த புழுதி,(அனீகினி - சேனை). சென்று கண் புதைத்த - எழுந்த (புழுதிப் படலங்கள் படை செல்வதற்கு) முன் சென்று யாக சேனனது கண்களை மறைத்தன. துவனி போய் செவி புதைத்த - படையினர் எழுப்பிய ஆரவாரங்கள் முன்னே சென்று அவனது செவிகளை அடைத்தன. ஒளி - (நீட்டல் விகாரம்) ஒளி. விளக்கமுடைய செம்பொன் வெற்பான மேருவின் உருவத்தை மூடி மறைத்த எழில் (மேகம்) போல்,—என்பது மூன்றாமடியின் பொருள். வாளி கொண்ட விருதர் - சரம் ஏந்திய கையினரான படை வீரர்கள். மா மதில் புறம் புதைக்க - பெரிய மதிலின் வெளிப்புறத்தைச் சூழ்ந்துகொள்ள,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்,

"படை செல்லுமுன்னே தூளியும் ஒலியும் பாஞ்சாலன் கண்ணையும் காதையும் புதைத்து அவனுக்கு இடர்விளைத்தன" என்பது காரண காரியத்தை முறை மாற்றிக் கூறும் திறமையில் அமையும் மிகையுயர்வு நவிற்சி அணியின் பாற்படும்.

77. வளைத்த சேனை யானை வாசி வாயினின்று
குமுறவே
உளைத்தெழுந்து முழையைவிட்டு டன்றசிங்க
வேறுபோல்
திளைத்த தன்ப தாதியோடு மோகயாக சேனனும்
இளைத்த நெஞ்ச னன்றி நீடு புரிசைவாயி
லெய்தினான்.

[வளைத்த சேனை யானை வாசி வாயில் நின்று குமுறவே, உளைத்து எழுந்து முழையை விட்டு உடன்ற சிங்கம் ஏறுபோல், திளைத்த தன் பதாதியோடு மோக யாகசேனனும் இளைத்த நெஞ்சன் அன்றி நீடு புரிசை வாயில் எய்தினான்.

**விளக்கம்:**—வளைத்த - (மதில் புறத்திலே) முற்றுகை சூழ்ந்த. குமுற-ஆர்ப்பரிக்க. உளைத்து முழையை விட்டு எழுந்து உடன்ற சிங்கம் ஏறுபோல்-கர்ஜனை செய்துகொண்டு குகையை விட்டு எழுந்து கோபித்து வரும் ஆண் சிங்கம் போல். திளைத்த-நெருங்கிய. பதாதி - காலாட்படை, இங்கே நால்வகைப் படையையும் குறித்து நின்றது. இளைத்த நெஞ்சன் அன்றி - அஞ்சாதவனாய். புரிசை - மதில்.

கொடுப்பதாகச் சொன்ன பாதி ராச்சியத்தைக் கேட்பானோ என்று அஞ்சித் துரோணனை அவமதித்தானாகையால் 'மோகயாகசேனன்' எனப்பட்டான்.

78. சோம கர்க்கு முடுகு சேனை சூழவந்த குருகுலக்
கோம கர்க்கும் வெஞ்ச மர்வி ளைந்ததாண்மை
கூரவே.
பூம கற்கு மிக்க மாமு னிக்குவாய்மை பொய்த்தவம்
மாம கற்கும் விசய னுக்கு மன்னுபோர்வ யங்கவே.

[சோமகர்க்கும் முடுகு சேனை சூழ வந்த குருகுல கோமகர்க்கும் வெம் சமர் விளைந்தது ஆண்மை கூரவே; பூ மகற்கும் மிக்க மாமுனிக்கு வாய்மை பொய்த்த அ மா மகற்கும் விசயனுக்கும் மன்னு போர் வயங்கவே.]

**விளக்கம்:**—சோமகன் என்னும் அரசனது குலத்தினரான பாஞ்சாலர்களுக்கும் குருகுல மைந்தர்களுக்கும் ஆண்மை மிகுந்த கொடிய போர் விளைந்தது, என்பது முதல் இரண்டடிகளின் பொருள். முடுகு சேனை - விரைந்து, வந்த சேனை. பூ மகற்கும் (பிரும்ம தேவனுக்கும்) மிக்க மாமுனி - துரோணாசாரியர், வாய்மை பொய்த்த - சொன்ன சொல் பிழைத்த. மாமகன்- யாகசேனன். மன்னு போர் வயங்க - பெருப் போர் நிகழ, துருதபன் பாட்டன் சோமகன். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்,

**விசயனது வெற்றி**

79. தூறு கொண்டு கணைபொ ழிந்து சோமகேசர்
பொருதலால்
நூறு கொண்ட குமரர் தங்க ணகரிமீள நோக்கினார்
மாறு கொண்டு விசயன் வீசு வண்ணவாளி
வலையினால்
வீறு கொண்டெ திர்த்த மன்வி லங்கரீடு பட்டதே.

[தூறு கொண்டு கணை பொழிந்து சோமகேசர் பொருதலால், நூறு கொண்ட குமரர் தங்கள் நகரி மீள நோக்கினார்; மாறு கொண்டு விசயன் வீசு வண்ணம் வாளி வலையினால் வீறு கொண்டு எதிர்த்தமன் விலங்கர் ஈடுபட்டதே]

**விளக்கம்:**—தூறு கொண்டு - கூட்டமாகத் திரண்டு, சோம சேகர் - (சோமக - ஈசர்) சோமக குலத்து வீரர்கள். நூறு கொண்ட குமரர் - துரியோதனாதியர். தங்கள் நகரி மீள நோக்கினார் - (தோற்று தங்கள் நகர் திரும்பினார்கள். வண்ணவாளி- சிறந்த அம்பு. வீறு கொண்டு-பெருமிதத்தோடு. மன் விலங்கர்- மன்னன் யாக சேனனாகிய சிங்கம், (விலங்கு -அர், விலங்கர்; போலி). ஈடுபட்டது - வலியழிந்து அகப்பட்டுக் கொண்டது.

தொகையில் மிக்காரான துரியோதனாதியர், ஆற்றலில்மிக்காரல்லாமை தோன்ற, ''நூறு கொண்ட குமரர்,' எனப்பட்டது,' வாளி வலையினால் மன் விலங்கர் ஈடுபட்டது என்பது உருவகம்,

80. தகப்ப டுஞ்ச ராச னத்த னஞ்சயன்கை வாள்வெரீஇ
அகப்ப டுந்தராதி பன்ற னையற்றவில்லி னாணி
னான்
மிகப்ப டுந்த டங்கொ டேர்மி சைப் பிணித்து
விசையுடன்
நகப்ப டுஞ்செ யற்கை செய்து குருவின்முன்னர்
நணுகினான்.

[தக படும் சராசனம் தனஞ்சயன் கை வாள் வெரீஇ அகப் படும் தரா அதிபன் தனை அற்ற வில்லின் நாணினால், மிக படும் தடம் கொள் தேர்மிசை பிணித்து விசையுடன் நகப்படும் செயற்கை செய்து குருவின் முன்னர் நணுகினான்]

**விளக்கம்:**—தகுதியுறப் பொருந்திய வில்லையுடைய விசயனது கை வாளுக்கு அஞ்சி,—என்பது முதலடியின் பொருள்.

தன் கையில் அகப்பட்டுக்கொண்ட துருபதனை, அறுக்கப் பட்ட அவனது வில்லின் நாண் கயிற்றால், (தனது பெருமை அல்லது விசாலத்தை மிகுதியாகக் கொண்ட தேரில் பிணித்து, நகைப்படும் செய்கைகளைச் செய்து, வேகமாகக் குருவின் முன் வந்தான்,—என்பது மற்ற அடிகளின் பொருள்.

கை 'வாள்' என்பது 'ஆயுதம்' என்ற பொருளது. தராதிபன் துருபதன்.

81. முறுவல் கொண்டு கண்ட சாப முனியு நாண
வெம்மை நீ
உறுவ தொன்று முணர்க லாது ரைத்த புன்சொ
லறிதியே

மறுவிலந்த ணாளன் யானு மன்னனீயும் வாசவன்
சிறுவன் வென்று னைப்பி ணித்த சிறுமை யென்ன
பெருமையோ.

[முறுவல் கொண்டு கண்ட சாப முனியும், நாண எம்மை நீ உறுவது ஒன்றும் உணர்கலாது உரைத்த புன் சொல் அறிதியே! மறு இல் அந்தணாளன் யானும்; மன்னன் நீயும்; வாசவன் சிறுவன் வென்று உனை பிணித்த சிறுமை என்ன பெருமையோ!]

**விளக்கம்:**—(பிணித்துக் கொணரப் பெற்ற துருபதனைக்) கண்ட சாபமுனி (வில்லாசிரியனான துரோணன்) உறுவது ஒன்றும் உணர்கலாது, நாண எம்மை நீ உரைத்த புன் சொல் அறிதி (ஏ),—என்று அன்வயிக்க. நாண-எம்மை நாணும்படி. உறுவது-பின்பு நேரக் கூடியது. ஒன்றும்-சிறிதும்,

அந்தணாளன் யானும், மன்னன் நீயும்,' என்றது, ''ஏழைப் பிராமணன் என்று உன்னால் இகழப்பெற்ற நான், மன்னனாகிய உன்னை என் மாணாக்கனைக் கொண்டு வென்று என்று சபத மொழியை நிறைவேற்றிக் கொண்டேன்,'' என்று இகழ்ந்தபடி.

'மறுவில்' என்ற அடைமொழி தனக்குக் கொடுத்தது, 'மன்னன் நீ' என்று அவனுக்கு அடை கொடாமலும் கூறியது. சொன்ன சொல் தவறியதோடு ஓரிளைஞனிடம் தோல்வியுமுற்ற 'க்ஷத்திரியாதமன்' என்று இகழ்ச்சி தோன்றக் கூறும் குறிப்பினதாகும்.

82. அன்றெனக்கு நீயிசைந்த வவனி பாதி
யமையுமற்(று)
இன்றுனக்கு நின்ற பாதி யான்வ ரைந்து தருகுவன்
குன்றெ னக்கு விந்தி லங்கு கொற்ற வாகு வீரனே
உன்றனக்கு வேண்டு மென்ன வுயிரும் வாழ்வு
முதவினான்.

[அன்று எனக்கு நீ இசைந்த அவனி பாதி அமையும்; மற்று, இன்று உனக்கு நின்ற பாதி யான் வரைந்து தருகுவன்: குன்று என குவிந்து இலங்கு கொற்றம் வாகு வீரனே, உன் தனக்கு வேண்டும்' என்ன உயிரும், வாழ்வும் உதவினான்.]

**விளக்கம்:**—"குன்று எனக் குவிந்து (திரண்டு) இலங்கு கொற்ற வாகு (தோள்) வீரனே!" என்று துருபதனை அழைத்து உயிரும், பாதி ராச்சியமும் துரோணன் கொடுத்தான், என்ற பொருளது இது.

இசைந்த - தருவதாகக் கூறிய. அமையும் - எனக்குப் போது மானதாகும். வரைந்து தருகுவன் 'பங்கிட்டுக் கொடுப்பேன். உயிரும் வாழ்வும் உனக்கு வேண்டும் என (என்று சொல்லி, அவை இரண்டையும்) அளித்தான், என்க. வாழ்வு - அரசனாக வாழும் வாழ்வு.

கங்கைக்கு வடக்கிலுள்ள பாஞ்சாலப்பிரதேசத்தைத் தனக்கு வைத்துக்கொண்டு தெற்கிலுள்ள பகுதியைத் துருபதனுக்குத் துரோணன் கொடுத்தான், என்று முதல் நூல் கூறும்.

வேறு

83. புயங்கம் பருகி யுமிழ் மதியம்
போல்வான் மீண்டு பூசுரன்றன்
வயங்குஞ் சுருதி வாய்மையினான்
மன்னுங் குருக்கள் பதிநீங்கித்
தயங்குஞ் சிலைக்கை வாள்விசயன்
சயமும் பிறர்முன் றானகப்பட் (டு)
உயங்குஞ் செயலு நினைந்துநினைந்
துள்ளஞ் சுடப்போ யூர்சேர்ந்தான்.

[புயங்கம் பருகி உமிழ் மதியம் போல்வான், மீண்டு பூசுரன் தன் வயங்கும் சுருதி வாய்மையினால், மன்னும் குருக்கள் பதி நீங்கி, தயங்கும் சிலை கை வாள் விசயன் சயமும் பிறர் முன் தான் அகப்பட்டு உயங்கும் செயலும் நினைந்து நினைந்து உள்ளம் சுட போய் ஊர் சேர்ந்தான்.]

**விளக்கம்:**—புயங்கம்-ராகு கேது என்னும் பாம்பு அருச்சுன னால் பிடிக்கப்பெற்று விடப் பெற்றமையின், துருபதன் 'புயங்கம் பருகி உமிழ் மதியம்,' போன்றான், (பருகி -உண்டு). பூசுரன் - பிராமணன், வயங்கும் சுருதி வாய்மையினால் - விளங்குகின்ற வேதம் போல் தவறாததாகிய வாய்மொழியால். மன்னும் குருக்கள் பதி-நிலைபெற்ற குரு குலத்தாரின் பதியாகிய அத்தின புரி. 'மீண்டும் போய் ஊர் சேர்ந்தான்,' என்று இயைக்க.

யாகசேனன் துரோணனால் க்ஷமிக்கப்பட்டு, அவமானத்தோடு தன்பதி திரும்பினான்.—என்பது பொருள்.

84. மறுகிற் பணிலந் தவழ்பழன
வளநா டுடையா னெதிர் வணங்கி
முறுகிப் புரிவெங் கலைக்கோட்டு
முனியே போலு முனிவரரைத்
தறுகட் குருவின் றலைதுணிக்கத்
தகவோர் மகவுந் தனஞ்சயன்றோள்
உறுகைக் கொருபூங் கன்னியையும்
பெறுவான் வேண்டி யுற்றிரந்தான்.

[மறுகில் பணிலம் தவழ் பழனம் வளநாடு உடையான், எதிர் வணங்கி, முறுகி புரி வெம் கலை கோட்டு முனியே போலும் முனிவரரை, தறுகண் குருவின் தலை துணிக்க தக ஓர் மகவும், தனஞ்சயன் தோள் உறுகைக்கு ஒரு பூ கன்னியையும் பெறுவான் வேண்டி உற்று இரந்தான்.]

**விளக்கம் :**—மறுகில் பணிலம் தவழ் பழனம் வள நாடுடையான், தறுகண் குருவின் தலை துணிக்கத் தக ஓர் மகவும், தனஞ்சயன் தோள் உறுகைக்கு ஒரு பூங் கன்னியையும் பெறுவான் வேண்டி, முறுகிப் புரி வெம் கலைக்கோட்டு முனியே போலும் முனிவரரை உற்று, எதிர் வணங்கி, இரந்தான்,— என்று அன்வயிக்க.

மறுகு - வீதி. பணிலம் - சங்கு. பழனம் - வயல். முறுகிப் புரி - முறுக்கை மிகவுடைய. வெம்-நேர்த்தியான. கலைக்கோட்டு முனி - கலை மானின் கொம்பு போன்ற ஒரு கொம்பைத் தலையிலே உடைய முனிவன். மான் கொம்பைத் தலையிலே கொண்டிருந்தமையின். கலைக்கோட்டு முனி என்ற பெயரினர் ஆயினார். தோள் உறுகைக்கு - தோள்களைத் தழுவுதற்கு.

காச்யப குமாரர்களில் ஒருவரான விபாண்டகர் என்னும் முனிவரின் புதல்வன் கலைக்கோட்டு முனிவன். அவன் தசரதனுக்குப் புத்திரகாமம், அசுவமேதம் ஆகிய யாகங்களைச் செய்து வைக்க, அதன் பயனாய், இராமன் முதலிய புதல்வர் தோன்றினர். தானும் சிறந்த மக்களைப் பெறவேண்டித் தவத்தினால் சிறந்த மகா முனிவர்களைத் துருபதன் நாடினான், என்பது கருத்து.

### துருபதன் வேள்வி செய்தல்

85. ஆறு முகனைப் பயந்தநதி
யலையாற் குளிர்வ தொருகானில்
ஈறி றவத்தோ ருபயாசன்
யாச னெனும்பே ரிருவோரும்
கூறு முறையிற் சடங்கியற்றிக்
கோவின் வழக்கப் பெருவேள்வி
நூறு மகத்தோ னிகரரசை
நோன்மைக் கிசையப் புரிவித்தார்.

[ஆறுமுகனை பயந்த நதி அலையால் குளிர்வது ஒரு கானில், ஈறு இல் தவத்தோர் உபயாசன், யாசன் எனும் பேர் இருவோரும், கூறும் முறையின் சடங்கு இயற்றி கோவின் வழக்கம் பெரு வேள்வி, நூறு மகத்தோன் நிகர் அரசை நோன்மைக்கு இசைய புரிவித்தார்.]

**விளக்கம் :—** ஆறுமுகனைப் பயந்த நதி - கங்கை. அலையால் குளிர்வது ஒரு கான் - அலைகளினால் குளிர்ச்சியுறுவதான ஒரு காட்டினிடத்தே. ஈறு இல் தவத்தோர் - பெருந் தவத்தினர். கூறும் முறையின் - சாத்திரங்கள் கூறப்பெற்ற முறை கடவாத படி. கோவின் வழக்கப் பெருவேள்வி - அரசர்கள் செய்யும் வழக்கினதான புத்திர காமேஷ்டி யாகம். நூறு மகத்தோன் நிகர் அரசு - இந்திரனுக்கு நிகரான யாக சேனன். நோன்மை - பெருமை. யாகசேனனது பெருமைக்குத் தக்கபடி யாகத்தைச் சிறப்பாக யாசனும் உபயாசனும் செய்வித்தனர், என்றபடி.

யாஜன், உபயாஜன் என்ற பிரும்ம ரிஷிகள் இருவர் கங்கையின் அருகாமையிலுள்ள தபோவனத்தில் இருந்தனர் என்றும், யாஜனது தலைமையில், உபயாஜன், புரோகிதனாய் இருந்து யாகத்தை நடத்தி வைத்தான் என்றும், முதல் நூல் கூறும்.

வேதங்களில் கூறப்பெற்ற விதி கடவாது செய்யப்படும் தொழில் சடங்கு.

86. புரிந்த மகப்பேற் றழல்வேள்வி
பொன்றா வோமப் பொருண்மிச்சில்
பரிந்து விபுத ரமுதேய்ப்பப்
பைம்பொற் கலத்தி னிறைத்தாங்குத்

தெரிந்த மணிப்பூ ணவன்றேவிக்
களிக்கத் தீண்டா ளாகியபின்
சொரிந்து கனலி னுபயாச
னிமைப்பிற் சுதனைத் தோற்றுவித்தான்.

[புரிந்த மகப்பேறு அழல் வேள்வி பொன்றா ஓமம் பொருள் மிச்சில் பரிந்து விபுதர் அமுது ஏய்ப்ப பைம்பொன் கலத்தின் நிறைத்து ஆங்கு, தெரிந்த மணி பூணவன் தேவிக்கு அளிக்க, தீண்டாள் ஆகிய பின் சொரிந்து கனலின் உபயாசன் இமைப்பில் சுதனை தோற்றுவித்தான்.]

**விளக்கம்:—** அழல் வேள்வி- அக்னி சம்பந்தமுடைய வேள்வி. பொன்றா ஓமப் பொருள் - குறைவற்ற (நலம் நிறைந்த) அவிசு (தேவருணவான ஹவிஸ்). மிச்சில் - சேஷம் (மிச்சம்). விபுதர் அமுது ஏய்ப்ப - தேவாமிருதத்தை ஒத்த, (விபுதர் - தேவர், பண்டிதர்). தீண்டாளாகிய பின் - தீண்டப் படாதவள் ஆகவே அதன்பின், சுதன் - மகன்.

யாகசேனன் மனைவி தீண்டாளாகவே, அதன்பின், உப யாசன் ஓமப் பொருளின் சேஷத்தையும், அக்னியில் சொரிந்து இமைப் பொழுதில் ஒரு மகனை உண்டாக்கினான் என்பது பொருள்.

### திருஷ்டத்யும்நன் தோன்றல்

87. வலையம் பிறழ முடிதயங்க
மணிக்குண் டலம்பே ரழகெறிப்பச்
சிலையுங் கையு மெய்யுவயந்
திகழ்போர் வயிரக் கவசமுமாக்
கொலைவெஞ் சிங்கக் குருளைபொலங்
குன்றின் புறத்துக் குதிப்பதுபோல்
தலைவன் களிக்கத் தடந்தேர்மேற்
றனைய னொருவன் றலைப்பட்டான்.

[வலையம் பிறழ, முடி தயங்க, மணி குண்டலம் பேர் அழகு எறிப்ப, சிலையும் கையும் மெய்யும் வயம் போரீ வயிரம் கவசமும் ஆய், கொலை வெம் சிங்கம் குருளை பொலம் குன்றின் புறத்து குதிப்பதுபோல் தலைவன் களிக்க, தடம் தேர் மேல் தனையன் ஒருவன் தலைப்பட்டான்],

**விளக்கம்:**—வலையம் - தோளணி. பிறழ- விளங்க. தயங்க- பிரகாசிக்க. வில்லும் கையுமாய், உடலும், வீரம் விளங்கும் போருக்குரிய வச்சிர கவசமுமாய்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். பொலம் (பொன் மயமான) குன்றின் (மேரு மலையின்) புறத்தே குதிப்பதாகிய ஒரு சிங்கக் குட்டிபோல் தலைவன் (துருபதன்) களிக்கத், தடம்தேர்மேல் தனையன் ஒருவன் (ஓமத் தீயினின்று) தோன்றினான், என்பது ஈற்றடி களின் பொருள்.

88. தேரோ டருக்க னருணமணிச்
சிமயத் துதிப்பச் செவ்வியுடன்
நீரோ டையிற்செந் தாமரைக
ணிறம்பெற் றலர்ந்து நின்றனபோல்
வீரோ தயன்வந் துதிப்பளவின்
மேன்மேன் மகிழ்ந்து மெய்களித்துப்
பாரோர் கண்கள் களித்தனவாற்
பார்க்குந் தோறும் பரிவுற்றே.

[தேரோடு அருக்கன் அருணம் மணி சிமயத்து உதிப்ப செவ்வி யுடன், நீர் ஓடையில் செம் தாமரைகள் நிறம் பெற்று அலர்ந்து நின்றனபோல், விர உதயன் வந்து உதிப்பு அளவில் மேல்மேல் மகிழ்ந்து மெய்களித்து பாரோர் கண்கள் களித்தன (ஆல்) பார்க்கும் தோறும் பரிவு உற்றே].

**விளக்கம்:**—அருகன் - சூரியன். அருண மணிக் சிமயம் சிவந்த அழகிய உதயகிரி. வீரோதயன் - வீரம் உதித்தற்கு இடமாய குமரன். வந்து உதிப்பு அளவில் - (ஓமாக்கினியினின்று) எழுந்து வந்து தோன்றிய அளவில்.

பாரோர் பார்க்குந்தோறும் பரிவுற்று மேன்மேல் மகிழ்ந்து, மெய்களித்து கண்கள் களித்தன,—என்று அன்வயிக்க.

பரிவுற்று - (அக்குமரன்மேல்) அன்புகொண்டு. மெய் களித்து- உடல் பூரித்து, 'கண்கள் களித்தனவால்,' என்பதிலுள்ள 'ஆல்' அசையொடு தேற்றமுமாம். களிப்பினால் மலர்ந்தன, என்க.

சூரியனைக் கண்டு தாமரை மலர்வது போல வீரோத யனான திருஷ்டத்யும்நன் தோன்ற மக்களின் கண்கள் களிப்பின் மலர்ந்தன,—என்றவாறு,

89. சங்கச் சங்க மிகமுழங்கச்
சாந்தும் புழுகு மெறிந்தார்த்துத்
துங்கக் கொடியுந் தோரணமுந்
தொடையும் பரப்பிச் சோமகனா(டு)
அங்கட் சயந்த னவதரித்த
அமரா வதிபோ லார்வமெழத்
திங்கட் குழவி யுற்பவித்த
திசைபோன் றனவெண் டிசை யெல்லாம்.

[சங்கம் சங்கம் மிக முழங்க சாந்தும் புழுகும். எறிந்து ஆர்த்து, துங்கம் கொடியும் தோரணமும் தொடையும் பரப்பி சோமகன் நாடு, அம்கண் சயந்தன் அவதரித்த அமராவதிபோல், ஆர்வம் எழ திங்கள் குழவி உற்பவித்த திசை போன்றன எண் திசை எல்லாம்]

**விளக்கம்:**—சங்கச் சங்கம் - சங்குகளின் கூட்டம் துங்கம் - உயர்ந்த, சிறந்த. பரப்பி - எங்கும் அமைத்து. சோமகனாடு - சோமகனது குலத்தினனான துருபதனது பாஞ்சாலம். சயந்தன் - இந்திர குமாரன். ஆர்வம் எழ - அன்பின் பயனாய மகிழ்ச்சி மிக. திங்கள் குழவி - பிறைச் சந்திரன், உற்பவித்தல் - தோன்றல்.

சயந்தன் பிறந்தபொழுது அமராவதியில் தேவர்கள் விழா எடுத்து மகிழ்ந்ததுபோல், துருபத குமாரன் தோன்றிய பொழுது பாஞ்சாலத்தார் விழா எடுத்துக் களிக்கவே, திசைகள் எட்டும், இளம் பிறைச்சந்திரன் உதிக்கும் திசைபோல் விளங்கின.— என்பது கருத்து.

### திரௌபதி தோன்றல்

90. பின்னுங் கடவு ளுபயாசன்
பெருந்தீப் புற்த்துச் சுருவையினால்
மன்னுங் கடலா ரமுதென்ன
வழங்கு சுருதி யவிநலத்தான்
மின்னுங் கொடியு நிகர்மருங்குல்
வேய்த்தோண் முல்லை வெண்முறுவல்
பொன்னும் பிறந்தாள் கோகனகப்
பூமீ தெழுந்த பொன்போல்வாள்.

[பின்னும் கடவுள் உபயாசன் பெரும் தீ புறத்து சுருவை யினால் மன்னும் கடல் ஆர் அமுது என்ன வழங்கு சுருதி அவி நலத்தால், மின்னும் கொடியும் நிகர் மருங்குல், வேய் தோள், முல்லை வெண்முறுவல் பொன்னும் பிறந்தாள் கோகனகம் பூ மீது எழுந்த பொன் போல்வாள்.]

**விளக்கம்:**—கடவுள் உபயாசன் - தெய்வத்தன்மை பொருந்திய உபயாசன். பெரும் தீ புறத்து -பெரிய ஓமத்தீயிலே. சுருவை-ஓமம் செய்வதற்குரிய கருவி, துடுப்பு, கரண்டி, மன்னும் கடல் ஆர்அமுது என்ன-பெருமையுடைய பாற்கடலினின்று தோன்றிய அரிய அமுதம் போன்ற. வழங்கு சுருதி அவி-வேத முறைப்படி ஆகுதியாக வழங்கிய அவிசு. நலத்தால்-(அந்த அவிசின்) நல்ல பயனால், கோகனப் பூ மீது எழுந்த பொன்-இலக்குமி. போன்ற அழகிய பெண், அவிநலத்தால், ஓமாக்னி யினின்று தோன்னாள், என்க.

கோகனகப்பூ - தாமரைப்பூ, (கோகநதம் என்ற வட சொல்லின் திரிபு.)

91. மண்மே லொருத்தி யரக்கர்குலம்
மாளப் பிறந்தாள் வாமனுதல்
கண்மே லின்று மிவள்பிறந்தாள்
கழற்கா வலர்தங் குலமுடிப்பான்
எண்மே லென்கொ லினியென்றாங்
கெவருங் கேட்ப வொருவார்த்தை
விண்மே லெழுந்த தவன்புரிந்த
வேள்விக் களத்தி னிடையம்மா.

[மண்மேல் ஒருத்தி அரக்கர் குலம் மாள பிறந்தாள்; வாமன் நுதல் கண்மேல் இன்றும் இவள் பிறந்தாள் கழல் காவலர் தம் குலம் முடிப்பான்; எண்மேல் என்கொல் இனி என்று ஆங்கு எவரும் கேட்ப ஒரு வார்த்தை விண்மேல் எழுந்தது, அவன் புரிந்த வேள்வி களத்தினிடை அம்மா!]

**விளக்கம் :**—அரக்கர் குலம் மாள மண்ணிலிருந்து சீதை பிறந்தாள். கழல்காவலர் (அரசர்) தம்குலம் முடிப்பான் (அழிப்ப தற்கு) வாமன் நுதல் கண்ணிலிருந்து இன்றும் இவள் பிறந்தாள்.

வாமன் நுதல் கண் - சிவபெருமானது நெற்றிக் கண்ணாகிய அக்னி.

அவன் (துருபதன்) புரிந்த வேள்விக் களத்தினிடை (இருந்த) எவரும் கேட்ப, ஆங்கு (அப்பொழுது) மேல் இனி எண் என் கொல், என்று ஒரு வார்த்தை விண்மேல் எழுந்தது, என்று அன்வயிக்க.

மேல் இனி எண் என்கொல் - மேலே இனி எண்ணுவதற்கு என்ன இருக்கின்றது, அதாவது, கழற்காவலர் அழிவதாகிய நிகழ்ச்சி நிகழ்தல் நிச்சயம், என்ற தேற்றக் கருத்தது. அம்மா : வியப்பிடைச் சொல், ஒரு வார்த்தை -அசரீரி வாக்கு ஒன்று.

'நுதல்கண்' என்றது அக்னியைக் குறித்து நின்றது. சிவபெருமானது வலக்கண் சூரியன், இடக்கண் சந்திரன், நெற்றிக்கண் அக்கினி.

92. முற்றோன் றியதன் குல முதலான்
முரட்போர் முனிக்கு முடிவுமவன்
பிற்றோன் றியவக் கன்னிகையால்
விசயன் றனக்குப் பெருநலமும்
உற்றோர்ந் துள்ள மிகத்தருக்கி
யுவந்தாங் கமைந்தா னுயர்மகத்தால்
பெற்றோன் பெற்ற பேறுமகப்
பெற்றார் தம்மிற் பெற்றார்யார்?

முன்தோன்றிய தன் குலம் முதலால் முரண்போர் முனிக்கு முடிவும், அவன்பின் தோன்றிய அ கன்னியகையால் விசயன் தனக்கு பெருநலமும் உற்று ஓர்ந்து உள்ளம் மிக தருக்கி உவந்து ஆங்கு அமைந்தான், உயர் மகத்தால் பெற்றோன் பெற்ற பேறு மக பெற்றோர் தம்மில் பெற்றோர் யார்?

**விளக்கம் :** —குல முதல் - மகன், முரண் - வலிமை. தருக்கி - களித்து. உவந்து அமைந்தான் - மகிழ்ந்தவனாயினான், அதாவது திருப்தியால் நிரம்பினவனாயினான். மகத்தால் பெற்றோன்- வேள்வியினால் மக்களைப் பெற்ற துருபதன், பேறு - பாக்கியம்.

தன் விழைவின்படி, துரோணனது முடிவிற்கு ஒரு மகனையும், விசயனை மணக்க ஒரு மகளையும் யாகசேனன்

பெற்றானாதலால், ''அவன் பெற்ற பேறு மகப் பெற்றார் தம்மில் பெற்றார் யார்?'' என்றாராயிற்று. வேறுஎவரும் பெற்ற தில்லை, என்றபடி.

93. கரண மறுவற் றிலங்குதிறற்
கலசோற் பவன்பாற் கனல்பயந்தோன்
சரண மலர்தன் றலைக்கொண்டு
தனுநூ லெனக்குத் தருகென்றான்
மரண மிவனாற் றனக்கென்ப
துணர்ந்துங் குருவு மறாதளித்தான்
அரணி யிடத்திற் செறிந்தன்றோ
வதனைச் செகுப்பு தழலம்மா.

[கரணம் மறு அற்று இலங்கு திறல் கலச உற்பவன்பால் கனல் பயந்தோன் சரண மலர் தன் தலைகொண்டு, ''தனு நூல் எனக்கு தருக,'' என்றான்; மரணம் இவனால் தனக்கு என்பது உணர்ந்தும், குருவும் மறாது அளித்தான்: அரணி இடத்தில் செறிந்து அன்றோ அதனை செகுப்பது அழல் அம்மா.

**விளக்கம்:**—கரணம் - அந்தக் கரணமாகிய மனம். மறு - களங்கம். கலச உற்பவன் - கலசத்திலிருந்து தோன்றிய துரோணன், கனல் பயந்தோன் - அக்னியிடத்தே தோன்றியவனான திட்டத்துய்மன், அரணி-கடைந்து அக்னி உண்டாக்கும் கட்டை. அழல் செறிந்து - நெருப்பு உண்டாகி வளர்ந்து. செகுப்பது . அழிப்பது.

பொதுப் பொருளால் சிறப்புப் பொருளையோ, சிறப்புப் பொருளால் பொது பொருளையோ சமர்த்தித்தலை இது உட் கொள்ளாமல், ''அரணியிடத்து நெருப்பு அதை அழிப்பதுபோல் திட்டத்துய்மன் துரோணனிடம் வில்வித்தை பயின்று, அத்துரோணனையே அழிப்பவனாகின்றான்,'' என்று உபமானம் உபமேயத்தை விளக்கி நிற்பதால், இது, **வேற்றுப் பொருள் வைப்பு** ஆதற் கில்லை.

''இராகுவின் மனைவி முலைக்கு இல் பயனைச் செய்தானை, நெஞ்சே! நீ பணிந்து பரவு,'' என்பதுபோல், கருதிய வொன்றை நேரே கூறாமல், ஊகித்து உணருமாறு செய்தலை விதியாக வுடைய பிறிதுமொழிதலும் அன்று இது.

உபமான உபமேயங்களை உவமையுருபு கொடாமல் தனித் தனிவாக்கியங்களாக அமைத்து, ஒன்றை மற்றதற்கு உதாரணம் போல் அமைத்தலை விதியாக உடைய, எடுத்துக் காட்டுவமை என்ற அணியை இது உட்கொண்டதாக வேண்டும்.

திட்டத்துய்மனால் தனக்கு மரணம் என்பது உணர்ந்த பின்னும் அவனுக்குச் சரக்கல்வி முழுதும் கற்பித்தானாதலால், துரோணன், "கரணம் மறுவற்று இலங்கு திறல் கலசோற்பவன்" எனப்பட்டான்.

94. இவ்வா றமைந்தாங் கைவருட
னீரைம் பதின்மர் நனிவளர
மைவான் மீனிற் பல்கோடி
மன்வந் திறைஞ்சிப் புடைசூழத்
தெவ்வா றியவெம் பெருஞ்சேனைத்
திருதராட் டிரனுந் தம்பியுமற்
றொவ்வா ரிவற்கென் றுதிரட்டிரனை
யொழுக்கத் தழகா லுட்கொண்டார்.

[இஆறு அமைந்து ஆங்கு ஐவருடன் ஈர்ஐம்பதின்மர் நனி வளர, மைவான் மீனின் பல்கோடி மன் வந்து இறைஞ்சி புடை சூழ, தெவ் ஆறிய வெம்பெரும் சேனை திருதராட்டிரனும் தம்பியும், மற்று ஒவ்வார் இவற்கு, என்று உதிட்டிரனை ஒழுக்கத்து அழகால் உள்கொண்டார்.]

**விளக்கம்:—**இவ்வாறு அமைந்து - துருபதனைப் பற்றிய செய்தி இவ்வாறாக, (அமைந்து, எச்சத்திரிபு) ஆங்கு - அத்தினாபுரியில், மை வான்மீன் - நட்சத்திரங்கள். மன் - அரசர்கள். தெவ் ஆறிய வெம்பெரும்சேனை திருதராட்டிரன்-பகைஅடங்கக் காரணமான கொடிய பெரிய சேனையை உடைய திருதராட்டிரன். தம்பி - விதுரன். மற்று - வேறு எவரும். உதிட்டிரன் - தருமன். உட்கொண்டார் - (அரசு செய்யத் தகுந்தவன் என்று) எண்ணினர் அல்லது தீர்மானித்தனர்.

திருதராட்டிரனும், விதுரனும் தருமன் இளவரசாவதற்கு உரியவன் என்று எண்ணினார், என்பதாம்.

**கல்லி விருத்தம்**

95. பூதிந லந்திகழ் பூருகு லத்திற் (கு)
ஆதிப னாகிய னங்கனை வென்றோன்

நீதியி னாலுநி றைந்தன னுண்ணூல்
ஓதிய கேள்வியு திட்டிர னென்னா.

[பூதி நலம் திகழ் பூரு குலத்திற்கு ஆகிபன் ஆகி அனங்கனை வென்றோன், நீதியினாலும் நிறைந்தனன், நுண்நூல் ஓதிய கேள்வி உதிட்டிரன் என்னா.—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்]

**விளக்கம்:**—பூதி (வடசொல்)—செல்வம். செல்வ நலங்களைப் பூர்ணமாகப் பெற்று விளங்கிய பூரு என்னும் அரசனது குலத்திற்குத் தலைவனாய் அமைந்து, (பிரும்மசர்ய விருதம் பூண்டமையால்) மன்மதனை வென்றவனாகிய வீடுமன், என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

நுட்பமான வேதாதி சாத்திரங்களை ஓதி உணர்ந்ததோடு கேள்விச் செல்வத்தையும் உடைய உதிட்டிரன் நீதியாலும் நிறைந்தனன் ஆயினான், என்று எண்ணி,—(அளித்தான் என்று அடுத்த செய்யுளில் முடியும்)—என்பது ஈற்றடிகளின் பொருள்.

96. மைந்தரு டன்செயல் வழுவற வெண்ணிக்
குந்திப யந்தருள் குரிசிலை யிவனே
இந்தநி லக்கினி யிளவர சென்றாங்(கு)
அந்தண்ம திக்குடை முடியொட ளித்தான்.

[மைந்தருடன் செயல் வழுஅற எண்ணி, குந்தி பயந்து அருள் குரிசிலை (நோக்கி). இவனே இந்த நிலைக்கு இனி இளவரசு என்று ஆங்கு தண் மதி குடை முடியொடு அளித்தான்.]

**விளக்கம்:**—மைந்தர் - சகோதரனது மக்கள்,—திருதராட்டிரன், விதுரன். குரிசில் - உயர்ந்தோனாகிய உதிட்டிரன். என்று - என்று முடிவு செய்து. அங்கு - அப்பொழுதே. (வீடுமன்) முடியொடு வெண்கொற்றக் குடையையும் (தருமனுக்கு) அளித்தான்—என்க.

'நிலத்திற்கு' என்பது அத்துச்சாரியை தொகையாக 'நிலர்கு' என நின்றது.

97. சந்தனு வின்றிரு மரபுத யங்கச்
செந்திரு மேவரு சிறுவனு மப்போ (து)
இந்துவொ டாதப னிருவரு மன்போல்
வந்துத ரீஇமெய் வயங்கின னொத்தான்

[சந்துனுவின் திரு மரபு தயங்க, செந்திரு மேவரு சிறுவனும் அப்போது, இந்துவொடு ஆதபன் இருவரும் அன்பால் வந்து தழீஇ மெய் வயங்கினன் ஒத்தான்.]

**விளக்கம்:**—செந்திரு - ராஜ்யலக்ஷ்மி, அரசாட்சிச் செல்வம். மேவரு - பொருந்திய. சிறுவன் - தருமன். (குடையும் முடியும் பெற்றதினால்) சந்திரனோடு சூரியனும் ஆகிய இரு சுடரும் அன்பொடு வந்து தழுவ, அதனால், திருமேனி விளங்கப் பெற்றவனை ஒத்தானாயினான்,— என்பது ஈற்றடிகளின் பொருள்.

குடை - இந்து. முடி - ஆதபன் (சூரியன்). "சந்தனுவின் குலம் தழைத்து விளங்குவது துரியோதனனால் அன்று, தருமனால்," என்பது தோன்ற "சந்தனுவின்......சிறுவன்," என்றாராயிற்று.

## துரியோதனன் எதிர்ப்பு

98. துன்மதி யானசு யோதனன் மாழ்கித்
தன்மதி யாலரு டந்தையை யெய்திப்
புன்மதி யாமுரை சிற்சில புகன்றான்
மன்மதி யாதும தித்தலி லாதான்.

[துன்மதி ஆன சுயோதனன் மாழ்கி தன் மதியால் அருள் துன் தந்தையை எய்தி, புல்மதி ஆம் உரை சிற்சில புகன்றான். மன்மதி யாதும் மதித்தல் இலாதான்]

**விளக்கம்;**—மன்மதி யாதும் மதித்தல் இலாதான் (ஆகிய) வதி... மாழ்கி, அருள் தந்தையை எய்தி, தன் மதியால் புன்மதி ஆம்...புகன்றான் - என்று அன்வயிக்க.

மாழ்கி - (தருமனது யுவராஜ பட்டாபிஷேகத்தை விரும்பாது) வருந்தி. தன் மதியால் - தனது கெட்ட எண்ணத்தோடு பொருந்திய. புன்மதி ஆம் - அற்பத்தனத்தைக் காட்டும். மன்மதி-அரச நீதி, (மதி, ஆகுபெயர், நீதி) மதித்தலிலனாய்-ஆலோசியாதவனாய். துர்மதி என்ற வடசொல்லின் திரிபு துன்மதி. துரியோதனன் கூறியவற்றை அடுத்த செய்யுள் கூறும்.

99. உன்பதம் யாவுமு திட்டிர னுக்கே
மன்பதை யோடுவ ழங்கினை யெந்தாய்
அன்பதி லாவவ னனுசர்ம தத்தால்
என்பத மம்மவி றந்ததை யின்றே.

[உன்பதம் யாவும் உதிட்டிரனுக்கே மன்பதையோடு வழங்கினை எந்தாய்; அன்பு அது இலா அவன் அனுசர் மதத்தால் என்பதம் அம்ம இறந்தது (ஐ; அன்றே அசை) இன்றே,]

**விளக்கம்:** — உன்பதம் - அரச பதவி, மன்பதை - மக்கள் பரப்பு. எந்தாய் - எம்தந்தாய். அனுசர் - தம்பியர். மதம் - செருக்கு, வலிமை. என்பதம் - எனது பதவி. இறந்தது - கெட்டது, அம்ம - அந்தோ, (இரக்கப்பொருளது). இன்றே இறந்தது; விரைவு பற்றிய காலவழு.

100. என்றலு மைந்தனை யிந்துகு லத்தோய்
நின்றிலை யான்மனு நீதியி லையா
பொன்றிய வெம்பி பதம்புதல் வர்க்கே
அன்றிநு மக்கர சாளுத லாமோ.

[என்றலும் மைந்தனை (நோக்கி) இந்து குலத்தோய், நின்றிலை (ஆல்) மனு நீதியில் ஐயா; பொன்றிய எம்பி பதம் புதல்வர்க்கே அன்றி, நுமக்கு அரசு ஆளுதல் ஆமோ!]

**விளக்கம்:**—இந்து குலத்தோய் - சந்திரகுலத்தில் உதித்தவனே, ஐயா, மனுநீதியில் நின்றிலை,— பொன்றிய எம்பி - இறந்துபோன தம்பியாகிய பாண்டு. பதம் - (அவனுக்கு உரிய தான) ராஜ்ய பதவி. நுமச்கு - என் புதல்வர்களாகிய உங்களுக்கு. ஆமோ - தக்கதாகுமோ.

மூத்தவன் அங்கஹீனனனாயின் ராஜ்யம், அடுத்த தம்பியைச் சாரும் என்பது மனுநீதி. எனவே திருதராட்டிரன், "நுமக்கு அரசு ஆளுதல் ஆகுமோ!" என்றான்.

"இந்து குலத்தோய், மனுநீதியில் நின்றிலை," என்றது, பழமையான சந்திர குலத்தவனாயிருந்தும் மனுதர்மம் கடவாது பேசினாயில்லையே, என்று மகனை அவன் இடித்துரைத்த கருத்ததாகும்.

101. நீதியி லாநெறி யெண்ணினை நீயிங் (கு)
ஓதிய வாய்மையி னுறுபொரு ளின்றால்
ஆதிப ராயவ ரைவரு நீரும்
மேதினி யாளுதல் வேத்தியல் பென்றான்.

[நீதி இலா நெறி எண்ணினை நீ, இங்கு ஓதிய வாய்மையின் உறு பொருள் இன்று (ஆல்); ஆதிபர் ஆயவர் ஐவரும் நீரும் மேதினி ஆளுதல் வேத்து இயல்பு என்றான்.]

**விளக்கம் :—**ஓதிய வாய்மையின் - சொன்ன சொற்களில். உறு பொருள் இன்று - மனு நீதியோடு பொருந்திய பொருள் ஒன்றும் இல்லை. ஆதிபர் ஆயவர் - ஆட்சித் தலைவர்களாகிய ஐவர். நீரும் - (என் புதல்வர்களாகிய) நீங்களும். பூமியை ஆளுதல் மனுவழியதான நீதியின் பாற்பட்ட முறையாகும், என்று (திருதராட்டிரன், மகனுக்குக்) கூறினான்.

வேத்தியல்பு - வேந்தியல்பு; மெல்லினம் வல்லினமாய்த் திரிந்தது.

102. இகன்மிகு கன்னனு மென்னிளை யோரும்
சகுனியு முண்டுத குந்துணை நெஞ்சில்
உகவையில் லாரொடு றேனினி யென்றே
முகமுகு ரம்புரை முதலொடு சொன்னான்.

[இகல்மிகு கன்னனும் என் இளையோரும், சகுனியும் உண்டு தகும் துணை, நெஞ்சில் உகவை இலாரொடு உறேன் இனி என்றே, முகம் முகுரம் புரை முதலொடு சொன்னான்.]

**விளக்கம் :—**'மனு முறை இது' என்று எடுத்துக் காட்டிய தந்தைக்கு மகன் எதிர் உரைத்ததைக் கூறும் இது.

நெஞ்சில் உகவை இலார் - நெஞ்சில் நட்புணர்ச்சி இல்லாத பாண்டவர். உறேன் - சேர மாட்டேன். முகுரம் புரை முகம் முதல் - கண்ணாடியை ஒத்த முகத்தை உடைய முதல்வனாகிய திருதராட்டிரன். அவனிடம் துரியோதனன் கூறினான்.

103. பாதக னன்றுப கர்ந்த மொழிக்கே
பேதக னானபி தாமரு ளெய்தா
மேதக வாழ்வுறு வில்விது ரற்கும்
நாதகு நல்லுரை நதிமக னுக்கும்.

[பாதகன் அன்று பகர்ந்த மொழிக்கே பேதகன் ஆன பிதா மருள் எய்தா, மேதக வாழ்வு உறு வில் விதுரற்கும், நாதகு நல உரை நதி மகனுக்கும், — இதுவும் இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும் குளகம்.]

**விளக்கம் :**—பாதகன் - துரியோதனன். பேதகன் ஆன பிதா - மாறுபட்ட மனத்தினனாய் திருதராட்டிரன். மருள் எய்தா - திகைப்புற்று. மேதக - மேன்மை மிகும்படி. நாதகு நல் உரை நதிமகன் - நாவினிடம் தகுதியுடைய இதமொழிகளைக் கொண்ட வீடுமன்.

மனம் மாறுபட்ட தந்தை விதுரனுக்கும் வீடுமனுக்கும் கூறியதை அடுத்த இரண்டு செய்யுள்கள் கூறும்.

104. ஈண்டினி யென்செய்வ தெண்ணுமி னிங்கன்
பாண்டவ ரோடுப யின்றுறை யாது
தூண்டுப ரித்துரி யோதனன் முதலோர்
பூண்டனர் வெம்பகை வாழ்வு பொறாதார்.

[ஈண்டு இனி என் செய்வது, எண்ணுமின்; இங்கன் பாண்டவரோடு பயின்று உறையாது. தூண்டு பரி துரியோதனன் முதலோர் பூண்டனர் வெம்பகை வாழ்வு பொறாதார்.

**விளக்கம்:**—இங்கன் தூண்டு பரி துரியோதனன் முதலோர் பாண்டவரோடு பயின்று உறையாது, (அவர்களது) வாழ்வு பொறாதார். (ஆய்) வெம்பகை பூண்டனர். ஈண்டு இனி செய்வது என்? எண்ணுமின், — என்பது அன்வயம்.

செய்யுள் மிக சுலபமானதே. தூண்டு பரிதுரியோதனன் - வேகமாகச் செல்லுமாறு தூண்டப்படும் குதிரைகளை உடைய துரியோதனன்; பயனில் அடைகள்.

105. ஒருதிற னிந்நக ருறைதரி னொன்றா(து)
இருதிறன் மைந்தரு மிகலுவர் மேன்மேல்
அருகணு காவகை யகலவி ருந்தால்
மருவுறு நண்புவ ளர்ந்திடு மென்றே.

[ஒரு திறன் இநகர் உறைதரின் ஒன்றாது இருதிறன் மைந்தரும் இகலுவர் மேல் மேல்; அருகு அணுகா வகை அகல இருந்தால் மருவுறும் நண்பு வளர்ந்திடும் என்றே.]

**விளக்கம்:**—ஒரு திறன் உறைதரின் - ஒன்றாகச் சேர்ந்து வசித்தால். இருதிறன் மைந்தர் - இரு வகையான மனப் பான்மையுடைய பாண்டவர், துரியோதனாதியர். மருவுறு நண்பு - மனங் கலந்த நட்பு.

'அகல இருப்பின் பகையும் உறவாம்' என்ற முதுமொழிக் கிணங்க அவர்களைப் பிரித்து வைப்பதே நலமுடையதாகும், என்று திருதராட்டிரன் கூறினானாயிற்று.

106. இம்மொழி கூறலு மிருவரு மெண்ணித்
தெம்முறை யாயினர் சிறுபரு வத்தே
எம்முரை கொள்கல ரினியவர் மதியே
தம்மதி யேமதி யாகுவ தென்றார்.

[இ மொழி கூறலும் இருவரும் எண்ணி, தெவ் முறை ஆயினர் சிறு பருவத்தே; எம் உரை கொள்கலர், இனி அவர் மதி ஏது அ மதியே மதி ஆகுவது, என்றார்.]

**விளக்கம்:**—தெவ் - முறை - தெம்முறை (மகரம் வரின் வகரம் மகரமாகும், என்பது விதி.) அவர் மதி - அவர் எண்ணம் ஏது - எதுவோ. அம் மதியே மதி ஆகுவது - அவ்வெண்ணமே அவரது மனத்திற்கு இசைந்த கருத்து ஆதற்குரியது.

திருதராட்டிரன் கூறியதைக் கேட்ட வீடுமனும், விதுரனும் இவ்வாறு எண்ணினர், என்க.

107. விதுரனும் வார்கழல் வீடும னுந்தம்
இதயநி கழ்ந்ததி யம்பிய பின்னர்ப்
பொதுமை யிலாதபு ரோசன னென்னும்
மதியுடை மந்திரி வருகென வந்தான்.

[விதுரனும் வார்கழல் வீடுமனும் தம் இதயம் நிகழ்ந்தது இயம்பிய பின்னர், பொதுமை இலாத புரோசனன் என்னும் மதி உடை மந்திரி வருக என, வந்தான்.]

**விளக்கம்:**—பொதுமை - பட்சபாதமின்மை, அதாவது வேண்டியவர் வேண்டாதவர் என்ற பேதவுணர்ச்சி இல்லாமை. புரோசனன் பட்சபாதம் உடையவனாதல் பற்றியும், வஞ்சிக்கும் வல்லமை உடையவனாதல் பற்றியும், மதிமந்திரி என்று கூறப் பட்டான்.

### பாண்டவரை அழிக்கும் ஆலோசனை

108. வந்தவ மைச்சனு மைந்தனு மற்றத்
தந்தையு மங்கொரு தனிவயி னெய்திச்

சிந்தனை செய்தனர் தீமைம னத்தோர்
குந்திம காருயிர் கோடல் புரிந்தே.

[வந்த அமைச்சனும் மைந்தனும் (மற்று) அ தந்தையும் அங்கு ஒரு தனிவயின் எய்தி சிந்தனை செய்தனர் தீமை மனத்தோர், குந்தி மகார் உயிர் கோடல் புரிந்தே.]

**விளக்கம்:**—வந்த...தந்தையும், தீமை மனத்தோர் (ஆய்) அங்கு ஓர் தனிவயின் எய்தி குந்தி மகார் உயிர் கோடல் புரிந்து, சிந்தனை செய்தனர்,—என்று அன்வயிக்க.

பாண்டவர்களின் உயிர் கொள்ள விரும்பி,—என்பது ஈற்றடியின் பொருள். மாத்திரியின் மக்களான நகுல சகதேவர்கள் குந்தியால் வளர்க்கப் பட்டமையின், அவர்களும் குந்தி மகார் ஆயினர். மற்று, ஏ : அசைகள்.

வேறு

109. ஆர ணாதிப ராரும்பு கழ்வது
நார ணாதியர் நண்ணுஞ்சி றப்பது
தோர ணாதி துலங்குபொற் கோபுர
வார ணாவத மாநக ரங்கணே.

[ஆரண அதிபர் ஆரும் புகழ்வது, நாரண ஆதியர் நண்ணும் சிறப்பது, தோரண ஆதி துலங்கு பொன் கோபுரம் வாரணாவதம் மாநகர் அங்கணே.]

**விளக்கம்:**—ஆரணாதிபர் - அந்தணர்கள். ஆரும் - எல்லோரும். நாராணாதியர் - திருமால் முதலிய தேவர்கள். தோரணாதி - தோரணம் முதலியவை. மாநகர் அங்கணே - பெரிய நகராகிய அந்த இடத்திலே,—அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும். வாரணாவதம் - காசி.

110. சென்றி ருக்கத் திருவாய் மலர்கென
ஒன்று பட்டு மகன்தொழு தோதினான்
அன்று தொட்டுயி ரன்னவ மைச்சனால்
நன்று பட்டதந் நன்னக ரெங்குமே.

[சென்று இருக்க திருவாய் மலர்க என ஒன்றுபட்டு மகன் தொழுது ஓதினான்; அன்று தொட்டு உயிர் அன்ன அமைச்சனால் நன்று பட்டது அ நல் நகர் எங்குமே.]

**விளக்கம்:**—பாண்டவர்களை வாரணாவதம் போய் வசிக்கும் படி கூறுக, என்று துரியோதனன் வேண்ட, அதற்குத் தந்தை உடன்படவும்; இருவருக்கும் உயிர் போன்றவனான **புரோசனன்** என்ற அமைச்சனால் நகர் **புதுப்பிக்கப்பட்டது**,—என்பது பொருள். ஒன்று பட்டு - உடன்பட்டு.

ஒன்றுபட்டு - (மகனது விருப்பத்தின்படி செய்யத் திருதராட்டிரன்) சம்மதிக்க. நன்று பட்டது - நன்றாக அலங்கரிக்கப் பட்டது.

111. சிற்ப நூலிற் றிருந்திய மாக்களால்
பொற்ப மைந்து பொலிந்ததப் பொன்னகர்
கற்ப காடவி யல்லது கண்டவர்
அற்ப மென்ன வமரா வதியையே.

[சிற்பம் நூலில் திருந்திய மாக்களால் பொற்பு அமைந்து பொலிந்தது அ பொன் நகர், கற்பக அடவி அல்லது கண்டவர் அற்பம் என்ன அமராவதியை (ஏ).]

**விளக்கம் :**—கற்பகச் சோலையைப் பெற்றிருத்தல் ஒன்றினாலன்றி மற்ற நலங்களால், அமராவதி வாரணாவதத்தினும் சிறப்பினால் தாழ்ந்ததே என்று கண்டவர் கூறி வியக்கும்படி, அந்நகரம் அழகு செய்யப்பட்டது,—என்பது பொருள்.

திருந்திய - பயிற்சி மிக்க, கை தேர்ந்த. பொற்பு - செயற்கை அழகு. கற்பக அடவி - (கற்பகச் சோலை, அல்லது (அச் சோலையைத் தன்னிடத்தே கொண்டிருத்தல்) ஒன்றினால் அல்லாமல் அமராவதியை அற்பம் என்ன - அமராவதியை (வாரணாவதத்தினும்) தாழ்ந்தது என்று (கண்டவர்) சொல்லும் படி.

இது **உயர்வு நவிற்சி**யின் பாற்படும். ஒப்புடைய இரண்டினை வேறுபடுத்திக் காட்டுதலை இலக்கணமாக உடைய **வேற்றுமையணி** ஆதற்கு அமராவதியை ஒத்தது. என்று வாசகம் அமைந்திருக்க வேண்டும். "உபமான உபமேயங்களில் யாதானுமொன்று விசேடிக்கப்பெறின், **வேற்றுமை**, என்று விசாகப் பெருமாள் ஐயர் கூறும் இலக்கணத்தை ஏற்பின், இது, வேற்றுமையும் ஆகலாம். வரம்பு கடந்த வழி வாரணாவதத்தை உயர்த்திக் கூறலே செய்யுளின் கருத்தாதலால், இதை

உயர்வு நவிற்சியாகக் கொள்ளலே அமையும், என்று நினைக்கின்றோம்.

112. அறத்தின் மைந்தனுக் காங்கொரு நாளவைப்
புறத்தி ருந்துபு கன்றனன் காவலன்
திறத்து நின்னிளை யோரொடுஞ் சென்றுதோள்
மறத்தி னாற்றனி வாழுதி யென்னவே.

[அறத்தின் மைந்தனுக்கு ஆங்கு ஒருநாள் அவைப்புறத்து இருந்து புகன்றனன் காவலன், திறத்து நின் இளையோரோடும் சென்று தோள் மறத்தினால் தனி வாழுதி என்னவே.]

**விளக்கம் :—**ஆங்கு ஒருநாள் காவலன் அவை புறத்து இருந்து, அறத்தின் மைந்தனுக்கு, திறத்து நின் இளையாரோடும் (வாரணாவதம்) சென்று தோள் மறத்தினல் தனி வாழுதி என்ன (ஏ) புகன்றனன்,—என்று அன்வயிக்க.

ஆங்கு : அசை; மகன் கூறியதைக் கேட்டபின், என்றும் பொருள் கொள்ளலாம். அறத்தின் மைந்தன் - தருமன். அவைப் புறத்து இருந்து - ராஜ சபையினிடத்தே இருந்து. காவலன் - திருதராட்டிரன். திறத்து - வலிமையுடைய.

திறத்து இளையோர், என்றது, தருமனுக்கு படையின் துணை வேண்டாமையைக் குறிக்கும்.

113. புகன்ற கேள்விப் புரோசனன் றன்னையிம்
மகன்ற னக்குநீ மந்திரியாகியே
இகன்ற வர்ச்செற் றினியோர்க் கினிமைசெய் (து)
அகன்ற ஞாலமி வன்வழி யாக்குவாய்.

[புகன்ற கேள்வி புரோசனன் தன்னை இ மகன் தனக்கு நீ மந்திரி ஆகியே இகன்றவர் செற்று இனியோர்க்கு இனிமை செய்து அகன்ற ஞாலம் இவன் வழி ஆக்குவாய்.]

**விளக்கம் :—**புகன்ற கேள்வி-கற்றோரால் சிறப்பித்துக்கூறப் பட்ட நூல் கேள்வி. இம்மகன்-தருமன். இகன்றவர் - பகைவர். செற்று - அழித்து.

திருதராட்டிரன் புரோசனனைத் தருமனுக்கு மந்திரியாக்கி, "பூமியை இவன் வழிப் படுத்துவாய்," என்று கூறினான் என்பதாம்.

'ஞாலம் இவன் வழி ஆக்குவாய்,' என்பது, ''இந்தப் பூமியை துரியோதனனுக்கு உரியதாக்கும்படி செய்வாய்,'' என்ற பொருளதும் ஆகும். இது பொருளாயின், 'இகன்றவர் பாண்டவர்களும், இனியவர் துரியோதனாதியரும்' ஆவர்.

மகன் வழிப்பட்ட தந்தை இவ்வாறு இரு பொருள் படும்படி கூறினான் ஆயிற்று.

114. என்ன வாங்கணி றைஞ்சிய னந்தரம்
சொன்ன சொற்படி சூழ்படை வேண்டுவ
என்ன வுங்கொண் டிளவர சோடுமப்
பொன்ன கர்க்கொடு போயின னென்பவே.

[என்ன ஆங்கண் இறைஞ்சி அனந்தரம் சொன்ன சொல்படி சூழ்படை வேண்டுவ என்னவும் கொண்டு இளவரசோடும் அ பொன் நகர் கொடு போயினன் என்பவே.]

**விளக்கம் :**—என்ன - என்று மன்னன் திருதராட்டிரன் சொல்ல. அனந்தரம் - பின்பு. சொன்ன சொல்படி - திருதராட்டிரன் சொல்லிய சொல்லின்படி. சூழ்படை வேண்டுவ என்னவும் கொண்டு - பாண்டவருக்குக் கேடு சூழ்வதற்குரிய ஆயுதம் பரிவாரம் முதலியவற்றில் வேண்டியன எல்லாவற்றையும் அழைத்துக்கொண்டு.

'இளவரசோடும்' என்பது, தருமனோடு தம்பியரையும், தாயான குந்தியையும் குறிக்கும்.

மூன்றாவது அடியிலுள்ள 'என்ன' என்பது இங்கே 'எஞ்சாமை' என்ற பொருளது, அதாவது குறைவில்லாமல் எல்லாவற்றையும், என்பது பொருளாயிற்று. என்பவே : அசை.

115. ஆர மார்புடை யைவருங் குந்தியும்
பூர ஞானபு ரோசன நாமனும்
சேர வெண்பிறைச் செஞ்சடை வானவன்
வார ணாவதஞ் சென்றுவ ணங்கினார்.

[ஆரம் மார்பு உடை ஐவரும் குந்தியும், பூரம் ஞானம் புரோசனன் நாமனும் சேர, வெண் பிறை செம் சடை வானவன் வாரணாவதம் சென்று வணங்கினர்.]

**விளக்கம்:**—ஆரம் - மாலை. பூர ஞானம் - நிறைவுடைய அறிவு. சேர - ஒன்று சேர்ந்து. வெண் பிறை செஞ்சடை வானவன் - சிவபெருமான்.

பாண்டவரும் குந்தியும் புரோசனனோடு வாரணாவதம் சென்று சிவபெருமானை வணங்கினர், என்றபடி. ஆரம் - மாலை, சந்தனமுமாம். 'ஆர வெண்குடை' என்றும் பாடம் உளது.

116. அங்க வன்றன ருள்பெற்ற மைச்சனங்
கிங்கி தத்தொடி யற்றிய நீள்கொடி
மங்கு றேய்மணி மாளிகை யெய்தினார்
சங்கம் விம்ம முரசந்த ழங்கவே.

[அங்கு அவன் தன் அருள் பெற்று, அமைச்சன் அங்கு இங்கி தத்தொடு இயற்றிய நீள் கொடி மங்குல் தோய் மணி மாளிகை எய்தினார், சங்கம் விம்ம, முரசம் தழங்கவே.]

**விளக்கம்:**—இங்கிதம் - குறிப்பு, (அதாவது, பாண்டவர்களை அழிக்க வேண்டும் என்பது குறிப்பு). மங்குல் - மேகம்.

சிவபெருமானை வணங்கி அப்பிரானது அருள் பெற்றபின். தங்களை அழிக்கும் நோக்கத்தோடு புரோசனனால் கட்டப் பெற்ற நீள் கொடியில் மங்குல் தோயும் மாளிகையைப் பாண்டவர் அடைந்தனர், என்றபடி.

117. ஆவி யன்னவ மைச்சன் மொழிப்படி
மேவி யத்திசை வேந்தர் குழாந்தொழக்
கோவி னாணைந டத்திக் குவலயத்
தேவி மெய்களிக் கச்சிறந் தாரரோ.

[ஆவி அன்ன அமைச்சன் மொழிப்படி (அரச மாளிகை) மேவி, அ திசை வேந்தர் குழாம் தொழ கோவின் ஆணை நடத்தி குவலயம் தேவி மெய் களிக்க சிறந்தார். (அரோ : அசை).]

**விளக்கம் :**—மேவி - அடைந்து. அத்திசை வேந்தர் - அந்த அந்த திசையிலுள்ள வேந்தர். குவலயத் தேவி - பூமாதேவி.

மக்கள் சேமமுறும்படி பஞ்ச ] பாண்டவர் ஆட்சி புரிந்தனர், என்பது சற்றடிகளின் கருத்து.

வஞ்சனான புரோசனன், தன்னைத் தங்களுக்கு இதம் செய்பவன் என்று பாண்டவர் எண்ணும்படி நடந்து கொண்டதால், 'ஆவி அன்ன அமைச்சன்,' எனப்பட்டான்.

கலித்துறை

118. மன்ன ரைவரும் வாரணா வதந்தனின் மருவித்
துன்ன லார்தொழத் தொன்னிலம் புரந்திடு நாளில்
பின்ன நெஞ்சுடைப் புரோசனன் பேதுறு மதியான்
முன்ன மேயினி தமைத்திடு மனைச்செயன்
முன்னா

[மன்னர் ஐவரும் வாரணாவதந்தன்னில் மருவி துன்னலார் தொழ தொல்நிலம் புரந்திடும் நாளில், பின்னம் நெஞ்சு உடை. புரோசனன் பேது உறு மதியால் முன்னமே இனிது அமைத்திடு மனை செயல் முன்னா,—இதுவும் தொடரும் இரு செய்யுள்களும் குளகம்.[

**விளக்கம் :**—மருவி - வசித்து. துன்னலார் - பகைவர். பின்னம் நெஞ்சு - மாறுபட்ட மனம், அதாவது, பிறர் அறியப் பேசப்படும் பேச்சோடும் செயலோடும் பொருத்தங் கொள்ளாத உள்ளம். பேதுறு மதியால் - மாறுபாடுடைய மனத்தால்.

பாண்டவர் வாரணாவதம் வருவதற்கு முன்னரே அவர்களுக் கென்று இனிது அமைத்த அரக்கு மாளிகையின் அமைப்பை (பாண்டவர்) முன்னி (கருதி), என்பது ஈற்றடியின் பொருள். மனை - அரக்கு மாளிகை. செயல் - அமைப்பு. முன்னா - (பாண்டவர்கள்) ஊன்றி நோக்கிப் புரோசனனது வஞ்சனையை உணர்ந்து.

119. மெழுகி னானமக் காலயம் வகுத்ததும் விரகே
ஒழுகு கின்றதன் னொழுக்கமும் வஞ்சனை
யொழுக்கே
எழுக டற்படை யாவையு மிவன்வழி யனவே
தொழுத கையுளும் படையுள சூழ்ச்சியும் பெரிதாம்.

[மெழுகினால் நமக்கு ஆலயம் வகுத்ததும் விரகே; ஒழுகுகின்ற தன் ஒழுக்கமும் வஞ்சனை ஒழுக்கே; எழு கடல் படை யாவும் இவன் வழியன (ஏ); தொழுத கையுள்ளும் படை உள சூழ்ச்சியும் பெரிது ஆல்.]

**விளக்கம்:**—விரகு - வஞ்சனை. நமக்கு இனியவன்போல் நடந்து கொள்ளும் நடத்தையும் வஞ்சனையான ஒழுக்கமே,—என்பது இரண்டாவது அடியின் பொருள். வழியன - வசத்தில் உள்ளன. (பகைவரது) தொழுகின்ற கையின் உள்ளும் ஆயுதம் கரந்து கிடத்தல் இயல்வதே; சதியாலோசனையும் பெரியதே, என்பது ஈற்றடியின் பொருள்.

'தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும். ஒன்னர் அழுத கண்ணீரும் அனைத்து,'' என்ற குறட் பாவின் கருத்தினது ஈற்றடி.

120. சங்கை யுண்டினி யுண்டியுஞ் சாந்தமும் பூணும்
பொங்கு நுண்ணிழைத் துகிலுமந் தாமமும் பூவும்
இங்கி வன்பரிந் தியற்றிய கோடல மென்றார்
கங்கை நீர்தவழ் கழனிசூழ் பழனநா டுடையார்.

[சங்கை உண்டு; இனிஉண்டியும் சாந்தமும் பூணும், பொங்கு நுண் இழை துகிலும், தாமமும் பூவும், இங்கு இவன் பரிந்து இயற்றிய கோடலம் என்றார், கங்கை நீர் தவழ் கழனி சூழ் பழனம் நாடு உடையார்.]

**விளக்கம்:**—கங்கை நீர்... நாடுடையார் (ஆன பாண்டவர்), சங்கை உண்டு; இங்கு இவன் பரிந்து இயற்றிய உண்டியும்... கோடலம் என்றார்,—என்பது அன்வயம். பரிந்து இயற்றிய-அன்புடையவன் போல் தோற்றுவித்துக் கொண்டு நமக்கு அமைத்துத் தருகின்றனவான. குரு நாட்டிற்கு உரியவரான பாண்டவர், என்பது ஈற்றடியின் பொருள்.

பூண் - ஆபரணம். தாமம் - மாலை. கோடலம் - ஏற்றுக் கொள்ள மாட்டோம்.

**சிற்பி வீமனை எச்சரித்தல்**

121. ஐய முற்றிவ ரிருப்புழி மயனினு மதிகன்
சைய மொத்ததோள் வலனுடைத் தபதிய
னொருவன்
வைய முற்றுடை வீமனை யொருதனி வணங்கி
ஐய பட்டதை யறிந்தரு ளாமுறை யென்றான்.

[ஐயம் உற்று இவர் இருப்புழி, மயனினும் அதிகன் சையம் ஒத்த தோள் வலன் உடை தபதியன் ஒருவன் வையம் முற்று

உடை வீமனை ஒரு தனி வணங்கி, ஐய, பட்டதை அறிந்து அருள் ஆம் முறை என்றான்.]

**விளக்கம்:** மயனினும் அதிகன் - அசுர தச்சனான மயன் என்பவனினும் சிறந்தவன், சையம் - மலை. தபதியன் - (ஸ்தபதி, என்பதின் விகாரம் தபதி. அன், ஆண்பால் விகுதி) சிற்பி ஒருத்தன்.

வையம் முழுதையும் ஆளுதற்குரிய திறலினனான வீமனை, ஒரு ஏகாந்தமான இடத்திலே கண்டு வணங்கி,—என்பது மூன்றாவது அடியின் பொருள். பட்டதை - நிகழ்ந்ததை. ஆம்முறை - நடந்தபடியே.

'வையம் முற்றுடையான்' என்று வீமனைக் கூறியது, "தாயையும் உடன் பிறந்தவர்களையும் காக்கும் வல்லமையுடையவன் அவனே," என்ற குறிப்பினது.

122. நுந்தை யேவலிற் கம்மியர் நூதன மாக
இந்த மாநகர்த் திருமனை யியற்றிடு நாளின்
வந்த மந்திரி வஞ்சனை யறிந்தறன் வடிவாம்
தந்தை யென்னையு மேவினன் றன்மையி
னுணர்ந்தே.

[நுந்தை ஏவலின் கம்மியர் நூதனமாக இந்த மாநகரி திருமனை இயற்றிடு நாளின், வந்த மந்திரி வஞ்சனை அறிந்து, அறன் வடிவு ஆம் தந்தை என்னையும் ஏவினன் தன்மையின் உணர்ந்தே.]

**விளக்கம்:**—நுந்தை - திருதராட்டிரன். கம்மியர் - கட்டிடத் தொழில் வல்லவர். அறன் வடிவாம் தந்தை - தர்மசொருபியான விதுரன். தன்மையின் உணர்ந்து என்னையும் ஏவினான் - (நான்) நம்பத்தக்க தன்மையன் என்பதை எனது குணத்தினால் உணர்ந்து கம்மியரில் ஒருவனாய் என்னையும் (தொழில் செய்யுமாறு) ஏவினான்.

123. அடிய னேனுமற் றவருட னரக்குமா ளிகையிப்
படியி னாலியற் றியதொழிற் பயனெலாங் குறித்து
நெடிய கானகத் தளவுநீ ணிலவறை நெறிபோய்
முடியு மாறொரு மண்டபங் கோட்டினேன் முழை
போல்.

[அடியனேனும் மற்றவருடன் அரக்கு மாளிகை இபடியினால் இயற்றிய தொழில் பயன் எலாம் குறித்து. நெடிய கானகத்து அளவு நீள் நிலவறை நெறிபோய் முடியுமாறு ஒரு மண்டபம் கோட்டினேன் முழை போல்]

**விளக்கம்:**—இப்படியினால் - இத்த விதமாக. இயற்றிய தொழில் பயன் குறித்து - கட்டிய தொழிலின் பயனை நன்கு ஆலோசித்து. நீள் நிலவறை நெறி முழைபோல் நெடிய கானகத்து அளவு போய் முடியுமாறு ஒரு மண்டபம் கோட்டினேன்,— என்று அன்வயிக்க. நிலவறை நெறி - சுரங்க வழி.

நிலவறையின் வழி ஒரு குகைபோல் நீண்ட காடுவரை சென்று முடியும்படி ஒரு மண்டபத்தை (அரக்கு மாளிகையில்) அமைத்தேன்,— என்பது ஈற்றடிகளின் பொருள்.

'இயற்றிய தொழில் பயன் எலாம் குறித்து,' என்பது, ''இம்மாளிகையில் பாண்டவரை இருக்கச் செய்து, தீயினால் அவர்களை அழிக்கக் கருதிய கருத்தை ஊகித்தேன்,'' என்று சிற்பி கூறும் கருத்தது. 'கோட்டினேன்,' என்பது அமைத்தேன், என்ற பொருளது.

124. வேறொ ருத்தரு மறிவுறா விரகினா லொருதூண்
மாறு பட்டுநீ பறிக்கலாம் வகைவழி வகுத்தேன்
தேறு தற்கிது தகுமெனத் திருவுளத் தடக்கி
ஊறு பட்டபோ தெழுந்தருள் கெனப்பணிந்
துரைத்தான்.

(வேறு ஒருத்தரும் அறிவுறா விரகினால் ஒரு தூண் மாறு பட்டு நீ பறிக்கலாம் வகை வழி வகுத்தேன்; தேறுதற்கு இது தகும் என திருஉளத்து அடக்கி. ஊறு பட்டபோது எழுந்தருள்க என பணிந்து உரைத்தான்.]

**விளக்கம்:**—விரகு-உபாயம். மாறுபட்டு-வலிமை கொண்டு. வழி வகுத்தேன்-வழி செய்துள்ளேன். அதாவது நிலவறை செல்லும்படி வழி அமைத்துள்ளேன். இது தேறுதற்கும் தகும்-இது நம்பத்தக்கது. திருவுளத்து அடக்கி-மனத்திலேயே பிறர் அறியாதபடி அடக்கிக்கொண்டு. ஊறு பட்டபோது-தீங்கு ஏற்பட்டபொழுது.

''உங்கள் நலம் நோக்கிக் கூறினேன். எனது கூற்றை நம்புவதோடு, இரகசியமாகவும் வைத்துக்கொண்டு, தீங்கு நேர்ந்த

போது வெளியேறுக,'' என்று சிற்பி கூறும் கருத்தது மூன்றாவது அடி.

125. தச்ச றிற்பெருந் தலைவனுக் குரிமையிற் றனங்கள்
பிச்ச ரிற்கொடுத் தவன்விடை கொண்டதன் பின்னர்
அச்ச மற்றிவ னம்மனைக் கம்மனை வழங்கும்
நிச்ச மின்றுகொ லென்றுகொ லெனநினந் திருந்தான்.

[தச்சரில் பெரும் தலைவனுக்கு உரிமையின் தனங்கள் பிச்சரின் கொடுத்து, அவன் விடை கொண்ட பின்னர், அச்சம் அற்று இவன் நம் மனைக்கு அம்மனை வழங்கும்; நிச்சம் இன்று கொல், என்று கொல்? என நினைந்து இருந்தான்.[

**விளக்கம்:—**உரிமையின் பிச்சரின் கொடுத்து-தகுதி நோக்கி பித்தர்போல் அளவு கருதாது (தனங்களை) வாரி வழங்கி. (மூன்றாமடியின்) இவன்-புரோசனன். நம் மனைக்கு அம்மனை வழங்கும்-நமது மாளிகைக்குத் தீயை வைப்பான், நிச்சயம்-இது நிச்சயம். இன்று கொல், என்று கொல்-இன்றைக்கோ, என்றைக்கோ.

தச்சர்-சிற்பி. வேற்றுமை உருபை அம்மனையோடு இயைத்து, ''அம் மனைக்கு நம் மனை வழங்கும்,'' என்றும் கொள்ளலாம். அப்பொழுது ''நெருப்பிற்குத் நம் மனையை இரையாக வழங்குவான்,'' என்பது பொருளாகும்.

அம்-மனை-(அம்-ஜலம்-மனை-இடம்) நீர் உண்டாவதற்குக் காரணமாகும் பொருளாகிய நெருப்பு.

126. விடவி வன்சினை நெடுங்கொடு தழுவலின் மிடைந்த
அடவி யெங்கணும் வேட்டையாற் றங்கள்பே ராண்மை
நடவி நண்பக லிரவுகண் டுயிலிலர் நடந்தார்
புடவி தங்கள்வெண் குடைநிழற் குளிருமா புரப்போர்.

[விடவி வல்சினை நெடும் கொடி தழுவலின் மிடைந்த அடவி எங்கணும் வேட்டையால் தங்கள் பேர் ஆண்மை நடவி

நண்பகல், இரவு கண் துயில் இலர் நடந்தார், புடவி தங்கள் வெண்குடை நிழல் குளிருமா புரப்போர்.]

**விளக்கம்:**—புடவி...புரப்போர், நண்பகல் விடவி வன்சினை ...இரவு கண் துயிலிலர் நடந்தார், என்று அன்வயிக்க.

விடவி-மரம். சினை-கிளை. மிடைந்த-அடர்ந்த, நெருங்கிய அடவி-காடு, நடவி-நடத்திக் காட்டி, பரவச் செய்து. துயிலிலர் நடந்தார்-தூங்காதவர்களாய் ஒழுகி வந்தனர். புடவி-பூமி. தங்கள் வெண்கொற்றக்குடை நிழலால் பூமிகுளிர்ந்திருக்குமாறு, அதைப் பரிபாலனம் செய்ய வல்லவரான பாண்டவர்,—என்பது ஈற்றடியின் பொருள். பூமி குளிர்ந்திருத்தல்-மக்கள் க்ஷேமமாய் இருத்தல்.

வடவி வன் சினையில் நெடுங்கொடி படர்தலால் அடவி மிடைந்ததாகின்றது.

127. **பாந்த ளோடொரு மனைவயிற் பயில்பவர்போல**
**வேந்த ரைவரு மந்திர வலியினான் மிக்கோர்**
**காந்துநெஞ்சுடை யமைச்சனைக் கைவிடாரணுகித்**
**தாந்த மெய்யென வுயிரெனத் தனித்தனி சார்ந்தார்.**

[பாந்தளோடு ஒரு மனைவயின் பயில்பவர் போல வேந்தர் ஐவரும் மந்திர வலியினால் மிக்கோர், காந்தும் நெஞ்சும் உடை அமைச்சனை கைவிடார் அணுகி, தாம் தம் மெய் என உயிர் என தனி தனி சார்ந்தார்.]

**விளக்கம்:**— பாந்தள்-பாம்பு. மந்திர வலியினால் மிக்கோர் வேந்தர் ஐவரும் — மந்திராலோசனையின் வலிமையினால் மிக்கோரான பாண்டவர் ஐவரும். காந்து நெஞ்சுடை அமைச்சன் -பகையினால் கொதிக்கும் மனத்தை உடைய அமைச்சனான புரோசனன், கைவிடார் அணுகி-(அவனை) அகற்றி விடாதவராய் அருகிற்கொண்டு, அதாவது அவனோடு நெருங்கி. தாம் - பாண்டவர்கள். தம் மெய்யும் உயிரும் போல், (அவர்கள்) ஒருவரோடு ஒருவர் கலந்து வாழ்ந்தார்கள்,—என்பது நான்காம் அடியின் பொருள்.

பாண்டவர்கள் தம் மெய்யும் உயிரும்போல் தனித்தனி புரோசனனோடு (அவனது வஞ்சனையை அறியாதவர்போல்) கலந்து வாழ்ந்தார்கள், என்றும் ஈற்றடி பொருள் படலாம்.

மந்திர வலிமையினால் பாம்போடு வசிக்கும் மந்திரவாதிகளைப் போல், பாண்டவரும் ஆலோசனை வலிமையினால் புரோசனனோடு வாழ்ந்தனர், என்பது கருத்து.

128. ஆங்கோர் கங்குலி னழைத்துநீ டரசிய லுசாவி
ஈங்கு நீதுயில் வைகுதி யெம்முட னென்னப்
பாங்கர் மெல்லணைப் பள்ளியும் பரிவுற வழங்கித்
தாங்க ளும்பொலஞ் சேக்கையிற் றங்கின ரன்றே.

[ஆங்கு ஓர் கங்குலின் அழைத்து நீடு அரசு இயல் உசாவி, ஈங்கு நீ துயில் வைகுதி எம்முடன் என்ன, பாங்கர் மெல்அணை பள்ளியும் பரிவு உற வழங்கி, தாங்களும் பொலம் சேக்கையில் தங்கினர், (அன்றே அசை).]

**விளக்கம் :** — ஆங்கு - அங்ஙனம் அவர்கள் புரோசனனோடு கலந்து வாழ்ந்துவரும் நாள். கங்குல் - இரவு. நீடு - நீண்ட நேரம். அரசியல் உசாவி - ஆட்சி முறைபற்றி ஆலோசித்து. பாங்கர் - பக்கம். பரிவுஉற - அன்பு தோன்றும்படி பொலம் - அழகிய. சேக்கை - படுக்கை. தங்கினர் - படுத்தனர்.

புரோசனன் சந்தேகிக்காமல் இருக்கும் பொருட்டு, நீண்ட நேரம் அரசியல் ஆய்ந்து, அதன்பின், தங்களோடு அவனைப் பள்ளி கொள்ளச் செய்தனர், என்க.

**வீமன் மாளிகைக்குத் தீவைத்தல்**

129. உணர்வ றத்துயி லுற்றபோ தற்றமங் குணராத்
துணைவ ரைத்திருத் தாய்ப்பதந் தொழுகெனச்
சொல்லி
அணிகொள் கோயிலைத் தாதைநண் பனுக்கிரை
யளித்தான்
இணையி லாவமு துரகர்கோனிடைநுகர்ந் திருந்
தான்.

[உணர்வு அற துயில் உற்றபோது, அற்றம் அங்கு உணரா, துணைவரை திருத்தாய் பதம் தொழுக என சொல்லி, அணிகொள் கோயிலை தாதை நண்பனுக்கு இரை அளித்தான். இணைஇலா அமுது உரகர் கோனிடை நுகர்ந்து இருந்தான்.]

**விளக்கம்:**—இணையிலா அமுது...நுகர்ந்திருந்தான், உணர்வு அற...அளித்தான்,—என்று அன்வயிக்க.

புரோசனன் உணர்வற்றுத் துயின்றபொழுது, இதுதான் சமயம் என்று கண்ட வீமன் மாளிகைக்குத் தீவைத்தான், என்க. அங்கு - அப்பொழுது. அற்றம் - சமயம். உணரா - உணர்ந்து. தாதை நண்பன் - வாயுவின் நண்பனான அக்னிபகவான். உரகர்கோன் - பாம்புகளின் தலைவனான வாசுகி.

தீவைத்தான் என்னாமல் தாதைநண்பனுக்கு அளித்தான், என்று வேறோர் விதமாகக் கூறியது. பிறிதின் நவிற்சியணியின் பாற்படும்.

தந்தையின் நண்பனான வாசுகியினிடம் அமுதுண்ட வீமன், தந்தையின் மற்றோர் நண்பனான அக்னிக்கு இரை அளித்தான், என்றது நயமுடையது.

'தாய் பதம் தொழுகை' என்றது. தனித்தனி துயிலும் சகோதரர்களை ஒன்று சேர்க்கும் கருத்தது.

130. முடியு டைத்தடங் கிரியினை முளிகழை தொறு முற்று
அடிநி லத்துறச் சூழ்வரு மாறுபோ லழலோன்
கொடிநி ரைத்தபொற் கோபுரப் புரிசைசூழ் கோயில்
இடியி டித்தென வெடிபடச் சிரித்தெழுந் தெரித்
தான்.

[முடியுடை தட கிரியினை முளி கழைதொறும் உற்று, அடி நிலத்து உற சூழ்வரும் ஆறுபோல், அழலோன் கொடி நிரைத்த பொன் கோபுரம் புரிசை சூழ்கோயில் இடி இடித்தென வெடிபட சிரித்து எழுந்து எரித்தான்.]

**விளக்கம்;**— அழலோன் முடியுடை கிரியினை...சூழ் வருமாறு போல - அக்னி பகவான், சிகரங்களை உடைய மலையினை (அதனிடமுள்ள) உலர்ந்த மூங்கில்கள் எல்லாவற்றிலும் பொருந்தி (மலையின் அடிப்பரப்பு வரை பொருந்தும்படி சூழ்ந்து கொள்ளும் விதம்போல், (முளிகழை - உலர்ந்த மூங்கில்). (இந்த) கொடிகள் வரிசையாகக் கட்டப்பெற்ற அழகிய கோபுரத்தை உடைய மதில்கள் சூழ்ந்த அரச மாளிகையை, இடியிடித்தாற்போல் சப்தம் உண்டாக, சிரித்து எழுந்து எரித்துச் சாம்பலாக்கிவிட்டான்.

அக்னி மாளிகையை எரிக்கையில் உண்டான ஒலியை, அவனது ஆற்றலின் பயனாய் எழுந்த நகையாகக் கொள்ளப் பட்டது. எனவே, ஈற்றடி தற்குறிப்பேற்றம்.

பாண்டவர் வெளியேறல்

131. அக்க ணத்திடை யன்னையி லனுகியாங் கவரைத்
தொக்க சித்திரத் தூணடித் துவாரமே வழியாப்
பொக்கெ னக்கொடு போயகல் வனத்திடைப்
புகுந்தான்
முக்க ணற்புதன் முனிந்தவூர் மூவரோ டொப்பான்.

[அ கணத்திடை அன்னையில் அணுகி ஆங்கு அவரை தொக்க சித்திர தூண் அடி துவாரம் (ஏ) வழியா பொக்கென கொடு போய் அகல் வனத்திடை புகுந்தான் முக்கண் அற்புதன் முனிந்த ஊர் மூவரோடு ஒப்பான்.]

**விளக்கம்:**—தொக்க சித்திரத்தூண் - அதிகமான சித்திர வேலைப் பாட்டை யுடைய தூண். பொக்கென - விரைவாக. முக்கண் அற்புதன் முனிந்த ஊர் - சிவபெருமான் கோபித்து எரித்த திரிபுரம்.

சிவபெருமான் முப்புரம் எரித்த பொழுது, சிவபக்தியோடிருந்த **சுதர்மன் சுசீலன் சுபத்தி** என்ற அசுரர்கள் அத்தீக்கு இரையாகாமல் தப்பினர்.—என்பது கதை. அரக்கு மாளிகைக்கு மூட்டிய தீயினின்று வீமன் தப்பியதால், 'முக்கண் அற்புதன் ஊர் மூவரோடு ஒப்பான்.' எனப்பட்டது. அன்னையில் - தாயிடம்.

வீமன் தாயோடும் சகோதரர்களோடும் போய்ச் சேர்ந்த வனம் **இடிம்பி வனம்.**

132. புரிந்த தீயினைக் கண்ணினீ ரவித்திடப் புகுந்து
பரிந்த நெஞ்சினை மீண்டுமப் பாவகன் சுடவே
கரிந்த கோயிலிற் காரிருள் புலர்ந்தபின் கண்டோர்
எரிந்து வீழ்ந்தன ரைவரும் யாயுமீண் டென்றார்.

[புரிந்த பற்றிய தீயினை கண்ணின் நீர் அவித்திட புகுந்து. நெஞ்சினை மீண்டும் அ பாவகன் சுடவே, கரிந்த கோயிலில் கார் இருள் புலர்ந்தபின் கண்டோர் எரிந்து வீழ்ந்தனர் ஐவரும் யாயும் ஈண்டு என்றார்]

**விளக்கம்:**—பாவகன் - அக்னிதேவன். வீழ்ந்தனர்—மாண்டனர். பொழுது விடிந்தபின், எரிந்த மாளிகையைப் பார்க்கச் சென்ற ஊராரின் கண் பெருக்கிய நீர். தீயை அவித்தது, என்ற உயர்வு நவிற்சி அணி, பாண்டவர்களிடம் அவர்களுக்கு இருந்த அன்பையும், அவர் பெருக்கிய கண்ணீரின்மிகுதியையும் குறிக்கும்,

அம்மாளிகையில் படுத்திருந்த வேடர் ஐவரும், வேடச்சி ஒருத்தியும் எரிந்து கிடந்ததைக் கண்டு, ஊரார், குந்தியும் பாண்டவரும் அழிந்தனர் என்று எண்ணினர், என்க.

அரக்கு மாளிகையைச் சுட்ட தீ அவிந்து அடங்கிய பின்னும் பாண்டவர்க்கு இரங்கிய ஊராரின் மனத்தையும் சுட்டது, என்றது நயமுடையது.

133. விருந்த ராய்விட மிடச்செலை வேடருந் தாயும்
இருந்த தீமதி யமைச்சனோ டிறந்தமை யுணரார்
திருந்து மாமதிப் பாண்டவர் செயலுமற் றறியார்
வருந்தி னர்தம துயிரிழந் தெனப்புவி மன்னர்.

[விருந்தர் ஆய்விடம் இட செல் ஐ வேடரும் தாயும், இருந்த தீ மதி அமைச்சனோடு இறந்தமை உணரார், திருந்து மாமதி பாண்டவர் செயலும் மற்று அறியார், வருந்தினார் தமது உயிர் இழந்தென புவிமன்னர்.]

**விளக்கம் :**—விருந்தர் - (விருந்தினர்) புதியவர். செல்-வந்த. திருந்து மாமதி - கல்வி கேள்விகளால் திருத்தமுற்ற உயர்ந்த அறிவு. (பாண்டவர்) செயல் - தீ வைத்துவிட்டுச் சுரங்க வழியாய்த் தப்பிச் சென்ற செய்கை. மற்று - மற்றும், வினைமாற்றுமாம். தமது உயிர் இழந்தென - தங்களது உயிரை இழந்தது போல் (பாண்டவரிடம் அன்புடைய புவி மன்னர் வருந்தினர்.)

பாண்டவர்களைக் கொல்லப் பாவி துரியோதனன் அரக்கு மாளிகை கட்டுவித்ததோடு, விஷங் கலந்த தேனைக் கொடுத்துக் கொல்ல வேடர் ஐவரையும், அவரது தாயையும் அனுப்பிவைத்தான் என்பதும், வந்தவர் அறுவரும் தீவாய்ப்பட்டு மாண்டனர் என்பதும் தெரிகின்றன.

134. போது பட்டிருள் புகுந்தொளி போனவா னகம்போல்
மாது பட்டபார் மடந்தைதன் மதிமுக மழுங்கத்
தீது பட்டது குருகுலச் செல்வமென் றிரங்கி
ஏது பட்டன முனிவரர் முதலினோ ரிதயம்.

[போது பட்டு இருள் புகுந்து ஒளி போன வானகம் போல், மாது பட்ட பார் மடந்தை தன் மதிமுகம் மழுங்க, தீது பட்டது குருகுலம் செல்வம் என்று இரங்கி ஏதுபட்டன முனிவரர் முதலினோர் இதயம்.]

**விளக்கம் :**—பொழுது சாய (சூரியன் அஸ்தமிக்க) இருள் புகுந்த வெளிச்சம் அகன்ற வானம்போல்,—என்பது முதலடியின் பொருள். மாதுபட்ட - அழகிய. குருகுலத்தின் செல்வம் பழுதடைந்தது,—என்பது மூன்றாமடியின் பொருள். (முனிவர் முதலானோர் இதயம்) ஏதுபட்டன - என்ன பாடுபட்டன, அதாவது (உள்ளங்கள்) மிக வருந்தின.

பாண்டவர் அழிவைக் குருகுலத்தின் அழிவாகப் புலவர் குறிக்கின்றார். பட்டு, புகுந்து; எச்சத் திரிபு.

135. கொட்ப னற்சுட விறந்தமை கேட்டலுங் குருக்கள்
துட்ப தத்துட னழுதிடுஞ் சுயோதனன் முதலோர்
உட்ப னித்துமேல் வெயிலுற வெதும்பு நீ ரொத்தார்
பெட்பு றப்புவி முழுவதும் பெறுங்கருத் துடையோர்.

[கொட்பு அனல் சுட இறந்தமை கேட்டலும் குருக்கள் துட்பதத்துடன் அழுதிடும் சுயோதனன் முதலியோர், உள்பனித்து மேல் வெயில் உறவெதும்பும் நீர் ஒத்தார், பெட்புஉற புவி முழுவதும் பெறும் கருத்து உடையோர்.]

**விளக்கம் :—** கொட்பு அனல் - சூழ்ந்து கொளுத்தும் தன்மையுடைய நெருப்பு. துட்பதத்துடன் - (துஷ்பதத்துடன்) கொடிய கருத்தோடு. சுயோதனன் முதலோர் (ஆன) குருக்கள் - துரியோதனன் முதலிய குருகுலமைந்தர்கள். பெட்பு - ஆசை. பெட்புற - மிகுந்த ஆசையோடு.

வெயில்பட உள்பனித்தும் மேல் வெப்பமாகவும் இருக்கும் நீரைத் துரியோதனாதியர் ஒத்தார், என்றது. பாண்டவர் இறந்தமைக்கு அவர் வருந்தியது நடிப்பு என்றும், உண்மையில் அவர்கள் மகிழ்ந்தார்கள் என்றும் தெரிவிக்கும் கருத்தது.

136. பொன்ன லங்கொள மெழுகினா லாலயம் புனைந்து
துன்னு வெங்கதைப் படைமருச் சுதனையே சுடு
வாள்
என்ன வாண்மைகொ லெண்ணினா னெண்ணினுஞ்
சுடுமோ
வன்னி தன்பெயர் மருச்சக னென்பது மறந்தே.

[பொன் நலம் கொள மெழுகினால் ஆலயம் புனைந்து துன்னு வெம் கதை படை மருச்சுதனையே சுடுவான் என்ன ஆண்மை கொல்? எண்ணினான் எண்ணினும் சுடுமோ! வன்னிதன் பெயர் மருச்சகன் என்பது மறந்தே.]

**விளக்கம்:—** இச்செய்யுள் கவிக்கூற்று. பொன்நலம் கொள்ள- பொன்னின் மாற்று உயரும்படி. மருச்சுதன் - (மருத்ஸுதன்) காற்றின் மைந்தனான வீமன். சுடுவான் எண்ணினான். என்ன ஆண்மை கொல்?—என்று இயைக்க. எண்ணினும் - (தீயால் வீமனை அழிக்க வேண்டும் என்று துரியோதனன்) எண்ணினாலும். வன்னிதன் பெயர் மருச்சகன் (மருத்ஸகன்) என்பது மறந்து சுடுமோ - அக்னி தன் பெயர் காற்றின் சகாயன் (நண்பன்) என்பதை மறந்து (மருத்சுதனை) சுடுமோ! சுடாது என்றபடி.

காற்றின் நண்பனான அக்னி, காற்றின் மகனான வீமனைச் சுடாது என்ற வருணனை ஏதுத் தற்குறிப்பேற்றமாகும்.

''பகைவர் அரக்கு மாளிகை கட்டியது வீமன் சிறந்து பிரகாசிக்கவே ஆதாரமாயிற்று,'' என்பது ''பொன் நலங்கொள,'' என்ற தொடரின் கருத்து.

# 4. வேத்திரகீயச் சருக்கம்

வேத்திரகீயம் என்னுமிடத்தில் நிகழ்ந்தனவற்றைக் கூறும் சருக்கம் இது. அரக்குமாளிகையிலிருந்து தப்பிய பாண்டவரும் குந்தியும் இடிம்பவனத்தை அடைந்ததும், வீமன் இடிம்பன் என்ற அரக்கனைக் கொன்று, அவன் தங்கையான இடிம்பியை மணந்து கொண்டதும், இடிம்பி **சடோற்கசன்** என்ற மகனைப் பெற்றதும், வியாசரை அவர்கள் கண்டதும், பிறகு அவர்கள் அந்தண வேடங் கொண்டு வேத்திரகீயத்தை அடைந்ததும் அங்கே மக்களுக்கு இன்னல் இழைத்து வந்த **பகன்** என்ற அசுரனை வீமன் கொன்றதும் இச்சருக்கத்தில் அடங்கிய விஷயங்கள்.

**கடவுள் வணக்கம்**

**எண்சீர் ஆசிரியவிருத்தம்**

1. **சீத நாண்மலர்க் கோயின் மேவுசெந் திருவி**
   **னாயகன் றேவ நாயகன்**
   **வேத நாயகன் பூத நாயகன் விரத**
   **நாயகன் விபுத நாயகன்**
   **போத காதிபன் முதலை வாயிடைப் பொறைத**
   **ளர்ந்துமுன் பொதுவி லேநினைந் (து)**
   **ஆதி மூலமே யென்ன முன்வரு மாதி**
   **நாயக னடிவ ணங்குவாம்.**

[சீதம் நாள் மலர் கோயில் மேவு செம்திருவின் நாயகன், தேவநாயகன், வேதநாயகன். பூதநாயகன், விரதநாயகன், விபுதர் நாயகன், போதக அதிபன் முதலை வாயிடை பொறை தளர்ந்து முன் பொதுவிலே நினைந்து, ஆதிமூலமே என்ன முன் வரும் ஆதிநாயகன் அடி வணங்குவாம்.]

**விளக்கம் :**—மேலொரு பொருளுமில்லா முதற் பொருளான திருமாலை வணங்கும் செய்யுள் இது. விபுதர் - ஞான வித்தக

ரான முனிவர். போதகாதிபன் - கஜேந்திரன் (யானைகளுள் அரசன்). போதகாதிபன், என்று உயர்திணை வாய்பாட்டாற் கூறியது, சிறப்புப் பற்றி வந்த திணை வழு. சிறந்ததை அரசன் என்றல் வழக்கு.

**தாயுடன் பாண்டவர் இடிம்பவனம் சேர்தல்**

2. தோள் கரம்புறந் தன்னி லன்னையுந் துணைவர்
நால்வருந் தொக்கு வைகவே
கோள்க ரந்தபஃ றலைய ராவெனக் குகர
நீணெறிக் கொண்டு போயபின்
தாள்க ளின்கதித் தாள்ப றிந்துவீழ் தருவ
னத்ததோர் சாரன் மன்னினான்
மூள்க டுங்கொடுஞ் சினவ னற்கண்மா
மும்மதக் களிறனைய மொய்ம்பினான்.

[தோள் கரம் புறம் தன்னில் அன்னையும் துணைவர் நால்வரும் தொக்கு வைகவே, கோள் கரந்த பல்தலை அரா என குகரம் நீள் நெறி கொண்டு போயபின், தாள்களின் கதி தாள் பறிந்துவீழ் தருவனத்தது ஓர் சாரல் மன்னினான், மூள் கடும் கொடும் சின அனல் கண் மா மும்மதம் களிறு அனைய மொய்ம்பினான்.]

**விளக்கம் :**—புறம் - முதுகு. தோள்களிலும் கைகளிலும் நான்கு சகோதரர்களையும், தாயை முதுகிலும் வீமன் தூக்கிச் சென்றான், என்க, தொக்கு வைக - பொருந்தியிருக்க. கோள் கரந்த பல்தலை அரா என - வலிமையோடு புற்றினுள் மறைந்து செல்கின்ற பல தலைகளை உடைய நாகம் போல; (கோள்-வலி), குகரம் - மலைக் குகை, இங்கே விதுரனின் ஏவலில் இரகசியமாக அமைக்கப்பெற்ற சுரங்கப் பாதை.

வீமன் தலையோடு, குந்தியின் தலையும் உடன் பிறந்தார் தலைகளும் சேர்ந்து தோன்றினமையின் பஃறலை அரவு உவமையாயிற்று. தாள்கதி - தாள்களின் வேகம், அதாவது வீமனின் கால்களின் நடை வேகம். தாள் பறிந்து வீழ் தருவனம் - (நடையின் வேகத்தால்) அடி பெயர்ந்து விழும் மரங்களை உடைய காடு. சாரல் மன்னினான் - (காட்டின் ஒரு பக்கத்தைச் சேர்ந்தான்.

மூண்டு எழுகின்ற கடிய (மிகுதியான) கொடிய கோபத்தையும், நெருப்பைச் சொரியும் கண்களையும் மூன்று மதங்களையும்

உடைய பெரிய ஆண் யானையை ஒத்த வலிமையுடையவனான வீமன்,— என்பது ஈற்றடியின் பொருள். மும்மதம் மாகளிறு, என்று இயைக்க.

இரண்டு கன்னங்களினின்றும், குறியிடத்திருந்தும் பெருகும் மதம், மும்மதம்.

3. அவ்வ னத்தில்வா ழரம டந்தையென் றைய
மெய்தவோ ரடல ரக்கிவந் (து)
இவ்வ னத்திலிந் நள்ளி யாமநீ யென்கொல்
வந்தவா றிவர்கள் யாரெனச்
செவ்வ னத்திதழ்க் கூரெ யிற்றெழுந் தெண்ணி
லாவினிற் றிமிர மாறவே
செவ்வ னற்சுடர்க் கொத்த வோதியாள் வீம
சேனனோ டுரைவி ளம்பினாள்.

[அ வனத்தில் வாழ் அரமடந்தை என்று ஐயம் எய்த ஓர் அடல் அரக்கி வந்து, இ வனத்தில் இ நல் யாமம் நீ என்கொல் வந்த ஆறு, இவர்கள் யார்? என, செம் வனத்து இதழ் கூர்எயிற்று எழும் தெள் நிலாவினில் திமிரம் மாறவே, வெம் அனல் சுடர்க்கு ஒத்த ஓதியாள் வீமசேனனோடு உரை விளம்பினாள்.

விளக்கம் : — செவ்வனத்து இதழ்...ஓதியாள் (ஆன) அடல் அரக்கி, அவ்வனத்தில்...யார் என வீம சேனனோடு உரை விளம் பினாள்,—என்று அன்வயிக்க.

அரமடந்தை - தெய்வப் பெண். அடல் அரக்கி மாயையி னால் அழகிய பெண் வடிவம் கொண்டு வந்தாள், என்க. நள் யாமம் - நடு இரவு. செவ்வனத்து, என்பதிலுள்ள வனம் என்பது வர்ணம், (நிறம்) என்ற பொருளது; வடசொல் எயிறு - பல். திமிரம் - (வடசொல்) இருள். ''சிவந்த இதழினிடத்தேயுள்ள கூரிய பற்களினின்று எழும் தெளிந்த நிலவு போன்ற ஒளியினால் இருள் அகலும்படி செய்து,' என்பது மூன்றாவது அடியின் பொருள். 'வெம் அனல் சுடர்க்கு ஒத்த ஓதியாள்,' என்றது,' அவளது இயற்கையான வடிவின் வர்ணனை; 'வெவ்விய தீச் சுடரைப் போன்ற செம்பட்டை மயிரை உடையவள்,' என்பது பொருள். அத்தகையினளான அடலரக்கி, அரமகளைப் போன்ற வடிவத்தில் வந்து, அதாவது வீமசேனனை வினவினாள் என்க.

4. யானும் வந்தவா றுரைசெய் கேனினக் குரைசெய்
நீயெனக் கியார் கொல்லென் னலும்
தானு மங்கவன் றன்னொ டோதுவா டழுவு
மாதரந் தங்கு சிந்தையாள்
ஊனு கந்துதின் றிடுமி டிம்பனென் றொருவ
னிங்கிரா வணியை யொத்துள்ளான்
மானு டங்கொண்மெய்க் கந்த மூர்தலால் வரவ
றிந்தனன் வாள ரக்கனே.

[யானும் வந்த ஆறு உரை செய்கேன் நினக்கு, உரை செய் நீ எனக்கு, யார் கொல் என்னலும், தானும் அங்கு அவன் தன்னொடு ஓதுவாள் தழுவும் ஆதரம் தங்கு சிந்தையாள் ஊன் தின்றிடும் இடிம்பன் என்று ஒருவன்இங்கு இராவணியை ஒத்துளான்; மானுடம் கொள் மெய்கந்தம் ஊர்தலால் வரவு அறிந்தனன், வாள் அரக்கனே.]

**விளக்கம்:**—இதுவும் இதைத் தொடரும் மூன்று செய்யுள் களும். 'நீயார் கொல்?' என்று கேட்ட வீமனுக்கு இடிம்பிதரும் பதிலாகும். நரவாடையால் இரை கொள்ள வந்த அரக்கி, வீமன் பால் காதல் கொண்டவளாயினாள். என்பது தோற்றத் 'தழுவும் சிந்தையாள்,' என்றார். ''ஊன் உகந்து தின்றிடும் இடிம்பன் என்று அழைக்கப்படும் வாள் அரக்கன் ஒருவன், இராவணியை ஒத்து இங்கு உளான்,'' என்று அன்வயங்கொள்க. இராவணன் மகனான இந்திரசித்து. இடிம்பன் இராவணியைப் போன்ற ஆற்றலன், என்று கூறியபடி. மானுடம் மெய் கொள் கந்தம்- மனித சரீரத்தின் வாடை. ஊர்தல்-வீசல். ''நரவாடையால் உங்கள் வரவை அறிந்தனன்,' என்று கூறினாளாயிற்று. 'வாள் அரக்கன்,' என்பதில், 'வாள்' என்பது கொடுமையைக் குறிக்கும்.

5. எம்மு னேவலால் யான்ம லைந்திடற் கெய்தி
னேனினைக் கொன்று மென்பயன்
அம்ம வெற்பிரண் டனைய பொற்புயத் தழகெ
றிக்குநீ டார மார்பகேள்
கொம்மை வெம் முலைத் தெரிவை யர்க்குளங் கூசு
மாசைநோய் கூறு கிற்பதென் (று)
எம்ம னோர்களுஞ் சொல்வர் யானுனக் கெங்ங
னேகொலா மிறுதி கூறுகேன்.

[எம் முன் ஏவலால் யான் மலைந்திடற்கு எய்தினேன்; நினைகொன்றும் என் பயன்? அம்ம, வெற்பு இரண்டு அனைய பொன்புயத்து அழகு எறிக்கும் நீடு ஆரம் மார்ப. கேள்: கொம்மை வெம்முலை தெரிவையர்க்கு உளம் கூசும் ஆசை நோய் கூறுகிற்பது எம்மன்னோர்களும் சொல்வர்; யான் உனக்கு எங்ஙனே கொலாம் இறுதி கூறுகேன்.]

**விளக்கம்:**—இது மிக மிகச் சுலபமான செய்யுளே. தன் முன்னவன் ஏவலால் மலைந்திடற்கு வந்த அரக்கி, வாயுவின் மதலையைக் கண்டு காமுற்று, "பொற்பனைய இரு புயங்களின் அழகு விளங்கும்படி வீசும் மாலையணிந்த மார்பனே. கேள் திரண்டு பருத்த விருப்பத்தை ஊட்டுகின்ற முலைகளை உடைய மாதர்களுக்குத் தமது ஆசையைக் கூறுதற்கு உளம் கூசும், என்று எம்போன்ற (நாணமில்லாத) அரக்கியரும் சொல்வர். எனின், எனது கருத்தின் முடிவை உனக்குக் கூற எங்ஙனம் வல்லவள் ஆவேன்," என்று தன் இச்சையை இச்செய்யுளால் தெரிவிப்பவள் ஆகின்றாள். இவளுக்கு முன், தசரத ராமன்பால் காதல் கொண்டு பொய் வேடம் புனைந்து வந்த சூர்ப்பணகையும், "தாமுறு காமத்தன்மை தாங்களே உரைப்பதென்பது ஆமெனல் ஆவதென்றால் அருங்குல மகளிர்க்கு அம்மா," என்று கூறலானாள். "அருங்குல மகளிரோடு அரக்கியர்க்கும் ஆகாது," என்பது இடிம்பியின் கூற்று. மெய்யுடை இடும்பி அரமடைந்தையே போல் வந்தாளேனும், தானொரு அரக்கி என்பதை மறைக்காமையாகிய நலம் அவளது இச்சையை நிறைவேற்றி வைத்தது. மற்றுத் தன்னை அருங்குல மகளாகக் காட்ட முயன்ற சூர்ப்பணகையின் நடிப்போ, அவள் மூக்கிழத்தலையே ஊதியமாக்கியது.

கூறுகிற்பது—எடுத்துக் கூறுவதற்கு. அம்ம: வீமனின் அழகினை இடிம்பை வியந்ததைக் குறிக்கும்.

6. பெருஞ்சு ழிப்படக் கரைபு ரண்டெழப் பெருகும்
யாறுபின் பிறழ்கலங் கல்போய்
அருஞ்சு வைப்படுந் தெளிவி னோடுசென் றாழி
வேலைவா யணையு மாறெனப்
பெருஞ்சி னத்துடன் கொன்று தின்றிடப் போத
ருந்தொழிற் பேதை நான் மெலிந் (து)
இருஞ்சி றைச்சுரும் பிசைகொண் மாலையா யின்ப
மாலுழந் துன்னை யெய்தினேன்.

[பெரும் சுழிபட கரை புரண்டு எழ பெருகும் யாறு, பின் பிறழ் கலங்கல் போய் அரும் சுவைபடும் தெளிவினொடு சென்று ஆழிவேலை வாய் அணையுமாறு என, பொரும் சினத்துடன் கொன்று தின்றிட போதரும் தொழில் பேதை நான், மெலிந்து இருஞ் சிறை சுரும்பு இசை கொள் மாலையாய், இன்பம் மால் உழந்து உன்னை எய்தினேன்.]

**விளக்கம்:**—பெரும் சுழி...யாறு(கார்காலத்தில்) பெரிய சுழிகள் உண்டாகவும் கரைபுரண்டு நீர் எழவும் பெருகுகின்ற நதி. பின்-மாரி நீங்கியபின், அதாவது கோடையில். பிறழ் கலங்கல் போய்-தெளிவின்மையாகிய மாறுபாடுற்ற கலங்கல் நீங்கி. ஆழி வேலை-கடல். போதரும் தொழில் பேதை-வந்த கொடிய தொழிலையுடைய பேதை. மெலிந்து-சினம் அவிந்து. இருஞ் சுரும்பு இசை கொள் மாலையாய்-பெரிய சிறகுகளை உடைய வண்டுகள் (தேன் உண்டு மகிழ்ந்து) இசை எடுக்கும் மாலையை அணிந்தவனே. இன்பம் மால் உழந்து-காமத்தால் வருத்தம் உற்று.

'சுரும்பு இசை எடுக்கும் மாலையாய்,' என்ற விளி, உன்னை அடைந்த எனது நோயை நீக்கி எனக்கு மகிழ்ச்சி அளிக்கவேண்டும்'', என்று குறிப்பினது. 'ஆறு என...எய்தினேன்,'' என்றது, 'நீயே எனக்குக் கதி, என்னை ஏற்றுக்கொள்ள வேண்டும்'. என்று கூறும் குறிப்பினது. அதாவது கலங்கலோடு கார்காலத்து மண்டிவரும் நீர் கோடையில் தெளிந்து கடலைச் சேர்வதுபோல். சினந்து வந்த நான் சினந்தணிந்து உன்னை அடைந்தேன், என்பதாம்.

7. நீடி யிங்குநா னிற்கின் மாரனா நிருதன்
 நிற்கவந் நிருதன் வெம்மையோ(டு)
ஓடி வந்தெனைக் கொல்லு மும்மையு மொருக
 ணத்திலே யுயிர் செகுத்திடும்
நாடி யென்கொன்மற் றுய்ந்து போகலா நம்பி
 யென்னை நீ நலனு றத்தழீஇக்
கோடி யம்பரத் திடையெழுந்துனைக் கொண்டு
 போவலோர் குன்றி லென்னவே.

[நீடி இங்கு நான் நிற்கின் மாரன் ஆம் நிருதன் நிற்க, அ நிருதன் வெம்மையோடு ஓடி வந்து எனை கொல்லும், உம்மையும் ஒரு கணத்திலே உயிர் செகுத்திடும், நாடி என்கொல் மற்று?

உய்ந்து போகலாம், நம்பி, என்னை நீ நலன் உற தழீஇக் கோடி, அம்பரத்திடை எழுந்து உனை கொண்டு போவல் ஓர் குன்றில் என்னவே.]

**விளக்கம்:**—மாரன் ஆம் நிருதன் நிற்க - மன்மதனாகிய அரக்கன் என்னைக் கொல்வான் அமைந்து நிற்க. அ நிருதன் - எனது தமையனாகிய அந்த அரக்கன். எனைக் கொல்லும் - (மன்மதனுக்கு முன்) என்னைக் கொல்வான். நாடி மற்று என் கொல் - வேறு விதமாகச் சிந்தித்து ஆவதென்? உய்ந்து போகலாம் - (நான் சொல்வதைக் கேட்பாயாயின் அவன் கையினின்று) தப்பிப் பிழைக்கலாம். அம்பரம் - ஆகாசம்.

என்னைத் தழுவிக்கொண்டால் மன்மதனிடமிருந்து நானும், இடிம்பனிடமிருந்து நாமிருவரும் தப்பலாம்,—என்று கூறியபடி, 'உம்மையும்,' என்பது பாண்டவரையும் குந்தியையும் உளப் படுத்தியதுமாகலாம். ஆடவரில் சிறந்தவன் நம்பி. அதன் பெண் பால் நங்கை.

8. இரக்க மின்றியே தனிவனத்திலே யிளைஞ
ரெம்முன்யா யிவரை விட்டெமைப்
புரக்க வல்லளென் றொருமடந்தைபின் போவ
தாடவர்க் காண்மை போதுமோ
வரைக்கண் வாழ்வுகூர் நும்மு னெம்முனே மலைய
வெண்ணிமேல் வந்த போது பார்
அரக்க னாகிலென் னவுணனா கிலென் னவனை
யோர்கணத் தாவி கொள்வனே.

[இரக்கம் இன்றியே தனி வனத்திலே இளைஞர் எம் முன் யாம் இவரைவிட்டு எமை புரக்க வல்லள் என்று ஒரு மடந்தை பின் போவது ஆடவர்க்கு ஆண்மை போதுமோ! வரைக்கண் வாழ்வு கூர் நும் முன் என்முனே மலைய எண்ணி மேல் வந்த போது பார்! அரக்கன் ஆகில் என்? அவுணன் ஆகில் என்? அவனை ஓர் கணத்து ஆவி கொள்வனே.]

**விளக்கம்;**—'என்னைத் தழுவின் உய்ந்து போகலாம்,' என்று கூறிய இடும்பிக்கு வீமன் கூறிய பதிலாகும் இது, இது சுலபமான செய்யுளே. 'அரக்கனானால் என்? அவுணனானால் என்?' என்றது. ''அலக்ஷியத்தையும், இடிம்பனை வெல்லும் ஆற்றல் தனக்கு உளது என்பதையும் தெரிவிக்கும் கருத்தது. அவுணன் - அசுரன். அசுரரும் அரக்கரும், பதினெட்டுத் தேவ கணங்களில்

கொடிய வகுப்பினைச் சேர்ந்தவர். ஈற்று ஏகாரம் தேற்றப் பொருளது, மற்றவை அசை.

### இடிம்பன் வருகை

9. இடிம்பை தன்மனங் கொண்ட காளையிங் கிவையி
யம்பலுந் நவை யிடிம்பனும்
கொடும்பெ ருஞ்சினங் கனவு கண்ணினன் குருதி
நாறுபுண் கூரெ யிற்றினன்
உடம்பு பெற்றதோ ரிருண் முகத்திலே யோரி
ரண்டுவெஞ் சுடரு திக்கவும்
நெடும் பிறைக்கொழுந் தோரி ரண்டுவா ணிலவெ
றிக்கவுந் நின்ற நீர்மையான்.

[இடிம்பை தன் மனம் கொண்ட காளை இங்கு இவை இயம்பலும்; நவை இடிம்பனும் கொடும் பெரும் சினம் கதுவு கண்ணினன், குருதி நாறு புண் கூர் எயிற்றினன், உடம்பு பெற்றது ஓர் இருள் முகத்திலே ஓர் இரண்டு வெம் சுடர் உதிக்கவும், நெடும் பிறை கொழுந்து ஓர் இரண்டு வாள் நிலவு எறிக்கவும் நின்ற நீர்மையான்.]

**விளக்கம்:**—இடிம்பை காளை - வீமன். நவை இடிம்பன் - குற்றமுடைய தொழில்களைச் செய்யும் இடிம்பன், குருதி நாறு புண் கூர் எயிற்றினன் - இரத்தத்தின் வாடை வீசும் தசை தோய்ந்த கோரைப் பற்களை உடையவன்.

உருவம் பெற்றதாகிய ஓர் இருளானது, தன் முகத்திலே வெவ்விய இரு சூரியர் தோன்றி விளங்கவும், நீண்ட இளம் பிறை இரண்டு வெள்ளிய நிலவை வீசவும் தோற்றமளித்து நின்றது போன்ற தன்மையன்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

இத்தன்மையினனான நவை இடிம்பன் குறுகினான் என்று அடுத்த கவியோடு முடியும். அவனது கரிய நிறம், வடிவம் பெற்ற இருள். கண்கள் இரண்டு சூரியர்கள். கோரைத் தந்தம் இருபிறை. இவ்வர்ணனை இல்பொருள் உவமையாகும்.

10. இடிப டுத்தெழுந் தெழிலிமின்னுமா றென்ன
நீடுகுன் றெதிரொ லிக்கவே
வெடிப டச்சிரித் திருபு றத்துநா மிளிர
வுட்புகைந் தொளிரும் வாயினான்

நெடில்ப டுத்தவெங் கான மெங்கணுந் நிழல்ப
டுத்திவா னுறநி மிர்ந்துளான்
கொடிப டுத்த நுண் ணிடையி டிம்பையைக் கூவி
யவ்விடைக் குறுகி னானரோ.

[இடிபடுத்து எழுந்து எழிலி மின்னுமாறு என்ன நீடு குன்று எதிர் ஒலிக்கவே, வெடிபட சிரித்து இரு புறத்தும் நா மிளிர உள் புகைந்து ஒளிரும் வாயினான், நெடில் படுத்து வெம் கானம் எங்கணும் நிழல் படுத்தி வான் உற நிமிர்ந்துளான், கொடி படுத்த நுண் இடை இடிம்பையை கூவி, அ இடை குறுகினான் (அரோ).]

**விளக்கம் :**—எழிலி எழுந்து இடி படுத்துமின்னுமாறு என்ன- மேகம் வான் எழுந்து இடியை உண்டாக்கிக் கொண்டு மின்னும் விதம் போல. நீடு குன்று...ஒளிரும் வாயினான் - நீண்டு உயர்ந்த குன்றுகள் எதிரொலி செய்யும்படி வெடி வெடிப்பது போல் சிரித்து, வாயின் இரு புறங்களிலும் நாக்குப் பிறழ்ந்து விளங்கித் தோன்ற, உள்ளே புகைந்து விளங்கும் வாயை யுடையவன். நெடில் படுத்த - மூங்கில்கள் அடர்ந்த. நிழல் படுத்தி வானுற நிமிர்ந்துளான் - செல்லும் இடமெல்லாம் நிழலை உண்டாக்கிக் கொண்டு வான் அளாவி உயர்ந்து வளர்ந் துளானாய். கொடி படுத்த - கொடியை (இடைக்கு ஒப்பா காமையின்) தாழ்மையுறச் செய்த (நுண்ணிய இடையை உடைய இடிம்பி). அ இடை குறுகினான் - அவ்விடம் வந்து சேர்ந்தான்.

அரக்கனது கரிய நிறத்திற்கு வேகமும். அவனது சிரிப் பொலிக்கு இடியும், மிளிரும் நாவுக்கு மின்னலும் உவமையாயின. 'படுத்தல்' என்ற சொல், உண்டாக்கல், அல்லது வெளிப் படுத்தல், அடர்தல், பின்னடைதல், அல்லது தாழ்மையுறல்,— என்ற பொருள்களில் வந்துளது. நெடில் - மூங்கில்.

வானுற ஓங்கிய உருவம் உடைமையால், காடெங்கும் இடிம்பன் நிழலை உண்டாக்கினான், என்க. நாக்கு இரு புறமும் பிறழ்தல் கோபத்தைக் குறிக்கும். உட் புகைதல், உள்ளக் கொடுமையின் பயன். அரோ: ஈற்றசை.

11. உணவி னாசையாற் கொல்ல வந்தநீ யுவகை
யாசையா லுள்ளழிந்திவ

கணவ னாமெனக் காத லிப்பதே கங்குல்
வாணர்தங் கடனி றப்பதே
அணவு வெம்பசிக் கனல விந்துபோ யனங்க
வெங்கனற் கொளும டற்புலிப்
பிணவை யன்பினிற் கலைந யப்பதே பேதை
மானுடன் பேசு கிற்பதே.

[உணவின் ஆசையால் கொல்ல வந்த நீ உவகை ஆசையால் உள் அழிந்து, இவன் கணவன் ஆம் என காதலிப்பதே! கங்குல் வாணர்தம் கடன் இறப்பதே அணவு வெம்பசி கனல் அவிந்துபோய் அனங்க வெம் கனல் கொள்ளும் அடல் புலி பிணவை அன்பினில் கலை நயப்பதே! பேதை, மானுடன் பேசு கிற்பதே.]

**விளக்கம் :—**வந்த கருமத்தைச் செய்யாது நரனை நயந்த வளாய் நிற்கும் தங்கையைச் சினந்து கொள்ளுங் கருத்தது இது;

உவகை ஆசை - காம வேட்கை. காதலிப்பதே - காதலிப்பது பொருந்துமா. கங்குல் வாணர் - இரவில் வலிமை யுடன் சஞ்சரிப்பவர், அரக்கர், வட மொழியில் **நிசாசரர்** என்பர். கடன் - மனிதரைத் தின்னும் முறைமை. இறப்பதே -(அந்த முறைமையினின்று) தவறுவது தக்கதாகுமா. அணவு - பொருந்திய. அனங்க வெம்கனல் - காம வேதனை, கொள்ளும் - கொண்ட. அடல் புலிப்பிணவை-வலிமைபொருந்திய பெண்புலி. கலை - ஆண்மான். அணவு வெம்பசி...கலை நயப்பதே - வயிற்றுப் பசி அடங்கக் காமப் பசி கொண்ட வலிய பெண் புலி ஆண்மானை அன்பினால் விரும்புதல் நேர்தற்குரியதோ! பேதை, மானுடன் பேசுகிற்பதே - அறிவில்லாதவளே, ஒரு மனிதன் உன்னோடு (அச்சமில்லாமல்) பேசுவதோ.

'உணவினாசையால்...நீ' என்பது, மனித இனத்தினின்று வேறுபட்ட நீ அவர்களால் சேர்த்துக் கொள்ளத் தக்கவள் அல்லை, என்றும், 'கங்குல்' வாணர்தம் கடன் இறப்பதே,' என்பது, 'அரக்கரால் விலக்கத் தக்கவள் ஆயினாய்' என்றும் கூறி அவளை அச்சுறுத்தும் கருத்தின.

பிணவை, பெண்மைப்பெயர். எனவே, பெண் புலியைக் குறிப்பதாயிற்று. பிணவு என்பதின் ஈற்று உகரம் திரிந்து

பிணவை, என நின்றது. ஐயை வேற்றுமை உருபாகக் கொண்டால் கலையோடு கூட்டி, 'பிணவை கலையை அன்பினால் நயப்பதே' என்றுங் கொள்ளலாம்.

இச் செய்யுள் எடுத்துக்காட்டு உவமைக்கு, நல்ல உதாரணமாகும்.

12. வார டாவுனக் கியாது தானர்தம் மகள
டுக்குமோ வான மாதர்தோள்
சேர டாமலைந் துயிரை மெய்யினைத் தின்று
தேவரூர் சேரு விப்பன்யான்
போர டாதுனோ டாளி யேறுபுன் பூஞை
தன்னுடன் பொரநி னைக்குமோ
பார டாவெனாண் மைய ரக்கர்கைப் பட்ட
போதில்யார் பாரில் வைகினார்?

[வார்(வா) அடா! உனக்கு யாதுதானர் தம் மகள் அடுக்குமோ! வானம் மாதர் தோள் சேர் அடா, மலைந்து உயிரை, மெய்யினை தின்று தேவர் ஊர்சேருவிப்பன் யான், போர் அடாது உனோடு: ஆளி ஏறுபுல் பூஞை தன்னுடன் பொர நினைக்குமோ! பார் அடா: என் ஆண்மையை, அரக்கர் கை பட்டபோதில் யார் பாரில் வைகினார்.]

**விளக்கம்:—** தங்கையைச் சினந்த அரக்கன் வீமனை நோக்கி வீர வாதம் செய்ததைக் கூறும் இது. வா (ர்) அடா-அடே, போருக்கு வா. (ரகரமெய் எதுகை நோக்கி வந்தது). யாது தானர் தம் மகள்- இராக்கதப் பெண், (யாதுதாநர்: வடசொல்) (யாது என்ற ஒரு பெயருடைய இராக்கதர்). அடுக்குமோ - பொருந்துமோ,

மலைந்து, மெய்யினை தின்று உயிரை தேவர் ஊர் யான் சேருவிப்பன், (அப்பொழுது நீ) வானமாதர்தோள் சேர் அடா,— என்று அன்வயிக்க. போரில் பட்டவர் வீர சுவர்க்கம் அடைந்து தேவ மாதரை அணைவர், என்பது நூல் மரபு.

உ(ன்)னோடு போர் அடாது - மனிதனாகிய உன்னோடு போர் செய்தல் எனக்குத் தக்கதாகாது. புல் பூனை தன்னுடன் ஆளியேறு பொர நினைக்குமோ! ஆளியேறு - ஆண் சிங்கம். இது எடுத்துக்காட்டுவமை.

'அரக்கர் கையில் அகப்பட்ட பொழுது உலகில் யார் உயிருடன் இருந்தார்,' என்பது, எவரும் உயிருடன் இருந்ததில்லை என்ற வேறுபொருள் தருவதால், **வேற்றுப் பொருள் வைப்பணி** யாகும்.

அடா, இகழ்ச்சிக் குறிப்பினதான இடைச் சொல்.

### போரில் இடிம்பன் மடிதல்

13. என்று சீறிமற் றிவன டுத்தல்கண் டிணையி
 லாவிறற் றுணைவர் நால்வரும்
நின்ற யாயுமற் றொருபு றத்திலே நிற்க
 மையல்கூர் நிருத வல்லியும்
வென்றி நல்குமா வந்த விந்தைபோல் விழிப
 ரப்பமேல் வீம சேனனும்
சென்று கைகளாற் பற்க ணாவுடன் சிதற
 வாயினிற் சென்று குத்தினான்.

[என்று சீறி மற்று இவன் அடுத்தல் கண்டு இணை இலா விறல் துணைவர் நால்வரும், நின்ற யாயும் மற்று ஒரு புறத்திலே நிற்க, மையல் கூர் நிருதர் வல்லியும் வென்றி நல்குமா(று) வந்த விந்தைபோல் விழி பரப்ப, மேல் வீமசேனனும் சென்று கைகளால் பற்கள் நாவுடன் சிதற வாயினில் சென்று குத்தினான்.

**விளக்கம்:—**மற்று : அசை. இவன் அடுத்தல் கண்டு இடிம்பன் (தன்னை) நெருங்கல் கண்டு. நின்ற யாயும் - (கலங்கி) நின்ற அன்னையாகிய குந்தியும். மற்று - வேறு (ஒரு பக்கத்தில் ஒதுங்கி நிற்க). நிருதவல்லி - இடிம்பி. வென்றி நல்குமா வந்த விந்தை - வெற்றி தரும்படி வந்த வீர இலக்குமி. விழி பரப்ப - கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு நிற்க. மேல் சென்று - எதிர்த்துச் சென்று (அருகில்) சென்று பற்கள் நாவுடன் சிதற வாயில் குத்தினான், என்க.

அன்னையும் பாண்டவர்களும் ஒருபுறம் நிற்கவும், இடிம்பி வீர இலக்குமிபோல் பார்த்துக்கொண்டு நிற்கவும், வீமன் தன்னை நெருங்கிய அரக்கனை எதிர்த்துச் சென்று, அவனை நெருங்கிப் பற்களும் நாவும் சிதறும்படி வாயில் குத்தினான் என்பது பொருள்.

அரக்கன் தன்னைப் பழித்தபடியால், வாயில் குத்தினானா யிற்று. ''வென்றி நல்குமா விந்தைபோல் நின்றாள்,'' என்றது தற்குறிப்பேற்றம்.

14. குத்தி னானிவன் குணப வல்சிதன் கூர்ந
கக்கரங் கொண்டு வீமன்மேல்
மொத்தி னான்முனைந் திருவ ரும்பொறார் முரணு
டன்சினம் மூள மூளவே
தத்தி னார்பிடுங் கியம ரங்களாற் சாடி
னார்புயச் சயில மொன்றொ டொன்(று)
ஒத்தி னாரிரண் டம்பு தங்கள்வா னுருமெ
றிந்ததொத் தோசை விஞ்சவே.

[குத்தினான் இவன், குணபம் வல்சி தன் கூர் நகம் கரம் கொண்டு வீமன்மேல் மொத்தினான், முனைந்து இருவரும் பொறார் முரணுடன் சினம் மூளமூளவே, தத்தினார்; பிடுங்கிய மரங்களால் சாடினார்; புயம் சயிலம் ஒன்றொடு ஒன்று ஒத்தி னார் இரண்டு அம்புதங்கள் வான் உரும் எறிந்தது, ஒத்து ஓசை விஞ்சவே.]

**விளக்கம்:**—இவன் (வீமன்) குத்தினான். குணப வல்சி - பிணத்தை உணவாகக் கொள்ளும் இடிம்பன், (குணபம் - பிணம். வல்சி - சோறு). இருவரும் (மனம்) பொறார் (ஆய்) முனைந்து முரணுடன் சினம் மூளமூளத் தத்தினார்,—என்று அன்வயிக்க. முனைந்து - ஊக்கம் மிகுந்து. முரணுடன் - வலிமையோடு. தத்தினார் - ஒருவர்மேல் ஒருவர் பாய்ந்து தாக்கினார்கள்.

இரண்டு அம்புதங்களை வான் உரும் எறிந்தது ஒத்து ஓசை விஞ்ச புயம் சயிலம் ஒன்றொடு ஒன்று ஒத்தினார்,—என்று அன்வயிக்க. அம்புதம் - மேகம். உரும் - இடி. எறிந்தது ஒத்து . இடித்ததை ஒத்து. புயச் சயிலம் - மலை போன்ற தோள்கள். ஒத்தினார் - (ஒன்றோடொன்று சேரும்படி) தாக்கினார்கள்.

அம்புதம் : நீரைக் கொடுப்பது, எனவே மேகம். ஏகாரங்கள் அசை. குணபம், அம்புதம்,—வட சொற்கள்.

15. வளர்ந்த திண்கருங் குன்று காந்தளை மலர்வ
தென்னவே வான கம்படக்

கிளர்ந்த செம்புணீர் பொசியு மெய்யினன் கேத
நெஞ்சினன் கோத வாய்மையான்
தளர்ந்து வீழ்நிசா சரனு மாடகன் றன்னை
யொத்தனன் பின்னை முன்னுறப்
பிளந்த கோளரி தன்னை யொத்தனன் பிரதை
யென்னுமின் பெற்ற காளையே.

[வளர்ந்த திண் கரும் குன்று காந்தளை மலர்வது என்னவே வானகம் லட கிளர்ந்த செம் புண் நீர் பொசியும் மெய்யினன். கேதம் நெஞ்சினன், கோத வாய்மையான். தளர்ந்து வீழ் நிசா சரனும் ஆடகன் தன்னை ஒத்தனன், பின்னை முன் உற பிளந்த கோளரி தன்னை ஒத்தனன், பிரதை என்னும் மின் பெற்ற காளையே.]

**விளக்கம்:—** வளர்ந்த - ஓங்கி வளர்ந்த. காந்தளை மலர்வது என்ன - செங்காந்தள் (தன்னிடத்தே) பூக்கப் பெற்றது போல, ஒன்றன் வினையை மற்றொன்றின்மேல் (ஏற்றி)க் கூறும் உபசார வழக்கு. செம்புண் நீர் பொசியும் வானகம்பட கிளர்ந்த மெய்யினன் - ரத்தம் வழியப் பெற்ற வானை எட்டும்படி வளர்ந்த உடலை உடையவன். கேதம் - துன்பம். கோத வாய்மையான் - பழுது பட்ட வாய்ச் சொல்லை உடையவன். (இத் தன்மையினனாய் தளர்ந்து தரை வீழ்ந்த நிசாசரனும்) ஆடகன் தன்னை ஒத்தான் - இரணியனை ஒத்தான். பின்னை- பின்னர். பிரதை என்னும் மின் பெற்ற காளை - வீமன். மின் - (ஆகுபெயர்) பெண். பிரதை என்பது குந்தியின் பெயர்களில் ஒன்று. கோளரி - நரசிங்க மூர்த்தி. முன் பிளந்த கோளரி - இரண்யனை முன்னே பிளந்த நரசிங்க மூர்த்தியை (வீமன் ஒத்தான்).

குருதி வழியும் நிசாசரன், செங்காந்தள் பூக்கப் பெற்ற குன்று எனப்பட்டான். 'கோத' என்பது, கோது என்னும் பகுதியின் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். 'வீமனைக் கொல்வேன்' என்ற சொல் வீணானமையின் 'கேத வாய்மையான்,' ஆயினான். ஏகாரங்கள், அசை,

## குந்தியும் மக்களும் மகிழ்தல்

### கலிவிருத்தம்

16. வன்றிற லிடிம்பனை வயக்கை யாலுடல்
ஒன்றிரண் டாகுமா றுடன்ற மைந்தனை
அன்றுகண் டனளியா யரியின் பேடுதன்
கன்றுதிண் கரிபொரக் கண்ட தென்னவே.

[வல் திறல் இடிம்பனை வயம் கையால் உடல்ஒன்று இரண்டு ஆகுமாறு உடன்ற மைந்தனை அன்று கண்டனள் யாய், அரியின் பேடு தன் கன்று திண் கரியை பொர கண்டது என்னவே.]

**விளக்கம்:**—(வன்திறல் இடிம்பனை...உடன்ற (பிளந்த) மைந்தனை (அன்று, யாய், அரியின்பேடு, தன் கன்று திண் கரி பொரக் கண்டது என்ன, கண்டனள். அன்று - (அரக்கனைக் கொன்ற) அப்பொழுது. அரியின் பேடு - பெண் சிங்கம். தன் கன்று - தனது குட்டி. கன்று : இளமைப் பெயர்.

17. இளைஞருந் தம்முனு மிவன ரும்பகை
களைகுவ னினியென கண்க ளித்தனர்
விளைவுறு காதலான் மெலிந்த பாவையும்
உளைவுட னுவகையு மொருங்கி னெய்தினாள்.

[இளைஞரும் தம் முனும் இவன் அரும்பகை களைகுவன் இனி என கண் களித்தனர், விளைவுறு காதலால் மெலிந்த பாவையும் உளைவுடன் உவகையும் ஒருங்கின் எய்தினாள்.]

விளக்கம்:—அரக்கன் அழிந்தது கண்டு இனி இவன் அரும் பகை களைவான் என்று பாண்டவர் நால்வரும் கண் களித்தனர். இடிம்பியும் வருத்தத்தோடு மகிழ்ச்சியையும் ஒருசேர அடைந் தாள்.

வளர்வுறு காதல் - மேல் மேலும் வளர்ந்து வருத்தும் காதல் நோய், உளைவு-(தமையன் இறந்ததால் உண்டான) வருத்தம். உவகை-வீமனை மணக்க இடையூறு இல்லாமையால் எழுந்த மகிழ்ச்சி, உளைவை முன்னும், மகிழ்ச்சியைப் பின்னும் வைத் துக் கூறியது, உளைவு அகலக் காதலே நிலைத்து நின்றது. என்று குறிப்பிக்கும் கருத்தது.

## சூரியோதயம்

18\. பெருந்திற னிசாசரப் பிணத்தை யவ்வனத்(து)
இருந்துள பறவைகட் கிருள்செய் கங்குலின்
விருந்திடக் கொளுத்திய விளக்கெ னும்படி
அருந்திசை பொலிவுற வருக்கன்
றோன்றினான்.

[பெரும் திறல் நிசாசரன் பிணத்தை அ வனத்து இருந்துள்ள பறவைகட்கு இருள் செய் கங்குலின் விருந்திட கொளுத்திய விளக்கு எனும்படி அரும் திசை பொலிவு உற அருக்கன் தோன்றினான்.]

**விளக்கம்:—** அவ்வனத்தில் தங்கி வாழும் பிணந் தின்னிப் பறவைகளுக்கு இருண்ட இரவில் விருந்து இடுவதற்காக ஏற்றிய விளக்கு என்று சொல்லும்படி கிழக்குத் திசை விளக்கம் அடையும் படி சூரியன்தோன்றினான், என்க. இது, தற்குறிப் பேற்றம் ஆகும்.

சூரியோதயத்திற்கு உரிய திசையாதலின், அருந்திசை எனப் பட்டது.

19\. கரங்களா னிசாசர விருளைக் காய்ந்து கொண்(டு)
இரங்கிநீள் வனத்திடை யிரவின் மாழ்கிய
வரங்கொடா மரைமுக மலர்த்து நீர்மையால்
உரங்கொள்வீ மனுக்கெதி ருதய பானுவே.

[கரங்களால் நிசாசர இருளை காய்ந்து கொண்டு இரங்கி நீள் வனத்திடை இரவின் மாழ்கிய வரம் கொள் தாமரை முகம் மலர்த்தும் நீர்மையால் உரம் கொள் வீமனுக்கு எதிர் உதய பானுவே.]

**விளக்கம்:—** உதித்த சூரியன் வீமனை ஒத்தான் என்று சிலேடையின் துணையினால் கூறும் நயத்தது இச் செய்யுள்.

வீமன் கரங்களால் அரக்கனாகிய இருளைக் காய்ந்தான். சூரியன் கிரணங்களால் மிகுந்த இருளைக் காய்கின்றான். கரம்- கை, கிரணம். காய்தல்-அகற்றல், அழித்தல்.

**வீமன்,** நீள் வனத்திடை இரவில் (போரின் முடிவு என்ன வாகுமோ என்று) இரங்கி மாழ்கிய (தவித்து வாடிய) (குந்தி

தருமன் முதலியோரது) மேன்மையுற்ற தாமரை மலர் போன்ற முகத்தை (வெற்றியால்) மலரச் செய்தான். சூரியன் நீள் வனத்தில் (நீர் நிலையில்) இரவில் வருந்தி வாடிய மேன்மையுற்ற தாமரையை முகம் மலரச் செய்கின்றான். எனவே உதயபானு வீமனை ஒத்தவனாகின்றான். வரங்கொள்- மேன்மையுற்ற, சிறந்த. உரங்கொள் - வலிமை கொண்ட, காய்ந்து கொண்டு, என்பதிலுள்ள கொண்டு, என்பது அசை நிலை. வனம் என்பது காடு, நீர் நிலை என்ற பொருள்களை உடையது.

## இடிம்பியை மணக்கக் குந்தி அனுமதித்தல்

20. எண்டகு கவர்மனத் திடிம்பை மன்மதன்
மண்டெரி சுடுதலின் வாடு மேனியள்
கொண்டவெங் காதலின் குறிப்பை யவ்வழிக்
கண்டனன் காணலற் செற்ற காளையே.

[எண் தகு கவர் மனத்து இடிம்பை மன்மதன் மண்டு எரி சுடுதலின் வாடும் மேனியள் கொண்டவெம் காதலின் குறிப்பை அ வழி கண்டனன், காணலன் செற்ற காளையே.]

**விளக்கம் :—**எண் தகு - எண்ணிப் பார்க்கும் தகுதி உடைய, கவர் மனத்து இடிம்பை - சந்தேகத்தால் அலைக்கப் பெறும் மனத்தினளான இடிம்பை. மன்மதன் மண்டு எரி சுடுதலின் - மிகு கின்ற காமக்கனல் சுடுதலினால், அவ்வழி-அப்போது. காணலன்- பகைவன், இடிம்பன். காமத்தால் வாடிய மேனியளான இடிம்பையின் காதற் குறிப்பை வீமன் கண்டான், என்க.

வீமன் தன்னை ஏற்பானோ. மறுப்பானோ என்ற சந்தேகத் தால் சஞ்சலமுற்ற மனத்தினள், என்பதைக் 'கவர்மனத்து இடிம்பை', என்பதால் குறித்தபடி.

21. மாய்ந்தவன் றுணைவிகேள் வதுவை யின்னமும்
ஏய்ந்தில னெம்முனும் யாங்கண் மானிடர்
ஆய்ந்துகொண் முறைமையா லரக்கர் பாவைநீ
காய்ந்தமை யறிதிமுன் கணையி ராமனே.

[மாய்ந்தவன் துணைவி கேள், வதுமை இன்னமும் ஏய்ந்திலன் எம்முனும், யாங்கள் மானிடர், ஆய்ந்து கொள்

முறைமையால். அரக்கர் பாவை நீ காய்ந்தமை அறிதி, முன் கணை இராமனே.]

**விளக்கம்:—** மாய்ந்தவன் துணைவி: இறந்த தமயனுக்கு வருந்த வேண்டிய நீ என்னை மணக்க நினைப்பது தகாது, என்று கூறும் குறிப்பினது. எம்முனும் வதுவை ஏய்ந்திலன்: மூந்தவனுக்கு முன் இளையவன் மணக்கலாகாது. என்ற தர்ம சாஸ்திர விதியை எடுத்துக் காட்டியபடி. இராமன் காய்ந்தமை அறி: அரக்கப் பெண்ணை மானிடர், மணக்கலாகாது என்பதை இராமன் சூர்ப்பணகையைக் கடிந்து அகற்றியதால், அறிக, என்று மறுத்தபடி, முறைமையால் ஆய்ந்து கொள்; நான் கூறியவற்றை முறையே ஆராய்ந்து, நீ வந்த வழியே செல்க, என்று கூறும் கருத்தது.

22. ஆசைகொ ளரக்கியோ டனிலன் காதலன்
பேசிய கட்டுரை கேட்ட பெற்றதாய்
ஓசைகொண் மைந்தரோ டுசாவி நண்பினால்
ஏசற வுரைத்தன ளினிமை கூரவே.

[ஆசை கொள் அரக்கியோடு அனிலன் காதலன் பேசிய கட்டுரை கேட்ட பெற்றதாய் ஓசை கொள் மைந்தரோடு உசாவி நண்பினால் ஏசு அற உரைத்தனள் இனிமை கூரவே.]

**விளக்கம்:—** அனிலன் காதலன் - வாயு குமாரனாகிய வீமன். ஓசைகொள் மைந்தர் - புகழ் கொண் மைந்தர், (தருமன் முதலிய நால்வர்). ஏசு அற - குற்றம் நீங்க. இனிமை கூர - இனிமை மிக. வீமனுக்குக் கூறினாள், என்க.

23. மறுத்துரைப் பதுகடனன்று மாந்தருக்(கு)
அறத்திய லார்கணு மமைதல் வேண்டுமால்
உறத்தகு மிவளை நீ யும்முன் வாய்மையால்
கறுத்தவ ருயிர்கவர் காளை யென்னவே.

[மறுத்து உரைப்பது கடன் அன்று மாந்தருக்கு; அறத்து இயல் ஆர்கணும் அமைதல் வேண்டும் (ஆல்), உற தகும் இவளை நீ உம் முன் வாய்மையால், கறுத்தவர் உயிர் கவர் காளை என்னவே.]

**விளக்கம்:—** "கறுத்தவர் உயிர்கவர் காளை, மாந்தர்க்கு மறுத்து உரைப்பது......என்னவே," உரைத்தாள், என்று அடுத்த செய்யுளோடு இயையும்.

ஒன்றை ஒருவர் யாசிக்குங்கால்), மாந்தருக்கு மறுத்துரைப்பது கடமையன்று, என்பது முதலடியின் பொருள். யார் மாட்டும், (நமது சொல்லும் செயலும்) அறத்தோடு ஒத்த தன்மையதாய் அமைதல் வேண்டும், என்பது இரண்டாவது அடியின் பொருள்; (இயல் - தகுதி, ஒத்து).

முன்னவன் சம்மதத்தோடு தம்பி மணக்கலாம் என்பது நூற் கொள்கை ஆதலால், ''உறத்தகும் இவளை நீ உம்முன் வாய்மையால் (வாய் மொழியால்), என்றாள் ஆயிற்று.

'கறுத்தவர் உயிர் கவரீ காளை,' என்று வீமனை அழைத்தது, ''பகைவரை அழித்தல்போல், சரண் அடைந்தவரை ஆதரித்தலும் அறத் தகுதி உடையதே,'' என்று கூறும் குறிப்பினது. உறத்தகும் - மணத்தல் தகும்.

24. அன்னையுந் தம்முனு மறைந்த வாசகம்
முன்னையின் மறையென முடிவிற் சூடினான்
மின்னையு முடன்கொடு போந்து மேவுநீர்
தன்னையுங் கண்டதிற் றுளைந்து தங்கினார்.

[அன்னையும் தம் முனும் அறைந்த வாசகம் முன்னையின் மறையென முடியில் சூடினான், மின்னையும் உடன்கொடு போந்து, மேவு நீர் தன்னையும் கண்டு அதில் துளைந்து தங்கினார்.]

**விளக்கம் :**—முடியில் சூடினான் - ஏற்றான். மின் - (ஆகு பெயர்) இடிம்பை. மேவுநீர் - அங்கே பொருந்திய, அதாவது நீராடற்கு ஏற்ற நீர்நிலை. இச்செய்யுள், அவர்கள் காலைக் கடன்களை முடித்ததைக் கூறும். நீராடலுக்கு உபலக்ஷணம் மற்றைக் கடன்கள். துளைந்து தங்கினார் - ஸ்நானம் செய்து கரையில் தங்கினர்.

### வியாசர் வரல்

25. அத்தினத் தவர்வயி னவல நீக்குவான்
மெய்த்தவப் பழமறை வியாதன் வந்தனன்
பத்தியிற் சிறுவரும் பணிந்து போற்றினார்
முத்திபெற் றவரினு முந்துஞ் சிந்தையார்.

[அதினத்து அவர் வயின் அவலம் நீக்குவான் மெய் தவம் பழமறை வியாதன் வந்தனன்; பத்தியின் சிறுவரும் பணிந்து போற்றினார், முத்தி பெற்றவரினும் முந்தும் சிந்தையார்.]

**விளக்கம்:**—அவலம் நீக்குவான் - அவரது துன்பத்தை நீக்கும் பொருட்டு. முத்தி பெற்றவரினும் ஆனந்தத்தால் முந்தி நிற்கும் சிந்தையராய், சிறுவர்களான பாண்டவர்கள், பக்தியோடு (வியாசரைப் பணிந்துப் போற்றினர்,— என்பது ஈற்றடிகளின் பொருள்.

மெய்த்தவம் - ஒழுக்கம் தவறாததும், பயனில் பிழைக்காததுமான சிறந்த தவம், முற்றும் சிந்தையார், என்னும் பாடம் உளது,

26. தனிவன மிகந்துநீர் சாலி கோத்திர
முனிவனஞ் சிலபகல் வைகி முந்துற
மனனுறப் பார்ப்பன மாக்க ளாகிய
இனிமையின் வேத்திர கீய மெய்துவீர்

[தனிவனம் இகந்து நீர் சாலி கோத்திர முனிவனம் சில பகல் வைகி முந்துற, மனன் உற பார்ப்பன மாக்கள் ஆகியே இனிமையின் வேத்திரகீயம் எய்துவீர்.]

**விளக்கம்:**—தனிவனம் - மனித சஞ்சாரம் இல்லாத வனம். இகந்து - விட்டு நீங்கி, கடந்து. முந்துற சாலிகோத்திர முனி வனம் வைகி - முன்னே, (முதலில்) சாலி கோத்திர முனிவன் வாழும் வனத்தில் தங்கியிருந்து, அதன்பின் பார்ப்பன வேடங் கொண்டு வேத்திரகீயம் இனிதே எய்துவீர், என்பது ஈற்றடிகளின் பொருள். மனனுற - சந்தேகங் கொள்ள முடியாதபடி (பார்ப்பன வேடம் பூண்டு.)

துரியோதனாதியரால் துன்பம் ஏற்படாமல் காத்துக் கொள்ளும் பொருட்டு வேஷம் பூணச் சொல்லினன், என்க.

**சாலி கோத்திரவனம் சேர்தல்**

27. எனத்தம படரொழித் திமைய வன்செல
வனத்தைவிட் டவ்வன மருவி வைகினார்
வினைப்படுத் தியாழினோர் முறையின்
வேள்விசெய்
கனக்குழற் கன்னிதன் காத லானொடே.

[என தம படர் ஒழித்து இமையவன் செல, வனத்தைவிட்டு அ வனம் மருவி வைகினார், வினைபடுத்து யாழினோர் முறை யின் வேள்வி செய் கனம் குழல் கன்னி தன் காதலானொடே.]

**விளக்கம்:**—(சாலி கோத்திரவனம் செல்க) என்று கூறித் தங்களுடைய துன்பத்தை அகற்றி வியாசர் செல்ல,—என்பது முதலடியின் பொருள்.

(வியாசர் சென்றபின், தருமன் முதலியோர்) வினைபடுத்து, யாழினோர் முறையின்......காதலனொடே (இடிம்பி) வனத்தை விட்டு (சாலி கோத்திர முனிவன் வதியும்) அந்த வனத்தை அடைந்து அங்கே வசித்தனர், என்க.

வினைப்படுத்து - மேலே செய்யவேண்டிய காரியத்தில் மனம் வைத்து, ஆலோசித்து. யாழினோர் முறை - காந்தர்வ முறை. வேள்வி செய் கனம்குழல் கன்னி - மணம் செய்துகொண்ட மேகம் போன்ற கரிய கூந்தலை உடைய இடிம்பி, (கனம் - மேகம்.) விஷ்ணுவின் அவதார மாதலால், வியாசன், இமையவன் என்று கூறப்பட்டான்.

28. குந்தியை யிரவுநன் பகலுங் கோதிலா
வந்தனை புரிதலின் மகிழி டிம்பையும்
வெந்திறல் வீமனும் விழைந்து வள்ளியும்
கந்தனு மெனப்பெருங் காதல் கூரவே,

[குந்தியை இரவும் நன்பகலும் கோது இலா வந்தனை புரித லின் மகிழ் இடிம்பையும், வெம்திறல் வீமனும் விழைந்து வள்ளி யும் கந்தனும் என பெரும் காதல் கூரவே.]

**விளக்கம்:**—இரவும் பகலும் தன் மாமியாகிய குந்திக்குக் குற்றங்குறை இல்லாதபடி வந்தனை வழிபாடுகளைச் செய்து மகிழ்ந்த இடிம்பையும் வீமனும், வள்ளியும் கந்தனுமெனக் காதல் வளர்ந்து மிக, (மணம் புணர்ந்தனர்) என்க. நன்பகல் - பகற் காலம்.

29. மான்மதங் கமழ்கொடி மந்தி ரந்தொறும்
கான்மணங் கமழ்தடங் காவ கந்தொறும்
தேன்மிகுஞ் சுனை நெடுஞ் சிலம்ப கந்தொறும்
மேன்மணம் புணர்ந்தனர் வேட்கை விஞ்சவே.

[மான்மதம் கமழ் கொடி மந்திரம் தொறும், கான்மணம் கமழ் தடம் கா அகம் தொறும், தேன்மிகும் சுனை நெடும் சிலம்பு அகம் தொறும், மேல் மணம் புணர்ந்தனர் வேட்கை விஞ்சவே.]

**விளக்கம் :—** வீமனும் இடிம்பையும் அந்த வனத்தில் கொடி வீடுகளிலும், சோலைகளிலும், மலையிடங்களிலும் கலவி யின்பத்தை அனுபவித்தார்கள், என்பதை இது கூறும்.

மான்மதம் - கஸ்தூரி மானின் கொழுப்பினால் செய்யப் படும் வாசனைப் பொருள். கொடி மந்திரம் - கொடிவீடு, லதா கிரஹம். கான் மணம் - சிறந்த மணம். தடம் கா அகம் - விசால மான சோலையிடங்கள். தேன்மிகு சுனை நெடும் சிலம்பு அகம் - தேன் மிகுந்த சுனைகளை உடைய பெரிய மலையிடங்கள். மேல் மணம் புணர்ந்தனர் - மேன்மையான புணர்ச்சி யின்பத்தை அனு பவித்தனர்.

### மகன் பிறத்தல்

30. நிறந்திக ழிருட்பிழம் பென்ன நீண்டறப்
புறந்தரு முரோமமும் பொருப்புத் தோள்களும்
மறந்தரு கனைக்குரல் வாயு மாகவே
பிறந்தனன் கடோற்கச னென்னும் பேரினான்.

[நிறம் திகழ் இருள் பிழம்பு என்ன நீண்டு, அற புறம் தரும் உரோமமும், பொருப்பு தோள்களும், மறம் தரு கனை குரல் வாயும் ஆகவே, பிறந்தனன் கடோற்கசன் என்னும் பேரினான்.]

**விளக்கம்:—** அற புறம் தரும் உரோமமும்......வாயும் ஆகவே, நிறம் திகழ் இருள் பிழம்பு என்ன நீண்டு, கடோற்கசன் என்னும் பேரினான் பிறந்தனன், என்று அன்வயிக்க.

அற - மிகுதியாக. புறம் - முதுகில், தருஉரோமம் - பொருந் திய மயிர்ச் செறிவு. மறம் தரு கனை குரல் வாய் - வலிமையைத் தெரிவிக்கும் பேரொலி செய்கின்ற குரலையுடைய வாய். நிறம் திகழ் இருள் பிழம்பு என்ன - கருமை விளங்குகின்ற இருளின் தொகுதி போல, நீண்டு - நீண்டு வளர்ந்த உருவத்தை உடைய வனாய் பிறந்தனன்.

இவனது கடம் (குடம்) போன்ற தலை, மயிர் இல்லாது இருந்ததனால் 'கடோற்கசன்' என்ற பெயரினன் ஆனான், என்று முதல் நூல் கூறும்.

31. காதிய திறல்நர காசு ரன்றனை
ஆதிவெங் கோலமன் றளித்த வாறுபோல்
மேதினி மதித்தபோர் வீம னல்கிய
சோதியம் புதல்வனுந் தொழுது சொல்லுவான்.

[காதிய திறல் நரகாசுரன்தனை ஆதி வெம்கோலம் அன்று அளித்த ஆறுபோல். மேதினி மதித்த போர் வீமன் நல்கிய சோதி அம்புதல்வனும் தொழுது சொல்லுவான்.]

**விளக்கம் :**—காதிய திறல் - (எல்லோரையும்) தாக்கி அழிக்க வல்ல வலிமை. ஆதி வெம்கோலம் - வெவ்விய ஆதிவராகமூர்த்தி. அன்று அளித்த ஆறுபோல் - முன்னொரு காலத்தில் பெற்றுத் தந்த விதம்போல், (வீமனும் கடோற்கசனை நல்கினான்.)

பிரளயத்தில் மூழ்கியிருந்த பூமியைத் திருமால் வராகாவதாரம் செய்து தனது கோட்டினால் தூக்கியெடுத்தபொழுது, திருமாலின் ஸ்பரிசத்தால், பூமிதேவியினிடம் நரகாசுரன் தோன்றினான், என்பது வரலாறு.

இராக்கதப் பெண்களுக்குப் பிறக்கும் பிள்ளைகள், பிறந்தவுடனேயே, தாயின் வயதின் அளவினதான வளர்ச்சியைப் பெறும்படி சிவபிரான் அவர்களுக்கு வரம் அளித்துள்ளார், என்பர். எனவே, பிறந்தவுடனேயே கடோற்கசன் பாண்டவரைத் தொழுது பேசுவானாயினான்.

32. நிறையுடைத் தந்தையர் நீர்நினைத்தபோ(து)
உறைவிடத் தெய்தியாங் குரைத்த செய்குவேன்.
இறைவரிப் படிவிடை தருகென் றேகினான்
பிறையெயிற் றியாயொடும் பெற்ற பிள்ளையே.

[நிறை உடை தந்தையர், நீர் நினைத்தபோது உறைவிடத்து எய்தி, ஆங்கு உரைத்த செய்குவேன். இறைவர், இப்படி விடை தருக என்று ஏகினான், பிறை எயிற்று யாயொடும் பெற்ற பிள்ளை (ஏ).]

**விளக்கம்:**— நிறை உடை தந்தையர் - குண நிறைவினை உடைய என் தந்தைமார்களே. பிறை எயிற்று யாயொடும் (அவள்) பெற்ற பிள்ளையாகிய கடோற்கசன், எனக்கு "இறைவர் போன்றவர்களே, இந்த விதமாக விடை தருக," என்று வேண்டி, அவ்விடம் விட்டுச் சென்றான் என்பது, சற்றடிகளின் பொருள்.

'மகன் பிறந்ததும் வீமனை விட்டுச் செல்ல வேண்டும்,' என்ற ஏற்பாட்டின்படி, இடிம்பை தன் மகனோடு அவள் வாழ்ந்த வனம் சென்றாள், என்று முதல் நூல் கூறும்.

பாண்டவர் பிராமண வேடத்தில் வேத்திரகீயம் அடைதல்

33. சாத்திர மறைதெரி முனிவர் தன்மையின்
காத்திர மாறியக் காவல் வேந்தரும்
கோத்திரஞ் சூத்திரங் குடியு ரைத்துளார்
வேத்திர கீயமா நகரின் மேயினார்.

[சாத்திரம் மறை தெரி முனிவர் தன்மையின் காத்திரம் மாறி, அ காவல் வேந்தரும், கோத்திரம், சூத்திரம் குடி உரைத்துளார் வேத்திர கீய மாநகரின் மேயினார்.]

**விளக்கம்:**—காவல் செய்யும் தொழிலுக்குரிய அரசர்களாகிய அப் பஞ்சபாண்டவர்களும், சாத்திரங்களையும் வேதங்களையும் அறிந்த அந்தணர் தன்மையில் காத்திரம் (உருவம்) மாறி, கோத்திரமும் சூத்திரமும் குடிப்பெயரும் கற்பித்துக் கூறிக்கொண்டு, வேத்திரகீய மாநகரினைச் சேர்ந்தார், என்பது பொருள்.

கோத்திரம், — காச்யபம், பாரத்வாஜம், ஆத்திரேயம் போல்வன. சூத்திரம்,—ஆச்வலாயநம், ஆபஸ்தம்பம் போல்வன. குடிப்பெயர்,—எம்பார், ஆண்டார் போன்ற வம்சப் பெயர்.

பாண்டவர் போய்ச் சேர்ந்த வேத்திரகீயம், என்பது ஏக சக்ர நகரத்தின் ஒரு பகுதி என்று முதல் நூல் கூறும்.

34. அந்தண ரைவரும் யாயு மந்நகர்
வந்துழி யதிதியர் வரவு காண்டலும்
முந்துபு முந்துபு முகமன் கூறினார்
செந்தழல் வேள்விகூ ராதி தேவரே.

[அந்தணர் ஐவரும் யாயும் அ நகர் வந்துழி அதிதியர் வரவு காண்டலும் முந்துபு முந்துபு முகமன் கூறினார், செம்தழல் வேள்விகூர் ஆதி தேவரே.]

**விளக்கம்:**—செந்தழலினிடத்தே யாகம் செய்வதில் ஊக்கம் மிகுந்தவர்களான பிராமணோத்தமர்கள் ஒருவருக்கு முந்தி ஒருவர் (அதிதியராய் வந்த பாண்டவர்களுக்கு) உபசார வார்த்தை கூறி அவர்களை வரவேற்றனர்,—என்க.

35. நன்மனை வாழ்க்கையி னயந்த சிந்தையான்
மன்மனை யனையதன் மனையி லோர்முனி
தன்மனை யம்மனை தம்பி மாரொடும்
என்மனை வருகென வெதிர்கொண் டேகினான்.

[நல் மனை வாழ்க்கையில் நயந்த சிந்தையான், மன்மனை அனைய தன் மனையில் ஓர் முனி, தன்மனை (தருமனை) அம்மனை தம்பி மாரொடும், என் மனை வருக என, எதிர் கொண்டு ஏகினான்.]

**விளக்கம்:**—நல்மனை... சிந்தையான் ஓர் முனி - சிறந்த இல்லற வாழ்வினை விரும்பிய சிந்தையினனான ஓர் அந்தணன். தன்மனை அம்மனை தம்பிமாரொடும் - தருமனை அன்னை யோடும் தம்பியரோடும். எம்மனை வருகென எதிர்கொண்டு, மன்மனை அனைய தன் மனையில் (அவர்களை அழைத்து) ஏகினான் என்று அன்வயிக்க. மன்மனை - அரச மாளிகை. அனைய தன்மனையில் ஏகினான் - மாளிகை போன்ற தன் மனைக்கு அழைத்துச் சென்றான்.

இயல்புடைய மூவர்க்கும் இல்வாழ்க்கை துணையாதலின், **நல்மனை வாழ்க்கை** எனப்பட்டது. இட வளம், பொருள் வளம் உடைமையின், அப் பார்ப்பனன் மனைக்கு மன்மனை உவமை யாயிற்று.

36. ஒருதினத் தமிழ்தென வுள்ள நாளெலாம்
வருமுறைப் படிவிருந் தாகி வைகினார்
அருநெறிக் கடவுளர்க் கமுத மூட்டுதல்
இருபிறப் பாளருக் கென்றுந் தன்மையே.

[ஒரு தினத்து அமிழ்து என உள்ள நாள் எலாம் வருமுறை படி விருந்து ஆகி வைகினார்; அருநெறி கடவுளர்க்கு அமுதம் ஊட்டுதல், இரு பிறப்பாளருக்கு என்றும் தன்மையே.]

**விளக்கம்:**—ஒருநாள் உணவு பெற்றது போலவே, அங்கே தங்கியிருந்த எல்லா நாள்களிலும், வீட்டுக்கு ஒருநாள் என்று வருகின்ற முறைப்படி விருந்தினராய் (அவர்கள் அவ்வூரில்) தங்கி யிருந்தார்கள், என்பது முதல் இரண்டடிகளின் பொருள்; (அமிழ்து - உணவு).

அருநெறிக் கடவுளர் - பூலோகதேவர் எனப்படும் அந்தணர். (தேசாந்திரிகளாய் வரும் அக்கடவுளுக்கு) உணவு உதவி உண்பித்தல், இரு பிறப்பாளராகிய பிராமணர்களுக்கு என்றுமுளதான இயல்பாகும், என்பது ஈற்றடிகளின் பொருள்.

தேசாந்திரிகளான அந்தணர்களை உண்பித்தல் அந்தணர் இயல்பு, என்ற பொதுப் பொருளால், வருமுறைப்படி விருந்தாகி வைகினர் என்ற சிறப்புப் பொருள் விளக்கப் பெறலின், இது **வேற்றுப் பொருள் வைப்பணியின்** பாற்படும்.

தாய் வயிற்றில் பிறத்தலாகிய இயற்கைப் பிறப்போடு, உபநயனச் சடங்கால் வரும் மறு பிறப்பும் உடைய அந்தணர் இரு பிறப்பாளர் ஆகின்றனர்.

37. பொன்னக ரணுகினார் போல நெஞ்சுறத்
தன்னக ரெனும்படி தாயு மைந்தரும்
இந்நக ரநேகநா ளிருந்த வெல்லையில்
அந்நகர் புரிந்ததோ ராண்மை கூறுவாம்.

[பொன் நகர் அணுகினர்போல நெஞ்சு உற தம் நகர் எனும்படி தாயும் மைந்தரும் இ நகர் அநேக நாள் இருந்த எல்லையில், அ நகர் புரிந்தது ஓர் ஆண்மை கூறுவாம்.]

**விளக்கம் :**—பொன் நகர் - தேவலோகம். நெஞ்சு உற - உள்ளம் மகிழ. தம் நகர் எனும்படி - தங்கள் சொந்த நகரம் என்று சொல்லும்படி. ஆண்மை - ஆண்மைத் தொழில்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

38. மறையு முருவினொ டரிய குருகுல
மகிபர் நெடுவன சரிதராய்
உறையும் வளமனை யுடைய மடவர
லுருகு பிரதைத னுயிரனாள்
குறைவில் பொலிவினள் விரத நெறியினள்
குழுவு நிதியினள் கொடுமையால்
இறையு மொழிவற விருக ணறல்வர
வெரிகொள் கொடியென வினையினாள்.

[மறையும் உருவினொடு அரிய குருகுல மகிபர் நெடு வனம் சரிதராய் உறையும் வளம் மனை உடைய மடவரல், உருகு

பிரதைதன் உயிர் அனாள்; குறைவு இல் பொலிவினள், விரத நெறியினள், குழுவு நிதியினள், கொடுமையால் இறையும் ஒழிவு அற இருகண் அறல் வர, எரிகொள் கொடி என இனையினாள்.]

**விளக்கம் :**—பாண்டவர் மாறு வேடத்தோடு வனவாசம் செய்யும் வாழ்க்கையினராய், (இப்பொழுது) வசித்துவரும் வள மனையை உடைய பெண், கருணையால் இரங்குந் தன்மையுள்ள பிரதையின் (குந்தியின்) உயிர் போன்றவள்; (அவள் மேலும்) அழகி, விரதானுஷ்டானங்களை உடையவள்; (அவள் ஓர் அசுர னால் நேரவிருக்கும்) கொடுமை காரணமாக, சிறிதும் ஓய்வின்றிக் கண்களிலிருந்து நீர் பெருக, எரியுண்ட பூங்கொடிபோல் வருந்தி வாடினாள், என்பது பொருள்.

அறல் - நீர். இனையல் - வருத்தம், துன்பம்; ஈறுகெட்டு 'இனைய' என்றும் நிற்கும்.

39. மறுகி யழுவதென் மொழிக முனிவரன்
மனைவி யெனவிவள் வினவலும்
குறுகி யவளுட னுரைசெய் குவளுறு
குறையை யுளநனி குறையவே
முறுகு சினவனல் பொழியும் விழியினன்
முகனில் பகனெனு முரணுடைத்
தறுக ணிசாசர னுளனிவ் வளநகர்
தழுவும் வனனுறை தகுதியான்.

[மறுகி அழுவது என்? மொழிக முனிவரன் மனைவி என இவள் வினவலும், குறுகி அவளுடன் உரை செய்குவள்; உறு குறையை உளம் நனி குறையவே; முறுகு சினம் அனல் பொழியும் விழியினன், முகன் இல் பகன் எனும் முரண் உடை தறுகண் நிசாசரன் உளன், இ வளநகர் தழுவும் வனன் உறை தகுதியான்.]

**விளக்கம்:**—முனிவரன் மனைவி, மறுகி அழுவது என்? மொழிக என இவள் (குந்தி) வினவலும், (அம்மனையுடையாள், குந்தியின்) அருகு வந்து, உறு குறையைக் (கேட்போர்) மனம் மிகவும் மெலியும்படி அவளுடன் (அக் குந்தியுடன்) உரை செய்கு வாள்; முறுகு சினத்தீ பொழியும் விழியினன், முகன் இல் பகன் எனும் முரணுடைத் தறுகண் அரக்கன், இவ்வளநகர் தழுவும் வனன் உறையும் உரிமையுடையவனாய் இருக்கின்றான்,— என்பது பொருள்.

மறுகி - கலங்கி. முறுகுசினம் - மிகுகின்ற சினம். முகன் இல்- (முகல் இல்) கண்ணோட்டம் இல்லாத. தறுகண் - வன்மை, கொடுமை. வனன் - வனம்.

40. அருளி லிதயமு நெறியில் சரிதமு
மழகி லுருவமு மதிர்குரல்
பொருளி லுரைகளு முடையன் முழுதுடல்
புலவு கமழ்தரு பொறியினன்
மருளு நரியொடு கழுகு தொடர்தர
வலிய பிணநுகர் சுவையறா(து)
இருளின் மிசையிரு பிறைக ளெனவளை
யெயிறு நிலவெழு மிதழினான்.

[அருள் இல் இதயமும், நெறி இல் சரிதமும், அழகு இல் உருவமும், அதிர் குரல், பொருள் இல் உரைகளும் உடையன். முழுது உடல் புலவு கமழ்தரு பொறியினன், மருளும் நரியொடு கழுகு தொடர்தர. வலிய பிணம் நுகர் சுவை அறாது இருளின் மிசை இரு பிறைகள் என வளை எயிறு நிலவு எழும் இதழினான்]

**விளக்கம்:**—அருள் இலி, ஒழுக்க ஹீனன், விகார வடிவினன், அதிரும் குரலையும் பொருள் இல் உரைகளையும் உடையவன், உடல் முழுதும் புலவு வீசும் (இரத்தம், தசை முதலியவற்றை உடலில்) அடையாளமாகக் கொண்டவன்,-என்பது முதலிரண்டு அடிகளின் பொருள்.

கண்டார் மனத்தை மருளச் செய்யும் நரிகளோடு கழுகுகளும் தொடர்ந்துவர, பிணம் நுகர் வலிய சுவை நீங்காது, இருள் மிசை இரு பிறை என வளைந்த எயிறுகள் ஒளிவீசும் இதழினான்.— என்பது ஈற்றடிகளின் பொருள்.

''பிணம் நுகர் சுவை அறாது'' என்பது, ''பிணத்தின் சுவையை மேன்மேலும் அனுபவிக்க வேண்டுமென்னும் வேட்கை மிகுந்த,'' என்ற பொருளது. கரிய உருவத்தில் தோன்றும் வெள்ளிய கோரைப் பற்களுக்குப் பிறை உவமை ஆயிற்று,

41. அந்த கனுமிக வஞ்சி முதுகிடு
மந்த நிசிசர னிந்தவூர்
வந்து குடியொடு கொன்று பலரையு
மன்ற மறுகிடை தின்றநாள்

எந்தை முதலிய வந்த ணருமவ
னிங்கு வருதொழி லஞ்சியே
சிந்தை மெலிவுற நொந்து தலைமிசை
சென்று குவிதரு செங்கையார்.

[அந்தகனும் மிக அஞ்சி முதுகு இடும் அந்த நிசிசரன் இந்த ஊர் வந்து குடியொடு கொன்று பலரையும் மன்ற மறுகிடை தின்ற நாள், எந்தை மெலிவு உற நொந்து, தலைமிசை சென்று குவிதரு செம்கையார்,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம்:**—அந்தகன் - எமன். முதுகிடல் - பின்வாங்கல் தோற்று ஓடல். ஊர் வந்து பலரையும் குடியோடும் மறுகிடை தின்ற நாள், என்று கூட்டுக. குடியோடும் - குடும்பத்துடன். மறுகிடை-வீதிகளில். மன்ற: இடைச் சொல், மிகுதிப்பொருளது. வருதொழில் - வந்து செய்யும் கொலைத் தொழில். தலைமிசை சென்று குவிதரு செங்கை - கைகூப்பித் தொழும் கை. மறுகிடை தின்ற : வலிமிகாமை சந்தம் நோக்கி, என்க.

42. ஒன்று படவெதிர் கொன்று பலருயி
ருண்ப தறநெறி யன்றுநீ
இன்று முதலினி யென்று முறைமுறை
யெங்கண் மனைதொறும் விஞ்சையோர்
குன்ற மெனவொரு பண்டி யறுசுவை
கொண்ட வடிசிலு நங்குலம்
துன்று நரபலி யொன்று மிவைதிறை
தொண்டு புரிகுவ மென்றலும்.

[ஒன்றுபட எதிர் கொன்று பலர் உயிர் உண்பது அற நெறி அன்று நீ, இன்று முதல் இனி என்றும் முறை முறை எங்கள் மனை தொறும் விஞ்சையோர் குன்றம் என ஒரு பண்டி அறுசுவை கொண்ட அடிசிலும், நம் குலம் துன்னும் நர பலி ஒன்றும், இவை திறை, தொண்டு புரிகுவம் என்றலும் — அடுத்த கவியில் முடியும்]

**விளக்கம் :**—நீ. (எமது) எதிர் பலர் உயிர் ஒன்றுபட கொன்று உண்பது அற நெறி அன்று,—என்று கூட்டுக. முறை முறை எங்கள் மனைதொறும் - வரிசைக் கிரமப்படி நாளுக்கு ஒருவீடாக (ஏற்பாடு செய்து) விஞ்சையோர் குன்றம் என - வித்தியாதரர் வாழும் குன்றம் என்று சொல்லும்படி. பண்டி அறுசுவை

கொண்ட அடிசிலும் - வண்டி நிறைய அறுசுவையுடைய சோறும். நங்குலம் துன்று நரபலி ஒன்றும் - எங்கள் குடும்பத்தைச் சேர்ந்த நரபலி ஒன்றும். இவை திறை - ஆகிய இவற்றை திறையாகச் செலுத்தி. (உனக்குத் தொண்டும் செய்வோம்.)

"நாளுக்கு ஒரு வீடாக முறை செய்து கொண்டு வண்டி சோறும் நரபலியும் தந்து, அடிமைத் தொழிலும் செய்வோம்," என்று கூறி அரக்கனை அவ்வூரார் சாந்தப் படுத்தினர், — என்பது கருத்து.

தேவகணம் பதினெட்டில் வித்யாதரர் ஒரு வகையினர். வெள்ளிமலை அவர் வாழும் இடம் என்று **சிந்தாமணி** கூறும்.

43. அன்று முதலடல் வஞ்ச கனுமிறை
யன்பி னொடுபெறு வன்பினால்
என்று நிலைபெற வுண்டி யுடன்மனை
யெங்கு மிடுபலி யெஞ்சுறத்
தின்று திரிகுவ னின்றென் மனைமுறை
சென்று பணிகவர் திங்கள்போல்
நின்று தளர்வுறு கின்ற தெனதுயிர்
நெஞ்ச மிலதொரு தஞ்சமே.

[அன்று முதல் அடல் வஞ்சகனும் இறை அன்பினொடு பெறு வன்பினால், என்றும் நிலைபெற வண்டியுடன் மனை எங்கும் இடு பலி எஞ்சுற தின்று திரிகுவன், இன்று என்மனை முறை: சென்று பணிகவர் திங்கள் போல் நின்று தளர்வு உறுகின்றது எனது உயிர்; நெஞ்சம் இலது, ஒரு தஞ்சமே]

**விளக்கம்** :—இறை அன்பினொடு - (எம்பால்) சிறிது கொண்ட அன்பால். பெறு வன்பினால் - (அவன்) பெற்றுள்ள வலிமையினால். என்றும் நிலைபெற - எந்நாளும் நிலையாக அதாவது தவறாமல். எஞ்சுற - ஜனத் தொகை (நாளுக்கு நாள்) குறைந்து ஒழியும்படி. பணி சென்று கவர் திங்கள்போல், —என்று இயைக்க. பணி - ராகு கேது என்னும் பாம்பு. திங்கள் - சந்திரன். இன்று என் மனைமுறை - இன்று எனது வீட்டு முறை. நெஞ்சம் ஒரு தஞ்சம் இலது - எனது நெஞ்சு ஒரு பற்றுக் கோடு இல்லாததாய் இருக்கின்றது.

பணிகவர் திங்கள் அழிவதில்லை. அதுபோல் உயிர் அழிந்து படாமல் துன்பம் உறுதல்பற்றி, அவளுக்குப் பணிகவர் திங்கள்

உவமையாயிற்று. அவன் பெற்ற வலிமையினால், ஒரே நாளில் எல்லோரையுங்கொன்று அழிக்காமல், நாளுக்கு ஒரு வீட்டி லிருந்து பலி பெறுவதால், இறை அன்பினொடு, என்றார்.

44. கன்னி யிவள்பிறர் பன்னி யெனதிரு
கண்ணின் மணிநிகர் சன்மனும்
மன்னு குலமுதல் பின்னை யொருவரு
மண்ணி னுறுதுணை யின்மையால்
இன்னல் பெரிதுள தென்ன புரிகுவ
தென்ன வறிகில னன்னைகேள்
முன்னை மனைநிகழ் தன்ம முனிவனை
முன்னி லிடர்நனி துன்னுமால்.

[கன்னி இவள் பிறர் பன்னீ; எனது இரு கண்ணின் மணி நிகர் சன்மனும் மன்னு குல முதல்; (நானே செல்வதென்றால்) பின்னை ஒருவரும் மண்ணில் உறு துணை இன்மையால் இன்னல் பெரிது உளது; என்ன புரிகுவது என்ன அறிகிலன், அன்னை கேள்; முன்னை மனை நிகழ் தன்மம் முனிவனை முன்னில் இடர் நனி துன்னும் (ஆல்).]

**விளக்கம்:** —"எனது இப் பெண்ணோ வேறொருத்தன் மனைவி. என் கண்ணின் கருமணி போன்ற புதல்வனோ எமது நிலையான வம்சத்திற்கு ஆதாரமானவன். குடும்ப பரிபாலனத் திற்கு உற்ற துணை வேறொருவரும் இல்லாமையால் (நான் பலியாகச் செல்வதில்) இன்னல் பெரிது உளது. மனைக்கு முதன்மையாய் அமைந்து இல்லிற்குரிய தர்மம் நடத்தும் என் கணவனாகிய முனிவனை அனுப்ப நினைத்தலில் எனது துன்பம் மிகுதியாகின்றது. அன்னையே, கேள். என்ன செய்வது என்று அறியாது தவிக்கின்றேன்," என்று அம் மனைக்குரியாள், தன் துன்பத்திற்குப் பரிகாரமில்லாமையைக் குந்தியிடம் கூறினாள், என்றவாறு.

சன்மன் - மகன். பின்னை ஒருவரும் - வேறு ஒருவரும். தன்மம் - தர்மம், இல்லறம். முன்னில் - நினைத்தாலோ. துன் னும் - அதிகமாகும். சன்மன் —(ஜந்மன் - பிறப்பையுடையவன் மகன்.

பகன் வதை

45. ஏத மறவுற வான மனைமகள்
யாவு முறைசெய யாதவன்
தீதில் குலமக ளார்வ முடனவ
டேற வொருமொழி கூறுவாள்.
ஆதி யனுமனொ டோது முவமைய
னாடல் வலியுடை யாண்மையான்
மோதி யிடையிருள் யாம சரிதனை
மூளை யுகவுடல் கீளுமே.

[ஏதம் அற உறவு ஆன மனைமகள் யாவும் உரை செய, யாதவன் தீது இல் குலமகள் ஆர்வமுடன் அவள் தேற ஒரு மொழி கூறுவாள் : ஆதி அனுமனொடு ஓதும் உவமையன், ஆடல் வலி உடை ஆண்மையான், மோதி இடை இருள் யாம சரிதனை மூளை உக உடல் கீளுமே.]

**விளக்கம் :**—ஏதம் அற உறவான மனைமகள் - களங்கம் இல்லாது குந்தியுடன் நட்புறவு கொண்ட பார்ப்பனி. யாதவன் தீதில் குலமகள் - யது குலத்தில் தோன்றிய குற்றமற்ற குலமக ளான குந்தி. ஆர்வமுடன் - அன்போடு. ஆதி அனுமனொடு ஓதும் உவமையன் - பழமையான அநுமானோடு சேர்த்துப் பேசத் தக்க ஒப்புமை உடையவன். ஆடல் வலி உரை ஆண்மையான் - வீரத்தோடு வலிமையும் உடைய ஆண்மையான் : (அவன் என் மக்களில் ஒருவன்). இருள் இடை யாம சரிதன் - இருளை உடைய நடு இரவில் சஞ்சரிக்கும் அசுரன். அவனை, என் மகன் மூளை உக மோதி உடல் கீளும்; அஞ்சற்க, என்று கூறியபடி.

46. கொவ்வை யிதழ்மட நவ்வியலமரல்
குவ்வி னனலினும் வெவ்வியோர்
அய்வ ருளர்சுதர் கைவில் விறலின
ரவ்வி யமுமிலர் செவ்வியோர்
இவ்வி வரிலெமை யுய்வு கொளுமவ
னெவ்வெவ் உலகையும் வவ்வுதிண்
பெளவ மெனநனி தெய்வ முனிவரர்
பையு ளறநெறி செய்வனே.

[சொவ்வை இதழ் மடம் நவ்வி, அலமரல்; குவ்வின் அனலினும் வெவ்வியோர் அய்வர் உளர் சுதர், கைவில் விறலினர், அவ்வியமும் இலர், செவ்வியோர்; இ இவரில் எமை உய்வு கொளும் அவன் எ உலகையும் வவ்வு திண் பௌவம் என நனி தெய்வ முனிவரர் பையுள் அற நெறி செய்வனே.]

**விளக்கம் :—** அலமரல் - கலங்கி வருந்தாதே. குவ்வின் - (கு - பூமி) பூமியில், இவ்வுலகில். அனலினும் வெவ்வியோர் - (பராக்கிரமத்தில்) தீயினும் கடுமையுடையவர். அய்வர் - ஐவர். சுதர் - மக்கள். கைவில் விறலினர் - விற்கலை வல்லவர். அவ்வியம் - பொறாமை. இ இவரில் எமை உய்வு கொள்ளும் அவன் - இத்தன்மையரான ஐவரில் எங்களை உயிருள்ளவராகச் செய்யும் அந்த மகன். எ உலகையும் வவ்வு பௌவம் என நனி தெய்வம் முனிவரர் பையுள் அற நெறி செய்வன் - எல்லா உலகத்தையும் கவரவல்ல கடல்போல, அளவு கடந்து மிகும் தெய்வத் தன்மை பொருந்திய உயர்ந்த அந்தணர்களின் துன்பம் நீங்க வழி செய்வான், (ஏ : தேற்றம்). பையுள் - துன்பம்.

அரக்கு மாளிகையினின்று காத்தவனாதல்பற்றி, 'எமை உய்வு கொள்ளும்' என்றாளாயிற்று. அளவில்லாது மிகுகின்ற தெய்வத் தன்மையுடையவர்கள் ஆதல் பற்றி, பௌவம் என நனி தெய்வ முனிவர் என்றார்.

47. அவனை யிடுபலி யருளு கெனமொழி
யளவின் மறலியு முளைவுறச்
சிவனை வழிபடு மகவை யருளிய
செனக செனனியர் நிகரெனத்
தவனின் முதிர்தரு முனியும் வழுவறு
தனதி லறனுடை வனிதையும்
துவனி யறமன மகிழ்வொ டினிதறு
சுவைகொ ளமுதடு தொழிலராய்.

[அவனை இடு பலி அருளுக என மொழி அளவின், மறலியும் உளைவு உற சிவனை வழிபடும் மகவை அருளிய செனக செனனியர் நிகர் என, தவனில் முதிர்தரு முனியும் வழு அறு தனது இல் அறன் உடை வனிதையும், துவனி அற மனம் மகிழ்வொடு இனிது அறுசுவை கொள் அமுது அடு தொழிலராய், — அடுத்த கவியில் முடியும்.]

**விளக்கம்:**—மறலியும் உளைவு உற - யமனும் வருத்த முறும்படி. "சிவனை வழிபட்ட மார்க்கண்டேயனைப் பெற்ற மிருகண்டு முனிவனும் அவனது பத்தினியும் நிகர் என்னும்படி," என்பது இரண்டாவது அடியின் பொருள். 'ஜநகஜநநீ' என்பதின் தமிழ்த் திரிபு. 'சனக சனனி'. அது மோனை நோக்கி 'செனக செனனி' ஆயிற்று. இல்லறம் என்பது, சந்தம் நோக்கி இலறம் என விகாரப்பட்டது. துவனி அற - அழு குரல் அடங்க. எனது அப்புதல்வனைப் பலியாக அனுப்புக என்றதும், இல்லுடையானும், அவனது மனைவியும் மகிழ்ந்து, உணவு தயாரித்தலில் பொருந்தினர். என்பதாம்.

48. தண்ட ரளமலை வெண்க யிலைமலை
சங்க மலையென நங்கைமார்
மொண்டு சொரிதரு கின்ற வடிசிலு
முந்து கறிகளும் வெந்தபால்
மண்டு நறுநெயொ டந்த விடலையு
மைந்த ரனைவரு முண்டுதம்
பண்டி நிறைவுறு பின்பு பிறிதொரு
பண்டி கெழுமிய பண்டமே.

[தண் தரளம் மலை, வெள் கயிலைமலை, சங்கம் மலை என நங்கைமார், மொண்டு சொரி தருகின்ற அடிசிலும், முந்து கறிகளும், வெந்த பால் மண்டு நறு நெ(ய்)யொடு அந்த விடலையும் மைந்தர் அனைவரும் உண்டு, தம் பண்டி நிறைவு உறு பின்பு, பிறிது ஒரு பண்டி கெழுமிய பண்டம். (ஏ - அசை).

**விளக்கம் :**—தரளமலை, வெள்ளிமலை, சங்கமலை என்று சொல்லும்படி சமைத்துக் குவிக்கப் பெற்ற அன்னத்தை, மடைப் பெண்கள் முகந்து எடுத்து மிகுதியாய் இடுகின்ற அன்னத்தையும் சிறந்த கரி வகைகளையும் காய்ந்த பாலொடும் மிகுதியான மண முள்ள நெய்யொடும், அந்த ஆண் மகனான வீமனும் மற்றை மைந்தரும் உண்டு, தம் பண்டியாகிய வயிறு நிறைவுற்றபின், பண்டம் வேறொரு வண்டியில் நிறைந்தன,—என்பது பொருள்,

வெண்மையும் மிகுதியும் பற்றி அன்னத் திரளுக்கு முத்து - கயிலை - சங்க மலைகள் உவமை ஆயின. முந்து - சிறந்த. விடலை - ஆண்மகன், வீரன். பண்டி - வயிறு, வண்டி. கெழுமிய - நிறைந்தன.

பண்டம் (உணவுப் பொருள்கள்) பிறிதொரு பண்டி கெழுமிய,—என்று இயைக்க,

49. வய்ய முழுதுடை யைய னிளவலும்
வைக லுடன்மனை வைகுவோர்
உய்யும் வகைபுக லையை யுரையினை
யொய்யென் விரைவொடு கைகொளா
வெய்ய பகனுடல் பெய்த குருதியின்
மெய்யை யெழிலணி செய்தனன்
செய்ய மலர்கொடு செய்ய துகில்கொடு
செய்ய கலவையின் மொய்கொடே.

[வய்யம் முழுது உடை ஐயனின் இளவலும் வைகலுடன் மனைவைகுவோர் உய்யும் வகை புகல் ஐயை உரையினை ஒய்யென் விரைவொடு கை கொளா, வெய்ய பகன் உடல் பெய்த குருதியின், மெய்யை எழில் அணி செய்தனன், செய்ய மலர் கொடு செய்ய துகில் கொடு செய்ய கலவையின் மொய் கொடு – (ஏ : அசை).]

விளக்கம்: —வய்யம் (வையம்) முழுதுடை ஐயன் - தருமன். இளவல் - வீமன். 'வைகலுடன்,' என்பதை இரண்டாமடியின் ஈற்றுச் சீரான 'கை கொளா' என்பதோடு சேர்க்க. ஐயை - அன்னையான குந்தி. ஒய்யென் விரைவொடு - மிக விரைவொடு. கை கொளா - ஏற்று. வைகலுடன் - தாமதிக்காமல் பொழு தோடே, (அதாவது பலி செலுத்தும் காலம் கடவாமல்.)

செய்ய மலர் கொடு செய்ய துகில் கொடு, வெய்ய பகன் உடல் பெய்த (பெய்யவிருக்கும், கால வழு) குருதியின் செய்ய கலவையின் மொய் (மிகுதி) கொடு மெய்யை எழில் அணி செய்த னன்,—என்று அன்வயிக்க.

செந்நிறப் பொருள்களால் பலிப் பொருள் அலங்கரிக்கப் படல் வழக்கம். குருதியின் செய்ய கலவையின் மொய் - (இனிப் பகன் உடல் பெய்யப் போகும்) குருதி போன்ற சிவந்த கலவைச் சாந்தின் மிகுதி. தாய் சொல் போற்றும் விரைவொடு, போர் நேர்வதால் எழுந்த களிப்பின் பயனாய விரைவையும் குறித்தற் பொருட்டு 'ஒய்யென் விரைவு' என்று, விரைவைக் குறிக்கும் இரு சொற்கள் வந்தன. 'தருமன் இளவல்,' என்று வீமனை அழைத்

தது, உற்றவிடத்து நல்லோரைக் காக்கும் குணமுடையவன், என்று காட்டும் கருத்தது.

ஈற்றடிகள் தற்குறிப் பேற்றத்தை உட் கொண்டது.

50. துற்ற பலகறி செற்றி யமலைசெய்
துப்பொ ரிமகிரி யொப்பெனச்
சற்று மிடனற மொய்த்த சகடிரு
சக்ர வுருளைக ளுய்க்கவே
உற்ற நிரைநிரை பத்தி படவலி
யொத்த பகடுகள் கட்டினான்
நெற்றி மிசையொரு கொற்ற வடலரி
நிற்ப தெனவொளிர் பொற்பினான்.

[துற்ற பல கறி செற்றி அமலை செய் துப்பு ஓர் இமகிரி ஒப்பு என, சற்றும் இடன் அற மொய்த்த சகடு இரு சக்ர உருளைகள் உய்க்கவே, உற்ற நிரை நிரை பத்திபட வலி ஒத்த பகடுகள் கட்டினான்; நெற்றி மிசை ஒரு கொற்றம் அடல் அரி நிற்பது என ஒளிர் பொற்பினான்.

**விளக்கம்:**— மிகுதி கொண்ட பலவகைக் கறிகளை இடையிடையே இட்டுத் திரளாகக் குவித்த சோறு ஓர் இமய மலையை ஒத்தது என்று சொல்லும்படி,—என்பது முதலடியின் பொருள். அமலை - சோற்றுத் திரள். துப்பு - சோறு. சோற்றுக் குவியல் நிறத்தாலும் தோற்றத்தாலும் இமய மலையை ஒத்ததாயிற்று.

சிறிதும் (வண்டியில்) இடமிலாதபடி ஒழுங்காக வரிசை பொருந்திய வலிமையால் ஒத்த கடாக்களை (அவ் வண்டியில்) (வீமன்) பூட்டினான்.— என்பது, இரண்டு மூன்று அடிகளின் பொருள். பத்தி பட - ஒழுங்காக. நிரை நிரை உற்ற - வரிசை பொருந்திய. பகடு - கடாமாடு.

(பூட்டியபின்) அவ் வண்டியின் முன் பக்கத்தில், வெற்றியுடைய ஓர் ஆண் சிங்கம் நிற்பதுபோல் விளங்கும் பொலிவினன் ஆனான்.

"பத்திபட நிரை நிரை உற்ற பகடுகள் கட்டினான்," என்பது ஜோடி ஜோடியாகப் பல பகடுகளை ஒழுங்காக வரிசையுறக் கட்டினான், என்ற பொருளது. நெற்றி - (வண்டியின் முன் பக்கம்).

இமகிரி - இமயமலை. சகடு - (வடசொல்) வண்டி.

வேறு

51. மண்ட லங்கொள்வடி வுடன டற்பரிதி
மண்ணில் வந்ததென மறுகினிற்
கண்ட கண்டமுனி குலம டங்கவிரு
கண்க ளிக்கவரு காட்சியான்
வெண்ட ரங்கமென வீசுபே யிரதம்
விஞ்சு கானநெறி மீதுபோய்
அண்ட ரண்டமுக டுறவ ளர்ந்தனன
ரக்க னின்றவுழி யறியவே.

[மண்டலம் கொள் வடிவுடன் அடல் பரிதி மண்ணில் வந்தது என, மறுகினில் கண்ட கண்ட முனி குலம் அடங்க இரு கண் களிக்க வரு காட்சியான், வெள் தரங்கம் என வீசு பேய் இரதம் விஞ்சு கானம் நெறி மீது போய், அண்டர் அண்டம் முகடு உற வளர்ந்தனன் அரக்கன் நின்ற உழி அறியவே.]

**விளக்கம்** :- மண்டலம் கொள் - வட்ட வடிவம் கொண்ட. மறுகு- வீதி. முனி குலம் அடங்க - அந்தணர்கள் எல்லோரும். காட்சியான் - தோற்றத்தினனான வீமன்.

வெள்ளிய அலைகள் வீசுவது போன்ற பொய்த் தோற்றத்தையுடைய கானல் மிகுந்த காட்டுவழி சென்று,—என்பது மூன்றாவது அடியின் பொருள். பேய் இரதம் - பேய்த் தேர் (பொய்த் தோற்றம்).

அரக்கன் நின்ற உழி அறிய அண்டர் அண்ட முகடு உற வளர்ந்தனன் - அரக்கன் இருக்கும் இடத்தை அறியும் பொருட்டு, தேவர் வசிக்கும் அண்டத்தின் மேலிடத்தை (அவன் தலை) தொடும்படி நிமிர்ந்தான். இது உயர்வு நவிற்சியின் பாற்படும்.

செந்நிறப் பொருள்களால் அலங்கரிக்கப் பெற்ற வீமனது பருத்த உருவத்திற்குச் சூரிய மண்டலம் உவமை ஆயிற்று. நெடுந்தூரம் ஒளி செலுத்தி இருள் அகற்றுதலால், சூரியனை அடல் பருதி என்றார்.

52. களிந்த வெற்புதவு நீல மாநதிய
டுத்த குன்றிலொரு கழி முழைத்

தெளிந்த பற்களொடு நாவை மென்றுநனி
தின்று வெம்பசிகொ டீயினால்
முளிந்து முற்றுமனம் வேவ வேவநெடு
மூச்செ றிந்துபுகை முகனுடன்
விளிந்த தொத்துவழி குழிய நின்றுசுழல்
விழிநி ரைத்தயரும் வெகுளியான்.

[களிந்தம் வெற்பு உதவு நீலம் மாநதி அடுத்த குன்றில் ஒரு கழிமுழை,.தெளிந்த பற்களொடு நாவை மென்று நனி தின்று வெம் பசி கொள் தீயினால், முளிந்து முற்றும் மனம் வேவ வேவ நெடு மூச்சு எறிந்து புகை முகனுடன் விளிந்தது ஒத்து,— வழி குழிய நின்று, சுழல் விழி நிரைத்து அயரும் வெகுளியான்.]

**விளக்கம் :—**களிந்த வெற்பு - களிந்த மலை. நீல மாநதி - யமுனை. கழி முழை - பெரிய குகை. கொள் வெம் பசி தீயினால் தெளிந்த பற்களோடு நாவை நனி மென்று தின்று - தான் கொண்ட கொடிய பசித் தீயினால், விளக்க முடைய பற்களால் நாவை நன்கு மென்று தின்று கொண்டு. (திறைப்பொருள் வாரா மையால்) மனம் முற்றும் முளிந்து வேவ வேவ - மனம் முழுதும் காய்ந்து மிகவும் கொதிக்க. புகை முகன் - கோபத்தால் புகையும் முகம். விளிந்தது ஒத்து, வழி குழிய நின்று - பூமி அழிந்ததை ஒத்ததான செல்லும் வழி குழிபட நின்று. சுழல் விழி நிரைத்து - சுழலும் விழியை எல்லாப் பக்கத்திலும் செலுத்தி. அயரும் வெகுளி யான் - தன்வசம் இழந்த வெகுளியனாய்,— அடுத்த கவியில் 'உற்று நின்ற நிலை' என்பதோடு சேரும்.

யமுனையின் பிறப்பிடம் களிந்த மலை. எனவே யமுனை யைக் காளிந்தி என்றும் அழைப்பர். அதன் நீரின் நிறம் நீலம். விளிதல் - அழிதல், இயல்பு கெடல். பூகம்பத்தால் நிலம் இயல்பு கெடுவது போல், பகன் செல்வதால் நிலம் இயல்பு கெடுவதா யிற்று, என்க. முளிந்து - காய்ந்து, அழன்று.

வெகுளி கொண்ட அரக்கனது இயல்பு வர்ணனையான இது தன்மை நவிற்சியின் பாற்படும்.

53. வெற்றெ லும்பினுய ராச னந்தனில்
விகங்க நீழலிடை மேவரச்
சுற்றி நின்றுபல சம்பு கங்கடுதி
சொல்ல வல்லன்மிகு துன்முகன்

உற்று நின்றநிலை கண்டு கந்திவனை
யுயிரொ ழிந்திடவு டற்றினால்
இற்றை யுண்டிகெடு மென்று பண்டியிலெ
டுத்த வல்சிநுக ரிச்சையால்.

[வெறு எலும்பின் உயர் ஆசனந்தனில் விகங்கம் நீழலிடை மேவர, சுற்றி நின்று பல சம்புகங்கள் துதி சொல்ல, அல்லல் மிகு துன்முகன்! உற்று நின்ற நிலை கண்டு, உகந்து, இவனை உயிர் ஒழித்திட உடற்றினால் இற்றை, உண்டி கெடும் என்று பண்டியில் எடுத்த வல்சி நுகர் இச்சையால்,—அருந்தினான் என்று அடுத்த கவியில் முடியும்.]

**விளக்கம் :**—வெறு எலும்பு - மாமிசப் பற்றற்ற காய்ந்த எலும்பு. விகங்கம் - கழுகு, பருந்து முதலிய பறவைகள். மேவர- அப்பறவைகள் விரும்பித் தொடரவும், சம்புகங்கள் பல சுற்றி நின்று துதி சொல்ல - நரிகள் பல அவனைச் சுற்றி நின்று ஊளையிடவும். அல்லல்மிகு துன் முகன் - பகன். இற்றை - இப்பொழுது. பண்டியில் எடுத்த வல்சி - வண்டியில் ஏற்றிய உணவு,—நுகரும் இச்சையால், அருந்தினான், என்று முடியும்.

தோளின் தினவு தீர்த்துக் கொள்ள அமையம் நேர்ந்தது பற்றி வீமன் உவந்தானாயிற்று. அரக்கன் தின்று எஞ்சிய மாமிசத்தை விரும்பிப் பறவைகளும் நரிகளும் அவனைச் சூழ்ந்து நின்றன, என்க.

51. வன்பி னாலுரக பதிய ளித்தநெடு
வாரி யாமுத முண்டகோ
முன்பி னாகவுயர் சகடி ருந்தெதிர்மு
கந்து கொண்டுவரை முழையுளே
அன்பி னாலடையு மன்ன மென்னநிறை
யன்ன முற்றவும ருந்தினான்
பின்பி னாகவிது கண்டு வெம்பசிகொள்
பகனு மெய்தியிவை பேசுவான்.

[வன்பினால் உரகபதி அளித்த நெடுவாரி ஆர் அமுதம் உண்டகோ, முன்பின் ஆக உயர் சகடு இருந்து எதிர் முகந்து கொண்டு, வரை முழை உளே அன்பினால் அடையும் அன்னம் என்ன நிறை அன்னம் முற்றவும் அருந்தினான், பின் பினாக இது கண்டு வெம் பசி கொள் பகனும் எய்தி இவை பேசுவான்.]

**விளக்கம் :**—வன்பினால் - தனது வலிமை காரணமாக. உரக பூபதி - சர்ப்ப ராசனாகிய வாசுகி. வாரி - பாற்கடல். அமுதம் உண்டகோ வீமன்.

உயர் சகடில் முன்பின்னாகத் திரும்பி உட்கார்ந்து, வரை முழை உள்ளே அன்பினோடு புகும் அன்னப் பறவைபோல, (வண்டியில்) நிறைந்து இருந்த அன்னம் முழுவதையும் முகந்து கொண்டு (கையினால் அள்ளி எடுத்து) உண்டான், என்பது இரண்டு மூன்று அடிகளின் பொருள்.

பின்னர், வெம்பசிகொள் பகனும், (வீமன் தின்பதாகிய) இச்செயலைக் கண்டு பின்புறம் வந்து இவை பேசுவான், என்பது ஈற்றடியின் பொருள்.

வீமன் வாயினுள் செல்லும் அன்னத் திரளுக்கு மலை முழையில் புகும் அன்னம் உவமையாயிற்று. வண்டியில் வீமன் முன் பின்னாகத் திரும்பியிருந்தபடியால், பகன், அவனுக்குப் பின்னாயினான்.

55. புலித னக்கிடுவி டக்கை நின்றதொரு
பூனை தின்னுமது போலநீ
பலிய னைத்தையும்வி ழுங்கி னாலிதுப
லிக்கு மோவெளிமை பாரெனா
ஒலிப டக்கிரியி லுருமெ றிந்ததென
வோடி வந்துபிட ரோடியவே
வலிப டப்பணைவி றற்ற டக்கைகொடு
மாறி மாறிமுறை சீறினான்.

[புலி தனக்கு இடுவிடக்கை நின்றது ஒரு பூனை' தின்னும் அது போல, நீ, பலி அனைத்தையும் விழுங்கினால் இது பலிக்குமோ, எளிமை பார் எனா, ஒலி படகிரியில் உரும் எறிந்தது என ஓடிவந்து பிடர் ஓடியவே, வலிபட பணை விறல் தடக் கைகொடு மாறி மாறி முறை சீறினான்.]

**விளக்கம் :**—விடக்கு - மாமிசம். இது பலிக்குமோ - (பலியை விழுங்குவதாகிய) இந்தக் காரியம் சித்திக்குமோ! எளிமை பார் - (நீ என்பால்) கருதிய எளிமை எத்தன்மையது என்பதைத்தொழிலால் காட்டுகின்றேன் பார், அதாவது எளியன் அல்லன், வலியன் என்றபடி. வலிபட - வலிமையை (வீமன்)

உணரும்படி, பலமாக முறை மாறி மாறி சீறினான் - முறையே இரு கைகளாலும் மாறி மாறி அடித்துத் தனது கோபத்தைக் காட்டினான்.

56. பக்க மும்பிடரு மொக்க முட்டிகள்ப
டப்ப டக்கவள பாரமாய்
விக்க நின்றனவ யிற்றி ரண்டருகும்
வீழ வீழமுன்வி ழுங்கலும்
புக்க பண்டமுட னுண்ணு டற்றசைபு
சிப்ப னெங்ஙனிவை போவதென்(று)
அக்க டுங்கையுமி ளைத்து வெஞ்சினமு
மாறி நின்றன னரக்கனே.

[பக்கமும் பிடரும் ஒக்க முட்டிகள் படப்பட, கவளம் பாரம் ஆய்விக்க நின்றன வயிறு இரண்டு அருகும் வீழ, வீழ, முன் விழுங்கலும், புக்க பண்டமுடன் உன் உடல் தசை புசிப்பன், எங்ஙன் இவை போவது என்று, அ கடு கையும் இளைத்து வெம் சினமும் ஆறி நின்றனன் அரக்கனே.]

**விளக்கம் :—** பக்கம் - விலாப்புறம். முட்டிகள் - கைக் குத்துக்கள். ஒக்க - ஒரு தன்மையனவாக. படப்பட மிகுதியாக விழவும். கவளம் - கையளவு கொண்ட சோறு. கவள பாரமாய் விக்க நின்றன வயிறு இரண்டு அருகும் வீழவீழ - பருத்த கவளங்களாய் (உள்ளே செல்லாது) விக்கும்படி நின்ற கவளங்கள் வயிற்றின் இரு பக்கங்களிலும் சுலபமாய் விழ, முன் விழுங்கலும் - வேகமாக (வீமன்) விழுங்கலும். (இதைப் பார்த்துக் கொண்டிருந்த) அரக்கன், "உன் வயிற்றினுள் சென்ற பண்டங்களுடன் உன் உடலின் தசையை உண்பேன், இவை எங்கே போகப் போகின்றது?" என்று சொல்லி, (அவனது) அக் கடிய கைகளும் இளைத்து, (அதனால்) வெம் சினமும் ஆறி நின்றான்,—என்பது சற்றடிகளின் பொருள்.

அரக்கன் குத்துவதாகிய தீமையால், கவளம் உட்செல்வதாகிய நன்மை உண்டாவதாகக் கூறுமிது இலேச அணியின் பாற்படும்.

'புக்க பண்டமுடன்... எங்ஙன் இவை போவது' என்றது, உன்னைத் தின்பதால், பலிப் பொருள்களையும் உன்னையும் ஒரே சமயத்தில் தின்றவனாவேன், என்று அரக்கன் தன்னைப் பாராட்டிக் கொள்ளும் கருத்தது.

வி. பா.—21

57. அச்ச கட்டினிலொ ரெட்டு ணைச்சுவடு
மற்ற பிற்சிறிது மச்சமற்(று)
உச்ச முற்றவெயி லர்க்க னொத்திவனொ
டுத்த ரித்துரைசெய் தொட்டினான்.
மெச்சு மெச்சுமுல கத்த ரக்கர்களில்
விக்ரமத்திறலின் மிக்கநீ
கச்ச கச்சபல கத்தை விட்டுனது
கட்டு ரத்தினொடு கட்டுவாய்.

[அ சகட்டினில் ஓர் எள் துணை சுவடும் அற்றபின், சிறிதும் அச்சம் அற்று, உச்சம் உற்ற வெயில் அர்க்கன் ஒத்து இவனொடு உத்தரித்து உரை செய்து ஒட்டினான்; மெச்சும் மெச்சும் உலகத்து அரக்கர்களில் விக்ரமம் திறலின் மிக்க நீ கச்ச கச்ச பலகத்தை விட்டு, உனது கட்டு உரத்தினொடு கட்டுவாய்.]

**விளக்கம் :—** எள் துணை சுவடு - எள்ளளவு அன்னத்தின் அடையாளம். உச்சம் உற்ற வெயில் அரக்கன் - உச்சி அடைந்த சூரியன். இவனொடு - அரக்கனோடு. உத்தரித்து உரை செய்து ஒட்டினான் - தருக்கிக் கீழ் வருமாறு எதிர் விளம்பி நெருங்கினான், அல்லது வீரவாதம் செய்தான். மெச்சும் மெச்சும்-மிகவும் கொண்டாடப்படும். விக்ரமத் திறல் மிக்க - வீரத்தோடு கூடிய வலிமையின் மேம்பாடுடைய. கச்ச கச்ச பல கத்தை விட்டு - வெறுக்கத் தக்க பலதிறப்பட்ட கூச்சலை விட்டு. உனது கட்டு - கச்சுக் கட்டை, இடைக்கட்டை. உரத்தினொடு கட்டுவாய் - இடையிலே நழுவாதபடி நன்றாக இறுகக் கட்டிக்கொண்டு போருக்கு நீ சித்தப்படுவாயாக.

கத்தை - கத்துதலை, பிதற்றலை, பயனில பேசுதலை. 'கச்ச கச்ச' என்பதற்கு 'போ, போ,' என்று பொருள் கொண்டால், "போ, போ, வீண் வார்த்தை பேசாமல், உனது அரைக் கச்சை இறுகக் கட்டிக்கொண்டு உன் திறமையைக் காட்ட வருவாய்," என்று வீமன், அரக்கனுக்குச் சொன்னபடியாகும்.

58. சொல்லி யென்பயன ரக்க னீமனிதன்
யானு னக்குரிய தொழில்களாம்
மல்லி னும்படைவி தத்தி னுஞ்செருவில்
வல்ல வல்லனபு ரிந்துபோர்

வெல்ல நெஞ்சமுள தாகில் வந்துபொரு
விறலி டிம்பனையும் வென்றுனைக்
கொல்ல வந்தனனெ னப்பு கன்றிருகை
கொட்டி மார்பின்மிசை குத்தினான்.

[சொல்லி என் பயன், அரக்கன் நீ, மனிதன் யான்; உனக்கு உரிய தொழில்கள் ஆம் மல்லினும், படை விதத்தினும் செருவில் வல்லன புரிந்து போர் வெல்ல நெஞ்சம் உளது ஆகில், வந்து பொரு: விறல் இடிம்பனையும் வென்று உனை.கொல்ல வந்தனன், என புகன்று (வீமன்) இரு கை கொட்டி (அரக்கன்) மார்பின் மிசை குத்தினான்.]

விளக்கம்:— மல்லினும் - மல் யுத்தத்திலும். படை விதத்தினும் - பல வகைப்பட்ட ஆயுதத் தொழிலிலும். வல்ல வல்லன - நீ பயின்று தேர்ந்த தொழில்களை எல்லாம். நெஞ்சம் உளதாகில் - நெஞ்சுத் துணிவு இருந்தால்.

சொல்லி என் பயன் : வாய்ப் பேச்சில் பயன் இல்லை, தொழிலில் உன் திறமையைக் காட்டு, என்று வீமன் கூறியபடி. கை கொட்டுதல், போர் ஆரம்பத்தின் அடையாளம்.

59. பட்ட வர்த்தனர்கள் பொற்சி ரத்தின்மலர்
பொற் புடைச்சரண பற்பனும்
நெட்டி ருட்சரனும் வெற்பு வெற்பினொடு
நிச்ச யித்துடல நிற்பபோல்
வட்டம் வட்டம்வர வொட்டி யொட்டியுறு
மற்றொ ழிற்செருவின் மட்டியா
முட்டி யுத்த நிலை கற்ற கற்றவகை
முற்றமுற்ற வெதிர் முட்டினார்.

[பட்டம் வர்த்தனர்கள் பொன் சிரத்தின் மலர் பொற்பு உடை சரண பற்பனும், நெடு இருள் சரனும், வெற்பு வெற்பினொடு நிச்சயித்து உடல நிற்ப போல், வட்டம் வட்டம் வர, ஒட்டி ஒட்டி உறு மல் தொழில் செருவில் மட்டியா முட்டி யுத்த நிலை, கற்றகற்ற வகை முற்றமுற்ற எதிர் முட்டினார்.]

விளக்கம் :—பட்டவர்த்தனர் - பட்டாபிஷேகம் செய்யப் பெற்ற அரசர். பொன் சிரம் - அழகிய கிரீடம் அணிந்த தலை. அரசர்களின் பொன்முடி தரித்த தலையின்மேல் மலரும் அழகிய

பாதங்களாகிய தாமரையை உடைய வீமன், — என்பது முதலடியின் பொருள்.

நெடு இருள் சரன் - பெரிய உருவத்தையுடைய நிசாசரனாகிய பகன். வெற்பு வெற்பினொடு உடல (பொர) நிச்சயித்து எதிரெதிர் நிற்பதுபோல், இருவரும் நின்றனர். வட்டம் வட்டம் வர - மண்டல கதியில் இருவரும் சாரி திரிய. மட்டியா - ஆரம்பித்து, முட்டி யுத்தம் - குத்துச் சண்டை, கற்ற முற்றமுற்ற எதிர் முட்டினார் - (முட்டியுத்த வித்தை நிலைகளில்) தாம் 'கற்றுத் தேர்ந்த வகைகள் எல்லாவற்றாலும் ஒருவரையொருவர் எதிர்த்துத் தாக்கினார்கள்.

போர் உடைந்த அரசர்களின் தலையில், வெற்றியின் அடையாளமாகத் தன் காலை அவர்கள் தலையில் வைப்பவன், அல்லது, அவ்வரசர்களால், தோல்வி காரணமாகத் தங்கள் தலை (அவன்) காலில் படும்படி வணங்கப்படுவன், என்ற கருத்தது முதலடி.

60. கரங்க ரத்தொடுபி ணங்க வுந்தமது
கால்கள் கால்களொடு கட்டவும்
சிரஞ்சி ரத்தினொடு தாக்க வுங்கொடிய
சிங்க வேறனைய திறலினார்
உரங்க ளிட்டும்வளர் தாள்க ளிட்டுமெதி
ரொத்தி மற்சமரு டன்றபின்
மரங்க ளிட்டுமுயர் கற்க ளிட்டுநெடு
வாதி னோடிகலி மோதினார்.

[கரம் கரத்தொடு பிணங்கவும், தமது கால்கள் கால்களொடு கட்டவும், சிரம் சிரத்தினொடு தாக்கவும், கொடிய சிங்கம் ஏறு அனைய திறலினார் உரங்கள் இட்டும் உயர் கற்கள் இட்டும் எதிர் ஒத்தி மல் சமரி உடன்ற பின், மரங்கள் இட்டும் நெடு வாதினோடு இகலி மோதினார்.]

விளக்கம் :—பிணங்கவும் - பின்னவும். உரம் - மார்பு. வாது - வாதம், வீரவாதம். உயர் கல் - (வினைத்தொகை) பெரிய கற்கள்.

61. உலாவ ருந்தனது தாதை யொத்தவலி
யுடைய காளைகழ லுதையினால்
விலாவொ டிந்துதட மார்பொ டிந்துமிடல்
வெரினொ டிந்துபடுவெம்பிணம்

புலால ளைந்தவிரு கவுளொ டிந்துபொரு
புயமொ டிந்துகடை யொத்தவாய்
நிலாவெ ழுங்கொடிய வெயிறொ டிந்துசெய
லின்றி வாணிருத னிற்கவே.

[உலா வரும் தனது தாதை ஒத்த வலி உடைய காளை கழல் உதையினால் விலா ஒடிந்து, தடம் மார்பு, ஒடிந்து, மிடல் வெரின் ஒடிந்து, படு வெம்பிணம் புலால் அளைந்த இரு கவுள் ஒடிந்து, பொருபுயம் ஒடிந்து, கடை ஒத்த வாய் நிலா எழும் கொடிய எயிறு ஒடிந்து செயல் இன்றி வாள் நிருதன் நிற்கவே,— அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :**—உலா வரும் தாதை - எங்கும் தடையின்றி உலவி வரும் வாயு. வெரின் - (வெரிந்) முதுகு. படு - பட்டு மடிந்த. அளைந்த - பொருந்திய. கவுள் - கன்னம். ஒத்த கடை வாய்...எயிறு - ஒன்றோடொன்று ஒத்த கடைவாய்களில் ஒளி தரும் கொடிய கோரைப் பற்கள். வாள்நிருதன் - கொடிய அரக்கன்.

**உலாவிவரும்**, என்பதின் விகாரம் **உலாவரும்**.

62. உண்டி யற்றயரும் யாது தானனடி
யுண்டு மெய்த் தளர்வொ ழிந்தபின்
மண்டி யிட்டெதிர்வி ழுத்தி மார்பினிப
மத்த கத்திடைம டங்கலின்
திண்டி றற்பெருமி டற்றை வன்பினொடு
திருகி வீசியொரு செங்கையால்
பண்டி யிற்கடிதி னிட்டு மாருதி
புகுந்த னன்பழைய பதியிலே.

[உண்டி அற்று அயரும் யாதுதானன் அடி உண்டு மெய் தளர்வு ஒழிந்த பின், மண்டி இட்டு எதிர் விழுத்தி மார்பின் இபம் மத்தகத் திடை மடங்கலின். திண் திறல் பெரு மிடற்றை வன்பினொடு திருகி வீசி ஒரு செம் கையால் பண்டியில் கடிதின் இட்டு, மாருதி புகுந்தனன் பழைய பதியிலே.]

**விளக்கம் :**—யாதுதானன் - அரக்கனான பகன். உண்டி... தளர்வு ஒழிந்தபின், மாருதி, இபம் மத்தகத்திடை மடங்கலின், எதிர் விழுத்தி மார்பின் மண்டி இட்டு, ஒரு செம் கையால்

திண்திறல் பெருமிடற்றை வன்பினொடு திருகி வீசி, (உடலை) கடிதின் பண்டியில் இட்டு பழைய பதியிலே புகுந்தனன்,—என்று அன்வயிக்க.

மாருதி - வாயு குமாரனான வீமன். இபம் மத்தகத்திடை மடங்கலின் - யானையின் தலையில் பாயும் சிங்கம்போல். எதிர் விழுத்தி - (பாய்ந்து) எதிரில் கீழே தள்ளி. மண்டி இட்டு - அவன் மார்பில் மண்டியிட்டு உட்கார்ந்து, வன்பு - வலிமை. யாது என்ற மரபினனான அரக்கன்.

உணவற்றுச் சோர்ந்தும் உதைபட்டுத் தளர்ந்தும் இருந்த அரக்கனை, அவனது அந்த நிலையில் தாக்கல் முறையன்று என்று போரொழிந்து நின்ற வீமன், அவன் அயர்வு நீங்கிய பின் மீண்டும் தாக்கிக் கொன்றான், என்க.

63. ஏக சக்கரவ னத்தி ருந்ததிறல்
யாது தானனையி மைப்பினில்
சாக முட்டியின டர்த்து மாமுனிவர்
தம்ப திப்புறன டுத்ததோர்
வேக ரிக்கடுவ னத்தி லிட்டுமல
ரோடை மூழ்கவிறல் வீமனும்
மோக ரித்தவுண ரைத்த டிந்துகடன்
முளரி நாயகனு மூழ்கினான்.

[ஏக சக்கரம் வனத்து இருந்த திறல் யாது தானனை இமைப்பினில், சாக முட்டியின் அடர்த்து, மா முனிவர் தம் பதி புறன் அடுத்தது ஓர் வே கரி கடு வனத்தில் இட்டு, மலர் ஓடை மூழ்க விறல் வீமனும், மோகரித்து அவுணரை தடிந்து கடல் முளரி நாயகனும் மூழ்கினான்.]

**விளக்கம்:—** அரக்கனைக் கொன்ற வீமன் நீராட, சூரியனும் அஸ்தமித்தான், என்பது செய்யுளின் பொருள். இதன் முன் உதய சூரியனையும் உச்ச சூரியனையும் வீமனுக்கு உவமை கூறிய புலவர், இங்கே அஸ்தமன சூரியனை உவமையாக்கினார்.

மந்தேகர் என்னும் அரக்கர் எப்பொழுதும் சூரியனை வளைத்துக் கொள்கின்றனர் என்றும், அந்தணர்கள் காலையிலும் மாலையிலும் செலுத்தும் அர்க்கிய நீரின் துணையால் சூரியன் அவர்களை வென்று உதித்தலையும் அஸ்தமித்தலையும் செய்கின்றான், என்றும் நூல்கள் கூறும்.

எனவே வீமன் பகனைக் கொன்று நீராடியதுபோல், சூரிய னும் மந்தேகரை வென்று கடலில் மூழ்கினான் என்றபடி.

வே கரி கடுவனம் - வெந்த கரிகளை உடைய கொடியவனம். மோகரித்து - ஆவேசங் கொண்டு. முளரி நாயகன் - தாமரையின் தலைவனான சூரியன்.

64. வாச மாமணிவி ளக்கெ டுப்பவிவன்
வந்து தாமுறையு மனைபுகுந்(து)
ஈச னோடுமையெ னத்த வம்புரியு
மிருவர் தாள்களுமி றைஞ்சியே
நேச மானவரு ளன்னை யைத்தொழுது
தம்மு னைத்தொழுது நெஞ்சுறத்
தேசி னோடிளைஞர் தொழம கிழ்ச்சியொடு
தழுவி னான்முறைமை திகழவே.

[வாசம் மா மணி விளக்கு எடுப்ப இவன் வந்து தாம் உறை யும் மனை புகுந்து, ஈசனோடு உமை என தவம் புரியும் இருவர் தாள்களும் இறைஞ்சியே, நேசம் ஆன அருள் அன்னையை தொழுது தம் முனை தொழுது, நெஞ்சு உற தேசினோடு இளைஞர் தொழ, மகிழ்ச்சியொடு தழுவினான் முறைமை திகழவே.]

**விளக்கம்:**—வீடுகள் தோறும் விளக்கு ஏற்றப் பெற்ற நேரம், வீமன், தாங்கள் வசிக்கும் மனை வந்து, அம் மனை யுடையா னான அந்தணனையும், அவன் மனைவியையும் வணங்கிப் பின்னர், அன்னையையும் தருமனையும் வணங்கினான்; தன்னை வணங்கிய தம்பியரைத் தழுவிக் கொண்டான், என்ற பொருளது செய்யுள்.

தேசினோடு இளைஞர் தொழ, (வீமன் அவர்களை) மகிழ்ச்சி யோடு நெஞ்சுறத் தழுவினான், என்க. தேசு - பெருமை.

ஒழுக்கத்தின் நிலைத்த இல்லறம் முயன்ற அந்தணனுக்கும் அவன் மனைவிக்கும் ஈசனும் உமையும் உவமை ஆயினர். 'தவம்' என்பது இல்லறம் என்ற பொருளது.

**ஊரார் வீமனைப் போற்றல்**

65. அகம லர்ந்துமுனி யாசி சொற்றிடவு
மன்னை யார்வவுரை கூறவும்

1. முகம லர்ந்துரிய துணைவ ராண்மைநிலை
மொழிய வுஞ்சமர மொய்ம்பனைச்
சகம லர்ந்ததிரு வுந்தி மால்கொலிவ
னென்று மற்றுளச னங்களும்
மிகம லர்ந்துபுன லோடை யிற்குழுமி
நனிவி யந்திசைவி ளம்பினார்.

[அகம் மலர்ந்து முனி ஆசி சொற்றிடவும், அன்னை ஆர்வ உரை கூறவும், முகம் மலர்ந்து உரிய துணைவர் ஆண்மை நிலை மொழியவும், சமர மொய்ம்பனை 'சகம் மலர்ந்த திரு உந்தி மால் கொல் இவன்?' என்று மற்று உள சனங்களும் மிக மலர்ந்து புனல் ஓடையின் குழுமி, நனி வியந்து இசை விளம்பினார்.]

**விளக்கம் :—** சமர மொய்ம்பன் - வீமன். துஷ்ட அரக்கனைக் கொன்று சிஷ்டரான அவ்வூராரைப் பரிபாலனம் செய்ததால், இவனை, 'ஜனங்கள், 'மால்கொல்?' என்று சங்கித்தனர், என்க.

புனல் ஓடையின் குழுமி - ஓடையில் நீர் திரளுதல் போல் ஜனங்கள், திரண்டு கூடி (வீமனை மிகவும் வியந்தனர்). நீர் திரண்ட ஓடையில் தாமரை மலர்கள் மலர்ந்திருப்பதுபோல், நகரில் திரண்ட ஜனங்களின் தாமரை மலர் போன்ற கண்கள் மகிழ்ச்சியால் மலர்ந்து விளங்கின, என்று குறிப்பிக்கும் கருத்தினது, 'புனல் ஓடையின் குழுமி' என்றது.

**வேத்திரகீயச் சருக்கம் முற்றும்.**

## 5. மாலையிட்ட சருக்கம்

திரௌபதி அருச்சுனனுக்கு மாலையிட்ட செய்தியைக் கூறும் சருக்கம் என்பது பொருள். இச் சருக்கத்தில் கடவுள் வாழ்த்துச் செய்யுள் காணப்படவில்லை. தனது வில் தொழிலால் விசயன் உரிமையாக்கிக் கொண்ட திரௌபதியை அன்னை சொற்படி ஐவரும் மணந்துகொண்ட வரலாற்றை இச் சருக்கம் கூறும்.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. இங்கிவ ரிவ்வா றிந்த விருக்கையி லிருக்கு நாளில்
அங்கண்மா ஞால மெங்கு மரக்கு மாளிகையில் வீந்தார்

பங்கமில் குணத்தான் மிக்க பாண்டவ ரென்று
மாழ்கத்
துங்கவேற் றுருப தன்றான் சூழ்ந்தது சொல்ல
லுற்றாம்.

[இங்கு இவர் இவ்வாறு இந்த இருக்கையில் இருக்கும் நாளில், அம் கண் மா ஞாலம் எங்கும் அரக்கு மாளிகையில் வீந்தார் பங்கம் இல் குணத்தான் மிக்க பாண்டவர் என்று மாழ்க, துங்கம் வேல் துருபதன் தான் சூழ்ந்தது சொல்லல் உற்றாம்.]

**விளக்கம் :**—உலகத்தார் பாண்டவர் அரக்கு மாளிகையில் பட்டனர், என்று வருந்த, துருபதன் ஆலோசித்துச் செய்ததைக் கூறுவாம், என்று புலவர், சருக்கத்திற்குக் கூறும் தோற்றுவாயாகும் இது.

பங்கம் இல் குணம் - குற்றமில்லாத நற்குணம். துங்கம் வேல் - சிறந்த வேல். சூழ்ந்து - ஆலோசித்து. தான் : அசை.

2. வரத்தினாற் பிறந்த வாறும் வான்மொழி புகன்ற
வாறும்
சிரத்தினால் வணங்கிக் கேட்பத் தேசி கனுரைத்த
வாறும்
உரத்தினார் கெடாத வாறு முணர்ந்துதன் பேதை
யின்னம்
சரத்தினா லுயர்ந்த வின்மைத் தனஞ்செயற் குரிய
ளென்னா.

[வரத்தினால் பிறந்த ஆறும், வான் மொழி புகன்ற ஆறும், சிரத்தினால் வணங்கி கேட்ப தேசிகன் உரைத்த ஆறும், உரத்தினார் கெடாத ஆறும் உணர்ந்து, தன் பேதை இன்னம் சரத்தினால் உயர்ந்த வின்மை தனஞ்செயற்கு உரியள் என்னா,— அடுத்த கவியோடு குளகமாய் முடியும்.]

**விளக்கம் :**—தன்னை வென்ற அருச்சுனனை மணக்க ஒரு கன்னியை விழைந்து துருபதன் செய்த யாகத்தில் தோன்றியவள் திரௌபதி.

கேட்ட, உணர்ந்து, என்னா, என்ற எச்ச வினைகளுக்குத் துருபதன் தோன்றா எழுவாய். திரௌபதி தோன்றிய காலத்தில், 'இவள் பாண்டவரை மணப்பாள்,' என்று எழுந்த அசரீரி வாக்கைக் குறிக்கும் **வான்மொழி.** வரம், வான்மொழி, தேசிகன்

உரை ஆயவற்றால், இன்னம், அவள் அரிச்சுனனுக்கு உரியவளா வாள், என்று மன்னன் துணிந்தான், என்க. உரத்தினார் - பாண்டவர்.

இன்னம், என்பது, துருபதன் செய்த முயற்சியால் பாண்ட வரைப் பற்றி அறிய முடியாமையைக் குறிக்கும்.

சுயம்வரம்

3. தான்வரித் தவற்கே யெய்த வுரியளென் தனயை
யென்று
காண்வரிச் சுரும்புண் மாலைக் காவலர்க் கோலை
போக்க
மான்வரிக் கண்ணிக் கேற்ற வதுவைநாண் மலர்ப்பூ
வொன்றைத்
தேன்வரித் தென்ன வந்துதிரண்டது குமரர்சேனை.

[தான் வரித்தவற்கே உரியள் என் தனயை என்று கான் வரி சுரும்பு உண் மாலை காவலர்க்கு ஒலை போக்க, மான் வரி கண்ணிக்கு ஏற்ற வதுவை நாள், மலர் பூ ஒன்றை தேன் வரித்து என்ன வந்து திரண்டது குமரர் சேனை.]

**விளக்கம் :**—தான் வரித்தவர்க்கே - தான் விரும்பி ஏற்கும் புருஷனுக்கே. கான் வரிசுரும்பு - ஒலித்தலையும் புள்ளிகளையும் உடைய வண்டு. கான்மாலை என்றுங் கூட்டலாம். (கான் - மணம்). வதுவை நாள் - சுயம்வர நாள். சேனை - கூட்டம். தேன் வரித்தென்ன - வண்டுகள் ஒரு மலரை விரும்பி வந்து மொய்ப்பது போல (அரசர் வந்து கூடினர்.)

சுயம்வரச் செய்தி கேட்டு மற்ற அரசர்களோடு பாண்ட வரும் வருவர் என்ற எண்ணத்தில் துருபதன் நாள் குறித்து எங்கும் ஒலை போக்கினான், என்க.

4. ஆங்கது நிகழ்ந்த மாற்ற மந்தண னொருவன்
வந்தோன்
ஈங்கிவர்க் குரைப்ப மைந்த ரைவரும் யாயுங் கேட்டுப்
பாங்குடைப் பதியில் வாழும் பார்ப்பன மக்க ளோடும்
தாங்களுங் கொடிய கானந்தம்மனத் தேரிற்போனார்.

[ஆங்கு அது நிகழ்ந்த மாற்றம் அந்தணன் ஒருவன் வந்தோன் ஈங்கு இவர்க்கு உரைப்ப, மைந்தர் ஐவரும் யாயும்

கேட்டு பாங்கு உடை பதியில் வாழும் பார்ப்பன மாக்களோடும் தாங்களும் கொடிய கானம் தம் மனம் தேரின்போனார்.]

விளக்கம் :— மாற்றம் - சுயம்வரச் செய்தி. பாங்கு உடை பதி - அழகிய வேத்திரகீய நகர். மனத்தேரின் போனார் - விரைவாகச் சென்றார்; அதாவது, திரௌபதியைத் தாங்கள் பெறலாமென்ற எண்ணத்தில் விரைந்து சென்றனர்.

'தாங்கருங் கொடிய கானம்,' என்றும் பாடம்.

**வியாசர் வரல்**

5. சாரதந் திரத்தின் மிக்க தபோதனன் சதுர்வே
தங்கள்
பாரதந் தன்னோ டைந்தாம் படியினாற் பகர்ந்த
மூர்த்தி
நாரத முனியை யொப்பா னராதிபர் நடந்து செல்லும்
நீரத நெறியில் வாவி நிறைந்தநீ ரென்ன நின்றான்.

[சாரம் தந்திரத்தில் மிக்க தபோதனன், சதுர் வேதங்கள் பாரதம் தன்னோடு ஐந்து ஆம் படியினால் பகர்ந்த மூர்த்தி நாரத முனியை ஒப்பான், நராதிபர் நடந்து செல்லும் நீரதம் நெறியில் வாவி நிறைந்த நீர் என்ன நின்றான் ]

விளக்கம் :—எல்லா நூல்களின் சாரமான நுண்ணிய அறிவு அதாவது மெய்யறிவு. வேதப் பொருள்களைப் பாரதம் தன்னிடம் கொண்டிருத்தல்பற்றி, 'பாரதம் தன்னோடு ஐந்து ஆகும்படி,' எனப்பட்டது. 'படியினால்' என்பதிலுள்ள இன் - ஆல் அசை. ஞானத்திலும், தவ ஒழுக்கத்திலும், உலக நன்மைக் குரியன செய்தலிலும் சிறந்த நாரத முனிவர், வேதம் வகை செய்து உதவிய வியாசருக்கு உவமையானார். நராதிபர் - (நர-அதிபர்) பாண்டவர். நீரதம் - (நிர் - ரஸம், ரஸம் - நீர்-) நீரஸம்—(தமிழில்) (நீரதம்) நீர் இல்லாதது. வாவி - குளம். சாரதந்திரம் - சாரமான நூல்அறிவு.

6. வணங்கலும் வாழ்த்தி முந்த வந்துநீர் வாழ்வு
பெற்றீர்
இணங்கிநுற் கேண்மை கொள்வா னிச்சையால் யாக
சேனன்
அணங்கினை யன்று வேள்வி யழலிடை யளித்தா
னந்தச்
சுணங்கணி முலையா ணாளைச் சூட்டுவ
டொடையன் மாதோ.

[வணங்கலும் வாழ்த்தி முந்த வந்து (அதனால்) நீர் வாழ்வு பெற்றீர்; இணங்கினும் கேண்மை கொள்வான் இச்சையால் யாகசேனன் அணங்கினை அன்று வேள்வி அழலிடை அளித்தான். அந்த சுணங்கு அணி முலையாள் நாளை சூட்டுவள் தொடையல் மாதோ.]

**விளக்கம் :**—முந்து வந்து - சுயம்வர தினத்திற்கு ஒரு நாள் முந்தி வந்து. யாகசேனன் இணங்கி...அளித்தான் - யாகசேனன் உங்களோடு சம்பந்தங்கொண்டு உங்களுடைய உறவைப் பெறுவதற்கான விருப்பத்தால் திரௌபதியை அன்று வேள்வித் தீயிலிருந்து பெற்றான். தொடையல் - சுயம்வர மாலை.

வாழ்வு பெற்றீர், என்ற இறந்த காலம், கால வழு; நிச்சயத்தைக் குறிக்கும். 'அன்று,' என்பது, 'சில வருடங்களுக்கு முன்,' என்ற பொருளது, அணங்கு - தெய்வப் பெண்; இலக்கணையாய் அழகிற் சிறந்த திரௌபதியை உணர்த்தும். சுணங்கு - தேமல், திதலை.

7. **இப்பகலிரவும் வைகா தேகியாங் கெய்து மங்கண்**
**அப்பகன் மன்றல் பெற்றா றோன்றுத லாண்மை யென்று**
**செப்பியே முனிவன் போகச் சிறுவரும் பெரிய கங்குல்**
**மைப்புறப் பார்த்தன் செங்கை மணிவிளக்காரப் பேரனார்.**

[இ பகல் இரவும் வைகாது ஏகி ஆங்கு எய்தும், அங்கண் அ பகல் மன்றல் பெற்றால் தோன்றுதல் ஆண்மை என்று செப்பிய முனிவன் போக. சிறுவரும் பெரிய கங்குல் மை புறம் பார்த்தன் செம்கை மணி விளக்கு ஆர போனார்.]

**விளக்கம் :**—அ பகல் - சுயம்வர தினம். மன்றல் -விவாகம்; இங்கே அதை நிச்சயிக்கும் சுயம்வரமாலை. பெற்றால் தோற்றுதல் ஆண்மை - மாலை பெற்றபின் உண்மையான வடிவத்தை வெளிப்படுத்தல் ஆண்மையாகும். (அதன் முன் வெளிப்படுத்த வேண்டா, என்றபடி). சிறுவர் - இளம் பிராயத்தினரான பாண்டவர்; அல்லது வியாசரின் பௌத்திரர். மை புறம் பார்த்தன் - கரிய நிறத்தினனான பார்த்தன். விளக்கு ஆர - விளக்கு பொருந்தியிருக்க.

அருச்சுனன் விளக்கை எடுத்துக்கொண்டு முன் செல்ல மற்றவர் பின் சென்றார்கள் என்க. விடியுமுன் துருபதன் நகர்

செல்லும் எண்ணத்தினரான பாண்டவருக்கு இரவு நீட்டித்த தாகத் தோன்றியது என்பது தோன்ற பெரிய கங்குல் என்றாராயிற்று.

8. புத்திரன் பேரர் கங்கைப் பூந்துறை யடைந்த
போதில்
குத்திர விஞ்சை வேந்தன் குறுகிவெங் கொடும்போர்
செய்யச்
சித்திரத் தோரான் றன்னைத் தேவர்கோன் மதலை
செந்தீ
அத்திரத் திருந்தைத் தேரோ னாக்கின னிமைப்பி
னம்மா.

[புத்திரன் போர் கங்கை பூ துறை அடைந்த போதில் குத்திரம் விஞ்சை வேந்தன் குறுகி, வெம் கொடும் போர் செய்ய, சித்திரம் தேரோன் தன்னை தேவர்கோன் மதலை செம் தீ அத்திரத்து இருந்தை தேரோன் ஆக்கினன் இமைப்பின் அம்மா.]

**விளக்கம் :**—புத்திரன் போர் - கங்கையின் புத்திரனான பீஷ்மனின் பேரர்கள், பாண்டவர். குத்திரம் விஞ்சை - மாய வித்தை. வேந்தன் - கந்தர்வர் தலைவனான சித்ரரதன் என்னும் பெயரோடு அங்கார பர்ணன் என்ற பெயரையும் உடைய கந்தருவன். சித்திரத்தேர் - அழகிய தேர். தேவர்கோன் மதலை - அருச்சுனன். செந்தீ அத்திரம் - ஆக்கிநேயாஸ்திரம். இருந்தை - கரி. இருந்தை தேரோன் - தீயினால் கரியாகிய தேரோன். அம்மா - வியப்பிடைச் சொல்.

பாண்டவர் கங்கைக்கரை அடைந்ததும், அங்கே ஜலக் கிரீடை செய்து கொண்டிருந்த கந்தருவன், இவர்களை எதிர்க்க, அருச்சுனன் அவனை வென்றான், என்றபடி.

9. தோற்றவன் றிரிந்து மீண்டு தோழனவ் விசயற் காக
ஆற்றரும் புனலும் யாறு மவன்றுணையாக நீந்திச்
சாற்றுமுற் கச தீ ரத்துத் தௌமிய முனியைக் கண்டு
போற்றிமற் றவன்ற னோடும் புன்னெறிப் புறம்விட்
டாரே.

[தோற்றவன் திரிந்து மீண்டு தோழன் அ விசயற்கு ஆக, ஆற்று அரும் புனலும் யாறும் அவன் துணை ஆக நீந்தி, சாற்றும் உற்கச தீரத்து தௌமிய முனியை கண்டு, போற்றி, மற்று அவன் தனோடும் புல்நெறி புறம் விட்டார், (ஏஅசை).

**விளக்கம் :**—திரிந்து - பகை நீங்க. மீண்டு - திரும்ப வந்து. ஆற்றரும் - கடத்தற்கு அரிய. புனல் - நீர் நிலை. நீந்தி- கடந்து. சாற்றும் - கந்தர்வன் கூறிய. உற்கச தீரத்து - உற்கசம் என்னும் தீர்த்தக்கரையில். புல் நெறி புறம் விட்டார்- சிறிது பாக்கியாய் இருந்த வழியின் எல்லையைக் கடந்தார், அதாவது துருபதன் நகரை நெருங்கினார்.

கந்தர்வன் கூறியபடி தௌமிய முனிவனைத் தம் புரோகிதராக வேண்டிப் பெற்று, அவனுடன் எஞ்சியிருந்த காட்டு வழியைக் கடந்தார், என்க.

### சூர்யோதயம்

10. புலர்ந்தன கங்குற் போதும் பொழிதரு பனியுஞ் சேர
மலர்ந்தன மனமுங் கண்ணும் வயங்கின திசையும் பாரும்
அலர்ந்தன தடமுங் காவு மார்த்தன புள்ளு மாவும்
கலந்தன குருகும் பேடுங் கலித்தன முரசுஞ் சங்கும்.

[புலர்ந்தன கங்குல் போது பொழிதரு பனியும் சேர, மலர்ந்தன மனமும் கண்ணும், வயங்கின திசையும் பாரும், அலர்ந்தன தடமும் காவும், ஆர்த்தன புள்ளும் மாவும், கலந்தன குருகும் பேடும், கலித்தன முரசும் சங்கும்.]

**விளக்கம் :**—புலர்தல்- விடிதல், அழித்தல். மா - விலங்கு. குருகுகள் இரவில் பிரிந்திருந்து பகலில் கூடும் இயல்பின.

இச் செய்யுள் உடனிகழ்ச்சி அணி ஆதற்கில்லை. இரண்டினை ஒன்றாக நிகழ்ந்ததாகக் கூறல் இவ்வணி அமைவுக்குப் போதாது. காரண காரியத் தொடர்புடைய இரண்டினை ஒன்றாக நிகழ்வதுபோல் இணைத்துக் கூறும் திறமை இதன் அமைவுக்கு அவசியமாகும். இதன் விரிவை 'இலக்கண விளக்கம்—அணியியல்' என்ற நூலில் காண்க. இச் செய்யுள் தன்மை நவிற்சியை உட் கொண்டதே.

11. குன்றமுங் கொடிய கானுங் கூரிருட் கங்கு னீங்கி
நன்றுநன் றுதவ வந்தீர் நடந்துநீ ரிளைத்தீர் போலும்
என்றுகொண் டுவகை யோடு மின்மலர்க் கழுநீர் வாச
மன்றலந் தென்றல் வீசி வழிவிடாய் தணித்த தன்றே.

[குன்றமும் கொடிய கானும் கூர் இருள் கங்குல் நீங்கி, நன்று நன்று உதவ வந்தீர்; நடந்து நீர் இளைத்தீர் போலும், என்று கொண்டு, உவகையோடும் இன்மலர் கழுநீர் வாசம் மன்றல் அம் தென்றல் வீசி வழி விடாய் தணித்தது, (அன்றே : அசை).

விளக்கம் :—கங்குலில் குன்றும் கானும் நீங்கி (அழலிடை வந்த அணங்கினை மணந்து) உதவ வந்தீர், நன்று நன்று;— என்க. நன்று நன்று - (உங்கள் வரவு) நல்லதாயிற்று. கழுநீர் வாசம் மன்றல் அம் தென்றல் - செங்கழுநீர் மலர்களின் வாசனையோடு கூடிய நல்ல மணத்தை உடைய இனிய தென்றல்.

'தென்றல் பாண்டவரின் வழிவிடாய் தீர்த்தது,' என்றது தற்குறிப்பேற்றம்.

12. வெறிபடு முளரி மொக்குள் விரிபதனோக்கிச்சுற்றும்
பொறிவரி வண்டி னீட்டம் புறத்திருந் திரங்க
வண்டொன்(று)
இறகரால் வீசி யுள்புக் கின்மது நுகர்தல் கண்டு
நெறியினன் நிமித்த மாக நெஞ்சுற நினைத்துச்
சென்றார்.

[வெறி படு முளரி மொக்குள் விரிபதன் நோக்கி சுற்றும் பொறி வரி வண்டின் ஈட்டம் புறத்து இருந்து இரங்க, வண்டு ஒன்று இறகரால் வீசி உள் புக்கு இன் மது நுகர்தல் கண்டு நெறியின் நல்நிமித்தம் ஆக நெஞ்சு உற நினைத்து சென்றார்.]

**விளக்கம் :**— வெறி - தேன். முளரி மொக்குள் - தாமரை மொட்டு. விரிபதன் (விரிபதம்) - மலரும் சமயம். இறகர் - (போலி) இறகு. பல வண்டுகள் வாளா இரங்கி நிற்க, ஒரு வண்டு உள் புகுந்து மது அருந்தியது, தாங்கள் திரௌபதியை அடையக்கூடும், என்பதற்கு அடையாளம் என்று எண்ணிப் பாண்டவர்கள் மேலே சென்றனர்; என்க.

13. வண்டுறை மருங்கி னாங்கோர் மாங்கனி வீழ்தல்
கண்டே
தண்டுறை மீன்க ளெல்லாந் தத்தமக் கிரையென்
றெய்த
விண்டுறை கிழிய வோடி வென்றொரு வாளை
தன்வாய்க்
கொண்டுறை வலிமை நோக்கிக் குறிப்பினா லுவகை
கூர்ந்தார்.

[வண் துறை மருங்கின் ஆங்கு ஓர் மாங்கனி வீழ்தல் கண்டே தண் துறை மீன்கள் எல்லாம் தம் தமக்கு இரை என்று எய்த, விண்டு உறை கிழிய ஓடி வென்று ஒரு வாளை தன் வாய் கொண்டு உறை வலிமை நோக்கி குறிப்பினால் உவகை கூர்ந்தார்.]

**விளக்கம் :**—வண் துறை - வளம் மிக்கதான நீர்த்துறை. உறை விண்டு கிழிய - மீன்களின் உறைவிடமான நீர் பிளந்து கிழியும்படி. வாய் கொண்டு உறை வலிமை நோக்கி - வாயில் கௌவிக்கொண்டு இருந்த வலிமையைக் கண்டு.

மாங்கனியை நச்சி வந்த மீன்களில் ஒரு வாளைமீன் அதைக் கவர்ந்து சென்றதைப் பாண்டவர்கள் நன்னிமித்தமாகக் கொண்டு மகிழ்ந்தனர், என்பது கருத்து.

14 மாக்குர லளக வல்லி வதுவையி னழகு காணத்
தாக்குர லடிகொள் யானைத் தரணிப ரெவரும் வந்தார்.
வீக்குநன் மிளிர்பொற் பூணீர் விரைவுடன் வம்மி னென்று
கூக்குரல் விளிப்ப போலுங் கோகிலக் குரலும் கேட்டார்.

[மா குரல் அளக வல்லி வதுவையின் அழகு காண தாக்கு உரல் அடி கொள் யானை தரணிபர் எவரும் வந்தார், வீக்கும் நல் மிளிர் பொன்பூணீர் விரைவுடன் வம்மின் என்று, கூக்குரல் விளிப்ப போலும் கோகிலம் குரலும் கேட்டார்.]

**விளக்க்ம் :**—மா குரல் அளகம் - வண்டுகள் (மொய்த்து) ஒலி செய்யும் கூந்தல். தாக்கு உரல் கொள் அடி - போரில் பகைவரைத் தாக்கும் உரல் போன்ற பெரிய கால்கள். வீக்கும் - அணிந்த. கூக்குரல் - உரத்துக் கூவல். விளிப்ப - அழைப்ப.

இது, தற்குறிப்பேற்ற அணியை உட்கொண்டது. 'மா குரல் அளகம்' என்பதற்குக் கரிய கூந்தல் என்றும் பொருள் கொள்ளலாம். குரல், அளகம் - பெண்களின் கூந்தல்வகை.மயிர். ஒன்று கூந்தலையும், மற்றது மயிரின் செறிவையும் குறிக்கும்.

15. நீடுத லில்லை யென்றே நிருபதி கன்னி மன்றல்
கூடுத லிவர்க்குண் டாகுங் கொற்றவர் குறைபொ றாதே

ஓடுத லுண்மை யென்னாத் தோகைக ளோகை
யோடும்
ஆடுத னோக்கி நோக்கி யகமகிழ்ந் தேகி னாரே.

[நீடுதல் இல்லை, இன்றே நிருபதி கன்னி மன்றல் கூடுதல் இவர்க்கு உண்டாகும், கொற்றவர் குறை பொறாதே ஓடுதல் உண்மை, என்னா தோகைகள் ஓகையோடும் ஆடுதல் நோக்கி அகம் மகிழ்ந்து ஏகினாரே.]

**விளக்கம்:**—நிருபதி கன்னி மன்றல் நீடுதல் இல்லை - துருபத ராஜனது பெண்ணின் சுயம்வர காலம் நீட்டித்தல் இல்லை. குறை பொறாது - அவமானம் பொறுக்காது. தோகை - மயில். இதுவும் தற்குறிப்பேற்றமே.

16. பூவெலாஞ் சுரும்பு மொய்ப்பப் புனலெலாம் புள்ளு
வைக
மாவெலாந் துணையின் மேவ மரனெலாம் வல்லி
புல்ல
ஏவெலாம் பயின்ற விற்கை யேற்றிளஞ் சிங்கம்
போல்வார்
காவெலா மருங்கு தோறுங் கண்டுகண் களித்து
நின்றார்.

[பூ எலாம் சுரும்பு மொய்ப்ப புனல் எலாம் புள்ளு வைக, மா எலாம் துணையின் மேவ, மரன் எலாம் வல்லி புல்ல, ஏ எலாம்பயின்ற வில் கை ஏறு இளம்சிங்கம் போல்வார் கா எலாம் மருங்கு தோறும் கண்டு கண்களித்து நின்றார்.]

**விளக்கம்** :—கா எலாம் மருங்கு தோறும்...பூ எலாம் சுரும்பு மொய்ப்ப...கண்டு கண் களித்து நின்றார், என்று இயைக்க. புள்ளு - பறவை. மா - விலங்கு. ஏ எலாம் பயின்ற வில் கை ஏறு இளம் சிங்கம்-சரத் தொழில் பயின்ற வில்லேந்திய கையை உடைய இளைய ஆண் சிங்கம் போன்ற பாண்டவர்.

காவில் கண்ட காட்சிகளை நல் நிமித்தமாகக் கொண்டு பாண்டவர் களித்தனர், என்க.

ஏ, என்பது அம்பு என்ற பொருளுடைய பெயர்ச் சொல்லாதலால், வகர உடம்படு மெய் வந்தது.

### பாஞ்சால நகரின் வர்ணனை

17. வாரண மாயை சூழ்ந்த மாயவன் தோற்றம் போலப்
பேரொளி பம்பி யார்க்கும் பேசரும் சிறப்பிற் றாகிப்
பூரண கும்பம் பொற்கோ புரங்களாற் பொலிந்து தோன்றும்
ஆரவ மிகுந்த பல்புள் ளகழிசூழ் புரிசை கண்டார்.

[வாரணம் மாயை சூழ்ந்த மாயவன் தோற்றம்போல, பேர் ஒளி பம்பி, யார்க்கும் பேசு அரும் சிறப்பிற்று ஆகி, பூரண கும்பம் பொன் கோபுரங்களால் பொலிந்து தோன்றும் ஆரவம் மிகுந்த பல்புள் அகழி சூழ் புரிசை கண்டார்.]

**விளக்கம் :**—வாரணம் - மறைப்பு, தடை. வாரண... மாயவன் - (சொரூப உண்மையைத் தெளிந்துகொள்ள விடாது) மறைக்கும் தன்மையதான மாயையால் சூழப்பட்ட திருமால். சிறப்பிற்று ஆய் - சிறப்பை உடையதாய். ஆரவம் - ஆரவாரம். புள்அகழி - நீர்ப் பறவைகளை உடைய அகழி. புரிசை - மதில்.

எம் பெருமானது சொரூபத்தை எளிதில் அறிய முடியாதபடி மாயை இடை நின்று தடை செய்வதுபோல், மதிலை எவரும் எளிதில் கடக்க வொண்ணாதபடி அகழி தடை செய்கின்றது, என்க.

பூர்ண கும்பம் : நீர் நிறைந்த அழகிய குடங்களை மங்கள கரமாக வைத்தல் மரபு. எனவே, பூரண கும்பங்களால் பொலியும் மதில், என்றார்.

18. மங்கல முழவம் விம்ம மன்னுபல் லியங்க ளார்ப்பச்
சங்கின முழங்க வெல்லாத் தானையும் பரந்து சூழ
எங்கணு நெருங்கி வைகு மிராசமண் டலங்க ளோடும்
துங்கவேற் றுருப தன்றன் தொல்லைமா நகரி புக்கார்.

[மங்கலம் முழவம் விம்ம, மன்னு பல் இயங்கள் ஆர்ப்ப, சங்கு இனம் முழங்க, எல்லா தானையும் பரந்து சூழ, எங்கணும் நெருங்கி வைகும் இராச மண்டலங்களோடும் துங்கம் வேல் துருபதன் தன் தொல்லை மா நகரி புக்கார்.]

**விளக்கம் :**—இராச மண்டலம் - அரசர் கூட்டம். முழவம் - முரசு. விம்ம, ஆர்ப்ப, முழங்க என்ற சொற்கள், ஒரு பொருள் பல சொற்களாகும். இது பொருள் பின்வருநிலை அணியின் பாற்படும். பல் இயம் - கொட்டல் ஊதலுக்குரிய பல வாத்தியங்கள்.

19. தொடங்கியுந் தொடக்கந் தொட்டுத் துகளற
வளர்ந்து மீள
மடங்கியுஞ் செல்லு கின்ற மன்னுயி ருலக மெல்லாம்
முடங்கிய சார்ங்கச் செங்கை முகுந்தன்வாய்ப்
புகுந்த காலத்(து)
அடங்கிய வுதரம் போன்ற தந்தமா நகரி யம்மா.

[தொடங்கியும் தொடக்கம் தொட்டு துகள் அற வளர்ந்து மீள மடங்கியும் செல்லுகின்ற மன் உயிர், உலகம் எல்லாம் முடங்கிய சார்ங்கம் செங்கை முகுந்தன் வாய் புகுந்த காலத்து அடங்கிய உதரம் போன்றது அந்த மா நகரி அம்மா.]

**விளக்கம் :**—பாஞ்சாலியின் மாலை விழைந்து வந்து கூடியுள்ள அரச மண்டலத்தைக் கொண்ட பாஞ்சால நகரத்தின் தோற்றத்தைக் கூறும் இச் செய்யுள். அந்த மா நகரி, தொடங்கியும்...போன்றது - (பிரளயத்தின் பின்) தோன்றியும், தோன்றிய காலம் முதல் குற்றம் அற வளர்ந்தும், மறுபடியும் அழிந்தும் (முறையே) நிகழ்ந்து வருகின்ற மன்னுயிர் எல்லாம், வளைந்த சார்ங்கம் என்னும் வில்லைக் கொண்ட சிவந்த கையையுடைய முகுந்தனது திருவாயில் புகுந்த காலத்து, அவை யாவும் அடங்கப் பெற்ற (அவனது) திருவயிற்றைப் போன்றிருந்தது. அம்மா : வியப் பிடைச் சொல். மன்றல் காரணமாக, உலகத்து உயிர்கள் எல்லாம் பாஞ்சாலத்தில் கூடி யிருந்ததால், அந் நகரம், திருமாலின் திரு வயிற்றை ஒத்ததாயிற்று. முகுந்தன் - முத்தியோடு இகத்தையும் அடியார்களுக்குத் தருபவன்.

20. குழைப்புறங் கடந்த செங்கட் குறுநகைக்
கொவ்வைச் செவ்வாய்
இழைப்பொலி முலையி னாளுக் கிற்றைநாள்
வதுவை யென்று
மழைப்புற மாட மேறி வருநரை மலர்க்கை காட்டி
அழைப்பன போன்ற வீதி யணிகொடியாடை
யெல்லாம்.

[குழை புறம் கடந்த செம் கண் குறு நகை கொவ்வை செம் வாய் இழை பொலி முலையினாளுக்கு இற்றை நாள் வதுவை என்று, மழை புறம் மாடம் ஏறி வருநரை மலர் கை காட்டி அழைப்பன போன்ற வீதி அணி கொடி ஆடை எல்லாம் ]

**விளக்கம் :—** குழைப் புறம் கடந்த செங்கண் - காதில் அணிந்த குண்டலங்களின் பக்கத்தையும்கடந்து நீண்ட செங்கண். இழை பொலி முலையினாள் - ஆபரணங்களை விளங்கச் செய்யும் முலையினாளாகிய பாஞ்சாலி. மழைப்புற மாடம் - மேகத்தை அளாவிய மாளிகை.

"வீதியை அலங்கரித்த கொடிகள், நகரி வந்த பாண்டவரை, கை காட்டி அழைப்பன போன்றன," என்று கூறும் இச் செய்யுளில், கம்பரின் எதிரொலியைக் கேட்கின்றோம். தாடகையை வதைத்துக் கை வண்ணமும், அகலிகையை அளித்துக் கால் வண்ணமும் காட்டிய காகுத்தன் மிதிலையின் மதிற்புறம் வரலும்,

"மையறு மலரி னீங்கி யான்செய் மாதவ த்தின் வந்து
செய்யவ ளிருந்தா ளென்று செழு மணிக் கொடிக ளென்னும்
கைகளை நீட்டி யந்தக் கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை யொல்லை வாவென் றழைப்பது போன்றதம்மா."

என்று கம்பநாடர் தானே மிதிலை நகராய் மாறி மகிழ்ச்சியோடு வள்ளலை வரவேற்கின்றார். அழைக்குங் கை மேலுங் கீழுமாய் அசைதலே முறை. கொடியோ, 'வாரல்' என்று விலக்குவதுபோல் இடம் வலமாக அசையும் இயல்பினது. அவ்வாறாகக் கம்பரும், பின்வந்த வில்லிபுத்தூரரும் கொடிகளின் அசைவினில் வரவேற்கும் குறிப்பினை எங்ஙனம் கண்டனர்? என்று தெரியவில்லை. முன்னை வினையின் வலியால் உந்தப் பெற்றுக் கண்ணகியும் கோவலனும் மதுரை மாநகர் புகுதலும்,

"தையலுங் கணவனுந் தனித்துறு துயரம்
ஐய மின்றி யறிந்தன போலப்
போருழந் தெடுத்த வாரெயில் நெடுங்கொடி
வாரலென் பனபோன் மறித்துக்கை காட்ட."

என்று கூறிய இளங்கோவடிகள், கொடியின் அசைவினில் 'வாரல்' என்று விலக்கும் குறிப்பினையே கண்டாராகின்றார். வில்லிபுத்தூரரும், கண்ணனைத் துணைக்கு அழைக்குங் கருத்தில் துரியோதனன் துவாரகையை அடைந்தபோது, கொடிகள், "பாண்டவர்க் கல்லால் படைத்துணை ஆகமாட்டான்; மீண்டு

செல்,'' என்று விலக்கினவாகக் கூறுகின்றார். வேண்டுமெனின் வில்லிபுத்தூரர் கொடி கம்பரோடு சேர்ந்து அழைத்தலையும், வேண்டாவெனின், அடிகளோடு சேர்ந்து விலக்குதலையும் செய்யும் போலும்! ஒரு வேளை, மிதிலைப் பொன்னை வரிக்க வந்த இராமனைக் கண்ட களிப்பினால் மிதிலைக் கொடியும், பாஞ்சாலியை ஏற்க வந்த பாண்டவரைக் கண்ட களிப்பினால் பாஞ்சாலக் கொடியும், செய்கை பிறழ்ந்து கைகளை ஆட்டி விட்டனவோ, என்னவோ!

கொடிகள் பாண்டவரை அழைத்ததாகக் கூறியது தற்குறிப் பேற்றம்.

21. விண்டலம் புதைத்த பைம்பொற் றுகிலிடு விதான நீழல்
மண்டகிற் புகையின் மூழ்கி யாவணமறுகிற் செல்வம்
கண்டுகண் டரியே றானின் கவினுடை நெடுந்தோல் போர்த்துக்
கொண்டன செயலா ராங்கோர் குலாலன திருக்கை சேர்ந்தார்.

[விண் தலம் புதைத்த பைம் பொன் துகில் இடு விதானம் நீழல், மண்டு அகில் புகையில் மூழ்கி ஆவணம் மறுகில் செல்வம் கண்டு கண்டு, அரி ஏறு ஆனில் கவின் உடை நெடும் தோல் போர்த்துக் கொண்டு அன செயலார், ஆங்கு ஓர் குலாலனது இருக்கை சேர்ந்தார்.]

**விளக்கம் :**—விண் தலம் புதைத்த - ஆகாயத்தை மறைத்த. விதானம் - மேற்கட்டி. ஆவணம் மறுகு - கடைவீதி. அரி ஏறு - ஆண் சிங்கம். ஆனின் கவின் நெடுந்தோல் - பசுவின் அழகிய பெரிய தோல். குலாலன் - குயவன்.

சிங்கம் பசுவின் தோலைப் போர்த்துக் கொண்டதுபோல், பாண்டவர்கள் அந்தணர் வேடங்கொண்டு பாஞ்சாலத்தை அடைந்து ஒரு குயவன் மனையில் தங்கினார், என்க. அந்தணர் குயவன் மனையில் தங்க அனுமதி யுண்டு.

22. ஆங்கணற் றவத்தான் மிக்க வன்னையை யிருத்தி மைந்தர்
தாங்கண்முற் றுணையாய் வந்த தாபதன் றன்னோ டெய்தித்

தூக்கணங் குரீ இயின் மஞ்சத் தலந்தொறுந்தூங்கு
கின்ற
தேங்கண்மாத் தெரியல் வேந்தர் சேர்த்தபேரவையி
லானார்.

[ஆங்கண் நல் தவத்தால் மிக்க அன்னையை இருத்தி மைந்தர் தாங்கள், முன் துணையாய் வந்த தாபதன் தன்னோடு எய்தி, தூக்கணங் குரீஇயின் மஞ்சம் தலம் தொறும் தூங்குகின்ற தேம்கள் மா தெரியல் வேந்தர் சேர்ந்த பேர் அவையில் ஆனார்.]

**விளக்கம் :—** தாபதன் - தௌமிய முனிவன். மஞ்சம் - ஆசனம். தூங்குகின்ற -(சுயம்வர மாலை கிடைக்குமோ கிடைக்காதோ என்ற சங்கையால்) தளர்வுற்று இருக்கின்ற. பேரி அவை - சுயம்வர மண்டபம். தௌமிய முனிவனோடு அரசர்கள் கூடியிருக்கும் சுயம்வர மண்டபம் அடைந்தனர், என்றபடி.

தூக்கணங்குருவி, அவையிருந்த அரசர்களுக்கு உவமையான விதம் தெரியவில்லை. ஸ்ரீ. வை. மு. கோ, "தூக்கணங் குருவி ஒடுங்கியிருத்தல் போல," என்று உரை செய்துள்ளார்.

### திரௌபதியின் நிலை

23. ஆதியிற் குந்தி மைந்த ரைவர்க்கு முரியளா
மென்று
ஓதிய விதியி னாநெஞ் சுலப்புறா வுவகை கூர்வாள்
சோதிடம் பொய்யா தென்றுந் தோன்றுவ ருரியோ
ரென்றும்
தா தியர் தேற்றத் தேற்றத்தன்மனத்தளர்வு தீர்வாள்.

[ஆதியில் குந்தி மைந்தர் ஐவர்க்கும் உரியள் ஆம் என்று ஓதிய விதியினால் நெஞ்சு உலப்புறா உவகை கூர்வாள், சோதிடம் பொய்யாது என்றும் தோன்றுவர் உரியோர் என்றும் தாதியர் தேற்ற தேற்ற தன் மனம் தளர்வு தீர்வாள்.]

**விளக்கம் :—** ஓதிய விதியினால் - (சோதிடர் ஆய்ந்து) கூறிய முடிவினால், உலப்புறா உவகை கூர்வாள் - நீங்குதல் இல்லாத உவமை மிக்காளும். தாதியர் (உரிய காலத்தில் தோன்றுவர் என்று) தேற்றத் தளர்ச்சி நீங்கப் பெறுபவளும்.

திரௌபதி பாண்டவரிடம் காதல் கொண்டவளாய் இருந்தாள், என்பது இதனால் தெரிய வருகின்றது.

24. சூட்டிய தொடையன் மாலைத் தோழியர் வைக
றோறும்
தீட்டிய படங்க ளுந்தஞ் சிந்தையும் பொலிவு
கொள்ளக்
கோட்டிய சிலையி னோடுங் கொடிமணித் தேரி
னோடும்
காட்டிய கோல மன்றிப் பிறிதொன்றுங் காண்கி
லாதாள்.

[சூட்டிய தொடையல் மாலை தோழியர் வைகல் தோறும் தீட்டிய படங்களும் தம் சிந்தையும் பொலிவுகொள்ள, கோட்டிய சிலையினோடும் கொடி மணி தேரினோடும் காட்டிய கோலம் அன்றி பிறிது ஒன்றும் காண்கிலாதாள்.]

**விளக்கம் :—**தொடையல் மாலை சூட்டிய தோழியர்: அதாவது தொடுக்கப் பெற்ற மாலை சூடிய தோழியர், (அவர்கள்) தீட்டிய படங்களும், (அவற்றில் எதைப் பாஞ்சாலி ஏற்பாளோ என்ற) அவர்தம் சிந்தையும் விளக்கமுற,— என்பது இரண்டாவது அடியின் பொருள். கோட்டிய - வளைந்த கோலம். காட்டிய கோலம் - தீட்டிக் காட்டிய உருவம். காண்கிலாதாள் - காணாதவளும்.

தோழியர் தீட்டிக் காட்டிய படங்களுள் அருச்சுனனது படமன்றி வேறொன்றிலும் அவள் மனம்செல்லவில்லை,—என்றபடி.

25. ஆண்டெரிப் பிறந்த போதே யன்பினாலெந்தை
நேர்ந்த
பூண்டெரி மார்ப னின்றிப் பொன்னவை பொலியத்
தோன்றி
ஈண்டெரி முன்னர் மன்ன ரிழிவுற வேட்டி லானேல்
மீண்டெரி புகுவ னென்னு மெண்ணமே விளையு
நீராள்.

[ஆண்டு எரி பிறந்த போதே அன்பினால் எந்தை நேர்ந்த பூண் தெரி மார்பன் இன்று இ பொன் அவை பொலிய தோன்றி, ஈண்டு எரி முன்னர், மன்னர் இழிவு உற வேட்டிலான் ஏல், மீண்டு எரி புகுவன் என்னும் எண்ணமே விளையும் நீராள்.]

**விளக்கம் :—**என் தந்தை யாகம் செய்த காலத்தில், அக்கினியில் (நான்) தோன்றிய பொழுதே அன்போடு (எனக்குக் கணவ

னாக) நிச்சயித்த,—என்பது முதலடியின் பொருள். பூண் - ஆபரணம். மன்னர் இழிவுற ஈண்டு எரிமுன்னர் வேட்டிலானேல் - (மாலை விழைந்து வந்த) மன்னர் அவமானத்தால் மனச் சோர்வு அடையும்படி எரியும் தீயின்முன் மணக்கானேயானால். எண்ணமே விளையும் நீராள் - எண்ணம் முதிர்கின்ற தன்மையளும்.

'அருச்சுனன் அக்கினி சாட்சியாய் மணக்கானாயின் மீண்டும் தீயில் புகுவேன்' என்ற எண்ணம் வளர்ந்து முதிரும் தன்மையளாய்ப் பாஞ்சாலி இருந்தாள்,—என்க.

26. கோண்பிறை நுதலா டன்னைக் கோதையர் பலருங் கூடிச்
சேண்புனல் பலகொண் டாட்டிச் செழுந்துகி றொழுது சேர்த்திப்
பூண்பன விசையப் பூட்டிப் புகைகமழ் தாமஞ் சூட்டிக்
காண்பவ ராண்மை தேயக் காமவேள் கலகஞ் செய்தார்.

[கோண் பிறை நுதலாள் தன்னை கோதையர் பலரும் கூடி, சேண் புனல் பல கொண்டு ஆட்டி, செழும் துகில் தொழுது சேர்த்தி, பூண்பல இசைய பூட்டி, புகை கமழ் தாமம் சூட்டி, காண்பவர் ஆண்மை தேய காமவேள் கலகம் செய்தார்.]

**விளக்கம்** :—கோண் பிறை - வளைந்த பிறைச் சந்திரன். சேண் புனல் - கங்கை முதலிய நதிகளிலிருந்து கொண்டு வரப்பட்ட புண்ணிய தீர்த்தம். செழும் துகில் - சிறந்த பட்டாடை. தொழுது சேர்த்தி - வணக்கத்தோடு உடுத்தி. இசைய - பொருந்த. தாமம் - மாலை. காமவேள் கலகம் செய்தார் - மன்மதனது போரை விளைவித்தார்கள்.

அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, என்பவை ஆண்மைக் குணங்கள். ஆடவரின் அக் குணங்கள் அழியும்படி நங்கையை அலங்கரித்தார்கள், என்க.

### திரௌபதி அவை வரல்

27. வந்தனர் குமரர் யாரும் வருகென மகிழ்ந்து போற்றிச்
சந்தணி முலையி னாளைத் தாயினும்பரிவு கூர்ந்தோர்

கந்தனு முவமை யாற்றாக் காவலர் காமத்தீயில்
இந்தன மிடுவ தேய்ப்ப வேத்தவையேற்றி னாரே.

[வந்தனர் குமரர் யாரும், வருக, என மகிழ்ந்து போற்றி, சந்து அணி முலையினாளை தாயினும் பரிவு கூர்ந்தோர், கந்தனும் உவமை ஆற்றா காவலர் காமம் தீயில், இந்தனம் இடுவது ஏய்ப்ப வேந்து அவை ஏற்றினாரே.]

**விளக்கம் :**—''அரச குமாரர்கள் எல்லோரும் வந்தனர், இனி, நீ வருவாயாக,'' என்று மகிழ்ச்சியோடு (செவிலியர்) உபசார வார்த்தை கூறி,—என்பது முதலடியின் பொருள். தாயினும் பரிவு கூர்ந்தோர் - செவிலியர். கந்தனும் உவமை ஆற்றா காவலர் - முருகக் கடவுளும் உவமை ஆகமாட்டாத மேம்பாடுடைய அரசர்கள். இந்தனம் - விறகு. ''காவலர் காமத் தீயில் இந்தனம் இடுவது ஏய்ப்ப (போல) வேத்தவை ஏற்றினார்,'' என்பது, ''கேள்வி அளவிலேயே பாஞ்சாலியிடம் காமமுற்ற அரசர்களின் மோகம் மிகும்படி செவிலியர் அவளை அவைக்கு அழைத்து வந்தனர்,'' என்னுங் கருத்தது.

28. வெங்கழற் படைக்கை வேந்தர் விழிகளால் விளங்கு மேனிப்
பொங்கழற் பிறந்த பாவை பொற்பினைப் பொலிய நோக்கிப்
பைங்கழைத் தனுவோன் செங்கைப் பகழியாற் பாவ மெய்தி
அங்கழற் பட்ட நெய்போ லனைவரு முருகி னாரே.

[வெம் கழல் படை கை வேந்தர் விழிகளால் விளங்கும் மேனி பொங்கு அழல் பிறந்த பாவை பொற்பினை பொலிய நோக்கி, பைங்கழை தனுவோன் செம் கை பகழியால் பாவம் எய்தி அங்கு அழல்பட்ட நெய் போல் அனைவரும் உருகினாரே.]

**விளக்கம் :**—வெம்கழல் - பகைவர்க்கு வெம்மையைத் தரும் வீரக்கழல். படை கை - ஆயுதங்கள் ஏந்திய கை. பொங்கு அழல் பிறந்த பாவை - பாஞ்சாலி. பொலிய நோக்கி - நன்றாகப் பார்த்து. ஆங்கு பைங்கழை தனுவோன்...பாவம் எய்தி - பார்த்த அப்பொழுதே மன்மதனுடைய அம்புகளால் யாக்கை மெலிதல் மயிர் சிலிர்த்தல், வியர்த்தல் முதலிய வேறுபாட்டை அடைந்து.

பாவம் - (வடசொல்) காமத்தால் உண்டாகும், தளர்ச்சி, வியர்த்தல், நிறம் மாறல் முதலிய யாக்கை வேறுபாடு.

அழலிற் பிறந்த பாவையைக் கண்டதும் அழலிற் பட்ட நெய்யாயினர், என்றதின் நயம் காண்க.

29. மங்குலின் மங்குன் மூடி வயங்கொளி மறைந்து
தோன்றாச்
செங்கதிர்ச் செல்வன் போலச் சீர்கெழு வடிவ மாறி
அங்கவ ரிருந்த தன்மை யறிந்ததோ செறிந்த
பொய்கைப்
பங்கயம் போன்ற தாலப் பரிவுறு பாவை பார்வை.

[மங்குலின் மங்குல் மூடி வயங்கு ஒளி மறைந்து தோன்றா செம்கதிர் செல்வன்போல, சீர்கெழு வடிவம் மாறி அங்கு அவர் இருந்த தன்மை அறிந்ததோ, செறிந்த பொய்கை பங்கயம் போன்றது, (ஆல்) அ பரிவு உறு பாவை பார்வை.]

**விளக்கம்:—** அப்பரிவுறு பாவை பார்வை செறிந்த பொய்கை பங்கயம் போன்றது, மங்குலின்...அறிந்ததோ! என்று அன்வயிக்க.

மங்குலின் மங்குல் மூடி - ஆகாயத்தில் மேகக்கூட்டம் நெருங்கி மூடியிருக்க. வயங்கொளி...செல்வன்போல - விளங்கும் தனது ஒளி மறைபட்டு வெளித் தோன்றாத சூரியன்போல. அங்கு அப்பாண்டவர் இருந்த தன்மையை (அவளது பார்வை) அறிந்து கொண்டதுபோலும்!

நீர் நிறைந்த தடாகத்துத் தாமரைபோலப் பாஞ்சாலியின் கண்கள் மலர்ந்திருந்ததால், மேகத்தால் மறைக்கப்பட்ட சூரியன் போல், பாண்டவர் அவையில் மாறுவேடத்தில் இருந்ததை அறிந்து கொண்டதோ என்னவோ, என்று கூறியபடி. பரிவுறு பாவை பார்வை (கண்) பொய்கைப் பங்கயம் (தாமரை) போன்றிருந்தது.—என்பது ஈற்றடியின் பொருள். ஆல் : அசை.

### திருஷ்டத்யும்நன் கூற்று

30. மனக்கடுங் காதல் விம்ம மாலைதாழ் புயங்கள் வாட
எனக்கெனக் கென்றே மாந்தி ருந்தகா வலரை
நோக்கிச்

சினக்கட மொழுகுங் கன்னக் களிறனான் றிட்டத்
துய்மன்
நினைக்கவு மரிய தொன்றை நினைவினோ
டுரைசெய் வானே.

[மனம் கடு காதல் விம்ம, மாலை தாழ் புயங்கள் வாட, எனக்கு எனக்கு என்று ஏமாந்து இருந்த காவலரை நோக்கி, சினம் கடம் ஒழுகும் கன்னம் களிறு அனான் திட்டத்துய்மன் நினைக்கவும் அரியது ஒன்றை நினைவினோடு உரை செய்வான் (ஏ).]

**விளக்கம்:** —புயங்கள் வாடற்குக் காரணம் பாஞ்சாலியைப் பெறவேண்டும் என்னும் ஆசையின் மிகுதி. சினத்தையும் மதம் ஒழுகும் கன்னங்களையும் உடைய ஆண் யானை. நினைவினோடு - கருத்தோடு; அதாவது பாண்டவரைக் காணுங் கருத்தோடு,

31. சிலையிது சிலீமு கங்க ளிவைகடுந் திரிகை வேகத்து
இலைமுகத் துழலு கின்ற வெந்திரத் திகிரி நாப்பண்
நிலையிலா விலக்கு மஃதே நெஞ்சுற யாவ
னெய்தான்
கலைவலீ ரவற்கே யிந்தக் கன்னியு முரிய
ளென்றான்.

[சிலை இது, சிலீமுகங்கள் இவை, கடும் திரிகை வேகத்து இலை முகத்து உழலுகின்ற எந்திரம் திகிரி நாப்பண் நிலை இலா இலக்கும் அஃதே, நெஞ்சு உற யாவன் எய்தான், கலைவலீர், அவற்கே இந்த கன்னியும் உரியள் என்றான்.]

**விளக்கம்:** —சிலீமுகம் - (வடசொல்) அம்பு. திரிகை - சக்கரம். திரிகை வேகத்து-சுற்றிவிட்ட (குயவனது) சக்கரம் போன்ற வேகத்துடன். இலை முகத்து உழலுகின்ற - சக்கரத்தின் ஆரக்காலினிடத்தே சுழலுகின்ற. எந்திரத்திகிரி நாப்பண் - வட்டவடிவினதான யந்திரத்தின் நடுவிலே. நிலை இலா இலக்கும் அஃதே-நிலையில்லாமல் சுழலும் குறியும் அதுவே. நெஞ்சுற - (இலக்கின்) நடுவிடம் பிளவுபட. எய்தான் : காலவழு. இலக்கின் நடுவிடம் பிளந்து விழும்படி செய்பவன் கன்னியைப் பெறுவதற்குரியனாவான், என்றபடி. அறுபத்து நான்கு கலை

ளில் விற்கலை ஒன்றாதலால், அரசர்களை 'கலைவலீர்' என்று அழைத்தானாயிற்று.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

32. இச்சொற் பழனப் பாஞ்சாலர்க் கிறைவன்
புதல்வ னியம்புதல்கேட்(டு)
அச்சொற் றத்தஞ் செவிக்குருமே றாகக்
கலங்கு மரவன்னார்
கச்சைப் பொருது புடைபரந்து கதித்துப்
பணைக்குங் கதிராரப்
பச்சைக் குரும்பை யிளமுலைமேற் பரிவா
னாணம் பிரிவுற்றார்.

[இ சொல், பழனம் பாஞ்சாலர்க்கு இறைவன் புதல்வன் இயம்புதல் கேட்டு, அ சொல் தம்தம் செவிக்கு உரும் ஏறாக கலங்கும் அரவம் அன்னார், கச்சை பொருது புடை பரந்து கதித்து பணைக்கும் கதிர் ஆரம் பச்சை குரும்பை இள முலைமேல் பரிவால் நாணம் பிரிவுற்றார்.]

**விளக்கம்:** —(திட்டத்துய்மன் சொல்லியது கேட்டு, அச் சொல் (குழுமியிருந்த அரசர் தங்கள் செவிகளுக்கு) உரும் ஏறு ஆக - பேரிடி போன்றதாக. கலங்கும் அரவம் அன்னார் - இடியினால் கலங்கும் அரவம் போன்ற அரசர்கள். கச்சு - மார்பில் அணியும் ஆடை, இரவிக்கை, பொருது - தாக்கி. கதித்து பணைக்கும் - பூரித்துப் பருத்துள்ள. கதிர் ஆரம் - ஒளியிடும் முத்து மாலை. பச்சைக் குரும்பை - முதிராத இளந் தென்னங் குரும்பை. பரிவால் நாணம் பிரிவுற்றார் - (இளமுலையளான பாஞ்சாலியினிடம் கொண்ட) விருப்பத்தால் நாணம் நீங்கின ராயினர்; அதாவது, இலக்கை வீழ்த்தாவிட்டால் மானங்கெடுமே என்று நினைக்காமல், அதை எய்ய முயலும் எண்ணத்தர் ஆயினர். என்றபடி.

33. கண்போ லம்பு நுதல்போலுங் கடுங்கார்
முகமுங் காண்டொறுமத்
திண்போர் வேந்தர் மனக்கலக்கஞ் செப்புந்
தகைத்தன் றானாலும்

விண்போ யுழன்று சுழவிலக்கை மெய்யே
யெய்து வீழ்த்திமலர்ப்
பெண்போல் வாளைக் கைப்பிடிக்கும் பேரா
சையினாற் பேதுற்றார்.

[கண்போல் அம்பும், நுதல் போலும் கடும் கார்முகமும், காண்தொறும் அதிண் போர் வேந்தர் மனம் கலக்கம் செப்பும் தகைத்து அன்று; ஆனாலும், விண்போய் உழன்று சுழல் இலக்கை மெய்யே எய்து வீழ்த்தி, மலர்ப்பெண் போல்வாளை கை பிடிக்கும் பேர் ஆசையினால் பேது உற்றார்.]

**விளக்கம்:** —கன்னியின் கைவிழைந்து வந்தவர் சிலைக்கலைச் சோதனைக்குத் தாங்கள் உள்ளாக வேண்டிவரும் என்று நினைத்திலராதலால், அவையின்கண் இருந்த அம்பும் வில்லும் அவர்களைக் கலங்கச் செய்தன. மேலும் அவ்வம்பும் வில்லும் கன்னியின் கண்ணையும் நெற்றியையும் ஒத்திருந்தமையாலும், அவரது மனக் கலக்கம் பின்னும் அதிகமாயிற்று. கண்ணும் நுதலும் ஆசையை மிகுவித்துக் கலங்கச் செய்தன. அம்பும் வில்லும், ''இலக்கை வீழ்த்த முடியாமற் போயின் என் செய்வது?'' என்ற பயத்தால் மனங் கலங்கச் செய்தன.

மலர்ப்பெண் - திருமகள். பேதுறல்-செய்ய முடியாததை மதிமயக்கத்தால் செய்ய முற்படல். மெய்யே எய்து வீழ்த்தல் - (குறியை) தவறாது அடித்து வீழ்த்தல்.

**செவிலியர் கூற்று**

34. திருந்தார் மன்றற் குழலணங்கின் செவிலித்
தாயர் கடல்கடைந்து
வருந்தா வமுத நிகர்வாளை மயில்போற்
கொண்டு மன்னவைபுக்(கு)
இருந்தா ரிருந்த காவலரை யின்னோ
ரின்னோ ரிவரென்று
முருந்தார் பவளத் துவரிதழ்வாய் முகிழ்வா
ணகைக்கு மொழிகின்றார்.

[திருந்து ஆர் மன்றல் குழல் அணங்கின் செவிலித் தாயர், கடல் கடைந்து வருந்தா அமுதம் நிகர்வாளை, மயில்போல்

கொண்டு மன் அவை புக்கு இருந்தார், இருந்த காவலரை இன்னோர் இன்னோர் இவர் என்று, முருந்து ஆர் பவளம் துவர் இதழ் வாய் முகிழ் வாள் நகைக்கு மொழிகின்றார்.]

விளக்கம் :—அவையிருந்த மன்னவர்களை இன்னாரின்னார் என்று பாஞ்சாலிக்குச் செவிலியர் சொல்வாராயினர். திருந்து ஆர் மன்றல் குழல் அணங்கு - பாஞ்சாலி. திருந்து - (தொழிற் பெயர்) திருத்தமாக, அல்லது முறைப்படி அலங்கரித்தல். ஆர் - அமைந்த. மன்றல் - வாசனை. கடல் கடைந்து வருந்தா அமுதம் நிகர்வாளை - கடல் கடைந்து வருந்தாமல் பெற்ற அமுதினை நிகர்த்த பாஞ்சாலியை. மயில்போல் கொண்டு - ஒரு மயிலை அழைத்து வருவதுபோல் அழைத்துக் கொண்டு வந்து, இருந்த இருந் தார் காவலரை - அங்கே இருந்த பெரிய மாலை அணிந்த அரசர்களை.

பவளம் துவர் இதழ் வாய் முருந்து ஆர்முகிழ்வாள் நகை,- என்று அன்வயிக்க. பவளம் துவர் - பவழம்போல் சிவந்த. முருந்து - மயில் இறகின் அடிப்பாகம். முகிழ் வாள் நகை - (முல்லை) அரும்பு போன்ற ஒளியுடை பற்களை உடைய பாஞ்சாலி.

35. மாற்றம் பிறிதொன் றுரையானிவ் வன்போர்
வில்லின் வலிநோக்கிச்
சீற்றஞ் சிந்தை கொண்டழலப் பொய்யே
மலர்ந்த திருமுகத்தான்
ஏற்றந் தன்னில் வேறொருவ ரிப்பே
ருலகி லிலரென்னத்
தோற்றம் படைத்தோன் றனைக்காட்டித் துரியோ
தனன்மற் றிவனென்றார்.

[மாற்றம் பிறிது ஒன்று உரையான் இவன் போர் வில்லில் வலி நோக்கி, சீற்றம் சிந்தை கொண்டு அழல. பொய்யே மலர்ந்த திருமுகத்தான், ஏற்றம் தன்னில் வேறு ஒருவர் இ பேர் உலகில் இலர் என்ன தோற்றம் படைத்தோன் தனை காட்டி துரியோதனன் (மற்று) இவன் என்றார்.

விளக்கம் :—இப் பேருலகில், ஏற்றம் தன்னில் வேறொருவர் இலர் என்ன தோற்றம் படைத்தோன் தனைக் காட்டி, வன் போர் வில்லின் வலிநோக்கி, சிந்தை சீற்றம் கொண்டு அழல.

மாற்றம் பிறிது உரையான் பொய்யே மலர்ந்த திருமுகத்தான், (ஆகிய இவனை) துரியோதனன் இவன் என்றார்,—என்று அன்வயிக்க.

மாற்றம் பிறிது உரையான் - இலக்கு எய்தல் என்ற ஏற்பாட்டைத் தான் விரும்பாமையைத் தெரிவித்தால், திறமையில்லாமையே அதற்குக் காரணம் என்று அவையோர் நினைக்கலாம் என்று அஞ்சி யாதொரு வார்த்தையும் சொல்லாதவனாய். பொய்யே மலர்ந்த திருமுகத்தான் - பொய்யான மலர்ச்சியைத் தோற்றுவிக்கும் திருமுகத்தான். ஏற்றம் தன்னில் - உயர்வினில். தோற்றம் படைத்தோன் - (தன்னில் உயர்ந்தார் வேறொருவர் இல்லை என்ற எண்ணத்தை) தோற்றுவிக்கும் தோற்றத்தினனாகிய. (மற்று : அசை.)

36. மணியின் கிரண வெயிலெறிப்ப மண்ணேழ்
தாங்கு நச்செயிற்றுப்
பணியின் முடிநா யகத்தலையின் பாங்கே
நிரைத்த பஃறலைபோல்
துணியுங் கொடுமை வகிரன்ன துணைவர்
துச்சா தனன்முதலோர்
அணியுங் கழற்காற் சுயோதனனுக் கருகா
சனத்த ரிவரென்றார்.

[மணியின் கிரணம் வெயில் எறிப்ப மண் ஏழ் தாங்கும் நச்சு எயிறு பணியின் முடிநாயகம் தலையின் பாங்கே நிரைத்த பல் தலைபோல், துணியுப் கொடுமை வகிர் அன்ன துணைவர் துச்சாதனன் முதலோர், அணியும் கழல் கால் சுயோதனனுக்கு அருகு ஆசனத்தர் இவர் என்றார்]

**விளக்கம்** :—மணியின் கிரண வெயில் - நாகரத்தினங்களின் ஒளியாகிய வெயில். நச்சு - நஞ்சு. முடி - கொண்டை, சுடிகை, சூட்டு, உச்சி. நாயகத் தலை - பிரதானமான தலை, அல்லது நடுத்தலை. பாங்கு-பக்கம். நிரைத்த-வரிசையாகப் பொருந்திய.

அணியும்...ஆசனத்தர், துணியும்...துச்சாதனன் முதலோர் இவர் என்றார்,— என்று ஈற்றடிகளை அன்வயிக்க. துணியும் - துண்டு செய்யப்பட்ட. வகிர் - துண்டுகள். துணைவர் - உடன்பிறந்தோர் அருகு ஆசனத்தர் - அருகே ஆசனங்களில் வீற்றிருப்பவர்.

'துணியும் கொடுமை வகிர் அன்ன துணைவர்' என்றது கவிக் கூற்று. தற்குறிப் பேற்றம். துச்சாதனன் முதலியோரைக் கொடியர் என்று புலவர் வாசகர்களுக்கு அறிவித்தபடி. அதாவது, துண்டு செய்யப்பட்ட கொடுமையின் துண்டுகள் போன்ற தம்பியர் என்று கூறும் கருத்தது.

37. உலைவந் தயருஞ் சூன் மந்திக் குருகா
நிலங்கீண் டுதவுகுலக்
கலைவன் பலவின் சுளைகீறிக் களிப்போ
டளிக்குங் காந்தாரத்
தலைவன் சகுனி யிவன்கண்டாய் தக்கோ
ராடாச் சூதுக்கும்
நிலைவஞ் சனைக்குந் தரணிபரில் யாரே
யிவற்கு நிகரென்றார்.

[உலைவந்து அயரும் சூல் மந்திக்கு உருகா நிலம் கீண்டு உதவு குலம் கலை, வல் பலவின் சுளை கீறி களிப்போடு அளிக்கும் காந்தாரம் தலைவன் சகுனி இவன் கண்டாய், தக்கோர் ஆடா சூதுக்கும் நிலை வஞ்சனைக்கும் தரணிபரில் யாரே இவற்கு நிகர் என்றார்.]

**விளக்கம் :**—முதல் இரண்டு அடிகள் காந்தார நாட்டு வர்ணனை. உலைவந்து அயரும் - மெலிந்துதளரும். சூல்மந்தி - சூல் முதிர்ந்த பெண் குரங்கு. குலக்கலை - குரங்கு ஜாதியில் உயர்ந்த ஆண் குரங்கு. வல் பலவிள் சுளை கீறி - முதிர்ந்த பலாச்சுளையைக் கீறி எடுத்து. 'நிலம் கீண்டு', என்றதினால் வேரில் பழுத்த பலாப்பழத்தைக் குறிக்கும். வேர்ப்பலாவின் சுளை ருசிமிக்கது. இந்த வர்ணனை, காந்தாரத் தலைவனான சகுனி, மகளிர்பால் அன்புடையவன், என்ற குறிப்பினது எனினும், அவன் தீயன் என்பதை ஈற்றடிகள் தெரிவிக்கின்றன. நிலைவஞ்சனை - விலக்கரிய வஞ்சனை.

38. பேசா தொடுங்கும் பேரறிவாற் பெரும்போர்
வலியாற் பிறப்பான்மெய்த்
தேசா லியற்றும் பலபடையாற் றிண்டோள்
வலியாற் செஞ்சிலைக்கை
ஆசான் மைந்த னிவனறனக்கிங் காரே
யுவமை யமரரிலும்
ஈசா னனைமற் றொருசிறிதொப் பெனலா
மல்ல திலையென்றார்.

[பேசாது அடங்கும் பேர் அறிவால், பெரும் போர் வலியால், பிறப்பால், மெய் தேசால், இயற்றும் பல படையால், திண்தோள்வலியால், செம் சிலை கை ஆசான் மைந்தன் இவன், தனக்கு இங்கு ஆரே உவமை அமரரிலும். ஈசானனை மற்று ஒரு சிறிது ஒப்பு எனல் ஆம், அல்லது இல்லை என்றார்.]

**விளக்கம் :—** அறிவு மிகமிகப் பேசுதல் அடங்கும். பேரறிவாளர் பயனில பேசார். அறிவு, ஆற்றல், மெய்யின் தேசு, விற்கலை ஆற்றல் முதலியவற்றால் சிறந்த துரோணரின் குமாரனான அச்வத்தாமனைக் குறிக்கும் இச் செய்யுள். ஈசானன் - சிவபெருமான். இவனுக்கு ஆற்றலில் ஒரு சிறிது ஒப்பாவான் சிவபெருமானன்றி வேறெவரும் தேவரில் இல்லை, என்றபடி.

அச்வத்தாமன் அந்தணனாயினும், துருபதனுடைய ராஜ்யத்தில் ஒரு பாதியைப் பரிபாலனம் செய்து, வருவதால், அரசரோடு சேர்த்துக் கூறப்பட்டான், என்க.

39. பெண்மைக் கிரதி யெனவந்த பெண்ணா
ரமுதே பேருலகில்
உண்மைக் கிவனே வலிக்கிவனே யுறவுக்
கிவனே யுரைக்கிவனே
திண்மைக் கிவனே நெறிக்கிவனே தேசுக்
கிவனே சிலைக்கிவனே
வண்மைக் கிவனே கன்னனெனு மன்னன்
கண்டாய் மற்றிவனே.

[பெண்மைக்கு இரதி என வந்த பெண் ஆர் அமுதே, பேர் உலகில் உண்மைக்கு இவனே, வலிக்கு இவனே, உறவுக்கு இவனே, உரைக்கு இவனே, திண்மைக்கு இவனே, நெறிக்கு இவனே, தேசுக்கு இவனே, சிலைக்கு இவனே, வண்மைக்கு இவனே, கன்னன் என்னும் மன்னன், கண்டாய் மற்று இவனே.]

**விளக்கம் :—** உண்மை - சத்தியம். உறவு - நட்பு. உரை - புகழ். திண்மை - நெஞ்சின் உறுதி. நெறி - ஒழுக்கம். தேசு - தேஜஸ், மெய்யின் பிரகாசம், மற்று : அசை. கன்னன் என்று அழைக்கப்படும் மன்னன் இவன். காண்பாய், (என்று செவிலியர் சொன்னார்), என்று முடிக்க.

40. அலத்தான் முன்னம் பிளந்தபகை யடர்ப்பான்
கருதிப் பிளப்புண்ட
சலத்தால் யமுனை பிணித்ததெனத் தயங்கும்
படிசேர் தானையினான்
குலத்தா லுயர்ந்த வசுதேவன் குமரன்
களபக் கொங்கையர்மெய்
நலத்தான் மகிழுஞ் சிந்தையினா னறுந்தா
கராம னிவனென்றார்.

[அலத்தால் முன்னம் பிளந்த பகை அடர்ப்பான் கருதி பிளப்பு உண்ட சலத்தால் யமுனை பிணித்தது என, தயங்கும்படி சேர்தானையினான், குலத்தால் உயர்ந்த வசுதேவன் குமரன், களபம் கொங்கையர் மெய் நலத்தால் மகிழும் சிந்தையினான் நறுந்தார் இராமன் இவன் என்றார்.]

**விளக்கம் :—**கண்ணபிரானின் தமையனான பலராமனைக் குறிக்கும் இது. அலம் - கலப்பை (கலப்பையை ஆயுதமாக உடையவன்). பிளந்த பகை - கதி மாறும்படி செய்த பகை. அடர்ப்பான் கருதி - அதற்கு எதிராக ஒன்று செய்து அவனை வெல்ல நினைத்து. பிளப்பு உண்ட சலத்தால் யமுனை பிணித்தது என - இரண்டாகப் பிரிவுண்ட நீரினால், யமுனை (பலராமனை) சுற்றிக் கொண்டது என்று சொல்லும்படி. தயங்கும்படி சேர் தானையினான் - நீல நிறமாய் விளங்கும் தன்மை பொருந்தியதான வஸ்திரத்தை அணிந்தவன். மெய் நலத்தால் - மெய்யைத் தழுவும் இன்பத்தால், (மகிழும் சிந்தையினான்). அத்தகையனாகிய இராமன் இவன், என்றார்.

தேவகியின் கருப்பத்தில் ஆறு மாதமும், ரோகிணியின் கருப்பத்தில் ஆறு மாதமும் இருந்து பிறந்த வசுதேவ குமாரன் இவன். கண்ணனுக்கு மூத்தோன். நீலநிற ஆடையை விரும்பி அணிதல் பற்றி இவனை நீலாம்பரன் என்றும் அழைப்பர்.

இவன் ஒரு சமயம் கோகுலம் சென்று கோவியருடன் யமுனை அருகில் களித்துக் கொண்டிருக்கையில், அந் நதியைத் தான் இருக்குமிடம் வருமாறு அழைக்க, அது தன் அழைப்பை மதிக்காமையின் வெகுண்டு கலப்பையால் அதைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டதாகவும், வலியொடுங்கிய நதி, பெண் வடிவில் அவன் முன் தோன்றித் தன் பிழை பொறுக்குமாறு

வேண்டிக் கொண்டதோடு நீலவஸ்திரம் இரண்டைக் கொடுத்துச் சென்றதாகவும் கூறுவர்.

பலராமன் நீலநிற ஆடை அணிந்திருந்தது, யமுனை தன் பகையைத் தீர்த்துக் கொள்ளுங் கருத்தில் இரண்டாகப் பிரிந்து அவனை வளைத்துக் கொண்டது போன்றிருந்தது, என்று கவி கூறுகின்றார். இது தற்குறிப் பேற்றம்.

சலம், என்பதற்கு நீர் என்பதோடு, கோபம் என்ற பொருளும் உண்டு.

41. இந்தக் குரிசில் யதுகுலத்துக்கெல்லாந்
திலக மெனுமாறு
வந்துற் பவித்துப் பொதுவருடன் வளருங்
கள்ள மாமாயன்
முந்தக் கஞ்ச மாமனுயிர் முடித்தா
னிவற்கு முகிலூர்தி
அந்தப் புரத்தி லாராம மந்தப்
புரத்தி லாராமம்.

[இந்த குரிசில் யது குலத்துக்கு எல்லாம் திலகம் எனும் ஆறு வந்து உற்பவித்து பொதுவருடன் வளரும் கள்ளம் மாமாயன், முந்த கஞ்சன் மாமன் உயிரி முடித்தான்; இவற்கு முகில் ஊர்தி அந்தபுரத்தில் ஆராமம், அந்தப்புரத்தில் ஆராமம்.]

**விளக்கம் :—**கண்ணபிரானைக் குறிக்கும் செய்யுள் இது. உற்பவித்து - அவதரித்து. பொதுவர் - ஆயர். முகில் ஊர்தி - இந்திரன். அந்தப்புரம் - (அந்த புரம்) இந்திரன் வாழும் அந்த அமராவதி நகரம், சத்தியபாமை வசிக்கும் அந்தப்புரம். ஆராமம் - கற்பகச்சோலை. இந்திரனது கற்பகச்சோலை, சத்திய பாமையின் அந்தப்புரத்துச் சோலையாயிற்று, என்றபடி.

சற்றடி குறிக்கும் கதை :—நரகாசுரவதத்தின் பின் கிருஷ்ணன் சத்தியபாமையுடன் தேவலோகம் சென்றான். சத்திய பாமையை வரவேற்று உபசரித்த இந்திராணி, பாரிஜாத மலரை, அது தேவருக்கே உரியது என்ற கருத்தில், அவளுக்கு அளிக்க வில்லை. அம்மலரின்பால் விருப்பங்கொண்ட சத்தியபாமை அம் மரத்தைத் துவாரகைக்குக் கொண்டு வருமாறு கிருஷ்ணனை வேண்ட, அவனும் அவ்வாறே செய்தான். ஆகவே, அந்த

(அமராவதி) புர ஆராமம், சத்தியபாமையின் அந்தப்புர ஆராமமாயிற்று.

அந்தப்புரம் என்பது வேறு வேறு பொருளில் வந்திருத்தல், மடக்கு என்னும் சொல்லணியாகும்.

42. தண்ணந் துளவோன் றனக்கிளவ லிவன்காண்
மின்னே சாத்தகியென்(று)
எண்ணும் போச குலத்தலைவ னெவருஞ்
சூழ விருக்கின்றான்
கண்ணன் றன்னை யவமதித்துக் கழறும்
புன்சொற் கார்முகத்தைத்
திண்ணென் கருத்தா னீங்கிவன்காண் சேதிப்
பெருமான் சிசுபாலன்.

[தண் அம் துளவோன் தனக்கு இளவல் இவன்காண், மின்னே, சாத்தகி என்று எண்ணும் போச குலம் தலைவன்; எவரும் சூழ இருக்கின்றான் கண்ணன் தன்னை அவமதித்து கழறும் புன்சொல் கார் முகத்தை திண்ணென் கருத்தான் ஈங்கு இவன்காண் சேதி பெருமான் சிசுபாலன்.]

**விளக்கம்:** —மின்னே, தண் அம்...இளவல், சாத்தகி என்று எண்ணும் போச குலத் தலைவன் இவன்காண்; ஈங்கு, எவரும் சூழ இருக்கின்றான், இவன், கண்ணன் தன்னை...கார்முகத்தை திண்ணென் கருத்தான் சேதிப்பெருமான் சிசுபாலன் காண்,— என்று அன்வயிக்க.

சாத்தகி, சிசுபாலர்களை அறிமுகப்படுத்தும் செய்யுள் இது. எண்ணும் - சாத்தகி என்று எல்லோராலும் மதித்துப் போற்றப் படும். புன்சொல் கார்முகத்தை திண்ணென் கருத்தான் - இழிவான சொற்களாகிய வில்லை வலியது என்று எண்ணும் எண்ணத்தினன்; அதாவது, கண்ணனை எப்பொழுதும் தூஷிப் பதையே, அவனை (கண்ணனை) வெல்லற்குரிய திண்ணிய கருவியாகக் கொண்டு சமயம் நேரும்போதெல்லாம் அவனைத் தூஷித்தலைச் செய்து வந்தான், என்றபடி. மின்னே, (விளி) பாஞ்சாலியே.

வசுதேவனுக்குச் சகோதரன் என்ற முறையுடையவனாகிய சத்யகன் என்பவனது மகன் சாத்தகி. வயதில் இளையவனாத லால் கண்ணனுக்குத் தம்பி என்ற முறையினானான்.

வைகுண்டத்தின் துவாரபாலகராகிய ஜயவிஜயர் என்பவர் சநகாதி முனிவர்களால் சபிக்கப்பட்டு, அதன் பயனாய் இரண்ய இரணியாக்ஷராகவும், இராவண கும்பகர்ணராகவும், சிசுபால தந்தவக்ரராகவும் பூமியில் பிறந்து, திருமாலால் கொல்லப் பெற்றுச் சாபம் நீங்கினர் என்பது கதை.

வசுதேவனது சகோதரியான சுருதசிரவை என்பவளுடைய மகன் சிசுபாலன். இவன் பிறந்தபொழுது நான்கு கைகளையும், மூன்று கண்களையும் உடையவனாய் இருந்தான். யார் தொட்ட பொழுது இவனது இரண்டு கைகளும் ஒரு விழியும் மறைகின்றனவோ, அவனால் இவனுக்கு மரணம் என்று அசரீரி வாக்கு ஏற்பட்டது. கண்ணன் தொட்டதும் கைகளும் கண்ணும் மறையவே, அவனது தாய், ''என்ன செய்தாலும் என் மகனை நீ கொல்லக்கூடாது,'' என்று வேண்ட, கண்ணனும், 'நூறு பிழைகள் பொறுப்பேன்,' என்றான்.

சிசுபாலன் கண்ணனைத் தன் பகைவனாகக் கருதினமையின், அவனைத் தூஷிப்பதைத் தொழிலாகக் கொண்டவனாயினான்.

43. தார்வண் டிமிரத் தேனொழுகுந் தடந்தோள்
வீரன் சராசந்தன்
போர்வெஞ் சரத்தால் யாவரையும் புறங்கண்
டன்றிப் போகாதான்
சீர்வண் மதுரா புரிவிடுத்துத் துவரா
பதியிற் சென்றொதுங்கக்
கார்வண் ணனையு நெடுங்காலம் வென்றா
னிவன்கா ணென்றாரே.

[தார் வண்டு இமிர தேன் ஒழுகும் தடம் தோள் வீரன் சராசந்தன், போர் வெம்சரத்தால் யாவரையும் புறம் கண்டு அன்றி போகாதான், சீர் வள் மதுராபுரி விடுத்து துவராபதியில் சென்று ஒதுங்க, கார் வண்ணனையும் நெடும் காலம் வென்றான் இவன் காண் என்றார் (ஏ).]

**விளக்கம் :**—தார்வண்டு...வீரன், போர் வெம் சரத்தால்... போகாதான் (ஆகிய) சராசந்தன்; கார்வண்ணனையும் சீர்வள் மதுராபுரி விடுத்து துவராபதியில் சென்று நெடுங்காலம் ஒதுங்க வென்றான் இவன் காண், என்றார்,—என்று அன்வயிக்க.

துவராபதி - துவாரகை. மதுராபுரி - வடமதுரை. பிருகத்திரன் என்ற மகத தேச மன்னன் பிள்ளையில்லாமையால்

கானகம் சென்று, அங்கே தவத்தில் படிந்திருந்த சண்டகௌசிகன் என்னும் முனிவரை வேண்ட, அவர் மாங்கனி ஒன்றை அவனுக்கு அளித்தார். அதை அவன் தன் பத்தினியர்க்குப் பகிர்ந்து கொடுத்தான். இருவரும் சூலுற்றுப் பாதிபாதியாகிய குழந்தையைப் பெற்றனர். மன்னவன் அப்பாதிக் குழந்தைகளை ஊர்ப்புறத்தே எறிந்துவிட்டான். ஜரை என்னும் கிராம தேவதை, அப் பகுதிகளைக் கண்டு, இரண்டையும் ஒன்றாகப் பொருத்தி, **சராசந்தன்** என்று பெயரிட்டு வளர்க்கும்படி கூறி, மன்னனிடம் அக் குழந்தையைக் கொடுத்து விட்டுச் சென்றாள். அவன் வயது வந்ததும், **கிரிவிரசம்** என்னும் ஊரைத் தலைநகராகக்கொண்டு அரசாண்டு வந்தான். அவனது பெண்களான **அஸ்தி, பிராஸ்தி,** என்பவர்களைக் கம்சன் மணந்தான். கண்ணன் கம்சனைக் கொன்றது காரணமாக, அவன் கண்ணனோடு பகை கொண்டு, வட மதுரையைப் பதினெட்டு முறை தாக்கினான். கண்ணன் போரில் அவனைக் கொல்ல விரும்பாது, வடமதுரையைக் கைவிட்டு மேலைக் கடலில் துவாரகையை நிருமித்துக் கொண்டு தனது யாதவ ஜனங்களோடு அங்கே போய்ச் சேர்ந்தான், என்பது வரலாறு.

44. **பனைக்கை பிறைவெண் கோட்டயிரா வதமே**
**போலும் பகட்டிலிவன்**
**வினைக்கட் புகுந்தா லெதிர்நின்று வேறா**
**ரிவனை வெல்கிற்பார்**
**முனைக்கட் செங்கட் டீயுமிழு முகத்தான்**
**மாதே பகதத்தன்**
**தனக்குத் தானே நிகரென்னத் தருக்கொ**
**டண்டே யிருக்கின்றான்.**

[பனை கை பிறை வெள் கோடு அயிராவதமே போலும் பகட்டில் (யானையின்மேல்) இவன் வினைக்கண் புகுந்தால் எதிர் நின்று வேறு ஆர் இவனை வெல்கிற்பார்? முனைக்கண் செம் கண் தீ உமிழும் முகத்தான், மாதே, பகதத்தன், தனக்குத்தானே நிகர் என்ன தருக்கொடு சண்டே இருக்கின்றான்.]

**விளக்கம் :**—மாதே, தனக்குத்தானே... இருக்கின்றான் பகதத்தன், முனைக்கண்... முகத்தான், பனை கை பிறை... வேறு ஆர் இவனை வெல்கிற்பார், என்று அன்வயிக்க.

பனை கை - பனைமரம் போன்ற துதிக்கை. கோடு-கொம்பு. பகடு - யானை. முனைக்கண் - போர்க்களத்திலே. வினைக்கண் புகுந்தால் - போர்த்தொழிலில் இறங்கினால்.

இவன் நரகாசுரன் மகன். இவன் யானைப்போரில் வல்ல வன். ஒரு காலத்தில் நிகழ்ந்த தேவாசுர யுத்தத்தில் இவன் இந்திரனுக்குத் துணையமைந்ததற்காக மகிழ்ந்த இந்திரன், நூறு யானை பலமுடைய சுப்ரதீபம் என்ற யானையை இவனுக்கு அளித்தான், என்பது வரலாறு.

அயிராவதம் (ஐராவதம்) இந்திரனது பட்டத்து யானை, வெண்ணிறத்ததும் நான்கு தந்தங்களை உடையதுமாகும். திசை யானைகளில் ஐராவதம் ஒன்று; கீழ்த்திசைக்கு உரியது, என்பர்.

45. இவன்சல் லியனென் றுரைசான்ற விகல்வேன்
மன்னர்க் கேறனையான்
இவன்றன்பகைவர் யாவரையு மிமையோ
ராக்கு மெழினீலன்
இவன் றண் டமிழ்தே ரடல்வழுதி யிவன்றே
ரிரவி குலவளவன்
இவன்செந் தழலோன் மரபாகி யீரே
ழுலகும் புகழ்சேரன்.

[இவன் சல்லியன் என்று உரை சான்ற இகல் வேல் மன்னர்க்கு ஏறு அனையான், இவன் தன் பகைவர் யாவரையும் இமையோர் ஆக்கும் எழில் நீலன், இவன் தண் தமிழ் தேர் அடல் வழுதி, இவன் தேர் இரவி குல வளவன், இவன் செந் தழலோன் மரபு ஆகி ஈர் ஏழ் உலகும் புகழ் சேரன்.]

**விளக்கம் :**—சல்லியன் என்று உரை சான்ற இவன் வேல் மன்னற்கு ஏறு அனையான். உரை சான்ற - புகழ் பெற்ற. பகைவரை இமையோராக்குதல் - பகைவரைக் கொல்லல். தமிழ் தேர்-தமிழை ஆய்ந்து, அதில் தேர்ச்சி மிக்க (வழுதி). தேர் இரவி குல வளவன் - தேரையுடைய சூரியனது குலத்தில் தோன்றிய சோழன். செந்தழலோன் மரபு - அக்கினி வம்சம்.

சல்லியன், நீலன், பாண்டியன், சோழன், சேரனாகியவர்களைக் குறிக்கும் செய்யுள் இது. சல்லியன்மத்திர நாட்டுஅரசன்; பாண்டுவின் மனைவிகளில் ஒருத்தியாகிய மாத்திரி என்பாவின் சகோதரன். நீலன் என்பவன் பிரசித்தி பெற்ற அரசர்களில்

ஒருவன். இவன், பகைவர்க்கு அசனி போன்றவன். மற்றவர் தமிழ் மூவேந்தர் ஆவர்.

46. வில்லாண் மையினால் வெங்கருப்பு வில்லோன்
றனக்கே நிகரென்னப்
பல்லார் புகழும் பான்மையினாற் பதினெண்
புவிக்கும் பதியாய
எல்லா வரசு நின்பொருட்டா லீண்டே
திரண்ட வின்னமுதச்
சொல்லாய் நல்லாய் மென்பூவாய் தோகாய்
பாவாய் திரௌபதியே.

[வில் ஆண்மையினால் வெம் கருப்பு வில்லோன் தனக்கே நிகர் என்ன பல்லார் புகழும் பான்மையினால் பதினெண் புவிக்கும் பதியாய எல்லா அரசும் நின் பொருட்டால், ஈண்டே திரண்ட, இன் அமுதம் சொல்லாய், நல்லாய், மெல் பூவாய், தோகாய், பாவாய், திரௌபதியே.]

**விளக்கம்:**—இதுவரை கூறி வந்தவர் போக, மற்ற எல்லா அரசர்களையும் குறிக்கும் இது. கருப்பு வில்லோன் - கரும்பு வில்லினனான மன்மதன். ஈண்டே திரண்ட - இங்கே வந்து கூடியுள்ளார். பூவை - நாகணவாய்ப் புள். பாவை - பதுமை. பல்லார் - பலர்.

**பதினெண் புவி** :—திரவிடம், சிங்களம், சோனகம், சாவகம், சீனம். துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், குசனம், என்பன.

47. இவரிற் றனது தோள்வலியா லரியே
றென்ன வெழுந்திருந்தத்
தவரிற் புரிநா ணுறவேற்றித் தழல்கான்
முனைவெஞ் சாயகத்தால்
பவரிற் செறிய நிரைத்துருளும் பல்வாய்த்
திகிரிப் பயிலிலக்கைக்
கவரிற் செழுந்தார் புனைந்தவனைக் கைக்கொண்
டிடுநீ கடிதென்றார்.

[இவரில் தனது தோள் வலியால் அரி ஏறு என்ன எழுந்திருந்து, அ தவரில் புரி நாண் உற ஏற்றி, தழல் கால் முனை வெம் சாயகத்தால் பவரின் செறிய நிரைத்து உருளும் பல்வாய் திகிரி பயில் இலக்கை கவரின், செழும் தார் புனைந்து அவனை கைக் கொண்டிடு நீ கடிது என்றார்.]

**விளக்கம் :**—தவர் - வில். தழல் கால் முனை வெம் சாயகம்- நெருப்பைக் கக்கும் முனையை உடைய கொடிய அம்பு. பவர் - இலைக் காம்பு போன்ற ஆரக்கால். ஆரக் கால்களால் நெருங் கும்படி வரிசைப்படுத்தப்பட்டு உருளுகின்ற பல நுனிகளைக் கொண்ட சக்கரத்தில் அமைந்திருக்கும் இலக்கை,—என்பது மூன் றாவது அடியின் பொருள். கவரின் - வீழ்த்தினால். இலக்கை எறிந்தவனை மாலை சூட்டிக் கணவனாகக் கொள்வாயாக, என்று திரௌபதிக்குச் செவிலியர் கூறினார், என்க.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

48. முத்தநகைப் பவளவிதழ்க் குளிர்வெண் டிங்கண்
முகத்தாளைக் கைத்தாயர் மொழிந்த காலைச்
சித்திரமொத் துணர்வழிந்து தத்தம் பைம்பொற்
றிகழரியா சனத்திருந்தார் சிற்சில் வேந்தர்
அத்தனுவின் பெருமையையு மிலக்கத் துள்ள
வருமையையுங் கருதாம லாண்மை கூறி
எத்தனையெத் தனை வேந்த ராசை கூர
யான்யானென் றெழுந்திருந்தார் யானை
போல்வார்.

[முத்தம் நகை பவள இதழ் குளிர் வெள் திங்கள் முகத் தாளை (நோக்கி). கைத் தாயர் மொழிந்த காலை, சித்திரம் ஒத்து உணர்வு அழிந்து தம் தம் பைம் பொன் திகழ் அரியா சனத்து இருந்தார் சிற்சில்வேந்தர், அ தனுவின் பெருமையையும் இலக்கத்து உள்ள அருமையையும் கருதாமல் ஆண்மை கூறி எத்தனை எத்தனை வேந்தர் ஆசை கூர, யான் யான் என்று எழுந்திருந்தார் யானை போல்வார்.]

**விளக்கம் :**—திரௌபதியை நோக்கிச் செவிலியர் (முன்னே கூறியவாறு) சொன்னபொழுது,—என்பது முதலடியின் பொருள்.

சிற்சில வேந்தர் தம்தம் பைம் பொன் திகழ் அரியாசனத்து, உணர்வு அழிந்து சித்திரம் ஒத்து வீற்றிருந்தார், என்பது இரண் டாவது அடியின் பொருள்.

யானை போல்வாரான மிகப் பல வேந்தர் ஆசை மிகவே, அத் தனுவின் வலிமையையும் இலக்கத்து உள்ளதான எய்தற்கு அரிய தன்மையையும் கருதாமல், வீர மொழிகள் கூறிக்கொண்டு யான் யான் என்று ஒருவர் முன் ஒருவராக எழுந்தனர்,—என்பது ஈற்றடிகளின் பொருள். எத்தனை எத்தனை வேந்தர் - வேந்தர் மிகப் பலர்.

வேட்கை மிகுதியால் கருத்தழிந்து செய்ய முடியாததைச் செய்ய முற்பட்டாராதலின் வேந்தர் (மத) யானை போல்வா ராயினர்.

49. தனுவெடுத்து நாண்பிணிப்பான் கிளரா நின்ற
தன்குலத்தி னவனிபரைத் தடுத்து வேதப்
பனுவலுக்குத் தவத்தினுக்கு முரிய வேள்விப்
பார்ப்பனமாக் களினிடையே பாண்டு மைந்தர்
அனுவுருக்கொண் டுருமாறி யிருந்த தன்மை
யறிந்தருளி யலாயுதனோ டருளிச் செய்தான்
மனுமுறைக்கு வரம்பாகி வருத்தம் வீட
மா நிலமீ தவதரித்த வாசு தேவன்.

[தனு எடுத்து நாண் பிணிப்பான் கிளரா நின்ற தன் குலத்தின் அவனிபரை தடுத்து, வேதம் பனுவலுக்கும் தவத்தினுக்கும் உரிய வேள்வி பார்ப்பன மாக்கள் இடையே பாண்டு மைந்தர் அனு உரு கொண்டு உருமாறி இருந்த தன்மை அறிந்து அருளி, அலாயுதனோடு அருளிச் செய்தான்; மனு முறைக்கு வரம்பு ஆகி வருத்தம் வீட மா நிலம் மீது அவதரித்த வாசுதேவன்.]

**விளக்கம் :**—மனு முறைக்கு...வாசுதேவன், தனு எடுத்து... அருளிச் செய்தான், என்பது அன்வயம்.

கிளரா நின்ற- ஊக்க முடையராய் இருந்த. வேதப் பனுவல்- வேதங்களாகிய நூல்கள். அனு உரு - (அநுரூபம் என்பதின் சிதைவு) ஒத்ததான உருவம், (பார்ப்பனர் போன்ற தோற்ற முடைய உருவம்). அருளிச் செய்தல் - கூறல். மனு முறைக்கு வரம்பு - மனு நீதிக்கு எல்லையாகி, அதாவது தர்மம் கெடாது காக்கும் வேலியாகி. வருத்தம் வீட - துன்பம் அகல, பூபாரம் தீர்க்க, அதாவது துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்ய. அலாயுதன் - (ஹலாயுதன்) கலப்பையை ஆயுதமாக உடைய பலராமன்.

50. பலருமுட னகங்கரித்து மேருசாரப்
பாரவரி சிலையினிலை பார்த்து மீண்டார்
பலருமொரு கையிற்பிடிக்க வடங்கா வில்லின்
பருமைதனைக் குறித்துமனம் பதைக்கப்
போனார்
பலருமலர்க் கைப்படுத்திப் பெயர்க்க மாட்டார்
பணைத்தோணொந் தமையுமெனப் பயந்து
நின்றார்
பலருமெடுத் தணிமணிநாண் பூட்ட வாராப்
பரிசொடுமற் றதன்வலிமை பகர்ந்தே
விட்டார்.

[பலரும் உடன் அகங்கரித்து மேரு சார் அ பாரம் வரி சிலையின் நிலை பார்த்து மீண்டார், பலரும் ஒரு கையின் பிடிக்க அடங்கா வில்லின் பருமை தனை குறித்து மனம் பதைக்கப் போனார், பலரும் மலர் கை படுத்திபெயர்க்க மாட்டார், பணை தோள் நொந்து அமையும் என பயந்து நின்றார், பலரும் எடுத்து அணி மணி நாண் பூட்ட வாரா பரிசொடு மற்று அதன் வலிமை பகர்ந்தே விட்டார்.]

**விளக்கம் :**—பல அரசர்கள் ஒன்றுபட்டுச் செருக்கி (வில்லின் அருகில் சென்று) மேரு மலையை ஒத்த பாரமுடைய அந்தக் கட்டமைந்த வில்லின் (வளைக்க முடியாத்) தன்மையைப் பார்த்து (வாய் பேசாமல்) திரும்பினார்கள்; பல அரசர்கள் ஒரு கையினால் பற்றுதற்கு அடங்காத (அந்த) வில்லின் பருமையை நோக்கி மனம் பதைக்க அப்பாற் போனார்கள்; பல அரசர்கள் மலர்க் கையினால் பிடித்து (ஆனால்) அதை நிலைபெயரச் செய்ய மாட்டாதவர்களாய்த் தமது பருத்த தோள்கள் வருந்தப் பெற்று, முயன்றது போதும் என்று அஞ்சி நின்றார்கள்; பல அரசர்கள் வில்லைப் பற்றி எடுத்து, (ஆனால்) அழகிய உறுதியான நாண் கயிற்றைப் பூட்டத் தம்மால் முடியாத தன்மையோடு, அதன் வலிமையையும் கூறிக்கொண்டே, முயற்சியை வீட்டுவிட்டுச் சென்றார்கள், என்பது பொருள். (மற்று : அசை).

இது மேன்மேலுயர்ச்சி அணியின் பாற்படும்.

51. வல்லியம்போ னடந்துதனு விருகை யாலும்
வாரியெடுத் தெதிர்நிறுத்தி மல்லல் வாகுச்
சல்லியனு நாணேற்ற முடியாதந்தத்
தனுவுடனே தன்றனுவுந் தகர வீழ்ந்தான்

வில்லியரின் முன்ணெண்ணத் தக்க வின்மை
வேந்தடுபோர்ப் பகதத்தன் வில்வே தத்தில்
சொல்லியவா றெடுத்தூன்றி மற்றைக் கையாற்
றொல்வலிநா ணியுமெடுத்துத் தோளுஞ்
சோர்ந்தான்.

[வல்லியம்போல் நடந்து தனு இரு கையாலும் வாரிஎடுத்து, எதிர் நிறுத்தி மல்லல் வாகு சல்லியனும் நாண் ஏற்ற முடியாது, அந்த தனுவுடனே தன் தனுவும் தகர வீழ்ந்தான்; வில்லியர்ல் முன் எண்ணத் தக்க வின்மை வேந்து அடு போர் பகதத்தன், வில் வேதத்தில் சொல்லிய ஆறு எடுத்து ஊன்றி மற்றை கையால் தொல் வலி நாணியும் எடுத்து தோளும் சோர்ந்தான்.]

**விளக்கம் :**—வல்லியம் - புலி. மல்லல் வாகு - வலிய தோள். தன் தனுவும் - தனது உடலும். தகர - வலி யழிய, நொருங்க.

சல்லியன் வில்லை எடுத்தான், ஆனால் நாணேற்ற முடியாது உடல் வலி யழிய வீழ்ந்தான், என்ற பொருளது முதல் இரண் டடிகள். பகதத்தன், வில்லை எடுத்ததோடு நாண் பூட்ட முயன்ற அளவில் வலி தளர்ந்து முயற்சியை விட்டு விட்டான், என்பது சுற்றடிகளின் பொருள்.

'தொல்வலி' என்பது மிகுந்த, அல்லது முதிர்ந்த வலி, என்ற பொருளது. இதுவும் மேன்மேலுயர்ச்சி அணியை உட் கொண்டதே.

52. பூகதனா கியவன்றே பகைவ ரெல்லாம்
போற்றவளர்ந் துலகாளப் புனைந்த மௌலி
மாகதனும் வில்லெடுத்து வரிநாண் வில்லின்
மார்பளவும் போக்கினான் வன்போர் நீலன்
சாகதனென் றவைதுதிக்க நெடுநாண் கொற்றத்
தனுவொருசா ணெனக் கொணர்ந்தான்
சாணேயல்ல
வேகதனு நால்விரலென் றுரைக்க நாணி
வீக்கினான்வ லம்புரித்தார் வேந்தர் வேந்தே.

[பூகதன் ஆகிய அன்றே பகைவர் எலாம் போற்ற வளர்ந்து உலகு ஆள புனைந்த மௌலி மாகதனும், வில் எடுத்து வரி நாண் வில்லின் மார்பு அளவும் போக்கினான்; வல் போர் நீலன் சாதகன் என்று அவை துதிக்க நெடு நாண் கொற்றம் தனு ஒரு

சாண் என கொணர்ந்தான்; சாணே அல்ல, வேகம் தனு நால் விரல் என்று நாணி வீக்கினான்' வலம்புரி தார் வேந்தர் வேந்தே.[

**விளக்கம் :**—பூகதன் ஆகிய அன்றே - பிறந்த பொழுதே. மாகதன் - மகத தேசாதி பதியாகிய சராசந்தன். வரி நாண் வில்லின் மார்பு அளவும் போக்கினான் - நீண்ட நாணை வில்லின் நடுவிடம் அளவும் இழுத்தான், ஆனால் அதற்குமேல் இழுத்து நாண் பூட்ட இயலாதவனானான். சாகதன் - அரிய செயல் களைச் செய்பவன். ஒரு சாண் எனக் கொணர்ந்தான் - (நீலன், சாகதன் என்று அவையினர் கொண்டாடும்படி நாண் கயிற்றை வில்லின் நுனி) ஒரு சாண் தூரமே என்று கூறக்கூடிய அளவு கொணர்ந்தான், ஆனால், நாணைப் பூட்ட இயலாதவனா னான். வேகம் தனு - உக்ரத்தையுடைய வில். வலம்புரி தார் வேந்தர் வேந்து - துரியோதனன். அவன் வில்லின் நுனி நால் விரல் தூரமேயுள்ளது என்று சொல்லும் அளவு நாணை இழுத்துக் கொணர்ந்தான், ஆனால் நாண் பூட்டுதலைச் செய்ய முடியவில்லை, என்க.

சாகதன் - (ஸாஹஸன்) அரிய செயலை எல்லோரும் வியக் கும்படி செய்பவன். சராசந்தன், நீலன், துரியோதனன் ஆகிய மூவரது முயற்சியும் திறமையின் அளவும் இச் செய்யுளால் கூறப் பட்டன.

53. கலைவருத்த மறக்கற்ற கன்ன னென்னுங்
கழற்காளை யரனிருந்த கயிலை யென்னும்
மலைவருத்த மறவெடுத்த நிருத னென்ன
மன்னவையின் வலியுடனே வந்து தோன்றி
நிலைவருத்த மறநின்று பரிய கோல
நீள்வரிநாண் மயிர்க்கிடைக்கீழ் நின்ற
தென்னச்
சிலைவருத்த மறவளைத்து வளைந்த வண்ணச்
சிலைக்காறன் முடித்தலையைச் சிந்த
வீழ்ந்தான்.

[கலை வருத்தம் அற கற்ற கன்னன் என்னும் கழல் காளை, அரன் இருந்த கயிலை என்னும் மலை வருத்தம் அற எடுத்த நிருதன் என்ன, மன் அவையின் வலியுடனே வந்து தோன்றி, நிலை வருத்தம் அற நின்று, பரிய கோலம் நீள் வரி நாண் மயிர்க்

கிடை கீழ் நின்றது என்ன, சிலை வருத்தம் அற வளைத்து, வளைந்த வண்ணம் (அழகிய) சிலை கால் தன் முடி தலைசிந்த வீழ்ந்தான்.]

**விளக்கம் :**—கலைவருத்தம் அறக் கற்ற - கலைகளைச் சுலபமாகக் கற்றுத் தேர்ச்சியுற்ற. நிருதன் - கைலாச மலையைப் பறித்த இராவணன். நிலை வருத்தம் அற நின்று - வில் வீரர்க்குரிய பைசாசம், மண்டலம், சூலிடம், பிரதியாலிடம் என்று நூல்கள் கூறும் நிலைகள் ஒன்றில் சிரமமின்றி நின்று. வருத்தம் அற சிலை வளைத்து - எளிதே வில்லை வளைத்து. முடித்தலை சிந்த-கிரீடம் அணிந்த (கர்ணனது) தலையை வில் கால் (வில்லின் நுனி) தாக்க.

கர்ணன் வில்லை எளிதே எடுத்து வளைத்தானேனும், நாண் பூட்ட ஒரு மயிரிழை அளவில் வில்லின் கால் தாக்க விழுந்தான், என்க.

கைலாச மலையை எளிதே எடுத்த இராவணன் பங்கம் அடைந்ததுபோல், கர்ணனும் ஒரு மயிர்க்கிடையில் விழுந்து பங்கப்பட்டதால், இராவணன் உவமையாயினான்.

### அருச்சுனன் இலக்கு எய்தல்

54. அரவநெடுங் கொடியுயர்த்தோன் முதலா வுள்ள
வனைவருமங் கொருதனுவுக் காற்றா ராகி
உரவுமெலிந் தெழின்மாழ்கிச் செயல் வேறின்றி
யுள்ளமழிந் திருந்ததற்பி னுருமே றென்னக்
கரவுடனந் தணர்நாப்ப ணிருந்த கொற்றக்
கருமுகில்வா கனன்புதல்வன் கரிய மேனி
இரவிகுலச் சிறுவனைப்போ லெழுந்து மன்ற
லிளங்கொடிதம் முனைநோக்கி இயம்பி
னானே.

[அரவம் நெடும் கொடி உயர்த்தோன் முதலா உள்ள அனைவரும் அங்கு ஒரு தனுவுக்கு ஆற்றார் ஆகி, உரவு மெலிந்து எழில் மாழ்கி, செயல் வேறு இன்றி உள்ளம் அழிந்து இருந்ததன் பின், உரும் ஏறு என்ன கரவுடன் அந்த அந்தணர் நாப்பண் இருந்த கொற்றம் கருமுகில் வாகனன் புதல்வன், கரிய மேனி இரவிகுலம் சிறுவனைப் போல் எழுந்து, மன்றல் இளம் கொடி தம் முனை நோக்கி இயம்பினானே.]

**விளக்கம் :**—அரவ நெடுங்கொடி உயர்த்தோன் - பாம்புக் கொடியுடையனான துரியோதனன். ஒரு வில்லுக்கு ஆற்றாராகி - ஒப்பற்ற அவ் வில்லினிடம் தம் வலிமை காட்ட முடியாதவராகி. உரவு மெலிந்து - வலிகுன்றி. எழில் மாழ்கி - களை இழந்து. உரும் ஏறு - பேரிடி, (உரும் ஏறு என்ன இயம்பினான், என்று இயைக்க.) கரவுடன் - அந்தண வேடத்தில் மறைந்து. கருமுகில் வாகனன் - இந்திரன். இரவி குலக் கரியமேனிச் சிறுவன் - இராமபிரான். மன்றல் - வாசனை. விவாகத்திற்குரிய என்றுமாம். திரௌபதி உத்தம சாதிப் பெண்ணாதலின் இயற்கை மணமுடையவள், என்று முதல் நூல் கூறும். முன் - தமையனான திட்டத்துய்மன்.

55. மன்மரபிற் பிறந்திருதோள் வலியாலிந்த
மண்ணாளு மவர்க்கன்றி மறைநூல் வாணர்
தொன்மரபிற் பிறந்தவரு மிலக்கு வீழ்த்தாற்
சூட்டுமோ தொடையலிளந் தோ கையென்னத்
தன்மரபுக் கணிதிலக மான வீரன்
றகவன்றோ மன்றலுக்குத் தாழ்வோ வென்றான்
வின்மரபிற் சிறந்தநெடு வில்லை யீசன்
மேருகிரி யெடுத்ததென விரைவிற்கொண்டான்.

[மன்மரபில் பிறந்து இரு தோள்வலியால் இந்த மண் ஆளும் அவர்க்கு அன்றி, மறை நூல்வாணர் தொல் மரபில் பிறந்தவரும் இலக்கு வீழ்த்தால் சூட்டுமோ தொடையல் இளம் தோகை என்ன, தன் மரபுக்கு அணிதிலகம் ஆன வீரன் தகவு அன்றோ மன்றலுக்கு! தாழ்வோ! என்றான்; வில் மரபில் சிறந்த நெடும் வில்லை ஈசன் (திரிபுர சங்காரம் செய்த பொழுது) மேருகிரி எடுத்தது என, விரைவில் கொண்டாள்.]

**விளக்கம் :**—மன்மரபு - க்ஷத்திரிய வம்சம். தன் மரபுக்கு அணி திலகமான வீரன் - தான் வந்த சோமக குலத்துக்கு அழகிய திலகம் போன்றவனான திட்டத்துய்மன். தகவன்றோ-பெருமை அன்றோ. தாழ்வோ - அரச குலப் பெண்ணை அந்தணன் மணப்பது தாழ்வாமோ, (அன்று, என்றபடி). மன்றல் - விவாகம்.

(அவ்வாறு திட்டத்துய்மன் கூற) வில் மரபில் சிறந்த நெடு வில்லை - வில் இனங்களுள் மிகச் சிறந்த பெரியவில்லை, (அர்ச்சுனன். எளிதே எடுத்தான்.)

56. கிளர்மகுட வயவேந்தர் நாண்க ளெல்லாங்
கீழாகத் தனிநெடுநாண் கிளர வேற்றித்
தளர்வறுசா யகந்தொடுத்துக் கற்றோர் யாருந்
தனுநூலுக் காசிரியன் றானே யென்ன
உளர்திகிரிச் சுழலிலக்கை யவையோர் தங்க
ளூக்கமுடன் விழவெய்தா னுரவுத் தோளான்
வளருமருந் தழல்வேள்வி முனிவ ரார்த்தார்
வாசநறு மலர்சொரிந்து வானோ ரார்த்தார்.

[கிளர் மகுடம் வயம் வேந்தர் நாண்கள் எல்லாம் கீழாக, தனி நெடும் நாண் கிளர ஏற்றி தளர்வு அறு சாயகம் தொடுத்து கற்றோர் யாரும் தனு நூலுக்கு ஆசிரியன் தானே என்ன, உளர் திகிரி சுழல் இலக்கை அவையோர் தங்கள் ஊக்கமுடன் விழ எய்தான் உரவு தோளான், வளரும் அரும் தழல் வேள்வி முனிவர் ஆர்த்தார், வாச நறும் மலர் சொரிந்து வானோர் ஆர்த்தார்.]

**விளக்கம் :**—நாண்கள் கீழாக - வில்லாற்றல் தாழ்வுற, அல்லது அரசர்களின் நாணநிலை இழிவுற, மானபங்கம், உண்டாக. கிளர ஏற்றி - மேலாகும்படி நாணை ஏற்றி. தளர்வு அறு - வலிமை மிக்க. சாயகம் - அம்பு. தனு நூலுக்கு ஆசிரியன் தானே என்ன - வில்வித்தைக்கு இவனே ஆசிரியன் என்று சொல்லும்படி. உளர் திகிரி - சுற்றிக் கொண்டிருக்கும் சக்கரம். அர்ச்சுனன் இலக்கை வீழ்த்த அந்தணர்களோடு வானவரும் ஆரவாரம் செய்தார்கள், என்க.

அவையோர் தங்கள் ஊக்கமுடன் (இலக்கு) விழ எய்தான் : அவையிருந்த அரசர்களின் மன எழுச்சியோடு, அல்லது உற்சாகத்தோடு இலக்கும் விழ எய்தான் என்று உற்சாகம் வீழ்தலும், இலக்கு வீழ்தலும் ஒன்றாக நிகழ்த்தப்பட்டிருப்பதால், **உடன் நிகழ்ச்சி** அணியாகும். 'ஆர்த்தார்' என்ற சொல் ஒரே பொருளில் இருமுறை வந்திருப்பதால், சொற்பொருட் பின்வரு நிலை அணி.

57. தாஞ்சாரற் கரியதனு வளைத்தா னென்று
தரணிபர்தம் முகங்கருகத் தனுவி னோடும்
பூஞ்சாரன் மணிநீல கிரிபோ னின்ற
பூசுரனை யிவனவனே போன்மென்
றெண்ணிப்
பாஞ்சாலர் பதிகன்னி யிருதன் செங்கட்
பங்கயத்தாற் பாங்காகப் பரிந்து நோக்கித்
தேஞ்சார நறுங்கழுநீர்ச் செய்ய தாமஞ்
செம்மணிகா லருவியெனச் சேர்த்தி னாளே.

[தாம் சாரற்கு அரிய தனு வளைத்தான் என்று தரணிபர் தம் முகம் கருக, தனுவினோடும் பூ சாரல் மணி நீல கிரிபோல் நின்ற பூ சுரனை இவன் அவனே போன்ம் என்று எண்ணி, பாஞ் சாலர் பதி கன்னி இரு தன் செம் கண் பங்கயத்தால் பாங்கு ஆக பரிந்து நோக்கி தேம் சாரம் நறும் கழுநீர் செய்ய தாமம் செம் மணி கால் அருவி என சேர்த்தினாளே.]

**விளக்கம் :**—தாம் சாரற்கு அரிய - தாங்கள் நெருங்குதற்கு அரிய. பூஞ்சாரல் - பூஞ்செடிகள் நிறைந்த சாரல். மணி நீல கிரி- அழகிய நீலமலை. இவன் அவனே - இவன் அர்ச்சுனனே. கண் தாமரை - கண்ணாகிய தாமரையால், தேம்சாரம் - தேன். செய்ய தாமம் - அழகிய, அல்லது சிவந்த மாலை. செம் மணி கால் அருவி என - சிவந்த மணிகளைத் தள்ளிக்கொண்டு வரும் மலை அருவிபோல் தோன்ற, (கழுநீர் மாலையை அவன் தோளில் பொருந்தும்படி போட்டாள்.)

மாலையை அருவி என்றதால் அவனது தோள் மலையா யிற்று. சாரம் - ஸாரம், ரஸம்; எனவே தேனாயிற்று.

58. அந்தரதுந் துபிமுழங்கச் சங்க மார்ப்ப
வானகதுந் துபிபுதல்வ னாதி யாக
வந்திருந்த பேரவையை மதியா னாகி
மாலையிடு பசுஞ்செம்பொன் மாலை யோடும்
சந்திரனு முரோகிணியு மென்ன முன்னர்த்
தான்வளைத்த தடஞ்சிலைக்கை
தலத்தி லேந்தி
இந்திரசூ னுவுமெழுந்தாங் கேக லுற்றா
னிருபுறமுந் துணைவர்வர விணையி லாதான்.

[அந்தரம் துந்துபி முழங்க சங்கம் ஆர்ப்ப, ஆனக துந்துபி புதல்வன் ஆதி ஆக வந்து இருந்த பேர் அவையை மதியான் ஆகி, மாலை இடு பசும் செம்பொன் மாலையோடும் சந்திரனும் உரோகிணியும் என்ன, முன்னர் தான் வளைத்த தடம் சிலை கைத்தலத்தில் ஏந்தி, இந்திர சூனுவும் எழுந்து ஆங்கு ஏகல் உற்றான் இருபுறமும் துணைவர் வர இணை இலாதான்.]

**விளக்கம் :—**துந்துபி - அடிக்கும் வாத்திய விசேஷம். ஆனக துந்துபி - வசுதேவன். திருமால் வசுதேவனிடம் கண்ணனாய் அவதரிக்கப் போவதை அறிந்த தேவர்கள், வசுதேவன் பிறந்த பொழுது, **ஆனகம், துந்துபி** என்ற வாத்தியங்களை முழக்கினார்கள் என்றும், அதனால் **ஆனக துந்துபி** என்பதும் அவனது பெயராயிற்று என்றும் கூறுவர். மாலை இடு பசும் செம்பொன் மாலை - மாலையிட்ட பசிய அழகிய மாலை போன்றவளான பாஞ்சாலி. இந்திரசூனு-அருச்சுனன், (சூனு - புதல்வன்).

அந்தர துந்துபி முழங்க இணையிலாதவனான இந்திரசூனு, இருஷ்ண பலராமன் முதலிய அவையோரை மதியாமல், பாஞ்சாலியோடும், வளைத்த வில்லோடும், துணைவர் இருபுறமும் வர அவ்விடம் விட்டுச் செல்லலானான்,—என்பது பொருள்.

### அரசர் போரெழல்

59. பார்ப்பான்வந் தொருகோடி யரசைச் சேரப்
  பரிபவித்துப் பாஞ்சாலன் பயந்த தெய்வச்
சீர்ப்பாவை தனைவலியாற் கொண்டு போகச்
  செயலின்றி யிருந்தீரென் செய்தீ ரென்று
வேர்ப்பாடு நுதல்சிவந்த விழிய னாகி
  விழியிலான் மகன்கழற வெகுண்டு மேன்மேல்
ஆர்ப்பாகக் கொதித்தெழுந்த துகாந்த காலத்
  தார்க்குமக ராலயம்போ லரச ரீட்டம்.

[பார்ப்பான் வந்து ஒரு கோடி அரசை சேர பரிபவித்து பாஞ்சாலன் பயந்த தெய்வம் சீர் பாவை தனை வலியால் கொண்டு போக, செயல் இன்றி இருந்தீர் என்று, வேர்ப்பாடு நுதல் சிவந்த விழியன் ஆகி, விழி இலான் மகன் கழற, வெகுண்டு, மேல்மேல் ஆர்ப்பு ஆக கொதித்து எழுந்தது உகாந்த காலத்து (உக - அந்த - காலத்து) ஆர்க்கும் மகராலயம் போல் அரசர் ஈட்டம்.]

**விளக்கம் :—** ஒரு கோடி - மிகப்பலர். சேர - ஒரு சேர, அதாவது எல்லோரையும் சேர்த்து. பரிபவித்து - அவமானப் படச்செய்து. வேர்ப்பாடு (வேர்ப்பு ஆடு) நுதல், சிவந்த விழியன் ஆகி - வியர்வை விடும் நெற்றியையும், (கோபத்தால்) சிவந்த விழிகளையும் உடையவனாய். விழியிலான் மகன் - திருதராட்டிரபுத்திரனாகிய துரியோதனன். (துரியோதனன் தூண்ட) அரசர் ஈட்டம் வெகுண்டு, உகாந்த காலத்து ஆர்க்கும் மகராலயம்போல் ஆர்ப்பு மேல்மேல் ஆக கொதித்து எழுந்தது என்று அன்வயிக்க. ஈட்டம் - கூட்டம். உகாந்த காலம் - யுகாந்த காலம், யுகப்பிரளய காலம். மகராலயம் - சமுத்திரம். ஆர்ப்பு மேல்மேல் ஆக - ஆரவாரிப்பு மிகுதியாக.

துரியோதனன் தூண்ட அரசர்கள் எல்லோரும் போர்செய்ய முற்பட்டனர், என்றபடி.

60. முருத்துவாண கைத்துவர்வாய் முகத்தி னாளை
மூத்தோன்பின் னிறுத்தியமர் முருக்கு மாறு
மருத்துவான்றி ருமகனும ருத்தின் செல்வ
மைந்தனுமே புரிந்திட்டார் மறையோ ருள்ளார்
உருத்துவாய்ம டித்தெழுந்து கோகு தட்டிட்
டூன்றியதண் டெதிரோச்சி யுடன்ற வேந்தர்
கருத்துவார் தகவெருக் கொண் டோட வோடக்
கையுரங்காட் டினர்வளர்த்த கனலே யன்னார்.

[முருத்து (முருந்து) வாள் நகை துவர் வாய் முகத்தினாளை மூத்தோன் பின் நிறுத்தி அமர் முருக்குமாறுமருத்துவான் திருமகனும் மருத்தின் செல்வ மைந்தனுமே புரிந்திட்டார், மறையோர் உள்ளார் உருத்து வாய் மடித்து எழுந்து, கோகு தட்டிட்டு ஊன்றிய தண்டு எதிர் ஓச்சி, உடன்ற வேந்தர் கருத்து வார் தக வெருக்கொண்டு ஓட ஓட கை உரம் காட்டினார் வளர்த்த கனலே அன்னார்.]

**விளக்கம் :—** முருந்து - மயிலிறகின் அடிப்பாகம். முருக்கு மாறு - அழிக்கும் வழி. மருத்துவான் திருமகன் - இந்திர குமாரனான அருச்சுனன், (மருத்வான் - தேவர்களை உடையவன்; மருத் - தேவர்). மருத்தின் செல்வ மகன் - வாயு குமாரனான வீமன். புரிந்திட்டார் - விரும்பிப் போருக்குச் சித்தராயினர் (அதற்குமுன்) உள்ளார் (ஆன) மறையோர், (தாம்) வளர்த்த

கனலே அன்னார் உருத்து...கை உரம் காட்டினார்,—என்று அன்வயிக்க. கோகு தட்டிட்டு - தோள் தட்டிக் கொண்டு, அல்லது குடுமியைத் தட்டி முடித்துக்கொண்டு. ஊன்றிய தண்டு எதிர் ஓச்சி - ஊன்று கோலாகப் பற்றியிருந்த தண்டங் களை எதிரிலே செலுத்தி, உடன்ற வேந்தர் கருத்து வார் தக வெருக்கொண்டு ஓட - போரெழுந்து வந்த மன்னர், மனத்தில் மிக அதிகமாக அச்சங்கொண்டு ஓடும்படி, (கருத்து - மனம்), கை உரம் - வலிமை.

வீமனும் அருச்சுனனும் போருக்குச் சித்தராக, அதற்குள் அந்தணர் வேந்தர்களைத் தாக்கி விரட்டினர், என்றபடி.

61. மிகைத்தமுனி வரர்முனிந்த வுறுதி நோக்கி
வென்றெடுத்த விற்றடங்கை விசயன் சற்றே
நகைத்துநகைத் தவரவரை விலக்கி யென்முன்
நமன்வரினும் பிளப்பலென நவிலா நின்றான்
புகைத்தகனல் விழிக்கன்னன் றருக்காலெள் ளிப்
பூசுரனென் றவமதித்துப் புனைவில் வாங்கி
உகைத்தபக ழியுமுகைத்தா னுரனுந் தன்கை
யொருகணையா லுடன்பிளந்தா னுருமே
றொப்பான்.

[மிகைத்த முனிவரர் முனிந்த உறுதி நோக்கி, வென்று எடுத்த வில் தடம் கை விசயன் சற்றே நகைத்து நகைத்து அவரவரை விலக்கி, என்முன் நமன் வரினும் பிளப்பல் என நவிலா நின்றான், புகைத்த கனல்விழி கன்னன் தருக்கால் எள்ளி பூசுரன் என்று அவமதித்து புனை வில் வாங்கி உகைத்த பகழியும் உகைத்தான் உரனும் தன்கை ஒரு கணையால் உடன் பிளந்தான் உரும் ஏறு ஒப்பான்.]

**விளக்கம் :—**உரும் ஏறு ஒப்பான் (ஆகிய) எடுத்த வில் தடங்கை விசயன், மிகைத்த முனிவரர் உறுதி நோக்கி, சற்றே நகைத்து நகைத்து அவரவரை விலக்கி...நின்றான், என்று அன்வயிக்க. மிகைத்த முனிவரர் - எண்ணிக்கையில் மிக்காரான பிராமணர்கள். அர்ச்சுனனைப் பிராமணன் என்று அவமதித்துக் கர்ணன், செலுத்திய அம்பையும், அவனது மார்பையும் ஒரம் பால் பிளந்திட்டான்,—என்க. அந்தணர்களின் தைரியத்தையும் ஊக்கத்தையுங் கண்டு சிறிது அருச்சுனன் நகைத்தான்,—என்க.

62. குன்றான்மெய் வகுத்தனைய வீமன் றன்மேற்
கொல்லியல்செய் சல்லியனைக் குத்தி வீழ்த்திக்
கன்றான்முன் விளவெறிந்த கண்ணன் என்னக்
கான்முடியோ டுறவளைத்து வான்மேல் வீசி
நின்றான்மற் றவனயலே தெறித்து வீழ்ந்து
நெஞ்சொடிந்தா னிருவருமுன் னில்லா ராகி
வென்றாலுந் தோற்றாலும் வசையே வெம்போர்
வேதியரோ டுடற்றலென மீண்டு போனார்.

[குன்றால் மெய் வகுத்து அனைய வீமன், தன்மேல் கொல் இயல் செய் சல்லியனை குத்தி வீழ்த்தி, கன்றால் முன்விளவு எறிந்த கண்ணன் என்ன, கால் முடியோடு உற வளைத்து வான் மேல் வீசி நின்றான், மற்று, அவன் அயலே தெறித்து வீழ்ந்து நெஞ்சு ஒடிந்தான்; இருவரும் முன் நில்லார் ஆகி, வென்றாலும் தோற்றாலும் வசையே வெம்போர் வேதியரோடு உடற்றல் என மீண்டு போனார்.]

**விளக்கம் :**—வீமன் சல்லியனைக் குத்தி வீழ்த்தி ஆகாயத்திலே, வீசி எறிந்தான்; மற்று அவன் (சல்லியன்) பக்கத்திலே தெறித்து விழுந்து, மனம் உடைந்தவனானான்; (அதன்பின்) (கர்ண சல்லியர்) இருவரும், (பகைவர்) முன் நிற்கமாட்டாதவர்களாய், வென்றாலும் தோற்றாலும் அந்தணர்களோடு போர் செய்தல் வசையே என்று எண்ணிப் போரைத் தொடராது மீண்டு போயினர்,—என்பது பொருள். கொல் இயல் - (அன்மொழித் தொகை) போர்.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

63. வண்ணநூன் முனிவ ரல்லர் மருத்துவான் மருத்துநல்கும்
அண்ணலங் குமர ராமென் றயிர்ப்புறு மரசர் யாரும்
கண்ணனால் விலக்கப்பட்டுக் கடிநகர் தோறுந் தங்கள்
எண்ணமும் பயனும் வேறா வெய்தின ரென்ப மன்னோ.

[வண்ணம் நூல் முனிவரீ அல்லர் மருத்துவான் மருத்து நல்கும் அண்ணல் அம் குமரர் ஆம் என்று அயிர்ப்பு உறும் அரசர் யாரும், கண்ணனால் விலக்கப்பட்டு கடிநகர் தோறும் தங்கள் எண்ணமும் பயனும் வேறா எய்தினர் என்ப மன்னோ.]

விளக்கம் :—வண்ணம் நூல் முனிவர் - அழகிய பூணூல் தரித்த பிராமணர். மருத்துவான், மருத்து நல்கும் அண்ணல் அம் குமரர் - இந்திரனும் வாயுவும் நல்கிய சிறந்த அருச்சுனனும் வீமனுமாகிய குமரர்கள். கடிநகர் தோறும் - தங்கள் தங்கள் நகரத்திற்கு. எண்ணமும் பயனும் வேறாக - பாஞ்சாலியின் மாலைபெறும் எண்ணமும் நிகழ்ந்த முடிவும் வேறாக, அதாவது எண்ணம் கைகூடாமற்போக, எல்லோரும் தம் பதி திரும்பினர் என்பதாம்.

குந்தியின் கூற்று

64. அன்றிலக் கெய்த கோவுந் துணைவரு மான
வெம்போர்
வென்றுகொற் றவையோ டொக்கு மின்னிடைப்
பொன்னுந் தாமும்
சென்றுமட் கலஞ்செய் கம்மி செழுமனை முன்றி
லெய்தி
இன்றுபெற் றனமோ ரைய மென்செய்வ திதனை
யென்றார்.

[அன்று இலக்கு எய்த கோவும் துணைவரும், ஆன வெம் போர் வென்று கொற்றவையோடு ஒக்கும் மின் இடை பொன்னும் தாமும் சென்று, மண்கலம் செய் கம்மி செழும் மனை முன்றில் எய்தி, இன்று பெற்றனம் ஓர் ஐயம் என் செய்வது இதனை என்றார்.]

விளக்கம் :—ஆனவெம்போர் - ஏற்பட்ட கொடிய போர். கொற்றவை - வீரலட்சுமி, (போர் வென்று அழைத்து வரப்பட்டமையின். பாஞ்சாலிக்குக் கொற்றவை உவமையானாள்) ஐயம் - பிச்சை, நுகர்தற்குரிய பொருள். இரந்து பெற்ற உணவைப் பகிர்ந்து தின்னும் வழக்கத்தினரான பாண்டவர் இன்றும் அவ்வழக்கத்தின்படி, ஓர் ஐயம் பெற்றோம்,' என்று அன்னைக்குக் கூறினர்.

65. உள்ளிருந் தன்னை மைந்த ருரைத்தசொற்
கேட்டுத் தேவர்
தெள்ளமு தென்ன மக்காள் சேரநீ ரருந்து
மென்னாப்
புள்ளின மொடுங்கு மாலைப் பொழுதவள் புறம்ப
ரெய்திக்
கள்ளவிழ் கூந்த லாளைக் கரும்பென விரும்பிக்
கண்டாள்.

[உள் இருந்து அன்னை மைந்தர் உரைத்த சொல் கேட்டு, தேவர் தெள் அமுது என்ன, மக்காள் சேர நீர் அருந்தும் என்னா, புள் இனம் ஒடுங்கும் மாலைப்பொழுது அவள் புறம்பர் எய்தி கள் அவிழ் கூந்தலாளை கரும்பு என விரும்பி கண்டாள்.]

**விளக்கம் :—** மைந்தர் கூறியது கேட்டு மனையுள் இருந்த படியே 'சேர்ந்து அருந்துக,' என்று கூறிய அன்னை, மாலையில் வெளியே வந்து திரௌபதியைக் கண்டு உள்ளம் மகிழ்ந்தாள், என்றபடி.

66. என்னினைந் தென்சொன் னேன்மற்
றென்செய்தேன் னென்று சோரும்
அன்னையை வணங்கி நின்சொ லாரணப்
படிய தாகும்
நின்னினை வன்றா லெங்க ணெஞ்சிலு
நினைவுண் டென்றான்
தன்னிக ரிலாத கேள்வி சான்றசீர்த்
தரும னென்பான்.

[என் நினைந்து என் சொன்னேன்? மற்று, என் செய்தேன்? என்று சோரும் அன்னையை வணங்கி, நின் சொல் ஆரணம் படியது ஆகும், நின் நினைவு அன்று (ஆல்), எங்கள் நெஞ்சிலும் நினைவு உண்டு என்றான், தன் நிகர் இலாத கேள்வி சான்ற சீர் தருமன் என்பான்.]

**விளக்கம் :—**"என்ன நினைந்து, என்ன சொல்லிவிட்டேன்; இனி என்ன செய்வேன்?" என்று தளரும் தாயை நோக்கித் தருமன், "நின் சொல் வேத வாக்கியம் போன்றது. இது நீ

னைத்துக் கூறியதும் அன்று. எங்கள் நெஞ்சிலும் இந்த எண்ணம் உண்டு. எனவே, தளரல்,'' என்று கூறியபடி.

''ஒரு பெண்ணை ஐவரும் மணக்க நினைத்தது, ஆசையால் அன்று, விதிவயத்தது,'' என்பது தோன்ற, ''தன் நிகரிலாத கேள்வி சான்ற சீர்த்தருமன்,'' என்றாராயிற்று, மற்று : அசை.

67. பாரனைத் தினுந்தன் னாமம் பரப்பிய பார்த்த
னென்னும்
வீரனைப் பயந்த பாவை விதிவழி யிதுவென்
றெண்ணி
மாரனுக் கரசு நல்கு மங்கையுந் தானு மந்தக்
காரிருட் கங்குன் மைந்தர் கட்டுரை கசிந்து
கேட்டாள்.

[பார் அனைத்தினும் தன் நாமம் பரப்பிய வீரனை பயந்த பாவை, விதிவழி இது என்று எண்ணி, மாரனுக்கு அரசு நல்கும் மங்கையும் தானும் அந்த கார் இருள் கங்குல் மைந்தர் கட்டுரை கசிந்து கேட்டாள்,]

**விளக்கம் :—**மாரனுக்கு அரசு நல்கும் மங்கை - திரௌபதி கங்குல் - இரவில். மைந்தர் கட்டுரை - வில் தொழில், போர்த் தொழில் முதலிய க்ஷத்திரியர்க்கு உரிய வார்த்தைகள்; அல்லது அன்று நடந்த சுயம்வரம் பற்றியதும், பின் நிகழ்ந்த போர் பற்றியதுமான வார்த்தை. கசிந்து கேட்டாள் - உள்ள நெகிழ்ச்சியோடு கேட்டனர். 'கேட்டாள்' என்ற ஒருமை முடிபு, சிறப்பினால் இரண்டு பெண்பால் பெயர்கள் ஒரு முடிபை ஏற்கும், என்ற விதியின்பாலது. கார் இருள் கங்குல் - கரிய இருளையுடைய இரவு.

**பாண்டவரைத் துருபதன் மனைக்கு அழைத்தல்**

68. பொற்றொடி கனக மாலைப் பொலங்குழைப் பூவை
தன்னைப்
பெற்றபூ பதியவ் வீரர் பெருமித வாய்மை
யெல்லாம்
ஒற்றரா லுணர்ந்து நெஞ்சத் துவகையோ டைய
மின்றி
மற்றைநாள் வந்து கொற்றவாழ்மனை
கொண்டு புக்கான்.

[பொன் தொடி கனகம் மாலை பொலம் குழை பூவை தன்னை பெற்ற பூபதி, அ வீரர் பெருமிதம் வாய்மை எல்லாம் ஒற்றரால் உணர்ந்து, நெஞ்சத்து உவகையோடு ஐயம் இன்றி, மற்றை நாள் வந்து கொற்றம் வாழ் மனை கொண்டு புக்கான்.]

விளக்கம் :—பொன்தொடி...பூவை - பாஞ்சாலி. பெற்ற பூபதி - துருபதன். பாண்டவர் அன்னையோடு கூறிக் கொண்டிருந்த வீரமொழிகளை ஒற்றர் மூலம் அறிந்து துருபதன் அவர்களைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்றான்,—என்றபடி. அரசனது வெற்றியை அவன் வாழும் மனைமீது ஏற்றிக் கொற்ற மனை என்றது ஒருவகை உபசார வழக்கு.

69. அடுத்தபல் பொருளும் வைக்க வாயுத
மன்றி வேறொன்(று)
எடுத்தில ரென்றும் வேத முனிவர
ரல்ல ரென்றும்
கொடுத்தன சிறப்பி னோடுங் குருமணித்
தவிசி னேற்றித்
தொடுத்ததார்க் குருக்க ளென்றே துணிந்தனன்
யாக சேனன்.

[அடுத்த பல் பொருளும் வைக்க ஆயுதம் அன்றி வேறு ஒன்று எடுத்திலர் என்றும், வேத முனிவரர் அல்லர் என்றும், கொடுத்தன சிறப்பினோடும் குருமணி தவிசின் ஏற்றி, தொடுத்த தார் குருக்கள் என்றே துணிந்தனன் யாகசேனன்.]

விளக்கம் :—அடுத்த - சோதனைக்கு ஏற்ற; சொல் அசையுமாம். கொடுத்தன சிறப்பினோடு - தான் அளித்தனவாகிய பலவிதச் சிறப்புக்களோடு. தொடுத்த தார் குருக்கள் - தொடுக்கப்பெற்ற மாலை அணிந்த குருகுலத்தினரான பாண்டவர்கள். இது, அடுத்த செய்யுளிலுள்ள என்ன (என்று யாகசேனன் சொல்ல) என்பதோடு சேரும். யாகசேனன் - துருபதன்.

தன் மனை வந்தவர்களைச் சோதித்து அறியும் பொருட்டு அவர்கள் முன் வைக்கப்பெற்ற பலவகைப் பொருள்களில், ஆயுதங்களை எடுத்தாராதலால், குருகுலக் குமரரே அவர்' என்று துணிந்தவனாகிய யாகசேனன், குருமணித் தவிசில் அவர்களை இருக்கச் செய்து உபசரித்தான், என்பதாம்.

70. கைவரு சிலையின் வென்று கைப்பிடித் தவனுக்
கின்றே
மைவரு கண்ணி னாளை வதுவைசெய் திடுது
மென்ன
நெய்வரு முனைகொள் கூர்வே னிருபனை நோக்கி
யாங்கள்
ஐவரும் வேட்டு மென்றா னசைவிலா வறத்தின்
மைந்தன்.

[கைவரு சிலையின் வென்று கை பிடித்தவனுக்கு இன்றே மை வரு கண்ணினாளை வதுவை செய்திடுதும் என்ன, நெய் வரு முனை கொள் கூர் வேல் நிருபனை நோக்கி, "யாங்கள் ஐவரும் வேட்டும்" என்றான், அசைவு இலா அறத்தின் மைந்தன்.]

**விளக்கம் :—**கை வரு சிலையின் வென்று - தனக்கு வந்து பொருந்திய வில் தொழிலால் வென்று. மை வரு கண்ணி - மை அணிந்த கண்களை உடைய பாஞ்சாலி. நெய்வரு - நெய் தடவிய. வேட்டும் - மணப்போம். அசைவு இலா அறத்தின் மைந்தன் - தருமபுத்திரன்.

**வியாசர் கூறல்**

71. தருமன்மா மதலை சொல்லாற் றளர்வுறு காலை
மாலை
நிருபநின் மனத்தி லைய நீக்குக நீக்குகென்னத்
துருபதன் முன்னர் வந்து தோன்றினன் சுருதி
யாவும்
விரைமலர் விதியின் மிஞ்ச விதித்தருள் வியாத
னென்பான்.

[தருமன் மா மதலை சொல்லால் தளர்வு உறு காலை, 'மாலை நிருப, நின் மனத்தில் ஐயம் நீக்குக நீக்குக,' என்னா துருபதன் முன்னர் வந்து தோன்றினன் சுருதி யாவும், விரை மலர் விதியின் மிஞ்ச விதித்து அருள் வியாதன் என்பான்.]

**விளக்கம் :—**தருமன் மாமதலை சொல்லால் (துருபதன்) தளர்வுறு காலை, "மாலை நிருப...நீக்குக நீக்குக," என்னா' சுருதி யாவும்... வியாதன் என்பான், துருபதன் முன்னர் வந்து தோன்றினான், என்பது அன்வயம்.

தருமன் மா மதலை - எமதர்மராஜனது சிறந்த மகனாகிய யுதிட்டிரன் (தருமன்). என்னா - என்று சொல்லிக்கொண்டு. விரை மலர் விதியின் மிஞ்ச - பிரும்மதேவனைவிட மேலாக. சுருதி யாவும் விதித்து அருள் வியாதன் - வேதங்கள் எல்லாவற்றையும் வகைப் படுத்தி அருளிய வியாசன்.

72. தொழுதுபொற் றவிசி னேற்றி சூழ்ந்தன ரிருந்து
கேட்ப
முழுதுணர் கேள்வி ஞான முனிகுலத் தரசு
போல்வான்
பழுதறு கன்னி தன்னைப் பாண்டவ ரைவ ருக்கும்
எழுதறு மறையின் வேள்வி யியற்றுதற் கியற்கை
கேண்மோ.

[தொழுது பொன் தவிசின் ஏற்றி சூழ்ந்தனர் இருந்து, கேட்ப, முழுது உணர் கேள்வி ஞானம், முனி குலத்து அரசு போல்வான், பழுதறு கன்னி, தன்னை பாண்டவர் ஐவருக்கும் எழுதறு மறையின் வேள்வி இயற்றுதற்கு இயற்கை கேண்மோ.]

**விளக்கம் :**—சூழ்ந்தனர் இருந்து-துருபதனும், பாண்டவரும், மற்றவரும் வியாதனைச் சூழ்ந்தவர்களாய் இருந்துகொண்டு. எழுதறு மறையின் - எழுதாக்கிளவியாகிய வேத விதியின்படி இயற்றுதற்கு இயற்கை கேண்மோ - (மணம்) செய்வதற்குக் காரணமான இயல்பினைக் கேட்பீர்களாக.

**கலித்துறை**

73. மூளா ரழலுற் பவித்தாளிவண் முற்ப வத்தில்
நாளா யணியென் றுரைசால்பெரு நாம மிக்காள்
வாளார் தடங்க ணவட் காரண வாணர்க் கென்றும்
கேளான மௌற்கல் லியனென்பவன்
கேள்வனானான்.

[மூள் ஆர் அழல் உற்பவித்தாள் இவள் முன்பவத்தில் நாளாயணி என்று உரை சால் பெரு நாமம் மிக்காள், வாள் ஆர் தடம் கண் அவட்கு ஆரணவாணர்க்கு என்றும் கேள் ஆன மௌற்கல்லியன் என்பவன் கேள்வன் ஆனான்.]

**விளக்கம் :**—மூள் ஆர் அழல் உற்பவித்தாள் இவள் - யாகாக்னியில் தோன்றியவளான இப் பாஞ்சாலி. முற்பவம் -

மூன் பிறப்பு. நாளாயணி என்று புகழ் நிறைந்த பெருமையை உடைய பெயரினால் உயர்ந்தவள்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். கேள் - தலைவன். மௌற்கல்லியன் - மௌத்கல்யன் என்ற பெயரினனான சிறந்த முனிவன். உரைசால் பெருமை – கற்பினால் வரும் கீர்த்தி.

74. காதிற் கலந்த கடைக்கண்ணிதன் கற்புமன்பும்
சோதித் தலுன்னித் தணியாத துவக்கு நோயன்
கோதித் தநெஞ்சன் பெருமூப்பினன் கூர்ந்து நாளும்
வாதித் தலன்றி மகிழாமனை வாழ்வு பூண்டான்.

[காதில் கலந்த கடை கண்ணி தன் கற்பும் அன்பும் சோதித்தல் உன்னி தணியாத துவக்கு நோயன், கொதித்த நெஞ்சன் பெரு மூப்பினன், கூர்ந்து நாளும் வாதித்தல் அன்றி மகிழா மனைவாழ்வு பூண்டான்.]

**விளக்கம் :**—காதில் கலந்த - காதுவரை நீண்ட. துவக்கு நோய் - குஷ்ட நோய். கோதித்த - கோபம் உடைய. நாளும் கூர்ந்து வாதித்தல்-தினந்தோறும் மிக அதிகமாகத் துன்புறுத்தல்.

நாளாயணியின் அன்பையும் கற்பின் உறுதியையும் சோதிக்க நினைத்து, மௌத்கல்ய முனிவன், கிழவனாகவும், குஷ்டத்தால் சிதைந்த வடிவினனாகவும் தன்னை அவன் காட்டிக் கொண்டதோடு, துன்புறுத்தவும் செய்தான், என்றபடி.

குரோதம் என்ற சொல்லின் திரிபான கோதம், என்பதின் அடியாகப் பிறந்த பெயரெச்சமாகும், **கோதித்த** என்பது.

75. கச்சிற் கடங்கா முலையாளக் கணவ னுண்ட
மிச்சிற் புறத்து விரல்வீழவும் வீழ்தன் மிஞ்சிக்
குச்சித் தலின்றி நுகர்ந்தாள்கொடுங் காமநோய் கொண்(டு)
இச்சித் தவின்ப நுகராமளி ளைத்தமெய்யாள்.

[கச்சிற்கு அடங்கா முலையாள், அ கணவன் உண்ட மிச்சில் புறத்து விரல் வீழவும். வீழ்தல் மிஞ்சி குச்சித்தல் இன்றி நுகர்ந்தாள், கொடும் காமம் நோய் கொண்டு இச்சித்த இன்பம் நுகராமல் இளைத்த மெய்யாள்.]

**விளக்கம் :**—மிச்சில் புறத்து -(உண்ட பின்) மிஞ்சிய அன்னத்தினிடத்தே, (விரல் அழுகி விழவும்). விழ்தல் மிஞ்சி - விருப்பம் மிகுந்து. குச்சித்தல் - அருவருப்புக் கொள்ளல்.

புருஷனிடம் அன்பு குறையாமலும், அவன் உண்ட மிச்சிலை அருவருக்காமல் புசித்தும் நளாயணி மனைவாழ்க்கை நடத்தி வந்தாள், என்றபடி.

76. அன்பன் றெரிவை வழிபாடுகண் டார்வமெய்தித்
துன்பம் பயந்த பிணியாலழி தோற்ற மாற்றித்
தன்பங் கையீ சன் றிறைநல்கமுன் சாபம் வாங்கும்
வன்பன் றனக்குங் கிடையாத வடிவு கொண்டான்.

[அன்பன் தெரிவை வழிபாடு கண்டு ஆர்வம் எய்தி துன்பம் பயந்த பிணியால் அழி தோற்றம் மாற்றி, தன் பங்கை ஈசன் திறை நல்க, முன் சாபம் வாங்கும் வன்பன் தனக்கும் கிடையாத வடிவு கொண்டான்.]

**விளக்கம் :**—அன்பன் - கணவனான மௌத்கல்யன். தன் பங்கை - தனது உடலின் இடப்புறப் பகுதியை, வாம பாகத்தை. திறை நல்க - உமையாளுக்கு உரிய பொருளாகக் கொடுக்க. முன் - முன்னொரு காலத்தில். சாபம் வாங்கும் வன்பன் - வில் வளைத்து வென்ற வலிமை கொண்டவனான மன்மதன்.

மன்மதன் எரியுண்டானாயினும், சிவபிரானின் தவத்தைக் குலைத்து உமையை ஏற்று, அவளுக்குத் தனது வாம பாகத்தைத் திறைப் பொருளாகக் கொடுக்கும்படி செய்தமையின், அவன் **வன்பன்** எனப்பட்டான்.

77. மின்னே யுனக்கு மிகுகற்புடை மீனு மொவ்வாள்
இன்னே வரம்வேண் டுவனவேண் டுகவீண்டை
யென்ன
நின்னே யமென்றும் பிரியா நலன் நேர்கவென்றாள்
தன்னே ரிலாத மனைவாழ்விற் றவத்தின் மிக்காள்.

[மின்னே உனக்கு மிகு கற்புடை மீனும் ஒவ்வாள், இன்னே வரம் வேண்டுவன வேண்டுக ஈண்டை என்ன, நின் நேயம் என்றும் பிரியா நலன் நேர்க, என்றாள், தன் நேர் இலாத மனை வாழ்வில் தவத்தின் மிக்காள்.]

**விளக்கம் :**—மீன்-நட்சத்திர உருவத்தில்இருக்கும் அருந்ததி. ஈண்டை - இப்பொழுதே, இந்த இடத்திலேயே. உனது அன்பு என்றும் நீங்காமையாகிய நலத்தை வரமாகத் தருக, என்று கேட்டாள்,—என்பது மூன்றாவது அடியின் பொருள். மனை வாழ்வில் தவத்தின் மிக்காள்—இல் வாழ்க்கையிலிருந்து செய்யும் தவத்தினால் சிறந்தவளான நாளாயணி.

78. குன்றுந் நதியும் மரனும்பைங் கொடியு மாகித்
துன்றுந் துணையாய்ப் பலயோனிக டோறு மெய்தி
நின்றுஞ் சரித்து மரும்போக நெடிது துய்த்தார்
என்றும் பிரியா திருவோரு மிதய மொத்தே.

[குன்றும் நதியும் மானும் பைங்கொடியும் ஆகி துன்றும் துணை ஆய் பல யோனிகள் தோறும் எய்தி, நின்றும் சரித்தும் அரும் போகம் நெடிது துய்த்தார், என்றும் பிரியாது இருவோரும் இதயம் ஒத்தே.]

**விளக்கம் :**—துன்றும் துணையாய் - நெருங்கிய துணையாய், அதாவது ஒருவரையொருவர் விட்டு நீங்காமல். யோனிகள் தோறும் எய்தி - பலதிறப்பட்ட உருவங்களிலும் அமைந்து. சரித்து - சஞ்சரித்து.

கணவன் குன்றானால் அவள் நதியாகவும், அவன் மரமானால் அவள் அதில் படரும் கொடியாகவும் அமைந்து இருவரும் ஒத்த அன்பினராய்ப் போகம் அனுபவித்தனர், என்க.

79. இந்தந் பிறப்பி னலமெய்தியி றந்தபின்னும்
சிந்தித் தவண்ண மிவளிந்திர சேனை யாகி
அந்தப் பதியை யடைந்தாண்மற் றவனு மஞ்சி
வந்தித் ததொல்லை யருமாதவ மன்னி நின்றான்.

[இந்த பிறப்பில் நலம் எய்தி இறந்த பின்னும் சிந்தித்த வண்ணம் இவள் இந்திர சேனை ஆகி, அந்த பதியை அடைந்தாள், மற்று அவனும் அஞ்சி, வந்தித்த தொல்லை அரு மா தவம் மன்னி நின்றான்.]

**விளக்கம் :**—சிந்தித்த வண்ணம் - (இறக்குந் தறுவாயில் மௌத்கல்யனையே மறு பிறப்பிலும் கணவனாக அடைய வேண்டும் என்று) நினைத்தபடி. இந்திர சேனையாகப் பிறந்து அவனை அடைந்தாள். மற்று, அவனோ, இல்லற வாழ்க்கையை

அஞ்சித் தவத்தில் பொருந்தி நின்றான். என்க. வந்தித்த - வணக்கத்தோடு செய்யப்படுகின்ற (தொல்லை மாதவம்), மற்று: வினைமாற்று. தொல்லை - பழமையான.

80. அன்னோ னகல வவன்மேலவ ளாசை விஞ்சி
என்னோ புரிவ தினியென்றலு மேந்தல் கூற்றால்
தன்னோர் வடிவி னொருகூறொரு தையலாளும்
முன்னோ னைநோக்கித் தவஞ்செய்தனண்
மூரல்வாயாள்.

[அன்னோன் அகல அவன்மேல் அவள் ஆசை விஞ்சி, என்னோ புரிவது இனி என்றலும், ஏந்தல் கூற்றால் தன் ஓர் வடிவின் ஒரு கூறு தையல் ஆளும் முன்னோனை நோக்கி தவம் செய்தனள் மூரல் வாயாள்.]

**விளக்கம் :**—அன்னோன் அகல - அந்த மௌளத்கல்யன் (அவளது கருத்துக்கு இசையாமல்) அகல. ஏந்தல் கூற்றால் - கணவனான மௌளத்கல்யன் சொன்ன வார்த்தையின்படி. மூரல் வாயாள் தன் ஓர் வடிவின்...தவம் செய்தனள் - இள நகை பொருந்திய வாயளான நங்கை, தனது ஒப்பற்ற வடிவின் ஒரு பாதியில் ஒரு பெண்ணை வைத்து ஆளும் சிவபிரானை நோக்கித் தவம் செய்தாள்.

இல்லற வாழ்க்கையை விரும்பாது தவத்துறை நயந்து நின்ற முனிவனை அவள் மணந்து கொள்ளுமாறு வற்புறுத்தலும். அவன் வெகுண்டு "யாகசேனன் பெண்ணாய்ப் பிறந்து ஐவரை மணப்பாயாக" என்று சபித்ததாகவும். பிறகு அவள் சிவபிரானைக் குறித்துத் தவம் செய்தாள் என்று முதல் நூல் கூறும்.

81. ஐந்தா னனத்தோ னருள் செய்ய வழகின் மிக்காள்
ஐந்தா னசொல்லால் கணவற்றரு கையவென்றாள்
ஐந்தா னசொல்லா னளித்தான்மற் றவனு
முன்னாள்
ஐந்தா னபோக மிவளெய்திய வாறறிந்தே.

[ஐந்து ஆனனத்தோன் அருள் செய்ய, அழகின் மிக்காள் ஐந்து ஆன சொல்லால் கணவன் தருக ஐய என்றாள்; ஐந்து ஆன சொல்லான் அளித்தான் மற்று அவனும், முன் நாள் ஐந்து ஆன போகம் இவள் எய்திய ஆறு அறிந்தே.]

**விளக்கம் :**—ஐந்து ஆனனத்தான் - ஐந்து முகங்களை உடைய சிவபெருமான்; (சத்தியோ சாதம், வாம தேவம், அகோரம்

தற்புருடம், ஈசாநம், என்ற ஐந்து முகத்தினன் என்பர்.) அருள் செய்ய - (நாளாயிணியின்) முன் தோன்றி நிற்க. ஐந்தான சொல்லால், "ஐயனே, கணவன் தருக" என்று கேட்டாள், என்பது இரண்டாவது அடியின் பொருள்; அதாவது, 'கணவன் தருக', என்று ஐந்து தடவை கேட்டாள், என்க. அவனும், முன்நாள் ஐந்தான போகம் இவள் எய்தியவாறு அறிந்தே, ஐந்தான சொல்லான் அளித்தான், என்று ஈற்றடிகளை அன்வயிக்க. முன்னாள் - முன் பிறப்பில். ஐந்து ஆன போகம் - புருஷன் கொண்ட ஐந்து வடிவங்களோடு கூடி அனுபவித்த இன்பம். ஐந்தான சொல்லான் அளித்தான் - 'அவ்வாறே ஆகட்டும்' என்று ஐந்து தரம் கூறியருளினான். மற்று : அசை:

82. முன்னின்ற தேவன் மொழியின்படி கங்கை மூழ்கித்
தன்னந் தனிநின் றழுகின்றவத் தையல் கண்ணீர்
பொன்னங் கமல வனமான புதுமை நோக்கி
என்னென் றிவளை யிமையோர்பதி யெய்தினானே.

[முன் நின்ற தேவன் மொழியின்படி கங்கை மூழ்கி தன்னந் தனி நின்று அழுகின்ற அ தையல் கண்ணீர், பொன் அம் கமலம் வனம் ஆன புதுமை நோக்கி, என் என்று இவளை இமையோர் பதி எய்தினான் (ஏ).]

**விளக்கம் :**—சிவபெருமான் பணித்தபடி கங்கையில் மூழ்கி எழுந்த பெண்ணின் கண் வழிந்த நீர்த் துளிகள் தாமரைக் காடான அதிசயத்தைக் கண்டு இந்திரன் 'இது என்?' என்று வினவிக்கொண்டே அவளை நெருங்கினான்,—என்க.

83. அவனைத் தொடர்பால் வருகென்ன வவனு
மாங்கண்
சிவனைச் சிறிது மதியாதெதிர் சென்ற காலை
இவனுக் கென்மேன் மையெனச்சீறலு மெஞ்சி
னான்போல்
புவனத் தெவரு நகையாடப் புலம்பி வீழ்ந்தான்.

[அவனை தொடர்பால் வருக என்ன, அவனும் ஆங்கண் சிவனை சிறிதும் மதியாது எதிர் சென்ற காலை, 'இவனுக்கு என் மேன்மை?' என சீறலும், எஞ்சினான் போல் புவனத்து எவரும் நகையாட புலம்பி வீழ்ந்தான்.]

**விளக்கம் :—** தொடர்பால் - பின் தொடர்ந்து. இவனுக்கு மேன்மை என், என சீறலும் - இவனுக்கு இவ்வளவு செருக்கு ஏன், என்று (சிவபெருமான்) வெகுளலும். எஞ்சினான் போல் - செத்தவன்போல்.

84. **வெவ்வா யுதங்க ளுதவாமல் விபுத நாதன்**
**இவ்வா றுவீழ மழுவாளி யிமைப்பின் மீண்டும்**
**அவ்வா சவற்குப் பிலமொன்றி லடைத்த வச்ரக்**
**கைவா சவர்க ளொருநால்வரைக் காட்டினான்.**

[வெம் ஆயுதங்கள் உதவாமல் விபுத நாதன் இ ஆறு வீழ, மழு ஆளி இமைப்பின் மீண்டும் அ வாசவற்கு பிலம் ஒன்றில் அடைத்த வச்ரம் கை வாசவர்கள் ஒரு நால்வரை காட்டினான்.]

**விளக்கம் :—** விபுத நாதன் - இந்திரன். மழுவாளி - சிவ பெருமான். பிலம் - குகை, பாதாள அறை. வச்ரக்கை வாசவர் - வச்ராயுதம் ஏந்திய கையினரான இந்திரர்கள்.

செருக்குற்ற இந்திரன், அவனது கொடிய வச்சிரம் முதலிய ஆயுதங்கள் பயனற்றுப்போய், ஒரு கணப் பொழுதில் கீழே விழுந் திட, அவனுக்குச் சிவபெருமான் ஒரு குகையுள் அடைபட்டிருந்த நாலு இந்திரர்களைக் காட்டினான், என்க.

85. **வன்பா தலத்தில் வருநால்வரும் வானின் வந்த**
**புன்பா கசாத னனுந்தன்னடி போற்றி நிற்ப**
**அன்பான் மகிழ்ந ரிவட்கைவரு மாதி ரென்று**
**மென்பா வைபங் கன்விதிக்கப் புவிமீது வந்தார்.**

[வன் பாதலத்தில் வரும் நால்வரும் வானின் வந்த புல் பாக சாதனனும் தன் அடி போற்றி நிற்ப, அன்பால் மகிழ்நர் இவட்கு ஐவரும் ஆதிர் என்று, மெல் பாவை பங்கன் விதிக்க புவிமீது வந்தார்.]

**விளக்கம் :—** வரும் நால்வரும் - பாதலத்தில் இருந்து வரும் நாலு இந்திரர்களும். வானின் வந்த புல் பாகசாதனும் - இப் பொழுது தேவலோகத்திலிருந்து வந்த எளிமை எய்திய இந்திர னும். மெல் பாவை பங்கன் - உமையை வாம பாகத்தில் கொண்ட சிவபெருமான்.

பிலத்தில் அடைபட்டிருந்த இந்திரர்களோடு இப்பொழுது சிவபெருமானது கோபத்திற்கு ஆளான இந்திரனும் ஆகிய

ஐவரையும், "இப் பெண்ணிற்குக் கணவன் ஆகுக," என்று சிவ பெருமான் விதிக்க, அவர்களும் பூமியில்வந்து பாண்டவர்களாய்ப் பிறந்தாராயினர், என்க.

பாக சாதனன் - (பாகசாஸநன்) பாகன் என்ற அசுரனைக் கொன்ற இந்திரன்.

86. தருமன் பவனன் றினநாதன் றனயர் தம்மால்
வருமிந் தநால்வ ரவர்நால்வரு மாலை மார்பா
தெருமந் தவிந்தச் சிலைவீரனித் தேவர்க் கெல்லாம்
பெருமன் பிறப்பிற் கவனேமுன் பிதாவுமானான்.

[தருமன் பவனன் தினநாதன் தனயர் தம்மால் வரும் இந்த நால்வர்; அவர் நால்வரும், மாலை மார்பா, தெரு மந்த இந்த சிலை வீரன் இ தேவர்க்கு எல்லாம் பெருமன், பிறப்பிற்கு அவனே முன் பிதாவும் ஆனான்.]

விளக்கம் :—தருமன் - யமன். பவனன் - வாயு - தினநாதன் தனயர் - சூரியனின் பிள்ளைகளான அசுவினி தேவர்கள். இவர்கள் சம்பந்தத்தால் பிறந்த தருமன், வீமன், நகுல சகதேவர் நால்வரும், பிலத்தில் அடைபட்டிருந்த நான்கு இந்திரர்கள் ஆவர், என்பது இரண்டாவது அடியின் பொருள். தெரு மருதல்- கலங்குதல், சுழலுதல். தெருமந்த - பகைவர் கலங்கிக் குலை தற்குக் காரணமான. சிலைவீரன். அருச்சுனன். இத்தேவர்க்கு எல்லாம் பெருமன்-இந்த நான்கு இந்திரர்களுக்குந் தலைவனான (சிவபெருமானது கோபத்திற்கு ஆளான) இந்த இந்திரன்; (இந்த இந்திரனே அருச்சுனன்). அவனே, முன்பு இவனுக்குப் பிதாவும் ஆனான்; அதாவது, அருச்சுனனாய் வந்த இந்திர னுக்கு, அவ்விந்திரனே முன்பு தந்தையுமானான், என்றபடி. மாலை மார்ப - (விளி) துருபதன்.

87. இம்மா துதொல்லை யருமாதவத் தெல்லை கண்ட
அம்மா திவள்கா தலரைவரு மாக வென்று
தெம்மா தர்முற் பூண்கவர்மன்னன் றெளியு மாறு
வெம்மா தவத்தோன் பெருஞான விழியு மீந்தான்.

[இ மாது தொல்லை அரு மா தவத்து எல்லை கண்ட அ மாது, இவள் காதலர் ஐவரும் ஆக என்று, தெவ் மாதர் முன் பூண் கவர் மன்னன் தெளியுமாறு வெம் மாதவத்தோன் பெரு ஞான விழியும் ஈந்தான்.]

**விளக்கம் :**—இப் பாஞ்சாலி, முன் பிறப்பில் அரு மாதவத்தின் எல்லை கண்ட இந்திரசேனை என்னும் அம் மாதாவள், ஆகவே பாண்டவர் ஐவரும் இவள் காதலர் ஆகக்கடவர், என்று சொல்லி,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். தெம் மாதர் - (தெவ்மாதர்) பகைவரின் மனைவியர். முன்பூண் - மங்கல நாண், திருமாங்கலியம். கவர் மன்னன் - களையும் மன்னன். வியாசர், தாம் சொன்ன வரலாற்றை நன்கு தெளிந்து கொள்ளும்படி யாக சேனனுக்கு ஞானக் கண்ணையும் கொடுத்தருளினான்,—என்பது ஈற்றடியின் பொருள்.

துருபதனைத் தனியிடம் அழைத்துச் சென்று வியாசர் அவனுக்கு இவ்வரலாற்றைக் கூறியதாக முதல் நூல் கூறும்.

மாங்கல்யம் ஆபரணங்களுள் முதலிடம் பெறுதலின், **முற்பூண்** எனப்பட்டது. மூன்றாவது அடி பிறிதின் நவிற்சி அணியை உட் கொண்டது.

88. ஓதா துணர்ந்து மறைநாலு முருவு செய்த
வேதா வுமொவ்வா வியாதன்மொழி வெள்ள நீரால்
கோதா னநெஞ்சைக் குளிப்பாட்டினன் கோடி கோடி
தோதா னவண்டு துதைமாலைகொள் சோமகேசன்.

[ஓதாது உணர்ந்து மறை நாலும் உருவு செய்த வேதாவும் ஒவ்வாவியாதன் மொழி வெள்ளம் நீரால் கோதான நெஞ்சை குளிப்பு ஆட்டினான், கோடி கோடி தோது ஆன வண்டு துதை மாலை சோமகேசன்.]

**விளக்கம் :**—ஓதாமலே உணர்ந்து கொண்ட வேதம் நான்கையும் முறைப்படுத்தினவனும், வேதாவும் (பிரும்மாவும்) உவமை ஆகமாட்டாதவனும் ஆகிய வியாச முனிவனின் மொழியாகிய வெள்ள நீரால்,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். கோதான நெஞ்சம் - களங்கமுற்ற நெஞ்சம். குளிப்பாட்டினன் - கழுவினான். கோடி கோடி - மிகப் பல. தோதான - வரிசைப்பட்ட. துதை - நெருங்கிய. சோமகேசன் - சோமகுலத் தலைவனான துருபதன்.

**இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம்,** என்பவை வியாசர் செய்த மறைவகுப்பு. **தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம்,** என்பவை பழைய மறை வகுப்பு.

## திரௌபதி திருமணம்

89. வியப்போ டுதொல்லை முனிசொற்றலை மீது
கொண்டு
பயப்போன் மகண்மேற் புரிகின்ற பரிவி னுக்கும்
வயப்போர் நிருபர் பெருமைக்கும் வலிக்கு மீடா
நயப்போ டுமன்ற லயர்வித்த னனன்கொர் நாளில்.

[வியப்போடு தொல்லை முனி சொல் தலைமீது கொண்டு பயப்போன் மகள்மேல் புரிகின்ற பரிவினுக்கும், வயம் போர் நிருபர் பெருமைக்கும் வலிக்கும் ஈடா, நயப்போடு மன்றல் அயர் வித்தனன் நன்கு ஓர் நாளில்.]

**விளக்கம் :**—பயப்போன் - பெற்றவனான துருபதன். வயப் போர் நிருபர் - பாண்டவர். நயப்போடு மன்றல் அயர்வித்த னன் - விருப்பத்தோடு திருமணம் செய்விப்பவனானான்.

90. பாடுஞ் சுருதி மறைவாணரும் பாரி லுள்ள
சூடுங் கனக முடிவேந்தருந் தொக்கு நிற்ப
நீடுங் கதிர்மா மணித்தூண்கணி ரைத்த பத்தி
ஆடுங் கொடிமண் டபமெய்தின ரண்டர் போல்வார்.

[பாடும் சுருதி மறைவாணரும் பாரில் உள்ள சூடும் கனகம் முடி வேந்தரும் தொக்கு நிற்ப, நீடும் கதிர் மா மணி தூண்கள் நிரைத்த பத்தி ஆடும் கொடி மண்டபம் எய்தினர் அண்டர் போல்வார் ]

**விளக்கம் :**—தொக்கு நிற்ப - திரண்டு இருக்க, நீடும் கதிர்- நெடுந்தூரம் வீசும் ஒளிக்கதிர். நிரைத்த பத்தி - வரிசை கொண்ட ஒழுங்கினை உடைய. அண்டர்போல்வாரான பாண்ட வர் ஆடும் கொடி மண்டபம் சேர்ந்தனர், என்றபடி. அண்டர் - தேவர்.

91. குறிக்கும் பணில முதலாயிர கோடி யாகப்
பிறிக்குங் கருவி யிடந்தோறும் பிளிறி யார்ப்பச்
செறிக்குங் கழற்கா லறன்மைந்தனைச்
செம்பொன் வேதி
எறிக்குங் கிரண மணிப்பீடம் தேற்றினாரே.

[குறிக்கும் பணிலம் முதல் ஆயிரம் கோடி, ஆக பிறிக்கும் கருவி இடம் தோறும் பிளறி ஆர்ப்ப, செறிக்கும் கழல் கால் அறன் மைந்தனை செம்பொன் வேதி எறிக்கும் இரண மணி பீடம் அது ஏற்றினாரே.]

**விளக்கம் :**—குறிக்கும் - ஊதப்படும், பணிலம்-சங்கு. (சங்கு) முதல் ஆயிரம் கோடியாகப் பிறிக்குங் கருவி - (சங்கு முதலாக வுள்ள) மிகப் பலவாகப் பிறிக்கப்படும் வாத்தியங்கள். இடம் தோறும் - பல விடங்களிலும். பிளிறி ஆர்ப்ப - மிக முழங்க. அறன்மைந்தன் - தருமன். வேதி - மணமேடை. பீடம் - ஆசனம்.

'ஏற்றினார்' என்பதற்கு எழுவாய் புரோகிதர். தோல் கருவி, துளைக் கருவி, கஞ்சக் கருவி, நரம்புக் கருவி, என்று வாத்தியங்கள் நான்கு வகைப்படும். கஞ்சக் கருவி - தாளம்.

**92.** **இடத்தோ ளிவட்கும் வலத்தோளிவ் விறைவ**
**னுக்கும்**
**திடத்தோ டுரைத்த குறியின்பயன் சேர்ந்து தோய**
**விடத்தோ டமுதங் கலந்தென்ன மிளிரும் வேற்கண்**
**வடத்தோ டுவிம்மு முலையாளை வலத்தில்**
**வைத்தார்.**

[இடம் தோள் இவட்கும் வலம் தோள் இ இறைவனுக்கும் திடத்தோடு உரைத்த குறியின் பயன் சேர்ந்து தோய, விடத்தோடு அமுதம் கலந்து என்ன மிளிரும் வேல் கண் வடத்தோடு விம்மும் முலையாளை வலத்தில் வைத்தார்.]

**விளக்கம் :**—இறைவன் - தருமன். திடத்தோடு உரைத்த குறி - சாமுத்ரிக நூல் வல்லுநரால் ஆராய்ந்து உறுதியாகச் சொல்லப்பட்ட உத்தம லட்சணங்கள். பயன் சேர்ந்து தோய - பயன் அடையும்படி (இருவர் தோள்களும்) ஒன்றோடொன்று சேர்ந்து பொருந்த. திரௌபதியின் இடத்தோளும், தருமனது வலத்தோளும் பொருந்தும்படி மணையில் வைத்தனர், என்க.

விழியின் வெண்ணிறப் பகுதி, அமுதம்; கருவிழி, விஷம். எனவே விடத்தோடு அமுதங் கலந்தன்ன வேற்கண், எனப்பட்டது. வடத்தோடு விம்மும் முலையாள் - முத்து மாலையோடு பூரிக்கும் முலையாளான திரௌபதி. ஆடவரின் வலப்புற உறுப்புக்களும், பெண்களின் இடப்புற உறுப்புக்களும் லக்ஷணத்தால் சிறத்தல் இயல்பு.

93. கேள்விக் கொருவ னெனுந்தௌ மியன்கீ தவேத
வேள்விக் குவேண்டு வனயாவும் விதியி னீட்டி
மூள்வித் தசெந்தீக் கரியாக முரசு யர்த்த
தாள்வித் தகற்கு வரமான சடங்கு செய்தான்.

[கேள்விக்கு ஒருவன் எனும் தௌமியன் கீதம் வேதம் வேள்விக்கு வேண்டுவன யாவும் விதியின்சட்டி, மூள்வித்த செம் தீ கரியாக முரசு உயர்த்த தாள் வித்தகற்கு வரம் ஆன சடங்கு செய்தான்.]

**விளக்கம் :**—கேள்விக்கு ஒருவன் - கேள்வி அறிவில் ஒப்பிலாதவன். கீதவேத வேள்வி - சுவரங்களோடு ஓதப்படுகின்ற வேத விதியின்படி செய்யப்படும் விவாகம். செந்தீ கரியாக - அக்கினி சாட்சியாக. முரசு உயர்த்த தாள் வித்தகன் - கொடியில் முரசை உயர்த்திய, தாளாண்மையோடு அறிஞனுமான தருமன். வரமான - சிறந்த.

சமித்து, தர்ப்பை, பொரி, நெய், தீர்த்தம், அக்ஷதை, அம்மி, பாலிகை முதலியன விவாகத்திற்கு வேண்டிய பொருள்கள்.

94. பன்மங் கலமு முடன்வைகிய பண்பி னாளை
நன்மங் கலப்பூண் டுகிலோடு நயந்து சாத்தித்
தன்மங் கலந்த மனத்தோனையத் தைய லோடும்
தென்மங் கலச்செஞ் சுடர்த்தீவலஞ் செய்வித் தாரே.

[பல் மங்கலமும் உடன் வைகிய பண்பினாளை நல் மங்கலம் பூண் துகிலோடு நயந்து சாத்தி, தன்மம் கலந்த மனத்தோனை அ தையலோடும் தென் மங்கலம் செம் சுடர் தீ வலம்செய்வித்தாரே.]

**விளக்கம் :**—பல் மங்கலமும்...பண்பினாளை - பல மங்களங்களும் ஒன்று சேர்ந்து தங்கிய பண்பினளான திரௌபதியை. நன் மங்கலம்...சாத்தி-நல்ல பட்டுத் துகிலோடு மங்களகரமான ஆபரணங்களை அணிவித்து. தன்மம் - தர்மம். அழகிய மங்களகரமான சிவந்த சுடரோடு கூடிய ஓமத்தீயை வலம் வருமாறு செய்தனர். தென் - அழகிய.

பாணிக்கிரகணத்தின்பின் மணமகனும் மணமகளும் தீ வலம் வருதல் சடங்குகளில் ஒன்று.

95. கங்குற் பவள வனமீது கடற் றரங்கம்
பொங்கித் தரளத் திரள் சிந்திப் பொழியு மாபோல்
அங்கிப் புறத்துத் திருக்காப்பணி யங்கை யேந்திச்
செங்கட் கரிய குழலாள்பொரி சிந்தி னாளே.

[கங்குல் பவளம் வனம்மீது கடல் தரங்கம் பொங்கி தரளம் திரள் சிந்தி பொழியுமாபோல், அங்கிபுறத்து திருகாப்பு அணி அம் கை ஏந்தி செம் கண் கரிய குழலாள் பொரி சிந்தினாளே.]

**விளக்கம் :**—திருக்காப்பு - இரக்ஷையாகக் கட்டப்படும் கங்கணம் (மஞ்சள் கயிறு). 'காப்பு' என்பது ஆகுபெயராய்ப் பாதுகாவலாகக் கட்டப்படும் கங்கணத்தைக் குறிப்பதாயிற்று. பொரியை தீயில் ஓமம் செய்தல், சடங்குகளில் ஒன்று.

கரிய திருமேனியோடு கரிய கூந்தலையும் சிவந்த கண்களையும் உடைய பாஞ்சாலி, செந்தீயில் வெண்ணிறப் பொரியை ஓமம் செய்தது, இரவில் பவளக் காட்டில் கடல் அலையாகிய கையால் முத்துக்களைச் சொரிவது போன்றிருந்தது, என்ற வருணனை நயமுடையது. உவமை அணி. பொரியால் ஓமஞ் செய்தலை **லாஜஹோமம்** என்பர்.

96. இவ்வா றுமன்ற லயர்வித்தபி னீன்ற காதல்
வெவ்வா ரழலின் முறைமூழ்கினண் மீண்டு தோன்ற
மைவா ரளக வடமீனிகர் கற்பி னாளை
அவ்வா றுமற்றை யொருநால்வரு மன்று வேட்டார்.

[இ ஆறு மன்றல் அயர்வித்தபின், ஈன்ற காதல் வெவ் ஆர் அழலில் முறை மூழ்கினள் மீண்டு தோன்ற, மை வார் அளகம் வடமீன் நிகர் கற்பினாளை அ ஆறு மற்றை ஒரு நால்வரும் அன்று வேட்டார்,]

**விளக்கம் :**—மன்றல் அயர்ந்தபின் - விவாகமானபின், வெவ் ஆர்...தோன்ற - வெப்பம் மிகுந்த தீயில் முறையே பிரவேசித்தவளான திரௌபதி மீண்டும் வெளிப்பட்டுவர. மை வார் அளகம் - கரிய நீண்ட கூந்தல், தருமனை மணந்தபின், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு முறையாகத் தீக்குளித்து எழுந்து வந்து மற்ற நால்வரையும் மணந்தாள், என்பதை முறை என்ற சொல் குறிக்கும்.

இவள் ஓமாக்னியில் பிறந்தாளாதலால் ஈன்ற அழல் என்றார். அக்கினிப் பிரவேசத்தால் இவளுக்குத் தீங்கு ஏற்படாமையின், காதல் அழல் என்றார். ஐவரை மணந்த விடத்தும் கற்பினால் குறையாதவள், என்பது தோன்ற வடமீன் நிகர் கற்பினாள் எனப்பட்டாள்.

97. மாரன் கரும்பு வளரும்படி வார்த்த நீரால்
ஈரம் புலராக் கரத்தோருக்கி யாக சேனன்
தேரும் பரியுங் களிறுந்திரள் சேனை யாவும்
பாருந் தனமு முமதென்று பலவு மீந்தான்.

[மாரன் கரும்பு வளரும்படி வார்த்த நீரால் ஈரம் புலரா கரத்தோருக்கு யாகசேனன் தேரும், பரியும், களிறும், திரள் சேனை யாவும், பாரும் தனமும் உமது என்று பலவும் ஈந்தான்.]

**விளக்கம் :**—கன்னிகையை நீரொடு அளித்தல் மரபு. தாரை வார்த்துத் தரப்பட்ட கன்னி, தானமாகத் தன்னை ஏற்றவனோடு இல்வாழ்தல் பற்றி, 'மாரன் கரும்பு வளர வார்த்த நீர்' என்றார். 'மாரன் கரும்பு வளர்தல்,' இல்வாழ்க்கையின் இன்பத்தைக் குறிக்கும். அரசன் மருமக்களுக்குக் கொடுத்த வரிசைப் பொருள்களைக் கூறும் இச் செய்யுள்.

### துரியோதனாதியர் பாண்டவரோடு பொருதல்

### கலிவிருத்தம்

98. ஆண்டு மன்றல்பெற் றங்குரித் தாரிகல்
பாண்டு மைந்த ரென்னுஞ்சொல் பரவலும்
தாண்டு வெம்பரித் தேர்த்தார்த்த ராட்டிரர்
மீண்டும் வந்தவர் மேல்வினை செய்யவே.

[ஆண்டு மன்றல் பெற்று அங்குரித்தார் இகல் பாண்டு மைந்தர் எனும் சொல் பரவலும், தாண்டு வெம் பரி தேர் தார்த்தராட்டிரர் மீண்டும் வந்து அவர் மேல் வினை செய்யவே.]

**விளக்கம் :**—அங்குரித்தார் - (இறந்தார் எனப் பட்டவர்) முளைத்துத் தோன்றினார். தாண்டு வெம்பரி - பாய்ந்து செல்லும் கடிய வேகத்தையுடைய குதிரைகள். தார்த்தராட்டிரர் - திருதராட்டிரனது குமாரர். அவர் மேல் வினைசெய்ய - பாண்டவர்மேல் போர் தொடங்க,— அடுத்த செய்யுளோடு முடியும் - குளகம்.

99. சென்ற சேனையுந் திட்டத்துய் மன்னுடன்
நின்ற சேனையு நேருறு பூசலில்
கொன்ற சேனையொ ழிகுரு சேனையை
வென்ற சேனைவெ குண்டுவென் கண்டதே.

[சென்ற சேனையும் திட்டத்துய்மனுடன் நின்ற சேனையும் நேர் உறு பூசலில், கொன்ற சேனை ஒழி குரு சேனையை வென்ற சேனை வெகுண்டு வென் கண்டதே.]

**விளக்கம் :**—சென்ற சேனை - துரியோதனாதியர் சேனை. நின்ற சேனை - பாஞ்சால நாட்டுச் சேனை. நேர் உறு பூசலில் - எதிர்த்துச் செய்த போரில். கொன்ற சேனை ஒழி குரு சேனையை - கொல்லப்பட்ட சேனையின் பகுதி போக மிஞ்சியிருந்த கௌரவ சேனையின் பகுதியை. வென்ற சேனை - பாஞ்சாலரின் சேனை. வென் கண்டது - முதுகு கொடுக்கச் செய்தது; அதாவது ஓடச் செய்தது.

திட்டத்துய்மன் தலைமை தாங்கிப் போர் நடத்தினமை பற்றி, திட்டத்துய்மனுடன் நின்ற சேனை' எனப்பட்டது.

100. சாலும் வஞ்சச் சகுனியொ டெண்ணிய
நாலு மைந்தரு நச்செயி றாகவும்
வாலு மெய்யும் வருக்கங்க ளாகவும்
ஆலும் வெம்பகை யாடர வானதே.

[சாலும் வஞ்சம் சகுனியொடு எண்ணிய நாலு மைந்தரும் நச்சு எயிறு ஆகவும், வாலும் மெய்யும் வருக்கங்கள் ஆகவும், ஆலும் வெம்பகை ஆடு அரவு ஆனதே.]

**விளக்கம் :**—சாலும் வஞ்சனை - மிகுந்த வஞ்சனை. எண்ணிய - (சகுனியோடு சேர்த்து) எண்ணப்படும். நாலு மைந்தர் - சகுனியோடு துரியோதனன், கர்ணன், துச்சாதனன் ஆகியவர். நச்சு எயிறு - விஷப் பற்கள். வருக்கங்கள் வாலும் மெய்யும் ஆகவும் - துரியோதனனது மற்றத் தம்பியர் வாலும் உடலும் ஆகவும். ஆலும் - சப்திக்கின்ற, ஆரவாரிக்கின்ற.

துரியோதனாதியர் நச்சுப் பாம்பாக உருவகிக்கப்பட்டுள்ளார். பாம்பு, காளி, காளாத்திரி, யமன், யமதூதி என்ற நான்கு விஷப் பற்களை உடையது. துரியோதனாதியரின் கூட்-

மாகிய பாம்பின் பற்கள் சகுனி முதலிய நால்வர், தம்பியர், வாலும் உடலும் ஆகின்றனர். ஆனதே, என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளது.

101. அந்த நாக மழலுமிழ் கண்விடம்
சிந்த மேல்விடு சீற்றமுந் தோற்றமும்
முந்த வார்சிலைக்கைம் முகில் வாகனன்
மைந்தன் வாளிம ழைகளின் மாய்ந்தவே.

[அந்த நாகம் அழல் உமிழ் கண் விடம் சிந்த மேல் விடு சீற்றமும் தோற்றமும் முந்த வார் சிலை கை முகில் வாகனன் மைந்தன் வாளி மழைகளின் மாய்ந்தவே.]

**விளக்கம் :**—அந்தப் பாம்பு கண்வழி விஷத்தைச் சொரிந்து கொண்டு, எதிரிகளின்மேல் செலுத்திய கோபமும் பயங்கரமான தோற்றமும் ஆகிய இரண்டும் அர்ச்சுனனது முழக்கத்தோடு கூடிய, சர மழையினால் உடனே அழிந்தது,—என்பது பொருள். 'முந்த' என்பது "உடனே, அல்லது அம்புகள் மேல் விழுவதற்கு முன்னமேயே," என்ற பொருளது. 'அம்பு விழும் முன்னமேயே,' என்று பொருள் கொள்ளின், அப்பொழுது, இது மிகையுயர்வு நவிற்சியின் பாற்படும்.

இடியொடு மழைபொழியின் பாம்பு ஆற்றல் ஒடுங்கிய தாகும். அவ்வாறே, கௌரவப் பாம்பு அர்ச்சுனனது நாணொ லியோடு வெளிப்பட்ட அம்பு மழையின் முன் வலியொடுங்கிய தாயிற்று.

102. சமர வேழமு காசுரன் சாய்ந்தனன்
குமர னாலெனக் கோநகு லன்றனால்
அமரில் யானை யணிமுகத் தோடுமெய்
கமர்ப டப்புறந் தந்தனன் கன்னனே.

[சமரம் வேழம் முகாசுரன் (முகம் - அசுரன்) சாய்ந்தனன் குமரனால் என, கோ நகுலன் தனால் அமரில் யானை முகத் தோடு மெய் கமர் பட புறம் தந்தனன் கன்னனே.]

**விளக்கம் :**—குமரக்கடவுளால் தாரகாசுரன் அழிந்ததுபோல், நகுலனால், ஏறிவந்த யானையின் முகமும், தன் உடலும் பிளவு படக் கர்ணன் முதுகு தந்து ஓடினான், என்பது பொருள்.

தாரகாசுரன் யானை முகம் உடையவன். சூரபதுமனும் சிங்க முகனும் இவனது சகோதரர்கள். இவர்கள், மாயை என்ப வளுக்கும் காச்யப முனிவனுக்கும் பிறந்தவர்கள். சமரம்-போர்.

103. முன்னி டச்சமர் மோதுஞ் சகுனியை
மின்னி டைப்புயங் கம்வெருக் கொண்டெனத்
தன்னி டக்கைத் தனுவொடுந் தேரொடும்
பின்னி டப்பொரு தானவன் பின்னவன்.

[முன் இட சமர் மோதும் சகுனியை மின் இடை புயங்கம் வெரு கொண்டு என, தன் இடக்கை தனுவொடும் தேரொடும் பின்னிட பொருதான் அவன் பின்னவன்.]

**விளக்கம் :**—நகுலன் தம்பியான சகாதேவன், மின்னலினால் நாகம் அச்சங்கொண்டாற்போல், முற்பட்டுத்தாக்கிய சகுனியை, இடக்கை வில்லோடும் ஏறிவந்த தேரோடும் பின்னிடச் செய் தான்,—என்பது பொருள். 'மின்னிடை' என்பதிலுள்ள 'இடை' மூன்றாம் வேற்றுமைப் பொருளது.

104. தண்ம திக்குடைத் தம்முனுந் தம்பியும்
எண்ணு மற்றையி ளைஞர்கள் யாவரும்
கண்ணு றக்களங் காணுமுன் றீயினால்
வெண்ணெ யொத்துடைந் தார்விறல் வீமனால்.

[தண் மதி குடை தம்முனும் தம்பியும், எண்ணும் மற்றை இளைஞர்கள் யாவரும், கண் உற களம் காணுமுன் தீயினால் வெண்ணெய் ஒத்து உடைந்தார் விறல் வீமனால்.]

**விளக்கம் :**—தீயின் முன் வெண்ணெய்போல் துரியோதன னும், துச்சாதனனும், மற்றைத் தம்பியரும் களத்தைக் கண் ணால் நன்றாகக்காணுமுன். வீமனால் போருடைந்து ஓடினர்,— என்றவாறு தம்முனும் தம்பியும்-துரியோதனனும் துச்சா தனனும்.

தீ நெருங்கியவுடனே, வெண்ணெய் உருகி ஓடுதல் போல், வீமன் அருகே வந்தவுடனே துரியோதனாதியர் உறுதி குலைந்து நெகிழ்ந்து ஓடினர், என்பது உவமை. கண்ணுறக் களங்காணு முன்ஓடினர், என்றது, மிகையுயர்வு நவிற்சி அணியின் பாற்படும்.

105. விரோச னக்கதிர் மைந்தனும் வேந்தனும்
சரோச னத்திறற் றம்பியு மாமனும்
புரோச னப்பெயர்ப் புன்மதி தன்னை நொந்(து)
அரோச னத்துட னத்தின நண்ணினார்.

[விரோசனன் கதிர் மைந்தனும் வேந்தனும் சரோசனன் விறல் தம்பியும் மாமனும், புரோசனன் பெயர் புன்மதி தன்னை நொந்து அரோசனத்துடன் அத்தினம் நண்ணினார்.]

**விளக்கம் :—**விரோசனன் கதிர் - விரோசனன் என்ற ஒரு பெயரை உடைய கதிர்களை உடைய சூரியன்; அவன் மைந்தன் கர்ணன். வேந்தன் - துரியோதனன். சரோசனன் திறல் தம்பி - கோபத்தோடு வலிமையும் உடைய துச்சாதனன். (ஸரோஷணம், என்பதின் தமிழ் திரிபு சரோசனன்). புரோசனன் - பாண்டவரை அரக்கு மாளிகையில் அழிக்கும்படி அனுப்பப்பட்ட துர்மந்திரி. அரோசனம் - பிரகாசம் இல்லாமை; மகிழ்ச்சி இல்லாமை (ரோசநம் - பிரகாசித்தல், அதன் எதிர்மறை அரோசனம்). அத்தினம் - அத்தினபுரி.

தம்பி என்றது மற்றத் தம்பியரையும் குறிக்கும். புரோசனனது அஜாக்கிரதையினால், பாண்டவர் சாகாமை நேர்ந்தது பற்றி, அவனை நொந்தவர்களாய் அத்தினபுரி திரும்பினர், என்க.

106. முந்து போரின் முதுகிடும் வேந்தரால்
விந்தை தன்னையு மேதக வேட்டபின்
அந்த மாநக ரைவரு மாமனும்
வந்த கண்ணனு மன்புடன் வைகினார்.

[முந்து போரில் முதுகு இடும் வேந்தரால் விந்தை தன்னையும் வேட்டபின், அந்த மாநகர் ஐவரும் மாமனும், வந்த கண்ணனும் அன்புடன் வைகினார்.]

**விளக்கம் :—**விந்தை - வீரலட்சுமி. துரியோதனாதியர் முதுகிட்டு ஓடினமையின் பாண்டவர் வீரத்திருவையும் மணந்தவராயினர். மர்மன் - பாண்டவரின் மாமனாரான துருபதன். வந்த கண்ணன் - பாஞ்சாலம் வந்தருளிய கண்ணபிரான்.

107. தும்பை சூடிய வேற்றுரி யோதனன்
வெம்பு போரின் முதுகிட்டு மீண்டபின்

தம்பி கூறு தருமனுக் கீயுமா(று)
அம்பி கேய னமைச்சரொ டெண்ணினான்.

[தும்பை சூடிய வேல் துரியோதனன் வெம்பு போரின் முதுகு இட்டு மீண்டபின், தம்பி கூறு தருமனுக்கு ஈயுமாறு அம்பிகேயன் அமைச்சரொடு எண்ணினான்.]

**விளக்கம் :**—தம்பி கூறு - தம்பியான பாண்டுவின் பாகம். அம்பிகேயன் - அம்பிகை மகனாகிய திருதராட்டிரன். தும்பை மாலை, போர் செய்வோர் அணியும் மாலை.

108. தாதி னாற்பொலி தார்வரை மார்பரைத்
தூதி னாற்றங்க டொல்பதி சேர்த்தினான்
காதி னாற்பய னின்றெனக் கண்கள்போல்
கோதி னாற்றெரி யாமனக் கோளினான்.

[தாதினால் பொலி தார்வரை மார்பரை (பாண்டவரை) தூதினால் தங்கள் தொல்பதி சேர்த்தினான். காதினால் பயன் இன்று என, கண்கள்போல் கோதினால் தெரியா மனம் கோளினான்.]

**விளக்கம் :**—கண்கள்போல்கோதினால்...கோளினான், தாதினால்...மார்பரை, காதினால் பயன் இன்று என, தூதினால்... சேர்த்தினான்,—என்பது அன்வயம்.

தாது - பூந்தாது. தூதர் மூலம் (பாண்டவரைத்) தொல்பதி வருவித்தான் என்பது இரண்டாவது அடியின் பொருள். காதினால் பயன் இன்று என - கொலை முயற்சியினால் பயன் இலது என்று முடிவு செய்து (காது கொலை). ஈற்றடி குறிப்பது திருதராட்டிரன். அவன் பிறவிக் குருடனாதலால், கண்ணினால் எதையும் காண முடியாமை இயற்கையாயிற்று, அதுபோல், அவன் நன்மை தீமைகளைக் கண்டுகொள்ள முடியாமை, குற்ற முடைய (அவனது) மனத்தின் தன்மையால் ஆயிற்று, என்பது பொருள்.

விதுரன் மூலம் திருதராட்டிரன் பாண்டவரை அத்தினபுரி அழைத்து வந்ததாக முதல் நூல் கூறும்.

109. வீடு மற்கும் விதுரற்கு மேற்கவந்
நாடு முற்று நரபதி நல்கவே
ஆடு பொற்கொடி யந்நகர் வைகினார்
நீடு விற்றிற லோர்நெடுங் காலமே.

[வீடு மற்கும் விதுரற்கும் ஏற்க அ நாடு முற்றும் நரபதி நல்கவே, ஆடு பொன் கொடி அ நகர் வைகினார், நீடு வில் திறலோர் நெடும் காலம்.]

விளக்கம் :—பீஷ்மனுக்கும் விதுரனுக்கும் மனத் திருப்தி உண்டாகும்படி, நரபதி (திருதராட்டிரன்) பாண்டவர்க்குரிய பாகமான நாடு முழுவதையும் அளிக்க, நெடுங்காலம் பாண்டவர் அத்தின புரியில் தங்கியிருந்தார்கள், என்க.

பீஷ்மனும் விதுரனும் திருப்தி அடையுமாறு நாடு கொடுக்க முன் வந்தானே அன்றி, மனமொப்பி நாடளிக்க முன் வந்தானல்லன், என்ற தொனியது முதலடி. ஏகாரங்கள், அசை.

**மாலையிட்ட சருக்கம் முற்றும்.**

## 6. இந்திரப் பிரத்தச் சருக்கம்

பாண்டவர்கள் இந்திரப்பிரத்தம் என்னுமோர் நகரை அமைத்துக் கொண்டு, அங்கே அவர்கள் வாழ்ந்து வந்த வரலாற்றைக் கூறும் சருக்கம் இது. இந்திரப்ரஸ்தம் என்ற வட சொல் தமிழில் இந்திரப் பிரத்தம் என்று விகாரப்பட்டது.

**கடவுள் வணக்கம்**

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

1. வேதமும் வேதம் விளம்புமெய்ப் பொரு
மப்பொருள் விதங்களும் பஞ்ச
பூதமும் புலனும் புலன்களின் பயனு
மப்பயன் பொலிவுற நுகரும்
ஞாதமு முகலகம் படைத்தளித் தழித்து
ஞானமா யகிலமு நிறைவுற்(று)
ஆதியு நடுவு முடிவுமாய் நின்ற
வாழியா னடியிணை பணிவாம்.

[வேதமும், வேதம் விளம்பும் மெய்ப்பொருளும், அ பொருள் விதங்களும், பஞ்ச பூதமும் புலனும் புலன்களின் பயனும், அ பயன் பொலிவு உற நுகரும் ஞாதமும், உலகம் படைத்து அளித்து

அழித்து ஞானம் ஆம் அகிலமும் நிறைவு உற்று, ஆதியும் நடுவும் முடிவும் ஆய் நின்ற ஆழியான் அடி இணை பணிவாம்.]

**விளக்கம்:**—வேதம் விளம்பும் மெய்ப்பொருள் - பரப்பிரும்ம சொரூபம். மெய்ப்பொருள் விதங்கள் - மெய்ப்பொருளின் பகுப்புக்கள்; அதாவது, படைத்தல், அழித்தல், காத்தலாகியதொழில் களைச் செய்யும் பிரும்மா, விஷ்ணு, சிவன் என்ற பகுப்புக்கள். பஞ்ச பூதம் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம். புலன்களின் பயன்-இந்திரிய உணர்வுக்கு விஷயமாகும் பொருள்கள்; அதாவது, கேட்டல், ஸ்பரிசித்தல், காணல், சுவைத்தல், முகர்தல் ஆகிய வற்றிற்கு உரிய பொருள்கள். பொலிவுற நுகரும் ஞாதமுய. தக்கபடி புலனுக்குரிய பொருள்களை அனுபவித்து உணரும் ஆத்மாவும் (ஆகி). ஞானமாய் - அகிலமும் நிறைவுற்று - எங்கு மாய்ப் பரவி நிறைந்து. ஆழியான் - திருமால். ஆதியான், என்றும் பாடம் உளது, **ஜ்ஞாதா** என்ற வடசொல்லின் திரிபு **ஞாதம்** இயல்பில் உணர்வு உடையது என்ற பொருளது. அத் தன்மைத் தாகிய ஆன்மாவை அது குறிப்பதாயிற்று.

'புலன்' என்பதற்கு மெய், வாய், கண், மூக்கு, செவி, என்ற இந்திரியப் பொறிகள் என்றும் பொருள் கொள்ளலாம். அப் பொறிகளுக்குரிய விஷயங்கள் பயன்.

## தருமன் முடி சூடல்

2. அத்தின புரியி லையிரு பதின்ம
 ரைவரென் றிரண்டறத் தம்மில்
ஒத்தனர் மருவத் தெவ்வர் மெய் வெருவ
 வுளமகிழ் நாளின்மற் றொருநாள்
மைத்துனன் முதலாந் தமரையுந் தக்க
 மந்திரத் தவரையுங் கூட்டி
இந்தின முயர்ந்த தினமென மகுடஞ்
 சூட்டுதற் கெண்ணினா னிகலோன்.

[அத்தினபுரியில் ஐ இரு பதின்மர், ஐவ என்று இரண்டு அற தம்மில் ஒத்தனர் மருவ, தெவ்வர் மெய் வெருவ, உளம் மகிழ் நாளில் மற்று ஒருநாள், மைத்துனன் முதல் ஆம் தமரையும் தக்க மந்திரித்தவரையும் கூட்டி, இ தினம் உயர்ந்த தினம் என மகுடம் சூட்டுதற்கு எண்ணினான் இகலோன்.]

**விளக்கம் :**—ஐ இரு பதின்மர் - நூற்றுவரான துரியோதனாதியர். ஐவர் - பாண்டவர். என்று - என்று பேசப்படும். இரண்டு அற தம்மில் ஒத்தனர் மருவ-இரண்டு என்ற வேறுபாடு இல்லாமல் தங்களுள் ஒத்து வாழ. தெவ்வர் மெய் வெருவ - பகைவர்கள் மெய் நடுங்க. மைத்துனன் முதலாம் தமர் - சகுனி முதலிய உறவினர். இகலோன் - திருதராட்டிரன்.

அறிவு, அஞ்சாமை தன்னலமின்மை, முயற்சி, தீர்க்க தரிசனம், நாட்டின் நலம் நாடி அரசருக்கு இடித்துரைக்கும் செம்மை, பொறுமை முதலிய பண்பினர், தக்க மந்திரத்தவர் ஆவர், தமரோடும் மந்திரிகளோடும் கலந்து தருமனுக்கு முடி சூட்டத் திருதராட்டிரன் நிச்சயித்தான், என்பதாம்.

3. செழுமுர சுயர்த்த வேந்தனுக் கின்று
திருவபி டேகநா ளென்று
முழுமுர சறைந்து நகரிகோ டித்து
முடிபுனை கடிகொண்மண் டபத்தின்
எழுமுர சதிரப் பகீரதி முதலா
மெத்துறைப் புனல்களு மியற்றித்
தொழுமுர சுடன்வெள் வலம்புரி முழங்கச்
சுருதிமா முனிவருந் தொக்கார்.

[செழு முரசு உயர்த்த வேந்தனுக்கு இன்று திரு அபிடேகம் நாள் என்று முழு முரசு அறைந்து, நகரி கோடித்து, முடிபுனை கடிகொள் மண்டபத்தின் எழு முரசு அதிர, பகீரதி முதல் ஆம் எ துறைபுனல்களும் இயற்றி, தொழு முரசுடன் வெள் வலம்புரி முழங்க, சுருதி மா முனிவரும் தொக்கார்.]

**விளக்கம் :**—செழு முரசு உயர்த்த வேந்தன் - தருமன். முழு முரசு - பெரிய முரசம். நகரி கோடித்து - நகரை அலங்கரித்து. எழு முரசு - ஒலி எழும் முரசங்கள். பகீரதி முதலாம் எத்துறை புனல்கள் - கங்கை முதலிய எல்லாப் புண்ணிய நதிகளின் தீர்த்தங்கள். இயற்றி - (தீர்த்தங்களை) கொணர்வித்து. தொழு முரசு - கொண்டாடப்படும் முரசங்கள். வெள் வலம்புரி - வெள்ளிய வலம்புரிச் சங்குகள். சுருதி மாமுனி - வேத வித்தகர். தொக்கார் - வந்து குழுமினர்.

வாத்தியம் வாசிப்பவர், வாசிக்குமுன், வாத்தியத்தைத் தொழுதல் பற்றித் தொழு முரசு எனப்பட்டது. அறைந்து,

கோடித்து, முழங்க, என்பவை பிறவினைப் பொருளில் வந்த தன் வினைகள்.

4. அத்தியின் பலகை நவமணி யழுத்தி
யாடகத் தமைத்தரி முகத்தால்
பத்திகொள் பீடத் தழகுற விருத்திப்
பசும்பொனின் றசும்புக ணிறைந்த
சுத்தநீர் வியாதன் றௌமியன் முதலோர்
சொரிந்தனர் சோமன்வந் துதித்துச்
சித்திர கிரியி னெடுநிலா வெள்ளஞ்
சீருடன் வழியவார்த் தெனவே.

[அத்தியின் பலகை நவமணி அழுத்தி ஆடகத்து அமைத்து, அரிமுகத்தால் பத்திகொள் பீடத்து அழகு உற இருத்தி, பசும் பொனின் தசும்புகள் நிறைந்த சுத்தம் நீர், வியாதன், தௌமியன் முதலோர் சொரிந்தனர், சோமன் வந்து உதித்து சித்திர கிரியில் நெடுநிலா வெள்ளம் சீருடன் வழிய வார்த்தது எனவே.]

விளக்கம் :— அத்தியின்...சுத்த நீர், சோமன் வந்து...வார்த் தென, வியாதன் தௌமியன் முதலோர் சொரிந்தனர், என்று அன்வயிக்க.

ஆடகம் - பொன். அரி முகத்தால் பத்தி கொள் பீடம் - சிங்கத்தின் முகத்தினால் வரிசையாக அலங்கரிக்கப்பட்ட பீடம், சிங்காதனம். தசும்பு - குடம். சோமன் - சந்திரன். சித்திரகிரி - அழகிய மாலை.

வியாதன் முதலியோர் பொன் குடங்களினால் அபிஷேகம் செய்தது, உதயசந்திரன் நிலவைப் பொழிவது போன்றிருந்தது, என்ற பொருளது ஈற்றடி. தற்குறிப்பேற்ற அணி.

5. உதயமால் வரையி னுதயரா கத்தோ
டுதித்ததே ருதைய னென் றுரைப்பத்
துதையளி ததைந்த மாலையான் சென்னிச்
சோதிமா மகுடமுஞ் சூட்டிப்
பதயுக மரசர் முடிகளாற் சிவப்பப்
பகர்விதி முடித்தபின் பலரும்
இதயமொத் தமிர்த மொழியவ ரடைவே
யிருகைநீ ராசன மெடுத்தார்.

[உதயம் மால்வரையின் உதயம் ராகத்தோடு உதித்த தேர் உதையன் என்று உரைப்ப, துதை அளி ததைந்த மாலையான் சென்னி சோதி மா மகுடமும் சூட்டி, பதம் யுகம் அரசர் முடிகளால் சிவப்ப, பகர் விதி முடித்த பின் பலரும் இதயம் ஒத்து அமிர்தம் மொழியவர் அடைவே இருகை நீராசனம் எடுத்தார்.]

**விளக்கம் :**—உதய மால்வரை - பெரிய உதயகிரி. உதயம் ராகத்தோடு உதித்த தேர் உதையன்—உதிக்கும் காலத்தினதான செந்நிறத்தோடு தோன்றிய ஒற்றைச் சக்கரத் தேரையுடைய சூரியன். என்று உரைப்ப - என்று (கண்டோர்) கூறும்படி. துதை அளி ததைந்த - நெருங்கிய வண்டின் கூட்டம் நிறைந்த. சென்னி- (தருமனது) தலை. பதம் யுகம் - இரண்டு பாதங்கள். பகர் விதி முடித்த பின் - நூல்கள் கூறும் பட்டாபிஷேகச் சடங்குகளைச் செய்து முடித்தபின். அமிர்த மொழியவர் பலரும் இதயம் ஒத்து அடைவே - இனிய மொழிகளையுடைய மகளிர் பலரும் ஒத்த மனத்தினராய் முறைப்படி. நீராசனம் - ஆலத்தி, அஷ்டமங்களில் ஒன்றான ஆலத்தி. ராகம் - செந்நிறம்.

தருமனுக்கு உதயகிரியும், அவனது தலைக்கு உதயகிரியின் சிகரமும், கிரீடத்திற்கு உதயமண்டலமும், ஒப்பாதல் காண்க. 'மகுடம் சூட்டல், விதி முடித்தல்,' என்பவற்றிற்கு எழுவாய் வியாதன் முதலோர். மகுடமும் சூட்டி, என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியது.

6. ஒற்றையோ டிரட்டை வலம்புரி மிழற்ற
வொருகுடை மதியென நிழற்றக்
கொற்றவர் முன்பின் போதர மடவார்
குழுப்பொரி சிந்திவாழ்த் தெடுப்ப
இற்றைநா ளெவரும் வாய்த்தவா வென்ன
வேழுய ரிராசகுஞ் சரமேல்
மற்றைநால் வருந்தற் சூழ்வரத் தருமன்
மைந்தன்மா நகர்வலம் வந்தான்.

[ஒற்றையோடு இரட்டை வலம்புரி மிழற்ற, ஒரு குடை மதி என நிழற்ற, கொற்றவர் முன்பின் போதர, மடவார் குழு பொரி சிந்தி வாழ்த்து எடுப்ப, இற்றை நாள் எவரும் வாய்த்த ஆ என்ன, ஏழ் உயர் இராசகுஞ்சரம்மேல், மற்றை நால்வரும் சூழ்வர தருமன் மைந்தன் மா நகர் வலம் வந்தான்.]

**விளக்கம் :**—ஒற்றை - ஊது கொம்பு. இரட்டை வலம்புரி - இருவகைச் சங்கங்கள். ஒருகுடை - ஒற்றை வெண்குடை. பொரி சிந்தல், மங்களங்களில் ஒன்று. வாய்த்த இற்றை நாள் ஆ என்ன - நேர்ந்த இந்த நாள் 'ஆ' என்று கொண்டாட; அதாவது வியக்கத்தக்க நல்ல நாள் என்று கொண்டாட. தருமன் மைந்தன் - தருமபுத்திரன். ஏழ்உயர் - ஏழு முழ உயரமுடைய. இராஜகுஞ்சரம் - பட்டத்து யானை.

இரட்டை வலம்புரி : வெற்றிச் சங்கும், மங்கலச் சங்குமாம்.

### தருமன் காண்டவப்பிரத்தம் சேரல்

7. மாநகர் வலமாய் வந்துதன் குரவர்
மலர்ப்பத முறைமையால் வணங்கிக்
கோநக ரிருக்கை யடைந்தன னொருநாட்
கொற்றவ னேவல்கைக் கொண்டு
பேய்நக ரெனுமா றியாவரும் வழங்காப்
பிறங்குநீள் கானிடை யழிந்த
தூநகர் முன்னோ ரிருந்ததொன் றந்தத்
தொன்னகர் வைகுமா துணிந்தான்.

[மாநகர் வலமாய் வந்து தன் குரவர் மலர் பதம் முறைமையால் வணங்கி, கோ நகர் இருக்கை அடைந்தனன், ஒரு நாள் கொற்றவன் ஏவல் கைக்கொண்டு, பேய் நகர் எனும் ஆறு யாவரும் வழங்கா பிறங்கு நீள் கானிடை அழிந்த தூநகர் முன்னோர் இருந்தது ஒன்று, அந்த தொல் நகர் வைகுமா துணிந்தான்.]

**விளக்கம் :**—குரவர் - வீடுமன், துரோணன், கிருபன், திருதராட்டிரன், விதுரன், குந்தி, காந்தாரி என்போர். முறைமையால் வணங்கி - தகுதிக்குத் தக்கபடி முறையே வணங்கி. கோநகர் - தலைநகரான அத்தினபுரி. இருக்கை அடைந்தனன் - ஆட்சிபீடத்தில் அமர்தலை அடைந்தான். கொற்றவன் - திருதராட்டிரன். பேய் நகர் எனுமாறு - மனித சஞ்சாரம் இன்மையின் பேய் நகர் என்று எவரும் சொல்லும்படியான. பிறங்கு நீள் கானிடை முன்னோர் இருந்தது (ஆன) அழிந்த தூநகர் ஒன்று - அடர்ந்த நீண்ட காட்டில், முன்னோர் இருந்து வாழ்ந்ததான. (ஆனால் பின்னர்) அழிந்துபோன நல்ல நகரம் ஒன்று இருந்தது.

அ தொல் நகர் - அந்த அழிதலுற்ற பழைய நகரி. வைகுமா துணிந்தான் - தங்கி வாழும்படி துணிந்தான்.

துரியோதனாதியரின் தூண்டுதலால், திருதராட்டிரன், பாண்டவரைக் காண்டவப்பிரத்தம் செல்லுமாறு பணித்தான் என்க,

8. அங்கண்மா ஞால முழுவதுங் கொடுத்தற்
காயர்தம் பதியினங் குரித்த
செங்கண்மான் முதலாங் கிளைஞரும் வயிரத்
தேர்முதற் சேனையுந் தாமும்
வெங்கண்மா சுணத்தோ னெண்ணமெத் திசையும்
வெளிப்பட வேந்தரை வரும்போய்த்
தங்கண்மா தவத்தாற் காண்டவப் பிரத்த
மென்னுமத் தழல்வன மடைந்தார்.

[அம் கண் மா ஞாலம் முழுவதும் கொடுத்தற்கு ஆயர், தம் பதியின் அங்குரித்த செம் கண்மால் முதல் ஆம் கிளைஞரும், வயிரம் தேர் முதல் சேனையும் தாமும், வெம் கண் மாசுணத் தோன் எண்ணம் எத்திசையும் வெளிப்பட, வேந்தர் ஐவரும் போய் தங்கள் மா தவத்தால் காண்டவப்பிரத்தம் என்னும் அ தழல் வனம் அடைந்தார்.]

**விளக்கம் :**—இனி நிகழவிருக்கும் பாரதப் போரில், கண்ணன் பகைவென்று உலகம் முழுவதையும் பாண்டவருக்கு உரியதாக்கப் போவது தோன்ற, "அங்கண்மா ஞாலம்...அங்குரித்த செங்கண் மால்" என்றார். அங்குரித்த - அவதரித்த. வெங்கண் மாசுணத் தோன் - கொடிய பாம்புக்கொடியை உடையவனான துரியோ தனன். எண்ணம் எத்திசையும் வெளிப்பட - துரியோதனனது கெட்ட எண்ணம் எங்கும் வெளிப்பட. அதாவது, முன்பு பாண்டவர்களை வாரணாவதத்திற்கு அனுப்பியதுபோல், இப் பொழுது பாண்டவர்களை காண்டவப்பிரத்தம் செலுத்திய கொடுமை தோன்ற; என்ற பொருளது.

காண்டவப்பிரத்தம் இந்திரப்பிரத்தம் என்ற சிறந்த நகர மாய்தும், அங்கே, உபபாண்டவர், அபிமந்யு என்ற புத்திரர் களைப் பெற்று, இராஜசூய யாகம் செய்து மேன்மையுற்றதும் தோன்ற 'மா தவத்தால் காண்டவப்பிரத்தம் அடைந்தார்," என்றார்.

தேர்முதற் சேனை - தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை, காலாட்படை. வயிரத்தேர் - வலிய தேர்,

9. போயவட் புகுந்த பொழுதுபைங் கடலும்
பூவையும் புயலுநேர் வடிவின்
மாயவற் கெவ்வா றிவ்வுழி யிவர்கள்
வாழ்வதென் றொருநினை வெய்தி
நாயகக் கடவு டன்னைமுன் னுதலு
நாகர்நா யகனொடு நடுங்கி
மேயகட் புலன்கள் களித்திடத் திருமுன்
னின்றனன் விச்சுவ கன்மா.

[போய் அவன் புகுந்தபொழுது, பைங்கடலும் பூவையும் புயலும் நேர் வடிவின் மாயவற்கு, எவ்வாறு (எ - ஆறு) இவ்வுழி (இ - உழி) இவர்கள் வாழ்வது என்று ஒரு நினைவு எய்தி, நாயகம் கடவுள் தன்னை முன்னுதலும், நாகர் நாயகனோடு நடுங்கி, மேய கண் புலன்கள் களித்திட திருமுன் நின்றனன் விச்சுவகன்மா.]

**விளக்கம் :**—பைங்கடலும் (காயாம்) பூவையும் புயலும் நேர் வடிவின் மாயவன் - கண்ணபிரான். நாயகக் கடவுள் - தேவர் தலைவனான இந்திரன், நாகர் நாயகன் - இந்திரன். இந்திரனைக் கண்ணன் நினைத்தவுடன், இந்திரனும், அவனது பரிவாரங்களில் ஒருவனான விச்வகர்மாவும், கண்ணனது திரு முன்னர் வந்து நின்றனர், என்க.

இந்திரனுக்கும் விச்வகர்மனுக்கும் கண்ணனிடத்துள்ள பய பக்தியைக் குறிக்கும் 'நடுங்கி' என்ற சொல். 'கண் களித்திட' என்றது கண்ணனைக் கண்டதால் உண்டான களிப்பைக் குறிக்கும்.

அஷ்ட வசுக்களில் ஒருவனான பிரபாசனன் என்பானுக்குப் பிரகஸ்பதியின் சகோதரியினிடம் பிறந்த பிள்ளை, விச்வகர்மா.

10. நுண்ணிதி னுணர்ந்தோ ருணர்தருஞ் சிற்ப
நூலறி புலவனை நோக்கித்
திண்ணிதி னமரர் சேகரன் மொழிந்தான்
றேவரு மனிதரும் வியப்ப

மண்ணினும் புயங்கர் பாதல முதலா
மற்றுள வுலகினு நமதாம்
விண்ணினு முவமை யிலதெனக் கடிதோர்
வியனகர் விதித்திநீ யெனவே.

[நுண்ணிதின் உணர்ந்தோர் உணர்தரும் சிற்பநூல் அறி புலவனை நோக்கி, திண்ணிதின் அமரர் சேகரன் மொழிந்தான், தேவரும் மனிதரும் வியப்ப, மண்ணினும் புயங்கர் பாதலம் முதல் ஆம் மற்று உள உலகினும், நமது ஆம் விண்ணினும் உவமை இலது என கடிது ஓர் வியல் நகர் விதித்திநீ எனவே.]

**விளக்கம் :**—விஷயங்களை நுட்பமாக அறியவல்லோர் அறியத் தக்க சிற்ப நூல் வித்தகனான விச்வகர்மா, என்பது முதலடியின் பொருள். அவனை நோக்கி அமரர் சேகரன் (இந்திரன்), "தேவரும் மனிதரும் வியக்கும்படியும், பூலோகத்திலும், நாகர் வாழும் பாதலத்திலும், (அப் பாதலம் முதலாகிய) வேறுள உலகங்களிலும், நமதாகிய சுவர்க்கலோகத்திலும் இதற்கு ஒப்பான நகரம் இல்லையென்று சொல்லும்படியும், ஒரு பெரிய நகரத்தைச் சிருஷ்டிப்பாயாக," என்று கட்டளையிட்டான். புயங்கர் பாதலம் - நாகர் உலகம்.

கண்ணனது திருவுள்ளம் அறிந்த இந்திரன், அவன் உள்ளம் உவத்தலை விரும்பி, "நமதாம் விண்ணினும் உவமை இலதென நகர் விதித்தி." என்றானாயிற்று.

11. தேவினுந் தேவ யோனியிற் பிறந்த
திரளினுஞ் சிறந்தயா வர்க்கும்
பூவினு மெவ்வெவ் வுலகினு முன்னம்
புந்தியா லியற்றிய புரங்கள்
யாவினு மழகும் பெருமையுந் திருவு
மின்பமு மெழுமடங் காக
நாவினும் புகலக் கருத்தினு நினைக்க
வரியதோர் நலம்பெறச் சமைத்தான்.

[தேவினும், தேவயோனியில் பிறந்த திரளினும், சிறந்த யாவர்க்கும், பூவினும் எவ்எவ் (எ-எ) உலகினும் முன்னம் புந்தியால் இயற்றிய புரங்கள் யாவினும், அழகும் பெருமையும் திருவும் இன்பமும் எழு மடங்கு ஆக, நாவினும் புகல, கருத்தினும் நினைக்க அரியது ஓர் நலம் பெற சமைத்தான்.]

**விளக்கம் :**—தேவினும் - தேவர் வகுப்பிலும். தேவ யோனியில் பிறந்த திரள் - அசுரர், கந்தருவர், கின்னரர், வித்யாதரர், கிம்புருடர், சித்தர் உரகர் முதலியோர். பூவினும் - பூலோகத்திலும். "நாவின் புகலவும், கருத்தின் நினைக்கவும் அரியதோர்... நகர் சமைத்தான்," என்று இயைக்க.

நினைத்த அளவில் சிருஷ்டிக்கும் தன்மை தோன்ற, "புந்தியால் இயற்றிய புரங்கள்,' என்றார்.

12. மரகதங் கோமே தகந்துகிர் தரளம்
வைரம்வை தூரிய நீலம்
எரிமணி புட்ப ராகமென் றிவற்றிற்
காகர மிந்தமா நகரென்(று)
அரிமுத லிமையோ ரனைவரும் புகழ்ந்தா
ராடக ப்பொருப்பினை யழித்துத்
தரணியி னகரொன் றமைத்தவா வென்று
தபதியர் யாவரும் வியந்தார்.

[மரகதம், கோமேதகம், துகிர், தரளம், வைரம், வை தூரியம், நீலம், எரிமணி, புட்பராகம் என்ற இவற்றிற்கு ஆகரம் இந்த மா நகர் என்று, அரி முதல் இமையோர் அனைவரும் புகழ்ந்தார்; ஆடகம் பொருப்பினை அழித்து தரணியின் நகர் ஒன்று அமைத்த ஆ என்று தபதியர் யாவரும் வியந்தார்.]

**விளக்கம் :**—மரகதம் - பச்சைக்கல் (நவமணிகளில் ஒன்று). கோமேதகம், நவமணிகளில் ஒன்று. துகிர் - பவளம். தரளம் - முத்து. வைரம் - வைரக்கல். வை தூரியம் - வைடூர்யம். நீலம் - நீலக்கல். எரிமணி - சிவப்புக்கல் (மாணிக்கம்) புட்பராகம் - புஷ்பராகக்கல் (என்று சொல்லப்படும் இம்மணிகளுக்கு) இந்த நகரமானது, ஆகரம் - இருப்பிடம். ஆடகப் பொருப்பு-பொன் மலையான வடமேரு.

வடமேருவை அழித்து உருக்குலைத்து, இம் மண்ணில் ஒரு பொன்னகரம் அமைத்த விதம் என்ன ஆச்சரியம் என்று ஸ்தபதிகள் வியந்து கொண்டாடினர், என்க. ஸ்தபதி என்ற வடசொல் தபதி என்று விகாரப்பட்டது.

13. என்பதி யழகு குலைந்ததென் றெண்ணி
யிந்திரன் வெறுக்கவு மியக்கர்
மன்பதி பொலிவு சிதைந்ததென் றிடவு
மற்றுள வானவர் பதிகள்

புன்பதி யாகிப் போயின வெனவும்
புரையறு புந்தியாற் புவிமேல்
நன்பதி யிதுவொன் றியற்றினா னென்று
நாரணா திகடுதித் திடவும்.

[என்பதி அழகு குலைந்தது என்று எண்ணி இந்திரன் வெறுக்கவும், இயக்கர் மன் பதி பொலிவு சிதைந்தது என்றிடவும், மற்று உள வானவர் பதிகள் புல்பதி ஆகி போயின எனவும், புரை அறு புந்தியால் புவிமேல் நல்பதி இது ஒன்று இயற்றினான் என்று நாரண ஆதிகள் துதித்திடவும்,—இதுவும் அடுத்த கவியும் குளகம்.]

**விளக்கம் :**—இந்திரன் பதி அமராவதி. இயக்கர்மன் - குபேரன். அவனது பதி அளகாபுரி. மற்றுள வானவர், வருணன் முதலியோர். புல்பதியாகிப் போயின - நலங்கெட்ட நகரங்களாயின. புரை அறு புந்தி - விச்வகர்மனது குற்றமற்ற மனம். நாரணாதி தேவர்கள் - விஷ்ணு முதலிய தேவர்கள். 'நாராயணாதீ' என்ற தொடரின் விகாரம் நாரணாதி.

விச்வகர்மனின் சிருஷ்டியைக் கண்டு நாரணன் ஆதியர் பாராட்டினர்; மற்றத் தேவர்கள் மனக் கசப்புக் கொண்டனர் என்க.

14. சந்திரா பதமுந் தினகரா பதமு
மிருபொழு தினுமெழச் சமைத்த
மந்திரா திகளு மஞ்சமு மதிலு
மகரதோ ரணமணி மறுகும்
கொந்திரா நின்ற சோலையுந் தடமுங்
கொற்றவன் கோயிலு நோக்கி
இந்திரா பதியவ் விந்திரன் பெயரா
லிந்திரப் பிரத்தமென் றிட்டான்.

[சந்திர ஆபதமும் தினகர ஆபதமும் இரு பொழுதினும் எழ சமைத்த மந்திர ஆதிகளும், மஞ்சமும், மதிலும், மகரதோரணம் மணி மறுகும், கொந்து இராநின்ற சோலையும், தடமும், கொற்றவன் கோயிலும் நோக்கி, இந்திராபதி அ இந்திரன் பெயரால் இந்திரப் பிரதம் என்று (பெயர்) இட்டான்.]

**விளக்கம் :**—சந்திராபதம் - சந்திரனுக்கு ஆபத்து. தினகராதிபம் - சூரியனுக்கு ஆபத்து. இந் நகரத்தின் மேல்மாடம்,

கோபுரம் முதலியன மிகவுயர்ந்து இருந்ததால் இருபொழுதும் சந்திர சூரியர்களுக்கு இடையூறாயின, என்பது கருத்து. மந்திராதிகள் - மாளிகை முதலியவைகள். மஞ்சம் - கட்டில். மகர தோரணமணி மறுகு - மகர தோரணங்களைக் கொண்ட அழகிய வீதி. கொந்து இராநின்ற சோலை - கொத்துக் கொத்தாய்ப் பூக்களைப் பெற்றிருந்த சோலை. தடம் - குளம். கொற்றவன் கோயில் - அரண்மனை. இந்திராபதி - (இந்திரை - இலக்குமி) திருமகள் கொழுநனான கண்ணபிரான். அ இந்திரன் - நகரம் அமைக்கும்படி விச்வகர்மனை ஏவிய இந்திரன்.

கொத்து என்பதின் மெலித்தல் விகாரம் கொந்து. சுறாமீன் வடிவில் அமைக்கப்பெற்ற தோரணம், மகரதோரணம். இந்திரன் ஏவலால் எழுந்த நகரமாதலால் அதற்குக் கண்ணன் இந்திரப் பிரத்தம் என்று பெயரிட்டான். சந்திர சூர்யர்களுக்கு இரவு பகலாகிய இருபொழுதிலும் ஆபத்தே, என்று சொல்லும்படி, மிகவுயரமாக விசுவகர்மனால் நிருமிக்கப்பெற்ற, என்பது முதலடியின் பொருள்.

### இந்திரப்பிரத்த வருணனை

15. இமையவர் பதியி லுள்ளன யாவு
மிங்குள விங்குமற் றுள்ள
அமைவுறு பொருள்க ளங்கில வெனுமா
றமைத்தவான் றொல்பதி யழகைச்
சமைவுற விரித்துப் புகழ்வதற் குன்னிற்
சதுர்முகத் தவனுமெய் தளரும்
நமர்களா னவில முடியுமோ முடியா
தாயினும் வல்லவா நவில்வாம்.

[இமையவர் பதியில் உள்ளன யாவும் இங்குள, இங்கு மற்று உள்ள அமைவு உறு பொருள்கள் அங்கு இல, எனும் ஆறு அமைத்த வான் தொல்பதி அழகை சமைவு உற விரித்து புகழ்வதற்கு உன்னில் சதுர் முகத்தவனும் மெய் தளரும்; நமர்களால் நவில முடியுமோ! முடியாது; ஆயினும் வல்லவா நவில்வாம்.]

விளக்கம் :—அமைவுறு பொருள் - சிறந்த பொருள். சமைவுற - பொருந்த. தக்கபடி. மெய் தளரும் - மனம் தளரும். நமர்கள் - எம் போன்றவர்கள். வல்லவா - இயன்றபடி.

இது, புலவர் செய்யப் போகும் நகர வருணனைக்கு அவையடக்கம் போல் அமைந்துளது. சதுர் முகனுக்கு முடியாத ஒன்றை ஒருமுகமுடைய மனிதனால் எங்ஙனம் செய்ய முடியும், என்ற கருத்தைத் தருவதால், இது, கருத்துடையடை அணியின் பாற்படும்.

16. விதிமறை முறையிற் சாந்திசெய் கடவுள்
வேதிய ராரவ மொருசார்
மதிமுறை தவறா வமைச்சர்சொல் விழையு
மன்னவ ராரவ மொருசார்
நிதிகெழு செல்வத் தளகையோர் நெருக்கா
னிறைந்தபே ராரவ மொருசார்
பதிதொறு முழவர் விளைபய னெடுக்கும்
பறைகறங் காரவ மொருசார்.

[விதிமறை முறையின் சாந்தி செய் கடவுள் வேதியர் ஆரவம் ஒருசார், மதிமுறை தவறா அமைச்சர் சொல் விழையும் மன்னவர் ஆரவம் ஒருசார், நிதிகெழு செல்வத்து அளகையோர் நெருக்கால் நிறைந்த பேர் ஆரவம் ஒருசார். பதிதொறும் உழவர் விளை பயன் எடுக்கும் பறை கறங்கு ஆரவம் ஒருசார்.]

**விளக்கம் :**—மறை விதி முறையில் தோஷ சாந்தியாகச் செய்யப்படும் சடங்குகளைச் செய்யும் தெய்வத் தன்மையுடைய வேதியரது மந்திர கோஷம் ஒருபுறம். முறை தவறா மதி அமைச்சரின் சொற்களை விரும்பிக் கேட்கும் மன்னர்களின் பேச்சொலி ஒருபுறம். சங்கநிதி பதுமநிதிபோல் நிறைந்த செல்வத்தினரான அளகையோர் (வைசியர்) ஆகிய மக்களின் நெருக்கத்தால் நிறைந்த பேரொலி ஒருபுறம். உழவர், அவர்கள் வாழும் இடந்தோறும் விளை பயன் கொள்ளுங்கால் முழங்கும் பறைகள் ஒலிக்கின்ற ஓசை ஒருபுறம்,—என்பது பொருள். ஆரவம் - ஒலி.

கவிகள், நாடு நகரங்களை வருணிக்கையில் பலவகை ஒலிகள் இருந்தனவாகக் கூறல், கவி சமயம். குபேரனது தலைநகரான அளகையை, செல்வ மிகுதிக்கு உரியரான வைசியர்களுக்கு உரிய தாக்குவதும், கவிசமயம்.

சார் என்பது எல்லா அடிகளின் ஈற்றில் வந்திருப்பதால் இது இயைபுத் தொடை.

17. தோரண மஞ்சத் தலந்தொறு நடிக்குந்
தோகையர் நாடக மொருசார்
பூரண பைம்பொற் கும்பமு மொளிகூர்
புரிமணித் தீபமு மொருசார்
வாரண மிவுளி தேர்முத னிரைத்த
வாகமுஞ் சேனையு மொருசார்
நாரணன் வனச பதயுகம் பிரியா
நலம்பெறு மாதவ ரொருசார்.

[தோரணம் மஞ்சம் தலம்தொறும் நடிக்கும் தோகையர் நாடகம் ஒருசார், பூரண பைம்பொன் கும்பமும் ஒளிகூர் புரி மணி தீபமும் ஒருசார், வாரணம் இவுளி தேர் முதல் நிரைத்த வாகமும் சேனையும் ஒருசார், நாரணன் வனசம் பதயுகம் பிரியா நலம் பெறு மாதவர் ஒருசார்.]

**விளக்கம்** :—தோரணம்-மங்களமாய் முன் வாயிலில் கட்டப் பெறும் மாவிலை தென்னங் குருத்துக்களாலான தோரணம். மஞ்சம் தலம் - மாளிகைகளின் மேன்மாடம். பைம்பொன் பூரண கும்பம் - பசும் பொன்னாலான நிறைகுடங்கள். ஒளிகூர் புரி மணி தீபம் - ஒளிமிக்க தெளிந்த மணிகள் இழைக்கப் பெற்ற விளக்குகள். வாரணம் - யானை. இவுளி - குதிரை. நிரைத்த - அணிவகுக்கப் பெற்ற. வாகம் - வாகனங்கள். சேனை - காலாட் படை. வனசம் - (வநஜம்) தாமரை. பதயுகம் - திருவடி இணை.

சார் என்பது அடிகளின் ஈற்றில் நிற்பதால் **இயைபுத் தொடை**

18. சிற்பவல் லபத்தின் மயன்முத லுள்ள
தெய்வவான் றபதிய ரொருசார்
வெற்பக மருவி வீற்றுவீற் றிருக்கும்
விஞ்சையர் கின்னர ரொருசார்
அற்புத வடிவி னுருப்பசி முதலா
மழகுடை யரம்பைய ரொருசார்
பொற்புடை யமரர் பதியுமெய் மகிழ்ந்து
பொழிதரு பொன்மல ரொருசார்.

[சிற்பம் வல்லபத்தின் மயன்முதல் உள்ள தெய்வம் வான் தபதியர் ஒருசார், வெற்பு அகம் மருவு வீற்று (தனித்தனி) வீற்றிருக்கும் விஞ்சையர் கின்னரர் ஒருசார், அற்புதம் வடிவின்

உருப்பசி முதலாம் அழகு உடை அரம்பையர் ஒருசாரீ, பொற்பு உடை அமரர் பதியும் மெய் மகிழ்ந்து பொழிதரு பொன்மலர் ஒருசார்.]

விளக்கம்:—சிற்பத் தொழில் திறமையுடைய மயன் முதலாக வுள்ள சிறந்த தெய்வத் தபதியர் ஒருசார்,—என்பது முதலடியின் பொருள். வெற்பகம் - மலையிடம். மருவி - பொருந்தி. வீற்று - தனித்தனி. வீற்றிருக்கும் - தங்கி வாழும். அரம்பையர் - தேவ மாதர். அமரர், பதி - தேவர்களும், அவர்களது தலைவனான இந்திரனும். பொழிதரு - சொரியும். பொன்மலர் - அழகிய மலர்.

கோயில், வீடு முதலியன கட்டுந் தொழில், சிற்பம். விஞ்சை யர் - வித்தியாதரர். கின்னரர் - கிந்நரம் என்னும் வாத்தியத் தோடு பாடித் திரியும் தேவ சாதியார்.

தேவ கணமும் இங்கே வந்து தங்கும் சிறப்பினது இந்திரப் பிரத்தம், என்று கூறும் கருத்தது இது.

19. வரையெலா மகிலுஞ் சந்தனதருவு
மரன்மத நாவியின் குலமும்
திரையெலா முத்தும் பவளவண் கொடியுஞ்
செம்மணி களுமர கதமும்
கரையெலாம் புன்னைக் கானமுங் கண்ட
லடவியுங் கைதையங் காடும்
தரையெலாம் பொன்னும் வெள்ளியும் பழன
வேலிசூழ் சாலியுங் கரும்பும்.

[வரை எலாம் அகிலும் சந்தனம் தருவும், மான்மத நாவி யின் குலமும், திரை எலாம் முத்தும் பவளம் வள் கொடியும், செம் மணிகளும் மரகதமும், கரை எலாம் புன்னை கானமும், கண்டல் அடவியும் கைதை அம் காடும், தரை எலாம் பொன் னும் வெள்ளியும், பழனம் வேலி சூழ் சாலியும் கரும்பும்.]

விளக்கம் :—வரை - மலை. மான்மத நாவி - மான் வகை களில் ஒன்றான கஸ்தூரிமான். திரை - கடல் (ஆகுபெயர்). கரை - கடற்கரை. கண்டல் அடவி - வெண் தாழைக் காடு. கைதை - தாழை; செந்தாழை. பழனம் வேலி - மருத நிலம். சாலி - நெற்பயிர்.

குறிஞ்சி நிலப் பொருள்களை, முதலடியும், நெய்தல் நிலப் பொருள்களை, இரண்டு மூன்றாவது அடிகளும், மருத நிலப் பொருள்களை நான்காம் அடியும் குறிக்கும். கண்டலும் கைதையும் தாழையின் இன பேதம்.

20. ஆலையிற் கரும்பின் கண்களிற் றெறித்த
வாரமவ் வயற்புறத் தடுத்த
சோலையிற் பயிலுங் குயிலையுஞ் சுருதிச்
சுரும்பையு நிரைநிரை துரப்ப
வேலையிற் குதித்த வாளையே றும்பர்
வியனதி கலக்கிவெண் டிங்கள்
மாலையிற் பரவும் வானமீன் கொடிபோல்
வாவியிற் குளிக்குமா மருதம்.

[ஆலையில் கரும்பின் கண்களின் தெறித்த ஆரம் அவயல் புறத்து அடுத்த சோலையில் பயிலும் குயிலையும், சுருதி சுரும்பையும் நிரை நிரை துரப்ப, வேலையில் குதித்த வாளை ஏறு உம்பர் வியன் நதி கலக்கி வெள் திங்கள் மாலையில் பரவும் வானம் மீன் கொடிபோல் வாவியில் குளிக்கும் மா மருதம்.]

**விளக்கம் :**—ஆங்குள்ள பெரிய மருத நிலத்தில், ஆலையில் இட்டுச் சாறு பிழியப்படும் கரும்புகளின் கணுக்களிலிருந்து சிதறிய முத்துக்கள், அவ்வயல் புறத்தருகே உள்ள சோலையில் சஞ்சரிக்கும் குயில்களையும், சுருதிபோல் ஒலி செய்யும் வண்டுகளையும் வரிசை வரிசையாகத் துரத்தும்; (அந்நகரைச் சார்ந்த) கடலிலிருந்து துள்ளிக் குதித்த சிறந்த வாளை மீன்கள் விண்ணிலுள்ள பெரிய ஆகாசகங்கையைக் கலக்கி, (அதன்பின்) வெள்ளிய இளம் பிறை தோன்றும் மாலை வேளையில் பரவி விளங்கும் நட்சத்திர வரிசைபோல் தடாகங்களில் விழுந்து குளிக்கும்.

சிறந்த கரும்பின் கணுக்களில் ஆரம் (முத்து) உண்டாகும் என்பது கவி சமயம். கடல் மீன் மருதவாவியில் குளிக்கும், என்றது திணைமயக்கம். கடலினின்று துள்ளி எழுந்த வாளை மீன்கள் வான்நதி கலக்கி வாவியில் குளித்தானது. நட்சத்திர வரிசை தடாகங்களில் மூழ்குவது போன்று இருந்தது, என்க. நகரத்தின் நீர்வளத்தையும் நிலவளத்தையும் பாராட்டுங் கருத்தது செய்யுள். வானமீன்கொடி - விண்மீன் வரிசை.

21. புரிசையிற் குடுமி தொறுநிரை தொடுத்த
பொற்கொடி யாடையி னிழலைக்
கிரிமிசைப் பறக்கு மன்னமென் றெண்ணிக்
கிடங்கில்வா ழோதிமக் கிளைகள்
விரிசிறைப் பறலின் கடுமையா லெய்தி
மீதெழு மஞ்செனக் கலங்கிப்
பரிசயப் படுதண் சததளப் பொகுட்டுப்
பார்ப்புறைப் பள்ளிவிட் டகலா.

[புரிசையின் குடுமிதொறும் நிரை தொடுத்த பொன் கொடி ஆடையின் நிழலை, கிரிமிசை பறக்கும் அன்னம் என்று எண்ணி, கிடங்கில் வாழ் ஓதிமம் கிளைகள் விரிசிறை பறலின் கடுமையால் எய்தி, மீது எழு மஞ்சு என கலங்கி, பரிசயம் படு தண் சததளம் பொகுட்டு பார்ப்பு உறை பள்ளி விட்டு அகலா.]

**விளக்கம் :**—புரிசை - மதில். குடுமி - சிகரம். நிரை தொடுத்த - வரிசையாகக் கட்டப்பெற்ற. பொன் - அழகிய. கொடி ஆடை - கொடிச் சீலை. நிழல் - தோற்றம்; அல்லது நீரில் தோன்றும் கொடியாடையின் பிரதி பிம்பமுமாம். கிடங்கு- அகழி. ஓதிமம் கிளைகள் - அன்னங்களின் கூட்டம். பறலின் - பறத்தலின், (பறத்தல் என்பதின் விகாரம் பறல்), எய்தி - மலை உச்சியை அடைந்து. மீது எழும் மஞ்சு எனக் கலங்கி - மலையின் மேல் எழும் வெண்மேகக் கூட்டங்கள் என்று மயக்கிக் கலக்க முற்று. பரிசயம்படு - பரிச்சயப்பட்ட, பழகிய, பார்ப்பு உறை சததளம் பொகுட்டு பள்ளி - அன்னக் குஞ்சுகள் இருக்கும் தாம ரைப் பொகுட்டாகிய படுக்கை. சதம் : மிகுதிப் பொருளது. சத தளம் - இதழ் நெருக்கமும் மிகுதியும் உடைய தாமரை. பொகுட்டு - தாமரை மணி. பொகுட்டு அன்னக் குஞ்சுகள் சய னிக்கும் இடம். மேகத்தைக் கண்டு அஞ்சும் இயல்பினது அன்னம் எனவே, பொகுட்டில் தங்கியிருக்கும் குஞ்சுகளைக் காக்குங் கருத்தில் அன்னங்கள் பொகுட்டுப் பள்ளியை விட்டு அகலாதன வாயின.

அந்நகரத்து அகழியில் வசிக்கும் அன்னங்கள் மதில் சிகரங் களில் விளங்கும் கொடிகளைத் தம் இனமான அன்னங்கள் என்று மாறுபட மதித்து, அவைகளோடு உறவாடும் கருத்தில் மேலெழுந்து பறந்தன; அங்கே சென்றதும், அக் கொடிவரிசையை

வெண்மேகம் என்று எண்ணி, அச்சங் கொண்டு, தாமரைப் பொகுட்டில் இருக்கும் குஞ்சுகளைக் காக்கும் பொருட்டு, அக் குஞ்சுகளை விட்டு நீங்காதனவாயின,—என்க. இச் செய்யுள் மயக்க அணியின் பாற்படும்.

22. கயற்றடஞ் செங்கட் கன்னியர்க் கிந்து
காந்தவார் சிலையினா லுயரச்
செயற்படு பொருப்பின் சாரலிற் கங்குற்
றெண்ணிலா வெறித்தலி னுருகி
வியப்பொடு குதிக்குந் தாரைகொ ளருவி
விழைவுடன் படிவன சகோரம்
நயப்புடை யன்னச் சேவல்பே டென்று
நண்ணலா லுளமிக நாணும்.

[கயல்தட செம்கண் கன்னியர்க்கு இந்து காந்தம் வார் சிலையினால் உயர செயல்படு பொருப்பின் சாரலில், கங்குல் தெள் நிலா எறித்தலின் உருகி. வியப்பொடு குதிக்கும் தாரை கொள் அருவி விழைவுடன் படிவன சகோரம், நயப்புடை அன்னம் சேவல் பேடு என்று நண்ணலால் உளம் மிக நாணும்.]

**விளக்கம் :**—வார் இந்து காந்தம் சிலை - பெரிய சந்திர காந்தக்கல். செயல்படு - செய்யப்பட்ட, கட்டப்பெற்ற. உயர் பொருப்பின் சாரலில் - உயர்ந்த செய்குன்றின் பக்கத்தில். நிலவைக் கண்டதும் சந்திர காந்தக்கல் உருகி குளிர்ந்த நீரைப் பெருக்கும் என்பர். (கல் உருக, அவற்றினின்று) வியப்பொடு குதிக்கும் தாரை கொள் அருவி - (கண்டவர்) அதிசயிக்கும்படி பாயும் தாரையாகவுள்ள நீர் அருவி. அந்த அருவிகளில் சகோர பட்சிகள் விருப்பத்தோடு படிந்து மகிழ்ந்தன. அப் பட்சிகளை, அன்னச் சேவல்கள், பெண் அன்னங்கள் என்று மயங்கி அணுகின; அவை அன்னப் பேடு அல்லாமை கண்டு மனம் மிக நாணின, என்க.

சகோரம் - நிலவை உண்டு வாழும் பட்சி. இச் செய்யுளும் மயக்க அணியை உட்கொண்டதே.

23. அரிமணிச் சிலையின் சலாகையால் வட்ட
மாகவே யமைத்தசா லகந்தோ(று)
எரிமணிக் குழையார் வதனமண் டலத்தி
லெழிலுடன் மிளிருமைத் தடங்கண்

விரிமணிக் கதிரோ னளிக்கமுன் களிந்த
வெற்பிடை வீழுமா நதியின்
புரிமணிச் சுழியிற் றுணையொடு முலாவிப்
பொருவன கயல்களே போலும்.

[அரிமணி சிலையின் சலாகையால் வட்டமாகவே அமைத்த சாலகம்தோறு எரிமணி குழையார் வதன மண்டலத்தில் எழிலுடன் மிளிரும் மை தடம் கண், விரிமணி கதிரோன் அளிக்க, முன் களிந்த வெற்பிடை வீழும் மா நதியின் புரிமணி சுழியில் துணையொடும் உலாவி பொருவன கயல்களே போலும்.]

**விளக்கம் :**—அரிமணிசிலை - இந்திர நீலக்கல். (அரி - இந்திரன்) அதாவது சிறந்த நீல ரத்தினக்கல். சலாகை - நாராசம். அக்கல்லை நாராசமாக வைத்து வட்டமாக அமைக்கப் பெற்ற (மனைகளின்) பலகணிகள்தோறும்,—என்பது முதலடியின் பொருள். களிந்த மலையினின்று விழும் யமுனையை சூர்ய புத்திரி என்பர். எனவே, சூரியன் அளித்த யமுனையின் சுழற்சியுடைய நீல நிறமான நீர் சுழியில் விளையாடும் மீன்களை ஒத்திருந்தனவாம். அந் நகரத்து மகளிர்களின் மைத்தடங் கண்கள். இது தற்குறிப்பேற்றம்.

24. இனத்தினா லுயர்ந்த விந்திர புரியு
மிந்திரப் பிரத்தமு மிரண்டும்
தனத்தினா லுணர்வாற் கேள்வியா லழகாற்
றக்கதொன் றியாதெனத் துலைகொள்
மனத்தினா னிறுக்க வுயர்ந்ததொன் றொன்று
மண்மிசை யிருந்தது மிகவும்
கனத்தினா லன்றித் தாழுமோ யாருங்
கண்டது கேட்டதன் றிதுவே.

[இனத்தினால் உயர்ந்த இந்திரபுரியும், இந்திரப்பிரத்தம் இரண்டும் தனத்தினால், உணர்வால் கேள்வியால் அழகால் தக்கது ஒன்று யாது என துலைகொள் மனத்தினால் (இந்திரன்) நிறுக்க, உயர்ந்தது ஒன்று, ஒன்று மண்மிசை இருந்தது, மிகவும் கனத்தினால் அன்றி தாழுமோ! யாரும் கண்டது, கேட்டது அன்று இதுவே.]

**விளக்கம் :**—ஒத்த தன்மையால் உயர்ந்த இந்திரபுரியாகிய அமராவதியும், இந்திரப்பிரத்தமும் ஆகிய இரண்டினுள்ளும்,—

என்பது முதலடியின் பொருள். தனத்தினால்...யாது - செல்வ வளத்தால், அறிவால், கேள்வி நலத்தால், அழகால் மேன்மையின் தக்கது எது. என - என்று முடிவு காண. துலைகொள் மனம் - தராசின் தன்மையதான பக்ஷபாதமற்ற மனம். நிறுக்க - (இந்திரன்) நிறுத்துப் பார்க்க. ஒன்று - உயர்ந்தது (அமராவதி இந்திரப் பிரத்தம் என்ற இரண்டில், அமராவதியாகிய) ஒன்று - மேலே சென்றது. ஒன்று மண்மிசை இருந்தது - மற்றொன்றாகிய இந்திரப் பிரத்தம் பூமியிலேயே இருந்தது; அதாவது தட்டு பூமியிலேயே தங்கியிருந்தது. மிகவும் கனத்தினாலன்றி தாழுமோ - கனமிகுதியினாலன்றித் தட்டுத் தாழ்வது என்பது நிகழுமோ! "இது யாரும் கண்டது; கேட்டது அன்று," என்பது, காட்சிப் பிரமாணத்தால் தெளியக் கூடியது இது; கேள்வியால் நம்ப வேண்டியதொன்றன்று," என்ற பொருளது.

வசிக்கும் மக்களின் உணர்வும் கேள்வியும், நகரின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. நிறுக்க என்றதினால் மனம் திராசு ஆகின்றது; உருவகம். இது, உருவகத்தை அங்கமாகக் கொண்ட தற்குறிப்பேற்றம். அமராவதியா, அல்லது இந்திரப் பிரத்தமா? எது சிறந்தது? என்று பார்க்க, இந்திரன் மனத்திராசால் நிறுக்க அமராவதி பெருமைக் குறைவால் இலேசுபட்டு மேலே உயர்ந்தது; இந்திரப் பிரத்தம் பெருமை மிகுதியால் கனங்கொண்டு நிலத்தில் தாழ்ந்து நின்றது. எனவே, சிறந்தது இந்திரப்பிரத்தமே,—என்று கூறும் கருத்தது செய்யுள்.

25. நிறக்கவல் லிரும்பைச் செம்பொனாம் வண்ண
நிகழ்த்திய விரதமே நிகர்ப்பப்
பிறக்கமும் வனமு மொழித்தவ ணமைத்த
பெரும்பதிக் குவமையும் பெறாமல்
மறக்கடுங் களிற்றுக் குபேரன்வா ழளகை
வடக்கிருந் ததுநெடு வானில்
துறக்கமு மொளித்த திலங்கையும் வெருவித்
தொடுகடற் சுழிப்புகுந் ததுவே.

[நிறக்க வல் இரும்பை செம்பொன் ஆம் வண்ணம் நிகழ்த்திய இரதமே நிகர்ப்ப, பிறக்கமும் வனமும் ஒழித்து அவண் அமைத்த பெரும் பதிக்கு உவமையும் பெறாமல், மறம் கடு களிறு குபேரன் வாழ் அளகை வடக்கு இருந்தது, நெடுவானில் துறக்கமும் ஒளித்தது, இலங்கையும் வெருவி தொடுகடல் சுழி புகுந்ததுவே.]

**விளக்கம் :**—வலிய இரும்பை மாற்றுயர்ந்த செம்பொன் ஆகும்படி விளங்கச் செய்த ரஸம் போல,—என்பது முதலடியின் பொருள். வனமும் பிறக்கமும் ஒழித்து - காண்டவ வனத்தையும், அதைச் சார்ந்த மலைகளையும் அழித்து மட்டமாக்கி. அவன் அமைத்த பெரும்பதி - இந்திரப்பிரத்தம். இதற்கு ஒப்பாக மாட்டாமல், அளகையும், சுவர்க்கமும், இலங்கையும் வட திசையில் ஒதுங்கியும் நெடுவானில் ஒளித்தும், தென் கடலினுள் மறைந்தும் இருந்தன,—என்று புலவர் கூறியது **ஏதுத் தற்குறிப்பேற்றம்** ஆகும்.

'வடக்கு இருத்தல்' என்பது வடதிசையிலே ஒதுங்கியிருத்தல் என்பதோடு, **பிராயோபவேசம்** என்ற விரதத்தையும் குறிக்க வல்லது. அதாவது, உயிர் துறக்கத் துணிந்தோர், வடதிசை நோக்கி தருப்பையாலான படுக்கையில் உணவின்றிப் படுத்திருத்தல். இதைப் **பிராயோபவேச விரதம்** என்பர். இரதம் - ரஸம். **ஸ்பர்சவேதி** என்ற மூலிகையின் சாற்றை (ரஸத்தை) இரும்பில் விட்டால் அது பொன்னாகும் என்பர். தொடு கடல் - தோண்டப்பட்ட கடல்; அதாவது சகர புத்திரர்களால் தோண்டப்பட்ட கடல்.

26. வாவியும் புறவுஞ் சோலையு மலர்ந்த
மலர்களு மணிகளின் குழாமும்
மேவியெங் கெங்கு மயங்கலிற் றத்தம்
வேரியும் வாசமுந் தூதாப்
பூவினஞ் சுரும்பை யழைக்கும்வண் பழனப்
புதுவளஞ் சுரக்குநா டனைத்தும்
ஓவியங் குறித்துப் பூமகள் வடிவை
யொப்பனை செய்தவா றொக்கும்.

[வாவியும் புறவும் சோலையும் மலர்ந்த மலர்களும், மணிகளின் குழாமும் மேவி எங்கு எங்கும் மயங்கலின், தம்தம் வேரியும் வாசமும் தூது ஆ(க), பூ இனம் சுரும்பை அழைக்கும் வள் பழனம் புதுவளம் சுரக்கும் நாடு அனைத்தும் ஓவியம் குறித்து பூ மகள் வடிவை ஒப்பனை செய்த ஆறு ஒக்கும் ]

**விளக்கம் :**—பூ இனம் தம்தம் வேரியும் வாசமும் தூதா சுரும்பை அழைக்கும்...நாடனைத்தும், வாவியும்...மங்கையின், பூமகள் வடிவை ஓவியம் குறித்து ஒப்பனை செய்தவா ஒக்கும், என்று அன்வயிக்க.

அந் நாட்டில் எங்கெங்கும் குளங்களும், கொல்லைகளும் சோலைகளும், பலவகையான மலர்களையும் இரத்தினங்களையும் கொண்டிருத்தலால், பூமாதேவியின் வடிவத்தை ஓவியத்தில் வடித்து அலங்கரித்ததை ஒக்கும், என்ற இவ் வருணனை தற்குறிப்பேற்றம் ஆகும்.

மயங்கல்-கலந்திருத்தல்; செறிந்திருத்தல். ஓவியம் குறித்து-சித்திரமாக எழுதி. மலையருவியால் கொணர்ந்து கொழிக்கப் பட்டவை மணிகள். வேரி - தேன். வாசம் - மணம்.

**பாண்டவர் நகரப் பிரவேசம்**

27. பரிமள மதுப முரல்பசுந் தொடையற்
பாண்டவ ரைவருங் கடவுள்
எரிவலம் புரிந்து முறைமுறை வேட்ட
வின்னெழி லிளமயி லன்றி
வரிசையி னணுகி யுரிமையா லவனி
மயிலையு மன்றலெய் தினர்போற்
புரிவளை தரளஞ் சொரிபுன லகழிப்
புரிசைசூழ் புரங்குடி புகுந்தார்.

[பரிமளம் மதுபம் முரல் பசும் தொடையல் பாண்டவர் ஐவரும் கடவுள் எரிவலம் புரிந்து முறை முறை இன் எழில் இளம் மயில் அன்றி, வரிசையின் அணுகி உரிமையால் அவனி மயிலையும் மன்றல் எய்தினர்போல் புரிவளை தரளம். சொரிபுனல் அகழி புரிசை சூழ்புரம் குடி புகுந்தார்.]

**விளக்கம்:**—மதுபம் - வண்டு. கடவுள் எரி - அக்கினிதேவன். வேட்ட - மணந்த. இளமயில் அன்றி - திரௌபதியை அல்லாமல். உரிமையால் அவனி மயிலையும் வரிசையின் அணுகி மன்றல் எய்தினர்போல்-உரிமையால் பூதேவியையும் முறையே அடைந்து மணம் செய்து கொண்டவர்போல்,—இந்திரப்பிரத்த நகரில் குடி புகுந்தார்கள்.

புரிவளை (சங்கு)கள் முத்துக்களைச் சொரியும் நீர் நிறைந்த அகழியை உடைய மதில் சூழ்ந்த இந்திரப் பிரத்தமாகிய நகரத்தில் (பாண்டவர்) பிரவேசித்தனர்,—என்பது சுற்றடியின் பொருள்.

பாண்டவர் பாஞ்சாலியை மணந்ததுபோல், பூமிதேவியையும், மணப்பார்போல் இந்திரப்பிரத்தம் நகரில் பிரவேசித்தனர், —என்க. இது தற்குறிப்பேற்றம்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

28. உரங்குடி புகுந்த திண்டோ ளுதிட்டிரன் முதலி
யோரப்
புரங்குடி புகுந்து தங்கள் பொன்னெயிற் கோயி
லெய்தத்
திரங்குடி புகுந்த கல்விச் சிற்பவித் தகன்ற
னெஞ்சால்
கரங்குடி புகாமற் செய்த கடிநகர் காட்ட லுற்றான்.

[உரம் குடிபுகுந்த திண்தோள் உதிட்டிரன் முதலியோர் அ புரம் குடிபுகுந்து, தங்கள் பொன் எயில் எய்த, திரம் குடிபுகுந்த கல்வி சிற்ப வித்தகன் தன் நெஞ்சால் கரம் குடிபுகாமல் செய்த கடிநகர் காட்டல் உற்றான்.]

**விளக்கம் :**—உரம் குடிபுகுந்த - வலிமை இடங்கொண்ட, அதாவது வலிமை பெற்ற. பொன் எயில் கோயில் - அழகிய மதிலையுடைய அரண்மனை. திரம் குடிபுகுந்த சிற்ப கல்வி வித்தகன் - உறுதிகொண்ட சிற்பக் கல்வி வித்தகனான விசுவகர்மன்; நிலைபெற்ற சிற்பக் கல்வியில் தேர்ச்சியுடைய விச்வகர்மன். கரங்குடிபுகாமல் தன் நெஞ்சால் செய்த கடிநகர் காட்டல் உற்றான் - கைபடாமல் நெஞ்சினால் நினைத்தே நிருமித்த நகரைப் பாண்டவர்க்குக் காட்டலானான்.

நகரப் பிரவேசம் செய்து அரண்மனையை அடைந்த பாண்டவர்க்கு விச்வகர்மன் நகரத்தைக் காட்டினான்,—என்க.

29. நாபுரப் பதற்கே யேற்ற நவிரறு வாய்மை வேந்தர்
கோபுரத் தும்பர் மஞ்ச கோடியி னின்று தங்கள்
மாபுரத் துள்ள வெல்லை வளமனை யாவு மாதர்
நூபுரத் தரவ வீதி யகலமு நோக்கி னாரே.

[நா புரப்பதற்கே ஏற்ற நவிர் அறு வாய்மை வேந்தர் கோபுரத்து உம்பர் மஞ்சம் கோடியில் நின்று தங்கள் மா புரத்து உள்ள எல்லை வளம் மனை யாவும், மாதர் நூபுரத்து அரவம் வீதி அகலமும் நோக்கினாரே.]

விளக்கம் :—குற்றமற்ற வாய்மை விரதம் பூண்ட மேன்மக்க ளான பாண்டவர், என்ற கருத்தது முதலடி. புரத்தல் - பாது காத்தல் நாவை அதன் வழி செல்லவிடாமல் பாதுகாப்பதற்கு ஏற்றதான குற்றமற்ற வாய்மை விரதத்தை மேற்கொண்ட வேந்தராகிய பாண்டவர். மஞ்சகோடி - மாளிகையின் மேன் மாட முகப்பு. மாதர் நூபுரத்து அரவம் - மாதர்களின் சிலம்பின் ஒலி.

பாண்டவர்கள், நகரச் சிறப்பையும் சிலம்பொலிக்க மாதர் நடமாடும் நெடுவீதியையும் கண்டனர், என்க. நவிர் அறு வாய்மை - புரை தீர்ந்த நன்மை பயக்கும் வாய்மை.

30. அரவின்வெஞ் சுடிகை கொண்ட வவிர்மணிச்
சோதி மேன்மேல்
விரவிவந் தெறிப்பப் பச்சை மெய்சிவப் பேறிற்றாக
இரவிதன் னிரதம் பூண்ட வெழுபெயர்ப் பவன
வேகப்
புரவியை யையுற் றேகொல் புரிவலம் புரிவ
தென்பார்.

[அரவின் வெம் சுடிகை கொண்ட அவிர் மணி சோதி மேல் மேல் விரவி வந்து எறிப்ப, பச்சை மெய் சிவப்பு ஏறிற்று ஆக, இரவி தன் இரதம் பூண்ட எழுபெயர் பவனம் வேகம் புரவியை ஐயுற்றே கொல் புரிவலம் புரிவது என்பர்.]

விளக்கம் :—சுடிகை - உச்சிக்கொண்டை. அவிர் மணி - ஒளி விளக்கமுடைய மணி; அதாவது இங்கே நாகரத்தினம். அம் மாளிகைகளில் பதிக்கப்பெற்ற நாகமணிகளின் ஜோதி மிகுதியாக விரவி வந்து வீசலால், சூரியனது பச்சை நிறக் குதிரையின் தேகம் செந்நிறம் கொண்டது. அதனால், சூரியன் இந் நகரை வலம் வருவது தன் தேரில் பூட்டப்பெற்ற எழு என்ற பெயரையுடைய வாயு வேகமுள்ள குதிரையைச் சிவப்பு நிறமுடைய வேறான குதிரை என்று ஐயுற்றதனாலேயோ, என்பர். அதாவது தன் பச்சைக் குதிரையைத் தேடிக் கொள்ளும் பொருட்டுச் சூரியன் நகரைப் பிரதட்சிணம் செய்கின்றான் போலும், என்பதாம்.

மேருவை வலம் வரும் சூரியன் இந் நகரத்தை வலம் வருவ தாகக் கூறியது, இந் நகரின் விசாலத்தைக் குறிக்கும். சூரியன், இங்ஙனம் வலம் வருதல், செந்நிறம் எய்திய தன் குதிரையை

தன்னதா அன்றோ? என்று ஐயுற்றதனால், என்ற கற்பனை, தற்குறிப்பேற்றம் ஆகும்.

ஏழு என்பதின் விகாரம் எழு. சூரியனது குதிரை ஏழு என்ற பெயரை உடையது, என்பர். ஏழு பெயர்களை உடைமையால், குதிரை எழு பெயரினதாயிற்று, என்பர் சிலர். இரு வகையிலும் சூரியனது குதிரை எழுபெயர்ப்புரவி ஆகின்றது.

31. அருளுடை யறத்தின் வாழ்வா மந்நக ரில்ல
மெங்கும்
இருளுடை யிந்த்ர நீலத் தியன்றசா ளரங்க
ணோக்கி
உருளுடை யொற்றை நேமி யுறுபரித் தேரோன்
சீறத்
தெருளுடைத் திமிரம் போன சின்னெறி போலு
மென்பார்.

[அருள் உடை அறத்தின் வாழ்வு ஆம் அ நகர் இல்லம் எங்கும் இருள் உடை இந்திர நீலத்து இயன்ற சாளரங்கள் நோக்கி, உருள் உடை ஒற்றை நேமி உறு பரி தேரோன் சீற, தெருள் உடை திமிரம் போன சில் நெறி போலும் என்பார்.]

**விளக்கம் :—**அருளுடை அறத்தின் வாழ்வு - அருளை ஆதாரமாகக்கொண்ட தர்ம வாழ்க்கை, அந்நகர மாளிகைகளின் எல்லாவிடத்தும்கருநீலக்கற்களாலானசாளரங்கள், (சன்னல்கள்) உருளுடை...தேரோன்-சூரியன். (அவன்) சீற - கோபித்து விரட்ட. திமிரம் - இருள். சூரியன் சீறவே, தெருள் உடை (தடுமாற்றத்தை உடைய) இருட்டு ஓடிச்சென்ற சிறிய வழிகள் போலும் (இச்சாளரங்கள்) என்பர்.

சாளரங்களை, சூரியனுக்கு அஞ்சி இருள் ஓடியகன்ற சிறு வழிகள், என்று குறித்தபடி. இது தற்குறிப்பேற்றம். சின்னெறி சின்மை நெறி, (சின்மை - சிறுமை).

32. சமர்முகப் பொறிகண் மிக்க தடமதிற் குடுமி தோறும்
குமருறப் பிணித்த பைம்பொற் கொடித்துகி லசைவு
நோக்கி
நமர்புரக் கிழத்தி யும்பர் நாயகன் புரத்தி னோடும்
அமர்பொரப் பற்பல் கையா லழைப்பது போலு
மென்பார்.

[சமர்முகம் பொறிகள்மிக்க தட மதில் குடுமி தோறும். குமர் உற பிணித்த பைம்பொன் கொடி துகில் அசைவு நோக்கி; நமர் புரம் கிழத்தி உம்பர் நாயகன் புரத்தினோடும் அமர்பொர பல்பல் கைகளால் அழைப்பது போலும் என்பார்.]

**விளக்கம் :**—போர் செய்வதற்கு இயன்ற தோற்றத்தை யுடைய யந்திரங்களை அதிகமாகக்கொண்ட விசாலமான மதில் களின் சிகரங்கள் தோறும்,—என்பது முதலடியின் பொருள். முகம் - தோற்றம். குமர் - அழியாமை, மூவாமை. அழியாமை பொருந்த நன்கு (கொடி மரத்தில்) கட்டப்பெற்ற கொடிச் சீலை களின் அசைவு நோக்கி, —என்பது இரண்டாவது அடியின் பொருள். நமர்புர கிழத்தி - நமது இந்த நகருக்குரிய தேவதை, உம்பர் நாயகன்புரம் - அமராவதி, பற்பல்கை - மிகப்பலவாகிய கைகள்.

கொடிகள் காற்றினால் அசைதலை நோக்கி, நகர தேவதை தனது பல கைகளால் அமராவதி நகரைப் போருக்கு அழைக் கின்றது போலும், என்பர், என்பதாம். இது தற்குறிப்பேற்றம். நகர தேவதை பெண்பாலாதல் பற்றிப் புரக்கிழத்தி எனப் பட்டது.

**33. தசும்புறு மகிலின் றூபஞ் சாறடு கரும்பின் றூபம்**
**அசும்பறா மடையின் றூப மவிபெறு மழலின் றூபம்**
**விசும்புற நான்கு திக்கு மிசைமிசை யெழுத னோக்கிப்**
**பசும்புய லேழன் றின்னும் பலவுள வாகு மென்பார்.**

[தசும்பு உறும் அகிலின் தூபம், சாறு அடும் கரும்பின் தூபம் அசும்பு அறா மடையின் தூபம், அவிபெறும் அழலின் தூபம், விசும்பு உற நான்கு திக்கும் மிசை மிசை எழுதல் நோக்கி, பசும் புயல்ஏழு அன்று, இன்னும் பல உள ஆகும் என்பர்.]

**விளக்கம் :**—குடங்களில் இட்டுப் புகைக்கும் அகிலின் புகை, கரும்பின் சாற்றைக் காய்ச்சுதலினால் எழும் புகை, அசும்பு - வழுக்கு நிலம். அசும்பு அறா - வழுக்குதல் நீங்காத, கால் வழுக்குதலையுடைய. மடை - (ஆகுபெயர்) சமயல் செய்யும் இடம். அங்கிருந்து எழும் புகை. அவிபெறும் – அவிசாக அக்கினியில் சொரியப்படும் (நீர், நெய், சோறு முதலியனவாகிய தேவருணவு), (அவ்வாறு சொரியப்படும்) அழலின் தூபம் –

தீயிலிருந்து எழும் ஓமப் புகை. இவ்வகைப் புகைகள் ஆகாயத்தை எட்டும்படி நான்கு திக்குகளிலும் மேன்மேல் எழுந்து வியாபித் தலை நோக்கிப் பசும் புயல் (கருமேகங்கள்) ஏழுஅன்று; ஏழிற்கும் மேற்பட்ட பல மேகங்கள் இன்னும் இருக்கின்றன. என்பர், என்பதாம்.

மேகத்தை சப்தமேகம், என்பர். சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பவை அவை.

34\. அடுக்குற நிலஞ்செய் மாடத் தணியுறு பெரும்ப
தாகை
மிடுக்கினா லனில னெற்றி விசையுட னெடுத்து
மோத
உடுக்களு நாளுங் கோளு முள்ளமு முடலுஞ் சேர
நடுக்குறு கின்ற விந்த நகர்வழி போக வென்பார்.

[அடுக்கு உற நிலம் செய் மாடத்து அணி உறு பெரும் பதாகை மிடுக்கினால் அனிலன் எற்றி விசையுடன் எடுத்து மோத உடுக்களும் நாளும் கோளும். உள்ளமும் உடலும் சேர நடுக்கும் உறுகின்ற நகர் வழி போக என்பார்.]

**விளக்கம் :—** அடுக்கு உற - ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கப் பெற்ற, நிலம் - தளம். அணி உறு - அழகாக, அல்லது வரிசை யாகப் பொருந்திய. பதாகை - கொடிகள். மிடுக்கு - வலிமை. அனிலன் - வாயு. விசையுடன் எடுத்து மோத - வேகமாய் மேல்நோக்கி மோத.

அந் நகரத்து மாடங்களில் கட்டப் பெற்ற கொடிகளைக் காற்று எற்றி அசையச் செய்ய,—என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள்.

உடுக்கள் - நக்ஷத்திரங்கள். நாள் - காலம்; அதாவது இரவு பகல் கொண்ட பொழுது. கோள் - சூரியன் முதலிய ஒன்பது கிரகங்கள். இவை, இந்த நகர் வழியாகச் செல்ல (அச்சத்தால்) மனமும் மெய்யும் ஒருசேர நடுங்குகின்றன, என்பார், என்பது ஈற்றடிகளின் பொருள்.

அதாவது, காற்றினால் அசையும் கொடிகள் தங்களைத் தாக்கி வருத்தும் என்று உடுக்களும், நாளும், கோளும் இந் நகரத் தின் மேல் செல்லுதற்கு அஞ்சுமாம். இது உயர்வு நவிற்சியணி.

இதனால் இந் நகரங்களின் மாடங்களில் கட்டப்பெற்ற கொடி களின் உயரத்தை உணர்த்தியபடி.

35. துதையளி முரலும் வாசச் சோலையின் பொங்கர்
தோறும்
விதமுற வெழுந்து காள மேகங்கள் படிதல் நோக்கிக்
கதிர்மணி யகழி மாமே கலையுடை நகர மாதின்
புகைநறு மலர்மென் கூந்தல் போலுமா காண்மி
னென்பார்.

[துதை அளி முரலும் வாசம் சோலையின் பொங்கர் தோறும் விதம் உற எழுந்து காள மேகங்கள் படிதல் நோக்கி, கதிர் மணி அகழி மாமேகலை உடை நகரம் மாதின் புகை நறு மலர் மெல் கூந்தல் போலுமா (று) காண்மின் என்பார்.]

**விளக்கம் :**—பொங்கர் - செய்குன்று; மரக்கிளை, அல்லது கொம்பு. விதம் உற-பல பகுப்புக்களாக; மடிப்பு மடிப்புக்களாக. கதிர்மணி - ஒளி வீசும் ரத்தினக் கற்கள். கதிர் மணிகளைக் கரையி னிடத்தே கொண்ட அகழியாகியபெரிய இடையணியை உடைய இந்திரப்பிரத்த நகரமாகிய பெண்ணின், அகில் புகை ஊட்டிய நறுமண முள்ள மலர்களை அணிந்த மெல்லிய தன்மை வாய்ந்த கூந்தலை ஒத்திருக்கும் தன்மையைக் காண்க, என்பர்,—என்பது சுற்றடிகளின் பொருள்.

அந் நகரத்துச் சோலைகளின் மரக் கொம்புகளின் மேல் படிந் திருக்கும் கருமேகங்களை, நகரமாதின் கூந்தல்,—என்றது தற்குறிப்பேற்றம். மேகலை - இடையணி.

36. ஈட்டிய மணியும் பொன்னு மெழில்பெறப் புடைக
டோறும்
பூட்டிய சிகரி சாலப் புரிசையின் புதுமை நோக்கிக்
கோட்டிய நகரி யென்னுங் குலக்கொடி மன்ற
லெய்தச்
சூட்டிய சூட்டுப் போலத் துலக்குமா காண்மி
னென்பார்.

[ஈட்டிய மணியும் பொன்னும் எழிற் பெற புடைகள் தோறும் பூட்டிய சிகரிசால் அ புரிசையின் புதுமை நோக்கி கோட்டிய நகரி என்னும் குலம் கொடி மன்றல் எய்த சூட்டிய சூட்டு போல துலங்குமா (று) காண்மின் என்பார்.]

**விளக்கம்** :—ஈட்டிய - ஒழுங்குபடுத்தப்பட்ட, ஈட்டிய... அ புரிசை ஈட்டிய மணிகளையும் பொன்னையும் அழகு பெறும் படிப் பக்கங்கள் தோறும் அமைத்து அலங்கரிக்கப்பெற்ற 'சிகரி' என்னும் மேலுருப்பு பொருந்திய நகரமதில் (அம் மதிலின் புதுமை கண்டு) கோட்டிய துலங்குமா காண்மின் அலங்கரிக்கப் பெற்ற அந்நகரமாகிய குலமங்கை மணம் செய்து கொள் வதற்காக (அம் மங்கைக்குக் கோலம் செய்வார்) சூட்டிய சூட்டு என்னும் நெற்றியணிபோல் விளங்கும் தன்மையைக் காண்க,— என்பார், என்பதாம்.

பாண்டவர்கள் அந் நகரத்தைத் தமக்குச் செய்து கொள்ளப் போகின்றாராதலால், அதாவது நகரமாகிய குலக்கொடியை மன்றல்எய்தப்போகின்றாராதலால், அந்நகரமதிலின்மணிகளால் இழைக்கப்பெற்ற மேலுறுப்பு, அக் குலக்கொடியின் நெற்றியணி யாக வருணிக்கப்பெற்றது. இது தற்குறிப்பேற்றமாகும். 'சிகரி' என்ற வடசொல்லின் தமிழ்த்திரிபு 'சிகரி.' சூட்டு - நெற்றியணி.

**37. பணையினம் பலவு மார்ப்பப் பைங்கொடி நிரைத்த செல்வத்**
**துணைமணி மாட மன்னுந் தோரண வீதி யாவும்**
**புணைவன நெருங்க நீடிப் பொழிபுயல் கிழிக்குஞ் சாரல்**
**இணைவரை நடுவட் போதும் யாறுபோ லிலங்கு மென்பார்.**

[பணை இனம் பலவும் ஆர்ப்பபைங்கொடிநிரைத்த செல்வம், துணைமணி மாடம் மன்னும் தோரணம் வீதி யாவும், புணை வனம் நெருங்க நீடி பொழி புயல் கிழிக்கும் சாரல் இணைவரை நடுவண் மோதும் யாறுபோல் இலங்கும் என்பார்.]

**விளக்கம்** :—பணை இனம் - வாத்தியக் கூட்டங்கள், அல்லது வாத்திய வகை. துணைமணி மாடம் - தமக்குத்தாமே நிகரான மாளிகைகள். மன்னும் - நிலையாய்ப் பொருந்திய. புணைவனம்- மூங்கில் காடுகள். நெருங்க நீடி - நெருக்கமாக நீண்டு வளர்ந்து. பொழிபுயல் கிழிக்கும் சாரல் - மழை பொழியும் மேகத்தைக் கிழிக்கின்ற சாரல். இணைவரை - இணையான இரண்டு மலை கள். நடுவண் பாய்ந்தோடும் ஆறுபோல் விளங்கும், என்பர், என்பதாம்.

வீதியின் இருமருங்குமுள்ள நெடிய பெரிய மாளிகைகளுக்கு, இரண்டு மலைகளையும், வீதிக்கு, மலைகளின் இடையே ஓடும் நதியையும் ஒப்புமை கூறினார். இது, தற்குறிப்பேற்றம். மாளிகைகளின் மேலிடம் அமைந்த கொடி வரிசைக்கு ஏற்ப மலைகளின் சாரலில் வளர்ந்துள்ள மூங்கில் காடு கூறப்பட்டது, மூங்கில்கள் புயல் கிழிக்கும் என்றது உயர்வு நவிற்சி.

38. கண்ணுறு பொருள்கள் யாவுங் கண்டுகண்
டுவகை கூர
எண்ணுறு கிளைஞ ரோடும் யாதவ குமர ரோடும்
பண்ணுறு வேத வாழ்நர் பலரொடும் வைகி
யாங்கண்
விண்ணுறு தபதிக் கம்ம விடைகொடுத் தருளி
னானே.

[கண் உறு பொருள்கள் யாவும் கண்டு கண்டு உவகை கூர, எண் உறு கிளைஞரோடும் யாதவ குமரரோடும், பண் உறு வேதம் வாழ்நர் பலரொடும் வைகி ஆங்கண், விண் உறு தபதிக்கு, அம்ம விடை கொடுத்து அருளினானே.]

**விளக்கம் :**—கண்ணுறு பொருள் - கண்ணில் பட்ட பொருள்கள். எண்ணுறு கிளைஞர் - எண்ணத்தக்க, அதாவது பெருமை வாய்ந்த சுற்றத்தார். யாதவர் - கிருஷ்ணனோடு வந்த யது குலத்தார். பண் உறு வேதம் வாழ்நர் - சுவரத்தோடு ஓதப் படும் வேதங்களுக்கு உரியரான பிராமணர்கள். ஆங்கண் - அங்கே, அந் நகரத்திலே. விண்ணுறு தபதி - விச்வகர்மன். அவனுக்குத் தருமபுத்திரன் தன் நாடு செல்ல அனுமதி கொடுத்தான். தருமன், எழுவாய். அம்ம, உரை அசை,

39. கேசவன் முதலா வுள்ள கிளைஞருங் கேண்மை
தப்பா
வாசவன் முதலி னோரு மன்னுதம் பதிகள் புக்கார்
ஓசவன் திகிரி யோச்சி யுதயபா னுவுக்கு மேலாந்
தேசவன் றானும் வையந் திசைமுறை திருத்தி
யாண்டான்.

[கேசவன் முதலா உள்ள கிளைஞரும் கேண்மை தப்பா வாசவன் முதலினோரும் மன்னு தம் பதிகள் புக்கார்; ஓசம் வல் திகிரி ஓச்சி, உதயபானுவுக்கு மேல் ஆம் தேசவன் தானும் வையம் திசை முறை திருத்தி ஆண்டான்.]

**விளக்கம் :**—கேண்மை - நட்பு. கண்ணன் முதலிய சுற்றத் தாரும் இந்திரன் முதலான தேவர்களும் தம்பதி சென்றார், என்பது முதலிரண்டடிகளின் பொருள். ஓசம் வல் திகிரி - ஒளி யுடைய வலிய ஆக்ஞாசக்கரம் [ஓசம் - [ஓஜஸ்] ஒளி]. உதய பானு - உதயசூரியன். [சூரியனினும் மேலான] தேசவன் - தேசஸை உடையவனான தருமன். திசை முறை திருத்தி ஆண் டான் - எங்கும் நீதியும் ஒழுக்கமும் முறையே நடக்குமாறு ஆண் டான். கண்ணனது பதி துவாரகை. இந்திரனது பதி அமராவதி.

### நாரதர் வருகை

40. யாய்மொழி தலைமேற் கொண்டு மிளையவர் மொழிகள் கேட்டும்
வேய்மொழி வேய்த்தோள் வல்லி மென்மொழி விரும்ப லுற்றும்
வாய்மொழி யறத்தின் மைந்தன் மாநகர் வாழு நாளில்
ஆய்மொழிப் பாடல் யாழோர் ரந்தண னாங்கண் வந்தான்.

[யாய்மொழி தலைமேல் கொண்டும் இளையவர் மொழிகள் கேட்டும், வேய்மொழி வேய்தோள் வல்லி மெல்மொழி விரும்பல் உற்றும், வாய்மொழி அறத்தின் மைந்தன் மாநகர் வாழும் நாளில், ஆய்மொழி பாடல் யாழ் ஓர் அந்தணன் ஆங்கண் வந்தான்.]

**விளக்கம்:** யாய் - குந்தி, வேய்மொழி வேய்தோள் வல்லி- திரௌபதி, (வேய்-கரும்பு, மூங்கில்). வாய்மொழி அறத்தின் மைந்தன் - தர்மபுத்திரன். ஆய்மொழி பாடல் யாழ் ஓர் அந்தணன் - சிறந்த சொற்களாலான பாடலையும்; மகதீ என்ற வீணையையுமுடைய நாரத முனிவன்.

ஆட்சியை மேற்கொண்டு பாண்டவர் இந்திரப்பிரத்தத்தில் வாழ்ந்து வரும் நாளில், ஒரு நாள் நாரத முனிவன் அங்கே வந் தான், என்க.

41. இந்தநா ரதனைப் போற்றி யிருபதம் விளக்கி வரசச்
சந்தனா கருவின் றூபந் தவழ்மணித் தவிசி னேற்றி

வந்தனா விதியிற் சற்றும் வழுவற வழிபா டெய்தி
அந்தநால் வருமவ் வேந்து மாதிவா சவர்களானார்.

[இந்த நாரதனை போற்றி இரு பதம் விளக்கி வாசம் சந்தனம் அகரு இன் தூபம் தவழ்மணி தவிசின் ஏற்றி வந்தனாவிதியில் சற்றும் வழு அற வழிபாடு எய்தி. அந்த நால்வரும் அ வேந்தும் ஆதி வாசவர்கள் ஆனார்.

**விளக்கம் :** விளக்கி - சுத்தம் செய்து. நீரால் கழுவி. அகரு- அகில்கட்டை. வந்தனவிதி - வழிபாட்டிற்கு உரிய முறை. எய்தி - வழிபாட்டைப் பெறச் செய்து. நால்வர் - தருமன் ஒழிந்த நால்வர். அவ்வேந்து - தருமன். ஆதிவாசவர்கள் ஆனார் - பழைய இந்திரர்களை ஒத்தார்கள். நாரதன் வந்தக்கால், அவரை உபசரித்துப் போற்றல் இந்திரனது இயல்பு. அதுபற்றி, நாரதரை உபசரித்த பாண்டவரை ஆதி இந்திரர்களைப் போன்றார், என்று கூறினாராயிற்று. சந்தநாகரு, வந்தநாவிதி, ஆதிவாஸவர், என்பவை வடமொழித் தொடர்கள்.

42. வரமிகு கற்பி னாளும் மாமியும் வணங்கி நிற்பச்
சரிகம பதநிப் பாடற் றண்டுதை வருசெங்
கையோன்
இருசெவி படைவீ டாக வெம்பிரா னளிக்கப் பெற்ற
பெருமுனி யவர்க்கோர் காதை பெட்புறப் பேசு
வானே.

[வரம் மிகு கற்பினாளும் மாமியும் வணங்கி நிற்ப,ச-ரி-க-ம-ப-த-நி பாடல் தண்டு தைவரு செம் கையோன், இருசெவிபடை வீடு ஆக எம்பிரான் அளிக்கப் பெற்ற பெரு முனி, அவர்க்கு ஓர் காதை பெட்பு உற பேசுவானே.]

**விளக்கம் :** திரௌபதியும் குந்தியும் வணங்கி நிற்க, என்பது முதலடியின் பொருள். 'சரிகமபதநி' என்ற ஏழு சுரங்களையும் பொருந்த அமைத்துப் பாடுதற்கு உரியதான வீணையைத் தடவி இயக்கும் செங் கையோனான நாரதன், என்பது இரண்டாவது அடியின் பொருள்.

எம்பிரானால் தனது இரு செவிகளும், அவனது இசைக்குத் தங்குமிடமாக அளிக்கப்பெற்ற பெருமையுடைய நாரதன், பாண்டவர்க்குப் பெட்புற அதாவது விருப்பத்தோடு ஒரு கதையைச் சொல்வானானான்.-என்பது ஈற்றடிகளின் பொருள். படைவீடு-

படை தங்குமிடம்; அது, இங்கே தங்குமிடத்தைக் குறித்து நின்றது. எம்பிரான்-நமக்கெல்லாம் தலைவனான திருமால்.

43. முராரியை முராரி நாபி முளரிவாழ் முனியை முக்கண்
புராரியை நோக்கி முன்னாட் புரிபெருந் தவத்தின் மிக்கார்
சுராரிக டம்மிற் சுந்தோ பசுந்தரென் றிருவர் தங்கள்
திராரியே வலினால் வந்த திலோத்தமை தன்னைக் கண்டார்.

[முராரியை(யும்) முராரி நாபி முளரி வாழ் முனியை(யும்) முக்கண் புராரியை(யும்) நோக்கி முன் நாள் புரி பெரும் தவத்தின் மிக்கார், சுராரிகள் தம்மில் சுந்த உபசுந்தர் என்ற இருவர், தங்கள் திர அரி ஏவலினுல் வந்த திலோத்தமை தன்னை கண்டார்.]

**விளக்கம் ;** முராரி - திருமால். அவனது நாபிக் கமலத்தில் வாழ் முனி - பிரும்மா. முக்கண் புராரி - சிவபெருமான். சுராரி - அசுரர்கள். அவர்களில் இருவரான அந்த சுந்த உப சுந்தர்கள். (அவர்தம்) திராரி - (திர அரி) அவர்களுடைய வழிப் பகைவனான இந்திரன். ஒரு சமயம் சுந்தோ பசுந்தர், இந்திரனது ஏவலினால் வந்த திலோத்தமை என்ற தேவமாதைக் கண்டனர், முராரி, புராரி, சுராரி, திராரி (ஸ்திராரி), என்பவை தீர்க்கசந்தி பெற்ற வட சொற்கள். சுந்தோபசுந்தர், (சுந்த உபசுந்தர்) குணசந்தி பெற்ற தொடர்.

44. காண்டலு மவண்மேல் வைத்த காதலா லுழந்து நெஞ்சில்
ஈண்டிய துயரத் தோடு மிருவரு நயந்த போழ்தப்
பூண்டகு பொலிவி னாடன் பொருட்டமர் தம்மிற் பூண்டு
மாண்டன ரென்னும் வார்த்தை மாநில மறியு மன்றே.

[காண்டலும் அவள்மேல் வைத்த காதலால் உழந்து நெஞ்சில் ஈண்டிய துயரத்தோடும் இருவரும் நயந்த போழ்து, அ பூண் தகு பொலிவினால் தன் பொருட்டு அவர் தம்மில்பூண்டு மாண்டனர். என்னும் வார்த்தை மாநிலம் அறியும் அன்றே.]

**விளக்கம் :**—உழந்து - வருந்தி. நெஞ்சில் ஈண்டிய துயரம் - மனத்தில் எழுந்த காமவேதனை. தம்மில் அமர் பூண்டு - தங்களுக்குள் போர் செய்து. வார்த்தை வரலாறு.

இரணியகசிபு என்ற அசுரனது வம்சத்தினனான நிகும்பன் என்றவனது மைந்தர் சுந்தோபசுந்தர். இவர்கள் இணைபிரியாதவராய், வாழ்க்கையில் நேரும் சுகதுக்கங்களைப் பகிர்ந்து வாழ்ந்தனர். இளமையில் இவர் விந்திய மலையை அடைந்து திரிமூர்த்திகளை நோக்கிக் கடுந்தவம் புரிந்தனர். அத்தவத்தை மகிழ்ந்து பிரத்யக்ஷமான தேவர்களிடம், அவர்கள் எவராலும் மரணம் இல்லாமையை வேண்டினர். அத்தேவர்களும், பிறரால் மரணமில்லா வரத்தை அளித்துச் சென்றனர். பெற்றவரத்தால் செருக்குற்ற சகோதரர்கள் மூவுலகத்தாரையும் வருத்தி அழிவு செய்தலை மேற்கொண்டனர். இந்நிலையில், பிரும்மதேவனின் கட்டளைப்படி விசுவகர்மனால் உண்டாக்கப்பெற்ற திலோத்தமை என்ற அழகியை இந்திரன் அவர்கள்பால் போக்கினான். அவளது அழகைக் கண்டு காதல் கொண்ட சகோதரர்களுக்கிடையே பகையெழ, இருவரும் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு மாண்டனர். இந்த வரலாற்றின் விரிவை முதல் நூலில் காண்க.

“ஒருத்திக்கு ஐவரான பாண்டவர்களுக்குள் மனவேறுபாடு ஏற்படாதிருக்க, ஒரு நியமத்தை அவர்கள் செய்துகொள்ள வேண்டும், என்ற கருத்தில் இக் கதை நாரதரால் கூறப்பட்டதாகும்.

45. நீவிரும் விதியால் வேட்ட நேயமுண் டேனு மன்றல்
ஓவிய மனையா டன்னை யோரொராண்
டொருவ ராக
மேவினிர் புரியு மங்ஙன் மேவுநா ளேனை யோரிக்
காவியங் கண்ணி னாளைக் கண்ணுறல் கடன
தன்றே.

[நீவிரும் விதியால் வேட்ட நேயம் உண்டேனும், மன்றல், ஓவியம் அனையாள் தன்னை ஓர் ஓர் ஆண்டு ஒருவராக மேவினிர் புரியும்; அங்ஙன் மேவு நாள் ஏனையோர் இ காவி அம் கண்ணினாளை கண்ணுறல் கடனது அன்று.

**விளக்கம் :**—நீங்கள் ஐவரும் வினைப்பயனால் மணந்து கொண்ட உறவு உளதேனும், திரௌபதியை ஓரோராண்டு ஒருவராய், மேவினிர் மன்றல் புரியும், அதாவது விரும்பிக் கூடி வாழுங்கள். அங்ஙன் மேவு நாள் - அவ்வாறு ஒருவரோடு அவள் சேர்ந்து வாழும்போது, ஏனையோர் அவளைக் காணுதலும் கடனது அன்று, அதாவது முறைமை உடையது அன்று.

நாரத முனிவன் திரௌபதியோடு வாழ்தல் சம்பந்தமாகப் பாண்டவர்க்குக் கூறிய நியமம் இது.

46. எண்ணுறக் காணி லோரா றிருதுவும் வேட மாறிப்
புண்ணியப் புனல்க ளாடப் போவதே யுறுதி யென்று
வண்ணவிற் றிறலி னார்க்கு வாய்மலர்ந் தருளி மீண்டு
பண்ணுடைக் கீத நாத பண்டிதன் விசும்பிற் போனான்.

[எண் உற, காணில் ஓர் ஆறு இருதுவும் வேடம் மாறி புண்ணியம் புனல்கள் ஆட போவதே உறுதி என்று, வண்ணம் வில் திறலினார்க்கு வாய் மலர்ந்து அருளி, மீண்டு பண் உடை கீதம்நாத பண்டிதன் விசும்பின் போனான்.]

**விளக்கம் :**—எண் உற ஒருவரோடு அவள் மனம் பொருந்தி யிருக்க. இருது - இரண்டு மாதங்களைக் கொண்ட காலம். ஓர் ஆறு இருது-ஒரு வருஷம். உறுதி - நன்மை. நாதகீத பண்டிதன்- நாரத முனிவன். இளவேனில், முதுவேனில், கார், கூதிர் முன்பனி பின்பனி, என்பன ஆறு இருதுகள்.

ஒருவரோடு பாஞ்சாலி மனம் பொருந்தி இருக்கையில், மற்றவர் கண்டால், கண்டவர் ஓராண்டு தீர்த்தயாத்திரை செய்யவேண்டும் என்று நாரதர் பாண்டவர்க்குக் கூறியபடி.

47. சொன்னநாட் டொடங்கி யைந்து சூரருந் தேவர் நாளுக்(கு)
இன்னநா ளவதி யென்றே யெண்ணியங் கிரதி கேள்வன்
அன்னநாண் மலர்ப்பைந் தாமத் தறன்மக னாதி யாக
மின்னனா டன்னை வேட்ட முறையினான் மேவி னாரே.

[சொன்ன நாள் தொடங்கி ஐந்து சூரரும் தேவர் நாளுக்கு இன்ன நாள் அவதி என்றே எண்ணி அங்கு இரதிகேள்வன் அன்ன நாள் மலர் பைந் தாமத்து அறன் மகன் ஆதி ஆக மின் அனாள் தன்னை வேட்டமுறையினால் மேவினார்.]

**விளக்கம் :**—ஒரு வருட அளவினுடைய தேவரின் ஒரு நாள். அவதி - எல்லை. இரதிகேள்வன்...அறன்மகன் - மன்மதனைப் போன்ற தோற்றமும் அன்று அலர்ந்த மலர்களால் கட்டிய பசிய மாலை அணிந்தவனுமாகிய தர்மபுத்திரன். ஆதியாக - தருமன் முதலாக மற்ற நால்வரும். திரௌபதியை மணந்துகொண்ட முறைப்படி ஆண்டுக்கு ஒருவராகக் கூடிவந்தனர், என்பது ஈற்றடியின் பொருள்.

**இந்திரப் பிரத்தச் சருக்கம் முற்றும்**

# 7. தீர்த்த யாத்திரைச் சருக்கம்

அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை செய்ததையும், யாத்திரையின் கண் நிகழ்ந்த வரலாற்றையுங் கூறும் சருக்கம் இது.

**தருமன் செலுத்திய செங்கோல்**

**கலிவிருத்தம்**

1. **துன்பம்பய மிடிநோய்பகை சோரங்கொலை யெய்தா(து)**
**இன்பம்பொரு ளறன்யாவையு மியல்பாதலி னெய்தித்**
**தன்பைங்குடை நிழன்மன்பதை தரியார்முனை மதியா**
**வன்பன்றனை நிகர்வாழ்வுற வருநாள்களி லொருநாள்.**

[துன்பம் பயம் மிடி நோய் பகை சோரம் கொலை எய்தாது, இன்பம் பொருள் அறன் யாவையும் இயல்பு ஆதலின் எய்தி, தன் பைங்குடை நிழல் மன்பதை, தரியார் முனை மதியா வன்பன் தனை நிகர் வாழ்வு உற வரும் நாள்களில் ஒரு நாள், - இதுவும் அடுத்த கவியும் குளகம்.]

**விளக்கம் :**—தரியார் முனை மதியா வன்பன், தன் குடை நிழல் மன்பதை துன்பம்...எய்தி, தனை நிகர்...ஒரு நாள், - என்று அன்வயிக்க.

மிடி - வறுமை. சோரம் - களவு. வஞ்சனை, விபசாரம். இயல்பு ஆதலின் எய்தி - இயல்பாகும்படி அடைந்து. குடை நிழல் மன்பதை குடை நிழலில் ஒடுங்கி வாழும் ஜனங்கள். தரியார் - பகைவர். முனை. போர் ஆற்றல். மதியா வன்பன் - பொருட்படுத்தாத வலிமையுடைய தருமன். தனை நிகர் வாழ்வு உற - தனது வாழ்க்கைப்போல் மக்களும் இனிய வாழ்க்கையை அடையும்படி. வரும்நாள் - ஆட்சி புரிந்து வருங்காலம்.

மக்கள் தீங்கின்றியும் அறம் பொருள் இன்பம் என்ற வாழ்க்கைப் பயனை இயல்பின் எய்தி வாழும்படியும் தருமன் செங்கோல் செலுத்தினான், என்க.

2. அறையோதவ னஞ்சூழ்புவி யரசானவ னைத்தும்
திறையோடிட மறநிற்பதொர் திருவாயின் மருங்கே
இறையோடுய ரிருகையுமெ டுத்தெண்ணுற
முறையோ
முறையோவென வொருவைதிக முனிவந்து
புகுந்தான்.

[அறை ஓதம் வனம் சூழ் புவி அரசு ஆன அனைத்தும் திறையோடு இடம் அற நிற்பது ஓர் திருவாயில் மருங்கே, இறையோடு உயர் இரு கையும் எடுத்து எண் உற 'முறையோ, முறையோ' என ஒரு வைதிக முனி வந்து புகுந்தான்.]

**விளக்கம் :—**அறை ஓதம் வனம் - சப்திக்கின்ற அலைகளையுடைய கடல் நீர். அரசான அனைத்தும் - அரசரானோர் எல்லோரும். திறை - [சிற்றரசர் பேரரசருக்குக் கட்டவேண்டிய] திறைப் பொருள். இறை - துன்பம், எண் உற - கண்டோர் 'இது ஏன்?' என்று சிந்திக்கும்படி. 'முறையோ! முறையோ!' என முறையிட்டுக் கொண்டு ஒரு வைதிகப் பிராமணன் வந்து சேர்ந்தான், என்க.

திறையோடு மன்னர்கள் இடமற நெருங்கி நிற்கும் தருமனது மாளிகையின் திருவாயிலின் முன், ஓர் அந்தணன், துன்பத்தோடு மேலே தூக்கிய கைகளோடு முறைவிட்டவனாய் வந்து சேர்ந்தான், என்பதாம். 'இறை' என்பதற்குத் 'தலை' என்ற பொருளும் உண்டு. அப்பொழுது "தலையிலே கையை வைத்துக் கொண்டு," என்பது பொருளாகும்.

3. கடைகாவலர் குறைகூறலும் விசயன்கடி திற்றன்
புடைகாவலர் தொழவந்துபு வித்தேவனை மறைபின்

தொடைகாவல விதுவென்னென வவனுந்தொடு
கழலோய்
விடைகாவலர் நிரைகொண்டனர் வில்வேடுவ
ரென்றான்.

[கடை காவலர் குறை கூறலும் விசயன் கடிதின் தன் புடை காவலர் தொழ வந்து புவி வேதனை, மறையின் தொடை காவல!' 'இது என்?' என, அவனும், தொடு கழலோய்! விடை காவலர் நிரை கொண்டனர் வில் வேடுவர் என்றான்.]

**விளக்கம்** :—கடை காவலர் - வாயில் காப்பாளர். குறை - அந்தனது முறைப்பாடு. தன் புடை - தனது பக்கத்தில். காவலர் - அரசர்க்ள். புவித்தேவன் - அந்தணன். மறையின் தொடை காவல - வேதம் வகுத்த ஒழுக்கத்தினைப் பாதுகாப்ப வான, அதாவது மறை வகுத்த ஒழுக்கத்தில் நிலை நிற்பவனே. தொடு கழலோய் - வீரக்கழல் அணிந்தவனே. வில் வேடுவர் [பசுக்களை மேய்க்கும்] இடையர்களிடமிருந்து எனது பசுக் கூட்டங்களை அபகரித்துக் கொண்டனர், என்பது பதில் மொழிந் தான்,—என்பது ஈற்றடியின் பொருள். (விடை காவலர் - இடையர்) தொடை - ஒழுக்கம்

4. அஞ்சாதொழி முனிநீயுன தானின்கண மின்றே
எஞ்சாவகை தருவேனென வேவுக்கொரு திலகன்
வெஞ்சாபமெ டுப்பான்வரு விசயனறரு மனுடன்
மஞ்சார்பொழில் விளையாடிடு மயில்சீறடி கண்டார்.

["அஞ்சாது ஒழி முனி நீ, உனது ஆனின் கணம் இன்றே எஞ்சா வகை தருவேன்," என, ஏவுக்கு ஒரு திலகன், வெம் சாபம் எடுப்பான் வரு விசயன், தருமனுடன் மஞ்சு ஆர் பொழில் விளையாடிடு மயில் சிறு அடி கண்டான்.]

விளக்கம் : ஆனின் கணம் - பசுக்கூட்டம். எஞ்சாவகை- குறையாதபடி. வெம் சாபம் எடுப்பான் வரு ஏவுக்கு ஒரு திலகன் (ஆன) விசயன், என்று இயைக்க. (சாபம் - வில். திலகன் - சரக் கலைக்குத் திலகம் போன்றவன்). தருமனோடு பாஞ்சாலி சோலை யில் விளையாடுவதைக் கண்டான்,...என்க. மஞ்சு ஆர் பொழில்- மேகம் படியும்படியாக உயர்ந்த மரங்களைக் கொண்ட சோலை. பெண்களுக்குக் கால், நெற்றி இடை சிறுத்திருப்பது உத்தம லக்ஷணம்.

5. காணாமெய்ந்ந டுங்காவொளி கருகாமன மிகவும்
நாணாவிரை வொடுசாயக நாண்வெஞ்சிலை
கொள்ளாச்
சேணாநெறி செல்லாநனி சீறாவமர் வெல்லா
மாணாநிரை மீளாவொரி மைப்போதினில் வந்தான்.

[காணா, மெய் நடுங்கா, ஒளி கருகா, மனம் மிகவும் நாணா விரைவொடு சாயகம் நாண் வெம் சிலை கொள்ளா. சேண் ஆம் நெறி செல்லா, நனி சீறா, அமர் வெல்லா, மாண் ஆ நிரை மீளா ஓர் இமைப்பொழுதினில் வந்தான்.]

**விளக்கம் :** தருமனோடு திரௌபதி தனியே இருக்கக் கண்டு, மெய் நடுங்கி, முகத்தின் ஒளி குன்றி, மிகவும் மனம் நாணி, விரைவாக வில்லை எடுத்துக் கொண்டு, நெடுந்தூரம் சென்று, மிகவும் கோபங் கொண்டு போர் வென்று, ஆநிரை மீட்டு, இமைப் பொழுதில் திரும்பி வந்தான், என்பதாம்.

சாயக நாண் வெஞ்சிலை-அம்புகளையும் நாண் கயிற்றையும் உடைய கொடிய வில். சேணாம் நெறி - நெடுந்தூரமான வழி. ஓமத்திற்கு வேண்டிய பால், தயிர், நெய் முதலியவற்றைத் தர லால், 'மாண் ஆ' எனப்பட்டது. மாண் ஆ-மாட்சிமையுடைய பசு. சாயகம் - (ஸாயகம்) அம்பு.

6. தொறுக்கொண்டவ ருயிருந்தொறு நிரையுங்கவர்
சூரன்
மறுக்கம்படு மறையோன்மன மகிழும்படி நல்கிப்
பொறுக்குந்தவ முனிசொற்படி புனிதப்புனல்
படிவான்
நிறுக்குந்துலை நிகர்தம்முனை நினைவோடுப
ணிந்தான்.

[தொறு கொண்டவர் உயிரும் தொறு நிரையும் கவர்சூரன். மறுக்கம் படு மறையோன் மனம் மகிழும்படி, நல்கி, பொறுக்கும் தவம் முனி சொல்படி புனிதம் புனல் படிவான், நிறுக்கும் துலை நிகர் தம் முனை நினைவோடு பணிந்தான்.]

**விளக்கம் :**—தொறு - பசுக்கூட்டம். மறுக்கம்-மனக்கலக்கம். தவம் பொறுக்கும் முனி - தவத்தைத் தாங்கிய முனியாகிய நாரதன். புனிதப் புனல் - புண்ணிய தீர்த்தங்கள். படிவான் -

ஸ்நானம் செய்வதற்கு. நிறுக்கும் துலை நிகர் முன் - நிறுக்கும் தராசை ஒத்த அதாவது பக்ஷபாதமற்ற தமையனாகிய தருமன். நினைவோடு பணிந்தான் - உள்ளன்போடு பணிந்தான்.

அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை செய்வதற்குத் தன் தமையனை வணங்கி அவனது, அநுமதி பெற்றான், என்க.

**அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை**

7. ஆடம்பர மன்வேடம கற்றித்தொழு தகுதொல்
வேடம்பெறு மறையோருடன் விசயன்புர விசயன்
சூடந்தரு பாகீரதி தோய்காலையி லவணே
சேடன்றல மடவார்புன லயர்வானெதிர் சென்றார்.

[ஆடம்பரம் மன் வேடம் அகற்றி, தொழுதகு தொல்வேடம் பெறு மறையோருடன் விசயன், புரவிசயன் சூடம் தரு பாகீரதி தோய் காலையில், அவணே சேடம் தலம் மடவார் புனல் அயர் வான் எதிர் சென்றார்.]

**விளக்கம் :**—ஆடம்பர மன் வேடம் - ஆடம்பரமான அரச வேஷம், தொழுதகு - தொழத்தக்க, தொல் வேடம்-பழமையான தவத்திற்குரிய வேஷம்; அதாவது, மரவுரி உடுத்தல், சடைமுடி தரித்தல், மான் தோல் போர்த்தல் முதலியன. (அத்தகைய தவ வேடங்கொண்ட அந்தணருடன் விசயன் நீராடச் சென்றான்.) புரவிசயன் (புரம் விசயன்) சூடம் தரு பாகீரதி - திரிபுரம் வென்ற சிவபிரானது சடை முடியினால் உதவப்பெற்ற கங்கை. (விசயன் கங்கையில் நீராடும் வேளை) அவண்(ஏ) சேடன் தல மடவார் புனல் அயர்வான் எதிர் சென்றார் - அங்கே நாகலோகத்துப் பெண்கள் நீராடுதற்கு (அவன்) எதிர் வந்தனர், புரம்-திரிபுரம். சூடம் - முடி.

8. ஓடுங்கயல் விழியாரிலு லூபிப்பெய ரவளோடு
ஆடும்புன லிடைநின்றவ னநுராகமி குந்தே
நாடும்பில வழியேயவள் பின்சென்றுந லத்தால்
நீடுங்கொடி மணமெய்தினன் முகில்போலு
நிறத்தான்.

[ஓடும் கயல் விழியாரில் உலூபி பெயரவளோடு ஆடும் புனல் இடை நின்றவன் அநுராகம் மிகுந்தே நாடும் பிலம் வழியே அவள் பின் சென்று, நலத்தால் நீடும் கொடி மணம் எய்தினன் முகில் போலும் நிறத்தான்.]

**விளக்கம் :**—முகில் போலும் நிறத்தான் (ஆகிய) ஆடும் புனலிடை நின்றவன், ஒடுங்கயல்...உலூபிப் பெயரவளோடு அநுராகம் மிகுந்து...மணம் எய்தினன்,—என்று அன்வயிக்க.

அநுராகம் - காதல். நாடும் பில வழி - ஆராய்ந்து செல்லத் தக்க பில வழி: அதாவது, நாகலோகத்தாரல்லாதார்க்குச் செல்லுதற்கு அரிய பிலவழி. நலத்தால் – அழகினால். நீடும் கொடி - (அழகினால்) நீண்ட, அதாவது சிறந்த பூங்கொடி போன்ற உலூபி. அவளை அழகனான அர்ச்சுனன் மணந்து கொண்டான்.

### இராவானைப் பெறல்

9. இம்மென்றளி முரல்பாயலி லின்பத்தை வளர்த்தும்
''பொம்மென்பரி புர நாண்மலர் பொற்சென்னியில்
வைத்தும்
செம்மென்கனி யிதழாளொடு சின்னாணல முற்றான்
அம்மென்கொடி யனையாளுமி ராவானைய
ளித்தாள்.''

[இம் என்று அளி முரல் பாயலில் இன்பத்தை வளர்த்தும், பொம்மென் பரிபுரம் நாள் மலர் பொன் சென்னியில் வைத்தும், செம்மெல் கனி இதழாளொடு சில் நாள் நலம் உற்றான்; அ மெல் கொடி அனையாளும் இராவானை அளித்தாள்.]

**விளக்கம் :**—இம் என்று அளி முரல் பாயல் - மலர்ப்படுக்கை. இன்பம் வளர்த்தல் - காம சுகத்தை மிகுதியாக அனுபவித்தல், பொம்மென் பரிபுரம் நாள் மலர் - பொம்மென்று ஒலிக்கும் சதங்கை அணிந்த அன்றலர்ந்த தாமரை போன்ற பாதங்கள், பொன் சென்னியில் வைத்தல் - நாயகி கொண்ட புலவி தீர்க்கும் பொருட்டு நாயகன் அவளது பாதங்களைச் சிரசில் சூடல். சின்னாள் நலம் உற்றான் - சிலநாள் அவளைக் கூடி மகிழ்ந்தான். அவளும் **இராவான்** என்ற மகவைப் பெற்றாள்.

இம்மெனல், பொம்மெனல்,—ஒலிக்குறிப்பு. அளிமுரல் பாயல், என்றதால் மலர்ப்படுக்கை ஆயிற்று.

10. நாகா திபன் மகண்மைந்தன லங்கண்டுமகிழ்ந்து
நாகாதிபன் மகன் மீளவு நதியின் வழி வந்து
நாகாதிபன் வண்சாரலி னன்னீர்கள்ப டிந்து
நாகாதிபன் விடுமும்மத நாறுந்திசை புக்கான்.

[நாக அதிபன் மகள் மைந்தன் நலம் கண்டும், நாக அதிபன் மகன் மீளவும் நதியின் வழி வந்து, நாக அதிபன் வள் சாரலின் நல்நீர்கள் படிந்து, நாக அதிபன் விடு மும்மதம் நாறும் திசை புக்கான்.]

**விளக்கம் :**—நாகாதிபன் - நாகராஜன், இந்திரன், மலைகளுக்கு அரசாகிய இமயம், யானைகளின் அரசாகிய ஐராவதம்' என்று முறையே பொருள் கொள்க. இந்திரன் மைந்தனான விசயன், நாகராஜனது மகள் பெற்ற மகனின் அழகைக் கண்டு மகிழ்ந்து, மீண்டும் பிலத்தின் வழியாகக் கங்கைக் கரைக்கு வந்து, இமயமலைச் சாரலி னிடத்தேயுள்ள தீர்த்தங்களில் படிந்து, ஐராவதம் என்னும் யானை அரசு சொரியும் மூன்றுவித மதஜலங்கள் மணக்கும் கிழக்குத் திசையை அடைந்தான்,—என்க.

'நாகாதிபன் விடு மும்மதம் நாறும் திசை,' என்று கிழக்குத் திசை குறிக்கப்பட்டது, பிறிதின் நவிற்சி அணியின்பாற்படும், அடிதோறும் நாக என்ற சொல் வெவ்வேறு பொருளில் வந்தது யமகம் என்னும் சொல்லணியாகும்.

11. நெளித்தாடர வணையையனி றம்போலநி றக்கும்
களிந்தாநதி முதலாகிய கடவுண்ணதி பலவும்
முளிந்தாரழ லெழுகானெறி முக்கோலின ராகித்
தெளிந்தாறிய பெரியோரொடு சென்றாடின னன்றே.

[நெளிந்து ஆடு அரவு அணை ஐயன் நிறம்போல் நிறக்கும் களிந்தா நதி முதல் ஆகிய கடவுள் நதி பலவும். முளிந்து ஆர் அழல் எழு கான் நெறி, முக்கோலினர் ஆகி தெளிந்து ஆறிய பெரியோரொடு சென்று ஆடினன் அன்றே]

**விளக்கம் :**—முக்கோலினராகி...பெரியோரொடு, முளிந்து ஆர் அழல் கான் நெறி சென்று, நெளிந்து ஆடு அரவு...நதி பலவும் ஆடினன், என்று அன்வயிக்க. அன்றே: ஈற்றசை.

நெளிந்து ஆடி அரவு அணை ஐயன் - நெளிந்து படம் எடுத்து ஆடும் தன்மையதான ஆதிசேஷனைப் படுக்கையாகக்கொண்ட திருமால். (அவனது) நிறம்போல நிறக்கும் - அவனது நிறம் போல் கருமை நிறங்கொண்ட, காளிந்தி - யமுனை. கடவுள் நதி-தெய்வத் தன்மையுள்ள நதிகள். முளிந்து ஆர் அழல் - கொதித்து மிகும் நெருப்பு; காட்டுத் தீ. எழு கான் நெறி - (அந் நெருப்பு) எழுந்து எரியும் காட்டுப் பாதை, முக்கோலினர் - திரிதண்டந்

தாங்கிய யதிகள் தெளிந்து ஆறிய பெரியோர் - மனந்தெளிந்து அடங்கிய மேலோர். அவர்களோடு சென்று கடவுள் நதிகளில் அர்ச்சுனன் நீராடினான், என்க.

## தென்திசை யாத்திரை

12. பத்திக்குவ ரம்பாகிய பார்த்தன்பல தீர்த்தம்
அத்திக்கினு மெத்திக்கினு மாமென்றவை யாடிச்
சித்திக்கொரு விதையாகிய தென்னாட்டினை
யணுகித்
தத்திச்சொரி யருவித்தட வரவக்கிரி சார்ந்தான்.

[பத்திக்கு வரம்பு ஆகிய பார்த்தன் பல தீர்த்தம் அ திக்கினும் எ திக்கினும் ஆம் என்றவை ஆடி, சித்திக்கு ஒரு விதை ஆகிய தென் நாட்டினை அணுகி, தத்தி சொரி அருவி தட அரவக்கிரி சார்ந்தான்.]

**விளக்கம் :**—தென் திசையை நோக்கி நடந்த அர்ச்சுனன் திருவேங்கட மலையை அடைந்தான் என்பதை இது கூறும்.

அர்ச்சுனன் சிறந்த பக்தனாதல் பற்றிப் பத்திக்கு வரம்பாகிய பார்த்தன், என்றார். அ திக்கு - கீழ்த்திசை. எ திக்கு - மற்றத் திசைகளிலுள்ள இடங்கள், ஆம் என்றவை பல தீர்த்தம் - விசேஷமுடையன ஆகும் என்று சொல்லப்பட்டவையான பல தீர்த்தங்கள். தென்னாட்டில், ஸ்ரீரங்கம், திருவேங்கடம், அத்திகிரி முதலிய விஷ்ணு ஸ்தலங்களும், சிதம்பரம், காஞ்சி முதலிய சிவஸ்தலங்களும் இருத்தலால், "சித்திக்கு ஒரு விதை (மூலம்) ஆகிய தென்னாடு," என்றார். குதித்து ஓடுகின்ற பல அருவிகளை உடைய விசாலமான அரவக்கிரி (திருவேங்கடமலை) என்பது ஈற்றடியின் பொருள். அதை, அருச்சுனன் அடைந்தான். சேஷகிரி, என்ற பெயரும் இம்மலைக்கு உளது. தத்திச் சொரி - குதித்து ஓடுகின்ற.

ஆகாச கங்கை, பாபவிநாசம் பாண்டவதீர்த்தம், குமாரதாரை, துரும்புரு தீர்த்தம், கோனேரி, ஆழ்வார் தீர்த்தம் முதலிய புண்ணிய தீர்த்தங்கள் இருத்தல்பற்றி, "தத்திச்சொரி அருவி" என்றாராயிற்று.

13. இச்சைப்படி தன்பேரற மெண்ணான்கும் வளர்க்கும்
பச்சைக்கொடி விடையோனொரு பாகந்திறை
கொண்டாள்

செச்சைத்தொடை யிளையோனுகர் தீம்பான் மண
நாறும்
கச்சைப்பொரு முலையாளுறை கச்சிப்பதி கண்டான்.

[இச்சைப்படி தன் பேர் அறம் எண் நான்கும் வளர்க்கும் பச்சைக் கொடி விடையோன் ஒரு பாகம் திறை கொண்டாள்; செச்சை தொடை இளையோன் நுகர் தீம்பால் மணம் நாறும் கச்சை பொரு முலையாள் உறை கச்சி பதி கண்டான்.]

**விளக்கம் :**—தன் இச்சைப்படி சிறந்த அறங்கள் முப்பத்திரண்டினையும் வளர்க்கும் பச்சைக்கொடி போன்றவளும், விடையோனின் வாமபாகத்தைத் திறை கொண்டவளும் (தங்குமிடமாகக் கொண்டவளும்), வெட்சிப்பூ மாலையை உடைய இளைய புத்திரனான முருகன் அமுது செய்த தீம் பாலின் மணம் வீசும் கச்சினைமோதும் பருத்த தனங்களையுடையவளுமான காமாட்சி அம்மை எழுந்தருளியிருக்கும் காஞ்சீபுரியைப் பார்த்தன் அடைந்தான்,—என்பது பொருள்.

செச்சை - வெட்சிப்பூ. தொண்டை நாட்டுத் திருப்பதிகளில் ஒன்றும், முத்திதரும் ஏழு நகரங்களில் ஒன்றும் ஆகும் காஞ்சீ. காஞ்சீ, என்ற சொல்லின் சிதைவு கச்சி.

ஒரு காலத்தில் உமாதேவி சிவபிரானது கண்களை விளையாட்டாகப் பொத்தினாளாக, அதன் பயனாய்ச் சந்திர சூர்யாதியர் ஒளியிழக்கவே, மன்னுயிர் வருந்தியது என்றும், இக் குற்றத்திற்காக அண்ணல் உமையைக் காஞ்சி சென்று தவம் புரியுமாறு பணித்தான் என்றும், அங்ஙனமே தேவி கன்னிவடிவில் காஞ்சியை அடைந்து, அறம் எண் நான்கும் வளர்த்தனள் என்றும் கூறுவர்.

கோதானம், பூதானம், கன்னிகாதானம், சத்திரங் கட்டுதல், குளம் வெட்டல், சாலை அமைத்தல், பசுவிற்குப் புல்லிடுதல், பறவைகட்கு இறையளித்தல், மகவுக்குப் பால் அளித்தல், நோய்க்கு மருந்து உதவல், ஓதுவார்க்கு அன்னமிடல், பிறர் கடன் தீர்த்தல், அகதிப் பிணம் சுடல், பிச்சையிடல், ஆடையளித்தல், துன்பமுற்றார் துயர் களைதல் போன்ற தருமங்கள்.

காஞ்சியில் காமாட்சியின் தலைமை தோன்ற ''அவள் உறையும்பதி கச்சிப்பதி,'' என்றாராயிற்று.

14. அயனார்புரி மகசாலையு மணியத்திகி ரிக்கே
மயனார்செய்தி ருக்கோயிலு மாமின்னினொ டமரும்

புயனாரணர் மெய்க்கோலமு முள்ளன்பொடு
போற்றிப்
பயனார்புன னதியேழுமந் நகரூடுப டிந்தான்.

[அயனார் புரி மகசாலையும் அணி அத்திகிரிக்கே மயனார் செய் திருக்கோயிலும், மா மின்னினொடு அமரும் புயல் நாரணர் மெய் கோலமும் உள்ளன்பொடு போற்றி, பயன் ஆர் புனல் நதி ஏழும் அ நகரூடு படிந்தான்.]

**விளக்கம் :—** அயனார் - பிரும்மா. மகசாலை - யாகசாலை. மயன் - தெய்வத்தச்சன். மா மின்னினொடு அமரும் புயல் நாரணர் - இலக்குமியாகிய மின்னலுடன் பொருந்திய மேகம் போன்ற நிறமுடைய திருமால். நகரூடு பயன் ஆர் புனல் நதி ஏழு - அந்நகரினிடத்தேயுள்ள நற்பயன்மிக்க புண்ணிய நதிகள் ஏழு. அர்ச்சுனன் விஷ்ணு காஞ்சியில் எழுந்தருளியுள்ள திருமாலை வணங்கி, அங்கேயுள்ள ஏழு புண்ணிய நதிகளிலும் நீராடினான், என்க.

தனக்குக் கிட்டாத மனத் தூய்மையைப் பெறும் பொருட்டுப் பிரும்மதேவன் அத்திகிரியில் யாகசாலை அமைத்து அச்வமேத யாகம் செய்து திருமாலை ஆராதித்தார் என்றும், அப்பொழுது யாகாக்னியிலிருந்து எழுந்த புண்யகோடி விமானத்தில் தேவராசனான திருமால் தோன்றினாரென்றும், அங்கே மயன் ஒரு கோயிலை நிர்மாணித்தான் என்றும் கூறுவர். தேவலோக யானையான ஐராவதம் மலைவடிவங் கொண்டு தேவராசனைத் தாங்குதலால் அம்மலைக்கு அத்திகிரி (ஹஸ்திகிரி - ஹஸ்தி - யானை) என்ற பெயராயிற்று.

இச்செய்யுள் குறிக்கும் திருமால் பெயர், **வரதராசர்;** தாயார் பெயர், **பெருந்தேவி.** கம்பை, பம்பை, மஞ்சனி, பிச்சி, கலிச்சி, மண்ணி, வெஃகா, என்பவை சப்த நதிகள்.

15. பெற்றாள்சக தண்டங்களை யனைத்தும்மவை பெற்றும்
முற்றாமுகிழ் முலையாளொடு முக்கண்ணர்
விரும்பும்
பற்றாமென மிக்கோரிகழ் பற்றொன்றினு முண்மை
கற்றார்தொழு மருணாசல மன்போடுகை
தொழுதான்.

[பெற்றாள் சகத் அண்டங்கள் அனைத்தும், அவை பெற்றும் முற்றா முகிழ் முலையாளொடு முக்கண்ணர் விரும்பும் பற்று ஆம், என, மிக்கோர் இகழ் பற்று ஒன்றினும், உண்மை கற்றார் தொழும் அருணாசலம் அன்போடு கைதொழுதான்.]

**விளக்கம்:**—சகத் அண்டம்- (சகதண்டம்) அண்டகோளம். சிவபெருமான் பராசக்தியின் உதவி கொண்டு பிரபஞ்சத்தைப் படைக்கின்றாராதலினால், "சகதண்டங்கள் அனைத்தும் பெற்றாள்" எனப்பட்டது. அப்படி பெற்றும் "அவள் இளமை மாறா முற்றா முலையாள்," என்றது, இச்சா மாத்திரத்தால் இவ்வண்டங்கள் தோன்றியது, என்று குறிக்கும் கருத்தது. அத்தகையாளான தேவியோடு முக்கண் ஈசன் விரும்பும் பற்று ஆம்; அதாவது, விரும்பித் தனது உறைவிடமாகப் பற்றியிருக்கும் இடமாகும், இத் திருவண்ணாமலை. என-எனவே, என்ற காரணத்தினால். மிக்கோர் இகழ்... தொழுதான்- மேலோர் இகழும் உலகப்பற்று ஒன்றியிருக்குங் காலத்தும், அதாவது உலகப்பற்று நீங்காவிடத்தும், நினைத்த அளவில் முத்தி தரும் ஸ்தலம் என்ற உண்மையை உணர்ந்த வித்தகர் தொழும் அருணாசலத்தை (விசயன்) அன்போடு தொழுதான்.

அருண-அசலம்-அருணாசலம்; அசலம்- சலியாதது, எனவே மலை. இத்தலம் உறையும் பிரான் நாமம் அருணாசலேச்வரர்; அம்பிகை உண்ணாமுலை அம்மை.

16. உருகுங்கமழ் நெய்பாலிரு பாலுங்கரை யொத்துப்
பெருகுந்துறை யேழேழுபி றப்புங்கெட மூழ்கிக்
கருகுங்கரு முகின்மேனியர் கவிஞானியர் கண்ணிற்
பருகுஞ்சுவை யமுதானவர் பாதந்தலை வைத்தான்

[உருகும் கமழ் நெய் பால் இரு பாலும் கரை ஒத்து பெருகும் துறை ஏழ் ஏழு பிறப்பும் கெட மூழ்கி, கருகும் கருமுகில் மேனியர் கவிஞானியர் கண்ணின் பருகும் சுவை அமுதானவர் பாதம் தலை வைத்தான்.]

**விளக்கம்:**— உருகும் கமழ் நெய்; கமழ் பால், இருபாலும்- இரண்டு பக்கங்களிலும். கரை ஒத்து—கரையளவு நிறைந்து. பெருகும் துறை- (நெய்யும் பாலும்) பெருகும் பெண்ணையாற்றின் துறை. கருகும் கருமேனியர்...தலை வைத்தான்- மிகக் கருத்த கருமேகம் போன்ற திருமேனியை உடையவரும், கவிஞானியர்களாகிய முதலாழ்வார் மூவரும் தம் கண்களால் கண்டு அனுபவித்த இனிய சுவையுடைய அமுதம் போன்றவரு

மான திருக்கோவலூரில் நித்யவாசம் செய்யும் எம்பெருமானின் திருவடிகளை விசயன் வணங்கினான். எழுமையுடைய ஏழு வகையான பிறப்பு, ஏழேழ், பிறப்பு எனப்பட்டது. தேவர். மனிதர், மிருகம், பறவை, ஊர்வன. நீர்வாழ்வன, தாவரம் என்ற ஏழுவகைப் பிறப்பும், பெண்ணையில் நீராடினோர் ஒழிய நின்றவராவர், என்பது கருத்து.

நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டினுள் திருக்கோவலூர் ஒன்று. தேகளீசன், திருவிக்ரமன், ஆயனார் என்பவை பெருமான் திருநாமம். பூங்கோவல்லி நாச்சியார், பூங்கோயி லாள், என்ற பெயரினள் தாயார்.

திருக்கோவலூரில் ஒரு இடையனால் உபசரிக்கப் பெற்ற ஔவையார், அவனது பெண்களைத் தெய்விகன் என்னுமோர் அரசனுக்கு மணம் செய்வித்தாள் என்றும், அப்பொழுது அம் மணத்திற்கு வேண்டிய நெய்யும் பாலுமாய்ப் பெருகிவருமாறு அவள் பாட, அவ்வாறே பெண்ணைநதி நெய்யும் பாலுமாய் இருகரையும் ஒத்துப் பெருகி வந்தது என்றும் கூறுவர்.

பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்ற முதலாழ்வார்கள், எம்பெருமானைக் காட்சி கொண்ட தலம் இத் திருக்கோவலூர், என்பர்.

17. ஐயானன னியல்வாணனை யடிமைகொள
மெய்யே
பொய்யாவண மெழுதும்பதி பொற்போடுவ ணங்கா
மெய்யாகம வதிகைத்திரு வீரட்டமு நேமிக்
கையாளன கீந்திரபுர முங்கண்டுகை தொழுதான்.

[ஐ ஆனனன் இயல் வாணனை அடிமை கொள மெய்யே பொய் ஆவணம் எழுதும் பதி பொற்போடு வணங்கா, மெய் ஆகமம் அதிகை திரு வீரட்டமும் நேமி கை ஆளன் அகீந்திர புரமும் கண்டு கை தொழுதான்.]

**விளக்கம்:**—அர்ச்சுனன் **திருவெண்ணெய் நல்லூர், திருவதிகை வீரட்டானம்** ஆகிய சிவஸ்தலங்களையும், **விஷ்ணுஸ்தலமாகிய திருவயிந்திரபுரத்தையும்** தரிசித்ததைக் கூறும் இச் செய்யுள்.

**ஐ ஆனனன்**-ஐந்து முகங்களையுடைய சிவபிரான். **இயல் வாணன்-இயல் தமிழ்** வித்தகனான சுந்தரமூர்த்தி (நாயனாரை

ஆட்கொள்ளும் பொருட்டு) பொய்யான அடிமை ஓலையை மெய்போல் (சிவபெருமான்) எழுதிய ஸ்தலமாகிய திருவெண்ணெய் நல்லூர். இத்தலத்தைத் தரிசித்தபின், மெய் ஆகம விதிப்படி அர்ச்சிக்கப்படும் திருவதிகை வீரட்டானம் என்னும் பதியை விசயன் தரிசித்து, அதன்பின், சக்கரத்தைக் கையில் உடையவனான திருமால் வாசம் பண்ணும் திருவகீந்திர புரத்தையும் தரிசித்தான், என்க.

வீரட்டானம்-சிவபிரானது பராக்ரமம் விளங்கும் இடம் (வீரஸ்தானம்). எட்டு வீரட்டானங்களில் திருவதிகை ஒன்று; (திரு-அதிகை). இத்திருவதிகையைச் சிவபெருமான் திரிபுரம் எரித்த ஸ்தலம், என்பர். அஹி-இந்திரன்-அஹீந்திரன்-நாகங் களுக்குத் தலைவனான ஆதிசேஷன். ஆதிசேஷனால் நிருமிக்கப் பட்ட பதியாதல் பற்றி இது திருவகீந்திரபுரம் (திருவயிந்திர புரம்) என்ற பெயரதாயிற்று.

18. இன்னம்பல பலயோனியி லெய்தாநெறி பெறவே
முன்னம்பலர் நறுமாமலர் முறைதூய்மகிழ் வெய்த
அன்னம்பல பயில்வார்புன லணிதில்லையு ளாடும்
பொன்னம்பல நாதன்கழல் பொற்போடு
பணிந்தான்.

[இன்னம் பல பல யோனியில் எய்தா நெறிபெறவே, முன்னம் பலர் நறு மாமலர் முறை தூய் மகிழ்வு எய்த, அன்னம் பல பயில் வார்புனல் அணி தில்லையுள் ஆடும் பொன் அம்பலம் நாதன் கழல் பொற்போடு பணிந்தான்.]

**விளக்கம் :**—முன்னம் பலர் ... நாதன் கழல், இன்னம் பல பல யோனியில் எய்தா நெறி பெறவே, பொற்போடு பணிந்தான், என்று அன்வயிக்க. முன்னம்-முன்னொரு காலத்தில்; அல்லது திருமுன்னர்.

அர்ச்சுனன், பிறவாமை எய்தப் பொன்னம்பலநாதன் கழல் பணிந்தான், என்க.

இதுவே, ஏடுகளிலுள்ள பாடமாக, அச்சுப் பதிப்பில், "முன்னர் பலர் அடி தேடவும் முடி தேடவும் எட்டா." என்று, காணப்படுவது, சமயப் பற்றினால் திருத்திச் செருகப்பட்டதே என்று அறிஞர் கருதுகின்றனர். இதைத் தொடரும் செய்யுளாகப் பல ஏடுகளிற் காணப்படும் ஒரு செய்யுளான,

"மாவிந்தையு நிலமங்கையு மலர்மாரணடி வருடத்
தாவும்மர வணைமேல்விழி துயிலுந்தனி முதலைப்
பூவுந்திய பொழில்சூழ்தரு பொற்சித்திர கூடக்
கோவிந்தனை யடிபன்முறை தொழுதுட்களி
கொண்டான்."

என்ற செய்யுள் அச்சுப் பதிப்பில் விலக்கப்பட்டது ஏனென்று தெரியவில்லை.

19. இலங்காபுரி முன்செற்றவ னிருபோதும் வணங்கத்
துலங்காடர வணைமேலறி துயில்கொண்டவர்
பொற்றாள்
பொலங்காவிரி யிருபாலும் வரப்பூதல மங்கைக்(கு)
அலங்காரம ளிக்குந்தென்ன ரங்கத்திடை
தொழுதான்.

[இலங்காபுரி முன் செற்றவன் இருபோதும் வணங்க. துலங்கு ஆடு அரவு அணை மேல் அறிதுயில் கொண்டவர் பொன்தாள், பொலம் காவிரி இருபாலும் வர. பூதலமங்கைக்கு அலங்காரம் அளிக்கும் தென் அரங்கத்திடை தொழுதான்.]

**விளக்கம் :—**இலங்காபுரியை முன்பு செற்றவன் (அழித்தவன்) இராமபிரான். இருபோதும்-காலை மாலை ஆகிய இரண்டு காலங்களிலும். இராமனும், அவன் குல முன்னையோரும் ஸ்ரீரங்கநாதனை வணங்கினர் என்பது இராமாயணத்தில் பிரசித்தம், (இராமன் வணங்க) துலங்கு அராவணைமேல் அறிதுயில் கொண்டார் பொன்தாள்-விளங்கும் ஆதிசேஷனாகிய படுக்கையில் யோக நித்திரை செய்தருளும் எம்பெருமானது அழகிய பாதங்கள். (அப்பாதங்களை) அழகிய காவிரி பிரிந்து இரு பக்கங்களிலும் பெருகிவர, பூமிதேவிக்கு அழகைச் செய்யும் தென்னரங்கத்தில் விசயன் தொழுதான்,-என்பது ஈற்றடிகளின் பொருள்.

20. வளவன்பதி முதலாகவ யங்கும்பதி தோறுந்
துளவங்கம ழதிசீதள தோயங்கள் படிந்தே
இளவண்டமி ழெழுதேடுமுன் னெதிரேறிய
துறைசூழ்
தளவங்கமழ் புறவஞ்செறி தண்கூடல் புகுந்தான்.

[வளவன் பதி முதலா வயங்கும் பதி தோறும் துளவம் கமழ் அதிசீதள தோயங்கள் படிந்தே, இள வண் தமிழ் எழுது ஏடு முன் எதிர் ஏறிப் துறை சூழ் தளவம் கமழ் புறவம் செறி தண் கூடல் புகுந்தான்.]

**விளக்கம் :**—வளவன்-சோழன். பதி முதலாக வயங்கும் பதிகள் தோறும்-சோழ ராஜதானியான உறையூர் முதலாகச் சிறப்பின் விளங்கும் எல்லா விஷ்ணு ஸ்தலங்களிலும். திருத் துழாயின் மணம் கமழும் மிகக் குளிர்ச்சியையுடைய தீர்த்தங் களில் நீராடி,—என்பது இரண்டாமடியின் பொருள். இளவண் தமிழ்-இளமையும் வளமையுமுடைய தமிழ். இங்கே, 'தமிழ்' என்பது, ஞானசம்பந்தப் பெருமானது, 'வாழ்க அந்தணர்' என்று ஆரம்பமாகும் பாசுரத்தைக் குறிக்கும். அப்பாசுரம் எழுதப்பெற்ற ஏடு வைகைத் துறையில் விடப்பெற்றதும், நீரோட்டத்திற்கு எதிராக அது நீரைக் கிழித்துக்கொண்டு சென்றது, என்பர். தளவம்-முல்லைப்பூ. புறவம்-முல்லை நிலக்காடு. கூடல்-மதுரை. அர்ச்சுனன் சோழநாட்டுத் திருப்பதிகளை தரிசித்தபின் மதுரையை அடைந்தான், என்பதாம்.

ஒரு காலத்தில் வருணன் சோமசுந்தரக் கடவுளோடு மாறு பட்டுச் சப்த மேகங்களையும் ஏவி மழை பொழியச் செய்ய, அக் கடவுளின் கட்டளைப்படி, அவரது சடையிலிருந்து நான்கு மேகங்கள் எழுந்து நான்கு மாடமாகக் கூடி மழையைத் தடுத்தன வென்றும், அதனால் மதுரைக்குக் **கூடல்**, அல்லது **நான்மாடக் கூடல்** என்ற பெயர் ஏற்பட்டது என்றும் கூறுவர்.

### பாண்டியன் மகளை மணத்தல்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

21. குன்றிலிள வாடைவரும் பொழுதெல்லா
மலர்ந்ததிருக் கொன்றை நாறத்
தென்றல்வரும் பொழுதெல்லாஞ் செழுஞ்சாந்தின்
மணநாறுஞ் செல்வ வீதி
நன்றறிவார் வீற்றிருக்கு நான்மாடக்
கூடல்வள நகரி யாளும்
வென்றிபுனை வடிசுடர்வேன் மீனவனை
வானவர்கோன் மதலை கண்டான்.

[குன்றில் இளவாடை வரும்பொழுது எல்லாம் மலர்ந்த திரு கொன்றை நாற, தென்றல் வரும்பொழுது எல்லாம் செழும் சாந்தின் மணம் நாறும் செல்வ வீதி, நன்று அறிவார் வீற்றிருக்கும் நான்மாடக் கூடல் வளம் நகரி ஆளும் வென்றிபுனை வடி சுடர் வேல் மீனவனை வானவர்கோன் மதலை கண்டான்.]

**விளக்கம் :**—குன்று - கயிலை மலை. வாடைக்காற்றை இமயம், அல்லது கயிலையிலிருந்து வரும் காற்று என்பர். நன்கு அறிவார் - சங்கப் புலவர்கள் போன்ற பெரியோர். மீனவன் - மீனக் கொடியனான பாண்டியன். வானவர்கோன் மதலை - விசயன். அவன் மதுரை சென்று பாண்டிய மன்னனைக் கண்டான் என்பதாம்.

22. அந்நிலத்தி னவரல்லா வந்தணரோ
டிவனவனுக் காசி கூற
எந்நிலத்தீ ரெப்பதியீ ரெத்திசைக்குப்
போகின்றீ ரென்று போற்றிச்
சென் னியர்க்கும் வில்லவர்க்கு மணிமுடியாங்
கனைகழற்காற் செழியன் கேட்பக்
கன்னியைக்கண் ணுற்றாட வந்தனமென்
றனன்மெய்ம்மைக் கடவுள் போல்வான்.

[அ நிலத்தினவர் அல்லா அந்தணரோடு இவன் அவனுக்கு ஆசி கூற, எந்நிலத்தீர், எப்பதியீர், எத்திசைக்கு போகின்றீர் என்று போற்றி, சென்னியர்க்கும் வில்லவர்க்கும் மணிமுடி ஆம் கனைகழல் கால் செழியன் கேட்ப, கன்னியை கண்ணுற்று ஆட வந்தனம் என்றனன் மெய்ம்மை கடவுள் போல்வான்.]

**விளக்கம் :**—பாண்டிய நாட்டினர் அல்லாத அந்தணரோடு இவனும் (அர்ச்சுனனும்) அவனுக்கு (பாண்டியனுக்கு) ஆசி கூறினான். பூண்ட அந்தண வேஷத்திற்கு ஏற்ப அர்ச்சுனன் ஆசி கூறினானாயிற்று. (ஆசி கூறலும் அவ்வந்தணர்களை) போற்றி - வணங்கி. சென்னியர் - சோழர். வில்லவர் - விற்கொடியுடைய சேரர். மணி முடி ஆம்...செழியன் - அவ்விரு வேந்தர்களுக்கும், (அவர்கள் தலை மேல் அணியும்) மணிமுடி போன்ற பாண்டியன். கன்னியைக் கண்ணுற்று ஆட வந்தனம் - குமரி எனப்படும் நதியைக் கண்டு, அதில் நீராட வந்தனம், (என்று விசயன் பதில் மொழிந்தான்). மெய்ம்மைக் கடவுள் போல்வான் - சத்தியத்தின்

அதிதேவதை போன்றவனான விசயன், அதாவது சந்தியசந்த னான விசயன்.

'குமரி' என்ற நதி ஒன்று இருந்ததென்றும், பிற்காலத்தில் கடல் கொள்ளப்பட்டுக் கன்னியாகுமரி என்னும் முனையாயிற்று என்றும் கூறுவர்.

'கன்னி ஆடல்,' என்ற தொடர் 'கன்னியை மணத்தல்' என்ற பொருளையும் தொனிக்கவல்லது. இனி நிகழப்போகும் 'கன்னியாடல்' என்ற செய்தியை விசயன் ஓராமலே உரைத்தா னாதலால், அத் தொடர் ஓராதுரைத்தலணியின் பாற்படும். இதன் விரிவை, ஆசிரியரது 'அணியியல்' என்ற நூலில் காண்க.

23. வெய்தின்மக பதிமுடியில் வளையெறிந்து
மீண்டநாள் விண்ணின் மாதர்
கொய்துமலர் தொலையாத குளிர்தருக்க
ளொருகோடி கொண்டு போந்து
மைதவழ் தன் றடங்கோயி லவரோத
மனைப்படைப்பை வைத்த காவில்
கைதவர்கோன் மற்றவர்க்குப் போனகம்செய்
தருந்துமிடங் கற்பித் தானே.

[வெய்தின் மகபதி முடியில் வளை எறிந்து மீண்டநாள் விண்ணின் மாதர் கொய்து மலர் தொலையாத குளிர் தருக்கள் ஒரு கோடி கொண்டு போந்து, மை தவழ் தன் தடம் கோயில் அவரோதம் மனை படைப்பை வைத்த காவில், கைதவர்கோன் மற்று அவர்க்கு போனகம் செய்து அருந்தும் இடம் கற்பித் தான் (ஏ)

**விளக்கம்** :—வெய்தின் - கடுமையாக. மகபதி - இந்திரன். முடியில் வளை எறிந்து மீண்ட நாள் - (சிவபெருமான் அளித்த) வளை என்னும் ஆயுதத்தை வீசி (இந்திரன்) மகுடபங்கம் செய்து வெற்றியுடன் (உக்கிர குமார பாண்டியன்) மீண்ட பொழுது.

கொய்தும் குறைவுபடாத குளிர்ச்சியுடைய கற்பகம் முதலிய தேவ விருக்ஷங்கள் பலவற்றைத் தேவ கன்னியர் பெயர்த்துக் கொண்டுவந்து, அவனது மேகம் படியும் அரண்மனையின் அந்தப் புரத்தினிடத்தே தோட்டப் பகுதியாக நட்டு வைத்த பூங்காவில், என்பது இரண்டு மூன்றாவது அடிகளின் பொருள். அவரோதம் உள் வீடு, அந்தப்புரம். மனை - இடம். படப்பை - தோட்டம்.

கைதவர்கோன் - பாண்டியன் அரசன்; (சித்ரவாகன், என்ற பெயரினன்). மற்று : அசை. போனகம் - உணவு. (அருந்துமிடம்) கற்பித்தான் நியமித்தான்.

அர்ச்சுனனுக்கும் அவனோடு வந்த அந்தணர்களுக்கும் அரண் மனைப்புறத்திலுள்ள கடைத்தோட்டத்தினிடத்தே சித்ரவாகன பாண்டியன் விருந்து செய்தான், என்க.

மலையத்துவச பாண்டியன் மகளாய்த் தோன்றிய **தடா தகைப்பிராட்டியைச்** சுந்திரபாண்டியன் வடிவில் வந்து மணந்து கொண்ட சிவபெருமானுக்குப் பிறந்தவன் உக்கிரபாண்டியன். அவனுக்கு, இறைவன் கடலையும், மேரு மலையையும், இந்திர னையும் வெல்லும் பொருட்டு **வேல், செண்டு, வளை,** ஆகிய வற்றை அளித்துச் சென்றான். வளை எறிந்து இந்திரனை வென்ற நாள் தேவலோக மாதர் தேவதருக்களை, அவனது அரண்மனைத் தோட்டத்தில் நட்டனர்,—என்பது கதை.

24. வேதியரொ டக்காவி லிளைப்பாறி
யிருந்தளவின் மின்கு ழாம்போல்
தாதியருஞ் சேடியருந் தற்சூழச்
சிலைமதனன் தனிசே விக்கச்
சோதியரிச் சிலம்பரற்றத் துணைநெடுங்கண்
செவியளப்பத் தொடித்தோள் வீசி
ஆதியர விந்தையென நிருபன்மகள்
விளையாடற் காங்கு வந்தாள்.

[வேதியரொடு அ காவில் இளைப்பு ஆறி இருந்த அளவில் மின் குழாம் போல் தாதியரும் சேடியரும் தன் சூழ, சிலை மதனன் தனி சேவிக்க, சோதி அரி சிலம்பு அரற்ற துணை நெடும் கண் செவி அளப்ப, தொடி தோள் வீசி, ஆதி அரவிந்தை என நிருபன் மகள் விளையாடற்கு ஆங்கு வந்தாள்.]

**விளக்கம்** : சுலபமான செய்யுளே. உண்டபின் அக் காவில் விசயன் அந்தணரோடு இளைப்பாற்றிக் கொண்டிருந்த சமயம், பாண்டியன் மகள் குற்றேவல் பெண்டிருடனும், தோழியருட னும் விளையாடற்கு அங்கே வந்தாள், என்க. ஆதி அரவிந்தை - திருமகள்.

"சிலை மதனன் தனி சேவிக்க," என்றது "பாண்டியன் மகள் பேரழகும் பருவமும் உடையள்," என்று குறிக்கும் கருத்தது.

25. பச்சென்ற திருநிறமுஞ் சேயிதழும்
வெண்ணகையும் பார்வை யென்னும்
நச்சம்பு மமுதூற நவிற்றுகின்ற
மடமொழியு நாணும் பூணும்
கச்சின்க ணடங்காத கனதனமு
நுண்ணிடையுங் கண்டு சோர்ந்து
பிச்சன்போ லாயினனப் பெண்கொடிமெய்ந்
நலமுழுதும் பெறுவா னின்றான்.

[பச்சென்ற திரு நிறமும் சேய் இதழும் வெள் நகையும், பார்வை என்னும் நச்சு அம்பும் அமுது ஊற நவிற்றுகின்ற மட மொழியும், நாணும், பூணும் கச்சின்கண் அடங்காத கன தனமும், நுண் இடையும் கண்டு சோர்ந்து பிச்சன்போல் ஆயினன், அ பெண் கொடி மெய் நலம் முழுதும் பெறுவான் நின்றான்.]

**விளக்கம் :**—அ பெண் கொடி மெய்நலம் முழுதும் பெறுவான் நின்றானாகிய விசயன், பச்சென்ற திருநிறமும்...பிச்சன் போல் ஆயினன், என்பது அன்வயம்.

பச்சென்ற நிறம் - பருவம் தந்த பளபளப்பு. பார்வை என்னும் நச்சு அம்பு - பார்வை என்னும் விஷம் பூசிய அம்பு. மடமொழி - மழலை. நாண் - நாணம் என்னும் பெண்மைக் குணம். பூணும் கச்சு - அணியும் கச்சு, (அதற்கு அடங்காமல் பருத்திருக்கும் தனங்கள்) - பிச்சன்போல் ஆயினான்-காமத்தால் தன்வசம் இழந்தவனாயினான்,

கண்டு என்று கூறப்பட்டிருப்பினும், 'ஏற்புழிக்கோடல்' என்னும் உத்தியால், ''அவயவ நலம் கண்டும், மடமொழி கேட்டும்,'' என்று பொருள் கொள்ளவேண்டும். மை தீற்றிய கண்ணுக்கு நஞ்சு பூசிய அம்பு உவமையாயிற்று.

26. புத்திரர்வே றில்லாது புரிவரிய
தவம்புரிந்து பூழி வேந்தன்
சித்திரவா கனன்பயந்த சித்திராங்
கதையென்னுஞ் செஞ்சொல் வஞ்சி
பத்திரமு நறுமலரு மவயவம்போல்
விளக்குவன பலவுங் கொய்து
மித்திரமா மகளிருடன் விரவியொரு
செய்குன்றின் மேவி னாளே.

[புத்திரர் வேறு இல்லாது புரிவு அரிய தவம் புரிந்து பூழி வேந்தன் சித்திரவாகனன் பயந்த சித்திராங்கதை என்னும் செம் சொல் வஞ்சி, பத்திரமும் நறுமலரும் அவயவம் போல் விளங்கு வன பலவும் கொய்து, மித்திரம் மா மகளிருடன் விரவி ஒரு செய் குன்றின் மேவினாளே.]

**விளக்கம்:**—பூழி வேந்தன் - பாண்டியகுல அரசன்; (பூழியர்-பாண்டியர்). அவயவம்போல் விளங்குவன பத்திரமும் நறுமலரும் பலவும் - தனது அவயங்களைப்போல் விளங்குவனவான தளிர் களும் மலர்களுமாகிய பலவற்றையும். மாமித்திரம் மகளிர் - நட்பின் சிறந்த தோழியர். மேவினாள் - போய்ச் சேர்ந்தாள்; (ஏ : அசை). செய்குன்று - செயற்கைக்குன்று.

27. முன்னுருவந் தனைமாற்றி முகில்வாகன்
திருமதலை மோகி யாகித்
தன்னுருவந் தனைக்கொண்டு சாமனிலுங்
காமனிலுந் தயங்கு மெய்யோன்
பொன்னுருவ மெனமலர்ந்து பொலிந்ததொரு
சண்பகத்தின் பூந்தண் ணீழன்
மின்னுருவ நுண்ணிடையாள் விழிகளிக்கும்
படிநின்றான் வீர ரேறே.

[முன் உருவம் தனை மாற்றி முகில் வாகன் திருமதலை மோகி ஆகி, தன் உருவம் தனை கொண்டு சாமனிலும் காமனி லும் தயங்கும் மெய்யோன், பொன் உருவம் என மலர்ந்து பொலிந்தது ஒரு சண்பகத்தின் பூ தண் நிழல் மின் உருவம் நுண் இடையாள் விழிகளுக்கும்படி நின்றான், வீரர் ஏறே.]

**விளக்கம் :**— முகில் வாகன் - இந்திரன். அவன் மதலையாகிய விசயன், மோகங்கொண்டு முன்னம் கொண்ட அந்தண வேஷத்தை அகற்றித் தனது க்ஷத்திரிய வடிவத்தை மேற் கொண்டு, சாமனிலும், அவனது தமையனான காமனிலும் அழ கில் மிக்கதாய் விளங்கும் வடிவத்தனாய், பொன்னின் வடிவம் போல் மலர்ந்து விளங்கும் சண்பக மரத்தின் அழகிய தண்ணிய நிழலில், மின்னின் வடிவம் போன்ற நுண்ணிய இடையை யுடை யவளான சித்திராங்கதை கண்களிக்கும்படி (அவள் முன் தோன்றி) நின்றான், என்பது பொருள்.

காமன் தம்பி சாமன். மோகம் - ஆசையால் வரும் மயக் கம்; அதையுடையவன் மோகி.

28. வண்டானந் திரிதடத்து வரிவண்டி
னினம்பாட மயில்க ளாடத்
தண்டார்மெய்க் கிளிக்கூட்டஞ் சான்றோர்க
ளுரைபயிற்றத் தமிழ்கண் மூன்றும்
கொண்டாடி யிளம்பூவைக் குழாந்தலைசாய்த்
துளமுருகுங் குன்றி னாங்கண்
கண்டாளக் குமாரனைத்தங் கொடிக்கயலைப்
புறங்காணுங் கண்ணி னாளே.

[வண்டானம் திரி தடத்து வரிவண்டின் இனம் பாட மயில்கள் ஆட, தண் தார் கிளி கூட்டம் சான்றோர்கள் உரை பயிற்ற, தமிழ்கள் மூன்றும் கொண்டாடி இளம் பூவை குழாம் தலை சாய்ந்து உளம் உருகும் குன்றின் ஆங்கண், கண்டாள் அ குமரனை தம் கொடி கயலை புறம் காணும் கண்ணினாளே ]

**விளக்கம் :**—வண்டானம் - நாரைகளில் ஒரு வகை தண் தார் கிளி - இனிய ஆரம்போன்ற கழுத்தை உடைய கிளி ('தண்' என்பது கண்ணுக்கு இனிய என்ற பொருளது). சான்றோர்கள் உரை - முத்தமிழ் வல்லுநரான சங்கப் புலவர்களின் கருத்துரை. பயிற்ற - பழகிச் சொல்ல. இளம் பூவை குழாம் தமிழ்கள் மூன்றும் கொண்டாடி தலை சாய்த்து உருகும் குன்று - இளம் நாகணவாய்ப்புட்கள், (கிளிகள் உரைத்த) மூவகைத் தமிழையும் கொண்டாடித் தலைசாய்த்து மனம் உருகி நிற்கும் குன்று. அங்கே கொடிக்கயலை வென்ற கண்ணினளான பாண்டியர் கன்னி விசயனைக் கண்டாள்.

தடம் - மலைப்புறம். வரிவண்டு - பாடும் வண்டு; புள்ளிகளை உடைய வண்டு. பாண்டியன் மீனக் கொடியனாதலால், "கொடிக் கயலைப் புறங்காணும் கண்ணாள்," எனப்பட்டது. கிளிகள் பெற்ற தமிழ்ச் செல்வம் தங்களுக்கு வாய்க்காமையின் பூவைகள், நாணின, என்க.

29. செந்திருவை யனையாளுந் திருமாலை
யனையானுஞ் சிந்தை யொன்றாய்
வந்திருவர் விலோசனமுந் தடையின்றி
யுறவாடி மகிழ்ச்சி கூர்ந்து

வெந்துருவ மிழந்தமதன் மீளவும்வந்
திரதியுடன் மேவு மாபோற்
கந்தருவ முறைமையினாற் கடவுளர்க்குங்
கிடையாத காமந் துய்த்தார்.

[செந்திருவை அனையாளும் திருமாலை அனையானும் சிந்தை ஒன்று ஆய்வந்து, இருவர் விலோசனமும் தடை இன்றி உறவு ஆடி மகிழ்ச்சி கூர்ந்து, வெந்து உருவம் இழந்த மதன் மீளவும் வந்து இரதியுடன் மேவுமாபோல் கந்தருவ முறைமை யினால் கடவுளர்க்கும் கிடையாத காமம் துய்த்தார்.]

**விளக்கம் :**—சிந்தை ஒன்று ஆய்வந்து - மனம் ஒன்றுபட்டு. விலோசனம்-கண். கந்தர்வ மணமுறையால் விசயனும் சித்திராங் கதையும், உருவம் வெந்தழிந்த மன்மதன் மீண்டும் வடிவம் பெற்று இரதியுடன் கூடியதுபோல், கூடி மகிழ்ந்தனர்,—என்க.

கடவுளர் - தேவர். அவர்கள் இன்ப நுகர்ச்சிக்குரியவர். அவர்களுக்குங் கிடைக்காத இன்பத்தை இல்விருவரும் அனுபவித் தனர், என்பதாகும்.

30. கூடியிரு வருமொருவ ரெனவிதயங்
கலந்ததற்பின் குறித்த தூநீர்
ஆடியவந் ததுந்தன்னை யருச்சுனனென்
பதுமிளமா னறியக் கூறி
நீடியதென் றையுறுவர் நீயினியே
கெனவுரைப்ப நெடுங்கண் ணாள்போய்ச்
சேடியருக் கஞ்ஞான்று நிகழ்ந் தவெலா
மகிழ்ந்துருகிச் செப்பி னாளே.

[கூடி இருவரும் ஒருவர் என இதயம் கலந்ததன் பின், குறித்த தூநீர் ஆடிய வந்ததும், தன்னை அர்ச்சுனன் என்பதும் இளமான் அறிய கூறி, 'நீடியது என்று ஐயுறுவர், நீ இனி ஏகு,' என உரைப்ப, நெடும் கண்ணாள்போய் சேடியருக்கு அஞ்ஞான்று நிகழ்ந்த எலாம் மகிழ்ந்து உருகி செப்பினாளே.]

**விளக்கம் :**—குறித்த - நியமிக்கப்பட்ட, தூநீர் ஆடிய வந்த தும் - தீர்த்தயாத்திரை செய்யத்தான் வந்ததும். நீடியது என்று ஐயுறுவர் - பொழுது நீட்டித்ததென்று உன் சேடியர் சந்தேகம்

கொள்வர். அவன் 'ஏகு' என்னலும், சென்ற நங்கை, அன்று நிகழ்த்தவெலாம் மகிழ்ந்து உருகித் தோழியர்க்குச் சொன்னாள், என்க,

நிகழ்ந்ததை நினைக்குந்தோறும் இன்பம் சுரப்பதால், மகிழ்ந்து உருகிச் சொன்னாள்,'' எனப்பட்டது.

31. கவுரியர்கோன் றிருமகளைக் கண்ணனையார்
கொண்டுபோய்க் கன்னி மாடத்(து)
அவிருமணிப் பரியங்கத் தையமளி
யேற்றியபி னனங்கன் போரால்
நவிருடைமா மயலுழந்து நயனங்கள்
பொருந்தாம னாணு றாமல்
தவிர்கெனவுந் தவிராமற் றன்விரகங்
கரையழிந்து தளர்ந்தாண் மன்னோ.

[கவுரியர் கோன் திருமகளை கண் அனையார் கொண்டுபோய் கன்னிமாடத்து அவிரும் மணி பரியங்கத்து ஐ அமளி ஏற்றியபின், அனங்கன் போரால் நவிர் உடை மா மயல் உழந்து நயனங்கள் பொருந்தாமல், நாண் உறாமல், தவிர்க எனவும் தவிராமல் தன் விரகம் கரை அழிந்து தளர்ந்தாள் மன்னோ.]

**விளக்கம் :**—கவுரியர் கோன் - (கௌரியர்.) பாண்டியர் மன்னன். அவிர் மணி பரியங்கம் - ஒளிவிடும் மணிகள் பதித்த கட்டில். ஐ அமளி - பஞ்சசயனம். அனங்கன் போரால் - காம வேதனையினால், நவிர் - அற்பம், குற்றம். தவிர் - ஒழி. விரகம்- பிரிவின் எழுந்த காமநோய். கரை அழிந்து தளர்ந்தாள். எல்லை கடந்து, அதாவது மிக, மிக வருந்தினாள். மன், ஓர் அசை,]

பஞ்சசயனம் : இலவம் பஞ்சு, செம் பஞ்சு, வெண் பஞ்சு, கம்பளம், அன்னத்தூவி, ஆயவற்றால் தனித்தனி அமைத்த ஐந்து வகை மெத்தை.

32. தங்கண்மலைச் சந்தனத்தைத் தழற்குழம்போ
விதுவென்னுந் தாபந் தோன்றத்
தங்கள்கடற் றண்முத்தைக் கண்முத்தா
னீறாக்குந் தக்கோ ராய்ந்த
தங்கடமிழ்க் குழலிசையைத் தன்செவிக்கு
விடமென்னுந் தபன னேகத்
தங்கள்குலக் கலைமதியைத் தபனனெனு
மென்பட்டா டனிப்பொ றாதாள்.

[தங்கள் மலை சந்தனத்தை தழல் குழம்போ இது என்னும் தாபம் தோன்ற, தங்கள் கடல் தண் முத்தை கண் முத்தால் நீறு ஆக்கும், தக்கோர் ஆய்ந்த தங்கள் தமிழ் குழல் இசையை தன் செவிக்கு விடம் என்னும், தபனன் ஏக, தங்கள் குலம் கலை மதியை தபனன் என்னும். என் பட்டாள் தனி பொறாதாள்.]

**விளக்கம் :**—(சேடியர் செய்த சீதளோபசாரத்தினால் அடங்காமல்) தாபம் தோன்ற - விரக வேதனை மிக, (சந்தனத்தைத் தழல் குழம்போ என்பாள்). கண் முத்து - கண்ணீர். (கண்ணீரின் வெம்மையால் முத்து நீறாகும், என்க.) தக்கோர் - சங்கப் புலவர். தமிழ்ப் பாட்டை இசைக்கும் புல்லாங்குழலின் ஓசையைத் தன் காதுக்கு விஷம் என்பாள். தபனன் -சூரியன். தபனன் ஏக—சூரியன் அஸ்தமித்தபின், (தோன்றிய) கலைமதி-பூர்ண சந்திரன். அதை அவள் சூரியன் என்பாள். தனி பொறாதாள் என் பட்டாள்; தனிமையைப் பொறுககமாட்டாதவளாய் என்ன பாடு பட்டாள்; அதாவது மிகத் தவித்தாள், என்றபடி.

பாண்டியர் சந்திரவமிசத்தினராதலால், 'தங்கள் குலக் கலைமதி' எனப்பட்டது.

33. அங்குயிர்போ லிருமருங்கு மாயமட
மகளீரிருந் தாற்ற வாற்றக்
கங்குலெனும் பெருங்கடலைக் கரை கண்டாள்
கடற்புறத்தே கதிருங் கண்டாள்
இங்கிவள்போய் மலர்க்காவின் எழில்விசயற்
கீடழிந்த வின்ன லெல்லாம்
சங்கெறியுந் தடம்பொருநைந் துறைவனுக்குச்
செவிலியராந் தாயர் சொன்னார்.

[அங்கு உயிர்போல் இரு மருங்கும் ஆயம் மடமகளிர் இருந்து ஆற்ற ஆற்ற, கங்குல் எனும் பெரும் கடலை கரை கண்டாள், கடல் புறத்தே கதிரும் கண்டாள் இங்கு இவள் போய் மலர் காவின் எழில் விசயற்கு ஈடு அழிந்த இன்னல் எல்லாம் சங்கு எறியும் தடம் பொருநை துறைவனுக்கு செவிலியர் ஆம் தாயர் சொன்னார்.]

**விளக்கம் :**—விரக நோய் உற்றாரிக்கு இரவு நீட்டித்தல் பற்றி, "கங்குலெனும் பெருங் கடலைக் கரை கண்டாள்." என்றார். கதிர்-சூரியன். இங்கு இவள் போய் கடல் புறத்தே கதிரும் கண்டாள்-கங்குலின் கரை கண்ட சித்திராங்கதை

கடலினிடத்தே போய் உதிக்கும் சூரியனையும் கண்டாள், (இங்கு: அசை). ஈடுஅழிந்த இன்னல்-வலிமை இழந்ததால் உண்டான துன்பம், அதாவது விரகம். பொருநைத் துறைவன்-பாண்டியர் கோன்; பொருநை - தாமிரபரணி.

சித்திராங்கதையின் நிலையோடு, மலர்க்காவினிடத்தே ஈடழிந்திருத்த அர்ச்சுனனது நிலையையும் செவிலியர் அரசனுக்குத் தெரிவித்தார்கள், என்க.

34. ஐந்தருவி னீழலின்வா ழரியுடனே
யோராரியா சனத்தில் வைகிப்
புந்தியுற வொருவருமுன் பூணாத
மணியாரம் பூண்ட கோமான்
அந்தவுரை செவிப்படலு மதிதூரம்
விழைவுடன்சென் றாடு தீர்த்தம்
வந்ததுநந் தவப்பயனென் றுட்கொண்டான்
மகோததியும் வணங்குந் தாளான்.

[ஐந்தருவின் நீழலின் வாழ் அரியுடனே ஓர் ஆசனத்தில் வைகி, புந்தி உற ஒருவரும் முன் பூணாதமணி ஆரம் பூண்ட கோமான், அந்த உரை செவிபடலும், அதி தூரம் விரைவுடன் சென்று, ஆடு தீர்த்தம் வந்தது நம் தவம் பயன் என்று உட்கொண்டான், மகா உததியும் வணங்கும் தாளான்.]

விளக்கம் ;—ஐந்தருவின்......பூண்ட கோமான், மகோததியும் வணங்குந்தாளான், அந்தவுரை......உட்கொண்டான், என்று அன்வயிக்க.

அரி - இந்திரன். புந்திஉற - மனம் மகிழ்ச்சி கொள்ள. மகோததி-(மகா - உததி) பெருங் கடல். அ உரை - செவிலியர் சொல்லிய அவ் வார்த்தை. அதிதூரம் விழைவுடன் சென்று ஆடு தீர்த்தம் வந்தது நம் தவப்பயன்- நெடுந்தூரம் விருப்பத்தோடு சென்று நீராடும் யாத்திரை கருதி (விசயன்) இங்கு வந்தது நம் தவப்பயனே. உட்கொண்டான்-எண்ணி மகிழ்ந்தான்.

நெடுந்தூரம் சென்று நீராடுதல் விசயனுக்கு ஏற்பட்டது, தமது தவப்பயனே, என்று பாண்டியன், மகிழ்ந்தான் என்க.

முருகக் கடவுளின் அமிசமான உக்ர குமார பாண்டியன் ஆண்டு வருகையில், தமிழ் நாட்டில் பன்னிரண்டு வருடங்கள் மழையில்லாமை ஏற்பட்டது. தமிழ்நாட்டு மூவேந்தரும்,

அகத்திய முனிவரின் அநுக்கிரகத்தால் ஆகாய மார்க்கமாகச் சென்று இந்திரலோகத்தை அடைந்தனர். இவர்களது வரவறிந்த இந்திரன், தன் ஆசனத்தருகே தாழ்வான மூன்று ஆசனங்களை அமைத்து வைத்தான். சேரனும் சோழனும் இந்திரன் காட்டிய ஆசனங்களில் அமர்ந்து, மழை பொழியும் வரம் பெற்றுத் தம் நாடு திரும்பினர். பாண்டியனோ, இந்திரனுடைய ஆசனத்தில் சமமாக அமர்ந்தான். பாண்டியனது செருக்கை அடக்க எண்ணிய இந்திரன், அணிந்தாரை வருத்தி மெலிவிக்கும் தன்மையதான ஒரு பாரம் மிகுந்த மாலையைக் கொடுக்க, அதனை அவன் ஒரு மலர்மாலை போல் தன் கழுத்தில் அணிந்து கொண்டான். அதுமுதல், அவன் ஆரந்தாங்கும் பாண்டியன் என்ற பெயர் பெற்றான், என்பது முன்னிரண்டு அடிகள் குறிக்கும் கதை.

உக்கிரகுமார பாண்டியன் பல அசுவமேதயாகங்கள் செய்தது கண்டு பொறாத இந்திரன், மதுரையை அழிக்கும்படி வருணனை ஏவினான். இரவில் கடல் பொங்கி மதுரையைச் சமீபித்த பொழுது, பாண்டியன், தனது தந்தையான சுந்திரபாண்டியனால் கொடுக்கப்பட்ட வேலை எறிந்து வருணனை வென்றடக்கினான். எனவே, **உததி வணங்கும் தாளன்** ஆயினான். உக்கிரகுமார பாண்டியனின் வரலாற்றை, சித்ரவாகனன் மேல் ஏற்றிக் கூறியது ஒருவகைக் கவிமரபு.

35. வழுதிதிரு மகள்கொடுத்த மையலினால்
வடிவமுந்தன் மனமும் வேறாப்
பொழுதுவிடி வளவுமதன் பூசலிலே
கருத்தழிந்து பூவாம் வாளி
உழுதகொடும் புண்வழியே யூசிநுழைந்
தெனத்தென்ற லூர வூர
விழிதுயிலா விசயனுமவ் விபுதருடன்
றுயிலுணர்ந்து விதியுஞ் செய்தான்.

[வழுதி திருமகள் கொடுத்த மையலினால் வடிவமும் தன் மனமும் வேறு ஆ(க) பொழுது விடிவு அளவும் மதன் பூசலிலே கருத்து அழிந்து, பூ ஆம் வாளி உழுத கொடும் புண் வழியே ஊசி நுழைந்து என தென்றல் ஊர ஊர, விழிதுயிலா விசயனும் அ விபுதருடன் துயில் உணர்ந்து விதியும் செய்தான்.]

**விளக்கம் :**—தன் வடிவமும் மனமும் வேறா - (அர்ச்சுனன்) தன் மெய்யும் மனமும் வேறுபட்டு. மதன் பூசல் - மன்மதன்

செய்யும் போர், (காம வேதனை). தென்றல் காற்று உட்புகுந்து வருத்த. விபுதர் - அந்தணர். துயில் உணர்ந்து - துயின்று கண் விழித்தான் போல் எழுந்து. காலைக் கடன்களைச் செய்தான்,- என்க.

வடிவம் வேறாதல் - மெய்யின் நிறம் சோபை இழத்தல். மனம் வேறாதல் - மனம் துன்பமுடையதாதல்.

36. பஞ்சவரி னடுப்பிறந் தோன் பஞ்ச வன்பே
ரவையெய்திப் பஞ்ச பாண
வஞ்சகன்செய் வஞ்சனையான் மதிமயங்கி
யிருந்துழியம் மதுரை வேந்தன்
சஞ்சரிக நறுமலர்ந்தார்த் தனஞ்செயனென்
றறிந்தெழுந்து தழீஇக்கொண் டாங்கண்
அஞ்சலினி யுனக்குரியள் யான்பயந்த
கடற்பிறவா வமுத மென்றான்.

[பஞ்சவரில் நடு பிறந்தோன் பஞ்சவன் பேர் அவை எய்தி, பஞ்ச பாண வஞ்சகன் செய் வஞ்சனையால் மதிமயங்கி இருந்த உழி, அ மதுரை வேந்தன், சஞ்சரிகம் நறுமலர்தார் தனஞ்செயன் என்று அறிந்து எழுந்து தழீஇக்கொண்டு, ஆங்கண், அஞ்சல் இனி உனக்கு உரியள் யான் பயந்த கடல் பிறவா அமுதம் என்றான்.]

**விளக்கம்** :—பஞ்சவரில் நடுப் பிறந்தோன் - விசயன். பஞ்சவன் - பாண்டியன், பஞ்சபாண வஞ்சகன் - மன்மதன். சஞ்சரிகம் - வண்டுகள்.

''அஞ்சல்'' என்றது, ''தனது உடன்பாடின்றி மகளை வசப் படுத்திக் கொண்டதற்கு அஞ்ச வேண்டா'' என்று கூறும் குறிப்பினது.

தாமரை, அசோகு, மா, முல்லை, நீலோற்பவம், என்ற மலர்கள், மன்மதனது பஞ்சபாணங்கள். கண்ணிற் படாமல் மறைந்து நின்று அம்புஎய்தலின், மன்மதன், வஞ்சன் எனப் பட்டான்.

37. கேண்மதியோர் மொழி முன்னங் கேண்மையினங்
குலத்தொருவன் கிரீசன் றன்னைத்
தாண்மலரான் புறப்பணிந்து தவம்புரிந்தான்
மகப்பொருட்டாற் றரித்த கொன்றை

நாண்மலரோன் வெளிநின்றந் நரபதிக்கு
நின்குலத்து நரேசர் யார்க்கும்
வாண்மருவுங் கரதலத்தோ யோரொருமா
மகவென்று வரமு மீந்தான்.

[கேள்மதி ஓர் மொழி; முன்னம் கேண்மையின் எம் குலத்து ஒருவன் கிரீசன் தன்னை தாள் மலர் அன்பு உற பணிந்து தவம் புரிந்தான் மகப் பொருட்டால், தரித்த கொன்றை நாள் மலரோன் வெளி நின்று அ நரபதிக்கு, நின் குலத்து நரேசர் யார்க்கும், வாள் மருவும் கரதலத்தோய் ஓர் ஒரு மா மகவு என்று வரமும் ஈந்தான்.]

**விளக்கம் :**—ஓர் மொழி கேள்மதி - நான் சொல்லும் ஒரு வார்த்தையைக் கேட்பாயாக. கேண்மையின் - உறவின் உரிமையினால்; (இக் குலத்தில் சிவபிரான் சுந்தர பாண்டியனாய்த் தோன்றிப் பெருமை செய்தமையின், 'கேண்மையின்' என்றார்.) கிரீசன் - சிவபெருமான். தாள் மலர் - தாள்களாகிய மலர், திருவடித் தாமரை. மகப்பொருட்டு - புத்திர பாக்கியத்திற்காக, (ஆல் : அசை) தரித்த கொன்றை நாள் மலரோன் - அன்றலர்ந்த கொன்றை மலர்களைத் தரித்தவனான சிவபெருமான். வெளி நின்று - வெளிப்பட்டுக் காட்சி கொடுத்து, நரபதி - அரசன். வாள்மருவும் கரதலத்தோய் என்று அழைத்து, நின்குலத்து நரேசர் (அரசர்) யாரிக்கும் ஓர் ஒரு மா மகவு (உண்டாகுக), என்று வரமும் ஈந்தான்.

வாள்மருவும் கரதலத்தோய் - (விளி) வாள் பொருந்திய கையை யுடையாய். புத்திரப் பேறு கருதித் தவம் புரிந்த பாண்டியனுக்குச் சிவபெருமான் காட்சி தந்ததோடு "உன்குலத்தோர் ஒவ்வொருவருக்கும் ஒரு சிறந்த மகவு உண்டாகக் கடவது," என்று வரமும் அளித்தான், என்பதாம்.

வரம் பெற்ற பாண்டியன் **பிரபஞ்சநன்** என்ற பெயரினன், என்று முதல் நூல் கூறும்.

38. அன்றுரைத்த வரத்தின்வழி யநேகரவ
னிபருமக வளித்தா ரொன்றொன்(று)
ஒன்றுரைக்க மறாதொழிநீ யொழிமகவும்
பெண்மகவா யுதித்த தென்பால்

நன்றுரைக்கு மொழியாயென் னவ்விபெறு
மகவெனக்கே நல்க வேண்டும்
என்றுரைத்தான் மன்றல்பெற விருந்தோனு
மாமனுரைக் கிசைந்தா னன்றே.

[அன்று உரைத்த வரத்தின் வழி அநேகர் அவனிபரும் மகவு அளித்தார் ஒன்று, ஒன்று; ஒன்று உரைக்க மறாதொழி நீ; ஒரு மகவும் பெண் மகவாய் உதித்தது என்பால், நன்று உரைக்கும் மொழியாய் என் நவ்வி பெறும் மகவு எனக்கே நல்கவேண்டும், என்று உரைத்தான், மன்றல் பெற இருந்தோனும் மாமன் உரைக்கும் மொழியாய், தான், மன்றல் பெற இருந்தோனும் மாமன் உரைக்கு இசைந்தான் அன்றே.]

**விளக்கம்:—** அவனிபர் (அவநிபர்) அநேகரும், என்று இயைக்க. ஒன்று உரைக்க மறாதொழி நீ-(நான்) ஒரு வேண்டுகோளைக் கூற அதை மறுக்காமல் இருப்பாயாக. நன்று உரைக்கும் மொழியாய்- நன்மை பயக்கவல்ல சொற்களையே பேசுபவனே. நவ்வி-மான் போன்ற சித்திராங்கதை. மன்றல் பெற இருந்தோனும் மாமன் உரைக்கு இசைந்தான் அன்றே.

என் மகளுக்குப் பிறக்கும் மகவை எனக்குச் சந்ததி விருத்தியின் பொருட்டுத் தருவாயாக, என்று பாண்டின் வேண்டப் பார்த்தனும் சம்மதித்தான், என்பதாம். பூமியைக் காத்தலைச் செய்பவர், அவநிபர்.

39. தெண்டிரைகை தொழுகழலோன் றிருமகட்கு
வதுவையெனச் சேர சோழர்
எண்டிசையின் முடிவேந்த ரெல்லோரு
முனிகணத்தோ ரெவரு மீண்ட
அண்டர்பிரா னளித்தசிலை யாண்டகையை
யலங்கார மனைத்துஞ் செய்து
மண்டபமொன் றினிலறுகால் வண்ணமணிப்
பலகையின்மேல் வைத்தா ரன்றே.

[தெள் திரை கைதொழு கழலோன் திருமகட்கு வதுவை என சேர சோழர், எண்திசையின் முடி வேந்தர் எல்லோரும், முனிகணத்தோர் எவரும் ஈண்ட, அண்டர்பிரான் அளித்த சிலை ஆண் தகையை அலங்காரம் அனைத்தும் செய்து,

மண்டம் ஒன்றினில் அறுகால் வண்ணமணி பலகையின் மேல் வைத்தார் அன்றே.]

**விளக்கம்:—** தெள்திரை கைதொழு சழலோன்-பாண்டியன். வதுவை-திருமணம். ஈண்ட- நெருங்கிக்கூட. அண்டர்பிரான்-இந்திரன். அளித்த சிலை ஆண்தகை-அளித்த வில் வீரனான விசயன், அறுகால் பலகை-ஆறு கால்களை உடைய பலகை, அன்றே: அசை. வைத்தார் என்ற வினைக்குப் புரோகிதர் முதலியோர், என்று எழுவாய் வருவிக்க, தெண்டிரை-(அன் மொழித் தொகை) கடல்.

40. கோமடந்தை களிகூரப் புகழ்மடந்தை
களிகூரக் கொற்ற விந்தை
மாமடந்தை களிகூர மணவினையொப்
பனைக்குரிய மடந்தை மார்கள்
பூமடந்தை யனையாளைப் பூட்டியவெண்
தரளமணிப் பூண்களாலே
நாமடந்தை நிகராக்கி நாயகன்றன்
வலப்பாக நண்ணு வித்தார்.

[கோ மடந்தை களிகூர, புகழ் மடந்தை களிகூர, கொற்றம் விந்தை மாமடந்தை களிகூர, மணம் வினைக்கு உரிய மடந்தை மார்கள், பூ மடந்தை அனையாளை பூட்டிய வெள்தரளம் மணி பூண்களாலே நா மடந்தை நிகர் ஆக்கி, நாயகன் தன் வலம் பாகம் நண்ணுவித்தார்.]

**விளக்கம்:—**கோ மடந்தை- ராஜலக்ஷ்மி. புகழ் மடந்தை கீர்த்தி லக்ஷ்மி. கொற்றம் விந்தை மா மடந்தை-வீரலக்ஷ்மி யாகிய சிறந்த மடந்தை. ஒப்பனைக்கு உரியார்- வண்ணப் பெண்கள். நா மடந்தை- சரஸ்வதி. வலம் பாகம் நண்ணு வித்தார்-வலது பக்கத்தில் இருக்க வைத்தார்.

வெண்ணிற ஆடை ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட மையின், பாண்டியன் மகள் நா மடந்தையை நிகர்த் தாளாயினள்.

உத்தம இலக்கணம் வாய்ந்த பெண்ணை மணப்பவனுக்கு, அவனது அரசு, வெற்றி. புகழ் ஆகிய நலங்கள் சிறக்கும் என்பர். அத்தகையளான பெண்ணை அர்ச்சுனன் மணப்பதால், கோ மடந்தையும், புகழ் மடந்தையும், கொற்ற விந்தையும் களிப்பு மிக்காராயினர், என்க.

41. இந்திரனுஞ் சசியுமென விறையோனு
முமையுமென வெம்பி ரானும்
செந்திருவு மெனக்காம தேவுமிர
தியுமெனவெஞ் சிலைவ லோனும்
சந்தணிபூண் முலையாளும் சதுர்மறையோர்
சடங்கி யற்றத் தழல்சான் றாகத்
துந்துபியின் குலமுழங்கச் சுரிசங்கின்
குழாந்தழங்கத் துலங்க வேட்டார்.

[இந்திரனும் சசியும் என, இறையோனும் உமையும் என, எம்பிரானும் செந்திருவும் என, காமதேவும் இரதியும் என, வெம் சிலைவலோனும் சந்து அணி பூண் முலையாளும் சதுர் மறையோர் சடங்கு இயற்ற, தழல் சான்று, ஆக, துந்துபியின் குலம் முழங்க, சுரிசங்கின் குழாம் தழங்க துலங்க வேட்டார்.]

**விளக்கம் :**—தழல் - அக்கினி. துந்துபி - பேரிகை சுரிசங்கு - வளைவுடைய சங்குகள். தழங்க - ஒலிக்க. துலங்க வேட்டார் - சிறப்பாக மணந்து கொண்டனர். இந்திரனது மனைவி சசி. அர்ச்சுனனும் சித்திராங்கதையும் இணைபிரியாத் தம்பதியராயினர், என்றபடி.

**எண்சீர் ஆசிரிய விருத்தம்**

42. நோக்கியகண் ணிமையாம னோக்கி நோக்கி
நுண்ணியமென் புலவியிலே நொந்து நொந்து
தேக்கியசெங் கனியிதழா ரமுதுண்டு டுண்டு
சேர்த்தியகை நெகிழாமற் சேர்ந்து சேர்ந்து
தூக்கியபொற் றுலையினநு ராக மேன்மேற்
றொடரவரும் பெரும்போகந் துய்த்தார்
முன்னைப்
பாக்கியம்வந் திருவருக்கும் பலித்த தல்லாற்
பாயனலத் திப்படியார் பயன்பெற் றாரே.

[நோக்கிய கண் இமையால் நோக்கி நோக்கி, நுண்ணிய மெல் புலவியிலே நொந்து நொந்து, தேக்கிய செம் கனி இதழ் ஆர் அமுது உண்டு உண்டு, சேர்த்திய கை நெகிழாமல் சேர்ந்து சேர்ந்து, தூக்கிய பொன் துலையின் அநுராகம் மேல் மேல் தொடர, அரும் பெரும் போகம் துய்த்தார்; முன்னை பாக்கியம்

வந்து இருவருக்கும் பலித்தது அல்லால், பாயல் நலத்து இப்படி யார் பயன் பெற்றாரே.]

விளக்கம் :—சேர்த்திய கை நெகிழாமல் சேர்ந்து சேர்ந்து - கட்டியணைத்த கை நெகிழாமல் இறுகத் தழுவிக்கொண்டு. பொன் தூக்கிய துலையின் - பொன்னை நிறுக்கும் தராசுபோல், அதாவது சமமாக. அநுராகம் - வேட்கை. மேல் மேல் தொடர - மேலும் மேலும் மிகுந்து வளர. அரும் பெரும் போகம் துய்த்தார் - அரிய பெரிய போகத்தை ஒத்து அனுபவித்தார்கள். முன்னைப் பாக்கியம்... இப்படி யார் பெற்றார் - முன் செய்த நல்வினை இருவருக்கும் வந்து பலித்தது அல்லாமல், இப்படிச் சயன சுகத்தை வேறு யார் அனுபவித்தார்; முன்வினைப்பயன் அல்லாக்கால் இத்தன்மையதான சயன சுகம் வாய்க்காது, என்றபடி.

அன்பின் மிகுதியால் குற்றமில்லாக் காலத்திலும் ஒன்றைக் கற்பித்துக்கொண்டு புலத்தல் பற்றி 'நுண்ணிய புலவி' என்றும், இன்பம் செய்தற்கு வேண்டிய அளவோடு புலவி நின்றமையின் 'மென் புலவி' என்றும் கூறினாராயிற்று.

43\. பன்னாளி னெடும்போகம் பயின்ற பின்னர்ப்
பப்புருவா கனனென்னும் பைதல் திங்கள்
அன்னானை யவள்பயந்தாள் பயந்த போதே
யம்மகவை யுவகையுட னவனு மீந்தான்
தென்னாவென் றளிமுரல வேம்பிற் றண்டார்த்
தேம்பரிசில் வழங்குபுயத் தென்னர் கோவும்
நின்னாலென் மரபுநிலைபெற்ற தென்று
நேயமுடன் கவர்ந்துதுயர் நீங்கி னானே.

[பல் நாளில் நெடும் போகம் பயின்ற பின்னர், பப்புருவாகனன் என்னும் பைதல் திங்கள் அன்னானை பயந்தாள்; பயந்த போதே அ மகவை உவகையுடன் அவனும் ஈந்தான்; தென்னா என்று அளி முரல வேம்பின் தண் தார் தேம் பரிசில் வழங்கு புயம் தென்னர் கோவும், 'நின்னால் என் மரபு நிலை பெற்றது,' என்று நேயமுடன் கவர்ந்து துயர் நீங்கினானே.]

விளக்கம் :—பைதல் திங்கள் - இளம் பிறைச்சந்திரன் (போன்ற மகவு.) 'தென்னா' என்று வண்டுகள் ஒலிக்க, அவற்றிற்குத் தனது வேம்பின் தண்ணிய தேனைப் பரிசிலாய் வழங்கும் கைகளையுடைய தென்னவர்கோன், என்பது மூன்றாமடியின்

பொருள். 'உன்னால் எனது வம்சம் நிலைபெற்றது' என்று கூறி அன்புடன் (அம் மகவை) பெற்றுத் துயரம் நீங்கினவனானான்,— என்ற பொருளது ஈற்றடி.

தென்னா! என்று பாடிக்கொண்டுவரும் பாணர்க்கு வேண்டிய வேண்டளவு பரிசிலாய் வாரி வழங்கும் பாண்டியரின் இயல் பின்படி, 'தென்னா' என்று முரலும் அறிவிற் குறைந்த வண்டு கட்கும், தன்னைச் சார்ந்தவிடத்துப் பரிசில் கொடுக்கும் வள்ளல்,—என்ற கருத்தது மூன்றாமடி. மற்றவர்க்குரியதைத் தனதாகப் பெற்றுக் கொண்டமையின், அதாவது விசயனுக்குரிய மகனைத் தனதாகக் கொண்டமையின், 'கவர்ந்து' எனப்பட்டது. தென்னா - தென்னனே; (தென்னன், என்பது ஈறு திரிந்தும் ஈற்றயல் நீண்டும் 'தென்னா' என நின்றது - விளி).

44. பார்த்தனருச் சுனன்கரியோன் விசயன்பாக
சாதனிசவ் வியசாசி பற்குனன்பார்
ஏத்துதனஞ் சயன்கிரீடி சுவேத வாக
னெனுநாமம் படைத்தபிரான் யாழோ ரின்பம்
வாய்த்தவித ழமுதமொழிப் பேதை தாதை
மனையிருக்கத் திருவழுதி வளநாட் டுள்ள
தீர்த்தமுழு வதுமாடி யன்பாற் றென்பாற்
றிருமலையும் கைதொழுது சிந்தித் தானே.

[பார்த்தன், அருச்சுனன். கரியோன், விசயன் பாகசாதனி, சவ்வியசாசி, பற்குனன் (பல்குநன்), பார் ஏத்தும் தனஞ்சயன், கிரீடி, சுவேதவாகன் எனும் நாமம் படைத்த பிரான், யாழோர் இன்பம் வாய்த்த இதழ் அமுதமொழி பேதை தாதை மனை இருக்க, திருவழுதி வளநாடு உள்ள தீர்த்தம் முழுவதும் ஆடி, அன்பால் தென்பால் திருமலையும் கை தொழுது சிந்தித்தானே.]

**விளக்கம்:—** பார்த்தன் முதல் சுவேதவாகன் ஈறாகவுள்ள பத்துத் திருநாமங்களையுடைய பாண்டவன். பிரான்- தலைவன், உயர்ந்தோன். யாழோர் இன்பம் வாய்த்த-காந்தர்வ விவாகம் சித்திக்கப்பெற்ற. தென்பால் திருமலை-அழகர்மலை. சிந்தித்தான்-தியானித்தான்.

பாகசாதனன்- (பாகசாஸநன்) இந்திரன்; அவன் மகன் **பாகசாதனி** (பாகசாஸநி), வலக்கையோடு இடக்கையினாலும் சரம் செலுத்தும் திறமைபற்றி அவன் **சவ்வியசாசி** (ஸவ்யஸாசீ) என்ற பெயர் பெற்றான். இந்திரனால் முடி சூடப்பட்டமையின்

கிரீடி. அக்கினிதேவன் தந்த வெண்ணிறக் குதிரைகள் பூட்டிய தேரையுடைமையின், சுவேதவாகன் (சுவேதவாஹன்). யாழோர் இன்பம் வாய்த்த அமுத மொழிப் பேதை- கந்தர்வமணம் வாய்க்கப்பெற்ற அமுதம் போன்ற சொல்லையுடைய சித்ராங்கதை. அவளைக் கூடலில் தந்தையோடு இருக்கச் செய்து, அழகர்மலை சென்று இறைவனைத் தொழுதான், என்பதாம்.

### சேது தரிசனம்

45. கன்றியவெங் கரன்முதலோர் களத்தில் வீழக்
கவிகுலநா யகனிதயங் கலங்கி வீழ
ஒன்றுபட மரமேழு முததி யேழு
மூடுருவச் சரந்தொடுத்த வொருவில் வீரன்
துன்றியெழு பதுவெள்ளங் குரங்கின் சேனை
சூழ்போத வாய்த்ததிரு துணைவ னோடும்
சென்றவழி யின்றளவுந் துளவ நாறுஞ்
சேதுதரி சனஞ்செய்தான் றிறவல் லோனே.

[கன்றிய வெம் கரன் முதலோர் களத்தில் வீழ, கவிகுல நாயகன் இதயம் கலங்கி வீழ, ஒன்றுபட மரம் ஏழும் உததி ஏழும் ஊடுருவ சரம் தொடுத்த ஒரு வில் வீரன், துன்றி எழுபது வெள்ளம் குரங்கின் சேனை சூழ்போத, வாய்த்த திரு துணைவனோடும் சென்ற வழி இன்று அளவும் துளவம் நாறும் சேது தரிசனம் செய்தான் திறல் வல்லோனே.]

**விளக்கம்:—** கன்றிய - கோபத்தால் கன்றிய. கரன்- இராவணனுக்குத் தம்பி முறைமையுடைய அரக்கன். கவிகுல நாயகன்-வாலி. மரம் ஏழு-இராமனுக்கு வாலியைக் கொல்லும் திறன் உண்டோ என்று சங்கித்த சுக்ரீவனைத் தெருட்டும் பொருட்டு அழித்த மராமரம் ஏழு. உததி-கடல். தனது வேண்டுகோளை மதியாத சமுத்திர ராசனைத் தடியச் சரந் தொடுத்தான்,—என்பது கதை. ஒரு வில் வீரன்- இராமன். சூழ் போத-சூழ்ந்துவர வாய்த்த திருத் துணைவன் இலக்குவன். இராமன் நடந்து சென்ற வழி இன்றளவும் திருத்துழாய் மணக்கும் செவ்வியதான சேதுவைப் போர்த்திறல் வல்லோனான விசயன் கண்டான், என்பது ஈற்றடியின் பொருள். திருமாலுக்கு உரியது திருத்துழாய். சேது- வானரங்களைக்கொண்டு இராமன் கட்டுவித்த அணை.

46. வன்றிரைவெங் களிற்றினங்க ளிரண்டு பாலு
மலையாம லிடுங்கணைய மரனே போலும்
தன்றலைக ளமிழாம லெடுப்பான் மேருத்
தாழ்கடலி னீட்டியதோர் தடக்கை போலும்
அன்றியிரு பூதலமு மிருதட் டாக
வகத்தியன்வாழ் குன்றினையு மணிமுக்
கோணக்
குன்றினையுஞ் சீர்தூக்கி நிறுப்ப தாகக்
கோகநத னமைத்ததுலைக் கோலும் போலும்.

[வல் திரை வெம் களிறு இனங்கள் இரண்டு பாலும் மலையாமல் இடும் கணையமரனே போலும், தன் தலைகள் அமிழாமல் எடுப்பான் மேரு தாழ் கடலில் நீட்டியது ஓர் தடம் கை போலும், அன்றி, இரு பூதலமும் இரு தட்டு ஆக அகத்தியன் வாழ் குன்றினையும் அணி முக்கோணம் குன்றினையும் சீர் தூக்கி நிறுப்பது ஆக கோகனதன் அமைத்த துலைக்கோலும் போலும்.]

**விளக்கம்:—** வல்திரை-வலிய அலைகள். அலைகள் இரு பக்கத்திலும் மோதும்படி இடையே அமைந்துளது சேது. இரு பக்கத்திலும் மோதும் அலைகள் இரு யானைகள். அவ்வியானைகளை மலையாதபடி தடுக்க அமைந்த கணையமரம் ஒக்கும் சேது. (கணைய மரம்-யானைக்கம்பம், வளைதடி.)

வாயுதேவனுக்கும் மேருமலைக்கும் பலப்பரீட்சை நடந்த காலத்து, அவன் மேருவின் மூன்று சிகரங்களைப் பறித்துக் கடலில் தள்ளினான் என்றும், அச்சிகரங்களே இலங்காபுரியின் இருப்பிடமான திரிகூடம் என்றும் சொல்வர். வாயுவினால் பறிக்கப்பெற்ற சிகரங்களை நீரில் அமிழாமல் காக்க மேரு நீட்டிய தடக்கையை ஒக்கும் சேது.

அன்றியும்-இவை அல்லாமலும். மூன்றாவதாகப் புலவர் சேதுவை ஒரு துலாக்கோலை ஒத்ததாகக் கூறுகின்றார். ஜம்பூ துவீபமும், இலங்கையும் துலாக்கோலின் இரு தட்டுக்கள். இத் தட்டுக்களில் அகத்திய முனிவனது வாழிடமான பொதிய மலையையும், இலங்கைத் தீவிலுள்ள சிவக்ஷேத்திரமான திரிகோண மலையையும் இட்டு, எது கனம் மிக்கது என்று காணப் பிரமன் ஆக்கிய துலாக்கோலையும் ஒக்கும் சேது என்கின்றார். கணைய மரத்தையும், மேருவின் தடக்கையையும், துலாக்கோலையும் ஒக்கும் சேது, என்ற வருணனை தற்குறிப்பேற்ற அணியாகும்.

அணி முக்கோணக் குன்று-அழகிய திரிகோண மலை. கோகனதம் - (கோகநதம்) தாமரை; கோகநதன் - தாமரையை வாழிடமாகக்கொண்ட பிரும்மா.

திரிகோண மலையைத் **திரிகோணாசலம்** என்றும் அழைப்பர். சிவபெருமானோடு ஒத்த மகிமையன் அகத்தியன், ஆதலால் அவன் இருக்கும் பொதியமும், சிவபிரானது வாழிடமான திரிகோணமும் சீர்தூக்கிப் பார்ப்பதற்கு ஏற்றவையாயின. என்க.

47. **அண்டர்த மகங்கையினும் வரனுண் டென்றன்**
**றம்பையரோ டவனியில்வந் தாடுங் கன்னித்**
**தண்டுறையுந் தண்பொருநைப் பாவ நாசத்**
**தடந்துறையும் படிந்துநதித் தடமே போந்து**
**பண்டுமழுப் படையோனம் மழுவாற் கொண்ட**
**பாக்கியபூ மியுஞ்சேரன் பதிகள் யாவும்**
**கண்டுமனங் களிகூரச் சென்று மேலைக்**
**கடல்கண்டா னுரகதலங் கண்டு மீண்டான்.**

[அண்டர் தம கங்கையினும் வரன் உண்டு என்று அரம்பைய ரோடு அவனியில் வந்து ஆடும் கன்னி தண் துறையும், தண் பொருநை பாவநாசம் தடம் துறையும் படிந்து, நதி தடமே போந்து பண்டு மழு படையோன் அ மழுவால் கொண்ட பாக்கியம் பூமியும், சேரன் பதிகள் யாவும் கண்டு, மனம் களிகூர சென்று மேலை கடல் கண்டான், உரக தலம் கண்டு மீண்டான்.]

**விளக்கம்:**—அண்டர் - தேவர். வரன்-சிறப்பு, மேன்மை கன்னி தண் துறை - (ஆகாச கங்கையினும் சிறந்ததென்று அண்டர் அரம்பையருடன் அவனி வந்து ஆடும்) கன்னியாகுமரி என்னும் நதி. நதித்தடமே சென்று - நதியின் கரைவழியே சென்று. முன்னொரு காலத்தில் மழுப் படையினனான பரசுராமன், தனது படையால் கவர்ந்து கொண்ட பரசுராம க்ஷேத்திரம் என்ற சிறந்த தலத்தையும், சேரனது நாட்டிலுள்ள புண்ணியத் தலங்கள் எல்லாவற்றையும்,—என்பது மூன்றாமடியின் பொருள். உரக தலம் கண்டு மீண்டான் - நாகலோகத்தைக் கண்டு திரும்பியவனான அர்ச்சுனன்.

48. **அந்தநெடுந் திசைப்புனல்க ளாடு நாளி**
**லைந்துதடத் தரம்பையரோ ரைவர் சேர**
**இந்திரன்வெஞ் சாபத்தா லிடங்கராகி**
**யிடருழந்தோர் பழையவடி வெய்த நல்கிச்**

சிந்துதிரை நதிபலவுஞ் சென்று தோய்ந்து
திங்களுட னரவுறவு செய்யும் வேணிக்
கொந்தவிழு மலரிதழித் தொடையோன் வைகுங்
கொடிமதில்சூழ் கோகன்னங் குறுகி னானே.

[அந்த நெடும் திசை புனல்கள் ஆடும் நாளில் ஐந்து தடத்து அரம்பையர் ஓர் ஐவர் சேர, இந்திரன் வெம் சாபத்தால் இடங்கர் ஆகி இடர் உழந்தோர் பழைய வடிவு எய்த நல்கி, சிந்து திரை நதி பலவும் சென்று தோய்ந்து, திங்களுடன் அரவு உறவு செய்யும் வேணி கொந்து அவிழும் மலர் இதழி தொடையோன் வைகும் கொடி மதில் சூழ் கோகன்னம் குறுகினானே.]

**விளக்கம்:**—முனி சாபத்தால் முதலைகளாய் ஐந்து தடங்களில் இருந்து வருந்திய தேவமாதரின் சாபத்தை அர்ச்சுனன் நீக்கிப்பின், கோகர்ணம் என்னும் சிவஸ்தலம் அடைந்ததைக் கூறும் இச் செய்யுள்.

தடம் - தடாகம். அரம்பையர் ஓர் ஐவர் - ஐந்து தேவ மாதர். சேர - ஒருசேர. (இந்திரன் - தலைவன்). இங்கே முனிவர் தலைவனான முனீந்திரன். இடங்கர் - முதலை. சிந்து திரை நதி - அலைகள் நீரைக் கரைகளில் சிந்துகின்ற நதி. திங்களுடன் அரவு உறவு செய்யும் வேணி - சந்திரனுடன் பாம்பு நட்புடன் வாழும் (சிவனது) சடைமுடி. கொந்து - கொத்து. கொடி மதில் சூழ் கோகன்னம் - கொடி தாங்கிய மதிலால் சூழப் பெற்ற திருக் கோகர்ணம் என்னும் சிவ க்ஷேத்திரம். குறுகினான் - போய்ச் சேர்ந்தான்.

மேற்குத் திக்கிலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் அர்ச்சுனன், நீராடி வருகையில், ஐந்து தீர்த்தங்களில் ஐந்து முதலைகள் இருந்து உயிர்களுக்குத் துன்பம் செய்து வருகின்றன என்று கேள்வியுறவே, அவன், அம் முதலைகளைத் தன் வலிமையால் கரையேற்றினான். உடனே, அம் முதலைகள் தேவ மாதர்களாய் மாறின. இது கண்டு வியந்த வீரனுக்குக் குபேரனுடன் நெருங்கிய நட்புடைய **வர்க்கை** என்பாள் வரலாறு கூறலானாள்:—

"நான் என் தோழியர் நால்வருடன் இத் திக்கில் சஞ்சாரம் செய்கையில், இளமையும் அழகும் வாய்ந்த முனிவன் ஒருவன் தவம் செய்து கொண்டிருந்தான். நாங்கள் எமது ஆடல் பாடல்களால் அவனது தவத்திற்கு இடையூறு செய்ய முயன்றோம்.

கண் விழித்த அம் முனிபுங்கவன் எங்களை முதலைகளாகும்படி சபித்தான். எங்கள் பிழை பொறுத்தருளுமாறு நாங்கள் அவனை வேண்டவே, 'நூறு வருடம் சென்ற பின் உத்தமன் ஒருவன் வந்து உங்களைக் கரை ஏற்றுவான். அப்பொழுது இச்சாப வடிவம் ஒழியும்,' என்று கூறினான். இதுவே, எங்கள் வரலாறு.'

இவ் வரலாற்றின் விரிவை முதல் நூலில் காண்க. இதன்பின், அர்ச்சுனன் சந்நியாசி வேடத்தில் துவாரகையை அடைகின்றான்.

49. ஆகன்ன முறச்செம்பொன் வரைவில் வாங்கி
யவுணர்புறங் கட்டழித்தோ னடியில் வீழ்ந்து
கோகன்ன வளம்பதியிற் றன்பின் வந்த
குலமுனிவர் தமையிருத்திக் கோட்டுக் கோட்டு
நாகன்னப் பெடையுடனே யாடுங் கஞ்ச
நறைவாவி வண்டுவரை நண்ணி யாங்கண்
பாகன்ன மொழிக்கனிவாய் முத்த மூரற்
பாவைநலம் பெறமுக்கோற் பகவ னானான்.

[ஆகன்னம் உற செம்பொன் வரைவில் வாங்கி அவுணர் புறம் கட்டு அழித்தோன் அடியில் வீழ்ந்து, கோகன்னம் வளம் பதியில் தன்பின் வந்த குலம் முனிவர் தமை இருத்தி, கோடு கோடு நாகு, அன்னம் பெடையுடனே ஆடும் கஞ்சம் நறை வாவி வள் துவரை நண்ணி, ஆங்கண் பாகு அன்ன மொழி கனிவாய் முத்தம் மூரல் பாவை நலம் பெற, முக்கோல் பகவன் ஆனான்.]

விளக்கம் :—ஆகன்னம் - (ஆகர்ணம்) காது. உற - (காதில்) பொருந்த. பொன் வரை வில் வாங்கி - மேரு மலையாகிய வில்லை வளைத்து. அவுணர் புறம் கட்டு அழித்தோன் - அசுரர்களின் முப்புரம் முற்றும் அழியுமாறு செய்தவனான சிவ பெருமான். (கோகர்ணத்தில் தன்னோடு வந்த முனிவர்களை இருக்க செய்து) கோடு கோடு நாகு - நீர்த் துறைகளில் உள்ள சங்கின் பெடைகள் (பெண் சங்குகள்). (அன்னப் பெடைகளுடன் ஆடி மகிழும்) கஞ்சம் நறை வாவி வள் துவரை - தாமரைகளின் மணத்தை உடைய தடாகங்கள் பொருந்திய வளம் செறிந்த துவாரகை. பாகு அன்ன மொழி கனிவாய் முத்த மூரல்பாவை - பாகுபோன்ற இனிய சொற்களையும், கொவ்வைப்பழம் போன்ற சிவந்த வாயையும், முத்தையொத்த பற்களையும் உடைய பதுமை போன்ற சுபத்திரை. நலம்பெற - அவளை மணந்து

அனுபவிக்க. முக்கோல் பகவன் ஆனான் - திரிதண்டந் தரித்த சந்நியாசியாக வேடம் மாறினான். கோடு - நீர்த்துறை ,கோடு நாகு - பெண்சங்கு.

கோகர்ணத்து இறைவன் பெயர், மகாபலேச்வரர்; அம்பிகையின் பெயர், பெரியநாயகி.

50. வெங்கதிர்போய்க் குடதிசையில் வீழ்ந்த பின்னர்
வீழாமன் மாலையின்வாய் மீண்டு மந்தச்
செங்கதிர்வந் தெழுந்ததென மீது போர்த்த
செய்யவாடை யுந்தானுந் தீர்த்த வாரிச்
சங்கதிரு மணிவீதி நகரி சூழ்ந்த
தடஞ்சார லிரைவதக சைல நண்ணிப்
பொங்க திர்பைம் புயலெழுந்து பொழியுங் கங்குற்
போயொருநீள் வடதருவின் பொதும்பர்
சேர்ந்தான்.

[வெம் கதிர் போய் குடதிசையில் வீழ்ந்த பின்னர், வீழாமல் மாலையின் வாய் மீண்டும் அந்த செங்கதிர் வந்து எழுந்தது என, மீது போர்த்த செய்ய ஆடையும் தானும், தீர்த்தம் வாரி, சங்கு அதிரும் அணி வீதி நகரி சூழ்ந்த தடம் சாரல் இரைவதக சைலம் நண்ணி பொங்கு அதிர் பைம்புயல் எழுந்து பொழியும் கங்குல் போய் ஒரு நீள் வடதருவின் பொதும்பர் சேர்ந்தான்.]

**விளக்கம் :—**வெங்கதிர் - சூரியன். குடதிசை - மேற்குத் திசை. அந்தச் செங்கதிர் வீழாமல் (அஸ்தமிக்காமல்) மாலை வாய் மீண்டும் வந்து எழுந்தது (உதித்தது) என; அதாவது, குடதிசை அடைந்த சூரியன் மறையாமல் மீண்டும் வந்து உதித்தது என்று சொல்லும்படி. மீது போர்த்த செய்ய ஆடை - மேலே போர்த்திய காஷாய வஸ்திரம். தீர்த்தம் வாரி - புண்ணிய தீர்த்தமாகக் கருதப்படும் சமுத்திரம், சங்கு அதிரும் - (கடலில் உண்டாகும்) சங்குகள் ஒலிக்கும்; அதாவது, வெற்றிச் சங்கும், மங்கலச் சங்கும் முழங்கும், என்க. நகரி - துவாரகை நகர். பொங்கு அதிர் புயல் - பொங்கி எழுந்து அதிரும் மேகம். வடதரு - ஆலமரம். பொதும்பர் - மரச்செறிவு.

மழை பொழியும் இரவு ஒன்றில் விசயன் காஷாயதாரியாய்த் துவாரகையைச் சேர்ந்த இரைவதகம் என்னும் மலைச்சாரலிடத்தே, ஆலமரப் பொதும்பரை அடைந்தான், என்க. செந்நிறமுடைய அஸ்தமன சூரியன், விசயன் அணிந்த காஷாய ஆடைக்கு உவமையாயிற்று.

51. இந்திரற்குத் திருமதலை மன்ற லெண்ணி
யாதவர்கோன் வளம்பதியி லெய்தி னானென்று
அந்தரத்தை நீலத்தால் விதான மாக்கி
யண்டமுற விடிமுரச மார்ப்ப வார்ப்ப
வந்திரட்டை வரிசிலையாற் பஞ்ச வண்ண
மகரதோ ரண நாட்டி வயங்கு மின்னால்
முந்துறத்தீ பமுமெடுத்துத் தாரை முத்தான்
முழுப்பொரிசிந் தினகால முகில்க ளம்மா.

[இந்திரற்கு திரு மதலை மன்றல் எண்ணி யாதவர்கோன் வளம் பதியில் எய்தினான் என்று, அந்தரத்தை நீலத்தால் விதானம் ஆக்கி, அண்டம் உற இடி முரசம் ஆர்ப்ப ஆர்ப்ப வந்து, இரட்டை வரிசிலையால் பஞ்ச வண்ணம் மகர தோரணம் நாட்டி, வயங்கும் மின்னால் முந்துற தீபம் எடுத்து, தாரை முத்தால் முழு பொரி சிந்தின கால முகில்கள் அம்மா.]

**விளக்கம்:**—(அர்ச்சுனன் விவாகம் எண்ணி யாதவர் பதி எய்தினான் என்று கார்கால மேகங்கள்) அந்தரத்தை நீலத்தால் விதானம் ஆக்கி-ஆகாயத்தை நீலநிற மேகமாகிய பட்டினால் மேற்கட்டி அமைத்து. இடி முரசம் அண்டம் உற ஆர்ப்ப-இடிகளாகிய பேரிகைகள் அண்டமெங்கும் வியாபித்து ஒலிக்க. இரட்டை வரி சிலையால் பஞ்ச வண்ண மகர தோரணம் நாட்டி-இரட்டையான பலவித நிறங்களை உடைய நீண்ட வான வில்லினால் பஞ்சவர்ண மகர தோரணங்களை நாட்டி. முந்துற-முன்னதாக. மின்னல்-தீபம், தாரை முத்து- தாரையாகப் பொழியும் முத்துப் போன்ற மழைத்துளி. விவாகச் சடங்குகளில் ஒன்றான பொரி சிந்துதலைக் கால முகில் தனது தாரை முத்தால் செய்தன.

இது, உருவகத்தை அங்கமாகக் கொண்ட **தற்குறிப்பேற்றம்.** அம்மா: வியப்பிடைச் சொல்.

52. யாங்கருதி வருங்கரும முடிப்பா னெண்ணி
யிராமன்முதல் யதுகுலந்தோ ரிசையா ரென்று
பாங்குடனே தனக்குயிராந் துளப மௌலிப்
பரந்தாமன் றனைநினைத்தான் பார்த்த னாகப்
பூங்கமல மலரோடை யனையான் றானும்
பொன்னெடுந்தேர்ப் பாகனுமே யாகப் போந்து
நீங்கரிய நண்பினனாய் நெடுநா ணீங்கு
நேயத்தோ னினைவின்வழி நேர்ப் பட் டானே.

[யாம் கருதி வரும் கருமம் முடிப்பான் எண்ணில், இராமன் முதலிய யது குலத்தோர் இசையார் என்று, பாங்குடனே தனக்கு உயிர் ஆம் துளப மௌலி பரந்தாமன் தனை நினைத்தான் பார்த்தன் ஆக, பூங்கமல மலர் ஓடை யனையான் தானும் பொன் நெடும் தேர் பாகனுமே ஆக போந்து, நீங்கு அரிய நண்பினன் ஆய் நெடு நாள் நீங்கும் நேயத்தோன் நினைவின் வழி நேர்ப்பட்டானே.]

**விளக்கம்:**—(நாம் கருதி வந்த கருமம் முடிப்பதற்கு எண்ணினால், பலராமன் முதலியோர் இசையாரென்று நினைத்து, அதற்குத் துணை செய்யத் தக்கவனான) தனக்கு உயிராம் துளபமௌலி பரந்தாமன் தனைப் பார்த்தன் பாங்குடனே (தோழமையின் உரிமையினால்) நினைத்தானாக, (அவனும் வந்தான்.) பார்த்தன் ஆக, என்பதிலுள்ள ஆக என்பதை நினைத்தானாக, என்று கூட்டுக.

பூங்கமல மலரோடை அனையான்-அழகிய தாமரை மலர் ஓடை போன்றவன்; அதாவது, கண், கை, திருநாபி, திருவடிகளாகிய தாமரைகளை உடையவன். இடருற்றார் இடர் களைந்து அவர் மனங்குளிரச் செய்தலின், கண்ணன் ஓடையனையான் ஆனான்.

தானும் தேர்ப்பாகனுமேயாக-தானும், தேரைத் தானே செலுத்தும் சாரதியுமாய், அதாவது ஏகாந்தமாய். பிரிதற்கு அரிய நண்பனாய், ஆனால், பலநாள் தன்னைப் பிரிந்திருந்த அன்பினனாய விசயன் நினைத்தபடி வந்து அவன் எதிரே தோன்றினான்,—என்பது ஈற்றடியின் பொருள்.

ஒளியாலும், இடத்தாலும் மேம்பட்டவன் எனப் பொருளது பரந்தாமன் என்ற சொல்.

53. யதியாகி யவணிருந்த தோழன் றன்னை
யதுகுலநா யகன்பரிவோ டிறைஞ்ச வன்பால்
அதியான நெடுஞ்சுருதி யாசி கூறி
யாகமுறத் தழீஇமகிழ்வுற் றால நீழல்
மதியார்செஞ் சடைமுடியோ னென்ன வைகி
வந்தவாறு ருரைப்பநெடு மாலுங் கேட்டுத்
துதியாடிக் காலையிலே வருது மென்று
சொற்றிமைப்பின் மீளவும்போய்த் துவரை சேர்ந்தான்.

[யதி ஆகி அவண் இருந்த தோழன் தன்னை யதுகுலம் நாயகன் பரிவோடு இறைஞ்ச, அன்பால் அதி ஆன நெடும் சுருதி ஆசி கூறி, ஆகம் உற தழீஇ மகிழ்வுற்று, ஆலம் நீழல் மதி ஆர் செம் சடை முடியோன் என வைகி வந்த ஆறு உரைப்ப, நெடுமாலும் கேட்டு துதி சூடி காலையிலே வருதும் என்று சொற்று இமைப்பின் மீளவும் போய் துவரை சேர்ந்தான்.]

**விளக்கம்:**—யதி - சந்நியாசி. யதுகுல நாயகன் - கிருஷ்ணன். இறைஞ்ச - வணங்க. அதியான - மிகுதியான. நெடும் சுருதி ஆசி கூறி - அவனும் கண்ணனுக்குச் சிறந்த வேத வாக்கியங்களால் ஆசீர்வாதம் செய்து. ஆலம் நீழல் ஆலமரத்தின் நிழல். மதி ஆர் சடை முடியோன் - சிவபெருமான். வந்தவாறு சொல்ல-தான் இங்கே வந்த விஷயத்தை (அர்ச்சுனன்) கூற. துதி ஆடி - பாராட்டி. சொற்று - சொல்லி. விசயன் கொண்ட யதி வேஷத்தோடு, இல்லறத்தானான கண்ணன் அவனை வணங்கியதும், அவன் கண்ணனுக்கு ஆசி கூறியதும் பொருந்தும். சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தி வடிவில், கயிலையங்கிரியில் கல்லால விருக்ஷத்தின் கீழ் வீற்றிருத்தலை நூல்கள் கூறும்.

### சுபத்திரா கல்யாணம்

54. ஆதவன்வந் துதிப்பதன்முன் மற்றை நாளி
லணிநகர்வாழ் சனமனைத்து மந்தக் குன்றின்
மாதவன தேவலினான் மழைக்கா லத்து
வாசவற்கு விழாவயர்வான் வந்த காலை
யாதவரிற் போசரின்மற் றுள்ள வேந்த
ரியாவருஞ்சூழ் வரநறுந்தா ரிராமன் வந்தான்
சூதடர்பச் சிளங்கொங்கைப் பச்சை மேனிச்
சுபத்திரையுந் தோழியர்கள் சூழ வந்தாள்.

[ஆதவன் வந்து உதிப்பதன் முன், மற்றை நாளில் அணி நகர் வாழ் சனம் அனைத்தும் அந்த குன்றின், மாதவனது ஏவலினால் மழைக் காலத்து வாசவற்கு விழா அயர்வான் வந்த காலை, யாதவரில் போசரில் மற்று உள்ள வேந்தர் யாவரும் சூழ்வர, நறுந்தார் இராமன் வந்தான், சூது அடர் பசு இளங் கொங்கை பச்சைமேனி சுபத்திரையும் தோழியர்கள் சூழ வந்தாள்.]

**விளக்கம்:**—மறுநாள் பொழுது விடியுமுன் கண்ணனது ஏவலினால் அந்நகர் வாழ் சனங்கள் எல்லோரும், மாரிக் காலத்தில்

செய்யும் இந்திர பூஜை செய்யும் பொருட்டு அந்த இரைவதக மலையினிடத்தே வந்து சேர்ந்தபொழுது, யாதவ குலத்திலும், போஜ குலத்திலும், மற்றுள வேந்தர் குலத்திலும் உள்ளார் எல்லோரும் சூழ்ந்து வர, நறுந்தார் பலராமன் (அங்கே) வந்து சேர்ந்தான்; சுபத்திரையும் வந்து சேர்ந்தாள்,—என்பதாம்.

சூது அடர் கொங்கை - சூதாடு கருவியை எதிர்த்து வெல்லும் திருமுலைகள். அர்ச்சுனன் சுபத்திரையை மணத்தல் எளிதாகும் பொருட்டுக் கண்ணன் செய்த சூழ்ச்சியாகும், இந்த இந்திர பூஜை.

55. முக்கோலுங் கமண்டலமுஞ் செங்கற் றூசு
முந்நூலுஞ் சிகையும்மாய் முதிர்ந்து தோன்றும்
அக்கோல மனைவருங்கை தொழுது நோக்கி
யருணலம்பெற் றகன்றதன்பி னனைத்து லோகத்து
எக்கோல யோனிகட்கு முயிராய்த் தோற்ற
மீரைந்தாய்ப் பாற்கடலி னிடையே வைகும்
மைக்கோல முகில்வண்ணன் றானு மெய்தி
மனவணக்கம் புரிவானை வணங்கி னானே.

[முக்கோலும் கமண்டலமும் செங்கல் தூசும் முந்நூலும் சிகையும் ஆய், முதிர்ந்து தோன்றும் அ கோலம் அனைவரும் கை தொழுது நோக்கி அருள் நலம் பெற்றதன் பின், அனைத்து லோகத்து எக் கோலம் யோனிகட்கும் உயிராய், தோற்றம் ஈர் ஐந்து ஆய், பால் கடலின் இடையே வைகும் மை கோலம் முகில் வண்ணன் தானும் எய்தி, மன வணக்கம் புரிவானை வணங்கி னானே.]

**விளக்கம் :**—முக்கோல் - திரிதண்டம். கமண்டலம் - ஜல பாத்திரம். செங்கல் தூசு - காவித்துணி. முந்நூல் - பூணூல். சிகை- குடுமி. இவை ஐந்தும் 'பஞ்ச முத்திரை' என்பர். அனைத்து லோகத்து - சகல உலகங்களிலுமுள்ள. எக்கோல யோனிகட்கும்- பலவகைப்பட்ட பிறப்பான எல்லா உயிர்களுக்கும். (யோனி - பிறப்பு). தோற்றம் ஈரைந்து - பத்து வகைத் தோற்றம் (தசாவதாரம்). (பத்து வகையான தோற்றங்களை இச்சையால் கொண்டு) பால் கடலின் இடையே யோக நித்திரை செய்யும் மைக்கோல வண்ணன் (கண்ணன்), அருச்சுனன் அருகடைந்து, தன்னை மனத்தால் வணங்கும் அவனைத் தன் காயத்தால் வெளித்தோன்ற வணங்கினான்,—என்க.

தசாவதாரம் :—மத்ஸ்யம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், பரசுராமன், தசரதராமன், கிருஷ்ணன், கல்கி. இவ்வவதாரங்கள், கர்ம வசத்தாலன்றித் தர்ம ஸ்தாபனத்திற்காக இச்சையால் கொள்ளும் அவதாரங்கள்.

56. துன்னியிரு வருமொருப்பட் டிருந்த காலைச்
சுபத்திரையத் தடங்குன்றின் சூழ லோர்சார்
மின்னியபைம் புயலினெழி லிரேகை போல
வெளிப்படலு மெய்ப்புளக மேன்மே லேறிக்
கன்னியிளந் தனிக்கடம்பு மலர்ந்த தென்னக்
கண்டவிழி யிமையாத காட்சி காணா
மன்னியமா தவத்தோனை மந்த மூரன்
மாதவன்மைத் துனமையினான் மகிழ்ச்சி
கூர்ந்தே.

[துன்னி இருவரும் ஒருப்பட்டு இருந்த காலை சுபத்திரை அ தடம் குன்றின் சூழல் ஓர் சார் மின்னிய பைம்புயலின் எழில் இரேகை போல வெளிப்படலும், மெய் புளகம் மேல் மேல் ஏறி கன்னி இளம் தனி கடம்பு மலர்ந்தது என்ன, கண்ட விழி இமையாத காட்சி காணா, மன்னிய மாதவத்தோனை மந்தம் மூரல் மாதவன் மைத்துனமையினால் மகிழ்ச்சி கூர்ந்தே,—அடுத்த செய்யுளில் முடியும், குளகம்.]

**விளக்கம் :**—கண்ணனும் விசயனும் நெருங்கி மனம் ஒருப்பட்டு ஏகாந்தத்தில் இருந்தபொழுது, அந்த இரைவதக மலைச் சாரலின் ஓரிடத்தே, சுபத்திரை மின்னிய கருமேகத்தின் அழகிய ஒளிக்கொடி போல் தோன்றலும், விசயனது மெய் சிலிர்க்க, மிக இளமையான கடம்ப மரம் மலர்ந்ததுபோல், கண்ட விழி இமையாது அவளை நோக்கிய காட்சியைக் கண்டு, புன் சிரிப்புக் கொண்ட மாதவன் மைத்துன முறைமையினால் மகிழ்ச்சி கூர்ந்து அடுத்த கவியோடு தொடரும்.

மைத்துனமை - அத்தை மகனாகும் முறைமை; (தந்தையின் சகோதரி குந்தி). மந்தம் மூரல் மாதவன் - இளநகை கொண்ட கண்ணன்; (கொண்ட வேஷத்தோடு பொருந்தாத செயல் கண்டு இளநகை கொண்டான் ஆயிற்று).

57. அடிகடிரு வுளத்தெண்ண மெம்ம னோர்க
ளறியினிசை யலர்பலரிங் கறிவு றாமல்
கடியயர்வுற் றும்பதிகொண் டடைக வென்றுங்
காவலர்க்குக் கடனென்றுங் கசியக் கூறிக்

கொடியிடை வெங்களபமுலைக் கன்னி மானைக்
கூயணங்கே மெய்ம்மையுறக் கொண்ட
கோலப்
படிவமுனிக் கிருபருவம் பணித்த வேவல்
பரிவுடனீ புரியென்று பணித்திட் டானே.

[அடிகள் திரு உளத்து எண்ணம் எம்மனோர்கள் அறியின் இசையலர் பலர். இங்கு [அவர்] அறிவு உறாமல் கடி அயர்வு உற்று உம் பதிகொண்டு அடைக என்றும், காவலர்க்கு [அது] கடன் என்றும் கசிய கூறி, கொடி இடை வெம் களப முலை கன்னிமானை கூய், அணங்கே, மெய்ம்மை உற கொண்ட கோலம் படிவம் முனிக்கு இரு பருவம் பணித்த ஏவல் பரிவுடன் நீ புரி என்று பணித்திட்டானே.]

**விளக்கம் :**—பலர் இசையலர் - இங்குள்ள பலர் இசையார். கடி அயர்வு உற்று - (எவரும் அறியாமல்) மணம் செய்து கொண்டு. உம் பதி அடைக; அவ்வாறு செய்தல் அரசருக்கு முறைமையே. [இவ்வாறு] கசியக் கூறி - விசயன் மனம் மகிழும் படி கூறி. சுபத்திரையையும் அவனுக்குப் பணிவிடை புரியுமாறு கண்ணன் அமர்த்தினான். இரு பருவம் - நான்கு மாதம். ஓர் ஊரில் ஒரு நாளுக்குமேல் தங்கலாகாது என்ற விதியுடைய சந்நியாசிகளுக்கு மாரியில் மாத்திரம் நான்கு மாதம் ஓரிடத்தே தங்குதற்கு அனுமதியுண்டு. அவ்விதிப்படி விசயன் இங்கே தங்கினானாயிற்று.

துரியோதனனுக்குச் சுபத்திரையைக் கொடுக்கவேண்டும் என்ற கருத்தினன் பலராமன். எனவே, கண்ணன் இவ்வாறு சூழ வேண்டியவனானான்.

கலித்துறை

58. உள்ள டங்கிய காமவெங் கனல்புறத் தோடி
கொள்ளை கொண்டுடன் மறைத்தெனக் கூறையுந்
தானும்
மெள்ள வந்துதன் கடிமனை மேவிய வேடக்
கள்ள வஞ்சனை யறிந்திலள் கற்புடைக் கன்னி.

[உள் அடங்கிய காமம் வெம் கனல் புறத்து ஓடி கொள்ளை கொண்டு உடல் மறைத்து என கூறையும் தானும் மெள்ள வந்து, தன் கடி மனை மேவிய வேடம் கள்ளம் வஞ்சனை, அறிந்திலள் கற்பு உடை கன்னி.]

விளக்கம் :—விசயன் கொண்ட யதி வேஷம், உள்ளே அடங்கி யிருந்த காமக்கனல் வெளிப்பட்டு அவனை மூடிக்கொண்டு மறைத்தது போன்றிருந்தது என்ற வருணனை தற்குறிப்பேற்றம். கூறை - காவி வஸ்திரம். கனலும் காவியுடையும் செந்நிறமாதல் பற்றி இவ்வாறு வருணிக்கப்பட்டது. கள்ள வேட வஞ்சனை அறிந்திலள் - பொய்வேஷம் பூண்ட வஞ்சகச் செய்கையனாகிய விசயனை (சுபத்திரை) அறிந்திலள். அர்ச்சுனன் கொண்டது வேஷமாதலால் 'கள்ள வேட வஞ்சன்,' எனப்பட்டது.

59. ஈங்கு வந்ததென் றவப்பய னென்றுகொண்
டெண்ணி
ஆங்கு வந்தொரு மனையிடை யருந்தவன் றுயிலத்
தூங்கு கண்ணினள் சுபத்திரை தோழியர் பலரும்
பாங்கு வைகமற் றொருமனை புகுந்துகண் படுத்தாள்.

[ஈங்கு வந்தது என் தவம் பயன் என்று கொண்டு எண்ணி, ஆங்கு உவந்து ஒரு மனையிடை (விசயன்) துயில, தூங்கு கண்ணினள் (ஆன) சுபத்திரை தோழியர் பலரும் பாங்கு வைக, மற்றொரு மனை புகுந்து கண்படுத்தாள்.]

விளக்கம் :—இங்கே சுபத்திரை வந்தது என் தவப் பயன் என்று எண்ணி விசயன் அங்கே ஓர் அறையிலே உவந்து துயின்றான்; தூக்கக் கண்ணினளான சுபத்திரையும் மற்றோர் அறையில் தோழியர் பக்கத்திலே உடனிருக்கத் துயில்பவளானாள். என்க. என்று 'கொண்டு,' என்பதிலுள்ள 'கொண்டு' அசை.

60. புடவி யெங்கணும் புதையவரன் பொழிதரு
புனலால்
அடவி யாரழ லவியவு மவிந்தில தையோ
தடவி வாடைமெய் கொளுத்திடத் தனஞ்செயற்
கணங்கின்
விடவி லோசனக் கடைதரு விரகவெங் கனலே.

[புடவி எங்கணும் புதைய வான் பொழி தரு அடவி ஆர் அழல் அவியவும், அவிந்திலது ஐயோ. தடவி வாடை மெய் கொளுத்திட தனஞ்செயற்கு அணங்கின் விலோசனம் கடை தரு விரகம் வெம் கனலே.]

விளக்கம் :—புடவி-பூமி. புதைய-மறையும்படி. வான்-மேகம். வாடைக் காற்று தடவி (அருச்சுனனது) மெய்யை (உடலை) கொளுத்திட (தாபத்தை மிகுவிக்க). அணங்கு - சுபத்திரை.

விஷத்தின் தன்மையைக் கொண்ட கடைக்கண் தந்த விரகவெங் கனல், என்பது ஈற்றடியின் பொருள். விலோசனம் - கண்.

மலையால் பூமி முழுதும் நீரில் அமிழ்ந்து, அரிய காட்டுத் தீயும் அவிந்திருக்க, வாடையின் வெம்மையும், சுபத்திரையின் கடைக்கண் மூட்டி வைத்த காமக் கனலும் அவிந்திலவே, என் செய்வேன்,— என்று விசயன் வருந்தியபடி. ஐயோ : இரக்கப் பொருளது.

61. மதன லீலையிற் பழுதறவழிபடும் பாவை
வதன வாண்மதி வந்துமுன் னிற்கவு மருண்டச்
சதன மேவருந் தபோதனன் றனக்குவெம் மோக
விதன வல்லிருள் விடிந்தில தாரிருள் விடிந்தும்.

[மதனன் லீலையில் பழுது அற வழிபடும் பாவை வதனவாள் மதி வந்து முன் நிற்கவும், மருண்டு அ சதனம் மேவரும் தபோ தனன் தனக்கு, வெம் மோகம் விதனம் வல் இருள் விடிந்திலது ஆர் இருள் விடிந்தும்.]

**விளக்கம் :**—மதன லீலையில் குற்றம் அற வழிபாடு செய்தற் குரிய பாவை போன்ற சுபத்திரை; அதாவது கலவிக்கு ஏற்ற பரு வத்தினள், என்க. வதன வாள்மதி - (அவளது) முகமாகிய ஒளி பொருந்திய சந்திரன். சதனம் - மனை வீடு. மேவரும் - தங்கி யிருக்கும். மோகம் விதனம் வல் இருள் - மேகமாகிய வேதனை தருகின்ற வலிய இருள்.

இரவு விடிந்தும், சுபத்திரையின் முகம் வந்து தன் முன் நிற்பதால், காமத்தால் எழுந்த வேதனையாகிய வல்லிருள் நீங் கிற்றில்லையே, என்று விசயன் வருந்தும் கருத்தினது இது.

62. அற்றை நாண்முத லனேகநா ளகின்மணங் கமழும்
கற்றை வார்குழற் கன்னிகை வழிபடக் கருத்தால்
இற்றை மாமதன் பூசலுக் கென்செய்வோ
மென்றென்(று)
ஒற்றை யன்றில்போன் மெய்மெலிந் துள்ளமு
முடைந்தான்.

[அற்றை நாள் முதல் அனேக நாள், அகில் மணம் கமழும் கற்றை வார் குழல் கன்னிகை வழிபட கருத்தால் இற்றை மா மதன் பூசலுக்கு என் செய்வோம் என்று என்று, ஒற்றை அன்றில் போல் மெய் மெலிந்து உள்ளமும் உடைந்தான்.]

**விளக்கம் :—**அற்றை நாள் முதல் - கண்ணன் பணிவிடை புரியுமாறு கூறிய நாள் முதல். (சுபத்திரை) கருத்தால் வழிபட-மனப்பூர்வமாய்ப் பணிவிடை செய்துவர. (விசயன்) இப்பொழுது மன்மதன் விளைக்கும் போருக்கு என் செய்வோம் என்று தளர்ந்து, பெடை பிரிந்த அன்றில் போல் மெய்யொடு மனமும் வருந்தினான்,— என்பதாம்.

ஆண் அன்றில், பிரிவின்கண் தன் துணையை மூன்று தரம் கூவி அழைக்கும் என்றும், அழைத்த பின்னும் அது வரவில்லையாயின், உயிரை விட்டுவிடும், என்றும் கூறுவர்.

63. நல்லி லக்கணம் பலவுடை யவயவ நலத்தால்
வில்லி லக்கணத் தழும்புடைக் கரங்களான் மிகவும்
தொல்லி லக்கணம் பலவுடைச் சுபத்திரை யொருதன்
இல்லி லக்கண வனையிவன் யார்கொலென் றயிர்த்தாள்.

[நல் இலக்கணம் பல உடை அவயவ நலத்தால், வில் இலக்கணம் தழும்பு உடை கரங்களால், மிகவும் தொல் இலக்கணம் பல உடை சுபத்திரை ஒரு தன் இல்லில் அ கணவனை 'இவன் யார் கொல?' என்று அயிர்த்தாள்.]

**விளக்கம் :—**ஆடவர்க்குரிய நல் இலக்கணமுடைய அவயவங்களின் நலத்தாலும், இலக்கணமுடைய வில் தழும்புடைய கரங்களாலும் பழமையான சாமுத்திரிக நூலில் கூறப்பட்டுள்ள உத்தம இலக்கணம் பலவற்றை உடைய சுபத்திரை தனது ஒப்பற்ற இல்லில் தங்கியிருக்கும் (தனக்கு இனி) கணவனாகவிருக்கும் அவனை 'இவன் யாவன்?' என்று மிகவும் சந்தேகித்தாள்' என்றபடி.

கைவிரல்களுக்கு அருகே சிறு மீன் வடிவில் மூன்று விரல் நீளமுள்ள தழும்பு வில் தழும்பாகும்.

64. மங்கை யங்கொரு நாளவன் மலரடி வணங்கி
எங்கும் வண்புன லாடுதற் கேகினீ ரெனினும்
தங்கு மாநகர் யாதெனத் தபோதனன் றானும்
எங்கண் மாநக ரிந்திரப் பிரத்தமென் றிசைத்தான்.

[மங்கை அங்கு ஒருநாள் அவன் மலரடி வணங்கி, எங்கும் வள் புனல் ஆடுதற்கு ஏகினீர் எனினும், தங்கும் மா நகர் யாது

என, தபோதனன் தானும், எங்கள் மா நகர் இந்திரப் பிரத்தம் என்று இசைத்தான்.]

**விளக்கம் :**—தபோதனன் - தவத்தைச் செல்வமாக உடையவன், 'நீர் வாழும் ஊர் யாது?' என்று கேட்ட சுபத்திரைக்கு, அவன். 'இந்திரப் பிரத்தம் எங்கள் நகர்,' என்று பதில் மொழிந்தான்.

65. என்ற காலையி லிந்திரன் மதலையை யொழிய
நின்ற பேரையந் நெடுங்கணாள் வினவலு நிருபன்
வென்றி மன்னவர் யாரையும் வினவினை மின்னே
மன்ற லந்தொடை விசயனை
மறந்ததென் னென்றான்.

[என்ற காலையில் இந்திரன் மதலையை ஒழிய நின்ற பேரை அ நெடும் கணாள் வினவலும், நிருபன், "வென்றி மன்னவர் யாரையும் வினவினை, மன்றல் அம் தொடை விசயனை மறந்தது ஏன்?" என்றான்.]

**விளக்கம் :**—மிகமிக சுலபமான செய்யுள். இந்திரப் பிரத்தம் எமது நகர் என்னலும், சுபத்திரை, விசயனை ஒழிய நின்ற மற்ற நால்வரது யோக க்ஷேமம் விசாரித்தாளாக, அவன், 'விசயனை மறந்ததேன்?'' என்று அவளைக் கேட்டான் என்பதாம்.

66. யாழின் மென்மொழி யெங்கணா யகியிவ ளவனுக்கு
ஊழி னன்புடை மன்றலுக் குரியளா தலினால்
வாழி வெஞ்சிலை விசயனை
மறைத்தன ளென்னாத்
தோழி நின்றவ ளொருத்திகை தொழுதனள்
சொன்னாள்.

[யாழின் மெல் மொழி எங்கள் நாயகி இவள் அவனுக்கு ஊழின் அன்பு உடை மன்றலுக்கு உரியள் ஆதலினால். வெம் சிலை விசயனை (நாணத்தால்) மறைத்தனள் என்னா, தோழி நின்றவள் ஒருத்தி கை தொழுதனள் சொன்னாள்.]

**விளக்கம் :**—ஊழின் - முறைப்படி. மன்றல் - விவாகம். **வாழி:** அசை. நின்றவளாகிய தோழி ஒருத்தி பதில் மொழிந்தாள்.

67. பங்கு னன்பெருந் தீர்த்தநீர் படிவதற் காகப்
பொங்கு தெண்டிரைப் புவிவலம்
போந்தன னென்றே

அங்கு நின்றுவந் தவருரைத் தனரவனிப் போது
எங்கு ளானெனத் தெரியுமோ வடிகளுக் கென்றாள்.

[பங்குனன் பெரும் தீர்த்தம் நீர் படிவதற்காக பொருங்கு தெள்திரை புவி வலம் போந்தனன் என்றே, அங்கு நின்று வந்தவர் உரைத்தனர், 'அவன் இப்போது எங்கு உளான் என தெரியுமோ அடிகளுக்கு?' என்றாள்.]

**விளக்கம்:**—பங்குனன் - விசயன். பொங்கு தெள் திரை புவி வலம் போந்தனன் - பொங்குகின்ற தெளிந்த அலைகளை உடைய கடலினால் சூழப்பெற்ற பூமியைப் பிரதக்ஷிணம் செய்யச் சென்றான். என - என்பது (எச்சத்தைத் தொழிற் பெயராகக் கொள்க.) என்பது தெரியுமோ, எனத் தோழி கேட்டாள், என்க.

68. பாங்கி நல்லுரை தன்செவிப் படுதலும் விசயன்
தீங்கி லன்பல திசைகளுஞ் சென்றுநீ ராடிக்
கோங்கி ளம்கொழு முகைநிகர் கொங்கையாள்
பொருட்டால்
ஈங்கு வந்துநும் மில்லிடை யிருந்தன னென்றான்.

[பாங்கி நல் உரை தன் செவி படுதலும், விசயன் தீங்கு இலன், பல திசைகளும் சென்று நீர் ஆடி கோங்கு இளம் கொழு முகை நிகர் கொங்கையாள் பொருட்டால் ஈங்கு வந்து நும் இல்லிடை இருந்தனன், என்றான்.]

**விளக்கம் :**—கோங்கு அரும்பை ஒத்த முலையினளான சுபத்திரை பொருட்டாக, என்பது மூன்றாவது அடியின் பொருள். தன்னைத் தெரிவித்துக் கொள்ள உதவினமையின், பாங்கியின் வார்த்தையை **'நல்லுரை'** என்றானாயிற்று.

69. யதியு ரைத்தசொற் கேட்டலும் யாதவி நுதல்வாண்
மதிவி யர்த்தது துடித்தது குமுதவாய் மலரும்
புதிய கச்சணி குரும்பைக ளரும்பின புளகம்
பதியி டத்தரி வையர்க்குள மாகுலம் படாதோ.

[யதி உரைத்த சொல் கேட்டாலும் யாதவி நுதல் வாள் மதி வியர்த்தது, துடித்தது வாய் மலரும், புதிய கச்சு அணி குரும்பைகள் அரும்பின புளகம், மதி இடத்து அரிவையர்க்கு உளம் ஆகுலம் படாதோ.]

**விளக்கம் :**—யாதவி - யதுகுலப் பெண்ணான சுபத்திரை. நுதலாகிய வாள் மதி வியர்த்தது, வாய்மலர் துடித்தது.

குரும்பை - குரும்பைபோன்ற முலை, பதி இடத்து - அருகாமையில் இருக்கும் தன் மனம் வரித்த நாயகனைப் பற்றி' ஆகுலப்படாதோ - சஞ்சலம் அடையாதோ.

70. உகவை முத்தமென் பவளமு நீலமு மொளிர
அகவு பச்சிளந் தோகைபோ னின்றவவ் வணங்கை
மிகவி ருப்பநோய் வளர்தலின் மெலிந்ததோள் விசயன்
தகவு டைத்தன தடக்கையால் வளைக்கரந் தகைந்தான்.

[உகவை முத்தம் மெல் பவளமும் நீலமும் ஒளிர, அகவு பசு இளந்தோகைபோல் நின்ற அ அணங்கை. மிக விருப்ப நோய் வளர்தலின் மெலிந்த தோள் விசயன் தகவு உடை தன தடக்கையால் வளை கரம் தகைந்தான்.]

**விளக்கம் :**—உகவை - உவகை, மகிழ்ச்சி. முத்த மென் பவளம் - முத்துப் போன்ற பற்களை உடைய மென்மையான பவளம் போன்ற சிவந்த வாய். நீலம் - நீல மலர் போன்ற கண்கள். அகவு - கூவுகின்ற, அல்லது ஆடுகின்ற. தோகை - மயில். அணங்கு - சுபத்திரை. தகவு - எழிலின் நலம். தகைந்தான் - பற்றினான். விருப்ப நோய் மிக வளர்தலின், என இயைக்க.

இளமுறுவலும் கண்களின் விளக்கமும் காதற் குறிப்புக்கள். இவற்றால், வேட்கை மிகவே விசயன், அவளது கையைப் பற்றினான்.—என்க.

71. தகைந்த போதுயிர்ச் சேடியர் தவிர்கெனச் சிலசொல்
பகர்ந்து போயொரு மாதவிப் பந்தரிற் புகுந்து
புகுந்த நீர்மையைத் தேவகி யறியுமா புகன்றார்
அகைந்த பல்பெருங் கிளைஞரி லார்கொலோ வறிந்தார்.

[தகைந்தபோது உயிர் சேடியர் தவிர்க என சில சொல் பகர்ந்து போய் ஒரு மாதவி பந்தரில் புகுந்து, புகுந்த நீர்மையை தேவகி அறியுமா புகன்றார், அகைந்த பல் பெரும் கிளைஞரில் ஆர் கொலோ அறிந்தார்?]

**விளக்கம் :**—தவிர்க - இச் செயலை விடுக (என்று தோழியர் விசயனுக்குச் சொல்லி). போய் - சுபத்திரையுடன் போய். புகுந்த நீர்மை - நிகழ்ந்த செயலை. நெருங்கிய சுற்றத்தாரில் தாயான தேவகியன்றி வேறு எவரும் நிகழ்ந்ததை அறியார்,—என்றபடி. போய் அகைந்த நெருங்கிய வேடம் புனைந்த விசயன் சுபத்திரை யின் கையைப் பற்றலும் 'தவிர்க' எனத் தோழியர் அவனை விலக்கிச் சுபத்திரையுடன் சென்று, நிகழ்ந்ததைத் தாய்க்கு அறி வித்தார், என்க. தோழியர் தவிர்க என்று சொல்லிப் போன பின், விசயன் சுபத்திரையுடன் ஒரு மாதவிப் பொதும்பர் புக, என்றும் பொருள் செய்யலாம். புகுந்து, என்பது புகலும், என்ற பொருளது.

72. அறிவு றாவகை யலாயுதன் முதல்வட மதுரை
செறியும் யாதவர் யாரையுந் தன்னுடன் சேர்த்து
மறிகொள் செங்கையன் விழாவயர் வான்பெருந் தீவில்
உறியில் வெண்டயி ருண்டவன் கொண்டுசென் றுற்றான்.

[அறிவு உறா வகை அலாயுதன் முதல் வடமதுரை செறியும் யாதவர் யாரையும் தன்னுடன் சேர்த்து, மறிகொள் செம் கையன் விழா அயர்வான் பெரும் தீவில், உறியில் வெள் தயிர் உண்டவன் கொண்டு சென்று உற்றான்.]

**விளக்கம் :**—அலாயுதன் - பலராமன். மறிகொள் செங்கை யான் - சிவபெருமான் (மறி - மான்). 'உறியில் வெண்டயிர் உண்டவன்' என்றது, கண்ணனது ஏமாற்றுந் தன்மையைக் குறிக்கும்.

சந்நியாசி வேடம் பூண்டவன் அருச்சுனன் என்பதையும், அவன் சுபத்திரையின் கை பற்றியதையும் யாரும் அறியலாகா தென்று, சிவபெருமானுக்கு விழா எடுத்தலை வியாஜமாகக் கொண்டு, தன் தமைபன் உள்ளிட்ட எல்லோரையும் கண்ணன் மகாத்வீபம் என்ற இடத்திற்கு அழைத்துச் சென்றான்—என்க. ஜராசந்தனுக்கு அஞ்சி வடமதுரையைக் கைவிட்டுத் துவாரகை வந்தவர் யாதவர்.

73. உற்ற கங்குலில் யாவருந் தணந்தவா றுணர்ந்து
பெற்ற தம்பெரும் பிதாவினை முன்னினன் பெரியோன்

சிற்றி டைப்பெருங் கொங்கையுந் தம்முனைத்
தியானம்
முற்ற முன்னின ளிருவரு முன்முன்வந் துற்றார்.

[உற்ற கங்குலில் யாவரும் தணந்தவாறு உணர்ந்து, பெற்ற தம் பெரும் பிதாவினை முன்னினன் பெரியோன்; சிறு இடை பெரும் கொங்கையும் தம் முனை தியானம் முற்ற முன்னினள், முன் முன் வந்து உற்றார்.]

**விளக்கம் :**—இரவில் எல்லோரும் மகாத்வீபம் சென்றது அறிந்து,—என்பது முதலடியின் பொருள். தியானம் முற்ற முன்னினள் - (சுபத்திரை கிருஷ்ணனை) ஆழ்ந்து தியானித்தாள். அருச்சுனன் தன் பிதாவான இந்திரனையும், சுபத்திரை தன் தமையனான கண்ணனையும் நினைக்க இருவரும் அவ்விருவருக்கு முன் வந்தனர்,—என்க.

'பெரியோன்,' என்றது அருச்சுனன் பூண்ட வேஷம் குறித்து, அல்லது, சிலைத்தொழிலால் பெருமை பெற்றவன், எனினுமாம்.

### சுபத்திரா கல்யாணம்

74. இந்தி ராணியோ டெய்திய விந்திரன் றன்னை
இந்தி ராபதி யெதிர்கொளத் துவரைமா மூதூர்ச்
சந்தி ராதவ மண்டபத் திடுபொலந் தவிசில்
வந்தி ராவணங் கியதிரு மகனுடன் மகிழ்ந்தான்.

[இந்திராணியோடு எய்திய இந்திரன் தன்னை இந்திராபதி எதிர்கொள, துவரை மா மூதூர் சந்திர ஆதவர் மண்டபத்து இடு பொலம் தவிசில் வந்து இரா, வணங்கிய திருமகனுடன் மகிழ்ந்தான்.]

**விளக்கம் :**—இந்திராபதி - இலக்குமி நாயகனான கண்ணன். சந்திர ஆதவர் மண்டபம் - சந்திர சூரியர்களைப்போல் தண்மையும் ஒளியுங்கொண்டு விளங்கும் மண்டபம். இடுபொலம் தவிசு - இடப்பட்ட பொன் ஆசனம். வந்து இரா - வந்து வீற்றிருந்து. வணங்கிய மகனோடு இந்திரன் மகிழ்ச்சியோடு பேசிக் கொண்டிருந்தான்,—என்க. இந்திராபதி இந்திரனை எதிர்கொண்டது எடுத்த மனித வடிவத்தோடு பொருந்தச் செய்ததாகும்.

75. பொருவ ரும்புரு கூதனும் புலோமகன் னிகையும்
இருவ ருந்தம கலன்களா லிவரிரு வரையும்

மருவ ரும்படி யணிதலி னணிகெழு வனப்பால்
ஒருவ ரும்பிற ரொப்பல ரென்னுமா றுயர்ந்தார்.

[பொருவு அரும் புருகூதனும் புலோமகன்னிகையும் இருவரும் தம கலன்களால் இருவரையும் மருவரும்படி அணிதலின், அணி கெழு வனப்பால் ஒருவரும் பிறர் ஒப்பு அலர் என்னுமாறு உயர்ந்தார்.]

**விளக்கம்:**—பொருவு அரு புருகூதன் - ஒப்பற்ற இந்திரன். புலோம கன்னிகை - புலோமா என்பவனுடைய பெண்ணான இந்திராணி. மருவரும்படி - பொருத்தம் உண்டாகும்படி. அணி கெழு வனப்பால் பிறர் ஒருவரும் ஒப்பு அலர் என்னுமாறு - (இயற்கை அழகோடு செய்யப்பட்ட) செயற்கை அழகினால் ஒப்பாவார் பிறர் ஒருவரும் இலர் என்று சொல்லும்படி. உயர்ந்தார் - சிறந்தனர்.

இந்திரனும் அவன் மனைவியும் அருச்சுனனையும் சுபத்திரையையும் அலங்காரத்தினால், அவர்களது இயற்கையழகு மிகும்படி செய்தனர்,—என்க.

76. பால ருந்ததி நறுநெய்யாய்ப் பாடியிற் கள்ளத்
தால ருந்ததி விரகன தருளினால் விரைவில்
சால ருந்ததி தலைவனுந் தலைபெறும் பலநுண்
நூல ருந்ததி யுறப்புகுந் தாசிக னுவன்றார்.

[பால் அருந்ததி நறுநெய் ஆய்ப் பாடியில் கள்ளத்தால் அருந்து அதி விரகனது அருளினால், விரைவில் சால் அருந்ததி தலைவனும், தலை பெறும் பல நுண் நூலரும், ததி உற புகுந்து ஆசிகள் நுவன்றார்.]

**விளக்கம் :**—ததி - தயிர். சால் அருந்ததி தலைவன் - வசிட்டன் (சால் - கற்பின் சிறந்த). தலைமை பெறும் பல் நுண் நூலார் - வேதாதி நுண்ணிய நூல் வித்தகர். ததி - கூட்டமாக, வரிசையாக. ஆசி வசனங்களைக் கூறினர். திரிபு என்னும் சொல் லணி அமைந்த செய்யுள் இது.

77. தொடங்கி நாதவெம் முரசுடன் சுரிமுகந் தழங்கச்
சடங்கி னாலுய ராகுதித் தழலவன் சான்றா
விடங்கி னான்மிகு விசயனக் கன்னியை வேட்டான்
மடங்கி னார்தம் பதிதொறு மவ்வுழி வந்தார்.

[தொடங்கி நாதம் வெம் முரசுடன் சுரிமுகம் தழங்க, சடங்கினால் உயர் ஆகுதி தழலவன் சான்றா(க), விடங்கினால் மிகு

விசயன் அ கன்னியை வேட்டான்; மடங்கினார் தம் பதிதொறும் அ உழி வந்தார்.]

**விளக்கம் :**—சுரிமுகம் - சங்கு (சுழிந்த முகமுடையது, அன்மொழித் தொகை). (முரசங்களோடு சங்குகள் ஒலிக்க) சடங்கினால் உயர் ஆகுதி தழல் - ஓமாக்னி, (சான்றாக). தொடங்கி - கலியாணச் சடங்கைத் தொடங்கி. விடங்கு - அழகு. அ உழி வந்தார் தம் பதிதொறும் மடங்கினார் - அங்கு வந்த இந்திரன் முதலிய முனிவரர் தம் இருப்பிடங்களுக்குத் திரும்பினார்கள்.

வெம்முரசு - மண முரசு; (வெம்மை, விருப்பப் பொருளது). தழலவன் - அக்கினிதேவன்.

78. முன்னம் யாவையு முடித்தருண் மொய்துழாய்
முடியோன்
கன்ன னாருயிர் கொளவளர் காளையைத்
தழீ இக்கொண்(டு)
அன்ன மென்னடை யரிவையர் பொருட்டுநீ
யின்னம்
என்ன வென்னமா தவவுருக் கொள்ளுதி யென்றான்.

[முன்னம் யாவையும் முடித்தருள் மொய்துழாய் முடியோன் கன்னன் ஆர் உயிர் கொள வளர் காளையை தழீஇக் கொண்டு, அன்னம் மெல் நடை அரிவையர் பொருட்டு நீ இன்னம் என்ன மாதவம் உரு கொள்ளுதி என்றான்.]

**விளக்கம் :**—கல்யாணத்தை முடித்தருளிய கண்ணன், கர்ணனது உயிர் கொள்ளவிருக்கும் அருச்சுனனை, அத்தை மகன் என்ற உறவு பற்றி, "அன்னமென் நடை அரிவையர்க்காக, இன்னும் என்ன வேஷம் போடப் போகின்றாயோ!" என்று பரிகசித்தான், என்பதாம்.

**கலித்துறை**

79. காமற் பயந்தோன் றனதேவலிற் காம பாலன்
வாமம் பதிதன் னினும்வாசவ மாபி ரத்த
நாமப் பதியே திசையாக நடக்க லுற்றான்
தாமக் குழலா டனித்தேர்விடச் சாப வீரன்.

[காமன் பயந்தோன் தனது ஏவலின் காமபாலன் வாமம் பதி தன்னினும் வாசவ மா பிரத்தம் நாமம் பதியே திசை ஆக நடக்கல் உற்றான், தாமம் குழலாள் தனி தேர்விட சாபம் வீரன்.]

**விளக்கம் :—**காமன் பயந்தோன் - மன்மதனைப் பெற்ற கண்ணபிரான். காமபாலன் - பலராமன். வாமம் பதி - அழகிய துவாரகை. பதி தன்னினும் - பதியிலிருந்து. வாசவப் பிரத்தம் - இந்திரப் பிரத்தம். தாமக்குழலாள் - சுபத்திரை. சாபம் வீரன் - விசயன்.

காமபாலன் - அடியார்களின் விருப்பத்தைக் காப்பவன், அதாவது நிறைவேற்றி வைப்பவனான பலராமன். மன்மதன் திருமாலின் மகனாதல் பற்றியும், மன்மதனின் அம்சமான பிரதியும்நன் கண்ணபிரானது மகனாதல் பற்றியும், கண்ணனைக் **காமற்பயந்தோன்** என்றாராயிற்று.

80. **வென்றித் துவரை நகர்காவலர் தம்மை வென்று**
**மன்றற் குழலி னிளையாளை வலிதி னெய்திக்**
**குன்றச் சிறகரரிந்தோன்மகன் கொண்டு போனான்**
**என்றப் பலற்குக் கடல்வண்ணனி யம்பி னானே.**

[வென்றி துவரை காவலர் தம்மை வென்று மன்றல் குழலின் இளையாளை வலிதின் எய்தி, குன்றம் சிறகர் அரிந்தோன் மகன் கொண்டு போனான், என்று, அ பலற்கு கடல் வண்ணன் இயம்பினானே.]

**விளக்கம் :—**குன்றச் சிறகர் அரிந்தோன் - இந்திரன். பலற்கு - பலராமனுக்கு, விசயனால் சுபத்திரை அபகரித்துச் செல்லப்பட்டாள் என்று, கபடனான கிருஷ்ணன் தமையனுக்குக் கூறினான், என்றபடி.

பலற்கு - (பலன்) பலத்தை உடைய பலராமற்கு. பலதேவன் பலபத்ரன் என்ற பெயர்களும் பலராமனைக் குறிக்கும்.

81. **சேலாம் பிறப்பிற் றிருமாலிது செப்பு முன்னே**
**காலாந் தகனும் வெருவுந்திறற் காளை தன்னை**
**நீலாம் பரனும் யதுவீர நிருபர் யாரும்**
**நாலாம் படையோ டெதிர்சூழ்ந்தமர் நாடி னாரே.**

[சேல் ஆம் பிறப்பின் திருமால் இது செப்பும் முன்னே, கால அந்தகனும் வெருவும் திறல் காளை தன்னை, நீல அம்பரனும், யதுவீர நிருபர் யாரும் நால் ஆம் படையோடு எதிர் சூழ்ந்து அமர் நாடினாரே.]

**விளக்கம் :—**சேல் ஆம் பிறப்பின் திருமால் - மச்சாவதாரம் செய்த திருமால். காலாந்தகனும் வெருவும் திறல் காளை -

யமனும் அஞ்சத்தக்க வலியுடைய அருச்சுனன். நீலாம்பரன் - நீல வஸ்திரதாரியான பலராமன். கண்ணன் விஷயத்தைத் தெரிவித்தவுடனே பலராமனும், யதுகுல வீரர்களான அரசர்களும் நால்வகைப்பட்ட படையோடு சென்று விசயனை எதிர்த்து வளைத்துக்கொண்டு போரைத் துவக்கினர்:—என்க. அர்ச்சுனனோடு பொர எழுந்த பலராமன் கண்ணனது வார்த்தையால் சினம் அடங்கினன், என்பது வியாச பாரதக்கதை.

வேதங்களைக் கவர்ந்து கொண்டு கடலினுட் புகுந்த **சோமகன்** என்னும் அசுரனைத் திருமால் மீன் உருவங்கொண்டு, வென்று வேதங்களை மீட்டான், என்பது மத்ஸ்யாவதாரக் கதை.

82. அஞ்சே லமரி னுமர்தம்மையு மாவி கொள்ளேன்
செஞ்சே லனைய விழியாயெனத் தேற்றி யந்த
மஞ்சே யனைய தடந்தேரவ ளூர வந்த
வெஞ்சே னைமுற்றும் புறந்தந்திட வென்று
போனான்.

[அஞ்சேல் அமரில் நுமர் தம்மையும் ஆவி கொள்ளேன், செம்சேல் அனைய விழியாய், என தேற்றி, அந்த மஞ்சே அனைய தடம் தேர் அவள் ஊர, வந்த வெம் சேனை முற்றும் புறம் தந்திட வென்று போனான்.]

**விளக்கம்** :—"தன் கணவனுக்கோ, பிறந்தகத்தாருக்கோ தீங்கு நேரின் என் செய்வது?" என்று அஞ்சிக் கலங்கிய சுபத்திரையை நோக்கி, விசயன், "அஞ்சேல், நுமர் தம்மையும் ஆவி கொள்ளேன்," என்றான். நுமர் தம்மையும் என்பதிலுள்ள எச்ச உம்மை, "என்னையும் காப்பாற்றிக் கொள்வேன்," என்று கூறும் கருத்தது.

வியாசபாரதத்தில் பலராமன் அருச்சுனன்மேல் போரெழுந்து சென்றதாகக் கூறப்படவில்லை.

விசயன் இந்திரப் பிரத்தம் அடைதல்

83. மடைபட் டவாளை யகினாறு மருத வேலி
இடைபட் டதங்கள் வளநாடுசென் றெய்தி யாங்குத்
தொடைபட் டதிண்டோ ளறன்காளை துணைவ
ரோடு
நடைபட் டுருகி யெதிர்கொள்ள நகரி புக்கான்.

[மடை பட்ட வாளை அகில் நாறும் மருதம் வேலி இடை பட்ட தங்கள் வளம் நாடு சென்று எய்தி, ஆங்கு தொடைபட்ட திண்தோள் அறன் காளை துணைவரோடு நடை பட்டு உருகி எதிர்கொள்ள நகரி புக்கான்.]

**விளக்கம் :**—வயலுக்கு நீர் பாயும் மடையில் உள்ள வாளை மீன்கள் அகில் மணக்கும் மருத நிலம்—என்பது முதலடியின் பொருள். இடை - (மருத நிலத்துக்கு) மத்தியிலே. பட்ட - பொருந்திய, தொடை பட்ட - மாலை பொருந்திய, அறன் காளை - தருமபுத்திரன். துணைவர் - தம்பிமார் மூவர். நடை பட்டு - நடந்து வந்து.

உடன் பிறந்தோர் அன்பினால் மனம் உருகி எதிர்கொள்ள விசயன் தனது நகரை அடைந்தான், என்க.

84. முன்போர் விளைத்த முசலப்படை மொய்ம்பி
னானும்
தன்போ லுயர்ந்தோ ரிலனான தடங்கண் மாலும்
பின்போ யினிய மொழியாயிரம் பேசி மன்றற்(கு)
அன்போ டுதவு முபகார மனைத்து மீந்தார்.

[முன் போர் விளைத்த முசலம் படை மொய்ம்பினானும், தன்போல் உயர்ந்தோர் இலன் ஆன தடங் கண் மாலும், பின் போய் இனிய மொழி ஆயிரம் பேசி, மன்றல்கு அன்போடு உதவும் உபகாரம் அனைத்தும் ஈந்தார்.]

**விளக்கம் :**—முன்னணியில் நின்று போர் செய்த உலக்கைப் படையை உடைய பலராமன். தன்போல் உயர்ந்தார் ஒருவரைப் பெறாதவனான திருமால். இருவரும், அருச்சுனன் சென்ற பின், அவன் பின்னே சென்று, இனிய மொழிகள் பல கூறி, திருமணத் திற்கு அன்போடு அளிக்கும் சீர்வரிசைப் பொருள்கள் எல்லா வற்றையும் கொடுத்தார்கள்,—என்பதாம்.

முசலம் - உலக்கை. உபகாரம் - சீர் வரிசைகள். மொய்ம்பு - பலம், அதை உடையவன் மொய்ம்பினான், பலராமன் முசலப் படை உடையனாதல் பற்றி. முசலீ, என்ற பெயரும் அவனுக்கு உளது.

85. ஞாலத் தெரிவை களிகூர நடாத்து செங்கோல்
தாலத் துவசன் றுவராபதி தன்னில் வைக
நீலக் கடல்க ளிரண்டாமென நெஞ்சொ டொத்த
சீலத் தவனோ டவண்வைகினன் செங்கண் மாலே.

[ஞாலம் தெரிவை களிகூர நடாத்து செங்கோல் தாலம் துவசன் துவராபதி தன் இல் வைக, நீலம் கடல்கள் இரண்டு ஆம் என நெஞ்சொடு ஒத்த சீலத்தவனோடு அவண் வைகினன் செங் கண்மாலே.]

**விளக்கம் :**—ஞாலத் தெரிவை - பூமிதேவி. தாலத்துவசன்- பனைமரக் கொடியை உடையவனான பலராமன். நீலக் கடல் கள் இரண்டு - கிருஷ்ணாருச்சுனர்கள். நெஞ்சொடு ஒத்த சீலத் தவன் - தன் மனத்தோடு ஒத்த ஒழுக்கமுடையவனான அருச்சுனன். செங்கண்மால் (கண்ணன்) இந்திரப் பிரத்தத்தில் அருச்சுனனோடு இருந்தான், என்க.

**புத்திரப் பேறு**

86. பன்னா ளிவரிப் பதிசேர்ந்தபின் பங்க சாத
மின்னா ளுமார்பற் குயிர்போலும் விசய னென்பான்
நன்னா ளினன்மை தருமோரையி னல்க வஞ்சி
அன்னா ளிடத்தி லபிமன்னு வவத ரித்தான்.

[பல் நாள் இவர் இ பதி சேர்ந்தபின் பங்கசாதம் மின் ஆளும் மார்பற்கு உயிர்போலும் விசயன் என்பான், நல் நாளில் நன்மை தரும் ஓரையில் நல்க, வஞ்சி அன்னாள் இடத்தில் அபிமன்னு அவதரித்தான்.]

**விளக்கம் :**—பல் நாள் இவர் இப்பதி சேர்ந்தபின் - பலநாள் கிருஷ்ணாருச்சனர் இந்திரப்பிரத்தத்தில் சேர்ந்து இருந்தபின். பங்கசாதம் மின் - தாமரையில் வாழும் திருமகள். அவள் ஆளும் திருமார்பன், கண்ணன். அவனுக்கு உயிர் போன்றவன், அருச் சுனன். (அவன்) நல்ல நாளில், நல்ல முகூர்த்த வேளையில் கர்பாதானம் செய்ய.—என்பது மூன்றாமடியின் பொருள். வஞ்சி அன்னாள் - சுபத்திரை. அவளிடம் அபிமந்யு பிறந்தான்.

பங்கசாதம் - (பங்கஜாதம்) தாமரை. 'ஓரை' என்பது ஹோரா, என்ற வடசொல்லின் விகாரம்.

87. வேதஞ் சிறக்க மனுநீதி விளங்க விப்பார்
ஆதங் கமாற வருமைவரி னைவர் மைந்தர்
பூதங் களைந்துங் குணமைந்திற் பொலிந்த வாபோல்
ஓதங் கியிலுற் பவித்தாள்வயி னுற்ப வித்தார்.

[வேதம் சிறக்க மனுநீதி விளங்க இ பார் ஆதங்கம் ஆறவரும் ஐவரின் ஐவர் மைந்தர், பூதங்கள் ஐந்தும் குணம் ஐந்தின்

பொலிந்தவா போல், ஓது அங்கியில் உற்பவித்தாள் வயின் உற்பவித்தார்.]

**விளக்கம் :—** ஆதங்கம் - துன்பம். ஆற - நீங்க. வரும் - (வேதம் சிறக்கவும் மனுநீதி விளங்கவும், பூமியின் துன்பம் அகலவும்) வந்து பிறந்த (பஞ்ச பாண்டவர்). பாண்டவர் ஐவரினின்று ஐந்து மைந்தர், ஓமத்தீயில் உண்டானவளான திரௌபதியினிடம் பிறந்தார்கள், என்க. பஞ்ச பூதங்களும் ஐந்துவித குணங்களால் சிறந்து விளங்குதல்போல், விளங்கும் (உபபாண்டவர் ஐவர், வருஷம் ஒருவராய்ப் பிறந்தனர்).

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பூதங்களுக்கு முறையே மணம், ருசி, பிரகாசம், ஸ்பரிசம், சப்தம் குணங்கள். பிரதிவிந்தியன், சுதசோமன், சுருதகர்மா, சுதாநீகன், சுருதசேநன், என்ற பெயரினர் உபபாண்டவர் என்பது முதல் நூலிலிருந்து தெரிய வருகின்றது. 'த்ரௌபதேயர்' என்றும் அவர் அழைக்கப்படுவர்.

88. **அம்மா துலனும் பயந்தோரு மழகின் மிக்க**
**இம்மா மகாருக் கியற்றும்விதி யேய்ந்த பின்னர்த்**
**தெம்மா றுவின்மை முதலாய செயல்கள் யாவும்**
**கைம்மா றுகொண்டு நனிகைவரு மாறு கண்டார்.**

[அ மாதுலனும் பயந்தோரும் அழகின் மிக்க இ மா மகாருக்கு இயற்றும் விதி ஏய்ந்த பின்னர், தெவ் மாறு வின்மை (வில்மை) முதலாய செயல்கள் யாவும் கைமாறு கொண்டு நனி கைவரும் ஆறு கண்டார்.]

**விளக்கம் :—** மாதுலன் - கண்ணன். பயந்தோர் - பாண்டவர். இயற்றும் விதி ஏய்ந்தபின் - செய்ய வேண்டியனவான ஜாதகருமம், நாமகரணம், அந்நப்பிராசனம், சௌளம் (மயிர் கழித்தல்) என்னும் சடங்குகளை விதிப்படி செய்தபின். தெவ் மாறு வின்மை முதல் ஆய செயல்கள் - பகையின் அழிவிற்குத் துணை செய்யும் வில் வித்தை முதலிய படைக்கலப் பயிற்சிகள். கைமாறுகொண்டு - மைந்தர்கள் ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு. நனி கைவருமாறு கண்டார் - (மாதுலனும் பயந்தோரும்) நன்கு தேர்ச்சி பெறுமாறு செய்தார்கள். மாதாவோடு பிறந்தவன் மாதுலன். சுபத்திரை கண்ணனது சகோதரி.

89. **அரிதிற் பயந்த வறுவோருளு மாண்மை தன்னால்**
**இருதுக் களின்மே லிளவேனிலின் றோற்ற மேய்ப்ப**

மருந்துக் கிடைபோ மதுசூதன் மருகன் வெம்போர்
விருதுக் கொருவ னிவனென்ன விளங்கி னானே.

[அரிதின் பயந்த அறுவோருளும் ஆண்மை தன்னால், இருதுக்களின்மேல் இளவேனிலின் தோற்றம் ஏய்ப்ப, மருதுக்கு இடைபோம் மதுசூதனன் மருகன் வெம்போர் விருதுக்கு ஒருவன் இவன் என்ன விளங்கினானே.]

**விளக்கம் :**—இருது - பருவம்; இரண்டு மாத கால அளவினது. பருவங்களில் சிறந்து தோன்றுவது இளவேனில் பருவம். அதுபோல் பாண்டவபுத்திரர் அறுவரில், அபிமந்யு 'வெம்போர் விருது (வெற்றி)' போல் விளங்கினான், என்க.

மதுசூதன் - மது என்ற அசுரனைக் கொன்றவன், கிருஷ்ணன். **மருதுக்கு இடை போன வரலாறு :**—''கண்ணனது இளமைப் பருவத்தில், அவனது சேஷ்டைகளைப் பொறுக்க முடியாத ஏசோதை அவனை ஓர் உரலிலே பிணித்தாள். அவன் உரலை இரு மருத மரங்களுக்கிடையே இழுத்துச் செல்ல மரங்கள் முறிந்தன. முறிந்ததும் நாரத சாபத்தால் மரங்களாய் நின்ற குபேர புத்திரர் இருவரும் சாபம் நீங்கப் பெற்றனர். **மணிக்கிரீவன், நளகூபரன்** என்னும் பெயரினர். அவர்.''

90. உரனா லழகா லுரையான்மற் றுவமை யில்லா
நரநா ரணற்கு நலங்கூர்தரு நண்பு போல்வான்
அரனார் விழியா லழிந்தங்க மநங்க மான
மரனா ருடனண் பிசைந்தன்று வசந்த காலம்.

[உரனால் அழகால் உரையால் மற்று உவமை இல்லா நரநாரணற்கு நலம்கூர் தரு நண்பு போல்வான், அரனார் விழியால் அழிந்து அங்கம் அநங்கமான மரனாருடன் நண்பு இசைந்தன்று வசந்த காலம்.]

**விளக்கம் :**—நர நாரணர் - அருச்சுன கிருஷ்ணர். இவர்களுக்கு இடையுள்ள நட்பு நன்மையில் மிகுந்தது. வசந்த காலம் சிற்றின்ப அனுபவத்திற்கு உரிய காலம். சிற்றின்பத்தின்பால் உயிர்களை ஈடுபடச் செய்பவன் மன்மதன். எனவே, அவன் இளவேனிலின் நெருங்கிய நண்பனாகின்றான். கிருஷ்ணாருச்சுனர்களின் நட்பை ஒத்திருக்கும் பொருட்டு, மன்மதனோடு வசந்தம் கூடி வந்தது, என்று கூறும் கருத்தது செய்யுள். இசைந்தன்று - ஒன்றாய்க் கூடி வந்தது. **மாரன் என்பதின் குறுக்கல் விகாரம் மரன்.**

கிருஷ்ணாருச்சுனர் சினேகத்தை ஒத்திருக்க, மன்மதனுடன் வசந்தம் கூடி வந்தது, என்றது தற்குறிப்பேற்றம். அங்கம் - உருவம். அநங்கம் - அருவம். அரனால் மன்மதன் அங்கம் அழிந் தவனான கதை எல்லோரும் அறிந்ததே. நர நாரணர்களைப் போல் வசந்தத்தோடு மன்மதன் மிக நெருங்கிய நட்புடையவன் என்பது கருத்து.

**தீர்த்த யாத்திரைச் சருக்கம் முற்றும்**

## 8. காண்டவ தகனச் சருக்கம்

கிருஷ்ணார்ச்சுனர்களின் துணைகொண்டு தீக்கடவுள் காண் டவம் என்னும் வனத்தை எரித்தழித்த செய்தியைக் கூறும் சருக்கம் இது.

**வேனிற் பருவ வருணனை**

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. நனியாட லனற்கடவுண் யமனிருதி
நண்ணுதிசை நாட்க டோறும்
முனியாம னடந்திளைத்து முன்னையினும்
பரிதாப முதிர்ந்த தென்று
தனியாழித் தனிநெடுந்தேர்த் தனிப்பச்சை
நிறப்பரியைச் சயில ராசன்
பனியாலவ் விடாய்தணிப்பான் பனிப்பகைவன்
பனிசெய்வோன் பக்கஞ் சேர்ந்தான்.

[நனி ஆடல் அனல் கடவுள் யமன் நிருதி நண்ணு திசை நாள்கள் தோறும் முனியாமல் நடந்து, இளைத்து முன்னையினும் பரிதாபம் முதிர்ந்தது என்று, தனி ஆழி தனி நெடும் தேர் தனி பச்சை நிறம் பரியை சயிலராசன் பனியால் அ விடாய் தணிப் பான் பனி பகைவன் பனிசெய்வோன் பக்கம்சேர்ந்தான்.]

**விளக்கம் :**—உத்தராயண புண்யகாலத்தை வருணிக்கும் செய்யுள் இது. நனி ஆடல் அனல் கடவுள் - வெம்மையின்

கொடுமையை மிகவுடைய அக்கினிதேவன், ('அடல்' என்பதின் நீட்டல் விகாரம் ஆடல்). நிருதி - அரக்கர் குலத்தின் மூல புருஷன். அக்கினி தென்கிழக்கிற்கும், யமன் தென் திசைக்கும், நிருதி தென்மேற்கிற்கும் திக்பாலர்கள். எனவே, தென்திசை கொடிய திசை ஆகின்றது. (தேர் குதிரை நடந்து இளைத்து முன்னையினும்) பரிதாபம் முதிர்ந்தது - வெப்ப மிகுதியால் தளர்ச்சி மிகுந்ததாயிற்று; (தாபம் - வெப்பம், பரிதாபம் - அதிக வெப்பம்). என்று - பனிப் பகைவனான சூரியன்) என்று நினைத்து. தனி ஆழி - ஒற்றைச் சக்கரம்; (பச்சை நிறக் குதிரையையும் ஒற்றைச் சக்கரத் தேரையும் உடையவன் சூரியன்). சயிலராசன் - இமயமலை. விடாய் தணிப்பான் - (இமயத்தின் பனியால் சூரியன் உற்ற) தாபத்தைத் தணிக்கும் பொருட்டு. பனிப் பகைவன், சூரியன். பனி செய்வோன் பக்கம் சேர்ந்தான் - இமயம் இருக்கும் வடதிசையை அடைந்தான்.

ஆடி மாதம் முதல் மார்கழி முடிய உள்ள காலம் தக்ஷிணாயனம். தை முதல் ஆனி முடிய உள்ள காலம் உத்தராயணம். சூரியன் தெற்கிலோ வடக்கிலோ சாயாமல் நடுவே நிற்குங் காலத்தை விஷுவம் என்பர். மேஷத்தில் சூரியன் இருக்கும் சித்திரையிலும், துலாத்தில் சூரியன் இருக்கும், ஐப்பசியிலும் இவ் விஷுவம் ஏற்படுகின்றது. அப்பொழுது இரவும் பகலும் ஒத்த அளவின. தக்ஷிணாயனத்தில் பகல் பொழுது குறைந்தும், உத்தராயணத்தில் பகல் பொழுது மிகுந்தும் இருக்கும். வெப்பம் மிகுந்த கொடிய தென்திசை நடந்து இளைப்புற்ற தேர்க் குதிரையின் நடையில் வேகக்குறைவு உத்தராயணத்தில் ஏற்படுவதால், பகற்பொழுது நீண்டதாகின்றது. தென் திசைச் செலவில் நடை மெலிந்த குதிரையின் தாபத்தை இமயப் பனியால் தணிக்கும் பொருட்டுச் சூரியன் வடதிசை செல்கின்றான் என்ற கற்பனை தற்குறிப்பேற்றம் ஆகும்.

2. கலக்கமுற விளவேனிற் கலகமெழுந்
திடும்பசுந்தண் காவு தோறும்
சிலைக்கணிநாண் முறுக்குவபோற் றென்றலின்பின்
சுழலளிகள் சேர வோட
உலைக்கனலிற் கருங்கொல்லன் சிறுகுறட்டாற்
றகடுபுரிந் தொதுக்கி மாரன்
கொலைக்கணைகள் சமைப்பனபோற் குயிலலகாற்
பல்லவங்கள் கோது மாலோ.

[கலக்கம் உற இளவேனில் கலகம் எழுந்திடும் பசுந்தண் காவு தோறும் சிலைக்கு அணி நாண் முறுக்குவபோல், தென்றலின் பின் சுழல் அளிகள் சேர ஓட, உலை கனலில் கருங் கொல்லன் சிறு குறட்டால் தகடு புரிந்து ஒதுக்கி மாரன் கொலை கணைகள் சமைப்பனபோல்) குயில் அலகால் பல்லவங்கள் கோதும். மாதோ, அசை.]

**விளக்கம் :**—மனக் கலக்கம் மிகும்படி இளவேனிலுக்கு உரிய போர் எழுந்திடுதற்கு இடமான பசிய தண்ணிய சோலைகள் தோறும், என்பது முதலடியின் பொருள்.

வில்லுக்கு உரியதான அழகிய நாண் கயிற்றை முறுக்குதல் போல், சுழலும் தன்மையுள்ள வண்டுகள் வரிசையாகச் சேர்ந்து செல்ல, என்பது இரண்டாவது அடியின் பொருள்.

கருங்கொல்லன் உலைக் களத்தீயில் தகடுகள் செய்து, குறட்டால் அகற்றி மன்மதனது கொலைக்கணைகள் செய்தல்போல், குயில்கள் தம் அலகினால் தளிர்களைக் கோதும், என்பது ஈற்றடிகளின் பொருள்,

'கலக்கம் உற' என்பது, 'மனத்திண்மை குலைய' என்ற பொருளது. இளவேனில் கலகம் - ஆண் பெண்களை காம வசப் படுமாறு செய்தல். சுழலும் தன்மையுள்ள வண்டுகளின் வரிசை முறுக்கிய நாண் கயிறு ஆகின்றது. மன்மதனது கரும்பு வில்லின் நாண் சுரும்பு, என்பர்.

கருநிறமுடைய குயிலுக்குக் கருங்கொல்லன்; செந்நிறத் தளிர் செறிந்த சோலைக்கு உலைக்களத் தீ; தளிருக்குத் தகடு; அலகுக்குக் குறடு; அலகினால் குயில் கோதலுக்குத் தகட்டைக் குறடு என்னுங்கருவியால் எடுத்து அம்பாக்குதல் ஒப்பாகின்றது. எனவே, இது, **தற்குறிப்பேற்ற அணி** ஆகும்.

வண்டு, குயில், தளிர் முதலிவை காம வேட்கையை வளர்க்கும் பொருள்கள்.

**3. செங்காவி செங்கமலஞ் சேதாம்ப**
**றடந்தொறுமுத் தீக்க ளாகப்**
**பைங்காவி நெடுஞ்சினைக்கை மலர்நறுந்தே**
**னாகுதிகள் பலவும் வீழ்த்த**

உங்கார மதுகரங்க ளோங்காரச்
சுருதியெடுத் தோத வேள்வி
வெங்காம னிரதியுடன் புரிந்துதன்
தென்றலந்தேர் மேற்கொண் டானே.

[செங்காவி செங்கமலம் சேது ஆம்பல் தடம் தொறும் முத்தீக்கள் ஆக. பைங்காவின் நெடும் சினை கை, மலர் நறும் தேன் ஆகுதிகள் பலவும் வீழ்த்த, உங்காரம் மது கரங்கள் ஓங்கார சுருதி எடுத்து ஓத, வேள்வி வெங்காமன் இரதியுடன் புரிந்து தன் தென்றல் அம் தேர் மேற்கொண்டான்.]

**விளக்கம் :**—சேதாம்பல் - செவ்வாம்பல். தடம் - நீர்நிலை; (இங்கே ஓம குண்டமாகக் கொள்ளப்பட்டது). முத்தீ - காருக பத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினி, என்ற மூன்று வித ஓமத்தீ. நீர்நிலைகள் தோறும் செங்காவியும் செங்கமலமும், சேதாம்பலும் மூன்றுவித அக்கினிகள் ஆக,—என்பது முதலடியின் பொருள்.

சினை - கிளை. பைங்காவின் சினைகளாகிய கையினால், மலர்களின் நறுந்தேன் ஆகிய ஆகுதிகள் பலவற்றையும் (தீயில்) விழச்செய்ய; (ஆகுதி - ஓமத் தீயில் நெய்விடல்), என்பது இரண்டாவது அடியின் பொருள்.

உங்கார ஒலி செய்யும் வண்டுகள், ஓங்காரமாகிய சுருதியை எடுக்க, மன்மதன் இரதியுடன் யாகத்தைச் செய்து முடித்து, (அதன் பின்) தனதான தென்றல் அம் தேரின் மேல் ஏறிக்கொண்டான், என்பது ஈற்றடிகளின் பொருள்.

முத்தீ வளர்த்து முறையே யாகம் செய்தபின் யாகத் தலைவன் பத்தினியுடன் தேரேறி இருப்பிடம் செல்வதுபோல், வேள்வி முடித்த மன்மதன் இரதியுடன் தேரேறிச் சென்றான், என்க.

மன்மதன் யாகத் தலைவன் அதாவது யஜமானன்; இரதி, யாக பத்தினி. சினையைக் கை ஆக்கியதால், மலர்த்தேன் நெய் ஆகின்றது. மன்மதன் உலாவலைக் கூறும் இச் செய்யுள்.

4. தேவியருந் திருமாலுஞ் செழுமலர்த்தார்த்
தனஞ்செயனுந் தேவி மாரும்
மேவியனந் தரம்வேனில் விழவயர்வான்
முரசறைந்து வீதி தோறும்

ஓவியமு முயிர்ப்பெய்த வுபேந்திரனு
மிந்திரனு முவமை சாலப்
பூவினமுஞ் சுரும்புமெனப் புரமுழுதும்
புறப்படவண் பொங்கர் சேர்ந்தார்.

[தேவியரும் திருமாலும், செழுமலர் தார் தனஞ்செயனும் தேவிமாரும் மேவி, அனந்தரம் வேனில் விழவு அயர்வான் முரசு அறைந்த வீதி தோறும், ஓவியமும் உயிர்ப்பு எய்த, உபேந்திரனும் இந்திரனும் உவமைசால, பூ இனமும் சுரும்பும் என புரம் முழுதும் புறப்பட வண் பொங்கர் சேர்ந்தார்.]

**விளக்கம் :**—திருமாலும் தேவிமாரும்...வேனில் விழா அயர்வான் மேவி, அனந்தரம் முரசு அறைந்து வீதி தோறும்...வண் பொங்கர் சேர்ந்தார்,—என்று அன்வயிக்க. (விழா அயர்வான்) மேவி - விரும்பி, அனந்தரம் - பின்னர், ஓவியம் உயிர்ப்பு எய்த - (நகர மக்களின் அழகு நமக்கு இல்லையே என்று) ஓவியங்கள் பெருமுச்சுவிட்டு வருந்த. கிருஷ்ணார்ச்சுனர்களுக்கு உபேந்திரனும் இந்திரனும் உவமை ஆகின்றனர், பூக்கள் இருக்குமிடத்தை வண்டுகள் நாடிச் செல்வதுபோல், நகரமக்கள் கிருஷ்ணார்ச்சுனர் தேவிமாருடன் இருக்குமிடத்தை நாடிச் சென்று யமுனைக் கரையிலுள்ள ஒரு சோலையை அடைந்தனர், என்பதாம்.

5. கொண்டலெழ மின்னுடங்கக் கொடுஞ்சாபம்
வளைவுறச்செங் கோபந் தோன்ற
வண்டளவு நறுங்குமிழும் வண்டணிகாந்
தளுமலர மலைக டோறும்
தண்டரள வருவிவிழத் தையலார்
வடிவுதொறுஞ் சாயற் றோகை
கண்டுநமக் கிளவேனில் கார்கால
மானதெனக் களிக்கு மாலோ.

[கொண்டல் எழ, மின் நுடங்க, கொடும் சாபம் வளைவு உற, செங்கோபம் தோன்ற, வண் தளவும் நறுங் குமிழும் வண்டு அணி காந்தளும் மலர, மலைகள் தோறும் தண் தரளம் அருவி விழ, தையலார் வடிவு தொறும் சாயல் தோகை கண்டு, நமக்கு இளவேனில் கார்காலம் ஆனது என களிக்கும், ஆல், ஓ]

**விளக்கம் :**—தையலார் வடிவு தொறும், (மகளிர் போன்ற) சாயல் தோகை, கொண்டல் எழ...அருவி விழ கண்டு, இள

வேனில் நமக்கு கார்காலம் ஆனது என களிக்கும், என்பது அன்வயம். (ஆல், ஓ, அசை).

சாபம் - வானவில். செங்கோபம் - கார் காலத்தில் எங்கும் ஊரும் செந்நிறமுள்ள இந்திர கோபப் பூச்சி. தளவு - முல்லைப் பூ. குமிழ் - குமிழம்பூ. காந்தள் - காந்தள் மலர், தரள அருவி - முத்துமாலை.

மகளிர் கூந்தல், கொண்டல். இடை, நுடங்கும் மின். புருவம், வளைந்த வில். இதழ், செங்கோபம். பல், முல்லை. நாசி, குமிழ். கை, காந்தள். முலைப் பிரதேசத்தில் தொங்கிக் கிடக்கும் முத்து மாலை, மலை அருவி.

கொண்டல் எழல், மின்னுடங்கல் முதலியன கார்காலச் செய்திகள். விழா அயர்வான் வந்த மகளிரிடத்தே இவற்றைக் கண்ட மயில்கள், இளவேனில் கார்காலமாயிற்று என்று களிப்பனவாயின, என்றபடி. இது மயக்க அணியின்பாற்படும். இந்திர கோபம், என்பது முதல் குறையாய்க் கோபம், என நின்றது.

6. பாராம னகையாமற் பாடாம
லாடாமற் பாதஞ் செங்கை
சேராமன் முகராகம் வழங்காம
லிகழாமற் செவ்வா யூறல்
நேராம னிழலதனை நிகழ்த்தாமன்
மலர்ந்தழகு நிறைந்த நீழல்
ஆராமந் தொறுந்தங்க ளவயவம்போல்
வனகொய்தா ரணங்கு போல்வார்.

[பாராமல், நகையாமல் பாடாமல், ஆடாமல், பாதம் செம்கை சேராமல், முகராகம் வழங்காமல், இகழாமல், செம் வாய் ஊறல் நேராமல், நிழலதனை நிகழ்த்தாமல் மலர்ந்து அழகு நிறைந்த நீழல் ஆராமம் தொறும் தங்கள் அவயவம் போல்வன கொய்தார் அணங்கு போல்வார் ]

**விளக்கம் :**—பாதம் செங்கை சேராமல் - உதைக்காமல், கைகளால் அணைக்காமல். முகராகம் - நட்பு. செவ்வாய் ஊறல் நேராமல் - வாயில் இட்டுச் சுவைக்காமல். நிழலதனை நிகழ்த்தாமல் - நிழல் படும்படி செய்யாமல். ஆராமம் தொறும் - சோலையிடங்கள் எங்கும். பெண்கள் தங்கள் அவயவங்கள்போல் வனவான 'அரும்பு, மலர் தளிராயவற்றைக் கொய்தனர், என்றபடி.

உத்தம சாதிப் பெண்கள் பார்ப்பின் மாமரமும், நகைக்கின் மூல்லையும், பாடின் குருக்கத்தியும், ஆடின் புன்னையும், உதைப் பின் அசோகும், அணைப்பின் குராவும், நட்புச் செய்பின் பாலை யும், நிந்திக்கப் பாதிரியும், சுவைக்க மகிழும், நிழல்படச் செண் பகமும் தளிர்த்து அரும்பிப் பூக்கும் என்பர்.

இளவேனில் பருவமாதலினால், மாதர்கள் பார்த்தல், உதைத்தல்' ஏசல் முதலியன செய்யாமலேயே சோலை மரங்கள் தளிர்த்தும் அரும்பியும் பூத்தும் செழித்தனவாயின, என்பது கருத்து. முகராகம் வழங்கல் - மலர்ந்த முகத்துடன் அன்பு பாராட்டல். தளிர் நிறம் பற்றியும், அரும்பு மென்மை பற்றியும் மலர் அழகு பற்றியும் மாதர் உறுப்புக்கு உவமையாகும். இங்கே, புலவர், அவற்றை உபமேய மாக்கினமையின், அதாவது, பெண் களின் அவயவம் போன்றவை அவை என்றமையின், இது **விபரீத உவமை**. அல்லது **எதிர்நிலை அணி** ஆகின்றது. இதன் விரிவை, ஆசிரியரின் அணியியலில் காண்க.

தங்கள் அவயவங்கள் போன்றிருத்தல் பற்றி மகளிர் தளிர் அரும்பு மலர் ஆகியவற்றை மகிழ்ந்து பறித்தனர் என்றோ அல்லது பகைத்துப் பறித்தனர் என்றோ கொள்ளலாம்.

7. மாற்றாத பனிநீரான் மான்மதகுங்
குமமலய வாசச் சந்தின்
சேற்றாலச் சோலையெலாஞ் செங்கழுநீர்த்
தடம்போன்ற சிந்தைத் தாபம்
ஆற்றாத காதலருக் கமுதான
விளநீரா லடர்ந்த பூகத்
தாற்றாலம் மரகதச்செந் துகிராலப்
பொழில்போன்ற தடங்க ளெல்லாம்.

[மாற்றாத பனி நீரால், மான்மதம் குங்குமம் மலயம் வாசம் சந்தின் சேற்றால், அ சோலை எலாம் செங்கழுநீர் தடம் போன்ற; சிந்தை தாபம் ஆற்றாத காதலருக்கு அமுது ஆன இள நீரால் அடர்ந்த பூகம் தாற்றால் (தாறு - ஆல்) அம் மரகதம் செந்துகிரால் அ பொழில் போன்ற தடங்கள் எல்லாம்.]

**விளக்கம் :**—வேனில் விழா அயர்வான் மைந்தரும் மகளிரும் போயடைந்த சோலையையும், அங்கேயுள்ள நீர்நிலைகளையும் வருணிக்கும் செய்யுள் இது. சோலை தடத்தையும், தடம் சோலையையும் ஒத்தன என்று கூறிய நயம் பெரிது.

மாற்றாத - மாற்றப்படாத, அதாவது அசுத்தப்படுத்தப் படாத (குளிர்ச்சி பொருந்திய நீர்). மான்மதம் - (பெண்கள் பூசிக் குளிக்கும்) கஸ்தூரி. குங்குமம் - திலகமாக அணியும் செந் நிறப்பொடி. மலைய வாசச் சந்து - மலைய மலையில் உண்டா கும் வாசனையுடைய சந்தனம். சேறு - (இவற்றின் கலவையால் உண்டான) சேறு. நீரும், சேறும் தடத்திற்கு உரியவை. பொழில் விளையாடும் ஆடவரும் அரிவையரும் ஒருவர்மீது ஒருவர் நீரை வாரி வீசுவதால், சோலை எலாம் நீரையும், சந்தனக் கலவைச் சேற்றையும் உடையதாயிற்று. ஆகவே. சோலை, தடம் போன்றதாயிற்று.

ஆண் பெண் இருபாலாரும் பொழிலாடிய பின், நீர் விளை யாடுபவராயினர். இளநீரும், பூகத்தாறும், மரகதச் செந் துகிரும் சோலைக்கு உரியவை. இளநீர் - தெங்கின் இளங் காய். பூகத்தாறு - பாக்கு மரக்குலை. மரகதச் செந்துகிர் - பசிய சிவந்த பவளம் போன்ற தளிர். தாபமுற்றார் தாபம் தணிக்கும் பொருள்கள் இவை. இங்கே தாபமுற்ற காதலருக்கு அமுதாகும் இள முலைகள், இளநீர். அடர்ந்த பூக மரங்களின் நீண்டு தொங்கும் தாறு, கூந்தல். மரகதச் செந்துகிர் (இதழ்) - பசிய சிவந்த பவளம் போன்ற இளந் தளிர். இவற்றைத் தடங்கள் பெற்றிருத்தலால், அதாவது நீராடும் பெண்களின் முலை, கூந் தல், இதழ் ஆயவற்றோடு தடங்கள் சம்பந்தங் கொண்டிருத்த லால், தடங்கள் சோலையை ஒத்தனவாயின. 'மரகதச் செந் துகிர், 'ஆகுபெயராய்த் தளிரையும், இதழையும் குறிப்பதாயிற்று.

**விசயனும் தேவியரும் நீர் விளையாடல்**

8. மெய்கொண்ட மொழிவிசயன் மெய்யினெழி
விமையாமன் மேன்மே னோக்கும்
மைகொண்ட குழலொருத்தி மற்றவன்செங்
கையிற்சிவிறி மழைகண் டஞ்சிப்
பொய்கொண்டு வகுத்தனைய மருங்கசையத்
தனபாரம் புளக மேறக்
கைகொண்டு முகம்புதைத்துத் தன்விரற்சா
ளரங்களிலே கண்கள் வைத்தாள்.

[மெய் கொண்ட மொழி விசயன் மெய்யின் எழில் இமை யால் மேல் மேல் நோக்கும் மை கொண்ட குழல் ஒருத்தி, மற்று, அவன் செங்கையில் சிவிறி மழை கண்டு அஞ்சி, பொய் கொண்டு

வகுத்தது அனைய மருங்கு அசைய, தன பாரம் புளகம் ஏற, கை கொண்டு முகம் புதைத்து தன் விரல் சாளரங்களிலே கண்கள் வைத்தாள்.]

**விளக்கம் :**—நீராடுவோர் நீரை விசிறி வீசும் கருவியால் ஒருவர் மீது ஒருவர் நீரை வீசுவது வழக்கம். அருச்சுனனது மெய்யழகைக் கண்டு களித்துக்கொண்டிருந்த மனைவியொருத்தி அவன் கையில் இருந்த நீர் வீசும் கருவியாகிய சிவிறியினின்று வெளிப்படும் நீர் மழைக்கு அஞ்சிக் கைகளால் கண்ணைப் பொத்திக் கொண்டு, விரலிடுக்கின் வழியே அவனது அழகை இரசிக்கலானாள் —என்க. முலை புளகித்தலும், இடை நுடங்கலும், நீர் வீசும் கருவியினின்று வந்து விழும் நீரின் மிகுதி காரணமாய் நேர்ந்த செய்திகள். மற்று : அசை. பொய் கொண்டு வகுத்தது அனைய மருங்குல் : நயம் நோக்குக.

9. நங்கையங்கோர் கொடியனையாள் வதனமதி
சலமதியாய் நடுங்கு மாறு
பங்குனன்றன் றிருச்செங்கைப் பங்கயத்தின்
சிவிறியினாற் பரிவு கூரக்
குங்குமங்கொள் புனல்விடவு மிமையாமற்
புனல்வழியே கூர்ந்த பார்வை
செங்கலங்கற் புதுப்புனலுக் கெதிரோடி
விளையாடுஞ் சேல்கள் போலும்.

[நங்கை அங்கு ஓர் கொடி அனையாள் வதனம் மதி, சலம் மதி ஆய் நடுங்குமாறு பங்குனன் தன் திரு செம் கை பங்கயத்தின் சிவிறியினால் பரிவுகூர, குங்குமம் கொள் புனல் விடவும், இமையாமல் புனல் வழியே கூர்ந்த பார்வை, செம் கலங்கல் புது புனலுக்கு எதிர் ஓடி விளையாடும் சேல்கள் போலும்.]

**விளக்கம் :**—முன் செய்யுளில் சிவிறி மழைக்கு அஞ்சிக் கண் புதைத்த பொய்யைக் கொண்டு வகுத்த இடையுடையாள் ஒருத்தி, கையின் விரல் சாளரங்களின் வழியே விசயனது திருமேனி அழகை மேலும்நோக்கி மகிழ்ந்தாள் என்று கூறிய புலவர், இச் செய்யுளில், சிவிறிமழைக்கு அஞ்சாத கொடியனாள் ஒருத்தியின் பார்வையை (கண்களை) கலக்கிய நீருடன் ஓடிவரும் புது வெள்ளத்தின் எதிரோடிக் களிக்கும் சேல் மீன்களை ஒத்ததாக்குகின்றார். இது, தற்குறிப்பேற்றத்தின் பாற்படும்.

வதனமதி - முகமாகிய சந்திரன். சலமதி - நீரில் தோன்றும் சந்திரனின் பிரதிபிம்பம். நடுங்குமாறு - அசைவுறும் படி. நீரில் தோன்றும் சந்திரனது பிரதிபிம்பம் அலையிடும் நீரின் அசைவினால் அசைவுறுதல்போல், கொடியனாளின் வதனமதி சிவிறி நீரினால் அசைவுறுவதாயிற்று, என்பது கருத்து. பங்குனன் - பல்குனன், பற்குனன், அருச்சுனன். பரிவுகூர - துன்பம் மிகும் படி; அல்லது, அந்நங்கையின்பால் அவனுக்கு ஆசை மிக; அல்லது வீசிய நீரினால், அவனது ஸ்பரிச சந்தோஷத்தை அவள் பெற்றுக் களிக்க, (குங்குமங்கொள் புனல் வீசினான். என்றபடி). குங்குமங் கொள் புனல் - செந்நிறமான நீர். இமையாமல் புனல் வழியே கூர்ந்த பார்வை - வீசிய நீர் வழியாக இமைக்காமல் கூர்ந்து நோக்கிய கண்கள். செம் கலங்கல் புது புனல் - சிவந்த கலங்கிய புதுவெள்ள நீர்.

புது வெள்ளத்திற்கு எதிரே ஓடிச் சேல் மீன்கள் களிப்பது போல் நங்கையின் கண்கள், அருச்சுனன் வீசிய செந்நிற நீரின் வழியே, அவனைக் கூர்ந்து நோக்கிக் களித்தன, என்க.

10. நறைகமழ்தண் டுழாய்மாலை நாரணற்கு
நண்பான நரனார் செங்கை
உறையுமலர்ச் செந்திருவு மொவ்வாத
பொற்புடையா ளொருபொற் பாவை
நெறிதருபைங் குழலின்மிசை வீசியநீர்
பெருக்காற்றி னிறைநீர் வற்றி
அறல்படுநுண் கருமணலி னரித்தொழுகுஞ்
சின்னீரோ டமைந்த தம்மா.

[நறை கமழ் தண் துழாய் மாலை நாரணற்கு நண்பு ஆன நரனார் செம் கை. உறையும் மலர் செந்திருவும் ஒவ்வாத பொற்பு உடையாள் ஒரு பொன் பாவை, நெறி தரு பைங் குழலின் மிசை வீசிய நீர், பெருக்கு (உடைய) ஆற்றில் நிறை நீர் வற்றி, அறம்படு நுண் கருமணலின் அரித்து ஒழுகும் சில் நீரோடு அமைந்தது, அம்மா : ஈற்றசை.]

**விளக்கம் :**—நறை - வாசனை. நண்பான நரன் - விசயன். பொற்பு - அழகு. நெறித்த - சிலிர்ப்புக் கொண்ட. அறல் படு கருமணல் - அறுப்புக் கொண்ட, அதாவது அலை போன்ற தோற்றமுடைய கருமணல். அரித்து ஒழுகும் - அரித்துக் கொண்டு ஓடும். சில்நீர் - சொற்பமான நீர். அமைந்தது - ஒத்ததாய் இருந்தது.

இலக்குமியும் ஒப்பாகமட்டாத ஒரு பெண்ணின் கூந்தலில் விசயன் வீசிய நீர், நீர் வற்றிய ஆற்றின் சொற்பமான நீர் அறல் பட்ட கருமணலில் அரித்தோடுவதை ஒத்தது, என்றபடி. இது தற்குறிப் பேற்றத்தின் பாற்படும்.

குரு சிஷ்ய கிரமத்தை உலகிற்கு அறிவிக்க எண்ணிய திருமால், முன்னொரு காலத்தில் தான் நாராயணனாகவும், சிஷ்யனான நரனாகவும் பத்திரிகாசிரமத்தில் தோன்றி வாசம் பண்ணினான், என்பர். அம்மூர்த்திகளே கிருஷ்ணார்ச்சுனர். எனவே, 'நண்பான நரனார்' எனப்பட்டது. கூந்தல், அறல்பட்ட கரு மணல். விசயன் வீசிய நீர் அரித்தொழுகும் சின்னீர்.

**11.** **விளிந்துமயில் புறங்கொடுக்கு மெல்லியலா**
**ளொருத்திநெடு வேயும் பாகும்**
**சுளிந்துவருங் கடகளிற்றுச் சுவேதவாக**
**னன்கடகத் தோளின் மீது**
**தெளிந்தநறுங் கத்தூரிச் சேறுபடு**
**சிவிறியினீர் சிந்துந் தோற்றம்**
**களிந்தகிரி மிசைக்கடவுட் காளிந்தி**
**பரந்ததெனக் கவினு மாதோ.**

[விளிந்து மயில் புறம் கொடுக்கும் மெல் இயலாள் ஒருத்தி, நெடுவேயும் பாகும் சுளிந்து வரும் கடகளிறு சுவேதவாகனன் கடகம் தோளின் மீது, தெளிந்த நறுங் கத்தூரி சேறு படு சிவிறியின் நீர் சிந்தும் தோற்றம், களிந்த கிரிமிசை கடவுள் காளிந்தி பரந்தது என கவினும் மாதோ.]

**விளக்கம் :**—மயில் விளிந்து (தோற்று) புறம் கொடுக்கும் மெல்லியலாள். அவள் அருச்சுனன்மீது நீர் வீசியதைக் கூறும் இது. நெடுவேய் - முட்கொம்பு. பாகு - யானைப் பாகன். வேயும் பாகும் சுளிந்து வரும் கடகளிறு சுவேதவாகன் - யானைப் பாகன் வைத்திருக்கும் முட்கொம்பையும் பாகனையும் கண்ட அளவில் சினந்து எதிர்த்து வரும் மதயானை போன்ற அருச்சுனன். கடகம் - தோள் அணி. விசயனது கடகத் தோளின்மீது மெல்லியலாள் ஒருத்தி தெளிந்த நறுங் கஸ்தூரிச் சேறு கலந்த நீரை சிவிறியினின்று தாரையாக விழச் செய்யும் தோற்றம்,— என்பது, மூன்றாவது அடியின் பொருள். களிந்தகிரி - யமுனை உற்பத்தி ஸ்தானமான களிந்தம் என்னும் மலை. கடவுள் காளிந்தி - தெய்வத் தன்மை பொருந்திய யமுனை. பரந்த

தெனக் கவினும் - (களிந்த கிரியின்மீது யமுனை) பரவியது போன்ற அழகினதாய் விளங்கும்.

அருச்சுனனது கரியதோள் களிந்தகிரி. கஸ்தூரிக் குழம்பின் சேர்க்கையினால், மெல்லியல் நங்கை வீசிய நீர் யமுனை நீரைப் போல் கரு நிறமுடையதாயிற்று. அணி, தற்குறிப்பேற்றம். கிருஷ்ண சம்பந்தத்தால் யமுனை கடவுள் நதியாயிற்று. மாது, ஓ: அசைகள்.

12. **பிறையனைய திலகநுதற் பேதையிளம்**
**பிடியொருத்தி பிடித்த செங்கை**
**நறைகமழும் பொலஞ்சிவிறி நண்ணியசெஞ்**
**சிந்தூர நாரம் வீச**
**அறைகழல்வெஞ் சிலைத்தடக்கை யருச்சுனன்றன்**
**றிருமுகத்தி லான போது**
**நிறைமதிமேல் வாளிரவி கரங்கணிரைத்**
**தோடுவபோ னிறத்த மாதோ.**

[பிறை அனைய திலகம் நுதல் பேதை இளம்பிடி ஒருத்தி பிடித்த செம் கை நறை கமழும் பொலம் சிவிறி நண்ணிய செம் செந்தூரம் நாரம் வீச, அறை கழல் வெம் சிலை தடக்கை அருச்சுனன் தன் திருமுகத்தில் ஆனபோது நிறைமதி மேல் வாள் இரவி கரங்கள் நிறைத்து ஓடுவபோல் நிறத்த. மாதோ : ஈற்றசை.]

**விளக்கம் :**—பிடி - பெண் யானை. பொலம் சிவிறி நண்ணிய நறை கமழும் சிந்தூர நாரம் - அழகிய சிவிறியில் பொருந்திய வாசனை வீசும் சிந்தூரப் பொடி கலந்த நீர். (பிடியனைய பேதை சிவிறியின் வீசிய சிந்தூர நீர் அருச்சுனனது முகத்தில்) ஆனபோது - சேர்ந்து பொருந்தியபோது. (அவனது முகம்) பூர்ண சந்திரன் மேல் ஒளியுடைய சூரியனின் சிவந்த கிரணங்கள் நிரைத்து (வரிசைப்பட்டு) ஓடுவன போன்ற தோற்றமுடைய வாயின, என்பது ஈற்றடியின் பொருள்.

அணி, தற்குறிப்பேற்றம். அருச்சுனனது முகம் நிறை மதி. அதன் மேல் செந்நிற நீர் விழுந்ததானது, மாலைச் சூரியனின் சிவந்த கிரணங்கள் வரிசையாக விரைந்து செல்வது போன்றிருந்தது, என்றபடி. வடிவும் அழகும் பற்றிப் பிறைச் சந்திரன் மாதர் நெற்றிக்கு உவமை. நெற்றிக்குத் திலகம், பிறைக்குக் களங்கம் போன்றதாகின்றது. நிறத்த - தோற்றத்தினவாயின,

13. பாண்டுமத லையுங்காதற் பாவையருந்
துழாயோனும் பாவை மாரும்
ஈண்டுபெருஞ் சனத்துடனே யிவ்வண்ண
மிடந்தோறு மினிதி னாடி
ஆண்டுவரி சிலைமதனு மவன்படையுஞ்
சேவிப்ப வழகு கூர
மீண்டுதம மனைதோறு நிரைநிரைவாள்
விளக்கேந்த மேவி னாரே.

[பாண்டு மதலையும் காதல் பாவையரும், துழாயோனும் பாவைமாரும் ஈண்டு பெரும் சனத்துடனே இவ் வண்ணம் இடந் தோறும் இனிதின் ஆடி, ஆண்டு வரிசிலை மதனும் அவன் படையும் சேவிப்ப, அழகு கூர மீண்டு தம மனைதோறும் நிரை நிரை வாள்விளக்கு (பணிப் பெண்கள்) ஏந்த மேவினாரே.]

**விளக்கம் :—** ஈண்டு பெரும் சனத்துடன் - நெருங்கிய பெரிய ஜனங்களின் கூட்டத்துடன், அதாவது நகர மக்களுடன். ஆண்டு வரி சிலை மதனும் அவன் படையும் சேவிப்ப - அங்கே மன் மதனும் அவனது பரிவாரங்களாகிய பெண்களும் வேனில் விழாவைக் களிக்க. நிரை நிரை - வரிசை வரிசையாக. பணிப் பெண்கள் விளக்கு ஏந்தி வர, கிருஷ்ணார்ச்சுனரும் தேவிமாரும் நகர மக்களும் யமுனைக் கரையில் தமக்கென அமைந்த விடுதி சென்றார்கள், என்றபடி.

**முதுவேனில் வருணனை**

14. நெடுவேனில் புகுதரமே லிளவேனி
லகன்றதற்பி னிகரில் கஞ்சப்
படுவேய்வெள் வளையமுந்தண் பட்டால
வட்டமுஞ்செம் படீரச் சேறும்
உடுவேய்நித் திலத்தொடையு மூடுறுமண்
டபத்தடமு மொழுகி நீண்ட
வடுவேய்கண் மடந்தையர்க்கு மகிழ்நருக்கு
மமைந்தனவான் மனைக ளெல்லாம்.

[நெடுவேனில் புகுதர மேல் இளவேனில் அகன்ற தன்பின், நிகர் இல் கஞ்சம் படு ஏய் வெள் வளையமும் தண் பட்டு ஆலவட் டமும் செம் படீரம் சேறும், உடு ஏய் நித்திலம் தொடையும்,

ஊடு உறு மண்டபம் தடமும் ஒழுகி நீண்ட வடு ஏய்கண் மடந்தையர்க்கும் மகிழ்நருக்கும் அமைந்தன வான் மனைகள் எல்லாம் ]

**விளக்கம் ;**—இளவேனில் அகன்றதன்பின், மேல் நெடு வேனில் புகுதர - இளவேனில் அகன்றபின், அதற்கு அடுத்ததான முதுவேனில் வர. படு ஏய் நிகரில் கஞ்சம் வெள் வளையம் - குளத்தில் உண்டாகின்ற ஒப்பற்ற தாமரையின் வெள்ளிய இளந் தளிரின் சுருள். ஆலவட்டம் - விசிறி. படீரம் சேறு - சந்தனக் குழம்பு. உடு ஏய் - நட்சத்திரக் கூட்டங்களை ஒத்த. நித்திலம்- முத்து. ஊடு உறு மண்டபத் தடம் - நடுவிலே பொருந்திய மண்டபத்தையுடைய நீர் நிலை; அதாவது நீராழி மண்டபம். ஒழுகி நீண்ட - மிக நீண்ட. வடு - மாவடுவின் பிளவு. மகிழ்நர்- கணவர்.

வடு ஏய் கண் மடந்தையர்க்கும் அவர்களது கணவன்மார் களுக்கும் உரியவான பெரிய விடுதிகள் தோறும், முதுவேனிலின் வெப்பத்தைத் தணித்தற் பொருட்டு, நீராழி மண்டபமும், சீதளப்பொருள்களான தாமரையின் உட்சுருள், ஆல வட்டம், சந்தனம், முத்துமாலை முதலியனவும் அமைந்தனவாயின, என் பது பொருள்.

மடு - குளம். வடு - (ஆகுபெயர்) மாவடுவின் பிளவு. அது வடிவினால் மாதர் கண்ணுக்கு உவமை. ஒழுகி நீண்ட : ஒரு பொருட் பன்மொழி.

15. திலகநுதற் குறுவியர்தஞ் செவிப்பூவி
லளியினத்தின் சிறகர்க் காற்றால்
புலரமது நுகர்மாதர் புன்முறுவ
லிதழூறல் புதிதின் மாந்தி
இலகுபரி மளபுளக வீரமுலைத்
தடமூழ்கி யிரதி கேள்வன்
கலகமிடும் பரிதாப மகற்றினா
ரினிமையுடன் கலந்த கேள்வர்.

[திலகம் நுதல் குறுவியர் தம் செவி பூவில் அளி இனத்தின் சிறகர் காற்றால் புலர, மதுநுகர் மாதர் புன்முறுவல் இதழ் ஊறல் புதிதின் மாந்தி, இலகு பரிமளம் புளகம் ஈரம் முலை தடம் மூழ்கி, இரதி கேள்வன் கலகம் இடும் பரிதாபம் அகற்றினார் இனிமையுடன் கலந்த கேள்வர்.]

**விளக்கம் :**—இனிமையுடன் தம் காதலியரைக் கூடிய கணவன்மார்...பரிதாபம் அகற்றினார். திலகநுதல்...புலர - திலக நுதலில் தோன்றிய வியர்வை, தமது செவியில் அணிந்த பூவில் மொய்க்கும் வண்டினத்தின் சிறகுகளிலிருந்து வெளிப்படும் காற்றால் உலர்ந்து போக, (மகளிர் மது உண்டனர்). (அம் மாதரின்) புன்முறுவல் பூக்கும் இதழின் ஊறலை மாந்தியும், விளங்கும் பரிமளத்தோடு கூடிய புளகமுற்ற ஈரமான முலைத் தடத்தில் படிந்தும் மன்மதனது சேஷ்டையால் எழுந்த துன் பத்தை அகற்றினார், என்க

சிறகு - அர் - சிறகர், போலி. புதிதின் மாந்தி - (பருகுந் தோறும்) புதுமை அனுபவத்தை தரப் பருகி. கலகம் இடும் பரி தாபம் - சேஷ்டை செய்வதால் உண்டாகும் துன்பம். கணவரும் மனைவியருங் கூடிக் கலந்து மகிழ்ந்தனர், என்றபடி.

16. மாரவசந் தனையகன்று வயங்குறுவெங்
கோடையினான் மறுகி யாற்றாது
ஆரமளீ மதுமலரி லாரவடங்
களிற்பனிநீராரச் சேற்றில்
ஈரநெடுங் குழலிசையி லியங்கியசா
மரக்காற்றி லிளநி லாவிற்
பேரழலும் புகுந்ததெனப் பிணங்கினார்
தங்கேள்வர்ப் பிரிந்த மாதர்.

[மாரவசந்தனை அகன்று வயங்கு உறு வெம்கோடையினால் மறுகி, ஆற்றாது, ஆர் அமளி மதுமலரில், ஆரம் வடங்களில், பனிநீர் ஆரம் சேற்றில், ஈரம் நெடும் குழல் இசையில், இயங்கிய சாமரம் காற்றில், இளநிலாவில், பேர் அழலும் புகுந்தது என பிணங்கினார் தம் கேள்வர் பிரிந்த மாதர்.]

**விளக்கம் :**—தம் கேள்வர் பிரிந்த மாதர்,—மாரவசந்தனை அகன்று - மன்மதனின் தோழனான வசந்தனை (இளவேனிலை கடந்து. வயங்குறுவெம் கோடை - விளக்கமுடைய கொடிய கோடைக் காலம். மறுகி - கலங்கி. அமளி ஆர் மதுமலர் - படுக் கையில் நிறைந்துள்ள மதுவையுடைய மலர். ஆர வடம் - முத்து மாலை. ஆரச் சேறு - சந்தனக் குழம்பு. ஈர நெடும் குழல் இசை- மனத்தைக் குளிரச் செய்யும் பெருமையுடைய புல்லாங்குழல் இசை. இயங்கிய சாமரம் காற்று - இயங்குதலைக் கொண்ட சாமரக் காற்று. மலர், முத்துவடம், சந்தனம், குழலிசை,

சாமரக் காற்று, இளநிலா ஆயவற்றில் பேரழலும் (பெரிய நெருப்பும்) புகுந்து கொண்டதெனப் பிணங்கினார் (வெறுத்து சினந்தனர்)—என்க.

பிரிந்தார்க்குச் சீதளப் பொருள்கள் எல்லாம் வெப்பம் மிகுந்ததாகத் தோன்றும் என்பது, கவிமரபு.

17. கோடைவெயில் சுடச்சுடமெய் கொளுந்தியிறந்
தனபோலக் கொண்டல் கோடை
வாடைசிறு தென்றலெனு மாருதங்க
ளெம்மருங்கும் வழக்க மின்றி
ஆடையில்வெண் சாமரத்தி லாலவட்டத்
தினிலுயிர்ப்பி லழகார் நெற்றி
ஓடைமுக மதகயத்தின் றழைசெவியிற்
பல்லிறகி லொளித்த மாதோ.

[கோடை வெயில் சுடசுட மெய் கொளுத்தி இறந்தன போல, கொண்டல் கோடை வாடை சிறு தென்றல் எனும் மாருதங்கள் எம் மருங்கும் வழக்கம் இன்றி. ஆடையில், வெள் சாமரத்தில், ஆல வட்டத்தினில், உயிர்ப்பில், அழகு ஆர் நெற்றி ஓடை முகம் மத கயத்தின் தழை செவியில், பல் இறகில், ஒளித்த, மாதோ.]

**விளக்கம் :**—கொண்டல் - கீழ் காற்று. கோடை - மேல் காற்று, வாடை - வடதிசைக் காற்று. சிறு தென்றல் - மந்த கதியுடைய தென்திசைக் காற்று. (என்று சொல்லப்படும்) மாருதங்கள் - நான்கு திசைக் காற்றுக்கள். இவை, கோடைகால வெயில் மிகச் சுடலால் மெய் கொளுத்தப்பட்டு இறந்தனபோல் எம் மருங்கும் வழக்கம் (இயக்கம்) இன்றி...ஒளித்த, என்பதாம். அதாவது, உடுக்கும் ஆடையில், வெண்சாமரத்தில் ஆலவட்டத்தில், உயிர்ப்பில், அழகு பொருந்திய நெற்றிப்பட்டத்தை அணிந்த முகத்தையுடைய மத யானையின் தழைத்த காதுகளில், பலதிறப்பட்ட (பறவையினத்தின்) இறகுகளில் (காற்றுக்கள்) ஒளித்தன, என்றபடி.

ஆடை, சாமரம், ஆலவட்டம் ஆயவற்றை வீசும்பொழுதும், மூச்சு விடும்போதும், யானைகள் காதுகளை அசைக்கும்போதும், பறவை பறக்கும் பொழுதுமே காற்று வெளிப்படலால். மாருதங்கள் நான்கும் கோடைக்கு அஞ்சி அவற்றில் ஒளிந்துகொண்டன என்றாராயிற்று. அணி, **தற்குறிப்பேற்றம்**. வழக்கம் இன்றி - இயங்குதலாகிய வழக்கம் இல்லாமல்.

18. தாழிநறுங் குவளையந்தார்த் தருமன்மக
னருட்புனலும் தரங்க வேலை
யூழிநெடும் பெரும்புனலு முடலிலுறு
வெயர்ப்புனலு மூறி யூறிப்
பாழிதொறு மிறைக்கின்ற பைம்புனலு
மல்லதுவெம் பருவந் தன்னால்
பூழிபடு கமர்வாய நானிலத்துப்
புகலுதற்கோர் புனலு முண்டோ.

[தாழி நறும் குவளை அம் தார் தருமன் மகன் அருள் புனலும், தரங்கம் வேலை ஊழி நெடும் பெரும் புனலும், உடலில் உறு வெயர் புனலும், ஊறி ஊறி பாழிதொறும் இறைக்கின்ற பைம்புனலும் அல்லது, வெம் பருவம் தன்னால் பூழி படு கமர் வாய நால் நிலத்து புகலுதற்கு ஓர் புனலும் உண்டோ.]

**விளக்கம் :**—கோடையின் வறண்ட தன்மையை வருணிக்கும் அழகிய செய்யுள் இது. தாழி - நீர் நிலை. தருமன் மகன் - யம தர்மனது மகனான யுதிட்டிரன். அருள் புனல் - அவனது அருளாகிய நீர். ஊழி நெடும் பெரும்புனல் - சமுத்திரத்திலுள்ள யுகாந்த காலத்திலும் வற்றலுறாத நீர். பாழி - நீர் ஊற்றுக்குழி. ஊறி ஊறி இறைக்கின்ற - மேல் மேலும் ஊறித்தர இறைக்கப்படும் நீர், பூழி படு கமர்வாய் நானிலம் -(கோடையின் வெம்மையால்) புழுதிபட்டதும் பிளப்புண்டதுமான நால்வகை நிலம். அருள் நீர், கடல் நீர், வியர்வை நீர். ஊற்று நீர் அல்லாமல் பூமியில் சொல்லுதற்கும் வேறொரு நீர் இல்லை,—என்பது பொருள்.

நால் நிலம் : குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். பாலைக்குத் தனிநிலம் இல்லாமையின் நானிலம் எனப்பட்டது. தாழ்ந்து, அல்லது ஆழ்ந்திருப்பது தாழி; ஆகவே, நீர்நிலையாயிற்று.

19. நீகார மழைபொழிய நித்திலவெண்
குடைநிழற்ற நீல வாட்கண்
பாகாரு மொழிமடவார் மணிக்கவரி
யிருமருங்கும் பயில வீசக்
கார்காலம் புகுந்துசெழுங் காளமுகி
லிரண்டொருபாற் கலந்த தென்ன
ஆகார மழகெறிப்ப விருவருமாங்
குடனிருந்தா ராவி போல்வார்.

[நீகாரம் மழை பொழிய நித்திலம் வெள்குடை நிழற்ற, நீல வாள் கண் பாகு ஆரும் மொழி மடவார் மணி கவரி இரு மருங்கும் பயில வீச, கார்காலம் புகுந்து செழுங் காளம் முகில் இரண்டு ஒருபால் கலந்தது என்ன, ஆகாரம் அழகு எறிப்ப, இருவரும் ஆங்கு உடன் இருந்தார் ஆவி போல்வார்.]

**விளக்கம் :**—நீகாரம் - (நீ ஹாரம்) பனி. நீ காரம் மழை பொழிய - பனிநீர் என்னும் வாசனை கலந்த குளிர்ந்த ஜலத்தைக் கோடையின் வெப்பத்தைத் தணிக்கும் பொருட்டு மிகுதியாகத் தெளிக்க. நித்திலம் - முத்து. பயில வீச - வெப்பம் தணிதற்கு வேண்டிய அளவு காற்று உண்டாகும்படி இடைவிடாது நன்கு வீச, கார்காலம் வந்ததும் செழுங் காளமேகம் இரண்டு ஓரிடத்தே சந்தித்தது என்று சொல்லும்படி, ஆவி ஒத்த நண்பர்களான கிருஷ்ணார்ச்சுனர் இருவரும், ஆகாரம் (உடல்) அழகு வீச அங்கே ஒன்று சேர்ந்து இருந்தனர்,—என்பது, சற்றடிகளின் பொருள். நிறத்தால் காளமுகில் கிருஷ்ணார்ச்சுனர்களுக்கு உவமையாயிற்று.

காவிய இலக்கணத்திற்கு இணங்கப் புலவர் பூக்கொய்தல் நீர் விளையாடல், பொழில் விளையாடல் ஆகியவற்றை இங்கே கூறினாராயிற்று. இனி நிகழவிருக்கும் காண்டவ தகனத்திற்கு இது தோற்றுவாயும் ஆகும்.

அக்கினிதேவன் அவண் வரல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

20. இனிய பான்முகத் தொழுக்குமா குதியென
விலங்குமுப் புரிநூலும்
தனது வெஞ்சிகைக் கொழுந்தெனப் புறத்தினிற்
றாழ்ந்தசெஞ் சடைக்காடும்
புனிதவெண்புகை மருங்குசுற் றியதெனப்
புனைந்தவா டையுமாகி
மனித வேதியர் வடிவுகொண் டவரெதிர்
வன்னிவா னவன்வந்தான்.

[இனிய பால் முகந்து ஒழுக்கும் ஆகுதி என, இலங்கும் முப்புரி நூலும், தனது வெம் சிகை கொழுந்து என புறத்தினில் தாழ்ந்த செம் சடை காடும், புனிதம் வெண் புகை மருங்கு சுற்றியது என புனைந்த ஆடையும் ஆகி, மனித வேதியர் வடிவு கொண்டு அவர் எதிர் வன்னிவானவன் வந்தான்.]

**விளக்கம் :—** வன்னிவானவன் (அக்கினிதேவன்) இனிய பாலை முகந்து ஆகுதியாகச் சொரியும் தாரைபோல் விளங்கிய பூணூலும், தனது வெவ்விய சுவாலை போன்ற பின்புறம் தொங்குவதான செந்நிறச் சடைக்காடும், புனிதமான வெண்ணிறங் கொண்ட புகையானது உடுத்திக்கொண்ட வஸ்திரமும் ஆகி, வேதியர் வடிவங்கொண்டு கிருஷ்ணார்ச்சுனர் முன் வந்தான்,— என்பது பொருள்.

ஆகுதியாகச் சொரியும் பால், பூணூல். தீச்சுவாலை - சடைக்காடு. புகை, வஸ்திரம். காடு என்பது அடர்த்தியைக் குறிக்கும். அக்கினிதேவன் அந்தண வடிவில் அங்கே வந்தான், என்பதாம்.

21. வந்த வந்தணன் வரவுகண் டிருவரும்
வந்தெதிர் வணங்கித்தம்
சிந்தை யன்பொடு வேதிகை யெனத்திகழ்
செம்பொனின் றவிசேற்ற
அந்த ணாளனுங் குழிந்தபொற் கண்ணின
னவிமணங் கமழ்வாயன்
உந்து வெம்பசி பெரிதுவல் லேயெனக்
கோதன மிடுகென்றான்.

[வந்த அந்தணன் வரவு கண்டு இருவரும் வந்து எதிர் வணங்கி தம் சிந்தை அன்பொடு வேதிகை என திகழ் செம்பொனின் தவிசு ஏற்ற, அந்தணாளனும் குழிந்த பொன் கண்ணினன், அவிமணம் கமழும் வாயன் உந்து வெம் பசி பெரிது, வல்லே எனக்கு ஓதனம் இடுக என்றான்.]

**விளக்கம் :—**வேதிகை - பீடம். மேடை. தவிசு - ஆசனம். குழிந்த பொன் கண்ணினனும், அவி (அவிசு) மணம் கமழும் வாயனுமான அந்தண வடிவுகொண்ட அக்கினிதேவன். உந்து பசி - வளர்ந்து மிகும் பசி. வல்லே - சீக்கிரமாக. ஓதனம்-உணவு.

அந்தண வடிவில் கிருஷ்ணார்ச்சுனர் முன் தோன்றிய அக்கினி தேவன், "எனது பசி பெரிது; ஓதனம் இடுக," என்று இரந்து நின்றான், என்க. அவி - ஓமத்தீயில் மந்திர பூர்வமாக அளிக்கப்படும் நெய் முதலிய உணவு. பசி மிகுந்தவிடத்துக் கண் குழிதலும், நிறம் மாறுபடுதலும் இயல்பு.

22. கரிய மேனிய ரிருவருஞ் செய்யபொற்
காயமா முனியுண்டற்(கு)
உரிய போனக மிடுதுமிக் கணத்தென
வுவகையோ டுரைசெய் தார்.

அரிய வாயினும் வழங்குதற் கேற்றன்
வல்லவா யினுந்தம்மின்
பெரிய வாயினு மதி திகள் கேட்டன
மறுப்பரோ பெரியோரே.

]கரிய மேனியர் இருவரும், ''செய்ய பொன்காயம் மாமு'' (வனே)' (நீ) உண்டற்கு உரிய போனகம் இடுதும் இ கணத்துனீ என உவகையோடு உரை செய்தார்; அரிய ஆயினும், வழங்குதற்கு ஏற்றன அல்ல ஆயினும், தம்மின் பெரிய ஆயினும் அதிதிகள் கேட்டன மறுப்பரோ பெரியோர். ஏ : அசை.]

**விளக்கம் :**—''நீ கேட்டது, அரியதோ, தருதற்குரியது அல்லாததோ, மற்று ஈவோர் தம்மினும் பெரியதோ, அது எதுவாயினும் தருவோம்.'' என்று கிருஷ்ணார்ச்சுனர் கூறினர், என்க.

அரிதின் பெற்ற நெல்லிக்கனியை ஔவைக்கு அதியமான் அளித்தது, அரியது. அந்தண வேடங்கொண்டு வந்த சிவபெருமானுக்கு இயற்பகை நாயனார் மனைவியைத் தந்தது வழங்குதற்கு ஏற்றது அல்லாதது. முனிவேடங்கொண்டு போர்க்களம் வந்து இரந்த கண்ணனுக்குக் கர்ணன் தன் புண்ணியத்தை அளித்தது, தம்மின் பெரியது.

''கேட்டது தருவேன்'' என்று கூறிய சிறப்புப் பொருளை, ''எது கேட்பினும் பெரியோர் மறுக்கமாட்டார்'' என்ற பொதுப் பொருளால் சாதிக்கும் இது, வேற்றுப்பொருள் வைப்பின் பாற்படும்.

செம்பொன் காயமுனி - (விளி) செம்பொன் நிறமான தேகத்தையுடைய முனிவனே. கரியமேனியர், கிருஷ்ணார்ச்சுனர்.

23. அளித்து மென்றசொற் றன்செவிப் படுதலும்
பெற்றனன் போலாகி
ஒளித்து வந்தன னிருபிறப் பினனலே
னுதாசன னென்னாமம்
களித்து வண்டிமிர் தொடையலீ ரெனக்குணாக்
காண்டவ மெனுங்கானம்
குளித்த ருந்துதற் கிடங்கொடா னவ்வனங்
கொண்டல்வா கனன்காவல்.

[அளித்தும் என்ற சொல் தன் செவி படுதலும் பெற்றனன் போல் ஆகி, ஒளித்து வந்தனன், இரு பிறப்பினன் அலேன், உதாசனன் என் நாமம், களித்து வண்டு இமிர் தொடையலீர், எனக்கு உணா காண்டவம் எனும் கானம், குளித்து அருந்துதற்கு இடம் கொடான், அ வனம் கொண்டல் வாகனன் காவல், —மூன்று கவிகள் குளகம்].

விளக்கம் :—உதாசனன் - அக்கினி. எனக்கு உணா காண்டவம் - எனக்கு உணவாக வேண்டியது காண்டவம் (என்னும் வனம்). குளித்து - உட்புகுந்து, படித்து. கொண்டல் வாகனன் - இந்திரன். (அவன்) காவல் - அவனது காவலில் இவ் வனம் உளது. அடுத்த செய்யுள்களோடு சேர்ந்து முடியும்.

''உபேந்திரனான கண்ணனும் இந்திரன் மகனாகிய விசயனும் இந்திரனுக்கு உரியதான் வனத்தை எரிக்க அநுமதியாராயின் என் செய்வது?'' என்று, அக்கினி அந்தண வடிவம் கொண்டான், ஆயிற்று. இரு பிறப்பாளன் - பிராமணன்.

24. மிடைந்த நால்வகை மகீருகங் களுநெடு
வெற்பினங் களுந்துன் றி
அடைந்த தானவ ரரக்கர்பே ருரகருக்
காலயங் களுமாகிக்
குடைந்து சோரிகொள் வாளுகி ரரிமுதற்
கொடுவிலங் கினமிக்குக்
கடைந்த கூரெயிற் றாலதக் ககனும்வாழ்
கானன மதுகண்டீர்.

[மிடைந்த நால்வகை மகீருகங்களும் நெடு வெற்பு இனங்களும் துன்றி, அடைந்த தானவர், அரக்கர், பேர் உரகருக்கு ஆலயங்களும் ஆகி குடைந்து சோரி கொள்வாள் உகிர் அரிமுதல் கொடு விலங்கு இனம் மிக்கு, கடைந்த கூர் எயிறு ஆலம் தக்ககனும் [தட்சகனும்] வாழ் கானனம் அது. கண்டீர்.]

விளக்கம் :—மிடைந்த - நெருங்கிய. நால்வகை மகீருகங்கள்- பலவகைப்பட்ட விருக்ஷங்கள். வெற்பு இனம் - மலைக் கூட்டங்கள். துன்றி - நிறைந்து- தானவர் - அசுரர். உரகர் - நாகர் குடைந்து சோரி கொள்வாள் உகிர் அரி - (நகத்தால்) அகழ்ந்து ரத்தத்தைக் குடிக்கும் சிங்கம் (அரி முதலான கொடிய விலங்கினம் மிகுந்து), கடைசல் பிடித்தது போன்ற வழவழப்பினை

யுடைய கூரிய பற்களில் விஷத்தைக்கொண்ட தட்சகன் என்னும் நாகமும் வாழும் கானனம் (காடு) அது; கண்டீர் - அறிவீர்.

விருட்ச வர்க்கங்களும் மலையினங்களும் நிறைந்து, வந்தடைந்த தானவர், அரக்கர், நாகர் ஆயவர்க்கு இருப்பிடமாகி சிங்கம் முதலிய வனவிலங்குகள் மிகுந்து, தட்சகன் என்னும் மா நாகமும் வசிக்கும் காடு அது, என்பது பொருள்.

'கண்டீர்' என்ற முன்னிலைப்பன்மை தேற்றப் பொருளுடைய இடைச்சொல்லாய் நின்றது. தட்சகன், அஷ்டநாகங்களில் ஒன்று.

25. புகுந்தி யான்முகம் வைக்கினேழ் புயலையு
மேவியப் புருகூதன்
தொகுந்த ராதல விறுதிபோ னெடும்புனல்
சொரிந்தவித் திடுமென்னை
முகுந்த னானிரை புரந்தவா றெனவொரு
முனைபட விலக்கிற்பின்
மிகுந்த தாகமு மெண்ணமு முடிந்திடும்
வேண்டுவ திதுவென்றான்.

[புகுந்து யான் முகம் வைக்கின் ஏழ் புயலையும் ஏவி அ புருகூதன் தொகும் தராதலம் இறுதிபோல், நெடும் புனல் சொரிந்து அவித்திடும் என்னை; முகுந்தன் ஆன் நிரை புரந்தவாறு என ஒரு முனை பட விலக்கிற்பின், மிகுந்த தாகமும் எண்ணமும் முடிந்திடும், வேண்டுவது இது என்றான்.]

**விளக்கம் :—**முகம் - வாய். புருகூதன் - இந்திரன். தொகு தராதல இறுகிபோல் - நெருங்கிய உலகின் முடிவு காலம்போல். சொரிந்து - சொரியச் செய்து, (பிறவினைப் பொருளதான் தன்வினை). ஒரு முனை பட தடுக்கிபின் - (மேகங்களை எல்லாம்) ஒரு முகப் படுத்தி தடுப்பதாயின். தாகம் - ஆசை, பசி.

"நான் வனம் புகுந்து உண்ண வாய் வைப்பின், இந்திரன் சப்த மேகங்களையும் ஏவி, யுகாந்த கால மழைபோல் மழை பெய்வித்துத் தடுத்து விடுவானாதலினால், கண்ணன் கோவர்த்தன கிரியால் ஆன் நிரை காத்ததுபோல், மேகங்களை ஒருமுகப் படுத்தித் தடுப்பதானால், என் பசியும் கருத்தும் நிறைவேறும்," என்று அக்கினிதேவன் கூறினான் என்பது பொருள்.

23-வது செய்யுளிலுள்ள **போன்றனனாகி** என்பதிலுள்ள **ஆகி** என்ற வினையெச்சம், இக்கவியில் 'என்றான்' என்ற முற்றைக் கொண்டு முடியும்.

சுவேதகி' என்ற அரசன் சிவபெருமான் ஏவியபடி பன்னிரண்டு வருடகாலம் நெய்யின் தாரையில் அக்கினியை உண்பித்து, அதன்பின் துர்வாஸ முனியைக் கொண்டு ஒரு பெரு வேள்வியைச் செய்து முடித்தான்; இவ் வேள்வியில் நெடுநாள் நெய் உண்டதால் அக்கினி நோயுற்றான். அந்நோயைத் தீர்த்துக்கொள்ளவே, அக்கினி பிரும்மதேவன் கூறியபடி கிருஷ்ணார்ச்சுனர்களை அடைந்து, அவர்களது துணையைப் பெற்றான், என்பது கதை. இதன் விரிவை முதல் நூலில் காண்க.

26. என்றபோதிலுன் னிச்சையின் படியுணா
வீந்தன மிமைப் போதில்
சென்று கொள்கெனத் தனஞ்சயன் கூறலுஞ்
சிந்தைகூர் மகிழ்வெய்தி
மன்ற லந்துழாய் மாயவ னருளினால்
வடிக்கணை மாளாமல்
துன்று தூணியுஞ் சாபமு மிரதமுஞ்
சுவேதவா சியுமீ ந்தான்.

[என்றபோதில் உன் இச்சையின்படி உணா ஈந்தனம், 'இமைப் போதில், சென்றுகொள்,' என தனஞ்சயன் கூறலும், சிந்தைகூர் மகிழ்வு எய்தி, மன்றல் அம் துழாய் மாயவன் அருளினால் வடி கணை மாளாமல் துன்று தூணியும், சாபமும், இரதமும், சுவேதவாசியும் ஈந்தான்.]

**விளக்கம்** :—மன்றல் அம் துழாய் மாயவன் - கண்ணன். வடிக்கணை மாளாமல் துன்று தூணி - கூரிய அம்புகள் எடுக்கக் குறையாமல் நிறையும் அம்பறாத் தூணி. சாபம் - வில். சுவேத வாசி - வெள்ளைக் குதிரைகள்.

அம்பு அறாத் தூணி, வில், இரதம், குதிரைகள் ஆயவற்றைக் கண்ணனது அருளினால் அக்கினிதேவன் விசயனுக்கு ஈந்தான், என்றபடி.

27. ஈந்த வானரப் பதாகை நட்டிரண்
டிவுளியு முடன்பூட்டி
ஆய்ந்த வன்றொழிற் பாகனு மருணனி
லழகுறும் படிதூண்டக்

காய்ந்த சாயக நாழிகை கட்டியக்
காண்டிவங் கரத்தேந்தி
வேய்ந்த மாமணிக் கவசமு மருக்கனி
லழகுற மேற்கொண்டான்.

[ஈந்த வானரம் பதாகை நட்டு, ஈர் இரண்டு இவுளியும் உடன் பூட்டி, ஆய்ந்த வல்தொழில் பாகனும் அருணனில் அழகு உறும்படி தூண்ட, (அருச்சுனனும்) காய்ந்த சாயகம் நாழிகை கட்டி, அ காண்டிவம் கரத்து ஏந்தி, வேய்ந்த மா மணி கவசமும் (ஏற்று), அருக்கனில் அழகு உற (தேரின்) மேற்கொண்டான்.]

**விளக்கம் :**—ஈந்த வானரப் பதாகை - அக்கினிதேவன் தந்த வானரக் கொடி. இவுளி - குதிரை. ஆய்ந்த வல்தொழில் பாகன் - ஆராய்ந்து (போருக்கு ஏற்றபடி) குதிரை செலுத்தும் பாகன். (தேர்ப்பாகன் சூரியனது பாகனான அருணனைப்போல் சிறப் பாகத் தேரைச் செலுத்த). காய்ந்த சாயகம் - கொல்லும் தொழிலைச் செய்யும் அம்பு. நாழிகை - தூணி. மா மணி வேய்ந்த கவசம் - சிறந்த ரத்தினங்களால் இழைக்கப்பெற்ற கவசம். அருக்கன் - சூரியன். அருணனைப்போல் பாகன் தேர் ஓட்ட, சூரியனைப் போல் அருச்சுனன் தேர் ஏறினான்,— என்றபடி.

28. நெஞ்சின் மேலிடு மூக்கமோ டணிதிகழ்
நெடும்புயம் பூரித்துச்
சிஞ்சி னீமுகந் தெறித்தனன் றெறித்தலுந்
தெறித்தபே ரொலிகானின்
விஞ்சி வாழ்வன சத்துவ மடங்கவுள்
வெருவுற வுகாந்தத்து
மஞ்சி னீடுரு மொலியெனப் பரந்தது
வான்முக டுறமன் னோ.

[நெஞ்சில் மேலிடும் ஊக்கமோடு அணி திகழ் நெடும் புயம் பூரித்து, சிஞ்சினீ முகம் தெறித்தனன்; தெறித்தலும் தெறித்த பேர் ஒலி, கானின் விஞ்சி வாழ்வன சத்துவம் அடங்க, உள் வெருவுற, உகாந்தத்து (உக அந்தத்து) மஞ்சின் நீடு உரும் ஒலி என பரந்தது வான் முகடு உற; மன்னோ : அசை ]

**விளக்கம் :**—மேலிடும் - மிகுகின்ற. சிஞ்சினீ முகம் - நாணி யின் இடம். தெறித்த பேர் ஒலி - வெளிப்பட்ட பெரிய ஒலி.

விஞ்சி - மிகுதியாக. வாழ்வன - வாழ்வனவாகிய பிராணிகள். சத்துவம் அடங்க - வலி குன்றி நிற்கவும். வெருவுற - அஞ்சி நடுங்கும்படியும். (யுகாந்த காலத்து மேகத்தினின்று உண்டாகும் இடியின் ஒலிபோல் வான் முகட்டை அளாவிப் பரந்தது அருச்சுனன் தெறித்த வில்லின் நாணொலி என்றபடி).

'சத்துவம்' என்பதற்கு 'ஜந்து' என்ற பொருளும் உளது. கானின் வாழ்வன சத்துவம் அடங்க - காண்டவ வனத்தில் வாழ்வனவான பிராணிகள் எல்லாம், என்பது பொருளாகும்.

29. ஆழி வாயொழு வடவையின் முகத்திடை
யவதரித் தனனென்ன
ஊழி வாயுல கனைத்தையு முருக்குமா
றுடன்றெழுந் தனனென்ன
வாழி வாழியென் றருச்சுனன் கரத்தையும்
வார்சிலை யையும்வாழ்த்திப்
பாழி மேனியை வளர்த்தனன் பாவகன்
பவனனும் பாங்கானான்.

[ஆழிவாய் ஒரு வடவையின் முகத்திடை அவதரித்தனன் என்ன, ஊழிவாய் உலகு அனைத்தையும் முருக்கும் ஆறு உடன்று எழுந்தனன் என்ன, வாழி வாழி என்று அருச்சுனன் கரத்தையும் வார் சிலையையும் வாழ்த்தி, பாழி மேனியை வளர்த்தனன் பாவகன்; பவனனும் பாங்கு ஆனான்.]

**விளக்கம் :—** அக்கினி தேவன், அர்ச்சுனனையும் அவன் கை வில்லையும் வாழ்த்திக்கொண்டே வடவைக் கனல் போலவும், ஊழித் தீ போலவும், வலியுடைய தனது தேகத்தை வளரச் செய்தான்; வாயுவும் அவனுக்குத் துணை யமைந்தான், என்பது பொருள்.

ஆழிவாய் வடவை. கடலினிடத்தே உள்ள ஒரு பெண் குதிரை. அக் குதிரையின் முகத்தில் ஒரு பெருந்தீ அமைந்துள்ளது என்றும், மழை முதலியவற்றால் கடல் நீர் மிகுதியுற்றுக் கரை யிகத்தலைச் செய்யாது காக்கின்றது என்றும் நூலோர் கூறுவர்.

வடவையின் முகத்தில் பிறந்தவன் போலவும், ஊழிக்காலத்தில் உலகத்தை அழிக்கச் சினந்து எழுந்தவன் போலவும், அக்கினி வளர்ந்தான், என்க. பாழி மேனி - வலியுடைய தேகம். பாவகன் - அக்கினி. பவனன் - வாயு. பாவகன் வளர, பவன

னும் அவனுக்குத் துணையானான்; அக்கினியின் எரித்தழிக்கும் காரியம் நடத்தற்கு வாயு, பாங்கு (துணை) ஆனான்.

30. முளமூளவெம் பசியொடுஞ் சினத்தொடு
முடுகிவெய் துறவோடி
வாள மாகவொர் பவளமால் வரைநெடு
வாரியை வளைந்தென்னக்
காள மாமுகி லூர்திநந் தனநிகர்
காண்டவந் தனையண்ட
கோள மீதெழ வளைந்தனன் வரைபடி
கொண்டலுங் குடர்தீய

[மூள மூள வெம் பசியொடும் சினத்தொடும் முடுகி, வெய்து உற ஓடி, வாளம் ஆக ஓர் பவளம் மால் வரை நெடு வாரியை வளைந்து என்ன, காளம் மாமுகில் ஊர்தி நந்தனம் நிகர் காண்டவம் தனை அண்டகோளம் மீது எழ வளைந்தனன், வரை படி கொண்டலும் குடர் தீய.]

**விளக்கம் :**—ஓர் பவள மால்வரை நெடுவாரியை வாளமாக வளைந்தென்ன, மூள மூள...ஓடி, காளமாமுகில்...காண்டவந் தனை, வரை படி கொண்டலும் குடர் தீய, அண்ட கோளமீது எழ வளைந்தனன், என்று அன்வயிக்க.

ஒரு பவளமலை பெரிய சமுத்திரத்தை வட்டமாக வளைந்து சூழ்ந்து கொண்டதுபோல், அக்கினிதேவன், பசியும் சினமும் மிக, விரைந்து, கண்டோர் அஞ்சும்படி ஓடி, இந்திரனது நந்தவனத்தை ஒத்த காண்டவ வனத்தை வரைபடி மேகமும் குடல் தீயும்படி அண்ட கோளத்திற்கு மேலும் தீ எழ வளைந்து சூழ்ந்து கொண்டான்,— என்பது பொருள்.

மூளமூள - மேல் மேல் மூண்டெழும் (பசியொடும் சினத்தொடும்). இதன்முன் பலமுறை இந்திரனால் அக்கினிதேவன் தடுக்கப்பட்டமை சினத்திற்குக் காரணம். காள மா மூகில் ஊர்தி - கரிய பெரிய மேகத்தை வாகனமாக உடைய இந்திரன்.

31. ஆன வாகுலந் தன்னொடு தப்புதற்
கணிபடப் பறந்தோங்கும்
தூநி றத்தன கபோதமொத் தனவிடை
யிடையெழுஞ் சுடர்த்தூமம்

கான மேதியுங் கரடியு மேனமுங்
கடகரிக் குலந்தாமும்
வானி லேறுவ போன்றன நிரைநிரை
வளர்தரு கருந்தூமம்.

[ஆன ஆகுலம் தன்னொடு தப்புதற்கு அணிபட பறந்து ஓங்கும் தூ நிறத்தன கபோதம் ஒத்தன, இடை இடை எழும் சுடர் தூமம்; கானம் மேதியும் கரடியும் ஏனமும் கடகரி குலம் தாமும் வானில் ஏறுவ போன்றன நிரை நிரை வளர்தரு கருந் தூமம்.]

**விளக்கம்** :—இடையிடை எழுஞ் சுடர்த்தூமம் ஆன...கபோதம் ஒத்தன; நிரை நிரை வளர்தரு கருந்தூமம் கான...வானில் ஏறுவ போன்றன, என்று அன்வயிக்க.

ஆன ஆகுலம் - தீயினால் உண்டான துன்பம். அணிபட - வரிசையாக. தூ நிறத்தன கபோதம் - வெண்ணிறத்தவான புறாக்கள். சுடர்த்தூமம் - ஒளியோடு கூடிய வெண்புகை. கான மேதி - காட்டு எருமை. ஏனம் - பன்றி. கடகரி குலம் தாமும் - மதயானைக் கூட்டங்களும். நிரை நிரை - வரிசையாக. வளர்தரு கருந்தூமம் - வளர்ந்து எழும் கரிய புகை.

வெண்புகை, வெள்ளிய புறாக்களையும், கரும்புகை, கான மேதி கரடி ஏனம் கடகரிக் கூட்டங்களையும் ஒத்தன, என்ற வருணனை, தற்குறிப்பேற்றம்.

32. வரைத்த டந்தொறுங் கதுவிய கடுங்கனன்
மண்டலி னகல்வானில்
திரைத்தெ ழுந்தசெம் மரகத கனகவா
ணீலவெண் ணிறத்தூமம்
தரைத்த லத்தினின் றண்டகோ ளகையுறச்
சதமகன் றடஞ்சாபம்
உரைத்த தன்வளை வறநிமிர்ந் தழகுற
வோடுகின் றதுபோலும்.

[வரை தடம் தொறும் கதுவிய கடுங்கனல் மண்டலின் அகல் வானில் நிரைத்து எழுந்த செம் மரகதம் கனகம் வாள் நீலம் வெள் நிறம் தூமம், தரை தலத்தினின்று அண்ட கோளகை உற சதமகன் தடஞ்சாபம் உரைத்த தன் வளைவு அற நிமிர்ந்து அழகு உற ஓடுகின்றது போலும்.]

**விளக்கம் :**—வரைத்தடம் - மலையிடம். மண்டல் - மிகுதல். நிரைத்து - வரிசையாக. செம்மை என்னும் பண்புச் சொல், செம் என்று நின்றது. மரகதம், நீலம், என்பவை பசுமை, கருமை நிறங்களைக் குறித்து நின்றன. சதமகன் தடஞ்சாபம் - வான வில். ஓடுகின்றது - மேல் நோக்கி நீளுகின்றது.

மலைகளிலுள்ள பலவகைப் பொருள்கள் எரிகையில், எரியும் பொருள்களுக்கு ஏற்பப் புகையின் நிறம் வேறு படல் இயல்பு. எனவே, புலவர், செம்மை, பசுமை, பொன்மை, கருமை, வெண்மையாகிய நிறங்களை உடைய புகைக்கு இந்திரவில்லை உவமையாக்கினார். அதாவது, மேல்நோக்கி எழும் புகையானது, வளைவு நிமிர்ந்த இந்திரவில் பூமியிலிருந்து அண்ட முகட்டை நோக்கி நீள்வதை ஒத்தது, என்றார். இதை இல் பொருள் உவமை என்னலாம்.

சுற்றடியிலுள்ள உரைத்த என்பது சொல்லசை; அல்லது, உலகத்தால் வியந்து பேசப்படும் (வில்;) என்றும் பொருள் கொள்ளலாம்.

33. கருதி யாயிர கோடிவெம் புயங்கமிக்
கானிடை யுளவென்று
பருதி சூழ்வர வெருவுபல் குவடுடைப்
பருப்பதங் களின்சாரல்
சுருதி வேள்விநூ றுடையவன் சிறகறத்
துணித்தவாய் தொறும்பொங்கிக்
குருதி பரய்வன போன்றன கொளுந்திய
கொழுந்தழற் கொழுந்தம்மா.

[கருதி ஆயிரம் கோடி வெம் புயங்கம் இ கானிடை உள என்று, பரிதி சூழ்வர வெருவு பல் குவடு உடைய பருப்பதங்களின் சாரல், சுருதி வேள்வி நூறு உடையவன், சிறகு அற துணித்த வாய்தொறும் பொங்கி குருதி பாய்வன போன்றன கொளுந்திய கொழும் தழல் கொழுந்து அம்மா.]

**விளக்கம் :**—புயங்கம் - பாம்பு. பரிதி - சூரியன். குவடு உடை பருப்பதங்கள் - சிகரங்களை உடைய மலைகள். சுருதி வேள்வி நூறு உடையவன் - வேத விதிப்பதி செய்யப்பெற்ற நூறு அச்வமேத யாகங்களை உடையவனான இந்திரன். கொளிந்திய கொழும் தழல் - பற்றிய மிகுதியான தீச்சுவாலை. இராகு

கேதுகள் தனக்குப் பகையாதல்பற்றி பாம்புக்குப் பரிதி அஞ்சினானாயிற்று. சூரியன் வலம்வர அஞ்சும்படி பாம்புகளை மிகுதியாகக்கொண்ட மலைச்சாரல்களைப் பற்றிய தீச் சுவாலைகள் இந்திரன் மலையின் சிறகுகளைத் துணித்த வாயிடங்களிலிருந்து குருதி பொங்கிப் பாய்வதை ஒத்தன, என்றபடி. இது, தற்குறிப்பேற்றத்தின்பாற்படும். அம்மா; சுற்றசை' வியப்புமாம்.

34. கோத்தி ரங்களின் கவானிடைக் கதுமெனக்
கொளுந்தியுற் றெரிகின்ற
தீத்தி றங்கள்செங் காந்தளு மசோகமுஞ்
செங்குறிஞ் சியுஞ்சேரப்
பூத்த வொத்தன வன்றியுங் குலிகநீர்
பொழியரு வியும்போன்ற
பார்த்த கண்கள்விட் டேகலா வகைநிறம்
பரந்ததா துவும்போன்ற.

[கோத்திரங்களின் கவானிடை கதுமென கொளுந்தி உற்று எரிகின்ற தீ திறங்கள் செம் காந்தளும் அசோகமும் செம் குறிஞ்சியும் சேர பூத்த ஒத்தன; அன்றியும், குலிகம் நீர் பொழி அருவியும் போன்ற, பார்த்த கண்கள் விட்டு ஏகலா வகை நிறம் பரந்த தாதுவும் போன்ற.]

**விளக்கம்** :—கோத்திரம் - மலை. கவான் - இடைப் பகுதி, பக்கம். கதுமென - விரைவாக. தீ திறங்கள் - தீச்சுவாலை களின் பகுதிகள். குலிகநீர் - சாதிலிங்கம் போன்ற சிவந்த நீர். தாது - காவிக்கல்.

மலையிடங்கள் தோறும் பற்றி யெரியும் தீச்சுவாலைகள், செங்காந்தள், அசோகு, செங்குறிஞ்சியாகிய விருக்ஷவர்க்கங்கள் ஒருங்கே பூத்தன போலவும், குலிகநீர் பொழியும் அருவி போலவும், செந்நிறம் பரந்த காவிக் கல்லைப் போலவும் இருந்தன என்று வருணித்தபடி. 'பார்த்த கண் விட்டேகலா வகை நிறம் பரந்த,' என்றது காவிக் கல்லின் அழகினைப் பாராட்டுங் கருத்தது.

35. தளைத்த பாதவத் தலைதொறும் பற்றின
சருகுதிர்த் திளவேனில்
கிளைத்து மீளவும் பொறியளி யெழவளர்
கிசலயங் களும்போன்ற

திளைத்த வேர்முதற் சினையுற வெரிவன
தீபசா லமும்போன் ற
வளைத்த கானிடை மெலமெல வுட்புகு
வன்னியின் சிகாவர்க்கம்.

[தளைத்த பாதவம் தலைதொறும் பற்றின, சருகு உதிர்த்து இளவேனில் கிளைத்து மீளவும் பொறி அளி எழ வளர் கிசலயங்களும் போன்ற, திளைத்த வேர் முதல் சினை உற எரிவன தீப சாலமும் போன்ற, வளைத்த கானிடை மெலமெல உள் புகு வன்னியின் சிகா வர்க்கம்]

**விளக்கம் :**—வளைத்த கானிடை...சிகா வர்க்கம், தளைத்த பாதவம்...தீப சாலமும் போன்ற என்று அன்வயிக்க.

தளைத்த பாதவம் - அழகினால் மனத்தை பிணித்து இழுக்கும் மரங்கள். பொறி அளி எழ - பொறி வண்டுகள் மொய்த்து எழ. கிலசயம் - தளிர். திளைத்த - நெருங்கிய. தீப சாலம் - தீபங்களின் கூட்டம். வன்னி - அக்கினி, சிகாவர்க்கம் - சுவாலைத் தொகுதி.

(அக்கினி) வளைத்துக்கொண்ட காண்டவ வனத்திலே மெல்ல மெல்லப் புகும் அக்கினியின் சுவாலைத் தொகுதி தளைத்த பாதவத் தலைதொறும் பற்றி எரியும் நிலையில், (பின்பனியில்) சருகு உதிர்த்து, இளவேனிலில் பொறிவண்டுகள் மொய்த்து எழும்படி மீளவும் கிளைத்து வளரும் செந்தளிர்களை ஒத்தன; திளைத்த (நெருங்கிய) வேர் முதல் கிளை மூடியப் பற்றி எரியும் நிலையில் (அக்கினி சுவாலைகள்) தீப சாலத்தை ஒத்தன,—என்பது பொழிப்பு.

மரங்களின் மேல்பாகம் எரியும்போது அக்கினி சுவாலைகள் தளிர்த்த மரங்களையும், அடிபாகம் எரியும்போது தீபங்களையும் போன்றிருந்தன, என்றார்

36. தழைத்த பேரொளித் திவாகரன் கரங்கள்போய்த்
தடவியவ் வடவிக்கண்
பிழைத்த காரிருட் பிழம்பினை வளைந்துடன்
பிடித்தெரிப் பனபோலும்
முழைத்த வான்புழை யொருகரத் திருபணை
மும்மதப் பெருநால்வாய்
மழைத்த குஞ்சர முகந்தொறும் புக்குடன்
மயங்கிய பொறிமாலை.

[தழைத்த பேர் ஒளி திவாகரன் கரங்கள் போய் தடவி அ அடவிக் கண் பிழைத்த கார் இருள் பிழம்பினை வளைந்து உடன் பிடித்து எரிப்பன போலும் முழைத்த வான் புழை ஒரு கரத்து இரு பணை மும்மதம் பெரு நால்வாய் மழைத்த குஞ்சரம் முகந் தொறும் புக்கு உடன் மயங்கிய பொறி மாலை.]

**விளக்கம் :**—மூன்று கவிகளால் அக்கினி சுவாலையை வரு ணித்த புலவர். இதனில் தீப் பொறிகளை வருணிக்கின்றார்.

முழைத்த...மயங்கிய பொறிமாலை, அவ் அடவிக்கண் (ஓடிப்) பிழைத்த காரிருட் பிழம்பினை, தழைத்த பேரொளித் திவாகரன் கரங்கள் போய்த் தடவி வளைந்து உடன் பிடித்து எரிப்பன போலும்,—என்பது அன்வயம்.

தழைத்த - அடர்ந்த, நிறைந்த. பிழைத்த - ஓடிச்சென்று ஒளிந்து வாழ்ந்த. இருள் பிழம்பு - இருளின் திரட்சி, கூட்டம் முழைத்த... மழைத்த குஞ்சரம் - மலைக் குகையைப் போன்ற தான பெரிய துவாரத்தை உடையது ஒரு துதிக்கையையும், இரு தந்தங்களையும், மூவகைப்பட்ட மதத்தையும், பெரிய தொங்கு தலையுடைய வாயையும் உடைய, மேகத்தை ஒத்த யானைகள். முகந்தொறும் புக்கு உடன் மயங்கிய பொரிமாலை. (அந்த யானைகளின்) முகங்கள் தோறும் புகுந்து உடனே கலந்து எரியும் தீப்பொறிகளின் வரிசை.

யானைகளின் முகங்களில் புகுந்து உட்கலந்து எரியும் தீயின் பொறி வரிசை, காரிருள் பிழம்பினைச் சூரியனது கிரணங்களாகிய கரங்கள் தடவிப் பிடித்து அழித்தலை ஒக்கும், என்றார். இது, தற்குறிப் பேற்றத்தின் பாற்படும். முழை - மலைக் குகை. மயங்கிய - கலந்த.

இருட் பிழம்பும், சூரிய கிரணமும் யானைக்கும், தீப்பொறி வரிசைக்கும் முறையே உவமை. பகை அஞ்சியவர் ஓடி ஒளித்தல் இயல்பாதல் பற்றிப் 'பிழைத்த இருட் பிழம்பு' என்றார். மூன் றாவது அடியில், ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்ற சொல் லமைப்பின் நயம் நோக்குக.

37. அரியெ னும்பெயர் பொறாமையிற் போல்விரைந்
தழற்கொழுந் துளைபற்றக்
கிரிமு ழைஞ்சுக டொறும்பதைத் தோடின
கேசரிக் குலமெலாம்

விரியு ரோமவா லதிகளிற் பற்றலின்
விளிவுடைச் சரபங்கள்
எரிகொள் சோகவெங் கினலினா னன்றுநின்
றிறந்தன சலியாமல்.

[அரி எனும் பெயர் பொறாமையின்போல் விரைந்து அழல் கொழுந்து உளைபற்ற, கிரி முழைஞ்சுகள் தொறும் பதைத்து ஓடின கேசரி குலம் எலாம், விரி உரோம வாலதிகளில் பற்றலின் விளிவு உடை சரபங்கள், எரிகொள் சோகம் வெம் கனலினால் நின்று நின்று இறந்தன சலியாமல்.]

**விளக்கம்:**—இதுவும் இதைத் தொடரும் ஆறு செய்யுள்களும் பலவகைப்பட்ட பிராணிகள் எரிபட்டு அழிதலைக் கூறும்.

அரி - சிங்கம் அக்கினி. தழல் கொழுந்து, (அக்கினி சுவாலை) அரி என்னும் பெயர் (சிங்கத்திற்கும் இருப்பதை) பொறாமையின் பயன்போல், விரைந்து (சிங்கத்தின்) பிடரி மயிரைப் பற்றலும் கேசரிக் குலம் (சிங்கக் கூட்டங்கள்) மலைக் குகைகள் தோறும் ஓடி ஒளிந்தன,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

விளிவுடைச் சரபங்கள் - கடும்கோபமுடைய, அல்லது கொல்லுதலைச் செய்கின்ற சரபங்கள் (அவற்றின்) அடர்ந்த மயிர்களையுடைய வாலதிகளில் (வால்களில்) எரி பற்றியதினால், (அத் தீ எரிக்குமுன்) உள்ளத்தில் எரிதலைக்கொண்ட சோக மாகிய வெங்கனலினால் சரபங்கள் சலியாமல் (அசையாமல்) நின்று இறந்தன, என்பது ஈற்றடிகளின் பொருள்.

அரி என்ற பெயர் சிங்கத்திற்கு இருப்பதைப் பொறாமல் அதன் பிடரி மயிரில் தீப்பற்றியது, என்றது தற்குறிப்பேற்றம். 'நின்று நின்று' என்றது, சரபம் தப்பி ஓட நினையாமையைக் குறிக்கும்.

விழைவுடைச் சவரம், என்றும், விளிவுடைச்சவரம் என்றும் அச்சில் உள்ள பாடங்கள் செருகல், என்பர். சரபம் - சிங்கத்தையும் அழிக்கவல்ல விலங்கு; எட்டுக் கால்களை உடைய பறவை, என்றும் கூறுவர். அரியின் பின் அதனையும் அழிக்க வல்ல சரபம் வரவே அமையும். கவரிமான் என்ற பொருளுடைய சரவம் அமையாது.

38. எப்பு றத்தினும் புகுந்துதீச் சூழ்தலி
னேகுதற் கிடமின்றித்

தப்பு தற்கருத் தழிந்துபே ரிரலையோ
டுழையினந் தடுமாற
மெய்ப்பு றத்துவெண் புள்ளிசெம் புள்ளியாய்
விடும்படி விரைந்தோடி
அப்பு றத்துவீழ் பொறிகளவ் வவற்றினை
யலங்கரித் தனவன்றே.

[எ புறத்தினும் புகுந்து தீ சூழ்தலின் ஏகுதற்கு இடம் இன்றி, தப்புதல் கருத்து அழிந்து, பேர் இரலையோடு உழை இனம் தடுமாற, மெய் புறத்து வெள் புள்ளி செம்புள்ளி ஆய் விடும்படி விரைந்து ஓடி அ புறத்து வீழ் பொறிகள் அவ்வவற்றினை அலங்கரித்தன, அன்றே ]

**விளக்கம் :**—இரலை - ஆண்மான்; உழை - பெண் மான். இரலை, உழை என்பவற்றை மானின் சாதிபேதமாகவும் கொள்ளலாம். மெய்ப்புறம் - உடல் புறம் அப்புறத்து - அந்த உடல் புறத்திலே. மான்கள் தப்புதற்கு வழி தெயாமல் கலங்கி நிற்கையில், (மான்களின்) உடல் புறத்து வெண் புள்ளிகள் செம் புள்ளியாய் மாறும்படி, அந்த (மான்களின்) உடல் புறத்தில் விழும் தீப்பொறிகள் அவ்விருபால் மான்களையும் அலங்கரித்தன; என்பது பொருள். அன்றே: ஈற்றசை.

மெய்ப்புறத்து வெண் புள்ளிகள் தீயினால் செம்புள்ளிகளாயின, என்றது பிறிதின் குணம் பெறலணி ஆகும்.

39. காழு டைப்புறக் கழைகளின் துளைதொறும்
கால்பரந் திசைக்கின்ற
ஏழி சைக்குள முருகிமெய் புளகெழ
விரைகொளு மசுணங்கள்
தாழ ழற்சுடர் சுடச்சுட வெடித்தெழு
சடுலவோ சையின் மாய்ந்த
ஊழி யிற்புய லுருமினான் மடிந்திடு
முரகர்தங் குலம்போன்ற.

[காழ் உடை புறம் கழைகளின் துளைதொறும் கால் பரந்து இசைக்கின்ற ஏழ் இசைக்கு உளம் உருகி மெய் புளகு எழ இரை கொளும் அசுணங்கள், தாழ் அழல் சுடர் சுட சுட வெடித்து எழு சடுல ஓசையின் மாய்ந்த; ஊழியின் புயல் உருமினால் மடிந்திடும் உரகர் தம் குலம் போன்ற.]

**விளக்கம் :**—காழ் - வயிரம். வயிரம் பாய்ந்த புறத்தையுடைய கழைகளின் (மூங்கில்களின் துளை தொறும் கால் (காற்று) பரந்து இசைக்கின்ற ஏழு வகையான சுரங்களுக்கு (அதாவது சுரங்களைக் கேட்டு) உள்ளம் உருகி, மெய்யில் புளகம், உண்டாக (அவ்விசையை) இரையாகக் கொண்டு மகிழும் அசுணப் பறவைகள், தாழ் [மிகுதியான] அழல் சுடர் அதிகம் சுடுதலால் [அம் மூங்கில்கள்] வெடித்தலினால் உண்டாகும் பயங்கரமான சடுல ஓசையினால் மாய்ந்தன; (அதாவது, ஒலியின் இனிமையை மகிழ்ந்திருந்த அசுணங்கள் தீயில் பட்டு மாளுமுன் ஒலியின் கடுமையைக் கேட்டே மாய்ந்தன என்பதாம்). (அவ்வாறு இறந்த அவை) ஊழிக் காலத்தில் எழும் மேகங்களின் இடியோசையினால் மடிந்தழியும் நாக சாதியின் குலத்தை ஒத்தன, என்க.

தீப்பற்றி எரியுங்கால் உண்டாகும் வெடிப்பொலியைச் சடுலவோசை என்பர். இசைக்கு இளகும் தன்மையவான அசுணங்கள் பறையொலி போன்ற கடிய ஓசையைக் கேட்க மாயும், என்பர்.

தீயினாலன்றிச் சடுலவோசைக்கு இறந்துபட்ட அசுணங்களுக்குக் கற்பாந்த காலத்து இடியோசைக்கு மாளும் உரகர் (நாகர்) குலம் உவமையாயிற்று.

40. அனைய போதிலவ் விபினசா லங்களி
னார்தருக் களினீண்ட
சினைக டோறும்வாழ் சிகாவல கலாபமேற்
செறிதரு தீச்சோதி
பனையி னீளுடற் பணிகளை யலகினாற்
பற்றலிற் படப்பந்திப்
புனையு மாமணி திழல்பரந் தெழுந்தெனப்
பொலிந் திலங் கினமாதோ.

[அனையபோதில் அ விபின சாலங்களின் ஆர் தருக்களின் நீண்ட சினைகள் தோறும் வாழ் சிகாவலம் கலாபமேல் செறி தரு தீ சோதி, பனையின் நீள் உடல் பணிகளை அலகினால் பற்றலின், படம் பந்திபுனையும் மா மணி நிழல் பரந்து எழுந்தது என பொலிந்து இலங்கின, மாதோ.]

**விளக்கம் :**—விபினம் - காடு. சாலம் - கூட்டம். சிகாவலம்- மயில். பணி - பாம்பு. படம்பந்தி - படவரிசை. (படப்

பந்தியிலுள்ள) அழகுசெய்யும் சிறந்த நாகரத்தினத்தின் ஒளி (மயிலின் தோகைமேல்) பரவி விளங்கினாற்போல் அழகு மிகுந்து விளங்கின, என்பது சற்றடியின் பொருள்.

மரக்கிளைகளில் வாழும் மயில்களின் தோகையில் பற்றிய தீ, அம் மயில்கள் அலகினால் பற்றிச் செல்லும் பெரும் பாம்புகளின் படவரிசையிலுள்ள மாணிக்கங்களின் பிரகாசம் தோகையின்மேல் பரவி விளங்குதல்போல் இருந்தது, என்றார். இது தற்குறிப்பேற்றம்.

41. ஆசு கன்றனோ டடவியை வளைத்தன
னாசுசுக் கணிமேன்மேல்
வீசு கின்றபு லிங்கசா லமும்புகல்
வேறெமக் கிலதென்று
பாசி ளங்கிளி பூவைகள் வெருவிமெய்
பதைத்துளந் தடுமாறிப்
பேசு கின்றசொற் கேட்டலு நடுங்கின
பிறபற வைகளெல்லாம்.

[ஆசுகன தனோடு அடவியை வளைத்தனன் ஆசுசுக்கணி, மேல் மேல் வீசுகின்ற புலிங்க சாலமும், புகல் வேறு எமக்கு இலது என்று, பசு இளங்கிளி பூவைகள் வெருவி மெய் பதைத்து உளம் தடுமாறி பேசுகின்ற சொல் கேட்டலும், நடுங்கின பிற பறவைகள் எல்லாம்.]

**விளக்கம் :—** ஆசுகன் - வாயு. ஆசுசுக்கணி - அக்கினி. புலிங்கம் - அனல் பொறி. சாலம் - கூட்டம். பசு(மை) இளங்கிளி - பசிய இளமையான கிளி.

ஆசுகன் தன்னோடு ஆசுசுக்கணி அடவியை வளைத்துக் கொண்டான்; புலிங்க சாலமும் (பொறிகளும்) மேன்மேலும் வீசி எரிகின்றன; ஆகவே, கிளிகளும் பூவைகளும் புகலிடம் தமக்கு வேறு இல்லை என்று அஞ்சி மெய் பதைத்து உள்ளந் தடுமாறிப் பேசுகின்ற சொல் கேட்டு மற்றப் பறவைகள் எல்லாம் நடுங்கலாயின, என்பது பொருள்.

பூவையும் கிள்ளையும் பேசுந் திறமுடையவை. மற்றப் பறவைகள், பேச்சின் பொருளை உணர்ந்திலவாயினும், அவை அஞ்சி நடுங்கிப் பேசுங்குறிப்பினால், ஆபத்தை அறிந்து நடுங்கலாயின. அக்கினிக்கு நண்பன் வாயு. வாயுவும் தீயோடு

சேர்ந்து கொண்டமையின், பறவைகள் தப்பிச் செல்வது அரிதாயிற்று, என்பது கருத்து.

42. நெஞ்சி லீரமு நீதியுங் குடிபுகா
நிருதர்சென் னியின்வன்னி
குஞ்சி நீடுற வளர்வபோ லசைந்துசெங்
கொழுந்துவிட் டனமேன்மேல்
வஞ்சி நேரிடை யரக்கியர் நகமுழு
மதிசிவப் புறத் தீட்டும்
பஞ்சி போன் றன வவரவர் பதயுகம்
பற்றிய சிகைவன்னி.

[நெஞ்சில் ஈரமும் நீதியும் குடிபுகா நிருதர் சென்னியின் வன்னி, குஞ்சி நீடுற வளர்வபோல் அசைந்து செம்கொழுந்து விட்டன மேல் மேல்; வஞ்சி நேர் இடை அரக்கியர் நகம் முழுமதி சிவப்பு உற தீட்டும் பஞ்சி போன்றன அவர் அவர் பதயுகம் பற்றிய சிகைவன்னி.]

**விளக்கம் :—**சென்னியின் வன்னி - தலையினிடத்தே பற்றிய தீச்சுவாலைகள். பதயுகம் - இரு பாதங்கள். சிகைவன்னி - வன்னியின் சிகை. தீச்சுவாலைகள்.

அன்பும் நீதியும் நெஞ்சில் குடிப்புகா அரக்கர் சென்னியின் பற்றிய தீச்சுடர் அவர்தம் செந்நிறக் குஞ்சி (தலைமயிர்) நீண்டு வளர்வதுபோல் அசைந்து மேலும் மேலும் கொழுந்துவிட்டு எறிந்தன; வஞ்சிநேர் இடை அரக்கியரின் இரண்டு கால்களிலும் பற்றிய தீச்சுவாலைகள், அந்த அந்த அரக்கியரின் நகங்களாகிய முழுமதிகள் செந்நிறம் ஊறும்படி ஊட்டும் செம்பஞ்சுக் குழம்புகளை ஒத்தன, என்பது பொருள்.

அரக்கர் தலையில் பற்றிய தீ அவர்களது செம்பட்ட மயிரையும், அரக்கியரின் காலிற் பற்றிய தீ நகத்திற்கு அவர் ஊட்டிய செம்பஞ்சுக் குழம்பையும் ஒத்தன, என்க.

43. முப்பு ரங்களை முக்கணன் முனிந்தநாண்
மூவரம் முழுத்தீயில்
தப்பி னாருளர் காண்டவ வடவிவாழ்
தானவ ரியாருய்ந்தார்

பைப்பு றத்தணி மணியொளி பரந்தெனப்
பஃறலை களிற்பற்றி
வெப்பு றுத்தலி னுரகருந் தங்கள்வாய்
விடங்கள்கொன் றெனவீழ்ந்தார்.

[முப்புரங்களை முக்கணன் முனிந்த நாள் மூவர் அ முழு தீயில் தப்பினார் உளர், காண்டவம் அடவி வாழ் தானவர் யாரீ உய்ந்தாரீ? பை புறத்து அணி மணி ஒளி பரந்(த)து என, பல் தலைகளில் பற்றி வெப்பு உறுத்தலின், உரகரும் தங்கள் வாய் விடங்கள் கொன்றென (கொன்ற என) வீழ்ந்தார்.]

**விளக்கம் :**—முப்புரங்களைச் சிவபிரான் எரித்தபொழுது, அத் தீயினின்று, தப்பினோர் மூவர் உளர்; மற்று இக்காண்டவ தகனத் தீயினின்று, அவன் வாழ்ந்த தானவரில் தப்பிப் பிழைத்த எவரும் இலர், என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

நாகலோக வாசிகளும், தம் படங்களிடத்துள்ள அழகிய ரத்தினத்தின் செந்நிற ஒளி பரவியதுபோல் (தீ) பல தலைகளில் பற்றி வெப்பத்தை மிகுவிப்பதனால், தங்கள் வாயிலுள்ள விஷமே கொன்றாற் போல் இறந்து வீழ்ந்தனர், என்பது ஈற்றடிகளின் பொருள்.

பைப்புறம் - படங்களினிடம் அல்லது, படங்களின் மேற் புறம். பல்-தலை - பஃறலை.

"அசுர நாசம்செய்த காரியத்தில் மூவரைத் தப்பவிட்ட முப்புர தகனத்திலும், மிச்சமின்றித் தானவரை அழித்த காண்டவதகனம் உயர்ந்தது" என்று புலவர் எடுத்துக் காட்டியது, வேற்றுமையணியின் பாற்படும்.

காண்டவதகனத்தை இந்திரன் அறிதல்

44. புகைப டப்படக் கரிந்தன பொறியினாற்
பொறியெழுந் தனவானின்
மிகைப டைத்தவச் சுரபதி யாயிரம்
விழிகளுங் கணப்போதில்
தகைவ றக்கழை முதலிய தருக்களின்
சடுலவா ரவமிஞ்சித்
திகைய னைத்தினும் பரத்தலிற் செவிகளுஞ்
செவிடுபட் டனசேர.

[புகை பட பட கரிந்தன, பொறியினால் பொறி எழுந்தன, வானின் மிகைபடைத்த அ சுரபதி ஆயிரம் விழிகளும் கணம் போதில் தகைவு அற கழை முதலிய தருக்களின் சடுல ஆரவம் மிஞ்சி, திகை அனைத்தினும் பரத்தலின் செவிகளும் செவிடு பட்டன சேர.]

**விளக்கம் :—**வானின் சுரபதி மிகைபடைத்த ஆயிரம் விழிகளும் கணம் போதில் புகை படபட கரிந்தன; பொறியினால் பொறி எழுந்தன; கழை முதலிய தருக்களின் சடுல ஆரவம் மிஞ்சி தகைவு அற திகை அனைத்தினும் பரத்தலின் (கரிந்த கண்களோடு) செவிகளும் சேர செவிடுபட்டன,— என்பது அன்வயம்.

வானின் சுரபதி - இந்திரன். மிகை படைத்த அ ஆயிரம் விழிகள். கௌதம சாபத்தால் மிகையாகப் பெற்ற அந்த ஆயிரம் விழிகள். (இயற்கையாய் அமைந்த கண்களோடு சாபத்தின் நேர்ந்த அவ் விழிகளும் புகைப்படக் கணப்போதில்) கரிந்தன - கருகின; அதனால் எழுந்த சினத்தினாலும் கருகின. பொறியினால் பொறி எழுந்தன - புகையினின்று வெளிப்பட்ட தீப்பொறிகள் தாக்குதலினால், கண்களிலிருந்தும் தீப்பொறிகள் வெளிப்பட்டன. சடுல ஆரவம் - பயங்கர ஒலி. மிஞ்சி - மிகுந்து. தகைவு அற - தடை ஒன்றும் இல்லாமல். திகை - திசை. செவிகளும் சேர செவிடு பட்டன - இரு காதுகளும் ஒருங்கே செவிடாயின.

எரியும் தீயின் புகையும் வெளிப்படும் பொறிகளும் சடுல ஓசையும் இந்திரலோகத்தை எட்ட, அதைக் கண்ட இந்திரன் கண்கள் சினத்தினால் கருகிக் கோபக்கனலை வெளிப்படுத்தின, கேட்ட காதையும் செவிடுபடச் செய்தன, என்பதாம்.

பழியோடு, இப்பொழுது புகையினாலும் தீப் பொறிகளாலும் வருத்தம் மிகுதற்கு ஏதுவாதல் பற்றி, "மிகை படைத்த ஆயிரங் கண்கள்" எனப்பட்டது.

**எழுசீர் ஆசிரிய விருத்தம்**

45. விரதமேற் கொண்டு செம்பொன்மால் வரையை
விரிசுடர் சூழ்வரு வதுபோல்
இரதமேற் கொண்ட வநுசனுந் சுதனு
மிபைப்பினிற் பன்முறை தேர்ந்து

சரதமேற் கொண்டு சரிப்பதுந் தனது
தாவகம் பாவகன் புகுந்து
பரதமேற் கொண்டு நடிப்பதுங் கருதிப்
பார்த்தனன் பாகசா தனனே.

[விரதம் மேற்கொண்டு செம்பொன்மால் வரையை விரிசுடர் சூழ் வருவதுபோல், இரதம் மேற்கொண்ட அநுசனும் சுதனும் இமைப்பினில் பல்முறை தேர்ந்து, சரதம் மேற்கொண்டு சரிப்பதும், தனது தாவகம் பாவகன் புகுந்து பரதம் மேற்கொண்டு நடிப்பதும் கருதி பார்த்தனன் பாகசாதனன்; ஏ.]

**விளக்கம் :**—விரதம் - செய்கடன், நியதி. விரிசுடர் - சூரியன். விலக்கரிய விரதத்தை மேற்கொண்டு சூரியன் மேரு மலையை வலம் வருவதுபோல்,—என்பது முதலடியின் பொருள். அநுசன் - இந்திரன் தம்பியாக உபேந்திரன் என்ற பெயர் கொண்டு தோன்றிய கண்ணன் சுதன் - இந்திரன் மகனான அருச்சுனன். சரதம் - அக்கினிதேவனுக்குத் துணை செய்வதாகக் கூறிய உறுதி மொழி. சரிப்பு - சஞ்சரிப்பு, இடைவிடாது சுற்றி வருகை. தாவகம் - காடு. பாவகன் - அக்கினி. பரதம் மேற்கொண்டு நடிப்பது - கூத்திடுவது, (அதாவது, அக்கினி மேல்நோக்கி எழுந்தெழுந்து கிளர்ந்து எரிதல்). பாகசாதனன் கருதி பார்த்தான் - இந்திரன் கூர்ந்து நோக்கினான். கிருஷ்ணனும் அருச்சுனனும் அக்கினிக்குக் கூறிய உறுதிமொழியை மேற்கொண்டு அதற்கு விக்னம் ஏற்படாமைக்குரிய வழியை ஆராய்ந்து, சூரியன் மேருவைச் சுற்றுவதுபோல், காண்டவ வனத்தைப் பலமுறை (அடிக்கடி) சுற்றி வரலையும், தாவகத்தில் பாவகன் புகுந்து கூத்திடுவதையும் இந்திரன் கூர்ந்து நோக்கினான்,—என்பது பொருள்.

காட்டுத்தீ என்ற பொருளுடைய **தாவம்** என்ற சொல், இங்கே காடு என்ற பொருளில் வந்துளது.

46. முந்திவார் சிலைக்கை பற்குனன் றொடுத்த
முரணுடை மூரிவெங் கணைகள்
உந்திவா ளுரகர் சூடிகா மகுட
கோடிக ளுடைத்தலி னுடைந்து
சிந்திமீ தெழுந்த மணிகளு மனலின்
சிகைகளிற் றெறித்தெழு பொறியும்
இந்திரா லயத்துக் கேற்றிய தீப
மென்னநின் றிலங்கின வெங்கும்.

[முந்தி வார்சிலை கை பற்குனன் தொடுத்த முரண் உடை மூரி வெம் கணைகள் உந்தி, வாள் உரகர் சூடிகா முகுட கோடிகள் உடைத்தலின் உடைந்து சிந்தி மீது எழுந்த மணிகளும், அனலின் சிகைகளின் தெறித்து எழு பொறியும் இந்திராலயத்துக்கு ஏற்றிய தீபம் என்ன நின்று இலங்கின எங்கும்.]

**விளக்கம் :—**முந்தி - வேகமாக. மூரி - பெருமை. உந்தி - சென்று தாக்கி. வாள் உரகர் - பளபளப்புடைய நாகர். சூடிகா - உச்சிக் கொண்டை. மகுட கோடி - முடிகளின் நுனி. அனலின் சிகைகளின் தெறித்து எழுந்த - அக்கினியின் சுவாலைகளிலிருந்து வெளிப்பட்டு மேல்நோக்கி எழுந்த. இந்திராலயம் - (இந்திர அலயம்) இந்திரன் வாழும் இடம். எங்கும் நின்று இலங்கின - வானவெளி எங்கும் நின்று பிரகாசித்தன.

அருச்சுனனது அம்பு தாக்கி வீழ்த்திய உரகரின் முடிமணிகளும், தீச்சுவாலைகளும் வானெழுந்து இந்திராலயத்திற்கு ஏற்றிய தீபங்கள் போன்றன,—என்க. இது **தற்குறிப்பேற்ற அணி.**

47. தானவர் புரங்க ணீறெழ முனிந்த
தமனியச் சிலைக்கைவெள் ளூர்தி
ஆனவ னமது புரத்தையுஞ் சுடுவா
னழன்றனன் போலுமென் றஞ்சி
வானவர் நடுங்க வானவர்க் கரசாம்
வலாரியு மனனுறத் தளர்ந்து
கானவ ருடனே தக்கக னென்னுங்
கட்செவி கெடுமெனக் கரைந்தான்.

[தானவர் புரங்கள் நீறு எழ முனிந்த தமனியம் சிலைகை வெள் ஊர்தி ஆனவன் நமது புரத்தையும் சுடுவான் அழன்றனன் போலும், என்று அஞ்சி வானவர் நடுங்க, வானவர்க்கு அரசாம் வலாரியும் மனன் உற தளர்ந்து, கானவருடனே தக்ககன் என்னும் கட் செவி கெடும் என கரைந்தான்.]

**விளக்கம் :—**தமனியம் - பொன். சிலைகை - மேரு மலையாகிய வில்லைக் கை ஏந்திய. வெள்ளூர்தி - வெள்ளிய ரிஷபத்தை வாகனமாகவுடைய சிவபிரான்,, (அன்மொழித் தொகை). அழன்றனன் போலும் - கோபித்தான் போலும். வலாரி - இந்திரன் (வலன் என்னும் அசுரனை அழித்தவன்.) கட்செவி - கண்களை செவிளாக உடைய நாகம். மனன் உற தளர்ந்து கரைந்தான் - மனம் மிகத் தளர்ந்து கரைந்தான்.

சிவபிரான் அக்கினி வடிவினன். எனவே, காண்டவத்தை எரிக்கும் நெருப்பைச் சிவ சொரூபமாகத் தேவர் கருதினர், என்க. '**சிலை**' என்பது இங்கே மலையையும் வில்லையும் குறித்து நின்றது.

முப்புரம் எரித்த சிவபிரான் நமது புரத்தையும் சுடுவதற்காக அழன்றனன் போலும், என்று தேவர் நடுங்க, தேவர்கோன், காட்டில் உள்ளாருடன், அங்கே வசித்து வரும் தக்ஷகனென்னும் நாகமும் அழியுமே, என்று வருந்தினான், — என்பதாம்,

**இந்திரன் போரெழல்**

48. **பரந்தெழு புகையாற் றத்தம வடிவம்**
**பண்டையிற் பதின்மடங் காகச்**
**சுரந்திடும் புயல்க ளனைத்தையு நெடுநீர்**
**சொரிந்தவித் திடுகெனச் சொல்லி**
**நிரந்தர மருகு விடாதுதன் னிழல்போ**
**னின்றவா னவரையு மேவிப்**
**புரந்தரன் றானு மீரிரு மருப்புப்**
**பொருப்பின்வெம் பிடர்மிசைப் புகுந்தான்.**

[பரந்து எழு புகையால் தம 'வடிவம் பண்டையின் பதின் மடங்கு ஆக, சுரந்திடும் புயல் அனைத்தையும் நெடுநீர் சொரிந்து அவித்திடுக என சொல்லி, நிரந்தரம் அருகு விடாது தன் நிழல் போல் நின்ற வானவரையும் ஏவி, புரந்தரன் தானும் ஈர் இரு மருப்பு பொருப்பின் வெம் பிடர்மிசை புகுந்தான்.]

**விளக்கம் :**—எரியும் வனத்திலிருந்து பரவியெழும் புகையால் தம் வடிவம் முன்னையினும் பத்து மடங்கு அதிகமாகப் பூரிப்புக் கொண்ட மேகங்கள் அனைத்தையும் அழைத்து, ''உங்கள் பால் சுரந்திடும் நெடுநீர் சொரிந்து தீயை அவித்திடுக,'' என்று புரந்தரன் ஏவி, நிரந்தரம் தன் அருகில் விடாது நிழலைப்போல் நிலைத்து நிற்கும் தேவர்களையும் (போரெழும்படி) ஏவி, தானும் நான்கு தந்தங்களையுடைய மலைபோன்ற தோற்ற முடைய ஐராவதம் என்னும் யானையின் விரும்பத் தக்க பிடரியின்மேல் (போர்க்கோலங்கொண்டு) ஏறிக்கொண்டான்,— என்பது பொருள். நிரந்தரம் - எப்பொழுதும்.

49. **ஏவக விருத்தச் செவ்வியின் றனுவுக்**
**கேற்றநாண் முறுக்கிவிட் டென்னச்**

சேவக விமையோ ரெண்டிசா முகத்துஞ்
செஞ்சுடர் வாள்விதிர்த் தென்னப்
பாவகன் பகுவாய் நாவிதிர்த் தென்னப்
பரந்தவப் பாவகற் குணவாம்
தாவக முழுதும் வளைந்துகொண் டெழுந்த
சலதர சஞ்சலா சாலம்.

[ஏ அகம் விருத்தம் செவ்வியின் தனுவுக்கு ஏற்ற நாண் முறுக்குவிட்டு என்ன. சேவகம் இமையோர் எண் திசா முகத்தும் செம் சுடர்வாள் விதிர்த்தென்ன, பாவகன் பகுவாய் நா விதிர்த்தென்ன, பரந்த அ பாவகற்கு உணவு ஆம் தாவகம் முழுதும் வளைந்துகொண்டு எழுந்த சலதரம் சஞ்சலா சாலம்.]

**விளக்கம் :—** அப் பாவகற்கு உணவாம்...சஞ்சலா சாலம், ஏ அகம் விருத்தம்...பரந்த, என்று அன்வயங்கொள்க.

இந்திரன் ஏவலின் எழுந்து பரந்த புயலின் தோன்றிய மின்னல் வருணனையாகும் இது. (காண்டவத்தை எரிக்கும்) அப் பாவகற்கு உணவாம் தாவம் முழுதும் வளைந்துகொண்டு எழுந்த சலதரத்தினில் (மேகங்களில்) தோன்றிய சஞ்சலா சாலம் (மின்னற் கூட்டங்கள்),—தன்னிடத்தே அம்பு தொடுப்பதற்கு ஏற்றபடி வட்டமாக வளைந்த அழகிய இந்திர வில்லுக்குப் பொருந்துவதான நாண்கயிற்றை முறுக்கி விட்டாற்போலவும், வலிமை உடைய தேவர்கள் எட்டுத் திக்குகளிலும் செந்நிற ஒளியை வெளிப்படுத்தும் வாளைச் சுழற்றினாற் போலவும், பாவகன் தன் திறந்த வாயினிடத்ததான நாக்குளை வெளியே நீட்டி அசைத்தாற் போலவும் எங்கும் பரவின,—என்பது பொருள்.

மின்னல்கள் இந்திர வில்லின் நாணியையும், தேவர் சுழற்றும் வாளையும், அக்கினியின் நாவையும் போன்றன, என்பதாம். ஏ - அம்பு. விருத்தம் - வட்டம் (வளைவு). செவ்வி. அழகு சேவகம் - வலிமை, வீரம். திசாமுகம் - திக்கு. விதிர்த்தென்ன - (விதிர்த்தது என்ன) சுழற்றுதல் போல; அசைத்தல் போல,—என்ற இரு பொருளிலும் வந்துளது. பாவகன் - அக்கினி. தாவகம் - காடு. சலதரம் - மேகம். சஞ்சலா சாலம் - மின்னற் கூட்டம்.

அக்கினியின் சுவாலையை, இந்திரவில்லின் நாண் என்பர். சஞ்சலா - அசையும் தன்மையதான மின்னல். சாலம் -கூட்டம்.

50. ஏறிய களிறு பிளிறுநீ டொலியு
மெடுத்தவிற் றெறித்தநா ணொலியும்
சூறிய விமையோர் பெருநகை யொலியுந்
துந்துபிக் குழாமதி ரொலியும்
கூறிய வனலன் சடுலவல் லொலியுங்
குறைபடத் திசைதொறு மிகுந்த
ஊறிய புவன பவனவே கத்தோ
டுருமுடை முகிலின்வா யொலியே.

[ஏறிய களிறு பிளிறு நீடு ஒலியும், எடுத்த வில் தெறித்த நாண் ஒலியும், சூறிய இமையோர் பெருநகை ஒலியும், துந்துபி குழாம் அதிர் ஒலியும், கூறிய அனலன் சடுலம் வல் ஒலியும், குறைபட திசை தொறும் மிகுந்த, ஊறிய புவனம் பவனம் வேகத்தோடு உரும் உடை முகிலின் வாய் ஒலியே.]

**விளக்கம் :**—முன் செய்யுளிம் மின்னலை வருணித்த புலவர், இங்கே இடி முழக்கத்தை வருணிக்கின்றார். ஈற்றடியை முதலடியாகக் கொள்க.

ஊறிய நீரோடும் காற்றின் வேகத்தோடும் இடியையும் உடைய முகிலினிடத்தே உண்டான ஒலி முழக்கம்,...என்பது ஈற்றடியின் பொருள். புவனம் (புவநம்) - நீர். பவனம் - காற்று. அம்முழக்கம் - (போரெழுந்த இந்திரன்) ஏறிய களிறு பிளிறு கின்ற பெரிய ஒலியும், அவன் எடுத்த வில் தெறித்த நாண் ஒலியும், எங்கும் சூழ்ந்துகொண்ட இமையோரின் பெரிய சிரிப்பொலியும், தேவதுந்துபிக் கூட்டம் எழுப்பும் முழக்கமும், கூறிய அக்கினியின் கடிய சடுல ஒலியுங் குறைவு படும்படி, திசை தொறும் மிகுந்து பரவின.

இடி முழக்கம் எல்லா ஒலிகளையும் அடங்கச் செய்தது, என்க. சூறிய - சூழ்ந்த. கூறிய - அசை; அல்லது முன் கூறிய சடுல ஓசை.

இதனில் ஒலி என்ற சொல், ஒரே பொருளில் பல முறை வந்துளதால், **சொல் பொருள் பின்வருநிலை அணி**யாகும்.

51. தூமமு மெமது பவனமு மெமது
தோழனத் தோயமு மெமதே
யாமுமிங் கிவற்றோ டொன்றுத லொழிது
மீரிரு பொருள்களும் பிரிந்தால்

மாமுகி லெனும் பேரெங்குள தடர்த்து
வாசவ னென்செயு மெம்மை
ஆமுறை யறிது மென்றுகொண் டறவு
மகங்கரித் தனன்வெகுண் டழலோன்.

[தூமமும் எமது, பவனமும் எமது தோழன், அ தோயமும் எமதே, யாமும் இங்கு இவற்றோடு ஒன்றுதல் ஒழிதும்; ஈர் இரு பொருள்களும் பிரிந்தால், மா முகில் எனும் பேர் எங்கு உளது? (ஆகவே) அடர்த்து வாசவன் என் செயும் எம்மை? ஆம் முறை அறிதும், என்று கொண்டு அறவும் அகங்கரித்தனன் வெகுண்டு அழலோன்.]

**விளக்கம் :—** நெருப்பு, நீர், காற்று ஆயவற்றின் கலப்பினால் ஆவது மேகமாதலால், ''அழலோன், தூமமும் எமது, பவனமும் எமது தோழன், தோயமும் (நீரும்) எமதே, (அதாவது எம்மிடமிருந்து உண்டாயதே)'' என்றானாயிற்று. (இனி) யா்மும் இவற்றுடன் ஒன்றுதல் ஒழிவோம். இந்த நான்கு பொருள்களும் கலவாது பிரிந்து நிற்பின், மா முகில் என்னும் பெயர் எங்கே உளது? (இல்லையென்றபடி). (அச் சேர்க்கை இல்லாமற் போகவே) இந்திரன் எம்மை பொருது என்ன பயன் அடைவான்? (அடைய மாட்டான் என்றபடி). முடிவாகும் வகையை அறிவோம் என்று. அழலோன் எண்ணி வெகுண்டு, அறவும் (மிகவும்) செருக்குபவனானான், என்பதாம்.

அக்கினி, தன்னை எம்மை என்று அழைத்துக்கொண்டது அகங்காரத்தால், என்க. அறவும், என்பதிலுள்ள, உம்மை, உயர்வு சிறப்பினது.

52. மூண்டவெங் கனலை யுருமின்வெங் கனலான்
முருக்கியெங் கால்கையா னெருக்கி
ஆண்டவன் களிற்றின் கரநிகர் தாரை
யருவியின் கணங்களா லவித்துப்
பாண்டவன் பகழி தொடுக்கினுங் கண்ணன்
பருப்பத மெடுக்கினு மெங்கள்
காண்டவம் புரத்து மென்று கொண் டிழிந்து
பொழிந்தன கணம்படு கனங்கள்.

[மூண்ட வெம் கனலை உருமின் வெம் கனலால் முருக்கி, எம் கால் கையால் நெருக்கி, ஆண்டவன் களிற்றின் கரம் நிகர் தாரை

அருவியின் கணங்களால் அவித்து, பாண்டவன் பகழி தொடுக்கினும் கண்ணன் பருப்பதம் எடுக்கினும், எங்கள் காண்டவம் புரத்தும், என்று கொண்டு இழிந்து பொழிந்தன கணம்படு கனங்கள்.]

**விளக்கம் :**—முன் செய்யுளில் அக்கினி செருக்கினனாக, இச் செய்யுளில் மேகங்கள் செருக்கித் தீ யவிக்கும் தொழிலை மேற் கொள்கின்றன.

(காண்டவனத்தில் மூண்ட வெம் கனலை) உருமின் வெம் கனலால் முருக்கி - இடியின் வெவ்விய கனலால் அழித்து, எம் கால் கையால் நெருக்கி - எமது காலுதலால், அதாவது பொழிதலால் தாக்கி, ('கால்கை' என்பது கை விகுதி ஏற்ற தொழிற் பெயர் : பொழிதல் என்ற பொருளது). ஆண்டவன் - மேகங்களின் தலைவன். (அவனது வாகனமாகிய) களிற்றின் துதிக் கையை ஒத்த மழைத்தாரையாகிய அருவிகளின் கூட்டத்தால் (தீயை) அவித்து, என்பது இரண்டாவது அடியின் பொருள். பாண்டவன் பகழி தொடுக்கினும், கண்ணன் கோவர்த்தனகிரியை எடுத்ததுபோல் இப்பொழுது ஒரு மலையை எடுக்கினும், (அஞ்சாமல்) எங்கள் காண்டவ வனத்தைக் காப்போம்,''' என்று எண்ணிக்கொண்டு, கணம் படுகனங்கள் (ஒன்றுபட்டுக் கூடிய மேகங்கள்) இழிந்து (கீழ்நோக்கி இறங்கி) நீரைப் பொழிந்தன என்பது ஈற்றடிகளின் பொருள்.

தம் தலைவனாகிய இந்திரனது வனமாதலால், 'எங்கள் காண்டவம்' எனப்பட்டது.

53. காலைவா யருக்கன் பனிநுகர்ந் தென்னக்
 கட்டறக் காண்டவ மென்னும்
பாலைவா யுள்ள சராசர மனைத்து
 நுகர்தலிற் பைம்புனல் வேட்டோன்
வேலையே ழையுமொண் டேழுமா முகிலும்
 விதம்படப் பொழிந்ததா ரைகளால்
தாலுவே ழினையு நனைத்தன னனைத்துந்
 தணிந்ததோ தன்பெருந் தாகம்.

[காலைவாய் அருக்கன் பனி நுகர்ந்தென்ன கட்டு அற காண்டவம் என்னும் பாலைவாய் உள்ள சராசரம் அனைத்தும் நுகர் தலின், பைம் புனல் வேட்டோன் வேலை ஏழையும் மொண்டு

ஏழு மாமுகிலும் விதம்பட பொழிந்த தாரைகளால், தாலு ஏழினையும் நனைத்தனன்; நனைத்தும் தணிந்ததோ தன் பெருந்தாகம்.]

**விளக்கம் :—**சப்த மேகங்களும் நீரைத் தாரை தாரையாக விடாமல் பொழிந்தும் தீயின் உக்கிரம் சிறிதும் தணிந்திலது, என்பது செய்யுட் கருத்து.

காலைவாய் - உதயத்தில். அருக்கன் - சூரியன். அவன் எளிதே பனியை உண்டாற்போல், (அக்கினிதேவன்) காண்டவ வனத்தினிடத்தே உள்ள அசையும் பொருள் அசையாப் பொருள் எல்லாவற்றையும் அடியோடு உட்கொண்டதனால், (நீர் வேட்கையுற்று) குளிர்ந்த நீரை விரும்பினவனாய், கடல் ஏழிலும் உள்ள நீரை மொண்டு கொண்டு சப்த மேகங்களும் பலவிதப் படப் பொழிந்த தாரைகளினால் (தனது) தாலு (நாக்கு) ஏழினையும் நனைத்துக் கொண்டான்; நனைத்தும் (அவனது) பெருந்தாகம் தணிந்ததோ! என்றபடி இல்லை.

மனித சஞ்சாரம் இல்லாமைபற்றிக் 'காண்டவம் என்னும் பாலை' எனப்பட்டது. மேகங்கள் ஏழாதலால், பொழிதலில் வேறுபாடு தோன்ற 'விதம்பட' என்றார்.

54. எக்கடல் களினு மினிப்பசை யிலதென்
றேழிரு புவனமு நடுங்கத்
தொடக்கட லுருமோ டெழுமெழு கொண்டற்
சோனையஞ் சுருவையான் முகந்து
மைக்கடல் வெளுக்கக் கறுத்தமெய் மகவான்
வழங்கிய வாகுதி யனைத்தும்
நெய்க்கடல் சொரிந்த தென்னுமா றருந்தி
நீடுவான் முகடுற நிமிர்ந்தான்.

[எ கடல்களினும் பசை இலது என்று ஏழ் இரு புவனமும் நடுங்க, தொக்க அடல் உருமொடு எழும் எழு கொண்டல் சோனை அம் சுருவையால் முகந்து மை கடல் வெளுக்க கறுத்த மெய் மகவான் வழங்கிய ஆகுதி அனைத்தும் நெய் கடல் சொரிந்தது என்னுமாறு அருந்தி, நீடு வான் முகடு உற நிமிர்ந்தான்.]

**விளக்கம் :—**மேகங்கள் வெகுண்டு மழை பொழிதலையும், அக்கினி பின்னும் மிகுதலையும் கூறும் இச் செய்யுள்.

ஏழ் இரு புவனம் - பதினான்கு உலகம், ஆகுபெயராய் அவ் வுலகங்களில் உள்ளாரைக் குறிக்கும். தொக்க அடல் உரும் -

எங்கும் நிறைந்த வலிய இடி. கொண்டல் அம் சுருவை - மேகங்களாகிய அழகிய சுருவை - ஓமத்தீயில் நெய் விடுவதற்கான ஒரு கருவி; நெய்க்கரண்டி. முகந்து - (மேகங்களாகிய சுருவையால் எழுகடல் நீரையும்) மொண்டு. மைக்கடல் வெளுக்கக் கறுத்த மெய் மகவான் - கரிய கடலும் வெளுத்தது என்று சொல்லும்படி கறுத்த மேனியனான இந்திரன். (அவன்) வழங்கிய சோனை ஆகுதி - சொரிந்த விடாது பெய்யும் மழையாகிய ஆகுதி. ஓமத்தீயில் நெய் விடுதல் ஆகுதி. (இந்திரன் பெய்த மழையாகிய ஆகுதிகளை, அக்கினி தேவன்) நெய்க்கடல் நெய் சொரிந்தது எனும்படி உண்டு, வான் முகட்டை எட்டுபவன்போல் சுவாலை ஓங்க எரிந்தான்,—என்பது ஈற்றடியின் பொருள்.

மேகம் பொழிந்தும் அக்கினியின் உக்ரம் தணியவில்லை; மேலும் தீ மிகுவதாயிற்று. என்பது கருத்து.

கடல்களை நெய்க்கலமாகவும், நீரை நெய்யாகவும், மேகங்களைச் சுருவையாகவும், மழையை நெய்த்தாரையாகவும், இந்திரனை ஓமம் செய்பவனாகவும், உருவகப்படுத்தியது நயமுடையது. மகவான் - (மகவாந்) ஐசுவரியங்களை உடையவன்; யாகங்களைச் செய்பவன்; இந்திரன்.

55. தொழுதகு விசயன் றாலுவே ழுடையோன்
சுடர்முடி நனைந்திடு வதன்முன்
எழுமுகி லினமும் பொழி தரு மாரி
யாவையு மேவினால் விலக்கி
முழுதுல கமுந்தன் னிடத்தடக் கியவான்
முகடுற முறைமுறை யடுக்கிக்
குழுமுவெங் கணையாற் கனற்கட வுளுக்குக்
கொற்றவான் கவிகையுங் கொடுத்தான்,

[தொழுதகு விசயன் தாலு ஏழு உடையோன் சுடர் முடி நனைந்திடுவதன் முன் எழு முகில் இனமும் பொழிதரு மாரி யாவையும் ஏவினால் விலக்கி, முழுது உலகமும் தன் இடத்து அடக்கிய வான் முகடு உற முறை முறை அடுக்கி, குழுமு வெம் கணையால் கனல் கடவுளுக்கு கொற்றம் வான் கவிகையும் கொடுத்தான்.]

**விளக்கம் :**—தாலு ஏழு உடையோன் - ஏழு நாக்குகளை உடைய அக்கினிதேவன். (அவன் நனைந்திடுமுன் சப்த மேகங்

களும் பொழியும் மழை எல்லாவற்றையும்) ஏவினால் விலக்கி - சரங்களினால் விலக்கி. பூமி முழுவதையும் தன் கீழ் அடக்கிக் கொண்ட வான்முகடு அளாவ, முறையே அடுக்கிய கூட்டமான கொடிய கணைகளால், அக்கினி தேவனுக்குப் பெரிய கொற்றக் குடையும் அளித்தான்; அதாவது, சரக்கூடம் அமைத்து மழையை விலக்கினான், என்றபடி.

'கவிகையும்' கொடுத்தான், என்பதிலுள்ள உம்மை, எச்சப் பொருளது; அதாவது, அக்கினிக்கு உணவு உதவியதோடு, அதை இடையூறின்றி உண்பதற்குக் காப்புந் தந்தான், என்பது பொருள்.

அக்கினியின் சுடர்முடி, சுவாலை. அனல் புனலால் வெல்லப் படாமை தோன்றக் 'கொற்ற வான் கவிகை,' என்றார்.

56. ஆழ்தரு பரவை யேழும்வற் றிடுமா
றழித்தகா ருமிழ்ந்திடு நெடுநீர்
தாழ்தரு சரத்தான் வேய்ந்ததற் கிடையோர்
தனித்திவ லையும்பொசி யாமல்
வீழ்தரு மருவி பாவகன் றனக்கு
விசயனன் றளித்தபொற் குடைக்குச்
சூழ்தர நிரைத்துத் தூக்கிய முத்தின்
சுடர்மணித் தொடையல்போன் றனவே.

[ஆழ்தரு பரவை ஏழும் வற்றிடுமாறு அழித்த கார் உமிழ்ந் திடு நெடுநீர், தாழ்தரு (சரத்தான்) வேய்ந்ததற்கு இடை ஓர் தனி திவலையும் பொசியாமல் வீழ் தரும் அருவி, பாவகன் தனக்கு விசயன் அன்று அளித்த பொன் குடைக்கு சூழ்தர நிரைத்து தூக்கிய முத்தின் சுடர்மணி தொடையல் போன்றன, ஏ.]

**விளக்கம் :**—ஆழ்தரு பரவை - ஆழமுடைய கடல். அழித்த - குடித்து இல்லாமற் செய்த, ஒழித்த. தாழ்தரு - நிலையாகத் தங்கிய. (சரத்தான்) வேய்ந்ததற்கு இடையே - கூரைபோல் வானவெளியை மூடிய சரக் கூடத்திற்கு இடையே ஒரு தனித் திவிலையும் - ஒரு துளி ஜலமும். பொசியாமல் - கசியாமல். வீழ்தரும் அருவி - அச்சரக்கூரைக்கு வெளியே சுற்றிலும் விழும் மிக்க நீர். பாவகன் - அக்கினி. (அந் நீர்வீழ்ச்சி, அவனுக்குக் காப்பாக விசயன் அளித்த சரக்கூரையாகிய அழகிய குடைக்கு அதைச் சுற்றிலும் வரிசையாகத் தொங்கவிடப்பட்ட சுடர்

முத்தின் அழகிய மாலைகள் போன்றன என்பதாம். இம் மாலைகளைத் தொங்கல், ஜாலர், என்று அழைப்பர்.

57. மண்டிமீ தெழுந்த வன்னியின் சிகைக
ளிந்திரன் மதலைவா ளிகளால்
கண்டகூ டத்திற் கமைத்தசெம் பவளக்
காண்டகு தூண்டிரள் காட்ட
அண்டகூ டத்திற் கிந்திரன் பளிங்கா
லமைத்தபல் லாயிர கோடி
சண்டதூ ணங்கள் போன்றன பரந்து
தனித்தனி முகில்பொழி தாரை.

[மண்டி மீது எழுந்த வன்னியின் சிகைகள் இந்திரன் மதலை வாளிகளால் கண்ட கூடத்திற்கு அமைத்த செம் பவளம் காண்தகு தூண் திரள் காட்ட, அண்ட கூடத்திற்கு இந்திரன் பளிங்கால் அமைத்த பல் ஆயிரம் கோடி சண்டம் தூண்கள் போன்றன, பரந்து தனி தனி முகில் பொழிதாரை.]

**விளக்கம்** :--வன்னியின் சிகை - அக்கினியின் சுவாலை. கண்ட - கட்டிய, அமைத்த. காண்தகு காணத்தகுந்த, அதாவது அழகிய. தூண்திரள் காட்ட - தூண் கூட்டங்களைப் போன்றிருக்க. அண்ட கூடம் - அண்டத்தின் மேல் முகடு. சண்டம் - பெரிய.

சரக்கூடத்திற்குக் கீழ எரியும் அக்கினி சுவாலை, சரக்கூடமாகிய மண்டபத்திற்கு ஆதாரமாக அமைத்த அழகிய செம்பவளத் தூண்களை ஒத்தன; அக் கூடத்திற்கு மேலே மேகம் பொழியும் நீர்த் தாரைகள் அண்ட கூடத்தின் மேல் முகட்டிற்கு ஆதாரமாய் இந்திரன் அமைத்த மிகப் பலவான பளிங்குத் தூண்களைப் போன்றிருந்தன, என்பதாம். அணி, **தற்குறிப்பேற்றம்.** மழையை ஏவியவன் இந்திரனாதல்பற்றி, 'இந்திரன் அமைதத தூண்,' எனப்பட்டது,

58. தக்ககன் றன்னைக் கூயினர் தேடிச்
சாயக மண்டபஞ் சுற்றி
மிக்கவிண் ணவர்க டிரிதர வவன்றன்
மெல்லியன் மகவையும் விழுங்கி
அக்கணந் தன்னிலந்தரத் தெழலும்
வீழ்த்தினா னம்பினாற் றுணித்துச்

செக்கனலுருவச் சென்னியை யுரகர்
கன்னியைத் திருமணஞ் செய்தான்.

[தக்ககன் தன்னை கூயினர் தேடி சாயகம் மண்டபம் சுற்றி மிக்க விண்ணவர் திரிதர, அவன் தன் மெல்லியல் மகவையும் விழுங்கி, அ கணந்தன்னில் அந்தரத்து எழலும், வீழ்த்தினான் அம்பினால் துணித்து செம் கனல் உருவம் சென்னியை, உரகர் கன்னியை திருமணம் செய்தான்.]

**விளக்கம்** :—மிக்க விண்ணவர், தக்ககன் தன்னை கூயினர் (ஆய்) தேடி சாயக மண்டபம் சுற்றித் திரதர, அவன் தன் மெல்லியல் மகவையும் விழுங்கி (வாயில் கௌவிக்கொண்டு) அந்தரத்து எழலும், அ கணம் தன்னில் உரகர் கன்னியைத் திருமணம் செய்தான் (ஆகிய விசயன்), செம் கனல் உருவச் சென்னியை அம்பினால் துணிந்து வீழ்த்தினான்,—என்பது அன்வயம்.

தக்கன் - இந்திரன் நண்பனான தக்ஷகன் என்னும் நாகம். சாயக மண்டபம் - சரக்கூடம். அவன் தன் மெல்லியல் - தக்ஷகன் மனைவி. செம் கனல் உருவச் சென்னி - அந்நாக மாதின் சிவந்த கனல் போன்ற தோற்றமுடைய தலை. உரகர் - நாகர்.

உலூபி என்னும் நாகமாதை மணந்து உரகர் உறவு பெற்றவன் அருச்சுனன். அவ்வாறிருந்தும், அக்கினிதேவனுக்குக் கூறிய உறுதி மொழி பழியுறலை விரும்பாது நாகமாதைக் கொன்றான் ஆயிற்று.

துண்டிக்கப்பெற்ற நாகமாதின் உடல் அக்கினியிலும் தலை அக்கினிக்கு வெளியிலும் விழுந்ததால், மகவு சாகாமல் பிழைத்துக் கொண்டது, என்று கொள்க.

59. மருவயிற் சதகோ டியினிறை யைரா
வதத்தின்மும் மதத்தினா னனைத்துக்
கருவயிற் றெழிலித் தாரையால் வருணக்
கடவுடன் கணைகளா லவித்துச்
செருவயிற் புரள வொதுக்கியத் தோழன்
சிறுவனைச் சென்றெடுத் தணைத்தான்
ஒருவயிற் பிறந்தோ னாதலின் மகவா
னுடனுடன் றிலனுதா சனனே.

[மருவு அயில் சதகோடியின் இறை ஐராவதத்தின் மும்மதத்தினால் நனைத்து, கரு வயிறு எழிலிதாரையால் வருணக் கடவுள் தன் கணைகளால் அவித்து, செருவயின் புரள ஒதுக்கி, அ தோழன் சிறுவனை சென்று எடுத்து அணைத்தான், ஒருவயின் பிறந்தோன் ஆதலின் மகவானுடன் உடன்றிலன் உதாசனன், ஏ.]

**விளக்கம் :**—சதகோடி - வச்சிராயுதம். இறை - தேவர் தலைவனான இந்திரன். கருவயிற்று எழிலி - சூல்கொண்ட மேகம். வருணக் கடவுள் கணை - வருணாஸ்திரம். செருவயின் புரள ஒதுக்கி - போர்க் களத்தினின்று புரண்டு விலகும்படி நாக மாதின் தலையை இந்திரன் ஒதுக்கி. சிறுவன் - தட்சகன் மகனான பாம்புக்குட்டி. உதாசனன் உடன்றிலன - அக்கினி பகைத்துச் சுட்டான் அல்லன். பாம்புக் குட்டியை அணைத்துக் கொண்ட இந்திரனை அக்னி சுடவில்லை. என்பதாம்.

அக்கினியும் இந்திரனும் திருமாலின் முகத்தினின்று தோன்றினர் என்பர். எனவே, சகோதரர் ஆகின்றனர். ஆகவே அக்கினி இந்திரனைச் சுட்டிலன், என்க.

60. அன்னைவா யோடு தன்வாலதி துணியுண்
டலமரு மச்சுவ சேனன்
தன்னைவா சவன்போய் வீடுகண் டுழியத்
தனஞ்செயன் தனதுவெங் கணையால்
முன்னைவா னவைர முனைமுகந் தன்னின்
முதுகிட முதுகிட முருக்கிப்
பின்னைவா ரிதங்க ளேழையும் பொருது
பின்னிடப் பின்னிடப் பிளந்தான்.

[அன்னை வாயோடு தன் வாலதி துணியுண்டு அலமரும் அச் சுவசேனன் தன்னை வாசவன் போய் வீடுகண்டுழி, அ தனஞ்செயன் தனது வெம் கணையால், முன்னை வானவரை முனை முகம் தன்னில் முதுகு இட முதுகு இட முருக்கி, பின்னை வாரி தங்கள் ஏழையும் பொருது பின் இட பின் இட பிளந்தான்.]

**விளக்கம் :**—வாலதி - வால். அலமரும் - துடிக்கும்; அசுவ சேனன் - அசுவசேனன் என்ற பெயருடைய தட்சக குமாரன். வீடு கண்டுழி - விடுவித்தபோது. முன்னை வானவரை - முதலில் தன்னை எதிர்த்த வானவரை. முனைமுகம் - போர்க்களம்.

முருக்கி - தாக்கி. பின்னை - அதன்பின். வாரிதங்கள் ஏழையும் - ஏழுவகை மேகங்களையும்; வாரி - (ஆகுபெயர்) நீருடைய மேகம்.

இந்திரன், தட்சகன் மகனைக் காப்பாற்றியது கண்டு வெகுண்ட விசயன், முதலில் தேவர்களையும், பின்னர் மேகங் களையும் தாக்கிப் பின்னிடச் செய்தான், என்பதாம்.

61. தீரமால் பொருது வீடுகண் டதற்பின்
செக்கர்மெய்த் தக்ககன் பயந்த
பாரமா சுணமவ் விசயனுக் கியாவர்
பகையெனப் பலரையும் வினவிச்
சூரன்மா மதலை சரணமே யரண
நமக்கெனத் தொழுதுபோ யெய்தி
வீரமா முனைவெம் பகழியா கியதெம்
மேதினி யினும்பெரு வார்த்தை.

[தீரம் மால் பொருது வீடு கண்டதன் பின், செக்கர் மெய் தக்ககன் பயந்த பாரம் மாசுணம் அ விசயனுக்கு யாவர் பகை என பலரையும் வினவி, சூரன் மாமதலை சரணமே அரணம் நமக்கு என தொழுதுபோய் எய்தி, வீரம் மாமுனைவெம் பகழி ஆகியது, எ மேதியினும் பெரு வார்த்தை.]

**விளக்கம்** :—தீரம் மால் - தீரமுடைய இந்திரன். வீடுகண்ட பின் - தட்சகன் மகனை விடுவித்தபின். பாரம் - பருமை. மாசுணம் தட்சக புத்திரனான பாம்பு. சூரன் - சூரியன். சரணமே அரணம் - (கர்ணனது) பாதங்களே பாதுகாப்பு. வீர மாமுனைப் பகழி - வீரங்காட்டற்கு இடமான பெரிய போர்க் களத்திற்கு உரிய அம்பு. (அசுவசேனன் கர்ணன் கை அம்பான இது) உலகெங்கும் பெரிய பேச்சாய்ப் பேசப்படும் விஷயமாகும், என்க.

மேதினி - (மேதிநி) பூமி, உலகம்; **மதுகைடபர்** என்னும் அசுரர்களின் **மேதசினால்**, அதாவது கொழுப்பினால் நனைந்த மையால் பூமிக்கு, மேதிநி என்ற பெயர் உண்டாயிற்று. என்பர்.

62. தோழன்மா மகனைக் கண்டபின் றனது
தோழனை யொருவயின் காணான்
வேழமா முகத்திற் கைத்தலம் புடைத்தான்
விழிகளா யிரங்களுஞ் சிவந்தான்

யாழமா திரத்தி னெதிரொலி யெழுமா
றெயிற்றிள நிலவெழ நகைத்தான்
தாழமா நிலத்தி னின்றமர் விளைக்குந்
தன்பெருந் தனயனை முனிந்தான்.

[தோழன் (இந்திரன்) மாகனை கண்டபின் தனது தோழனை ஒருவயின் காணான். வேழம் மா முகத்தில் கைத்தலம் புடைத்தான், விழிகள் ஆயிரங்களும் சிவந்தான், யாழ மாதிரத்தின் எதிரொலி எழுமாறு எயிறு இள நிலவு எழ நகைத்தான், தாழ மா நிலத்தில் நின்று அமர் விளைக்கும் தன் பெரும் தனயனை முனிந்தான் ]

**விளக்கம் :**—தோழன் - இந்திரன். தோழனை - நண்பனான தட்சகனை. ஒருவயின் - எந்தவோரிடத்திலும், முகம் - மத்தகமாகிய இடம். யாழ என்பது அசை. மாதிரம் - திக்கு.

தோழனான தட்சகனை எவ்விடத்துங் காணாது, இந்திரன், தன் மாமகனான அருச்சுனன்மீது சினந்து எழலைக் கூறும் இது. கைத்தலம் புடைத்தல் கண் சிவத்தல், நகைத்தல், மிகுந்த கோபத்தின் காரியம். மேலுள்ளாரோடு கீழே நின்று போர் செய்தலின் அருமை தோன்ற, "தாழ மாநிலத்தின் நின்று அமர் விளைக்கும்." என்றாராயிற்று.

### திக்பாலர் போரெழல்

63. மேகசா லங்க ளிளைத்ததுந் திளைத்து
மேலிடு விண்ணவ ரணிந்த
யூகசா லங்க ளுடைந்ததுங் கண்டா
னுருத்தெழுந் துள்ளமுங் கொதித்தான்
ஏகசா பமுந்தன் னேகசா யகமு
மிமைப்பள வையின்விரைந் தெடுத்தான்
பாகசா தனனு மேனைய திசையின்
பாலரும் பகடுமேற் கொண்டார்.

[மேக சாலங்கள் இளைத்ததும், திளைத்து மேலிடு விண்ணவர் அணிந்த யூக சாலங்கள் உடைந்ததும் கண்டான், உருத்து எழுந்து உள்ளமும் கொதித்தான், ஏக சாபமும் தன் ஏக சாயகமும் இமைப்பு அளவையின் விரைந்து எடுத்தான் பாகசாதனனும், ஏனைய திசையின் பாலரும் பகடுமேல் கொண்டார்.]

**விளக்கம் :—**மேக சாலம் - மேகக் கூட்டம். திளைத்து மேலிடு விண்ணவர் - நெருங்கி மேலெழுந்து எதிர்த்த விண்ணவர். அணிந்த - வகுத்த. யூகசாலங்கள் - படை அணிவகுப்புக் கூட்டம். உருத்து - கோபித்து. ஏக சாபம் - ஒப்பற்ற வில். ஏக சாயகம் - ஒப்பற்ற அம்பு. (இந்திரன் இவ்வாறு போரெழ) மற்றைத் திக்பாலகர்களும், தங்கள் தங்கள் வாகனங்களில் ஏறிக் கொண்டார்கள், என்பதாம்.

இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், ஆயவர் அஷ்டதிக்பாலகர். ஐராவதம், ஆட்டுக்கடா, எருமைகடா, ஆண் முதலை, ஆண் மான், ஆண் குதிரை, எருது ஆயவை, நிருருதி ஒழிந்த மற்றவர்க்கு முறையே வாகனங்கள். விலங்கினத்தின் ஆண்பால் பெயரான பகடு என்னும் சொல்லால் இவற்றைக் குறித்தார். நிருருதி, என்பவனது வாகனம் நரன், (மனிதன்).

64. தேவருங் கோடி தேவருக் கொருவர்
சிரங்களாய் நின்றமுப் பத்து
மூவருந் தத்தம் வாகமேல் கொண்டு
முந்துற வந்துவத் தணிந்தார்
யாவரும் புவனத் தின்றுகொ லுகத்தி
னிறுதியென் றிரங்கினர் நடுங்க
மேவரு மனித ரிருவரோ டநேக
விபுதரும் வெகுண்டுபோர் விளைத்தார்.

[தேவரும், கோடி தேவருக்கு ஒருவர் சிரங்களாய் நின்று முப்பத்து மூவரும் தம் தம் வாகம் மேல்கொண்டு முந்துற வந்து அணிந்தார், யாவரும் புவனத்து இன்று கொல் உகத்தின் இறுதி என்று இரங்கினர் (ஆய்) நடுங்க, மேவரு மனிதர் இருவரோடு அநேக விபுதரும் வெகுண்டு போர் விளைத்தார்.]

**விளக்கம் :—**முப்பத்து முக்கோடி தேவரும், ஒரு கோடி தேவருக்கு ஒருவர் தலைவராய் நின்ற முப்பத்து மூன்று தேவர்களும், தங்கள் தங்கள் வாகனங்களில் ஏறிக்கொண்டு, ஒருவரை ஒருவர் முந்தினராய் முன்வந்து அணிவகுத்து நின்றனர்.—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். உலகினர் யாவரும் உலகத்தின் இறுதி இன்றுதானோ என்று இரங்கினராய் நடுங்கி நிற்க, ஒன்று பட்டு நின்ற கிருஷ்ணார்ச்சுனர்களாகிய மனிதர் இருவருடன்

அநேக விபுதரும் (தேவர் பலரும்) வெகுண்டு போர் செய்தனர்,— என்பது ஈற்றடிகளின் பொருள். வாகம் - வாகனம்.

65. பச்சைவா சிகளுஞ் செய்யன வாகப்
பாகரும் பதங்களே யன்றித்
தச்சவா ளிகளாற் கரங்களு மிழந்து
தனிப்பெருந் திகிரியுந் தகர
உச்சமா மகத்திற் பண்டொடிந் தொடியா
தொழிந்தன பற்களு மொடிய
அச்சமே துணையா வருக்கனு மொழிந்த
வருக்கர்பன் னொருவரு மகன்றார்.

[பச்சை வாசிகளும் செய்யன ஆக, பாகரும் பதங்களே அன்றி தச்ச வாளிகளால் கரங்களும் இழந்து, தனி பெரும் திகிரியும் தகர, உச்சம் மா மகத்தில் பண்டு ஒடிந்து ஒடியாது ஒழிந்தன (ஆகிய) பல்களும் ஒடிய, அச்சமே துணையா அருக்கனும், அருக்கர் பன்னொருவரும் அகன்றார்.]

**விளக்கம்:—**துவாதசாதித்தர் (பன்னிரு சூரியர்கள்) அருச்சுனனது சரத்தின் முன் நிற்க மாட்டாது ஓடுதலைக் கூறும் இது.

சூரியர்களது பசை நிறக் குதிரைகளும் (பெருகிய குருதியால்) செந்நிறத்தனவாகவும், தைத்த (அர்ச்சுனனது) அம்புகளால் தேர்ப்பாகர்களான அருணர்களும் இயற்கையாய்க் கால்கள் இல்லாதிருத்தல் இன்றிக் கைகளையும் இழந்தும், தனிப்பெருந் தேர்ச்சக்கிரங்களும் தகர்ந்தும், முன்பு உயர்ந்த பெரிய தக்ஷண னது யாகத்தில் ஒடிந்தது போக ஒடியாமல் நின்ற பற்கள் ஒடிய வும், பூஷா என்ற சூரியனும், அவனொழிந்த பன்னொரு (பதினொரு) சூரியர்களும் அச்சமே துணையாகத் தோற்று அகன்றனர், என்பது பொருள்.

அருக்கன் - சூரியன். சூரியர்கள் பன்னிருவர் என்பர். அவர் களில் பூஷா என்பான், தக்ஷயாகத்தில் சிவபெருமான் சடையின் தோன்றிய வீரபாகுவால் பல்லொடை பட்டான், என்பது கதை. அவனும், அவன் அல்லாத பதினொருவருமாக ஆதித்தர் பன்னி ருவர் ஆகின்றனர். தச்ச - (போலி) தைத்த.

சூரியனது தேர்ப்பாகன் அருணன். அவன் இடுப்பிற்குக் கீழுள்ள அவயவங்கள் இல்லாதவன். ஆகவே, பாதங்கள் இல்லாப் பாகர்களைக் கொண்டவர் சூரியர்கள்.

66. மாறுபட் டுழியப் பற்குனன் கணையான்
மழுக்களுஞ் சூலமு முடைய
நீறுபட் டுடலி னீற்றுடன் படிய
நெடுங்கொடி யூர்தியே றுகளும்
ஏறுபட் டழியச் சடையில்வார் நதியா
லேறிய தூளிவா னெறியும்
சேறுபட் டிடுமா றோடினார் மீளப்
பதினொரு திறலுருத் திரரும்.

[மாறுபட்டுழி அ பற்குனன் கணையால் மழுக்களும் சூலமும் உடைய, நீறுபட்டு உடலின் நீற்றுடன் படிய, நெடும் கொடி ஊர்தி ஏறுகளும் ஏறுபட்டு அழிய, சடையில் வார் நதியால் ஏறிய தூளி வான் நெறியும் சேறு பட்டிடுமாறு ஓடினார் மீள பதினொரு திறல் உருத்திரரும்.]

**விளக்கம் :—** உருத்திரர் பதினொருவர்; அவர்களை ஏகாதச ருத்திரர், என்று அழைப்பர், அவர்கள் போர் தோற்று ஓடியதைக் கூறும் இது.]

(திறலுடைய பதினொரு ருத்திரர்களும்) மாறுபட்டுழி - பகைத்து எதிர்த்தபொழுது,—அருச்சுனன் கணைகளால் மழு வாயுதங்களும் சூலங்களும் (உடைந்து) நீறுபட்டு, (அவர்கள்) உடலிற் பூசிய திருநீற்றுடன் படியவும். பெரிய கொடிகளும் வாகனங்களாகிய இரஷபங்களும் காயம்பட்டு அழியவும், அவர்கள் சடையினின்று பெருகும் நதியின் நீரினால், போர்க்களத்தினின்று மேலெழுந்த புழுதி தேவலோகப் பாதை வரை சேறுபடும் படியும், தமது உலகம் திரும்புதற்கு ஓடினர்,—என்பது பொருள்.

ஏறு - ஆயுதங்களால் உண்டாகும் தழும்பு; எனவே, 'காயமுண்டு' என்று பொருள் கொள்ளப்பட்டது. 'நீறுபட்டு உடலின் நீற்றுடன் படிய' என்றும், 'ஏறுகள் ஏறுபட்டழிய' என்றும் கூறியது நயம் உடையது.

67. எண்ணிய வசுக்க ளெண்மரிற் கங்கை
யென்னுமாய் வயிற்றினுற் பவித்த
புண்ணிய னொழிந்தோ ரெழுவருந் தங்கள்
புயவலி மையிற்பொரு திடுவார்

நண்ணிய வமரின் விசயன்வெங் கணையா
னாப்புலர்ந் துள்ளமு நடுங்கி
அண்ணிய நிலயம் புகுந்தன ரென்றா
னிற்பரோ வாயுள்வே தியரே.

[எண்ணிய வசுக்கள் எண்மரில் கங்கை என்னும் யாய் வயிற்றின் உற்பவித்த புண்ணியன் ஒழிந்தோர் (ஆன) எழுவரும் தங்கள் புயவலிமையின் பொருதிடுவார் (ஆகி), நண்ணிய அமரின் விசயன் வெம் கணையால் நா புலர்ந்து. உள்ளமும் நடுங்கி, அண்ணிய நிலயம் புகுந்தனர்; என்றால், நிற்பரோ ஆயுள் வேதியரே!

**விளக்கம் :—**எண்ணிக் கணக்கிடப்பட்ட வசுக்கள் எண்மரில் கங்கை வயிற்றில் (வீடுமனாய்த்) தோன்றிய புண்ணயனா **பிரபாசன்** என்பவன் போக, மற்றவரான ஏழு வசுக்கள், அவர் புயவலியுடையவர். நண்ணிய (கிட்டிய) போரில் விசயனது கணைகளால் நா உலர்ந்து, உள்ளம் நடுங்கி அண்ணிய நிலயம் (தங்கள் வசிக்குமிடம்) போய்ச் சேர்ந்தனர்; எனின், ஆயுள் வேதியரான அசுவிநி தேவர்கள் போரில் எதிர் நிற்க வல்லவ ராவரோ! ஆகார். என்பது பொருள்.

துவாதசாதித்தரும், ஏகாதசருத்திரரும் ஏழு வசுக்களும் முதுகிட்டு ஓடினாரென்னில், தேவ வயித்தியரான அசுவநிதேவர் இருவரால், அருச்சுனனுக்கு முன் நின்று போர் செய்தல் எங்ஙனம் இயலும்? என்று கூறும் கருத்தது இது.

68. அருணவெங் கனலோன் கனலொடு கலந்தா
னாசுக னவற்கு நண் பானான்
கருணையில் யமனுங் கானிடை மடியுங்
கணத்திலே கவலையுற் றனனால்
வருணனுங் கடல்கள் வறத்தல்கண் டழிந்தான்
மதியுமம் மதிமுடித் தவனும்
இருணிற வரக்கி தானுமிங் கிவரோ
டெங்ஙனம் பொருதுமென் றிளைத்தார்.

[அருணம் வெம் கனலோன் கனலொடு கலந்தான், ஆசுகன் அவற்கு நண்பானான், கருணை இல் யமனும் கானிடை மடியும் கணத்திலே கவலை உற்றனன், (ஆல் : ஈற்றசை). வருணனும் கடல்கள் வறத்தல் கண்டு அழிந்தான், மதியும் அம் மதி முடித்த

வனும் இருள் நிற அரக்கி தானும் இங்கு இவரோடு எங்ஙனம் பொருதும் என்று இளைத்தார்.]

**விளக்கம் :**—அருணம் - செந்நிறம். கனலோன் - அக்கினி தேவன். அவன், காண்டவத்தை எரிக்கும் தீயோடு கலந்து கொண்டான்; ஆசுகன் (வாயு) அவனுக்கு நண்பனாய்த் துணை அமைந்தான்; யமனும், காண்டவ வனத்தில் மிகுதியாக மடியும் சீவராசிகளைக் கவர்வதில் கவலை கொண்டவனானான்; வரு ணனும் கடல்கள் வறண்டு போதல் கண்டு மனமழிந்தான்; (இவ் வாறு திக்பாலகர்களில் நால்வர் போர் செய்யாமையை மேற் கொண்டிருக்க ஒழிந்தவரான) மதி என்ற பெயருடைய குபேர னும், அழகிய மதியை முடியில் சூடிய சிவனும், இருள் நிற அரக்கி யாகிய நிருருதியும், இக் கிருஷ்ணார்ச்சுனர்களோடு எங்ஙனம் போர் செய்வோம், என்று இளைத்தாராயினர், என்பது பொருள். கணம், மிகுதிப் பொருளது

சந்திரன் திக்பாலகர்களில் ஒருவன் அல்லாமையின், 'மதி' என்பதற்கு 'குபேரன்' என்று கொள்க

69. சொன்மழை பொழிந்து நாடொறுந் தனது
தோள்வலி துதிக்குநா வலர்க்குப்
பொன்மழை பொழியுங் கொங்கர்பூ பதிதன்
பொற்பதம் பொருந்தலர் போலக்
கன்மழை பொழியுங் காளமா முகிலுங்
கடவுளர்த் துரந்தவன் கரத்தில்
வின்மழை பொழியக் கற்களுந் துகளாய்
மேனியும் வெளிறமீண் டதுவே.

[சொல் மழை பொழிந்து நாள்தொறும் தனது தோள் வலி துதிக்கும் நாவலர்க்கு பொன் மழை பொழியும் கொங்கர் பூபதி தன் பொன்பதம் பொருந்தலர் போல, கல் மழை பொழியும் காள மா முகிலும் கடவுளர் துரந்தவன் கரத்தில் வில் மழை பொழிய கற்களும் துகளாய் மேனியும் வெளிறி மீண்டது-ஏ.]

**விளக்கம்:**—(சொற்களால் தன்னைத் துதிக்கும் நாவலர்க்குப் பொன்மழை பொழியும்) கொங்கர் பூபதி - கொங்கர் குலம் வந்த வரபதியாட்கொண்டான் என்னும் அரசன். அவன் பொன் பாதம் பொருந்தலர் - பகைவர். அவர் போல, அதாவது, தம் ஆயுதம் முதலியவை பயன்படாமற் போகப் போரில் புறங்

கொடுத்து ஓடுதல் போல், கல் மழை பொழியும் காளமுகிலும் தேவர்களை விரட்டியவனான விசயன் வில்லினின்று சரமழை பொழிய, (காளமுகில் பெய்த) கற்களும் தூளாகி, (அம் முகிலும்) உடல் வெளுத்துத் திரும்பிச் சென்றது, என்பதாம். துரந்த - விரட்டிய.

சப்த மேகங்களில் 'காளமுகி' என்பது கல் மழை பொழியும் மேகம். மற்றவை, நீர், மணி, பொன், பூ, மண், தீ ஆகியவற்றைப் பொழிபவை. மேனி வெளிறியது, அச்சத்தால்.

70. மாயவன் றனக்கு நேயமைத் துனனா
மைந்தனத்தந்தையை மதியான்
தூயவெங் கணையா லவனிடித் துவசந்
துணித்தமர் தொடங்குமவ் வளவில்
காயமெங் கணுநின் றொலியெழப் பரந்து
காயமில் கடவுளக் கடவுள்
நாயகன் றனக்குப் பரிவுட னவைதீர்
நல்லுரை நவின்றதை யன்றே.

[மாயன் தனக்கு நேயம் மைத்துனன் ஆம் மைந்தன் அ தந்தையை மதியான் (ஆய்) தூய வெம் கணையால் அவன் இடி துவசம் துணித்து, அமர் தொடங்கும் அளவில். (ஆய்) காயம் எங்கணும். நின்று ஒலி எழ பரந்து காயம் இல் கடவுள், கடவுள் நாயகன் தனக்கு பரிவுடன் நவைதீர் நல்லுரை நவின்றது.— ஐ' சாரியை; அன்றே, சுற்றசை.]

**விளக்கம் :—** மைத்துனன்- அத்தை மகன்; அத்தான். கண்ணனுக்கு மைத்துனனாகிய (இந்திரன்) மகன்; அருச்சுனன். அவன், தந்தையாகிய இந்திரனை மதியாமல் கணைகளால் அவனது இடியின் உருவம் தாங்கிய கொடியை அறுத்துப் போர் தொடங்கிய சமயத்தில், ஆகாயம் எங்கும் ஒலி எழுந்து வியாபிக்கும் படி காயமில் கடவுள் (அசரீரி), கடவுளர் தலைவனான இந்திரனுக்கு நவை (குற்றம்) தீர்ந்த நல்ல உரையைப் பரிவுடன் சொல்லிற்று,—என்பது பொருள்.

இந்திரன் இடித்துவசம் உடையவன். காயம் - ஆகாயம் உடல், என்ற பொருள்களில் வந்துள்ளது. போரில் இந்திரனுக்கு நேரவிருக்கும் தோல்வியையும், அதனால் உண்டாகும் அவமானத்தையும் விலக்கினமையின், அசரீரியின் வாக்கு 'நவைதீர் நல்லுரை' ஆயிற்று.

71. தமரினு மினிய தக்ககன் முதலே
தப்பினன் குருநிலஞ் சார்ந்தான்
குமரனு நும்மா லுய்ந்தனன் றூமக்
கொடியனுங் கொண்டலுக் கவியான்
நமர்களி லிருவர் நரனு நா ரணனு
நமக்குமிங் கிவர்சிற திளையார்
அமரினை யொழிமி னமரினை யொழிமி
னமரரு மமரர்நா தனுமே.

[தமரினும் இனிய தக்ககன் முதலே தப்பினன் (ஆய்) குரு நிலம் சார்ந்தான், குமரனும் நும்மால் உய்ந்தனன், தூமம் கொடியனும் கொண்டலுக்கு அவியான்; நமர்களில் இருவர் நரனும் நாரணனும், நமக்கு இங்கு இவர் சிறிதும் இளையார். அமரினை ஒழிமின், அமரினை, ஒழிமின் அமரமும் அமரர் நாதனுமே.]

**விளக்கம்:**—தமர்- சுற்றத்தார். தட்சகன் முன்னமேயே தப்பி குருநாட்டை அடைந்தான். அவன் மகனும் உங்களால் காப்பாற்றப் பட்டான். தூமக் கொடியன்- அக்கினிதேவன், (புகையைக் கொடியாக உடையவன்). நரனும் நாரணனுமாகிய இருவரும் நம்மவர்களில் இருவர், அதாவது தேவர்களைச் சேர்ந்தவர் நமக்கு இவர்கள் சிறிதும் இளைக்கமாட்டார். ஆகவே, தேவர்களும், தேவர் தலைவனுமாகிய நீங்கள் போரை ஒழியுங்கள்,— என்பது அசரீரி கூறிய நவைதீர் உரை.

''தட்சனும் அவன் மகனும் உங்கள் முயற்சியால் உயிர் தப்பினர். இனிச் செய்யும் முயற்சி பயன்படாது; அக்கினி அவியான். பொரும் இருவரும் நம்மவரே; எனவே, போரொழி தலே மதியுடைமை,'' என்று அசரீரி கூறலும் போர் நின்றது, என்க.

எல்லோரும் விசயனை வியத்தல்

72. என்றுகொண் டுரைத்த மொழிசெவிப் பட்ட
வெல்லையி னிரவிமுன் னிருள்போல்
துன்றுதன் சேனைச் சுரகணஞ் சூழச்
சுரபதி துறக்கம தடைந்தான்
வென்றுவெங் களங்கொண் டருச்சுனன் றனது
வெற்றிகொள் சங்கமுங் குறித்தான்

அன்றுசெந் திருமா லருச்சுனன் பொருத
வாண்மைகண் டதிசயித் தனனே.

[என்று கொண்டு உரைத்த மொழி செவிபட்ட எல்லையின் இரவி முன் இருள் போல், துன்று தன் சேனை சுரகணம் சூழ சுரபதி துறக்கம் அது அடைந்தான், வென்று வெம் களம் கொண்டு அருச்சுனன் தனது வெற்றிகொள் சங்கமும் குறித்தான்; அன்று செம் திருமால் அருச்சுனன் பொருத ஆண்மை கண்டு அதிசயித்தனனே.]

**விளக்கம்:—** என்று கொண்டு- என்று (கொண்டு, அசை). இரவின் முன் இருள்போல்-சூரியன் முன் இருள் ஒழிதல் போல், (அருச்சுனன் முன் நிற்க மாட்டாமல் இந்திரன், தேவர் கணம் தன்னைச் சூழ்ந்துவரத் தனது சுவர்க்கலோகத்தை அடைந்தான், என்றபடி). சுரபதி. இந்திரன். சங்கமும் குறித்தான் - சங்கத்தையும் (வெற்றியின் அடையாளமாக) ஊதினான். கண்ணனும் அவனது போர்த் திறத்தை வியந்தான். வெற்றியின் அடையாளமாகச் சங்கம் முழங்கல், வீரர் இயல்பு.

73. வடமது ரையினுந் தென்மது ரையினும்
மதிகுல நிருபர்கன் னியரைக்
கடிமணம் புரிந்தோன் வின்மையின் வன்மை
கண்ணுறக் கண்டவா னவரும்
புடவியி லொருவ ரொடுமினிப் பூசல்
பொரேனெனப் போனவா சவனும்
முடிசடை மவுலி நாரதன் முதலா
முனிவரு முடிவறப் புகழ்ந்தார்.

[வட மதுரையினும் தென் மதுரையினும் மதிகுல நிருபர் கன்னியரை கடிமணம் புரிந்தோன் வின்மையின் வன்மை கண் உறகண்ட வானவரும், "புடவியில் ஒருவரொடும் இனி பூசல் பொரேன்" என போன வாசவனும் முடி சடை மவுலி நாரதன் முதலாம் முனிவரும் முடிவு அற புகழ்ந்தார்.]

**விளக்கம்:—** வடமதுரைப் பெண் சுபத்திரை. தென்மதுரைப் பெண் சித்திரவாகன பாண்டியனின் பெண்ணான சித்திராங்கதை. இவர்கள் சந்திர குலத்தினர், இப்பெண்களை மணந்த விசயனது வில் தொழிலைக் கண்ட வானவரும், "பூலோகத்தார் எவரோடும் இனிப் பொரேன்," என்று தன்பதி அடைத்த வாசவனும் சடை முடியையுடைய நாரதர் முதலிய முனிவர்களும் முடிவின்றி அவனைப் புகழ்ந்தனர்,—என்பதாம்.

அருச்சுனன் முன் நிற்க மாட்டாது தோற்றமையின், "புடவியில் ஒருவரோடும் இனிப் பொரேன்," என்று இந்திரன் கூறினானாயிற்று.

74. மாசுணத் தரசன் மந்திர மமைத்த
வனத்திடை யிருந்தமா மயனை
ஆசுசுக் கணிசென் றடர்த்தலும் வெருவி
யருச்சுனா வபயமென் றரற்றத்
தேசுடைத் திகிரிச் செங்கண்மால் கருணை
செய்தனன் றீவினை யுறினும்
பேசுதற் கரிய பெரியவர் நினைக்கின்
யார்கொலோ பிழைத்திடா தவரே.

[மாசுணத்து அரசன் மந்திரம் அமைந்த வனத்திடை இருந்த மா மயனை ஆசுசுக்கணி சென்று அடர்த்தலும், வெருவி, 'அருச்சுனா, அபயம்' என்று அரற்ற, தேசுடை திகிரி செங்கண்மால் கருணை செய்தனன்; தீவினை உறினும் பேசுதற்கு அரிய பெரியவர் நினைக்கின் யார்கொலோ பிழைத்திடாதவர், (ஏ).]

**விளக்கம்:**—மாசுணத்து அரசன்-தட்சகன். மந்திரம்-மாளிகை. அமைத்த-அமைந்துள்ள. மயன்-அசுரரின் தச்சன். ஆசுசுக் கணி-அக்கினி. செங்கண்மால்-கண்ணன். தீவினை உறினும்-தீவினையின் பயனாய் துன்பமுறினும் பேசுதற்கு அரிய பெரியவர்-சொல் கடந்த பெருமையுடைய மேலோர் அத்தகையவர் நினைத்தால் துன்பத்தினின்றுவிடுபடாதவர் யார்? (விடுபவர் என்றபடி).

கண்ணன் கருணை செய்தமையின் மயன் பிழைத்தான், என்க, "கண்ணன் கருணையால் மயன் பிழைத்தான்," என்ற சிறப்புப் பொருளை, "பெரியோர் நினைக்கின் உய்யாதார் யார்?" என்ற பொதுப் பொருளால் சாதித்தமையின், இது **வேற்றுப் பொருள் வைப்பணி** ஆகும்.

'தீவினை உறினும்' என்பது 'நெருப்பு நெருங்கி அடர்த்தாலும்' என்ற பொருளையுங் கொண்டுள தயம் காண்க.

75. அழைத்தடல் விசயன் றனைத்துணை செய்கென்
றாறுபத் தியோசனை யாகித்
தழைத்தவவ் வனத்தைக் கனத்தைவென் கண்டு
தழலவ னுகர்ந்தி டுங்காலைப்

பிழைத்தவர் மயனுந் தக்ககன் மகவும்
பெருந்தவ னொருவன்முன் கருப்பம்
இழைத்தநுண் சிறகர்க் கருநிறக் குரீஇயி
னினங்களு மன்றிவே றிலரால்.

[அழைத்து அடல் விசயன் தனை துணை செய்க என்று, ஆறு பத்து யோசனை ஆகி தழைத்த அ வனத்தை கனத்தை வென் கண்டுதழலவன் நுகர்ந்திடும் காலை, பிழைத்தவர் மயனும், தக்க கன் மகவும் பெரும் தவன் ஒருவன் முன் கருப்பம் இழைத்த நுண் சிறகர் கரு நிறம் குரீ இயின் இனங்களும் அன்றி வேறு இலர்; ஆல்.]

**விளக்கம்:**—'அழைத்து' என்பதைத் துணை 'செய்கென்று அழைத்து' என்று கூட்டுக, காண்டவ வனத்தின் வித்தீரணம் அறுபது யோசனை. யோசனை-ஒரு காத தூரம். தழைத்த அடர்ந்து வளர்ந்த. கனத்தை வென் கண்டு - மேகத்தை முதுகிடச் செய்து; (வென். வெந்-முதுகு) (அக்கினி 'மேகத்தை முதுகிடச் செய்து வனத்தை உண்டபொழுது) தப்பிப் பிழைத்த வர் மயன், தட்சகன் மகவு, பெருந்தவமுடைய மந்தபாலன் என்ற முனிவன் ஒருவனால் கருவாகத் தோன்றிய கருநிறக் குருவி யின் கூட்டங்கள். மற்ற சர அசரப் பொருள்கள் எல்லாம் அழிந் தன,—என்க.

'பிழைத்தவர்....குரீஇயின் இனங்களும்' என்ற உயர்திணை முடிபு சிறப்புப் பற்றியது.

**அக்கினி விடைபெற வீரரும் பதி சேர்தல்**

76. என்பிற புகல்வ தீரெழு புவன
மெம்பிரா னருந்திய தென்னத்
தன்பசி தணியக் காண்டவ வனத்திற்
சாரசர முள்ளவை யனைத்தும்
வன்புட னருந்தி யுதரமுங் குளிர்ந்தான்
வன்னிதன் வடிவமுங் குளிர்ந்தான்
அன்புடை யிருவர்க் காசியும் புகன்றா
னசைந்துபோய்த் துறக்கமு மடைந்தான்.

[என்பிற புகல்வது? ஈர் எழு புவனம் எம்பிரான் அருந்தியது என்ன, தன் பசி தணிய காண்டவ வனத்தில் சராசரம் உள்ளவை வன்புடன் அருந்தி உதரமும் குளிர்ந்தான், வன்னிதன் வடிவமும்

குளிர்ந்தான்; அன்பு உடை இருவர்க்கு ஆசியும் புகன்றான்; அசைந்துபோய் துறக்கமும் அடைந்தான்.]

**விளக்கம் :—**என் பிற புகல்வது - சொல்வதற்கு வேறு என்ன இருக்கின்றது. தன்னால் முடியாததைக் கிருஷ்ணார்ச்சுனர்களின் துணை கொண்டு உண்டதனால், 'வன்புடன் உண்டு,' என்றார். வன்புடன் - பெற்ற வலிமையோடு பசி தணியத் தன் வலிமையெலாம் கொண்டு. உதரம் - வயிறு. வடிவமும் குளிர்ந்தான் - பசிப் பிணியினால் தேய்த்த உடலும் குளிர்ந்தான்; அதாவது, இழந்த சோபையைப் பெற்றான். அதன் பின், தன்பால் அன்பு காட்டிய கிருஷ்ணார்ச்சுனருக்கு ஆசி சொல்லித் துறக்கம் சேர்ந்தான்.

பசிப்பிணி நீங்கியதினாலும், வயிறு புடைக்க உண்டதினாலும் 'அசைந்தசைந்து' வன்னி சென்றானாயிற்று.

77. அமரரை முதுகு கண்டகா வலரு
மவரவ ராண்மைக ளுரைசெய்து
அமரிலன் றெடுத்த பல்பெருங் கொடியா
லலங்கரித் தமைத்ததந் தேர்மேல்
தமருடன் துணைவர் நால்வரு நகரச்
சனங்களு மகிழ்ந்தெதிர் கொள்ளத்
தமரமும் முரசு முழங்கவெண் சங்கந்
தழங்கவந் தணிநகர் சேர்ந்தார்.

[அமரரை முகுது கண்ட காவலரும், அவர் ஆண்மைகள் உரை செய்து, அமரில் அன்று எடுத்த பல் பெரும் கொடியால் அலங்கரித்து அமைத்த தம் தேர்மேல் (ஏறினராய்' தமருடன் துணைவர் நால்வரும் நகரம் சனங்களும் மகிழ்ந்து எதிர்கொள்ள, தமரமும் முரசும் முழங்க, வெள் சங்கம் தழங்க வந்து அணிநகர் சார்ந்தார்.]

**விளக்கம் :—**அமரில் அன்று எடுத்த பல் பெருங்கொடி - போரில் அன்று தூக்கிய கருடக் கொடியும், அநுமக் கொடியும். ஒன்று அல்லாத பலவாதல் பற்றிப் "பல்பெருங்கொடி," எனப்பட்டது. தழங்க - ஒலிக்க. வந்து - மீண்டு வந்து.

தமரும், துணைவர் நால்வரும், நகர சனங்களும் எதிர் கொள்ளக் கிருஷ்ணார்ச்சுனர் இந்திரப் பிரத்தத்தை அடைந்தனர், என்பதாம்.

காண்டவ தகனச் சருக்கம் முற்றும்.

ஆதி பருவம்—சருக்கம் 8—செய்யுள் 798

ஆதி பருவம் முற்றும்.

# 2. சபா பருவம்

சபை சம்பந்தமான பருவம், சபா பருவம்; அதாவது, கிருஷ்ணார்ச்சுனரது அருளால் காண்டவவனத்தீயினின்று தப்பிப் பிழைத்த மயன், பாண்டவர்க் கென்று இந்திரப்பிரத்தத்தில் அமைத்த சபா மண்டபத்திலும், பின்னர் துரியோதனன் அத்தின புரியில் இயற்றிய சபா மண்டபத்திலும் நிகழ்ந்தனவற்றைக் கூறும் பருவம், என்பது பொருள். இப் பருவம், **இராயசூயச் சருக்கம், சூதுபோர்ச் சருக்கம்** என்ற இரு சருக்கங்களைக் கொண்டது.

## 1. இராயசூயச் சருக்கம்

பித்ருலோக வாசியான பாண்டு மன்னனின் விருப்பத்தை நாரதர் மூலம் அறிந்த தருமன், இராய சூயத்தைச் செய்து, தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றியதைக் கூறும் சருக்கம் இது. உலகத்திலுள்ள அரசர்களை வென்று, அவர்களிடமிருந்து திரையாகப் பெற்ற பொருளைக் கொண்டு செய்யப்படும் வேள்வி யாகும் இது.

### கடவுள் வணக்கம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

1. பாண்டவர்கள் புரிந்ததவப் பயனாகி
யவதரித்துப் பகைத்து மேன்மேல்
மூண்டவினை முழுவதுவு முனைதோறு
முரண்முறுக்கி முகில்பு காமல்
காண்டவமுங் கனல்வயிற்றுக் கனறணிய
நுகருவித்துக் காக்கு மாறே
பூண்டருளெம் பெருமானைப் போற்றுவா
ரெழுபிறப்பு மாற்று வாரே.

[பாண்டவர்கள் புரிந்த தவம் பயன் ஆகி அவதரித்து, பகைத்து மேல்மேல் மூண்ட வினை முழுவதுவும் முனைதோறும்

முரண் முறுக்கி, முகில் புகாமல் காண்டவமும் கனல் வயிறு கனல் தணிய நுகருவித்து காக்கும் ஆறே பூண்டருள் எம்பெருமானை போற்றுவார் எழு பிறப்பும் மாற்றுவாரே.]

**விளக்கம்:**—பாண்டவர் தம் தவத்தின் பயனாய் அவதரித்து, பண்டவர்பால் பகை கொண்டு (துரியோதனாதியர்) மேலும் மேலும் முயன்று செய்த வஞ்சகச் செயல்கள் எல்லாவற்றையும், செய்யப்படும் இடந்தோறும் வலிகெடச் செய்து, காண்டவ வனத்தை அக்கினி தேவனின் வயிற்றுக் கனல் (பசி) தணிய அவன் உண்ணுமாறு செய்து, எல்லா உயிர்களையும் காக்கும் வழியை மேற்கொண்டருளும் எம்பிரானாகிய கண்ணனைத் துதிப்போர் எழுவகைப் பிறப்பையும் நீக்கியவராவர்,— ஏ : தேற்றம்.

காண்டவ தகனம் நிகழ விசயன் துணை நின்றது, கண்ணனது அநுமதி கொண்டேயாதலால், அதைக் கண்ணன்மேல் ஏற்றிக் கூறினார், என்க. தேவர், மனிதர், மிருகம், பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்பன, எழுவகைப் பிறப்பு. 'எழுவகைப் பிறப்பும் மாற்றுவார்' என்றது, 'வினை ஒழிய முத்திபெறுவர்,' என்ற கருத்தது.

2. வியனும்பர் பலகணமுஞ் சுரபதியுஞ்
சென்றெழில் கொள்விசும்பின் மேவ
நயனங்கண் முதலான வைம்புலனு
மனமும்போ னகரி னெய்திப்
பயன்மிஞ்சு தொழிலினராய்ப் பாண்டவருந்
திருமாலும் பயிலும் வேலை
மயனென்பான் வாய்புதைத்து வளம்படவந்
தொருமாற்றம் விளம்பி னானே.

[வியன் உம்பர் பல கணமும் சுர பதியும் சென்று எழில் கொள் விசும்பின் மேவ, நயனங்கள் முதலான ஐம்புலனும் மனமும் போல் நகரின் எய்தி, பயன் மிஞ்சு தொழிலினர் ஆய் பாண்டவரும் திருமாலும் பயிலும். வேலை, மயன் என்பான் வாய் புதைத்து வளம்பட வந்து ஒரு மாற்றம் விளம்பினான், ஏ.]

**விளக்கம் :**—வியன் உம்பர் பல கணம் - பலவகைப்பட்ட தேவர் கணம். சுரபதி - இந்திரன். (இந்திரன் முதலிய தேவர்கள் போரொழிந்து தம் உலகம் சென்றபின்) பாண்டவரும் திருமாலும் நகரின் எய்தி பயன் மிஞ்சு தொழிலினராய் நயனங்கள் முத

லான ஐம்புலனும் மனமும்போல் பயிலும் வேலை - பாண்டவரும் கண்ணனும் நகரை அடைந்து, நற்பயன் விளைவிக்கக்கூடிய காரியங்களை மேற்கொண்டவராய், கண் முதலிய ஐந்து இந்திரியங்களும், அவற்றை இயக்கும் மனமும்போல் ஒன்றியிருக்கும் சமயம். (அப்பொழுது) மயன் என்பான் வாய் புதைத்து வந்து வளம்பட (சிறப்புடைய) ஒரு மாற்றம் விளம்பினான் (வார்த்தை சொன்னான்), என்க.

இந்திரியங்களை மனம் இயக்குவதுபோல் பாண்டவர்களைக் கண்ணன் இயக்கினான், என்பது தோன்ற 'ஐம்புலனும் மனமும் போல்' என்றார். பொறியைப் புலன் என்றது உபசார வழக்கு. உறுப்புக்களில் கண் சிறந்ததாதல்பற்றி, 'நயனங்கள் முதலான ஐம்புலன், என்றார். பாண்டவர்களில் சிறந்தவனான தருமனுக்குக் கண் உவமை ஆயிற்று.

மயன், அசுரர் தச்சன். தனக்கு உயிர். உதவியதற்கு எதிர் உதவி செய்யுங் கருத்தில் மயன் பேசினானாதலால், 'வளம்பட ஒரு மாற்றம் விளம்பினான்,' எனப்பட்டது.

3. உம்மாலின் றருவினையே னுயிர்பிழைத்தே
னீர்தந்த வுயிருக்கு மீண்டோர்
கைம்மாறு வேறில்லை குருகுலம்போ
லெக்குலமுங் காக்கு கிற்பீர்
தெம்மாற வுலகாளுஞ் செங்கோன்மைக்
குருபதிக்குச் சிற்பம் வல்லோர்
அம்மாவென் றதிசயிப்ப வரியமணி
மண்டபமொன் றமைக்கின் றேனே.

[உம்மால் இன்று அருவினையேன் உயிர் பிழைத்தேன், நீர் தந்த உயிருக்கு மீண்டு ஓர் கைம்மாறு வேறு இல்லை; குருகுலம் போல் எ குலமும் காக்குகிற்பீர் தெவ் மாற உலகு ஆளும் செங்கோன்மை குருபதிக்கு, சிற்பம் வல்லோர். 'அம்மா' என்று அதிசயிப்ப அரியமணி மண்டபம் ஒன்று அமைக்கின்றேன், ஏ.]

விளக்கம் :—அருவினையேன் - விலக்கரிய தீவினையை உடையேன்; அதாவது. தீக்கு இரையாதற்குரிய பிராரப்த கருமத்தை உடையேன். மீண்டு ஓர் கைம்மாறு வேறில்லை - (உயிர் காத்தற்கு எதிராகத்) திரும்ப ஒன்று செய்யத்தக்க பிரதி உபகாரம் வேறு இலது. "குருகுலம்போல் எக்குலமும் காக்குகிற்பீர்" என்ற விளி, பாண்டவரோடு கண்ணனையும்

உளப் படுத்தியதாகும். தெவ் மாற - பகை இலதாக. குருபதி- தருமன்.

"நீங்கள் செய்த உதவிக்கு ஈடாக ஒன்று செய்வதற்கில்லை யாயினும், என் நன்றி மறவாமையைத் தெரிவிக்கும் பொருட்டுக் குருபதிக்குச் சிற்பம் வல்லோரும், 'அம்மா' என்று வியக்கும் வண்ணம் அரிய மணிமண்டபம் ஒன்று அமைத்துத்தர, என்னை அனுமதிக்க வேண்டும்," என்று மயன் வேண்டினான், என்பதாம்.

தருமனுக்கு **அஜாதசத்**ரு, என்ற ஒரு பெயர் உளது. பகை உண்டாகப் பெறாதவன், என்பது பொருள். "தெம்மாற உலகு ஆளும் குருபதி," என்றது, இதன் தமிழ் மொழி பெயர்ப்பாகும். தெவ் - மாற - தெம்மாற.

4. மேனாளிவ் வுலகாண்ட விடபருவ
னசுரகுல வேந்தர் வேந்தன்
தானாண்மை யுடன்பொருது தரியலரைத்
திறைகொணர்ந்த தாரா பந்தி
போனாளு மொளிவீசும் பலமணிகள்
விந்துவெனும் பொய்கை தன்னில்
ஆனாமற் கிடப்பனவுண் டவையிதற்கே
யுபகரண மாகு மென்றான்.

[மேல் நாள் இ உலகு ஆண்ட விடபருவன், அரசு குலம் வேந்தர் வேந்தன் தான் ஆண்மையுட பொருது தரியலரை திறை கொணர்ந்த தாராபந்திபோல், நாளும் ஒளி வீசும் பல மணிகள் விந்து என்னும் பொய்கை தன்னில் ஆனாமல் கிடப்பன உண்டு; அவை இதற்கே உபகரணம் ஆகும் என்றான்.]

**விளக்கம் :**—"விடபருவன், (விருஷபருவா) என்ற பெயருடைய அசுரர் குலச் சிரேஷ்டன், முன்னொரு காலத்தில் போரில் பகைவென்று, அவர்களிடமிருந்து இறைப் பொருளாகக் கொணர்ந்த நட்சத்திர வரிசைபோன்று எப்பொழுதும் ஒளிவிடும் மணிகள், விந்து என்னும் பொய்கையில், (பிந்துசரஸில்) நீக்கப் படாமல் கிடக்கின்றன; அவை, தான் கட்ட நினைத்த மண்டபத்திற்கு உபகரணமாகும்," என்று மயன் கூறினான் என்றபடி.

தரியலரைத்திறை கொணர்ந்து - பகைவர்களிடமிருந்து திறை கொணர்ந்து, (உருபு மயக்கம்). பிந்துசரஸ், என்பது வடக்கே மைநாக பர்வதத்தைச் சேர்ந்த இரணியசிங்கம் என்ற குன்றில் உளது, என்பர். பொய்கை - மனிதர் கை படாது இயற்கையாய் அமைந்த நீர்நிலை.

5. என்பதன்முன் முப்பதின்மே லிரட்டிகொணூ
றாயிரவ ரெடுத்த பாரம்
வன்புடனே தரித்துவரை யசைந்தாலு
மசையாத வயிரத் தோளார்
அன்புமிகும் விழிக்கருணை யறன்புதல்வ
னேவலினா லசுரத் தச்சன்
தன்பணியீ தெனப்பணிப்ப வொருநொடியிற்
கொடுவந்தார் தளர்வி லாதார்.

[என்பதன் முன் முப்பதின் மேல் இரட்டிகொள் நூறு ஆயிரவர், எடுத்த பாரம் வன்புடனே தரித்து, வரை அசைந்தாலும் அசையாத வயிரம் தோளார், அன்பு மிகும் விழி கருணை அறன் புதல்வன் ஏவலினால், அசுரத்தச்சன் தன் பாணி ஈது என பணிப்ப, ஒரு நொடியில் கொடு வந்தார், தளர்வு இலாதார்.]

**விளக்கம் :—**என்பதன்முன், அன்பு மிகும் விழிக்கருணை அறன் புதல்வன் (தருமன்) ஏவலினால், அசுரத் தச்சன், தன் பணி ஈது எனப்பணிப்ப, வரை அசைந்தாலும் அசையாத வயிரத் தோளோர், தளர்வு இலாதார், முப்பதின்மேல் இரட்டி நூறாயிரவர் (60 லட்சம் பேர்) எடுத்த பாரம் வன்புடனே தரித்து ஒரு நொடியில் கொடு வந்தார்,—என்பது அன்வயம்.

தருமன் ஏவலினால், மயன் தான் செய்யப்போகும் காரியம் இதுவென, ஆட்களை ஏவ, அறுபது லட்சம் பேர் சென்று பிந்து சரஸிலிருந்து நவரத்தினச் சுமைகளை ஒரு நொடியில் கொண்டு வந்தார்,—என்பதாம்.

எடுத்த பாரம் - எடுத்த நவரத்தினங்களாகிய பாரமுடைய சுமைகள். வன்புடன் தரித்து - வலிமையுடன் தாங்கி. தளர் விலாதார் - தொழில் செய்வதில் தளராதவர். வயிரத் தோளார் - வயிரம் பாய்ந்த, அதாவது உறுதியுடைய தோளார், 'என்பதன் முன்...கொடுவந்தார்' என்று காரியத்தை முன்னும் காரணத்தை பின்னுமாகக் கூறுமிது மிகை உயர்வு நவிற்சியின் பாற்படும்.

6. மீதடுக்கிப் பசும்பொன்னாற் சுவர்செய்து
மரகதத்தூண் வீதி போக்கி
ஓதிடத்திற் சுருங்காமற் செழுந்துருகித்
திரம்பரப்பி யுலகோ ரேழும்
மாதிடத்தான் வைகுதற்கு வாய்க்குமதோ
விதுவென்ன வரம்பில் கேள்விச்
சோதிடத்தோர் நாளுரைப்பச் சுதன்மையினு
முதன்மைபெறத் தொடங்கி னானே.

[மீது அடுக்கி பசும் பொன்னால் சுவர் செய்து, மரகதம் தூண் வீதிபோக்கி, ஓது இடத்தில் சுருங்காமல் செழும் துகிர் உத்திரம் பரப்பி, "உலகு ஓர் ஏழும் மாது இடத்தான் வைகுதற்கு வாய்க்குமதோ இது," என்ன, வரம்பில் கேள்வி சோதிடத்தோர் நாள் உரைப்ப சுதன்மையிலும் முதன்மை பெற தொடங்கினான், ஏ.]

**விளக்கம் :**—பசும் பொன்னால் ஆக்கிய கற்களை ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டிய பொன்சுவர். தூண்கள் - மரகதம் (பச்சைமணி). வீதி போக்கி - ஒழுங்காக நிறுத்தி. ஓது இடத்தில் - சிற்ப நூல் கூறும் இட அளவில் (குன்றாது), உத்திரம், பவளத்தாலானது. மாது இடத்தான் - பார்வதியை இடப் பாகத்திலே கொண்ட சிவ பெருமான். அவன் வைகுதற்கு வாய்க்குமதோ - அவன் உறைவதற்கு கிட்டக்கூடியது. ஆமோ (இம் மண்டபம்) என்று (ஏழுலகத்தாரும்) வியக்கும்படி. சுதன்மை - (சுதர்மை) இந்திரனது சபா மண்டபம். முதன்மை பெற - சிறப்படையுமாறு, (வரம்பில் கேள்வி சோதிடர் நிச்சயித்த முகூர்த்தத்திலே, மயன் மண்டப வேலையை ஆரம்பித்தான்).

மாதிடத்தான், என்பதை, மா - திடத்தான் எனப்பிரித்து "மிக்க உறுதியை உடைய நமது அரசன் வைகுதற்கு வாய்க்குமோ!" என்று உலகோர் வியந்ததாகவும் கொள்ளலாம்.

7. மனத்தாலுந் திருத்தகுநூல் வரம்பாலு
முரம்பயிறோள் வலியி னாலும்
இனத்தாலுந் தெரிந்துதன தெண்ணியவெண்
ணினுக்கேற்ப வெண்ணில் கோடித்
தினத்தாலுஞ் செயற்கரிய செழுமணிமண்
டபமீரேழ் திங்கட் செய்தான்

தனத்தான்மிஞ் சியதருமன் றம்பியர்க்குத்
தண்டுடன்வெண் சங்கு மீந்தான்.

[மனத்தாலும் திரு தகு நூல் வரம்பாலும் உரம் பயில்தோள் வலியினாலும், இனத்தாலும் தெரிந்து தனது எண்ணினுக்கு ஏற்ப எண் இல் கோடி தினத்தாலும் செயற்கு அரிய செழுமணி மண்டபம் ஈர் ஏழ் திங்கள் செய்தான்; தனத்தால் மிஞ்சிய தருமன் தம்பியர்க்கு தண்டுடன் வெண் சங்கும் ஈந்தான்.]

**விளக்கம்** ;—திருதகு நூல் வரம்பாலும் - மேன்மை வாய்ந்த சிற்பநூல் பிரமாணத்தாலும். உரம் பயில் தோள்வலி - பயிற்சி வலிமை கொண்ட கைத்திறமை. இனம் - சிற்பநூல் வல்ல தனது பரிவாரங்கள். எண்ணினுக்கு ஏற்ப - தன் கருத்திற்கு ஏற்றபடி. எண்ணில் கோடி தினம் - அளவு இறந்த நாள்கள்; எண்ணில் அடங்கா நாட்கள். ஈரேழ் திங்கள் - பதினான்கு மாதம். தம்பியர் - பீமனும், அருச்சுனனும். அவர்களுக்குக் கதையையும் சங்கையும் முறையே கொடுத்தான்.

பல வருஷ காலத்திலும், கற்பனையினாலும், நூல் பிரமாணத்தாலும், கைத்திறமையினாலும் கட்டி முடிக்க முடியாத அரிய மண்டபத்தை மயன் பதினான்கு மாதங்களில் கட்டி முடித்தான், என்றபடி.

8. அத்தபதி தன்குறிப்பா லமைத்தபெரு
மண்டபத்தி னளவு நீளம்
வித்தரமோ டுயர்ச்சியெனும் வனப்பனைத்துங்
கண்டோர்கள் வியந்து கூற
கொத்தலர்தார் மணிமுரசக் கொடியுயர்த்தோன்
கனற்பிறந்த கொடியுந் தானும்
எத்தமரு மனமகிழக் குடிபுகுந்தா
னிறைஞ்சலருக் கிடியே றன்னான்.

[அ தபதி குறிப்பால் அமைத்த பெரு மண்டபத்தின் அளவு நீளம் வித்தரமொடு உயர்ச்சி எனும் வனப்பு அனைத்தும் கண்டோர்கள் வியந்து கூற, கொத்து அலர் தார் மணி முரசம் கொடி உயர்த்தோன் கனல் பிறந்த கொடியும் தானும், எ தமரும் மனம் மகிழ குடி புகுந்தான், இறைஞ்சலருக்கு இடி ஏறு அன்னான்.]

**விளக்கம்:**—தபதி- (ஸ்தபதி) மயன். குறிப்பால்-கருத்தின் வழி. நீளம், வித்தரம், உயர்ச்சி எனும் அளவு வனப்பு அனைத்தும்-நீளம் அகலம் உயரம் என்னும் அளவும் அழகும் ஆகிய எல்லாம். கொத்து அலர்...கொடியோன்-தருமன். கனல் பிறந்த கொடி- திரௌபதி. இறைஞ்சலருக்கு இடியேறு அன்னான்- பகைவர்களுக்கு இடியேறு போன்றவன்; (அதாவது அச்சத்தையும் அழிவையும் விளைவிப்பவன், என்றபடி). தமர்-தம்மவர், சுற்றத்தார்; இது இங்கே தம்பியரையும் குறிக்கும். இறைஞ்சலர்-வணங்காதவர்; எனவே பகைவர். ஏறு, ஆண்மைப் பெயர்; பெரியது, சிறந்தது, வலியது ஆகியவற்றை ஏறு என்னல் வழக்கு.

**நாரத முனிவன் வருகை**

**9.** தம்பியர்க ணால்வருடன் றண்டுழாய்
முடியோனுந் தானு மேனை
அம்புவிமன் னருமுனிவ ரனைவருஞ்
சூழ்தரவிருந் தவமயந் தன்னில்
தும்புருநா ரதரென்னு மிருவரினு
நாரதனாந் தோன்ற றோன்றப்
பைம்பொன்மலர் தூயெதிர்போய்ப் பணிந்திறைஞ்சி
யென்செய்தான் பாண்டு மைந்தன்.

[தம்பியர் நால்வருடன் தண் துழாய் முடியோனும் தானும், ஏனை அம் புவி மன்னரும் முனிவர் அனைவரும் சூழ்தர இருந்த அமயம் தன்னில், தும்புரு நாரதர் என்னும் இருவரினும் நாரதன் ஆம் தோன்றல் தோன்ற, பைம்பொன் மலர் தூய் எதிர்போய் பணிந்து இறைஞ்சி என் செய்தான் பாண்டு மைந்தன்.]

**விளக்கம்:**—தும்புரு, நாரதர் என்பவர் தேவ இருடியர் இருவர். தோன்றல்-சிறந்து தோன்றுபவன்; ஆகவே, மேலோன். தூய்-தூவி. பணிந்து இறைஞ்சி- வணங்கித் துதித்து, என் செய்தான்- (பாண்டு மைந்தன்) என்னென்ன விதம் உபசரிக்க வேண்டுமோ அவ்விதமெல்லாம் குறைவிலாது உபசரித்தான்.

**10.** ஏற்றினா னாசனத்திற்ற னித்தனியே
யுபசாரம் யாவும் தந்து
மாற்றினான் வழியிளைப்பு மலரயன்போ
லிருந்தோனை மகிழ்ச்சி கூர்ந்து

போற்றினானீ வரயான் புரிதவம்யா
தெனப்புகழ்ந்தான் பொதியிற் றென்றல்
காற்றினா லரும்புநறுஞ் சூதம்போற்
புளகரும்புங் காயத் தானே.

[ஏற்றினான் ஆசனத்தில் தனித்தனியே உபசாரம் யாவும் தந்து, மாற்றினான் வழி இளைப்பு, மலர் அயன் போல் இருந்தோனை மகிழ்ச்சி கூர்ந்து போற்றினான், 'நீ வர யான் புரி தவம் யாது?' என புகழ்ந்தான், பொதியின் தென்றல் காற்றினால் அரும்பும் நறும் சூதம் போல் புளகு அரும்பும் காயத்தான், ஏ.]

**விளக்கம்:—** பொதியின் (வரும்) தென்றல் காற்றினால் அரும்பும் நறும் சூதம் (மாமரம்) போல், புளகு அரும்பும் காயத்தான் (ஆன) தருமன், மலர் அயன்போல் இருந்தோனை ஆசனத்தில் ஏற்றினான்; உபசாரம் யாவும் தனித்தனியே தந்து வழி இளைப்பு மாற்றினான்; மகிழ்ச்சி கூர்ந்து போற்றினான், 'நீ, வர, யான் புரி தவம் யாது?' எனப் புகழ்ந்தான், —என்பது அன்வயம்.

உபசாரம் யாவும் தனித்தனியே தந்து- அருக்கியம் பாத்தியம், ஆசமநீயம், ஸ்நாநம் முதலிய பதினாறு வகையான உபசாரங்களையும் விடாமல் செய்து. இதை **ஷோடசோபசாரம்,** என்பர். போற்றல் - துதித்தல். புகழ்தல்-உபசார வார்த்தை கூறல்.

நல்லோர் வரவினால் மகிழ்தல் பெரியோர் இயல்பாதலால், நாரதனாகிய நல்லோன் வரவினால் தருமன், தென்றலுக்குத் தளிர்ந்து அரும்பும் மாமரம் போல் உடல் புளகித்தவனானான், —என்றபடி.

11. யான்புரிந்த தவமுலகில் யார்புரிந்தா
ரவனிபரி லிசையின் வீணைத்
தேன்புரிந்த தெள்ளமுதா லமுதுண்டோர்
செவியிரதந் தெவிட்டு விப்பாய்
மரன்புரிந்த திருக்கரத்து மதியிருந்த
நதிவேணி மங்கை பாகன்
தான்புரிந்த திருக்கூத்துக் கிசையமகிழ்ந்
திசைபாடுந் தத்வ ஞானி.

[யான் புரிந்த தவம் உலகில் யார் புரிந்தார் அவனிபரில்? இசையின் வீணை தேன் புரிந்த தெள் அமுதால் அமுது உண்டோர் செவி இரதம் தெவிட்டுவிப்பாய், மான் புரிந்த திரு கரத்து மதி இருந்த நதிவேணி மங்கை பாகன், தான் புரிந்த திருக்கூத்துக்கு இசைய மகிழ்ந்து இசைபாடும் தத்வ ஞானி.]

விளக்கம்:—வீணையின் இசைத் தேன் புரிந்த தெள்ளிய அமுதினால் அமுதம் உண்டோரான தேவர்களின் செவியை இரதத்தால் (இனிமையால்) தெவிட்டும்படி நிறைக்கும் இசை வித்தகனே, மான்புரிந்த திருக்கரத்தையும் மதியும் நதியும் இருந்த வேணியையுடைய மங்கை பாகனான சிவபிரான் புரிந்த திருக்கூத்துக்கு இசைய மகிழ்ந்து இசைபாடும் தத்வஞானியே, (நீ என்பால் எழுந்தருளப் பெற்றதால்) உலகில் உள்ள அவனி பரில் யான் புரிந்த தவம் யார் புரிந்தார்?—என்று தருமன் உப சார வார்த்தை கூறியபடி,

புரிந்த-செய்த, கலந்த சேர்ந்த அல்லது தங்கிய—என்ற பொருள்களில் வந்துளது. இரதம்-(ரஸம்) இனிமை. வேணி-சடைமுடி, மங்கை பாகன்-தேவியை வாமபாகத்திற் கொண்ட சிவபெருமான். தான் அசை. நதி-கங்கை. பகீரதனது பெருந் தவத்தின் பயனாகப் பூமிக்குவந்த கங்கையைச் சிவபெருமான் சடைமுடியில் ஏற்றுப் பூமியில் சிறிது சிறிதாக விட்டான்,—என்பது வரலாறு).

12. எனத்தருமன் கூறவிளை யோர்கடனித்
தனிநின்றி றைஞ்ச நீல
கனத்தனைய திருமேனிக் கண்ணனுந்தன்
மனங்களிப்பக் கண்ணி னோக்க
மனத்தினழுக் கணுகாத மாதவத்தோ
னுதிட்டிரற்கிம் மாட கூடந்
தனத்தின்மிகு குபேரனெழி லளகையினு
மிலதென்று சாற்றி னானே.

[என தருமன் கூற இளையோர்கள் தனித்தனி நின்று இறைஞ்ச, நீல கனத்து அனைய திருமேனி கண்ணனும் தன்மனம் களிப்ப கண்ணின் நோக்க, மனத்தின் அழுக்கு அணுகாத மாதவத்தோன் உதிட்டிரற்கு இ மாட கூடம் தனத்தின் மிகு குபேரன் எழில் அளகையினும் இலது என்று சாற்றினான்; ஏ.]

**விளக்கம்:**—நீலகனம்-(நீலகநம்) நீல நிறமுடைய மேகம். மனத்தின் அழுக்கு அணுகா மாதவத்தோன் நாரத முனிவன். மாட கூடம்-சபாமண்டபம்.

தருமன் உபசார வார்த்தை கூற தம்பியர் தனித்தனி வணங்க, கண்ணபிரானும் மனக் களிப்போடு கண்ணினால் முனிவனை நோக்க, நாரதனும் இதுபோன்ற மண்டபம் ஒன்று அளகையிலும் இலது, என்றான்,—என்பதாம்.

13. மண்மிசைநால் விரநிற்கு மணிமகுடத்
தணியரங்கின் மண்ணு ளோரும்
விண்மிசைவா ணருநெருங்க விராயவரு
மறைச் சடங்கி னிராய சூயம்
கண்மிசைமா மணிநிகரென் கான்முளையைப்
புரிவியெனக் கால னூரில்
பண்மிசைவீ ணையின் கிழவன் பாண்டுமொழிந்
தனனெனவும் பகர்வுற் றானே.

[மண்மிசைநால் விரல் நிற்கும் மணி மகுடத்து அணி அரங்கில் மண் உளோரும் விண்மிசை வாணரும் நெருங்க, விராய அருமறை சடங்கின் இராயசூயம், கண்மிசை மாமணி நிகர் என் கான் முளையை புரிவி என காலன் ஊரில், பண்மிசை வீணையின் கிழவன், பாண்டு மொழிந்தனன் எனவும் பகர்வுற்றான்; ஏ.]

**விளக்கம் :**—மண்மிசை நால் விரல் நிற்கும்-பூமியினிடத்தே யாராவது மயன் அமைத்த மண்பத்திற்கு இணையான ஒரு மண்டபம் இருக்கின்றதா என்று எண்ணிப் பார்க்க, இதை ஒன்றாகக் கொண்டு. சிறு விரலை மடக்கியபின் இதற்கு இணையானதொன்று இல்லாமையால் மற்ற நான்கு விரல்களும் மடக்கப்படாது நின்று விடும்; (அதாவது இதனை ஒத்த வேறொன்று இல்லை என்றபடி)- மணி மகுடத்து அணி அரங்கு -இரத்தினமயமான சிகரங்களை உடைய அழகிய சபாமண்டபம். வாணர் (வாழ்நர்) வாழ்பவர். விராய அருமறை சடங்கின் இராயசூயம்-பொருந்திய அரிய வேதம் விதித்த விதிகளோடு இயைந்த சடங்குகளைக் கொண்ட இராஜ சூயம் என்னும் வேள்வி. கண்மிசை மாமணி நிகர் கான்முளை கண்ணினிடத்தேயுள்ள சிறந்த கருமணியை நிகர்த்த மகனாகிய யுதிட்டிரன், காலன் ஊர் - பித்ருலோகம்; இது காலன் ஆட்சிக்குட் பட்டிருத்தலின் காலன் ஊர் எனப்பட்டது. பண்மிசை வீணையின் கிழவன் - இசைக்

கருவிகளில் சிறந்ததான வீணையின் உரிமையைக் கொண்ட நாரதன்.

"நான் பித்ருலோகம் சென்றபொழுது, அங்கே வசிக்கும் உன் தந்தையான பாண்டு மஹாராஜன், என் அருமை மகனான தருமனைக் கண்டு இராஜசூய வேள்வியைச் செய்யுமாறு கூறுக," என்று கூறினான் என்று நாரத முனிவன் தருமனுக்குச் சொன்னான், என்பதாம்.

'புரிவி' என்ற வினை, 'கான் முளையை, இராயசூயத்தை,' என்ற இரண்டு செயப்படு பொருளைக் கொண்டுளது. புரிவி - புரியச் செய். கான்முளை - (கால் - முளை) சந்ததியில் தோன்றியவன், சந்ததி விருத்திக்கு ஆதாரமானவன்; எனவே, மகன்.

**சராசந்தன்வதம்**

14. தந்தைமொழி தனயனுக்குச் சாற்றிமுனி
யகன்றதற்பின் றம்பி யான
இந்திரனுந் தன்மனத்தி னெண்ணமுமீண்
டாகுமென வெண்ணிக் கூறும்
அந்தநர மேதமக மியற்றுதற்கென்
றவனிபரை யடைய வாரிப்
பந்தமுறு பெருஞ்சிறையிற் படைகெழுவேற்
சராசந்தன் படுத்தி னானே.

[தந்தை மொழி தனயனுக்கு சாற்றி முனி அகன்ற தன்பின், தம்பி ஆன இந்திரனும் தன் மனத்தின் எண்ணமும் ஈண்டு ஆகும், என எண்ணி கூறும்; அந்த நரமேத மகம் இயற்றுதற்கு என்று அவனிபரை அடைய வாரி, பந்தம் உறு பெரும் சிறையில் படை கெழு வேல் சராசந்தன் படுத்தினான், ஏ.]

**விளக்கம் :**—தம்பியான இந்திரன் - உபேந்திரன், கண்ணன். எண்ணமும் ஈண்டு ஆகும் - சராசந்தவதமாகிய தனது எண்ணமும் இப்பொழுது நிறைவேறும், (என்று கண்ணன் எண்ணித் தருமனுக்குக் கூறுவானாயினான், என்க.) நரமேத மகம்-மனிதர்களைப் பலியிட்டுச் செய்யும் ஒரு யாகம். பந்தம் - கட்டு, தளை. படைகெழு - படை பலம் மிகுந்த.

"தேவர் பகைவனும் மகத தேசத்து அரசனுமான பிருகத்ரதன், மகப்பேறு வேண்டித்தவ வரனான சண்ட கௌசிக முனிவனை அடைந்து தன் விருப்பத்தைத் தெரிவிக்க, அவர் ஒரு மாங்

கனியைக் கொடுத்தருளினார். அக் கனியைத் தன் மனைவியர் இருவருக்கும் அவன் பகிர்ந்து கொடுத்தான். மனைவியர் இருவரும் கருக்கொண்டு பாதி பாதியாக ஒரு குழந்தையைப் பெற்றனர். இதனால் மனவருத்தங் கொண்ட வேந்தன் அவற்றை ஊர்ப்புறத்தில் எறிவித்தான். இரவில் ஊர்வலம் வந்த ஜரை என்ற கிராமதேவதை, எறியப்பட்ட அப் பிளவுகளை ஒன்று படுத்திப் பிழைப்பித்து, அக்குழந்தையைத் தந்தையிடம் ஒப்படைத்துப் போயினாள். அக் குழந்தைதான் சராசந்தன். அவன், தனது இரு பெண்களையும் கிருஷ்ணனது மாமனான கம்சனுக்கு மணம் செய்வித்திருந்தான். கம்சனைக் கண்ணன் கொன்ற காரணத்தால், சராசந்தன் அவனைப் பகைத்து, யாதவருக்குத் துன்பத்தை விளைத்து வந்தான். அவனை, வீமனைக் கொண்டு கொல்ல நினைத்திருந்த. கண்ணன், 'தனது எண்ணம் இப்பொழுது நிறைவேறும்,' என்று நினைத்தான்,''— என்பது வரலாறு.

15. சதகோடி தனக்கொளித்துத் தடங்கடலிற்
புகுங்கிரிபோற் றளர்ச்சி கூர்ந்து
சதகோடி முடிவேந்தர் தங்களுயிர்
கொண்டொளித்தார் சமருக் காற்றார்
சதகோடி சுரும்பரற்றுந் தாராயச்
சராசந்தன் றன்னை யின்னே
சதகோடி யிபமதுகைச் சதாகதிசேய்
தனையொழியச் சாதிப்பார் யார்.

[சதகோடி தனக்கு ஒளித்து தடங்கடலில் புகும் கிரிபோல் தளர்ச்சி கூர்ந்து, சதகோடி முடிவேந்தர் தங்கள் உயிர் கொண்டு ஒளித்தார் சமருக்கு ஆற்றார், சதகோடி சுரும்பு அரற்றும் தாராய், அ சராசந்தன் தன்னை இன்னே. சதகோடி இபம் மதுகை சதாகதி சேய்தனை ஒழிய சாதிப்பார் யார்?]

**விளக்கம் :**—சதகோடி - வச்சிராயுதம், மிகப்பல, அல்லது நூறு கோடி, (என்ற பொருள்களில் வந்துளது.) கூறிய முனை நூறு உடைமையின், இந்திரனது வச்சிரப்படை சதகோடி என்ற பெயரதாயிற்று; (கோடி - முனை. நுனி). தாராய், என்ற விளி மாலையணிந்த தருமனைக் குறிக்கும். இபம் - யானை. மதுகை- வலிமை. சாதிப்பார் - சராசந்தன் அழிதலைச் சாதிப்பவர், செய்து முடிப்பவர். சதாகதி - எப்பொழுதும் சஞ்சரித்தலை உடைய வாயு. சேய் - மகன் (வீமன்).

''வச்சிரப்படைக்கு அஞ்சி மலைகள் கடலில் ஒளிந்துகொண்டது போல், முடிவேந்தர் பலர், அவனோடு பொர முடியாதவராய்த் தளர்ச்சி மிகுந்து உயிர் இழக்காமையில் ஆசைகொண்டு ஓடி ஒளிந்தனர்; ஆகவே, இப்பொழுது, நூறு கோடி யானையின் பலங்கொண்ட வீமனன்றி அவனை அழிக்கவல்லார் யாருளர்?'' என்று கண்ணன் தருமனுக்குக் கூறினான், என்பது பொருள்.

16. ஆரமணங் கமழசல மநேகமுள
வானா லு மலையின் கூல
வாரிதியை மதிப்பதற்கு வல்லதுமந்
தரமன்றி மற்று முண்டோ
போர்விசய மவனுடன்முன் பொருதோரில்
யார்பெற்றார் போது மிப்போ(து)
ஆரணமா முனிவரா யெனப்புகன்றா
னறன்மகனு மஃதே யென்றான்.

[ஆரம் மணம் கமழ் அசலம் அநேகம் உள ஆனாலும், அலையின் கூலம் வாரிதியை மதிப்பதற்கு வல்லது மந்தரம் அன்றி மற்றும் உண்டோ! போர் விசயம் அவனுடன் முன் பொருதோரில் யார் பெற்றார்? போதும் இப்போது, ஆரணம் மாமுனிவரர் ஆய், என புகன்றான்; அறன் மகனும் அஃதே என்றான்.]

**விளக்கம் :**—ஆரம் - சந்தனம், அசலம் - மலை. அலையின் கூலவாரிதி - அலைமோதும் கரை உடைய பாற்கடல். மதிப்ப - கடைய. ஆரண முனிவர் - அந்தணர்.

''சந்தனம் கமழும் மலைகள் பல உலகில் இருப்பினும், பாற்கடல் கடைதற்கு மந்திரமலையன்றி வேறு உண்டோ! முன்பு அவனோடு பொருதாரில் விசயம் பெற்றோர் யார்? (ஒருவரும் இல்லையென்றபடி). அந்தண வேடங் கொண்டவராய் நாங்கள் இப்போது செல்வோம்,'' என்று கண்ணன் கூறினான். தருமனும், 'அவ்வாறு செய்க' என்று அதற்கு உடன்பட்டான்,—என்பது பொருள். அறன் மகன் - தர்மராஜனது மகனான தருமன்.

17. அரிவிரசுந் துழாய்மகுடத் தரியுமிரண்
டரிகளரு ளாண்மை யோரும்
எரிவிரசு நெடுங்கான மிருதினத்தில்
விரைந்தேகி யெண்ணில் காவல்

கிரிவிரச நகரெய்திக் கிரித்தடந்தோண்
மகதேசன் கிளருங் கோயில்
கரிவிரசுங் கோபுரம்பொற் றிருவாயில்
புகுந்துரைத்தார் காவ லோர்க்கே.

[அரி விரசும் துழாய் மகுடத்து அரியும், இரண்டு அரிகள் அருள் ஆண்மையோரும் எரி விரசும் நெடும் கானம் இரு தினத்தில் விரைந்து ஏகி, எண் இல் காவல் கிரிவிரசம் நகர் எய்தி, கிரி தடந்தோள் மகத ஈசன் கிளரும் கோயில் கரி விரசுங் கோபுரம் பொன்திருவாயில் புகுந்து உரைத்தார் காவலோர்க்கே.]

**விளக்கம் :—**அரி - வண்டுகள். அரி விரசும் துழாய் மகுடத்து அரி - வண்டுகள் நெருங்கி மொய்க்கும் திருத்துழாய் மாலையணிந்த முடியை உடைய திருமாலாகிய கண்ணன். இரண்டு அரிகள் (இந்திரன், வாயு) அருள் ஆண்மையோர் - பீமார்ச்சுனர். எரி விரசு நெடுங்கானம் - வெப்பம் மிகுந்த பெரிய காடு. கிரிவிரசம்-சராசந்தன் வாழும் நகர் (மகத நாட்டின் தலைநகர்). மகதேசன் (மகத ஈசன்)-மகதத்தின் அரசனான சராசந்தன், கிளரும் கோயில்-விளங்கி வாழும் மாளிகை. கரி-யானை, யானைகள் நெருங்கியதும் கோபுரத்தை உடையதுமான அழகிய அரண்மனை வாயிலைக் கண்ணன் முதலிய மூவரும் அடைந்து வாயில் காப்போருக்குத் தம் வரவைக் கூறினார்கள், என்க.

இயற்கையாய் அமைந்த மலையரனைக் கொண்டிருத்தல் பற்றி, அந்நகரம் கிரீவ் ரஜம் என்ற பெயராயிற்று.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

18\. வந்தனர் முனிவர் மூவரென் றுரைமின்
மன்னவற் கெனவவ ருரைப்பத்
தந்திடுமெனலும் புகுந்துநீ டம்பொற்
றவிசிருந் தாசியுஞ் சாற்றக்
கந்தடர் குவவுத் தோளில்விற் குறியுங்
காட்சியுங் கருத்துற நோக்கி
அந்தண ரல்லீர் யாவர்நீ ரென்றா
னவ்வுரைக் கமலனு முரைப்பான்.

[வந்தனர் முனிவர் மூவர் என்று உரைமின் மன்னவற்கு என அவர் உரைப்ப, தந்திடும் எனலும், புகுந்து நீடு அம்பொன்

தவிசு இருந்து ஆசியும் சாற்ற, கந்து அடர் குவவுத் தோளில் வில் குறியும் காட்சியும் கருத்து உற நோக்கி, "அந்தணர் அல்லீர். யாவர் நீர்?" என்றான்; அ உரைக்கு அமலனும் உரைப்பான்.]

**விளக்கம் :**—தந்திடும் - அழைத்து வாருங்கள், (என்று மன்னன் ஏவ, அக்காவலர் அழைக்கவும்) புகுந்து - மூவரும் உள்ளே சென்று. கந்து அடர் - தூணை ஒத்த. குவவுத் தோள் - திரட்சியுடைய தோள். காட்சி - தோற்றம். கருத்துற- கூர்ந்து.

அந்தண வேடத்தில் உள்ளே சென்று அமர்ந்த மூவரின் தோற்றத்தையும், தோள்களில் வில்லின் தழும்பையுங் கண்டு சங்கித்த சராசந்தன், "நீங்கள் அந்தணர் அல்லீர்; யாவர் நீர்?" என்று வினவ. அமலனாகிய கண்ணனும் பதில் மொழிந்தான், என்பதாம்.

19. யான்விது குலத்தில் யாதவ னிவரோ
குருகுலத் தலைவனுக் கிளையோர்
மான்மத மலர்த்தார் மன்னகே ளொருவன்
வாயுவின் மதலைமற் றொருவன்
வான்மதி லுடுத்த பொன்னகர்க் கிறைவன்
மதலைநின் வளநகர் காண்பான்
கான்மதக் களிற்றாய் முனிவராய் வந்தோங்
காவலர்க கணுகொணா மையினால்.

[யான் விது குலத்தில் யாதவன், இவரோ குருகுலம் தலைவனுக்கு இளையோர், மான் மதம் மலர் தார் மன்ன, கேள்; ஒருவன் வாயுவின் மதலை, மற்றொருவன் வான் மதில் உடுத்த பொன் நகர்க்கு இறைவன் மதலை, நின் வளம் நகர் காண்பான், கால மதம் களிற்றாய், முனிவராய் வந்தோம், காவலர்க்கு அணுகொணாமையினால்.]

**விளக்கம் :**—விது - சந்திரன். மான்மதம் - கஸ்தூரி. வான்மதில் பெரியமதில். கால் மதக் களிற்றாய் - (மதம் கால் களிற்றாய்) மதம் வழியும் யானைப் படையை உடையவனே. காவலர் - அரசர்.

அரசர்கள் எளிதில் உன் நகரில் புகமுடியாத காவலுடைமையின், அந்தணர் வேடங்கொண்டு வந்தோம், என்று கண்ணன் பதில் மொழிந்தான், என்பதாம். யது

என்பவன், சந்திரகுலத்தில் பிரசித்தி பெற்ற யயாதி என்பானின் மகன். யதுவின் பரம்பரையில் வந்தவன் யாதவன்.

20. என்றுகொண் டுண்மை யாதவ னுரைப்ப
விருபுய வலியினண் டிசையும்
சென்றுகொண் டடர்த்துத் தெவ்வர்தம் முயிருந்
திறைகளு முறைமுறை கவர்ந்து
வென்றுகொண் டணிந்த வாகையோன் தினவு
மிக்கன வெமதிணை மேருக்
குன்றுகொண் டமைந்த தோள்களெம் முடனீர்
குறித்தமர் புரியுமென் றுரையா.

[என்று கொண்டு உண்மை யாதவன் உரைப்ப, இரு புயவலியின் எண் திசையும் சென்று கொண்டு அடர்த்து தெவ்வர் தம் உயிரும் திறைகளும் முறை முறை கவர்ந்து வென்று கொண்டு அணிந்த வாகையோன், தினவு மிக்கன எமது இணை மேரு குன்று கொண்டு அமைந்த தோள்கள், எம்முடன் நீர் குறித்து அமர் புரியும் என்று உரையா,—இதுவும் இதைத் தொடரும் இரு செய்யுள்களும் குளகம்.]

**விளக்கம்**:—"என்று கொண்டு, சென்று கொண்டு, வென்று கொண்டு," என்பவற்றிலுள்ள கொண்டு, சொல்லசை. 'குன்று கொண்டு,' என்பதில், அது, போன்ற என்ற பொருளது. வாகையோன் - வெற்றிச் சின்னமாக வாகைமாலை சூடிய சராசந்தன். குன்று கொண்டமைந்த எனது தோள்கள் தின வெடுத்தலின், அது தீருமாறு என்னோடு நீங்கள் மனங்கொண்டு போர் செய்ய வாருங்கள், என்று கூறி, மேலுங் கூறு வானாயினான், என்றபடி.

அழிக்க முடியா வலிமையினாலும், பருமையினாலும், மேரு மலை தோள்களுக்கு உவமையாற்று.

21. நீயெனி லாண்டோ ரொன்பதிற் றிரட்டி
நெடுஞ்சிறைக் கலுழன்முன் னெறிக்கொள்
ஈயென வேரடி மதுரைவிட் டாழி
யெயிற்றுவா ரகைப்பதி புகுந்தாய்
நோயென வசுரர்க் குடைந்துபொற் காவி
னுழைவரு நூறுமா மகத்தோன்
சேயெனி னிளையோன் வீமனை விசும்பிற்
சேர்த்துவ னெனவிழி சிவவா.

[நீ எனில் ஆண்டு ஓர் ஒன்பதிற்று இரட்டி நெடும் சிறை கலுழன்முன் நெறி கொள் ஈ என ஓடி, மதுரை விட்டு, ஆழி எயில் துவாரகை பதி புகுந்தாய்; நோய் என அசுரர்க்கு உடைந்து பொன் காவின் நுழை தரு நூறு மா மகத்தோன் சேய் எனில், இளையோன்; வீமனை விசும்பில் சேர்த்துவன்; என, விழி சிவவா.]

**விளக்கம் :**—ஆண்டு ஓர் ஒன்பதிற்று இரட்டி - பதினெட்டு ஆண்டுகளாக. கலுழன் - கருடன். நெறிகொள் எதிரடைந்த (ஈ என). ஆழி எயில் துவாரகை - கடலை மதிலாகவுடைய துவாரகை. நோய் என - நோய்க்கு அஞ்சுவதுபோல். பொன்கா - கற்பகச் சோலை. நூறு மாமகத்தோன் - நூறு அசுவமேத யாகங்களைச் செய்து தலைமைப் பதவி பெற்ற இந்திரன். விழி சிவவா - கண்கள் கோபத்தினால் சிவந்து,— அழைத்து. என அடுத்த செய்யுளோடு சேரும்.

"நீயோ கருடன் முன் ஈ போல, எனக்கு அஞ்சி ஓடி ஒளிந்தவன்; இந்திரன் சேயான அருச்சுனன், இளைஞன். எனவே, வீமனைப் பொருது அவனை விண் செலுத்துவேன்," என்று சராசந்தன் கூறியபடி.

தன் பெருமையும் கண்ணனது சிறுமையும் தோன்றச் சராசந்தன், முன் ஈ என 'ஓடி' என்றானாயிற்று.

22. மந்திரச் சுற்றத் தவர்களை யழைத்து
மதலையை மகித்லந் தனக்கோர்
இந்திர னெனவே மணி முடி புனைந்தன்
றியாவருந் தேவரும் வியப்ப
மந்தர கிரியும் விந்தமுந் தம்மின்
மலைவபோன் மல்லமர் மலைவான்
சந்தணி தடந்தோள் கொட்டியார்த் தெழுந்தான்
றழலுமிழ் விழிச்சரா சந்தன்.

[மந்திரம் சுற்றத்தவர்களை அழைத்து மதலையை மகிதலம் தனக்கு ஓர் இந்திரன் எனவே மணிமுடி புனைந்து, அன்று யாவரும் தேவரும் வியப்ப, மந்தர கிரியும் விந்தமும் தம்மின் மலைவ போல் மல் அமர் மலைவான் சந்து அணி தடந்தோள் கொட்டி, ஆர்த்து எழுந்தான், தழல் உமிழ் விழி சராசந்தன்.]

**விளக்கம் :**—மந்திரச் சுற்றம் - உறவினர்களான மந்திரிகள். இந்திரன் எனவே மணிமுடி புனைந்து - பூலோகத்து இந்திரன் என்னும்படி மகனான **சகதேவனுக்கு** மணிமுடி சூட்டி. அன்று - அன்றைய தினமே. மல்போர் - ஆயுதங்களின் துணையில்லாமல் செய்யும் போர். மலைவான் - போர் செய்வதற்கு.

சராசந்தன் அன்றே தன் மகனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து வீமனோடு பொருதற்குத் தோள்தட்டி, ஆரவாரம் செய்து கொண்டு எழுந்தான்,—என்பதாம். மந்தரகிரியும் விந்திய மலையும், வீமனுக்கும், சராசந்தனுக்கும் உவமை.

23. யாளிவெம் பதாகை வீமனு மவனும்
யாளியும் யாளியு மெனவே
தாளினுஞ் சமர மண்டலங் களினுந்
தாழ்விர ற் றடக்கைமுட் டியினும்
தோளினுஞ் சென்னித் தலத்தினு மற்போர்
சொன்னபோர் விதமெலாந் தொடங்கி
நாளினுந் திங்க ளொன்றினிற் பாதி
நள்ளிர வினுஞ்சமர் நடத்தி.

[யாளி வெம் பதாகை வீமனும் அவனும் யாளியும் யாளியும் எனவே, சமரம் மண்டலங்களினும் தாழ் விரல் தடக்கை முட்டியினும், தோளினும், சென்னி தலத்தினும் மல்போர் சொன்ன போர் விதம் எல்லாம் தொடங்கி, நாளினும் திங்கள் ஒன்றினில் பாதி, நள் இரவினும் சமர் நடத்தி - அடுத்த செய்யுளில் முடியும்; குளகம்.]

**விளக்கம் :**—யாளி - துதிக்கையை உடையதும், சிங்கம் போன்ற உருவத்தினதுமான மிருக விசேஷம். வீமனது கொடி, யாளிக் கொடி, (பதாகை - கொடி). சமர மண்டலங்களினும் - மல்யுத்தத்திற்கூறிய மண்டல வகைகளினாலும், (அதாவது, இடம் வலமாகவும், வட்டமாகவும் சாரிதிரிதல் என்னும் கதி விசேஷத்தினாலும்). தாழ் விரல் தடக்கை முட்டி - மடக்கிய அல்லது நீண்ட விரல்களை உடைய தடக்கை முஷ்டி சென்னித் தலம் - தலை. மல்போர் சொன்ன போர்விதம் எல்லாம் - மல் யுத்த நூல் வகுத்த போர் வகைகள் எல்லாவற்றாலும். தொடங்கி - போரை ஆரம்பித்து. திங்கள் ஒன்றினில் பாதி நாளினும் - பதினைந்து தினங்கள் முழுதும். நள் இரவினும் - இருண்ட இரவிலும் (விடாமல்), போர்செய்தனர், என்பதாம்.

இரண்டு யாளிகள் போல் வீமசராசந்தர், தாள், முஷ்டி, தோள், தலைகளைக் கொண்டும் மற்போர் விதிப்படி சாரிதிரிந்தும், இரவு பகல் ஆகிய இருபொழுதும் விடாமல் (ஒய்வு இன்றி) பதினைந்து தினங்கள் போர் செய்தனர்,—என்க.

24. பூதல நடுங்க வெழுகிரி நடுங்க
போதகத் தொடுதிசை நடுங்க
மீதல நடுங்கக் கண்டகண் டவர்த
மெய்களு மெய்யுற நடுங்கப்
பாதல நடுங்க விருவர்மா மனமும்
பறையறைந் தயர்வுட னடுங்கச்
சாதலங் கொழிந்த விடரெலா முழந்து
தங்களிற் றனித்தனி தளர்ந்தார்.

[பூதலம் நடுங்க, எழு கிரி நடுங்க, போதகத்தொடு திசை நடுங்க, மீதலம் நடுங்க, கண்ட கண்டவர் தம் மெய்களும் மெய் உற நடுங்க, பாதலம் நடுங்க, இருவர் மா மனமும் பறை அறைந்து அயர்வுடன் நடுங்க, சாதல் அங்கு ஒழிந்த இடர் எலாம் உழந்து தங்களில் தனிதனி தளர்ந்தார்.]

**விளக்கம் :**—பூதலம் - பூமி. எழு கிரி - ஏழு மலைகள். போதகம் - திக்கஜங்கள். திசை - எட்டுத்திக்குகள். மீதலம் - விண்ணுலகம். கண்ட கண்டவர் - (இப் போரைக்) கண்டோர் எல்லாரும். மெய் - உடல், மெய் (என்ற இரு பொருள்களிலும் வந்துளது). உற - மிகவும். பாதலம் - கீழுலகம். இருவர் மனம்- போர் செய்வோரின் மனம். பறை அறைந்து - பறை அடித்தாற் போல் துடித்து. அயர்வுடன் - தளர்ச்சியுடன். சாதல் ஒழிந்த இடர் - இறத்தல் இன்றி மரணாந்த காலத்துத் துன்பம், (மரணாவஸ்தை). உழந்து - அனுபவித்து, தங்களில் தனித்தனி தளர்ந்தார் - தங்களுள் இருவரும் தனித்தனியே களைத்து மூர்ச்சை அடைந்தார்கள்.

மூவுலகத்திலும் உள்ள சராசரங்கள் எல்லாம் நடுங்க, வீரர் இருவரும் கடும் போர் புரிந்து அயர்ந்தனர், என்க. 'இருவர் மா மனமும்,' என்பதற்குக் கிருஷ்ணார்ச்சுனரின் சிறந்த மனமும், என்றலுமாம். 'சாதல் அங்கு' என்பதிலுள்ள 'அங்கு' அசை. அல்லது, சாதல் ஒழிந்த இடர் எலாம் அங்கு (அப்போரினிடத்தே) உழந்தார், என்று இயைத்தும் பொருள் கொள்ளலாம்.

25. கொல்லவென் றெண்ணு மிருவரு மொருவ
ரொருவரைக் கொல்லொணா மையினான்
மல்லமர் வலியு மிருபுய வலியு
மிழந்துமா மகிதலத் துறலும்
கல்லடர் செம்பொன் வரையின்முக் குவடு
காலுடன் பறித்தகால் கண்டு
நல்லதன் மைந்தற் குணர்வுமீண் டெய்த
நலத்துட னல்கிய தன்றே.

[கொல்ல என்று எண்ணும் இருவரும் ஒருவர் ஒருவரை கொல்(ல) ஒண்ணாமையினால், மல் அமர் வலியும் இரு புயம் வலியும் இழந்து மா மகிதலத்து உறலும், கல் அடர் செம்பொன் வரையின் முக்குவடு காலுடன் பறித்த கால், (தன் மகன் நிலை) கண்டு, தன் மைந்தற்கு உணர்வு மீண்டு எய்த நலத்துடன் (காற்றை) நல்கியது, அன்றே.]

விளக்கம் :—மல் அமர் வலி-மல்யுத்தத் திறமை. மகிதலத்து உறலும் - பூமியில் மூர்ச்சித்து விழலும். கல் அடர் - கற்கள் நிறைந்த. செம் பொன்வரை - மேருமலை. முக்குவடு - மூன்று சிகரங்கள். காலுடன் பறித்த கால் - அடியோடு பறித்து அகற்றிய வாயு பகவான். தன் மைந்தனாகிய வீமனுக்கு மீண்டும் உணர்வு உண்டாகும் படி இனிய காற்றை உதவினான், என்க. அன்றே, ஈற்றசை; அப்பொழுதே, என்றும் பொருள் கொள்ளலாம். நல்ல தன் மைந்தன் - தேவாம்சம் உடைய வீமன். இரு திணைக்கும் தேவர் பொதுவாதல் பற்றி, 'கால் நல்கியது' என்றார்.

26. மீளவு மிருக துவசனுற் றெழுந்து
விதலையின் விழுந்தமே வலனைத்
தாளொடு தாள்கள் வலியுறத் தன்பொற்
றடக்கையான் முடக்கறப் பிடித்து
வாளுகிர் வாளாற் கனகனைப் பிளந்த
வண்டுழாய் மணங்கமழ் மௌலிக்
கோளரி யெனவே பிளந்தெறிந் தண்ட
கோளமும் பிளக்கநின் றார்த்தான்.

[மீளவும் மிருக துவசன் உற்று எழுந்து, விதலையின் விழுந்த மேவலனை, தாளொடு தாள் வலியுற தன் பொன் தடக்கையால்

முடக்கு அற பிடித்து, வாள் உகிர் வாளால் கனகனை பிளந்த வள் துழாய் மணம் கமழ் மௌலி கோளரி எனவே பிளந்து எறிந்து, அண்ட கோளமும் பிளக்க நின்று ஆர்த்தான்.]

**விளக்கம் :**—மிருக துவசன் - யாளிக் கொடியை உடைய வீமன். விதலை - பூமி, நடுக்கம். மேவலன் - பகைவன், சார சந்தன்; (பூமியில் நடுக்கத்தோடு விழுந்து கிடந்த மேவலன்.) தாளொடுதாள் வலியுற - சாரசந்தன் தாளின்மேல் (வீமன்) தன் இரு தாள்களையும் வலிமையோடு பொருந்தச் செய்து; (அதாவது அவனது ஒரு காலின்மேல் வீமன் தனது இரு கால்களையும் அழுத்தமாக ஊன்றி). (மற்றொரு காலை) தன் பொன் தடக்கையால் முடக்கு அற, (அதாவது மடங்காதபடி) பிடித்து, கனகனை உகிரால் பிளந்த கோளரி (நரசிங்க மூர்த்தி) போல் பிளந்து (கிழித்து) எறிந்து, அண்ட கோளம் பிளந்து போகும்படி ஆரவரித்தான், என்பதாம்.

கோளரி எனவே பிளந்து, அண்டகோளம் பிளக்கும்படி (பிளவுற்ற உடற் பகுதியை) எறிந்து ஆர்த்தான், என்று இயைத்தும் பொருள் கொள்ளலாம். விலங்கின் பொதுப் பெயரான மிருகம், தலைமை பற்றிச் சிங்கத்தினும் வலியதான யாளியைக் குறித்தது.

27. பிளந்தெறி பிளவு மீளவும் பொருந்திப்
பிளிறுமா மதகரி நிகர்ப்பக்
கிளர்ந்துவெஞ் சமரந் தொடங்கலுந் தனது
கேதனக் கேசரி யனையான்
வளர்ந்ததிண் புயத்தின் வலியினான் முன்னை
மல்லம ரெழுமடங் காக
உளைந்திட மலைத்து வீழுமா றுதைத்தா
னோரிரண் டானதா லுடலம்.

[பிளந்து எறி பிளவு மீளவும் பொருந்தி, பிளிறு மா மதகரி நிகர்ப்ப கிளர்ந்து வெம் சமரம் தொடங்கலும், தனது கேதனம் கேசரி அனையான் வளர்ந்த திண் புயத்தின் வலியினால் முன்னை மல் அமர் எழு மடங்கு ஆக உளைந்திட மலைந்து. வீழுமாறு உதைத்தான், ஓர் இரண்டு ஆனது (ஆல்) உடலம்.]

**விளக்கம் :**—பிளிறு மா மதகரி - பேரொலி செய்யும் பெரிய மதயானை. கிளர்ந்து - ஊக்கம் மிகுந்து. (சராசந்தன் போர் தொடங்கலும்) தனது கேதன கேசரி அனையான்-தனது கொடி

யிலுள்ள யாளியை ஒத்தவனான வீமன், முன் செய்த மல்யுத்தத்தினும் ஏழு மடங்கு அதிகமாக (சராசந்தன்) வருந்தித் தளருமாறு போர் செய்து உதைத்தான். உடலும் மீண்டும் இரண்டாகப் பிளவுபட்டது. ஆல் : அசை.

போரில் உண்டான வெற்றி தோல்விகளுக்கு ஏற்ப, வீமனை யாளியாகவும், சராசந்தனை யானையாகவும் கூறினாராயிற்று. இங்கே, கேசரி என்றது சிங்கத்தினும் வலியதான யாளியைக் குறிக்கும். முன்னை : ஐ, சாரியை.

28. சீறியக் குரிசில் கீண்டபே ருடலைச்
சென்னிதாள் செவ்வையி னிடாமல்
மாறியிட் டிடுகென் றாருயிர்த் துணையாய்
வந்தமா மரகத வடிவோன்
கூறியிட் டிடாமற் குறிப்பினா லுரைப்பக்
குறிப்பையக் குறிப்பினாற் குறித்து
வேறிடப் புவியின் மிசையெறிந் தனனால்
வீமன்வல் லபத்தையார் வியப்பார்.

[சீறி அ குரிசில் கீண்ட பேர் உடலை சென்னி தாள் செவ்வையின் இடாமல் மாறி இட்டிடுக என்று, ஆர், உயிர் துணையாய் வந்த மா மரகத வடிவோன் கூறியிட்டிடாமல் குறிப்பினால் உரைப்ப, குறிப்பை அ குறிப்பினால் குறித்து, வேறு இட, புவியின் மிசை எறிந்தனன் (ஆல்); வீமன் வல்லபத்தை யார் வியப்பார்.]

**விளக்கம்:**—குரிசில் - சிறந்தவனான வீமன். செவ்வையின் இடாமல் - (தலையொடு தலையும் காலொடு காலுமாக) நேரே இடாமல். மாறி இட்டிடுக - தலையொடு காலும் காலொடு தலையுமாக மாற்றிப் போடுக. மரகத வடிவோன் - கண்ணன். (இவ்வாறு செய்யும்படி கண்ணன் குறிப்பினால் உணர்த்த) அ குறிப்பை அ குறிப்பினால் குறித்து - அந்த குறிப்பை குறிப்பித்த அந்த வகையால் உணர்ந்து. (காலும் தலையும்) வேறு இட - மாறுபடும்படி, (புவிமிசை எறிந்தான்). வல்லபம் - திறமை. வீமன் வல்லபத்தை யார் வியப்பார் - வீமனது போர்த் திறமையை வியந்து பாராட்ட வல்லவர் யார் உளர்? ஒருவரும் இல்லை, என்றபடி.

கண்ணன் ஒரு கோரையைக் கிழித்து, அடியையும் நுனியையும் மாற்றியிட்டான் என்றும், அந்தக் குறிப்பை உணர்ந்து பகை

வனது உடலை பிளந்து வீமன் கால் தலை மாற இட்டான் என்றும், கூறுவர்,

அறுசீர் ஆசிரிய விருத்தம்

கண்ணன் சராசந்தன் வரலாறு கூறல்

29. சந்தச் சிகரச் சந்தனியுந் தடந்தோ
ளாண்மைச் சராசந்தன்
முந்தப் பொருத மல்லமரின் முரணோ
டழிந்து முடிந்ததற்பின்
இந்தப் புதுமை தனைவியவா வேத்தா
விறைஞ்சா யதுகுலமா
மைந்தற் கொருவா சகமுரைப்பான் மணித்
தார்ப் புயவா சவன்மைந்தன்.

[சந்தம் சிகரம் சந்து அணியும் தடந்தோள் ஆண்மை சராசந்தன் முந்த பொருத மல் அமரில் முரணோடு அழிந்து முடிந்த தன் பின், இந்த புதுமைகளை வியவா, ஏத்தா, இறைஞ்சா யதுகுலம் மா மைந்தற்கு ஒரு வாசகம் உரைப்பான், மணி தார் புயம் வாசவன் மைந்தன்.]

**விளக்கம் :**—சந்தம் - அழகு. சிகரம் - மலைச் சிகரம். சந்து-சந்தனம். முந்த - முற்பட்டு, முரண் - வலிமை, இந்தப் புதுமை தனை வியவா - கிழித்த உடல் ஒட்டிக் கொள்வதாகிய இந்தப் புதுமையைக் கண்டு (விசயன்) வியந்து. ஏத்தா - (கண்ணனைத்) துதித்து. இறைஞ்சா - (அவனை) வணங்கி. யதுகுலமைந்தன் - கண்ணன். வாசவன் மைந்தன் - அருச்சுனன். பிளவுபட்ட உடல் ஒட்டிக் கொள்வதும், பின்பு கால் தலை மாற்றி இட்ட வளவில் இறந்ததும் ஆகிய புதுமையைக் கண்டு வியந்த விசயன் கண்ணனைப் பார்த்து ஒன்று கூறுவானானான், என்பதாம்.

வியவா, ஏத்தா, இறைஞ்சா என்ற எச்ச வினைகள் உடன் பாட்டுப் பொருளன.

30. இன்றா ரமரி னிவன்கையா லிறந்தோ
னுடல மொன்றியதும்
ஒன்றா திரண்டு பட்டதும்யா முணரும்
படிநீ யுரைத்தருள்வாய்

குன்றா லன்று மழைதடுத்த கொற்றக்
கவிகைக் கோபாலா
என்றா னென்ற பொழுதவனு மிறந்தோன்
சரித மினிதுரைப்பான்.

[இன்று ஆர் அமரில் இவன் கையால் இறந்தோன் உடலம் ஒன்றியதும், ஒன்றாது இரண்டு பட்டதும் யாம் உணரும்படி நீ உரைத்தருள்வாய், குன்றால் அன்று மழை தடுத்த கொற்றம் கவிகை கோபாலா என்றான், என்ற பொழுது அவனும் இறந்தோன் சரிதம் இனிது உரைப்பான்.]

**விளக்கம் :**—என்றான் - என்று விசயன் பிரார்த்தித்தான். என்ற பொழுது - என்று பிரார்த்தித்த பொழுது, (கண்ணன், சராசந்தனது வரலாறு கூறுவானாயினான்.) உடலம் ஒன்றிய தும், ஒன்றாது இரண்டு பட்டதும் - கிழிக்கப் பெற்ற உடல் ஒன்றி உயிர் பெற்றதும், கால் தலை மாற இட்டதும் தனித்தனி இரண்டாய்க் கிடந்து அழிந்ததும், என்ற பொருளது.

31. வானோர் பகைவர் களிலொருவன் மகத குலத்து
மாரதப்பேர்
ஆனோன் வயிற்றி லவதரித்தா னவன்கா
ணிந்த வடல்வேந்தன்
மீனோ ததிசூழ் மேதினியின் வேந்தர்
குலத்தைவேரோடும்
தானோ ராழி தனிநடத்தித் தடிந்தா
னணிந்தசமர்தோறும்

[வானோர் பகைவர்களில் ஒருவன் மகத குலத்து மாரதன் பேர் ஆனோன் வயிற்றில் அவதரித்தான், அவன் காண் இந்த அடல் வேந்தன், மீன உததி சூழ் மேதினியின் வேந்தர் குலத்தை வேரோடும், தான் ஓர் ஆழி தனி தடத்தி தடிந்தான் அணிந்த சமர்தோறும்.]

**விளக்கம் :**—மாரதன் - பெரிய தேரை உடையவன்; இப் பொருளை உடைய பிருகத்ரதன் என்பது அவனது பெயராயிற்று. அவன் வழியில் தோன்றினவன் இந்த அடல் வேந்தனாகிய சராசந்தன். மீன உததி - மீன்களை உடைய சமுத்திரம். தான் ஓர் ஆழி தனி நடத்தி வேந்தர் குலத்தை வேரோடும் தடிந்தான் - அவன் (தனது) ஒப்பற்ற ஆணையைத் தனி வழியில் நடத்தி, அரசர் குலத்தை, தான் அணிவகுத்துச் சென்ற போர்களில்

அடியோடு அழித்தான். 'காண்,' தேற்றப் பொருளது. ஆழி நடத்தல் - ஆணை செல்லும்படி ஆளுதல்.

32. எண்ணற் கரிய முடிவேந்த ரெண்ணா
யிரவர் பசுவாக
மண்ணித் தனையுந் தன்குடைக்கீழ்
வைக்கும் படிமா மகம்புரிவான்
கண்ணிச் சிறையினிடை வைத்தான்
கண்ணா யிரத்தோன் முதலாக
விண்ணிற் பயிலுந் தேவர்களு மிவன்பேர்
சொல்ல வெருவுவரால்.

[எண்ணற்கு அரிய முடிவேந்தர் எண் ஆயிரவர் பசுவாக, மண் இத்தனையும் தன் குடைக் கீழ் வைக்கும்படி மா மகம் புரிவான் கண்ணி, சிறையினிடை வைத்தான்! கண் ஆயிரத் தோன் முதல் ஆக விண்ணில் பயிலும் தேவர்களும் இவன் பேர் வெருவுவர், ஆல்.]

விளக்கம் :—பூமி முழுதையும் தன் ஆட்சியின் கீழ்ப்படுத்த, முடி வேந்தர் எண்ணாயிரவரை யாகப் பசுவாகக் கொண்டு நரமேத யாகம் செய்யக் கண்ணி (கருதி), மிகப்பல வேந்தரைச் சிறை வைத்துள்ளான்; இந்திராதி தேவரும் அவன் பெயரை வாயால் கூறவும் அஞ்சுவர், என்பது பொருள்.

கண் ஆயிரத்தோன் - இந்திரன். நரமேதம் - அரசர்களைப் பலியிட்டுச் செய்யும் யாகம். ஆல் : அசை,

33. இவனைப் பயந்தோன் மகவொன்று மின்றிச்
சண்ட கௌசிகப்பேர்த்
தவனைப் பணிந்து வரம்வேண்டத் தவனுந்
தான்வாழ் தடஞ்சூதத்(து)
அவனிக் கரிய தீங்கனியொன் றளித்தா
ளளித்த வக்கனியை
நவநித் திலவா ணகையிருவ ரில்வாழ்
பவர்க்கு நல்கினனால்.

[இவனை பயந்தோன் மகவு ஒன்றும் இன்றி சண்ட கௌசிக பேர் தவனை பணிந்து வரம் வேண்ட, தவனும், தான் வாழும் தடஞ் சூதத்து அவனிக்கு அரிய தீம் கனி ஒன்று அளித்தான், அளித்த அ கனியை நவம் நித்திலம் வாள் நகை இருவர் இல் வாழ்பவர்க்கும் நல்கினான், ஆல்.]

**விளக்கம் :—**மாங்கனியை மனைவியர் இருவருக்கும் பகிர்ந்து கொடுத்தது, அவனது பட்சபாதமின்மையைத் தெரிவிக்கும். சூதம் - மாமரம், மகவைத் தரும் சிறப்பும், சுவையும் பற்றி, "அவனிக்கரிய தீங்கனி" என்றார் நவநித்திலம் - புதிய முத்து. ஒளி மங்கிய பழைய முத்து அவன் மனைவியர் பற்களுக்கு உவமையாதற்கில்லை என்பது தோன்ற. 'நவநித்தில வாணகையார்.' என்றார், அவனிக்கு - (உருபு மயக்கம்) அவனியில்.

34. காசித் தலைவன் கன்னியர்தங் கண்போல்
வடுமுற் றியகனியை
ஆசிற் பிளந்து தங்கொழுந னருளா
லமுதொத் தினிதருந்த
மாசற் றிலங்கு மகவிருவர் வயினும்
பகிர்ந்து வளர்ந்ததற்பின்
பாசத் துடனே யோரொருவர் பயந்தார்
வடிவிற் பப்பாதி.

[காசி தலைவன் கன்னியர் தம் கண்போல் வடு முற்றிய கனியை ஆசின் பிளந்து தம் கொழுநன் அருளால் அமுது ஒத்து இனிது அருந்த, மாசு அற்று இலங்கும் மகவு இருவர் வயினும் பகிர்ந்து வளர்ந்த தன் பின், பாசத்துடனே ஓரொருவர் பயந்தார் வடிவில் பப்பாதி.]

**விளக்கம் :—**ஆசின் பிளந்து - விரைவாக இரு கூறாகப் பிளந்து. கொழுநன் அருளால் - கணவன் கூறியருளியபடி. அமுது ஒத்து - தேவாம்ருதத்தை உண்பதுபோல். ஓரொருவர் வடிவில் பப்பாதி பயந்தார் - ஒவ்வொருவரும் ஒரு குழந்தையின் பாதி பாதி பாகத்தை ஈன்றார். மாதர் கண்ணுக்கு மாவடுவை உவமானமாக்குவது வழக்காயிருக்க, இங்கே, 'கண்போல் வடு' என மாற்றிக் கூறியது விபரீத உவமையின்பாற்படும். சராசந்தனது மனைவியர் காசி மன்னனுடைய பெண்கள்.

முனிவரன் அளித்த மாங்கனியை மனைவியர் பகிர்ந்து உண்டமையால், குழந்தையின் வலப்பாகம் ஒருத்தி வயிற்றிலும் இடப்பாகம் ஒருத்தி வயிற்றிலுமாக வளர்ந்து வெளிவந்தன, என்க.

'ஆசு' என்பதற்குக் குற்றம் என்ற பொருளும் உண்டு. ஆகவே, 'கனியின் பயன் பழுதடையுமாறு பிளந்து.' என்றும் பொருள் காணலாம், 'இன்' சாரியை.

35. ஒருவ னிருவ ருதரத்துமுட னுற்ப
வித்த வுற்பாதம்
வெருவி மகத குலவேந்தன் வியமான்
நகரின் புறத்தெறியப்
புரிசை வாயிற் கண்டவற்றைப் புசிப்பா
ளெடுத்துப் பொருத்தினளால்
தரும முணரா மனத்தியொரு தசைவா
யரக்கி சரையென் பாள்.

[ஒருவன் இருவர் உதரத்தும் உடன் உற்பவித்த உற்பாதம் வெருவி மகத குலவேந்தன் வியன் மாநகரின் புறத்து எறிய, புரிசை வாயில் கண்டு, அவற்றை புசிப்பாள் எடுத்து பொருத்தி னள், (ஆல்), தருமம் உணரா மனத்தி ஒரு தசை வாய் அரக்கி சரை என்பாள்,]

**விளக்கம் :**—உற்பாதம் - வரப்போகும் தீமையைத் தெரி விக்கும் அறிகுறியாகும் துர் நிமித்தம். சரை-(ஜரை) தருமத்தை அறியாதவளும், புலாலுண்ணும் வாயினளுமான **சரை** என்ற பெயருடைய அரக்கி, அவள், புரிசை வாயில் புறத்தே கண்ட உடற் பகுதிகளை உண்ணாமல், ஒன்றாய்ப் பொருத்தினாள்; ஒன்றிய உடல் உயிரும் பெற்றது.—என்பதாம்.

36. தன்னா லொன்று படுதலுமத்
தனையன் றன்னைச் சராசந்தன்
என்னா வழைத்தி யெனமகதத்
திறைவற் களித்தங் கேகினளால்
அந்நாண் முதலப் பெயர்படைத்தா
னதனா லிவ்வா றானதெனச்
சொன்னா னதுகேட் டுளமகிழ்ந்தார்
சுரர்கோ மகனுந் துணைவனுமே.

[தன்னால் ஒன்று படுதலும், அ தனயன் தன்னை சராசந்தன் என்னா அழைத்தி என, மகதத்து இறைவற்கு அளித்து அங்கு ஏகினள், (ஆல்); அ நாள் முதல் அ பெயர் படைத்தான்; அதனால் இவ்வாறு (இ - ஆறு) ஆனது என, (கண்ணன்) சொன்னான்; அது கேட்டு உளம் மகிழ்ந்தார் சுரர்கோன் மகனும், துணைவனும், ஏ ]

**விளக்கம்** :—அங்கு ஏகினள் - அங்கிருந்து சென்றாள். சுரர்கோன் மகன் - விசயன், துணைவன் - வீமன். அதனால் இவ்வாறு ஆயது - சரையினால் பொருத்தப்பெற்று உயிர் பெற்ற உடலாதலால், காலும் தலையும் மாறுபட இடும்வரை, பிளந்த உடல் ஒட்டிக் கொள்வதாயிற்று.

37. வினைமுற் றியபின் மூவருநல்
வினையே புரிவோர் மன்னவரை
இனைதற் சிறைவிட் டிகன்மல்லா
லிறந்தோன் மகனை யெழின்மகுடம்
புனைவித் தந்த நகரீசன்
பொற்றாள் வணங்க வவனேறும்
துனைபொற் றடந்தே ரூர்ந்தறத்தின்
சுதன்வந் தெதிர்கொண் டிடமீண்டார்.

[வினை முற்றியபின் மூவரும் நல்வினையே புரிவோர். மன்னவரை இனைதல் சிறைவிட்டு, இகல் மல்லால் இறந்தோன் மகனை எழில் மகுடம் புனைவித்து, அந்த நகர் ஈசன் பொன் தாள் வணங்க, அவன் ஏறும் துனை பொன் தடந்தேர் ஊர்ந்து, அறத்தின் சுதன் வந்து எதிர் கொண்டிட மீண்டார்.]

**விளக்கம்** :—(சராசந்தன் வதமாகிய) வினை முற்றியபின். நல்வினையே புரிவோராகிய மூவரும், மன்னவர்களை இனைதற்கு (வருந்துதற்கு) இடமான சிறையினின்று விடுவித்தும், இறந்தோன் மகனான சகதேவனுக்கு முடிசூட்டியும்: அந்த நகரத்தின் ஈசன் (அரசன்) ஆன அச் சகதேவன், மூவரது பொன் தாள் வணங்க. அவன் ஏறும் பொன் தேரைச் செலுத்திச் சென்று, தருமன் எதிர் கொண்டிட இந்திரப்பிரத்தம் சேர்ந்தார்,—என்பது பொருள், 'துனைதேர்', துனை, (துனைவு) வேகம் என்ற பொருளது. அறத்தின் சுதன் - தருமன் .

### பாண்டவர் திக்விசயம்

38. கருதற் கரிய நிதியனைத்துங்
கவர்ந்தோர் காட்டக் கண்டுவந்த
முரசக் கொடியோன் முன்வேத
மொழிந்தோன் முதலா முனிவரரும்
அரசக் குழாமு மீண்டியபே
ரவையிற் கடவு ளரசீன்ற

வரிவிற் குமரன் மாதிரங்கள்
வெல்வா னேகும் வகையுரைத்தான்.

[கருதற்கு அரிய நிதிஅனைத்தும் கவர்ந்தோர் காட்ட கண்டு உவந்த முரசம் கொடியோன் முன் வேதம் மொழிந்தோன் முதலாம் முனிவரரும் அரசர் குழாமும் ஈண்டிய பேர் அவையில். கடவுள் அரசு ஈன்ற வரி வில் குமரன் மாதிரங்கள் வெல்வான் ஏகும் வகை உரைத்தான்.]

**விளக்கம் :**—சராசந்தனிடமிருந்து கவர்ந்து கொணர்ந்த நிதிக் குவியலை வீமார்ச்சுனர் காட்ட, அதைக் கண்டு வியந்த தருமனின் முன்னே வியாச முனிவன் முதலிய முனிவர்களும், அரசர் குழாமும் கூடியிருந்த அவையில், அருச்சுனன், திக்குகளைச் செயித்து வருதற்கான வகையைப் பின்வருமாறு கூறினான்,—என்பதாம்.

வேதம் மொழிந்தோன் - வேதங்களை நான்காக வகுத்துச் சீடர்களுக்கு உபதேசித்த வியாசன். கடவுள் அரசு - இந்திரன். 'அரசக் குழாம் - அரசர் குழாம்', என்பதின் புணர்ச்சி விதியையும், 'சில விகாரமாம் உயர்திணை' என்ற விதிக்கு அடங்காமையையும், இலக்கண விளக்கம்—புணரியலில், காண்க.

39. சுருதிப் படியே வரராய
சூயப் பெயர்மா மகந்தொடங்கக்
கருதிக் குணபா லெம்முன்னும்
வடபால் யானுங் காற்றிசைக்கு
நிருதித் திசைக்கு நடுவெம்பி
யிவனுஞ் சிலைவே ணிரைமணிதேர்
வருதிக் கினிலிவ் விளையோனு
மலைவா னெழுக வருகவெனா.

[சுருதிப்படியே வர ராயசூயம் பெயர் மாமகம் தொடங்க கருதி, குணபால் எம் முன்னும் வடபால் யானும், கால் திசைக்கும் நிருதி திசைக்கும் நடு எம்பி இவனும், சிலைவேள் நிரை மணி தேர் வருதிக்கினில் இ இளையோனும் மலைவான் எழுக வருக, எனா—அருச்சுனன் கூறினான்.]

**விளக்கம் :**—வர ராயசூயம் - சிறந்த ராஜசூயம் என்னும் யாகம், குணக்கு - பால் - குணபால், கிழக்கு. வடக்கு - பால் - வடபால், வடதிசை, கால் திசை - வாயுவின் திசையான வட மேற்கு. நிருதி திசை - தென் மேற்கு. நடு - இவ்விரு திசைக்கும்

நடுவதான மேற்கு. சிலை வேள் நிரை மணித்தேர் வரு திக்கு - மன்மதனுடைய தேரான தென்றல் வரும் தென்திசை. எழுக வருக - எழுந்து புறப்படுவோமாக.

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ஆகிய திசைகளுக்கு முறையே வீமனும், நகுலனும், சகாதேவனும், தானுமாகப் புறப் பட்டுத் திக்கு விஜயம் செய்யச் செல்வோம், என்று அருச்சுனன் கூறியபடி.

0. எண்ணுஞ் சேனை யுடன்விரைவி
னெழுந்தா ரிவரீ ரிருவோரும்
விண்ணுங் கடவு ளாலயமு
முதலா வுள்ள மேலுலகும்
மண்ணும் புயங்க தலமுதலா
மற்றெவ் வுலகு மாதிரமும்
துண்ணென் றிட்ட வைந்துவகைப்
பெரும்பே ரியத்தின் றுவனியினால்.

[எண்ணும் சேனையுடன் விரைவின் எழுந்தார் இவர் ஈர் இருவோரும், விண்ணும் கடவுள் ஆலயம் முதலா உள்ள மேல் உலகும், மண்ணும், புயங்க தலம் முதலாம் மற்று எ உலகும், மாதிரமும் துண்ணென்றிட்ட, ஐந்து வகை பெரும் பேரியத்தின் துவனியினால் ]

**விளக்கம் :—** எண்ணும் சேனையுடன் இவர் ஈரிருவோரும் [நால்வரும்] விரைவின் எழுந்தார்; ஐந்து வகை பெரும் பேரியத் தின் துவனியினால். விண்ணும்...துண்ணென்றிட்ட,— என்று அன்வயிக்க.

ஐவகை பேரியம் - ஐந்து வகை இசைக் கருவிகள். அவை :- தோல் கருவி, தொளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி [கஞ்சம் - வெண்கலம்], மிடற்றுக் கருவி (மிடறு - கண்டம்). இவற்றின் ஒலியால், விண்ணும், தேவர்களின் இருப்பிடமான சுவர்க்கம் முதலான மேலுலகங்களும், மண்ணும், நாகலோகம் முதலான மற்றைய கீழ் உலகங்களும், திக்குகளும் திடுக்குற்றன, என்றபடி. துவனி - ஒலி.

41. நானங் கமழுஞ் செங்கழுநீர் நறுந்தார்
வேந்தர் நால்வரையும்

மானம் பெறுதிண் சேனையுடன் வளர்மா
திரத்து வகுத்தேவி
மீனங் கமட மேனநர வரியாய்
நரராய் மெய்ஞ்ஞான
ஆனந் தமுமா கியநா தனன்றே
துவரா பதியடைந்தான்.

[நானம் கமழும் செங்கழுநீர் நறுந்நார் வேந்தர் நால்வரையும் மானம் பெறு திண் சேனையுடன், வளர் மாதிரத்து வகுத்து ஏவி. மீனம், கமடம், ஏனம், நர அரியாய், நரர் ஆய் மெய் ஞானம் ஆனந்தமுமாகிய நாதன் அன்றே துவராபதி அடைந்தான்.]

மீனம்... நாதன், நானம் கமழும்...வகுத்து ஏவி, அன்றே துவராபதி அடைந்தான்.—என்று அன்வயிக்க.

**விளக்கம் :**—நானம் - கஸ்தூரி. நானம்,..வேந்தர் - கஸ்தூரியின் மனம் வீசும் செங்கழுநீர் மலர்களால் வேயப்பெற்ற நல்ல மாலை தரித்த பாண்டவர், மானம் பெறுதிண் சேனை - மானத்தைப் பூஷணமாகப் பெற்ற வலிய சேனை. வளர் மாதிரம் - இட விசாலத்தை உடைய திசை. மீனம் - மீன். கமடம்-கூர்மம் (ஆமை). ஏனம் - வராகம் (பன்றி). நர அரி - நரசிங்கம், நரர் - வாமன, பரசுரா, ராமகிருஷ்ண அவதாரங்கள். மெய்ஞான ஆனந்தம் - ஸத், சித், ஆனந்தம். நாதன் - எப்பொருட்கும் தலைவனான கண்ணன்.

பாண்டவர் நால்வரையும் திக்விஜயம் செய்யும் பொருட்டு நான்கு திசைகளுக்கும் அனுப்பிவிட்டுக் கண்ணன் அன்றைய தினமே தன் பதியாகிய துவாரகை சென்றான், என்பது பொருள்.

**வீமன் கிழக்குத் திசை செல்லல்**

**எழுசீர் ஆசிரிய விருத்தம்**

42. வான்மருச்சுதனு மீரிரண்டுகடல்
வயவ ரூதினியின் வர்க்கமும்
நான் மருப்பொருகை மும்ம தத்துவய
நாக மேவிவளர் திசையின்வாழ்
கோன்ம திக்கநெடு வங்க முந்திகழ்க
லிங்க முந்தெறுகு லிங்கமும்

தான்ம லைத்துமுனை முரண்மி குத்துவரு
தரிய லாரைமுன் தள்ளியே.

[வான் மருத்(து) சுதனும், ஈர் இரண்டு கடல் வய வருதினி யின் வர்க்கமும், நால் மருப்பு ஒரு கை மும்மதத்து வய நாகம் மேவி வளர் திசையின் வாழ் கோன் மதிக்க, நெடுவங்கமும், திகழ் கலிங்கமும், தெறு குலிங்கமும் தான் மலைத்து, முனை முரண் மிகுத்து வரு தரியலாரை முனை தள்ளியே—]

**விளக்கம் :**—வான் மருத் சுதன் - வீமன், (பெருமையின் சிறந்த வாயுவின் குமாரன்). ஈர் இரண்டு கடல் வய வருதினியின் வர்க்கம் - நான்கு கடல் போன்ற வலிய நால்வகைச் சேனை களின் வகைகள். நால் மருப்பு...வாழ்கோன் - நான்கு தந்தங்கள். ஒரு துதிக்கை, மூன்று மதம் உடைய வலியதான ஐராவதம் என்ற வெள்ளையானை பொருந்தி வாழ்ந்து வளரும் கிழக்குத் திசை யில் வாழும் தேவர் தலைவனான இந்திரன். நாகம் - யானை. நெடுவங்கம் - பெரிய வங்க நாடு. திகழ் கலிங்கம் - (புகழால்) விளங்கும் கலிங்க நாடு. தெறு குலிங்கம் - பகை அழிக்கும் வல்லமை உடைய குலிங்க நாடு. மலைத்து - எதிர்த்துப் போர் செய்து, முனை முரண் மிகுத்துவரு தரியலார் - போர் முனையில் வலிமையை மிகுதியாகத் தோன்றக் காட்டி எதிர்த்துவரும் பகைவர். முனை தள்ளி - போர் முனையில் (அவர்களை) வென்று வீழ்த்தி...அடுத்த கவியோடு தொடரும்.

வீமன், இந்திர திசையாகிய கீழ்த்திசை சென்று, வங்க, கலிங்க, குலிங்க நாட்டாரை, தேவர்கள் அவனது ஆற்றலை வியந்து மதிக்கும்படி வென்றான், என்ற பொருளது செய்யுள். 'வான்,' என்பதற்கு ஆகாயம் என்றும் பொருள் கொள்ளலாம். மருத் - வாயு. சுதன் - மகன். ரத கஜ, துரக, பதாதி என்ற நால்வகைச் சேனைகளுக்கு நான்கு கடல்களும் உவமையாயின. நான்கு தந்தங்களை உடையது இந்திரனது யானையான **ஐராவதம்.** திக்பாலகர் எண்மரில் இந்திரன் ஒருவன். கீழ்த்திசை அவனுக்கு உரியது. கீழ்த்திசையை, நால் மருப்பு...நாகம் மேவி வளர் திசை என்று வேறு வகையாகக் கூறியது, **பிறிதின் நவிற்சி** அணியின் பாற்படும்.

43. மற்று மற்றுமவண் மருவு பாடைகளின்
மன்கு லத்தொடுத டிந்துமேல்
உற்ற வுற்றவரை பாணம் யாவையுமொ
டிந்தி டிந்துபொடி யுண்ணவே

இற்ற விற்றபல தலைக ளாலலையெ
றிந்து மோதிவரு குருதியால்
முற்ற முற்றவரை யினமும் வார்குருதி
நதியு மாயெழமு ருக்கியே.

[மற்றும் மற்றும் அவண் மருவு பாடைகளின் மன் குலத்தொடு தடிந்து, மேல் உற்ற உற்றவரை பானம் யாவையும் ஒடிந்து இடிந்து பொடி உண்ணவே, இற்ற இற்ற பல தலைகளால் அலை எறிந்து மோதி வரு குருதியால் முற்ற முற்ற வரை இனமும் வார் குருதி நதியும் ஆய் எழ முருக்கியே,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :—**அவண் மருவு - (வீமன் சென்ற) கிழக்குத் திக்கிலே பொருத்தியுள்ள. மற்றும் மற்றும் பாடைகளின் மன்-வேறு வேறான பாஷைகளை உடைய நாடுகளின் அரசர். (அவர்களைக் குலத்தோடும்) தடிந்து - அழித்து. மேல் உற்ற உற்றவரை - மேலும் வந்து வந்து போர் செய்தவர்களை. பானம் - வாகனம்; அதாவது, தேர், யானை, குதிரையாதி வாகனங்கள். ஒடித்து இடிந்து - முறிந்து நொருங்கி, பொடி உண்ண - பொடியாகவும், (ஏ : ஈற்றசை). இற்ற இற்ற - மிகுதியாக அறுபட்ட. முற்ற முற்ற - போர் நடந்த இடம் முழுவதும். வரை - மலை. முருக்கி- அழித்து. அறுபட்ட தலைகளாலும், அலையெறிந்து பெருகி வரும் குருதியாலும், எங்கும் தலைகளாகிய மலைகளும், இரத்த நதியுமாய்த் தோன்றும்படி, வீமன் பகை அழித்தான், என்றபடி. அதாவது, எதிர்த்து வந்த வேறு வேறு பாஷைகளை உடைய நாடுகளின் அரசர்களைக் குலத்தோடும் படைகளோடும் அழிக்கவே. அறுபட்ட தலைகள் மலைக் கூட்டங்களாயின; வெள்ளமிட்டுப் பெருகிய குருதி ஆறாயின,

ஊர்தி என்ற பொருளுடைய பாநம் என்ற வடசொல் பானம் எனத் திரிந்து நின்றது. முருங்கி, என்பதின் பிறவினை முருக்கி. உற்ற உற்ற, இற்ற இற்ற, முற்ற முற்ற, என்ற அடுக்குகள். மிகுதி பற்றி வந்தனவாகும்.

44. அந்த வந்தவவ னிபரெ லாமபய
மபய மென்றடிவ ணங்கவே
வந்த வந்தநிதி யாவை யுஞ்சிகர
வடம கீதரமெ னக்குவித்(து)

எந்த வெந்தநர பாலர் பாரினிக
ரென்ன வென்னவவ ரிறையெனத்
தந்த தந்த விதந்தந்தி மீதுகொடு
தங்கண் மாநகரி சாரவே.

[அந்த அந்த அவனிபர் எலாம் அபயம் என்று அடிவணங்கவே, வந்த வந்த நிதி யாவையும் சிகரம் வடமகீதரம் என குவித்து, எந்த எந்த நரபாலர் பாரில் நிகர் என்ன என்ன, அவர் இறை என தந்த தந்த விதம் தந்திமீது கொடு தங்கள் மாநகரி சார, (ஏ). ]

**விளக்கம் :**—அந்த அந்த அவனிபர் - போரில் மடிந்தவர் போக எஞ்சியிருந்தவர்களான அவ்வரசர்கள். வந்த வந்த நிதி - (அபயம் வேண்டிய அரசர்களிடமிருந்து (மிகுதியாகக் கிடைக்கப் பெற்ற நிதி. சிகரம் வட மகீதரம்—பல சிகரங்களை உடைய வடதிசையிலுள்ள மகாமேரு பர்வதம். கிடைத்த செல்வங்களை மலைபோல் குவித்து,—என்பது பொருள். பாரில் எந்த எந்த நரபாலர் நிகர் என்ன என்ன - (இம் மண்ணுலகில் வீமனுக்கு) எந்த அரசர் நிகராவர் என்று எல்லோரும் புகழ்ந்து பேசும்படி. அவர் இறை என தந்த தந்த - தோற்றவர்களான அவர்கள் திறைப் பொருளாக மிகுதியாக வழங்கிய. விதம் தந்தி-(வநசரம், நதிசரம், கிரிசரம், என்று) வகையால் வேறுபட்ட யானைகள். அரசர்கள் கொடுத்த செல்வங்களைப் பல வகை வகுப்பினவான யானைகளின்மேல் ஏற்றிக் கொண்டு, வீமன் தங்களது நகரமான இந்திரப் பிரத்தத்தை அடைந்தான், என்பதாம்.

### விசயன் வடதிசை செல்லல்

45. விசய வெம்பகழி விசையன் வெவ்விசையொ
டிருநி திக்கிழவன் மேவிவாழ்
திசைய டைந்துகதி ரிரவி யென்னுவகை
சீறி மாறுபொரு தெவ்வராம்
திசைய ழிந்துவெளி யாக நால்வகை
நெருங்கு சேனையொடு நிலனுநின்(று)
அசைய வன்பினுட னேகி னானெழு
பராக மெண்டிசைய டைக்கவே.

[விசயம் வெம் பகழி விசையன் வெம் விசையொடு இரு நிதிக் கிழவன் மேவி வாழ் திசை அடைந்து, கதிர் இரவி என்னும் வகை

சீறி, மாறு பொரு தெவ்வர் ஆம் நிசை அழிந்து வெளியாக, நால்வகை நெருங்கு சேனையொடு நிலனும் நின்று அசைய, வன்பினுடன் ஏகினான் எழு பராகம் எண் திசை அடைக்கவே.]

**விளக்கம் :**—விசயம் - வெற்றி. பகழி - அம்பு. இரு நிதி கிழவன் திசை - குபேரனது திசையாகிய வடதிசை. கதிர் இரவி- சூரியன். சீறி - கோபித்து, கொதிக்கும் கிரணங்களை உடைய சூரியன் என்று சொல்லும்படி உக்கிரங்கொண்டு விசயன், திக் விஜயம் செய்ய வடதிசை சென்றான், என்க. மாறு பொரு தெவ்வர் ஆம் நிசை - மாறுபட்டுப் போர் செய்ய வந்த பகைவ ராகிய இருள். இரவு, என்ற பெயருடைய நிசா என்ற வடசொல், நிசை என நின்றது. நிசை அழிந்து வெளியாக - பகையாகிய இருள் அழிந்து வெட்ட வெளிச்சம் ஆகும்படி. நிலனும் நின்று அசைய - சலியாமை என்னும் தன்மையுடைய பூமியும் (பாரம் தாங்கமாட்டாது) நீண்ட நேரம் நின்று அசைய. 'நின்று', என்பது கால அளவைக் குறிப்பதாகும். வன்பு - வலிமை. பரா கம் - புழுதி. எழு பராகம் எண் திசை அடைக்க, ஏகினான் - நால்வகைச் சேனையும் செல்வதால் எழுந்து படர்ந்த புழுதி எட்டுத் திசைகளையும் மறைக்க, (விசயன்) வடக்கு நோக்கிச் சென்றான். நிலம் என்பதின் போலி நிலன்.

46. பார தப்பெயர்கொள் வருட மாதிபல
பாரி னுள்ள நர பாலரைப்
பேர றக்குலமும் வேர றப்பொருது
பிஞ்ஞு கன்கிரியு மிமயமும்
சேர மொத்தியவ ணுள்ள கந்தருவர்
கின்ன ரேசர்பல திறையிடப்
போர டர்த்துகமு டிந்த காலையெழு
புணரி யென்ன நனி பொங்கியே.

[பாரதம் பெயர் கொள் வருடம் ஆதி பல பாரின் உள்ள நரபாலரை போர் அற, குலமும் வேர் அற, பொருது, பிஞ்ஞுகன் கிரியும், இமயமும் சேர மொத்தி, அவண் உள்ள கந்தருவர், கின்னர ஈசர், பல திறை இட போர் அடர்த்து, உகம் முடிந்த காலை எழு புணரி என்ன நனி பொங்கியே,—இதுவும் தொடரும் இரு செய்யுள்களும் குளகம்.]

**விளக்கம் :**—வருடம் - (வர்ஷம் என்ற வடசொல்லின் திரிபு) வசிக்கும் இடம், பாரதப் பெயர் கொள் வருடம் - பாரத

வர்ஷம். (பாரத வர்ஷம்) ஆதி பல பார் - (பாரத வருஷம்) முதலிய பல இடங்கள். பேர் அற - பேர் அற்றுப் போகவும். குலம் வேர் அற - குலமும் வேரோடு அழியவும். பொருது - போர் செய்து. பிஞ்ஞகன் கிரி - சிவபெருமானுடைய வாழிடமான கயிலைமலை. சேர மொத்தி - கைலாசம், இமயமலை இரண்டையும் ஒரு சேரத் தாக்கி. அவண் உள்ள - இமயப் பிரதேசத்தில் உள்ளாரான. கந்தருவர் - கந்தருவரின் தலைவர். கின்னர ஈசர் - கின்னரர்களின் தலைவர். பல திறை இடபோர் அடர்த்து - (கந்தருவ, கின்னரத் தலைவர்களோடு) பல வகையான திறைப் பொருள்களைக் கொண்டு வந்துகொடுக்கும்படி போர் செய்து. உகம் - யுகம். புணரி - (யுகமுடிவில் எழுந்து பரவும்) கடல். அக் கடல்போல், அருச்சுனன் வீராவேசத்தோடு திக்விஜயம் செய்யச் சென்றான், என்க. இது அடுத்த கவியோடு தொடரும்.

ஜம்பூத்வீபத்தின் ஒரு பகுதி பாரத வர்ஷம். தென் கடலுக்கும் இமயத்திற்கும் இடையே உள்ள பூமிப்பகுதி பாரத வர்ஷமாகும். இமயத்திற்கு வடக்கே உள்ளே வர்ஷங்கள் எட்டு. அவையாவன,—கிட்புருஷவர்ஷம், ஹரிவர்ஷம், இளாவ்ருதவர்ஷம், கேதுமாலவர்ஷம், இரம்பகவர்ஷம், இரண்மயவர்ஷம், குருவர்ஷம், பத்ராசுர வர்ஷம். பாரத்தோடு வர்ஷங்கள் ஒன்பதாகின்றன. இவற்றில் பாரதம் கர்ம பூமி; மற்றவை போக பூமி.

பாரின், என்பதிலுள்ள இன் ஏழாம் வேற்றுமை உருபு. பார்- பூமி. அது இலக்கணையாய்ப் பூமியின் ஒரு பகுதியை குறிப்பதாயிற்று. பிஞ்ஞகன் - சிவபெருமான். பிஞ்சம் என்ற வடசொல்லின் விகாரம் பிஞ்ஞகம். பிஞ்சம், என்றால் மயில் தோகை. மயில் தோகையாலான தலையலங்காரம் உடைமை பற்றிச் சிவபெருமான் பிஞ்ஞகப் பெயர் பெற்றான், என்பர்.

47. விந்த மால்வரையு மேம கூட முட
னிடத நாமநெடு வெற்புமா
மந்த ராசலம்வி சால மாலிய
மணித்த டஞ்சிகர மலையுடன்
கெந்த மாதனமு நீல சைலமு
மெனப்பு கன்றபல கிரியில்வாழ்
அந்த ராதிபர்ந டுங்க மேருகிரி
யப்பு புறத்துநனி யணுகியே.

[விந்தம் மால் வரையும் ஏமகூடமுடன் நிடதம் நாமம் நெடு வெற்பும், மா மந்தர அசலம், விசாலம் மாலியம் மணி தடம் சிகரம் மலையுடன், கெந்த மாதனமும், நீல சைலமும், என புகன்ற பல கிரியில் வாழ் அந்தர அதிபர் நடுங்க, மேரு கிரி அப்புறத்தும் நனி அணுகியே.— அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :—**விந்தம் மால் வரை - விந்திய மலையாகிய பெரிய மலை, ஏமகூடமுடன் நிடத நாம நெடு வெற்பு - ஏமகூட மலையோடு நிஷதம் என்னும் பெரிய நெடிய மலைகளும். (நாமம், என்பதற்குப் பெயரையுடைய என்றும் பொருள் கொள்ளலாம்.) மா மந்திராசலம் - (மா மந்திர அசலம்) பெரிய மந்திராசலம் என்ற பெயருடைய மலை, விசால மாலியம் - விசாலமான மாலியம் என்ற பெயரியதான மலை. மணித்தடம் சிகரம் மா மாலிய மலை, என்று கூட்டுக. மணி - அழகிய. தடம் - விசாலமான. (மேலே கூறிய இம் மலைகளோடு) கெந்தமாதனமும் நீல சைலமும் - கெந்த மாதனமலையும், நீலகிரியும். அந்தராதிபர் - (அந்தர அதிபர்) வான சஞ்சாரிகளான பலவகைப்பட்ட கந்தருவ அரசர்கள். மேலே கூறப் பெற்ற மலைகளில் வாழும் கந்தர்வர்களும் அஞ்சத்தால் நடுங்கும்படி மேருமலைக்கு அப் புறத்தனவான இடங்களில் (விசயன்) நெடுந்தூரம் சென்று, என் பதாம்.

செய்யுளின் மூன்று அடிகளில் கூறப்பெற்ற மலைகளை **சப்த குலகிரி** என்பர். **நீல சைலம்** என்பது தென்னாட்டைச் சேர்ந்த நீலகிரி யன்று.

48. அத்தி சைக்கணர சான வுத்தரகு
ருக்கண் மேன்மையை யடக்கிமேல்
எத்தி சைக்குமிவ னன்றி வீரரில
ரென்று தேவருமி யம்பவே
மெத்தி சைப்பனிநி லாவெ ழச்சமர
விசய கம்பமுநி றுத்தினான்
முத்தி சைக்குமதி வெண்கு டைக்கடவுள்
முதல்வ னானவரி புதல்வனே.

[அ திசைக்கண் அரசான உத்தர குருக்கள் மேன்மையை அடக்கி, மேல், எ திசைக்கும் இவன் அன்றி வீரர் இலர் என்று தேவரும் இயம்பவே, மெத்து இசை பனி நிலா எழ சமரம் விசயம்

கம்பமும் நிறுத்தினான், முத்து இசைக்கும் மதி வெண் குடை கடவுள் முதல்வன் ஆன அரி புதல்வனே.]

**விளக்கம் :**—அ திசை - வடதிசை. அத்திசையில் வாழும் அரசர்கள் **உத்தரகுருக்கள்** எனப்படுவர். மேன்மை - மேம்பாடு வெற்றி, சிறப்பு. மெத்து - மிருதுத் தன்மை. மெத்து இசை - மென்மையின் மிக்க கீர்த்தி. பனி நிலா - மிக்க கீர்த்தியாகிய குளிர்ந்த சந்திரனொளி. எழ எழுந்து எங்கும் பரவ, சமரவிசய கம்பம் - வெற்றியைக் குறிக்கும் ஸ்தம்பம் (தூண்). முத்து இசைக்கும் வெண்குடை - முத்துக்களால் கட்டப்பெற்ற வெண் கொற்றக் குடை, (இசைத்தல் - இணைத்தல்). கடவுள் முதல் வன் ஆன அரி - தேவர் தலைவனான இந்திரன். இந்திரனுக்கு **அரி** என்ற ஒரு பெயரும் உண்டு. அரி புதல்வன் - அவ்விந்திரன் புதல்வனான அருச்சுனன்.

இந்திரகுமாரனான விசயன், வடதிசையிலுள்ள உத்தர குருக்களை அடக்கி, எத்திசையிலும் இவனுக்கு இணையான வீரர் இல்லை என்று தேவரும் போற்றப் புகழாகிய குளிர்ந்த நிலவொளி எங்கும் வியாபிக்கும்படி, விஜயஸ்தம்பம் நாட்டினான், என்பது பொருள்.

ஜம்பூத் வீபத்தின் வடகோடியிலுள்ள குருவர்ஷத்தில் வசிக் கும் அரசர்கள் உத்தரகுருக்கள். பாரத வர்ஷத்திலுள்ள சந்திர வம்சத்தினனான குரு என்னும்அரசனது குலத்தில்வந்தபாண்டவ துரியோதனாதியரும் குருக்கள் என்று அழைக்கப்படுவதுண்டு. தக்ஷிண குருக்களான இவர்களிலும் வேறானவர் என்று குறிக்கக் குரு வர்ஷத்து அரசர்கள் உத்தர குருக்கள், எனப்பட்டனர் போலும்.

பாரத வரிஷத்து அரசர்களோடு, மற்ற எட்டு வர்ஷங் களிலுள்ள அரசர்களையும் சப்த குலகிரிகளில் உள்ளாரையும் அருச்சுனன் வென்றடக்கினான், என்றபடி. கீர்த்தியை வெண்ணிறமுடையதெனக் கூறும் கவி மரபு பற்றி, **மெத்திசைப் பனிநிலா** எனப்பட்டது.

49. கரிகள் கோடியிர தங்கள் கோடிபவ
னத்தி னுங்கடுகு கவனவெம்
பரிகள் கோடிநவ கோடி மாமணிகள்
பலவ கைப்படு பசும்பொனின்
கிரிகள் கோடியென வேகவர்ந்தெழுகி
ரிப்பு றந்தெறு கிரீடிவந்(து)

அரிகள் கோடிகிளர்ச் சோலை சூழ்தமது
செல்வ மாநகரி யணுகினான்.

[கரிகள் கோடி, இரதங்கள் கோடி, பவனத்தினும் கடுகு கவனம் வெம் பரிகள் கோடி, நவகோடி மா மணிகள், பல வகைப்படு பசும் பொன்னின் கிரிகள் கோடி. எனவே, கவர்ந்து, எழுகிரி புறம் தெறு கிரீடி வந்து, அடிகள் கோடி கிளர் சோலை சூழ் தமது செல்வம் மாநகரி அணுகினான்.]

**விளக்கம் :—**கரிகள் - யானைகள். பவனத்தினும் கடுகு கவன வெம்பரிகள். காற்றிலும் விரைந்து செல்லும் நடை வேகத்தை யுடைய குதிரைகள், (கவனம் - குதிரையின் நடை) எழுகிரிப் புறம் தெறு கிரீடி - ஏழு குல பர்வதங்களிலுள்ளாரையும் வென்று கொண்ட அருச்சுனன். அரி - வண்டு. கிளர் சோலை- (வண்டுகள்) மொய்த்தற்கு இடமான சோலை.

கோடிக் கணக்கான யானை, இரதம், குதிரைகளையும், நவமணிக் குவியல்களையும், மலைபோன்ற பொற்குவியல் பகைத்த அரசர்களிடமிருந்து கவர்ந்துகொண்டு அருச்சுனன் இந்திரப்பிரதம் திரும்பினான் என்றபடி. **கோடி** என்பது மிகுதிப் பொருளது. அது ஒரு பேரெண்ணைக் குறிப்பதோடு, பொருள் மிகுதியையும் காட்டவல்லது. கிரீடி, என்பது அருச்சுனனது பல பெயர்களில் ஒன்று.

**நகுலனது மேற்குத்திசை விசயம்**

50\. வடாது சென்றவரி சிலைம கீபனினு
மெழும டங்குமிகு வலியுடன்
குடாது சென்றிளைய வீர மாநகுல
நகுல னென்றுகுலை குலையவே
அடாத மன்னரைய டர்த்த டுத்தவரை
யஞ்ச லென்றமரு டற்றினான்
இடாத வன்றனமெ னக்க ரந்தனர்க
ளேனை மன்னவர்கள் யாருமே.

[வடாது சென்ற வரிசிலை மகீபனினும் எழு மடங்கு மிகு வலியுடன் குடாது சென்று இளைய வீரன் மா நகுலன், நகுலன் என்று குலை குலையவே, அடாத மன்னரை அடர்த்து, அடுத்த வரை அஞ்சல் என்று அமர் உடற்றினான், இடாதவன் தனம் என கரந்தனர்கள் ஏனை மன்னர்கள் யாருமே.]

**விளக்கம் :**—வடக்கிலுள்ள வடாது, மகீபன் - (அரசன்) இங்கே, அருச்சுனன்- (அருச்சுனனைக் காட்டிலும் ஏழு மடங்கு சேனா பலத்துடன்) குடாது சென்று - குடதிசை அதாவது மேற்குத் திசை சென்று, (குடக்கில் இருப்பது குடாது). இளைய வீரன் மா நகுலன் - இளைய அதாவது விசயனுக்கு அடுத்த தம்பியும் வீரனுமான நகுலன். 'நகுலன் குடாது சென்று' என்று இயைக்க. நகுலன் என்று குலை குலையவே - பைரவ மூர்த்தியே இவன் என்று கொண்டு நடுநடுங்க. (நகுலன்-பைரவன் சிவன்). அடாதவரை அடர்த்து - தன்னை அடுத்துப் பணியாத மன்னரை எதிர்த்தும். அடுத்துவரை அஞ்சல் என்று - தன்னை அடுத்துப் பணிந்த மன்னரை 'அஞ்சல்' என்று கூறி அபயம் அளித்தும். அமர் உடற்றினான் - போரில் வருத்தி வெற்றி கொண்டான். ஏனை மன்னர் - போரில் புகாத மற்றை மன்னர்கள். இடாதவன் தனம் என கரந்தனர் - இரப்போர்க்கு இல்லை என்ற உலோபியினுடைய செல்வம்போல் ஓடி மறைந்தனர்.

அடுத்துப் பிழைத்தவரும் அடாது அழிந்தவரும் போக எஞ்சிய மன்னவர் நகுலனது அஞ்சி, ஈயாதான் செல்வம் மறைதல் போல் ஓடி மறைந்தனர், என்பது பொருள்.

51\. மாள வத்தினொடு கர்ப்ப டம்பொரவ
குத்தெ திர்த்ததிரி கர்த்தமும்
தூள வன்புடை யிருட்பி ழப்பெழவ
ருக்க னிற்பெரிது சுடரெழத்
தாள வண்கதியு டைத்து ரங்கரத
கசப தாதியொடு தகுசினம்
மூள வந்தெதிர்ம லைந்த மன்னவரை
முதுகு கண்டமர் முருக்கியே.

[மாளவத்தினொடு கர்ப்படம், பொர வகுத்து எதிர்த்த திரிகர்த்தமும், தூளம் வன்பு உடை இருள் பிழம்பு எழ, அருக்கனில் பெரிது சுடர் எழ, தாளம் வண் கதியுடைய துரங்க ரத கச பதாதியொடு தகுசினம் மூள வந்து எதிர் மலைந்த மன்னவரை, முதுகு கண்டு அமர் முருக்கியே,—இதுவும் அடுத்து வரும் கவியும் குளகம்.]

**விளக்கம்:**—மாளவம், கர்ப்படம், திரிகர்த்தம் என்பவை நாடு களின் பெயர் பொர (அணி) வகுத்து எதிர்த்த மாளவ, கர்ப்பட

திரிகர்த்தம், என்று இயைக்க. தூளம் - புழுதி. வன்பு-வலிமை. இருள் பிழம்பு - இருளின் திரள். "புழுதியினாலாய வலிமை உடைய இருள் திரள் ஆகாயத்தில் பரவி எழவும், (நகுலனும் அவனது படை வீரர்களும் அணிந்த ஆபரணங்களினாலும், வேல் வாள் முதலிய ஆயுதங்களாலும்) சூரியனிலும் அதிகமான பிரகாசம் உண்டாகவும்" என்பது இரண்டாவது அடியின் பொருள். தாளத்தோடு ஒத்த அடிவைத்து நடக்கும் நலத்தை உடைய குதிரைப்படை, தேர்ப்படை, யானைப்படை, காலாட்படை என்ற நால்வகைப் படைகளுடன், பொருத்த முடைய கோபமும் மிகுந்த எழ, எதிர்வந்து மலைந்த மன்னவரை முருக்கி (வலி அழித்து) முதுகு கண்டு (முதுகு காட்டி ஓடச் செய்து).—அடுத்த கவியோடு தொடரும்.

நகுலனது பெருஞ்சேனைகளின் செலவினால் தூளிப் படலம் எழுந்து எங்கும் இருளை உண்டாக்கவும், ஆபரண ஆயுதங்களின் ஒளி வெயில் போல் பிரகாசிக்கவும் நகுலன், மாளவம், கர்ப்படம் திரிகர்த்தம் என்ற நாடுகளின் மன்னரைப் போர் வென்றான், என்றபடி.

52. கூற்றி சைக்குமென வுடன்வ ருங்கடிய
கொடிய சேனையொடு குமரனும்
காற்றி சைக்குமென வருண னுந்தனிக
ருக்கு லைந்துளம்வெ ருக்கொளத்
தோற் றிசைக்கும்வ சைகொண்டு மற்றவர்கள்
சொரித ருந்திறைகள் வாரியம்
மேற்றி சைக்குமொரு மேரு வுண்டெனவு
யர்த்தி னானிகரில் வீரனே.

[கூற்று இசைக்கும் என உடன் வரும் கடிய கொடிய சேனையொடு குமரனும், காற்று இசைக்கும் என வருணனும் தனி கரு குலைந்து உளம் வெருக்கொள, தோற்று இசைக்கும் வசை கொண்டு மற்று அவர்கள் சொரிதரும் திறைகள் வாரி, அ மேல் திசைக்கும் ஒரு மேரு உண்டு என உயர்த்தினான் நிகர் இல் வீரனே.]

**விளக்கம்:**—நிகரில் வீரனாகிய குமரனும், கூற்று...சேனை யோடு, காற்று இசைக்கும் என (எண்ணி) வருணனும் வெருக் - கொள், மற்று அவர்கள் தோற்று இசைக்கும் வசை கொண்டு

சொரிதரும்...உயர்த்தினான், என்று அன்வயம் கொள்க, (மற்று, ஏ,அசைகள்).

கூற்று இசைக்கும் என - எமனை ஒக்கும் என்று கூறும்படி, (இசைக்கும், உவம உருபு) நிகரில் வீரன் குமரன் - நேரில்லா வீரனான நகுலன், காற்று இசைக்கும் என - பெருங் காற்றோ இது என்று சொல்லும்படி (இசைக்கும், உவம உருபு). வருணனும் தனிக்குக் குலைந்து உளம் வெருக்கொள-வருணனும், குடல் மிகவும் குழம்பி உள்ளம் அஞ்ச. அவர்கள் தோற்று இசைக்கும் வசை கொண்டு - அம் மேல்திசை அரசர்கள் தோல்வி யுற்று, அந்தத் தோல்வியால் பழிச் சொல்லைத் தமதாகக் கொண்டு. சொரிதரும் திறைகள் வாரி - (அவர்கள் நகுலனுக்கு) குவியல் குவியலாக வழங்கிய திறைப் பொருள்களை வாரிக் கொண்டு, (அம் மேற்றிசைக்கும் ஒரு மேருமலை உண்டு என்று உலகோர் சொல்லும்படி, அத்திசைக்கு உயர்வு கொடுத்தான்; என்க.)

மேல்திசை அரசர்கள் வசையைப் பெற்றுக்கொண்டு, அதற்கு எதிர் பொருள்களை மிகுதியாக வழங்கினார்கள், என்றது பண்ட மாற்று அணியின்பாற்படும்.

உடன், என்றசொல், சேனையின் வரவின் விரைவை உணர்த்தும்; அல்லது 'நகுலனோடு கூட' என்றும் பொருள் கோள்ளலாம். வருணனும் என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்பு. மேற்றிசைக்கும், என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய தாகும்.

53. அளவி லாத்திறை யோடு மத்திசையு
தித்த தோரிரவி யாமெனத்
துளப மாலைகமழ் மௌலி நாதனுறை
துவரை யெய்தியுயர் சுருதியின்
கிளவி யான்முனிவர் தொழுப தந்தொழுது
கேச ரித்துவச வீரனுக்(கு)
இளவன் மீளவும் ரிப்பி ரத்தநக
ரெய்தி மன்னனை யிறைஞ்சினான்.

[அளவு இலா திறையொடும் அ திசை உதித்தது ஓர் இரவி ஆம் என, துளபம் மாலை கமழ் மௌலி நாதன் உறை துவரை எய்தி உயர் சுருதியின் கிளவியான் முனிவர் தொழு பதம் தொழுது, கேசரி துவசம் வீரனுக்கு இளவல் மீளவும் அரிப்பிரத் தம் நகர் எய்தி மன்னனை இறைஞ்சினான்.]

**விளக்கம் :**—அளவிலாத் திறைப் பொருள்களுடன் கேசரியின் வடிவம் எழுதிய கொடியை உடையவனான வீமனுக்கு இளையவனான நகுலன், துவாரகை சென்று கண்ணனைத் தொழுது, அதன்பின் இந்திரப் பிரத்தம் போய்த் தருமனை வணங்கினான், என்றபடி.

அத்திசை - மேற்குத்திசை. உதித்தது ஓர் இரவி ஆம் என - (அம் மேற்குத்திசையில்) உதித்ததான ஒரு சூரியன் என்று எல்லோரும் சொல்லும்படி. துளபமாலை...நாதன் - துளசி மாலையின் மணம் கமழும் திருமுடியை உடைய கண்ணன். துவரை - துவாரகை. அங்கே நகுலன் சென்று வேத வாக்கியங்களால் முனிவர்கள் தொழுகின்ற கிருஷ்ணனது திருவடிகளை வணங்கினான். அதன்பின் தன் நகர் சென்றான். அரிப்பிரத்தம் - இந்திரப் பிரத்தம்.

மேற்குத் திசையிலுள்ள துவாரகையில் வாழும் கண்ணனுக்கு அத்திசையில் உதிக்கும் ஒரு சூரியனை உவமை கூறியது, இல்பொருள் உவமையின்பாற்படும். வீமனது இளவல், என்றது நகுலனது பேராற்றலைக் குறிப்பதாகும். பிரஸ்தம் - தங்குமிடம். அது தமிழில் பிரத்தம், எனத் திரிந்து நின்றது.

**சகாதேவனது தென்திசை விசயம்**

54\. குன்றி சைத்தகச ரதது ரங்கம்ப
தாதி சூழவிறை கொள்ளவும்
நின்றி சைத்துவரு பலப ணைக்குலமி
ரைக்க வுங்கொடிநி ரைக்கவும்
துன்றி சைப்பனிநி லாவெ ழக்கவிகை
யெண்ணி லாதனது லங்கவும்
தென்றி சைப்படர்தன் மேயி னானகுல
நிருப னுக்கிளைய செம்மலே.

[குன்று இசைத்த கசம் ரதம் துரங்கம் பதாதி சூழ இறை கொள்ளவும், நின்று இசைத்து வரு பலபணை குலம் இரைக்கவும், கொடி நிரைக்கவும், துன்று இசை பனி நிலா எழ கவிகை எண் இலாதன துலங்கவும் தென்திசை படர்தல் மேயினான் நகுல நிருபனுக்கு இளைய செம்மலே.]

**விளக்கம் :**—நகுல நிருபனுக்கு இளைய செம்மலாகிய சகதேவன் திறை கொள்ளத் தென்திசை செல்கின்றான், (நிருபன்-

அரசன்). குன்று இசைத்த - மலைபோன்ற, (கசரத - துரங்க - பதாதியாகிய நால்வகைச் சேனை). சூழ இறைகொள்ள - சுற்றிலும் இருத்தலைச் செய்ய, அதாவது சூழ்ந்துவர, (இறை-தங்கல், இருத்தல்). நின்று இசைத்து வரு பல பணைக்குலம் - இடையறாது முழங்கி வரும் பலவகைப்பட்ட வாத்தியங்களின் கூட்டம். இரைக்க - சப்திக்க. நிரை - வரிசை. நெருங்கிப் பொருந்துதலையுடைய குளிர்ந்த நிலாவொளி எழுந்து பரவுமாறு அளவற்றவான வெண்கொற்றக் குடைகள் விளங்கவும், என்பது மூன்றாவது அடியின் பொருள். இவ்வாறு சகாதேவன் தென்திசை சென்றான்.

பணைக்குலம் - அடிக்கும் தோல் கருவி, ஊதும் துளைக் கருவி ஆகியவற்றின் கூட்டம், (பணை - வாத்தியம்). முதல் இரண்டடிகளில் உள்ள **இசை** உவம உருபு. மூன்றாமடியிலுள்ள **இசை** நெருங்கல், என்ற பொருளது. செம்மல், ஆண்பால் சிறப்புப் பெயர்; செம்மையுடையவன், என்றும் பொருள் கொள்ளலாம்.

**55. அத்தி சைக்கணிரு கடலி னுக்குநடு**
**வான மண்டலம னைத்தினும்**
**மத்தி கைப்புரவி மண்ட லேசரும்வ**
**யங்கு மாமகுட மகிபரும்**
**புத்தி கைக்கவமர் பொருத ழிந்துதிறை**
**பொழிய வா.ரிவளர் புயகிரிப்**
**பித்தி கைத்தொடைய னீலனென்னு**
**நரபதி பெரும்பதிபு குந்தபின்.**

[அ திசைக்கண் இரு க டலினுக்கும் நடு ஆன மண்டலம் அனைத்தினும் மத்தி கை புரவி மண்டல ஈசரும், வயங்கு மா மகுடம் மகிபரும், புத்தி கைக்க அமரர் பொருது அழிந்து திறை பொழிய வாரி, வளர் புய கிரி பித்திகை தொடையல் நீலன் என்னும் நரபதி பெரும் பதி புகுந்தபின்,—இதுவும் அடுத்த கவியும் குளகம்.]

**விளக்கம் :**—தென்திசை மன்னர்களை வென்று திறை கொண்ட சகாதேவன், நீலன் என்பவன் ஆளும் **மாகிஷ்மதி** என்ற நகரம் சென்றதைக் கூறும் இது.

மண்டலம் - நாடு. மத்திகை - குதிரைச்சவுக்கு, சட்டை. (மத்திகைகொண்டு செலுத்தப்படும் குதிரை படையையுடைய)

மண்டலேசர் - நாற்பது கிராமங்களை ஆள்பவர். மகுடம் மா மகிபர் - மகுட வர்த்தனர். அதாவது ஒரு கோடி கிராமங்களுக்கு அதிபதி. புத்தி - மனம். கைக்க - (மனம்) வெறுக்கும்படி. மண்டலேசரையும், மகுடவர்த்தனரையும் வென்று, (அவர்களிடமிருந்து திறை கொண்டபின் நகுலன்) வளர் புயகிரி...புகுந்த பின் - ஓங்கி வளர்ந்த புஜங்களாகிய மலைகளில் பித்திகை மலரால் ஆன மாலை தரித்த நீலன் என்னும் அரசனுடைய பெரிய நகரம் புகுந்தபின். பித்திகை - சிறு சண்பகம், இருவாட்சி.

56. அந்த மாநகரி காவ லான சுட
ரங்கி சீறியெதிர் பொங்கிமேல்
வந்த வீரன்மி குசேனை யாவையும்
யங்க வெம்புகையி யக்கவே
கந்து சீறுகளி யானை மன்னனது
கண்டு வெங்கனல விப்பதோர்
இந்து மாமுகச ரங்க ளேழு நெடு
நாவி னானழிய வேவினான்.

[அந்த மா நகரி காவல் ஆன சுடர் அங்கி சீறி, எதிர் பொங்கி மேல் வந்த வீரன் மிகு சேனை யாவையும் மயங்க, வெம் புகை இயக்கவே, கந்து சீறு களி யானை மன்னன் அது கண்டு, வெம் கனல் அவிப்பது ஓர் இந்து மா முக சரங்கள் ஏழு நெடு நாவினான் அழிய ஏவினான்.]

**விளக்கம் :**—நீலனது மாகிஷ்மதி என்னும் நகரத்தின் காவலன் சுடர் அங்கி (அக்கினிதேவன்). சீறி - வெகுண்டு. எதிர் பொங்கி - எதிராகப் பொங்கி எழுந்து, வந்த வீரன் - (நகரினுள்) வந்த வீரனான சகதேவனது, மிகு சேனை யாவையும் - தொகை மிக்கதான சேனை முழுவதும், மயங்க - மயங்கிக் குழம்பும்படி, வெம்புகை இயக்கவே - கொடிய புகையைப் பரவச் செய்யவே. கந்து சீறு களியானை மன்னன - கட்டுத் தறியைக் கோபித்து முறிக்கும் மதக் களிப்புடைய யானைப் படையை உடைய சகாதேவன். இந்து மாமுக சரம் - அர்த்த சந்திரபாணம். ஏழு நெடு நாவினான் - ஏழு பெரிய நாக்குக்களை உடைய அக்கினி பகவான். புகையைப் பரப்பிய அக்கினி அழியச் செய்வதாகிய ஒப்பற்ற ஏழு அர்த்த சந்திர பாணங்களை ஏவி, ஏழு நாக்குகளை உடைய அக்கினியைச் சகதேவன் அடக்கினான், என்றபடி.

57. அஞ்சி யந்தவழ லோனு மப்பொழுதொ
ரந்த ணாளன்வடி வாகியே

வஞ்சி யந்தொடையன் மன்னன் முன்புவர
வந்த மாமுனியை மன்னனீ
எஞ்சி நின்றுசுடு கின்ற காரணமி
தென்னை யென்னலுமி யம்பினான்
மஞ்சி வர்ந்தபுகை வான வன்றனது
வரவு நீலன்வ ழிபாடுமே

[அஞ்சி அந்த அழலோனும் அப்பொழுது ஓர் அந்தணாளன் வடிவு ஆகியே, வஞ்சி அம் தொடையல் மன்னன் முன்பு வர, வந்த மா முனியை மன்னன் (நோக்கி) நீ எஞ்சி நின்று சுடுகின்ற காரணம் இது என்னை என்னலும், இயம்பினான் மஞ்சு இவர்ந்த புகை வகனவன் தனது வரவும் நீலன் வழிபாடுமே ]

**விளக்கம் :**—அழலோன் - அக்கினிதேவன். அம் வஞ்சி தொடையல் மன்னன் - அழகிய வஞ்சிப் பூ மாலை தரித்த சக தேவன். முனி - அந்தணன். எஞ்சி நின்று சுடுகின்ற இது என்னை காரணம்-முற்றிலும் அவிந்து விடாமல் சேடித்து நின்று என் சேனைச் சுடுகின்ற இதற்கு என்ன காரணம். (இவ்வாறு வினவிய மன்னனுக்கு) மஞ்சு இவர்ந்த புகை வானவன் - மேக மண்டலத்தை அளாவி எழும் புகையையுடைய அக்கினி தேவன். நீலன் - மாகிஷ்மதி நகரத்தின் அரசன்.

நீலனுக்குத் துணைவன் அக்கினிதேவன். சகதேவனது கணைகளால் வலி அடங்கிய அக்கினி, அந்தண வேடங்கொண்டு. அவன் முன் வரவும், அவன், அத்தேவனை நோக்கி, "நீ முற்றிலும் அவிந்து அடங்காமல், இன்னும் என் படையைச் சுடுவதேன்?" என்று கேட்க, அவனும் தனது வரவு பற்றியும், தன்னிடமிருந்து நீலன் பெற்ற வரம் பற்றியும் கூறினான், என்றபடி. பகைவர்மேல் போரெழுந்து செல்வோர் வஞ்சிப் பூமாலை அணிவது மரபு.

58. நீல னிட்டதிறை யான கோலமணி
நீல மாதிநவ நிதியமும்
சால மிக்கதப னியமும் வெளவியுயர்
சாரல் விந்தசயி லப்புறத்(து)
ஏல நெட்டடவி முறிய மோதிவெளி
யாக வேழ்கடலை யுங்கடைக்
கால முற்றியெழு காலெ னும்படிக
லக்கி னானெழுக லிங்கமும்.

[நீலன் இட்ட திறை ஆன கோலம் மணி நீலம் ஆதி நவ நிதியமும், சாலமிக்க தபனியமும் வெளவி, உயர் சாரல் விந்த சயிலம் புறத்து ஏலம் நெடு அடவி முறிய மோதி வெளியாக, ஏழ் கடலையும் கடைக்காலம் முற்றி எழுகால் எனும்படி கலக்கி னான் எழு கலிங்கமும்].

**விளக்கம் :**—இட்ட கொடுத்த. கோல (அழகிய) நீலமணி முதலிய நவரத்தினங்களாகிய சிறந்த திரவியங்கள். சால மிக்க தபனியம் - மிக அதிகமான பொன். வெளவி - கவர்ந்துகொண்டு, (அதன்பின்) உயர் விந்த சயில சாரல் புறத்து - உயர்ந்த விந்திய மலைச் சாரலின் புறத்தேயுள்ள, ஏல நெடு அடவி - ஏலப் பயிர்களை உடைய பெரிய காடு. வெளி ஆக முறிய மோதி - அக் காடு வெட்ட வெளியாகும்படி தாக்கி அழித்து. ஏழ் கடலையும் கடைக்காலம் முற்றி எழு கால் எனும்படி - (யுகாந்த காலத்தில் எழும் பெருங்காற்று) ஏழு கடல்களையும் கலங்கச் செய்து வீசும் சண்டமாருதம் போல்; (ஏழு பகுதிகளை உடைய கலிங்க நாடு களையும் சகாதேவன் கலக்கினான்).

கலிங்கம் என்பது ஒரு நாடு அல்ல. இப்பெயர் கொண்ட ஏழு நிலப் பகுதியைக் கொண்டது கலிங்கம்; எனவே எழுகலிங்கம் எனப்பட்டது. நெடுமை - அடவி நெட்டவி ஈறுபோய் ஒன்று இரட்டிப் புணர்ந்தது.

59. சென்னி நாடுகுட கொங்க நாடுதிறை
கொண்டு தென்னனுறை செந்தமிழ்க்
கன்னி நாடுறவு டன்பு குந்துமணி
நித்தி லக்குவைகள் கைக்கொளா
மன்னி நாடுகடல் கொண்ட கைம்முனிவன்
வைகு மாமலைய நண்ணினான்
மின்னி நாடுறவி ளங்கு வெஞ்சமர
வீர வாகைபெறு வேலினான்.

[சென்னிநாடு, குட கொங்கநாடு. திறை கொண்டு, தென்னன் உறை செம் தமிழ் கன்னி நாடு உறவுடன் புகுந்து, மணி நித்திலம் குவைகள் கைக்கொளா, மன்னி நாடு கடல் கொண்ட கைமுனிவன் வைகும் மா மலையம் நண்ணினான், மின்னி நாடுற விளங்கு வெம் சமரம் வீரம் வாகை பெறு வேலினான்.]

**விளக்கம் :**—நாடுற மின்னி விளங்கு ... வேலினான (சகாதேவன்), சென்னி நாடு...நண்ணினான், என்று அன்வயிக்க.

'மன்னிநாடு...மலயம்,' கடல் கொண்ட கைம் முனிவன் மன்னி வைகும் மாமலையம், என்று இயைக்க.

சென்னி நாடு - சோழ நாடு. குடகொங்க நாடு - மேற்கிலுள்ள கொங்க நாடு இந்நாட்டு மன்னர்கள் தந்த திறை கொண்டபின், சகதேவன் பாண்டி நாடு சென்றான். சித்திர வாக பாண்டியனின் மகளான சித்திராங்கதையை அருச்சுனன் மணந்துள்ளான் ஆதலின், **உறவுடன் புகுந்து** என்று கூறப்பட்டது. மலையத்துவச பாண்டியனது மகளாய் அவதரித்த மீனாக்ஷி அம்மையால் ஆளப்பெற்றமை பற்றி, பாண்டி நாட்டைப் புலவர் **கன்னி நாடு** என்றார் போலும். அந்நாட்டு மன்னனால் கொடுக்கப்பெற்ற மணி (அழகிய) நித்திலக் குவை (முத்துக் குவியல்)களைப் பெற்றுக்கொண்டு சகாதேவன், அகத்தியர் இருப்பிடமான பொதிய மலை சென்றான்.

நாடுற - (நாடு உற - நாடுதல் உற) நன்றாகக் கூர்ந்து நோக்கும்படி. மின்னி விளங்கு - மின்னி விளங்குகிற. சமரம் - போரினிடத்தே. வீர வாகை பெறு வேல்- வெற்றியின் அடையாளமாக வாகை மாலை சூட்டப்பெறும் வேல். அத்தகைய வேலை ஏந்திய சகாதேவன்.

60. செகத்தி யங்குதனி யாழி யைவரினு
மிளைய காளையொடு சேனையந்
நகத்தி யைந்தபொழு தவனி பவ்வமுறு
நவ்வெ னத்தலைந டுங்கவே
மிகத்தி யங்கிநெடு வெற்பின் மிசைமேவு
வான வர்கண் மீளவும்
அகத்தி யன் தனைவ டக்கி ருத்தும்வகை
யுன்னி னார்கள்ச மமாகவே.

[செகத்து இயங்கு தனி ஆழி ஐவரினும் இளைய காளையோடு சேனை, அ நகத்து இயைந்தபொழுது அவனி பவ்வம் உறு நவ்வு என தலை நடுங்கவே, மிக தியங்கி நெடு மேரு வெற்பின் மிசை மேவுவானவர்கள் மீளவும் அகத்தியன் தனை வடக்கு இருத்தும் வகை உன்னினார்கள் சமம் ஆகவே.]

விளக்கம்:—செகத்து ...சேனை - பூமண்டலம் முழுவதிலும் தடையின்றிச் செல்லும் ஒப்பற்ற ஆக்ஞா சக்கரத்தை உடைய பாண்டவர் ஐவரிலும் இளையவனான சகாதேவன். அ நகத்து இயைந்தபொழுது அந்த மலையமலையினிடத்தே (அவனது சேனை) சென்று ஒன்று சேர்ந்தபொழுது (அந்த சேனா சமுத்திரத்தின் பாரத்தைத் தாங்க மாட்டாது). அவனி பவ்வம் உறு நவ்வு என தலை நடுங்கவே. பூமி கடலிடத்தே பொருந்திய படகுபோல் அசையலுற்றுச் சாய்ந்து அழுந்தவே. (வடக்கிலுள்ள பெரிய மேரு மலையில் வாழும் வானவர்கள்) மிக தியங்கி - மிகவும் கலக்கமுற்று. (பூமி சமம் ஆகும் பொருட்டு மறுபடியும் அகத்தியனை வடக்கே சென்று தங்கி இருக்கும்படி) உன்னினார் - (தேவர்கள்) மனத்தினால் வேண்ட எண்ணினார்.

முன்னொரு காலத்தில் தேவர்களும் முனிவர்களும் மேரு மலையில் கூடியதனால், பூமியின் வடபுறம் தாழலும், அது சமமாதற் பொருட்டுத் தென்திசை சென்று தங்குமாறு தவ மகிமையுடைய அகத்தியனை அவர்கள் வேண்டிக் கொண்டார் கள். அகத்திய முனிவரும் அவ்வாறே மலையமலைவந்து தங்கலா னார். இப்பொழுது, சகதேவனுடைய சேனையின் வரவால் தென்புறம் அழுந்த, வடபுறத்தே உள்ள வானவர், மீண்டும் வடபுறம் வந்து தங்குமாறு செய்யக் கருதினர். சகாதேவனது சேனையின் மிகுதியை இவ்வாறு வருணித்தது உயர்வுநவிற்சியின் பாற்படும்.

நகம், அவனி, அகஸ்தியன் என்பவை வடமொழிச் சொற்கள். நவ்வு-படகு, தோணி,

61. கன்னி லங்கொலென வலிய மெய்பெறுக
டோற்க சன்றனைய ழைத்துநீ
தென்னி லங்கைத்திறை கொண்டு மீள்கவென
விளைய தாதையுரை செய்யவே
மின்னி லங்கணியெ யிற்ற ரக்கர்கு
லவீர னாகியவி பீடணன்
தன்னி லங்கொ துகொ ளப்பு குந்தொருச
ழக்க றச்சமரு ழக்கினான்.

[கல் நிலம் கொல் என வலிய மெய் பெறு கடோற்கசன் தனை அழைத்து, 'நீ தென் இலங்கை திறை கொண்டு மீள்க என, இளையதாதை உரை செய்யவே, மின் இலங்கு அணி எயிற்று

அரக்கர் குலம் வீரன் ஆகிய விபீடணன் தன் நிலம் கொதி கொள புகுந்து, ஒரு சழக்கு அற சமர் உழக்கினான்].

**விளக்கம்:**—கல் நிலம் கொல் - (இது) மலை தானோ? என்று சொல்லுமபடியான வலிய தேகத்தைப் பெற்ற கடோர்க்கசனை அழைத்து, இளைய தகப்பனான சகாதேவன், இலங்கை சென்று திறைகொண்டு திரும்புமாறு கூறினான். கூறலும் அவன், மின்னல் போல் விளங்கும் அழகிய வக்ர தந்தங்களையுடைய அரக்கர் குலவீரனாகிய வீடணனது நாடாகிய இலங்கையில், அங்குள்ள அரக்கர் மனக்கொதிப்புக் கொள்ளும்படி, ஒருசிறிதும் தடுமாற்றம் இல்லாதவனாய்ப் போர் செய்தான், என்றபடி, சழக்கு-தடுமாற்றம். தளர்ச்சி.

62. யாரை யோயுரைசெய் நீயெ னத்திறனி
சாச ராதிபனி யம்பலும்
பாரை யேழினையு முழுது டைக்குருகு
லத்து மேன்மைபெறு பாண்டுவின்
பேரன் யான்விறலி டிம்பன் மாமருக
னெனவ ரக்கர்பெ ருமான்மனத்(து)
ஊரு மாதரவி னோட ழைத்தவனை
யுவகை யோடுமிக வுறவுறா.

[யாரையோ உரைசெய் நீ என, திறல் நிசாசரர் அதிபன் இயம்பலும், பாரை ஏழினையும் முழுது உடை குருகுலத்து மேன்மை பெறு பாண்டுவின் பேரன் யான், விறல் இடிம்பன் மா மருமகன் என, அரக்கர் பெருமான் மனத்து ஊரும் ஆதரவி னோடு அழைத்து அவனை, உவகையோடு மிக உறவு உறா, —இதுவும் அடுத்துவரும் மூன்று கவிகளும் குளகம்].

**விளக்கம் :**—நிசாசராதிபன் - நிசாசரர் அதிபன்) விபீஷணன் (அரக்கர் பெருமானான விபீஷணன்) மனத்து ஊரும் ஆதரவி னோடு மனத்தில் எழுந்து மிகும் அன்போடு உறவு உறா - உறவு பாராட்டி —அடுத்த செய்யுளோடு தொடரும். யாரையோ, என்பதிலுள்ள ஐ ஓ அசைகள். நிசாசரர் - இரவில் சஞ்சரிப்பவர், அரக்கர். நிரசரர் என்றும் கூறுவர். யாரையா, என்றோர் பாடமுளது''.

63. நீயி லங்கையிடை வந்த தென்கொலென
நீதி யாலுயரு திட்டிரன்

ராய சூயமெனு நாம மாமகமி
யற்று வான்விறலொ டெண்ணினான்
நேய மானவிளை யோர்க ணால்வரும்
நெடுந்தி சாமுகம டங்கவென்(று)
ஏய மாநிதிதி ரட்ட லுற்றனர்கள்
யானு நின்னகரி யெய்தினேன்.

[நீ இலங்கை இடை வந்தது என் கொல்? நீதியால் உயர் உதிட்டிரன் ராயசூயம் எனும் நாமம் மா மகம் இயற்று வான் விறலால் எண்ணினான், நேயம் ஆன இளையோர்கள் நால்வரும் நெடும் திசாமுகம் அடங்கவென்று, ஏயமா நிதி திரட்டல் உற்றனர்கள்; யானும் நின் நகரி எய்தினேன்].

**விளக்கம்:**—ராயசூயம் - ராஜசூயம் என்னும் பெயருடைய மஹாயாகம் (இதைச் செய்தவர் மஹா மண்டலாதிபர் என்னும் சிறப்பினை. எய்துவர்) இவ் வடமொழிச்சொல் இகர உயிர் பெறாமல் நின்றது, விறலொடு எண்ணினான்-பாண்டவர் வீரமும் பெருமையும் தோன்ற உறுதியோடு சங்கற்பம் செய்து கொண்டான், (விறல்-வீரம், பெருமை). ஏய மா நிதி-பொருந்திய பெரிய நிதி, அதாவது திக்விஜயம் செய்து, வென்ற நாடுகளில் பொருந்தியுள்ள திரவியங்கள். "தமையனிடம் நேசமுடைய நால்வரும் நான்கு திக்குகளிலும் நிதி திரட்டலுற்றனர். அதற்காகவே நானும் இங்கே வந்தேன்," என்று கடோர்க்கஜன், வீடணனுக்குக் கூறினான், என்க. நீ இங்கே வந்தது என்கொல்? என்று கேட்ட இலங்கையர்கோன் வீடணற்கு, இதனால் சகாதேவன், தான்வந்த காரியத்தைத் தெரிவித்தபடி என்கொல், என்பதிலுள்ள கொல், அசை. இயற்றுவான் - (எச்சம்) செய்வதற்கு.

64. அற்ப னைத்துலகு மெண்ண வேயறன
ளித்த மன்னனழல் வேள்வியின்
கற்ப னைக்குதவி தருகெ னப்பழைய
கால்வி ழுத்தநெடு வேலைவீழ்
வெற்ப னைப்புகல வந்த வீடணன
ளித்த நீடுயர்வி யன்றலைப்
பொற்ப னைத்தருவோ ரேழு மேழுமுட
னேக வர்ந்துகழல் போற்றியே.

[அற்பு (அன்பு) அனைத்து உலகும் எண்ணவே அறன் அளித்த மன்னன் அழல் வேள்வியின் கற்பனைக்கு உதவி தருக என, பழைய கால் விழுத்த நெடு வேலை வீழ் வெற்பனை புகல, அந்த வீடணன் அளித்த நீடு உயர் வியன்தலை பொன் பனை தரு ஓர் ஏழும் உடனே கவர்ந்து கழல் போற்றியே,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :**—பழைய கால் விழுத்த நெடு வேலை வீழ் வெற்பனை, அனைத்து உலகும் (உனது) அற்பு எண்ணவே, அறன் அளித்த மன்னன்...தருக, என. அந்த வீடணன்...கழல் போற்றியே, என்று அன்வயிக்க

அனைத்து உலகும் அற்பு உன்ன - உலகோர் அனைவரும் (உனது) அன்பை நினைத்துக் கொண்டாட, (ஏ - அசை). அன்பு - அன்பின் பயனாய தாராளத் தன்மை. அறன் அளித்த மன்னன் - தர்மராஜன் தந்த மன்னன் (உதிட்டிரன்). அழல் வேள்வி - அக்னியைப் பிரதானமாகக் கொண்டு செய்யுள் யாகம். கற்பு - முறைமை. கற்பனைக்கு - யாகத்தை முறைமை கடவாது செய்தற்கு. பழையகால்...வெற்பன் - (ஆதிசேஷனுக்கும் வாயுவிற்கும் பலப்பரீட்சை ஏற்பட்ட காலத்தில்) கால் (காற்று) ஆதிசேஷனின் பிடிப்பினின்று பறித்து வீசவே, பெரிய கடலில் விழுந்த மேருவின் சிகரமாகிய திரிகூடம் என்னும் மலைக்கு உரியவனான விபீஷணன். நீடு உயர்வியன்தலை பொன் பனை தரு - மிக உயர்ந்த விசாலமான தலைப்பாகத்தை உடைய பொன் மயமான பனைமரம். ஏழும் ஏழும் - பதினான்கு (பனை மரங்கள்). கவர்ந்து - பெற்றுக்கொண்டு.

யாகசாலையில் தோரண கம்பமாக நாட்டுதற்குரியவை இப் பனைமரங்கள். சான்றோனும் இராம பக்தனுமான விபீஷணன்பால், அரக்கரை எதிர்த்து அபசாரப்பட்ட குற்ற நீக்கத்தின் பொருட்டுக் கடோற்கசன் வீடணனது கழல் போற்றினான் ஆயிற்று.

**65. மீள வந்திளைய தாதை பாதமுடி**
**மீது வைத்தொளி விளங்குபொன்**
**பாளை யம்பனைகள் பற்ப ராகமுத**
**லான பன்மணி பரப்பினான்**
**நாளி ரண்டிலிமை யோரொ டொத்தபெரு**
**ஞான பண்டிதனு நல்லறன்**

காளை பைங்கழல் வணங்கி னான்றமது
பதிபு குந்துநனி கடுகியே.

[மீள வந்து இளைய தாதை பாதம் முடிமீது வைத்து, ஒளி விளங்கு பொன் பாளை அம் பனைகள், பற்பராகம் (பத்மராகம்) முதலான பல் மணி பரப்பினான் நாள் இரண்டில், இமையோரொடுஒத்த பெரு ஞான பண்டிதனும், நல் அறன் காளை பைங்கழல் வணங்கினான், தமது பதி புகுந்து நனி கடுகியே.]

**விளக்கம்:**—நாள் இரண்டில் (கடோற்கசன்) மீளவந்து, என்று இயைக்க. இளைய தாதை - சகாதேவன், ஒளி விளங்கு பொன் பாளைகளை உடைய அழகிய பனை மரங்களோடு வீடணன் அளித்த பத்மராகங்கள் முதலிய சிறந்த ரத்தினங்களையும் சகாதேவனுக்குக் கடோற்கசன் காட்டினான். அத் திரவியங்களின் மிகுதிபற்றிப் **பரப்பினான்** எனப்பட்டது. ஞானபண்டிதன் - சகாதேவன். அறன்காளை - தருமன். கடுகி - விரைந்து.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

66. ஆல்வரும் புரவித் திண்டே ரறன்மக னநுச ரான
நால்வருஞ் சென்று திக்கோர் நாலிரண் டினுந்தன் செய்ய
கோல்வரும் படியே யாக்கிக் கொணர்ந்தன திறைகள் கண்டான்
மேல்வரு மிராசசூய வேள்விநாம் விளம்பக் கேண்மோ.

[ஆல் வரும் புரவி திண் தேர் அறன் மகனது அநுசர் ஆன நால்வரும் சென்று. திக்கு ஓர் நால் இரண்டினும் தன் செய்ய கோல் வரும்படி (ஏ) ஆக்கி கொணர்ந்தன திறைகள் கண்டான், மேல் வரும் இராச சூய வேள்வி நாம் விளம்பக் கேண்மோ.]

**விளக்கம்** :—ஆல் - ஆட்டம். ஆல் வரும் புரவி - ஆடிக்கொடு வரும் குதிரைப்படை, தேர்ப்படை. (அவற்றையுடைய) அறன் மகன் - தருமன் அநுசர் - தம்பியர். தன் செய்ய கோல் வரும்படி ஆக்கி - தனது (தருமனது) செங்கோல் (எட்டுத் திக்கிலும்) செல்லும்படி செய்து. தம்பியர் கொணர்ந்த திறைப் பொருள்களைத் தருமன் கண்டான். மேல்வரும் - இனி நிகழ இருக்கும் (ராய சூயம்) கேண்மோ - கேட்பாயாக. பாரதக் கதை வைசம் பாயன முனிவரால் ஜனமேஜய மகராஜனுக்குச் சொல்லப்பட்டது. நாம் என்பது முனிவரைக் குறிக்கும். கேன்

என்ற ஏவல் ஒருமை அரசனைக் குறிக்கும். **கேண்மோ** கேள்-மோ என்பதில் உள்ள **மோ** முன்னிலை அசை.

**கண்ணனைத் தருமன் அழைத்தல்**

67. இரணிய னிரணி யாக்க னென்றதா னவரை வென்றாங்(கு)
அரணிய விலங்கை மூதூ ரரக்க னையநுச னோடு
மரணமுற் றிடமுன் சீறி மாமானை மலைந்து மற்றை
முரணிய பகையுந் தீர்ப்பான் மூர்த்தியாய்ப் பிறந்துளோனை.

[இரணியன் இரணியாக்கன் என்ற தானவரை வென்று ஆங்கு, அரணிய இலங்கை மூதூர் (மூது - ஊர்) அரக்கனை அநுசனோடு மரணம் உற்றிட முன் சீறி, மாமனை மலைந்து, மற்றை முரணிய பகையும் தீர்ப்பான் மூர்த்தியாய் பிறந்து உளோனை. - இதுவும் அடுத்த கவியும் குளகம்]

**விளக்கம்:**—தானவர் -அசுரர். ஆங்கு - முன்னொரு காலத்தில். அரணிய - அரிய (சிறந்த) அரணை உடைய. அரக்கன் - இராவணன். அநுசன் - அவனது தம்பியாகிய கும்பகர்ணன். மாமன் - கம்சன். மற்றை முரணிய பகை- சிசுபாலன். தீர்ப்பான் - அச் சிசுபாலனை அழித்தற்கு. மூர்த்தி யாய்ப்பிறந்துள்ளோன் - திருமாலின் அவதாரமாய்த் தோன்றி யுள்ள கண்ணபிரான். தானவர் - (தாநவர்) காசியப முனிவரது மனைவியரில் ஒருத்தியான தநு என்பவளிடம் தோன்றியவர்,

68. விரைவினிற் கொணரு மாறு வீணைநா ரதனைப் போக்கித்
தரணிபர்க் கெல்லா மோலை தனித்தனித் தூதிற் போக்கி
வரனுடைச் சுருதி நான்கும் வகுத்தவ னாதி யான
இருபிறப் பாளர் யார்க்கு முலூகனை யேவி னானே.

[விரைவினில் கொணரும் ஆறு வீணை நாரதனை போக்கி, தரணியர்க்கு எல்லாம் ஓலை தனித்தனி தூதின் போக்கி, வரன் உடை சுருதி நான்கும் வகுத்தவன் ஆதியான இரு பிறப்பாளர் யார்க்கும் உலூகனை ஏவினான், ஏ.]

**விளக்கம்** :—கண்ணபிரானை அழைத்து வர நாரத முனிவனை அனுப்பிய தருமன், அரசர்களுக்கு தூதுவர் மூலம் ஓலை அனுப்பினான். வியாசர் முதலிய முனிவர்களை அழைத்து வர உலூகமா முனிவனை அனுப்பினான், என்றபடி.

தரணிபர் - அரசர். வரன் உடை சுருதி - பெருமை பொருந்திய வேதம். வேதங்களை நான்காக முறை செய்து வகுத்தவன் வியாசமுனிவன். இரு பிறப்பாளர் - வேத விற்பன்னரான பிராமணர், முனிவர். உலூகன் - பாண்டவரது புரோகிதன்.

69. தானவர் தச்சன் வந்து சமைத்ததோர் சிற்பந் தன்னை
வானவர் தச்சன் கண்டு மகிழுமண்ட பத்தின் வேந்தர்
ஆனவ ரெவரு மீண்டி ய ந்தண ரெவரு மீண்டி
மானவ ரெவரு மீண்டி வரம்பற நெருங்கி னாரே.

[தானவர் தச்சன் வந்து சமைத்தது ஓர் சிற்பம் தன்னை வானவர் தச்சன் கண்டு மகிழும் மண்டபத்தின் வேந்தர் ஆனவர் எவரும் ஈண்டி, அந்தணர் எவரும் ஈண்டி, மானவர் எவரும் ஈண்டி, வரம்பு அற நெருங்கினார், ஏ.]

**விளக்கம்**:—தானவர்தச்சன் - மயன். சமைத்த - ஆக்கிய, நிருமித்த. தன்னை - சிற்ப வேலைத் திறமையை. வானவர் தச்சன் - விச்வகர்மன். மயனது சிற்பத்திறனைக் கண்டு வீசுவகர்மன் மகிழுமாறு அமைந்த மண்டபத்தில், வேந்தரும், முனிவரும். மற்ற மனிதர்களும் வந்து கூடினர்,—என்றபடி.

காண்டவ தகனம் நடந்தபொழுது, தனது உயிரை விசயன் காப்பாற்றியதற்கு எதிராக, மயன் தானே வலிய வந்து மண்டபம் அமைத்ததை, **வந்து** என்ற சொல் குறிப்பதாகும். மகிழும் மண்டபம் - மகிழ்தற்குக் காரணமாய மண்டபம். மாநவர் - காசியபரின் மனைவிகளில் ஒருத்தியான மநு என்பவளது வம்சத்தினர்; மனிதர்.

70. வரவர வந்த வந்த முனிவரை வணங்கி யாசி
திரமுறப் பெற்று வேந்தர் சிறப்பெலாந் திருக்க ணோக்கி
நரபதி தானு மற்றை நால்வரும் நீலமேனி
இரவியை யனையான் றன்னை யுவகையோ டெதிர்கொண் டானே.

[வர வர வந்த அந்த முனிவரை வணங்கி, ஆசி (ஸ்) திரம் உற பெற்று, வேந்தர் (கொடு வந்த) சிறப்பு எலாம் திருக்கண் நோக்கி. நரபதி தானும் மற்றை நால்வரும் நீல மேனி இரவியை அனையான் தன்னை உவகையோடு எதிர்கொண்டான், ஏ.]

**விளக்கம்:**—(நரபதியாகிய தானும் மற்றைத் தம்பியர் நால்வரும்) வரவர (முனிவர்) வருந்தோறும். வந்த அந்த- வந்து சேர்ந்த அந்த (முனிவர்ளை). திரம் உற - (முனிவர் கூறிய ஆசி மொழியை) தமக்கு உறுதியாக, நன்மையாக. வேந்தர் சிறப்பு - அரசர்கள் - கொடு வந்த காணிக்கைப் பொருள்கள், நீல மேனி இரவியை அனையான் தன்னை நீலமான திருமேனி நிறமுடைய சூரியனைப்போல் விளங்குகின்ற கண்ணபிரானை. நரபதி- (அரசன்) தருமன். நரபதி தானும் மற்றை நால்வரும் **கண்டான்,** என்ற முடிபு சிறப்பைப் பற்றியதாகும் (பால் வழு அமைதி) ஸ்திரம், என்ற வட சொல் **திரம்** என நின்றது. நீலமேனி இரவி அனையான்: இல் பொருள் உவமை.

**71. கரகதக் களிறு மோலுங் கனிட்டரீ ரிருவ ரோடும்**
**துரகதத் தடந்தேர் விட்டுத் துழாய்மணங் கமழும்**
**பொற்றோள்**
**மரகதக் கிரியன் னானை வணங்கினன் தழுவி**
**வெள்ளைத்**
**திருநிறத் தவன்றன் செம்பொற் றிருப்பத**
**மிறைஞ்சி னானே.**

[கரம் கதம் களிறு போலும் கனிட்டர் ஈர் இருவரோடும், துரகதம் தடந்தேர் விட்டு துழாய் மணம் கமழும் பொன் தோள் மரகதம் கிரி அன்னானை வணங்கினன் தழுவி, வெள்ளை திரு நிறத்தவன் தன் செம்பொன் திருப்பதம் இறைஞ்சினான், ஏ]

**விளக்கம் :**—சென்ற பாட்டிலுள்ள **நரபதி** எழுவாய். துதிக் கையையும், கோபத்தையும் உடைய யானை போன்ற கனிட்டர் (தம்பியர்) நால்வரோடும்,—என்பது முதலடியின் பொருள். கதம் - கோபம். துரகதம் - குதிரை. மரகத கிரி அன்னான் - மரகதமலை போன்ற கண்ணன். தழுவி வணங்கினான் - தம்பிய ரோடு சென்று கண்ணனது திருவடிகளில் தலை பொருந்தும்படி வணங்கினான். (அதன்பின்) வெள்ளை...இறைஞ்சினான்-வெள் ளிய திருமேனி நிறத்தையுடைய பலராமனது செம் பொன் கழல் அணிந்த திருவடிகளை வணங்கினான்.—என்பதாம்.

### கண்ணன் உலாச் செல்லல்

72. இருபுடை மருங்குந் திக்கோ ரெட்டையும்
வென்றோர் போத
நிருபதி தேரிற் போத நேமியான் களிற்றிற் போதச்
சுரர்பெருந் தச்சன் செய்த தொன்னகர் வீதி புக்கார்
வருதிருப் பவனி கேட்டார் வளநகர் மாத ரெல்லாம்.

[இரு புடை மருங்கும் திக்கு ஓர் எட்டையும் வென்றார் போத, நிருபதி தேரில் போத, நேமியான் களிற்றில் போத, சுரர் பெரும் தச்சன் செய்த தொல் நகர் புக்கார், வரு திரு பவனி கேட்டார் வள நகர் மாதர் எல்லாம்.]

**விளக்கம் :**—எட்டுத் திக்குக்களையும் வென்று திறை கொணர்ந்த (தருமனது) தம்பியர் நால்வரும் இரண்டு பக்கங்களிலும் சொல்ல.— என்பது முதலடியின் பொருள். நிருபதி - தருமன். நேமியான் - கண்ணன். சுரர் பெரும் தச்சன் - இந்திரப் பிரத்தத்தை நிருமாணம் செய்த தேவர் தச்சனான பெருமையுடைய விசவகர்மன். வருதிரு பவனி - கண்ணன் பாண்டவர்களோடு பவனிவரும் செய்தியை, (அந்த வளநகரிலுள்ள பேதை முதல் பேரிளம் பெண் வரையிலுள்ள ஏழு பருவப் பெண்களும் கேள்வியுற்றார்.)

**உலா** என்பது காவிய அங்கங்களில் ஒன்று. கம்பராமாயணத்தில் இவ் வுலாச் செய்தி ஒரு தனிப்படலம் பெற்றுளது.

73. ஈரடி களினுஞ் செம்பஞ் செழுதுவா ரெழுது முன்னர்
ஓரடி யெழுதி மின்போ லொல்கிவந் திறைஞ்சு
வாரும்.
ஆரமு தனைய கண்ணி னஞ்சன மெழுது கின்ற
சீரிய கோலுங் கையுந் திருத்தகத் தோன்று வாரும்.

[ஈர் அடிகளினும் செம்பஞ்சு எழுதுவார் எழுது முன்னர் ஓர் அடி எழுதி மின்போல் ஒல்கி வந்து இறைஞ்சுவாரும், ஆர் அமுது அனைய கண்ணின் அஞ்சனம் எழுதுகின்ற சீரிய கோலும் கையும் திரு தக தோன்று வாரும்,—இதுவும் இதைத் தொடரும் நான்கு கவிகளும் குளகம்.]

**விளக்கம் :**—மிக சுலபமான பாசுரம். மாதர்கள் கண்ணனைக் காண விரைந்து வந்தனர், என்பது கருத்து. கோல் - பொன்னால், அல்லது வெள்ளியால் செய்யப் பெற்ற மை எழுதுங்

கோல். திருத்தக - அழகு பொருந்த, அல்லது திருமகளை ஒப்ப. முன்னவர் ஓடி வந்து வணங்கினர். பின்னவர் கோலும் கையு மாய்த் தங்கள் அழகு தோன்ற வாயிலில் வந்து நின்றனர். பாதங்களில் செம்பஞ்சு ஊட்டப் புகுந்தவர் தமது ஒரு பாதம் எழுதி, மற்றொரு பாதத்திற்கு எழுதுமுன், வெளியே வந்து வணங்கினார், என்பது முதலிரண்டடிகளின் பொருள்.

74. விரிதுகில் வேறு டாமல் விரைகமழ் தூநீ ராடிச்
சுரிகுழன் மேக மாரி துளித்திட வெதிர்கொள்
வாரும்
கரதல மலரிற் சங்குங் கலாபமுஞ் சிலம்பு மார்ப்பத்
தெருவெலாந் தாமே யாகிச் சீறடி சிவப்பிப் பாரும்.

[விரிதுகில் வேறு உடாமல் விரை கமழ் தூ நீர் ஆடி, சுரி குழல் மேகம் மாரி துளித்திட, எதிர் கொள்வாரும், கரதலம் மலரில் சங்கும் கலாபமும் சிலம்பும் ஆர்ப்ப, தெரு எலாம் தாமே ஆகி சிறு அடி சிவப்பிப் பாரும்.]

**விளக்கம் :**—விரிதுகில் - அகன்று நீண்ட வஸ்திரம். விரை கமழ் தூநீர் - மணங்கமழும் நல்ல நீர். ஆடி - குளித்து. சுரி குழல் மேகம் - நுனி சுருண்ட கூந்தலாகிய மேகம். மாரி துளித்திட - மிகுதியாக நீர்த்துளியைச் சிந்த. சங்கு-சங்கு வளையல். கலாபம்- இடையில் அணியும் பொன் அணி. சிலம்பு - கால் அணி. ஆர்ப்ப- ஒலிக்க. "ஸ்நானம் செய்து கொண்டிருந்த மாதர், உடை மாற் றாமல் ஈரவஸ்திரத்துடனே விரைந்து வந்தனர்; வேறு சிலர், அணிகள் ஒலிக்கக் கால் சிவந்து போம்படி ஓடி வந்தனர்," என்றவாறு.

75. வார் குழைப் பற்பராக மணிவிளக் கேற்று வாரும்
நேரிழை மருங்குல் வாட்டு நிறைகுடம் பூரிப் பாரும்
காரிளங் கமுகும் பச்சைக் கதலியும் நிரைத்துத்
தோளாம்
தோரண நாட்டு வாருந் தூமலர் சிந்து வாரும்.

[வார் குழை பற்பராக மணி விளக்கு ஏற்றுவாரும், நேர் இழை மருங்குல் வாட்டும் நிறைகுடம் பூரிப்பாரும், கார் இளங் கமுகும் பச்சை கதலியும் நிரைத்து தோள் ஆம் தோரணம் நாட்டுவாரும், தூமலர் சிந்துவாரும்.]

**விளக்கம் :**—அரசர், பெரியோர் வீதி வலம் வருகையில் மங்கள விளக்கு ஏற்றலும், பூர்ணகும்பங்களை மகிழ்ந்து(பூரித்து)

வைத்தலும், கமுகு வாழை யாயவற்றை வரிசையாய்க் கட்டலும், தோரண கம்பங்களை நாட்டி வைத்தலும், மலர்களைச் சிந்துதலும் அவர்களை உபசரிக்கும் முறையாகும். வீதியில் உலா வரும் கண்ணனை மாதர்கள் அம்முறைப்படி உபசரித்தனர், என்று கூறும் கருத்தது இச் செய்யுள்.

குழை - காதணி. அது பத்மராாகமணிகளால் செய்யப்பட்டது. மாதர்களின் மணிகளால் இழைக்கப்பெற்ற வார் குழைகள் மங்கள தீபங்களாயின. நேர் இழை - தகுதியான ஆபரணங்களை அணிந்த பெண். அல்லது இழைநேர் என்று கொண்டு நூலை ஒத்த என்றும் பொருள் கொள்ளலாம். மருங்குல் - இடை. (அந்த மருங்குலை) வாட்டும் நிறைகுடம் - பாரத்தால் வருத்தும் பூர்ண கும்பம் போன்ற திருமுலைகள். அம் முலைகள் வேட்கையினால் பூரிப்பவை ஆயின, பூரிப்பு - பருமன், களிப்பு. மாதரின் முலைகள் பூர்ணகும்பங்கள் ஆயின. கார் - அழகு. கார் இளங் கமுகு - அழகிய பசுமையான கமுக மரம். கதலி - வாழை. நிரைத்து வரிசையாக நிறுத்தி. பெண்களின் கழுத்து, கமுகு. அவர்களது தொடை, வாழை. பத்தி பத்தியாய் நின்ற பெண்களின் கழுத்தும் தொடையும் கமுகும், வாழையும் ஆயின. அவர்களது தோள்கள் தோரண கம்பங்கள் ஆயின. கண்ணனைக் காண ஓடி வரும் பெண்களின் கூந்தலில் இருந்து சிந்திய மலர்கள், அவனை உபசரிக்கச் சொரிந்த மலர்களாயின. அழகிய செய்யுள் இது.

76. மாதர்க ளெவர்க்கு முன்போய் வணங்குதற்
குன்னிச் சிந்தை
ஆதர வுடனே வந்து மாவண மணுகு றாமல்
சூதடர் கொங்கை பொற்றோள் சுரிகுழல் சுமக்க
லாற்றாப்
பேதுறு மருங்கு லோடும் பித்துறு பிடியன் னாரும்

[மாதர்கள் எவர்க்கும் முன் போய் வணங்குதற்கு உன்னி, சிந்தை ஆதரவுடனே வந்தும் ஆவணம் அணுகுறாமல், சூது அடர் கொங்கை; பொன் தோள், சுரிகுழல் சுமக்க ஆற்றா பேதுறு மருங்கு லோடும் பித்து உறு பிடி அன்னாரும்.]

**விளக்கம் :**—எல்லோருக்கும் முன்னே சென்று, கண்ணனைத் தரிசிக்க நினைத்த பெண்களின் செய்தியைக் கூறும் இது. உன்னி - நினைத்து. சிந்தை ஆதரவு - மனத்தில் கொண்ட விருப்பம். ஆவணம் - (அ - வணம் - ஆவணம்; அதாவது அவ்வண்ணம்)

தாம் நினைத்தபடி. சூது அடர் கொங்கை - சூதாடு கருவி போன்ற முலை, (அடர் - உவமை உருபு), பேதுறு மருங்குல் - வருந்தும் இடை. பித்து உறு பிடி - பால் வேட்கையால் மதி மயங்கிய பெண் யானை.

கண்ணனை முன்னே சென்று கண்டு வணங்கும் ஆசையோடு விரைந்த பெண்கள், முலை, தோள், கூந்தல் ஆயவற்றின் பாரத்தைத் தாங்க மாட்டாது பேதுறு மருங்குல் தாம் கருதிய வண்ணம், முன்னே செல்ல முடியாமல் தடுக்க, பித்துறு பிடி போன்றாராயினர், என்றபடி. **அவ்வண்ணம்**, என்பதின் அகரச் சுட்டு நீண்டும், **வண்ணம்** என்பது **வணம்** என்று விகாரப்பட்டும், **ஆவணம்** என நின்றது.

77. இவ்வகைக் குழுக்கொண் டாங்க ணெழுவகைப்
பருவ மாதர்
செவ்வியு மழகுந் தேசுஞ் செய்யபூந் திருவோ
டொப்பார்
மெய்வழி நின்ற போக மேகமே யனையான்
றன்னை
மைவழி கண்ணி னோக்கி மனனுற வணங்கி னாரே.

[இ வகை குழுக்கொண்டு ஆங்கண் எழுவகை பருவமாதர், செவ்வியும், அழகும், தேசும், செய்ய பூந்திருவோடு ஒப்பார், மெய்வழி நின்ற போகம், மேகமே அனையான் தன்னை, மைவழி கண்ணின் நோக்கி மனன் உற வணங்கினார் ஏ.]

**விளக்கம் :**—குழுக்கொண்ட - கூட்டமாகக் கூடிய. செவ்வி - இங்கே இயற்கை அழகைக் குறிக்கும். அழகு - செயற்கை அழகு. தேசு - திருமேனி ஒளி. இவற்றால், கண்ணனைக் காணவந்த பருவ மாதர், திருமகளோடு ஒப்பாகக் கூடிய செவ்வியர். மெய் வழி நின்றபோகம் - போகத்தின் திருவடிவம், போக ஸ்வரூபி. பருவப் பெண்கள் போகத்தின் வடிவம் போன்றவனும் மேகத்தை நிறத்தால் ஒத்தவனுமான கண்ணனை மை வழியும் தமது கண்களால் நோக்கி மனப்பூர்வமான அன்புடன் வணங்கினார்கள், என்றபடி.

ஏழு பருவம்: பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண். 5-7, 8-11, 12-13, 14-19, 20-25, 26 - 31, 32 - 40, என்று முறையே பருவ மங்கையரின் வயதைக் கொள்க. கண்ணனைக் கண்டோரின் கண் பெருக்கும்

ஆனந்தக் கண்ணீரால், மை வழிதல் பற்றி, **மை வழிகண்,** எனப் பட்டது.

### தரவு கொச்சகக் கலிப்பா

78. மாடம் பயிலு மணித்தோ ரணவீதி
நீடஞ் சனக்க ணெருங்கித் தடுமாற
ஆடம் பரக்கொண்ட லன்னானை யாபாத
சூடங் கருதித் தொழுதார் சிலமாதர்.

[மாடம் பயிலும் மணி தோரணம் வீதி நீடு அஞ்சனம் கண் நெருங்கி தடுமாற, ஆடம்பரம் கொண்டல் அன்னானை ஆபாத சூடம் கருதி தொழுதார் சிலமாதர்.]

**விளக்கம்:**—மாளிகைகள் நெருங்கிப் பொருந்திய அழகிய தோரணங்கள் கட்டப்பெற்ற வீதி, என்பது முதலடியின் பொருள். நீடு அஞ்சனக் கண் - நீண்ட மை தீட்டப்பெற்ற கண். நெருங்கித் தடுமாற - கண்ணனது திருமேனி அழகை முடியக் கண்டு மகிழும் கருத்தில், மகளிரது கண்கள் நெருங்கி அவயவங்கள் தோறும் ஓடிக் கொண்டிருத்தலால் தடுமாற்றம் அடைய. ஆடம்பரக் கொண்டல் - இடி மின்னலோடு கூடிய சூல் முதிர்ந்த மேகம். ஆபாத சூடம் - (வடமொழித் தொடர்) பாதம் முதல் முடி ஈறாக; பாதாதி கேசம். கருதி - (பாத முதல் திருமுடி வரை) மனத்தில் பதியவைத்து, சில மாதர் வணங்கினார்கள்.

79. கங்கை தருபொற் கழலான் மணிமார்பில்
கொங்கை முகுளங் குழையும் படியாகச்
சங்கை யறமெய் தழுவுதற்குத் தம்மினுந்தம்
செங்கை மலர்பத றச்சென்றார் சிலமாதர்.

[கங்கை தருபொன் கழலான் மணி மார்பில் கொங்கை முகுளம் குழையும்படி ஆக, சங்கை அற மெய் தழுவுதற்கு தம் மினும் தம் செங்கை மலர் பதற சென்றார் சில மாதர்]

**விளக்கம்** :—கங்கை தரு பொன் கழலான் - திருமாலின் அவதாரமாகிய கண்ணன். கொங்கை முகுளம் - முலைகளாகிய தாமரை அரும்புகள். குழையும்படியாக - (அவனது அழகிய மார்பில்) அழுந்தி நெரிவுறும்படியாக. சங்கை அற - நிச்சயமாக, அல்லது பிறர் பழிப்பரோ என்ற பயம் இல்லாமல், அல்லது சங்கோஜம் இல்லாமல். தம்மினும் - தங்கள் மனத்தினும்.

செங்கை மலர் பதற - தாமரை போன்ற சிவந்த கைகள் அவனை அணைத்து மகிழத் துடிக்க, அல்லது விரைவு கொள்ள.

கண்ணனை ஆலிங்கனம் செய்து மகிழ, தம் மனத்தினும் கைகள் துடிக்கச் சில மாதர் விரைந்து வீதிவாய் வந்தனராம். திருமால் திரிவிக்ரமனாய் உலகு அளந்த காலத்து, பிரும்ம லோகம் சென்ற திருவடியைப் பிரும்மா நீரால் கழுவினான், என்றும், அந்த ஜலமே கங்கை என்றும் சொல்வர். எனவே, கங்கை தரு பொற்கழலான், என்றார்.

80. வண்டு மலர்கரும்பாம் வண்ணப் படையானைக்
கண்டனைய கண்ணிறைந்த காயாமலர்
வண்ணன்
செண்டு தரித்தோன் திருப்பவளத் தாரமுதம்
உண்டு மனத்தினா லுய்ந்தார் சில மாதர்.

[வண்டு, மலர், கரும்பு ஆம் வண்ணம் படையானை கண்டு அனைய கண் நிறைந்த காயாமலர் வண்ணன், செண்டு தரித் தோன் திருபவளத்து ஆர் அமுதம் உண்டு மனத்தினால் உய்ந் தார் சில மாதர்.]

**விளக்கம்:**—வண்டு...படையான் - மன்மதன். அவனுக்கு வண்டுகள் நாண்கயிறு; மலர், அம்பு. கரும்பு, வில். வண்ணம் - சிறந்த. படை - ஆயுதம். காயா மலர் வண்ணன் - கண்ணன். அவன், சிவபெருமானால் எரிக்கப் பெற்று அநங்கன் ஆதற்கு முன் இருந்த மன்மதனது உருவத்தைக் கண்டதுபோன்ற கட்டழ கனும், கண்ணிறைந்தவனும் ஆன கண்ணன். அவன், எப்பொழு தும் கையில் அலங்காரமாக மலர்ச் செண்டு வைத்திருப்பவன். திருப்பவளம் - அவனது அழகிய பவளம் போன்ற இதழ். அப் பெருமான்பால் கொண்ட வேட்கையினால் உயிர் அழிந்து கொண்டிருந்த சில மாதர், அவனது திருப்பவளத்து ஆர் அமுதத்தை மனோ பாவனையினால் பருகித் தங்கள் உயிரை அழியாமல் காத்துக்கொண்டனர்;—என்ற பொருளது செய்யுள்.

81. வஞ்சம் பயில்சகட வாளசுரன் மாளவிறல்
கஞ்சன் படவுதைத்த காலானைக் கண்டுருகி
அஞ்சம்பு மெய்யுருவ வைம்புலனுஞ் சோகமுற
நெஞ்சந் தடுமாற நின்றார் சிலமாதர்.

[வஞ்சம் பயில் சகட வாள் அசுரன் மாள, விறல் கஞ்சன் பட, உதைத்த காலானை கண்டு உருகி, அஞ்சு அம்பு மெய்

உருவ, ஐம்புலனும் சோகம் உற, நெஞ்சம் தடுமாற நின்றார் சில மாதர்.]

**விளக்கம்:**—வஞ்சம் பயில் வாள் சகட அசுரன் மாள-வஞ்சனையில் கைபோனகொடிய சகடாசுரன் மாண்டு போகவும், விறல் கஞ்சன் பட-ஆற்றல் உடைய கம்சன் அழியவும், உதைத்த காலான்-உதைத்து அழித்த திருவடிகளை உடைய கண்ணன். சில மாதர், அவனைக்கண்டு, உளம் உருகி, மன்மனது பஞ்ச பாணம் களும் உடலைத் துளைத்து வருத்த, பஞ்சேந்திரியங்களுந் துன்பம் அடைய நெஞ்சம் தடுமாற நின்று தளர்ந்தார், என்க.

ஆய்ப்பாடியில் கண்ணன் எசோதை மகனாய் வளர்ந்து வருகையில், கம்சனால் ஏவப்பட்ட அசுரன், ஒரு வண்டியில் ஆவேசித்துப் குழந்தைக் கண்ணனைக் கொல்லச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். அதை அறிந்த கண்ணன், தனது இளங்காலால் அவ்வண்டியை உதைத்து அவனைக் கொன்றான், என்பது கதை. சகடு-வண்டி. கம்சன், கண்ணனது மாமன், தன்னைக் கொல்லச் சூழ்ந்த மாமனைக் கண்ணன் கொன்றழித் தான், என்பது கதை. அஞ்சு. ஐந்தின் போலி.

82. தங்கள்குல முன்றிற் றலையாய மும்மதத்து
வெங்கண் மதமாமிசை வருவோன் மெய்நோக்கி
அங்கண் மிளிரவரும் புருவவின் முரியத்
திங்கணுதல் வேர்வோட நின்றார் சிலமாதர்.

[தங்கள் குலம் முன்றில் தலை ஆய மும்மதத்து வெங்கண் மதம் மா மிசை வருவோன் மெய் நோக்கி, அம் கண் மிளிர, அரும் புருவம்வில்முரிய, திங்கள் நுதல் வேர்வு ஓட நின்றார் சில மாதர்.]

**விளக்கம்:**—தங்கள் குல முன்றில்-தங்களது சிறந்த மாளிகை யின் வாயில், தலையாய மும் மதத்து... வருவோன்-யானை களில் தலைமை பெற்றதும் மூன்று மதங்களை யுடையதுமான கொடிய பட்டத்து யானையில் வருவோனான கண்ணன். அவனை நோக்கிய மாதர், வேட்கை மிக்கவராய் நின்றார். கண் மிளர்தல், புருவ வில் நெற்றி ஏறி வளைதல் வேர்வு விடல், வேட்கையின் மெய்ப்பாடு. மிளிர்தல்- பிரகாசித்தல். அலைதல். முரிய-ஒடிந்து விழும் அளவு வளைதல், குலம்-வீடு, இங்கே மாளிகை.

83. கால முகிலுமலர்க் காயாவு மன்னத்திருக்
கோல முடையான் குலவுமணிப் பூண்மார்பின்
மாலை நறுந்துளப மன்றலுக்கு வாணயன
நீலவரி வண்டாகி நின்றார் சிலமாதர்.

[காலம் முகிலும் மலர் காயவும். அன்ன திரு கோலம் உடையான் குலவு மணி பூண் மார்பின் மாலை நறுந்துளப மன்றலுக்குவாள் நயனம் நீலம் வரி வண்டு ஆகி நின்றார் சில மாதர்.]

**விளக்கம்:—**காலமுகில்-கார்கால மேகம். கோலம்-உருவம். திருக்கோலம் உடையான்- அழகிய திருமேனியை உடைய கண்ணன். குலவுதல்-பிரகாசித்தல். மணிப்பூண் குலவு மார்பு-அழகிய ஆபரணங்கள் பிரகாசிக்கும் (கண்ணனது) மார்பு. மன்றல்-வாசனை, அழகு- நறுந்துளப மாலை மன்றலுக்கு-நல்ல துளசி மாலையின் மணத்திற்கு, அல்லது அழகிற்கு, வாள் நயனம்-வாள் போன்ற கண். நீல வரிவண்டு-நீல நிறமுடைய உடலில் கோடுகளைக் கொண்ட வண்டு.

வாசனையை விரும்பி வண்டுகள் மாலைகளை நெருங்கி மொய்த்தல் போல். சில மாதர் கண்ணனது திரு மார்பிலுள்ள துளபமாலையின் அழகில் ஈடுபட்டு, வைத்த கண் வாங்காமல் அதைப் பார்த்துக் கொண்டிருந்தனர், என்பது கருத்து. நிறத்தாலும் வடிவாலும் வண்டுகள் மாதர் கண்ணுக்கு ஒப்பாகும். இவ்வாறு வேட்கை மிக்க மாதர்கள் உலாவச் சென்ற கண்ணனை உவக்க அவன் குந்தியின் மனை புகலானான்.

**கண்ணன் குந்தி மனை சேர்தல்**

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

84. மங்கையர் பலரு மிங்ஙன் மன்மத பாண நான்கின்
இங்கித வின்ப மெய்தி யின்னுயிரோடு நிற்பப்
பங்குற வந்த வந்தப் பாண்டவ ரைவ ரோடுங்
கொங்கவிழ் துளபத் தாரான் குந்திவாழ் கோயில்
புக்கான்.

[மங்கையர் பலரும் இங்ஙன் மன்மத பாணம் நான்கின் இங்கிதம் இன்பம் எய்தி இன் உயிரோடு நிற்ப, பங்கு உற வந்த அந்த பாண்டவர் ஐவரோடும், கொங்கு அவிழ் துளபம் தாரான் குந்தி வாழ் கோயில் புக்கான்.]

**விளக்கம்:**—மன்மதனது பாணங்களான தாமரை, மா. அசோகு. முல்லை, நீலமலர் ஆகியவற்றில் ஐந்தாவதான நீலமலர் மரணத்தைத்தரும். கண்ணனைக் காட்சி கொண்ட மகளிர் சாகாமையின், மன்பத பாணம் நான்கின், என்றார். இன்ப இங்கிதம் எய்தி-சிங்கார ரசத்தால் உள்ளத்து எழும் நிகழ்ச்சியைப் புலப்படுத்தும் மெய்ப்பாட்டை அடைந்து, (உயிர் அழியாமல் நின்றனர்). அதாவது, கண் பனித்தல், ரோமம் சிலிர்த்தல், நெற்றியில் வியர்வு அரும்பல், புருவம் நெற்றி ஏறி நெறிவுறல், ஆகிய மெய்ப்பாடு எய்தி நின்றனர். (இவ்வாறு மகளிர் இங்கித இன்பம் எய்தி நிற்கையில்) பங்குற வந்த-இரு பக்கத்தில் வந்த. (அந்தப் பாண்டவர் ஐவரோடு) கொங்கு அவிழ் துளபத்தாரான்-வாசனை வீசுகின்ற துளசி மாலை தரித்த கண்ணன். குந்தி வாழும் கோயில் போய்ச் சேர்ந்தான்.

85. **கொற்றவ ரைவர் தப்மைக் குருகுலம் விளங்கு மாறு**
**பெற்றவள் பாதம் போற்றிப் பிறம்பிறப் பறுக்க**
**வல்லோன்**
**மற்றவள் வாழ்த்த வாழ்த்த மனமகிழ்ந்**
**தழலின்வந்த**
**பொற்கொடி பணிவு மேனைப் பூவையர் பணிவுங்**
**கொண்டான்.**

[கொற்றவர் ஐவர் தம்மை குருகுலம் விளங்கும் ஆறு பெற்றவள் பாதம் போற்றி, பிறப்பு இறப்பு அறுக்க வல்லோன், மற்று அவள் வாழ்த்த வாழ்த்த மனம் மகிழ்ந்து. அழலின் வந்த பொன் கொடி, பணிவும் ஏனை பூவையர் பணிவும் கொண்டான்.[

**விளக்கம் :**—பாண்டவரில் மூவர் குந்தியின் மக்கள். நகுல சகதேவர். பாண்டுவின் இளைய தாரமான மாத்திரியின் புதல்வர்கள்- பாண்டுவோடு மாத்திரியும் இறந்துவிட, இவர்களை வளர்தவள் குந்தியாதலின், ஐவரைப் பெற்றவள் எனப்பட்டாள். பிறப்பு இறப்பு அறுக்க வல்லவனான பரம் பொருளின் அவதாரமான கண்ணன், எடுத்த மனிதாவதாரத் திற்கு ஏற்பக் குந்தியை வணங்கினான். அழலின் வந்த பொன் கொடி - திரௌபதி (துருபதனது யாகாக்னியிலிருந்து தோன்றி யவள்.) ஏனை பூவையர் - சுபத்திரை முதலியோர்.

வாழ்த்த வாழ்த்த, என்ற அடுக்கு கண்ணனைக் கண்டதால் குந்திக்கு ஏற்பட்ட சந்தோஷ மிகுதியையும், அன்பின்

மிகுதியையும் காட்டும். 'வணக்கத்தைக் கண்ணன் குந்திக்குக் கொடுத்து மற்ற மகளிர் வணக்கத்தைத் தான் பெற்றான்,' என்றதில், பண்டமாற்றணியின் தொனியைக் காண்க. பூவை - நாகணவாய்ப்புகள். அப் புள்ளைப் போல் இனிமையாகப் பேசும் பெண்கள், பூவையர். மற்று - அசை, வினை மாற்றுமாம்.

86. அரசவைக் கணிசெய் சிங்க வாசனத் திருத்தி
வெற்றி
முரசுடைத் துவச வேந்தன் முகமலர்ந் திருந்த
காலை
விரைசெயப் புரவித் திண்டேர் வீமனை முதலோ
ரெங்கும்
உரைசெலக் கவர்ந்த செல்வங் காட்டிநின்
றுரைசெய் தாரே.

[அரசு அவைக்கு அணி செய் சிங்க ஆசனத்து இருத்தி, வெற்றி முரசு உடை துவசம் வேந்தன், முகம் மலர்ந்து இருந்த காலை, விரை செயம் புரவி திண் தேர் வீமனை முதலோர் எங்கும் உரை செல கவர்ந்த செல்வம் காட்டி நின்று உரை செய்தாரே.]

**விளக்கம் :**—முரசு உடை துவசம் - முரசின் உருவம் எழுதப் பெற்ற கொடி. அதை உடைய வேந்தன், தருமன். அவன் கண்ணனை சிங்காதனத்தில் இருத்தி முகம் மலர்ந்து இருந்த பொழுது, வீமன் முதலாகவுடைய தம்பியர் நால்வரும், திக் விஜயம் செய்து கொணர்ந்த திரவியங்களைக் கண்ணனுக்குக் காட்டினர், என்றபடி. விரை செயப் புரவி - வேகத்தை உடையனவும், வெற்றி தருதற்கு ஏற்றனவுமான குதிரைகள். உரை செல - பாண்டவர்களின் ஆணை செல்ல; அல்லது, எங்கும் தங்கள் புகழ் பரவ, என்றுமாம். வீமனை முதலோர், என்பதிலுள்ள ஐ சாரியை.

87. முன்னர மேதஞ் செய்வான் முடிச்சரா சந்த
னென்னும்
கின்னரர் பாடுஞ் சீரான் கிளப்பருஞ் சிறையில்
வைத்த
அந்நர பதிக ளோடு மவன்மகன் மாக தேசன்
எந்நர பதிக ளுக்கு மிரவியே யென்ன வந்தான்.

[முன் நரமேதம் செய்வான் முடி சராசந்தன் என்னும் கின்னரர் பாடும் சீரான், கிளப்பு அரும் சிறையில் வைத்த, அ நரபதிகளோடும், அவன் மகன் மாகத ஈசன், எ நரபதி களுக்கும், இரவியே என்ன வந்தான்.]

**விளக்கம் :—**(இசை வல்லுநரான தேவ சாதியைச் சேர்ந்த கின்னரர் பாராட்டிப் பாடும் புகழ் உடையவனான முடியை உடைய சராசந்தன் என்னும், பெயருள்ள அரசன், நரமேதம் செய்வதற்காகச் சொல்லுதற்கு அரிய கொடுமையை உடைய சிறையில் வைத்த அந்த அரசர்களோடு, அவன் மகனான சகாதேவன் என்ற பெயருடைய மாகதேசன் (மகத நாட்டுக்கு அரசன்) எல்லா அரசர்களுக்கும் சூரியன் என்று போற்றும்படி இந்திரப் பிரத்தம் வந்தான், என்பது பொருள்.

நரமேதம் - நரனை பலி கொடுத்தல். நூறு அரசர்களைச் சிவபிரானது முன்னிலையில் பலி கொடுக்க எண்ணி 86 அரசர்களை வென்று சிறையில் அடைத்து வைத்திருந்தான். எஞ்சியுள்ள 14 பேரைச் சேர்க்க முயன்றுகொண்டிருக்கையில், கண்ணன் வீமனைக் கொண்டு சராசந்தனைக் கொன்று, அரசர்களைச் சிறையிலிருந்து விடுவித்து. அந்த ராஜ்யத்தையும் அவன் மகனான சகதேவனிடம் ஒப்புவித்தான், என்பது கதை.

மண்ணிலன்றி விண்ணிலும் பரவிய புகழினன் சராசந்தன், என்று கூறும் கருத்தினது. கின்னரர் பாடும சீரான் என்பது. மகன் கண்ணனது அருள் பெற்றமை பற்றி, எந்நரபதிகளுக்கும் இரவி எனப்பட்டான்.

88. அரும்பனைக் கொடியோ னாதி யரவுயர்த் தவனீ
றாகும்
பொரும்படைச்சேனை வெள்ளப் பூருவின் குலத்துள்
ளோர்கள்
கரும்பனைத் தடக்கை வெங்கட் கரிமுதற் சேனை
யோடும்
இரும்பினைக் குழைக்கு நெஞ்சர் யாவரு மீண்டி
மொய்தார்.

[அரும்பனை கொடியோன் ஆதி அரவு உயர்த்தவன் ஈறு ஆகும் பொரும் படை சேனை வெள்ளம் பூருவின் குலத்து உள்ளோர்கள் கரும் பனை தடக்கை வெம் கண் கரி முதல் சேனையோடும், இரும்பினை குழைக்கும் நெஞ்சர் யாவரும் ஈண்டி, மொய்த்தார்.]

**விளக்கம்:—** அரும்பனைக் கொடியோன்- பனைமரக் கொடியை உடைய வீடுமன், (அரும்பனை- அருமையான, அல்லது சிறந்த பனை). அரவு உயர்த்தவன். பாம்புக் கொடியோனான துரியோதனன். "இரும்பினை குழைக்கும் நெஞ்சர் (ஆகிய) பொரும் படைச் சேனை...", என்று கூட்டுக. இரும்பையும் நெகிழச் செய்யும் மனத்தின் உறுதியை உடைய, (அதாவது இரும்பினும் கடினமான மனத்தை உடைய) போர் செய்யும் அரசர்கள் படைக்கலன்களோடு கூடிய சேனைக் கடலை உடைய பூரு என்னும் அரசனின் வம்சத்தின் வந்த அனைவரும் கரும்பனை...சேனையோடு- கரிய பனைமரம் போன்ற பெரிய துதிக்கையை உடைய கொடிய யானை முதலிய நால்வகைச் சேனைகளோடு, (இந்திரப் பிரத்தம் வந்து கூடினர்). வீடுமன் முதல் துரியோதனன் ஈறாக, பூருவின் வம்சத்துளோர் அனைவரும் வந்து நிறைந்தனர், என்க.

பூரு-யயாதியின் மகன். இவன் குருகுலத்துப் பூர்வர்களில் முக்கியமானவன். எனவே, வீடுமன் முதலியோர், பூருவின் குலத்துளோர் எனப்பட்டார்.

89. இந்திர புரிக்கு மிந்த விந்திர புரிக்குந் தேவர்
அந்தர மறிவு றாம லதிசயித் துவகை கூரச்
செந்திரு மடந்தைக் குள்ள செல்வங்க ளனைத்துஞ்
சேர
வந்தது போலும் வேள்வி மாநகர்த் தோற்ற மம்மா.

[இந்திரபுரிக்கும் இந்த இந்திரிபுரிக்கும், தேவர் அந்தரம் அறிவுறாமல் அதிசயித்து உவகை கூர, செந்திரு மடந்தைக்கு உள்ள செல்வங்கள் அனைத்தும் சேர வந்தது போலும், வேள்வி மாநகர் தோற்றம், அம்மா.]

**விளக்கம்:—**வேள்வி மாநகர் தோற்றம், இந்திரபுரிக்கும்... போலும், என்று அன்வயிக்க. இந்திரபுரி- தேவர் உலகத்தின் தலைநகரான அமராவதி; மற்றது, அதை ஒத்த இந்திரப் பிரத்தம். அந்தரம்- பேதம், வேறுபாடு. செந்திரு மடந்தை. இலக்குமி தேவி. சேர-ஒரு சேர,

ராஜசூய வேள்வி செய்தற்கு இடமான பெரிய நகரமாகிய இந்திரப் பிரத்தத்தின் தோற்றம், தேவரும் அதிசயிக்கத்தக்க விதமாய் எல்லாச் செல்வங்களையும் தன்னிடத்தே கொண்டதாய் இருந்தது, என்பதாம். அம்மா, வியப்பிடைச்சொல்.

இந்திரபூரீ, அந்தரம் என்பன வடமொழிச் சொற்கள். நகரின் இவ் வருணனை தற்குறிப்பேற்றத்தின் பாற்படும்.

90. தோரண வீதி தோறுந் தூரிய முழக்கந் தன்னின்
ஆரண முழக்க மிஞ்ச வந்தண ராகி யுள்ளோர்
காரண முணர்ந்தோர் வேள்விக் கனன்முக மாகத் தேவர்
பாரணம் பண்ண விட்ட பைம்பொன்வேதி கையிற் சேர்ந்தார்.

[தோரணம் வீதி தோறும் தூரியம் முழக்கம் தன்னின் ஆரணம் முழக்கம் மிஞ்ச, அந்தணர் ஆகி உள்ளோர், காரணம் உணர்ந்தோர், வேள்வி கனல் முகம் ஆக தேவர் பாரணம் பண்ண இட்ட பைம் பொன் வேதிகையின் சேர்ந்தார்.]

**விளக்கம்:**—காரணம் உணர்ந்தோர் (ஆகிய) அந்தணர் ஆகி உள்ளோர். தோரண வீதி...ஆரண முழக்கம் மிஞ்ச, வேள்விக் கனல் முகமா......சேர்ந்தார், என்பது அன்வயம்.

தூரியம்-மங்கலப் பறை, (தூரியத்தின் முழக்கத்தினும்) ஆரண முழக்கம் மிஞ்ச - (அந்தணர் செய்யும்) வேத பாராயண ஒலி அதிகமாக. (வேதம் முழங்கும் அந்தணர்) காரணம் உணர்ந் தோர்-பிரபஞ்ச முதல் காரணமான மூலப்பொருளை உணர்ந்து கொண்ட பிரும்ம ஞானிகள். முலம், இடப் பொருளது. பாரணம்- உண்டல், பாரணை. பாரணம் பண்ண-(வேள்வியல் தேவர்க்குரிய அவிசை) உண்ண. வேதிகை- மேடை. யாகாக்னியின் முன்னிடத்தே தேவர்கள், அவிசை உண்ணுதற்கு அமைக்கப்பட்ட பொன் வேதிகையில உரிய இடத்தில் அமர்ந் தார்கள். என்பதாம்.

தேவர்களுக்கென அக்கினியில் சொரியப்படும் அவிசை, அக்கினி தேவன் ஏற்றுத் தேவர்களிடம் சேர்த்தல் பற்றித் தேவர்களை, அக்கினியை முகமாக உடையவர்கள் என்று நூல்கள் கூறும்.

91. சுடுமணற் கலுழ னாகச் சுருதியின் படியே கட்டி
நடுவுறத் திசைக ணான்கு நான்குவெள் ளேறு கோட்டி
வடுவறச் சமைத்த சாலை மண்டபந் தன்னை நோக்கின்
கடவுளர்க் கமைத்த யாக தலமெனக் கவினிற் றம்மா.

[சுடு மணல் கலுழன் ஆக, சுருதியின்படியே கட்டி. நடு உற, திசைகள் நான்கும் நான்கு வெள் ஏறு கோட்டி, வடு அற சமைத்த சாலை மண்டபம் தன்னை நோக்கின், கடவுளர்க்கு அமைத்த யாக தலம் என கவினிற்று, அம்மா.]

**விளக்கம் :**—சுடு மணல் - மண்ணைச் சுட்டுச் செய்த செங்கல்; இங்கே, செங்கல்லினால் கட்டப் பெற்ற ஓமகுண்டம்; அதாவது அக்கினி வளர்க்கும் குண்டம். சுருதியின் படியே - வேதவிதியின்படி. கலுழன் - கருடன். சுடு மணல் நடுவுற சுருதியின் படியே கலுழனாகக் கட்டி-ஓமகுண்டத்தை, யாகசாலையின் நடு இடத்திலே செங்கல்லால் கருட வடிவமாகக் கட்டி. திசைகள் நான்கும் - அக் குண்டத்தின் நான்கு பக்கங்களிலும், நான்கு வெள் ஏறு கோட்டி - நான்கு வருஷ பேஷ்ட கைகளை வைத்து. வடு அற - குற்றம் இல்லாமல். சாலை - யாக சாலை. கவின் - அழகு. கவனிற்று - அழகின் விளங்கிற்று.

ஓம குண்டத்தை கருட வடிவில் அமைப்பது முறை. கைகள் போல் வைக்கப்படும் செங்கல் இங்கே ஏறு எனப்பட்டது. அதாவது, ஏறு, என்றால் விருஷபம், விருஷப என்ற சொல்லின தான மந்திரத்தைச் சொல்லிக் கருட வடிவில் நான்கு புறத்திலும் கைகள் போல் வைக்கப்படும் வெள்ளிய கற்களை விருஷ பேஷ்டகம் என்று அழைப்பர். எனவே, வெள்ளேறிகோட்டி என்றார். கோட்டி அழகு; எனவே, அழகுற அமைத்து, என்பது பொருளாகின்றது. பாண்டவர் அமைத்த யாகசாலை, தேவர்களது யாகசாலையை ஒத்திருந்தது என்றது, சிறப்புப் பற்றியதாகும். அம்மா - வியப்பைக் குறிக்கும்.

**கலிவிருத்தம்**

92. திருந்தமெஞ் ஞானமுந் தெளிந்த தெய்வதம்
அருந்தவ முனிவர்பே ரவையின் மேன்மையால்
பெருந்தகை நாபியம் பெருமன் வாழ்வுபோன்(று)
இருந்தது குருபதி யாக சாலையே.

[திருந்த மெய் ஞானமும் தெளிந்த தெய்வதம் அரும் தவம் முனிவர் பேர் அவையின் மேன்மையால், பெருந்தகை நாபி அம் பெருமன் வாழ்வு போன்று இருந்தது குருபதி யாக சாலை, ஏ.]

**விளக்கம் :**—மெய் ஞானமும் திருந்த தெளிந்த - கருமகாண்டம், ஞான காண்டம் என்ற பிரிவினையுடைய வேதத்தினை நன்கு அறிந்ததோடு, திருத்தமுடன், அதாவது குறையறத்

தெளிந்து கொண்ட மெய்ஞான உணர்வோடு கூடிய. தெய்வதம் அரும் தவம் முனிவர்கள் - தெய்வத் தன்மையின் நிமிர்ந்தவர்களும் அரிய தவத்தைச் செய்துள்ளவர்களுமான முனிவர்கள். (அத்தகைய மேன்மையோர் கூடியுள்ள) பேர் அவையின் மேன்மையால் - பெரிய அவையின் மேம்பாட்டினால், (குருபதியின் யாக சாலை பிரும்மனது சத்தியலோகம் போன்றிருந்தது என்பது, பின்னிரண்டடிகளின் பொருள்). பெருந்தகை நாபி அம் பெருமன் வாழ்வு - பெருமையுடைய திருமாலின், நாபிக்கமலத்தினிடத்தே தோன்றி பெருமானாகிய பிரும்மதேவன் வாழும் சத்திய லோகம். குருபதி - தருமராஜன்.

ஞானமும், என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை. அதாவது வேதத்தின் கர்ம காண்டத்தில் கூறப்பட்டுள்ள சடங்குகள் பற்றிய அறிவோடு அல்லாமல், ஞான காண்ட அறிவின் பயனாய தத்துவ ஞானத் தெளிவும் உடைய முனிவர்கள் என்பதாம். முனிவர்கள் பூலோகத்தினராதலால், **தெய்வது முனிவர்** எனப்பட்டனர். சாபாநுக்கிரக சக்தியால், முனிவர்கள் தெய்வத்தன்மையர் ஆகின்றனர்.

93. யாதவ குலத்தினுக் கிறைவ னாகிய
மாதவ னிணையடி வணங்கி மற்றுள
பூதலத் தரசெலாம் பொருந்து பொற்பினால்
ஓதநீர் வண்ணன்வா ழுலகு போன்றதே.

[யாதவ குலத்தினுக்கு இறைவன் ஆகிய மாதவன் இணை அடி வணங்கி. மற்று உள பூ தலத்து அரசு எலாம் பொருந்து பொற்பினால், ஓதம் நீர் வண்ணன் வாழ் உலகு போன்றது. ஏ.]

**விளக்கம் :**—ராஜசூயத்திற்கென அமைத்த யாகசாலையானது ஓத நீர் (கடல்) வண்ணனான திருமால் வாழும் வைகுண்டத்தை ஒத்திருந்தது, என்று கூறும் பொருளது இது. யாதவ குலத்துக்கு இறைவன் - கண்ணன். மற்றுள அரசு - கண்ணன் ஒழிந்த மற்றைய பூலோகத்து அரசர். வைகுண்டத்தில், நித்திய சூரிகள் ஓத நீர் வண்ணனை வணங்கி, அவன் அருகு அமர்ந்திருப்பதுபோல், இங்கே, பூலோக அரசர்கள் எல்லோரும் கண்ணனை வணங்கி அவனயல் பொருந்தியிருந்தனர்; எனவே, யாகசாலை வைகுண்டத்தை போன்றதாயிற்று. பொருந்து பொற்பினால் - ஒன்றுபட்டுச் சேர்ந்திருக்கின்ற செம்மையால். அஃறிணைச் சொல்லான, அரசு உயர்திணைப் பொருளது.

வியாசமுனி பாண்டவர்க்கு உரைத்தல்

94. விதியினு முயர்ந்தசொல் வியாதன் மேதினி
பதிகளா கியதிறற் பாண்டு மைந்தரை
மதியினி லொருபுடை வருகென் றன்பினால்
திதியுறச் சிலமொழி செவியிற் செப்பினான்.

[விதியினும் உயர்ந்த சொல் வியாதன் மேதினி பதிகளாகிய திறல் பாண்டு மைந்தரை, மதியினில் ஒரு புடை வருக என்று, (தனியிடம் அழைத்துச் சென்று) அன்பினால் திதி (ஸ்திதி) யுற சில மொழி செவியில் செப்பினான்.]

**விளக்கம் :**—விதியினும் உயர்ந்த - பிருமம் தேவனினும் உயர்ந்த. சொல் வியாதன் - தவறாத சாபாநுக்கிரக சக்தியை உடைய விசாயன். வேதம் வகை செய்தமைபற்றி, அவனை **'வேதாவும் ஒவ்வா வியாதன்'** என்பர். 'சொல்' என்பதற்குப் **புகழ்** என்றும் பொருள் கொள்ளலாம். அப்பொழுது வேதாவும் ஒவ் வாவியாதன், என்ற புகழ்பெற்ற வியாசர், என்பது பொரு ளாகும். மேதினி பதி- அரசர், (பூமியாகிய பெண்ணிற்கு நாயகர்) மதியினில் ஒரு புடை வருக - மனத் தெளிவோடு ஒரு தனியிடம் வருக. **மதியினில்** என்பது எதுகை பற்றி வந்த சொல்லசையும் ஆகலாம். திதி (ஸ்திதி) உற - செவ்வையாகப் பதியும்படி, (பாண்டவருக்குச் சொன்னான்).

வியாசன், திருமாலின் அம்சாவதாரம்; ஆகவே, **விதியி னும் உயர்ந்த** என்ற அடை ஏற்புடைத்தாகின்றது. 'வருகென்று' என்பது, வருக என்று, என விரியும்.

95. இங்கிதத் திந்திர ரென்பர் யாவரும்
சங்கரன் விதியினாற் றரணி பாலராய்
வெங்கனற் றோன்றிய மின்னை யைவரும்
மங்கலம் புவிமகள் வழக்கி னெய்தினீர்.

[இங்கிதத்து இந்திரன் என்பர் யாவரும் சங்கரன் விதியி னால் தரணி பாலராய், வெம் கனல் தோன்றிய மின்னை, ஐவரும் மங்கலம் புவிமகள் வழக்கின் எய்தினீர்.]

**விளக்கம் :**—(உங்களது முன் பிறப்பை அறியவல்ல ஆற்ற லுடையார்) யாவரும், (உங்களை) இங்கிதத்து இந்திரர் என்பர், என்பது முதலடியின் பொருள். இங்கிதத்து - குறிப்பினால் அறிந்து. சங்கரன் கட்டளையினால் தரணிபாலர் ஆகி, அதாவது

தரணி பாலராய்ப் பிறந்து, என்பது இரண்டாவது அடியின் பொருள். சங்கரன் - சிவபெருமான். தரணிபாலர் - அரசர். வெங்கனல் தோன்றிய மின் - யாகாக்னியில் தோன்றிய மின்னல் போன்ற திரௌபதி. (அவளை ஐவரும்) புவிமகள் வழக்கினில் மங்கலம் எய்தினீர் - பூமியை உடன் பிறந்தாரோடு ஒன்றுபட்டு ஆட்சி புரியும் வழக்கம்போல, மணம் செய்து கொண்டீர்.

பாண்டவர் பூராலராய்ப் பிறந்ததும், அனலில் தோன்றிய மின்னை ஐவரும் மணந்து கொண்டதும், சிவபெருமான் கட்டளையின் நிகழ்ந்தன. என்று வியாசர் கூறும் கருத்தது செய்யுள்.

96. ஓரொரு தலைவரா யோரோ ராண்டுளம்
கூருவகை யினொடுங் கொழுந ராயினீர்
ஆரழற் பிறந்தமா னறத்தின் மைந்தற்குப்
பேரழல் வளர்த்திடும் பெற்றி பெற்றனள்.

[ஓர் ஒரு தலைவராய் ஓர் ஓர் ஆண்டு உளம் கூர் உவகையினொடும் கொழுநர் ஆயினீர், ஆர் அழல் பிறந்த மான் அறத்தின் மைந்தற்கு பேர் அழல் வளர்த்திடும் பெற்றி பெற்றனள்.]

**விளக்கம் :**—கூர் உவகையினொடும் - நிறைந்த மகிழ்ச்சியோடும; அதாவது ஒவ்வோராண்டும் பாண்டவரில் ஒருவருக்கு மனைவியாய் ஒழுகினாளேனும், ஐவரும் அவளை, வேறுபாடின்றி அன்பின் அருமையுடன் முறையே ஏற்று ஒழுகினர். அறத்தின்மைந்தன் தருமன். பேர் அழல் - பெருமையுடைய வேள்வித்தீ. பெற்றி - பெருமை. ஐவருக்கும் மனைவியாயினும், இப்பொழுது அவள் பாண்டவரில் மூத்தோதனான தருமனது யாக பத்தினியாய் அமைந்து யாகத்தை நடத்தும் பெருமை பெற்றவளானாள்.

அழலிற் பிறந்த மான் [திரௌபதி], அழல் வளர்க்கும் பெற்றியளானாள், என்றது நயமுடையது. மான் - கண்ணழகில் மான போன்ற திரௌபதி, (உவமை ஆகுபெயர்).

97. மைந்தர்நீர் நால்வரு மகஞ்செய் வேந்தனே
தந்தையுந் தாயுமித் தரும வல்லியே
இந்தவான் பிறப்பினுக் கிற்றை நாண்முதல்
குந்தியும் பாண்டுவு மென்று கொண்மினே.

[மைந்தர் நீர் நால்வரும் மகம் செய் வேந்தனே தந்தையும், தாயும் இ தருமவல்லியே, இந்த வான் பிறப்பினுக்கு இற்றை

நாள் முதல் [யாகம் முடியும்வரை] குந்தியும் பாண்டுவும் என்று கொள்மின், ஏ.]

**விளக்கம் :**—மிக மிக சுலபமான செய்யுள். மகம் செய்வேந் தன் - தருமன். இந்த வான் பிறப்பிற்கு, இற்றை நாள் முதல் யாகம் முற்றுவரை, நீர் நால்வரும், மைந்தர்; மகம் செய் வேந்தனே தந்தை; இத் தருமவல்லியே தாய் : (அவர்களை) குந்தியும் பாண்டுவும் என்று கொள்மின், என்பது அன்வயம்.

இந்தச் சிறந்த பிறவியில், நீங்கள் நால்வரும் தருமனுக்கும், திரௌபதிக்கும் இன்று முதல் பிள்ளைகள்; அவர்கள் தாயும் தகப்பனும் ஆவர். எனவே, அவளை இனி குந்தியும் பாண்டு வாகவும் கொள்வீராக, என்று வியாசன் கூறினார், என்க.

**ராயசூய வேள்வி**

98. கனல்வரு மின்னையுங் கணவன் றன்னையும்
முனிவரன் மொழிந்திட முகூர்த்த மானபின்
புனைமுடி திருக்குழற் புழுகு நானமும்
இனிமையிற் சாத்தினா ரெண்ணின் மாதரே.

[கனல் வரு மின்னையும் கணவன் தன்னையும் முனிவரன் மொழிந்திட, முகூர்த்தம் ஆன பின், புனை முடி திரு குழல் புழுகும் நானமும் இனிமையின் சாத்தினார் எண் இல் மாதர், ஏ.]

**விளக்கம்:**—கணவன் - தருமன். முகூர்த்தம் ஆனபின். வேள்வி செய்வதற்குரிய நல்ல வேளை ஆரம்பமானவுடன். புழுகு - வேள்வி செய்வதற்குரிய நல்ல வேளை ஆரம்பமான வுடன். புழுகு - மயிர்ச் சாந்து நானம் - வாசனைத் திரவியம். முனிவன் மொழிந்திட, எண்ணில் மாதர்,...புழுகும், நானமும் சாத்தினர், என்று இயைத்துப் பொருள் கொள்க.

'மின்னையும், கணவன் தன்னையும்,' என்பவற்றில் வந்துள்ள இரண்டன் உருபு நான்காம் வேற்றுமைப் பொருளது. மின்னைக் கும், கணவன் தனக்கும், என்று பொருள்படும்.

முகூர்த்த வேளை வந்துவிட்டது என்று வியாசன் கூறவும், மின்னுக்கும், அவள் கணவனான தருமனுக்கும், மயிர்ச்சாந்தை யும், ஸ்தானத்திற்குரிய பரிமள திரவியங்களையும் முறையே எண்ணில் மாதர் பிரியத்தோடு இட்டனர், என்பதாம்.

99. கதியொடு பிறைதவழ் கடுக்கைக் காட்டுநல்
நதிதரு புனல்கொடு நான மாட்டினார்

விதிமுறை யறிந்தவர் வேள்விக் கேற்பன
பதியுட னணிந்தனர் பாவை தன்னையும்.

[கதியொடு பிறை தவழ் கடுக்கை காடு நல் நதி தரு புனல் கொடு நானம் ஆட்டினார், விதிமுறை அறிந்தவர் வேள்விக்கு ஏற்பன பதியுடன் அணிந்தனர் பாவை தன்னையும்.]

**விளக்கம் :**—கதி - அடைக்கலம்; காப்பு. கதியொடு பிறை தவழ் - தனக்குக் காப்பாகப் போய் அடைந்த சந்திரன் தவழும். கடுக்கை - கொன்றை மரம்; அது மலரையும், அம்மலராலான மாலையையும் குறித்தலால், இருமடி ஆகுபெயர். காடு - காடு போல் அடர்ந்த சிவபெருமானது சடைமுடி, (உவமை ஆகு பெயர்). கடுக்கை மாலை தரித்த காட்டு நல் நதி தருபுனல் - சிவபெருமானது கொன்றை மாலை அணிந்த சடையாகியகாட்டி லிருந்து மண் அடைந்த நல்ல நதியான கங்கை தந்த நீர்; அல்லது கங்கையிலிருந்து கொணர்ந்த நீர். நானம் (ஸ்நானம்) ஆட்டி னார் - மங்கள ஸ்நானம் செய்வித்தனர். விதிமுறை அறிந்தவர் - யாக விதிகளை முறையாய் அறிந்தவர். (அவர்கள்) பதியுடன் பாவை தன்னையும் வேள்விக்கு ஏற்பன அணிந்தனர் - தரும னோடு மனைவியையும் வேள்விச் சடங்கிற்கு ஏற்றபடி அணி கலன்களால் அலங்கரித்தனர்.

தன்னிடத்தே நீராடியவரின் பாபம் தீர்த்தலால், கங்கை, **நல்நதி** எனப்பட்டது. பாவை - பதுமை போன்ற திரௌபதி.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

100. மாலைமுன் வணங்கிக் கங்கை மைந்தனை
வணங்கி யாக
சாலையை நோக்கும் வேந்தன் றம்பியை நோக்கி
முன்னீர்
வேலையின் மணலிற் சாலு மிகுசன மருந்தத்
தேவர்
ஆலையத் தமுத மன்ன வடிசினீ யளித்தி
யென்றான்.

[மாலைமுன் வணங்கி, கங்கை மைந்தனை வணங்கி, யாக சாலையை நோக்கும் வேந்தன், தம்பியை நோக்கி, "முன்நீர் வேலையின் மணலின் சாலும் மிகு சனம் அருந்த, தேவர் ஆலயத்து அமுதம் அன்ன அடிசில் நீ அளித்தி," என்றான் ]

**விளக்கம் :**—மால் - கண்ணன். கங்கை மைந்தன் - வீடுமன். நோக்கும், என்பது (யாகசாலையை) நோக்கிச் செல்லும், என்ற பொருளது. வேந்தன் - தருமன். தம்பி - அடுத்த தம்பியாகிய வீமன். முன்நீர் - கடல். மணலின் சாலும் மிகுசனம் - கடல் மணலைக் காட்டிலும் அதிகமான ஜனக்கூட்டம். தேவர்... அடிசில் - தேவரீ திருமாளிகையில் உள்ள அமுதம் போன்ற இனிய உணவு.

யாகத்திற்கு வந்துள்ளார்க்கு அன்னம் அளிக்கும் வேலையைத் தருமன் வீமனுக்கு அளித்தான், என்பதாம். (முன்நீர்) - பழமை யான, அல்லது முதலிலே படைக்கப்பட்ட நீர். கடவுள் படைப் பில் முதல் தோன்றியது நீர், என்று நூல்கள் கூறும்.

101. நாவியின் மதமுஞ் சாந்து நறும்பனி நீருந் தாரும்
வாவியிற் காவி லுள்ள மலர்களும் மற்றும் யாவும்
மேவிய வரிவில் லாண்மை விசயனை நல்கு
கென்றான்
தூவிலை பளித மேனைத் துணைவரை வழங்கச்
சொன்னான்.

[நாவியின் மதமும் சாந்தும் நறும் பனிநீரும் தாரும் வாவி யில் காவில் உள்ள மலர்களும் மற்றும் யாவும், மேவிய வரி வில் ஆண்மை விசயனை நல்குக என்றான், தூஇலை, பளிதம் ஏனை துணைவரை வழங்கச் சொன்னான்.]

**விளக்கம் :**—நாவியின் மதம் - கஸ்தூரிச் சாந்து. சாந்து - சந்தனம். தார் - மாலை. வாவி - குளம். கா - சோலை. மேவிய...விசயன் - பொருந்திய கட்டமைந்த விற்போரில் திறமை யுடைய் அருச்சுனன். தூ இலை... நல்ல வெற்றிலை. பளிதம் - பச்சைக் கற்பூரம். ஏனைத்துணைவர் - நகுல சகாதேவர்.

அருச்சுனனையும், ஏனைத் தம்பியரையும், யாகத்திற்கு வந்திருப்போரை, வெற்றிலை, சந்தனம் புஷ்பம் முதலியன கொடுத்து உபசரிக்குமாறு பணித்தான், என்பதாம்.

102. தானமுந் தியாகந் தானும் தபனன்மா மதலை
யான
மானவன் கொடுக்க வென்றான் வரம்பிலா நிதிகள்
யாவும்

கானலங் கடல்சூழ் வையங் காவலன் கா்வ
லென்றான்
ஏனையோர் பலரும் வேந்த னேவலின் முறை
நின்றாரே.

[தானமும் தியாகம் தானும் தபனன் மா மதலை ஆன மானவன் கொடுக்க என்றான், வரம்பு இலா நிதிகள் யாவும் கானல் அம் கடல் சூழ் வையம் காவலன் காவல் என்றான், ஏனையோர் யாவரும் வேந்தன் ஏவலின் முறை நின்றார். ஏ.]

தானம் - பாத்திரம் அறிந்து கொடுத்தல். தியாகம் - ஒருவரன் முறையின்றிக் கேட்டார்க்கு எல்லாம் அளிப்பது. தபனன் - சூரியன். தபனன் மாமதலை - கர்ணன். மானவன் - பெருமை மிக்கவன். கானல் அம் கடல் சூழ் வையம் காவலன் - உப்பளங்களையும் சோலைகளையும் உடைய அழகிய கடலால் சூழப் பெற்ற பூமியின் அரசனான துரியோதனன். அவனது காவலில் நிதிகள் இருக்கட்டும், என்று தருமன் கூறினான், என்க. ஏனையோர் - உறவு முறையிலுள்ள மற்றவர் பலர். அவர்கள், தருமனின் ஏவலில் நின்று யாகத்திற்குரிய வேலைகளைச் செய்வாராயினர்.

103. தழல்வள ரோம குண்டத் தலத்தினில் வலத்தி
லாதித்
தழல்வரு பாவை வைகத் தருமன்மா மதலை
யாங்கண்
தழல்புரை வேத வாணர் தாளிணை வணங்கித்
தானும்
தழலென விருந்தா னெல்லா வினைகளுந் தகனஞ்
செய்வான்.

[தழல் வளர் ஓமகுண்டம் தலத்தினில் வலத்தில் ஆதி தழல் வரு பாவை வைக, தருமன் மா மதலை ஆங்கண் தழல் புரை வேதவாணர் தாள் இணை வணங்கி, தானும் தழல் என இருந்தான், எல்லா வினைகளும் தகனம் செய்வான்.

**விளக்கம் :—**தழல் வளர் ஓமகுண்டம் - யாகாக்கினி வளர்க்கும் ஓமகுண்டம். தலம் - அதற்குப் பக்கத்தேயுள்ள இடம். ஆதி தழல் வரு பாவை வலத்தில் வைக - முன்பு ஓமத்தீயினின்று தோன்றிய திரெளபதி வலப்புறம் இருக்க. தருமன் மா மதலை -

தருமபுத்திரன். தழல் புரை வேதவாணர் - தீயை ஒத்த, அதாவது பரிசுத்தர்களான வேத வித்தகர்களான முனிவர்கள். (அவரது உபய பாதங்களையும் வணங்கித் தருமன்) தானும், எல்லா வினைகளையும் எரித்து அழித்தற் பொருட்டு, ஓர் அக்கினிபோல், ஆங்கண் வீற்றிருந்தான், என்பதாம்.

இயல்பாகவே பரிசுத்தமான அக்கினி, தன்னைச் சேர்ந்தவற்றையும் பரிசுத்தமாக்கும் தன்மையது. ஒரு பொருளில் தழல் என்ற சொல் பலமுறை வந்துள்ளது சொற்பொருள் பின்வரு நிலைஅணி.

104. கடகரி யுரிவை போர்த்த கண்ணுதற் கடவுள் மாறி
இடம்வல மாகப் பாகத் திறைவியோ டிருந்த
வாபோல்
உடல்கலை யுறுப்புத் தோலி னொளித்திடப்
போர்த்து வேள்விக்
கடனினுக் குரிய வெல்லாங் கவினுறச் சாத்தி
னானே.

[கடகரி உரிவை போர்த்த கண் நுதல் கடவுள் மாறி, இடம் வலம் ஆக பாகத்து இறைவியோடு இருந்த ஆ போல், உடல் கலை உறுப்பு தோலின் ஒளித்திட போர்த்து, வேள்வி கடனினுக்கு உரிய எல்லாம் கவின் உற சாத்தினான், ஏ.]

**விளக்கம் :**—கடகரி உரிவை போர்த்த கண்நுதல் கடவுள் - சிவபெருமான். பாகத்து இறைவியோடு இடம் வலமாக மாறி இருந்த வா போல் - வாம பாகத்திலுள்ள பார்வதியோடு இடம் வலமாக மாறியிருந்த விதம்போல். (தருமன் மனைவியை வலப் புறத்திலே கொண்டு) கலை உறுப்புத் தோலின் உடல் ஒளித்திட போர்த்து - கலைமானின் முழு உறுப்பினதான தோலினால் உடல் மறையும்படி போர்த்துக்கொண்டு, வேள்விக்கு உரிய எல்லாவற்றையும் அழகுற அணிந்துகொண்டான், என்பதாம்.

தருமன் மான்தோல் அணிந்து மனைவியுடன் இருந்தது, யானையின் உரிவை தரித்த சிவபெருமான் உமையை வலப்புறம் இருக்கச் செய்து வீற்றிருந்தது போல் இருந்தது, என்க.

தாருகவனத்து முனிவர் ஏவிய யானையைக் கொன்று, அதன் உரிவையைச் சிவபெருமான் போர்த்திக் கொண்டான், என்பது திருவிளையாடற் புராணம். தேவர்களுக்குத் துன்பம் விளைத்த கஜாசுரன் என்பவனைக் கொன்று, வெற்றியின் அடையாள

மாய், அவ்வசுரனது தோலைச் சிவபிரான் போர்த்துக் கொண்டார், என்ற ஓர் கதையும் உளது. கடம் - யானையின் கன்னம். ஆகுபெயராய் அதனின்று வழியும் மதநீரைக் குறித்து நின்றது. உறுப்புத்தோல் - பின்னப்படாத உரித்தமானின் முழுத்தோல்.

105. பொங்குறு மோமஞ் செந்தீப் புகையினைப்
போர்த்த தென்னப்
பைங்கடற் பருகு மேகம் பரிதியை மறைத்த தென்ன
அங்குறுப் புடனே வெங்கோட் டரிணத்தொக் கருண
மேனி
எங்கணும் புதைப்ப வேள்வித் தொழிலிலே யிதயம்
வைத்தான்.

[பொங்குறும் ஓமன் செம் தீ புகையினை போர்த்தது என்ன, பைங்கடல் பருகும் மேகம் பரிதியை மறைத்தது என்ன, அங்கு, உறுப்புடனே வெம்கோடு அரிணம் தொக்கு அருணம் மேனி எங்கணும் புதைப்ப, வேள்வி தொழிலிலே இதயம் வைத்தான்.]

**விளக்கம் :—** பொங்குறும் - பொங்கி எழும், அதாவது கொழுந்துவிட்டு எரியும் (ஓமத்தீ). பொங்கி எழும் செந்நிறமான ஓமத்தீ புகையைத் (தன்மேல்) போர்த்திக் கொண்டது போன்றும், என்பது முதலடியின் பொருள். பைங்கடல் - கரிய கடல் (கருமை, பசுமை, நீலமாகிய நிறங்களை அபேதமாய்க் கூறல் கவி மரபு). பைங்கடல் நீரைப் பருகும் கருமேகம் சூரியனை மறைத்தது போன்றும், என்பது இரண்டாவது அடியின் பொருள்.

அங்கு - யாகசாலையினிடத்தே. உறுப்புடனே வெம் கோடு அரிணம் - பின்னப்படாத கொடிய கொம்புகளை உடைய மான் தோல். தொக்கு - உடல். மேனி - நிறம். தொக்கு அருணம் மேனி - செந்நிறமான தேகம். எங்கணும் - தேகம் முழுவதையும். புதைப்ப - மறைக்க. மான் தோலைத் தனது செந்நிறமான தேகம் முழுவதையும் மறைக்கும்படி அணிந்து, (தருமன்) வேள்வித் தொழிலில் பொருந்தியிருந்தான், என்பது பின்னிரண்டு அடிகளின் பொருள்.

வேள்விக் கோலத்துடன் வீற்றிருந்த தருமனுக்கு இதன் முன் சிவபிரானை உவமையாக்கிய, கவிவரர், இச் செய்யுளில் அக்கினியையும், சூரியனையும் உவமையாக்குகின்றார்.

106. தருமன்மா மதலை யந்தச் சடங்குசொற் படியே
தொட்டுப்
புரிவுடைத் திசைக ணான்கும் புற்களாற் காவல்
செய்து
விரிசுடர்த் தீகண் மூன்றும் விண்ணவர் முகங்க
ளாகச்
சுருவையான் முகந்த நெய்யைச் சுருதியா லோமஞ்
செய்தான்.

[தருமன் மா மதலை அந்த சடங்கு சொல்படியே தொட்டு, புரிவு உடை திசைகள் நான்கும் புல்களால் காவல் செய்து, விரி சுடர் தீ கள் மூன்றும் விண்ணவர் முகங்களாக, சுருவையால் முகந்த நெய்யை சுருதியால் ஓமம் செய்தான்.]

**விளக்கம்:**—சடங்கு - யாக காரியம். சொல்படி தொட்டு - சாத்திர விதியின்படி ஆரம்பித்து. புரிவு உடை திசைகள் - தொடர்புடைய திசைகள். புற்களால் காவல் செய்து - தருப்பைப் புல்களால் காவல் செய்து; அதாவது, ஓமகுண்டத்தின் நால்புறமும் தருப்பையைப் பாதுகாப்பாக இட்டு, விரி சுடர் தீ கள் மூன்றும் - விரிந்த தீச் சுவாலைவய உடைய மூன்று வகை அக்கினிகளும். விண்ணவர் முகங்களாக - தேவர்களின் முகமாகக் கொண்டு. சுருவை - தீயில் நெய் விடுவதற்கான கரண்டி போன்ற மரக் கருவி. சுருதியால் ஓமஞ் செய்தான் - வேத மந்திரங்களோடு (தருமன்) ஓமம்செய்தான்.

யாகப் பயனை அசுரர்கள் கவர்ந்து கொள்ளாது காப்பதற்கு ஓமகுண்டத்தின் நாற்புத்திலும் காப்பு இடுதலைக் குறிக்க, புற்களால் காவல் செய்து என்றார். அக்கினியில் சேர்க்கப்படும் பொருள்களைத் தேவர்கள் ஏற்றுத் திருப்தி அடைதலால், அக்கினியை முகமாக உடையவர்கள் அவர்கள். என்று வேதம் கூறும், முத்தீ: காருக பத்தியம், ஆகவநீயம், தட்சிணாக்னி, என்பன.

107. முழுதுணர் வரம்பில் கேள்வி முனிவரர் குழாமு
மென்றும்
அழிவிலா மலரோ னாதி யமரர்தங் குழாமுஞ் சூழ
எழுசுடர் முத்தீப் பொங்க வெழுபக லோமஞ்
செய்தான்
பழுதறு பாண்டு செம்த மாதவம் பலித்த தொப்பான்

[முழுது உணர் வரம்பு இல் வேள்வி முனிவர் குழாமும், என்றும் அழிவு இலா மலரோன் ஆதி அமரர் தம் குழாமும் சூழ, எழு சுடர் முத்தீ பொங்க எழுபகல் ஓமம் செய்தான், பழுது அறு பாண்டு செய்த மா தவம் பலித்தது ஒப்பான்.]

**விளக்கம்:**—குற்றமற்ற பாண்டு மகாராஜன் செய்த சிறந்த தவம் பலித்ததை ஒத்தவனான தருமன், என்பது ஈற்றடியின் பொருள். அத்தகையனான தருமன் முனிவர்களும் தேவர்களும் அயலிருக்க ஏழுநாள் மூன்று வகை அக்கினியும் மகிழ ஓமம் செய்தான், என்பதாம். முழுதுணர் குழாம் - உணர வேண்டிய வற்றை எல்லாம் நன்றாக உணர்ந்தவர்களும், எல்லையில்லாத கேள்விச் செல்வம் உடையவர்களுமான முனிவர் கூட்டம். எழுசுடர் முத்தீ பொங்க - எழுந்து எரியும் ஜ்வாலைகளை உடைய மூவகை அக்கினிகளும் மகிழ்ந்து திருப்தி அடைய. எழுசுடர்: வினைத்தொகை. அதைப் பண்புத் தொகையாகக் கொண்டால், ஏழு ஜ்வாலைகளை உடைய தீ, என்பது பொருளாகும்.

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

108. இம்முறை யிராய சூயமா மகத்துக்
கெழுத தொணா நான்மறை யுரைத்த
அம்முறை யிமையோ ரானவர்க் கெல்லா
வரும்பெற லவியுண வருளி
மும்முறை வலம்வந் திருவருஞ் சுவாகை
முதல்வனை முடியுற வணங்கித்
தெம்முறை யரச ரிடுதிறை யனைத்துந்
தானமுந் தியாகமுஞ் செய்தான்.

[இ முறை இராய சூய மாமகத்துக்கு எழுது ஒணா நால்மறை உரைத்த அ முறை இமையோர் ஆனவர்க்கு எல்லாம் அரும்பெறல் அவி உணவு அருளி மும்முறை வலம் வந்து இருவரும் சுவாகை முதல்வனை முடி உற வணங்கி தெவ்முறை அரசர் இடுதிறை அனைத்தும் தானமும் தியாகமும் செய்தான்.]

**விளக்கம்:**—எழுதொணா நால்மறை -எழுதாக் கிளவியாகிய நான்கு வகைப்பட்ட வேதம். சுவாகை முதல்வன் - சுவாகாதேவி யின் கணவனான அக்கினிதேவன் தெவ்முறை அரசர் இடுதிறை - பகைமுறையில் இருந்து தம்பியரால் வெல்லப்பெற்ற அரசர்கள்

கொடுத்த திறைப்பொருள். இவ்வகையாக இராயசூயம் என்னும் சிறந்தயாகத்தை வேத விதிப்படி (தருமன்) தேவர்களுக்கு எல்லாம் பெறுவதற்கு அரிய அவிசாகிய உணவை அளித்துத் தானும் மனைவியு மாகிய இருவரும் அக்கினிதேவனை மூன்று முறை வலம் வந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து. தெவ்முறை அரசர் இடுதிறைப் பொருள்கள் எல்லாவற்றையும் தானமாகவும் தியாகமாசவும் அந்தணர்க்கும் மற்றவர்க்கும் அளித்தான்.— என்பது பொருள். இராயசூயமாமகம், என்பதை, இராயசூயம் ஆம் - மகம், என்றும் பிரித்துக் கொள்ளலாம்.

109. ஏழுநா ளிவ்வா றிமையவ ரெவர்க்கு
மிமகிரி தனிலயன் வேட்ட
ஊழிமா மகம்போ லியற்றியெண் திசையி
னுயர்புனல் யாவையுஞ் சொரிய
ஆழிவாய் முகிலு மின்னுமே யென்ன
வரும்புன லாடிய பின்னர்
வாழிபா டினர்க ணாரதன் முதலோர்
மங்கலம் பாடினர் புலவோர்!

[ஏழு நாள் இ ஆறு இமையவர் எவர்க்கும் இமகிரி தனில் அயன் வேட்ட ஊழி மா மகம்போல் இயற்றி, எண் திசையினும் உயர்புனல் யாவையும் சொரிய, ஆழிவாய் முகிலும் மின்னும் என்ன அரும் புனல் ஆடிய பின்னர், வாழி பாடினர்கள் நாரதன் முதலோர், மங்கலம் பாடினர் புலவோர்.]

**விளக்கம்:**—இமகிரி தன்னில்...மகம்போல், ஏழு நாள் இவ்வாறு இமையவர் எவர்க்கும்இயற்றி, எண் திசை...அரும் புனல் ஆடிய பின்னர், நாரதன் முதலோர் வாழி பாடினர். புலவோர் மங்கலம் பாடினர்,—என்பது அன்வயம்.

பூர்வ த்தில் திருமாலின் அருளைப் பெறப் பிரும்மதேவன், இமயமலையில் செய்த அச்வமேத யாகத்தை, ஒத்திருந்தது, தருமன் தேவர்களின் திருப்திக்கென்று ஏழுநாள் செய்த ராஜ சூயம், என்ற படி. யாகம் முற்றியபின், எட்டுத் திசைகளி னின்றும் கொண்டு வரப் பெற்ற புண்ணிய தீர்த்தங்களைப் பெரியோர் சொரியத் தருமனும், திரௌபதியும் நீராடியது. கடலிடத்தே மேகம் மின்னலும் படிந்ததை ஒத்திருந்தது, என்றபடி. புண்ணிய தீர்த்தங்களின் மிகுதிக்கு ஆழி (கடல்), மேகமும், மின்னும் முறையே தருமனும், திரௌபதியும் ஆவர்.

வாழ்க, என்று வாழ்த்தலை, வாழிபாடல் என்பர். வேள்வி முடிவில் யாகத்தலைவனும், அவனது பத்தினியும் மங்களஸ்நானம் செய்தனர். அவர்களை நாரதமுனிவர் ஆசீர்வதித்தார்: புலவர்கள் மங்கள கீதம் பாடினர் என்பதாம்.

அக்ர பூசை

110. பெயர்பெறு முனிவ ரெவர்க்குமெண் ணிரண்டாம்
பேருப சாரமும் வழங்கி
உயர்வற வுயர்ந்த வேள்வியி னுயர்ந்தோ
னுயர்குலப் பாவையுந் தானும்
மயர்வறு ஞான வடிவமாய் நின்ற
மாயனை மனனுற வணங்கி
அயர்வறு கங்கை மகன்பதம் பணிவுற்
றறன்மகன் வினவின னம்மா.

[பெயர் பெறு முனிவர் எவர்க்கும் எண் இரண்டு ஆம் பேர் உபசாரமும் வழங்கி, உயர்வு அற உயர்ந்த வேள்வியின் உயர்ந்தோன், உயர் குலப் பாவையும் தானும் மயர்வு அறு ஞானம் வடிவமாய் நின்ற மாயனை மனன் உற வணங்கி, அயர்வு அறு கங்கை மகன் பதம் பணிவு உற்று, அறன் மகன் வினவினன், அம்மா.]

**விளக்கம் :—** பெயர் பெறு முனிவர் - தவ சிரேஷ்டர்களான முனிவர். எண் (எட்டு) இரண்டு பேர் உபசாரம் - சோடசோபசாரம்; அதாவது பதினாறு வகையான உபசாரம். உயர்வற உயர்ந்த வேள்வியின் உயர்ந்தோன் (ஆன) அறன் மகன், மயர்வறு ...கங்கை மகன் பதம் பணிவுறறு வினவினன், என்று அன்வயிக்க. அம்மா; அசை.

உயர்வு அற உயர்ந்த வேள்வி - மிகமிக உயர்ந்த வேள்வி. அந்த வேள்வியைச் செய்து முடித்தலின், அறன் மகன் (தருமன்) உயர்ந்தோன் ஆகின்றான். (அவன் உயர் குலப் பாவையான திரௌபதியும் தானுமாக) மயர்வு அறு ஞான வடிவமாய் நின்ற மாயனை மனன் உறவணங்கி - மயக்கம் நீங்கிய மெய்ஞ்ஞான சொரூபமாய் நின்ற கண்ணனை மனத்திலே பதியக் கொண்டு வணங்கி. (அதன்பின் அவர்) அயர்வு அறு கங்கை மகன் பதம் பணிவுற்று- எந்த நிலையிலும் சோர்வு இல்லாத செம்மையினனான வீடுமனின் அடிபணிந்து (ஒன்று கேட்கலானான்.)

ராயசூயம் செய்து முடித்தவரை ஸம்ராட் என்று அழைப்பர். இப் பட்டம் பெற்றவர் அரசர்களில் உயர்ந்தவராவர். எந்த அரிய நிலையிலும் நிதானம் தவறாத நீர்மையுடையன் ஆதல் பற்றி அயர்வறு, என்ற அடை வீடுமனுக்குக் கொடுக்கப்பட்டது.

111. பரிதியு மதியும் வன்னியு முதலாம்
பல்வகைக் குலத்துமுற் பவித்த
சுரபதி குழாத்தில் யாவரே பெறுவார்
நவிலுமுற் பூசைமற் றென்னக்
கருதிய வசுக்க ளெண்மரி லொருவன்
கங்கையின் றிருமகன் றெய்வச்
சுருதிமா மகஞ்செய் புனிதனை நோக்கித்
தொன்முனி வரையு நோக்கி.

[பரிதியும் மதியும் வன்னியும் முதல் ஆம் பல்வகை குலத்தும் உற்பவித்த சுரபதி குழாத்தில் யாவரே பெறுவர் நவிலும் முன் பூசை மற்று என்ன, கருதிய வசுக்கள் எண்மரில் ஒருவன், கங்கையின் திருமகன். தெய்வம் சுருதி மா மகம் செய் புனிதனை நோக்கி, தொல் முனிவரையும் நோக்கி,—இதுவும் அடுத்து வரும் செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :**—சூரியனும் சந்திரனும், அக்கினியும் முதலாகிய குலத்தில் உதித்த,—என்பது முதலடியின் பொருள், சுரபதி - அரசர்.(வந்து கூடிய சுரபதிகள் குழாத்தில்) நவிலும் முன்பூசை பெறுவார் யாவரே - நூல்கள் சிறப்பித்துக் கூறும் அக்கிர புஜையை (முதல் மரியாதையை) பெறுவதற்குரியர் யாவர்? என்ன - என்று தருமன் வீடுமனைக் கேட்க, கருதிய...திருமகன் - நன்கு மதிக்கப்படும் அஷ்டவசுக்களில் ஒருவனும், கங்கையின் சிறந்த புதல்வனுமான வீடுமன். (அவன்), வேத விதிப்படி மா மகம் (வேள்வி) செய்வித்த புனிதனான வியாச முனிவனை நோக்கியும், மற்று, அங்கே கூடியிருந்த முனி புங்கவர்களை நோக்கியும்,—அடுத்த கவியோடு தொடரும்.

இரண்டாவது அடியிலுள்ள மற்று அசை, கருதிய (வசுக்கள்)- என்பதற்கு வசிஷ்டரது காமதேனுவைக் கவர்ந்து செல்லக் கருதிய,—என்றும் பொருள் கொள்ளலாம். செய் புனிதன், என்பதிலுள்ள, செய், என்பது செய்வித்த என்ற பிறவினைப் பொருளது. அக்ரபூசை யாருக்குச் செய்வது என்று தருமன்

வீடுமனைக் கேட்க, வீடுமன், வியாசரையும், மற்றுள முனிவர் களையும் கேட்டான், என்பதாம்.

112. ஆர்கொலோ வக்ர பூசனைக் குரியா
ரரசரி லந்தணீ ருரைமின்
பாரெலாந் தத்தங் குடைநிழற் புரக்கும்
பார்த்திபர் யாரையு முணர்வீர்
தார்ுலா மார்பீ ரென்றலும் வியாதன்
றருமன்மா மதலையை நோக்கிக்
காரின்மா மேனிக் கரியசெந் திகிரிக்
கண்ணனுக் குதவெனக் கதித்தான்.

[ஆர் கொல் அக்ர பூசனைக்கு உரியார் அரசரில் அந்தணீர் உரை மின், பார் எலாம் தம் தம் குடைநிழல் புரக்கும் பார்த்திபர் யாரையும் உணர்வீர், தார் உலாம் மார்பீர்என்றலும். வியாதன், தருமன் மா மதலையை நோக்கி, காரின் மா மேனி கரியசெம் திகிரி கண்ணனுக்கு உதவ, என கதித்தான்.]

**விளக்கம்:** தார் உலாம் மார்பீர், அந்தணீர் - தாமரை மணி மாலை உலாவும் மார்பினை உடையவர்களான முனிவர் களே (என்று வீடுமன் அழைத்து) "பார் எலாம்...உணர்வீர், ஆர் கொலாம் அரசரில் அக்ர பூசைக்கு உரியர்?" என்றலும், வியாதன், தருமன் மாமதலையை நோக்கி, காரின் கரிய மாமேனி செந்திகிரி கண்ணனுக்கு உதவு என கதித்தான்,—என்று அன்வயிக்க.

கதித்தல் - சிறத்தல், ஒலித்தல்: இங்கே சொன்னான், என்ற பொருளதாகின்றது. தாமரை மணிகளால் ஆன மாலை அந்தணர்க்கு உரியது.

சிசுபாலன் எதிர்ப்பு

113. என்றபோ தந்த வேந்தவை யிருந்தோர்
யாவரு மிருந்துழி யிருந்து
நன்றுநான் மறையோர் சிகாமணி யுரைத்த
நவிராறு நல்லுரை யென்றார்
சென்றபோர் தொறும் வென்றியே புனையுஞ்
சேதியம் பதிசிசு பாலன்
கன்றினா னிதயங் கருகினான் வதனங்
கனலெனச் சிவந்தனன் கண்ணும்.

[என்றபோது அந்த வேந்து அவை இருந்தோர் யாவரும் இருந்துழி இருந்து, நன்று நான் மறையோர் சிகாமணி உரைத்த நவிர் அறு நல் உரை என்றார்; சென்ற போர் தொறும் வென்றியே புனையும் சேதி அம் பதி சிசுபாலன் இதயம் கன்றினான், கருகினான் வதனம், கனல் என சிவந்தனன் கண்ணும்.]

**விளக்கம்:** இருந்துழி இருந்து, இருந்தவிடத்தே இருந்து. நான்மறையோர் சிகாமணி - மறை வல்லோர் அனைவரும் தலைமேற்கொள்ளும் ரத்தினம்போல் மிகச் சிறந்த வியாச முனிவன். நவிர் அறு - குற்றமற்ற. சேதிநாட்டு அரசன், சிசுபாலன். அவன், (அக்ரபூசை கண்ணனுக்கு, என்று கூறியதை விரும்பாமல்) இதயம் கன்றினான் - மனம் வெதும்பினான்; வதனம் கருகினான் - முகம் கறுத்தான், கண்ணும் கனல் என சிவந்தனன் - கண்களும் தீயைப்போல் சிவக்கலுற்றான்.

வசுதேவனுக்கு உடன் பிறந்தவளான சுருதசரவை என்பாள் மகன் சிசுபாலன். கண்ணனுக்கு அவன் அத்தை மகனாகிறான். இவன், நான்கு கைகளோடும் மூன்று கண்களோடும் பிறந்தான். இவனை பெற்றோர், "இவ்விபரீதப்பிறவியை வைத்துக்கொண்டு என்ன செய்வது?" என்று கலங்கியபொழுது, "இக்குழந்தையை யார் தூக்கி மடியில் வைத்துக் கொள்கையில் நெற்றிக் கண்ணும் இரண்டு கைகளும் மறைகின்றனவோ, அவனால், இதற்கு மரணம் உண்டாகும்," என்ற அசரீரி வாக்கு ஏற்பட்டது. கண்ணன் வந்து இக் குழந்தையை எடுத்தவுடனே, 'கண்ணும் கைகளும் மறைந்தன. தனது சகோதரன் மகனால் தன் மகனுக்கு மரணம் என்பது அறிந்த தாய், "எப்பிழை இழைப்பினும் நீ இவனைக் கொல்லலாகாது!" என்று கண்ணனைப் பிரார்த்தித்தாள். "இவன் செய்யும் நூறு பிழைகளைப் பொறுப்பேன்." என்று கண்ணன் கூறினான், என்பது கதை.

"சென்ற போர் தொறும், வென்றியே புனையும் சேதியம்பதி சிசுபாலன்," என்றது அவனது பேராற்றலைக் குறிப்பதோடு, இனிக் கண்ணனால் அழியப் போவதையும் குறிப்பதாகும். இதயம் கன்றினான், வதனம் கருகினான், கண்சிவந்தான் என்று அஃறிணைச் சினை, உயர் திணைமுதலின் வினையைக் கொண்டு முடிந்தது திணைவழு.

கலித்துறை

114. பூபால ரவையத்து முற்பூசை பொறுவார்பு
றங்கானில் வாழ்
கோபால ரேரவென் றுருத்தங்க திர்த்துக்
கொதித் தோதினான்
கபாலி முனியாத வெங்காம னிகாரன கவினெய்
தியேழ்
தீபால டங்காத புகழ்வீர கயமன்ன சிசுபாலனே.

[பூபாலர் அவையத்து முன் பூசை பெறுவார் புறம் கானில் வாழ் கோபாலரோ, என்று உருத்து அங்கு அதிர்த்து கொதித்து ஓதினான், காபாலி முனியாத வெம் காமன் நிகரான கவின் எய்தி, ஏழ் தீபால் அடங்காத புகழ் வீர கயம் அன்ன சிசுபாலன்.]

**விளக்கம்:**—பின் இரண்டடிகளை முன்னே வைத்துப் படிக்க. சிவபெருமானால் முனிந்து எரிக்கப்படாத, விரும்பப்படுகின்ற மன்மதனுக்கு நிகரான அழகினை எய்தி, ஏழு தீவுகளைத் தன்னிடத்தே கொண்ட பூமண்டலம் அன்றி, வேறான தேவர் உலகங்களிலும் பரவிநிற்கும் புகழை உடையவனான, வீரத்தின் சிறந்த யானையை ஒத்த சிசுபாலன், அரசர் கூடியுள்ள அவையில் அக்ரபூசை (முதல் மரியாதை) பெறும் தகுதியுடையவர், நகரத்திற்குப் புறம்பான காட்டில் வசிக்கும், பசு மேய்க்கும் இடையரோ, என்று. முனிந்தும், அதிர்ச்சி யுண்டாமாறு கூச்சலிட்டும், மனம் கொதித்தும் கூறினான்,—என்பது பொருள்.

பூபாலர் - அரசர். கோபாலர் - மாடு மேய்க்கும் இடையர். உருத்து - சினந்து அதிர்ந்து - சப்தமிட்டு. காபாலி - சிவபெருமான். கவின் - அழகு. வீரகயம் - வடமொழித்தொடர்.

கண்ணன் சந்திரகுலம் வந்தவனாயினும் ஆயர்பாடியில் எசோதை மகனாய் வளர்ந்ததுபற்றிக் **கோபாலன்** என்று இகழப் பட்டான். கோபாலன்-பசுக்களை மேய்க்கும் இடையன். கபாலி, என்ற வடமொழிச் சொல்லின் விகாரம் காபாலி.

மதங்கொண்ட யானை தன்னைப் புரக்கும் பாகனையே பகைப்பது போல், தனது விகாரமான அவையங்களைப் போக்கி யருளிய கண்ணனைச் சிசுபாலன் பகைத்தல் பற்றி **''வீரகயம் அன்னான்,''** என்று அழைக்கப்பட்டான், என்க.

115. சூரன்குலத்தோர்கு பேரன்குலத்தோர்சு
டர்ப்பாவகப்
பேரன்குலத்தோரிருந்தீர்கண் முடிமன்னர் பெயர்
பெற்றபேர்

வீரங்கொ லோவாகு சாரங்கொ லோசெல்வ மிச்சங்
கோலோ
பூரம்பு ராசிப்பு விக்கென்று முதுவோர்கள் பொதுவர்
கொலோ.

[சூரன் குலத்தோர், குபேரன். குலத்தோர்சுடர் பாவகன் பேரன்குலத்தோர் இருந்தீர்கள் முடிமன்னர் பெயர் பெற்ற பேர், வீரம் கொலோ, வாகு சாரம் கொலோ, செல்வம் மிச்சம் கொலோ பூர் அம்பு ராசி புவிக்கு. என்றும் முதுவோர்கள் பொதுவர் கொலோ]

**விளக்கம்:** சூரன் -சூரியன். குபேரன்- சந்திரன் (குபேரனுக்கு மதியென்ற ஓர் பெயர் உளது) சுடர் பாவகப் பேரன் - சுடரை யுடைய **பாவகன்** என்றவொரு பெயருடைய அக்கினி. பெயர் பெற்ற பேர் - புகழ் பெற்ற அரசர்கள். மேலே கூறிய முச்சுடர் களின் வம்சத்தினரான முடிமன்னராகிய பெயர் பெற்ற பேர் இருந்தீர்கள்,—என்பது முதலிரண்டிகளின் பொருள்.

(அவ்வாராக, இப்பொழுது இடையனை அக்ர பூசைக்கு உரியவன் என்றது) வீரம் கொலோ வீரத்தை எண்ணியோ? வாகு சாரம் கொலோ - வலியின் மிகுதி பற்றியோ? செல்வம் மிச்சம் கொலோ - செல்வ மிகுதி பற்றியோ? (மேலும்) பூர் அம்பு ராசி புவிக்கு என்றும் முதுவோர்கள் பொதுவோர் கொலோ - பூர்ணமான நீரின்தொகுதியையுடைய கடல் சூழ்ந்த புவியில் எக்காலத்தும் பெரியவர்கள் இடையர் தாமோ? (என்று கேட்டான் சிசுபாலன்) **பூர்ணம்** என்ற வடசொல், **பூர்** என்று நின்று நீரின் நிறைவைக குறித்தது. அம்புராசி (அப்புராசி) ஜலத்தின் தொகுதி: எனவே கடல்.

**முடிமன்னர்** என்றது, கண்ணன் முடி சூடும் உரிமை இல்லாத வன், என்பதைக் குறிப்பதாகும். யயாதியின் மக்களில் பூரு என்பவன் ஒழிந்த யது முதலியவர்கள் தந்தையின் சாபத்தால் முடி சூடும் உரிமை இழந்தவராயினர். அவர்களில் ஒருவனான யது என்பவன் குலத்தில் வந்தவன் கண்ணன். வாகுசாரம் - தோள்வலி. மிச்சம் - மிகுதி. பொதுவர் - இடையர், பொதுவர் என்பது **பொதுவோர்,** என நின்றது. முதுமை என்ற பண்பினடி யாய் பிறந்த முதுவர், என்பது **முதுவோர்** என நின்றது. செல்வ மிச்சங்கொலோ; என்றது, செல்வத்தாலும் இடையனான கண்ணன் சிறந்தவன் அல்லனே, என்று குறிக்கும் பொருளது.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

116. பராசர முனிவன் மதலையாம் படியே
பகர்ந்தனை பழுதிலா மாற்றம்
இராசமண் டலத்தின் மரபினால் வலியா
லேற்றமுந் தோற்றமு முடையோன்
சுராசுரர் வியக்குங் கஞ்சனை மலைவான்
சூரன்மா மகன்வயிற் றுதித்தான்
தராதல மிசையே பிறந்திவன் கற்ற
தெத்தனை யிந்திர சாலம்.

[பராசர முனிவன், மதலை ஆம் படியே பகர்ந்தனை, பழுது இலா மாற்றம்; இராச மண்டலத்தில் மரபினால் வலியால் ஏற்றமும் உடையோன், சுர அசுரர் வியக்கும் கஞ்சனை மலைவான், சூரன் மா மகன் வயிறு உதித்தான், தராதலமிசையே பிறந்து இவன் கற்றது எத்தனை இந்திரசாலம்.]

**விளக்கம் :—**(வியாசரைப் பார்த்துக் 'கண்ணனுக்கு அக்ர பூசை' என்று சொன்ன) பழுதிலா வார்த்தையைப் பராசர முனிவனுக்கு மகன் ஆனதற்கு ஏற்றபடியே (நீ) கூறினாய்,—என்பது முதலடியின் பொருள். இராஜ மண்டல் - அரசர் கூட்டம். மரபு - குலம். ஏற்றம் - மேன்மை. தோற்றம் - பிரகாசம், அல்லது புகழ். சுராசுரர் - (சுர அசரர்) தேவரும் அசுரரும். கஞ்சன் - கம்சன். மலைவான் - கொல்லுதற்கு. சூரன் மா மகன் - சூரன் என்பவனது சிறந்த முதல் மகனான வசுதேவன். தராதலம் - பூமி. கற்றது எத்தனை இந்திரசாலம் - கற்றுச் செய்தது எத்தனையோ மாய விந்தை.

படகு செலுத்தி வயிறு பிழைக்கும் செம்படவச்சியிடத்தே பராசர முனிவனுக்கு மகனாய்ப் பிறந்ததற்கு ஏற்றபடியே, இப் பெரிய அரச சபையில், 'அக்ர பூசைக்கு உரியவன் இந்த இடையன்' என்று கூறினாய், என்று சிசுபாலன் வியாசமுனிவனை, நிந்திக்கும் கருத்தது முதலடி. 'பழுதிலா மாற்றம்,' என்பதை பழுதில் - ஆம் - மாற்றம், என்று கொண்டு, 'குற்றமுடையதாகும் வார்த்தை' என்றும் பொருள் கொள்ளலாம். இவன் பூமியில் பிறந்தது முதல் பெரிய மாயைகளைச் செய்தவன், என்று கண்ணனை இகழும் கருத்தது ஈற்றடி.

117. சொற்றவா நன்று சுகன்திருத் தாதை
சூதிகை தோன்றிய பொழுதே

பெற்றதாய் தானும் பிதாமுன் வணங்கப்
பேசலா வுரையெலாம் பேசி
கற்றமா யையினாற் கன்னியங் கிருப்பக்
காரிருட் காளிந்தி நீந்தி
அற்றைநா ளண்ட ரானவர்க் கெல்லா
மரசனுக் கருமக வானான்.

[சொற்ற ஆ நன்று, சுகன் திரு தாதை; சூதிகை தோன்றிய பொழுதே பெற்ற தாய் தானும் பிதாவும் முன் வணங்க, பேசலா உரை எலாம் பேசி, கற்ற மாயையினால் கன்னி அங்கு இருப்ப, கார் இருள் காளிந்தி நீந்தி, அற்றை நாள் அண்டர் (இடையர்) ஆனவர்க்கு எலாம் அரசனுக்கு அரு மகவு ஆனான்.]

**விளக்கம்** :—சுகன் தந்தையே, நீ சொன்ன விதம் மிக நன்று, என்றது இகழ்ச்சிக் குறிப்பினது. சூதிகை - பிரசவமனை. கண்ணன் நான்கு திருக் கைகளுடனும், சங்கு சக்கரங்களுடனும் இருக்கத் தாயும் தந்தையும் வணங்கினர். இதை ஆதாரமாகக் கொண்டு, தான் வணங்க வேண்டிய தாயும் தந்தையும் தன்னை வணங்கச் செய்து பிறந்தமையால் ஒழுக்கம் பிறழ்ந்த ஈனன், என்று குறிக்கும் கருத்தில், 'சூதிகை தோன்றிய பொழுதே தாய் தானும் பிதாவும் வணங்க," என்றான். "பேசலா உரை பேசி," என்றது "குழந்தைப் பருவத்தோடு பொருந்தாத வார்த்தை; அதாவது' தன்னை ஆயர்பாடியில் கொண்டுபோய்ச் சேர்ந்து, அங்கே பிறந்துள்ள பெண் குழந்தையை எடுத்து வந்து கம்சனிடம் கொடுக்கச் சொல்லிய வஞ்சனையுடைய வார்த்தை," என்று கூறும் குறிப்பினது.

கற்றமாயை: தன்னை ஆய்ப்பாடி சேர்த்தலும், அங்கே பிறந்த பெண் குழந்தையை எடுத்து வருதலும் ஆகிய காரியம் நடைபெறக் காவல் கூடத்தாரையும், எசோதை மனையுளோரையும் தூங்கச் செய்ததும், யமுனையின் நீர்வற்றச் செய்தும் கல்லாது பிறவியோடு கொண்டுவந்த மாயை ஆகும். கார் இருள்-மிகக் கரியதாய் இருண்ட பொழுது. காளிந்தி-யமுனை. அண்டர்-இடையர். அவர்க்கு அரசன் நந்த கோபன். 'அவனுக்கு அரு மகவு ஆனான்." என்று ஒரு குலத்திலே பிறந்து, வேறோர் தாழ்ந்த குலத்துக்கு மகனாய் வளர்ந்த குலங்கெட்டவன், என்று இகழும் குறிப்பினது.

சுகன் தாதை, என்று வியாச முனிவனைக் குறித்தது, "பற்றற்ற துறவி அல்லன்," என்று இகழும் குறிப்பினது. சுகன்

பிறந்த பொழுதே பற்றற்றவனாய்ப் பெற்ற தந்தையைப் பிரிந்து சென்ற மேன்மகன். அத்தகையானின் தந்தையா யிருந்தும், பௌத்திரர்களாகிய பண்டவர்பால் பற்றுக் கொண்டு, அவர் களுக்கு அனுகூலனான கண்ணனைப் போற்றுகின்றாய்,'' என்று முனிவனை நிந்திக்கும் கருத்தது.

118. ஈன்றதாய் வடிவங் கொண்டுள முருகி
யிணைமுலைத் தடத்தணைத் தமுதம்
போன்றபால் கொடுப்பப் பொழிமுலைப் பாலோ
பூதனை யுயிர்கொலோ கவர்ந்தான்
சான்றபே ருரலா லுறிதொறு மெட்டாத்
தயிருட னறுநெய்பா லருந்தி
ஆன்றதாய் கண்டு வடத்தினிற் பிணிப்ப
யணியுர லுடனிருந் தழுதான்.

[ஈன்ற தாய் வடிவம் கொண்டு உளம் உருகி இணை முலை தடத்து அணைத்து அமுதம் போன்ற பால் கொடுப்ப, பொழி முலை பாலோ, பூதனை உயிர் கொலோ கவர்ந்தான்? சான்ற பேர் உரலால் உறி தொறும் எட்டா தயிருடன் நறு நெய் பால் அருந்தி, ஆன்ற தாய் கண்டு வடத்தினில் பிணிப்ப அணி உர லுடன் இருந்து அழுதான்.]

**விளக்கம் :**—பூதனை, ஈன்ற தாய் வடிவம்...கவர்ந்தான், என்ற அடிகள் பூதனை தாய் வடிவங் கொண்டு பால் கொடுக்க, அப்பாலோடு அவள் உயிரையுங் கவர்ந்துவிட்டான், என்ற பொருளது. சான்ற பேர் உரல் - மிகப் பெரிய உரல். அவன் அதன் உதவி கொண்டு, எட்டாத உடுகள் தோறும் (வைக்கப் பெற்ற) தயிர் நெய் பால் ஆகியவற்றை களவில் அருந்தி, அதை ஆன்ற (அன்பின் சிறந்த) தாயாகிய யசோதை கண்டு கயிற்றி னால் உரலோடு கட்டிவைக்க, (அந்த) அணி (அழகிய) உரலுடன் செயலற்றவனாய் இருந்து அழுதான், என்பது ஈற்றடிகளின் பொருள்.

இது மிகச் சுலபமான செய்யுள். கண்ணன் செய்யும் குற்றங் களைக் குணமாகக் கொண்டு மகிழும் தாய், என்ற குறிப்பினது **ஆன்ற தாய்**, என்ற தொடர். அத்தகைய நல்லதாய் வெறுத்து மகனை உரலுடன் பிணித்தாள், என்று சிசுபாலன் கூறியது, கண்ணனை இகழும் கருத்தது.

119. பாடினான் மறுகு பெருநகை விளைப்பப்
பாவையர் மனைதொறும் வெண்ணெய்க்(கு)
ஆடினா னவர்கண் முகந்தொறு மெச்சி
லாக்கினா னகன்றுமுன் னோட
ஓடினா னாவின் பேரிளங் கன்றை
யுயிருட னொருதனி விளவில்
சாடினா னரவின் முதுகையும் புள்ளின்
தாலுவோ டலகையும் பிளந்தான்.

[பாடினான் மறுகு பெரு நகை விளைப்ப, பாவையர் மனை தொறும் வெண்ணெய்க்கு ஆடினான், அவர்கள் முகந்தொறும் எச்சில் ஆக்கினான், அகன்று முன் ஓட ஓடினான், ஆவின் பேர் இளங் கன்றை உயிருடன் ஒரு தனி விளவில் சாடினான், அரவின் முதுகையும், புள்ளின் தாலுவோடு அலகையும் பிளந்தான்.]

**விளக்கம்:**—கண்டோரிடம் நகைப்பு மிக உண்டாகும்படி அதாவது கண்டோர் பரிகசிக்கும்படி (அவன்) தெருவில் பாடினான். அதாவது குழல் ஊதிக்கொண்டு அலைந்தான். மறுகு - வீதி. ஆயர்பாடிப் பெண்களின் வீடுதோறும் வெண்ணெய்க்காகக் கூத்தாடினான். அப் பெண்களின் முகங்களில் எச்சில் வெண்ணெயைத் தடவி மகிழ்ந்தான்; அல்லது முத்தமிட்டான். (அவனது குறும்புக்கு அஞ்சி) விலகி முன்னே ஓடிய பெண்களை விடாது தொடர்ந்து ஓடினான். ஆவின் (பசுவின்) மிக இளையதான கன்றை உயிரோடு எடுத்து ஒருசிறந்த விளாமரத்தின் மேல் வீசி எறிந்து கொன்றான். ஒரு பெரிய பாம்பின் முதுகையும், ஒரு கொக்கின் வாயோடு மூக்கையும் பிளந்தான்,—என்பது பொருள். தாலு - வாய். அலகு - மூக்கு.

தகுதி இல்லாத வழி விளையாடினவனும், பிராணிகளை வருத்திக் கொன்றவனும் ஆவான், கண்ணன், என்று சிசுபாலன் இகழும் கருத்தது செய்யுள்.

**பாம்பின் முதுகு பிளந்தது** :—பூதனை என்ற அரக்கியின் தம்பியான **அகாசுரன்** என்பான் கண்ணனைக் கொல்லுங்கருத்தில், பாம்பு வடிவங்கொண்டு ஆயர்களோடு மாடு மேய்க்கும் இடத்தே குகைபோன்ற தன் வாயை விரித்த வண்ணம் கிடந்தான். அதை ஒரு குகை என்று எண்ணிக் கோபாலர்கள் மாடுகளோடு அதனுள் புகுந்தார்கள். அது வஞ்சனைப் பாம்பு, என்

பதை அறிந்த கண்ணன், அதனுட் புகுந்து, அதன் உடலைப் பிளந்தான், என்பது கதை.

**புள்ளின் தாலொடு அலகும் பிளந்தது :** கம்சனுக்கு வேண்டிய வனான **பகன்** என்னும் அசுரன் ஒரு கொக்கின் உருவங்கொண்டு கண்ணனை நெருங்கவே, அவன் அப்புள்ளின் மூக்கைப்பற்றிக் கிழித்துக் கொன்றான், என்பது கதை.

120. பின்னிய குஞ்சிக் கோவலர் பயந்த
பேதையர் பலரையும் களிந்த
கன்னியின் மருங்கு மோரைமின் மருங்கும்
கலையெலாம் நாணிடக் கவர்ந்தே
முன்னிய வின்பச் செருக்கிலே மயக்கி
மூரிவிற் காமனு மானான்
அன்னிய னல்லன் மற்றிவன் பெருமை
யரசரி லாரறி யாதார்.

[பின்னிய குஞ்சி கோவலர் பயந்த பேதையர் பலரையும் களிந்த கன்னியின் மருங்கும், ஓரையின் மருங்கும், கலை எலாம் நாணிட கவர்ந்தே, முன்னிய இன்பம் செருக்கிலே மயக்கி, மூரி வில் காமனும் ஆனான்; அன்னியன் அல்லன், மற்று, இவன் பெருமை அரசரில் ஆர் அறியாதார்.]

**விளக்கம்:**—பின்னிய குஞ்சி-பின்னப்பட்ட குடுமி, கோவலர்-ஆயர். பேதையர்- பெண்கள். களிந்த கன்னி-யமுனை நதி. மருங்கும்-பக்கம், இடம். ஓரை- பெண்களின் விளையாட்டுக் களம். கலை-ஆடை. முன்னிய இன்பச் செருக்கு- கருதிய சிற்றின்பக்களிப்பு. (அக் களிப்பிலே பெண்களை மயக்கி அவன் அவர்களுக்கு) மூரி (வலிய) வில் காமன் ஆனான், (இப்படி இளம் பெண்களைக் கெடுக்கும் இவன்) அன்னியன் அல்லன், அதாவது, ஆயர் வகுப்பினில் ஒருவனாய், அவர்களது முழு நம்பிக்கைக்கு உரியனாய் வளர்ந்தவன், என்றபடி. மற்று: அசை. இவன் பெருமையை அரசரில் அறியாதார் யார்? எல்லோரும் அறிவர், என்றபடி. பெருமை என்றது சிறுமை என்ற பொருளது.

ஆடைகளை கரையில் வைத்துவிட்டு யமுனையில் நீராடிய ஆயர் மங்கையரின் ஆடைகளை அபகரித்துக் கொண்டு, அயல் இருந்த புன்னை மரத்தில் ஏறிக்கொண்டான், என்பதும், அவர்கள் கைகூப்பித் தொழவே, அவற்றை அவர்களுக்கு

அளித்தான், என்பதும் கதை. முதலிரண்டு அடிகள் இக்கதையை உட் கொண்டது.

ஆயமங்கையர்க்கு வாக்களித்ததை நிறைவேற்ற எண்ணிய கண்ணன், சரத் காலத்தில் முழுமதி நிறைந்த நன்னாளில் தனியே ஒரு வனத்தை அடைந்து, வேணுகானம் செய்தான். குழலோசை கேட்ட மகளிர் பரவசம் எய்தினராய்த் தம் மனையகன்று கண்ணன் இருந்த வனம் அடைந்தனர். அவர்களோடு அவன் ராஸக்கிரீடை செய்து அவர்களை மகிழ்வித்தான், என்ற கதையை உட்கொண்டது முன்றாமடி.

இளம் பிராயத்திலேயே இவ்வளவு அக்கிரமங்களைச் செய்த இவனை அக்ர பூசைக்கு உரியன் என்று வியாசன் கூறியதும், மற்றவர் உடன் பட்டதும் தவறு, என்று சிசுபாலன் கூறும் கருத்தது, ஈற்றடி.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

121. அண்டர்க் கெல்லா மரசான வாகண்
டலனுக் கண்டரினி(து)
உண்டற் கமைந்த பாலடிசி லுண்டா
னொருநா ளொருதானே
கொண்டற் கன்மா ரியைமுன்னங் கோவர்த்
தனமே குடையாகச்
சண்டப் ரசண்ட வேகமுடன் றடுத்தா
னேறு படுத்தானே.

[அண்டர்க்கு எல்லாம் அரசான ஆகண்டலனுக்கு அண்டர் இனிது உண்டற்கு அமைந்த பால் அடிசில் உண்டான் ஒரு நாள் ஒருதானே; கொண்டல் கல் மாரியை முன்னம் கோவர்த்தனமே குடை ஆக, சண்டப்பிரசண்ட வேகமுடன் தடுத்தான், ஏறு படுத்தான்.]

விளக்கம்:—அண்டர்- தேவர். ஆகண்டலன்- இந்திரன்- அண்டர் அமைந்த-இடையர் சமைத்து வைத்த. பால் அடிசில்- பால்சோறு, ஒருநாள் (கண்ணன்) ஒருதானே உண்டான்- ஒருநாள் இந்திரனுக்கு இல்லாமல் தானே தனியாக உண்டான். (வெகுளி கொண்ட இந்திரனது ஏவலால்) கொண்டல் (மேகம்) பொழிந்த கல்மாரியைக் கோவர்த்தன மலையைக் குடையாகக் கொண்டு மிக விரைவாகத் தடுத்து ஆயரையும் பசுக்களையும் ரட்சித்தான். சண்டப்ர சண்ட வேகம்- (வடமொழித் தொடர்)

மிக அதிகமான விரைவினைக் குறிக்கும், ஏறுபடுத்தான்- எருதை அழித்தான்.

''ஆயர்பாடியின் க்ஷேமம் கருதி, மேகங்களுக்குத் தலைவனான இந்திரனுக்கு இடையர் ஆண்டுதோறும் பொங்கல் இடுதலை மேற் கொண்டிருந்தனர். ஓராண்டு, கண்ணன், இந்திரபூசைக்குப் பதிலாக கோவர்த்தனகிரிக்குப் பூசை செய்வித்தான். பூசையை இழந்த இந்திரன் வெகுண்டு, ஆயர்பாடியை அழிக்குமாறு சப்த மேகங்களையும் ஏவினான். மேகங்கள் ஏழுநாள் பெருமழை பொழிந்தன. கண்ணன், அம்மலையைக் குடையாகத் தூக்கி ஆயரையும் பசுக்களையும் காத்தான்,''—என்பது கதை. சாதுக்களான இடையர்களை வசப்படுத்தி இந்திரனுக்கு உரிய உணவைக் கவர்ந்து உண்ட கள்வன் என்றும். அதனால் ஆயருக்கு உண்டான தீங்கை அகற்றக் கல்லைச் சுமந்து நிற்கவேண்டியவனானான், என்றும் கண்ணனைச் சிசுபாலன் பழிக்கும் கருத்தது இது.

நப்பின்னைப் பிராட்டியை மணக்க, அவள் தந்தை கூறியபடி அசுராம்சமான ஏழு எருதுகளை வலியடிக்கி, அவளை மணந்தான், என்பது வரலாறு. எருதைக் கொன்ற பாதகன் என்று கண்ணனை ஏசும் கருத்தது, ஏறுபடுத்தான், என்பது.

122. பம்பிப் பரந்த புன்மேயும் பசுவின்
கன்றுங் கோபாலர்
தம்புத் திரரு மம்புயத்தோன் றன்மா
யையினா லொளித்திடுநாள்
எம்புத் திரரு மெங்கோவி னிளங்கன்
றினமு மெனத்தெளிய
வம்பிற் புரிந்த மாயையி வனல்லா
லியாவர் வல்லாரே.

[பம்பி பரந்த புல் மேயும் பசுவின் கன்றும் கோபாலர் தம் புத்திரரும் அம் புயத்தோன் மாயையினால் ஒளித்திடு நாள், எம் புத்திரரும் எம் கோவின் இளங்கன்று இனமும் என தெளிய, வம்பின் புரிந்த மாயை இவன் அல்லால் யாவர் வல்லாரே.]

**விளக்கம் :**—பம்பிப் பரந்த - நெருங்கிப் பரவிய. அம் புயத்தோன் -பிரும்மா. வம்பின் புரிந்த - வீம்பாகச் செய்த (வம்பு - புதுமை, வீம்பு, வஞ்சனை, தீச்செயல்.)

கண்ணன் ஆயர்பாடியில் வளர்ந்து வருகையில் நான்முகன் அப் பெருமானது விளையாட்டைக் காணக் கருதி, ஆயச்சிறுவர் களையும், கன்றுகளையும் தன் மாயையால் விண்ணிடத்தே மறைத்து வைத்து விட்டான். அதை அறிந்த கண்ணன், தானே இடைப்பிள்ளைகளும் பசுக் கன்றுகளுமாய் வடிவுகொண்டு, பிள்ளைகளும் கன்றுகளும் தங்களுடையவே, என்று ஆயர்களை நம்பச் செய்தான். இவ்வாறு ஓராண்டு கழிந்தது. அதன்பின் நான்முகன் கன்றுகளையும் பிள்ளைகளையும் கண்ணனிடம் சேர்த்துவிட்டு, அவனை வணங்கிச்சென்றான், என்பது வரலாறு. "மாயம் புரிவதில் இணையில்லாப் பெருமாயன்," என்று கண்ணனை இகழும் கருத்தது இது.

123. அதிரப் பொரும்போ ரஞ்சினனோ வஞ்சா
மைகொலோ தெரியாது
மதுரைப் பதியுந் தன்கிளையும் வாழ்வுந்
துறந்து வாரிதிவாய்
எதிரொப் பிலாத துவாரகையென் றியற்பேர்
படைத்த மாநகரின்
முதிரப் பொரும்போர்த் தம்முனுட னிருந்தான்
பன்னாண் முரணறுத்தே.

[அதிர பொரும் போர் அஞ்சினனோ, (அல்லது) அஞ்சாமை கொலோ, தெரியாது; மதுரை பதியும் தன் கிளையும் வாழ்வும் துறந்து, வாரிதிவாய் எதிர் ஒப்பு இலாத துவாரகை என்று இயல் பேர் மா நகரில், முதிர பொரும் போர் தம்முனுடன் இருந்தான் பல்நாள் முரண் அறுத்தே.]

விளக்கம் :— (கண்ணன் ஜராசந்தனோடு) அதிர்ச்சி உண்டாகும்படி செய்யும் போரைச் செய்ய அஞ்சினானோ? (அல்லது அவனோடு போர் செய்யாமல் ஓடியது) அஞ்சாமைதானே? தெரியவில்லை,—என்பது முதலடியின் பொருள்.

மதுராபுரியையும், சுற்றத்தையும், அவரோடு அங்கே வாழ் தலையும் விட்டுவிட்டு, மேலைக் கடலினிடத்தே, தனக்கு நேரான ஒப்பில்லாததும் துவாரகை என்ற இயற்பேர் பெற்றது மான மாநகரில், முதிர (மிகுதியாக) போர் செய்யும் தம்முனுடன் (தன் தமையனுடன்) அங்கே போரை ஒழித்தவனாய் (அதாவது பகை இல்லாதவனாய்) பல நாள் வாழ்ந்திருந்தான். தம்முன் - தமையனான பலராமன்.

பகை அஞ்சித் தனது பதியான மதுரையைத்துறந்து, கடலின் இடையேயுள்ள தீவினில் ஒளிந்திருந்தவன், என்று இகழும் குறிப்பினது செய்யுள். இயற்பேர் - இயற்கையாய் அமைந்த பேர் முரண் அறுத்தல் - போரை ஒழித்தல். பகை கடக்கும் வீரம் இல்லாத கோழை, என்று சிசு பாலன் கண்ணனை இகழும் கருத்தது செய்யுள்.

கலிவிருத்தம்

124. கஞ்சனெனு மாமனொடு காளையமர் செய்தான்
வஞ்சனையி னாலமரு மெத்தனைம
லைந்தான்
தஞ்சமென வேமருவு தமரிலொரு தானே
மிஞ்சிவிர காலுரிய மேதினிபு ரந்தான்.

[கஞ்சன் எனும் மாமனொடு காளை அமர் செய்தான், வஞ்சனையினால் அமரும் எத்தனை மலைந்தான், தஞ்சம் என மருவு தமரில் ஒரு தானே மிஞ்சி, விரகால் உரிய மேதினி புரந்தான்-]

**விளக்கம் :—**காளை-ரிஷபம்போல் கொழுத்தவன், அல்லது இளம் பருவத்தினன். வஞ்சனையால் பல போர்களில் வெற்றி கொண்டான் என்ற பொருளுடையது இரண்டாம் அடி; ' பீமனைக் கொண்டு ஜராசந்தனை வதைத்ததையும், பஞ்சகன் என்ற அசுரனை கடலினுட் சென்று அழித்ததையும், காலயவன் என்ற அரசனைத் தந்திரத்தால் அழித்ததையும், ருக்மணியின் தமையனான ருக்மியை மானபங்கம் செய்ததையும்,'' உட்கொண்டதாகும். தஞ்சம் - பற்றுக்கோடு. (தன்னைப் பற்றுக் கோடாக கொண்ட சுற்றத்தில்) தானே ஒரு தனி மிஞ்சி - தான் ஒருவனே மேம்பாடு உடையவனாகி, அதாவது தானே உயர்ந்தவன் என்று தோன்ற வைத்து, விரகால் (வஞ்சனையால்) பூமியை தனக்கு உரியதாக்கிக் கொண்டு அரசை நடத்துபவனானான்.

கண்ணனைச் சிசுபாலன், மோசக்காரன், கோழை என்று நிந்திக்கும் கருத்தது செய்யுள்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

125. அன்னையுந் தாதை தானு மருஞ்சிறை யகத்து
வைக
முன்னிரு மூவர் முன்னோர் தங்களை முருக்கு
வித்தான்

பின்னொரு தமையன் றன்னைப் பெற்றதா யிருவ
ரென்றென்(று)
இந்நிலஞ் சொல்ல வைத்தா னிவனைவே றியாவ
ரெப்பார்.

[அன்னையும் தாதை தானும் அரும் சிறை அகத்து வைக,
முன் இரு மூவர் முன்னோர் தங்களை முருக்குவித்தான்; பின் ஒரு
தமையன் தன்னை பெற்ற தாய் இருவர் என்று என்று இ நிலம்
சொல்ல வைத்தான், இவனை வேறு யாவரீ ஒப்பார்.]

**விளக்கம் :—**முன் இரு மூவர் முன்னோர் - கிருஷ்ணனுக்கு
முன்னே பிறந்த தமையன்மார் ஆறு பேர். முருக்குவித்தான் -
கொல்வித்தான். பின் ஒரு தமையன் - அந்த அறுவருக்குப்
பின்னே பிறந்த பலராமன். பலராமனுக்குத் தாய் இருவர்.
தேவகியின் ஏழாவது கருப்பத்தைத் திருமாலின் விருப்பப்படி
மாயை, ஆயர்பாடியிலிருந்த வசுதேவ பத்னியாகிய ரோகிணி
வயிற்றில் சேர்த்துவிட, ஏழாவது புத்ரனாகிய பலராமன் ரோகி
ணியின் மகனாய்ப் பிறந்தான். எனவே, தாயர் இருவர்; (பெற்ற
தாய் இருவரீ, என்றது ஒருமை பன்மை மயக்கம்). என்று என்று,
என்ற அடுக்க வியப்பின்பாற்படும்.

"தேவகியின் எட்டாவது கர்ப்பத்தில் தோன்றும் பிள்ளை
யால் உனக்கு மரணம்," என்ற அசரீரி வாக்கினைக் கேட்ட
கம்சன், தேவகி வசுதேவர்களை அருஞ்சிறை வைத்தான். பெற்
றோர்க்குப் பெருந்தீங்கு விளைத்த கொடியன், என்று இகழும்
கருத்தில் இச்செய்திகள் கூறப்பட்டன.

தன்னைக் காப்பாற்றிக் கொண்டதுபோல் தன் முன் பிறந்
தார் அறுவரையும் கண்ணன் காப்பாற்ற முயலாமையின், 'முன்
பிறந்தோர் அறுவரை முருக்குவித்தான்,' என்றான். இத்தகைய
குண நலங்களை உடைய கண்ணனை ஒப்பார் இவ்வுலகில் எவரு
மிலர், என்று கூறும் கருத்தில் சிசுபாலன், "இவனை வேறு
யாவரே ஒப்பார்!" என்றான்.

126. என்றுகொண் டெண்ணி நாவுக் கிசைந்தன
வுரைகளெல்லாம்
ஒன்றினொன் றுச்ச மாக வுயர்ச்சியுந் தாழ்வுந்
தோன்றக்

கன்றிய மனத்தி னோடுங் கட்டுரை செய்தான்
மன்றல்
தென்றலஞ் சோலை சூழுஞ் சேதிநா டுடைய
கோவே.

[என்று கொண்டு எண்ணி நாவுக்கு இசைந்தன உரைகள் எல்லாம், ஒன்றின் ஒன்று உச்சம் ஆக, உயர்ச்சியும் தாழ்வும் தோன்ற கன்றிய மனத்தினோடும் கட்டுரை செய்தான், மன்றல் தென்றல் அம் சோலை சூழும் சேதி நாடு உடைய கோவே.]

**விளக்கம் :—** என்று **கொண்டு**, என்பதில் **கொண்டு**, அசை. என்று எண்ணி - என்று கண்ணனது குணம் செயல்களை மனத்திற் கொண்டு. நாவுக்கு இசைந்தன - வாய் வந்தபடி. ஒன்றின் ஒன்று உச்சமாக - ஒன்றுக்குமேல் ஒன்றாக, அதாவது ஒன்றை விட ஒன்று கடுமையுற. மன்றல் தென்றல்......கோவே, என்று கொண்டு...... கட்டுரை செய்தான், என்று அன்வயிக்க.

சிசுபாலன் செய்த தூஷணைகளில் புகழ்தல்போல் பழித்தலும் உளவாதலால், 'உயர்ச்சியும் தாழ்வும் தோன்ற.' எனப்பட்டது. கட்டுரை, என்பது இங்கே 'குணத்தைக் குற்றமாகத் திரித்துக் கூறல்' என்ற பொருளது. மன்றல் - வாசனை. மன்றல் தென்றல் - நறுமணத்தோடு கூடிய தென்றல் காற்று.

**கண்ணன் போரெழல்**

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

127. திண்ணியநெஞ் சினனான சிசுபாலன்
றன்னெஞ்சிற் றீங்கு தோன்ற
எண்ணியமன் பேரவையி னியம்பியபின்
சொற்களெல்லா மெண்ணி யெண்ணிப்
புண்ணியர்வந் தினிதிறைஞ்சும் பூங்கழலோன்
வேறொன்றும் புகலா னாகிப்
பண்ணியதிண் புரவிநெடும் பருமணித்தேர்
மேற்கொண்டான் பரிதி போல்வான்.

[திண்ணிய நெஞ்சினன் ஆன சிசுபாலன் தன் நெஞ்சின் தீங்கு தோன்ற, எண்ணிய மன் பேர் அவையின் இயம்பிய புன் சொற்கள் எல்லாம் எண்ணி எண்ணி, புண்ணியர் வந்து இனிது இறைஞ்சும் பூங்கழலோன் வேறு ஒன்றும் புகலான் ஆகி, பண்

ணிய திண் புரவி நெடும் பரு மணி தேர் மேல் கொண்டான் பரிதி போல்வான்.]

**விளக்கம் :—**புண்ணியர் வந்து இனிது இறைஞ்சும் பூங்கழலோன் ஆகிய கண்ணன், திண்ணிய நெஞ்சினன்... எண்ணி எண்ணி, வேறு ஒன்றும் புகலான் ஆகி, பரிதி போல்வான், பண்ணிய தன்... தேர் மேல் கொண்டான், என்பது அன்வயம்.

திண்ணிய நெஞ்சினன் - வலிய நெஞ்சினன், அதாவது பெரியோரிடம் பயபக்தி மரியாதை இல்லாத கடினமான நெஞ்சை உடையவன். நெஞ்சின் தீங்கு தோன்ற - தன் நெஞ்சினிடமிருந்த கிருஷ்ணத் துவேஷம் வெளித்தோன்ற. எண்ணி எண்ணி - நன்றாகக் கணக்கிட்டு, கணக்கிட்டும், அதன்பின் செய்யவேண்டுவதை நினைத்தும், அவனது நிந்தனைக்கு எதிர் பதில் ஒன்றும் சொல்லாதவனாய்க் கண்ணன் சூரியனைபோல் தேர்மேல் ஏறிக்கொண்டான் என்பதாம். பண்ணிய - அலங்கரித்த.

உலகத்தின் இருளைப் போக்கி ஒளி செய்யச் சூரியன் தேர் ஏறி உதிப்பதுபோல் துஷ்டனான சிசுபாலனை அழித்து உலகத்திற்கு நன்மை செய்யத் தேர் ஏறினான், என்பது **பரிதி போல்வான்** என்று கூறியதின் கருத்தாகும்.

128. எந்நாட்டி னவனிபரு மீண்டியவித்
தொல்லவையி னிசைத்த சேதி
நன்னாட்டுக் கதிபதியா நரபால
நின்மாற்ற நன்று நன்று
கன்னாட்டும் படியாக விருவோரும்
பொருதறிதுங் கடிதே கென்று
தன்னாட்ட மிகச்சிவந்தான் கரியவடி
வினிற்புனைந்த தண்டு ழாயோன்.

[எ நாட்டின் அவனிபரும் ஈண்டிய இ தொல் அவையின் இசைத்த சேதி நல்நாட்டுக்கு அதிபதியாம் நரபால, நின் மாற்றம் நன்று, நன்று; கல் நாட்டும் படியாக இருவோரும் பொருது அறிதும், கடிது ஏகு என்று தன் நாட்டம் மிக சிவந்தான், கரிய வடிவினில் புனைந்த தண் துழாயோன்.]

**விளக்கம் :—**ஈண்டிய - கூடிய. நரபால - நரருக்கு அரசனே; அதாவது மண்ணில் ஒரு நாட்டின் தலை பூண்ட அற்பனே,

என்றபடி. மாற்றம் - (நீ வழங்கிய) நிந்தனைச் சொல். நன்று நன்று - மிக நன்றாய் இருக்கின்றது; அதாவது தகுதியுடைய வார்த்தை அன்று. நன்று நன்று, என்ற அடுக்கு வெகுளி பற்றியது. கல்நாட்டும்படியாக ... அறிதும் - வெற்றிக்கல் நாட்டிக் கொண்டாடும்படி இருவரும் போர் செய்து முடிவை அறிவோம். கடிது ஏகு - விரைவில் (போருக்கு) வா. இவ்வாறு, கரிய திருமேனியில் புனைந்த தண் துழாய் மாலை அணிந்தவனான கண்ணன் கூறித் தன் கண்கள் சிவக்கப் பெற்றான், என்பதாம்,

129. சேதிகுல நரபதியுஞ் செருப்புரிதற்
கஞ்சுவனோ தேரி லானான்
மோதிவலம் புரியூத முகிலினங்கண்
முழங்குவபோன் முரச மார்ப்ப
வேதியரோ டவையிருந்த வேந்தரெல்லா
மதிசயிப்ப விமானந் தோறும்
சோதிமுடி யமரர்வர நகர்ப்புறத்தி
லமர்புரியத் தொடங்கி னாரே.

[சேதி குலம் நரபதியும் செரு புரிதற்கு அஞ்சுவனோ! தேரில் ஆனான்; மோதி வலம்புரி ஊத, முகில் இனங்கள் முழங்குவ போல் முரசம் ஆர்ப்ப, வேதியரோடு அவை இருந்த வேந்தர் எல்லாம் அதிசயிப்ப, விமானம் தோறும் சோதி முடி அமரர் வர, நகர் புறத்தில் அமர்புரிய தொடங்கினார். ஏ.]

**விளக்கம் :**—செரு - போர், சேதி நாட்டு அரச குலம் வந்த அரசனான சிசுபாலனும் போர்புரிய அஞ்சுவானோ? எனவே, தேரில் ஏறினான். மோதி - ஒன்றோடொன்று போட்டியிடுவது போல். வலம்புரி சங்குகள் ஒலிக்கவும், மேகக் கூட்டங்கள் இடிப்பனபோல் முரசம் முழங்கவும், அவையிருந்த வேதியரோடு அரசர்களும் அதிசயிக்கவும், போர் காணத் தேவர்கள் விமானங்களில் வரவும், இந்திரப் பிரத்த நகரின் வெளிப்புறத்திலே இருவரும் போர் செய்யத் தொடங்கினார்கள், என்பதாம்.

சேதிகுலம், என்பதற்குப் பகைவரை அழிக்கும் வீர மரபை உடைய குலம், என்றும் பொருள் கொள்ளலாம். அத்தகைய குலத்தில் வந்த சிசுபாலன் போர் செய்ய அஞ்சுவானோ? என்றபடி.

130. ஆதிவரு கதிப்பரியு மணிவயிரத்
திண்டேரு மனில மென்ன
மோதிவரு கடகளிறுங் காலாளும்
பொறாதுரகர் முடிகள் சேரா
யாதவனா நரபதியு மிருங்கிளையும்
பெருங்கிளையோ டெதிரி லாத
சேதிகுல நரபதியுஞ் செய்தவமர்
சுராசுரரிற் செய்தா ருண்டோ.

[ஆதி வரு கதி பரியும், அணி வயிரம் திண் தேரும், அனிலம் என்ன மோதி வரு கடகளிறும் காலாளும் பொறாது, உரகர் முடிகள் சோர, யாதவன் ஆம் நரபதியும் இருங்கிளையும், பெருங்கிளையோடு எதிர் இலாத சேதி குல நரபதியும் செய்த அமர் சுராசுரரில் (சுரர் - அசுரரில்) செய்தார் உண்டோ.]

**விளக்கம் :—** ஆதி - குதிரைகளின் கதிகளில் ஒன்றான மண்டலகதி. ஆதிவரு கதிப்புரவி - மண்டலித்து ஓடும் நடையை உடைய குதிரை, அணி வயிர திண்தேர் - அழகிய வயிரம்பாய்ந்த மரத்தால் செய்த வலிய தேர். அனிலம் - காற்று. பொறாது - (குதிரை முதலிய சதுரங்க சேனையின் மிகுதியாலான பாரத்தை) தாங்கமாட்டாமல். உரகர் முடிகள் சோர - (பூமியைத் தாங்கும்) நாகர்களின் முடிகள் சாய்தலுற. யாதவனாம் நரபதி - கண்ணன். இருங்கிளை - (கண்ணனது) பெரிய சுற்றம். பெருங்கிளை - சிசுபாலனது பெரிய சுற்றம், சேதிகுல நரபதி - சிசுபாலன். இவ்விரு திறத்தாரும் செய்த போர்போல் போர் செய்தவர்கள், தேவாசுரர்களிலும் இல்லை, என்றபடி. அதாவது, தேவாசுர யுத்தத்தினும் மிக உக்ரமான போரைக் கண்ணனும் சிசுபாலனும் செய்தனர், என்க. உரகர் - ஆதிசேஷனும், வாசுகி முதலிய அஷ்டமா நாகங்களும்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

131. யானை மேல்வரு நிருப ருந்திறல்
யானை மேல்வரு நிருபரும்
சோனை மாமுகி லேழு மேநிக
ரென்ன வம்புதொ டுத்தலின்
தானை யாறுநி றைந்து பல்லணி
யாகி மிஞ்சிய சதுர்விதச்

சேனை யாவையு மெய்சி வந்தன
சிந்தை மாமலர் கருகவே.

[யானை மேல் வரு நிருபரும், திறல் யானை மேல் வரு நிருபரும், சோனை மா முகில் ஏழுமே நிகர் என்ன அம்பு தொடுத்தலின், தானை ஆறும் நிறைந்து பல் அணி ஆகி, மிஞ்சிய சதுர்விதம் சேனை யாவையும் மெய் சிவந்தன, சிந்தை மா மலரும் கருகவே.]

**விளக்கம் :—**யானை மேல் வரு நிருபர், கண்ணனைச் சேர்ந்தவர்கள். திறல் யானை மேல் வரும் நிருபர் - சிசுபாலனைச் சேர்ந்தவர்கள். சோனை மா முகில் - விடாது கொட்டும் பெரிய மேகங்கள். (இரு திறத்தாரும் சப்த மேகமே நிகர் என்று அம்பு மழை சொரிதலின்), ஆறு வகைப்பட்ட படைகளும் நெருங்கிப் பற்பல அணிவகுப்புக்களாக அழியாமல் மிஞ்சியிருக்கின்ற. நால் வகைச் சேனையிலுள்ள யானை குதிரைகளாகிய பிராணிகளும், (புண்ணுற்றதனால்) சிந்தை மாமலர் (மனம், அல்லது நெஞ்சு) கருகிப்போக, மெய் (உடல்) சிவக்கல் உற்றன.

**தானை ஆறு :—**மூலப்படை, காட்டுப்படை, நாட்டுப்படை, துணைப்படை, கூலிப்படை, நட்புடைய நாட்டின் படை. ஈற்றடி, சிந்தை கருக மெய் சிவந்தன, என்றது முரண் தொடை.

132. ஓரி ரண்டுவ ரூதினிக் குளுமுயர்
தடங்கிரி யொப்பவே
ஈரி ரண்டுவி தத்தி னாலுமி யம்ப
லுற்றன வெண்ணில்பல்
தேரி ரண்டணி யுருளீ னோடுருள்
சென் றுமுட்டின தீயிடிக்
காரி ரெண்டெதிர் மலையு மாறென
வண்டபித்தி கலங்கவே.

[ஓர் இரண்டு வரூதினிக்குள்ளும் உயர் தடம் கிரி ஒப்பவே, ஈர் இரண்டு விதத்தினாலும் இயம்பல் உற்றன, எண்இல் பல் தேர், இரண்டு அணி உருளினோடு உருள் சென்று முட்டின, தீ இடி கார் இரண்டு எதிர் மலையும் ஆறு என அண்ட பித்தி கலங்கவே.]

**விளக்கம் :—**வரூதினி - படை. (கண்ணன் சிசுபாலன் ஆகிய இருதிறத்துப் படைகளுக்குள்ளும்) உயர் தடங்கிரி ஒப்பவே -

உயர்ந்த விசாலமான மலையை ஒத்த, ஈர் இரண்டு விதத்தினாலும் இயம்பல் உற்றன - நான்கு வகையினாலும் பேசப்படுவன வான, எண் இல் பல்தேர் - எண் இறந்த பலவகைப்பட்ட தேர்கள். (அத்தகைய தேர்களினுடைய) அணி உருளொடு உருள் - அழகிய சக்கரங்களோடு சக்கரங்கள், தீ இடி கார் இரண்டு எதிர் மலையும் ஆறு என - தீயைத் தன்னிடத்தே கொண்ட இடியோடு கூடிய மேகங்கள் இரண்டு எதிர் எதிர் நின்று போர்விளைத்தை ஒத்து, அண்ட பித்தி கலங்க முட்டின - அண்டகோளத்தின் எல்லைச்சுவர் நிலைகுலையும்படி, (ஒன்றை யொன்று) மோதித் தாக்கின.

தேர் வீரர் : **அதிரதர், மஹாரதர், சமரதர், அர்த்தரதர்,** என்று நால்வகைப்படுவர். தேரும், வீரர் தகுதிக்கு ஏற்ப நால் வகைப்படும். இதுதான், 'ஈரிரண்டு விதத்தினாலும் இயம்ப லுற்ற தேர்,' என்பதால் குறிக்கப்படுகின்றது. பித்திகை - சுவர் இங்கே அண்டச்சுவர் என்க.

இதில், உவமை உயர்வுநவிற்சி, இல்பொருள் உவமை ஆகிய அணிகள் அமைந்திருத்தல் காண்க.

**133. சிங்க மொன்றுட னொன்று சீறுசெ**
**ருக்கெ னும்படி சேனைவாய்**
**வங்கர் கொங்கணர் துளுவ ராரியர்**
**மகத ரொட்டியர் மாளவர்**
**கங்கர் கொங்கர்தெ லுங்கர் சீனர்க**
**லிங்கர் சிங்களர் கௌசலர்**
**அங்கர் சோனக ரான வீரர திர்ந்**
**துதங் களினமர் செய்தரால்.**

[சிங்கம் ஒன்றுடன் ஒன்று சீறு செருக்கு எனும்படி, சேனைவாய் வங்கர், கொங்கணர், துளுவரி, ஆரியர், மகதர், ஒட்டியர், மாளவர், கங்கர், கொங்கர், தெலுங்கர், சீனர், கலிங்கர், சிங்களர், கௌசலர், அங்கர், சோனகர் ஆன வீரர், அதிர்ந்து தங்களின் அமர் செய்தார்.]

விளக்கம் :—சிங்கங்கள் ஒன்றோடொன்று சீறிச் செருக்குடன் செய்யும் கொடிய போரை உவமையாகக் கூறும்படி, இரு திறத்துச் சேனைகளிலுள்ள வங்கர், கொங்கர் முதலிய பல நாட்டினரான வீரர்கள் வீர முழக்கம் செய்து கொண்டு, தங்களுக்குள்ளே போர் புரிந்தார்கள், என்பது பொருள்.

வங்கம், கொங்கணம் முதலியவை, ஐம்பத்தாறு தேசங்களில் சில. ஒட்டியம் - ஒட்டரதேசம்.

134. வெருவ ரும்படி கம்பு கொம்பு
விதங்கொண் மாமுர சாதியா
இருவர் தம்படை களினு மூழி
யெழுந்த காலென வதிர் தலான்
மருவி யெண்டிசை முகமு நிற்பன
மத்த வாரண கன்னமும்
திருவி ரும்புபு யத்து வானவர்
செவிக ளுஞ்செவி டானவே.

[வெருவரும்படி கம்பு கொம்பு விதம் கொள் மா முரசு ஆதியா, இருவர் தம் படைகளினும் ஊழி எழுந்த கால் என அதிர்தலால், மருவி எண் திசை முகமும் நிற்பன மத்தவாரண கன்னமும், திருவிரும்பு புயத்து வானவர் செவிகளும் செவிடு ஆனவே.]

**விளக்கம் :**—வெருவரும்படி - அச்சம் உண்டாகும்படி. கம்பு கொம்பு - நீண்ட ஊது கொம்புகள். பலவிதம் கொள் மாமுரசு - பலவகைப்பட்ட முரசு வாத்தியங்கள். முதலா - முதலிய யுத்தத்திற்கு உரிய வாத்தியங்கள், ஊழி எழுந்த கால் - கற்பாந்த காலத்தில் வீசும் காற்று. அதிர்தல் - பேரிரைச்சலுடன் வீசுதல். எண்திசை முகமும் மருவி நிற்பன (ஆன) மத்தவாரண கன்னமும், திருவீரும்பு புயத்து வானவர் செவிகளும் செவிடு ஆன. (ஏ) என்று அன்வயிக்க. எட்டுத் திக்குகளின் இடத்தே பொருந்தி நிற்பனவான மதமுடைய யானைகளின் செவிகளும், வீரலட்சுமி விரும்பும் புஜங்களை உடைய தேவர்களின் செவிகளும் செவிடாயின, என்பது பொருள். கன்னம் - காது.

இரு திறத்துப் படைகளிலிருந்தும் எழுந்த வாத்தியகோஷம், திக்கசங்களின் காதுகளையும் தேவர்தம் காதுகளையும் செவிடுபடச் செய்தன, என்பதாம். இது உயர்வு நவிற்சியின்பாற்படும்.

135. புடைப டக்கிளை யாகி வந்தெதிர்
பூது ரந்தரர் யாவரும்
தொடைப டப்பரி வுறும னத்தொடு
தொந்த யுத்தமு டற்றினார்

குடையெ டுத்தன ரிருவ ரும்பெறு
கொடியெ டுத்தனர் கொற்றவெம்
படையெ டுத்தனர் மாம றைப்பசு
பால னுஞ்சிசு பாலனும்.

[புடை பட கிளை ஆகி வந்து எதிர் பூதுரந்தார் யாவரும் தொடை பட பரிவு உறும் மனத்தோடு தொந்த யுத்தம் உடற்றினார், குடை எடுத்தனர் இருவரும் பெறு கொடி எடுத்தனர், கொற்ற வெம் படை எடுத்தனர், மா மறை பசு பாலனும் சிசுபாலனும்.]

**விளக்கம் :**—புடை - பக்கம். பட - பொருந்த. கிளை - சுற்றம், படைத்துணை. பூதுரந்தரர் - பூபாரம் தாங்கும் அரசர். தொடை பட - தொடர்ச்சியாக, அல்லது அம்புகள் (பகைப் படைமீது) பட. பரிவு உறு மனம் - தம் பக்கத்துத் தலைவரிடம் பரிவுகொண்ட மனம். தொந்த யுத்தம் - தனிப் போர், அதாவது இருவர் ஒருவரோடு ஒருவர் போர் செய்தல். உடற்றினார் - பகை வருந்தினார், அல்லது அழித்தார். குடை எடுத்தனர், கொடி எடுத்தனர் - கொற்றக்குடை தூக்கியவர் களும், வெற்றிக் கொடி தூக்கியவர்களுமான, மாமறை பசுபாலனும் சிசுபாலனும் ஆகிய இருவரும் கொற்றம் வெம்படை எடுத்தனர், என இயைக்க.

கொடியும் குடையும் உடையவர்கள் அரசர்கள். (குடையும் கொடியும் தூக்கியவர்களான) மாமறை பசுபாலனும் - பெருமையுடைய வேதங்கள் கொண்டாடும் கோபாலனும். சிசுபாலனும் - (கண்ணனோடு பகையுடைய) சிசுபாலனும், படை எடுத்தனர் - ஆயுதங்களை எடுத்துக் கொண்டு போர் செய்தனர்.

'பசுபாலன்,' என்பது பசுக்களைக் காப்பவன், அல்லது உயிர் களைக் காப்பவன், என்ற பொருளது.

136. வேலி னால்வடி வாளி னால்வரி
வில்லி னாலுரை பெற்றவெம்
கோலி னாலிரு வருமு னைந்திரு
குன்ற மொத்துயர் தேரினார்
மாலி னால்வரு மத்த யானைகண்
மலைவ தொத்தும தித்தபோர்

நூலி னால்வழு வறம லைந்தனர்
நுண்மை யாவினு நுண்ணியார்.

[வேலினால் வடி வாளினால் வரி வில்லினால், உரை பெற்ற வெம் கோலினால் இருவரும் முனைந்து, இரு குன்றம் ஒத்து உயர் தேரினர் மாலினால் வருமத்த யானைகள் மலைவது ஒத்து, மதித்த போர் நூலினால் வழு அற மலைந்தனர், நுண்மை யாவினும் நுண்ணியார்.]

**விளக்கம் :**—நுண்மை யாவினும் நுண்ணியரான (கிருஷ்ண சிசுபாலர்) இருவரும், இரு குன்றம் ஒத்து உயர் தேரினார் (ஆகி) வேலினால்—முனைந்து மலைந்தனர், என்பது அன்வயம்.

வடிவாள் - வடிக்கட்டிய வாள், அதாவது கூர்மை செய்யப் பட்ட வாள், உரை பெற்ற வெம்கோல் - புகழ் பெற்ற, அல்லது சிறந்த அஸ்திர சஸ்திரங்கள். தேரினார் - தேர் ஏறியவர்களாய். மாலினால் வரு மத்த யானை - மத மயக்கத்தினால் வரும் கொழுப்பைக் கொண்ட யானை. மதித்த போர் நூல் - எல்லோ ராலும் மதித்து ஏற்கப் பெற்ற போர் நூல். வழு அற - அந் நூலின் விதி கடாவது. முனைந்து மலைந்தார் - தணியா ஊக்கத் துடன் மலைந்தனர்.

''நுண்மை யாவினும் நுண்ணியார்,'' என்றது, மிக மிக நுட்பமானவற்றையும் எளிதில் உணர்ந்துகொள்ளும் மதி ஆற்ற லுடையார்,'' என்ற பொருளது. நுண்மை என்ற பண்புச்சொல், ஆகுபெயராய் நுண்ணிய பொருள்களைக் குறிப்பதாயிற்று. நுண் ணியார் - நுட்பமான அறிவை உடையார், சூட்சும புத்தி உடை யார்.

**சிசுபாலன் வதம்**

**எழுசீர் ஆசிரிய விருத்தம்**

137. வெஞ்சின முடுக வொருவருக் கொருவர்
வெல் லலுந் தோற்றலு மின்றி
வஞ்சின முறைசெய் துள்ளமு மெய்யும்
வாகுபூ தரங்களும் பூரித்(து)
எஞ்சினர் தமைப்போ லிளைத்தபி னினிவா
னேற்றுதல் கடனெனக் கருதிக்
கஞ்சனை முனிந்தோ னிவன்முடித் தலைமேற்
கதிர்மணித் திகிரியே வினனே.

[வெம் சினம் முடுக, ஒருவருக்கு ஒருவர் வெல்லலும் தோற்றலும் இன்றி, வஞ்சினம் உரை செய்து உள்ளமும் மெய்யும் வாகு பூதரங்களும் பூரித்து, எஞ்சினர் தமைப்போல் இளைத்தபின், இனி வான் ஏற்றுதல் கடன் என கருதி, கஞ்சனை முனிந்தோன் இவன் முடி தலைமேல் கதிர்மணி திகிரி ஏவினன், ஏ.[

**விளக்கம் :—**முடுக - மூண்டு எழ. வஞ்சினம் - சபதம்; (ஒருவரை ஒருவர் கொல்வதாகக் கூறல்). வாகு பூதரங்கள் - தோள்களாகிய மலைகள்; (அதாவது மலைப்போன்ற தோள்கள்). பூரித்து - போர் ஆவேசத்தால் பூரிக்கப்பெற்று, அல்லது வீங்கப் பெற்று, எஞ்சினர் - போர் வலி குன்றியவர். கஞ்சனை முனிந்தோன், இனி வான் ஏற்றுதல் கடன் எனக் கருதி, இவன் (சிசுபாலன்) தலைமேல் கதிர் மணித் திகிரி (சக்ராயுதம்) ஏவினன், என்று இயைக்க. கதிர்மணி திகிரி - பிரகாசம் பொருந்திய அழகிய சக்ராயுதம். **வான்**, என்பது இங்கே **பரமபதத்தைக்** குறிக்கும்.

**138.** ஏவிய திகிரி வீரரைத் துறக்க
மேறவிட் டிடுமிர வியைப்போல்
மேவிய பகையா மைத்துனன் முடியை
விளங்குகோ ளகையுற வீசி
ஆவிக ளனைத்து நிறைந்தொளி சிறந்த
வச்சுத னலைகொள்பாற் கடலில்
தீவிய வமுத மமரருக் களித்தோன்
றிருக்கரஞ் சென்றுசேர்ந் ததுவே.

[ஏவிய திகிரி, வீரரை துறக்கம் ஏற விட்டிடும் இரவியைப் போல், மேவிய பகை ஆம் மைத்துனன் முடியை விளங்கு கோளகை உற வீசி, ஆவிகள் அனைத்தும் நிறைந்து ஒளி சிறந்த அச்சுதன், அலை கொள் பால் கடலில் தீவிய அமுதம் அமரருக்கு அளித்தோன் திரு கரம் சென்று சேர்ந்தது, ஏ.]

**விளக்கம் :—**ஏவிய திகிரி... இரவியைப்போல் - (கண்ணன்) ஏவிய சக்கரம், (பின்னிடாது மலைந்து இறந்த சுத்த) வீரர்களை துறக்கம் (வீரசுவர்க்கம்) செல்லும்படி வழிவிடும் ஒளி மயமான சூரிய மண்டலம்போல். (சூரியனைப்போல் ஒளி வீசிக்கொண்டு சென்ற திகிரி) மேவிய பகையாம்...வீசி - நெருங்கிப் பொருந்திய பகை ஆகிய மைத்துனன் முறையுடைய சிசுபாலனது தலையை (அறுத்து) விளங்குகின்ற அண்டகோளத்தின் உச்சியைச் சேர்ந்து பொருந்தும்படி வீசி எறிந்துவிட்டு. ஆவிகள் அனைத்தும்... சென்று சேர்ந்தது - எல்லா உயிர்களினிடத்தேயும் வியாபித்து

ஒவியுடன் சிறந்து விளங்கும் அச்சுதன் என்ற திருநாமத்தை யுடையவனும், அலைகளை உடைய பாற்கடலில் தோன்றிய திவ்யமான அமுதை தேவர்களுக்கு அளித்தவனுமான கண்ண னது திருக்கரம் போய்ச் சேர்ந்தது. **தீவிய**, என்பது **திவ்ய** என்ற வடசொல்லின் விகாரம்; மிகச் சிறந்த என்பது பொருள்.

139. சேதிமன் னவன்றன் முடியினை நெடியோன்
திகிரிசென் றரிந்திட வொருபொன்
சோதிமற் றவன்ற னுடலினின் றெழுந்து
சுடரையும் பிளந்துபோய் மீண்டு
மாதிர மனைத்து மொளியுற விளக்கி
மண்ணளந் தருள்பத மடைய
வேதியர் முதலோர்யாவரும் வேள்விப்
பேரவை வேந்தருங் கண்டார்.

[சேதி மன்னவன் தன் முடியினை நெடியோன் திகரி சென்று அரிந்திட ஒரு பொன் சோதி, மற்று அவன் தன் உடலினின்று எழுந்து, சுடரையும் பிளந்துபோய் மீண்டு மாதிரம் அனைத்தும் ஒளி உற விளக்கி, மண் அளந்து அருள் பதம் அடைய, வேதியர் முதலோர் யாவரும், வேள்வி பேர் அவை வேந்தரும் கண்டார்.]

**விளக்கம்:**—சிசுபாலனது முடியைக் கண்ணனது சக்கரம் அறுத்ததும், அவனது உடலிலிருந்து பொன்மயமான ஓர் ஒளி எழுந்து, சூரியனையும் பிளந்து சென்று, திக்குக்களை எல்லாம் விளங்கச் செய்து கொண்டு திரும்பி வந்து, கண்ணனது மண் அளந்த திருவடியைச் சேர, (அதை) வேள்விப் பேரவை (இருந்த) வேந்தரும். வேதியர் முதலான யாவரும் கண்டு வியந்தார்,— என்பது பொருள்.

நெடியோன்-திருமால், கண்ணன், சுடர்-சூரியன். மாதிரம்-திக்கு. மண் அளந்தருள் பதம்- திரிவிக்ரமாவதாரத்தில் உலகத்தை ஓரடியால் அளந்த கண்ணனது திருவடி. அருள்: மேன்மைப் பொருள் குறிக்கும் துணை வினை.

140. ஈதொரு புதுமை யிருந்தவா வென்பா
ரிந்திர சாலமோ வென்பார்
மாதொரு பாக னல்லதிக் கண்ணன்
மதிகுலத் தவனல னென்பார்

கோதொரு வடிவாம் புன்மொழி கிளைஞர்
கூறினும் பொறுப்பரோ வென்பார்
காதொரு குழையோ னிளவலைத் தேர்மேற்
கண்டுதங் கண்ணிணை களிப்பார்.

[ஈது ஒரு புதுமை இருந்த ஆறு என்பார். இந்திரசாலமோ என்பார், மாது ஒரு பாகன் அல்லது இ கண்ணன் மதி குலத்தவன் அலன் என்பார். கோது ஒரு வடிவு ஆம் புன்மொழி கிளைஞர் கூறினும் பொறுப்பரோ என்பார், காது ஒரு குழையோன் இளவலை தேர் மேல் கண்டு தம் கண் இணை களிப்பார்.]

விளக்கம்:—(அவை இருந்தோர், இவனது உடலினின்று சோதி எழுந்து கண்ணனது திருவடி சேர்ந்த) இது ஓர் அதியம் இருந்த விதம் என்னே என்று வியப்பார்; அல்லது இந்திரசால வித்தையோ என்பார்; மாது ஒரு பாகனான சிவபிரான் அல்லாமல் மதிக்குலம் வந்தவன் அல்லன், என்பார்; குற்றத்தின் வடிவமே போன்ற புன்சொற்களை, நெருங்கிய சுற்றமே கூறினும், (அதைக் கேட்பவர்) பொறுப்பாரோ. என்பார்; அதாவது பொறார் என்றபடி. காதிலே ஒரு குண்டலத்தை அணிந்த பலராமனது தம்பியாகிய கண்ணனைத் தேரினிடத்தே கண்டு, கண் இணை களிக்கப்பெற்றாரும் ஆயினர்,—என்பது

ஒரு காதில் குண்டலத்தையும், ஒரு காதில் குழையையும் அணிந்தவன் பலராமன்.

### சிசுபாலன் வரலாறு

141. அதிசயித் திவ்வா றிருந்துழி யிருந்தோ
ரனைவரு மாழியான் றன்னைத்
துதிசெயத் தருமன் சுதன்முத லெவருந்
தொழுதெதிர் வந்துவந் திறைஞ்ச
விதியெனப் பொருத வெங்களத் திடையவ்
வியாதமா முனியெடுத் துரைப்ப
மதியுடைக் கடவுள் வீடுமன் முதலா
மன்னவர் யாவருங் கேட்டார்.

[அதிசயித்து இவ்வாறு இருந்துழி, இருந்தோர் அனைவரும் ஆழியான் தன்னை துதி செய, தருமன். சுதன் முதலாம் எவரும் தொழுது எதிர் வந்து வந்து இறைஞ்ச, விதி என

பொருத வெம் களத்திடை அ வியாத மாமுனி எடுத்து உரைப்ப, மதி உடைக் கடவுள் வீடுமன் முதல் ஆம் மன்னவர் யாவரும் கேட்டார்.]

**விளக்கம்:—** தருமன் சுதன்- தர்மராஜனின் மகனான தருமன், எதிர் வந்து தொழுது இறைஞ்ச என்று இயைக்க. அதாவது கைகூப்பித் தொழுது தலை வணங்க, என்றபடி. விதி எனப் பொருத-ஊழ்வினைப் பயன் என்று சொல்லும்படி போர் செய்த. அந்தக் கொடிய போர்க்களத்தில் (சிசுபாலனது வரலாற்றை) வியாச மாமுனிவன் எடுத்துரைபப பீஷ்மன் முதலிய யாவரும் கேட்டார். மதி உடை கடவுள், வீடுமன்- மெய்யறிவுடைமையோடு கடவுள் தன்மையும் வாய்ந்த வீமன், ஆழியான்-கடல் போன்ற நீல நிறத்தினனான கண்ணன்; அல்லது சக்ராயுதத்தையுடைய திருமாலின் அவதாரமான கண்ணன்.

142. ஐவகை வடிவா யெங்குமாய் நின்ற
வச்சுத னமலனா னந்தன்
செய்யொளி திகழும் பங்கயக் கண்ணன்
றிருமகள் கொழுநனைக் காணத்
துய்யசெய் தவத்துத் துருவாச முனிவன்
சேறலுஞ் சுடர்கொள்வை குந்தம்
மெய்யுறு கோயிற் றுவாரபா லகரவ்
வேதபண் டிதன்றனை விலக்க.

[ஐவகை வடிவு ஆய் எங்கும் ஆய் நின்ற அச்சுதன் அமலன், ஆனந்தன், செய் ஒளி திகழும் பங்கயம் கண்ணன், திருமகள் கொழுநனை காண, துய்ய செய் தவத்து துருவ ச முனிவன் சேறலும், சுடர் கொள் வைகுந்தம் மெய் உறு கோயில் துவார பாலகர் அ வேத பண்டிதன் தனை விலக்க,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :—**ஐவகை வடிவம் - பரத்வம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம் அர்ச்சை என்ற ஐந்து வகை வடிவங்கள். அச்சுதன் - திருமாலின் நாமங்களில் ஒன்று. அமலன் - குற்ற மில்லதாவன், செய் ஒளி திகழும் பங்கயக் கண்ணன் - சிவந்த ஒளி திகழும் தாமரை மலர் போன்ற கண்களை உடையவன். துய்ய - பரிசுத்தமான. செய் தவத்து துருவாச முனிவன் - அரி தன் செய்த தவத்தை உடைய துர்வாச முனிவன் சேறலும் -

(வைகுந்தத்தைச்) சேர்ந்தபோது, சுடர் கொள் வைகுந்தம் - ஒளிமயமான வைகுந்தம். மெய் உறு துவார பாலகர்-மெய்மைக் குணம் பொருந்திய வாயில் காப்போரான ஜய விஜயர்கள், அவர்கள், கோயிலுட் செல்லும் முனிவனைத் தடுத்தார்கள்,

**பரத்வம்** - வைகுந்தத்தில் இருக்கும் நிலை. **வியூகம்** - வாசுதேவ - சங்கர்ஷண - பிரத்யும்ந - அநிருத்ரர்களாகிய நிலை. **விபவம்** - இராமகிருஷ்ண அவதாரங்கள். அந்தர்யாமித்வம் - சராசரப் பொருள் எல்லாவற்றிலும் எள்ளினுள் எண்ணெய் போல் கரந்து கிடத்தல். அர்ச்சை - விக்ரக ரூபத்தில் இருத்தல்.

**143.** **விலங்கிய விருவர் தம்மையு மந்த**
**வெஞ்சின முனிவரன் வெகுண்டு**
**துலங்கிய கோயிற் றுவாரம்விட் டவனி**
**தோன்றுமன் போயெனச் சபித்தான்**
**அலங்கலந் துளவ மௌலியா னதுகேட்**
**டந்தணன் றனையெதிர் கொண்டு**
**கலங்கிய துவார பாலர்நின் சாபம்**
**கடப்பதெக் காலமோ வென்றான்.**

[விலங்கிய இருவர் தம்மையும் அந்த வெம் சின முனிவரன் வெகுண்டு, கோயில் துவாரம் விட்டு அவனி தோன்றுமின் போய் என சபித்தான், அலங்கல் அம் துளவம் மௌலியான் அது கேட்டு அந்தணன் தனை எதிர்கொண்டு, கலங்கிய துவாரபாலர் நின் சாபம் கடப்பது எ காலமோ என்றான்.]

**விளக்கம் :**—விலங்கிய - [விலக்கிய] தடுத்த. கோயில் துவாரம் - கோயிலின் வாயில். அவனிபோய் தோன்றுமின், என முனிவன் சபித்தான். அம் துளவம் அலங்கல் மௌலியான் - அழகிய துளசிமாலையை அணிந்த திருமுடியை உடைய திருமால். திருமால், முனிவனை எதிர்கொண்டு, 'துவாரபாலர் உன் சாபம் கடப்பது எப்பொழுது,' என்று கேட்டான், என்க. **விலக்கிய,** என்ற பிறவினை எதுகை நோக்கி, இங்கே **விலங்கிய** என நின்றது.

**144.** **என்றலு முனியுந் தொழுதிவ ரெழுகா**
**லின்புறு மன்பராய் வருதல்**
**அன்றிமும் மடங்குன் பகைவராய் வருத**
**லல்லதிங் குன்பத மணுகார்**

மன்றலந் துளப மாலையா யென்ன
மலர்மகண் மகிழனு மவரைக்
கன்றிய மறையோன் சாபநீர் கடக்குங்
கருத்துமற் றியாதுகொ லென்றான்.

[என்றலும், முனியும் (திருமாலை) தொழுது, இவர் எழு கால் இன்புறும் அன்பராய் வருதல், அன்றி மும்மடங்கு உன் பகைவராய் வருதல் அல்லது, உன் பதம் அணுகார், மன்றல் அம் துளப மாலையாய் என்ன, மலர் மகள் கொழுநனும் அவரை, கன்றிய மறையோன் சாபம் நீர் கடக்கும் கருத்து மற்று யாது கொல் என்றான்.]

**விளக்கம் :—**என்றலும் - என்று திருமால் கேட்டதும். தொழுது - திருமாலைத் தொழுது. எழுகால் இன்புறும் அன்ப ராய் வருதல் - ஏழு முறை இன்புறும் பக்தராய்ப் பிறத்தல், அன்றி - அல்லாமல், அதாவது அது அன்றாயின். மும்மடங்கு பகைவராய் வருதல் -மூன்று முறை தேவரீருக்குப் பகைவராய்ப் பிறத்தல். அல்லது - இந்தஇரண்டு வழிகளில் ஒன்றினால் அல் லாமல், (உன் பதம் அதாவது திருவடியை அடையார்). (இவ் வாறு முனிவன் கூறத் திருமால் துவார பாலகரை நோக்கி) ''எவ்வழி சாப நீக்கம் பெறக் கருதுகின்றீர்,'' என்று கேட்டான், என்றபடி. மற்று: இசை.

145. மற்றவ ரிறைவன் மலரடி வணங்கி
வான்பிறப் பேழுற மாட்டோம்
உற்றுமுப் பவமு முனக்குவெம் பகையா
யுற்பவித் துன்பத முறுவோம்
வெற்றிகொண் முதிர்போர் நேமியா யென்றார்
விமலனுங் கொடியவெஞ் சாபம்
அற்றிடும் வகையவ் வரமவர்க் களித்தா
னசுரரா யவரும்வந் துதித்தார்.

[மற்று, அவர் இறைவன் மலர் அடி வணங்கி, வான் பிறப்பு ஏழ் உறமாட்டோம், உற்று முப்பவமும் உனக்கு வெம் பகையாய் உற்பவித்து உன் பதம் உறுவோம், வெற்றி கொள் முதிர் போர் நேமியாய் என்றார்; விமலனும் கொடிய வெம் சாபம் அற்றிடும் வகை அ வரம் அவர்க்கு அளித்தான்; அசுரராய்அவரும் வந்து உதித்தார்.]

**விளக்கம்:—**மற்று. (உங்கருத்து யாது என்று திருமால்) கேட்ட பின்பு. அவர் - ஜய விஜயர்களாகிய துவாரபாலகர்,

வான் பிறப்பு - சிறந்த பிறப்பு. முப்பவமும் உற்று - மூன்று பிறப்பையும் அடைந்து. உற்பவித்து - பிறந்து, தோன்றி வெற்றி கொள் முதிர் போர் - வெற்றி கொள்ளும் பெரிய போரைச் செய்யும் நேமியாய் சக்கரத்தைக் கையில்கொண்ட திருமாலே. விமலன் - குற்றம் அற்றவன், அதாவது கருமத் தொடர்பு இல்லாதவன், திருமாலும் அவர் கேட்ட அவ் வரத்தைக் கொடுத்தான், அவர்களும் அசுரராய் வந்து பிறந்தார்கள் என்றபடி.

146. இரணிய னிரணி யாக்கனென் றுரைக்கு
மியற்பெய ரிருவரு மெய்தி
முரணிய கொடுமை புரிந்துமூ வுலகு
மொய்ம்புடன் கவர்ந்திடு நாளில்
அரணியி னழல்போ னரவரி யுருவா
யச்சுதன் றூணிலங் குதித்துத்
தரணியி னுகிராற் பிளந்துமுன் யுகத்திற்
றன்பகை செகுத்தனன் பின்னும்.

[இரணியன் இரணியாக்கன் என்று உரைக்கும் இயல் பெயர் இருவரும் எய்தி, முரணிய கொடுமை புரிந்து மூவுலகும் மொய்ம்புடன் கவர்ந்திடு நாளில், அரணியின் அழல்போல் நரஅரி உருவாய் அச்சுதன் தூணில் அங்குரித்து, தரணியின் உகிரால் பிளந்து முன்யுகத்தில் தன் பகை செகுத்தனன், பின்னும்— அடுத்த செய்யுளோடு தொடரும்-]

**விளக்கம்:**—முரணிய - தர்ம விரோதமான. மொய்ம்பு - தோள்வலி. தனது வலியினால் மூவுலகும் கவர்ந்து தன் வசப் படுத்திக் கொண்ட காலத்தில், திருமால் நர அரயாம் அவதரித்து இரணியனை அழித்தான், என்பதாம். அரணியின் அழல்-கட்டை யிலிருந்து எழும் தீ. நரஅரி - நரசிங்கமூர்த்தி அங்குரித்து - தோன்றி; தரணியின் உகிர் - சூரியனைப்போல் விளங்கும் நகம். செகுத்தல் அழித்தல். தரணி - சூரியன்.

நா அரியாய் இரண்யனைக் கொன்றதைக் கூறியது. வராகமாய்த் தோன்றி இரணியாக்கனை அழித்ததற்கு உபலட்சணம். அரணி தீ உண்டாவதற்கான கட்டை (மரத்துண்டு) 'தரணியில் (பூமியில்) முரணி கொடுமை புரிந்து,' என்று கூட்டியு ம்பொருள் செய்யலாம்,

147. அரக்கர்தைங் குலத்துக் கதிபதி யாகி
யாண்டுபோய் மீண்டுமங் குரித்துத்
தருக்குட னவர்க ளிருவரு முறையாற்
றம்பியுந் தமையனு மானார்
சிரக்குவை யுடனே புயவரை நிரையுஞ்
சிந்தவச் சிந்துவி னிடையே
சரக்குவை சொரிந்தா னமலனவ் வுகத்துத்
தசரதன் தன்வயிற் றுதித்தே.

[அரக்கர் தம் குலத்துக்கு அதிபதி ஆகி, ஆண்டு போய் மீண்டும் அங்குரித்து, தருக்குடன் அவர்கள் இருவரும் முறையால் தம்பியும் தமையனும் ஆனார்: சிரம் குவையுடனே புயம்வரை நிரையும் சிந்த, சிந்துவின் இடையே சரம் குவை சொரிந்தான் அமலன் அ உகத்து தசரதன் தன் வயிறு உதித்தே.]

**விளக்கம் :**—அவர்கள் இருவரும் மீண்டும் ஆண்டுபோய் அங்குரித்து, அரக்கர் தம் குலத்துக்கு தருக்குடன் அதிபதி ஆகி, முறையால் தம்பியும் தமையனும் ஆனார்; அமலன் (உம்) அ உகத்து தசரதன் தன் வயிறு உதித்து, அ சிந்துவின் இடையே (உள்ள இலங்கையில்) சிரக்குவையுடனே புயவரை நிரையும் சிந்த சரக்குவை சொரிந்தான்,—என்பது அன்வயம்,

ஆண்டு போய் அங்குரிந்து - பூமியில் போய் பிறந்து. தருக்கு- செருக்கு, பெருமிதம். அதிபதி-தலைவர், அரசர். தம்பியும் தமையனும் கும்பகர்ணனும் இராவணனும் அமலன்-இராமன் அ உகம் -திரேதாயுகம். சிந்து கடல், (தென்கடலின் இடையே அமைந்தது இலங்கை) குவை - குவியல். புயவரை நிரை - தோள்களாகிய மலைகளின் வரிசை, அதாவது மலைபோன்ற புயவரிசை, சரக்குவை - அம்புக் கூட்டம். இராவணன் தலை பத்தும் தோள் இருபதும் உடையனாதல்பற்றி, "சிரக்குவையுடன் புயவரை நிரை," எனப்பட்டது.

148. இந்தநல் லுலகத்தி லிறைவனுக் கன்னோ
ரிருவருங் கிளைஞரா யெய்தி
வந்தனர் வஞ்சக் கஞ்சமா மனுமிம்
மைத்துனன் றானுமாய் மன்னோ
சிந்தையி லுணர்வீ ரென்றுகொண் டுரைத்தான்
சித்தசித் துணர்ந்தருண் முனியும்

அந்தமன் னவையி னிருந்துளோ ரெல்லா
மமலனைத்துதித்ததி சயித்தார்.

[இந்த நல் உலகத்தில் இறைவனுக்கு அன்னோர் இருவரும் கிளைஞராய் எய்தி வந்தனர் வஞ்சம் கஞ்சன் மா மாமனும், இ மைத்துனன் தானும் ஆய் (மன்னோ), சிந்தையில் உணர்வீர் என்று (கொண்டு) உரைத்தான் சித்து அசித்து உணர்ந்து அருள் முனியும்; அந்த மன் அவையில் இருந்துளோர் எல்லாம் அமலனை துதித்தார் அதிசயித்து,]

**விளக்கம் :**—இந்த நல் உலகம் - துவாபர யுகம்; துவாரபால கரின் சாப விமோசனத்திற்கு உரிய யுகமாயதால், **நல் உலகம்** எனப் பட்டது. இறைவன் - கண்ணன். கிளை–சுற்றம். (கஞ்சன் மாமனாகவும், சிசுபாலன் அத்தை மகனாகவும்) எய்தி வந்தனர் வந்து பிறந்தனர். (மன்னோ : அசை). சிந்தையின் உணர்வீர்- என்று கொண்டு உரைத்தான், என்பதிலுள்ள **கொண்டு** அசை. சித் அசித் உணர்ந்தருள் முனி - சித்தும் அசித்துமாகிய தத்துவப் பொருள்களைப் பற்றிய தெளிவுடைய வியாசன். மன் அவை - பெரிய சபை, அல்லது அரசர்களைக் கொண்ட சபை. 'அமலனை அதிசயித்துத் துதித்தார்,' என்று மொழி மாற்றிப் பொருள் கொள்க.

சித், அசித், ஈச்வரன், என்பன அறிய வேண்டிய மூன்று தத்துவங்கள். அறிவுடையது **சித்**; அதாவது, ஜீவாத்மா, அறி வில்லாத ஜடம் **அசித்**. முழு முதற் கடவுளான பரமாத்மா **ஈச்வரன்.** இம் மூன்றையும் **தத்வத்திரயம்** என்பர். இங்கே, சித்தையும் அசித்தையும் உணர்ந்த வியாசன், என்றது ஈச்வரனை யும் உணர்ந்தமைக்கு உபலக்ஷணமாகும்.

149. வீடுமன் விதுரன் துரோணனே முதலாம்
விரகிலா வுணர்வுடை வேந்தர்
நாடினர் மனத்திற் புளகமுற் றுடல
நயனநீர் மல்கநாக் குழறிப்
பாடினர் புகழ்ந்து பரவினர் பரவிப்
பைந்துழாய் கமழ்மலர்ப் பாதம்
சூடினர் சுருதிக் கெட்டொணா தொளிருஞ்
சுடர்மணித் துய்யசோ தியையே.

[வீடுமன், விதுரன், துரோணனே முதல் ஆம் விரகு இலா உணர்வு உடைய வேந்தர் நாடினர் மனத்தில் புளகம் உற்று

உடலம் நயனம் நீர் மல்க, நாகுழறி பாடினர்; புகழ்ந்து பரவினர், பரவிப் பைந்துழாய் கமழ் மலர் பாதம் சூடினர், சுருதிக்கு எட்டு ஒண்ணாது ஒளிரும் சுடர் மணி துய்ய சோதியை, ஏ.]

**விளக்கம் :**—வீடுமன்...வேந்தர், சுருதிக்கு எட்டொணாது ஒளிரும் சுடர்மணித் துய்ய சோதியை மனத்தில் நாடினர்; உடலம் புளகம் உற்று நயனம் நீர் மல்க, நா குழறிப் பாடினர்; புகழ்ந்து பரவினர்; பரவிப் பைந்துழாய் கமழ் மலர் பாதம் சூடினர், என்பது அன்வயம். சுருதிக்கு...துய்யசோதி - வேதங்களுக்கு எட்ட முடியாதபடி இருந்து விளங்கும் ஒளியை உடைய நீலமணி போன்ற பரிசுத்தமான ஜோதி ஸ்வரூபியான கண்ணன். (அவனை) மனத்தில் நாடினர் - மனத்தினிடத்தே கொண்டு தியானித்தனர். அதன் பயனாய், மெய் சிலிர்க்கப் பெற்று நயனத்தில் (கண்களில்) நீர் பெருகி, நா குழறி அப் பரம புருஷனது கல்யாண குணங்களைப் பாடினர். புகழ்ந்து பாடின - கொண்டாடித் துதித்தனர். அவ்வாறு துதித்து, பைந்துழாய் மணக்கும் தாமரை மலர் போன்ற திருவடிகளை ணைங்கினார்கள்.

வீடுமன் முதலியோர், கபடம் வஞ்சனை முதலிய தாழ்மைக் குணம் இல்லாத மேன்மக்களாதலால், 'விரகு இலா உணர்வு உடை வேந்தர்,' எனப்பட்டார். துரோணன், பிறப்பால் அந்தண குலத்தவனாயினும், வீடுமன் அளித்த கொடை, கொடி முதலிய அரச சின்னங்களை ஏற்று ஒரு க்ஷத்திரியனைப்போல் ஒழுகியது பற்றி, இவனையும் சேர்த்து வேந்தர் என்றார். மெய் சிலிர்த்தல், கண்ணீர் பெருகல், நாக்குழறல், ஆகியவை, ஆனந்த பரவச நிலையின் மெய்ப்பாடுகள்.

**வந்தவர் விடைபெறல்**

150. அப்பொழு தமல னருஞ்சின மொழிந்தாங்
கருளுடை யறத்தின்மைந் தனைப்பார்த்(து)
இப்பொழு தரச ரானவர்க் கெல்லா
மிருஞ்சிறப் புதவுகென் றிசைப்ப
முப்பொழு துணரு முனிவரன் பணியான்
முறைமுறை பூசனை புரிந்தான்
மைப்பொழு தொளிகூர் வெண்ணில வுமிழு
மதிக்குலத் துதித்தருண் மன்னன்.

[அ பொழுது அமலன் அரும் சினம் ஒழிந்து, ஆங்கு அருள் உடை அறத்தின் மைந்தனை பார்த்து இபொழுது அரசர் ஆன

வர்க்கு எல்லாம் இருஞ்சிறப்பு உதவுக என்று இசைப்ப, முப்பொழுது உணரும் முனிவரன் பணியால் முறை முறை பூசனை புரிந்தான், மை பொழுது ஒளிகூர் வெள் நிலவு உமிழும் மதி குலத்து உதித்த மன்னன்.]

**விளக்கம் :—** அப்பொழுது அமலன்...என்று இசைப்ப, மைப் பொழுது...மன்னன், முப்பொழுது உணரும் முனிவரன் பணியால்...பூசனை புரிந்தான்,—என்பது அன்வயம்.

அருள் உடை அறத்தின் மைந்தன் - தருமன். இருஞ் சிறப்பு-வந்தனோபசாரங்கள். முப்பொழுது உணரும் முனிவரன்-மூன்று காலங்களையும் அறிய வல்லவனான விசயமாமுனிவன். முறை முறை - முறை தவறாதபடி. மைப்பொழுது - இரவு. மதிகுலம் உதித்த மன்னன் - சந்திரகுலத்து வந்த தருமன்.

முனிவன் பணித்தபடி முதலில் கண்ணனுக்கும், பிறகு மற்றவர்க்கும் அவரவர் தகுதிக்கு ஏற்றபடி முறையே உபசாரங்களைத் தருமன் செய்தான், என்க. தேவர்களை இரு திணையாலும் கூறல் விதியாதலால், **யமதர்மன், அறம்** என்று அஃறிணையால் குறிக்கப்பட்டான். ஆங்கு : அசை. கூர் : மிகுதிப் பொருளது.

151. **அருமறை முறையா லரசனை முனிவ**
**ரனைவரு மாசிசொற் றருளித்**
**தருநிரை பயிலுந் தத்தம விபனஞ்**
**சார்ந்தனர் தகவுடன் மீளக்**
**கருமுகி லனைய மேனியங் கருணைக்**
**கண்ணனுங் கிளையுடன் றுவரைத்**
**திருநக ரடைந்தான் சென்றுவன் றிறல்கூர்**
**சேதிபப் பெரும்பகை செகுத்தே.**

[அருமறை முறையால் அரசனை முனிவர் அனைவரும் ஆசி சொற்று அருளி, தரு நிரை பயிலும் தம் தம் விபனம் சார்ந்தனர் தகவுடன் மீள, கருமுகில் அனைய மேனி அம் கருணை கண்ணனும் கிளையுடன் துவரை திருநகர் அடைந்தான் சென்று, வன் திறல் கூர் சேதிபன் பெரும் பகை செகுத்து, ஏ.]

**விளக்கம் :—** முனிவர் அனைவரும் வேதம் விதித்த முறைப் படி தருமனை, ஆசீர்வாத வார்த்தைகளைச் சொல்லி அநுக்கிரகித்து, என்பது முதலடியின் பொருள். தகவுடன் தரு நிரை பயிலும் தம்தம் விபனம் மீளச் சார்ந்தனர் - (ஆசீர்வதித்தபின் இருடிகள் தம் தகுதிக்கு ஏற்ற உபசாரங்களைப் பெற்று) மரங்கள்

வரிசையாய் அமைந்த அவரவர் வசிக்கும் தபோவனத்தை மீண்டும் சேர்ந்தார்கள். (விபனம் - தபோவனம்).

கண்ணனும், வலிய ஆற்றல் மிகுந்த சேதி நாட்டு அரசனான சிசுபாலனின் பெரிய பகையை அழித்து, தன் இளையுடன் துவாரகைத் திருநகர் சென்று அடைந்தான், என்பதாம்.

152. அராவவெங் கொடியோ னாதியா வுள்ள
வரசருந் தன்னக ரடைந்தார்
விராடனும் யாக சேனனு முதலாம்
வேந்தருந் தம்பதி புகுந்தார்
சராசனத் தடக்கைச் சல்லியன் முதலோர்
கிளையுடன் றம்புரஞ் சார்ந்தார்
பராவரு முதன்மைப் பாண்டவர் கடற்பார்
பண்புறத் திருத்தியாண் டிருந்தார்.

[அராவம் வெம் கொடியோன் ஆதியா உள்ள அரசரும் தம் நகர் அடைந்தார், விராடனும், யாகசேனனும் முதல் ஆம் வேந்தரும் தம் பதி புகுந்தார், சராசனம் தட கை சல்லியன் முதலோர் கிளையுடன் தம்புரம் சார்ந்தார், பராவு அரு முதன்மை பாண்டவர், கடல் பார் பண்பு உற திருத்தி ஆண்டு இருந்தார்.]

**விளக்கம் :—** அராவம் வெம் கொடியோன் - துரியோதனன். விராடன் - மத்ஸிய நாட்டு அரசன். யாகசேனன் - பாஞ்சால நாட்டு அரசன். சல்லியன் - மத்திய தேசத்து அரசன். சராசனத் தடக்கை சல்லியன் - வில் ஏந்திய பெரிய கையை உடைய சல்லியன். பராவு அரும் - துதித்தற்கு அரிய, அதாவது, மிகமிகப் போற்றற்கு உரிய. கடல்பார் - பூமி. பண்பு உறத் திருத்தி - நன்மை மிகும்படி திருத்தம் செய்து. ஆண்டு இருந்தார் - அரசு செலுத்திக் கொண்டு இருந்தார், அல்லது (இந்திரப் பிரத்தமாகிய) அந்த இடத்திலே இனிதே இருந்தனர்.

அடைந்தார், புகுந்தார், சார்ந்தார் என்ற சொற்கள், ஒரு பொருள் உடையன ஆதலால், **பொருட்பின்வரு நிலைஅணி** ஆகும்.

153. முன்குலத் தவர்க்கு முனிகுலத் தவர்க்கு
மும்மதக் கைமுகக் களிற்று
மன்குலத் தவர்க்கும் வான்குலத் தவர்க்கும்
வரம்பிலா வகைகலை தெரியும்

நன்குலத் தவர்க்கும் பொருளெலா நல்கி
நாடொறும் புகழ்மிக வளர்வான்
தன்குலக் கதிர்போல் லேந்தொளி சிறந்தான்
தண்ணளித் தருமரா சனுமே.

[முன் குலத்தவர்க்கும், முனி குலத்தவர்க்கும், மும்மதம் கை முகம் களிறு மன் குலத்தவர்க்கும், வரம்பு இலா வகை கலை தெரியும் நல் குலத்தவர்க்கும், பொருள் எலாம் நல்கி நாள் தொறும் புகழ்மிக வளர்வான், தன் குலம் கதிர்போல் ஏந்து ஒளி சிறந்தான் தண்ணளி தருமராசனும், ஏ.]

**விளக்கம் :**—முன் குலத்தவர் - அந்தணர். முனிக் குலத் தவர் - அவ்வந்தணர்களில் சிறந்தவரான முனிவர் என்ற பகுப் பினர். மும் மதம் கைமுகக் களிற்று மன் குலத்தவர் - அரசர் குலத்தவர். வரம்பு இலா வகை கலை தெரியும் நல்குலத்தவர் - அளவு இறந்த பலவகையான கலைகளை அறிந்த குலத்தவரான, புலவர், இசை வல்லுநர், சிற்பி, முதலியவர். (இவர்களுக்கெல் லாம்) தண்ணளி தருமராசனும், புகழ் வளர்வான் நாள்தோறும் பொருள் எலாம் நல்கி - கருணை உடைய தருமபுத்திரனும் புகழ் வளர்ந்து விருத்தியாகும்படி, (ஆடை அணிகலன் பொன் முதலிய) பொருள்கள் எல்லாம் கொடுத்து, தன் குலக் கதிர்போல் - தன் குலத்தின் ஆதி புருஷனான சந்திரன்போல், ஏந்து ஒளி சிறந் தான் - சிறந்த (புகழ்) ஒளி மிக்கவனானான்.

அளி - அன்பு காரணமாய் எழும் அருள். அருள், தண்மை உடையது. எனவே, தண்ணளி எனப்பட்டது. கரை இலாதது கல்வி. என்பர். எனவே, "வரம்பிலாப் பல்வகைக் கலை," என்றாராயிற்று.

இராயசூயச் சருக்கம் முற்றும்.

## 2. சூதுபோர்ச் சருக்கம்

பாண்டவர் தலைவனான தருமன் துரியோதனின் மாம னான சகுனியுடன் சூதாடியதைக் கூறும் சருக்கம், அல்லது பாகம், என்ற பொருளது இத் தலைப்பு. போரேபோல், இச் சூதிலும் வெற்றி தோல்விகள் உளவாதல் பற்றிச் சூதாட்டம் போர் எனப்பட்டது.

## தெய்வ வணக்கம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

1. ஞான மாகிய பரம்பர வமிழ்தமாய் நவிரறு மயக்காகி
வான மாயுடன் வாயுவாய்த் தேயுவாய் வனமுமாய் மண்ணாகித்
தான மாமறை முறைமையிற் பற்பல சராசரங் களுமாகி
ஏன மாயிவை யனைத்தையு மருப்பினா லேந்தினா னெனை யாண்டோன்.

[ஞானம் ஆகிய பரம்பரம் அமிழ்தமாய் நவிர் அறு மயக்கு ஆகி, வானம் ஆய், உடன் வாயு ஆய், தேயு ஆய், வனமும் ஆய், மண் ஆகி, தானம் ஆம் மறை முறைமையின் பல்பல சர அசரங் களும் ஆகி. ஏனம் ஆய் இவை அனைத்தையும் மருப்பினால் ஏந்தினான் எனை ஆண்டோன்.]

**விளக்கம் :**—ஞானம் - மயக்கங் கடந்த உண்மை அறிவு. பரம்பரம் - உயர்வின் உயர்ந்த, அதாவது மிகமிக உயர்ந்த. நவிர் அறு - குற்றம் அற்ற. மயக்கு - அஞ்ஞானம்; அதாவது மயக்க முடைய அறிவு. மெய்ஞ்ஞானம் என்று சொல்லப்படும் மிக உயர்ந்த இனிய தத்வ சொரூபியாகியும், குற்றமற்ற அஞ்ஞானமாகியும்,—என்பது முதலடியின் பொருள். தேயு - அக்கினி. வனம் - ஜலம். ஆகாசமாகியும், காற்றாகியும், அக்கினியாகியும், மண்ணாகியும், அதாவது நிலமாகியும்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். தானம் - ஸ்தானம் (இடம்). தானம் ஆம் மறை - இறைவனது இருப்பிடமாகிய வேதம். இறைவனது இருப்பிடமாகும் வேதங்கள் கூறும் முறைப்படி பலதிறப்பட்ட சர அசரப் பொருள்கள் ஆகியும் - என்பது மூன்றாமடியின் பொருள். ஏனம்-வராகம் (மேலே கூறியவாறு அமைந்து) ஏனமாய், (அதாவது வராகமாய்) அவதரித்து, மேலே கூறிய எல்லாப் பொருள்களையும் (பிரளயப் பெருக்கில் பட்டு அழியாமல்) மருப்பினால் (தந்தத்தினால்) ஏந்திக் காத்தருளிய திருமால் என்னை அடிமைகொண்டு ஆள்வோன் ஆவான்.—என்பது நான்காம் அடியின் பொருள்.

எங்குமாய் எல்லாமாயிருந்து ஸர்வத்தையும் காத்தளிப்பவனுமான திருமாலே என்னை ஆட்கொண்டவன், என்று கூறி வணங்கும் கருத்தது இவ் வாழ்த்துச் செய்யுள். பிரளயகாலத்தில்

திருமால் சராசரங்களை ஏனமாய்த் தோன்றி மருப்பினால் ஏந்திக் காத்தான் என்று நூல்கள் கூறும்.

தெவிட்டாத இன்பமாதல் பற்றி, ஞானம் அமிர்தம் எனப் பட்டது. மயக்கம் கடத்தற்கு அரியதாயினும், இறைவனது சரணம் பற்றின் அது, தானாகவே விட்டு நீங்கும் தன்மைய தாதல் பற்றி, **நவிரறு (குற்றமற்ற) மயக்கு** எனப்பட்டது. வானத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும் (அக்கினி யும்), தேயுவிலிருந்து வனமும் (நீரும்) வனத்திலிருந்து மண்ணும் (நிலமும்) உண்டாயின என்று வேதம் கூறும்.

## வேறு

## கவிக் கூற்று

2. **தாமரை யனைய செங்கட் டரணிப னிராய சூய**
**மாமக முற்றித் தங்கண் மாநகர் புகுந்த பின்னர்**
**நாமரு பனுவன் மாலை நாகவே றுயர்த்த செல்வக்**
**கோமக னிளைஞ ரோடுங் குறித்தது கூற லுற்றாம்.**

[தாமரை அனைய செம்கண் தரணிபன் இராயசூயம் மாமகம் முற்றி, தங்கள் மாநகர் புகுந்த பின்னர், நா மரு பனுவல் மாலை நாகம் ஏறு உயர்ந்த செல்வம் கோமகன் இளைஞரோடும் குறித்தது கூறல் உற்றாம்.]

**விளக்கம்:—** தாமரை அனைய செங்கண் தரணிபன்- கண்ணன். தரணிபன்- துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம் செய்து பூமியை காக்க அவதரித்த கண்ணன். தருமனது ராயசூயத்தை உடனிருந்து நிறை வேற்றிய பின், கண்ணன் தங்கள் மாநகர் (துவாரகை) புகுந்தான். கண்ணனுக்கும் பலராமனுக்கும் அவர்களைச் சேர்ந்தார்க்கும் உரிய நகராதல் பற்றித்**தங்கள் மாநகர்**, என்றார் புலவர், (கண்ணன் துவராகை சென்றபின்), நா மரு பனுவல் மாலை தரித்தவனும் நாக ஏற்றை (பெரிய நாகத்தை) கொண்ட கொடியை உயரத் தூக்கியவனுமான செல்வச் சிறப்புடைய துரியோதனன், தம்பிமாரோடு ஆலோ சித்துச் செய்ததை சொல்லத் தொடங்குவோம். என்றபடி.

**நாமரு(வு) பனுவல் மாலை**-புலவர்களின் நாவில் பொருந்திய பாமாலை, அதாவது, காதல், உலா முதலிய பிரபந்தங்களாகிய மாலை; அதாவது புலவர்கள் பரிசு பெறும் பொருட்டுப் பாடி அணிவித்த பிரபந்தமாலை. அம் மலையைத் தரித்தவனும் பாம்புக் கொடியை எடுத்தவனுமான துரியோதனன். இளைஞ

ரோடு, இனிச் செய்ய வேண்டியது பற்றி ஆலோசித்தான், என்க.

துரியோதனன் தனரேகை உடையவன் என்றும், அவன் கை பட்டால் தனம் ஒன்று பத்தாய்ப் பெருகும் என்றும் கூறுவர். அதனாலும் அவன் **செல்வக் கோமான்** என்று அழைக்கப் பட்டதாகக் கொள்ளலாம். நாக ஏறு, என்பது ஆகுபெயராய், அதன் வடிவம் எழுதப்பெற்ற கொடியைக் குறிக்கும். 'குறித்தது' என்பது 'குறித்துச்' செய்யப்பட்ட செயல் என்ற பொருளது.

3\. **கணைவரும் வரிவில் வாழ்க்கைக் கடுங்கன லனைய தோற்றத்**
**துணைவருந் தானுங் கங்கா கதனுமற் றெவருஞ்சூழ**
**இணைவரு மரச ரில்லா விகலரி யேறு போல்வான்**
**கிணைவரு மோதை மூதூர்க் கிளர்நெடும் புரிசை புக்கான்.**

[கணைவரும் வரிவில் வாழ்க்கை கடும் கனல் அனைய தோற்றம் துணைவரும் தானும் கங்காசுதனும். மற்று எவரும் சூழ, இணை வரும் அரசர் இல்லா இகல் அரி ஏறு போல்வான் கிணைவரும் ஓதை மூதூர் (முது-ஊர்) கிளர் நெடும் புரிசை புக்கான்.]

**விளக்கம்:—** மூன்றாவது அடியை முதலிலே வைத்துப் படிக்கவும், கணைவரும்...துணைவரும் தானும்-அம்புகள் வெளிப் பட்டுப் பாயும் கட்டமைந்த வில்லை ஏந்திய வாழ்க்கையையும் கடிய கனலைப் போன்ற உக்ரமான தோற்றத்தையும் உடைய தம்பியரும் தானும் (துரியோதனனும்). கங்காசுதன்-கங்கை மைந்தனான வீடுமன். மற்று எவரும்-மற்றுமுள்ள கர்ணன் சகுனி முதலியவர்களும். இணைவரும் அரசர் இல்லா இகல் ஏறு போல்வான்-தனக்கு ஒப்பாகும் அரசர் எவரையும் பெறாத வலிய ஆண் சிங்கத்தை ஒத்தவனான துரியோதனன், கிணை-மருதப் பறை. புரிசை-மதில்.

4\. **சென்றுழி யெவருந் தத்தஞ் செழுமனை யெய்தி வாசம்**
**துன்றிய வமளி கங்குற் றுயில்புரிந் தெழுந்த பின்னை**

நின்றவெம் பரிதித் தோற்றந் தொழுதுதந்
நியம முற்றி
வன்றிற லரசன் கோயின் மன்னவை வந்து
சேர்ந்தார்.

இராயசூயம் முற்றியபிறகு துரியோதனன், தம்பியரும், பீஷ்மன், கர்ணன் முதலியவரும் புடை சூழ மருதப்பறையின் ஓசை அறாது விளங்குகின்ற நெடிய மதிலையுடைய அத்தினபுரத்தினுட் புகுந்தான், என்பதாம். **வில் வாழ்க்கை,** என்றது ''வில்லைக்கொண்டு போர் செய்யும் வாழ்க்கை'' என்ற பொருளது. 'துணைவரும் தானும் புக்கான்,' என்ற ஒருமை முடிபு. சிறப்பினால் ஆய பால்வழு.

[சென்றுழி எவரும் தம்தம் செழு மனை எய்தி வாசம் துன்றிய அமளி கங்குல் துயில் புரிந்து எழுந்த பின்னை, நின்ற வெம் பிரிதி தோற்றம் தொழுது தம் நியமம் முற்றி, வல் திறல் அரசன் கோயில் மன் அவை வந்து சேர்ந்தார்.

**விளக்கம்:**—துரியோதனனைச் சேர்ந்த எல்லோரும் அத்தின புரியை அடைந்த பிறகு, (அவர்கள்) தத்தம் செழிப்புடைய வீடுகளை அடைந்து, இரவில் வாசனை மீதுள்ள மலர்ப் படுக்கையில் துயில் புரிந்து, பிறகு, கீழ்த்திசை நின்ற வெம் பரிதியின் (சூரியனின்) உதயத்தைத் தொழுது (அதாவது உதய சூரியனை வணங்கி) காலையில் செய்ய வேண்டிய கடன்களை (நித்ய கர்மானுஷ்டானங்களை) முறையே செய்து முடித்து, (அதன்பின்) வன்திறல் அரசனான துரியோதனனது மாளிகையில் உள்ள ராஜசபைக்கு வந்தனர், என்பது பொருள். வன்திறல், என்பது ஒரு பொருளுடைய இரு சொல், **'மிக வலிய'** என்பது பொருள்.

5. இறைஞ்சிய வேந்தர்க் கெல்லா மிருப்பளித்
தெதிர்ந்த வேந்தர்
திறஞ்செறி குருதி வேலா னினைவினோ டிருந்த
போதில்
அறஞ்செறி தானம் வண்மை யளவிலா தளித்து
நாளும்
புறஞ்சுவர் கோலஞ் செய்வான் பூபதிக்
குரைக்க லுற்றான்.

[இறைஞ்சிய வேந்தர்க்கு எல்லாம் இருப்பு அளித்து, எதிர்ந்த வேந்தர் நிறம் செறி குருதி வேலான் நினைனோடு இருந்த போதில், அறம் செறி தானம் வண்ணம் அளவு இலாது அளித்து நாளும் புறம் சுவர் கோலம் செய்வான் (ஆகிய கர்ணன்) பூபதிக்கு (துரியோதனனுக்கு) உரைக்கல் உற்றான்.]

**விளக்கம்** :—எதிர்ந்த வேந்தர் நிறம் செறி குருதி வேலான், இறைஞ்சிய வேந்தர்க்கெல்லாம் இருப்பு அளித்து, நினைவினோடு இருந்தபோதில்...உரைக்கலுற்றான்,—என்று அன்வயிக்க.

இறைஞ்சிய வேந்தர் - வணங்கிய வேந்தர், அதாவது தனக்கு அடங்கிய வேந்தர், எதிர்ந்த வேந்தர் - அடங்காத பகை அரசர். நிறம் - மார்பு. செறி குருதி வேலான் - இரத்தம் மிகுதியாகத் தோய்ந்த வேலை உடையவன் (துரியோதனன்). செறி, மிகுதிப் பொருள்து. (இறைஞ்சாதாரீ மார்பு பிளக்கும் வேலையுடையவனான துரியோதனன் சிந்தனை தேங்கிய மனத்தோடு இருந்தபோது) அறஞ் செறி தானம் வண்மை அளவிலாது அளித்து புறம் சுவர் கோலம் செய்வான் (கர்ணன்), பூபதிக்கு (துரியோதனனுக்குக்) கூறுவானானான்.

அறம் செறி தானம் - தர்ம வழியதான வளம் மிக்க ஈகை, வண்மை - கேட்டோர்க்கெல்லாம் தகுதி நோக்காது வழங்கும் கொடை. வள்ளல் என்ற புகழ்பெறும் கருத்தில் கர்ணன் ஈகையை மேற்கொண்டுள்ளான், என்ற கருத்தில் புலவர், "அவனைப் புறம் சுவர் கோலம் செய்வான்," என்றார். தர்மங்கடவாது வாழும் பாண்டவரைப் பகைக்கும் தீயனான துரியோதனனது தீமைக்குத் துணை நிற்பதால், கர்ணன் உள்ளத் தூய்மை இல்லாதவன் ஆகின்றான். எனவே, அவனது ஈகை; சுவரின் உட்புறம் பழுதுபட்டுக் கிடக்க, அதன் வெளிப்புறத்தை வெள்ளையடித்து அலங்காரம் செய்தலை ஒத்ததாகின்றது. இது பிறிதுமொழிதலணியின்பாற்படும். கூற வந்த ஒன்றை நேரே கூறாமல் வேறோர் விதமாக அதைத் தெரிவித்தல் இவ்வணியின் இலக்கணம். கர்ணன் உள்ளத் தூய்மை இல்லாதவன், என்பது "புறம் சுவர் கோலஞ் செய்வான்," என்று வேறோர் விதமாகக் கூறப்பட்டிருக்தல் காண்க.

**சுவர்ப்புறம்**, என்பது இங்கே **புறஞ்சுவர்**, என்று நிற்கின்றது. இது, இலக்கணப் போலியின் பாற்படும்.

6. தாதவிழ் குவளை மாலைத் தருமன்மா மதலை
பெற்ற
மேதகு வேள்விச் செல்வம் வேந்தரில் யாவர்
பெற்றார்

ஏதள வவன்றன் வாழ்க்கை யாரினி
யெதிருண் டென்று
பாதக நினைவைத் தானும் பகர்ந்தனன் பரிவு கூர.

[தாது அவிழ் குவளை மாலை தருமன் மாமதலை பெற்ற மேதகு வேள்வி செல்வம் வேந்தரில் யாவர் பெற்றார்? ஏது அளவு அவன் தன் வாழ்க்கை? யார் இனி எதிர் உண்டு? என்று பாதகம் நினைவதானும் பகர்ந்தனன் பரிவு கூர.]

**விளக்கம் :**—தருமன் மாமதலை - தருமன். மேதகு - மேன்மையான. வேள்விச் செல்வம் - இராஜசூய யாகம் செய்து முடித்தலால் உண்டான சிறப்பு. அவன் தன் வாழ்க்கை அளவு ஏது - அவனது சிறப்புடைய வாழ்க்கைக்கு ஏது அளவு? (அதாவது அளவு கடந்த சிறப்பினை உடைய வாழ்க்கையன், என்றபடி). யார் இனி எதிர் உண்டு - இனி தருமனுக்கு ஒப்பாகக்கூடிய அரசர் யார் இருக்கின்றார்? பரிவு கூர - (தேரோட்டி மகன் என்ற தாழ்மை போக்கித் தனக்கு அரச பதவி தந்த துரியோதனிடத்து) அன்புமிக; அல்லது, (முன்னமே பாண்டவர் பக்கம் பொறாமை கொண்ட துரியோதனனுக்குத்) துன்பம் மிக.

இராயசூய வேள்வி செய்த வேந்தர் பலர் தருமனுக்கு முன் இருந்திருக்கின்றனர். எனினும், மயன் அமைத்த சிறந்த மண்டபத்தில் வேள்வி செய்யும் சிறப்பையும், தம்பியர் திறை யாகக் கொணர்ந்த திரவியக் குவியலின் மிகுதியையும், கண்ணனும் வியாசனும் உடன் இருந்து வேள்வியை முற்றுவித்த மேன்மையையும் மற்றவர் பெற்றதில்லை. ஆதலால், கர்ணன், (தருமனுக்கு) 'யார் இனி எதிர் உளர்?' என்றான்.

பாதக நினைவு - பாபத்தின்பாற்பட்ட கெட்ட எண்ணம்; பிறருக்குத் துன்பம் விளைவிக்கவல்ல தீய எண்ணம். தானும் பகர்ந்தான் - முன்னரே பாண்டவரிடம் பொறாமை கொண்ட துரியோதனனிடம், அவர்பால் பொறாமையுடைய கர்ணனும் கூறினான், என்பது பொருள். எனவே, உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை- பாண்டவரிடம் பொறாமைகொண்ட சகுனி முதலிய தீயரும் இவ்வழி கூறப்போவதால், இந்த உம்மை எதிரது தழுவியதாதலுங்கூடும்.

குவளை மாலை பாண்டவர்க்கு உரிய மாலையாதலால், "தாதவிழ் குவளைமாலை அணிந்த தருமன்," எனப்பட்டது.

7. விதரண வினோதன் சொன்ன வார்த்தையும்
வேந்தர் வேந்தன்
இதயமு மொன்றாய் நின்ற வியற்கையைச் சகுனி
கண்டு
புதைநக மடங்க னாளும் புறஞ்செலா
தொடுங்கு மானால்
மதகரி விடுமோ வென்றான் வசையிசை யாகக்
கொள்வான்.

[விதரணம் வினோதன் சொன்ன வார்த்தையும் வேந்தர் வேந்தன் இதயமும் ஒன்றாய் நின்ற இயற்கையை சகுனி கண்டு, புதை நகம் மடங்கல் நாளும் புறம் செலாது ஒடுங்குமானால், மதகரி விடுமோ? என்றான், வசை இசை ஆகக் கொள்வான்.]

**விளக்கம் :—** வசை இசையாகக் கொள்வான் (சகுனி) விதரண வினோதன் என்றான்,—என்பது அன்வயம். விதரணம்- ஈகை, வினோதன் - வினோதமான செய்கை உடையவன். சூதலைப் பொழுது போக்கரகக் கொண்டுள்ளமைபற்றிக் கர்ணன், விதரண வினோதன் எனப்பட்டான், கர்ணனது கூற்றும், வேந்தர் வேந்தனான துரியோதனனது கருத்தும் ஒன்றாயிருத்தலைக் கண்ட வஞ்சகனுன சகுனி, பின் வருமாறு கூறுவான். புதை நக மடங்கல் - நகத்தை உள்ளே இழுத்துக் கொள்ளவும் வேண்டியபோது வெளியே நீட்டவும் வல்ல சிங்கம் நாளும் - எப்பொழுதும், புறம் செலாது ஒடுங்குமானால் மதகரி விடுமோ - வெளியிலே செல்லாது குகையிலே அடங்கிக் கிடக்கு மானால், அதற்கு (அஞ்சும் இயல்பினதான) மதயானை அதை எதிர்க்காமல் விடுமோ! (எதிர்க்கும் என்றபடி). "சிங்கமாகிய துரியோதனன் அடங்கியிருத்தலால், யானையாகிய தருமன் மேம்பாடுடையவன் ஆகின்றான்," என்பது பின்இரண்டடிகளின் கருத்து. இவ்வாறு தீயவனான சகுனி கூறினான். பின்னிரண்டு அடிகள் பிறிது மொழிதலை உட்கொண்டது.

துரியோதனனது மாமனான சகுனியைப் பழிக்கு அஞ்சாப் பாதகன் என்றும், பிறர் வழங்கும் வசையைப் புகழாகக் கொண்டு மேலும் மேலும் பழியை வளர்ப்பவன் என்றும், கூறும் கருத்தில் புலவர், வசை இசை கொள்வான், என்றார்.

8. சொல்லிடை நஞ்சு கக்குந் துன்மதியுடைய தம்பி
வில்லிடை நின்று தம்முன் வெம்மனம் களிக்கச்
சொன்னான்

அல்லிடை நிறைந்த தேனு மமுதவெண் கிரணத்
திங்கள்
எல்லிடை யிரவி முன்ன ரெவ்வழி நிகர்க்கு மென்றே.

[சொல் இடை நஞ்சு கக்கும் துன்மதி உடைய தம்பி, வில் இடை நின்று தம் முன் வெம் மனம் களிக்க சொன்னான், அல்லிடை நிறைந்தது ஏனும் அமுதம் வெண் கிரணம் திங்கள் எல்லிடை இரவி முன்னர் எவ்வழி நகர்க்கும்? என்று, ஏ.]

**விளக்கம் :**—வில் இடை நின்று - தம்பியாகிய துச்சாசனன், அண்ணனுக்கு முன் விற்கிடை (வில் - கிடை) தூரத்தில் நின்றுகொண்டு, (பாண்டவர்பால் பகை எண்ணம் வளரக்கூடிய வார்த்தைகளை) அவன் மனம் களிக்கச் சொன்னான். அவன் சொன்னதைப் பின்னிரண்டு அடிகள் கூறும். அல் - இரவு. அல்லிடை - இரவுப் பொழுதில். இரவில், அமுத மயமான வெள்ளிய கிரணங்களை உடைய சந்திரன் ஒளி மிகுந்து விளங்குமேனும், பகலில் இரவியின் எதிரிலே, சூரிய ஒளியை எவ்வாறு ஒத்திருக்கும்? (அதாவது, சூரியனின் முன் சந்திரன் ஒளி இழந்து நிற்க வேண்டியதே! என்றபடி). இவ்வாறு தம்பி, தமையன் மனங்களிக்கக் கூறினான், என்க.

தருமன், பல அரசர்களுக்குள்ளே மேம்பாடு உடையவனாகத் தோன்றினாலும், ராஜாதிராஜனாகிய உன் முன் மேன்மை கெட்டு விளங்க வேண்டியவனே, என்று துச்சாசனன் கூறும் கருத்தின் பின்னிரண்டு அடிகள். இதுவும் **பிறிது மொழிதல் அணியை** உட்கொண்டதே.

ஒரு விரலின் அளவு தூரத்தை **விரற்கிடை தூரம்** என்பது போல், ஒரு வில் கிடத்திற்கு உரிய தூரம் **விற்கிடை** ஆகின்றது. எதுகை நோக்கி. **வில்லிடை** என்றார். விற்கிடையின் தூரம் நான்கு முழம்.

**துரியோதனன் கூற்று**

9. தமையனுந் தம்பி சொன்ன தன்மையை யுணர்ந்து
நீதி
அமைதரு தந்தை கேட்ப வவன்பெருந் தாதை
கேட்பக்
கமைபெறு விதுரன் கேட்பக் கார்முகக் கன்னன்
கேட்ப
இமையவன் றுரோணன் கேட்ப யாவருங் கேட்பச்
சொல்வான்.

[தமையனும் தம்பி சொன்ன தன்மையை உணர்ந்து, நீதி அமைதரு தந்தை கேட்ப, அவன் பெரும் தாதை கேட்ப, கமை பெறு விதுரன் கேட்ப, கார்முகம் கன்னன் கேட்ப, இமையவன் துரோணன் கேட்ப, யாவரும் கேட்பச் சொல்வான்.]

**விளக்கம் :**—தமையன் - துரியோதனன். தம்பி - துச்சாசனன் நீதி அமைதரு தந்தை - நியாய வழியில் பொருந்தியுள்ள தந்தையான திருதராட்டிரன். அவன் பெரும் தாதை - அவனது பெரிய தந்தையான வீடுமன். கமைபெறு விதுரன் - பொறுமைக் குணத்தை மிகக் கொண்டிருக்கும் விதுரன். கார்முகக் கன்னன் - விற்போர் வல்லவனான கர்ணன். இமையவன் துரோணன் - பூமியில் தேவன்போல் விளங்கும் துரோணாச்சார்யன். மேலே கூறியவர்களும், அவையில் இருந்த கிருபன், அச்வத்தாமன் முதலிய யாவரும் கேட்பத் துரியோதனன் பேசுவானானான், என்பதாம். அவன் பேசியதை இனிவரும் மூன்று செய்யுள்களில் காண்க.

**கேட்ப** என்ற சொல் ஒரு பொருளில் பல முறை வந்திருதத்லால், **சொல்பொருள் பின்வருநிலை அணி** ஆகும்.

10. **இந்திரன் முதலா வுள்ள விமையவர் சிறப்புச் செய்யச்**
**சுந்தரப் பொற்றோள் வேந்தர் தொழில்புரிந் தேவல் செய்ய**
**மந்திர முனிவர் வேள்வி மறைநெறி முறையிற் செய்யத்**
**தந்திர வெள்ளச் சேனைத் தருமனே தலைவ னானான்.**

[இந்திரன் முதல் ஆ உள்ள இமையவர் சிறப்பு செய்ய, சுந்தரம் பொன் தோள் வேந்தர் தொழில் புரிந்து ஏவல் செய்ய, மந்திர முனிவர் வேள்வி மறை நெறி முறையின் செய்ய, தந்திரம் வெள்ளம் சேனை தருமனே தலைவன் ஆனான்.]

**விளக்கம் :**—இந்திரன் முதலிய தேவர்கள் அவர்களுக்கு உரிய அவிர் பாகத்தை விரும்பி ஏற்றுச் சிறப்புச் செய்யவும், சுந்தரப் பொன் தோள் வேந்தர் ஏவல் தொழிலை விரும்பிச் செய்யவும், வேத மந்திரங்களில் வல்லுநரான முனிவர்கள் வேத விதிப்படி முறைமை தவறாது யாகத்தைச் செய்து வைக்கவும் போர் நூல் பயிற்சியுள்ள, வெள்ளம் என்னும் தொகை கொண்ட சேனைகளை உடைய தருமனே அரசர்களில் தலைமைப்பேறு

பெற்று விளங்குபவனானான்; அதாவது ஸம்ராட் என்ற பட்டம் பெற்று மேன்மையுற்றவனாயினான்,—என்பது பொருள்.

சிறப்புச் செய்தல் - பெருமைப்படுத்தல். சுந்தரப் பொற்றோள் வேந்தர் - அழகிய பொன் ஆபரணங்கள் அணிந்த தோள்களை உடைய வேந்தர். புரிந்து - விரும்பி. தந்திரம் - கூட்டம், காலாள் படை, நூல்; இங்கே போர் நூல் பயிற்சி உடைய. வெள்ளம் - ஒரு பெருந்தொகை.

11. இனியவன் சின்னாட் செல்லி னெம்மனோர்
வாழ்வுங் கொள்ளும்
துனைவரும் புரவித் திண்டேர்த் துணைவருஞ் சூர
ரானார்
முனைவரு கூர்முள் வேலை முளையிலே களையி
னல்லால்
நனிவர வயிர்த்த போது நவியமும் மடியு மன்றே.

[இனி, அவன் சில் நாள் செல்லின் எம்மனோர் வாழ்வும் கொள்ளும், துனைவரும் புரவி திண்தேர் துணைவரும் சூரர் ஆனார், முனை வரு கூர் முள் வேலை களையின் அல்லால் தனி வர வயிர்த்தபோது நவியமும் மடியும் அன்றே.]

**விளக்கம்:**—துனை - வேகம். கூர் முனை வரு முள்வேல்-கூரிய நுனியுடைய முள்ளோடு கூடிய வேல் மரம். நனிவர வயிர்த்த போது-நன்றாக (அவ் வேல மரம்) வயிரங் கொண்ட காலத்தில் நவியமும் மடியும் - (வயிரம் பாய்ந்த அம் மரத்தை வெட்டத் தொடங்கினால்) கோடாலியும் கூர் மழுங்கிப் போகும். அன்றே? தேற்றத்தோடு ஈற்றசையுமாம்.

தருமன் அரசர்களில் தலைமை ஸ்தானம் பெற்றவனாய் இருக்கின்றான். தம்பியரும் சூரர். அவர்களை வளரவிட்டால், எம்மனோரை அழித்து விடுவர், எனவே அவர்களை வலியடங்கச் செய்ய வேண்டும்,—என்று துரியோதனன் கூறும் கருத்தது செய்யுள். இச்செய்யுளின் பின்னிரண்டு அடிகள், **பிறிதுமொழிதல் அணியினை** உட்கொண்டதாகும்.

சில - நாள் - சின்னாள். வாழ்வு - வாழ்க்கைக்கு ஆதாரமாகும் செல்வம் முதலியன. வயிர்த்தல் - வயிரம் பாய்தல், உறுதி யுறல்.

12. போதுற விரைந்து மற்றப் புரவலன் செல்வம் யாவும்
பேதுறக் கவர்ந்தி லேனேற் பின்னையார் முடிக்க
வல்லார்

மோதுறப் பொருதே யாதன் மொழியொணா வஞ்சக
மொன்று
தீதுறப் புரிந்தே யாதல் கொள்வதே சிந்தை
யென்றான்.

[போது உற விரைந்து மற்று அ புரவலன் செல்வம் யாவும். (அவன்) பேது உற கவர்ந்திலேன் ஏல், பின்னை யார் முடிக்கவல்லார்? மோதுற பொருதே ஆதல், மொழி ஒணா வஞ்சகம் ஒன்று தீது உற புரிந்தே ஆதல், கொள்வதே சிந்தை என்றான்.]

**விளக்கம்:**—போது உற - காலம் தாழ்த்தாமல்; இப்பொழுதே, அதாவது மேலும் வலியுறுமுன். அப் புரவலன் - தருமன். பேதுற-திகைக்கும்படி. முடிக்க வல்லார் யார் - அவனை அடக்க வல்லவர் யாவர்? (ஆகவே) மோதுறப் பொருதே ஆதல்- தாக்கிப் போர் செய்தாவது. மொழிய ஒண்ணா - வார்த்தையால் சொல்ல முடியாத, அதாவது மிகக் கொடிய. தீதுற - அவன் தீமை அடையும்படி. சிந்தை - எண்ணம்

தருமனும் அவன் தம்பிமாரும் மேலும் வலியுற்று சிறக்குமுன் அவர்களோடு போர் செய்தோ, அல்லது வஞ்சனை வழியிலோ அவர்களது செல்வத்தைக் கவர்ந்துகொள்ள வேண்டும் என்பதே என் கருத்து, என்று துரியோதனன் கூறினான், என்றபடி. **தீதுற** என்பதிலுள்ள **உற** மிகுதிப் பொருளது கொள்வதே, என்பதிலுள்ள ஏகாரம், தேற்றப் பொருளது; மற்றவை, அசை.

### துச்சாதனன் கூற்று

18. என்னலு முரிய தம்பி யெழுவதே கரும மின்றே
செந்நெலின் வாளை பாயுஞ் செல்வநா டுடைய
கோமான்
நென்னலங் கெய்த வீம னகைத்தது நேய மான
கன்னலின் மொழியாண் மூரல் விளைத்ததுங்
கண்டி லீரோ.

[என்னலும் உரிய தம்பி எழுவதே கருமம் இன்றே, செந்நெலின் வாளை பாயும் செல்வ நாடு உடைய கோமான், நென்னல் அங்கு எய்த வீமன் நகைத்ததும், நேயம் ஆன கன்னல் இன் மொழியாள் மூரல் விளைத்ததும் கண்டிலீரோ]

**விளக்கம் :**—இதுவும் இதைத் தொடரும் நான்கு செய்யுள்களும் ஒரு தொடர். உரிய தம்பி - துரியோதனது கருத்திற்கு

இணங்கிய தம்பியாகிய துச்சாசனன் நென்னல்-நேற்று, அதாவது சில நாட்களுக்கு முன்னே. நேயமான - வீமனிடம் அன்புடைய கன்னல் கருப்பஞ்சாறு. மூரல் விளைத்தல் - இளநகை கொள்ளல்

இராய சூய வேள்வியின்போது இந்திரப்பிரத்தம் சென்ற துரியோதனன், மயனால் அமைக்கப்பெற்ற மண்டபத்தில், தடாகம்போல் பளிங்கினால் அமைக்கப்பெற்ற இடத்தைத் தடாகம் என்று மயங்கியும், தடாகத்தை வெற்றிடம் என்று மயங்கி அதில் விழுந்தும் தடுமாறிய பொழுது. வீமனும் திரௌபதியும் நகைத்தனர், என்பது வரலாறு. செந்நெலின் வாளை பாய, என்றது நாட்டின் நீர்வளத்தைக் குறிக்கும்.

''இன்னபடி துரியோதனன் அவமதிக்கப்பட்டதை நீங்கள் எல்லீரும் அறிவீர். ஆகவே, அவர்களை இப்பொழுதே அழிக்க முயல்வது அவசியமாகும்,'' என்று அவன் கூறும் கருத்தது செய்யுள்.

**தம்பி**, என்பது 17வது செய்யுளிலுள்ள **என்றான்** என்பதோடு முடியும். எழுவதே கருமம் - உடனே போரெழுந்து செல்லலே செய்வதற்குரிய காரியம். **நெருநல்**, என்பது **நென்னல்** என, நின்றது.

**14. எத்தனை தரணி வேந்தர் யாகநல் விழாவில்**
**வந்தார்**
**அத்தனை பேரில் யாமு மொருவரா யடங்கி**
**நின்றேம்**
**கொத்தனை யுகளு நன்னீர்க் குருநிலக் கோமா**
**னந்த**
**முத்தனை யன்றிப் பின்னை யாரையே முதன்மை**
**செய்தான்.**

[எத்தனை தரணி வேந்தர் யாகம் நல் விழாவில் வந்தார், அத்தனை பேரில் யாமும் ஒருவர் ஆய் அடங்கி நின்றேம்; கொத்து அனை உகளும் நல்நீர் குருநிலம் கோமான், அந்த முத்தனை அன்றி பின்னை யாரை (ஏ) முதன்மை செய்தான்.]

**விளக்கம்** :-இராயசூய யாகமாகிய நல்ல மங்கலச் சடங்கிற்கு அரசர்கள் எவ்வளவு பேர் வந்தார்களோ, அவர்களில் ஒரு பகுதியினராய் நாங்களும் அடங்கி ஏவல் தொழில் செய்தோம்,— என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். கொத்து - கூட்டம்.

அனை - மீன்களில் ஒருவகை. உகளும் - புரளும். குருநிலக் கோமான் - தருமன். முத்தன் - (முக்தன்) மூத்தி தருபவனாகிய கண்ணன். முத்தன் என்பது முத்தி தருபவன் என்று சிலரால் கொண்டாடப் பெற்ற இடைக்குலம் வளர்ந்த கண்ணன், என்று இகழும் குறிப்பினது. எங்களை மதித்துப் பாராட்டாமல் செருக்குடைய தருமன் இடையனுக்குத்தானே முதல் மரியாதை செய்தான். அதனால் அவன் அடக்கப்பட வேண்டும், என்று கூறும் கருத்தின் பின்னிரண்டு அடிகள். **யாமும்** என்பதிலுள்ள உம்மை **உயர்வு சிறப்பு,** யாமும் ஒருவேமாய், என்னாது **ஒருவராய்** என்றது இடவழுவாகும்.

15. நந்தகோ மகனுக் கெல்லா நல்கிய முதன்மை
கண்டு
வந்தகோ வெள்ளஞ் சேர வாய்திற வாம னிற்ப
எந்தகோ விவனுக் கிந்த முதன்மையென்
றெதிர்ந்து மாற்றம்
தந்தகோ மடியு மாறு சமரமும் விளைப்பித்
திட்டான்.

[நந்தன் கோமகனுக்கு எல்லாம் நல்கிய முதன்மை கண்டு, வந்த கோ வெள்ளம் சேர வாய் திறவாமல் நிற்ப, 'எந்த கோ இவனுக்கு இந்த முதன்மை,' என்று எதிர்ந்து மாற்றம் தந்த கோ, மடியும் ஆறு சமரமும் விளைப்பித்திட்டான்.]

**விளக்கம் :—** நந்தன் கோமகன் - நந்தகோபனது திருமகனான கண்ணன். நல்கிய முதன்மை எல்லாம் கண்டு, என்று இயைக்க. வந்த கோ வெள்ளம் - யாகத்திற்கு வந்த அரசர்களின் கூட்டம். சேர ஒரு சேர. இவனுக்கு இந்த முதன்மை எந்தகோ (எந்தகு ஓ) என்று எதிர்ந்து - இந்த இடையனுக்கு இந்த முதல் பூஜை எதற்காகவோ என்று மாறுபட்டு. மாற்றம் தந்தகோ - அவமதிப்பான வார்த்தைகளைச் சொல்லிய அரசனான **சிசுபாலன்.** "அவன் மடியுமாறு தருமன் போரையும் விளைத்து விட்டான்," என்க.

நந்தகோபன், என்ற சொல் கடை குறைந்து **நங்கோ** என நின்றது. **'எதற்கு?'** என்ற பொருளுடைய **எந்துகு** என்ற தெலுங்குச் சொல் (எந்தகு ஓ) **எந்தகோ** என நின்றது.

16. தன்புய வலியு நான்கு தம்பியர் வலியு மாயன்
வன்புய வலியுங் கொண்டே மண்ணெலாங் கவர
வெண்ணி

இன்புயச் சிகரி மன்னர் யாரைந் தன்கீ ழாக்கி
மின்புய லனையான் மேன்மை விளைக்கவே
வேள்வி செய்தான்.

[தன் புயம் வலியும், நான்கு தம்பியர் வலியும், மாயன் வல் புய வலியும் கொண்டு (ஏ) மண் எலாம் கவர எண்ணி, இன்புயம் சிகரி மன்னர் யாரையும் தன் கீழ் ஆக்கி, மின் புயல் அனையான் மேன்மை விளைக்கவே வேள்வி செய்தான்.]

**விளக்கம் :—**இன் புயம் சிகரி மன்னர் - அழகிய தோள் களாகிய மலையை உடைய மன்னர்; அதாவது மலைபோன்ற தோள்களை உடைய வீரம் மிக்க அரசர்கள். சிகரி - மலை. மின் புயல் அனையான், கண்ணன். கண்ணனுக்குப் பெருமை செய்யும் பொருட்டுத் தருமன் வேள்வி செய்தான், என்று கூறியபடி. அதாவது பூமியைத் தனக்கு உரியதாகச் செய்து கொள்ளக் கண்ணனது துணையைப் பெறுங் கருத்தில், அவனது அன்பு மிகு மாறு செய்து கொள்ளவே, யாகம் செய்து அவனுக்கு முதற் பூசை செய்தான், என்பதாம்.

17. எல்லியல் பரிதி யன்ன யதுகுல மன்னன் றானும்
சல்லிய மிகுபோர் செய்யச் சல்லியன் றன்மேற்
சென்றான்
சொல்லிய கருமம் வாய்ப்பச் சூழ்வலைப் படுத்துக்
கொண்ட
வல்லிய மென்னச் சூழ்ந்து மலைவதே கரும
மென்றான்.

[எல் இயல் பரிதி என்ன யதுகுலம் மன்னன் தானும், சல்லியம் மிகு போர் செய்ய சல்லியன் தன்மேல் சென்றான்; சொல்லிய கருமம் வாய்ப்ப, சூழ் வலை படுத்திக்கொண்ட வல்லியம் என்ன சூழ்ந்து மலைவதே கருமம் என்றான்.]

**விளக்கம் :—**பகல் காலத்துச் சூரியன் போல் விளங்கும் யது குல மன்னனாகிய கிருஷ்ணன். சல்லியத்தை (கலக்கத்தை, உபத் திரவத்தை) மிகுதியாக விளைக்கும் போரைச் செய்யும் பொருட்டுச் சல்லியன் என்பான்மேல் போரெழுந்து சென்றுள் ளான். என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள்,

சூழ்வலைப் படுத்திக் கொண்ட வல்லியம் (புலி) என்ன, சொல்லிய கருமம்,வாய்ப்ப (பாண்டவர்களை முற்றுகை)சூழ்ந்து,

மலைவதே கருமம், என்றான் (துச்சாசனன்). அதாவது சுற்றிலும் வைக்கப்பட்ட வலையில் அகப்பட்டுக் கொள்ளும்படி செய்யப்பட்ட புலியைச் சூழ்ந்து அதன் வலி அழிப்பதுபோல் (கண்ணன் இல்லாத இந்த சமயத்தில்) நாம் பேசிய கருமம் நிறைவேறுவதற்கு, (பாண்டவர்களை) முற்றுகை சூழ்ந்து போர் செய்வதே செய்வதற்குரிய காரியம், என்று அவன் வற்புறுத்தினான், என்பதாம்.

### துரியோதனனின் உடன்பாடு

18. வேந்தனு மொருப்பட் டந்த வெண்ணெய்வாய்க்
கள்வன் மீளப்
போந்திவர் தமக்கு மின்று பொருதுணை யாக
மாட்டான்
சாந்தணி குவவுத்தோளான் சல்லியன்
வலியனிப்போது
ஆந்தக வெண்ணில் வல்லே யைவரை யடர்க்க
லாமே.

[வேந்தனும் ஒருப்பட்டு, அந்த வெண்ணெய்வாய் கள்வன் மீள போந்து இவர் தமக்கும் இன்று பொருதுணை ஆகமாட்டான்; சாந்து அணி குலவு தோளான் சல்லியன் வலியன், இப்போது; ஆம் தகவு எண்ணில் வல்லே ஐவரை அடர்க்கல் ஆமே.]

**விளக்கம் :—**ஆம் தக எண்ணில் - காரியம் கைகூடும்படி தகுந்த உபாயத்தை நாடி முனைந்தால். வல்லே - விரைவில் அவரை அடர்க்கல் ஆம் - அவரை வலி அழியச் செய்தால் எளியதாம்.

கண்ணனோ சல்லியன் மேல் போரெழுந்து சென்றுள்ளான். சல்லியன் வலியன். எனவே, கண்ணன் விரைவில் திரும்பி வந்து தருமனுக்கு உதவல் நிகழ்வதற்கில்லை. இந்த நிலையில், காரியம் ஆகக்கூடிய வழியில் முயன்றால், பாண்டவரை வெல்லல் இயல்வதாம், என்று துரியோதனன், கூறினான், என்பதாம். தமக்கும் என்பதிலுள்ள உம்மை இசை நிறை. ஐவரை-ஐவரையும் உம்மை தொக்கது.

19. வஞ்சனை கொண்டே யாதல் வாரண மணித்தேர்
வாசி
நஞ்சனை யவரா லாத னாளையே யழித்தல்
வேண்டும்

கஞ்சனை மலைய வெண்ணிக் கரியபேய் முலைப்பா
லுண்ட
நெஞ்சின னெய்தா முன்ன நீர்விரைந் தெழுமி
னென்றான்.

[வஞ்சனை கொண்டே ஆதல், வாரணம் மணி தேர்வாசி நஞ்சு அனையவரால் ஆதல், நாளையே அழித்தல் வேண்டும்; கஞ்சனை மலைய எண்ணி, கரிய பேய் முலை பால் உண்ட நெஞ்சினன் எய்தா முன்னம், நீர் விரைந்து எழுமின் என்றான்.]

**விளக்கம் :—**வஞ்சித்தோ அல்லது புயவலி கொண்டோ, கண்ணன் துணை அவர்களுக்குக் கிடைக்குமுன், அவர்களை அடர்த்தல் அவசியம், என்று துரியோதனன் கூறும் கருத்தினது செய்யுள். வாரணம் - யானைப்படை. மணித்தேர் - மணிகள் கட்டிய, அல்லது அழகிய தேர்ப்படை. வாசி - குதிரைப் படை. நஞ்சு அனையவர் - விஷத்தை ஒத்த (கொடிய) காலாட்படையினர். கரிய பேய் - பூதனை என்ற, கம்சனால் ஏவப்பட்ட அரக்கி. (அவளது முலைம்பாலோடு உயிரையும் உடை) நெஞ்சினன் - கண்டத்தை உடைய கண்ணன்.

ஆதல் என்பது ஆவது என்பது போல் விகற்பப் பொருள் தரும் இடைச் சொல்லாகும்.

### கர்ணன் முதலியோர் கருத்து

20. வெஞ்சிலை குனித்தோ ரம்பி யான்விடின்
வெகுண்ட வேந்தர்
எஞ்சிவிண் புகுவ ரல்லால் யாவரே எதிர்க்க வல்லார்
வஞ்சனை கொண்டு வெல்ல மதிப்பது வாளால்
வெல்ல
அஞ்சின மாயி னன்றோ வென்றன னங்கர்
கோமான்.

[வெம் சிலை குனித்து ஓர் அன்பு யான்விடின் வெகுண்ட வேந்தர் எஞ்சி விண் புகுவர் அல்லால் யாவரே எதிர்க்க வல்லார்? வஞ்சனை கொண்டு வெல்ல மதிப்பது, வாளால் வெல்ல அஞ்சினம் ஆயின் அன்றோ, என்றனன் அங்கர் கோமான்.]

**விளக்கம் :—**வெகுண்ட வேந்தர் - சினங்கொண்டு எதிரே வந்த பகைவேந்தர். எஞ்சி - அழிந்து. வஞ்சனையால் வெல்ல

நினைப்பது, தங்கள் போர்வலியில் இல்லாதவர் கையாளும் வழியாகும். வில்வீரன் நான் இருக்கையில் போரெழுதலே நேரான வழி, என்று அங்கர் கோமானான கர்ணன் பெருமிதத்தோடு தன் கருத்தைத் தெரிவித்தான், என்பதாம்.

21. யாவரு மொழிந்த வார்த்தை யின்புறக் கேட்டுப்
பின்னும்
தாவரு புரவித் திண்டேர்த் தானையான் சகுனி
சொல்வான்
மேவரு கன்ன னன்றி விண்ணுளோ ரெதிர்ந்த
போதும்
கோவரு முன்றி லானைக் கொடுஞ்சமர் வெல்ல
லாமோ.

[யாவரும் மொழிந்த வார்த்தை இன்பு உற கேட்டு பின்னும், தாவரு புரவி திண் தானையான் சகுனி சொல்வான், மேவரு கன்னன் அன்றி விண் உளோர் எதிர்ந்தபோதும், கோ வரு முன்றிலானை கொடும் சமர் வெல்லல் ஆமோ.]

**விளக்கம் :** யாவரு பொழிந்த வார்த்தை - கர்ணன், துச்சாதனன், துரியோதனன் ஆகியவர் சொன்ன வார்த்தை. இன்புறக் கேட்டு - இன்பத்தோடு கேட்டு, அல்லது நன்றாகக் கேட்டு. பின்னும் - மேலும், மறுபடியும். தாவரு புரவி திண் தேர் தானையான் சகுனி - தாவும் கதியுடைய குதிரைகள் பூட்டிய வலிய தேர்ப்படையை உடையவனான சகுனி. (வில்வலியால் வெல்ல) விரும்பும் கர்ணனேயன்றி தேவர்கள் அனைவரும் எதிர்த்து வந்தாலும், என்பது மூன்றாவது அடியின் பொருள். கோவரு முன்றிலான் - கண்டு வணங்க வரும் அரசர்கள் நெருங்கும் முன்வாயிலை உடைய தருமன். தேவர்களாலும் தருமனைப் போரில் வெல்ல முடியாது என்று சகுனி கூறினான், என்பதாம். தாவிவரு, என்பது தாவரு என நின்றது.

22. இடிம்பனைப் பகனை வைவே லிகற்சரா சந்தன்
தன்னை
நெடும்பணைப் புயத்தால் வென்ற நிகரிலா வீம
னிற்கக்
கடும்படைப் பெருமை யால்வெந் காணலா மென்பா
ராயின்
தொடும்படைத் தடக்கை வீரர்க் குத்தரஞ் சொல்ல
லாமோ.

[இடிம்பனை, பகனை, வைவேல் இகல் சராசந்தன் தன்னை நெடும்பணை புயத்தால் வென்ற நிகர் இலா வீமன் நிற்க, கடும் படை பெருமையால் வெந் காணல் ஆம் என்பார் ஆயின், தொடும்படை தடக்கை வீரர்க்கு உத்தரம் சொல்லல் ஆமோ.]

**விளக்கம் :**—வைவேல் இகல் சராசந்தன் - கூரிய வேலைத் தாங்கிய பகை அழிக்கும் வல்லமை பெற்ற சராசந்தன். (கடும் படைப்) பெருமை, என்றது மிகுதிப் பொருளது. அதாவது கொடிய ஆயுதங்களின் மிகுதியால் என்பது பொருள். வெந் - முதுகு. படைதொடும் தடக்கை வீரர் - ஆயுதம் ஏந்திய பெரிய கைகளை உடைய வீரர்.

இடிம்பன், பகாசுரன், சராசந்தன் ஆகியவர்களைத் தன் தோள்வலிமையால் வென்ற வீமன் தருமனுக்குத் துணை நிற்கையில், படை பலத்தால் அல்லது கொடிய ஆயுதங்களின் வலிமையால், அவனை முதுகு காணலாம் என்பாராயின், அவ்வாறு கூறும் வீரருக்கு எம்மால் பதில் கூற முடியுமோ, என்று சகுனி கூறும் பொருளது செய்யுள். "படைவலியால் தருமனை வெல்லல் என்பது முடியாத காரியம்; எனவே, நான் அவர்களுக்குப் பதில் கூறுவதற்கில்லை," என்று சகுனி கூறும் கருத்தது.

23. துப்புற ழமுதச் செவ்வாய்த் திரௌபதி துணைத் தோள் வேட்டுக்
கைப்படு சிலையி னோடுங் காவலர் கலங்கி வீழ
மெய்ப்படு முனியாய் வந்து விசயன்வில் லிறுத்த போதும்
இப்பொழு திருந்த வீரர் யாவரு மிருந்தி லேமோ.

[துப்பு உறழ் அமுதம் செம் வாய் திரௌபதி துணை தோள் வேட்டு, கை படு சிலையினோடும் காவலர் கலங்கி வீழ, மெய் படு முனி ஆய்வந்து விசயன் வில் இறுத்தபோதும், இப்பொழுது இருந்த வீரர் யாவரும் இருந்திலேமோ.]

**விளக்கம் :**—துப்பு உறழ் - பவளம் போன்ற. வேட்டு - விரும்பி. கைப்படுசிலை - கையில் பற்றிய வில். கலங்கி வீழ - மச்ச யந்திரத்தை அறுக்க முடியாமல் கலங்கி மனம் வீழ்ந்து கிடக்க. மெய்ப்படு முனியாய் வந்து - பிராமண வேஷத்தில் வந்து. இப்பொழுது இங்கே கூடியுள்ள நாம் எல்லோரும், இலக்கை அறுக்க முடியாத அரசர்களில் ஒருவராய் இருந்தோம் அல்லவா? என்ற பொருளது ஈற்றடி.

இடிம்பன் முதலியோரை வீழ்த்திய வீமனும், இலக்கை அறுத்து வீழ்த்திய அருச்சுனனும் தருமனுக்குத் துணை இருக்கையில், அவனைப் புஜ பலத்தால் வெல்லல் முடியாது, என்று சகுனி வற்புறுத்தியபடி, இருந்திலேமோ! என்றது இருந்து அவமானப்பட்டோம், என்ற கருத்தது.

24. இப்பிறப் பொழிய வின்னு மேழெழு பிறப்பி னாலும்
மெய்ப்பிறப் புற்ற நீதித் தருமனை வெல்ல
மாட்டோம்
ஒப்புறப் பணைத்த தோளா யுபாயமெங் கேனு
மொன்றால்
தப்பறச் சூது கொண்டு சதிப்பதே கரும மென்றான்.

[இ பிறப்பு ஒழிய இன்னும் ஏழ் ஏழு பிறப்பினாலும் மெய் பிறப்பு உற்ற நீதி தருமனை வெல்லமாட்டோம்; ஒப்பு அற பணைத்த தோளாய், உபாயம் எங்கேனும் ஒன்றால் தப்பு அற சூதுகொண்டு சதிப்பதே கருமம் என்றான்.]

**விளக்கம்:—** மெய் பிறப்பு உற்ற- மெய் பேசுதலையே இயற்கையாய்க்கொண்ட பிறப்பை அடைந்துள்ள (நேர்மை வழி நடக்கும் தருமன்). ஒப்பு அறப் பணைத்த (பெருத்த) தோளாய், என்று சகுனி துரியோதனனை அழைக்கின்றான். எங்கேனும் ஒன்றால்- ஏதாவதோர் உபாயத்தினால் அவர்களை (அழைத்து). தப்பு அற - தப்பித்துக்கொள்ள முடியாதபடி. சூதுகொண்டு-சூதாட்டத்தைக் கருவியாகக்கொண்டு. சதிப்பதே கருமம் என்றான்-சூழ்ச்சியால் அவனை அழிப்பதே செய்தற்கு உரிய காரியம், என்று சகுனி கூறினான்.

வீமனையும் விசனையும் துணையாகக் கொண்டுள்ள தருமனை அந்தப் பிறவியில் அன்றி, இனி எடுக்கும் ஏறேழு பிறவியிலும், போர் கொண்டு அழிப்பதென்பது முடியாத காரியம். அவன் நீதி நெறி நடக்கும் நேர்மையன். சூது, மோசம், வஞ்சனையாயவற்றை அவன் அறியான், அவன் அறியாய சூதினைக்கொண்டே அவனை வெல்ல வேண்டும், என்று சகுனி வற்புறுத்தும் கருத்தது இது.

ஏழ் ஏழு பிறப்பு- பதினான்கு, அதாவது பல ஜன்மங்கள். எத்தனை ஜன்மம் எடுத்தாலும் நேரான வழியில் தருமனை வெல்ல முடியாது என்று கூறியபடி.

25. தன்பெரு மாமன் சொல்லத் தரணியன் றம்பி தானும்
வன்பெருஞ் சேனை கொண்டு மலைவதற் கவர்க ளஞ்சார்
இன்பெரு நேய மிக்க விவன்மொழிப் படியே மாயப்
புன்பெருஞ் சூது கொண்டு பொருவதே புந்தி யென்றான்.

[தன் பெரு மாமன் சொல்ல, தரணிபன் தம்பி தானும், வல்பெரும் சேனை கொண்டு மலைவதற்கு அவர்கள் அஞ்சார்; இன் பெரு நேயம் மிக்க இவன் மொழிப்படியே. மாயம் புல் பெருஞ் சூது கொண்டு பொருவதே புந்தி என்றான்.]

**விளக்கம்:**—இனிய பெரு நட்பு மிக்க சகுனியின் சொற்படியே, மாயமுடைய இழிந்ததான பெரிய சூதாட்டத்தைக் கருவியாகக் கொண்டு பொருது வெல்வதே அறிவுடைய செயலாகும், என்று தம்பி துச்சாசனன் தன் உடன்பாட்டைத் தெரிவிக்கும் கருத்தது இது.

பாண்டவரது செல்வத்தைச் சுலபமாய்க் கவர்வதற்குத் தக்க உபாயமாய் இருத்தலின், **பெருஞ் சூது** எனச் சொல்லப் பட்டது. சூதிற்குப் **புல்** என்ற அடை. அதன் இழிவைக் குறிக்கும். புந்தி-புத்தி, அறிவு.

26. கோமக னெஞ்சு நாவுங் குளிர்ந்துபே ருவகை கூர்ந்து
மாமனைத் தவிசின் கண்ணே வருதியென் றிருத்திக் கொண்டு
பாமரு பனுவன் மாலைப் பாண்டவர் தம்மை நின்கைக்
காமரு சூதால் வெல்லுங் கருத்தெனக் குரைத்தி யென்றான்.

[கோமன் நெஞ்சும் நாவும் குளிர்ந்து பேர் உவகை கூர்ந்து, மாமனை தவிசின் கண்ணே வருதி என்று இருத்திக்கொண்டு, பாமரு பனுவல் மாலை பாண்டவர் தம்மை நின் கை காமரு சூதால் வெல்லும் கருத்தை எனக்கு உரைத்தி, என்றான்.]

**விளக்கம்:**— மோகன்- துரியோதனன். தவிசு- ஆசனம்; இங்கே, சிங்காசானம். பாமரு பனுவல் மாலை பாண்டவர்-

(புலவர்கள் பாடிய) பாக்களால் அமைந்த பிரபந்தங்களாகிய மாலை சூடிய பாண்டவர். நின் கை காமரு சூதால்-உன் கையால் ஆடப்படும் விரும்பப்படுகின்ற சூதாட்டத்தால், வெல்லும் கருத்து- வெல்லுதற்குரிய ஆலோசனையை. காமர்- உ-காமரு-விரும்பப்படுகின்ற, அழகிய (உ:சாரியை), அல்லது காமம் மருவு, என்பதின் விகாரமாகவுங் கொள்ளலாம்.

போரினால் பாண்டவர்களை வெல்லல் அரிதாயிற்றே, என்றஎண்ணத்தினால் தளர்வுற்றிருந்த துரியோதனன். சூதினால் அவர்களை எளிதே வென்று விடலாம், என்று சகுனி கூறிய வார்த்தையைக் கேட்டு, நாவோடு நெஞ்சமும் குளிரப்பெற்று, மாமனை சரியாசனத்தில் இருத்திக்கொண்டு, "சூதாடலில் மனங்கொள்ளுமாறு அவர்களைத் தூண்டும் வழியை உரைக்கு மாறு கேட்டான், என்பது பொருள். சூதால் வெல்லுங் கருத்து- சூதினால் வெல்லுவதற்குரிய ஆலோசனை, அதாவது, அவர்களை அழைத்து சூதாடச் செய்தற்கான உபயம்.

சகுனி வழி கூறல்

27. மன்ன நின் செல்வக் கோயின் மண்டப மொன்று தேவர்
பொன்னுல கினுக்கு மில்லை யென்பதோர் பொற்பிற் றாகப்
பன்னுநூற் சிற்பங் குன்றாப் பஃறொழில் வினைஞர் தம்மால்
நன்னில விரிவுண் டாக நாளையே யியற்று விப்பாய்.

[மன்ன, நின் செல்வம் கோயில் மண்டபம் ஒன்று தேவர் பொன் உலகினுக்கும் இல்லை என்பது ஓர் பொற்பிற்று ஆக, பன்னு நூல் சிற்பம் குன்றா பல் தொழில் வினைஞர் தம்மால், நல் நிலம் விரிவு உண்டாக நாளையே இயற்றுவிப்பாய்.]

**விளக்கம்** :—மன்ன - குரு நாட்டின் மன்னனே. செல்வக் கோயில் - செல்வத்தின் வளம் மிகுந்த மாளிகை, பொற்பிற்று ஆக - அழகை உடையதாக. பன்னும் சிற்ப நூல் குன்றா போற்றிக் கூறப்படும் சிற்ப சாஸ்திரத்தோடு மாறுபடாத. பல் தொழில் வினைஞர் - பலதிறப்பட்ட கட்டடத் வல்லவர்களான தொழிலாளர்கள். நல் நிலம் விரிவு உண்டாக - நல்ல பூமியின் இடத்தே இடப்பரப்பு அதிகமாய் இருக்கும்படி; அதாவது, மிக

விலாசமான இடத்தே மிகப் பெரியதாக இருக்கும் மண்டபம் கட்டப்படவேண்டும் என்று சகுனி கூறினான், என்க. நாளையே இயற்றுவிப்பாய் - விரைவில் கட்டுவிப்பாய்.

தேவர் பொன்னுலகு - தேவர்களுடைய அழகிய உலகம், சுவர்க்கம். **தேவர்** என்பதை முதல் வேற்றுமைச் சொல்லாகக் கொண்டு, தேவர்களும், தங்கள் உலகத்தில் இதைப்போன்ற மண்டபம் இல்லை என்று சொல்லும்படி, என்று பொருள் கொள்ளலாம், பொன் உலகினுக்கும், உருபு மயக்கம்.

மாளிகையினிடத்தே, நல்ல இடத்திலே, விசாலமான இடப் பரப்பு உடையதாய், இத்தகைய மண்டபம் ஒன்று தேவலோகத் திலும் இல்லை என்று சொல்லும்படியான எழில் உடையதாய், நல்ல தொழிலாளிகளைக் கொண்டு சிற்ப சாஸ்திரத்தோடு மாறுபடாதபடி ஒரு மண்டபத்தை விரைவில் கட்டி முடிக்குமாறு சகுனி துரியோதனனுக்குச் சொன்னான் என்பதாம். உலகினுக் கும், என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்பு. பல், - தொழி பஃறொழில். சில் - பம் - சிற்பம். இதுவும், இதைத் தொடரும் இரண்டு செய்யுள்களும் ஒரு தொடர்.

28. மண்டபங் காண வெம்முன் வருவென் றழைத்து வந்தால்
கண்டுகண் களித்து மற்றக் காவல ரிருந்த போதில்
புண்டர விசால நெற்றிப் புரவல பொழுது போக
அண்டரும் விரும்பும் வன்சூ தாடுதும் வருக வென்பேம்.

[மண்டபம் காண எம் முன் வருக, என்று அழைத்து வந்தால், கண்டு கண் களித்து, அ காவலர் இருந்தபோதில்; புண்டரம் விசாலம் நெற்றி புரவல, பொழுதுபோக, அண்டரும் விரும்பும் வல் சூது ஆடுதும், வருக, என்பேம்.]

**விளக்கம்:**—மண்டபம் கட்டி முடிந்தபின் அதைக் காண எமது முன்னவனான (தமையனான) தருமன் வரவேண்டும் என்று சொல்லித் தூதுவர் மூலம் நீ அழைத்து வந்தால், வந்த அக்காவலர் (பாண்டவர்) மண்டபத்தின் எழிலைக் கண்டு களித்திருக்கையில், "புண்டரவிசால நெற்றிப் புரவல, பொழுது போக்காக அண்டரும் விரும்பும் - ஆடுவோம், வருக, என்று தருமனை அழைப்போம். புண்டரம் - நெற்றியில் இடும் குறி. புரவல அரசனாகிய தருமனே, விளி. அண்டர் - தேவர்.

தருமனுக்குச் சூதின்மேல் விருப்பம் உண்டாதற் பொருட்டு. **அண்டரும் விரும்பும் சூது** என்றான். கண்டு கண் களித்தல் - கண்ணால் கண்டு களித்தல்,

29. அதிர்முர சுயர்த்த கோவு மையெனத் துணியும் பின்னை
மதிமரு ளியற்கைத் தாகு மாயவெஞ் சூது தன்னால்
விதியெனப் பொருது வாழ்வு மேதகு மரசுந் தங்கள்
பதிமுதற் பலவுந் தோற்கும் படிசெகுத் திடுவ லென்றான்.

[அதிர் முரசு உயர்த்த கோவும், ஐ என துணியும், பின்னை, மதிமருள் இயற்கைத்து ஆகும் மாயம், வெம் சூது தன்னால் விதி என பொருது. வாழ்வும் மேதகும் அரசும் தங்கள் பதிமுதல் பலவும் தோற்கும்படி செகுத்திடுவல், என்றான்.]

**விளக்கம் :—** அதிர் முரசு உயர்ந்த கோ - முரசக் கொடியை உடையவனான தருமன். ஐ என துணியும் - நல்லது என்று சொல்லி சூதாடத் துணிவான் (ஐ எனல்: அங்கீகாரச் சொல்). மதி மருள் இயற்கைத்து ஆகும் மாயவெஞ்சூது - புத்தியை மயக்கும் இயல்பினதான வஞ்சனை உடைய கொடிய சூதாட்டம். (சூதினால்) தருமனை அழிக்கும் விதிபோல். சூதாடி பாண்டவர் தங்கள் வாழ்வையும், மேலான ஆட்சிச் செல்வத்தையும், நாடு முதலாகிய பலவற்றையும் தோற்கும்படி அவர்களை அழித்திடு வேன், என்பது ஈற்றடிகளின் பொருள். மேதகு-மேலான சிறந்த, வாழ்வு -வாழ்வின் ஆதாரமான செல்வம். அரசு-ஆட்சிச் செல்வம். செகுத்தல் - அழித்தல். வெல்லுதற்கரிய அவர் விதி போல அமைந்து, சூதில் தருமனை வென்று அழிப்பேன் என்பதைச் சகுனி தெரிவிக்குங் கருத்தது, **விதியெனப் பொருது**. என்ற தொடர்.

30 இன்னதே கரும மென்றென் றிளைஞரும் விழைந்து சொன்னார்
அன்னதே கரும மாக வவர்வழி யொழுகு நீரான்
தன்னதே யாகு மிந்தத் தலமெனுங் கருத்தான் மாமன்
சொன்னதே துணிந்து மார்புந் தோள்களும் பூரித் திட்டான்.

[இன்னதே கருமம் என்று என்று இளைஞரும் விழைந்து சொன்னார்; அன்னதே கருமம் ஆக, அவர் வழி ஒழுகும் நீரான், தன்னதே ஆகும் இந்த தலம் எனும் கருத்தால், மாமன் சொன்னதே துணிந்து மார்பும் தோள்களும் பூரித்திட்டான்.]

**விளக்கம் :—** துரியோதனனது தம்பிமார்களும் இதுவே செய்யத் தகுந்த காரியம் என்று விருப்பத்தோடு சொன்னார்கள், என்பது முதலடியின் பொருள். **என்று, என்று** என்றது, ஒவ்வொருவரும் தனித்தனி உடன்பாட்டைத் தெரிவித்தார்கள் என்ற பொருளது. அவர் வழி நிற்கும் நீரான் - தம்பியர் கருத்தின் வழி நடக்குந் தன்மையனான துரியோதனன். அன்னதே கருமம் ஆக - சூடுதலாகிய அதையே செய்யும் கருமமாக் கொள்ளின், (இந்தத் தலம் (பூமி) தன்னதே ஆகும் எனும் கருத்தினனாகிய துரியோதனன்). மாமன் சொன்னதே துணிந்து - சகுனி சொன்ன வழியே தக்கது என்று தீர்மானித்து,—மார்பும் தோள்களும் பூரிக்கப் பெற்றான். பூரித்தல் - பருத்தல். வீங்குதல்.

அவர் வழி ஒழுகும் நீரான் : அற்ப புத்தியுடைய தம்பியர் கருத்தின் வழி ஒழுகும் சிறு தன்மையினன், என்று இகழும் குறிப்பினது. சூதினால் பாண்டவர்களை வென்றுவிடலாம் என்ற நிச்சயத்தினால், வென்றுவிட்டதுபோல் மகிழவே, அவனது உடல் பூரிக்கலாயின.

**விதுரனது உடன்பாடின்மை**

**31.** **வில்லினா லுயர்ந்த வென்றி விதுரனை நோக்கிக் கொற்ற**
**மல்லினா லுயர்ந்த பொற்றோள் வலம்புரி மாலை வேந்தன்**
**வல்லினா லுபாயஞ் செய்ய மாதுல னுரைத்த தெல்லாம்**
**சொல்லினா னவனுங் கேட்டுச் சொல்லெதிர் சொல்ல லுற்றான்.**

[வில்லினால் உயர்ந்த வென்றி விதுரனை நோக்கி, கொற்றம் மல்லினால் உயர்ந்த பொன்தோள் வலம்புரி மாலை வேந்தன், வல்லினால் உபாயம் செய்ய மாதுலன் உரைத்தது எல்லாம் சொல்லினான், அவனும்கேட்டு சொல் எதிர் சொல்லல் உற்றான்.]

**விளக்கம் :**—வில்லினால் உயர்ந்த விதுரனை நோக்கி, மல்லினால் (மற்போரினால்) உயர்ந்த அழகிய கொற்றத் தோள்களில் வலம்புரி மாலை (நஞ்சாவட்ட மலரினால் ஆன மாலை) அணிந்த துரியோதனன், வல்லினால் (சூதாட்டத்தினால்) கவர்ந்து கொள்ள மாமனாகிய சகுனி உரைத்த வெல்லாம் கூறினான்; அவனது (விதுரனும்) கேட்டு (உடன் படாது) எதிர்மொழி கூறலானான்.

வலஞ் சுழிந்த இதழ்களை உடைய காரணத்தினால் **நஞ்சா வட்டை** வலம்புரி எனப்பட்டது. நஞ்சாவட்டை துரியோதன னுக்கு உரிய மலர். வல் - சூதாடு கருவி; ஆகுபெயராய் சூதாட் டத்தைக் குறித்தது. வல்லினால் உபாயம் செய்ய - சூதை உபாயமாகக் கொண்டு பாண்டவர் ராஜ்யத்தைக் கவர்ந்து கொள்ள. (மாயச் சகுனி) உரைத்தது எல்லாம் : ஒருமை பன்மை மயக்கம். சொல் எதிர் சொல்லலுற்றான், என்றது பதில் மொழிந்தான் என்பதோடு, அவனது சொல்லோடு மாறு பட்ட பதிலைச் சொன்னான், என்றும் பொருள்படும்.

க்ஷத்திரியருக்குரிய போர்த் தொழிலை விட்டு விட்டு, வலியற்ற கீழோர் மேற்கொள்ளும் சூதினால் பகை வெல்ல முனையும் துரியோதனனை. "கொற்ற மல்லினால் உயர்ந்த பொற்றோள் வேந்தன்," என்றது, அவனை இகழும் கருத்தின தாகும்.

32. வையமு மரசும் வாழ்வும் வாங்குகை கருத்தே
யாயின்
பொய்யடர் சூது கொண்டு புன்மையிற் கவர
வேண்டா
ஐயநின் றந்தை யோலை யைவருக் கெழுதி
விட்டால்
மெய்யுற மறுத்துச் சொல்லார் வேண்டின தருவ
ரன்றே.

[வையமும் அரசும் வாழ்வும் வாங்குகை கருத்தே ஆயின் பொய் அடர் சூது கொண்டு புன்மையின் கவரவேண்டா; ஐயா, நின் தந்தை ஓலை ஐவருக்கு எழுதி விட்டால், மெய் உற மறுத்து சொல்லார், வேண்டின தருவர், அன்றே.]

**விளக்கம் :**—ஐய, தருமனது வையம் அரசு. வாழ்வு ஆகிய வற்றைப் பறித்துக் கொள்ளல் உன் கருத்தாயின், பொய்மை

மிகுந்த இழிவான சூதினை உபாயமாகக் கொண்டு, புன்மையில் கவர வேண்டா; உன் தந்தை ஓலையொன்று எழுதி அனுப்பினால் உண்மையாக, மாறுபட்டு ஒன்றும் சொல்லார், வேண்டியவற்றை எல்லாம் அப்பொழுதே (அதாவது உடனே) தருவர், என்பது பொருள். புன்மையின் கவர்தல்-நேர்மையற்ற வழியில் வஞ்சித்துப் பெறல்.

33. தந்தைதன் னேவ லாலே தருமனும் தம்பி மாரும்
இந்தமண் ணாடல் கைவிட் டெரிகெழு கானஞ் சேர்வர்
முந்துற நுமதே யாகு முழுதும்வாழ் வெழுதுஞ் செம்பூம்
பைந்தொடை யரசர் கேட்டாற் பாவமும் பழியு மாகா.

[தந்தை தன் ஏவலாலே தருமனும் தம்பிமாரும் இந்த மண் நாடல் கைவிட்டு எரிகெழு கானம் சேர்வர், முந்துற நுமதே ஆகும் வாழ்வு, (ஓலை) எழுதும்; செம் பூ பைந்தொடை அரசர் கேட்டால் பாவமும் பழியும் ஆகா.]

**விளக்கம் :**—மண் நாடல் கைவிட்டு - தாம் பூமி ஆளுகையை விரும்புதலை விட்டுவிட்டு. எரிகெழு கானம் - வெப்பம் மிகுந்த காடு வாழ்வு முழுதும் மந்துற நுமதே ஆகும் - (பாண்டவர்களது வாழ்விற்கு ஆதாரமாய) அரசச் செல்வம் எல்லாம் விரைவில் உங்களது ஆய்கிடும். எழுதும்-(தந்தையைக் கொண்டு) ஓலை எழுதுமாறு செய்யுங்கள். செம் பூம் பைந்தொடை அரசர்-செவ்விய பூக்களினால் கட்டப்பெற்ற முதிராத அல்லது புதிய, மாலை அணிந்த அரசர். ஆகா - ஆகாது என்பதின் விகாரம்.

உங்கள் தந்தை எழுதினால், தந்தை சொல் ஏற்று இராம பிரான் கான் அடைந்ததுபோல், தருமனும் நாட்டை விட்டுத் தம்பியருடன்காடு சென்று விடுவான், நீங்கள் கருதிய வஞ்சனை வழி வேண்டா. அப்படிச் செய்தால் பாவமும் பழியும் உங்களைச் சார்தல் நேரும், என்று கூறியபடி. முழுது என்பது எஞ்சாமைப் பொருளது.

34. தீதினால் வரித்து நெஞ்சத் தீயவ ராடு மாயச்
சூதினால் வென்று கொள்கை தோற்றமும் புகழு மன்று

போதினான் முகனு மாலும் புரிசடை யவனுங் கேள்வி
ஆதிநான் மறையு முள்ள வளவுமிவ் வசை யறாதே.

[தீதினால் வரித்து நெஞ்சம் தீயவர் ஆடும் மாயம் சூதினால் வென்று கொள்கை தோற்றமும் புகழும் அன்று, போதில் நான் முகனும் மாலும் புரிசடையவனும், கேள்வி ஆதி நால் மறையும் உள்ள அளவும் இ வசை அறாது ஏ.]

**விளக்கம் :**—தீதினால் வரித்து - வஞ்சனையினால் அவரை வரச் செய்து. தோற்றம் - பெருமை. போதில் நான் முகன் - பிரும்மா. மால் - விஷ்ணு. புரிசடையவன் - சிவன். கேள்வி ஆதி நால் மறை - எழுதாக் கிளவியாகிய பழமையான நான்கு வேதங்கள். வசை அறாது - பழி நீங்காது. ஏ : அசை. தோற்ற மூமாம்.

சூதினால் பாண்டவர்களை வென்று ராஜ்யத்தைப் பறித்துக் கொண்டால், திரு மூர்த்திகளும், வேதங்களும் உள்ள அளவும் உங்களை விட்டுப் பழி அகலாது, என்று தன் உடன்பாடின் மையை விதுரன் தெரிவித்தபடி.

துரியோதனன் பதில்

35. என்றவ னுரைப்பக் கேட்டே யெரியெழு மனத்த னாகி
ஒன்றிய கேண்மைத் தந்தைக் கொருபுடை வரா முண்டோ
வன்றிறன் மைந்தர் வாழ்வு வாங்கியின் றெமக்குத் தந்தால்
புன்றொழில் வசையே யன்றிப் புகழ்கொலோ புகல்வ தம்மா.

[என்று அவன் உரைப்ப கேட்டே எரி எழு மனத்தன் ஆகி, ஒன்றிய கேண்மை தந்தைக்கு ஒரு புடை வாரம் உண்டோ! வல் திறல் மைந்தர் வாழ்வு வாங்கி இன்று எமக்கு தந்தால், புல் தொழில் வசையே அன்றி புகழ் கொலோ புகல்வது அம்மா!]

**விளக்கம் :**—ஒன்றிய கேணமை தந்தை - இரு திறத்தாரிச மும் ஒத்த அன்புடைய திருதராட்டிரன். (அத்தகைய எங்கள் தந்தை) ஒரு புடை வாரம் உண்டோ - பக்ஷபாதமாய் ஒருவ அன்பு கொள்ளல் தக்கதாமோ. வல்திறல் மைந்தர் - பஞ்ர்

பாண்டவர்கள். (அவர்களது வாழ்வை எமக்கு வாங்கித் தந்தால்) புகல்வது புல் தொழில் வசையே அன்றி, புகழ் கொலோ - எல்லோராலும் சொல்லப் படுவதான (ஓலை எழுதி ராஜ்யத்தை கவர்ந்து எமக்கு அளிப்பதாகிய) இழிவுடைய செயலினால் விளைவது பழியே அல்லாமல், புகழ் ஆமோ. அம்மா: அசை; பட்சபாதச் செயலின் இழிவைக் குறித்து துரியோதனன் வியக்கும் கருத்தினது.

பாண்டவர்க்கு ஓலை போக்கி, அவரது வாழ்வை எங்களுக்கு வாங்கித் தருவது, எம் தந்தைக்குப் பழி கூட்டி வைக்குமாதலால் சூதே சிறந்த வழி என்று துரியோதனன் விதுரனுக்கு எதிர் உரைக்கும் கருத்தது இது. வாரம் - பட்சபாதம்; அன்பு. வல் திறல் - (ஒரு பொருட் பன்மொழி) வலிமை மிகுந்த.

36. நினக்கிது தொழிலா லென்று நேயமு மவர்கண்
மேலே
எனக்குயிர்த் தந்தை நீயென் றுயானுனை மகிழ்ந்து
காண்பன்
உனக்குமுன் கிளைக்கு நாளு முண்டியும் வாழ்வு
மிங்கே
மனக்கருத் தங்கே யென்றான் மாசுணத் துவசன்
மாதோ.

[நினக்கு இது தொழில் (ஆல்), என்றும் நேயமும் அவர்கள் மேலே, எனக்கு உயிர் தந்தை நீ என்று யான் உனை மகிழ்ந்து காண்பன், உனக்கும் உன் கிளைக்கும் நாளும் உண்டியும் வாழ்வும் இங்கே, மனம் கருத்து அங்கே என்றான், மாசுணம் துவசன், மாதோ.]

**விளக்கம்:—** உனக்கு இவ்வாறு பக்கஞ் சார்ந்து பேசலே தொழில் ஆயிற்று; எப்பொழுதும் அன்பும் பாண்டவரிடத்தே ஆகும். 'நீ என் உயிருக்கு ஒப்பான தந்தை,' என்று கொண்டு, நான் உன்னை மகிழ்ச்சியோடு நோக்குவேன்; உனக்கும் உன் சுற்றத்திற்கும் நாள் தோறும் உணவும், செல்வ வாழ்வும் இங்கே (என்னிடத்திலே). ஆனால் மனக் கருத்தோ (அன்போ) அங்கே (பாண்டவரிடத்திலே), என்று (துரியோதனன் வெகுண்டு கூறினான்). மாசுணம் - பாம்பு. துவசம் - கொடி. மாசுணத்துவசன் - அரவக் கொடியோனான துரியோதனன். மாதோ : அசை.

உண்ட வீட்டுத் துரோகம் செய்பவன் என்று விதுரனைத் துரியோதனன் இகழ்ந்தபடி.

விதுரன் சினந்து கூறல்

37. மைந்தனங் குரைத்த மாற்ற மனத்தினை யீரப் பின்னும்
வெந்திறல் விதுர னுற்று விளம்புவ னென்ப மாதோ
புந்தியின் மறுவி லாதோய் புதல்வரி லொருசா ரன்பு
தந்தையர் கில்லை யென்றா யானுமத் தந்தை யன்றோ.

[மைந்தன் அங்கு உரைத்த மாற்றம் மனத்தினை ஈர, பின்னிம் வெம் திறல் விதுரன் உற்று விளம்புவன் என்ப மாதோ; புந்தியில் மறு இலாதோய், புதல்வரில் ஒரு சார் அன்பு தந்தையர்க்கு இல்லை என்றாய், யானும் அ தந்தை அன்றோ.]

**விளக்கம்** :—மாற்றம் - வார்த்தை ஈர - பிளக்க; மிக வருத்த. உற்று - பொறுமை உற்று. என்ப, மாதோ; அசைகள். புந்தியில் மறு இலாதோய் - மனத்தில் குற்றம் இல்லாதவனான மகனே (துரியோதனனே). இந்த விளி. மன மாசு உடையவனே!' என்று கூறும் குறிப்பினது.

"புதல்வர்களுள் ஒரு சாராரிடத்துத் தந்தையர்க்கு அன்பு இருப்பதற்கு இல்லை என்றாய்; நானும் அத் தந்தையரில் ஒருவன் அன்றோ? அவ்வாறாக, நீ என்னைப் பழிப்பது மாசுடைய உன் மனத்தின் காரியம் ஆகும்." என்று விதுரன் பதில் மொழியும் கருத்தது.

மகன் பழித்தானேனும், அதைப் பொறுத்தவனாய் மேலும், இதமான வார்த்தைகளைப் பேசினான். என்பதாம்.

38. நீங்களு மவரு நேய நெறிமுறை தவறா தென்றும்
வாங்குநீ ருததி யாடை மண்ணின்மேல் வாழ்த லுற்றால்
பாங்கலா வரச ரெல்லாம் பணிந்துநும் வாயி னிற்பர்
ஓங்கிய புகழும் வாழ்வு மொருப்பட வளரு மன்றே.

[நீங்களும் அவரும் நேயம் நெறிமுறை தவறாது என்றும் வாங்கு நீர் உததி ஆடை மண்ணின்மேல் வாழ்தல் உற்றால், பாங்கு அலா அரசர் எல்லாம் பணிந்து நும் வாயில் நிற்பர், ஓங்கிய புகழும் வாழ்வும் ஒருப்பட வளரும் அன்றே.]

**விளக்கம் :—**அவர் - பாண்டவர். நேய நெறிமுறை தவறாது - உறவாகிய பாதையின் முறைமை கடவாமல், அதாவது அன்பு கொண்டு. வாங்கு - வளைந்த, சூழ்ந்த. நீர் தங்கும் இடமாகிய கடல். கடலை பூமிதேவியின் ஆடையாகக் கூறல் கவி மரபு. பாங்கு அலா அரசர் - பகை அரசர். ஒருப்பட- ஒருசேர.

சகோதரர்களாகிய பாண்டவர்களுடன் உறவிற்குரிய நேசத்தோடு வாழ்ந்தால், புகழும் செல்வ வாழ்வும் ஓங்கி வளர்வதாகிய நன்மை உண்டாகும், என்று விதுரன் மகனுக்கு எடுத்துரைக்கும் கருத்தது செய்யுள்.

39. உங்களி னவரு நீரு முளம்பிரிந் தெதிர்த்தீ ரானால்
தங்களி னெதிர்ந்தா ரம்மா குருகுலத் தலைவ
ரென்னாப்
பொங்களி நிகழுங் கஞ்சப் புரவல னொழிவு கண்ட
திங்களி னுயர்ச்சி போலத் தெவ்வருந் திகழ்வ
ரம்மா.

[உங்களின் அவரும் நீரும் உளம் பிரிந்து எதிர்த்தீர் ஆனால். தங்களின் எதிர்ந்தார் அம்மா குருகுலம் தலைவர் என்னா, பொங்கு அளி நிகழும் கஞ்சம் புரவலன் ஒழிவுகண்ட திங்களின் உயர்ச்சி போல தெவ்வரும் திகழ்வர், அம்மா.]

**விளக்கம் :—**அவரும் நீரும் உளம்பிரிந்து உங்களின் எதிர்த்தீர் ஆனால், குருகுலத்தலைவர் தங்களின் எதிர்ந்தார் என்னா, பொங்கு அளி நிகழும்...திகழ்வர்,—என்பது அன்வயம். அம்மா, என்பது வியப்பிடைச் சொல்; ஒற்றுமையாக இருக்க வேண்டியவர் பகைக்கின்றனரே, என்று வியந்தபடி.

உளம்பிரிந்து மனம் வேறுபட்டு. எதிர்ந்தால் - பகைத்துப் போர் செய்தால். பொங்கு அளி நிகழும் கஞ்சப்புரவலன் - களிக்கும் வண்டுகள் மொய்த்தற்கு இடமான தாமரை மலரின் தலைவனான சூரியன். ஒழிவுகண்ட - அவன் அத்தமில்லை (மறைதலை)க் கண்ட. திங்கள் - சந்திரன். தெவ்வர் - பகைவர்.

முன் செய்யுளில் ஒன்றுபட்டு வாழ்தலினால் ஏற்படும் நன்மையை எடுத்துக்காட்டிய சிறிய தந்தை, இச்செய்யுளால், பகைப்பதால் ஏற்படும் கேட்டை (எடுத்துக் காட்டும் கருத்தது செய்யுள் 'பகலில் ஒளி கெட்டுக்கிடக்கும் சந்திரன், சூரியன் மறையவும் ஒளிமிகுந்து விளங்குவது போல். உங்கள் மாறுபாடு,

வலியடங்கிக் கிடந்த பகை வேந்தர்கள் தலை தூக்குவதற்கு இடந்தரும். எனவே, பகை ஒழிந்து, நட்புடன் அவர்களோடு கலந்து வாழ்தலே நலம்,'' என்று விதுரன் எடுத்துக்காட்டியபடி. கஞ்சம் - நீரில் தோன்றுவதாகிய தாமரை. பகலில் மலர்ந்து நிற்குங் காரணத்தால், சூரியன் தாமரையின் தலைவன் ஆகின்றான்.

40. ஆதலா லுறுதி சொன்னே னாமுறை தெரிந்து
கோடி
ஏதிலார் போல யானு மினியுனக் கியாதுஞ்
சொல்லேன்
தீதலா துணரா வஞ்சச் சிந்தையார் பரிந்து கூறும்
கோதலா துனக்கிங் கேலா தெனச்சில கூறி
னானே.

[ஆதலால், உறுதி சொன்னேன், ஆம் முறை தெரிந்து கோடி, ஏதிலார்போல யானும் இனி உனக்கு யாதும் சொல்லேன்; தீது அலாது உணரா வஞ்சம் சிந்தையார் பரிந்து கூறும் கோது அலாது உனக்கு இங்கு ஏலாது, என சில கூறினான், ஏ.]

**விளக்கம் :**—உறுதி - நன்மை. ஆம் முறை தெரிந்து கோடி - நல்லது ஆகும் மார்க்கத்தைத் தெரிந்துகொள்வாயாக. ஏதிலார்- அயலார், (நட்பு, பகை என்ற தொடர்பு இல்லாத அன்னியர்) - பரிந்து - அன்புகொண்டு; அதாவது அன்புடையவர்போல் எண்ணிக் கொண்டு. (அத் தீயர் கூறும்) கோது அலாது - குற்றமுடைய (உனது கேட்டிற்குரிய) வார்த்தை அல்லாமல். இங்கு - இப்பொழுது. உனக்கு ஏலாது - உனக்கு (நான் சொன்ன அநுகூலமான வார்த்தை) உடன்படக் கூடியதாகாது, (என்று சில வார்த்தைகளை விதுரன் கூறினான்).

உனக்கு நன்மை பயக்க வல்லதைக் கூறினேன். நன்மையாம் வழியை ஆராய்ந்து, அவ்வழி நிற்பாயாக; தீமை அலாது எதையும் அறியாத வஞ்சகர் கூறும் கோதுடைய மொழிகளே உனக்கு ஏற்புடைத்தாகின்றது. எனவே, இனி உனக்கு நான் ஒன்றும் சொல்லாது, உறவுத் தொடர்பு இல்லாத அயலார்போல் ஒதுங்கி நிற்பேன், என்று விதுரன் கூறும் கருத்தது இது.

ஏதிலார், என்பதற்குப் பகைவர் என்றும் பொருள் கொள்ளலாம். ''நெஞ்சில் நன்மைக்கு இடமில்லாத் தீயரது சொல்தான் உனக்கு உகந்ததாய்த் தோன்றும். எனது உறுதிமொழி உனக்கு

ஏற்கக் கூடியதாய் இராது. உன் கேட்டிற்கு அடிகோலும் அப் பகைவர் போல், இனி உனக்கு நான் ஒன்றும் சொல்ல மாட் டேன்.'' என்பது பொருளாகும்.

41. நிறுத்தறம் வளர்ப்போ னெஞ்சி னீதியுங் குரவ ரேவல்
மறுத்தெதி ருரைககு மென்பால் வடுவுநீ வரைந்து கண்டாய்
செறுத்தவ ராவி கொள்வா யடியனேன் செய்த தெல்லாம்
பொறுத்தரு ளென்னக் கையாற் போற்றினன் முறுவல் செய்தான்.

[நிறுத்து அறம் வளர்ப்போன் நெஞ்சின் நீதியும், குரவர் ஏவல் மறுத்து எதிர் உரைக்கும் என்பால் வடுவும் நீ வரைந்து கண்டாய்; செறுத்தவர் ஆவி கொள்வாய், அடியனேன் செய்தது எல்லாம் பொறுத்தருள் என்ன (துரியோதனன்) கையால் போற் றினன் முறுவல் செய்தான்.]

**விளக்கம் :**—அறம் நிறுத்து வளர்ப்போன் - தர்மத்தை நிலையுறச் செய்து வளர்ப்பவனான தருமன். குரவர் - பெரி யோர். ஏவல் கட்டளை போன்ற வார்த்தை. வடு - குற்றம் வரைந்துகண்டாய்- ஆய்ந்து வரையறுத்து உணர்ந்துகொண்டாய் ''செறுத்தவர் (பகைவர்) ஆவி கொள்வாய்.'' என்று மகன் விதுரனை அழைத்தபடி. கையால் போற்றல் - கைகூப்பி வணங்கல்.

துரியோதனன் விதுரனைப் பழிக்கும் கருத்தது இது. எனவே, இது **வஞ்சப் புகழ்ச்சி அணி**யை உட்கொண்டது. 'ஓலை போக்கி னால் ஐவர் மறுக்காது வேண்டியன தருவார்' என்றும், துரியோ தனனைச் சார்ந்து நிற்பாரை, 'தீது அலது உணராவஞ்சகர்' என்றும் விதுரன் கூறியது பற்றி, ''அறம் வளர்ப்போன் நெஞ்சின் நீதியையும், மறுத்து எதிர் உரைக்கும் என்பால் வடுவும் ஆய்ந்து எல்லையிட்டு அறிந்து கொண்டாய்,'' என்று துரியோதனன் விதுரனைப் பரிகசித்தான் ஆயிற்று வடு - நீங்காது நிலைநிற்கும் குற்றம்.

42. செழுந்திரு விரும்பு மார்பன் செப்பிய கொடுமை கேட்டு
விழுந்திரண் மாலைத் திண்டோள் விதுரனும் வெகுண்டு முன்னித்

தொழுதகை மௌலி வேந்தன் சூழ்ச்சியிற் கிசைவு
றாமல்
எழுந்துதன் கோயில் புக்கா னிகலரி யேறு
போல்வான்.

[செழும் திரு விரும்பும் மார்பன் செப்பிய கொடுமை கேட்டு, விழும் திரள் மலை திண் தோள் விதுரனும் வெகுண்டு, முன்னி, தொழுதகை மௌலிவேந்தன் சூழ்ச்சியிற்கு இசைவு உறாமல், எழுந்து தன் கோயில் புக்கான், இகல் அரி ஏறுபோல்வான்.]

**விளக்கம் :**—செழுந்திரு விரும்பும் மார்பனும், வேந்தர் பலர் தன்னை வணங்கும் தன்மையை உடைய (வணங்கா) முடி வேந்தனுமாகிய துரியோதனன் சொன்ன நிட்டூர வார்த்தையைக் கேட்டு. இகல் ஏறு போல்வானும், திரள்மாலை விழும் (தொங்கும்) திண்தோள் விதுரனும், வெகுண்டு, (ஆனால் சிறிது) முன்னி (ஆலோசித்து, அவனது) சூழ்ச்சியிற்கு இசைவுறாமல், எழுந்து தன் கோயில் புக்கான்,—என்பது அன்வயம்.

செழுந்திரு விரும்பும் மார்பன் - வீரலட்சுமி விரும்பும் மார்பன். கொடுமை - நிஷ்டூர வார்த்தை. திரள்மாலை - மலரின் நெருக்கமுடைய மாலை. அரியேறு - ஆண் சிங்கம் (ஆண் சிங்கம் போன்ற விதுரன்,)

அரசர் திருமாலின் அம்சம் ஆவர். என்றல் பற்றித் துரியோதனன், "செழுந்திரு விரும்பும் மார்பன்," எனப்பட்டான். (சூழ்ச்சி - இன் - கு) சூழ்ச்சியிற்கு, இன் சாரியை. கொடுமை, ஆகுபெயராய்க் கொடுமையுடைய வார்த்தையைக் குறித்தது.

### மண்டபம் கட்டல்

43. புரிவிலா மொழிவி தூரன் போகலும் புரிவி
லொன்றும்
சரிவிலா வஞ்ச மரயச் சகுனியுந் தம்பி மாரும்
விரிவிலா மனத்தோ டெண்ணும் விசாரமே விசார
மாக
வரிவிலரன் விரைவி னீண்டோர் மண்டபஞ் சமைக்க
வென்றான்.

[புரிவு இலாமொழி விதூரன் போகலும், புரிவில் ஒன்றும் சரிவு இலா வஞ்சம் மாயம் சகுனியும், தம்பிமாரும், விரிவு இலா மனத்தோடு எண்ணும் விசாரமே விசாரம் ஆக, வரிவிலான் விரைவின் ஈண்டு ஓர் மண்டபம் சமைக்க, என்றான்,]

**விளக்கம்:**—புரிவு-பரிவு-அன்பு, விருப்பம். விதூரன்-விதுரன் (நீட்டல் விகாரம்). புரிவில்-தொழில் செய்வதில், ஒன்றும் சரிவு இலா-ஒரு சிறிதும் பின் வாங்குதல் இல்லாத. வஞ்சக மாயம். (ஒரு பொருட் பன்மொழி) வஞ்சனை மிகுந்த. விரிவு இலா மனம்-அன்பினால் விரிவுறாத சுருங்கிய சிறுமனம். விசாரம் விசாரமாக - (அசுகையின் சுருங்கிய மனத்தினால் செய்யும்) ஆலோசனையே தக்க ஆலோசனையாக. விரிவிலான்-துரியோதனன். ஈண்டு ஓர் மண்டபம் சமைக்க என்றான்- இப்பொழுதே (காலதாமதமின்றி) ஒரு மண்டபத்தைக் கட்டுக, என்று கட்டளையிட்டான்.

தனது விருப்பத்திற்குரிய வார்த்தைகளைப் பேசாத விதுரன் அகன்றபின், தம்பியரும் சகுனியுமாகச் சூழ்ந்து செய்த முடிவே தக்கதாகக் கொண்டு, துரியோதனன் மண்டபத்தை உடனே நிர்மாணிக்குமாறு கட்டளையிட்டான், என்பது பொருள்.

44\. பெருந்தகை ஏவன் மாற்றம் பிற்பட முற்பட் டோடி
இருந்ததொல் வேந்தர் தத்த மிருக்கையி னியன்ற
வெல்லாம்
அருந்திறன் மள்ள ராலு மணிமணித் தேரி னாலும்
பொருந்தவே கொணர்வித் தாங்கட் பொற்சுவ
ரியற்றி னாரே.

[பெருந்தகை ஏவல் மாற்றம் பிற்பட முற்பட்டு ஓடி. இருந்த தொல் வேந்தர் தம் தம் இருக்கையின் இயன்ற எல்லாம் அரும் திறல் மள்ளராலும், அணிமணி தேரினாலும் பொருந்தவே கொணர்வித்து, ஆங்கண் பொன்சுவர் இயற்றினார், ஏ.]

**விளக்கம்:**—பெருந்தகை-அவனைச் சார்ந்தாரால் பெருமைக் குணம் உடையவன் என்று கொண்டாடப்படும் துரியோதனன். ஏவல் மாற்றம்-கட்டளை மொழி. பிற்பட - பின்னாகும்படி. இருந்த தொல்வேந்தர்-(ஆலோசனை சபையில்) இருந்த, நீண்ட நாள் பழக்கத்தால் நெருங்கிய நட்புடைய வேந்தர். முற்பட ஓடி-மிக விரைந்து சென்று. இருக்கை - இருக்கும் இடம். இயன்ற எல்லாம்-தங்கள் மனையில் பொருந்தியுள்ள எல்லாப் பொருள்களையும். அரும் திறல் மள்ளர்- அரிய ஆற்றலை உடைய வேலையாட்கள்; அணி மணித்தேர்-அழகிய மணிகள் கட்டிய தேர். பொருந்தவே கொணர்வித்து - தக்கவிதமாகக் கொண்டுவரச் செய்து. பொன் சுவர் இயற்றினார்-பொன்னால் சுவரை கட்டச் செய்தார் (பிறவினைப் பொருளது)

நட்பின் நெருங்கிய அரசர்கள், மிக விரைவில் சென்று தங்களிடமுள்ள பொருள்களை, ஆட்களைக் கொண்டும் தேர்களில் ஏற்றியும் கொண்டுவந்து சேர்க்க, பொன் சுவரீ எழுப்பிக் கட்டிடம் கட்டப்பட்டது,— என்பதாம்,

ஏவல் மாற்றம் முன்னது. அரசர்கள் சென்றது பின் நிகழ்ச்சி. அவ்வாறாக, முன்னதைப் பின்னதாகவும், பின்னதை முன்னதாகவும் அமைத்துக் கூறுவது **முறையில் உயர்வு நவிற்சி அணியின்** பாற்படும். ஏவலை விரைந்து நிறைவேற்றினார்கள், என்பது பொருள். முற்பட. பிற்பட, முரண்தொடை.

45. சங்கையில் சிற்ப நுண்ணூற் றபதியர் தகவு கூரச்
செங்கையி னமைத்த கோலச் சித்திரத் தூண
நாட்டி
அங்கையி லருண ரத்நத் தணிகொளுத் திரமு
மேற்றிக்
கங்கையி னுயர்ந்த முத்தின் கற்றையான் முற்றும்
வேய்ந்தார்.

[சங்கை இல் சிற்பம் நுண் நூல் தபதியர் தகவுகூர, செம் கையின் அமைத்த கோலம் சித்திரம் தூணம் நாட்டி, அங்கு ஐயில் அருணம் ரத்நத்து அணிகொள் உத்திரமும் ஏற்றி, கங்கையின் உயர்ந்த முத்தின் கற்றையால் முற்றும் வேய்ந்தார்.]

**விளக்கம்:—** சங்கையில்... தபதியர்-சந்தேகத்திற்கு இடமில்லாதபடி நுட்பமான சிற்ப சாத்திரத்தில் தேர்ச்சி பெற்ற சிற்பிகள். தகவுகூர-அழகுமிக. செங்கையின் அமைத்த-செய்து செய்து பழகிய சிறந்த கைகளினால் செய்த. கோலச் சித்திரத் தூணம் நாட்டி- அழகிய சித்திர வேலைப்பாடு உடைய தூண்களை நாட்டி. அங்கு ஐயில்... உத்திரமும் ஏற்றி-அத் தூண்களிடத்தே அழகிய சிவந்த ரத்தினங்கள் பதிக்கப்பெற்ற அழகு கொண்ட உத்திரங்களையும் ஏற்றி. கங்கையின் உயர்ந்த முத்தின் கற்றை-கங்கையில் உண்டான உயர்ந்த முத்தின் கூட்டம். முற்றும் வேய்ந்தார்-மேல் கூரை முழுவதையும் மூடினார்கள்.

ஐயில் - ஐ - இல்; ஐ - அழகு. இல் சாரியை. அருணம் - செந்நிறம். செல்வ மிகுதியை இவ்வாறு கூறல் **வீறுகோள் அணி ஆகும்.**

46. ஓவியஞ் சிறக்கத் தீட்டி யொண்கொடி நிரைத்துச்
செஞ்சொல்
காவிய மக்கட் கெல்லாங் கருத்துறு கவினிற் றாகி
வாவிய புரவித் தீண்டேர் மன்னவ நினைவுக் கேற்ப
ஏவிய வினைஞர் தம்மா லியல்புறச் சமைந்த
தன்றே.

[ஓவியம் சிறக்க தீட்டி, ஒள்கொடி நிரைத்து செம்சொல் காவியம் மக்கட்கு எல்லாம் கருத்து உறு கவினிற்று ஆகி, வாவிய புரவி திண் தேர் மன்னவன் நினைவுக்கு ஏற்ப, ஏவிய வினைஞர் தம்மால் இயல்பு உற சமைந்தது அன்றே.]

**விளக்கம்:**—சுவர்களில் சித்திரங்களை சிறந்த முறையில் எழுதியும், விளக்கமுடைய திரைச் சீலைகளை வரிசையுறக் கட்டியும் (அலங்கரிக்கப்பெற்ற அம் மண்டபம்) புலவர்களுக்கு எல்லாம், அவர் மனம் விட்டு நீங்காது நிலைத்திருக்கும் தன்மயை உடைய அழகினதாய்,—என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். வாவிய - தாவிச் செல்லும் கதி நலத்தை உடைய. மன்னவன் துரியோதனன். ஏவிய வினைஞர் - அவனால் ஏவப் பெற்ற கட்டிட வேலையாளர், (அவ்வினைஞர் தம்மால்) இயல்புற சமைந்தது - பொருத்தமுறக் கட்டப் பெற்றது.

செஞ்சொல் காவிய மக்கள். இனிய சொற்களால் காவியம் பாட வல்ல புலவர் பெருமக்கள். புவவர்கள். இம்மண்டபத்தைக் கண்டால், மனங் கவரும் அதன் அழகில் ஈடுபட்டு வர்ணித்து மகிழும்படி, பலவகைச் சிறப்புக்களை கொண்டிருந்தது என்பது, இரண்டாவது அடி தெரிவிக்கும் விஷயமாகும். செஞ்சொல் - அரிய பொருளை எளிதே உணர்த்தும் நலமுடைய சொல்.

47. மன்னவைக் கான பைம்பொன் மண்டபஞ் சமைந்த
தென்று
தன்னவைக் குரியோர் சொல்லச் சகுனியுந் தானு
நோக்கிச்
சொன்னவைக் கேற்ற தென்று தொழுதகு தாதை
தன்பால்
மின்னவைத் தொளிரும் வேலான் மேவினன்
விளம்ப லுற்றான்.

[மன் அவைக்கு ஆன பைம்பொன் மண்டம் சமைந்தது என்று தன் அவைக்கு உரியோர் சொல்ல, சகுனியும் தானும் நோக்கி, சொன்னவைக்கு ஏற்றது, தொழுதகு தாதை தன்பால் மின்னைவைத்து ஒளிரும் வேலான். மேவினன் விளம்பல் உற்றான்]

ராஜசபைக்குத் தகுந்ததான பைம்பொன் மண்டபம் கட்டப் பெற்றது என்று தனது சபைக்கு உரியரானவர் சொல்ல, மின்னலை வைத்த வேலான் ஆன துரியோதனன். தானும் சகுனியு ஆகச் சென்று மண்டபத்தை நோக்கி, ஆலோசித்துச் சொன்ன காரியத்திற்கு ஏற்றது என்று மகிழ்ந்து கூறி, (அதன்பின் அவன் தனது) தொழுதகு தந்தையாகிய திருராட்டிர னிடம் சென்றவனாய் (அவனிடம்) கூறலானான் என்பது பொருள்.

தன் அவைக்கு உரியோர் -துரியோதனனைச் சேர்ந்தவர்கள். நோக்கி - மண்டபத்தின் அழகைப் பார்த்து, சொன்னது - ஆலோசித்து முடிவு செய்த சூதாடல் ஆகிய காரியம். தொழுதகு தாதை - வணங்கத்தக்க தந்தை. வைத்த - மின்னலை ஒத்த பிரகாசம் உடைய (வைத்த: உவமைப் பொருளது).

சொல் - நவைக்கு - ஏற்றது என்றும் பிரியும். அப்பொழுது புலவர்களது ஆற்றலுடைய சொற்களும் அம்மண்டபத்தின் எழிலை வர்ணிக்க முடியா எளிமையை உறுதலாகிய நவை (குற்றம், பழுது) உறச் செய்ய வல்லது, என்று பொருள்படும்.

48. அரும்பெற லைய கேட்டி யடியனேன் கருத்து முற்றக்
கரும்புய றவழுஞ் சென்னிக் கதிர்மணிக்கூட மொன்று
பெரும்புகழ் நகரி னீண்டுச் சமைத்தனன் பெருமை காண
வரும்படி தூதொன் றேவுன் மந்தரை விரைவி னென்றான்.

(அரும் பெறல் ஐய, கேட்டி அடியனேன் கருத்து முற்ற, கரும் புயல், தவழும் சென்னி கதிர் மணி கூடம் ஒன்று பெரும் புகழ் நகரின் ஈண்டு சமைத்தனன்; பெருமை காண, வரும்படி தூது ஒன்று ஏவு உன் மைந்தரை, விரைவின் என்றான்.]

**விளக்கம்:—**அரும் பெறல் ஐய, என்று துரியோதனன் தந்தையை விளித்து (நான் சொல்வதை) கேட்டி (கேட்பாயாக என்றான்) கருத்து முற்ற - (பாண்டவரின் வாழ்வை அழிப்ப தாகிய) என் கருத்து நிறைவெய்தும் பொருட்டு. கரிய மேகங்கள் தங்கும்படி உயரமான மேலிடத்தை உடைய, பிரகாசிக்கும் இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற மண்டபம் ஒன்றைப் பெரும் புகழை உடைய அத்தினபுரியில் இப்பொழுது கட்டி முடித்தேன்; (அதன்) பெருமை காணுதற்கு வரும்படி, உன் (சொற்கடவா) மைந்தர்களான பாண்டவர்க்கு விரைவில் தூது ஒன்று போக்கு வாயாக.— என்று (துரியோதனன்) வேண்டிக் கொண்டான், — என்பது பொருள்,

சென்னி - தலை, மேலிடம். தூது ஒன்று ஏவு - ஒரு தூதுரை (ஓலையோடு) அனுப்புக. மைந்தரை - (உருபு மயக்கம்) மைந்தருக்கு. புயல் தவழும் சென்னிக்கூடம், என்றது உயர்வு நவிற்சி.

49. மகன்மொழி நயத்து கேட்டு வாழ்வுறு தந்தை
தானும்
மிகநயந் துருகி நல்ல விரகினால் வெல்ல லுற்றீர்
அகநெடும் போர்செய் தாலு மைவரை யடர்க்கொ
ணாது
சகுனியை யன்றி வேறார் தரவல்லார் தரணி
யென்றான்

[மகன் மொழி நயந்து கேட்டு வாழ்வு உறு தந்தை தானும் மிக நயந்து உருகி, நல்ல விரகினால் வெல்லல் உற்றீர்; அகம் நெடும் போர் செய்தாலும் ஐவரை அடக்க ஒண்ணாது சகுனியை அன்றி வேறு ஆர் தரவல்லார் தரணி? என்றான்.]

**விளக்கம் :—**வாழ்வு உறு தந்தை - செல்வமுடைய சிறந்த வாழ்க்கையில் பொருந்திய தந்தை. விரகு - வஞ்சனை உடைய உபாயம். அகம் - (கம் - சுகம்) துன்பம். அடர்க்க - போர் செய்து வெல்ல, அல்லது அழிக்க. போரிலாவழி பாண்டவரை வென்று அவரது ராஜ்யத்தை விரகினால் கவர்ந்து தரவல்லார் சகுனி அன்றி வேறு யார் உளர், என்று திருதராட்டிரன் கூறினான்,—என்பது ஈற்றடியின் பொருள்.

நயந்து - விரும்பி, மகிழ்ந்து, தரணி - பூமி; இங்கே, பாண்டவர்க்குரிய பகுதி. சகுனியின் துணைகொண்டு

விரகினால் பாண்டவரை அழித்தலில், திருதராட்டிரன் உடன்பாடு உடையவன், என்பது கருத்து.

50. விழியிலா வென்றி வேந்தன் விதுரனை அழைத்து நீபோய்
மொழியிலா ருலகின் மற்றுன் மொழியினை மறுக்க வல்லார்
பழியிலா விசை கொண்ணீதிப் பாண்டவர் வந்துன் மைந்தர்.
வழியிலா யொழுகு வண்ண மருட்டிநீ கொணர்தி யென்றான்.

[விழிஇலா வென்றி வேந்தன், விதுரனை அழைத்து, "நீ போய் மொழியில், ஆர் உலகில் மற்று உன் மொழியினை மறுக்க வல்லார்? பழிஇலா இசை கொள் நீதி பாண்டவர் வந்து உன் மைந்தர் (துரியோதனாதியர் விருப்பும்) வழியில் ஆய் ஒழுகும் வண்ணம் மருட்டி நீ கொணர்தி" என்றான்.]

**விளக்கம் :**—விழிஇலா வெற்றி வேந்தன் - திருதராட்டிரன், நீ போய் மொழியில், உலகில் உன் மொழியினை ஆர் மறுக்க வல்லார்? (மற்று: அசை). இசை - கீர்த்தி. வந்து - பாண்டவர் இங்கே வந்து. உன் மைந்தர் வழியில் நடக்கும்படி. ஆய் - உன் மைந்தர்களான துரியோதனாதியர் விரும்பும் வழியில் நடக்கும்படி. மருட்டி - (உன் சொல் சாமர்த்தியத் தினால்) மயங்க செய்து. கொணர்தி - அழைத்து வருக.

சூதினால் பாண்டவரை வீழ்த்துச் சூழ்ந்த சதிக்குத் துணை நிற்பதால், **விழியிலா வேந்தன்**, எனப்பட்டான். அதாவது ஊனக்கண்ணோடு ஞானக் கண்ணும் இல்லாத குடிகேடன், என்ற கருத்தது. எனவே, **விழியிலா** என்ற அடை கருத்துடை அடை அணியை உட்கொண்டதாகின்றது.

இரண்டாவது அடி, விதுரனது சொல் திறனைத் திருதராட்டின் பாராட்டும் கருத்தது, விதுரனைத் தூதிற்கு இசைவிக்க இவ்வாறு பாராட்டினான், என்க. தன் மக்களது கருமத்திற்கு விதுரன் எதிராய் இராமை வேண்டி. **உன் மைந்தர்**, என்றான் ஆயிற்று. பழியிலா இசைகொள் நீதிப் பாண்டவர் - பழிப்பிற்கு இடமில்லாத புகழைப் பெற்றவர்களும், நீதி நெறியில் நிலைத்திருப்பவர்களுமான பாண்டவர்கள்.

## விதுரன் தூது போதல்

51. தம்பியர் விழைவாற் கூடஞ் சமைத்தபே ரழகு காண
இம்பர்வந் தெமையு மெய்தி யேகுக விரைவி
னென்னப்
பைம்பொனி னோலை மீது பண்புற வெழுதி
யின்னே
எம்பியு மேகு கென்றா னேவலி னவனும்
போனான்.

[தம்பியர் விழைவால் சமைத்த பேர் அழகு காண இம்பர் வந்து, எமையும் எய்தி ஏகுக விரைவின் என்ன, பைம் பொனின் ஓலை மீது பண்புற எழுதி, இன்னே எம்பி (உம்) ஏகுக, என்றான், ஏவலின் அவனும் போனான்.]

**விளக்கம் :—** தம்பியர் - துரியோதனாதியர். விழைவு - விருப்பம். இம்பர் - அத்தினபுரி நகரம். எமையும் - (எம்மையும்) என்னையும். எய்தி - என்னையும் சந்தித்து, அதாவது பார்த்துவிட்டு. பைம்பொனின் ஓலை - பசும் பொன்னால் செய்த ஓலை. பண்புற எழுதி - அழகாக எழுதச் செய்து. இன்னே - இப்பொழுதே (விரைவைக் குறிக்கும் இடைச் சொல்.) எம்பி - தம்பியாகிய நீ; (உம்: இசைநிறை). எம்மையும் என்பதிலுள்ள உம்மை எச்ச உம்மை. மண்டபம் காண்பதோடு என்னையுங் காண வரவேண்டும், என்ற பொருட்குறிப்பினது.

52. காரெனக் களிறு சுற்றக் காற்றெனப் புரவி யீண்டத்
தேரினுக் கொருவன் றன்னைச் சிலம்பெனத்
தேர்கள் சூழ
வீரரிற் பலரும் போற்ற விதுரனு மிரண்டு நாளால்
பாரினுக் குயிரே போலும் பாண்டவர் நகரி
சேர்ந்தான்.

[கார் என களிறு சுற்ற, காற்று என புரவி ஈண்ட, தேரினுக்கு ஒருவன் தன்னை சிலம்பு என தேர்கள் சூழ, வீரரில் பலரும் போற்ற விதுரனும் இரண்டு நாளால் பாரினுக்கு உயிரே போலும் பாண்டவர் நகரி சேர்ந்தான்.]

**விளக்கம் :—** தேர் வீரரில் சிறந்தவனாகிய விதுரனும், தன்னை மேகங்கள் போல் யானைகள் சுற்றி வரவும், காற்றை ஒத்த வேகத்தை உடைய குதிரைகள் நெருங்கி வரவும், மலைகள்

எனத் தேர்கள் சூழ்ந்து வரவும், வீரர் பலர் போற்றி கூறவும், இரண்டு நாள் அளவில், பூமிக்கு உயிர் போன்றவர்களான பாண்டவரின் இந்திரப் பிரத்தம் என்ற நகரை அடைந்தான், என்பது பொருள். நாளால்; உருபு மயக்கம்.

வேறு

53. புரியு மொண்கதிர் கவினுறு பொலிவினாற்
பொன்னுல காமென்ன
அரிய பைம்பொனின் பணிகளி னிறைந்தசீ
ரளகைமா நகரென்னத்
தெரியு மன்புட னறங்குடி யிருப்பதோர்
தெய்வவான் பதியென்ன
விரியும் வெண் கொடிப் புரிசைசூழ் வளநகர்
விழிகளித் திடக்கண்டான்.

[புரியும் ஒள் கதிர் கவின் உறு பொலிவினால் பொன் உலகு ஆம் என்ன, அரிய பைம்பொனின் பணிகளின் நிறைந்த சீர் அளகை மாநகர் என்ன, தெரியும் அன்புடன் அறம்குடி இருப்பது ஓர் தெய்வம் வான்பதி என்ன, விரியும் வெள் கொடி புரிசை சூழ் வளம் நகர் விழி களித்திட கண்டான்.]

**விளக்கம்** :—புரியும் - செய்யும், விரும்பும், ஆடும், வீசும். வீசுகின்ற அல்லது விருப்பப்படுகின்ற ஒள்ளிய கிரணங்களை உடைய அழகினைக் கொண்ட தோற்றத்தால் தேவர் உலகம் ஆகும் என்று சொல்லும்படியும், அரிய (அதாவது மாற்றுயர்ந்த) பொன்னினால் ஆகிய வேலைப்பாடுகளினால் நிறைந்த சிறந்த அளகாபுரி என்று சொல்லும்படியும், தோற்றம் அளிக்கின்ற, அன்போடு தருமம் தங்கியிருப்பதான ஒரு தெய்வத்தன்மை வாய்ந்த சிறந்த நகரம் என்னும் படியும், விரிந்து விளங்கும் வெள்ளிய கொடிகளைக் கொண்ட மதில் சூழ்ந்த இந்திரப்பிரத்தமாகிய வளம் மிகுந்த நகரை விழிகள் களிப்புக் கொள்ளுமாறு (விதுரன்) கண்டான்,—என்பது பொருள்.

அறம், அன்பின் சார்புடையதாதல் பற்றி "அன்புடன் அறம் குடியிருப்பது ஓர் தெய்வ வான்பதி". எனப்பட்டது. நீதி கடவாத ஆட்சிக்கும், புகழுக்கும் வெள்ளைக் கொடி அடையாளம். குபேரனது நகரம் அளகாபுரி. அந்நகர் கைலாச மலையில் உள்ளது என்றும், நவ நிதிகளையும் உடையது என்றும் கூறுவர்.

54. ஊடெ லாநறும் பொய்கை நீள் வாவியி
னுடம்பெலா மலர்ப்பூவின்
தோடெ லாமெழு சுரும்பின மதுகரச்
சொல்லெலாஞ் செழுங்கீதம்
பாடெ லாமிளஞ் சோலைமென் பொங்கரின்
பணையெலாங் குயிலோசை
நாடெ லாநெடும் புனல்வயல் கழனியி
னடுவெலாம் விளைசெந்நெல்.

[ஊடு எலாம் நறும் பொய்கை, நீள் வாவியின் உடம்பு எலாம் மலர், பூவின் தோடு எலாம் எழு சுரும்பு இனம், மதுகரம் சொல் எலாம் செழுங் கீதம், பாடு எலாம் இளம் சோலை, மெல் பொங்கரின் பணை எலாம் குயில் ஓசை, நாடு எலாம் நெடும் புனல் வயல், கழனியின் நடுவு எலாம் விளை செந்நெல்.]

விளக்கம் :—ஊடு - (இந்திரப் பிரத்தத்தின்) உட்புறம். நறும் பொய்கை - நல்ல நீரை உடைய குளங்கள். நீள் வாவி - பெரிய குளங்கள். உடம்பு எலாம் மலர் - (அக் குளங்களின்) இடம் எங்கும் தாமரை, குவளை, நெய்தல் முதலிய நீர் மலர் கள். பூவின் தோடு - (அம்) மலர்களின் இதழ்கள். எழு சுரும்பு இனம் - எழுந்து மொய்க்கும் பல வகை வண்டுகளின் கூட்டம். மதுகரச் சொல் - அவ் வண்டுகள் செய்யும் ஒலி. பாடு - குளங் களின் கரையைச் சார்ந்த இடம், பக்கம். பொங்கர் - இலவ மரமும் அது போன்ற உயரமான மரங்களும். பணை - கிளை. புனல் வயல் - நீர் நிறைந்த வயல்கள். கழனி நடுவு- வயல்களின் நடுவிடம், விளை செந்நல் - முதிர்ந்த அல்லது செழித்த செந்நெல் பயிர்.

ஊரெங்கும் நல்ல நீரை உடைய குளங்களும், நீர் மலர்களும், சோலைகளும், வயல்களும் விளையும் செந்நெல் பயிர்களும் உள்ளன, என்று நீர் வளமும் நில வளமும் கூறப்பட்டன. மது கரம் - தேன் சேகரிக்கும் வண்டு, தேன் ஈ. இளஞ்சோலை - இள மரங்களைக் கொண்ட சோலை. மெல் பொங்கர் - மென்மை யான, அதாவது கண்ணுக்கு இனிய இலவமரம் முதலிய உயரமான மரங்கள்.

55. அருகெ லாமணி மண்டப மவிரொளி
யரங்கெலாஞ் சிலம்போசை
குருகெ லாம்வளர் பழனமப் புள்ளெலாங்
கூடலின் புறடலூல்

முருகெ லாங்கமழ் துறையெலாந் தரளம்வெண்
முத்தெலா நிலாவெள்ளம்
பருக லாம்புன னதியெலா நீரெலாம்
பங்கயப் பசுங்கானம்.

[அருகு எலாம் மணி மண்டபம், அவிர் ஒளி அரங்கு எல்லாம் சிலம்பு ஓசை, குருகு எலாம் வளர் பழனம், புள் எலாம் கூடல் இன்புற ஊடல், குருகு எலாம் கமழ் துறைஎலாம் தாளம், வெள் முத்து எலாம் நிலா வெள்ளம், பருகல் ஆம் புனல் நதி எலாம், நீர் எலாம் பங்கயம் பசுங்கானம்,]

**விளக்கம் :**—எங்கெங்கும் அருகு அருகு நெருங்கிய அழகிய மண்டபங்கள், அம் மண்டபங்களின் இடத்தேயுள்ள ஆடல் கூடங்களில் எல்லாம், கால் சிலம்புகளின் இனிய ஓசை. பழனம் எலாம் வளர்குருகு, என்று இயைக்க. வயல்கள் எங்கும் வாழ்ந்து வளரும் குருகுகள். அப் பறவைகள் வாழும் இடங்கள் எங்கும் கூடல் இன்பம் சிறக்கும் பொருட்டு ஆணும் பெண்ணும் கொள்ளும் ஊடல். எல்லா வகையான நறுமணங்கள் வாசிக்கப் பெற்ற நீர்த்துறைகள் எங்கும் முத்துக்கள் (உள்ளவிடம்) எல்லாம் நிலா வெள்ளம் போன்ற குளிர்ந்த ஒளித்தொகுதி, நதி எலாம் பருகல் ஆம் புனல், என்று இயைக்க. ஆறுகளில் எல்லாம் குடிப்பதற்கு ஏற்ற நல்ல நீர் நிலைகள் எல்லாவற்றிலும் பசிய தாமரைக் காடு, (உள்ளன)—என்பது பொருள்.

மணி மண்டபம், என்பதற்கு நவரத்தின மயமான மண்டபம் என்றும் பொருள் கொள்ளலாம். அணி மண்டபம், என்று பிரித்துக் கொண்டால், அலங்கரிக்கப்பெற்ற மண்டபம், என்பது பொருளாகும். தாளம் - முத்து. குருகு - நீர்வாழ் பறவை.

56. ஆன கம்பல முழங்கவந் தெதிபணித்
தாதுலர்க் கமுதன்ன
போன கம்பரிந் திடுநெடுஞ் சாலையே
புகுந்தமா மறுகெல்லாம்
வான கந்தனை யமையுமென் றும்பரு
மண்ணின்மேல் வரவெண்ணும்
ஞான கஞ்சுக னகரியை யெங்ஙனே
நாம்வியப் பதுமன்னோ.

[ஆனகம் பல முழங்க வந்து எதிர் பணிந்து ஆதுலர்க்கு அமுது அன்ன போனகம் பரிந்து இடும் நெடும் சாலையே புகுந்த

மா மறுகு எல்லாம், வானகம் தனை அமையும் என்று உம்பரும் மண்ணின்மேல் வர எண்ணும் ஞான கஞ்சுகன் நகரியை எங்ஙனே நாம் வியப்பது மன்னோ.]

**விளக்கம் :**—புகுந்த மா மறுகு எல்லாம் ஆனகம் பல முழங்க எதிர் வந்து பணிந்து, ஆதுலாக்கு அமுது அன்ன போனகம் பரிந்து, இடும் நெடும் சாலையே—என்று அன்வயிக்க.

ஆனகம் - துந்துபி என்னும் வாத்தியம், ஆதுலர் - வறியரான விருந்தினர். அமுது அன்ன போனகம் - அமிர்தம் போன்ற இனிய உணவு. பரிந்து - அன்புடன். நெடும் சாலை - பெரிய அன்ன சாலைகள். வானகம் - தேவலோகம். வானகந்தனை அமையும் - தேவலோகம் தன்னையே ஒத்திருக்கும். உம்பர் - தேவர். ஞான கஞ்சுகன் நகரி - ஞானத்தைப் போர்வையாக அதாவது கவசமாகக் கொண்ட தருமனது நகரமாகிய இந்திரப்பிரத்தம். கஞ்சுகம் - போர்வை, சட்டை, கவசம், எங்ஙனே - எவ்வாறு. (மன்னோ வியப்புப் பொருளது). வானவரும் வந்து வசிக்க விரும்பும் நலத்தது தருமன் வாழ் இந்திரப்பிரத்தம்.—என்பது கருத்து.

57. வந்த னன்சிலை விதுரனென் றோடிமுன்
வந்தவ ருரையாமுன்
தந்தை தன்றனி வரவறிந் திளைஞருந்
தருமனு மெதிர்கொண்டார்
சிந்தை யன்புடன் யொழத்தொழ மைந்தரைச்
செங்கையாற் றழீஇக்கொண்டே
அந்த ணம்புலி கண்டபைங் கடலென
வவனுமெய் குளிர்ந்திட்டான்.

[வந்தனன் சிலை விதுரன் என்று ஓடி வந்தவர் உரையாமுன். தந்தை தன் தனி வரவு அறிந்து இளைஞரும் தருமனும் எதிர் கொண்டார்; சிந்தை அன்புடன் தொழ தொழ மைந்தரை செம் கையால் தழீஇக்கொண்டே, அம் தண் அம்புலி கண்ட பைங்கடல் என அவனும் மெய் குளிர்ந்திட்டான்.]

**விளக்கம் :**—வந்தவர் -விஷயம் அறிந்து தெரிவிக்கும் தூதர்- தனி வரவு - தனியே வருகை, அல்லது ஒப்பற்ற வரவு, சிந்தை அன்பு - உள்ளத்தோடு இயைந்து தூய அன்பு. தொழத்தொழ - பாண்டவர் ஐவரும் ஒவ்வொருவராய்த் தொழ (வணங்க). தழீஇ- தழுவி. அம்புலி - சந்திரன். வணங்கிய மைந்தரைத் தழுவிக்

கொண்டவிதுரன், சந்திரனைக் கண்ட கடல்போல் மகிழ்ச்சியால் உடல் பூரிப்பவனானான், என்ற பொருளது ஈற்றடி.

நீலம், கருமை, பசுமை என்ற நிறங்களை அபேதமாய்ப் பிரயோகிப்பது கவிநயம். எனவே, **பைங்கடல்** எனப்பட்டது.

58. கொண்டு தந்தையைத் தாமும்வண் கொடிமதிற்
கோபுர நெடுவீதி
அண்டராலய மெனத்தகு கோயில்சென்
றடைந்தபி னடல்வேந்தர்
வண்டு தாமரை மலரெனச் சுழலுமா
மலரடி பணிந்தேத்தக்
கண்டு வாழ்வுட னவர்க்கருள் புரிந்துதன்
கருத்தினால் விடையீந்தான்.

[கொண்டு தந்தையை தாமும் வள் கொடி மதில் கோபுரம் நெடுவீதி, அண்டர் ஆலயம் என தகு கோயில் சென்று அடைந்த பின், அடல்வேந்தர், வண்டு தாமரை மலர் என சுழலும் மா மலர் அடிபணிந்து ஏத்த. கண்டு வாழ்வுடன் அருள் புரிந்து தன் கருத்தினால் விடை ஈந்தான்.]

**விளக்கம் :**—அடல் 'வேந்தர் தாமும் தந்தையைக்கொண்டு வண்கொடி... அடைந்தபின், வண்டு தாமரை...தன் கருத்தினால் விடை ஈந்தான்.

அடல் (வலிய) வேந்தர்களாகிய பாண்டவர் தாமும், தந்தையை அழைத்துக்கொண்டு தேவலோகம் என்று சொல்லத் தக்க அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தபின், தாமரை மலர் என வண்டுகள் சூழ்ந்து மொய்க்கும் விதுரனது திருவடி மலர்களை வணங்கிப் போற்ற அல்லது உபசரிக்க, அதைக் கண்டு (விதுரன்) அவர்களுக்கு ஆசீர்வாதத்தோடு அநுக்கிரமுஞ் செய்து, கருத்தினால் (மனம் பொருந்திய அன்பினால்) அவர்களுக்கு உட்கார அநுமதி கொடுத்தான்.

அடல் வேந்தர், என்பதைத் தருமன் சபையிலே இருந்த வேந்தர் என்று கொண்டும் பொருள் செய்யலாம்- (பாண்டவர்) தாமும், தந்தையை அழைத்துக் கொண்டு அரண்மனை சென்ற பின், அங்கே இருந்த அடல் வேந்தர் விதுரனை வணங்க, அதைக் கண்டு (விதுரன்) அவர்களுக்கு ஆசீர்வாதத்தோடு அநுக்கிரமும் செய்து (பாண்டவரோடு தனியே பேச வேண்டி) அன்போடு விடை கொடுத்து அனுப்பினான். என்பது பொருளாகும்.

**விதுரன் விஷயம் கூறல்**

59. தானு மைந்தரோ ரைவரு மொருபுடை
தனித்திருந் துழிவண்டு
தேனு கர்ந்திசை முரல்பசுந் தொடையலான்
றிருத்தக மொழிகின்றான்
கோனு வன்றுதன் திருமுக மெழுதிநீ
கொணர்கமைத் தரையென்ன
யானு வந்தன னேவலா தழைத்ததற்
கேதுவு முளதன்றே.

[தானும் மைந்தர் ஓர் ஐவரும் ஒரு புடை தனித்து இருந்துழி, வண்டு, தேன் நுழைந்து இசை முரல் பசுந்தொடையலான் திரு தக மொழிகின்றான், கோன் நுவன்று தன் திருமுகம் எழுதி நீ கொணர்க மைந்தரை என்ன, யானும் ஏவலால் வந்தனன்; அழைத்ததற்குஏதுவும் உளது, (அன்றே: ஈற்றசை).]

**விளக்கம்:**—தேன் நுகர்ந்து......தொடையலான், தானும்.... இருந்துழி, திருத்தக மொழிகின்றான்,— கோன்- நுவன்று தன் திருமுகம் எழுதி (என்னிடம் அதைக் கொடுத்து) மைந்தரை நீ கொணர்க என்ன, யானும் வந்தனன் ஏவலால் வந்தனன்; அழைத்தற்கு ஏதுவும் உளது.— என்று அன்வயிக்க,

தேன் நுகர்ந்து ...தொடையலான், விதுரன். (அவனும் பாண்டவர்களும் ஓரிடத்தே தனித்து இருக்கையில்) திருதக மொழிகின்றான் - (விஷத்தைத்) தெளிவாகச் சொல்கின்றான். கோன் - திருதராட்டிரன் நுவன்று தன் திகமுகம் எழுதி விஷயத்தை (அவன்) சொல்லித் தனது ஓலையை எழுதுவித்து. ஏது -காரணம். அக் காரணம் தொடர்ந்துவரும் மூன்று செய்யுள் களில் கூறப்படுகின்றது. செய்தி எழுதி அனுப்பும் ஓலையைத் திருமுகம் என்னல் வழக்கு,

60. நீபு ரிந்தநல் வேள்வியுன் கடன்கழித்
தியாவரு நெடுமாடக்
கோபு ரந்திகழ மூதெயில் வளநகர்க்
கோயில்புக் கனமாக
நூபு ரந்திக ழிணையடி யரம்பையர்
நோக்கருங் கவின்கொண்ட

மாபு ரந்தர னிவனென விருந்தனன்
வலம்புரி மலர்த்தாரான்.

[நீ புரிந்த நல்வேள்வியின் கடன் கழித்து யாவரும் நெடு மாடம் கோபுரம் திகழ் முது எயில் வளம் நகர் புக்கனம் ஆக, நூபுரம் திகழ் இணை அடி அரம்பையர் நோக்கு அரும் கவின் கொண்ட மா புரந்தரன் இவன் என்ன இருந்தனன் வலம்புரி மலர் தாரான்.]

**விளக்கம் :**—வேள்வியின் கடன் - யாகத்திற்குரிய முறையுடைய சடங்குகள். மூதெயில் - பழமையான மதில். வளநகர் - அத்தினபுரி. (யாகம் முற்றியபின் நாங்கள் அத்தினபுரி சென்றோமாக), வலம்புரி மலர் தாரான் - நந்தியாவர்த்த மலர்களாலான மாலை தரித்த துரியோதனன். நூபுரம் திகழ் இணை அடி அரம்பையர் - சிலம்புகள் விளங்கும் இணையான அடிகளைக் கொண்ட தேவ மாதர்களாலும். நோக்கு அருங்கவின் கொண்ட- விரும்பி நோக்குதற்குரிய அரிய அழகைக் கொண்ட, மா புரந்தரன் இவன் - மேன்மை உடைய இந்திரன் இவன். என்று - என்று கண்டோர் கூறும்படி. இருந்தான் - தனது அவையிடத்தே இருந்தான்.

அரிய கவின் -பிறர் பெற்றிலாத சிறந்த அழகு. அரம்பையர்- அரம்பை முதலிய தேவ மாதர்; அல்லது அரம்பை போன்ற மாதர்.

61. தம்பி மாரொடுத் தகையிலாத் துன்மதிச்
சகுனிதன் னொடுமெண்ணி
கும்ப மாமணி நெடுமுடி நிரைத்தவண்
கூடமொன் றமைக்கென்ன
அம்பு ராசிசூழ் மண்டலத் தரசெலா
மடங்குபே ரவைத்தாக
உம்ப ராலய நிகரெனச் சமைத்தன
ரொட்பநூ லுணர்வுற்றார்.

[தம்பிமாரொடும் தகை இலா துன்மதி சகுனி தன்னொடும் எண்ணி, கும்பம் மா மணி நெடுமுடி நிரைத்த வள்கூடம் ஒன்று அமைக்க என்ன, அம்பு ராசி சூழ் மண் தலத்து அரசு எலாம் அடங்கு பேர் அவைத்து ஆக, உம்பர் ஆலயம் நிகர் என சமைத்தனர், ஒட்ப நூல் உணர்வுற்றார்.]

**விளக்கம் :**—கும்பம் - கலசம். வள்கூடம் - அழகின் வளம் நிறைந்த மண்டபம். அமைக்கென-(அமைக்க என. வியங்கோள் ஈறு தொகையாய் நின்றது) கட்டுக என்று. அம்பு (அப்பு) ராசி சூழ் மண்தலம் - ஜலத்தொகுதி கொண்ட கடல் சூழ்ந்த நிலம். அரசு எலாம் அடங்கும் - நில உலகத்து அரசர்கள் எல்லோரையும் தன்னிடத்தே அடக்கிக் கொள்ளவல்ல. பேர் அவை - பெரிய சபை. உம்பர் ஆலயம் - தேவர் உலகம். ஒட்ப நூல்-அறிவு நூல்; இங்கே, சிற்ப நூல்.

துரியோதனன் தம்பியரோடும் சகுனியோடும் ஆலோசித்துச் சிற்ப நூல் வித்தகரைக்கொண்டு, தேவர் உலகமே இதற்கு நிகர் என்று சொல்லும்படி, மண்டல அரசர் எல்லோரையும் தன்னிடம் கொள்ளத்தக்க அழகிய மண்டபம் ஒன்றைக் கட்டுவித்தான்,— என்பதாம்.

62. பெற்ற தந்தையோ டுள்ளுறு முணர்வெலாம்
பேசிமண் டபந்தன்னில்
கொற்ற வன்குடி புகும்பொழு துன்னையுங்
கூட்டிமன் னவைமுன்னர்
மற்ற மாதுல னெஞ்ச வஞ்சமோ
மாயமோ வகுத்தாங்குக்
கற்ற சூதுநின் னுடன்பொரு நினைவினன்
கருத்தினித் தெரியாதே.

[பெற்ற தந்தையோடு உள் உறும் உணர்வு எலாம் பேசி, மண்டபம் தன்னில் கொற்றவன் குடி புகும்பொழுது உன்னையும் கூட்டி, மன் அவை முன்னர், மற்ற, மாதுலன் நெஞ்சம் வஞ்சமோ, மாயமோ வகுத்து, ஆங்கு கற்ற சூது நின்னுடன் பொரும் நினைவினன்; கருத்து இனி தெரியாதே.]

**விளக்கம் :**—கொற்றவன் பெற்ற தந்தையோடு.........பேசி - துரியோதனன் தந்தையான திருதராட்டிரனோடு தன் உள்ளம் பொருந்திய எண்ணங்களை எல்லாம் தெரிவித்துப் பேசி முடித்து. உன்னையும் கூட்டி-(குடி புகும்பொழுது) உன்னையும் வருவித்து. மாதுலன் நெஞ்ச வஞ்சமோ மாயமோ வகுத்து ஆங்கு கற்ற சூது நின்னுடன் பொரு நினைவினன் - மாமனாகிய சகுனி அவனது நெஞ்சங் கருதிய தந்திரத்தையோ, மாயத்தையோ செய்து, அங்கே (அச் சமயத்தில்) தான் கற்றுத் தேர்ந்த சூதாட்டத்தை உன்னோடு ஆடும் நினைவினனாய் இருக்கின்றான்; இனி - இனி

மேல், அதாவது, நான் கூறியதைக் கேட்டபின்பு. கருத்து தெரியாதே - அவர்கள் எண்ணம் உனக்குத் தெரியாதது ஆமோ (தெரிந்ததே, என்றபடி). சூதின்மூலம் ராஜ்யத்தைக் கவர்ந்து கொள்ளும் சூழ்ச்சியர் அவர், என்று விதுரன் குறிப்பின் தெரிவித்தபடி.

தெரியாதே, என்பது தெரியதா? அல்லது தெரியாதோ? என்ற பொருளது. தெரியாது எதிர்மறை ஏ, எதிர்மறைப் பொருளதான வினா : ஆகவே இரண்டு எதிர்மறையும் சேர்ந்து உடன்பாட்டுப் பொருளை உணர்த்தலால் **தெரிந்ததே ஆகும்**, என்பது பொருளாகின்றது. தெரியாதே, என்பதிலுள்ள ஏகாரத்தை அசையாகக் கொண்டு "அவர் கருத்து இது; இது விஷயத்தில் உன் கருத்து எனக்குத் தெரியாது," என்று விதுரன் கூறியதாகவும் பொருள் கொள்ளலாம். வஞ்சம் - தந்திர பலத்தால் செய்யும் மோசம். மாயம் - மந்திர பலத்தால் செய்யும் மோசம். மற்று, என்பது **மற்ற** என்று திரிந்து நின்றது; அசை.

**63. திருத ராட்டிரன் றிருமுக மிதுவெனச்**
**சென் றிறைஞ் சினன்வாங்கி**
**விரத மாக்கவென் றறிந்தறம் பேணுவான்**
**வினைஞர்கைக் கொடுத்திட்டான்**
**இரத மாற்றமங் கெழுதிய படியினா**
**லியம்பலு மதுகேட்டு**
**வரத னாற்பணிப் புறுதொழில் யாவர்நா**
**மறுக்கவென் றுரைசெய்தான்.**

['திருதராட்டிரன் திருமுகம் இது,' என, சென்று இறைஞ்சினன் வாங்கி, விரதம் ஆக்கம் என்று அறிந்து அறம் பேணுவான் வினைஞர் கை கொடுத்திட்டான்; இரதம் மாற்றம் அங்கு எழுதியபடியினால் இயம்பலும், அது கேட்டு, வரதனால் பணிப்பு உறு தொழில் யாவர் நாம் மறுக்க என்று உரை செய்தான்.]

**விளக்கம் :—**(திருதராட்டிரன் திருமுகம் இது, என்று விதுரன் கொடுக்க) விரதம் ஆக்கம் என்று அறிந்து பேணுவான் - அன்பு அருள் சத்தியம் முதலியவற்றை அனுஷ்டித்தலாகிய நோன்பே வாழ்க்கையில் நன்மை பயக்கும் நலத்தது என்று தனது மெய்யறிவினால் தெளிந்து அறம் ஓம்புவானாகிய தருமன். சென்று இறைஞ்சினன் வாங்கி - விதுரனிடம் சென்று (ஓலையை) வணங்கி வாங்கி. வினைஞர் கை கொடுத்திட்டான் - ஓலை

படிக்கும் தொழில் செய்பவர் கையில் கொடுத்தான். (அவ்வினைஞரும்) எழுதியபடியினால் - ஓலையில் எழுதியுள்ளபடி, இரதம் மாற்றம் இயம்பலும் - இரசமான வார்த்தைகளால் எழுதப்பெற்ற விஷயத்தை படித்தலும். (அது கேட்டுத் தருமன்) வரதனால் பணிப்பு உறு தொழில் மறுக்க நாம் யாவர் - அன்பை வரையாது என்பால் வழங்கும் பெரிய தந்தையினால் பணிக்கப்பட்ட செயலை, நிகழாமல் தடுக்க நாம் யார்? (என்று கூறினான்).

வரதன், என்பதற்கு இறைவன் என்று பொருள் கொண்டால் "தெய்வத்தால் நியமிக்கப் பெற்ற காரியத்தை நடவாமல் தடுக்க நாம் யார்," என்பது பொருளாகும். "தெய்வ சங்கற்பமாக நிகழ்வதொன்றை, அது நல்லதாகட்டும் அல்லது தீயதாகட்டும், விலக்க நினையாமையே சான்றோர் கடன்," என்று தருமன் கூறியவாறு.

64. மூத்த தாதைதன் னோலையு மிளையவன்
மொழியுமொத் தமைநோக்கி
வார்த்தை வேறுமற் றொன்றைவ முரைத்திலன்
மனுநெறு வழுவாதோன்
சேத்த நாகவெங் கொடியவன் கொடியவன்
சிந்தையி னிலைதோன்றக்
கோத்த கோனவநன் றாயினுந் தகுவதோ
குருகுலந் தனக்கென்றான்.

[மூத்த தாதை தன் ஓலையும், இளையவன் மொழியும் ஒத்தமை நோக்கி, வார்த்தை வேறு மற்று ஒன்றையும் உரைத்திலன் மனு நெறி வழுவாதோன், சேத்த நாகம் வெம் கொடியவன் கொடிய வல் சிந்தையின் நிலை தோன்ற, கோத்த கோவை நன்றாயினும் தகுவதோ குருகுலம் தனக்கு என்றான்.]

**விளக்கம்:**—மனு நெறி வழுவாதவனாகிய தருமன், இரு தந்தையரின் ஓலையும் வார்த்தையும் ஒத்திருத்தல் கண்டு, வஞ்சனையால் வருவித்துச் சூதாடி வஞ்சிக்கும் கருத்து, தீயோரின் நினைவிற்கு ஏற்றதாயினும், குருகுலப் பெருமைக்கு ஏற்றதாகாதே, என்று கூறுங் கருத்தது செய்யுள்.

மூத்த தாதை - திருதராட்டிரன். இளையவன் - விதுரன். (முன்னவன் ஓலையும் பின்னவன் வாய்மொழியும் ஒத்திருந்தமை கண்டு, மனு நெறி கடவாச் செம்மையனான தருமன்) வேறு

வார்த்தை ஒன்றையும் உரைத்திலன் - தனது இயல்பிற்கு மாறான வார்த்தை எதையும் கூறாதவனாய். சேத்த நாகவெங் கொடியோன் - அரவக் கொடியனான துரியோதனன், (சேத்த-சிவந்த) (அவனது) கொடியவன் சிந்தையின் நிலைதோன்ற - மிகக் கொடியதான மனநிலை வெளித் தோன்றும்படி. கோத்த - கோத்து உருவம் கொடுத்த, அதாவது, ஆலோசித்து முடிவு செய்த. கோவை - விஷயக் கோவையானது. நன்று ஆயினும் - அவன் அளவில் நல்லதாயினும் குருகுலம் தனக்கு தகுவதோ - பேர் பெற்ற குருகுலத்தின் பெருமைக்குத் தக்கது ஆமோ (என்றான்). ஆகாது, என்று கூறியபடி. (மற்று : அசை).

கொடியவன் கொடியவன் சிந்தை; மடக்கு என்னும் சொல்லணி. கோத்த கோவை - தொடுத்துக் கட்டிய மாலை; அதாவது யோசித்துத் தொடுத்துக் கட்டிய விஷயமாகிய மாலை. 'நாகவெங் கொடியோன்' என்றது கொடியிலே கொண்ட பாம்பு போல் தீங்கை இழைப்பவன், என்ற கருத்தினது; எனவே, **கருத்துடை அடையணியை** உட்கொண்டது.

65. அடியு மாண்மையும் வலிமையுஞ் சேனையு
மழகும்வென் றியுந்தத்தம்
குடியு மானமுஞ் செல்வமும் பெருமையும்
குலமுமின் பமுந்தேசும்
படியு மாமறை யொழுக்கமும் புகழுமுன்
பயின்றகல் வியுஞ்சேர
மடியு மான்மதி யுணர்ந்தவர் சூதின்மேல்
வைப்பரோ மனம்வையார்.

**[அடியும், ஆண்மையும், வலிமையும், சேனையும், அழகும், வென்றியும், தம்தம் குடியும், மானமும், செல்வமும் பெருமையும், குலமும், இன்பமும், தேசும், படியும், மாமறை ஒழுக்கமும், புகழும், முன் பயின்ற கல்வியும் சேர மடியும் ஆல், மதி உணர்ந் தவர் சூதின் மேல் வைப்பரோ மனம், வையார்.]**

**விளக்கம் :—அடி - முதன்மை, அதாவது முதல் மரியாதைக் குரிய நிலை. அழகு - அழகிய அரச சின்னங்கள். தத்தம் குடியும் - தம் தமது சிறந்த குடிப் பிறப்பு. குலம் - நல்ல பரம்பரை வம்சம் தேசு - பிரகாசம், படி - நற்குணம். மறை ஒழுக்கம் - வேத விதி கடவாத நல் ஒழுக்கம். முன் பயின்ற கல்வி - முன்னே (இளமையிலே) கற்றுத் தேர்ந்த கல்வி (ஆகிய இந் நலங்கள்**

எல்லாம் சூதினால்) சேர மடியும் - ஒருசேர அழிந்துவிடும், ஆல் - ஆதலால். மதி உணர்ந்தவர் - மதியினால் ஆய்ந்து தெளிந்த நல்லறிவாளர். சூதின்மேல் மனம் வைப்பரோ - சூதாட்டத்தின்மேல் மனம் செல்ல விடுவரோ. வையார் - மனஞ் செலுத்தமாட்டார்.

ஆண்மை - (ஆண் - மை) ஆடவர்க்கு உரிய தன்மையாகிய பௌருஷம், வீரம். ஆள் - மை - ஆண்மை என்று பிரித்துக் கொண்டால், 'அரசாளும் திறம் என்பது பொருளாகும். எக்காலத்தும் தம் நிலை தாழாமையும், விதியினால் தாழ்மை வந்த விடத்து உயிர் வாழ நினையாமையும் மானம் ஆகும். ஒளி-பிரகாசம்; அதாவது எல்லோராலும் போற்றப்படுதற்குரிய வாழ்க்கை நிலை. மடி-பண்பு. படியும், என்பதைப் பெயரெச்ச மாகக் கொண்டால், 'படியும் மா மறை ஒழுக்கம், என்பதற்கு "மாமறை விதியொடு படிந்த (பொருந்திய) ஒழுக்கம்," என்பது பொருளாகும்.

66. குழக ராயிள மடந்தையர்க் குருகுவோர்
குறிப்பிலா மையினாளும்
பழகு வார்மிகச் சிந்தைநோய் தாங்களே
படுக்குமா றுணராமல்
அழகு பேரறி வாகவே கொண்டவ
ரறத்தொழில் புரியாமல்
கழக மாடவும் பெறுவரோ விதனினுங்
கள்ளுண லினிதன்றே.

[குழகராய் இள மடந்தையர்க்கு உருகுவார் குறிப்பு இலாமையின் நாளும் பழகுவார் மிக சிந்தை நோய் தாங்களே படுக்கும் ஆறு உணராமல், அழகு பேர் அறிவு ஆகவே கொண்டவர், அறம் தொழில் புரியாமல் கழகம் ஆடவும் பெறுவரோ! இதனினும் கள் உணல் இனிது அன்றே.]

**விளக்கம் :**—குழகர் - யௌவனப் பருவத்தினர். மடந்தை யர்க்கு உருகுவோர் -காமுகர். குறிப்பு - லட்சியம், குறிக்கோள். மிகச் சிந்தை நோய் (இல்) தாங்களே (தங்களை). படுக்கும் ஆறு உணராமல். பழகுவார் - (வாழ்க்கையில் லட்சியம் ஒன்று இல்லாமையினால்) அதிகமாக மனக் கவலையில், தங்களைத் தாங்களே வீழ்த்திக் கொள்ளும் வகையை அறிந்து கொள்ளாமல், சூதாடல், கள் உண்ணல் முதலிய சிற்றின்பச் செய்திகளில்)

நெருங்கி ஈடுபடுவார்கள். "அழகு பேர் அறிவு ஆகவே," என்பதை, "பேர் அறிவே அழகு ஆக" என்று கூட்டுக. பேர் அறிவு ஆய்ந்து தெளிந்த சிறந்த அறிவு. (அறிவையே) அழகு ஆகக் கொண்டவர் - தமக்குரிய அழகிய பூஷணமாகக் கொண்ட மேன்மக்கள். (அவர்கள்) அறந்தொழில் புரியாமல் கழகம் ஆடப் பெறுவரோ - தர்ம காரியங்களைச் செய்யாமல் சூது ஆடலை மேற்கொள்வார்களோ, (கழகம் - சூது) இச் சூதினும் கள் உண்ணல் மேலானது அன்றோ!

மகளிர்பால் மனம் உருகும் காமுகர், மேலான குறிக்கோள் ஒன்றும் இல்லாமையினால், தங்களைத் தாங்களே சிந்தை நோயில் வீழ்த்திக் கொள்ளுதலை அறியமாட்டாமல், கள்ளுண்ணல், மகளிர் விழைதல்போல், சூதாட்டத்திலும் அதிகம் பழகுபவர் (ஈடுபடுபவர்) ஆவார்கள். ஆனால் தெளிந்த அறிவுடைய பெரியோர்களோ தர்ம காரியங்கள் செய்தலை மேற்கொண்டு வாழ்வர் சூதோ கள் உண்ணலினும் மிக இழிந்த தாகும்,—என்று தருமன் கூறியபடி.

கள் உண்ணலால் வரும் பொல்லாங்கோ குடிப்பவன் அளவின தாகும்; சூதாடலின் விளைவு, தன்னோடு பிறரையும் பாதிப் பதும், பொய்மோசம் முதலிய பாபங்களுக்கு இடமாதலும் பற்றி, 'சூதினும் கள்இனிது' என்றார். குழகு - கவர்ச்சியுடைய கட்டழகு. அதை உடையவர் குழகர்.

67. மேத கத்தெரி ஞான நூற் புலவரும்
வேத்துநூ லறிந்தோரும்
பாத கத்திலொன் றென்னவே முன்னமே
பலபடப் பழித்திட்டார்
தீத கப்படு புன்றொழி லிளைஞரிற்
சிந்தனை சிறிதின்றித்
தோத கத்துட னென்னையோ சகுனிதன்
சூதினுக் கெதிரென்றான்.

[மேதக தெரி ஞான நூல் புலவரும், வேத்து நூல் அறிந் தோரும், (சூது) பாதகத்தில் ஒன்று என்னவே முன்னமே பலபட பழித்திட்டார்; தீது அகப்படு புல் தொழில் இளைஞரின் சிந்தனை சிறிது இன்றி தோதகத்துடன் என்னையோ சகுனி தன் சூதினுக்கு எதிர் என்றான் ]

**விளக்கம்:** —மேதக தெரி ஞான நூல் புலவர்-மிக நன்றாக அறிந்த தத்துவ நூல் வித்தகர். வேத்து நூல் - (வேந்துநூல்)

அரசியல் நூல். அறிந்தோர் - வேந்து (நூல் கூறும்) அரச நீதியை அறிந்தவர்கள். (இவ்விரு திறத்தாரும் சூதை) பஞ்ச மகாபாபங்களில் ஒன்று என்று முன் காலத்திலேயே பலபட நிந்தித்து விலக்கியுள்ளார்கள் - என்பது இரண்டாம் அடியின் பொருள். (அவ்வாறாக) தீது அகப்படு புல் தொழில் இளைஞரின் - தீமைக்கு உள்ளாகும் இழிதொழில் சிறுவர்போல், சிந்தனை சிறிது இன்றி ஆலோசனை சிறிதும் இல்லாமல், தோதகத்தொடு - மோசக் கருத்தோடு (சகுனி தன் சூதினுக்கு). என்னையோ எதிர் என்றான் - என்னையோ (துரியோதனனுக்கு) எதிர் அமர்ந்து ஆடும் ஆட்டக்காரனாகக் கொண்டான்,— என்றவாறு.

சகுனியை எழுவாயாகக் கொண்டு, தன் சூதினுக்கு அவன் என்னையோ எதிர் என்றான். என்று பொருள் காணலும் அமையும். என்னையோ, என்பதிலுள்ள ஓகாரம், "சூதை பெருங்குற்றமுடையதாகக் கொள்ளும் என்னையோ அவன், சகுனியின் சூதிற்கு எதிராகக் கொண்டான்" என்ற பொருளது.

68. தன்க ருத்தினி னிகழ்தவா றிம்முறை
தருமன் மைந்த னுங்கூறி
என்க ருத்தினாற் பெறுவதென் விதியினை
யாவரே எதிர்வெல்வார்
மன்க ருத்தையு மவன்றிரு வுளநிகர்
மகன்கருத் தையுநோக்கி
நின்க ருத்தைநீ யுரையென விதுரனு
நிகழ்ந்தன வுரைக்கின்றான்.

[தன் கருத்தினில் நிகழ்ந்த ஆறு இ முறை தருமன் மைந்தனுங் கூறி, என் கருத்தினால் பெறுவது என்? விதியினை யாவரே எதிர்வெல்வார்? மன் கருத்தையும், அவன் திரு உளம் நிகர் மகன் கருத்தையும், நோக்கி, நின் கருத்தை நீ உரை என, விதுரனும் நிகழ்ந்தன உரைக்கின்றான்.]

**விளக்கம் :—** தன் கருத்தினில் நிகழ்ந்தவாறு - தன் மனத்தில் தோன்றியவாறு, தருமன் மகன் - தர்மராஜனின் மகனான தருமன். மன் - திருதராட்டிரன். அவன் திருவுளம் நிகர் மகன் - அவனது கருத்தோடு ஒத்து நடப்பவனான துரியோதனன்.

தனது கருத்தைச் சொல்லிய தருமன். "என் கருத்தினால் எது நடக்கப்பெறும்? விதியை எதிர்த்து வெல்ல வல்லவர் யார்?

தந்தையும் மைந்தனும் கொண்டுள கருத்தை அறிந்த நீ, உன் கருத்தை, அதாவது எது செய்யத்தக்கது என்பதைக் கூறுக.'' என்னலும், விதுரன் அத்தினபுரியில் நடந்தவற்றை, (அல்லது தன் மனத்தில் தோன்றியவற்றைக் கூறலுற்றான், என்றவாறு.

''என் கருத்தினால் எது நடக்கும்?'' என்ற சிறப்புப் பொருளை, ''விதியினை யாவரே எதிர் வெல்வார்?'' என்ற பொதுப் பொருளால் சாதிக்கும் இது, வேற்றுப் பொருள் வைப்பணி ஆகும்.

### விதுரன் பதில்

69. இங்கு நீயெனக் கியம்பிய யாவையும்
யானுமன் னவர்கேட்ப
அங்கு நீர்மையின் மொழிந்தன னென்மொழி
யார்கொலோ மதிக்கிற்பார்
பொங்கு நீருடைப் பூதலத் தலைவகேள்
புதைந்துநின் னிதயத்துத்
தங்கு நீர்மையிற் புரிகெனப் புதல்வனைத்
தந்தையுந் தகச்சொன்னான்.

[இங்கு நீ எனக்கு இயம்பிய யாவையும் யானும் அன்னவர் கேட்ப அங்கு நீர்மையின் மொழிந்தனன். என் மொழி யார்கொலோ மதிக்கிற்பர்? பொங்கும் நீர் உடை பூதலம் தலைவ, கேள், புதைந்து நின் இதயத்து தங்கும் நீர்மையின் புரிக, என புதல்வனை தந்தையும் தக சொன்னான்,]

**விளக்கம் :—** அங்கு - அங்கே, அதாவது அத்தினபுரியில். நீர்மையில் மொழிதல்- இனிய முறையில், அல்லது தக்க விதத்தில் மொழிதல். என் மொழி யாா கொலோ மதிக்கிற்பார் - என் வார்த்தையை யார் மதித்துக் கேட்பார் (கேட்கவில்லை என்றபடி) பொங்குநீர் - கடல், பூதலத் தலைவன் - தருமன், நின் இதயத்து புதைந்து தங்கும் நீர்மையின் புரிக - உனது உள்ளத்திலே புதைந்து கிடக்கும் எண்ணத்தின்படி செய்க. (இவ்வாறு விதுரன், புதல்வனாகிய தருமனை நோக்கி,) தகச் சொன்னான் - தான் தூது வந்த கருமத்திற்குத் தக்கபடி சொன்னான்.

தருமனை அழைத்துவரத் திருதராட்டிரன் ஏவலின் வந்தவனாதலின், தன் கருத்தை வெளிப்படையாகக் கூறாமல் குறிப்பின் ஒருவாறு தெரிவித்து, ''உன் விருப்பப்படி செய்,'' என்ற

மகனுக்குக் கூறினான் ஆயிற்று. (அவையில் இருந்த) மன்னவர் கேட்ப, என்றும் பிரித்துக் கொள்ளலாம். "புனைந்த நின் இதயத்து," என்றும் பாடம். "கல்வி கேள்விகளால் சிறப்புற்ற நினது இதயத்து..." என்பது பொருளாகும்.

தம்பியர் கூறல்

70. அன்று தாழ்புனற் றுறைறினிற் கழுநிரைத்
தரியவஞ் சனைசெய்தான்
குன்று போலுயர் வாழ்மனைக் கொடுந்தழல்
கொளுத்திவன் கொலைசூழ்ந்தான்
வென்று சூதினில் யாவையுங் கவரவே
விரகினா லழைத்திட்டான்
என்று தானமக் கன்புடைத் துணைவனா
யிருந்ததவ் விகலோனே.

[அன்று தாழ் புனல் துறையினில் கழு நிரைத்து அரிய வஞ்சனை செய்தான், குன்றுபோல் உயர் வாழ் மனை கொடும் தழல் கொளுத்தி வல் கொலை சூழ்ந்தான், வென்று சூதினில் யாவையும் கவரவே விரகினால் அழைத்திட்டான்; என்றுதான் நமக்கு அன்புடை துணைவனாய் இருந்தது அ இகலோன், ஏ.]

**விளக்கம் :—** இகலோன் - என்றும் நம்பால் பகை பாராட்டும் துரியோதனன். இளமையில் என்னைக் கொல்ல, நீர்த்துறையில் கழுவை வரிசையாகப் புதைத்து வைத்தும், அதன் பின் நம்மை அழிக்க அரக்கு மாளிகையில் தீ வைத்தும் வினை புரிந்தவன், இப்பொழுது நம்மை விரகால் வெல்ல அழைத்துள்ளான். எந்தக் காலத்தில்தான் அவன் நமக்கு உற்ற துணைவனாய் இருந்தான்?" என்று கூறிய வீமன், மேலும் கூறுவான். விரகு - மோசம்.

71. முளையி லேயுயிர் கொல்வதோர் கடுவிட
முற்றிவன் காழேறி
விளையி லேதுசெய் யாதுமற் றவருடன்
விழையுநண் பினிவ்வண்டா
வளையி லேதமே புரிந்துமேன் மலைந்திடும்
வன்படை கொடுமோதிக்
களையி லேநமக் கிருப்புள தென்றனன்
காற்றருள் கூற்றன்னான்.

[முளையிலே உயிர் கொல்வது ஓர் கடுவிடம் முற்றி வல் காழ் ஏறி விளையில் ஏது செய்யாது? மற்று, அவருடன் விழையும் நண்பு இனி வேண்டா; வளையில் ஏதமே புரிந்து, மேல் மலைந் திடும்; வல்படை கொடு மோதி களையிலே நமக்கு இருப்பு உளது. என்றனன் காற்று அருள் கூற்று அன்னான்.]

**விளக்கம் :**—முளையிலே...கடுவிடம் - உயிரைக் கொல்வ தாகிய ஒரு கொடிய விஷச் செடி (விடம், நச்சுச் செடியைக் குறித்து நின்றது.) (அது) முற்றி வல் காழ் ஏறி விளையில் - முதிர்ந்து வலிய வயிரம் பாய்ந்து வளருமானால். ஏது செய்யாது- எந்தத் தீங்கைத் தான் (அச் செடி) செய்யாது. (பெருங்கேடு விளைவிக்கும், என்றபடி.) மற்று : அசை; வினை மாற்றுமாம். (அது போலவே துரியோதனன் தீங்கு இழைப்பான். ஆகவே) விழையும் நண்பு இனி வேண்டா - விரும்பிக் கொள்ளும் நட்பு இனி வேண்டா. வளையில் - வளைந்து கொடுத்தால், அதாவது, அவனது கருத்திற்கு இணங்கி நடந்தால். ஏதம்- துன்பம், கேடு. மேல் மலைந்திடும் - துன்பம் செய்வதோடு நில்லாமல் மேலும் போர் செய்து வருத்துவான். (ஆதலால்) வலிய ஆயுதங்களைக் கொண்டு மோதி (தாக்கி). களையில்(ஏ) அதாவது அகற்றினால் தான் நமக்கு இருப்பு (உயிர் வாழ்தல்) உளது ஆகும். காற்று அருள் கூற்றன்னான் - வாயு தந்த எமன் போன்ற ஆற்றலின னான வீமன், (எதிர் மொழிந்தான்).

நம்மை அழித்தலையே விரதமாகவுடைய துரியோதனாதியர், சூதின் மூலம் நம்மை ஒழிக்கும் நினைவினில் அழைக்கின்றனர். நாம் வளைந்து கொடுத்தால் ஏதமே பயனாகும். அவர்களை மலைந்து அழித்தலே நாம் வாழ்வதற்குரிய வழியாகும், என்று வீமன் கூறும் கருத்தது செய்யுள்.

72. தேற லார்தமைத் தேறலுந் தேறினார்த்
தேறலா மையுமென்றும்
மாற லாருடன் மலைதலு மாறுடன்
மருவிவாழ் தலுமுன்னே
ஆற லாதன வரசருக் கென்றுகொண்
டரசநீ தியிற்சொன்னார்
கூற லாதன சொல்வதென் செல்வதென்
கொடியவ னருகென்றான்.

[தேறலார் தமை தேறலும், தேறினர் தேறலாமையும், என்றும் மாறு அலாரொடு மலைதலும், மாறுடன் மருவி வாழ்

தலும், முன்னே ஆறு அலாதன அரசருக்கு என்று கொண்டு அரச நீதியில் சொன்னார்; கூறலாதன சொல்வது என், செல்வது என் கொடியவன் அருகு என்றான்?]

**விளக்கம் :**—இது விசயன் கூற்று. தேறலார் தமைத் தேறல் - ஆய்ந்து தெளியப்படாதவர்களை நண்பரென நம்பல். தேறினர் தேறலாமை - தெளிந்து கொள்ளப்பட்டவர்களை நம்பாமை. மாறு அலார் - நண்பர். மாறுடன் - பகைவரோடு. முன்னே-முன் காலத்திலேயே. ஆறு அலாதன - (அரசர்களுக்கு) கையாளும் வழி ஆகாதன. (என்று கொண்டு, என்பதிலுள்ள **கொண்டு,** ஆசை,) கூறலாதன - விலக்கப்பட்டவை, அதாவது, அரசர்களுக்கு உரியன என்று கூறப்படாதவை. சொல்வது என் - (அரச நீதியில் விதிக்கப்பட்டவற்றை அறிந்த நீ, இப்பொழுது செய்ய வேண்டியது பற்றி) பேசுவது, அதாவது ஆலோசிப்பது எதற்காக? (கொடியவன் அருகு) செல்வது என் - செல்வது எதற்காக, (அங்கே செல்ல வேண்டா, என்று அருச்சுனன் கூறியபடி).

நம்பால் பகையுடையவர் என்று அறிந்த பின்னும், துரியோதனதியரிடம் அவரது அழைப்புக்கு இணங்கிச் செல்ல நினைப்பது அரச நீதிக்கு மாறானது; இதில் யோசிப்பதற்கு ஒன்றும் இல்லை. போகாமையே அமையும், என்று அருச்சுனன் கூறுங் கருத்தது செய்யுள். எழுவாய்த் தொடரா, அல்லது இரண்டன் தொகையா? என்று மயங்க நேருமிடத்து, இரண்டன் தொகையில் வலி மிகல், விதி, **தேறலார்த் தேறலாமை,** எனப்பட்டது.

73. விசய னிவ்வகை மொழிந்தது முந்துறு
வீமன்மாற் றமுங்கேட்டே
இசைபெ றும்பெயர் நகுலனுந் தம்பியு
மேகுத றாகாதென்றார்
வசைய றும்புகழ் துணைவரின் றுரைத்ததே
வார்த்தையா யினும்பெற்ற
அசைவி லன்புடைத் தந்தைசொன் மறுப்பதோ
வென்றன னறஞ்செய்வான்.

[விசயன் இ வகை மொழிந்ததும், முந்துறு வீமன் மாற்றமும் கேட்டு (ஏ), இசை பெறும் பெயர் நகுலனும் தம்பியும் ஏகுதல் தகாதுஎன்றார்; வசை அறும் புகழ் துணைவர்இன்று உரைத்ததே வார்த்தை ஆயினும், பெற்ற அசைவு இல் அன்பு உடை தந்தை சொல் மறுப்பதோ, என்றனன் அறம் செய்வான்.]

**விளக்கம்:—** துணைவர் இன்று உரைத்ததே வார்த்தை ஆயினும் - தம்பியர் இப்பொழுது கூறிய வார்த்தை ஏற்றுக் கொள்ளத்தக்கதாயினும். அசைவு இல் அன்புடை தந்தை - ஓரம் சார்பு இல்லாத அன்புடைய திருதராட்டிரன், தந்தை சொல் - அத்தகைய தந்தையின் கட்டளையாகும் சொல். அறம் செய்வான் - எந்நிலையிலும் தருமம் கடவாது செயல் புரிபவனான தருமன், முந்துறு வீமன் - முதலில் பேசிய வீமன்; அல்லது தம்பியரில் முன் பிறந்தவனான வீமன், என்றும் பொருள் கொள்ளலாம், நேர்வது நலமாகட்டும், தீங்காகட்டும், பெரிய தந்தையின் சொல்லை மறுப்பது அறமுடையதாகாது, என்று தருமன் கூறியவாறாம்.

74. ஆவி யார்நிலை பெறுபவர் நீதிகூ
ரரியவரன் புகழன்றிப்
பாவி யானதங் கணுகுறா தொழியினும்
பலித்திடு நினைவின்றி
மேவி யாளுடை யையன்வந் திருக்கவும்
வேரிவண் டெழுமன்றல்
காவி யார்தொடைக் காவல னேவனா
மறுப்பது கடனன்றே.

[ஆவி ஆர் நிலை பெறுவர் நீதிகூர் அரிய வான் புகழ் அன்றி? பாவி ஆனது அங்கண் அணுகுறாது ஒழியினும் பலித்திடும் நினைவு இன்றி; மேவி ஆளுடை ஐயன் வந்து இருக்கவும், வேரி வண்டு எழு மன்றல் காவி ஆர் தொடை காவலன் ஏவல் நாம் மறுப்பது கடன் அன்றே.]

**விளக்கம்;—** நியாயமான வழியில் எய்தும் புகழ் அல்லாமல், (மாண்ட பின்னும்) தம் உயிர் நிலையுடையதாய் இருக்கப் பெற்றவர் எவர் ஆவர்?—என்பது முதலடியின் பொருள். அதாவது கீர்த்தியினால் அன்றி எவரும் உண்மையில் உயிர் வாழ்ந்தவர் ஆகார், என்றபடி.

அங்கே நாம் போகாது இருந்தாலும் பாவியானது (விதியினால் விளையவல்லது) நினைவு இன்றியே (நமக்குத் தெரியாமலே) நேர்ந்து விடும்,—என்பது இரண்டாவது அடியின் பொருள்.

நம்மை ஆளாக உடைய ஐயன் (விதுரன்) விரும்பி (நம்மை அழைத்துச் செல்ல) வந்திருக்கையில், தேன் வண்டுகள் எழுந்து மொய்த்தற்குரிய நறுமணம் உடைய குவளை மலர் நிறைந்த

மாலை அணிந்த காவலனான திருதராட்டினது ஏவலை நாம் மறுப்பது முறையாகாது. — என்பது ஈற்றடிகளின் பொருள். வேரி-தேன். மன்றல் - வாசனை.

"நம்மை அழைப்பவன் பெரிய தந்தை. அழைத்துச் செல்ல வந்தவனோ அன்புடைய சிறிய தந்தை. அவ்வாறாக நாம் செல்லாமை பழிக்கே ஆதாரமாகும். செல்வதால் நேரக்கூடியது தீங்காயின், ஊழின் காரியமாகிய தீங்கு செல்லாதபோதும் நேர்ந்தே தீரும். ஆகவே, பெற்றோர் ஏவலை மறுத்த பழிக்கு ஆளாகாமல் நாம் அத்தினபுரி செல்லலே அமையும்," எனத் தருமன் தன் கருத்தைத் தெரிவிக்கும் கருத்தது செய்யுள்.

75. நாளை யேகுது மெந்தைவா ழத்தினா
நகர்க்கெனத் தருமன்றன்
காளை யேவலின் முரசறைந் தெங்கணுங்
காவலர் குழூஉக்கொண்டார்
வேளை யேறிய வரும்படைத் தலைவரு
மேல்வரும் புனலூடு
வாளை யேறுதண் பழனநாட் டெறிபடை
மன்னரும் வந்துற்றார்.

[நாளை ஏகுதும் எந்தை வாழ் அத்தினா நகர் என, தருமன் தன் காளை ஏவலின் முரசு அறைந்து எங்கணும் காவலர் குழூஉக் கொண்டார், வேளை ஏறிய அரும்படை தலைவரும், மேல்வரும் புனலூடு வாளை ஏறு தண் பழனம் நாடு எறி படை மன்னரும் வந்து உற்றார்.]

**விளக்கம் :**—தருமன் தன் காளை - எமதர்மராஜனது மகனான தருமன். காவலர் - காவல் வீரர். எங்கணும் முரசு அறைந்து குழூஉக் கொண்டார் - இந்திரப்பிரத்தம் எங்கும் பறை அறைந்து கூடினர், (அதாவது, கூட்டமாகச் சென்று பறை அறிவித்தனர்). வேளை ஏறியவர் - அழகில் மன்மதனைக் கடந்த இளம் வீரர். மேல் வரும் புனலூடு வாளை ஏறு தண் பழன நாடு - பெருகி வரும் புது வெள்ளத்தினிடத்தே வாளை மீன்கள் எதிர்த்துச் செல்லும் தண்ணிய வயல்களை உடைய நாடு: (அதாவது பாண்டவர்க்கு அடங்கிய அயல் நாடு). (அந்நாடுகளின்) எறிபடை மன்னர் - பகைவர் மேல் எறியும் ஆயுதங்களை ஏந்திய வீரமன்னர்கள். அவர்களும் இந்திரப்பிரத்தம் வந்து கூடினர். "எந்தை வாழ் நகர்" என்றது, "துரியோதனனை

நினைத்துப் போகாவிட்டாலும், தந்தையை நோக்கிச் செல்லல் அவசியமாகும்,'' என்ற பொருளின் தொனியது.

76. மாது ரங்கமு மணிநெடுந் தேர்மத
வாரணம் வயவீரர்
சாது ரங்கமுந் தந்திரத் தலைவருந்
தரணிமன் னருஞ்சூழ
மீது ரங்கவின் கெழுபெருஞ் சேனைசூழ்
வேந்தன்மா நகருற்ற
போது ரங்கமு நெளிந்தன பஃறலை
பொறாமையி னிருநான்கும்.

[மாதுரங்கமும், மணி நெடுந்தேர், மதவாரணம், வயவீரர் (ஆகிய) சாதுரங்கமும், தந்திரம் தலைவரும், தரணி மன்னரும் சூழ, மீது உரம் கவின் கெழு பெரும் சேனை சூழ் வேந்தன் மா நகர் உற்றபோது, உரங்கமும் நெளிந்தன பல்தலை பொறாமை யின் இரு நான்கும்.]

**விளக்கம் :**—மாதுரங்கம் - பெரிய குதிரைகள். மதவா ரணம் - மதங்கொண்ட யானை. சாதுரங்கம் - சதுரங்கசேனை (எதுகை நோக்கி நெடிலாய் நீண்டது). தந்திரத் தலைவர் - படைத் தலைவர். (குதிரை, தேர், யானை, வீரர் ஆகிய நால் வகைப் படைகளும், சேனைத் தலைவர்தளும், தரணி மன்னரும்) மீது உரம் கவின் கெழு பெரும் சேனை சூழ - மிகுந்த வலியும் அழகும் நிறைந்த பெரிய சேனைகள் சூழப்பெற்று, வேந்தன் மாநகர் சூழ் உற்றபோது - தருமனது இந்திரப்பிரத்தமாகிய பெரிய நகரில் வந்து கூடியபோது, இரு நான்கு உரங்கமும் - பூமியைத் தாங்கும் அஷ்டமகா நாகங்களும், பொறாமையின் - பாரத்தைத் தாங்கமாட்டாமையினால், பல்தலை (பஃறலை) நெளிந்தன - பல தலைகளும் நெளியலாயின.

நாகங்கள் தலை நெளிந்தன. என்றது உயர்வு நவிற்சி அணி உரங்கம், உரகம் (பாம்பு) என்பதின் விகாரம். அத்தினபுரி புறப் படுவதற்குப் பெருஞ்சேனையும் மன்னர்களும் தருமனது நகரில் வந்து கூடினர், என்பதாம்.

77. ஐந்து பூதமே நிகரெனப் புலன்களோ
ரைந்துமே யெதிரென்ன
ஐந்து காவுமே பொருவெனப் பணிமுடி
யைந்துமே நெரென்ன

ஐந்து வாளியே யுறழ்வென வேள்வியோ
ரைந்துமே யொப்பென்ன
ஐந்து வாசமே தரமென வைவரு
மைந்துதேர் மேல்கொண்டார்.

[ஐந்து பூதமே நிகர் என, புலன்கள் ஓர் ஐந்துமே எதிர் என்ன, ஐந்து காவுமே பொருவு என, பணிமுடி ஐந்துமே நேர் என்ன, ஐந்து வாளியே உறழ்வு என, வேள்வி ஓர் ஐந்துமே ஒப்பு என்ன, ஐந்து வாசமே தரம் என, ஐவரும் ஐந்து தேர்மேல் கொண்டார்.]

**விளக்கம் :**—ஐந்து பூதம் - நிலம். நீரி, காற்று, ஆகாசம் ஆகிய பஞ்சபூதங்கள். புலன்கள் ஓர் ஐந்து - சுவை, ஒளி, ஊறு ஓசை, நாற்றம் (மணம்) ஆகிய ஐம்புலன்கள். ஐந்து கா - மந் தாரம், பாரிஜாதம், ஸந்தாநம், கற்பகம், அரிசந்தனம் ஆகிய பஞ்ச தருக்கள். (சோலை என்ற பொருளுடைய கா இங்கே மரத்தைக் குறித்து நின்றது). பணிமுடி ஐந்து நாகத்தின் ஐந்து தலைகள். ஐந்து வாளி - தாமரை, மா, அசோகம், முல்லை, கருங்குவளை, ஆகிய மன்மதனது அம்புகள். வேள்வி ஓர் ஐந்து- பிரும்மயக்ஞம், தேவயக்ஞம், பித்ருயக்ஞம், மனுஷ்யயக்ஞம், பூதயக்ஞம் ஆகிய ஐந்து மகாயக்ஞங்கள், ஐந்து வாசம் - தக் பூகாலம், இலவங்கம், ஏலம், பச்சைக்கற்பூரம், சாதிக்காய் ஆகிய வாசனைப் பொருள்கள்; இவற்றை முகவாசப் பொருள்கள் என்பர்.

நிகர், எதிர், பொருவு, நேர், உறழ்வு, ஒப்பு தரம், என்பன ஒப்புப் பொருளன, (உவமை வாசகங்கள்). என, என்ன, என்பவை என்று சொல்லும்படி, என்ற பொருளன. பூதம், புலன், கா, பணிமுடி, ஐந்து வாளி, ஐந்து வேள்வி, ஐந்து முகவாசப் பொருள்கள் என்று சொல்லும்படியான நலத்தினரான பாண்ட வர்கள் ஐந்து தேர்களின் மேல் ஏறிக்கொண்டார்கள்,—என்பது பொருள்.

"உலகிற்கு இன்றியமையாமையால் பஞ்சபூதங்களையும், பஞ்ச இந்திரியங்களுக்கும் உரிய விஷயமாய் நிற்றலால் புலன் களையும், வேண்டினர் வேண்டியவற்றை அளித்தலால் பஞ்ச தருக்களையும், ஐவருக்கும் உயிர் ஒன்றே ஆதலால் பணிமுடி ஐந்தையும், கட்டழகோடு கண்டாரிடத்தே அவாவை உண்டாக் குதலால் மன்மதனது பஞ்சபாணங்களையும், தேவர் முதலிய எல் லோரையும் திருப்தி செய்வித்தலால் ஐந்து வேள்விகளையும்,

களிப்பைத் தருதலால் முகவாசப் பொருள்கள் ஐந்தையும், பாண்டவர்களுக்கு உவமை கூறினமை பொருந்தும்,''—என்று, வை. மு. கோ. விளக்கியுள்ளார்.

ஆற்றல், அறிவு, வண்மை, மாறுபாடு இன்மை, அழகு, எல்லோரையும் திருப்தி செய்வித்தல், நெருங்கினவர் பால் களிப்பை உண்டாக்குதல் ஆகிய நலத்தினர் பாண்டவர் என்பது கருத்து. வேதம் ஓதல், பிரும்மயக்ஞம்; யாகம் செய்தல். வேதயக்ஞம், பிரஜாஉற்பத்தி, பித்ருயக்ஞம்; விருந்தோம்பல், மனுஷயயக்ஞம்; பலி இடுதல், பூதயக்ஞம். ஐந்து என்பது ஒரு பொருளில் பலமுறை வந்தது **சொல் பொருள் பின்வருநிலை அணி யாகும்.**

78. விழியு னெஞ்சின்வா னெருப்பினீ டுததியின்
விதிப்படைப் பினிற்றோன்றிப்
பொழியும் வெண்கதி ரைவகை மதியுமப்
பொழுதுதித் தனவென்ன
மொழியு மைந்துபொற் றனிக்குடை நிழற்றின
முழுமதி வடிவின்கண்
இழியும் வெண்சுடர்க் கற்றையிற் சாமர
மிரட்டின விருபாலும்.

[விழியின், நெஞ்சின், வால் நெருப்பின், நீடு உததியின், விதி படைப்பினில் தோன்றி, பொழியும் வெள் கதிர் ஐவகை மதியும், அ பொழுது உதித்தன என்ன, மொழியும் ஐந்து பொன் தனி குடை நிழற்றின; முழுமதி வடிவின்கண் இழியும் வெள் சுடர் கற்றையின் சாமரம் இரட்டின இருபாலும்.]

**விளக்கம் :**—பாண்டவர்களது குடை சாமரைகளை வர்ணிக்கும் செய்யுள் இது. விழி - அத்திரி முனிவனின் கண். நெஞ்சு - திருமாலின் மனம். வால் நெருப்பு - தூய்மையான அக்கினி. நீடு உததி - பெரிய கடல். விதி படைப்பு - பிரும்ம சிருஷ்டி. (ஆகிய ஐந்து இடங்களிலிருந்தும்) தோன்றி - பிறந்து. வெள் கதிர் பொழியும் ஐவகை மதியும் அப்பொழுது உதித்தன என்ன - வெள்ளிய நிலவைப் பொழியும் ஐந்து வகையான சந்திரர்களும் (பாண்டவர் பிரயாணமாகும்) அச் சமயத்தில் உதயமாயினர் என்று சொல்லும்படி. மொழியும் ஐந்து பொன் தனிக்குடை நிழற்றின - சிறப்பித்துப் பேசப்படும் ஐந்து அழகிய நேரில்லாத குடைகள் நிழலைச் செய்தன. (குடைகள் நிழலைச் செய்ய, அவர்களது) இரு பாலும் முழுமதி வடிவின்கண் இழியும் வெண்

சுடர்க் கற்றையின் இரு புறங்களிலும் முழுமதி வடிவத்தினிடமிருந்து கீழ்நோக்கி ஒழுகும் வெள்ளிய நிலவின் தொகுதிபோல். சாமரம் இரட்டின - சாமரங்கள் வீசப்பெற்றன.

தேர் ஏறிய பாண்டவர்களுக்குப் பிடிக்கப்பெற்ற வெண் கொற்றக் குடைகளுக்கு ஏக காலத்தில் தோன்றும் ஐந்து சந்திரர் களையும். இரு புறத்திலும் வீசப்பெற்ற சாமரைகளுக்குச் சந்திரனிடமிருந்து இழியும் நிலாக்கற்றையும் உவமையாயின.

தேவர்களை இருதிணையாலும் கூறும் வழக்கம் பற்றி 'ஐவகை மதியும் உதித்தன' என்றார். அத்திரி முனிவர் தவப் பிரும்மாக்களில் ஒருவர். அவரது கண்களிலிருந்து சந்திரன் தோன்றியதாகப் புராணங்கள் கூறும். திருமாலின் மனத்திலிருந்து சந்திரன் தோன்றியதாக வேதங் கூறும், அவன், நெருப்பில் தோன்றிய வரலாறு தெரியவில்லை, 'வான் நெருப்பு' என்பதை வானிலுள்ள சூரியன் எனக்கொண்டு, சூரியனது ஒளியால் தோற்றம் பெறுபவன் என்று கொள்ளலாம். சந்திரன் பிரும்ம சிருஷ்டியில் அடங்கினவன் ஆதலால், "விதி படைப்பினில் தோன்றி" எனப்பட்டது. பாற்கடலிலிருந்து சந்திரன் தோன்றியது, எல்லோரும் அறிந்த கதை.

**சதுரங்கசேனை வருணனை**

79. மைத்தி றத்தினின் றதிர்வன முதிர்வன
வரைத்திறத் தினுமோங்கு
மெய்த்தி றத்தன வெழுதிறத் தினுமிக
விடுவன மததாரை
எத்தி றத்தினும் பொருதொழில் புரிவன
வேழுறுப் புறத்தாழ்ந்த
முத்தி றத்தன வெண்ணிலப் பிறப்பின
மூரிவெங் களியானை.

[மை நிறத்தின் நின்று அதிர்வன, முதிர்வன வரை திறத்தினும் ஓங்கு மெய் திறத்தன, எழு திறத்தினும் மிக விடுவன மதம் தாரை, எ திறத்தினும் பொருதொழில் புரிவன, ஏழு உறுப்பு உற தாழ்ந்த, முத்திறத்தன, எண் நிலம் பிறப்பின, மூரி வெம் களி யானை.]

**விளக்கம்:—** யானைப்படை வர்ணனை. மூரி வெம்களி யானை-வலிய கொடிய மதக் களிப்புடைய யானைகள். மை திறத்தின் நின்று அதிர்வன-மேகக் கூட்டம்போல் நின்று இடி

யென முழங்குவன, முதிர்வன வரை திறத்தினும் ஓங்கு மெய் திறத்தன-முதிர்ந்து வளர்ந்தவையான மலைக் கூட்டங்களைக் காட்டிலும் ஓங்கி வளர்ந்த சரீரத்தின் தோற்றத்தை உடையன. எழு திறத்தினும் மததாரை மிக விடுவன-ஏழு வகை உறுப்புக் களாலும் மதநீரை தாரையாகச் சொரிவன. எத்திறத்தினும் பொரு தொழில் புரிவன- துதிக்கை, கொம்பு, கால் முதலிய எல்லா உறுப்புக்களாலும் போர் செய்வன. ஏழு உறுப்பு மிக தாழ்ந்த - ஏழு அவயவங்களும் பூமியில் படியும்படி மிகத் தாழ்ந்து இருப்பன. முத்திறத்தன (ஆன) எண் நிலப்பிறப்பின- கிரிசரம், நதிசரம், வனசரம் என்று மூன்று வகையாக எண்ணப் படும் நிலங்களில் தோன்றலை உடையன. யானைக்கு மேகம் நிறத்தாலும் முழக்கத்தாலும், தாரையாக மதநீர் சொரி வதாலும் உவமை. கன்னம் இரண்டு, கண் இரண்டு, துதிக் கையின் துவாரம் இரண்டு. கோசம் ஒன்று, ஆகிய ஏழு இடங் களும் மத நீர் பெருகும் இடங்கள். இனி, யானைகளை, பத்ரம், மந்த்ரம், ம்ருகம், என்றும் மூவகைப்படுத்தலாம். பத்ரம்: நீளம் எட்டு முழம், உயரம் ஏழு முழம், வயிற்றின் சுற்றளவு ஒன்பது முழம் மந்த்ரம்: நீளம் ஏழு முழம். உயரம் ஆறுமுழம், வயிற்றின் சுற்றளவு ஒன்பது முழம். ம்ருகம்: நீளம் ஆறு முழம், உயரம் ஐந்துமுழம்,வயிற்றின் சுற்றளவு எட்டுமுழம் பத்ரத்தின் மதநீர் பசுமை மந்த்ரத்தின் மதநீர் மஞ்சள், ம்ருகத்தின் மதநீர் கருமை.

80. வன்ற போதன ரினுமிகு பொறையன
வலனுயர் வனவெண்கோ
என்ற போதகத் தானையின் பெருமையை
யெங்ஙனம் புகல்கிற்பாம்
நின்ற போதுடன் முகிலிடை மறைந்தது
நிரைநிரை நெறிபட்டுச்
சென்ற போதுவெம் படைக்கடற் செய்ததோர்
சேதுபந் தனம்போலும்.

[வல் தபோதனரினும் மிகு பொறையன, வலன் உயர்வன எண்கோ என்ற போதகம் தானையின் பெருமையை எங்ஙனம் புகழ்கிற்பாம்? நின்றபோது உடல் முகில் இடை மறைந்தது, நிரை நிரை நெறிபட்டு சென்றபோது வெம்படை கடல் செய்தது; ஓர் சேதுபந்தனம் போலும்.]

**விளக்கம்:**—அந்த யானைகள், வைராக்கியத்தின் வலிமையை யுடைய தவசிகளினும் மிக்க பொறுமை உடையன. வலம் உயர்வன (ஆன) எண்கோ என்ற போதகம் தானையின்

பெருமையை எங்ஙனம் புகல்கிற்பாம்-வெற்றிக்குரிய வலியால் உயர்வனவான எட்டுக் குல பர்வதங்கள் என்று புகழ்ந்து சொல்லத்தக்க யானைப்படையின் பெருமையை, எவ்வாறு வர்ணித்துக் கூறவல்லோம்? நின்றபோது உடல் முகிலிடை மறைந்தது-(படையிலுள்ள) யானைகள் நின்றபோது அவற்றின் சரீரம் மேகத்தினிடையே மறையும் தன்மையன ஆகும். நிரை நிரை நெறிபட்டு சென்ற போது-வரிசை வரிசையாக நெருங்கிச் செல்லும்போது, வெம் படை கடல் செய்தது ஓர் சேதுபந்தனம் போலும்(யானைப் பந்தியின் தோற்றம்)கொடிய சேனையாகிய கடலில் கட்டியதாகிய ஓர் அணைக்கட்டைப் போன்று இருக்கும்.

சேது-செய்கரை அல்லது, அணை, சேதுபந்தனம்- அணைக் கட்டு, இராவண வதத்திற்காக இராமபிரான் இலங்கை செல்ல வானரர்களால் தென்கடலில் கட்டப் பெற்ற அணை. குதிரை, தேர், காலாட் படைகள் கடலாக, அதன் நடுவே வரிசையாய் நின்ற யானைப்படை அக்கடலில்கட்டப்பெற்ற அணையாயிற்று.

81. சுற்று நீளமு முயரமு நிகர்ப்பன
சுழியின்மிக் கனதீமை
அற்று மேதகு நிறத்தன கவினுடை
யவயத் தனவாகி
எற்று மாமணி முரசமுஞ் சங்கமு
மெனுங்குரன் மிகுத்திப்பார்
முற்று மாதிரத் தளவுமைங் கதியினான்
முடிப்பன விமைப்போதில்.

[சுற்றும் நீளமும் உயரமும் நிகர்ப்பன, சுழியின் மிக்கன, தீமை அற்று மேதகு நிறத்தன, கவின் உடை அவயத்தன ஆகி எற்று மாமணி முரசமும் சங்கமும் எனும் குரல் மிகுத்து, இ பார் முற்றும் மாதிரத்து அளவும் ஐங்கதியினால் முடிப்பன இமைப் போதில்.]

விளக்கம்:—குதிரைப்படை வர்ணனை, (படையிலுள்ள குதிரைகளின்) சுற்றளவு நீளம், உயரம் ஆகியன (அச்வலக்ஷண நூல் விதியோடு)ஒத்திருப்பன, சுழிகளால் மேன்மை உற்றன, (அதாவது இலக்கணங்கடவாத சுழிகளை உடையன.) குற்றங்கள் அற்றுச் சிறந்த நிறத்தை உடையன. கவின் உடைய அவயவங்களை உடையன. (இத்தகைய நலத்தினவாகிய குதிரைகள்) எற்று மா மணி முரசமும் சங்கமும் எனும் குரல் மிகுத்து-அடிக்கப்படும் பெரிய அழகிய முரசையும், ஊதும்

சங்கையும் ஒத்தனவாகச் சொல்லத்தக்க குரலோசையால் சிறந்தனவாய்,—இப்பார் (பூமி) முழுதும், மாதிரத்து அளவும் (திக்குகளின் எல்லை அளவும்) ஐவகைக் கதியினால் இமைப் பொழுதில் சுற்றிவரும் இயல்பின.

உத்தமசாதிக் குதிரை : சுற்றளவு. 111 விரற்கிடை; நீளம், 192 விரற்கிடை; உயரம். 108 விரற்கிடை, சிறந்த சுழிகள்: முகம், தலை, மூக்கு ஆகிய உறுப்புக்களில் இரட்டைச் சுழிகளும், நெற்றியிலும் பின்புறத்திலும் ஒற்றைச் சுழிகளும் இலக்கண முடைய சுழிகள்.

நிறம் : சந்திரன், பால், மாதுளை, மலர், செம்பஞ்சு, வண்டு மேகம், கோரோசனை, பொன் முதலியவற்றை ஒத்த நிறம் உடைமை.

ஐங்கதி : விக்கிதம், வற்கிதம், உபகண்டம், மத்திமம், சாரீ ஆகிய ஐவகையான கதிகள்.

82. ஆளி னெஞ்சமும் வார்த்தையு செங்கையு
மாசனத் தொடுதாளும்
கோளி லின்புறக் குறிப்பன வெவற்றினுங்
குறைகளற் றனவாகி
ஆளி குஞ்சரம் வானர முதலிய
வியக்கினால் விசும்பெங்கும்
தூளி கொண்டிட மிடைந்துவந் தனநெடுந்
துரகதம் பலகோடி.

[ஆளின் நெஞ்சமும் வார்த்தையும் செம் கையும் ஆசனத் தொடு தாளும் கோளில் இன்பு உற குறிப்பன. எவற்றினும் குறைகள் அற்றன ஆகி, ஆளி (யாளி), குஞ்சரம், வானரம் முதலிய இயக்கினால், விசும்பு எங்கும் தூளி கொண்டிட மிடைந்து நெடும் துரகதம் பலகோடி.]

விளக்கம்:—படையிலுள்ளன வான கோடிக்கணக்கான பெரிய குதிரைகள்,—தம்மீது ஏறி நடத்தும் ஆளின் (வீரரது) உள்ளத்தையும், சொல்லையும், செவ்விய கைகளினால் போக்குங் குறிப்பையும், சேணத்தின் அமர்ந்திருக்கும் விதத்தோடு தாளால் (கால்களால்) அறிவிக்கும் குறிப்பையும் குற்றம் இல்லாதபடி' செலுத்துவோர் மகிழ்ச்சியுறத் தெரிந்துகொண்டு இயங்குவனவும்,— (ஜாதிக் குதிரைகளுக்குரிய குணம் தொழில் ஆகிய) எல்லாவற்றினும் குறைகள் அற்றனவாகியும்,—யாளி (சிங்கம்),

யானை, வானரம் முதலியவற்றின் இயக்கம் போன்ற கதியினால், விசும்பு (ஆகாயம்) எங்கும் புழுதி பரவும்படி, மிடைந்து (நெருங்கி) நடந்தன.

கை. ஆசனம், தாள், என்பன, ஆகுபெயராய் அவற்றால் உண்டாகும் சைகைகளைக் குறித்தன. கோள்-குற்றம். துரகதம்-குதிரை. தம்மைச் செலுத்துவோரது மனம் அறிந்து தொழிற்படும் தன்மைபற்றி, இன்புற என்றார்.

83. வடிவு டைச்சில குரகத மரகத
வண்ணமிக் கனவாகிப்
படியி னிற்சிறி தமைவுற மிதித்தில
பவனவெங் கதிபோல
முடிவி லிப்படி மிசைவரக் கருதியே
முனிவர னுயிர்க்கெல்லாம்
அடிப டைத்தது படைத்ததிங் கிவற்றினுக்
கவயவங் குறையாமல்.

[வடிவு உடை சில குரகதம் மரகதம் வண்ணம் மிக்கன ஆகி, படியினில் சிறிது அமைவுற மிதித்தல பவனம் வெம் கதிபோல, முடிவில் இ படிமிசை வர கருதியே முனிவரன் உயிர்க்கு எல்லாம் அடி படைத்தது, படைத்தது இங்கு இவற்றினுக்கு அவயவம் குறையாமல்.]

**விளக்கம்:—** தருமனது குதிரைகள், கால்கள் பூமியில் படிதல் தெரியாதபடி வாயு வேகத்தில் ஓடக்கூடியன, என்று கூறும் கருத்தது செய்யுள். இக் கருத்தைப் புலவர் ஒழிப்பணியின் நலத்தினால் மிக அழகாகத் தெரிவிக்கின்றார், "பிரும்மன் பிராணிகளுக்குக் கால்களைப் படைத்தது பூமியில் நடந்து செல்வதற்கு. தருமனது படையிலுள்ள குதிரைகள் படியில் அடி தோயாது வாயு கதியில் செல்லும் தன்மையனவாதலால், இவற்றிற்குக் கால்கள் படைத்தது அவயவக் குறைவின்றி அழகிய தோற்றமுடையதாய் இருத்தல் பொருட்டேயாகும்," என்று கூறியபடி, இப்படி உலகறிந்த ஒன்றை மறுத்து, அது வேறொன்று என்று காரணங் காட்டி அதிசயம் தோன்றக் கூறுவது ஒழிப்பு அல்லது அவநுதி அணியின் இலக்கணம். இங்கே, "கால்கள் பூமியில் நடத்தற்கு அன்று. அழகிய தோற்றத்தின் பொருட்டே," என்று காரணத்தோடு கூறியிருத்தல் காண்க. எனவே, ஒழிப்பணி.

வடிவு - அழகு, தோற்றம். குரகதம் - குதிரை. மரகத வண்ணம் - பச்சைநிறம். படியினில் சிறிது அமைவுற மிதித்தில பூமியில் சிறிதும் கால் பொருந்த மிதித்துச் சென்றில. பவன வெம் கதி - வாயுவின் வெவ்விய வேகம். முடிவு இல் - படி எல்லையில்லாத விசாலத்தை உடைய பூமி; அல்லது அறிவில்லாத பூமி. வரக்கருதியே - நடந்து செல்லலை எண்ணியே, முனிவரன் - பிரும்மா, (பூமியில் நடக்கும் பொருட்டே முனிவரன்) அடி படைத்தது: இங்கு இவற்றினுக்கு (அடி) படைத்தது அவயவம் குறையாமல் (இருத்தற் பொருட்டே) படைத்தது என்று ஈற்றடியைக் கொண்டு பொருள் காண்க. இக்குதிரைகளுக்கு அடி படைத்தது நடத்தற்கு அன்று, அழகின் பொருட்டே,—என்பது பொருள்.

84. நீடு மால்வரை யடங்கலு நிலைபெற
நிற்குமால் வரைமண்மேல்
ஓடும் மால்வரை யிவையெனத் தனித்தனி
யூர்ந்ததேர் பலகோடி
நாடு மால்வரை கடல்வன மெனுநில
னாலுமே யொன்றாகக்
கூடு மால்வரை யில்லெனப் பரந்தனர்
கொடியவெம் படைவீரர்.

[நீடும் மால்வரை அடங்கலும் நிலை பெற நிற்கும் மால்வரை, மண்மேல் ஓடும் மால்வரை இவை, என தனி தனி ஊர்ந்த தேர் பல கோடி, நாடு மால்வரை கடல் வனம் எனும் நிலம் நாலுமே ஒன்று ஆக கூடும், ஆல் வரை இல் என பரந்தனர் கொடிய வெம்படை வீரர்.]

**விளக்கம் :**—தேர், காலாள் படை வர்ணனை இது. நீண்ட பெரிய மலைகள் எல்லாம் மண்மேல் (பூமியின்மேல்) நிலையாக நிற்கும் பெரிய மலைகள் ஆகும்; (மற்று) ''இவைகளோ மண் மேல் ஓடும் பெரிய மலைகள்'' என்று சொல்லும்படி, தனித்தனி விரைந்து ஓடும் கோடிக் கணக்கினவான தேர்கள் ஆகும்,— என்பது முதலிரண்டடிகளின் பொருள்.

நாடு - மருத நிலம். மால்வரை - பெரிய மலைகளைக் கொண்ட குறிஞ்சி நிலம். வனம் - காடுகளைக் கொண்ட முல்லை நிலம். கடல் - நெய்தல் நிலம். (இத்தகைய பாகுபாட்டினை உடைய) நால்வகை நிலமும் (காலாட் படையின் மிகுதியால் இனி) ஒன்று பட்டுவிடும், ஆதலால், நிலப் பிரிவிற்குரிய வரம்பு

இல்லதாயிற்று, என்று சொல்லும்படி கொடிய வெம்படை வீரர் (எங்கும்) வியாபித்தனர்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

மலைகளோ ஓரிடத்தே நிலையாய் நிற்கும் இயல்பின. மற்று, மலை போன்ற தருமனது தேர்களோ ஓடும் மலையாயின. மலை போன்ற தேருக்கு, உபமானமாகிய மலைக்கு இல்லாத சிறப்பை, அதாவது ஓடுதலாகிய சிறப்பைப் பெற்றிருப்பதாகக் கூறிய இது **சிறப்பு உருவக அணியின்** பாற்படும்.

காலாட் படைகள் நிலத்தை அடைத்துக்கொண்டு சென்றதால், நிலத்தின் நான்கு வகையான வேறுபாடு உணர முடியாததாயிற்று, என்று உயர்வு நவிற்சியால் காலாட் படையின் மிகுதியைக் கூறும் கருத்தின ஈற்றடிகள். இவை - தேர்கள். கோடி - மிகப் பல. ஆல் - ஆதலால். கொடிய வெம் : ஒருபொருட் பன்மொழி, மிகக் கொடிய என்பது பொருள்.

85. அதிர்மு ழக்கின கருமுகு லேழுடை
யண்டர்கோ னகல்வானுக்(கு)
எதிர்மு ழக்கென முழங்கின தனித்தனி
யின்னிய மிடந்தொறும்
முதிர்மு ழக்கிய மவற்றினு மும்மடி
முழங்கின வவைதாமும்
பிதிர்மு ழக்கென முழங்கின வலம்புரி
யுரகரிற் பிழைத்தோர் யார்.

[அதிர் முழக்கின கரு முகில் ஏழ் உடை அண்டர் கோன் அகல் வானுக்கு எதிர் முழக்கு என முழங்கின தனி தனி இன் இயம் இடந்தோறும், முதிர் முழக்கு இபம் அவற்றினும் மும்மடி முழங்கின; அவை தாமும் பிதிர் முழக்கு என முழங்கின வலம் புரி, உரகரில் பிழைத்தோர் யார்?]

**விளக்கம் :**—இது வாத்திய கோஷ வர்ணனை. அதிர்-அச்சம் தரும் ஒலி, பேரொலி, இங்கே இடி. இடி முழக்கத்தைச் செய்வனவாகிய கரிய மேகங்கள் ஏழை உடைய தேவர் தலைவனாகிய இந்திரனின் அகன்ற வானத்திற்கு எதிரான முழக்கம் என்று சொல்லும்படி, (அதாவது இடி முழக்கத்தைப் பின்னிடச் செய்வனவாக) இனிய வாத்தியங்கள் சேனைகள் செல்லும் இடம்

எங்கும் தனித் தனி முழங்கின,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். அண்டர்கோன்-இந்திரன். இயம்-வாத்திய வகைகள்.

முதிர் முழக்கு - முதிர்ந்த, அதாவது ஒலியின் மிகுதியைக் கொண்ட பிளிறுதலை உடைய. இபம்-யானைகள். (யானைகள் பிளிறுதலால் உண்டாகும் முழக்கம்) அவற்றினும் - அவ் வாத்தியங்களைக் காட்டிலும், மும்முடி முழங்கின - மூன்று மடங்கு அதிகமாகப் பேரொலி செய்தன. அவை தாமும் - யானைகளின் பிளிறலும். பிதிர் முழக்கு என - சிறிய ஒலி என்னும்படி. வலம்புரி முழங்கின - வலம்புரிச் சங்கங்கள் பேரொலி செய்தன; (இவ்வாறு எழுந்த ஒலிகளால்) உரகரில் - நாகலோக வாசிகளில், பிழைத்தோர் யார் - உயிர் பிழைத்தவர் யாவர், (ஒருவரும் இல்லை என்றபடி).

இடி முழக்கத்தினும் மிக்கனவாக வாத்தியங்களும், அவற்றினும் அதிகமாக யானையின் பிளிறல் ஒலிகளும், அவை சிற்றொலி என்று சங்கமும்,—என்ற வர்ணனை **மேன்மேலுயர்ச்சி அணி** ஆகும். பிதிர் - துகள்; அது இங்கே ஒலியின் சிறுமையைக் குறித்து நின்றது. இடிக்கு அஞ்சுதல் நாக ஜாதியின் இயற்கை. இடியினும் மிக்கவான இவ்வொலி முழக்கங்களைக் கேட்டு உரகர் அஞ்சி உயிர் ஒடுங்குபவராயினர், என்றது **உயர்வு நவிற்சியின்** பாற்படும். **முழக்கு, முழங்கின** என்ற சொற்கள் ஒரே பொருளில் பலமுறை வந்துளதால், இது, **சொற்பொருள் பின்வரு நிலை அணி** ஆகும்.

86. **எடுத்த நீள்கொடி யாடைவா னகல்வெளி**
**யெங்ஙணு நெருங்கிக்கீழ்**
**படுத்த வானமே வானமாய் மறைந்தது**
**மீதுரப் பகிரண்டம்**
**அடுத்த பூநதி வானதிக் கிலதென**
**வன்புட னுபகாரங்**
**கொடுத்த மீனெனக் கால்பொரப் பரந்துபோய்க்**
**குளித்தன குளிர்தோயம்.**

[எடுத்த நீள் கொடி ஆடை வான் அகல் வெளி எங்ஙணும் நெருங்கி, கீழ்படுத்த வானமே வானம் ஆய் மறைந்தது மீது உற பகிரண்டம்; அடுத்த பூ நதி வான் நதிக்கு இலது என, கால் பொர பரந்து போய் குளித்தன குளிர்தோயம்.]

**விளக்கம்:—** கொடி வர்ணனை இது. நால் வகைப் படையும் தூக்கிய கொடிச் சீலைகள் வானின் அகன்ற வெளியிடம் எங்கும்

வியாபித்து நெருங்கி மீது உற (மேலே பொருந்தியிருக்க), அவற்றின் கீழாக அமைந்த வானமே வானமாக நின்று, இதற்கு மேலே பொருந்தியுள்ள பகிரண்டம் (உண்மையான ஆகாயம்) கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தது. என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். கீழ் படுத்த - கீழே பரவி நின்ற, பொருந்திய பகிர் அண்ட வெளி - வானம்.

அடுத்த பூ நதி - நகரத்திற்கு அருகாமையில் உள்ள பூமியில் ஓடும் நதி. அடுத்த பூ நதி தன்னிடத்தே உள்ள மீன்கள் வான் நதிக்கு இல்லை என்று எண்ணி, அன்புடன் உபகாரமாகக் கொடுத்த, அதாவது அனுப்பிய மீன்கள் என்று சொல்லும்படி, காற்று வீசுவதனால் கொடிகள் எங்கும் எழுந்து பரவிச் சென்று, (வான் நதியின் அதாவது ஆகாச கங்கையின்) குளிர்ந்த நீரில் குளித்தன. ஆகாயத்தை மறைத்து, வேறோர் ஆகாயம் போன்று தோன்றிய கொடிகள், இப்பொழுது மீன்களாயின,

உபகாரம் - பெரியோர்க்கு அளிக்கும் காணிக்கை. தோயம் - ஜலம். ஆகாயத்தை மறைக்கவல்ல கொடிகளின் மிகுதி கூறிய முதலிரண்டடிகள் **உயர்வு நவிற்சி**. பூநதி வான் நதிக்கு உதவிய மீன்களாகக் கொடிகளைக் குறித்த பின்னடிகள், **தற்குறிப்பேற்ற அணி**, ஆகும்.

87. அழுந்த மேலிடு சேனையான் மிகவுநொந்
தமரருக் குரைசெய்யச்
செழுந்த ராதல மடந்தைபொன் னுலகிடைச்
செல்லுகின் றதுபோன்மேல்
எழுந்த தூளிக ளிடைவிடா தெங்கணு
மெழுந்தெழுந் தெதிரோடி
விழுந்த தூளியுந் தடுத்தன நிலனுற
விசும்புறும் படிநின்றே.

[அழுந்த மேல் இடு சேனையால் மிகவும் நொந்து அமரருக்கு உரை செய்ய செழும் தராதலம் மடந்தை பொன் உலகிடை செல்லுகின்றது போல், மேல் எழுந்த தூளிகள் இடைவிடாது எங்கணும் எழுந்து எழுந்து எதிர் ஓடி, விழுந்த தூளியும் தடுத்தன நிலன் உற விசும்பு உறும்படி நின்றே.]

**விளக்கம்:—** படைகளின் செலவால் எழுந்த தூளிகளின் வர்ணனை இது. தராதலமடந்தை-பூமாதேவி, பூதேவி, அழுந்தும் படி தன்மேல் பொருந்திய சேனையின் மிகுதியால் (பாரம் தாங்க

மாட்டாமல்) மிகவும் வருந்தி, அவ் வருத்தத்தைத் தேவர் களுக்குத் தெரிவித்துப் பரிகாரம் தேடுவதற்காகத் தேவலோகம் செல்வதுபோல், மேல் நோக்கி எழுந்த புழுதிகள் எங்கும் இடை விடாமல் மிகுதியாக எழுந்து வானுக்கு எதிராகச் சென்று, ஆகாயத்தில் பொருந்தும்படி நின்றுகொண்டு, நிலத்தில் பொருந் தும்படி விழும் புழுதியை (விழ விடாமல்) தடுத்தன,— என்பது பொருள்.

விசும்புறும்படி நின்று, நிலனுற விழுந்த தூளியைத் தடுத் தன, என்று இயைக்க. எழுந்தெழுந்து, என்ற அடுக்கு மிகுதிப் பொருளது; மிகுதியாக எழுந்து, என்பது பொருள். எதிர் ஓடி - ஆகாயத்திற்கு எதிராக எழுந்து சென்று.

சேனைகளின் செலவினால் எழுந்த புழுதிகள், பூமிதேவி பாரந் தாங்கமாட்டாமல் மிக நொந்து தன் வருத்தத்தைத் தேவரிடம் சொல்லிப் பரிகாரம் வேண்டுங் கருத்தில் தேவலோகம் செல்வது போல் இருந்தது, என்பது தற்குறிப்பேற்றம். புழுதிகள் இடைவிடாது மேல் நோக்கிச் சென்று கொண்டிருந்ததால், மேலே சென்ற புழுதிகள் கீழே விழமுடியாமற் போயின. அதாவது, முன்னே சென்ற புழுதிகள் கீழே விழ முடியாதபடி, பின்னே சென்ற புழுதிகள் தடுத்தன, என்று புழுதிகளின் மிகுதி யும், அதற்குக் காரணமான சேனைகளின் மிகுதியும் கூறியபடி.

### பாண்டவர் புறப்பாடு

88. முன்னர் மாருத மதலையுஞ்சேனையு
முடுகிவன் போடுபோதப்
பின்னர் வாசவன் மதலையுந் தானையும்
பெருந்தக வுடன்போத
அந்ந ராதிப ரிருவரு மிருபுறத்
தரும்படை யுடன்செல்ல
மன்ன ராதிபன் றாரகா கணத்திடை
மதியெனப் புறப்பட்டான்.

[முன்னர் மாருதன் மதலையும் சேனையும் வகிடு முன்பொடு போத, பின்னர் வாசவன் மதலையும் தானையும் பெரும் தகவு டன் போத, அ நராதிபர் இருவரும் இரு புறத்து அரும் படை யுடன் செல்ல, மன்னர் ஆதிபன் தாரகாகணத்திடை மதி என புறப்பட்டான்.]

**விளக்கம் :**—மாருதன் மதலை - வீமன். வாசவன் மதலை- விசயன். நராதிபர் - நகுல சகதேவர். மன்னர் ஆதிபன் - தரு மன், வீமன் சேனையுடன் முன் செல்ல, விசயன் தன் சேனை யுடன் பின் செல்ல, நகுல சகதேவர் இருவரும் இருபுறத்திலும் தம் படையோடு செல்ல தருமன் நட்சத்திரக் கூட்டங்களின் மத்தி யில் விளங்கும் சந்திரன் போல் புறப்பட்டுச் சென்றான்,—என்பது பொருள்.

அதிபன், என்பது ஆதிபன், என்று நீண்டது. மன்னராதி பன், என்பதை மன் - நராதிபன், என்றும் பிரிக்கலாம்; நிலைத்த பெருமையுடைய அரசன், என்பது பொருள். பெருந்தகவுடன் போக - கம்பீரமாகச் செல்ல.

89. அங்கண் மாநிலத் தரசர்தம் மகளிர்பே
ரரும்பிடி மிசை போதச்
செங்கண் மாமயில் யாகபத் னியும்வண்
சிவிகையின் மிசைபோத
வெங்கண் மாமணி முரசுயர்த் தருளிய
மெய்தவா மொழிவேந்தன்
தங்கண் மாநகர் கடந்துவண் சாயையுந்
தபனனு மெனச்சென்றான்.

[அம் கண்மா நிலத்து அரசர் தம் மகளிர் அரும்பிடி மிசை போத, செம் கண் மாமயில் யாக பத்நியும் வள் சிவிகை மிசை போத, வெம் கண் மா மணி முரசு உயர்த்து அருளிய மெய்தவா மொழி வேந்தன் தங்கள் மாநகர் கடந்து, வள் சாயையும் தபன னும் என சென்றான்.]

**விளக்கம் :**—தருமனோடு புறப்பட்ட அரசர்களின் மகளிர் பெண் யானை மீது சென்றனர். யாகபத்தினியா யிருந்த திரௌபதி பல்லக்கில் சென்றாள். தருமன், தங்களது பெரிய நகரமாகிய இந்திரப் பிரத்தத்தைக் கடந்து சாயாதேவியும் சூரிய னும் போல் (திரௌபதியுடன்) சென்றான். என்பது பொருள்.

பிடி - பெண்யானை. யாகபத்தினி-யாகத்திற்கு உரிய பட்ட மகிஷி. வள் சிவிகை - அலங்கார விசேஷமுடைய பல்லக்கு. வெம் கண் மாமணி முரசு - (பகைவரை அஞ்சச் செய்யும்) கொடிய கண்ணை உடைய முரசு. அதைக் (கொடியில் உயர்த்திய) மெய் தவா மொழி வேந்தன் - மெய்மை தவறாத சொற்களை உடைய தருமராஜன் - வள் சாயை - அழகிய சாயாதேவி (சாயை-நிழல்).

தபனன் - (தபநன்) தனது கிரணங்களால் வெம்மை செய்யும் சூரியன். முரசின் நடுவில் இருக்கும் கரிய பகுதி, கண்.

கலிவிருத்தம்

90. ஏவின பல்லியு மிடத்தி லேவரத்
தாவின குக்கிலுந் தருமன் றன்னெதிர்
வாவின நெடுங்கலை வரத நூல்வலோர்
ஓவின ருரைக்கவு முணர்க லாமையால்.

[ஏவின பல்லியும், இடத்திலே வர தாவின குக்கிலும் தருமன் தன் எதிர், வாவின நெடும் கலை. வரதம் நூல் வலோர் ஓவினர் உரைக்கவும் உணர்கலாமையால்.]

**விளக்கம் :—** தருமன் தன் எதிர் பல்லியும் ஏவின, குக்கிலும் இடம் வர தாவின, நெடுங்கலை வாவின; வரத நூல் வலோர் உரைக்கவும் உணர்கலாமையால் ஓவினர். ஏவின - (துர் நிமித்த மாகப் பல்லிகள்) ஒலி ஒழுப்பின. குக்கில் - செம்போத்து (காட்டுக் கோழி). இடது புறம் தாவிச் சென்றன; அதாவது குக்கில்கள் வலமிருந்து இடம் சென்றன. நெடுங்கலை - பெரிய கலைமான்கள். வாவின - எதிரில் பாய்ந்து சென்றன. வரத நூல் - சகுண சாத்திரம் (அச்சாத்திரப் புலவர்) உரைக்கவும் உணர்கலாமையால் - சகுனத் தடையை எடுத்துச் சொல்லவும், (தருமன்) அதை அறிந்து நடவாமையினால், ஓவினர் - மேலும் கூறுதலை விட்டனர்.

மாக நூல்வலோர், என்றும் பாடம் உளது. மாக நூல். சோதிட நூல். துர் நிமித்தங்களை நிமித்தகர் எடுத்துச் சொல்லியும், தருமன் பிரயாணத்தைத் தொடர்ந்தது, தந்தையின் சொல்லை மறுக்கலாகாது என்ற எண்ணத்தால், என்க.

91. மடந்தைய ரளகமு மாந்தர் மாலையும்
உடைந்துகு கடகரி மதமு முன்னியே
தடந்தொறு முரலளி தமரி னண்புறத்
தொடர்ந்துடன் வரவரச் சோலை யெய்தினார்.

[மடந்தையர் அளகமும் மாந்தர் மாலையும், உடைந்து உகு கடகரி மதமும் உன்னியே, தடம்தொறும் முரல் அளி தமரின் நண்பு உற தொடர்ந்து உடன் வரவர சோலை எய்தினர்.]

**விளக்கம் :—** தடம் தொறும் முரல் அளி, மடந்தையர்... மாலையும், கரிகடம் உடைந்து உகு மதமும் உன்னி (ஏ), தமரின்

நண்பு உற தொடர்ந்து உடன் வரவர சோலை எய்தினர்,— என்பது அன்வயம்.

அளகம் - நெற்றி மயிர், இங்கே கூந்தல் என்ற பொருளது. கரிகடம் உடைந்து உகு மதம் - யானையின் கன்னத்திலிருந்து வெளிப்பட்டு இழியும் மதநீர், உன்னி - எண்ணி. தடம் - நீர்நிலை, குளம். முரல் - ரீங்காரம் செய்யும். அளி - வண்டு. தமர் - உறவினர். நண்பு உற - பொருந்திய நட்போடு. வரவர - மொய்த்து வர,—பாண்டவர் ஒரு சோலையை அடைந்தனர்.

உத்தம சாதிப் பெண்களின் கூந்தலும் யானையின் மத நீரும் மலர்கள்போல் நறுமணம் உடையன. நறுமணம் நாடி மொய்த்தல் வண்டுகளின் இயற்கை. செல்லும் வழியில் உள்ள நீர் நிலைகளிலுள்ள வண்டுகள் தருமனோடு செல்பவர்களின் மலர் மாலை, மாதர் கூந்தல் யானைகளின் மதநீர் ஆகியவற்றை விரும்பி, சுற்றத்தார்போல் பொருந்திய நட்போடு தொடர்ந்து— வரப் பாண்டவர் ஒரு சோலையை அடைந்தார்கள், என்பதாம்.

92. சம்பகம் பாடலந் தமால நாண்மலர்
வம்பெழ மிலைச்சுவார் வாவி யாடுவார்
செம்பல வாமிரங் கதலித் தீங்கனி
உம்பரி னமிழ்தென வுடன ருந்துவார்.

[சம்பகம் பாடலம் தமாலம் நாள் மலர் வம்பு எழ மிலைச் சுவார், வாவி ஆடுவார், செம்பலவும் ஆமிரம் கதலி தீம் கனி உம்பரின் அமிழ்து என உடன் அருந்துவார்].

**விளக்கம் :**—பாண்டவரும் அவர்களைச் சேர்ந்தாரும் ஒரு சோலையை அடைந்ததும் சேனையில் உள்ள ஆணும் பெண்ணும் பூக் கொய்தும், நீர் விளையாடியும், அங்கே இருந்த இன்கனிகளை அருந்தியும் மகிழ்ந்ததைக் கூறும் செய்யுள் இது.

சம்பகம் - சண்பக மரம், பாடலம் - பாதிரி மரம், தமாலம் பசிய இலைகளை உடைய ஒரு வகை மலர்மரம். நாள் மலர்- புதிய மலர். வம்பு -வாசனை, மிலைச்சுவார் - சூடிக்கொள்வார். வாவி - தடாகம். பலவு - பலா. ஆமிரம் - மா. கதலி - வாழை- தேவலோகத்து அமுது என் மனைவியருடன் இருந்து அறிந்து மகிழ்வர்.

93. பச்சிளங் கமுகின்மென் பாளை சூடுவார்
அச்செழுங் காய்கனி கவர்ந்த ருந்துவார்

கொச்சையங் கடைசியர் குழுமி வாழ்த்தவே
வச்சிரம் போல்வர் மருத நீங்கினார்.

[பசு இளம் கமுகின் பாளை சூடுவார், அ செழும் காய் கனி கவர்ந்து அருந்துவார், கொச்சை அம் கடைசியர் குழுமி வாழ்த்தவே வச்சிரம் போல்பவர் மருதம் நீங்கினார்.]

**விளக்கம் :**—முன் செய்யுளில் கூறியபடி பூக் கொய்தும் நீர் விளையாடியும் உண்டாடியும் ஒரு சாரார் மகிழ வேறொரு சாரார் பசிய கமுகின் இளம் பாளைகளைக் கொய்து சூடியும், அம்மரங்களில் செழித்துச் செறிந்த காய் கனிகளைப் பறித்துத் தின்றும் மகிழ்ந்தனர். அதன்பின், வலியவரான பாண்டவர்களை நிரம்பாத சொற்களை உடைய கடைசியர் (மருத நிலத்துப் பெண்கள்) கூட்டமாய்க் கூடி வாழ்த்த, எல்லோரும் மருத நிலத்தைக் கடந்து சென்றனர்,—என்பது பொருள். கமுகு-பாக்கு மரம். வச்சிரம் போல்பவர் - வயிரம் போன்ற யாக்கை வலிமை யுடைய பாண்டவர். முந்திய செய்யுளிலுள்ள சம்பகம், பாடலம் முதலிய மலர்களும், இச் செய்யுளிலுள்ள கமுகு முதலிய மரங்களும் மருத நிலத்துக் கருப் பொருள்கள்.

94. தடாநிறை வெண்ணெயுந் தயிருங் கொண்டெதிர்
அடாமுடை நாறுதோ ளாயர் கைதொழப்
படாமுதன் முல்லையின் பரிம ளங்கொளாக்
கடாமலை வயவர்தன் கான மெய்தினார்.

[தடா நிறை வெண்ணெயும் தயிரும் கொண்டு எதிர் அடா முடை நாறும் தோள் ஆயர் கைதொழ, படாமுதல் முல்லையின் பரிமளம் கொளா, கடாம்மலை வயவர் தண் கானம்எய்தினார்.]

**விளக்கம் :**—மருதம் கடந்து சென்ற பாண்டவர் முல்லை நிலத்தை அடைந்தனர், - என்பதாம். முடை நாறும் தோள் ஆயர் (காணிக்கையாக) தடா நிறைய வெண்ணெயும் தயிரும் (எடுத்துக்) கொண்டு, எதிர் அடா கைதொழ, படா முதல் முல்லையின் பரிமளம் கொளா, கடாம் மலை (யானை) வயவர் (ஆகிய) பாண்டவர் தண்கானம் எய்தினர்,- என்பது அன்வயம்.

தடா - மிடா, பெரிய குடம். எதிர் அடா- எதிர் கொண்டு வந்து. முடை - நாள் பட்ட தயிர். வெண்ணெய்களிடமிருந்து எழும் நாற்றம். ஆயர் - இடையர். படா முதல் முல்லை-கெடாத சிறந்த முல்லை மலர். பரிமளம் - வாசனை. கொளா - (வாசனையை) அநுபவித்துக் கொண்டு, கடாம் மலை வயவர் -

மதம் பொழியும் மலை போன்ற யானைப் படையை உடைய வீரர்களாகிய பாண்டவர். கானம் - முல்லை நிலம்.

அரசர்கள் வருங்கால், அங்கே உள்ள மக்கள் தங்களிடமுள்ள பொருள்களைக் காணிக்கையாகக் கொணர்தல் மரபு. அவ்வாறே ஆயர்கள் தயிரையும் வெண்ணெயையும் காணிக்கையாகக் கொண்டு வந்து கொடுத்தனர், - என்க.

95. தேனினஞ் செறிதரு தெரியல் வேலினான்
தான்னிரங் கருண்மிகு தரும னாதலால்
கானிலங் குறைதரு கலைக ளோடிள
மானினம் பேர்கலா மருங்கு வைகுமால்.

[தேன் இனம் செறிதரு தெரியல் வேலினான், தான் இரங்கு அருள்மிகு தருமன் ஆதலால், கானில் அங்கு உறைதரு கலைகளோடு இளமான் இனம் பேர்கலா மருங்கு வைகும், ஆல்]

**விளக்கம் :**—தேன்-வண்டு. தெரியல் - மாலை. வேலினான்-வேலை உடைய தருமன். தான் - அவன் அல்லது அசை. இரங்கு அருள் மிகு தருமன் ஆதலால் - இரங்கும் தன்மை உடைய அருளை மிகுதியாகக் கொண்ட தருமத்தை மேற்கொண்டவன் ஆதலால். கானில் அங்கு உறைதரு கலை - முல்லைக் காட்டில் (பாண்டவர் இறங்கிய) அந்த இடத்தில் வசிக்கும் ஆண்மான்கள். அவ்வாண்மான்களோடு இளமான்களும், அஞ்சி இடம் பெயர்ந்து செல்லாது, பாண்டவர்க்கு அருகிலேயே இருப்பன ஆகும், - என்பதாம்.

தர்மராஜனது மகனான **தருமன்**, தருமத்தை மேற்கொண்ட வாழ்க்கை காரணமாகவும் **தருமன்** ஆகின்றான், என்று கூறியது **பிரிநிலை நவிற்சி** ஆகும்.

96. செருவிளங் காளையர் சேனை யின்றிறம்
வெருவிளம் பொதுவியர் விழைந்து காண்பபோல்
மருவிளங் கிதழிநீள் வனமு மாமலர்க்
கருவிளங் கண்கொடு கலந்து கண்டதே.

[செரு இளம் காளையர் சேனையின் திறம் வெருவு இளம் பொதுவியர் விழைந்து காண்ப போல், மரு விளங்கு இதழி நீள் வனமும், மாமலர் கருவிளம் கண்கொடு கலந்து கண்டதே.]

**விளக்கம் :**—செரு இளம் காளையர் - போரில் வல்ல இளமையுடைய ரிஷபம் போன்ற பஞ்சபாண்டவர். (அவர்களது) சேனை

யின் திறம் - சேனையின் வலிமை அல்லது கூறுபாட்டை. வெருவு இளம் பொதுவியர் - அஞ்சுதலையுடைய இளமையுடைய இடைப் பெண்கள். விழைந்து காண்பபோல் - விருப்பத்தோடு காண்பது போல். மரு விளங்கு இதழி நீள் வனம் - வாசனையின் விளக்க முடைய கொன்றை மரங்களைக் கொண்ட நீண்ட முல்லைக் காடு, (இதழி - கொன்றை). கருவிளம் - நீல நிறப்பூக்களைக் கொண்ட சிறு செடி; அதைக் காக்கணஞ் செடி என்பர். கருவிளம் மாமலர் கண் கொடு - கருவிளத்தின் சிறந்த மலர்களாகிய கண் களைக் கொண்டு. கலந்து கண்டது - (இடைப் பெண்களைப் போல், கானகமும் கருவிள மலர்க் கண்களால்) நன்றாக அல்லது கண் பதியக் கண்டது.

இடைப் பெண்கள் கண்டதுபோல். முல்லைக்காடு கண்டது.- உவமை அணி. முல்லைக்காடு தனது கருவிளை மலர்க்கண்களால் கண்டது, என்றது, தற்குறிப்பேற்றம். ஈற்றடி முற்றுமோனை.

97. புழைநெடுந் தடக்கைவெம் போத கங்களை
மழைமுகி லெனக்களி மயில்க ளாடின
தழலெழு கானகந் தண்ணெ னும்படி
செழுமத வருவியின் றிவலை வீசவே.

[புழை நெடும் தடக்கை வெம் போதகங்களை மழை முகில் என களி மயில்கள் ஆடின, தழல் எழு கானகம் தண்ணெனும்படி செழு மதம் அருவியின் திவலை வீசவே.]

விளக்கம் :—தழல் எனும் கானகம்...திவலை வீச (ஏ), புழை நெடும் தடக்கை...மயில்கள் ஆடின, -என்பது அன்வயம். புழை .. போதகம் - துளைகளை உடைய நீண்ட பெரிய துதிக்கையை உடைய கொடிய யானை. மழை முகில் - மழை பொழியும் மேகம். மதநீர் அருவி - அருவி போன்ற மதநீர்ப் பெருக்கு. திவலை-நீர்த்துளி. தழல் (நெருப்பு) போன்ற கானகம், குளிர்ச்சி யுறும்படி மதப்பெருக்கின் திவலைகளை (யானைகள்) பொழித வினால், அந்த யானைகளை, மழை முகிலென என மயங்கி மயில்கள் ஆடின,—என்பது பொருள்.

யானைகளை மழை முகில் எனக் கொண்டு மயில் ஆடின, என்றது மயக்க அணி. மயில், முல்லை நிலத்திற்கு உரிய பறவை.

98. வனநெறி கடந்துபோய் மன்ன வர்க்கெலாம்
தினகர னெனத்தகு செய்ய கோவினன்

இனமுகி றவழ்தலி னிரங்கு பேரிசைத்
தனிதவண் கிரிநெடுஞ் சார லெய்தினான்.

[வனம் நெறி கடந்து போய் மன்னவர்க்கு எலாம் தினகரன் என தகு செய்ய கோலினன், இனம் முகில் தவழ்தலின் இரங்கு பேர் இசை தனிதம் வள்கிரி நெடும் சாரல் எய்தினான்.]

**விளக்கம் :—** முல்லையைக் கடந்து பாண்டவர் குறிஞ்சி நிலத்தைச சேர்ந்ததைக் கூறும் இது. மன்னவர்க்கெல்லாம் தினகரன் (சூரியன்) எனத் தகுந்த செங்கோலினனான தருமன், முல்லைக் காட்டு வழியைக் கடந்து சென்று, முகில் இனம் படிதலினால் உண்டாகும் ஒலிக்கின்ற பெரிய சப்தத்தோடு கூடிய இடி முழக்கத்தை உடைய வளமுடைய மலையின் விசாலமான சாரலை (தாழ்வரையை) அடைந்தான், என்பது பொருள். இரங்கல் - ஒலித்தல். பேர் இசை - பெரிய ஓசை, பயங்கரமான ஒலி. தனிதம் - (ஸ்தநிதம்) கர்ச்சனை, இடி முழக்கம். வள்கிரி - வளம் மிக்க மலை.

99. குன்றுறை கடகரிக் குழாங்கள் சேனையின்
ஒன்றிய களிறுகண் டுட்கி யோடின
துன்றிய புறவிபச் சுவடு கண்டுடன்
சென்றில வெகுண்டிவன் சேனை யானையே.

[குன்று உறை கடகரி குழாங்கள் சேனையின் ஒன்றிய களிறு கண்டு உட்கி ஓடின, துன்றிய புறம் இபம் சுவடு கண்டு உடன் சென்றில வெகுண்டு இவன் யானையே]

**விளக்கம் :—** மலைகளில் வசிக்கும் மத யானைகளின் கூட்டங்கள், (தருமனது)ச் சேனையை சார்ந்துள்ள யானைகளைக் கண்டு நாணி அல்லது பயந்து ஓடின; நெருங்கிய காட்டுப் புறத்தனவான (அதாவது சேனையைச் சாராத) யானைகளின் (புறங்காட்டி ஓடிய) காலடிச் சுவட்டை, இவனது (தருமனது) சேனையில் பொருந்திய யானைகள், (ஓடிச் சென்ற காட்டு யானைகளின் மேல்) கோபங்கொண்டு அவற்றை தொடர்ந்து செல்லாது நின்று விட்டன,—என்பது பொருள். புறங்கொடுத்து ஓடிய யானைகளைத் தொடர்தல், வீரமாகாமை கருதித் தருமனது யானைகள் சும்மா இருந்து விட்டன, என்பது கருத்து.

காட்டு யானைகளும் பழக்கப்பட்ட நாட்டு யானைகளும் ஒன்றையொன்று பகைக்கும் இயல்பின. புறவு - இபம், என்று

பிரித்துக் குறிஞ்சி நில யானைகள், என்றும் கொள்ளலாம். தருமனது யானை குறிஞ்சி நில யானைகளின் அடிச்சுவடு கண்டு, சினந்து அவற்றைந் தொடராமைக்குக் காரணம், தமது வீரம் பழுதுறும் என்ற எண்ணம்,—என்க. இதனால். தருமனைச் சேர்ந்தார், வலி உடைந்து ஓடும் பகைவரைத் தொடர்ந்து செல்லா மரபுடைய மேன்மையினர், என்று புலவர் குறித்தபடி.

100. வாளியின் வரும்பரி மாவின் வண்குரத்
தூளிகள் விசும்புறத் துன்றி யோங்கலால்
ஆளிகள் சிகரமென் றதிர்ந்து பாய்வன
மீளியர் வேலின்வாய் வீழ்ந்து மாய்ந்தவே

[வாளியின் வரும் பரிமாவின் வள் குரம் தூளிகள் விசும்பு உற துன்றி ஓங்கலால், ஆளிகள், சிகரம் என்று அதிர்ந்து பாய்வன, மீளியர் வேலின் வாய் வீழ்ந்து மாய்ந்தவே.]

**விளக்கம் :**—ஏவுகணைபோல் பாய்ந்துவருகின்ற குதிரைகளின் வலிய குளம்புகளால் எழும் புழுதிகள் ஆகாயத்தில் பொருந்தும்படி நெருங்கி மேல் எழுதலால், (அப் புழுதித் தொகுதியை) மலைச் சிகரம் என்று மயங்கி மதித்து, கர்ச்சித்துக் கொண்டு பாய்வனவாகிய ஆளிகள் (சிங்கங்கள்), (புழுதியினால் மறைக்கப்பட்டு, ஏந்திய வேலோடு நின்ற) மீளியர் (படைவீரர்) களின் வேலின் முனையிலே விழுந்து மாய்ந்தன,—என்பது பொருள்.

பரிமா : இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. ஆளி - யாளி; சிங்கம்; அல்லது, யானையைக் கொல்லவல்லதும், துதிக்கை ஒன்றை உடையதுமான ஒரு விலங்கும் ஆகும். குதிரைகள் எழுப்பிய புழுதியை மலைச்சிகரம் என்று யாளிகள் மயங்கினதாகக் கூறியது **மயக்க அணி** ஆகும். இதனால் குதிரைப் படைகளால் எழுந்த புழுதியின் மிகுதி கூறப்பட்டது.

101. கார்தவழ் கொடுமுடிக் கான மால்வரை
வார்தவழ் முலையர மாத ரார் செவி
தார்தவழ் தடம்புயத் தரணி மன்னவர்
தேர்தவ ழோதையிற் செவிடு பட்டவால்.

[கார் தவழ் கொடுமுடி கானம் மால்வரை வார் தவழ் முலை அர மாதரார் செவி, தார் தவழ் தடம் புயம் தரணி மன்னவர் தேர் தவழ் ஓதையின் செவிடுபட்ட, ஆல்.]

**விளக்கம் :**—தேர்ப் படையின் செலவால் எழுந்த ஒலி மிகுதியைக் கூறும் இது. தார்தவழ்...ஓசையின், கார்தவழ்... அர மாதரார் செவி செவிடுபட்ட,—என்று அன்வயம். (ஆல்: அசை).

கார் - மேகம். கானம் - காடு. வரை - மலை. வார் - கச்சு. அரமாதர் - தேவமாதர். தார் - மாலை. தேர் தவழ் ஓசை - தேர்கள் செல்லுவதினால் உண்டாகும் ஒலி. இவ்வொலியின் மிகுதியால் அரமாதரின் செவிகள் செவிடாயின,—என்பதாம். 'தவழ்' என்பது பொருந்திய, (உருண்டு) செல்லுகின்ற என்ற இரு பொருள்களில் வந்துளது. ஒலி மிகுதியால் தேவமாதர்களின் செவி செவிடு பட்டன, என்பது உயர்வு நவிற்சி அணி ஆகும். பாண்டவரின் தேர்களின் செலவினால் உண்டான ஒலிமிகுதியின், வர்ணனை இது.

102. வரைநிலங் கழிந்தெறி மகர வாரிதித்
திரைநிலம் புகுந்தனன் சேனை சூழ்வரப்
புரைநிலங் கடந்தறம் புரியு நீர்மையான்
உரைநிலங் கடந்தசீ ருரைகொள் பேரினான்.

[வரை நிலம் கழிந்து எறி மகரம் வாரிதி திரை நிலம் புகுந்தனன் சேனை சூழ்வர, புரை நிலம் கடந்து அறம் புரியும் நீர்மையான், உரை நிலம் கடந்தசீர் உரை கொள் பேரினான்.

**விளக்கம்:**— தருமன் சேனையுடன் குறிஞ்சியைக் கடந்து நெய்தல் நிலத்தை அடைந்ததைக் கூறும் இது. புரை நிலம்...சீர் உரை கொள் பேரினான், சேனை சூழ்வர, வரை நிலம் கழிந்து, எறி திரை மகரவாரி நிலம் புகுந்தனன்,—என்பது அன்வயம்.

புரை - குற்றம். குற்றத்திற்கு இடமான பூமியைக் கடந்து, அதாவது குற்றம் ஒழிந்தவனாகித் தர்மத்தைப் புரிகின்ற தன்மையனும், உரைக்கு இடமாகிய வாய் கடந்த, அதாவது வாயினால் சொல்ல முடியாத சிறந்தபுகழை முகந்துகொண்ட பேரைஉடையவனும் ஆகிய தருமன்,— என்பது ஈற்றடிகளின் பொருள்.

(அத்தகைய மேன்மையனான தருமன் சேனை சூழ்ந்துவர) வரை நிலத்தை (குறிஞ்சியை) விட்டு நீங்கி, அலைகளை எறிகின்ற சுராமீன்களைத் தன்னிடத்தே கொண்ட கடலைச் சார்ந்த நெய்தல் நிலம் புகுந்தான். வாரிதி - கடல். வாரிதி நிலம் - நெய்தல் நிலம்.

103. ஒளிநலத் திகழ்வளை யுறங்கு நன்னிழல்
களிநறுஞ் சுரும்பிமிர் கண்டல் வேலிசூழ்

புளினமுங் கானலும் பொற்ப நோக்கினான்
நளினமும் புறந்தரு நயன வேந்தனே.

[ஒளி நலம் திகழ் வளை உறங்கும் நல் நிழல், களி நறும் சுரும்பு இமிர் கண்டல் வேலி சூழ் புளினமும் கானலும் பொற்ப நோக்கினான், நளினமும் புறம் தரும் நயனம் வேந்தனே.]

**விளக்கம்:—** நளினமும் (தாமரையும்) பின்னிடும் நலத் தவான நயனங்களை உடைய வேந்தனான தருமன்...(நெய்தல் நிலத்தை நோக்கினான்). பிரகாசம் ஆகிய நலம் விளங்குகின்ற சங்குகள் உறங்கும் நல்ல நிழலை உடையனவும், களி சுரும்பு இமிர் நறும் கண்டல் வேலியாகச் சூழ்ந்துள்ள புளினமும், கான லும் பொற்ப (நன்றாக) நோக்கினான், (பொற்ப - அழகு உற, அதாவது தன் உள்ளத்தே அழகு உணர்ச்சி எழ). சுரும்பு-வண்டு. இமிர் - ஒலித்தல் - ரீங்காரம் செய்தல். கண்டல் - தாழை, புளினம் - மணற்குன்று. கானல் - கடற்கரைச் சோலை. சங்கு, தாழை, மணல் குன்று, கானல் முதலியன நெய்தலுக்கு உரியனவை,

104. பெருங்கட மலைக்குலம் பெயர்த்தும் வந்தன
மருங்கடர் பேரணை வகுக்கவே யெனா
இருங்கட களிறுதே ரெண்ணில் சேனைகண்டு
அருங்கடல் வாய்திறந் தலறி யார்த்ததே.

[பெருங் கடம் மலைக்குலம் பெயர்த்தும் வந்தன மருங்கு அடர் பேர் அணை வகுக்கவே எனா, இருங்கடம் களிறு தேர் எண்ணில் சேனை கண்டு அருங்கடல் வாய் திறந்து அலறி ஆர்த்ததே.]

**விளக்கம்:—**இருங்கடம் களிறு தேர் எண்ணில் சேனை, அருங்கடல் கண்டு மருங்கு பேர் அணை வகுக்கவே, பெருங்கடம் மலைக்குலம் பெயர்த்தும் வந்தன எனா, வாய் திறந்து அலறி ஆர்த்ததே,—என்பது அன்வயம்.

பெருங்கடம் மலைக்குலம் - பெரிய காடுகளைத் தன்னி டத்தே கொண்ட மலைக்கூட்டம். பெயர்த்தும் - மறுபடியும். மருங்கு - தன்னிடத்திலே. அடர் பேரணை - (முன்னர் வானரர் களால் தென் கடலில் கட்டப்பட்டது போன்ற) நெருங்கிய பெரிய அணை. இருங்கட களிறு - பெரிய மத யானைகள். அருங்கடல் - அளத்தற்கு அரிய ஆழத்தை உடைய கடல்.

தருமனது பெரிய சேனை நெய்தல் நிலம் அடைந்ததும், அங்கு இருந்த சமுத்திரம், நால்வகைச் சேனையின் மிகுதியைக் கண்டு, தன்னிடத்திலே நெருங்கிய பெரிய அணையைக் கட்டவே, பெரிய காடுகளைக்கொண்ட மலைக்கூட்டம் மறுபடி யும் வந்துள்ளன என்று, வாய் திறந்து அலறி ஆர்த்தது,— என்பது பொருள்.

சப்தம் செய்தலை இயற்கையாக வுடைய கடல், தன் மீது மீண்டும் அணை கட்டுவதற்கு யானைக் காடும், தேர் மலை களும் வந்துள என்று எண்ணி அலறியதாகக் கூறியது. தற்குறிப் அணி.

105. நன்னெடுந் துறை'யெலா நாளிகேரமோடு
இன்னெடும் பனங்கனி யெடுத்த ருந்தினர்
புன்னையின் புதுமலர் புனைந்து கைதையின்
மென்னிழல் வைகினார் விலாச வீரரே.

[நல் நெடும் துறை எலாம் நாளிகேரமோடு (தேங்காயோடு) இன் நெடும் பனங்கனி எடுத்து அருந்தினார், புன்னையின் புதுமலர் புனைந்து கைதையின் மெல்நிழல் வைகினார், விலாச வீரரே.]

**விளக்கம்:**— விலாச வீரர் - விளையாட்டில் உற்சாகங் கொண்ட வீரர்கள், (அவர்கள்) நெய்தலின் நீர்த்துறைகளில் இருந்த தேங்காய்களையும், பனம் பழங்களையும் உண்டனர், (பின்னர்), புன்னையின் புது மலர்களை அணிந்து, தாழையின் இனிய நிழலில் தங்கி இளைப்பாறினர்,—என்பது பொருள்.

நாளிகேரம் - தேங்காய். கைதை - தாழை. வீரர் பூக்கொய் தும், உண்டாடியும் மகிழ்ந்ததைக் கூறும் செய்யுள் இது. தெங்கு பனை. புன்னை, தாழை ஆகியவை நெய்தலின் கருப் பொருள்கள்.

106. நாநலம் புனல்கெழு நாடுங் கானமும்
ஏனலம் புனக்கிரி யிடமு நெய்தலம்
கானலு மிவ்வகை கடந்து காவலன்
தூநலந் திகழ்பதி தோன்ற வெய்தினார்.

[நா நலம் புனல் கெழு நாடும். கானமும், ஏனல் அம் புனம் கிரி இடமும், நெய்தல் அம் கானலும் இ வகை கடந்து, காவலன் தூ நலம் திகழ் பதி தோன்ற எய்தினார்.]

**விளக்கம்:**—நாவுக்கு இனிய நீரின் வளம் மிக்க மருதமும், கானமும் (முல்லையும்), தினைப் பயிரைக்கொண்ட அழகிய

கொல்லைகளை உடைய குறிஞ்சியும், அழகிய நெய்தலும் ஆகிய நிலங்களை இல்வகையாகக் கடந்து, காவலன் (தருவன்) தூய அழகின் நலங்கள் விளங்குகின்ற அத்தினாபுரி எதிரில் தோன்றக் கண்டான், - என்பது பொருள். ஏனல்-தினை, குறிஞ்சியின் கருப்பொருள். கிரி இடம்- மலையைச் சார்ந்த இடம்; எனவே, குறிஞ்சி.

107. அத்தினா புரிதனக் கருகு வால்வளை
முத்தின நிழலெழ முகைக்குந் தாமரைத்
தொத்தின பொய்கையுஞ் சுரும்ப றாமலர்க்
கொத்தின சோலையுங் குறுகி வைகினார்.

[அத்தினாபுரி தனக்கு அருகு வால்வளை முத்து இனம் நிழல் எழ, முகைக்கும் தாமரை தொத்தின பொய்கையும், சுரும்பு அறா மலர் கொத்தின சோலையும் குறுகி வைகினார்.]

**விளக்கம்:—** அத்தினபுரிக்கு அருகே, தாமரைக் குளங்களைக் கொண்ட புறநகர்ச் சோலையில் தருமனும் தம்பியரும் சேனையுடன் தங்கினர்,—என்பதாம். வால் வளை முத்து இனம் நிழல் எழ முகைக்கும் தாமரை தொத்தின பொய்கை-வெள்ளிய சங்குகள் ஈன்ற முத்துக் கூட்டங்களின் நிலவு போன்ற வெள்ளொளி எழுந்து பிரகாசிக்க (அதை நிலவொளி என்று எண்ணிப் பகலிலும்) குவியும் தாமரை மலர்களின் கூட்டத்தைக் கொண்ட தடாகம், (தொத்து - மலர்க்கூட்டம்). சுரும்பு அறா கொத்தின சோலை - வண்டுகள் விட்டு நீங்காத பூங்கொத்துக்களை உடைய சோலை. குறுகி - நெருங்கி வைகினார்- (அங்கே) தங்கினார்.

முத்துக்களின் ஒளியை நிலவாக மயங்கி மதித்து பகலிலும் தாமரை மலராமல் குவிந்திருந்ததாகக் கூறியது மயக்கஅணி ஆகும்.

108. மொட்டின பருமணி முடிகொ டேர்ப்பரி
வெட்டின பரிகளும் வெம்மை யாறின
மட்டின பரிமள மரங்கள் யாவையும்
கட்டின கழைபொரு கவள யானையே.

[மொட்டின பருமணி முடிகொள் தேர் பரி, வெட்டின பரிகளும் வெம்மை ஆறின; மட்டின பரிமளம் மரங்கள் யாவையும் கட்டின கழை பொரு கவளம் யானையே,]

**விளக்கம்:**—மொட்டு - தாமரை மலரின் வடிவினதான ஒரு தேர் உறுப்பு. இது தேரின் முகப்பினில் வைக்கப்படுவதொன்று. மொட்டு என்னும் உறுப்பினை உடையவாய், பருத்த மணிகளால் அலங்கரிக்கப்பெற்ற முடியை (மேலிடத்தை)க் கொண்ட தேர்களில் பூட்டப்பெற்ற குதிரைகள், என்பது பொருள்.

வெட்டின பரி - தேரில் கட்டப்படுவதினின்று வெட்டப்பெற்ற அதாவது விடுவிக்கப்பெற்ற குதிரைகள்; (வீரர் ஏறி நடத்தும் குதிரைகள்). இவ்விரு திறத்துக் குதிரைகளும் பிரயாணத்தினால் உண்டான வெப்பத்தை (களைப்பை) ஆற்றிக் கொண்டன. மட்டு - தேன், மட்டின - தேனை உடையன வாகிய, பரிமளம் மரங்கள் - நல்ல வாசனையுள்ள மரங்கள், (அம் மரங்களில்)கழை பொரு கவள யானை-மூங்கிலினால் ஆகிய யானை அடக்கும் குத்துக்கோல் என்னும் கருவியைச் சினந்து சீறும் தன்மையினவான கவள யானைகள். கட்டின - கட்டப்பெற்றன. கட்டின: செயப்பாட்டுப் பொருளதான செய்வினை. கவளம்- பெரிய பந்தின் அளவுகொண்ட சோற்றுத்திரள். கவள யானை - கவளமாக உண்ணும் யானை.

109. தரித்தனர் வீரரும் தத்த மாதரும்
சரித்தன சும்மைக டங்கு பண்டியும்
பரித்தன நன்னிறப் படங்கு வீடுகள்
விரித்தன ரிடந்தொறும் வேந்த ரெய்தினார்.

[தரித்தனர் வீரரும், தம்தம் மாதரும், சரித்தன சும்மைகள் தங்கு பண்டியும், பரித்தன நல் நிறம் படங்கு வீடுகள் விரித்தனர் இடம் தொறும் வேந்தர் எய்தினர்.]

**விளக்கம் :**—சேனை வீரரும் அவர்களுடைய மனைவிமார்களும் (அச் சோலையில்) தங்கி இளைப்பாறினர், (தரித்தல் - தங்குதல்). சும்மை (சுமை, பாரம்) தாங்கிய வண்டிகளும் சாய்த்து விடப்பட்டன; அதாவது. மாடுகள் அவிழ்க்கப்பட்டு வண்டியின் நுகம் பூமியில் படும்படி விடப்பட்டன. நல்நிறம் பரித்தனவான படங்கு வீடுகள் விரித்தனர் (ஆய்) வேந்தர் எய்தினர்-,என்று ஈற்றடிகளை அன்வயிக்க. பரித்தன - தாங்கின, பெற்றன. நல்நிறம் பரித்தன - நல்ல அல்லது அழகிய நிறங்களைப் பெற்றவான. படங்கு - கூடாரம். படங்கு வீடு-கூடார வீடு, விரித்தனர் - அமைத்துக் கொண்டவராய். வேந்தர்

எய்தினர்-வேந்தர் அக் கூடாரங்களை அடைந்து ஓய்வுகொண்டனர். வேந்தரும் வீரரும் சேனையிலுள்ள பிராணிகளும் ஓய்வு கொண்டதைக் கூறியபடி.

110. கைவரு தண்டுடைக் காளை வெஞ்சிலை
தைவரு செங்கையான் றாரை வெம்பரி
மெய்வரு குமரன்வேல் விடலை வேந்தனோடு
ஐவரு மமர்ந்தன ராண்மை யேறனார்.

[கைவரு தண்டு உடைகாளை, வெம்சிலை தைவரு செம் கையான், தாரை வெம்பரி மெய்வரு குமரன், வேல் விடலை, வேந்தனோடு ஐவரும் அமர்ந்தனர் ஆண்மை ஏறு அனார்].

**விளக்கம் :—**கைவரு- நன்கு பழகிய. தண்டு-கதை, காளை - காளைபோன்ற வீமன். வெஞ்சிலை தைவரு செங்கையான் - வெவ்விய வில்லைப் பிடித்தலையுடைய சிவந்த கையனான விசயன். தாரை - குதிரையின் ஐவகை கதிகளில் ஒன்று; நேராக ஓடல். வெம்பரி மெய்வரு குமரன் - நடை வேகமுடைய குதிரையை அதன் மனம் அறிந்து செலுத்துவதில் நல்ல அறிவு பெற்றவனான நகுலன். வேல் விடலை - வேல் போரில் வல்ல வனான சகதேவன். வேந்தன் - தர்மபுத்திரன். ஆண்மை ஏறு அனார் - வீரத்தில் ஆண் சிங்கத்தைப் போன்றவர். இவர்கள் ஐவரும் சோலையில் தங்கி இளைப்பாறினர், என்றவாறு. தைவருதல் - தடவுதல். விடலை - ஆண்பால் சிறப்புப் பெயர்.

111. மறத்திருந் தானையான் வஞ்ச மெண்ணினான்
அறத்திருந் திலனெனா வஞ்சி யந்தவூர்
புறத்திருந் ததுவெனப் புனிதன் பாசறை
நிறத்திருந் ததுபிற நிகர்ப்ப வில்லையே.

[மறத்து இருந் தானையான் வஞ்சம் எண்ணினான் அறத்து இருந்திலன், எனா, அஞ்சி அந்த ஊர் புறத்து இருந்தது என, புனிதன் பாசறை நிறத்து இருந்தது; பிற நிகர்ப்ப இல்லையே.]

**விளக்கம் :—**மறம் - அறத்தின் எதிர்ப்பதம், அதர்மம். அந்த ஊர் - இந்திரப்பிரத்தம். புனிதன் - பரிசுத்தனாகிய தர்ம புத்திரன். பாசறை - படைவீடு. நிறம் - பொலிவு. நிறந்து இருந்தது - பொலிவோடு இருந்தது, இந்திரப்பிரத்தத்தின் அரசனான தருமன் தனது சேனையோடு வந்து அத்தின புரிக்குப் புறத்தே இருந்த சோலையில் பாசறை அமைத்துக் கொண்டு தங்கியிருந்ததானது,- அதர்மத்தைத் துணையாகக் கொண்ட

பெரிய சேனையை உடையவனாகிய துரியோதனன், பாண்டவர்களை வஞ்சிக்குங் கருத்தினனாய் அறவழி நின்றிலன் என்று அஞ்சி, இந்திரப்பிரத்தம், அத்தினபுரியினுள்ளே செல்ல மனமில்லாமல் வெளியிலேயே தங்கிவிட்டது. போன்று இருந்தது. என்றார் புலவர். இந்த வர்ணனை தற்குறிப்பேற்றத்தின் பாற்படும், "பிற நிகர்ப்ப இல்லை," என்பது "இவ்வாறு கூறுவதன்றி, இதற்கு (இப்பாசறைக்கு) ஒப்பாகக் கூடிய வேறு பொருள் எவையும் இல்லை," என்ற பொருளது. தருமனும் அவனது படையும் இந்திரப் பிரத்தமாகக் கொள்ளப்பட்டது.

112. மீண்டவர் வரிசிலை விதுர னேவலால்
பாண்டவர் வரவுமுன் பணிந்து கூறவே
மாண்டவர் குறிப்புறா மாய வஞ்சகம்
பூண்டவர் களித்துமெய்ப் புளக மேறினர்.

[மீண்டவர் வரிசிலை விதுரன் ஏவலால் பாண்டவர் வரவு முன்பணிந்து கூறவே, மாண்டவர் குறிப்புறா மாயம் வஞ்சகம் பூண்டவர், களித்து மெய்புளகம் ஏறினார்.]

**விளக்கம் :—**வரிசிலை விதுரனது ஏவலால் அத்தினபுரி திரும்பிய தூதர், பாண்டவர் வரவைத் திருதராட்டிரன்முன் பணிந்து கூறலும், மாண்டவர் (மாட்சிமிக்க பெரியோர்) மனங்கொள்ளாத மாயமுடைய மோசச் செயலை மேற்கொண்ட துரியோதனாதியர் களித்து உடலில் புளகம் ஏறப்பெற்றார். இனிச் சூதினால் பாண்டவர்களை எளிதில் வென்று அழித்துவிடலாம், என்ற சந்தோஷம் 'மெய்ப்புளகம்ஏற,' ஆதாரம் ஆயிற்று. குறிப்புறா - (பெரியோர்) மனத்தினால் நினைத்தற்கும் இல்லாத.

113. தேசறை யிடங்களுந் தேங்கொள் கானமும்
மூசறை மதுகர மொய்த்த சோலையும்
வீசறல் வனநதி விதமு மேல்கொளப்
பாசறை யிருந்தவா பகர லாகுமோ.

[தேசு அறை இடங்களும் தேன் கொள்கானமும், மூசு அறை மதுகரம் மொய்த்த சோலையும், வீசு அறல் வனம் நதி விதமும் மேல்கொள, பாசறை இருந்த ஆ(று) பகரல் ஆகுமோ.]

**விளக்கம் :—**தேசு அறை இடங்கள் - (பாசறையில்) அலங்கார விளக்கமுடைய அறைகளைக்கொண்ட இடங்கள். (அதைச் சுற்றி) தேன் கொள் கானம் - தேனை மிகுதியாகக் கொண்ட காடுகள். மூசு அறை மதுகரம் மொய்த்த சோலை - நெருங்கி

ரீங்காரம் செய்யும் வண்டுகள் மொய்க்கப்பெற்ற சோலை. வீசு அறல் வனநதி விதம் - அலை வீசும் நீரை உடைய காட்டாறு களின் வகை. மேல் கொள - இவற்றைத் தன்னிடத்தே (தனக்கு அருகே) கொண்டுள்ள பாசறை இருந்தவாறு பகரல் ஆகுமோ - பாசறை அமைந்திருந்த விதம், சொல்லும் தன்மையதாமோ. அறல் - நீர். வனநதி விதம் - பெரியதும் சிறியதுமாய்ப் பலதிறப் பட்ட காட்டாற்றின் வகை. இது கவிக்கூற்று. காடும் சோலை யும், காட்டாறுகளும் இருந்த இடத்தில் பாண்டவர் பாசறை அமைத்துக்கொண்டு தங்கினர், என்பதாம்,

114. விருந்துறு சேனைவெவ் வீர ரின்னமுது
அருந்தினர் மெய்குளிர்ந் தசைவு தீர்தலும்
வருந்தின ரிவர்துயில் வதிய வேண்டுமென்று
இருந்தப னனுமிவர்க் கிரவு நல்கினான்

[விருந்து உறு சேனை வெம் வீரர் இன் அமுது அருந்தினர் மெய் குளிர்ந்து அசைவு தீர்தலும், வருந்தினர் இவர், துயில் வதிய வேண்டும் என்று, இருந்தபனனும் இவர்க்கு இரவு நல்கினான்.]

**விளக்கம் :**—இது சூரியாஸ்தமன வர்ணனை. விருந்து- புதுமை. விருந்து உறு சேனை வெம் வீரர்-புதிதாக (இங்கே) வந்து தங்கிய வெவ்விய சேனைவீரர். அருந்தினர்-உண்டனராய்' அசைவு-அயர்வு, இளைப்பு. தபனன்-சூரியன், இருந்தபனன்- பெருமையுடையவனான சூரியன். சூரியன் மறையவும் இரவு வந்தது. இதை, "பிரயாணம் செய்து வருத்தமுற்ற சேனை வீரர் துயின்று அயர்வு தீரப் பெற வேண்டும் என்று சூரியன் மறைந்து இரவை உதவினான்," என்று கூறியது, தற்குறிப் பேற்றம், 'இவர்க்கு இரவை நல்கினான்.' என்றது. "பாண்ட வாக்கு இரந்து உயிர் வாழவேண்டிய நிலையைக் கொடுத்தான்," என்ற அமங்கலப் பொருளையும் தொனிக்கவல்லது எனவே, இத் தொடர் பாண்டவர் விரைவில் அரச செல்வங்களை எல்லாம் இழக்கப் போவதைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

115. மண்வளர் பெரும்புகழ் மன்ன ரைவரும்
பண்வளர் நல்லிசைப் பலம கீபரும்
கண்வளர் பாளையங் காண வெண்ணியே
விண்வளர் குபேரனும் விழைந்து தோன்றினான்.

[மண்வளர் பெரும் புகழ் மன்னர் ஐவரும், பண்வளர் நல் இசை பல மகீபரும் கண்வளர் பாளையம் காண எண்ணியே, விண்வளர் குபேரனும் விழைந்து தோன்றினான்.]

**விளக்கம்:—** இது, சந்திரோதய வர்ணனை, பூமியில் வளர்ந்து பரவிய பெருங் கீர்த்தியை உடைய பாண்டவர், புலவர்களது இசைப் பாட்டினால் வளர்ந்து ஓங்கிய நல்ல கீர்த்தியை உடைய மன்னர் பலர், கண் வளர்தல்- துயிலுதல். பாளையம்-படை வீடு. விண்வளர் குபேரன்- வானில் கலை வளர்ந்து விளங்கும் சந்திரன். பாண்டவரும், அவர்களுக்குத் துணை அமைந்த அரசர்களும் கண்வளர்தலைக் காண்பதற்கு விழைந்து சந்திரன் உதயமானான், என்பது பொருள். இயல்பாக உதயமான சந்திரனை, ஐவரும், மன்னர்களும் துயில்வதைக் காண வந்தவனாகக் கூடிய இவ் வர்ணனை, **தற்குறிப் பேற்றம்** ஆகும்.

சந்திரனுக்குக் குபேரன், என்ற ஒரு பெயருண்டு. புலவர்களால் பாடப்பெற்ற புகழுடைய மன்னர், என்பது இரண்டாவது அடியின் பொருள். சந்திரகுலத்தோரைப் புலவர், குபேரன் குலத்தோர் என்று கூறியுள்ளதை, அறிக.

116. மருண்மிகு சுரும்பின மணந்த சோலையின்
இருள்களி னிடையிடை யெறித்த வெண்ணிலா
அருளுடை மைந்தர்தோ ளணைந்த மங்கையர்
புரிகுழ னெகிழ்ந்த வெண்போது போலுமே.

[மருள் மிகு சுரும்பு இனம் மணந்த சோலையின் இருள்களின் இடை இடை எறித்த வெள் நிலா, அருள் உடை மைந்தர் தோள் அணைந்த மங்கையர் புரிகுழல் நெகிழ்ந்த வெள்போது போலுமே.]

**விளக்கம்:—** மணந்த- மொய்த்த. எறித்த- சந்திரன் போக்கிய, வெளிப் படுத்திய, அருள் உடை மைந்தர்-காதலர். புரிகுழல் நெகிழ்ந்த-(மகளிரின்) சுருண்ட கூந்தலின்று சரிந்த. போது-மலர். சோலையிலுள்ள மரங்களின்கீழ் காணப்படும் இருண்ட நிழல்களினிடத்தே தோன்றும் வெள்ளிய நிலவொளி, நாயகன்மாரை அணைந்து கொண்ட நங்கையரது கூந்தலினின்று அவிழ்ந்து விழுந்த வெள்ளிய மலர்களைப் போல் இருந்தது, என்று நிலாத் தோற்றம், வருணிக்கப்பட்டது, இது, தற்குறிப் பேற்ற அணி,

117. கானிடை சிலசில கடிகொ டேனுமிழ்
தூனிற முல்லைகண் மலர்ந்து தோன்றுமால்
வானிடை முறைமுறை வளரு மாமதி
மேனியி னமிழ்துமிழ் விந்து வென்னவே.

[கானிடை சில சில கடிகொள் வேன் உமிழ் தூநிறம் முல்லைகள் மலர்ந்து தோன்றும் (ஆல்), வானிடை முறைமுறை வளரும் மாமதி மேனியின் அமிழ்து உமிழ் விந்து என்ன, (ஏ).]

**விளக்கம்:**—கானிடை கடிகொள் தேன் உமிழ் தூநிற முல்லைகள் சில சில, வானிடை... விந்து என்ன, மலர்ந்து தோன்றும், என்று அன்வயிக்க, கடிகொள் தேன்- நறுமணங் கொண்ட தேன், உமிழ்- வெளிவிடுகின்ற. தூ நிற முல்லை- வெண்மை நிறமுடைய முல்லை மலர். முறை முறை வளரும் மாமதி-நாள்தோறும் கலைவளரும் தன்மையையுடைய சுக்லபட்சத்துச் சிறந்த சந்திரன். மேனியின் அமிழ்து உமிழ் விந்து- மேனியில் உள்ள அமுதத்தினின்று பெருகி வெளிப்படும் துளி. கானிடை மலர்ந்த சில முல்லை மலர்கள், வளரும் தன்மை யுடைய சுக்கிலபட்சத்துச் சந்திரனது திருமேனியிலிருந்து வழிந்த அமுதத் துளிகளை ஒத்துத் தோன்றின, என்பதாம். இந்த வர்ணனை தற்குறிப்பேற்றம்.

118. பொருவில்வெண் டுகில்கொடு பொதிந்த தென்னவே
பரிநெடுந் தேர்மிசைப் பானி லாவெழக்
கிரணவெண் படைக்கெதிர் கெடாம னின்றபேர்
இருளென விளங்கின யானை வெள்ளமே.

[பொருவு இல் வெள் துகில் கொடு பொதிந்தது என்ன பரி நெடுந்தேர் மிசை பால் நிலா எழ, கிரணவெள் படைக்கு எதிர் கெடாமல் நின்ற பேர் இருள் என விளங்கின, யானை வெள்ளமே.]

**விளக்கம் :**—பரி நெடுந்தேர்மிசை பால் நிலா எழ, பொருவு இல் வெள் துகில் கொடு பொதிந்தது என்னவே, யானை வெள்ளம் (ஏ) கிரண வெண்படைக்கு எதிர், (அழிந்து) கெடாது நின்ற பேர் இருள் என விளங்கின,—என்பது அன்வயம்.

பரிநெடுந்தேர் - குதிரைகள் பூட்டப்பெற்ற நெடிய தேர். அதன்மேல், பால் போன்ற வெண்ணிலவு எழுந்து படியவே, (அத் தோற்றம்) நேரில்லாத வெள்ளிய துகிலினால் (அத் தேர்கள்) மூடப்பட்டன என்று சொல்லும்படி இருந்தன,—என்பது முதலி

ரண்டடிகளின் பொருள். யானைக் கூட்டங்களோ (சந்திரனுடைய) கிரணங்களாகிய வெண்ணிற ஆயுதங்களுக்கு எதிரே பின் வாங்கி ஓடாமல் நிலை நின்ற பெரிய இருளைப்போல் விளங்கின,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

தேர்களின் மேல் படிந்த நிலவொளியின் தோற்றம், அத்தேர்களுக்கு வெண்ணிற உறைகள் போடப்பட்டன போன்றும், அந்நிலவில் கரு நிறத்தோடு நின்ற யானைகள், சந்திரனால் சிதைத்து அகற்ற முடியாத இருளின் கூட்டம் போன்று இருந்தன என்பதாம். இவ்வர்ணனை **தற்குறிப் பேற்றம்** ஆகும்.

சந்திரன் இருளின் பகையாதல் பற்றி நிலவொளி படை எனப்பட்டது, (படை - ஆயுதம்). யானைகளின் கருநிறமாகிய இருள் ஒழிக்கப்படாமையால், கிரணம் **வெண்படை,** (வலியற்ற வெள்ளைப்படை) எனப்பட்டது.

119. பரியன கந்துகம் பரிந்து மாமதக்
கரிசில பாகையுங் கைக டந்தன
அரிவையர் பலர்துயி லனந்த லோடுதஞ்
சுரிகுழன் மேகலை சோர வோடினார்.

[பரியன கந்துகம் பரிந்து மா மதம் கரி சில பாகையும் கைகடந்தன, அரிவையர் பலர் துயில் அனந்தலோடு தம் சுரிகுழல் மேகலை சோர, ஓடினார்.]

**விளக்கம்:—** மா மதம் கரிசில பரியன...கை கடந்தன -மிகுந்த மதங்கொண்ட யானைகள் சில திண்ணியனவான கட்டுத்தறிகளைச் சிதையச் செய்து, பாகனுக்கும் அடங்காமல் வெளிப்பட்டன. பரியன - திண்ணிய, அல்லது பருத்தவாகிய. பரிந்து - சிதைத்து (இங்கே பிறவினைப் பொருளது).

மதயானை சில வெளிப்பட்டு ஓடவும், அரிவையர் பலர் துயில் அனந்தலோடு (தூக்க மயக்கத்தோடு) சுரிகுழல் அவிழவும், மேகலாபரணம் சரிந்து கீழே விழவும் ஓடினர், என்பதாம். பாகு-பாகன், உயர்திணைப் பொருள் தரும் அஃறிணைச் சொல். அனந்தல் - குறைத் தூக்கம், அறைத் தூக்கம்; எனவே, துயில் அனந்தல், என்பது தூக்க மயக்கம், என்ற பொருளதாகின்றது.

120 நீடுறு தருக்களி னிரைத்த மாவதன்
கோடிற வெறிந்துகைக் கொள்ளு மோதையான்
மாடுறு பொங்கர்வாய் வதிந்த புள்வெரீஇப்
பேடொடு சேவன்மெய் பிரிந்து தேடுமால்.

[நீடுறு தருக்களில் நிரைத்த மா, அதன் கோடு இற எறிந்து கை கொள்ளும் ஓதையால், மாடுஉறு பொங்கர் வாய் வதிந்த புள் வெரீஇ பேடொடு சேவல் மெய் பிரிந்து தேடும் (ஆல்).]

**விளக்கம்:** நிரைத்த மா-வரிசையாகக் கட்டப்பெற்ற யானைகள். அதன் கோடு - (யானை கட்டப்பெற்ற மரத்தின்) கிளை. எறிந்து - ஒடித்து. கைக்கொளல் - துதிக்கையில் கிளையைக் கொள்ளுதல். ஓதை - ஓசை, மாடுஉறு - அருகிலே பொருந்தி இருந்த. பொங்கர் - சோலை. வதிந்த - தங்கியிருந்த. வெரீஇ - வெருவி பயந்து பேடு - பெண் பறவை. சேவல் - ஆண் பறவை; மெய் பிரிந்து - (ஆணும் பெண்ணுமாய்க் கூடியிருந்த பறவைகள் அச்சத்தினால்) சேர்க்கை பிரிந்து.

ஆணும் பெண்ணுமாய்க் களித்திருந்த புட்கள் யானைகள் மரங்களை முறித்த ஓசையைக் கேட்டு அஞ்சிக் கூட்டம் பிரிந்து போய், அதன் பின் ஒன்றையொன்று தேடினவாயின என்பதாம்.

121. ஊதையின் மரனசை யுறப்பொ றாவடம்
மோதுறு முளையுடன் முடுகு வேட்டமாய்த்
தீதறு பரிசில செல்வன் பாசறை
மாதிர முறப்பல வாளி போதுமால்.

[ஊதையின் மரன் அசையுற பொறா, வடம் மோதுறு முளையுடன் முடுகி வேட்டமாய், தீது அறு பரி சில, செல்வன் பாசறை மாதிரம் உற பல வாளி போதும் (ஆல்).]

**விளக்கம்:**—ஊதை - பெருங்காற்று. மரன் - மரம் (போலி) பொறா - பொறாது. வடம் - கயிறு. மோதுறு முளை - (கயிறு கொண்டு குதிரைகள்) கட்டப்பெற்ற முளை. முடுகு வேட்டமாய் விரைந்து செல்லும் ஓட்டம் உடையதாய். தீது அறு பரி - குற்றமற்ற குதிரைகள்; அதாவது உயர்ந்த சாதிக் குதிரைகள். செல்வன் - தருமன். மாதிரம் - திசை; இங்கே, பக்கம். மாதிரம் உற - பாசறையின் பக்கத்திலே பொருந்துமாறு. வாளி போதல் - வட்டமாகச் செல்லல். வாளி: குதிரையின் கதிகளில் ஒன்றான மண்டல கதி. அதாவது வட்டமாகச் சுற்றல்.

காற்றினால் மரங்கள் அசைதலைப் பொறாமல், சில குதிரைகள், கட்டப்பெற்ற முளைகளுடனே பாசறையைச் சுற்றிச் சுற்றி ஓடலாயின,—என்பதாம். வேட்டம் - வேட்டை; அது இங்கே, ஓட்டம் என்ற பொருளதாயிற்று.

122. ஆடுவர் சிலர்சில ரைவர் வான்புகழ்
பாடுவர் சிலர்சிலர் பாய லின்புறக்
கூடுவர் சிலர்சிலர் கோதை மாதரோ(டு)
ஊடுவர் சிலர்சில ரோகை வீரரே.

[ஆடுவர் சிலர் சிலர், ஐவர் வான் புகழ் பாடுவர் சிலர் சிலர். பாயல் இன்புற கூடுவர் சிலர் சிலர், கோதை மாதரோடு ஊடுவர் சிலர் சிலர், ஓகை வீரரே.]

**விளக்கம் :**—ஓகை வீரர் - மகிழ்ச்சி மிக்க வீரர்கள். அவர்களில் சிற்சிலர் ஆடுவர், சிற்சிலர் பாண்டவரது மெய்யான சிறந்த புகழைப் பாடுவர். சிற்சிலர் (தமக்கு உரிய) கோதை மாதரோடு படுக்கையில் இன்பம் உண்டாகும்படி கூடுவர்; சிற்சிலர் ஊடுவர், - என்பதாம். ஓகை: உவகை என்பதின் மரூஉ. சிலர் சிலர் என்பது அசை நிலை அடுக்கு.

123. பஞ்சவர் வாழ்வுறு பதம்பொ றாமையின்
வஞ்சக மியற்றுவான் மனங்கொ லென்னவே
மிஞ்சிய குளிர்மதி மேற்பொ றாதிகல்
செஞ்சுட ரவன்குண திசையின் றோன்றினான்.

[பஞ்சவர் வாழ்வுறு பதம் பொறாமையின், வஞ்சகம் இயற்றுவான் மனம் (கொல்) என்ன (ஏ) மிஞ்சிய குளிர் மதிமேல் பொறாது இகல் செம் சுடரவன் குண திசையில் தோன்றினான்.]

**விளக்கம் :**—பாண்டவர் வாழ்தலாகிய நல்ல பதவியைப் பொறாமையினால், வஞ்சம் இயற்றுவானாகிய துரியோதனனின் மனம்போல, மிகுந்த குளிர்ச்சியையுடைய சந்திரன்மேல், அசூயை கொண்டு, அதனோடு இகலுடைய செஞ்சுடரவன் (சூரியன்) குண திசையில் (கிழக்குத் திசையில்) தோன்றினான்,— என்பதாம். கொல்: அசை. மிஞ்சிய என்பது, விஞ்சிய என்பதின் மரூஉ. குணக்கு - திசை - குணதிசை.

பாண்டவரது வாழ்வு பொறாத துரியோதனன்போல், சந்திரனது வாழ்வு பொறாதவனாய்ச் சூரியன் உதயமானான், என்க.

### வேறு
### பாண்டவர் அத்தினபுரி அடைதல்

124. துயிலு ணர்த்துபைந் தொடையன் மார்பினான்
வெயிலெ ழுந்துதன் விரத முற்றபின்

பயில்பெ ருஞ்சனம் பாச றைப்படுத்(து)
எயில்வ ளைந்தமா நகரி யெய்தினான்.

[துயில் உணர்ந்து பைந்தொடையல் மார்பினான், வெயில் எழுந்து தன் விரதம் உற்றபின், பயில் பெரும் சனம் பாசறை படுத்து, எயில் வளைந்த மாநகரி எய்தினான்.]

**விளக்கம் :**—துயில் உணர்தல் - கண் விழித்து எழல், தூக்கம் நீங்கி எழல். தொடையல் மார்பினான் - தருமன். வெயில் எழுந்து - சூரிய எழலும். விரதம் உற்று - காலைக் கடன்களைச் செய்து முடித்து, பயில் பெருஞ் சனம் - தன்னுடன் வந்துள பெரிய வீரர் கூட்டம். பாசறை படுத்து - பாசறையிலேயே இருக்கச் செய்து. எயில் வளை மாநகரி - மதில் சூழ்ந்த பெரிய நகரமாகிய அத்தினபுரி.

இரவு அகன்று சூரியன் உதித்ததும், தருமன் தம்பியருடன் காலைக்கடனைச் செய்து முடித்த பின், படையையும், தன்னைச் சேர்ந்த மற்றவரையும் பாசறையில் இருக்கச் செய்து, திரௌபதியை அழைத்துக்கொண்டு அத்தினபுரி போய்ச் சேர்ந்தான், என்பதாம். தொடையல் மார்பினான், என்றது உபலட்சணமாய்த் தம்பியரையும், தர்ம பத்தினியான திரௌபதியையும் குறிக்கும். வெயில் எழுந்து, என்பது சூரியன் எழ, என்ற பொருளது (எச்சத் திரிபு).

125. இரும ருங்கினு மிளைஞர் நால்வரும்
தரும வல்லியுந் தானு மாகவே
அரும டங்கலே றனைய வாண்மையான்
குரவ னின்புறுங் கோயி னண்ணினான்.

[இரு மருங்கினும் இளைஞர் நால்வரும் தருமவல்லியும் தானும் ஆக (ஏ), அரு மடங்கல் ஏறு அனைய ஆண்மையான், குரவன் இன்புறும் கோயில் நண்ணினான்.]

**விளக்கம் :**—தருமவல்லி-திரௌபதி. மடங்கல் ஏறு அனைய அரு ஆண்மையான் - ஆண் சிங்கம் போன்ற அரிய (சிறந்த) ஆற்றல் உடையவனான தருமன். குரவன் - திருதராட்டிரன். இன்புறுங் கோயில் - இனிதே வாழ்கின்ற மாளிகை. தம்பியர் நால்வரும் உடன் வர, தர்மவல்லியோடு தருமன் திருதராட்டிரன் மனையை அடைந்தான், என்க,

126. சிந்தை யன்புறச் செல்வ வாயிலோர்
வந்த மைந்தர்தம் வரவு கூறவே

முந்தை யேவலான் மொழிய வுட்புகுந்து
அந்த மீளிசே வடிவ ணங்கினர்.

[சிந்தை அன்பு உற செல்வம் வாயிலோர் வந்த மைந்தர் தம் வரவு கூறவே, முந்தை ஏவலால் மொழிய, உள் புகுந்து, அந்த மீளி சேவடி வணங்கினார்.]

**விளக்கம்:—** செல்வ வாயிலோர் - செல்வச் சிறப்புடை வாயில் காவலர். (திருதராட்டிரனைக்காண) சிந்தை அன்பு உற - உள்ளத்து அன்போடு, வந்த மைந்தர் தம் வரவு கூற - காண வந்த தம்பியின் மைந்தர்களாகிய பாண்டவரின் வரவைத் தெரிவிக்கவும், முந்தை ஏவலால் - பெரிய தந்தையின் ஏவலால் மொழிய - (உள்ளே செல்லலாம் என்று) சொல்ல. (உடனே பாண்டவர் உள்ளே சென்று மீளியின் (அரசனின்) சேவடி வணங்கினர், என்பதாம்.

மீளி: ஆண்பாற் சிறப்புப் பெயர். திண்ணியன் என்பது, சிறந்தோன், அரசன், என்ற பொருளது. சிந்தை அன்புற, என்பதை வாயிலோரோடு சேர்த்தும் பொருள் கொள்ளலாம்; பாண்டவரிடம் உள்ளன்பு பொருந்தப்பெற்ற வாயிலோர், என்பது பொருளாகும்.

127. தம்பி மைந்தரைத் தழுவி நும்மையின்(று)
எம்பி காண நல் வினையி யன்றிலான்
உம்பி மாரொடு மொத்து வாழ்கநீர்
நம்பி யென்றுதன் னயம்வி ளம்பினான்.

[தம்பி மைந்தரை (திருதராட்டின்) தழுவி, நும்மை இன்று எம்பி காண நல்வினை இயன்றிலான்; உம்பி மாரொடும் ஒத்து வாழ்க நீர், நம்பி, என்று தன் நயம் விளம்பினான்.]

**விளக்கம்.—** தம்பியின் மைந்தர்களான பாண்டவரைத் தழுவிய திருதராட்டிரன், ராயசூயம் செய்து சகல சிறப்புக்களையும் பெற்று விளங்கும் உங்களைக் கண்டு களிக்கும் நல்வினையில்லாதவனாய், எம்பியாகிய பாண்டு இறந்து போனான். நீங்கள் உம்பிமார்களாகிய துரியோதனாதியருடன், அவர்களிடம் நம்பிக்கை கொண்டு, ஒத்த மனத்துடன் வாழ்வீர்களாக,' என்று கூறியபடி. நல்வினை இயன்றிலன் - நல்வினை அமையப் பெறாதவனாயினான், உம்பிமார் - தம்பியராகிய துரியோதனாதியர்' தருமனுக்குத் துரியோதனன் வயதில் இளையவன்: ஆனால் தருமன் ஒழிந்த பாண்டவர் நால்வரும், துரியோதன

னுக்கு இளையவர். அவ்வாறாக, உம்பிமார் என்றது, தருமனை பிரதானமாகக் கொண்டு கூறியதால், என்க.

'உம்பியரை நம்பி வாழ்க!' என்ற வாழ்த்து தன் நயம் கொண்ட வாசகம். தன் மைந்தர் சூழ்ந்துள்ள சதி நிறைவேறு தற்குத் தருமன் அவர்களை நம்புதல் அவசியமாகும்,

128. பாவை தன்செழும் பணிவு கூறலும்
மேவி வாழ்கெனா மெய்க ளிக்கவே
தேவி தன்னுழைச் செல்க வென்றுகொண்(டு)
ஏவி மைந்தரோ டிவைவி ளம்பினான்.

[பாவை தன் செழும் பணிவு கூறலும், மேவி வாழ்க, எனா மெய்களிக்கவே, தேவி தன்னுழை வெல்க என்று (கொண்டு) ஏவி, மைந்தரோடு இவை விளம்பினான்.]

**விளக்கம் :**—பாவை - திரௌபதி. செழும் பணிவு கூறலும்- தனது மிக்கதான வணக்கத்தைத் தெரிவித்தலும், மெய் களிக்க (ஏ) மேவி வாழ்க, என்று இயைக்க. சரீரம் ஆரோக்கியத்தில் களிக்கப் பொருந்தி வாழ்க, அதாவது ஆரோக்கியத்துடன் வாழ்க என்று வாழ்த்தி, அவளைத் தன் தேவியான காந்தாரியின் அந்தப்புரம் செல்லுமாறு பணித்தான், என்பதாம். அதன்பின் பாண்டவரிடம் அவன் கூறியதைப் பின்வரும் ஐந்து செய்யுள் களில் காண்க. என்று கொண்டு, என்பதிலுள்ள கொண்டு அசை.

129. கரும நீதிசேர் கல்வி மந்திரம்
பெருமை யாண்மைதாள் பீடு நீடுபேர்
தருமம் யாவுநின் றன்மை யாதலால்
அருமை யின்றியே யரசு செல்லுமே.

[கருமம், நீதி சேர் கல்வி, மந்திரம் பெருமை, ஆண்மை, தாள், பீடு நீடு பேர் தருமம் யாவும், நின் தன்மை ஆதலால், அருமை இன்றியே அரசு செல்லுமே.]

**விளக்கம்:**—கருமம் - தொழில் செய்யும் திறமை. நீதி சேர் கல்வி - அரச நீதியைப்பற்றிய நூல் கல்வி. மந்திரம் - ஆலோசனைத் திறன். தாள் - முயற்சி, பீடு நீடு பேர் - பெருமை யின் மிக்க கீர்த்தி. யாவும் நின் தன்மை - மேலே கூறிய எல்லாம் உனக்கு இயற்கையின் அமைந்த சிறப்புகள். ஆகவே, உனது ஆட்சி, சிரமம் இன்றி இன்றே நடக்கும், என்று தந்தை கூறினான், என்க.

130. இகலெ றிந்துநீ யிராய சூயமா
மகமு ழந்ததும் வண்மை செய்ததும்
திசை யடங்கலுந் திறைகொ ணர்ந்ததும்
தொகுதி கொண்டநின் றுணைவர் கூறினார்.

[இகல் எறிந்து நீ இராயசூயம் மாமகம் உழந்ததும், வண்மை செய்ததும், திசை அடங்கலும், திறை கொணர்ந்ததும், தொகுதி கொண்ட நின் துணைவர் கூறினார்.]

**விளக்கம் :**—இகல் எறிந்து நீ தம்பியரைக் கொண்டு திசை அடங்கலும் திறை கொணர்ந்ததும் இராயசூய மாமகம் உழந்ததும், வண்மை செய்ததும், என்று அனவயிக்க. மகம் உழந்தது - யாகத்தைச் சிரமம் பார்க்காமல் முறையே செய்து முடித்தது. தொகுதி கொண்ட - கூட்டங்கொண்ட. துணைவர்- தம்பியராகிய துரியோதனாதியர். இகல் என்பது இங்கே, பகைவர் என்ற பொருளது. துரியோதனாதியர் நூற்றுவர் ஆதலால், 'தொகுதிகொண்ட துணைவர்' என்றான்.

131. எண்டி சாமுகத் தெல்லை யெங்கணும்
கொண்ட தாகுமுன் குருகு லத்துளோர்
துண்டி யாமனுந் துணைவர் தம்மொடும்
பண்டு போலமண் பரவ வைகுவீர்.

[எண் திசா முகத்து எல்லை எங்கணும் கொண்டது ஆகும் முன் 'குருகுலத்து உளோர், துண்டியாமல் நும் துணைவர் தம்மொடும் பண்டுபோல, மண் பரவ வைகுவீர்.]

**விளக்கம் :**—எட்டுத் திக்குகளை உடைய பூமியின் எல்லை முழுவதும், முன்னே குருகுலத்தவர் தமதாகக்கொண்டு ஆட்சி புரிந்ததாகும். என்பது முதல் இரண்டடிகளின் பொருள். அவ்வாறே, நாட்டைத் துண்டியாமல் (இரண்டாய்ப் பிரிக்காமல்) தம்பியரோடு முன்போலவே மண்ணுலகம் போற்றும்படி ஒற்றுமையாக வாழ்வீர்களாக, என்று ஈற்றடிகளின் பொருள்.

பழமையான குருகுலத்தின் ஏகசக்ராதிபத்யம் கெடாமலிருக்க வேண்டின் நீங்களும், என் மைந்தர்களும் ஒத்து மனத்தினராய் இருத்தல் அவசியம் என்பது கூறினான் என்க. இது, ராஜ்யத்தைத் துரியோதனனிடம் விட்டுவிட்டு, அவனுக்கு அடங்கிப் பாண்டவர் வாழவேண்டும், என்று கூறும் தொனியாகும்.

132. சேணி ருந்துநுஞ் சீர்செ விப்படுத்(து)
யாண ரன்புகூ ரினிமை யன்றியே
பூண லம்பெறும் பொற்பொ டுங்களைக்
காணு மாறுசெங் கண்ப டைத்திலேன்.

[சேண் இருந்து நும் சீர் செவி படுத்து, யாணர் அன்பு கூர் இனிமை அன்றியே, பூண் நலம் பெறும் பொற்பொடு உங்களை காணுமாறு செம் கண் படைத்திலேன்,]

**விளக்கம்:** சேண் இருந்து - தூரத்தே இருந்து சீர்-உங்கள் சிறப்புக்கள். செவிப்படுத்து - செவியினால் (நான்) கேட்டு, அதாவது கேள்வி அளவில் அறிந்து. யாணர் - அழகு - புதுமை; இங்கே (கேள்வி அளவில் உங்கள் சிறப்புக்களை அறிந்த. அவ்வப்பொழுது உண்டாகும்,) அன்பு கூர் இனிமை- அன்பின் மிகுதியால் எழும் மகிழ்ச்சி. பூண் நலம் பெறும் அழகு- இயற்கை அழகொடு செயற்கை அழகையும், இயற்கை அழகு டைய உங்களைச் செயற்கை அழகோடும் கண்டு மகிழும்படி, நல்ல கண்ணை (பார்க்கும் சக்தியுடைய கண்ணை) நான் பெற வில்லை. என்று திருதாரட்டிரன் கூறியபடி. பாண்டவர்களை வசப்படுத்திச் சதிக்குக் கருத்தான மோசவார்த்தையாகும் இது, என்பதை அடுத்த செய்யுள் புலப்படுத்தும்.

133. நேய முண்டுபோ னெஞ்சொ டின்னசொல்
தூய மைந்தரைச் சொல்லி நீவிர்போய்
யாயை யும்பணிந் தெந்தை நாண்மலர்ச்
சேய பங்கயஞ் சேர்மி னென்னவே.

[நேயம் உண்டு போல் நெஞ்சொடு இன்ன சொல் தூய மைந்தரை சொல்லி, நீவிர் போய் யாயையும் பணிந்து, எந்தை நாள் மலர் சேய பங்கயம் சேர்மின், என்னவே.]

**விளக்கம்:**—நெஞ்சோடு நேயம் உண்டு கோல்-மனத்தில் உண்மையான அன்பு இருப்பது போல் பாவனை செய்து தூய மைந்தராகிய பாண்டவருக்கு இத்தகைய நட்புரை வழங்கி, "நீங்கள் போய், தாயகிய காந்தாரியைப் பணிந்து, (அதன்பின்) எனது பெரிய தந்தையான வீடுமனது செந்தாமரை போன்ற பாதங்களை வணங்குக," என்றான், என்பதாம். இது அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும். நெஞ்சொடு - நெஞ்சில் மைந்தரை - மைந்தருக்கு, (உருபு மயக்கம்).

134. இருந்த மைந்தரு மேவ லோடுசென்(று)
அருந்த திக்குநே ரன்னை தன்னையும்

பரிந்தி றைஞ்சினர் பயில வாழ்த்தினாள்
திருந்து பூணினாள் சிறுவர் தம்மையே.

[இருந்த மைந்தரும் ஏவலோடு சென்று, அருந்ததிக்கு நேரி அன்னை தன்னையும் பரிந்து இறைஞ்சினர், பயில வாழ்த்தினாள் திருந்து பூணினாள், சிறுவர் தம்மையே,]

**விளக்கம் :—**இருந்த - திருதராட்டிரன் முன்னே இருந்த. ஏவலோடு சென்று - ஏவலின்படி சென்று. பரிந்து - அன்புடன் திருந்து பூணினாளான காந்தாரியும் சிறுவர் தம்மை பயில (நன்றாக, அன்போடு) வாழ்த்தினாள். தந்தையின் ஏவலின்படி வந்து வணங்கிய பாண்டவர்களைக் காந்தாரி உள்ளன்போடு வாழ்த்தினாள்,—என்பதாம். திருந்து பூணினாள் - செய் தொழிலினால் திருந்திய (அழகிய) ஆபரணங்களை அணிந்தவள்.

135. முந்து வந்துதாண் முளரி கைதொழும்
அந்தண் வல்லியு மைவர் மைந்தரும்
வந்து நிற்றலு மகிழ்வொ டுன்னினாள்
குந்தி செய்தவங் கூரு மென்னவே.

[முந்து வந்து தாள் முளரி கைதொழும் அம் தண் வல்லியும், ஐவர் மைந்தரும் வந்து நிற்றலும், மகிழ்வோடு உன்னினாள்,— குந்தி செய்தவம் கூரும் என்னவே.]

**விளக்கம் :—**தாள்முளரி - தாளாகிய தாமரை, (அல்லது முளரித்தாள், என்று இயைத்துத் 'தாமரை போன்ற தாள் (பாதம்) என்றும் பொருள் கொள்ளலாம்). அம் தண் வல்லி - அழகிய குளர்ச்சி பொருந்திய பூங்கொடி போன்ற திரௌபதி. (ஐவரும், வல்லியும் எதிர் நிற்றலும் அவர்களது சிறப்பைக் கண்ட காந்தாரி) குந்தி செய்தவம் பெரியதாகும் என்ன, மகிழ்வோடு எண்ணினாள்; அதாவது எண்ணி மகிழ்ந்தாள்,— என்றபடி. இவ்வாறு காந்தாரி "மகிழ்வோடு எண்ணினாள்." என்றதனால், அழுக்காறு (பொறாமை) இல்லாமை பெறப்படும்.

136. வேயை வென்றதோண் மின்னை யங்குவைத்(து)
யாயை யும்பணிந் தெழில்கொ டோளினார்
போய கண்டமும் போற்று கங்கையாள்
சேயை யன்புடன் சென்றி றைஞ்சினார்.

[வேயை வென்ற தோள் மின்னை அங்கு வைத்து, யாயையும் பணிந்து எழில்கொள் தோளினார், போய் அகண்டமும் போற்று கங்கையாள் சேயை அன்புடன் சென்று இறைஞ்சினார்.]

**விளக்கம் :—** வேய் - மூங்கில். மின்னை - திரௌபதி. யாயையும் பணிந்து - காந்தாரியையும் பணிந்து விடைகொண்ட பின்னர். எழில்கொள் தோளினார் - பாண்டவர். அகண்டமும் போற்று கங்கையாள் சேய் - எல்லா உலகத்தினரும் போய் வணங்கிப் போற்றும் கங்கையின் மைந்தனான வீடுமன். அவனைப் பாண்டவர் அன்புடன் வணங்கினார்,—என்பதாம். யாய், என்பதைக் குந்தியாகவும் கொள்ளலாம்.

137. வேந்த ழைத்ததும் விதுர னேவலில்
போந்த ழைத்ததும் புகல வந்ததும்
தாந்த ழைக்கவே தந்தை தந்தைமுன்
தேந்த ழைத்தழைத் ததார்ச்செல் வர்கூறினார்.

[வேந்து அழைத்ததும், விதுரன் ஏவலின் போந்து அழைத்ததும் புகல, வந்ததும், தாம் தழைக்கவே தந்தை தந்தை முன், தேன் தழைத்த தார் செல்வர் கூறினார்.]

**விளக்கம் :—**தேன் தழைத்த (வண்டுகள் நெருங்கிய. அல்லது தேன் மிகுதியாகப் பொருந்திய), தார் செல்வர் (பாண்டவர்)... கூறினார்,—என்று அன்வயிக்க.

வேந்தனாகிய திருதராட்டிரன் அழைத்து ஓலை போக்கியதையும், அவனது ஏவலில் விதுரன் (தம் நகர்) போந்து அழைத்ததையும், (சிறிய தந்தை) புகல, (அதன் பின்னும் தந்தை சொல் மறாமை கடன் என்று கொண்டு) தாம் இங்கே வந்ததையும் தழைக்க (விபரமாக), தந்தை தந்தையாகிய (பிதாமகனாகிய) வீடுமனுக்குப் (பாண்டவர்) கூறினார்,— என்பது பொருள். தழைக்கச் சொன்னார், என்றதனால், **புகல** என்பது, "தந்தையினது அந்தரங்கக் கருத்தையும் குறிப்பின் தெரிவிக்க," என்ற பொருளதும் ஆகும்.

138. புள்ள லங்கலார் புரிவு ரைத்திடக்
கொள்ளை வன்றிறற் குருகு லேசனும்
கள்ள வஞ்சர்வெங் கருவி செய்யினும்
உள்ள துண்டெனா வுண்மை கூறினான்.

[புள் அலங்கலார் புரிவு உரைத்திட, கொள்ளை வல் திறல் குருகுல ஈசனும், கள்ளம் வஞ்சர் வெம் கருவி செய்யினும், உள்ளது உண்டு, என உண்மை கூறினான்.]

**விளக்கம் :—**புள் : வண்டு. புள் அலங்கலார் - வண்டுகள் நெருங்கி மொய்க்கும் மாலை அணிந்த பாண்டவர். பரிவு -

அன்பு. உரைத்திட - (பாட்டனிடம் வந்ததைப்பற்றி அன்போடு) சொல்ல. மிகுதியான வலிய திறமையை உடைய குருகுலத்தின் தலைவனான வீடுமன்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். வஞ்சம் - தீங்கு கொடுமை. வஞ்சர் - தீங்கு இழைப் பவர். கள்ளத்தனமாகத் தீங்கு, இழைத்தலை மேற் கொண்டோர், கொடிய கருவி (உபாயம்) செய்யினும்,—என்பது, மூன்றாவது அடியின் பொருள். உள்ளது - நல்லவர்களின் நல்வினையின் பயனாய் நிகழ்வதற்கு உள்ளது. அதாவது, நன்மை. நல்லவர்க்கு முடிவில் நன்மை உண்டு, என்று (வீடுமன்) உண்மையைக் கூறினான்,—என்பது ஈற்றடியின் பொருள்.

கருவி-ஆயுதம்; இங்கே உபாயம். பாண்டவரை அழிக்கத் துரியோதனாதியர் செய்யும் முயற்சி எல்லாம் பயனற்றுப் போய், நல்லவர்களாகிய பாண்டவர் இறுதியில் அரச சௌபாக்கியத்தை அடைதல் நிச்சயம், என்ற வீடுமனது கருத்தைக் குறிப்பிக்கும் கருத்தது செய்யுள்.

139. தாதை தாதையைத் தாம கன்றுபின்
கோதை வெஞ்சிலைக் குருவை மைந்தனைக்
கீத நான்மறைக் கிருப னைச்செழும்
பாத நஞ்செய்தார் பரிவொ டேகியே.

[தாதை தாதயை தாம் அகன்று, பின், கோதை வெம்சிலை குருவை, மைந்தனை, கீதம் நால் மறை கிருபனை செழும் பாதநம் செய்தார் பரிவொடு ஏகியே ]

**விளக்கம் :—** கோதை - மாலை; (இதைச் சிலைக்கோ' அல்லது குருவுக்கோ அடையாகக் கொள்ளலாம்.) குரு-துரோணன், மைந்தன் - அவனது மகனான அசுவத்தாமன், கீத நான்மறை கிருபன் - சுவரத்தோடு கூடிய நான்கு வேதங்களிலும் வல்லவனான கிருபன்; (இவன் துரோணனுக்கு முன், கௌரவர் களுக்கும் பாண்டவர்களுக்கும் வில்லாசிரியனாய் இருந்தவன்.) பாதநம் செய்தல் - சரீரம் மண்ணில் படும்படி விழுந்து வணங்கல். செழும் பாதநம் செய்தார் - அன்பின் சிறப்புத் தோன்றப் (பாண்டவர்) வணங்கினார்கள்.

பாண்டவர், வீடுமன் மனை அகன்றபின், அன்போடுசென்று, துரோணன், அசுவத்தாமன், கிருபன் ஆகிய அந்தணப் பெரு மக்களை, மனத்தோடு ஒத்த அன்புடன் வணங்கினார்கள் — என்பதாம், பதநம், என்ற வடசொல் பாதநம் என்று நீண்டது.

140. சதுர மாமறைத் தலைவர் தங்களால்
எதிர்மொ ழிந்தபே ராசி யெய்தியே
மதுர மன்றானாண் மாலை மன்னரும்
விதுரன் மந்திர மீள மன்னினார்.

[சதுரம் மா மறை தலைவர் தங்களால் எதிர் மொழிந்த பேர் ஆசி எய்தியே, மதுரம் மன்றல் நாள் மாலை மன்னரும், விதுரன் மந்திரம் மீள மன்னினார்.]

**விளக்கம் :—** மதுரம் மன்றல் நாள் மாலை மன்னரான பாண்டவரும்...சதுரமாமரை...மீள. விதுரன் மந்திரம் மன்னி னார், என்று அன்வயிக்க.

சதுரம் நால் மறை-நான்கு வேதங்கள். தலைவர் வேதங் களுக்குரிய முதல் வகுப்பினரான, துரோணர், கிருபன் முதலிய வர்கள். (பாண்டவர் வணக்கத்திற்கு) எதிராக மொழிந்த சிறந்த ஆசீர்வாதங்களைப் பெற்று, மதுர மன்றல் தாள் மாலை மன்னரான பாண்டவர் மீள (திரும்பவும்) விதுரன் மந்திரம் (மாளிகை) சென்றனர், மதுரம் - இனிமை, மன்றல் - வாசனை. நாள்-புதிய. துரோணர் முதலிய அந்தணர்களை வணங்கி அவர்களது ஆசி பெற்றுப் பாண்டவர்கள் மீண்டும் விதுரன் மனையை அடைந்தனர்,—என்பதாம்.

141. தமதின் மெய்யுறத் தம்ம தாகவே
அமிழ்த ருந்தியங் கவரி ருந்தபின்
திமிர நாசனன் செய்ய மேனியன்
கமல நாயகன் கடலின் மூழ்கினான்.

[தமது இல் மெய் உற த(ம்)மது ஆகவே அமிழ்து அருந்தி அங்கு அவர் இருந்தபின், திமிரம் நாசனன். செய்ய மேனியன், கமலநாயகன் கடலில் மூழ்கினான்.]

**விளக்கம் :—** பாண்டவர் விதுரன் மனையில் அமுதுண்டு இனிதே இருக்கையில் சூரியன் அஸ்தமித்தான்,— என்பதாம். தமது இல், அமிழ்து தம்மது ஆகவே, அவர் அருந்தி அங்கு இருந்தபின்...கடலின் மூழ்கினான், என்று அன்வயிக்க.

(விதுரனது இல்) தமது இல் (வீடு), (அவன் அளித்த) அமிழ்து (உணவு) தம்மது ஆகப் பாவித்து, அங்கே வயிறு ஆர உண்டு இருந்த சமயம். சூரியன் மறைந்தான், என்க. இருந்தபின் -இருந்த பொழுது. திமிர நாசனன்-இருளை நாசம் செய்பவன், அதாவது ஒழிப்பவனும், செய்ய மேனியன்-சிவந்த தோற்றத்தை

உடையவனும் கமலநாயகன்- தாமரையின் தலைவனும், ஆகிய சூரியன். மெய் உற அருந்தி-வயிறு நிறைய, அல்லது மனப் பூர்வமாக.

தாமரைக்குச் சூரியனை நாயகனாகக் கூறுதல் கவி சமயம். துரியோதனாதியரோடு வாழ்பவனாயிருந்தும், விதுரன், அறநெறி கடவாது வாழும் பாண்டவரிடம் முற்றிய அன்புடையவன் ஆதலால் அவன் இல்லத்தைப் பாண்டவர் தமது இல்லமாகப் பாவித்து அமுது அருந்தினார், என்க.

142. தினக ரன்கரந் திகழ்க மண்டலம்
பனிகொள் செக்கர்தம் படம தாகவே
இனிய வந்தனைக் கெறியும் வேலைசேர்
புனித ரொத்ததப் புன்கண் மாலையே.

[தினகரன் கரம் திகழ் கமண்டலம், பனிகொள் செக்கர் தம் படம் அது ஆகவே, இனிய வந்தனைக்கு எறியும் வேலை சேர் புனிதர் ஒத்தது அ புன்கண் மாலை (ஏ).]

**விளக்கம்:—இது** மாலைப் பொழுதின் வர்ணனை. சூரியாஸ்தமன சமயம் தோன்றும் அற்பமான கால அளவை உடைய மாலையைப் புலவர், ஒரு துறவியாக உருவகம் செய்துள்ளார். அத் துறவியின், கை விளங்கும் கமண்டலம் மறையும் தினகரன், (சூரியன்). தம் படமது - (படம் - அது) அவரது காஷாய ஆடையோ. பனிகொள் (குளிர்ச்சியுடைய) செக்கர் (செவ்வானம்). (சூரியனும், செக்கரும். கமண்டலமும், காவித்துணியும் ஆக), மாலைக்கடன் (சந்தியா வந்தனம்) செய்யும் பொருட்டு அலை எறியும் வேலையை (மேற்குக் கடலை) சேரச் செல்லும் புனிதரை (பரிசுத்தரான துறவியை) மாலை ஒத்திருந்தது. மாலையைத் துறவியாக்கி, அவரை மாலைக் கடன் முடிக்க மேலைக் கடல் செல்லச் செய்ததாகிய இந்த வர்ணனை, **உருவகத்தை** அங்கமாகக் கொண்ட **தற்குறிப் பேற்றம்** ஆகும்.

படமது, என்பதிலுள்ள **அது** பகுதிப் பொருள் விகுதி. காலையிலும் மாலையிலும் வந்தனை செய்தல் ஆத்ம சௌபாக்கியத்திற்கு உரியது என்று சாத்திரங்கள் கூறுவதால், வந்தனைக்கு, இனிய என்ற அடை கொடுக்கப்பட்டது. புன்கண் மாலை, என்பதற்கு "காமுகர்க்குத் துன்பந்தரும் மாலை," என்றும் பொருள் கொள்ளலாம்.

143. காய்ந்த மெய்செழுங் கதிர வன்கரம்
ஏய்ந்த வப்பதத் தெழிலெ றித்தலால்
ஆய்ந்து பத்திகொண் டடர்ப்ப சும்பொனால்
வேய்ந்த தொக்குமால் வேந்தன் மாடமே.

[காய்ந்த மெய் செழுங் கதிரவன் கரம் ஏய்ந்த அ பதத்து எழில் எறித்தலால், ஆய்ந்து பத்திக்கொண்டு அடர் பசும் பொனால் வேய்ந்து ஒக்கும், (ஆல்) வேந்தன் மாடமே.]

**விளக்கம் :**—காய்ந்த மேனியை உடைய கிரணங்களின் செழுமைவாய்ந்த சூரியனது கிரணமாகிய கரம் பொருந்திய அந்தச் செம்மை எய்திய நிலையிலிருந்து எழிலை வீசுதலால்,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். வேந்தன் (விதுரன்) மாடம், பத்தி பத்தியாய் பிரகாசம் மிக்க பசும்பொன் தகட்டினால், (எவ்வாறு அமைந்தால் அழகாக இருக்கும் என்று) ஆய்ந்து வேய்ந்ததை ஒக்கும், என்றபடி. பதம் - ஸ்தாநம், பதவி, நிலை: இங்கே சூரிய கிரணம் செம்மையுற நிலை. சூரியன், ஆயிரங்கிரணங்களை உடையனாதல் பற்றி **செழுங் கதிரவன்**, என்றார். ஆயிரம் - மிகப் பல. அடர் - நெருங்கிய, மிகுந்த. மாலைக் கதிரவனது செம்மை மாளிகையின்மேல் விழலால், விதுரனது மாடம், பொன் தகட்டினால் கட்டப் பட்டது போன்று இருந்தது, என்றது **தற்குறிப்பேற்றம்**. அரச குலத்தில் பிறந்தவனாதலால், விதுரன், வேந்தன் எனப்பட்டான். காய்ந்த மேனி - வெப்பமான ஒளி வீசும் மேனி.

144. மன்கு லத்துளோர் வஞ்ச கஞ்செயார்
என்கு லத்துளோ ரென்கொ லீதெனத்
தன்கு லத்துளோர் தமைவி லக்கவோ
நன்கு லத்துளோ னுதய நண்ணினான்.

[மன் குலத்து உளோர் வஞ்சகம் செயார், என் குலத்து உளோர் என்கொல் ஈது என, தன் குலத்து உளோர் தமை விலக்கவோ, நல்குலத்து உளோன் உதயம் நண்ணினான்.]

**விளக்கம் :**—இது சந்திரோதய வருணனை. மன்குலம் - மன்னர் குலம். என் குலத்தவரான துரியோதனாதியர் வஞ்சிக்கும் தொழிலை மேற்கொண்டது என்ன விபரீதம் என (என்று), என்பது இரண்டாவது அடியின் பொருள். நல்குலத்து உளோன் - நல்ல குருகுலத்து முதல்வனாய் உள்ள சந்திரன், தன் குலத்தவரான கௌரவர், பாண்டவருக்கு இழைக்க

நினைத்த வெம்மையை (தீங்கை) தனது குளிர்ந்த கிரணங்களால் தணிக்க எண்ணினவன்போல், சந்திரன் உதயமானான், என்ற இச்சந்திரோதய வர்ணனை, தற்குறிப்பேற்றம், ஆகும். தன் குலத்துளோர் கருதிய தீங்கை விலக்கத் தோன்றினான், என்று ஒரு காரணம் கற்பித்தது, ஏதுத் தற்குறிப்பேற்றத்தின் பாற்படும் மன் குலத்தார், வீரத்தால் வெல்ல நினைப்பாரேயன்றி வஞ்சனையால் வீழ்த்த நினையார் என்பது, முதலடியின் கருத்து. இது, என்னும் சுட்டு ஈது என்று நீண்டது. சிறுவர்கள் சிறுமை செய்தால், அக்குலத்துப் பெரியோர், அதை விலக்கல் முறை யாதலால், அது செய்யச் சந்திரன் உதயமானான், என்றது பாராட்டற்குரியது.

145. குருகு லாதிபன் கொடிய நெஞ்சமே
இருணி றைந்ததென் றியாம்வெ றுக்கவோ
மரபி லாதியா மதியு மெண்ணினுட்
கரிய னென்னுமா காண லானதே.

[குருகுல அதிபன் கொடிய நெஞ்சமே இருள் நிறைந்தது என்று யாம் வெறுக்கவோ! மரபில் ஆதி ஆம் மதியும், எண்ணின் உள்கரியன் என்னும் ஆ காணல் ஆனதே.]

**விளக்கம்:-** இது கவிக்கூற்று, குரு குலாதிபன்-துரியோதனன் யாம் வெறுக்கவோ - நாம் வெறுக்கலாவதோ, (வெறுத்தல் முறை அன்று என்றபடி). எண்ணின் - ஆலோசிக்குங்கால். மரபில் ஆதி ஆம் மதி - குருகுலத்தின் மூல புருஷனாகும் சந்திரன். உள்கரியன் என்னுமா(று) காணல் ஆனதே - உள்ளிடத்தில் களங்கம் உடையவன் என்று சொல்லும்படி தோற்றம் அளிப்பது ஆயிற்றே. "'மூல புருஷனாகிய சந்திரன் உள் கரியனாய் இருத்தலால் அக்குலம் வந்த துரியோதனனும் உள்ளம் இருண்டவனாயினான்.' ஆகவே, அவனை வெறுத்து என் செய்வது?" என்று கவி கூறும் கருத்தது இது. உள் கரியன் - உள்ளிடத்தில், (நடுவில்) கருமை, அதாவது களங்கம் உடையவன். உள், என்பது சிலேடை வகையால், மனம் என்றும் பொருள்படும். "உள் கரியன் குலம் வந்தவன், உன் கரியன் ஆயினான்" என்று துரியோதனன் கொடுமைக்கு சந்திரனை காரணமாக்கியது நயமுடையதே.

146. உண்ணி லாவுபே ரொளிம ழுங்கிநீள்
வெண்ணி லாவினால் வெளுத்த வெங்கணும்

கண்ணி லான்மகன் கடுமை யஞ்சியிம்
மண்ணி லார்வெளா வடிவ மெய்தினார்.

[உள் நிலாவு பேர் ஒளி மழுங்கி நீள் வெள் நிலாவினால் வெளுத்த எங்கணும், கண் இலான் மகன் கடுமை அஞ்சி, இ மண்ணில் ஆர் வெளா வடிவம் எய்தினார்.]

**விளக்கம் :—** நீள் வெள் நிலாவினால் உள் நிலாவு பேர் ஒளி மழுங்கி, எங்கணும் வெளுத்த; (அதேபோல்), கண் இலான் மகன் கடுமை அஞ்சி...எய்தினார். என்று அன்வயிக்க, நீண்ட வெண்ணிலவால், நகரத்தின் உள்ளிடத்தே பொருந்திய சிறந்த விளக்கொளிகள் மழுங்கி, நகரம் எங்கும் வெளுத்த ஆயின; அதேபோல், துரியோதனனது கொடுமைக்கு அஞ்சி, இப் பூமியில், யாவர் வெளுத்தலுறாத சரீரத்தைப் பெற்றவர்? எல்லோரும் உடல் வெளுத்தவர் ஆயினர், என்றபடி. இது, எடுத்துக் காட்டுவமையின் பாற்படும். எது உபமானம், எது உபமேயம், என்று தோன்றாதபடி கூறல் இவ்வணிக்குரிய இலக்கணம். இதைத் **திருஷ்டாந்தாலங்காரம்** என்றும் அழைப்பர்.

147. விந்தை வாழ்வுகூர் விறன்மி குந்ததோள்
முந்தை யோதைமா முரசு யர்த்தவன்
சிந்தை காமுறத் தெரிவை வந்திளம்
தந்தை கோயிலிற் றானு நண்ணினாள்.

[விந்தை வாழ்வுகூர் விறல் மிகுந்த தோள் முந்தை ஓசை மா முரசு உயர்த்தவன், சிந்தை காமுற தெரிவை வந்து, இளந்தந்தை கோயில் தானும் நண்ணினாள்.]

**விளக்கம் :—** விந்தை - வீரலட்சுமி. வீரலட்சுமி தங்கப் பெற்ற வல்லிமை மிகுந்த தோள்களை உடையவனும், அரச சின்னங்களில் முதன்மை பெற்ற கம்பீரமான ஓசையுடைய முரசைக் கொடியில் உயர்த்தியவனுமான தருமன்,— என்பது முதல் இரண்டடிகளின் பொருள். சிந்தை காமுற-மனம் விரும்ப. தருமனின் விருப்பப்படி திரௌபதி தானும் இளைய தந்தை யாகிய விதுரன் மாளிகை வந்து சேர்ந்தாள். விந்திய மலையை உறைவிடமாகக் கொண்டிருத்தல் பற்றி வீரலட்சுமி, விந்தை எனப் பட்டாள்.

148. மங்குல் சுற்றுமா மண்ட பத்திடைக்
கங்கு லிற்றடங் கண்டு யின்றபின்

வி.பா—50

பொங்கு லைப்படும் பொற்ற சும்பெனச்
செங்கு லக்கதிர்த் திகிரி தோன்றவே.

[மங்குல் சுற்றும் மா மண்டபத்திடை கங்குலில் தடம் கண் துயின்றபின், பொங்கு உலை படும் பொன் தசும்பு என செம் குலம் கதிர் திகிரி தோன்றவே,—.]

**விளக்கம்:—** மங்குல் - மேகம். கங்குல் - இரவு, தடங்கண் - விசாலமான கண். பொங்கு உலை படும் பொன் தசும்பு- மேலோங்கி எரிகின்ற உலைக்களம் பொருந்திய பொன் குடம். திகிரி-வட்ட வடிவமான சூரியன். பாண்டவரும் தர்மவல்லியும் விதுரனது பெரிய மாளிகையில் இரவைத் துயின்று கழிக்க, செம் குலம் (கூட்டமான) கதிர்த் திகிரி (சூரியன்) தோன்றலும், என்பதாம். எரியும் உலைக் களத்து வைக்கப் பெற்ற பொன் குடம். கிரணங்களை உடைய சூரியனுக்கு ஒப்பாதல் காண்க. இது தற்குறிப்பேற்றம். மங்குல் சுற்று மா மண்டபம், என்றது, உயர்வு நவிற்சி.

149. பாயன் மன் னுகண் படையு ணர்ந்துளம்
தூய வன்பொலஞ் சுடர்ப ணிந்தபின்
சாயை யன்னதன் தம்பி மாரொடும்
சீய மென்னவே திகழ வைகினான்.

[பாயல் மன்னு கண்படை உணர்ந்து உளம் தூயவன் பொலம் சுடர் பணிந்தபின், சாயை அன்ன தன் தம்பிமாரொடும் சீயம் என்ன (ஏ) திகழ வைகினான்.]

**விளக்கம்:—** கண்படை-தூக்கம். பொலம் சுடர் - அழகிய சூரியன். சாயை-நிழல். சீயம்-சிங்கம். தூய உள்ளத்தினனான தருமபுத்திரன் துயில் உணர்ந்தபின், காலைக் கடன்களை முடித்து அதன்பின், நிழல் போன்ற தம்பியருடன், ஆண் சிங்கம் போல் தோன்றும்படி இருந்தான்,—என்பதாம். பொலம் சுடர் பணிதல்-சூரிய நமஸ்காரம் செய்து மற்ற கடன்களையும் செய்தல். கண்படை-கண் படுதல். (அடையெடுத்த) ஆகு பெயராய் தூக்கத்தைக் குறித்தது.

150. முனிவர்க் கெலாமு தன்மை யாகவே
தனத னிற்பெருந் தான முய்த்திடும்
பனுவல் வித்தகப் பாவ லர்க்கெலாம்
கனமெ னத்தருங் கனக மாரிவே.

[முனிவர்க்கு எலாம் முதன்மை ஆகவே தனதனின் பெருந் தானம் உய்த்திடும், பனுவல் வித்தகப் பாவலர்க்கு எலாம் கனம் என தரும் கனக மாரியே ]

விளக்கம்;— கனக மாரி (ஏ) கனம் (மேகம்) எனத் தரும், என்று ஈற்றடியை இயைக்க. முனிவர்-வேத வித்தகர். முதன்மையாக-மிகச் சிறப்பாக. தனதன்-குபேரன். தானம் உய்த்திடும்-(தருமன்) தானம் கொடுப்பானாயினான். பனுவல்-நூல், பாவலர் செய்யுள் இயற்றுவோர். கனம்-மேகம். கனகம்-பொன். கனக மாரி-மிகுதியான பொன். செல்வ மிகுதியால் குபேரனும், கைம்மாறு கருதாமல் பொழிதல் பற்றி மேகமும், தருமனுக்கு உவமை.

151. கண்டு கண்டுதன் கழல்வ ணங்குமா
மண்ட லேசரு மாலை மன்னரும்
கொண்டு வாழ்வுறக் குரக தங்குடை
தண்டு சாமரந் தந்தி நல்குமே.

[கண்டு கண்டு தன் கழல் வணங்கும் மா மண்டல ஈசரும், மாலை மன்னரும் கொண்டு வாழ்வு உற, குரகதம், குடை, தண்டு, சாமரம், தந்தி நல்குமே.]

விளக்கம் :—வேதியருக்கும் பாவலருக்கும் பொன் வழங்கிய பின், மண்டலேசருக்கும் மாலை மன்னருக்கும் தருமன் அரச சின்னங்களாகிய, யானை, குதிரை தண்டு சாமரம் முதலியவற்றை வழங்கியதைக் கூறும் இது.

கண்டு கண்டு - அரசர்கள் ஒவ்வொருவராகக் கண்டு. கழல்-பாதம். மண்டலேசர் - (மண்டல - ஈசர்) நாற்பது கிராமங்களுக்குத் தலைவர். மாலைமன்னர் - குறுநில மன்னர். கொண்டு வாழ்வுற - பெற்று வாழும்படி. குரகதம் - குதிரை. தண்டு - கதை, அல்லது கொடிமரம். சாமரம் - சமரம் என்னும் மானின் வால் மயிரால் செய்யப்பட்ட ராஜ சின்னம். தந்தி - யானை.

152. பூந்தண் மாமலர் பூவை கொங்கைதோய்
ஏந்து தோளினா னிவணி ருந்துழிப்
பாந்த ளங்கொடிப் பார்ம கீபனைச்
சேர்ந்த மன்னர்தஞ் செயல்வி ளம்புவாம்.

[பூ தண் மா மலர் பூவை கொங்கை தோய் ஏந்து தோளினான் இவன் இருந்துழி, பாந்தள் அம் கொடி பார் மகீபனை சேர்ந்த மன்னர் தம் செயல் விளம்புவாம்.]

**விளக்கம் :—**இச் செய்யுள் கவிக் கூற்று. பூந்தண்மாமலர் பூவை - அழகிய குளிர்ச்சி பொருந்திய சிறந்த தாமரை மலரில் வசிக்கும் இலட்சுமி போன்ற திரௌபதி. ஏந்து தோளினான் - மேல் எழுந்த தோள்களை உடையவனான தருமன். பாந்தள் (பாம்பு) அம் கொடி பார் மகீபன் - துரியோதனன். விதுரன் மனையில் பாண்டவர் இருக்கத் துரியோதனனைச் சார்ந்தார் செயல், கூறுவேன் என்று புலவர் கூறியபடி. மலர்ப்பூவை, என்பதற்கு வீர லட்சுமி என்றும் பொருள் கொள்ளலாம்.

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

### துரியோதனனது சபை

153. தானு மாம னுங்கு றித்த தம்பி மாரு மங்கர் தம்
கோனு மாசி றந்தை தந்தை கொடும ரக்கை விதுரனும்
வானு லாவு புகழ்ப டைத்த மைந்த னுந்து ரோணனும்
ஏனை யோரும் வந்து கூடி யினிதி ருந்த வெல்லையே.

[தானும் மாமனும், குறித்த தம்பிமாரும், அங்கர் தம் கோனும் ஆசு இல் தந்தை, தந்தை, கொடு மரம் கை விதுரனும், வான் உலவு புகழ் படைத்த மைந்தனும், துரோணனும், ஏனையோரும் வந்து கூடி இனிது இருந்த எல்லை (ஏ) - இது குளகமாய், அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :—**தான் - துரியோதனன். மாமன் -சகுனி. குறித்த தம்பிமார் - துச்சாதனன் முதலாகக் கூறப்பட்ட தம்பியர். அங்கர்கோன் - கர்ணன். ஆசு இல் தந்தை - குற்றம் இல்லாத திருதராட்டிரன். தந்தை - அவனுக்குத் தந்தையாகிய வீடுமன் கொடுமரம் கை விதுரன் - வளைந்த வில்லைக் கையில் கொண்ட விதுரன். வான் உலாவு புகழ் படைத்த மைந்தன் - தேவலோகம் வரை பரவிய புகழைப் பெற்ற துரோண புத்திரனான அசுவத்தாமன். துரோணன் - வில்லாசிரியனான துரோணன். ஏனையோர் - கிருபன் முதலியவர்கள். இருந்த எல்லை - இருந்த பொழுது, - அடுத்த செய்யுளோடு முடியும்.

கொடுமரம் என்பது வில்லின் பெயர்களில் ஒன்று. இதையும் இதைத் தொடரும் செய்யுள்களையும், காய் - காய் - காய் - விளச் சீர்களினாலான கலி விருத்தங்களாகவும் கொள்ளலாம்.

154. மண்ட பத்தி னழகு காண மன்ன ரைவர்
தம்மைநீ
கொண்டி மைப்பின் வருக வென்று கொற்ற
வன்ப ணிக்கவே
வண்டு சுற்று மாலை மார்பன் வண்பி ராதி
காமிவான்
அண்டர் கற்ப மெனவி ருந்த வரசர் தம்மை
யணுகினான்.

[மண்டபத்தின் அழகு காண மன்னர் ஐவர் தம்மை நீ கொண்டு இமைப்பின் வருக, என்று கொற்றவன் பணிக்கவே, வண்டு சுற்று மாலை மார்பன் வள் (சிறந்த) பிரதிகாமி, வான் அண்டர் கற்பம் என இருந்த அரசர் தம்மை அணுகினான்.]

**விளக்கம் ;**—பாண்டவரை மண்டபம் காண அழைத்து வருமாறு **பிரதிகாமி** என்ற தன் சாரதியைத் துரியோதனன் ஏவினான். அவனும் விதுரன் மனையிருந்த பாண்டவரை அடைந்தான்,—என்பதாம். அண்டர் - தேவர். கற்பம் - கற்பக விருக்ஷம்; இது இங்கே தேவதருக்கள் ஐந்தையும் குறித்துநின்றது. அரசர்-தேவ தருக்கள்போல் ஈகைக் குணம் உடைய பாண்டவர்.

155. சென்றி யாக பதிக ழற்றி ருப்ப தம்ப ணிந்துநீள்
நின்று வாய்ப்பு தைத்த றங்க ணிலைபெ றுஞ்சொ
னீதியாய்
வென்றி வீரன் மண்ட பத்தின் விரிவு காண
வேண்டுநீ
என்று கூறி யேவி னானிங் கென்னை யென்றி
யம்பினான்.

[சென்று யாகபதி கழல் திரு பதம் பணிந்து, நீள் நின்று வாய் புதைத்து, அறங்கள் நிலை பெறும் சொல் நீதியாய், வென்றி வீரன், 'மண்டபத்தின் விரிவு காணவேண்டும் நீ,' என்று கூறி ஏவினான் இங்கு என்னை, என்று இயம்பினான்.]

**விளக்கம் :**—யாகபதி - ராயசூயம் செய்த தருமன். கழல் - வீரர் காலில் அணியும் அணி. நீள்நின்று - மரியாதையாக தூரத்தே நின்று, அறங்கள் நிலை பெறு சொல் நீதியாய் -

தர்மங்கள் நிலை நிற்பதற்கு ஏற்ற சொல்லையும் நீதியையும் உடைய அரசனே (தருமனே!). விரிவு காண - (மண்டபத்தின்) விசாலத்தோடு கூடிய அழகைக் காண. "புதிதாகக் கட்டிய மண்டபத்தின் பரப்பையும் அழகையும் காண உங்களை அழைத்து வரும்படி துரியோதனன், என்னை அனுப்பினான்," என்று பிரதிகாமி கூறினான், என்பதாம். பெரியோரிடம் சிறியோர் தூரத்தில் நின்றும், வாய் புதைத்துப் பேசுதல் முறை யாதலால். "நீள் நின்று, வாய் புதைத்துப் பேசினான்" என்றார்.

156. ராய சூய பன்னி தன்னை யெந்தை யில்லில்
யாயொடும்
போயி ருந்து வருக வென்று புரையி லாம
னத்தினான்
சீய மன்ன துணைவ ரோடு சென்று புக்கு
நன்றியில்
பேயி ருந்த தெனவி ருந்த பீடி லானை
யெய்தினான்.

[ராயசூய பன்னி தன்னை எந்தை இல்லில் யாயொடும் போய் இருந்து வருக, என்று (சொல்லி), புரை இலா மனத்தினான் சீயம் அன்ன துணைவரோடு சென்று புக்கு, நன்றி இல் பேய் இருந்தது என இருந்த பீடு இலானை எய்தினான்.]

**விளக்கம்** :—புரையிலா மனத்தினனான தருமன், யாக பத்நியான திரௌபதியை காந்தாரியிடம் அனுப்பிவிட்டு, அவன் தம்பியரோடு. துரியோதனனை அடைந்தான்,—என்பதாம். நன்றி இல்......பீடு இலான் - நன்றி உணர்வு சிறிதும் இல்லாத பேய் இருந்தாற்போன்று இருந்த பீடு (பெருமை) இல்லாத துரியோதனன். சகோதரருக்குத் தீமை செய்யத் துணிந்தான் ஆதலால் துரியோதனன் பேய் எனப்பட்டான்.

157. மன்னி ருந்த பேர வைக்கண் வந்து முந்தை
வரிசையால்
முன்னி ருந்த தாதை வம்ச முதல்வன் ஞானவிதுர
னென்று
இன்னி ருந்த தலைவர் தாளி றைஞ்சி முன்ன
ரிட்டதோர்
மின்னி ருந்த வாச னத்தின் மீதி ருந்து
வினவினான்.

[மன் இருந்த பேரவைக் கண் வந்து, முந்தை வரிசையால் முன் இருந்த தாதை வம்சம் முதல்வன், ஞானம் விதுரன் என்று இன் இருந்த தலைவர் தாள் இறைஞ்சி, முன்னர் இட்டது ஓர் மின் இருந்த ஆசனத்தின் மீது இருந்து வினவினான்.]

விளக்கம் :—மன் - துரியோதனன். முந்தை வரிசை - பழமையான கிரமப்படி. தாதை - திருதராட்டிரன். வம்ச முதல்வன் - வீடுமன். இன் இருந்த - இனிதே இருந்த. மின் இருந்த - மின்னல்போல் பிரகாசிக்கும். வினவினான் - (தருமன்) வியந்து பேசுவானாயினான்.

தருமன், ராஜசபை வந்து, முறைப்படி பெரியோரை வணங்கி, தனக்கு இடப் பெற்றிருந்த ஆசனத்தில் அமர்ந்து, மண்டபத்தின் அழகைக் கண்டு வியந்தவனாய்ப் பேசலானான், என்பதாம். இன் - இருந்த - இன்னவாறு இருந்த, அதாவது தாதை, வீடுமன், விதுரன், என்ற வரிசைப்படி இருந்த. வினவினான், என்பதற்கு வியந்து கூறினான், என்று பொருள் கொள்க.

158. இந்த மண்ட பஞ்ச மைத்த வினிமை தன்னை
யென்சொல்வேன்
முந்தை மண்ட பங்க ளுக்கு முதன்மை யான
தேவரூர்
அந்த மண்ட பத்து மில்லை யதனை யன்றி
மண்ணின் மேல்
எந்த மண்ட பத்து மில்லை யிதனி னுள்ள
வெழிலரோ.

[இந்த மண்டபம் சமைத்த இனிமை தன்னை என் சொல்வேன்? முந்தை மண்டபங்களுக்கு முதன்மையான தேவர் ஊர் (இடத்தே உள்ள) அந்த மண்டபத்தும் இல்லை, அதனை அன்றி மண்ணின் மேல் எந்த மண்டபத்தும் இல்லை, இதனில் உள்ள எழில் (அரோ : அசை.]

**விளக்கம் :—** இந்த சபா மண்டபத்திற்கு ஈடான ஒரு மண்டபம், பூலோகத்திலோ. தேவருகிலோ, இல்லை என்று தருமன் வியந்து பாராட்டினான், என்பதாம், தேவ லோகத்தே உள்ள சபா மண்டபத்தின் பெயர் **சுதன்மை.** முந்தை மண்டபங்கள்-சுதன்மை என்னும் மண்டபத்தைப் பார்த்துக் கட்டப் பெற்ற பழமையான மண்டபங்கள்.

159. எனவி யந்து தரும ராச னினிதி யம்ப யாளிவெம்
சினவி லங்க லென்னு மாறு சேர வந்த
விளைஞரும்
மனுவி ளங்கு முறைமை யான்வ ணங்கி மன்னர்
மன்னன்முன்
தனத னங்கி ருப்ப தன்ன தவிசின் மீது
வைகினார்.

[என வியந்து தருமராசன் இனிது இயம்ப, யாளி வெம் சினம் விலங்கல் என்னும் ஆறு (ஒரு) சேர வந்த இளைஞரும், மனுவிளங்கு முறைமையான் வணங்கி, மன்னர் மன்னன் முன், தனதன் அங்கு இருப்பது அன்ன தவிசின் மீது வைகினார்.]

**விளக்கம் :—** யாளி-சிங்கம்; சிங்கம் போன்றதும் துதிக்கை யுடையதுமான விலங்குமாம். விலங்கல் - விலங்கு, மிருகம். சினமுடைய யாளி என்று சொல்லும்படி பாண்டவர் நால்வரும் ஒன்றாக வந்து, முறைப்படி பெரியோரை வணங்கி, மன்னர் மன்னனான துரியோதனன் முன், தனதன் (குபேரன்) போல், அங்கே தமக்கு உரிய ஆசனங்களில் அமர்ந்தனர், என்க. மனு முறைமையான்-மநு தர்ம சாஸ்திரத்தில் விதித்துள்ள முறைப்படி (பெரியோரை வணங்கினர்.)

160. புரைகொள் பாவ மேநி றைந்து புண்ணி யங்கு
றைந்துநீள்
நரகி னூழி காலம் வாழ்தி நாகர் வாழ்வி
னுள்ளதும்
தரணி மீது பெறுக வென்று தந்த தொக்கும்
வானுளோர்
அரவ வேறு யர்த்த வீர னன்றி ருந்த பெருமையே.

[புரைகொள் பாவமே நிறைந்து புண்ணியம் குறைந்து நீள் நரகின் ஊழி காலம் வாழ்தி, நாகர் வாழ்வின் உள்ளதும் தரணி மீது பெறுக என்று, தந்தது ஒக்கும் வான் உளோர், அரவம் ஏறு உயர்த்த வீரன் அன்று இருந்த பெருமையே.]

**விளக்கம் :—** அரவம் ஏறு உயர்த்த வீரன் அன்று இருந்த பெருமை-சிறந்த அரவத்தைக் கொடியிலே கொண்ட வீரனான துரியோதனன், (சபையில்) அப்பொழுது இருந்த சிறப்பானது,— புரை கொள்... தரணிமீது பெறுக என்று வானுளோர் தந்ததை ஒக்கும்,—என்று அன்வயிக்க. குற்றங்களைக் கொண்ட பாவம்

நிறைந்தும், புண்ணியம் குறைந்தும் வருவதினால், (நீ) நீள் நரகில் ஊழிகாலம் வாழப் போகின்றாய்; (ஆகவே) நாகர் (தேவர்) வாழ்வில் உள்ளதான இன்பத்தை எல்லாம் இப்பூமியின் கண் (சில காலம்) பெறுக என்று. தேவர்கள் உதவிய சிறப்பை (இப்பொழுது துரியோதனன் பெற்றுள்ள சிறப்பு) ஒக்கும். என்க. புரை-குற்றம். வாழ்தி-வாழப் போகின்றாய். நாகர்-தேவர். நீள் நரகு-துன்பத்தின் மிகுதி கொண்ட நரகம்.

பாபம் நிறைந்த துரியோதனன் அனுபவிக்கப் போகின்ற நரகவாதனைக்கு இரங்கி. இவன் சிறிது காலமாவது தேவலோக இன்பத்தை இப்பூமியில் பெற்று வாழட்டும் என்று, தேவர் உதவியதைப் போன்றிருந்தது, அவன் அவையின்கண் இருந்த சிறப்பு. அணி, **தற்குறிப்பேற்றம்,**

**தருமனைச் சூதாட அழைத்தல்**

161. மாய மொன்று மெண்ண லாம னத்தின் மிக்க
மாமனும்
நீயு மின்று சூது கொண்டு நிகழ்வி லாச மயர்விரோ
ஆய வென்றி யைய னில்லி லமுத மன்ன
போனகம்
போய ருந்து மளவு மிங்கி ருந்து போது போகவே.

[மாயம் ஒன்றும் எண்ணலா மனத்தின் மிக்க மாமனும் நீயும் இன்று சூது கொண்டு நிகழ் விலாசம் அயர்விரோ! ஆய வென்றி ஐயன் இல்லில் அமுதம் அன்ன போனகம் போய் அருந்தும் அளவும் இங்கு இருந்த போது போகவே.]

**விளக்கம்:—** ஈற்றடிகளை முன்னே வைத்துப் படித்தால், செய்யுள் அன்வயமாய் விடும். மாயம் - மோசம். சூதுகொண்டு-சூதாடும் காய்களைக் கொண்டு. நிகழ் விலாசம்-நிகழ்த்துகின்ற, அல்லது ஆடுகின்ற விளையாட்டு. அயர்தல்-விளையாடல். ஆய வென்றி ஐயன்-பொருந்தியதாகிய வெற்றியை உடைய திருத ராட்டிரன், தந்தையின் மனையில் உணவு அருந்தும் வரை, என் மாமனோடு பொழுது போக்காகச் சூது ஆடற்கு மனங் கொள்வாயா? என்று துரியோதனன் தருமனைக் கேட்டான்,— என்பதாம். விலாசம்-விநோதம், விளையாட்டு.

162. மீதெ டுத்த வஞ்ச ராகி வெகுளி செய்தல்
பிறர் பெரும்
கோதெ டுத்து ரைத்த னண்பு கொண்ட யிர்த்தல்
கொடியவெம்

சூதெ டுத்து விழைத லுற்ற சூள்பி ழைத்த
லின்னவே
தீதெ டுத்த நூலின் முன்பு தீய வென்று
செப்பினார்.

[மீது எடுத்த வஞ்சர் ஆகி வெகுளி செய்தல், பிறர் பெரும் கோது எடுத்து உரைத்தல், நண்பு கொண்டு அயிர்த்தல், சூது எடுத்து விழைதல், உற்ற சூள் பிழைத்தல் இன்ன (ஏ) தீது எடுத்த நூலில் முன்பு தீய என்று செப்பினார்.]

**விளக்கம் :—**இதுவும் அடுத்த செய்யுளும், சூதிற்கு அழைத்த துரியோதனனுக்குத் தருமன் தந்த பதிலாகும். மிகுதியுற்ற வஞ்சராகி வெகுளி கொள்ளலும் பிறரது பெரிய குற்றங்களை எடுத்துப் பேசி இகழ்தலும், (ஒருவர்பால்) நட்புக்கொண்டு (பிறகு அவரை) சந்தேகித்தலும், மிகக் கொடியதான சூதை விரும்பி ஆடலும், சொன்ன சொல்லைக் கடத்தலும், ஆகிய இன்ன செயல்களைத் தீமைகளை எடுத்துக் கூறும் தர்மசாத்திரத்தில், முன்னமேயே தீயவை என்று (மேலோர்) கூறியுள்ளார்கள் - என்பது பொருள். சூள் - உறுதிமொழி. தீது - பாவங்கள்.

168. வாது கொண்டு காதல் கூரு மாம னோடு
வஞ்சனைச்
சூது கொண்டு பொருத ழிந்து தோல்வி யெய்த
வேண்டுமோ
தாது கொண்டு தேனி ரங்கு தாம மார்ப
நெஞ்சினீர்
ஏது கொண்ட தநு மக்க ளிப்ப னிம்ப
ரென்னவே.

[வாது கொண்டு காதல் கூரும் மாமனோடு வஞ்சனை சூது கொண்டு, பொருது அழிந்து தோல்வி எய்த வேண்டுமோ! தாது கொண்டு, தேன் இரங்கு தாமம் மார்ப, நெஞ்சில் நீர் ஏது கொண்டது? அது நுமக்கு அளிப்பன் இம்பர் என்ன (ஏ).]

**விளக்கம் :—**தாது கொண்டு தேன் இரங்கு தாமம் மார்ப - மலரிலுள்ள மகரந்தப் பொடிகளில் படிந்து, அப் பொடிகளைத் தன் மேல் பூசிக்கொண்டு வண்டுகள் ரீங்கரிக்கும் மாலை அணிந்த மார்பை உடைய் துரியோதனனே,—என்று அழைத்தபடி. வாது கொண்டு காதல் கூரும் மாமன் - உள்ளத்திலே (எங்கள்பால்) மாறுபாடு கொண்டும், (வெளிக்கு) அன்பு மிக்கவனாகக் காட்டிக் கொள்ளும் சகுனி. சூது கொண்டு பொருது அழிந்து தோல்வி

எய்த வேண்டுமோ - சூதாடு கருவி கொண்டு சூதாடி (நான்) நலம் இழந்து தோல்வியுற வேண்டும் என்பதோ உன் கருத்து? நெஞ்சில் நீர் கொண்டது ஏது - நீயும், சகுனி முதலியவர்களும் ஆகிய நீங்கள் நெஞ்சிலே கொண்டதுதான் யாது? இம்பர் நுமக்கு அளிப்பன் (நீங்கள் பெற விரும்பியதை சூதாடல் இன்றியே) இப்பொழுதே உங்களுக்கு அளிப்பேன்,—என்ன - என்று தருமன் சொல்ல,—அடுத்த செய்யுளோடு தொடரும்.

தருமன் சூதாட விரும்பாமையைக் கூறும் இவ்விரு செய்யுள்களும், தன்னைச் சூதாடுமாறு தூண்டியவன் துரியோதனன் ஆதல் பற்றி, அவனை, **தாமமார்ப**, என்று தருமன் அழைத்தான். சகுனி முதலியோரும் பாண்டவர் கெட வேண்டும் என்ற கருத்தினராதலால், "நீவிர் விரும்புவது யாது?" என்று பன்மையில் கேட்கப்பட்டது.

சூதாடலின் தீமையைக் கூறவந்த தருமன், அதுபோன்ற வேறு சில தீமைகளையும் எடுத்துக் கூறியது, **ஒப்புமைக் கூட்டணியின்** பாற்படும்.

164. ஒப்பி லாத வேள்வி மன்ன னுரையு ணர்ந்து
சகுனியும்
தப்பி லாத கவறு ருண்ட தாய மெங்கு மொக்குமால்
வைப்பி லாண்மை யன்றி வேறு வஞ்ச மில்லை
யுண்டெனச்
செப்பி லார்கொ லிவனை யாட வருக வென்று
செப்புவார்.

[ஒப்பு இலாத வேள்வி மன்னன் உரை உணர்ந்து சகுனியும், தப்பு இலாத கவறு உருண்ட தாயம் எங்கும் ஒக்கும், (ஆல்), வைப்பில் ஆண்மை அன்றி வேறு வஞ்சம் இல்லை, உண்டு என செப்பில் ஆர் கொல் இவனை 'ஆட வருக,' என்று செப்புவார்?]

**விளக்கம்** :—இதுவும், இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும் சகுனி கூற்றாகும். ஒப்பு இலாத வேள்வி மன்னன் - தருமன். கவறு - பாச்சிகை; சூதாடு காய், அல்லது கருவி. குற்றத்திற்கு இடமில்லாத கவறு உருண்டதனால் விழும் தாயம் (விருத்தம்) எவ்விடத்தும் (அதாவது இரு திறத்திலும்) ஒத்ததேயாகும்,— என்பது இரண்டாவது அடியின் பொருள். வைப்பில் - காய்களை வைப்பதில். ஆண்மை - திறமை. கவறு உருள்வதால் விழும் விருத்தத்திற்கு ஏற்றபடி காய்களை வைப்பதில் திறமை உண்டென்பதன்றி வஞ்சனைக்கு இடமில்லையே; (அவ்வாறாகத்

தருமன்) உண்டு என செப்பில் - சூதில் வஞ்சனைக்கு இடமுண்டு என்று கூறின்; (இவனை யார் சூதாட அழைப்பர்; ஒருவரும் அழையார், என்றபடி). இவ்வாறு சபையை நோக்கிக் கூறிய சகுனி மேலும் கூறுவான்,

165. வேணு மாகில் வேணு மன்றி விரகெ னக்க
ழன்றுதான்
நாணு மாகில் விடுதி யேந டக்க வென்று
நவிலுவீர்
பூணு மாகி லினிமை யோடு பொருது மற்றி
ருந்தநீர்
காணு மாறு நானு மின்று கற்ற வாறி யற்றலாம்.

[வேணும் ஆகில் வேணும், அன்றி விரகு என கழன்று தான் நாணும் ஆகில் 'விடுதியே நடக்க', என்று நவிலுவீர்; 'பூணும் ஆகில் இனிமையோடு பொருது (மற்று) இருந்த நீர் காணும் ஆறு நானும் இன்று கற்ற ஆறு இயற்றலாம்.]

**விளக்கம் :**—விரகு - மோசம், நாணுமாகில் - கூசிப் பின் வாங்கு மாகில். விடுதி - சில நாட்கள் தங்கும் மனை. பூணுமாகில் - சூது ஆடலை மேற்கொள்ளுமாகில். இன்று இருந்த நீர் இனிமையோடு காணுமாறு நானும் கற்றவாறு இயற்றலாம்,—என்று அன்வயிக்க, இப்பொழுது, இங்கே இருக்கும் நீங்கள் எல்லோரும் இனிய பொழுது போக்காகக் காணுமாறு தானும் (எனது) பயிற்சிக்கு ஏற்றபடி சூதாடலைச் செய்யலாம்,—என்பது பொருள்.

''தருமன் ஆட விரும்பினால், நானும் விரும்புவேன். மற்று. அவன் சூது என்று ஆட மறுப்பானாகில், விடுதிக்குச் செல்லுமாறு கூறுவீர். ஆடலை மேற்கொள்ளுவானாகில், நானும் நீங்கள் களிக்க நான் கற்ற வித்தையை, அதாவது சூதாடலை எனது திறமைக்கு ஏற்றபடி செய்வேன்,'' என்று சகுனி கூறினான். என்பதாம், வேண்டும், என்பதின் மரூஉ வேணும். நாணுதல் - கூசிப் பின்வாங்கல்.

166. நீடு கின்ற தரும நீதி நிருப கேள்வி ழைந்துநாம்
ஆடு கின்ற சூதில் வெற்றி யழிவு நம்மி
லொக்குமால்
வாடு கின்ற மிடியர் போல வஞ்ச மென்று ரைத்துநீ
ஓடு கின்ற தொட்டு கின்ற வொண்பொ ருட்கு
லோபியோ.

[நீடுகின்ற தரும நிருப கேள், விழைந்து நாம் ஆடுகின்ற சூதில் வெற்றி அழிவு நம்மில் ஒக்கும் (ஆல்), வாடுகின்ற மிடியர் போல வஞ்சம் என்று உரைத்து நீ ஓடுகின்றது, ஒட்டுகின்ற ஒள் பொருட்கு உலோபியோ,]

**விளக்கம் :—** அவையை நோக்கிக் கூறிய சகுனி, இப்பொழுது தருமனையே முன்னிலைப்படுத்திக் கூறுவானாயினன். நீதி நீடுகின்ற தரும நிருப கேள்-மிகுகின்ற நீதியை உடைய தரும ராஜனே, (நான் சொல்வதைக்) கேள்:— வெற்றி அறிவு நம்மில் ஒக்கும் - வெற்றியும் தோல்வியும் நம்மிருவரிடத்தும் ஒத்ததே ஆகும். மிடியர்-வறியவர். ஒட்டுகின்ற ஒள் பொருள்-பணயமாக வைத்தற்கு உரிய சிறந்த பொருள். உலோபியோ - லோபியா யினையோ!

"சூதில், வெற்றியும் தோல்வியும் இருவருக்கும் நேரக் கூடியதே அவ்வாறாக, உலோபியைப் போல் நீ சூதாடலை மேற்கொள்ளப் பின் வாங்குவானேன்? நீ வறியன் அல்லன்! பொருளும் உளது. பொருள் மேல் உள்ள ஆசையோ, உன்னைப் பின் வாங்கச் செய்கின்றது," என்று சகுனி தருமனைத் தூண்டு வா னாயினான். ஒட்டு-பணயம்.

167. யானெ றிந்த கவறு வெல்லி னிசைவெ னக்கி
ழத்திநீ
தானெ றிந்த கவறு வெல்லி னதினி ரட்டி
தருகுவன்
தேனெ றிந்து தேனு கர்ந்து தேனெ டுக்கு
மாலையோய்
ஆனெ றிந்த கொலைஞர் போல வஞ்சல் வருதி
யாடவே

[யான் எறிந்த கவறு வெல்லின் இசைவு எனக்கு இழத்தி, நீ தான் எறிந்த கவறு வெல்லின் அதன் இரட்டி தருவன்; தேன் எறிந்து தேன் நுகர்ந்து தேன் எடுக்கும் மாலையோய், ஆன் எறிந்த கொலைஞர் போல அஞ்சல், வருதி ஆடவே.]

**விளக்கம் :—** இசைவு - பந்தயப் பொருள். வண்டுகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு தேனை உண்டு.(அதன்பின், அடையில் சேமிக்கத்) தேன் எடுக்கும் தன்மையதான மாலை அணிந்த தருமனே.— என்று சகுனி அழைக்கும் பொருளது மூன்றாவது அடி. ஆன் எறிந்த வஞ்சர்-பசுக்கொலை புரிந்த தீயர். "எனது வெற்றி இசைவுப் பொருளைத் தான் தரும்;

மற்று வெற்றி உனதானால் நீ வைத்த பொருளினும் இருமடங்கு பொருளைத் தர நான் சம்மதிக்கின்றேன். அவ்வாறாக, நீயேன் சூது பொரத் தயங்க வேண்டும்,'' என்று மாயச்சகுனி கூறியது தருமனை இசைவிக்கும் பொருட்டதாகும்.

''வெற்றியும் தோல்வியும் நம்மில் ஒக்கும். அவ்வாறாக மிடியர் போல் நீ அஞ்சுவானேன்? உலோபியா நீ!'' என்று கூறிய சகுனி, இச் செய்யுளில் ''ஆன் எறிந்த வஞ்சர்போல்,'' என்றது' சூதில் தீமையில்லை என்பதைத் தெரிவிப்பதோடு 'சூதிற்கு உடன்படுமாறு மேலும் தருமனைத் தூண்டும்) கருத்ததாகும்.

168. என்று மாம னுற்று ரைப்ப விவைத மக்கவ்
வவையில்வே(று)
ஒன்று மாறு ரைத்தி டாது திட்டி ரன்னி ருக்கவும்
வென்று மாற டர்க்கும் வாகை விசய னும்வெ
குண்டுளம்
கன்று மாறு ரைத்த னன்சொல் கன்ன னென்னும்
மன்னனே.

[என்று மாமன் உற்று உரைப்ப, இவை தமக்கு அ அவையில் வேறு ஒன்றும் மாறு உரைத்திடாது உதிட்டிரன் இருக்கவும், வென்று மாறு அடர்க்கும் வாகை விசயனும் வெகுண்டு உவம் கன்றும் ஆறு உரைத்தனன் சொல், கன்னன் எனும் மன்னனே.]

**விளக்கம் :—** இவ்வாறு சகுனி சொல்ல, அவற்றிற்கு அந்த சபையில், மாறாக ஒன்றும் கூறாமல் உதிட்ரடின் இருக்கவும், வென்று பகையின் வலி அடங்கும் வெற்றிமாலை அணிந்த விசயன், வெகுண்டு உள்ளம் வெதும்பும்படி, கர்ணன் என்னும் மன்னன் சில கடுஞ் சொற்களைக் கூறுவானாயினான்,—என்பது பொருள்.

உதிட்டிரன்-யுதிட்டிரன், தருமன், மாறு-பகைவர் வாகை-வெற்றியின் அடையாளமாக அணியும் மலர்மாலை.

169. போது போகு மாறி ருந்து பொருதும் வருதி
யென்னவும்
சூது போரு மஞ்சி யேதொ லைந்து ளந்து
ளங்குவாய்
மோது போரி லெங்க ளுய்தி யிளைஞ ரோடு
முடுகுதேர்
மீது போயுன் னகரி தன்னின் விரைவி னெய்து
கென்னவே.

[போது போகு ஆறு இருந்து பொருதும், வருதி, என்னவும், சூது போரும் அஞ்சியே தொலைந்து உளம் துளங்குவாய், மோது போரில் எங்ஙன உய்தி? இளைஞரோடு முடுகு தேர்மீது போய் உன் நகரி தன்னின் விரைவின் எய்துக என்னவே.]

**விளக்கம் :—**பொழுதுபோக்காகச் சூதாடுவோம், என்று சகுனி அழைக்க, காய்களைக்கொண்டு ஆடும் சூது போருக்கு அஞ்சி நடுங்குகின்ற நீ, ஆயுதங்களைக்கொண்டு தாக்கிச் செய்யும் போரில் எவ்வாறு போர் செய்து பிழைப்பாய்? ஆகவே, தம்பியருடன் தேரேறி விரைவின் நகரை அடைவாயாக, என்று கர்ணன் கூறலும், என்பது பொருள். அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும். துளங்கல் - நடுங்கல். உளம் தொலைந்து துளங்குவாய் - உளம் அழிந்து நடுங்குகின்றவனே, என்று விளியாகவும் பொருள் கொள்ளலாம். "உயிர்ச் சேத மில்லாத சூது போருக்கு அஞ்சுகின்ற நீ, உயிர்ச் சேதமுடைய மோது போரை நீ எங்ஙனம் செய்யப்போகின்றாய்! கோழை நீ." என்று கர்ணன் இகழ்ந்தபடி.

170. இல்லெ டுத்து விரகி னோடு மெமை யழைத்து மாயைகூர்
வல்லெ டுத்து வருத லான்ம றுத்த னன்ம கீபனும்
சொல்லெ டுத்து வைத வாய்து ணிப்ப னென்று கன்னன்மேல்
வில்லெ டுத்த னன்பொ றாமல் வீர வாளி விசயனே.

[இல் எடுத்து விரகினோடும் எமை அழைத்து மாயைகூர் வல் எடுத்து வருதலால் மறுத்தனன் மகீபனும், சொல் எடுத்து வைத வாய் துணிப்பன் என்று கன்னன்மேல் வில் எடுத்தனன் பொறாமல் வீரம் வாளி விசயன் (ஏ).]

**விளக்கம் :—**விரகினோடு இல் எடுத்து - மோசக் கருத்துடனே மண்டபம் கட்டி. மாயை கூர் - மோசம் மிகுந்த, வல் - சூதாடு கருவி. இல் எடுத்து அழைத்து, வல் எடுத்து வந்ததால் எம் மகீபன் மறுத்தான்; இதனால் அவன் போருக்கு அஞ்சினான், என்பது எப்படிப் பொருந்தும்,—என்று விசயன் கூறினான். சொல் எடுத்து - தகாத சொற்களைக் கொண்டு. கர்ணன் சொல் எடுத்து ஏசியதைப் பொறாமல், விசயன் வில்லெடுத்தான், என்க.

### தருமன் சூதிற்கு உடன்படல்

171. ஏதி லாரி னெம்பி நீயி ருக்க வென்றி ருத்தி முன்
காதி லாரென் னுடன்முனைந்து கண்வி ழிக்க வல்லபேர்
ஓதி லாண்மை குன்று மென்று ருத்தெ ழுந்து மாயநின்
சூதி லாடல் புரிது மென்று தரும னுந்தொ டங்கினான்.

[ஏதிலாரின் எம்பி நீ இருக்க என்று இருத்தி முன், காதில் ஆர் என்னுடன் முனைந்து கண் விழிக்க வல்ல பேர்! ஓதில் ஆண்மை குன்றும், என்று உருத்து எழுந்து, மாயம் நின் சூதில் ஆடல் புரிதும், என்று தருமனும் தொடங்கினான்.]

**விளக்கம்** :—ஏதிலார் - அன்னியர், அதாவது எந்தவிதமான சம்பந்தமும் இல்லாதவர். ஏதிலார்போல் எம்பி நீ இருப்பாயாக: என்று சொல்லி, அவனைத் தன் முன்னே இருக்கச் செய்து,— என்பது முதலடியின் பொருள். காதில் - நான் போரை மேற்கொள்ளின். கண் விழிக்க வல்லார் - அச்சம் இல்லாது கண்ணை விழித்துக்கொண்டு முன் நிற்கவல்லவர்; அதாவது, யார் அஞ்சாது என் முன் நிற்க வல்லவர். ஓதில் ஆண்மை குன்றும் - நம்மை நாமே சிறப்பித்துக் கூறிக் கொள்ளின்—ஆண்மைக்குக் குறைவு உண்டாகும். என்று உருத்து எழுந்து...தொடங்கினான் என்று கூறி. கோபத்தோடு எழுந்து, உனது மாயமுடைய சூதை ஆடுவோம், என்று (சகுனிக்குச்) சொல்லி, தருமன் சூதாடலை மேற்கொண்டான். சகுனி, கர்ணன் ஆகியோர் கூறியன பொறாமல், ரோசங்கொண்டவனாய்த் தருமன் சூதாடலுக்கு உடன்பட்டான், என்க.

172. நின்னை வெல்லி னொட்டம் யாவு நீகொ டுக்க நீயிவன்
தன்னை வெல்லின் யான்வி ரைந்து தருவ னென்று தருமனைப்
பின்னை வெல்லொ ணாதெ னப்பிணிப்பு டன்ம ருட்டினன்
மின்னை வெல்லும் வெய்ய சோதி வேலி ராச ராசனே.

[நின்னை வெல்லின் ஒட்டம் யாவும் நீ கொடுக்க, நீ இவன் தன்னை வெல்லின் யான் விரைந்து தருவன், என்று (சொல்லி)

தருமனை பின்னை, வெல்ல ஒணாது என பிணிப்புடன் மருட்டினான், மின்னை வெல்லும் வெய்ய சோதி வேல் இராசராசன். (ஏ).]

**விளக்கம் :—** ஈற்றடி, துரியோதனன், என்ற பொருளது. (அவன்.) பிணிப்புடன் மருட்டினான் - அவன் தருமனுக்குச் சூதில் பிணிப்பு (பற்று) உண்டாகும்படி மதிமயக்குஞ் சொற்களை கூறினான், ஒட்டம் - பந்தயப் பொருள். பின்னை - (சகுனி வென்றால் நீயும். நீ வென்றால் நானும் பொருள் கொடுக்க வேண்டும் என்ற ஏற்பாட்டை) கூறிய பிறகு. துரியோதனன், ''தருமனை வெல்ல ஒணாது என்றது, மதிமயக்கும் வாசகம்,

173. அவிர்ப சுபொன் மீளி யாளி யாச னத்தி
லிழந்துபூந்
தவிசி லொன்றி டப்பு குந்து தருமன் வைக
மாமனும்
நவிர றுந்தி சைப்பு றத்து நன்னி லங்கு றித்துநீள்
புவிபெ றுங்க ருத்தி னோடி ருந்த னன்பொ
ருந்தவே.

[அவிர் பசும்பொன் மீளி யாளி ஆசனத்து இழிந்து, பூந்தவிசில் ஒன்றிட புகுந்து வைக, மாமனும் நவிர் அறும் திசை புறத்து நல் நிலம் குறித்து நீள் புவி பெறும் கருத்தினோடு இருந்தனன் பொருந்தவே.]

**விளக்கம் :—** அவிர் - ஒளி விளக்கமுடைய. மீளி யாளி ஆசனம் - வலிய சிங்கம் தாங்குமாறு அமைக்கப்பட்ட ஆசனம்; சிங்காதனம், இழிந்து - இறங்கி. பூந்தவிசு - அழகிய ஆசனம். ஒன்றிட புகுந்து வைக - (ஆசனத்தில்) பொருந்த அமர்ந்து இருக்கவும். நவிர் அறுதிசை புறம் - குற்றமற்ற திசையின் பக்கம். நல் நிலம் குறித்து - வெற்றி தருவதற்குரிய நல்ல இடத்தை ஆராய்ந்து தெரிந்து. நீள் புவி - தருமனது பெரிய ராஜ்யம். தருமன் சிங்காதனம் இழிந்து, ஓர் அழகிய ஆசனத்தில் அமரவும், சகுனி, தருமனது பூமியைக் கவர்ந்து கொள்ளும் எண்ணத்தோடு வெற்றி தரக்கூடிய இடத்தைச் சோதிட சாத்திரத்தைக்கொண்டு ஆராய்ந்து, அந்த நல்ல திசையில் (இடத்தில்) அமர்ந்து இருந்தான்,—என்பதாம். சூதாடற்கு அமைந்த இடத்தை சதுரமாகவும், அச்சதுரத்தில் மேஷம் முதலிய 12 ராசிகள் இருப்பதாகவும் கொண்டு, எதிரியிருக்கும் இடத்திற்கு 4, 7 9, 11 இல் தனது இடம் இருக்குமாறு அமைத்துக் கொள்ளின் வெற்றி உண்டாகும் என்று சோதிட நூல் கூறும்.

174. கவள யானை பணையில் யாளி கால்வ குத்த
பலகையின்
பவள மான நீல மான கருவி முன்ப ரப்பினார்
தவள மான கவறு கைத ரித்து மெய்த ரித்ததார்
துவள மான நிருபர் தம்மி லாட வேதொ
டங்கினார்.

[கவளம் யானை பணையில் யாளி கால் வகுத்த பலகையின் பவளம் ஆன, நீலம் ஆன கருவி முன் பரப்பினார், தவளம் ஆன கவறு கை தரித்து, மெய் தரித்த தார் (மாலை) துவள, மானம் நிருபர் தம்மில் ஆடவே தொடங்கினார்.]

**விளக்கம் :**—யானை தந்தத்தினால் செய்யப்பட்டு சிங்கத்தின் உருவத்தைக் கொண்ட கால்களையுடையதான சூதாட்டப் பலகையின் மேல் பவள நிறமாயும், நீலமணியின் நிறமாயும் இருக்கும் ஆட்டக் காய்களை முன்னே பரப்பி வைத்தனர்,— என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். வாயளவு சோற்று உருண்டை, கவளம். ஆடுவோர் இருவராதலால் இருவித நிறமுள்ள காய்கள் முன்னே வைக்கப்பட்டன. தவளமான கவறு - வெள்ளை நிறமான பாச்சிகை. கவறு எறிவதால் விழும் எண்ணைக் கொண்டு காய்களைப் பலகையில் வைக்கும் ஆட்டம் சூது; (தாயக்கட்டம் போன்ற ஆட்டம்). மானம் நிருபர் - பெருமையுடைய அரசர்களான தருமனும் சகுனியும். (இருவரும்) கவறு கையிற் கொண்டு, உடம்பில் அணிந்த மாலை துவள (ஆட) தம்மில் ஆடத் தொடங்கினார், என்க.

175. ஈரம் வைத்த சிந்தை மன்ன னிசைவெ னக்க
ழுத்தின்முத்(து)
ஆரம் வைத்து நீயு மாற ழைக்க வென்ன
மாமன்மேல்
வாரம் வைத்த நெஞ்சி னானும் வருக வென்று
மாமணிச்
சாரம் வைத்த வலய மொன்று தானு முன்னர்
வைக்கவே.

[ஈரம் வைத்த சிந்தை மன்னன் இசைவு என கழுத்தின் முத்து ஆரம் வைத்து, நீயும் மாறு அழைக்க என்ன, மாமன்மேல் வாரம் வைத்த நெஞ்சினனும் வருக என்று, மாமணி சாரம் வைத்த வலயம் ஒன்று தானும் முன்னர் வைக்கவே.]

**விளக்கம் :**—ஈரம்......மன்னர் - தருமன். இசைவு - பந்தயப் பொருள். தருமன் முத்து மாலையைப் பணயம் வைத்து, (துரியோதனனை நோக்கி) 'நீயும், இதற்கு எதிராகப் பந்தயப் பொருளை வரவழைத்து வைப்பாயாக' என்று கூற,— வாரம் - அன்பு. (மாமன் மேல் அன்பு வைத்த மனத்தையுடையவனான துரியோதனனும்,) சாரம் வைத்த மாமணி வலயம் ஒன்று (கொண்டு) வருக என்று - உயர்ந்த பெரிய இரத்தினங்களால் இழைக்கப் பெற்ற தோள் வலயம் ஒன்றை கொணர்க என்று ஏவி,—அதை அவனும் எதிர்ப் பணயமாகத் தருமன்முன் வைக்கவும், என்க. இது, அடுத்த செய்யுளோடு தொடரும்.

176. இருவ ருங்க வற்றி னாலெ றிந்த போதெ
றிந்தவாறு
ஒருவ ருங்கு றிக்க லாவு பாய மாயி ருத்தலான்
மருவ ரும்பு யத்த லங்கன் மாமன் வெல்ல
மன்னருள்
வெருவ ருங்க ளிற்றி னானு மேல்வி ருப்ப
மிஞ்சினான்.

[இருவரும் கவற்றினால் எறிந்தபோது, எறிந்து ஆறு ஒருவரும் குறிக்கலா உபாயமாய் இருத்தலான், மருவரும் புயத்து அலங்கல் மாமன் வெல்ல, மன் அருள் வெருவரும் களிற்றினானும்மேல் விருப்பம் மிஞ்சினான்.]

**விளக்கம்:**—இருவரும் கவற்றை உருட்டி ஆடியபோது,—மருவரும் அலங்கல் புயத்து மாமன் - வாசனை வீசுகின்ற மாலை அணிந்த புஜங்களை உடைய மாமனாகிய சகுனி. எறிந்த ஆறு- உருட்டிய விதம். குறிக்கலா உபாயமாய் இருத்தலான் - (ஒருவரும்) தெரிந்து கொள்ள முடியாத வழியதாய் இருந்ததனால். வெல்ல - (சகுனி தருமனை) வென்றுவிடவும். மன் அருள் வெருவருங்களிற்றினானும் - நிலை பெற்ற அருளையும், பகைவர் அஞ்சத்தக்கதான யானைப் படையையும் உடையவனான தருமனும், மேல் விருப்பம் மிஞ்சினான் - சூதாடுதலில் மேலும் விருப்பம் மிகுந்தவனானான். சூதில் தோற்றவர் வெல்லும் விருப்பில் தொடர்ந்து ஆடலும், வென்றவர் மேன்மேலும் வெல்லலாம் என்று தொடர்தலும் இயல்பு.

177. வைத்த வார மவனெ டுக்க மாய வன்கொ
டுத்தநல்
மெய்த்த வாத தேர்கு றித்து மீள வும்ப ரப்பினான்

மொய்த்த வாச மாலை மார்பின் முடிம கீபன்
மகிழ்தரப்
பொய்த்த வாடல் வல்ல மீளி பொருது வென்றி
புனையவே.

[வைத்த ஆரம் அவன் எடுக்க, மாயவன் கொடுத்த நல் வாதம் தேர் குறித்து மீளவும் பரப்பினான்; மொய்த்த வாசம் மாலை மார்பின் முடி மகீபன் மகிழ்தர, பொய்த்த ஆடல் வல்ல மீளி (சகுனி) பொருது வெற்றி புனையவே.]

**விளக்கம் :—** நல் மெய்த்த வாதம் தேர்-நல்ல உருவங் கொண்ட காற்றைப் போல் ஓடவல்ல தேர். குறித்து-பணயமாக வைத்து. பரப்பினான்-காய்களைப் பலகையில் வைத்தான். மொய்த்த...மகீபன்-துரியோதனன். பொய்த்த ஆடல் வல்ல மீளி -பொய்யுடைய சூதாட்டத்தில் வல்லமையுடைய வீரனான சகுனி. வைத்த முத்து மாலையைச் சகுனி வென்று கவர்ந்து கொள்ளவே. தருமன். கண்ணன் பரிசாக அளித்த சிறந்த தேரைப் பணயமாய் வைத்து மேலும் ஆடலானான்; பொய் யுடைய சூதில் வல்லவனான சகுனியும் துரியோதனன் மகிழும் படி சூதாடி வெற்றி அடையவே.— என்பது பொருள். அடுத்த செய்யுளோடு தொடரும்.

178. தேர்கொ டுத்த பின்னு மாறு செப்பி யுள்ள
தேர்மதக்
கார்கொ டுத்து மெண்ணி லாத கவன மாக்
கொடுத்துமப்
பார்கொ டுத்து மரசு கூர்ப தங்கொ டுத்து முரியதம்
ஊர்கொ டுத்து மதனி னுள்ள மொழிவு றாம
லோடவே.

[தேர் கொடுத்த பின்னும். மாறு செப்பி உள்ள தேர். மதம் கார் கொடுத்தும். எண் இலாத கவனம் மா கொடுத்தும், அ பார் கொடுத்தும். அரசு கூர் பதம் கொடுத்தும். உரிய தம் ஊர் கொடுத்தும். அதனின் உள்ளம் ஒழிவு உறாமல் ஓடவே.]

**விளக்கம் :—** மாறு செப்பி-வேறு வேறான பணயம் சொல்லி, (வைத்து). உள்ள தேர்-தன்னிடமுள்ள மற்ற தேர்கள் மதம் கார்-யானை. கவனம் மா-வேகமான கதி உடைய குதிரை. அ பார்-தாயபாகமாகக் கிடைத்த பூமி, அரசு கூர் பதம்-ஆளும் பதவி. உரிய தம் ஊர்-தமக்குரிய தலைநகரான

இந்திரப் பிரத்தம், அதனின் உள்ளம் ஒழிவு உறாமல் ஓட-அச் சூதாட்டத்தினின்று மனம் ஒழிதல் செய்யாமல் மேலும் தொடர. **மா**, என்பது கவனம் என்ற அடையால் குதிரையைக் குறிப்பதாயிற்று. தோல்வி மேல் தோல்வி எய்தி நாடு நகரம் முதலியவற்றை இழந்த பின்னும் தருமன், சூதாடலில் ஊக்க மிக்கவனாய்த் தொடர்ந்து ஆடலானான், என்க.

179. வெங்கி ரரத வனமெ ரித்த விசய னுக்கு
விஞ்சையன்
அங்கி ராம கிழ்ந்த ளித்த வாடன் மாவு மளகநீள்
பொங்கி ராம ணஞ்சி றந்த போக மாதர்
பலருமன்று
இங்கி ராந ரேச னுற்ற விசைவி னால ளிக்கவே.

[வெம் கிராதவனம் எரித்த விசயனுக்கு விஞ்சையன் (அங்கு) இரா மகிழ்ந்து அளித்த ஆடல் மாவும், அளகம் நீள் பொங்கு இரா மணம் சிறந்த போகம் மாதர் பலரும் அன்று (இங்கு) இரா நரேசன் உற்ற விழைவினால் அளிக்கவே.]

**விளக்கம் :—** வெம் கிராதவனம்-கொடிய வேடர் முதலியோர் வாழும் வனம். அதாவது. **காண்டவவனம்**, விஞ்சையன்-வித்யாதர உலகின் தலைவனான **சித்ரரதன்.** அங்கே-கங்கைக் கரையில், இரா-இரவுப் பொழுதில், ஆடல்மா - (அடல்) வலிய குதிரைகள், பொங்கு இரா மணம் சிறந்த நீள் அளகம் போக மாதர், என்று இயைக்க. மிகுகின்ற இருள்போல் கருமையுற்ற மனம் சிறந்த நீண்ட கூந்தலையுடைய போக மாதர்,—என்பது பொருள் (இங்கு.அசை). இரா-இருந்து கொண்டு நரேசன்-தருமன். உற்ற இசைவினால் - பொருந்திய இசைவோடு, அதாவது வருத்தம் இல்லாமல், மனப்பூர்வமாய், தோல்வியால் எழுந்த வேகத்தோடு சூதாடிய தருமன், இழந்த பொருள்களை மன இசைவுடன் சகுனிக்குக் கொடுத்தான், என்க.

திரௌபதியின் சுயம் வரத்திற்குப் பாண்டவர் அந்தண வேடத்தில் செல்கையில், கங்கைக் கரையில், விஞ்சையனுக்கும், விசயனுக்கும் இடையே போர் மூண்டதும், விசயன் வென்றதும், அவன் இவனை அர்ச்சுனன் என்று அறிந்து 500 குதிரைகளை அளித்ததும் ஆகிய வரலாறு முன்னரே கூறப்பட்டுள்ளது. மூன்றாவது அடியில் **இரா** என்பது கருமை, அல்லது இருளுக்கு இலக்கணை.

180. யாவை யுங்கொ டுத்தி ருப்ப விளைஞ ரோடு
மெய்த்தவக்
கோவை யுங்கு றிக்க வென்று குருகு லேசன்
மொழியவே
ஈவை யுங்கு றித்து வெற்றி யெய்த வெய்த
விவர்கடம்
வீவை யுங்கு றித்து வென்றி மேன்மை யான்வி
ளம்புவான்.

[யாவையும் கொடுத்து இருப்ப, இளைஞரோடும் எய்த்த அ கோவையும் குறிக்க என்று குருகுலேசன் மொழியவே, ஈவையும் குறித்து, வெற்றி எய்த எய்த இவர்கள் தம் வீவையும் குறித்து வென்றி மேன்மையான் விளம்புவான்.]

**விளக்கம்:—**(தருமன் தனக்குரிய எல்லாப் பொருள்களையும் இழந்து இருக்கையில்) குருகுலசேன்-துரியோதனன் இளைஞரோடும் - தம்பியர் நால்வருடன். எய்த அ கோவையும் - சூதில் தோற்று இளைத்துள்ள தருமனையும், குறிக்க - பந்தயப் பொருளாக வைத்து ஆடும்படி தூண்டுக, என்று மொழியவே- என்று (சகுனிக்கு) குறிப்பின் கூறவும்,—வென்றி மேன்மையான் (துரியோதனன் குறிப்பித்த) ஈவையும் குறித்து, இவர்கள் தம், வீவையும் குறித்து, வெற்றி எய்த எய்த விளம்புவான்,—என்பது பின்னடிகளின் அன்வயம். வென்றி மேன்மையான் - சகுனி. ஈவையும் குறித்து - பாண்டவர்களாகிய பணயப் பொருளையும் மனத்திற் கொண்டு. அவர்கள் தம் வீவவையும் குறித்து -(அப்படி அவர்கள் பந்தயப் பொருளாவதால் ஏற்படும்) அவர்களது அழிவையும் மனத்திற்கொண்டு. வெற்றி எய்த எய்த - மேன் மேலும் வெற்றி பெற (பாண்டவர்களை அழித்து ஒழிக்க). விளம்புவான் (தருமனை நோக்கிக்) கூறுவான்.

ஈவு - பணயமாக ஈயப்படும் பொருள். பாண்டவர்களைப் பணயப் பொருளாகக் கொண்டதனால், ஈவை என்று அஃறிணையால் அவர்கள் குறிக்கப்பட்டனர். வீவு - அழிவு, வீவையும், என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியது; பாண்டவரது செல்வத்தோடு அவர் தம் நாசத்தையும்,— என்பது பொருளாகும்.

181. உன்னை யுங்கு றித்து வன்பு ரைத்த தம்பி
மாரினம்
தன்னை யுங்கு றித்தி சைந்து தருக வந்து
பொருகெனப்

பின்னை யுங்கு றிப்பு றாது பொருது கைபி
ழைக்கமேல்
என்னை யுங்கு றிப்பெ னாமுன் விரகி னாலி
யம்பினான்.

[உன்னையும் குறித்து, வன்பு உரைத்த தம்பிமார் இனத்தையும் குறித்து இசைந்து தருக, வந்து பொருக, என, பின்னையும் குறிப்பு உறாது பொழுது கைபிழைக்க, மேல், என்னை உம் குறிப்பு? எனா முன், விரகினால் இயம்பினான்.]

**விளக்கம் :—** உன்னையும் பணயப் பொருளாக மதித்து, (பல சமயங்களில் எம்மை இகழ்ந்து) வீரம் பேசிய தம்பியர் கூட்டத்தையும் பணயப் பொருளாக மதித்து. (அவற்றை) மனமொப்பி பணயமாகத் தருக, வந்து பொருக (ஆடுக) என்று சகுனி கூற,— என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். (இவ்வாறு சகுனி கூற) எல்லாவற்றையும் இழந்த பின்பும் ஆலோசனை செய்யாது சூதாடி கை பிழைக்க (தோல்வி கொள்ள) அதன்மேல். என்னை உம் குறிப்பு (கருத்து) என்று (தர்மன்) கேளாமுன், (சகுனி) விரகினால் (மோசக் கருத்துடன்) பேசுவானாயினான்,—என்பது பின்னடிகளின் பொருள். சூதாட்டம், கைத்திறமையால் ஆடும் ஆட்டமாதலால், அத் திறமை இல்லாது தருமன் தோற்றான், என்பதைக் கை பிழைக்க என்ற தொடரால் குறித்தாராயிற்று.

182. மெய்வ ருந்தி றத்தி னும்மை வெல்லு மாறு
வேறலால்
ஐவ ருந்தி ருந்த வெங்க ளடிமை யின்ன ராயினீர்
மைவ ருந்த டங்கண் வேள்வி மாது தன்னை
யொட்டிநீ
கைவ ருங்க வற்றி னின்ன மெறிக வென்று
கழறினான்.

[மெய் வரும் திறத்தின் உம்மை வெல்லும் ஆறு வேறலால் ஐவரும் திருந்த எங்கள் அடிமையின்னர் ஆயினீர், மைவரும் தடங்கண் வேள்வி மாது ஒட்டி, நீ கைவரும் கவற்றின் இன்னம் ஏறிக, என்று கழறினான்.]

**விளக்கம் :—** உண்மையான, அதாவது வஞ்சனை ஒன்றும் இல்லாத வழியில், ஆட்ட முறைப்படி உங்களை வென்றுவிட்டதால்,—என்பது முதலடியின் பொருள். திருந்த, என்பதற்கு, 'சந்தேகத்திற்கு இடமில்லாதபடி,' என்று பொருள் கொள்ள வேண்டும். அடிமையினர் - அடிமையின்னர் (னகர மெய்

விரிந்தது). மை வரும் தடங்கண் வேள்வி மாது - திரௌபதி. ஒட்டி - பந்தயப் பொருளாய் வைத்து. கைவரும் - (ஆடிப்)பழகிய ஆயினீர் முன்னிலை முடிபு, இட வழு.

மனம் பொறாது விதுரன் கூறல்

183. அன்ன போதி லருள்வி தூர னந்த னைப்பு
கன்றெழா
நின்ன போத மன்றி வேறு நிருபர் தானி
னைப்பரோ
இன்ன போது மோந மக்கி யற்கை யன்றி
தென்னுநீ
சொன்ன போது நேய மைந்தர் சொன்ன சொன்ம
றுப்பரோ.

[அன்னபோதில் அருள் விதுரன் அந்தனை புகன்று எழா, நின் அபோதம் அன்றி வேறு நிருபர் தாம் நினைப்பரோ! இன்ன போதுமோ நமக்கு! இயற்கை அன்று இது என்று நீ சொன்ன போது நேயம் மைந்தர் சொன்ன சொல் மறுப்பரோ!]

**விளக்கம் :**—'திரௌபதியையும் பணயம் வைத்து ஆடுக, என்று சகுனி கூறியதைப் பொறாத விதுரன், தன் தமையனான திருதராட்டிரனைச் சினந்து கூறியதாகும் இதுவும், இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும். புகன்று எழா - (புகல - எழா) இடித்துரைக்க எழுந்து, (புகல, என்பதின் திரிபு) அபோதம் - அறிவின்மை. உனது அறிவின்மையால், இவ்வாறான அக்கிரமச் செயல் நடக்கின்றதே அல்லால், வேறு எந்த அரசரும் இவ்வாறு ஈனச் செயல் நிகழ்தலை நினைக்கவும் மாட்டார்களே,—என்பது இரண்டாவது அடியின் பொருள். இன்ன நமக்கு போதுமோ- இத்தன்மையதான அனியாயச் செயல் குருகுலத்தவரான நமக்கு அழகுடையதாகுமோ. அல்லது தக்கதாகுமோ. இது இயற்கை அன்று- இது நமக்கு தகுதியுடையது ஆகாது. நீ சொன்னபோது- நீ சொன்னால். உன் நேய மைந்தர், சொல்லை மறுக்கமாட்டார் கள்,—என்க. இதுவும் இதைத் தொடரும் செய்யுள்களும் குளகம், விதுரன், நீட்டல் விகாரம்.

184. திருகு நெஞ்சின் வஞ்ச ராகி யினைஞர் தீமை
செய்தகால்
உருகு கின்ற தாதை நீயு டன்ப டுத்தி ருப்பதோ
மிருக மன்னு பறவை யன்றி ரக்க மின்றி மேவுநின்
அருகு வந்த ணைந்த தெங்க ளறிவி லாமை
யாகுமே.

[திருகும் நெஞ்சின் வஞ்சர் ஆகி இளைஞர் தீமை செய்த கால், உருகுகின்ற தாதை நீ உடன்படுத்து இருப்பதோ; மிருகம் அன்று, பறவை அன்று; இரக்கம் இன்றி மேவும், நின் அருகு வந்து அணைந்தது எங்கள் அறிவு இலாமை ஆகுமே.]

**விளக்கம் :—** திருகும் நெஞ்சு - மாறுபாடு கொண்ட மனம். இளைஞர் - துரியோதனாதியர். தீமை செய்த கால் - (பாண்டவருக்குத்) தீமை செய்கையில். உருகுகின்ற தாதை - பாண்டவர் அன்பினால் உருகுகின்றவன்போல் பாவிக்கும் பெரிய தந்தையாகிய நீ. உடன் படுத்து இருப்பதோ - (உன் மைந்தர் இழைக்கும் தீமைக்கு) உடன்பாடு உடையவனாய் நீ இருப்பது தக்கதாகுமோ. மிருகம் அன்று பறவை அன்று - (நீ இரக்கம் அறியாத) மிருகமும் இல்லை, பறவையும் இல்லை. இரக்கம் இன்றி மேவும் - இரக்கம் இல்லாது இருக்கின்ற. நின் அருகு - உனது அருகில். வந்து அணைந்தது எங்கள் அறிவில்லாமை ஆகும் - வந்து (உன்னோடு) சேர்ந்திருப்பது, எங்களது அறிவில்லாமையின் பயனாகும்.

இரு திறந்து மைந்தர்களிடம் பட்சபாதம் இல்லாதவனாய் இருக்க வேண்டிய நீ இந்த அக்கிரமம் நடப்பதில் உடன்பாடுடையவனாய் இருக்கின்றாய்; உன் நிலை அவ்வாறாக, உன்னை நாங்கள் சேர்ந்திருப்பது எங்களது அறிவின்மையின் பாற்படும்; எனவே, உன்னைப் பழித்துப் பயனில்லை,—என்று விதுரன் மனம் வருந்திக் கூறினான் என்க. எங்கள், என்றது, வீடுமன், துரோணன் முதலியோரை உளப்படுத்திய தாகும். செய்த கால்-பெயரெச்சத் தொடர், வலி மிகவில்லை.

185. பின்பி றந்த தம்பி மைந்தர் பீட ழந்தி ரங்கவே
முன்பி றந்த தமையன் மைந்தர் மொய்ம்பி னால
டர்ப்பரோ
அன்பி றந்த தேனு நீதி யழிய நீநதி டத்தினால்
என்பி றந்து முடியு மண்ணிலெண்ணில் கால
மின்னுமே.

[பின் பிறந்த தம்பி மைந்தர்பீடு அழிந்து இரங்கவே, முன் பிறந்த தமையன் மைந்தர் மொய்ம்பினால் அடர்ப்பரோ; அன்பு இறந்த தேனும் நீதி அழிய நீ நடத்தினால், என் பிறந்து முடியும் மண்ணில் எண் இல் காலம் இன்னுமே?]

**விளக்கம்:—** மொய்ம்பு - வஞ்சனையின் வலிவை. அடர்த்தல் - துன்புறச் செய்தல். தம்பியின் மக்கள்பால் அன்பு ஒழிந்த

தேனும், நீதி தவறும்படியான செயல் நிகழும்படி நீ அனுமதித்தால், இன்னும் எண்ணிக்கை கடந்த கலங்களில் (உன் போன்றவர்களால் என்ன மண்ணில் பெருந்தீங்குகள் விளையுமோ,— என்பது பின்னடிகளின் பொருள்.

பாண்டவர்களை அழிக்க நினைத்து உன் மைந்தர்கள் புரியும் தீங்கை விலக்க வேண்டும், என்று முன் செய்யுளால் வற்புறுத்திய விதுரன், இப்பொழுது அவர்களிடம் அன்பு இலதாயினும் நீதியை யாவது நோக்கி, இச் சூதை விலக்க வேண்டும், என்று திருதராட்டிரனுக்குக் கூறியபடி. "நீ நியாயம் கெட நடந்து கொள்வாயேல், உலகுள்ள அளவும் தீராத பழியே பூண்பாய்," என்ற கருத்தது ஈற்றடி.

186. மருூம மிஞ்ச விவனை வென்ற வஞ்ச மன்றி
மற்றிவன்
தரும வஞ்சி தனையி யைந்து பொருது மென்கை
தருமமோ
கரும மன்று னக்கு நாச காலம் வந்த தாகலின்
பெரும தஞ்ச மின்றி நெஞ்சு பேரு மென்று
பேசினன்.

[மருமம் மிஞ்ச இவனை வென்ற வஞ்சம் அன்றி, மற்று இவன் தரும வஞ்சி தனை இயைந்து பொருதும் என்கை தருமமோ? கருமம் அன்று உனக்கு நாசகாலம் வந்தது ஆகலின், பெரும, தஞ்சம் இன்றி நெஞ்சு பேரும், என்று பேசினன்.]

**விளக்கம்:—** மருமம் - நெஞ்சு, தந்திரம். இரகசியம். மருமம் மிஞ்ச - நெஞ்சின் பகை மிக. வென்ற வஞ்சகம் இன்றி - (தருமனை) வென்ற மோசத்தோடு நில்லாமல். இயைந்து - (பந்தயப் பொருளாக திரௌபதியை வைக்க.) உடன்பட்டு. கருமம் அன்று. (அவ்வாறு சூதாடல்) செய்யத்தக்க காரியம் அன்று. பெரும - (விளி) திருதராட்டிரன். தஞ்சம் இன்றி - பெருமைக்குரிய பண்பு இல்லாமல். நெஞ்சு பேரும் - உன் மனம்நன்னிலை பெயர்வதாகின்றது, அல்லது மாறுபடுவதாகின்றது. திருதராட்டிரனின் சம்மதத்தோடே இச் சூது. நிகழ்கின்றதாதலால், விதுரன், இவ்வாறு கடியலானான்.

187. விதுர னொந்து நீதி கூற விழியி லாமை யன்றியே
வெதிர னுங்கொ லென் னுமாறு விழியி லானும்
வைகினான்

சதிர்பு ரிந்த சகுனி சொல்லை யெதிர்பு ரிந்து
தருமனும்
அதிர வஞ்ச முதிர வந்த வருளி லானொ
டாடினான்.

[விதுரன் (மனம்) நொந்து நீதி கூற விழி இலாமை அன்றியே வெதிரனும் கொல் என்னும் ஆறு விழி இலானும் வைகவே, சதிர் புரிந்த சகுனி சொல்லை எதிர் புரிந்து தருமனும், அதிர வஞ்சம் முதிர வந்த அருள் இலானொடு ஆடினான்.

**விளக்கம் :—**வெதிரன் - செவிடன். விதுரன் மனம் நொந்து நீதி மொழிகளைக் கூறவும், விழி இலாமையே அல்லாமல் செவிடன் கூடவோ இவன் என்று (அவையோர்) சொல்லும்படி பிறவிக் குருடனாகிய திருதராட்டிரன் வாய் பேசாது வீற்றிருந்தான்,—என்பது முன்னடிகளின் பொருள். சதிர் - சாமர்த்தியம். சதிர் புரிந்த-சாமர்த்தியமாக ஆடிய; (அல்லது சாமர்த்தியமாகப் பேசிய, என்றும் கொள்ளலாம்). எதிர் புரிந்து - உடன் பட்டு. அதிர வஞ்சம் முதிர - கண்டவரை அதிர்ச்சி அடையச் செய்யும் வஞ்சனை முதிர்ந்து செழிக்க. வந்த அருளிலான்-வந்து தோன்றியுள்ள இரக்கம் அற்ற சகுனி. பெரிய தாதை வாய் திறவாமல் இருக்கவே, தருமனும் சூதாடலுக்கு உடன்பட்டு ஆடினான்,— என்க.

### தருமன் தோற்றல்

188. காய முற்றும் வஞ்ச மேக லந்த தன்ன
கள்வன்மேல்
நேய முற்று நின்று தானு நிகர்பி டித்த
தென்னவே
மாய முற்ற கவறு மந்த மாமன் வல்ல பத்திலே
தாய முற்றி டங்கொ டாது தருமனை தரும
னைச்ச தித்ததே.

[காயம் முற்றும் வஞ்சமே கலந்தது அன்ன கள்வன்மேல் நேயம் உற்று நின்று தானும் நிகர் பிடித்தது என்ன (ஏ), மாயம் உற்ற கவறும் அந்த மாமன் வல்லபத்திலே தாயம் உற்று இடம் கொடாது தருமனை சதித்ததே].

**விளக்கம் :—**மாயம் உற்ற கவறும், தானும் நிகர் பிடித்தது என்ன, காயம் முற்றும் வஞ்சமே கலந்தது அன்ன கள்வன்மேல்

நேயம் உற்று நின்று, அந்த மாமன் வல்லபத்திலே, தாயம் உற்று இடம் கொடாது தருமனை சதித்தது,—என்பது அன்வயம்.

மாயம் பொருந்திய கவறும், தானும் தனக்கு மாயத்தில் நிகராவான் ஒருவனைத் துணை பிடித்தது என்று சொல்லும்படி, தேகம் முழுதும் வஞ்சனை என்பதைக் கொண்டு கலந்து செய்யப் பட்டது போன்ற கள்வனாகிய சகுனியின்பால் நட்பு நிறைந்து நின்று, அந்த மாமனாகிய சகுனியின் திறமையிலே தாயம் உற்று, (அதாவது வெற்றிக்கு ஏற்ற எண் விழுமாறு உருண்டு) (தருமன் வெற்றி அடைவதற்கு) இடங்கொடாது, தருமனை வஞ்சித்துவிட்டது, (ஏ),—என்பது பொருள். சகுனியின் விருப்பப் படியே, திரௌபதியைப் பணயம் வைத்துச் சூதாடித் தருமன் தோல்வியுற்றான்,—என்பதாம். தானும், அசை.

189. இன்ன தாயம் வேண்டு மென்றெ றிந்த போது
மற்றவன்
சொன்ன தாய மேபு ரண்டு சோர்வி லாமல்
வருதலின்
தன்ன தாய வரசு வாழ்வு தரணி மன்ன
னல்கினான்
அன்ன தாய போது நெஞ்ச சைந்தி லான சஞ்சலன்

[இன்னதாயம் வேண்டும் என்று எறிந்தபோது மற்றவன் சொன்ன தாயமே புரண்டு சோர்வு இலாமல் வருதலின், தன்னது ஆய அரசு வாழ்வு தரணி மன்னன் நல்கினான்; அன்னது ஆய போது நெஞ்சு அசைந்திலான் அசஞ்சலன்.]

**விளக்கம் :**—மற்றவன் - பாண்டவர்க்கு எதிரியான சகுனி. தாயம் - வெற்றிக்குரிய எண். சொன்ன தாயம் - விரும்பிக் கூறிய எண். தரணி மன்னன் - தருமன். சகுனி சொன்ன தாயம் தவறாமல் விழவே, தருமன், தனது அரசு, வாழ்வு ஆகிய வற்றை யெல்லாம் சகுனிக்குக் கொடுத்து விட்டான்,—என்பது முதல் மூன்றடிகளின் கருத்து. அன்னது ஆயபோதும் - அந்த எளிய நிலைமை தனக்கு நேர்ந்தபோதும், அசஞ்சலன் - அசைவு இலாத, அதாவது உறுதியுடைய மனத்தினனான தருமன், அசைந்திலான் - மனம் தளராதவனாய் இருந்தான், - என்பது ஈற்றடியின் பொருள். இன்பதுன்பங்களால் பாதிக்கப்படாத செம்மையன். தருமன், என்பது கருத்து.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

190. முரசினை யுயர்த்த கோமான் மொழிந்தன முற்றுந் தோற்றுப்
பரவுவ தொன்று மில்லாப் பான்மையோ டிருந்த காலை
விரைசெறி யலங்கல் சோர மெய்குலைந் துள்ளம் வெம்பி
அரசவை யிருந்தோர் தம்மில லருளினா லழிந்து நொந்தார்.

[முரசினை உயர்த்த கோமான் மொழிந்தன முற்றும் தோற்று பரவுவது ஒன்றும் இல்லா பான்மையோடு இருந்த காலை, விரைசெறி அலங்கல் சோர, மெய் குலைந்து உள்ளம் வெம்பி, அரசு அவை இருந்தோர், தம்மில் அருளினால் அழிந்து நொந்தார்.]

**விளக்கம் :**—முரசினை உயர்த்த கோமான் - தருமன். மொழிந்தன - பந்தயப் பொருளாகச் சொல்லிவைத்த. பரவுதல்- கூறல். பரவுவது ஒன்றும் இல்லா - பந்தயமாகச் சொல்வதற்கு ஒன்றுமில்லாத. விரை - வாசனை. தருமன் தனக்குரிய எல்லா வற்றையும் தோற்றுப் பந்தயம் கூறுவதற்கு ஒன்றும் இல்லாத தன்மையனாய் இருந்தபோது, அவையிருந்தவர், மாலைகள் சோர்ந்து விழும்படி நிலைகுலைந்த மெய்யினராய், மனத்தவிப் புடன், மிகவும் வருந்தினார்கள், - என்பதாம். அருளினால் - தருமனிடம் கொண்ட இரக்கத்தினால்.

191. குருமர புடைய வேந்தன் கொடியனோ கொடிய னென்பார்
மருமக னுயிருக் கிந்த மாமனோ மறலி யென்பார்
தருமனித் தனைநாட் செய்த தருமமும் பொய்யோ வென்பார்
உருமினுங் கொடிய வீம னுருத்தினி யெழுமோ வென்பார்.

[குருமரபு உடைய வேந்தன் கொடியனோ கொடியன் என்பார் மருமகன் உயிருக்கு இந்த மாமனோ மறலி என்பார், தருமன் இத்தனை நாள் செய்த தருமமும் பொய்யோ என்பார், உருமினும் கொடிய வீமன் உருத்து இனி எழுமோ என்பார்.]

**விளக்கம்:** —குருமரபு உடைய வேந்தன் - சிறந்த குரு குலத்தில் பிறந்த வேந்தனாகிய துரியோதனன். மறலி - எமன்,

தருமன் இத்தனைகாலம் செய்த தருமம் எல்லாம் பொய்த்து விட்டதோ,—என்பது மூன்றாவது அடியின் பொருள், அதாவது, தர்மம் நற்பயனை விளைவிக்காமல் பொய்த்தலும் அமையுமோ, என்று அவையினர் வியந்தபடி.

192. பாந்தளே றுயர்த்த வேந்தன் பார்த்தில னுறவு மென்பார்
மாய்ந்தவே யறமுந் தேசு மனுநெறி வழக்கு மென்பார்
பூந்தழற் பிறந்த பாவை புண்ணியம் பொய்யா தென்பார்
சேந்தன னிருகண் பாரீர் தேவர்கோன் மதலை யென்பார்.

[பாந்தள் ஏறு உயர்த்த வேந்தன் பார்த்திலன் உறவும் என்பார், மாய்ந்தவே அறமும் தேசும் மனு நெறி வழக்கும் என்பார், பூந்தழல் பிறந்த பாவை புண்ணியம் பொய்யாது என்பார், சேந்தன இரு கண் பாரீர் தேவர் கோன் மதலை என்பார்.]

**விளக்கம்:**—பாந்தள் ஏறு - சிறந்த பாம்பு. அதைக் கொடியிலே தூக்கியவன் துரியோதனன். தேசு - பிரகாசம், கீர்த்தி, பிறரால் மதிக்கப்படுவதற்குரிய பண்பு. மனுநெறி வழக்கு - மனுநெறி கடவாத ஒழுக்கம். பூந்தழல் பிறந்த பாவை - திரௌபதி. தேவர்கோன் மதலையாகிய அர்ச்சுனன் கண் சிவக்கப் பெற்றான்,—என்பது ஈற்றடியின் பொருள்.

மாயச்சூதினால் பாண்டவர்க்குரிய பொருள்களை எல்லாம் கவர்ந்து கொண்டதோடு, அவர்களையும் மனைவியோடு அடிமை கொண்டான். ஆதலால், அவையிருந்தோர், "பாந்தளேறு உயர்த்த வேந்தன் பார்த்திலன் உறவும்," என்றார். "அறமும் தேசும் மனுநெறி வழக்கும் தருமனுக்குப் பயன் தராமற் போனமையின் அவன் வரையில் அவை மாய்ந்தன வாயின," என்பது இரண்டாவது அடியின் பொருள். அறம் முதலியன, பாண்டவர்க்குத் தீங்கையே கூட்டி வைத்தமையின், இனி உலகில், அவை நிலைபெறா என்ற கருத்தாகவுங் கொள்ளலாம். அல்லது, துரியோதனனிடத்தில் அறம் முதலியன இல்லாமற் போயினமையின் "அவனது ஆட்சியால் மக்கள் துன்புறுவர்'—என்றுங் கருத்துக் கொள்ளலாம்.

193. பழியுடைத் தந்தை யொன்றும் பகர்கலா திருக்கு
மென்பார்
விழியுடை யவரை யன்றோ மேன்மையோர் வெறுப்ப
தென்றார்
அழியுமே யிவனான் மைந்த ரரும்பெருஞ் செல்வ
மென்பார்
வழிவழி யாக நிற்கும் வசையிவன் புரிந்த தென்பார்.

[பழி உடை தந்தை ஒன்றும் பகர்கலாது இருக்கும் என்பார், விழி உடை அவரை அன்றோ மேன்மையோர் வெறுப்பது என்பார், அழியுமே இவனால் மைந்தர் அரும் பெரும் செல்வம் என்பார், வழி வழி ஆக நிற்கும் வசை இவன் புரிந்தது என்பார்.]

**விளக்கம் :**—மக்களது முறைகேடான செயலைத் தடுக்காமைபற்றி, அவையிருந்தோர். திருதராட்டினை பழிப்பாராயினர். பழியுடைத் தந்தை, தன் மகனால் பாண்டவர் வஞ்சிக்கப் பெற்றதை அறிந்தும் வாய்பேசாது இருக்கின்றானே, என்று சிலர் வியந்து கூறினர் அது கேட்ட வேறு சிலர், விழியுடையவரை அல்லவோ மேன்மக்கள் வெறுத்துக் கூறுவர்; இவன்தான் ஊனக் கண்ணோடு ஞானக் கண்ணும் இல்லாதவனாயிற்றே, என்று கூறினர். இவனது செயலால் மக்களது அரும்பெருஞ் செல்வம் எல்லாம் நிச்சயம் அழியும், என்றார் ஒரு சாரார். "இவன் புரிந்ததாகிய பழி தலைமுறை தலைமுறையாக அழியாது நிலை நிற்பதாகும்." என்று மனம் வருந்திக் கூறினர் சிலர்.

### துரியோதனன் கூறல்

194. இன்னன தரணி வேந்த ரிருந்துழி யிருந்து கூற
மன்னனுந் தம்பி தானு மாமனு மாறா வண்மைக்
கன்னனுந் தம்மி னெண்ணிக் கங்கைமா மகனை
நோக்கி
பன்னக துவசன் கேட்டோர் பலருமெய் பனிக்கச்
சொல்வான்.

[இன்னன தரணி வேந்தர் இருந்துழி இருந்து கூற, மன்னனும் தம்பி தானும் மாமனும் மாறா வண்மை கன்னனும் தம்மின் எண்ணி. கங்கை மா மகனை நோக்கி, பன்னக துவசன் கேட்டோர் பலரும் மெய் பனிக்க சொல்வான்.]

விளக்கம் :—தரணி வேந்தர் இவை போன்ற வார்த்தைகளை இருந்த இடங்களில் இருந்து கொண்டே தம்முள் சொல்லிக் கொண்டார்களே அன்றிப் பகிரங்கமாய்த் துரியோதனனுக்கு ஒன்றும் சொல்ல மாட்டாதவர்களாய் இருந்தனர்,— என்பது முதலடியின் கருத்து. மன்னன் - துரியோதனன். தம்பி - துச்சாதனன். மாமன்-சகுனி. மாறா வண்மை கன்னன்-மாறாத அல்லது நிலைத்த ஈகைக் குணத்தையுடைய கர்ணன். இந் நால்வரையும் துஷ்ட சதுஷ்டர்கள், என்பர். இந் நால்வரும் தம்முள் ஆலோசனை செய்து, பிறகு பன்னக துவசனான துரியோதனன், கேட்டோர் தடுங்கும்படி கங்கை மகனான வீடுமனை நோக்கிக் கூறுவானாயினான்,—என்பதாம். பனிக்க - நடுங்கும் படி. பன்னகம் - (பந்நகம் - பத்நகம்) பாம்பு.

195. தண்ணிய தருமன் செய்த பாவமோ சகுனி செய்த
புண்ணிய நெறியோ வந்தப் பொதுமகள் யாக
சாலை
நண்ணிய தவறோ மற்றை நால்வருந் தகைமைகூற
எண்ணிய மதியோ வெண்ணி னிங்ஙனம் விளைந்த
தென்றான்.

[தண்ணிய தருமன் செய்த பாவமோ, சகுனி செய்த புண்ணிய நெறியோ, அந்த பொதுமகள் யாகசாலை நண்ணிய தவறோ, மற்றை நால்வரும் தகைமை கூற எண்ணிய மதியோ, எண்ணின், இங்ஙனம் விளைந்தது என்றான்.]

விளக்கம்:—(எண்ணுமிடத்து) தருமன் முன் பிறவியில் செய்த தீவினையோ, அல்லது சகுனி செய்த புண்ணியத்தின் வழியதான பயனோ! அல்லது, ஐவர்க்கும் பொதுவான திரௌபதி யாகபத்தினியாய் யாகசாலை அடைந்த குற்றந் தானோ! மற்றைத் தம்பியர்களான வீமன் முதலிய நால்வரும் தம் பெருமை தோன்றத் தம்மை மதித்துக் கொண்ட மதியின் பயனோ! இவ்வாறு விளைந்துவிட்டது; (அதாவது, அவர்கள் இவ்வாறு தோற்கும்படி நேர்ந்துவிட்டது.) என்று துரியோதனன் கூறினான், என்பதாம். தண்ணிய தருமன் - எளிமையுற்ற தருமன். எண்ணின் - ஆலோசிக்குங்கால். பாஞ்சாலி ஐவருக்கும் மனைவியாதல் பற்றி, வேசி என்ற பொருளுடைய பொதுமகள் என்ற சொல்லால் ஈனனான துரியோதனன், அவளைக் குறித்தான்.

196. தகாமொழி தலைவன் கூறத் தவத்தினா லுயர்ந்த
கோவும்
நகாமர பியற்கை யன்று நம்மினாம் புன்மை கூறல்
மிகாதினி நிகழ்ந்த செற்றம் விடுகெனச் செவியிற்
சற்றும்
புகாதுளம் வெகுளி கூரப் புரிந்தனன் போதமில்லான்

[தகாமொழி தலைவன் கூற, தவத்தினால் உயர்ந்த கோவும், நகா மரபு இயற்கை அன்று, நம்மில் நாம் புன்மை கூறல்; மிகாது இனி நிகழ்ந்த செற்றம் விடுக என, செவியில் சற்றும் புகாது உளம் வெகுளி கூர புரிந்தனன் போதம் இல்லான்.]

**விளக்கம்—:** தலைவன் - துரியோதனன். தவத்தினால் உயர்ந்த கோ - வீடுமன். நகா மரபு - நகைத்தற்கு இடமில்லாத சிறந்த குருகுல முறைமை. நம்மில் நாம் புன்மை கூறல் - நமக்குள்ளே நாம் ஒருவரை ஒருவர் இழிவாகப் பேசல். இயற்கை அன்று - (நமது மரபோடு) பொருந்துவதன்று. (எனவே) நிகழ்ந்த செற்றம் இனி மிகாது விடுக - இப்பொழுது ஏற்பட்ட பகை உணர்ச்சியை இனியும் மிகுந்து வளராது விட்டுவிடுக. (இவ்வாறு வீடுமன் நல்லுரை கூறவும்) செவியில் சற்றும் புகாது - அவ்வார்த்தைகள் செவியில் நுழையாமல், உளம் வெகுளிகூர - உள்ளத்தில் கோபம் மிக, போதம் இல்லான் - அறிவில்லாதவனான துரியோதனன், புரிந்தனன் - சிறுமைச் செயல்களைச் செய்பவனானான்.

மண்ணிலும் பொன்னிலும் ஆசையற்றவனாயும், நித்ய பிரும்மசாரியாயும், எவ்விதப் பற்றும் இல்லாதவனாய் வாழ்ந்தானாதலால், வீடுமனைத் 'தவத்தினால் உயர்ந்த கோ', என்றார். வீடுமன் முதலிய பெரியோர் சொல்லுக்குச் செவி கொடாமையின், துரியோதனன், போதமிலான், என்றும், தகாமொழித் தலைவன் என்றும் அழைக்கப்பட்டான்,

197. இரங்கிநின் றுருகு நெஞ்சி னிளையதன் பி தாவை
நோக்கி
அரங்கடி சமர வேலா னழல்பொழி யுறுமிற்
சொல்வான்
உரங்குடி யிருந்த தோளா னுரிமையி னெமக்குத்
தோற்ற
துரங்கமுங் களிறுந் தேருந் துறைதுறை கவரச்
சொற்றி.

[இரங்கி நின்று உருகும் நெஞ்சின் இளைய தன் பிதாவை நோக்கி, அரம் கடி சமரம் வேலான் அழல்பொழி உருமின் சொல்வான்,: உரம்குடி இருந்த தோளான் உரிமையின் எமக்கு தோற்ற துரங்கமும் களிறும் தேரும் துறை துறை கவர சொற்றி.]

விளக்கம்:—பாண்டவர்பால் இரக்கங்கொண்டு உருகும் நெஞ்சினனான தனது சிறிய தகப்பனாகிய விதுரனை நோக்கி,— என்பது முதலடியின் பொருள். அரம் கடி சமரம் வேலான் - அரத்தினால் அராவப்பெற்ற, போருக்கு உரிய வேலாயுதத்தை உடைய துரியோதனன். அழல் பொழி உரும் - நெருப்பைக் கக்கும் இடி. அவன் இடிபோல் கொடிய வார்த்தைகளை விதுரனுக்குச் சொல்வானாயினான். உரம் குடிஇருந்ததோளான்- வலிமை குடிகொண்ட தோள்களை உடைய தருமன். உரிமையின் எமக்குத் தோற்ற - முறைகெடாத வழியில் எமக்கு தோற்ற, அல்லது எமக்கு உரிமையாகும்படி தோற்ற. துரங்கம் - குதிரைப் படை, களிறு - யானைப்படை, தேர் - தேர்ப்படை. துறை துறை கவரச் சொற்றி - எவ்வெந்த இடங்களில் அவை உளவோ, அவ்வந்த இடங்களிலிருந்து கவர்ந்துவர ஏவலாளருக்குச் சொல்லுக. கடி, உரிச் சொல்: மிகுதிப் பொருளது,

தருமனது சதுரங்க சேனைகளையும் கவர்ந்து வருமாறு விதுரனுக்குத் துரியோதனன் கூறினான், என்பதாம்.

198\. தொல்லைமா நகரு நாடுந் தோரண நாட்டச்
சொற்றி
எல்லையி னிதிக ளெல்லா மிம்பரே யெடுக்கச்
சொற்றி
நல்லெழின் மடவார் தம்மை நம்பதி யெய்தச்
சொற்றி
சொல்லிய விளைஞர் தாமுந் தொண்டின ராகச்
சொற்றி.

[தொல்லை மா நகரும் நாடும் தோரணம் நாட்ட சொற்றி. எல்லை இல் நிதிகள் எல்லாம் இம்பரே எடுக்க சொற்றி, நல் எழில் மடவார் (போகமாதர்) தம்மை நம் பதி எய்த சொற்றி, சொல்லிய இளைஞர் தாமும் தொண்டினர் ஆக சொற்றி.]

தான்பெற்ற வெற்றியைக்கொண்டாடும், பொருட்டு நாடெங்கும் தோரணங்கள் கட்டச் சொன்னான்,— என்க. இன்பரே-இப்

பொழுதே, அல்லது அத்தினாபுரிக்கே. சொல்லிய இளைஞர்-பணயமாகச் சொல்லி வைக்கப் பெற்ற பாண்டவர். 'இளைஞர்'' என்பது, தருமன் ஒழிந்த நால்வரையும் குறிப்பதாகவும் கொள்ளலாம். அப்பொழுது, துரியோதனன், தனக்கு மூத்தோனாகிய தருமனை அடிமை என்று கூறக் கூசி, அவனுக்கு இளைஞராகிய நால்வரையும் குறித்தான், என்பது கருத்தாகும்.

199. இவர்தமக் குரிய ளாகி யாகபத் தினியு மான
துவரிதழ்த் தவள மூரற் சுரிகுழ றன்னை யின்னே
உவரலைப் புணரி யாடை யுலகுடை வேந்தர்
காணக்
கவர்தரப் புகறி யென்றான் கண்ணருள் சிறிது
மில்லான்.

[இவர் தமக்கு உரியள் ஆகி, யாக பத்தினியும் ஆன, துவர் இதழ் தவளம் மூரல் சுரிகுழல் தன்னை இன்னே, உவர் அலை புணரி ஆடை உலகு உடை வேந்தர் காண, கவர்தர புகறி என்றான், கண் அருள் சிறிதும் இல்லான்.]

**விளக்கம்:**—துவர்- பவழம். தவளம்-முத்து, வெண்மை. மூரல்-பற்கள். உவர்- உவர்ப்பு. புணரி- கடல். உவர்ப்புச் சுவையையும் அலைகளையுமுடைய கடலை ஆடையாக உடைய உலகிலுள்ள அரசர் காணும்படி,—என்பது, மூன்றாவது அடியின் பொருள். கவர்தர-பலவந்தமாய் இழுத்துவர. புகறி-கட்டளையிடுக, (என்று விதுரனுக்குச் சொன்னபடி). கண்ணருள்-கண்ணோட்டம், இரக்கம், ஐவருக்கு ஒருத்தியான திரௌபதி யாகபத்தினி யாகும் தகுதி இல்லாதவள், என்று துரியோதனன் இகழும் கருத்தது முதலடி.

**விதுரன் எதிருரை**

200. அறந்தரு மைந்தன் றன்னை யறனலா தியற்றி
நம்பி
திறந்தரு செல்வம் யாவுத் தீமையிற் கவர்த
லுற்றாய்
மறந்தரு வலியு மன்று மணந்தரு வாழ்வு மன்று
நிறந்தரு புகழு மன்று நெறிதரு மதியு மன்று.

[அறம் தரு மைந்தன் தன்னை அறன் அலாது இயற்றி நம்பி; திறம் தரு செல்வம் யாவும் தீமையின் கவர்ல் உற்றதாய்

மறம் தரு வலியும் அன்று, மணம் தருவாழ்வும் அன்று, நிறம் தரு புகழும் அன்று. நெறி தரு மதியும் அன்று.]

**விளக்கம்:**—அறம், என்பது ஆகுபெயராய் யமதர்மாராஜனைக் குறிக்கும். அவன் மைந்தன், தருமன். நம்பி-சிறந்தவனே (வஞ்சப் புகழ்ச்சி). திறம் தரு செல்வம்- பல திறப்பட்ட செல்வம், அல்லது மேன்மையுற்ற செல்வம். கவர்தல் உற்றாய்-(தீய வழியால்) பறித்துக் கொள்ளலைச் செய்தாய். மறம் தரு வலி-வீரத்தால் வரும் வன்மை. மணம் தரு வாழ்வு-நலம் மணக்கும் வாழ்வு. நிறம் தரு புகழ்-பெருமையைத் தரும் புகழ். நெறிதரு மதி. தரும நூல்களில் கூறிய வழியதான மதி.

''ஐய, நீ வஞ்சனையால் வென்றதைப் பெருமைக்குரிய காரியமாகப் பாராட்டிக் கொள்கின்றாய். இது வீரம் அன்று, இதனால் நீ எய்தப் பெறுவது பெருமையோடு கூடிய புகழும் ஆகாது,' என்று விதுரன் எதிர் உரைத்தான் என்க. நம்பி, என்றது இகழ்ச்சிப் பொருளது.

201. திருத்தகமொழிந்த வெல்லாஞ் செய்தனை
யெனினுஞ் செவ்வி
மருத்தகு தெரியன் மாலை மாசிலா மன்னர்
முன்னர்
உருத்தகு கற்பி னாளை யுரையலா துரைக்கு
மாற்றம்
கருத்தினி னையல் கண்டாய் கடவுளர் கற்பம்
வாழ்வாய்.

[திரு தக மொழிந்த எல்லாம் செய்தனை எனினும், செவ்வி மரு தகு தெரியல் மாலை மாசு இலா மன்னர் முன்னர். உரு தகு கற்பினாளை உரை அலாது உரைக்கும் மாற்றம் கருத்தினில் நினையல் கண்டாய், கடவுளர் கற்பம் வாழ்வாய்.]

**விளக்கம்:**—திருதக- உனது மேன்மை மேலும் சிறத்தற்குத் தக்கபடி; அல்லது உனது செல்வம் மேலும் மிகும்படி. செவ்வி. அழகு. மருதகு தெரியல மாலை மாசிலா மன்னர்- வாசனை வீசும் தகுதியையுடைய மாலை அணிந்த மன்னர். உருதகு கற்பினாள்- வடிவழகோடு சிறந்த கற்பினையும் உடைய திரௌபதி. உரை அலாது உரைக்கும் மாற்றம்-சொல்லத்தகாத சொற்களைச்சொல்லி இகழ்தலாகிய சொற்கள். நீ மொழிந்தபடி தருமனது பொருள்கள் எல்லாவற்றையும் பறித்துக் கொண்

டாலும், அருந்ததிக் கற்பினளாகிய திரௌபதியைத் தகாத சொற்களால் இழித்துக் கூறலை மனத்தில் நினைக்கவும் செய்யாதே. அவளைப் பழித்தலை விடுவா யாயின், நீ நெடுங்காலம் வாழ்ந்திருப்பாய்; இல்லையேல், அழிவாய், என்பது குறிப்பு.

கற்பம் - (கல்பம்) நீண்ட கால எல்லை. மனிதர்களுக்கு ஒரு வருடம், தேவருக்கு ஒருநாள். கடவுளர் கற்பகம் - மிக நீண்ட காலம் உருத் தக கற்பினாள், என்பது, முறைகேடாக அவளை நோக்குவோர் அஞ்சத்தைக் கற்பினாள். என்றும் பொருள்படும்.

202. விண்ணிலங் கருகித் தோன்று மேதகு வடமீ
னன் றி
மண்ணிலங் குவமை சொல்ல மடந்தையர் யாரு
மில்லாப்
பண்ணலங் கடந்த மென்சொற் பாவையைப்
பழிக்க நீயின் (று)
எண்ணின்முன் கேட்ட வார்த்தைக் கேற்றதுன்
னெண்ண மென்றான்.

[விண்ணில் (அங்கு) அருகி தோன்றும் மேதகு வடமீன் அன்றி, மண்ணில் (அங்கு) உவமை சொல்ல மடந்தையர் யாரும் இல்லை, பண் நலம் கடந்த மெல் சொல் பாவையை பழிக்க நீ இன்று எண்ணின், முன் கேட்ட வார்த்தைக்கு ஏற்றது உன் எண்ணம் என்றான்.]

**விளக்கம் :**—அருகி தோன்றும் மேதகு வடமீன் - அருமையாகக் காணப்படும் மேன்மை பொருந்திய அருந்ததி என்னும் நட்சத்திரம். பண் நலம் கடந்த - இசையின் இனிமையை வென்ற. (விண்ணில் வடதிசையில் அருகித் தோன்றும் விண்மீன் அல்லால் தனக்கு ஒரு நேரில்லாத் திரௌபதியை நீ பழித்துக் கூறலை, இப்பொழுது கருதுங்கால்) உன் எண்ணம் முன் கேட்ட வார்த்தைக்கு ஏற்றது என்றான் - உன் நினைவானது நான் முன் கேள்விப்பட்ட விஷயத்தோடு ஒத்து நடப்பதாய் இருக்கின்றது, என்று விதுரன் கூறினான்.

அங்கு, ஈரிடத்தும் அசை. 'பண் நலங்கள் தந்த', என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம். அருந்ததி, என்னும் நட்சத்திரம் வடதிசையில் இருப்பதால், **வடமீன்** எனப்பட்டது. இது மிக நுண்ணியதாய்க் காணப்படுவதோடு, மரண காலத்தைக் கிட்டியவர்க்குக் காணப்படாமை பற்றி **அருகித் தோன்றும் வடமீன்**, என்றார்.

203. கேட்டசொல் வினவு நாக கேதனன் கேட்ப மீண்டும்
வாட்டமி லன்பி னோடு மனங்கனிந் துருகி வீழ
நாட்ட மு நன்னீர் மல்க நாவமிழ் தூறப் பின்னும்
கோட்டமில் சிந்தை யானுங் குரிசிலுக் குரைக்க லுற்றான்.

[கேட்ட சொல் வினவும் நாககேதனன் கேட்ப, மீண்டும் வாட்டம் இல் அன்பினோடு, மனம் கனிந்து உருகி வீழ, நாட்டமும் நல் நீர் மல்க, நா அமிழ்து ஊற, பின்னும் கோட்டம் இல் சிந்தையானும் குரிசிலுக்கு உரைக்கல் உற்றான்.]

**விளக்கம் :**—கேட்ட சொல் வினவும் நாககேதனன் - நீ கேள்விப்பட்டது யாது?' என்று வினவிய அரவக் கொடியோனாகிய துரியோதனன். கேட்ப-கேட்டுத் தெரிந்து கொள்ளும்படி. கோட்டம் இல் சிந்தையானும் - கோணுதல் இல்லாத மனத்தினனான விதுரனும். வாட்டம் இல் அன்பினோடு - குறையாத அன்போடு. மனம் கனிந்து உருகி வீழ - மனம் உருகி; கரையவும். நாட்டமும் நல் நீர் மல்க - கண்களும் மிகுதியாக நீரைச் சொரியவும். நா அமிழ்ந்து ஊறவும் - நாவில் அமுதம் போன்ற நீர் சுரக்கவும். குரிசிலுக்கு - துரியோதனனுக்கு,—மேலும் தொடர்ந்து கூறத் தொடங்கினான்,—என்பது பொருள்.

பாஞ்சாலியை அவை கொணருமாறு துரியோதனன் ஏவியதற்கு எதிராக விதுரன் அவன் மேல் சினங் கொள்வதற்குப் பதில், "இச் செயலால் கண்ணிலான் மகன் கெட்டு அழிதல் நேருமே!" என்று அவன் பால் இறங்கக் கொண்டு. தான் கேள்வியுற்ற தேவ இரகசியத்தைக் கூறத் தொடங்கினான். என்க.

மனங் கரைதல், நாட்டத்தில் நீர் பெருகல். ஆகியவை இரக்கத்தின் அடையாளங்கள். நாவில் அமிழ்ந்து ஊறல், தான் கூறப் போகும் விஷயத்திலுள்ள ஊற்றத்தின் மிகுதியைக் குறிக்கும். "கோட்டம் இல் சிந்தையான்," என்றது, பாண்டவர், கௌரவர் ஆகிய இரு திறத்தாரிடமும் ஒத்த அன்புடையன் என்ற பொருளது.

204. தானவ ராகி யும்மைத் தனித்தனி யிறந்தோர் யாரும்
மானவ ராகி யிம்மை வந்தன ரிம்ப ரென்றே

தானவர் பொறைபொறாமற் றராதல மென்னுஞ்
செங்கண்
மானவ ராக வேத மலர்முனி தனக்குச்
சொன்னாள்.

[தானவர் ஆகி உம்மை தனி தனி இறந்தோர் யாரும், மானவர் ஆகி இம்மை வந்தனர் இம்பர் என்றே, தான் அவர் பொறை பொறாமல் தராதலம் என்னும் செம் கண் மான், அவராகம் வேதம் மலர் முனி தனக்கு சொன்னாள்.]

**விளக்கம்** :—முன் பிறப்பில் அசுரர்களாய்ப் பிறந்து, தனித்தனி (திருமாலால் கொல்லப்பட்டு) இறந்தவர்கள் எல்லோரும், இப்பிறவியில் மனிதர்களாய்ப் பிறவி எடுத்து இப்பூமியில் வந்துள்ளார், என்று,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். உம்மை - முன் பிறப்பு. இம்மை - இப் பிறப்பு- இவ்வுலகு. தராதலம் என்னும் செங்கண்மான் - பூமி என்னும் செவ்விய கண்களை உடைய மான் போன்ற புவிமகள். தான் அவர் பொறை பொறாமல் - தான் அவர்களது மிகுதியால் உண்டான பாரத்தைப் பொறுக்க மாட்டாதவளாய், அவராகம்- ஆசையற்றவனும். வேதம் வேதத்தைத் தந்தவனும். ஆகிய மலர் முனி தனக்கு - தாமரையில் தோன்றிய பிரும்மனிடம், சொன்னாள் - தன் குறையைத் தெரிவித்து முறையிட்டுக் கொண்டாள்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

''முன்பு திருமாலால் சங்காரம் செய்யப்பட்ட கால நேமி முதலிய அசுரர்கள், பூமியில் அரச வம்சத்தில் பிறந்து, மக்களுக்குத் துன்பத்தைத் தந்து பாபத்தைப் பெருக்கி வருகின்றார்கள். அவர்களது எண்ணிக்கையும் மிகுந்து வருகின்றது. எனவே, பூபாரம் தீர்த்து என் சுமையைக் குறைக்க வேண்டும்,'' என்று பூமிதேவி பிரும்மதேவனிடம் முறையிட்டுக் கொண்டாள், என்பது விபரம்.

205. நான்முகன் றானு மேனை நாகரு நாகர் கோனும்
பான்முகந் தெரியும் வேலைப் பாம்பணைப் பள்ளி
கொள்ளும்
தேன்முகங் களிக்கும் பச்சைச் செவ்விவண் துளப
மாலை
மான்முகங் கண்டு கூற வந்தவா மாலுங் கேட்டான்.

[நான்முகன் தானும் ஏனை நாகரும், நாகர் கோனும், பால் முகந்து எறியும் வேலை பாம்பு அணை பள்ளி கொள்ளும் தேன்

முகம் களிக்கும் பச்சை செவ்வி வள் துளப மாலை மால் முகம் கண்டு, கூற வந்த ஆ(று) மாலும் கேட்டான்.]

**விளக்கம் :**—ஏனை நாகர் - மற்றைத் தேவர்கள். நாகர் கோன் - தேவேந்திரன். பாலை (அலைகளாகிய கைகளினால்) எடுத்து வீசும் பாற்கடலில் ஆதிசேஷனாகிய படுக்கையில் யோக நித்திரை செய்யும்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். வேலை - பால் கடல். பாம்பு - ஆதிசேஷன். வண்டுகள் (தேனை உண்டு) முகம் களித்தற்கு இடமான பசிய அழகிய சிறந்த துளசி மாலை,—என்பது மூன்றாவது அடியின் பொருள். (அத்தகைய துளசி மாலை அணிந்த) மால் முகம் கண்டு - திருமாலின் முகத்தைக் கண்டு, அல்லது திருமாலை தன் முன்னே கண்டு. வந்த வாறு கூற-சொல்ல வந்த விஷயத்தைக் கூற. மாலும் கேட்டான்- திருமாலும் கேட்டருளினான். பூமி தேவியின் குறையைப் பிரும்மதேவன் திருமாலிடம் விண்ணப்பித்துக் கொண்டான், என்பதாம்.

206. மின்னிடை விளங்கு மேக மேனியா னவனி மானை
நின்னிடை வந்து தோன்று நிருபரா னவரை யெல்லாம்
முன்னிடை கமையொன் றின்றி முற்றுவெம் முரண்கொள் காலன்.
தன்னிடை விடுது மென்று சாற்றியே தளர்வு தீர்த்தான்.

[மின் இடை விளங்கும் மேகம் மேனியான் அவனி மானை (நோக்கி), நின் இடை வந்து தோன்றும் நிருபர் ஆனவரை எல்லாம், முன் இடை கடை ஒன்று இன்றி முற்றும் வெம் முரண் கொள் காலன் தன்னிடை விடுதும், என்று சாற்றியே, தளர்வு தீர்தான்.]

**விளக்கம் :**—அவனி மான் - பூதேவி. (அவளை நோக்கித் திருமால்) உன்னிடம் வந்து தோன்றியுள்ள துஷ்டரான அரசர்கள் எல்லோரையும்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். முன் இடை கடை ஒன்று இன்றி - முன்னும் நடுவும் பின்னும் என்ற மூன்று தலைமுறைகளிலும் எவரும் இல்லாமல், முற்றும் வெம் முரண்கொள் காலன் தன்னிடம் விடுதும்-எல்லோரையும் கொடிய வலிய எமனிடத்திலே சேர்த்து விடுவோம்,—என்று கூறி அவனி மாதின் தளர்வை தீர்த்தருளினான்,—என்பதாம்.

பிரும்மதேவனின் மூலம் பூமிதேவியின் குறையை அறிந்த திருமால், பூமியில், யது குலத்தில் வசுதேவனுக்கும் தேவகிக்கும் மகனாய்த் தோன்றி, அவனிமாதின் குறையைத் தீர்ப்பதாகக் கூறினான், என்பது வரலாறு. மின்னிடை வந்து தோன்றும் மேக மேனியான் - மின்னலிடத்தே தோன்றும் காளமேகம் போன்ற திருமேனியை உடைய திருமால், அல்லது மின்னல் போன்ற பிரகாசத்தை உடைய பீதாம்பரம் இடையிலே விளங்கப் பெற்ற, மேகத்தைப் போன்ற திவ்ய திருமேனியை உடைய திருமால். மின் இடை, என்பதை அன்மொழித் தொகையாகக் கொண்டு, மின்னலை ஒத்த இடையை உடையவளான திருமகள் மார்பிலே விளங்கப்பெற்ற மேகமேனியான் என்றும் பொருள் கொள்ளலாம்.

207. அந்தவன் திகிரி யானு நம்மிலோ ரரச னாகி
வந்தவ தரித்தா னென்று மண்ணெலாம் வார்த்தை யானது
எந்தவல் வினையா லெவ்வா றெய்துமென றிதற்கே சால
நொந்துகண் துயில் பெறாதே நோதகப் புரிந்தேன் மன்னோ.

[அந்த வல் திகிரியானும் தம்மில் ஓர் அரசன் ஆகி வந்து அவதரித்தான், என்று மண் எலாம் வார்த்தை ஆனது; எந்த வல் வினையால், எவ்வாறு (எ - ஆறு) எய்தும், என்று இதற்கே சால நொந்து கண்துயில் பெறாதே நோதக புரிந்தேன், (மன்னோ : அசை) ]

**விளக்கம் :**—மண் எலாம் வார்த்தை ஆனது - உலகம் எங்கும் வதந்தி எழுந்து பரவியுள்ளது. எந்தத் தீவினையால் எவ்விதத் தீங்கு (அரசர் குலத்திற்கு) நேருமோ என்று எண்ணி, இது பற்றியே, (நான்) மிகவும் மனம் நொந்து, கண் உறக்கம் இன்றி, மிகவும் வருந்துபவன் ஆயினேன்,—என்பது சற்றடிகளின் பொருள். நோதகப் புரிந்தேன் - மிகவும் வருந்துபவ னாயினேன். துஷ்டர்களைத் திருமால் அழித்தல் நிச்சயம், என்பது தோன்ற **வல் திகிரயான்** எனப்பட்டது. "நீ இவ்வாறு தீமைகளைச் செய்து வருவாயானால், அரசருருக்கொண்டு மண்ணில் அவதரித்துள்ள திருமாலால் அழிக்கப்படுவாய்; எனவே, பாண்டவர்பால் கொண்ட பகையை விடுக," என்று விதுரன் தெரிவிக்கும் கருத்தது செய்யுள்.

208. ஒருதிறத் தவனி முற்று மொருமையாற் புரக்கு
நீவிர்
இருதிறத் தவரு நும்மி லிகலுறு மனத்தி ரானல்
வருதிறத் தானை வேந்தர் வகைபடக்
குழூஉக்கொண் டோடிப்
பொருதிறப் பதற்கே சற்றும் புரிவிலீர் புரிகின்
றீரே.

[ஒரு திறத்து அவனி முற்றும் ஒருமையால் புரக்கும் நீவிர் அரு திறத்தவரும் நும்மில் இகல் உறு மனத்திர் ஆனால், வரு திறம் தானை வேந்தர் வகை பட, குழூஉக் கொண்டு ஓடி, பொருது இறப்பதற்கே சற்றும் புரிவு இலீர், புரிகின்றீரே.]

**விளக்கம் :**—ஒரு திறத்து அவனி முற்றும்-பிளவுபடாத ஒரு பகுதியாகப் பூமி முழுவதையும். ஒருமையால் புரக்கும் நீவிர் - ஒன்றுபட்டு ஆளுதற்கு உரியரான நீங்கள். நும்மில் இகல் உறு மனத்தினர் ஆனால் - உங்களுக்குள்ளே பகை பொருந்திய மனத்தினராய் மாறுபடுவீர்களானால், வரு திறத் தானை - வேந்தர் உங்களுக்குத் துணையாய் வரும் நால்வகைப் படைகளையும் உடைய வேந்தர்கள். வகை படக் குழூஉக் கொண்டு - அணியணியாகக் கூட்டங்கூடி, ஓடி - விரைந்து சென்று. பொருது இறப்பதற்கே புரிகின்றீர் - போர் செய்து மாய்ந்து அழிவதற்கே வழி செய்கின்றவர்கள் ஆவீர்,—என்பது பொருள். சற்றும் பரிவு இலீர் - ஒரு சிறிதும் விஷயத் தெளிவு இல்லாதவர்களே, அல்லது, நல்ல அறிவு இல்லாதவர்களே, (என்று துரியோதனாதியரை அழைத்து விதுரன் கூறியபடி). பாண்டவர்களோடு நட்பின் நெருங்கி ஒன்றுபட்டு வாழாது பகை வளர்த்தால், நீங்கள் அழிவதோடு. உங்களைச் சேர்ந்தாரும் அழிய நேரும்," என்று விதுரன் எடுத்துக் காட்டியபடி.

### துரியோதனன் கட்டளை

209. என்றவ னுரைப்பத் தானு மெறிந்துகை
நகைகொண் டாடி
அன்றவ னிதயம் வெம்ப வவமதி பலவுங் கூறி
நின்றவ னொருவன் றன்னை நீநனி விரைவி
னோடிச்
சென்றவ ணிருந்த கோலத் தெரிவையைக்
கொணர்தி யென்றான்.

[என்று அவன் உரைப்ப, தானும் எறிந்து கை நகை கொண்டாடி, அன்று அவன் இதயம் வெம்ப அவமதி பலவுங் கூறி, நின்றவன் ஒருவன் தன்னை, "நீ நனி விரைவின் ஓடி சென்று, அவண் இருந்த கோலம் தெரிவையை கொணர்தி," என்றான்.]

**விளக்கம் :—**விதுரன் சொல்லை அவமதித்தும், அவனை எள்ளியும், அவனை மனம் வெதும்பச் செய்து, திரௌபதியை அவைக்கு அழைத்து வருமாறு அயல் நின்ற சாரதியாகிய பிரதிகாமிக்குத் துரியோதனன் கட்டளை இட்டான்,—என்க, 'நின்றவன் ஒருவன்,' என்றது அயல் நின்ற தேர்ச்சாரதியாகிய **பிரதிகாமி.** கை எறிந்து நகை கொண்டாடல் - கை கொட்டிச் சிரித்தல். அவமதி - அவமதிப்பான சொற்கள், அறிஞனான விதுரன் பரிந்து கூறியவற்றைத் அற்பனான துரியோதனன் கட்டுக்கதையெனக் கொண்டு, தன் கை கொட்டிச் சிரித்தான் என்பதாம்.

210. பொருந்தகை யேவ லோடும் பிரதிகா மியுமங் கேகி
வருந்திய மனத்த னாகி மாசறு மரபின் வல்லி
இருந்துழி யெய்து றாம லிடைவழி நின்று மீள
விரைந்தன னோடிவந்து வேந்தனுக் கேற்பச்
சொன்னான்.

[பெருந்தகை ஏவலோடும் பிரதிகாமியும் அங்கு ஏகி, வருந்திய மனத்தன் ஆகி, மாசு அறு மரபின் வல்லி இருந்துழி (இருந்த உழி) எய்துறாமல் இடை வழி நின்று, மீள விரைந்தனன் ஓடி வந்து, வேந்தனுக்கு ஏற்ப சொன்னான்.]

**விளக்கம் :—**பெருந்தகை, என்பதைப் பிரதிகாமிக்கு அடையாக்குக, ஏவலோடும் - (துரியோதனனது) ஏவலினால், (ஓடு என்பது இங்கே கருவிப் பொருளது). இருந்த உழி எய்துறாமல்- (திரௌபதி) இருந்த இடம் செல்லாமல், வேந்தனுக்கு ஏற்ப சொன்னான் - துரியோதனன் நம்பும்படி பொய் சொல்வானாயினான். பெருந்தகை பிரதிகாமி துரியோதனன் ஏவிய அக்கிரமச் செயலைச் செய்ய மனம் இல்லாதவனாய்த் திரௌபதியிடம் செல்லாமல், சிறிது நேரத்தை இடை வழியில் கழித்துவிட்டுத் திரும்பி வந்து, துரியோதனனும் மற்றவரும் நம்புமாறு கதைத்தான், என்பதாம்,

வேறு

211. என்னைத் தோற்று மனுநெறிகூ ரிசையோன்
றன்னைத் தோற்றனனோ
தன்னைத் தோற்றுத் தனதுமனத் தளர்வா
லென்னைத் தோற்றனனோ
முன்னைத் தோற்றுத் தோற்றபொருள் முற்றுங்
கவரு முறையின்றி
பின்னைத் தோற்ற பொருள்கவரப் பெறுமோ
நினைக்கப் பெறாதென்றாள்.

[என்னை தோற்று மனு நெறி கூர் இசையோன் தன்னை தோற்றனனோ, தன்னை தோற்று தனது மனம் தளர்வால் என்னை தோற்றனனோ? முன்னை தோற்று, தோற்ற பொருள் முற்றும் கவரும் முறை அன்றி, பின்னை தோற்ற பொருள் கவரப் பெறுமோ, நினைக்க பெறாது, என்றாள்.]

**விளக்கம் :—**மனு நெறி கூர் இசையோன் - தருமன் என்னைத் தோற்று, அதன்பின், அவனைத் தோற்றானா?, அல்லது, அவனைத் தோற்றபின் மனத் தளர்ச்சியினால் என்னைத் தோற்றானோ? (சூதில்) முதலில் தோற்று இழந்த பொருள்களை எல்லாம் கைப்பற்றல் முறைமைய அன்றி, தன்னைத் தோற்றபின், பணயம் வைத்துத் தோற்ற பொருளைக் கைப் பற்றல் கூடுமோ! கைப்பற்ற நினைத்தலும் பிழையாகுமே, என்றாள்,—என்பது பொருள். தருமன் தன்னைத் தோற்றபின், பாஞ்சாலியைப் பணயம் வைத்து இழந்ததை அறிந்த பிரதிகாமி, அவ் உத்தமியின் மானங்காக்கும் கருத்தில், இவ்வாறு கற்பித்துக் கூறினான். தோற்றத் தோற்ற - தோற்று இழந்த.

212. செல்வப் பாவை திருவுள்ள மிதுவென்
றந்தத் தேர்ப்பாகன்
சொல்லப் பாவி தரியாமற் துச்சா
தனனை முகநோக்கி
அல்லற் பான்மை பெற்றிழந்த வைவர்க்
கொருத்தி யாகியவம்
மல்லற் பானல் விழியாளை மன்பே
ரவையி னழையென்றான்.

[செல்வம் பாவை திருவுள்ளம் இது என்று அந்த தேர்ப் பாகன் சொல்ல, பாவி தரியாமல் துச்சாதனனை முகம் நோக்கி,

அல்லல் பான்மை பெற்று இழந்த ஐவர்க்கு ஒருத்தி ஆகிய அ மல்லல் பானல் விழியாளை மன் பேர் அவையின் அழை, என்றான்.]

**விளக்கம் :—**செல்வப் பாவை - திரௌபதி. பாவி - பாவியாகிய துரியோதனன். தரியாது - மனம் பொறாமல். அல்லல் பான்மை பெற்று அழிந்த ஐவர் - துன்பப்படும் கதியை எய்தி அழிந்துள்ள பஞ்சபாண்டவர். (அவர்களுக்கு) ஒருத்தி ஆகிய - தான் ஒருத்தியே மனைவியாய் இருக்கின்ற. அ மல்லல் பானல் விழியாள் - அந்த எழிலின் செழிப்புடைய கருங்குளை போன்ற கண்களை உடைய பாஞ்சாலி. மன் பேர் அவை - அரசர்கள் குழுமியுள்ள பெரிய சபை. அரச அவைக்குப் பாஞ்சாலியை பலவந்தமாய் அழைத்து வரும்படி துரியோதனன், தம்பியாகிய துச்சாதனனை ஏவினான், என்பதாம்.

213. நோன்றாள் வெங்கட் கடகளிற்று
நுழைவே லரச னுவறலுமே
ஆன்றார் கேட்கிற் செவிபுதைக்கு
மழல்கால் வெஞ்சொ லறனில்லான்
தோன்றா நயனத் துணைவனைப்போற்
றுணைக்கண் டுகிலிற் சூழ்ந்திருந்த
ஈன்றா ளில்லத் திருந்தாளை
யிகலோ டெய்தி யிவைசொல்வான்.

[நோன் தாள் வெங்கண் கடம் களிறு நுழைவேல் அரசன் நுவறலுமே, ஆன்றோர் கேட்கின் செவி புதைக்கும் அழல் கால் வெம் சொல் அறன் இல்லான், தோன்றா நயனம் துணைவனைப் போல் துணை கண் துகிலின் சூழ்ந்து இருந்து ஈன்றாள் இல்லத்து இருந்தாளை இகலோடு எய்தி, இவை சொல்வான்.]

**விளக்கம் :—**நோன்தாள்...நுழைவேல் அரசன், ஆன்றோர் கேட்கின் செவி புதைக்கும் அழல்கால் வெம் சொல் நுவறலும் - வலிய கால்களையும் கொடுமையையும் மதப் பெருக்கையும் உடைய யானைகளின் உடலில் நுழையும் (தைக்கும்) வேலை ஏந்திய அரசனாகிய துரியோதனன். பெரியோர் கேட்கின் செவிகளைப் பொத்திக் கொள்ளும் தன்மையதும், நெருப்பைச் சொரிவதுமான கொடிய சொல்லைச் சொன்னதும், (வெங்கண் - கொடுமை). அறன் இலான் - துச்சாதனன், தோன்றா நயனத் துணைவன் - தெரியாத கண்களை உடைய (காந்தாரியின்)

கணவனான திருதராட்டிரன். (அவனைப் போலவே) துணை கண் துகிலின் சூழ்ந்திருந்த ஈன்றாள் - இரு கண்களையும் துணியால் கட்டிக்கொண்டு குருட்டுத் தன்மையை ஏற்றிக்கொண்ட பெற்றவளாகிய காந்தாரி. அவளது மனையின் அந்தபுரத்திலே இருந்த பாஞ்சாலியைப் பகைத்த மனத்தோடு துச்சாதனன் அவளை நெருங்கி இவ் வார்த்தைகளை (இனிவரும் செய்யுள்கள் தெரிவிக்கும் வார்த்தைகளை) சொல்வானாயினான்.

கண்ணில்லாத கணவனை மணந்துகொண்ட காந்தாரி கணவனைப் போல் தானும் கண்ணால் அனுபவிக்கும் இன்பத்தை அனுபவிக்காமையே அறம் எனக் கொண்டு, கண்களைத் துணியால் கட்டிக்கொண்டு குருட்டுத் தன்மையை ஏற்றிக் கொள்வாளானாள்; இந்த வரலாறு ஆதி பருவத்தில் கூறப்பட்டுள்ளது.

214. தானே சூது பொருதழிந்து
தலைவன் தனக்குன் பதியான
கோனே சொல்லி யாவையுமுன்
கொடுத்தான் கொடுத்த பின்னிசைவு
யானே யென்றும் வீமன்முத
லிளையோ ரென்று மென்வேள்வி
மானே யென்றுங் குறித்திழந்தான்
வழக்கால் வென்றோம் வருவாயே.

[தானே சூது பொருது அழிந்த தலைவன் தனக்கு உன் பதியான கோனே சொல்லி யாவையும் முன் கொடுத்தான்; கொடுத்த பின் இசைவு யானே என்றும், வீமன் முதல் இளையோர் என்றும், என் வேள்வி மானே என்றும் குறித்து இழந்தான், வழக்கால் வென்றோம், வருவாயே.]

**விளக்கம்:—** உன் பதியான கோனே, தானே சூது பொருது அழிந்து, தலைவன் தனக்கு சொல்லி யாவையும் முன் இழந்தான் என்று அன்வயிக்க. கோன் - தருமன். தானே-தானாகவே. அழிந்து-தோற்று. தலைவன் - துரியோதனன், சொல்லி-பணயப் பொருளாகக் கூறி,—எல்லாவற்றையும் முதலில் கொடுத்து விட்டான், (கொடுத்த பின்) இசைவு-பந்தயப் பொருள். இசைவாகத் தன்னையும் தம்பியரையும், மனைவியையும் பணயமாகச் சொல்லி இழந்தான், (ஆகவே) வழக்கால் வென்றோம். சூதாட்ட வழக்கப்படி, அல்லது முறைப்படி வென்றோம், இனி

எமக்கு அடிமையான நீ எம் விருப்பத்தின்படி அவை வருக, என்று திரௌபதியை அழைத்தான், என்பதாம்.

215. பொன்னைச் சிரிக்கும் பூங்கோயில்
புனல்வா வியிலென் றெங்கள் குலம்
மன்னைச் சிரித்த செங்கனிவாய்
மாறா திரங்கி யழுதரற்ற
மின்னைச் சிரிக்கு நுண்ணிடையாய்
வேந்தர்க் கெதிருன் மெய்க்கணவன்
தன்னைச் சிரிக்க விருக்கின்ற
சலநீ காணிற் றரியாயே.

[பொன்னை சிரிக்கும் பூ கோயில் புனல் வாவி இல் என்று எங்கள் குலம் மன்னை சிரித்த செம் கனிவாய், மாறாது இரங்கி அழுது அரற்ற மின்னை சிரிக்கும் நுண் இடையாய், வேந்தர்க்கு எதிர் உன் மெய் கணவன் தன்னை சிரிக்க இருக்கின்ற சலம் நீ காணில் தரியாயே.]

**விளக்கம்:—** பூங்கோயில்-சபா மண்டபம். புனல் வாவி-தடாகம். எம் குல மன்-துரியோதனன். மாறாது இரங்கி அரற்ற -ஓயாமல் வருந்தி அழுது புலம்பும்படி. மெய் கணவன். (உனக்கு) உரிய கணவனாகிய தருமன் சலம்-வஞ்சனை, பகை; இங்கே வஞ்சனை விளைவித்த எளிய நிலை, என்பது பொருள், தரியாய்-பொறுக்க மாட்டாய், (ஏ: அசை). முதலடியிலும், மூன்றாமடியிலும் சிரிக்கும் என்பது உவமா வாசகம்; மற்ற அடிகளில் அது, இகழும் பொருளதாகும்.

216. தலத்துக் கியையா தைவரையுந்
தழுவித் தழுவித் தனித்தனியே
நலத்துப் பொய்யே மெய்போல
நடிக்குஞ் செவ்வி நலனுடையாய்
குலத்துப் பிறந்தா யாமாகிற்
கூசா தெனபின் போதுகெனப்
பெலத்திற் செங்கை மலர்தீண்டிப்
பிடித்தான் சூழ்ச்சி முடித்தானே.

[தலத்துக்கு இயையாது ஐவரையும் தழுவி தழுவி தனி தனியே நலத்து பொய்யே மெய் போல நடிக்கும் செவ்வி நலன் உடையாய், குலம் துப்பு இறந்தாய் ஆம் ஆகில், கூசாது என்பின்

போதுக, என பெலத்தின் செம் கை மலர் தீண்டி பிடித்தான், சூழ்ச்சி முடித்தான்,]

**விளக்கம்:**— தலத்துக்கு இயையாது-உலக வழக்கத்தோடு பொருந்தாது. ஐவருக்கு ஒருத்தி வழக்கு அன்றாதலின், 'தலத்துக்கு இயையாது' என்றான். நலம். என்பது இங்கே, அன்பு என்ற பொருளது. நலத்துப் பொய்யே மெய் போல நடிக்கும் - அன்பினது பொய்மையையே மெய் போல் ஐவருக்கும் தனித்தனி தோன்றக் காட்டி நடிக்கும். செவ்வி நலன்- (ஒரு பொருட் பன்மொழி) அழகு. குலம் துப்பு இறந்தாய் ஆம்-உயர் குலத்துக்கு உரிய ஒழுக்கம் அழிந்தவளானாய், ஆகில்-அவ்வாறு ஆனமையினால். கூசாது என் பின் போதுக - பின்னிடாமல் என்னோடு வருக. இவ்வாறு கூறிப் பலவந்தமாக, அவளது கையைப் பற்றினான், என்க. சூழ்ச்சி-மன்னனும் மாமனும் தம்பியும் சூழ்ந்து தீர்மானித்தசதி. பாண்டவர்களை மானபங்கம் செய்தலே, அவர்களது சதியின் முடிவு ஆதலால், அக் காரியத்தின் கடை எல்லையாக, அவர்களது மனைவியை அவை கொணர்தலில் சூழ்ச்சி முடித்தபடி யாகின்றது.

217. சிலைவா யணங்கை யவன்றீண்டச்
செல்லா ளாகி யல்லலுழந்(து)
உலைவா யழல்போ னெடிதுயிரா
வுள்ளந் தளரா வுடனடுங்காக்
கொலைவா யெயினர் கொல்லுநிலங்
குறித்துச் செறுத்த கொடிநெடு
வலைவா யொருதா னகப்பட்ட
மான்போன் மாமி மருங்குற்றாள்.

[சிலை வாய் அணங்கை அவன் தீண்ட, செல்லாள் ஆகி அல்லல் உழந்து, உலைவாய் அழல் போல் நெடிது உயிரா, உள்ளம் தளரா, உடல் நடுங்கா, கொலைவாய் எயினர் கொல்லும் நிலம் குறித்து செறுத்த கொடி நெடு வலைவாய் ஒரு தான் அகப்பட்ட மான்போல், மாமி மருங்கு உற்றாள்.]

**விளக்கம்:**—சிலைவாய் அணங்கை - வில்லுக்குரிய இலக்கை எறிந்ததால் பாண்டவர்க்கு மனைவியான பாஞ்சாலியை. அவன் - துச்சாதனன். அல்லல் உழந்து - துன்பத்தினால் வருத்த முற்று. கொல்லன் உலைக்களத்து அனல்போல் வெம்மையோடு பெருமூச்சுவிட்டு, உள்ளம் தளர்ந்து, உடல் நடுங்கி,—என்பது

இரண்டாவது அடியின் பொருள். கொலைவாய் எயினர் - கொல்லுதலைக் குலத்தொழிலாகக் கொண்ட வேடர். கொல் லும் நிலம் குறித்து - கொல்லுதற்கு ஏற்றதான இடத்தை ஆராய்ந்து துணிந்து. செறுத்த - கட்டிய, கொடி நெடுவலை - படர் கொடி போன்ற நீண்ட வலை. (அத்தகைய வலையி னிடத்தே) ஒரு தனி அகப்பட்ட மான்போல் தனியே அகப் பட்டுக்கொண்ட மானைப்போல். கொடியனான துச்சாதனன் கையில் பட்ட பாஞ்சாலி, மாமியார் முறையினளான காந்தாரி யின் அருகே போய்ச் சேர்ந்தாள், என்க. வேடன் கை வலைப் பட்ட மான் தப்பும் வழியின்றித் தவிப்பது போல், துச்சாதனன் கைப்பட்ட பாஞ்சாலியும் வருந்தித் தவித்துப் பின்னர் காந்தாரியை அடைந்தாள், என்பதாம்.

218. பூவார் குழலி தளர்வொடுதன்
புறஞ்சேர் பொழுதுஞ் சிறி திரங்காள்
நீவா வென்றே யருகிருத்தி
நெடுங்கண் பொழியு நீர்துடையாள்
மேவா ரல்லர் தமரழைத்தான்
மேலுன் கருத்து விளம்பிவரப்
பாமா யஞ்சா தேகென்றாள்
பல்பா தகரைப் பயந்தாளே.

[பூ ஆர் குழலி தளர்வொடு தன் புறம்சேர் பொழுதும் சிறிதும் இரங்காள், 'நீ வா' என்றே அருகு இருத்தி நெடுங்கண் பொழி யும் நீர் துடையாள், 'மேவார் அல்லர், தமர், அழைத்தால், மேல் உன் கருத்து விளம்பி வர, பாவாய் அஞ்சாது ஏகு,' என்றாள் பல் பாதகரை பயந்தாள்.]

**விளக்கம்**—:பாதகர் பலரைப் பெற்றவளாகிய காந்தாரி, மலர் நிறைந்த கூந்தலையுடைய பாஞ்சாலி தளர்வுடன் (காப் பாய்) தன் பக்கம் வந்து சார்ந்தபோதும், சிறிதும் மனம் இரங் காதவளாயும், 'நீ வா,' என்று அன்புடன் அழைத்துத் தன்னருகே இருக்கச் செய்து, அவளது நீண்ட கண்கள் பொழியும் நீரைத் துடைத்துத் தேற்று மொழி கூறாதவளாயும், "பாவை போல் வாளே, (உன்னை அழைப்பவர்) பகைவர் அல்லரே, தமர்தாமே; அவர் அழைத்தால் (அங்கே சென்று) மேலே நீ கூற வேண்டிய தான உன் கருத்தை எடுத்துச் சொல்லி மீண்டு வர அஞ்சாதே, செல்க," என்று கூறினாள்,—என்பது பொருள், மேவார் - நம்மைச் சேராத பகைவர். தமர் - சுற்றத்தார்.

தன் மகன் பாஞ்சாலியை அவை அழைத்தபொழுது, அவனைத் தடுக்காமல் இருந்ததோடு, அவள் தன்னைக் காப்பாக அடைந்த போதும், அவளைக் காக்க நினைக்காமல் "மேவார் அல்லரே, தமர் தாமே; போய் வா," என்று கூறிய கொடுமை பற்றிக் காந்தாரியைப் 'பல் பாதகரைப் பெற்றாள்' என்றார்.

219. தண்டார் விடலை தாயுரைப்பத்
தாய்முன் னணுகித் தாமரைக்கைச்
செண்டா லவள்பைங் குழல்பற்றித்
தீண்டா னாகிச் செல்கின்றான்
வண்டார் குழலு முடன்குலைய
மானங் குலைய மனங்குலையக்
கொண்டா ரிருப்ப ரென்றுநெறிக்
கொண்டா ளந்தோ கொடியாளே.

[தண் தார் விடலை தாய் உரைப்ப, தாய் (தாவி) முன் அணுகி தாமரை கை செண்டால் அவள் குழல் பற்றி தீண்டான் ஆகி செல்கின்றான், வண்டு ஆர் குழலும் உடன் குலைய, மானம் குலைய, மனம் குலைய, கொண்டார் இருப்பர் என்று, நெறி கொண்டாள், அந்தோ, கொடியாளே!]

**விளக்கம் :**—விடலை - ஆண்மகன், ஆண்பாற் சிறப்புப் பெயர். (தாய் தனக்கு அனுகூலமாயிருக்கவே) தாய் முன் சென்று - (அவன்) தாவிப்போய் (பாஞ்சாலியின்) முன்னே சென்று. செண்டு - மாட்டியிழுப்பதற்குரிய கருவி. அவளைத் தொடாமல் செண்டினால் அவளது கூந்தலைப் பற்றி அழைத்துச் செல்கின்றான். தாமரைக் கை செண்டு - தாமரைப் மலர் போன்ற (தன்) கையில் ஏந்திய செண்டு. கொடியாள் - பூங்கொடி போன்ற பாஞ்சாலி. அவள் வண்டுகள் மொய்க்கும் கூந்தல (அவன் செண்டால் பற்றிய) உடன் அவிழ்ந்து புரளவும், மானம் கெடவும், மனம் கலங்கவும், தன்னை மணந்துகொண்டவர் அங்கே இருப்பர் என்று எண்ணி, (அவன் சென்ற) வழியே தானும் நடப்பவளானாள். அந்தோ: இரக்கம் குறிக்கும் இடைச் சொல்.

தீண்டாள் ஆகி, என்ற பாடமும் உளது. அப்பொழுது, தீண்டத் தகாத நிலையினளாயிருந்தும் (ரஜஸ்வலையாயி ருந்தும்) வேறு வழியின்றிச் செல்வாளாயினாள் —என்பது

பொருளாகும். 'தாய்' இரண்டில், இரண்டாவது **தாய்**, தாவி என்ற பொருளுடைய வினை எச்சம்.

220. சூழுங் கனல்வா யுருமன்றித்
துளிவாய் முகிலு மகிலதத்து
வீழுங் கொல்லோ வுற்பாதம்
விரவிற் றென்றே வெரூஉக்கொள்ளத்
தாழும் பெரிய கரியகுழ
றாரோ டலையுத் தழீஇக்கொண்டு
வாழுஞ் சுரும்பு சுழன் றரற்ற
மண்மே லிழுத்து வருகின்றான்.

[சூழும் கனல் வாய் உரும் அன்றி துளிவாய் முகிலும் மகிதலத்து வீழும் கொல்லோ! உற்பாதம் விரவிற்று என்றே வெரூஉக் கொள்ள, தாழும் பெரிய குழல் தாரோடு அலைய. தழீஇக் கொண்டு வாழும் சுரும்பு சுழன்று அரற்ற, மண்மேல் இழுத்து வருகின்றான்.]

**விளக்கம்:** பரவுந் தன்மையுள்ள தீயோடு கூடிய இடி விழுதல் இயற்கையே அல்லாமல், நீர்த்துளிகளைத் தன்னிடத்தேகொண்ட மேகமும் பூமியில் விழுவதுண்டோ! இடி விழுவதுதான் இயற்கை; மேகம் வீழ்தல் இயற்கை விரோத நிகழ்ச்சியாகும். (ஆகவே) உற்பாதம் விரவிற்று - தீ நிமித்தம் உண்டாயிற்று. என்றே வெரூஉக் கொள்ள - என்று எல்லோரும் அச்சங்கொள்ள தாழும் பெரிய கரிய குழல் தாரோடு (மாலையோடு) அலையவும், மாலையைத் தழுவிக் கொண்டு வாழும் சுரும்புகள் சுழன்று ஒலிக்கவும், மண்ணிலே (பாஞ்சாலியை) இழுத்து வருகிறான்.— என்பது பொருள்.

உற்பாதம்: வரவிருக்குங்கேட்டைக் குறிக்கும் நிகழ்ச்சிகள். வால் நட்சத்திரம் தோன்றல், மேகம் வீழ்தல், இரத்த மழை பெய்தல் முதலியன உற்பாதங்கள். துச்சாதனன் திரௌபதியை இழுத்துச் செல்கையில், அவளது கரிய பெரிய கூந்தல் அவிழ்ந்து கீழ் வீழ்ந்ததானது, மேகம் மண்ணில் வீழ்வதாகிய உற்பாதத்தை ஒத்திருந்தது, என்றார். தாழும் பெரிய கரிய குழல் - தாழ்ந்து தொங்கும் கூட்டமாகிய (அடர்ந்த) கரிய கூந்தல்.

### நகர மக்கள் வருந்தல்

221. தழலோ வென்னுங் கற்புடைய
தனிநா யகிதன் றாமநறுங்
குழலோ வுரகக் கொடிவேந்தன்
குலமோ குலைந்த திவணென்பார்
நிழலோ புவிக்கு நெருப்பன்றோ
நெறியொன் றில்லா நீடுபொலம்
கழலோன் மதிவெண் குடையென்பார்
கையாற கண்ட கண்புடைப்பார்.

[தழலோ என்னும் கற்பு உடைய தனி நாயகி தன் தாமம் நறுங் குழலோ, உரகம் கொடி வேந்தன் குலமோ குலைந்தது இவண் என்பார்; நிழலோ புவிக்கு நெருப்பு அன்றோ நெறி ஒன்று இல்லா நீடு பொலம் கழலோன் மதி வெள் குடை என்பார், கையால் கண்ட கண் புடைப்பார்.]

**விளக்கம் :**—தழல் - நெருப்பு. தனி நாயகி - பாண்டவர்களின் ஒப்பற்ற மனைவியாகிய பாஞ்சாலி. தாமம்-மாலை. தாம நறுங்குழல் - தலை மாலை அணிந்த நல்ல மணமுடைய கூந்தல், உரகம் - பாம்பு. இப்பொழுது குலைந்தது பாஞ்சாலியின் கூந்தல் அன்று, மற்றுக் குலைந்தது உரகக் கொடியோனின் குலம், என்றார் சிலர். நெறி ஒன்று இல்லா நீடு பொலம் கழலோன் மதி வெண்குடை புவிக்கு நிழலோ, நெருப்பு அன்றோ —என்று அன்வயிக்க. நன்னெறி கடவாமை சிறிதும் இல்லாத நீண்ட அழகிய கழல் அணிந்த துரியோதனின் மதி போன்ற வெண்குடை நிழலை மக்களுக்குத் தருவதொன்றோ! இல்லை, நெருப்பை தருவதொன்று அன்றோ அது,—என்றார் வேறு சிலர். (பாஞ்சாலி இழுத்துச் செல்லப்படுவதைக் கண்டவர்) கண்ட கண்ணை கைகளால் மோதிக் கொண்டார்.

திரௌபதியை அவைக்குத் தலைவிரிகோலமாய் இழுத்துச் செல்வது, துரியோதனாதியரின் அழிவின் அத்திவாரம், என்பது முதலிரண்டு அடிகளின் கருத்து. மக்களுக்கு நிழலைத் தந்து தாபத்தைத் தணிக்க வேண்டிய துரியோதனனது குடை, தீங்கு இழைத்து வருத்துவதால் நெருப்பு ஆயிற்றே. என்று வருந்தினார் சிலர். இத்தகைய கொடிய காட்சியைக் கண்ட தம் கண்களைத் தண்டிப்பார் போல், அவற்றைத் தம் கைகளினால் புடைப்பாராயினர், வேறு சிலர்.

222. காட்டுந் திறல்வெஞ் சிலைவிசையன்
கையால் வகிர்ந்து கடிகொண்மலர்
சூட்டும் பனிச்சை யிவண்புழுதித்
துகளே றியதென் றழுதுநைவார்
மீட்டுத் தடாம லேகென்று
விட்டாள் மைந்த ரிட்டவினை
கேட்டுங் கொடியள் காந்தாரி
கிளையோ டின்றே கெடுமென்பார்.

[காட்டும் திறல் வெம் சிலை விசையன் கையில் வகிர்ந்து கடி கொள் மலர் சூட்டும் பனிச்சை, இவண் புழுதிததுகள் ஏறியது என்று அழுது நைவார், மீட்டும் தடாமல் ஏகு என்று விட்டாள் மைந்தர் இட்ட வினை கேட்டும், கொடியள் காந்தாரி கிளையோடு இன்றே கெடும் என்பார்.]

**விளக்கம் :**—திறல் காட்டும் வெம் சிலை விசயன் - விற்கலைத் திறமையைத் தெரியக் காட்டியுள்ள வெம் சிலை விசயன், பனிச்சை - கூந்தல். (அத்தகைய விசயன் கையால் வகிர்ந்து மலர் சூட்டப் பெறும் கூந்தல் அன்றோ) இவண் புழுதித் துகள் ஏறியது - இப்பொழுது புழுதி படியப் பெற்ற தாயது,— என்று சிலர் அழுது புலம்பினர். புழுதித் துகள் - ஒருபொருட் பன்மொழி. ஐந்து வகையான கூந்தல் அலங்காரத்தில் ஒன்று பனிச்சை; இங்கே, அது கூந்தல் என்ற பொருளதாயிற்று. மைந்தர் இட்ட வினை கேட்டும், கொடியள் காந்தாரி மீட்டும் தடாமல் ஏகு என்று விட்டாள்,—என்று அன்வயிக்க. மைந்தர் செய்துள்ள காரியத்தைக் கேட்டு அறிந்தும் கொடியவள் காந்தாரி, மீட்டும், அதாவது அறிந்த பின்னும் தன் மைந்தரின் முறைகேடான செயலைத் தடுக்காமல், ஏகு என்று அனுப்பி விட்டாள்,என்பது பொருள். (அத்தகையாள்) கிளையோடு இப்பொழுதே அழிந்து கெடுவாள், என்று சினந்து கூறுவாரா யினர் சிலர்,—என்பதாம்,

மைந்தர் இழைத்த கொடுமையை அறிந்த பின்னும் பாஞ்சாலியை அவைக்கு அனுப்பினாள் ஆதலின், அவளைக் கொடியள் என்றார். அளவு கடந்து செய்த புண்ணிய பாபங்கள் மறுபிறப்பிலன்றி இப்பிறப்பிலேயும் பயன் தரும் என்பது நூற் கொள்கை. துரியோதனாதியர் அளவு கடந்து பாபச் செயல்களை புரிந்து வருதல் பற்றிக் **கிளையோடு காந்தரி இன்றே கெடும்** என்றார்.

223. இரும்போ நெஞ்சிம் மாமனிதற்
கிசைந்தா னொக்க விருந்தென்பார்
பெரும்போ ரரசர் பெண்ணுடனே
பிறந்துஞ் சீறப் பெறாரென்பார்
பொரும்போர் வீமன் பொறுத்தாலும்
பொற்றேர் விசயன் பொறானென்பார்
அரும்போ ரரசர் தகாதென்றால்
வருமோ விந்த வழிவென்பார்.

[இரும்போ நெஞ்சு இ மாமன் இதற்கு இசைந்தான் ஒக்க இருந்து, என்பார்; பெரும் போர் அரசர் பெண்ணுடனே பிறந்தும் சீற பெறார், எனபார்; பெரும் போர் வீமன் பொறுத்தாலும் பொன் தேர்விசயன் பொறான், என்பார்: அரும் போர் தகாது என்றால் வருமோ இந்த அழிவு, என்பார்.]

**விளக்கம் :—** மாமன்-மாமனாரான திருதராட்டிரன், ஒக்க இருந்து இசைந்தான்-கூடவே இருந்து (மைந்தரின் துராலோசனைக்கு உடன்பட்டவனாய் இருந்தான், எனவே, இரும்போ இம்மாமனாரின் நெஞ்சு என்றார் சிலர். போர் திறம் மிக்க அரசர் பெண்ணுடன் பிறந்தவர்களா யிருந்தும், (பாவச் செயல் களைப் புரியும் துரியோதனாதியர் அரசர்களால்) சீறப்பெறாது இருக்கின்றார்களே, என்பார் சிலர்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். வீமன் பொறுத்தாலும் விசயன் பொறான், என்று சிலரும், அரிய போர்த் திறத்தையுடைய அரசர்கள் தகாது என்று சூதாடலைத் தடுத்திருந்தால், பாஞ்சாலிக்கு இந்தக் கேடு நேருமோ, என்று சிலரும், கூறினார், என்க.

துஷ்டர்களான தன் மைந்தர்களின் பாபச் செயல்களுக்கு உடந்தையாய் இருந்ததோடு, தன் மருகியை மானபங்கம் செய்வதையும் தடுக்காமல் இருந்தானாதலால், **இரும்போ** அவன் நெஞ்சம் **என்றார்**. பெரும் போர் அரசர், என்பதை பெரிய போரைச் செய்யவல்ல துரியோதனாதியர், என்றும் பொருள் கொள்ளலாம். துரியோதனாதியரும் **துச்சளை** என்ற ஒரு பெண்ணுடன் பிறந்தவராதலால், ஒரு பெண்ணுடன் பிறந்தவர்களாகிய பாஞ்சாலியை இவ்வாறு மானபங்கம் செய்பவராதல் தகாதே, என்று சிலர் கூறியதாகவும் பொருள் கொள்ளலாம். அப்பொழுது, **பெரும் போர் அரசர்** என்பது, ஒத்த ஆற்றலை உடைய ஆடவரிடம் வீரங் காட்டாது, ஒரு பெண்ணினிடம் பகைமை பாராட்டிக் கொடுமை இழைத்தல் வீரத்தின் பாற்

படாதே, என்று பழிக்கும் பொருளதாகும். அரும் போரி அரசர், என்பதற்கு பாண்டவர், என்றும் பொருள் கொள்ளலாம். சூதாடுதல் தக்கதாகாது என்று மறுத்திருந்தால், இத்தகைய மான அழிவு பாஞ்சாலிக்கு நேர்ந்திராதே. என்று கூறினர் என்பது பொருளாகும்.

224. என்னே குடியிற் பிறந்தாருக்
கிருப்பன் றிவ்வூ ரினியென்பார்
முன்னே யோடி முறையிட்டான்
முனியிங் கொல்லோ வெமையென்பார்
பின்னே யிரங்கி யழுதழுது
பேதுற் றின்னல் பெரிதுழப்பார்
அன்னே துன்பங் களைந்தின்ப
மாவா யென்றே யருள்புரிவார்.

[என்னே குடியில் பிறந்தாருக்கு இருப்பு அன்று இ ஊர் இனி என்பார், முன்னே ஓடி முறையிட்டால் முனியும் கொல்லோ எமை என்பார், பின்னே இரங்கி அழுது அழுது பேதுற்று இன்னல் பெரிது உழப்பார், அன்னே துன்பம் களைந்து இன்பம் ஆவாய் என்றே அருள் புரிவார்.]

**விளக்கம்:—** என்னே-என்ன விபரீதம் இது. நல்ல குடியில் பிறந்தார்க்கு இனி இவ்வூர் வசிக்கத்தக்க இடம் அன்று என்பார் சிலர்; (துரியோதனன்) முன்னே ஓடிச் சென்று ஒரு பெண்ணை மானபங்கம் செய்து தக்கதன்று என்று முறையிட்டால், எங்களை அத்தீயன் கோபித்துக் கொள்வானோ. என்பார் சிலர்; (சிலர்) பாஞ்சாலியின் பின்னே சென்று இரங்கி அழுது புலம்பி மனங் கலங்கி மிகவும் துன்பப் படுவாராயினர்; தாயே, துன்பம் களைந்து விரைவில் இன்பம் அனுபவிப்பவள் ஆவாய், என்று கருணையோடு சிலர் கூறினர்.—என்பது பொருள்.

பேதுறல்-மனங் கலங்கல். அழுது அழுது-மிகுதியாக அழுது. இன்னல்-துன்பம். இன்னல் உழப்பர்-துன்பத்தால் வருந்துவார். களைந்து-ஒழிந்து. இன்பம் ஆவாய்- இன்பம் அனுபவிப்பளாவாய். இனித் துரியோதனனது நகரில் குல மகளிரைத் தீண்டுதல் முதலிய ஈனச் செயல்கள் நிகழக் கூடுமாதலால், 'குடியில் பிறந்தாருக்கு இவ்வூர் இருப்பு அன்று' என்றாராயினர், காந்தாரியின் மனையிலிருந்து பாஞ்சாலியைத் துச்சாதனன் ராஜசபைக்கு இழுத்துச் சென்றதைக் கண்ட மக்களின் கூற்றாகும்

இச் செய்யுள்கள். திரௌபதியின் துன்பம் அகன்று, அவளது வாழ்க்கை இன்பமயமானதாக வேண்டும், என்று மக்கள் பிரார்த்திக்கும் கருத்தது ஈற்றடி.

225. பறைவன் களிற்றுப் பலபுரவிப்
பைம்பொற் றடந்தேர்ப் பாஞ்சாலர்க்(கு)
இறைவன் பாவை யாங்காண
விவையோ படுவ தென்றுரைப்பார்
பொறைவண் சிந்தைத் தருமனுக்குப்
பொய்ச்சூ தறிந்தும் பொரவென்ன
குறைவந் ததுதன் விதிவலியாற்
குறைந்தான் யாவுங் கொடுத்தென்பார்.

[பறை வல் களிறு, பல புரவி பைம்பொன் தடந்தோர் பஞ்சாலர்க்கு இறைவன் பாவை, யாம் காண இவையோ படுவது என்று உரைப்பார்; பொறை வல் சிந்தை தருமனுக்கு, பொய் சூது அறிந்ததும் பொர, என்ன குறை வந்தது! தன்விதி வலியால், குறைந்தான் யாவும் கொடுத்து, என்பார்.]

**விளக்கம்:—** பறை- பிளிறுகின்ற, வல் களிறு- வலிய யானைகள். புரவி- குதிரை. பாஞ்சாலர்க்கு இறைவன்- பாஞ்சாலரின் அரசனான **துருபதன்** (அவனது பெண்ணான பாவை போன்ற பாஞ்சாலி)யாம் காண இவையே படுவது - நாங்கள் காணும்படி இத்தகைய துன்பங்களையோ அனுபவிப்பது —என்றார் சிலர். பொறுமையும் வண்மைக் குணமும் மிக உடைய தருமன் சூது பொய் யுடையது என்பதை அறிந்தும், (அப்பொய்ச்சூதை) பொரும்படி (ஆடும்படி) என்ன புத்திக் குறைவு நேர்ந்து விட்டது, (தருமனுக்கும் அறிவு குறைந்து விட்டதே, என்று இரங்கும் கருத்தது) விதியின் வலியால் எல்லாவற்றையும் பந்தயப் பொருளாக வைத்து இழந்து தாழ்மையை ஏற்றீனாயினான் போலும்,— என்று இரங்கிக் கூறினர் சிலர்,— என்பது ஈற்றடிகளின் பொருள்.

களிறு, புரவி, தேர் என்பன காலாட் படைக்கும் உபலக்ஷணம். நீதிமானான தருமன், சூதாடல் பெரும் பாபங்களில் ஒன்று என்பதை, அறிந்தும், சூது பொரலை மேற்கொண்டது விலக்கரிய விதியின் காரியம் போலும். என்று மக்கள் தங்களைச் சமாதானப்படுத்திக் கொண்டதைக் கூறும் கருத்தின ஈற்றடிகள்.

### பாஞ்சாலி அவை அடைதல்

226. நெடுமா நகரிற் சனமனைத்து
நேயம் பெறக்கண் டிவைகூற
வடுமா மரபிற் குறத்தேடு
மன்பே ரவையின் முன்புக்காள்
கொடுமா மலர்க்கண் புனல்சோரக்
குலைந்தே கிடந்த குழல்சோரத்
வடுமா றுள்ளந் தனிசோரத்
தலைநா ளளித்த தழல்போல்வாள்.

[நெடு மாநகரில் சனம் அனைத்தும் நேயம் பெற இவை கூற, வடு மா மரபிற்கு உற தேடும் மன்பேர் அவையின் முன் புக்காள், கொடும் மாமலர் கண் புனல் சோர, குலைந்தே கிடந்த குழல் சோர, தடுமாறு உள்ளம் தனி சோர, தலைநாள் அளித்த தழல் போல்வாள்.]

**விளக்கம்;**—நெடுமாநகரில்...இவை கூற, தலை நாள் அளித்த தழல் போல் வான் மா மலர்க்கண் கொடும் புனல் சோர உள்ளம் தனி சோர, மா மரபிற்கு வடுஉற,தேடும் மன்பேர்அவையின் முன் புக்காள்,—என்பது அன்வயம். நேயம் பெற-அன்பின் மிகுதியைப் பெற, அதாவது அன்புமிக. வடு- புண்ணினால் உண்டாகும் தழும்பு, இங்கே அழியாத பழியைக் குறித்தது. மரபிற்கு வடு உற தேடும் மன்-தனது உயர்ந்த குலத்திற்கு நீங்காத பழியைத் தேடிக்கொள்கின்ற மன்னனான துரியோதனன்,— அவனது பெரிய சபையின் முன் போய்ப் புகுந்தாள். மலர்க்கண்கொடும் புனல்-தீமை செய்தலையே தொழிலாகக் கொண்ட துரியோதனாதியரான நூற்றுவரின் வாழ்வு அழியக் காரணமாகும் மலர்போன்ற கண்ணின் கொடிய கண்ணீர். சோர என்ற சொல் ஒரே பொருளில் பல முறை வரல், **சொற் பொருட் பின்வரு நிலை அணியாகும்.**

ஆதியில் யாகத்தீயினின்று தோன்றியவளாதலால், திரௌபதியைத் 'தலைநாள் அளித்த தழல் போல் வாள்,'' என்றார்; வேள்வித் தீயில் தோன்றிய கற்பின் கனலியாகிய திரௌபதிக்குத் தீங்கிழைத் தவர் தீய்ந்து அழிவர், என்ற தொனியது இது.

227. நாணே முதலா நாற்குணனு
நண்ணுங் கற்பு நயந்தணிந்த

பூணே யனையா ளழுதரற்றிப்
புன்பே ரவையிற் புகுஞ்சோகம்
காணே மென்று நிலநோக்கிக்
கதிர்வே னிருப ரிருந்திரங்கக்
கோணே நேர்பா டாயிருந்தான்
குருடென் றுரைக்குங் கொடியோனே.

[நாணே முதல் ஆம் நால் குணனும் நண்ணும் கற்பும் நயந்து அணிந்த பூணே அனையாள் அழுது அரற்றி புல்பேர் அவையில் புகும் சோகம், காணோம் என்று நிலம் நோக்கி கதிர் வேல் நிருபர் இருந்து இரங்க, கோணே நேர்பாடாய் இருந்தான், குருடு என்று உரைக்கும் கொடியோனே ]

**விளக்கம் :**—நாண் முதலாம் நாற்குணம் - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, என்ற பெண்மைக் குணங்கள். நண்ணும் கற்பு-பொருந்திய கற்பு. நயந்து அணிந்த - (அணிகலன்களை விரும்பி ஏற்பது போல் பெண்மைக் குணங்களையும் கற்பையும்) விரும்பி மேற்கொண்ட. பூணே அனையாள் - ஆபரணம் போல் சிறந்தவளாகிய பாஞ்சாலி. அவையில் புகும் சோகம் - ராஜ சபையில் (அவள்) புகுகையில் காணலான சோகக் காட்சி. (இச் சோகக் காட்சியைக்) கண்ணால் காண மாட்டோம் என்று, கதிர்வேல் நிருபர் (அரசர்) நிலம் நோக்கினராய் இருந்து வருந்த, குருடன் என்று சொல்லப்படும் கொடியவனான திருதராட்டிரன், கோணலையே (முறைகேடான செயலையே) நேர் பாடாக (நேர்மையான செயலாக)க் கருதிச் சும்மா இருந்திட்டான், என்பது ஈற்றடிகளின் பொருள்.

கலைந்த துகிலும் அவிழ்ந்த கூந்தலுமாகக் கண்கள் பெருக்கும் நீருடன் பூணே அனையாளான தையல், அவை புகுந்த காட்சியைக் காணப் பொறாதவராய் அவையிருந்தோர் நிலம் நோக்கி (தலை கவிழ்ந்து), இருக்கக் குருடனான கொடியன், கோணலான செயலை நேர்மையான செயலாகக் கருதி வாய் பேசாது இருந்தான் —என்பதாம். பெண்களுக்கெல்லாம் ஆபரணம் போல் சிறந்து விளங்கலால், 'பூணே அனையாள்', எனப்பட்டாள். துரியோதனனது முறைகேடான செயலை அவையிருந்தோர் தடுக்காமையின். அச் சபை 'புன்பேர் அவை' எனப்பட்டது.

228. மேகங் குருதி பொழிந்தகல்வான்
மீனும் பகலே மிகவிளங்கி

பூகம் பழுமுற் றுற்பாதம்
போதி யாவும் புரிந்தனவால்
நாகம் புனைபொற் றுவசனுட
னவிலா நின்ற நால்வருமே
சோகம் பிறவா திருந்தார்மற்
றொழிந்தார் யாருஞ் சோகித்தார்.

[மேகம் குருதி பொழிந்து அகல்வான் மீனும் பகலே மிக விளங்கி, பூகம்பமும் உற்று உற்பாதம் போது யாவும் புரிந்தன (ஆல்), நாகம் புனை பொன் துவசனுடன் நவிலா நின்ற நால்வருமே சோகம் பிறவாது இருந்தார், மற்று ஒழிந்தார் யாரும் சோகித்தார்.]

**விளக்கம் :**—மேகம் குருதி பொழிந்தும், அகல்வான் மீனும் (நட்சத்திரங்களும்) பகலே மிக விளங்கவும், பூகம்பம் (அசைதல்) உற்றும், (தோற்றுவித்த) உற்பாதங்கள் யாவும் போது (அப்பொழுது) புரிந்தன. உற்பாதங்கள் - பலவகைப்பட்ட வான உற்பாதங்கள், புரிந்தன - நிகழ்ந்தன. அரவக் கொடியனான துரியோதனனுடன் சேர்த்துப் பேசப் படுகின்ற நால்வருமே சோகம் உண்டாகாதவர்களாய் இருந்தனர்; இவரீ ஒழிந்தார் எல்லாரும் சோகித்து வருந்தினார்கள்,—என்பது பொருள். துரியோதனனுடன் நவிலா நின்ற நால்வர் - துரியோதனனும் அவனோடு சேர்த்துப் பேசப்படுகின்ற சகுனி, துச்சாதனன், கர்ணன் ஆகியோர். மேகம் இரத்தம் பொழிதலும், பகலில் நட்சத்திரங்கள் தோன்றலும், பூமி கம்பித்தலும், விரைவில் நிகழவிருக்கும் கேட்டை அறிவிக்கும் நிமித்தங்கள். போது-யாவு-போதியாவும்-குற்றியலிகரம்.

229. வீமன் கதைமேற் கைவைக்க
விசயன் சிலைமேல் விழிவைக்கத்
தாமம் புனைதோ ளிளையோருந்
தத்தங் கருத்திற் சினமூட்டத்
தூமம் படுசெந் தழலவியச்
சோனை மேகஞ் சொரிவதுபோல்
நாமம் தரும னெனத்தக்கோ
னிளையோ ராற நவிலுற்றான்.

[வீமன் கதை மேல் கைவைக்க விசயன் சிலைமேல் விழி வைக்க, தாமம் புனை தோள் இளையோரும் தம்தம் கருத்தில்

சினம் மூட்ட, தூமம் படு செம் தழல் அவிய சோனை மேகம் சொரிவதுபோல், நாமம் தருமன் என தக்கோன் இளையோர் ஆற நவில் உற்றான்.]

**விளக்கம் :—**தாமம் புனைதோள் இளையோர் - மாலை அணிந்த தோள்களை உடைய நகுல சகதேவர்கள், கருத்தில் சினம் மூட்ட - மனத்தில் கோபம் மூண்டு எழ, அதாவது, கோபம் மிக, தூமம் - புகை. சோனை மேகம் - இடையறாது பொழியும் பெருமழை. நாமம் தருமன் எனத் தக்கோன் - தருமன் என்று பெயரிட்டு அழைக்கத்தக்க தகுதி உடையவனான உதிட்டிரன். இளையோர் ஆற நவில் உற்றான் - இளையோர் சினம் அடங்கப் பெற்றவ ராகும்படி சொல்லத் தொடங்கினான். தருமன் தானும், கோபங் கொள்ள வேண்டிய இந்த சமயத்தி லும், பொறுமையோடு இருந்து, தம்பியரையும் ஆறியிருக்கு மாறு செய்தமையால், "நாமம் தருமன் எனத் தக்கோன்," என்றார். நெருப்பை அவிக்கும் சோனை மாரிபோல், தம்பிய ரின் கோபந் தணியத் தருமன் நவிலலுற்றான், என்றது உவமை அணி.

230\. தேம்போ தனைத்து மெய்சாயுஞ்
சிலபோ தலருஞ் சிலபோது
வேம்போ தங்கு வாழ்வவெலாம்
வெங்கா னுடனே வேவாவோ
ஆம்போ தாகு மதுவன்றி
யாய பொருள்க ளம்முறையே
போம்போ தனைத்தும் போமுன்னம்
பொறுத்தீ ரின்னம் பொறுமென்றான்.

[தேன்போது அனைத்தும் மெய் சாயும் சிலபோது, அலரும் சில போது, வேம்போது அங்கு வாழ்வு எலாம் வெம் கான் உடனே வேவாவோ! ஆம்போது ஆகும், அது அன்றி ஆய பொருள் அனைத்தும் போம்; முன்னம் பொறுத்தீர் இன்னம் பொறும் என்றான்.]

**விளக்கம் :—**சிலபோது (சமயங்களில்) தேனை உடைய மலர் கள் எல்லாம் வாடித் தலை சாயும், சிலவகைப்போது (மலர்கள்) அலரும்,—என்பது முதலடியின் பொருள். (அதேபோல், நாம் வாடி வருந்தும் இச் சமயத்தில் துரியோதனாதியர் மகிழ்ச்சியின் மலர்ந்திருக்கின்றனர் என்பது கருத்து.) (காடு) தீப்பற்றி எரியும் போது, அங்கே வாழ்கின்ற பிராணிகள் எல்லாம் காட்டோடு

கூட வெந்து அழியாவோ, (அழியும் என்றபடி). (அவ்வாறே என்னோடு என்னைச் சார்ந்த நீங்களும் வருந்துகின்றீர்கள், என்பது கருத்து). ஆம்போது (நல்வினை பயன் தரும்போது) எல்லாம் வந்துசேரும். அதுவன்றி - ஆம்போது ஆவது அல்லாமல், அந்த முறைப்படி, நல்வினைப் பயனாய் உண்டாகிய பொருள்கள் எல்லாம் (தீவினைப் பயனாய் அழிய வேணடிய காலத்தில்) போய்விடும்; (ஆகவே) முன்னே, பல சமயங்களில் பொறுத்திருந்த நீங்கள் இன்னமும் பொறுத்திருங்கள்,—என்று தருமன் கூறினான் என்பதாம். பொறுத்தீர் - (முன்பு) பொறுத்திருந்தவர்களே, என்று தருமன் விளித்ததாகவும் பொருள் கொள்ளலாம்.

### திரௌபதியின் துயரம்

231. வாருங் கண்ணீர் வளர்கொங்கை
வரைமே லருவி யெனவீழத்
தாருங் குழலு மின்னுடனே
தலஞ்சேர் கொண்ட லெனவீழக்
கூருந் துயரி னுடன்வீழ்ந்து
கோகோ வென்று கோச்சபையிற்
சோருங் கொடியை முகநோக்கித்
துச்சா தனன்மெய் சுடச்சொன்னான்.

[வாரும் கண் நீர் வளர் கொங்கை வரை மேல் அருவி என வீழ, தாரும் குழலும் மின்னுடனே தலம் சேர் கொண்டல் என வீழ கூரும் துயரினுடன் வீழ்ந்து கோகோ என்று கோ சபையில், சோரும் கொடியை முகன் நோக்கி துச்சாதனன் மெய் சுட சொன்னான்.]

**விளக்கம்:**—செய்யுள் கலபமானதே பெருகி வழியும் கண்ணீர் வளர் கொங்கையாகிய மலைமேல் நீர் அருவிபோல் விழவும், அவள் சூடிய மாலையும் கூந்தலும் மின்னலுடன் மண்படியும் மேகம் போல் தரையில் விழவும். மிகுந்த துன்பத்துடன் மண்ணில் விழுந்து **கோ கோ** என்று அழுதாற்றும் பூங்கொடி போன்ற பாஞ்சாலியின் முகத்தை நோக்கித் துச்சாதனன், (அவளது நெஞ்சொடு) யாக்கையும் வெதும்பும்படி பேசலானான்,—என்பது பொருள்.

திரௌபதியின் கொங்கை மலை. அதன்மீது வழியும் கண்ணீர், மலைமீது பெருகி வழியும்; கூந்தல், மேகம், அதன்மேல்

சூடியுள்ள மாலை மின்னல், தாரும் கூந்தலும் தரை வீழ்ந்தது, மின்னலோடு மேகம் வரை படிந்ததை ஒத்திருந்தது, என்ற இது இல்பொருள் உவமை. கோ கோ, என்றது இரக்க ஒலியைக் குறிக்கும் இடைச்சொல்.

232. மன்வந் திருந்த சங்கத்துன்
மாம னிருந்தா னைவருமுன்
முன்வந் திருந்தார் முன்கொண்ட
முறையான் முயங்கு முடிவேந்தர்
மின்வந் தனைய நுண்ணிடையாய்
விழிநீர் சொரிந்து மெலியவுனக்(கு)
என்வந் ததுகொல் பொதுமகளிர்க்
கரிதோ விழிநீ ரெளிதென்றான்.

[மன் வந்து இருந்த சங்கத்து உன், மாமன் இருந்தான், ஐவரும் முன் வந்து இருந்தார், முன் கொண்ட முறையால் முயங்கும் முடிவேந்தர்; மின் வந்து அனைய நுண் இடையாய் விழி நீர் சொரிந்து மெலிய உனக்கு, என் வந்தது கொல்? பொது மகளிர்க்கு அரிதோ, விழி நீர், எளிது என்றான்.]

**விளக்கம் :**—மன் வந்து இருந்த சங்கம் - அரசர்கள் வந்து கூடியிருக்கும் இந்த சபை. மாமன் - மாமனாரான திருதராட்டிரன். முன்கொண்ட முறையால் முயங்கும் முடிவேந்தர் ஐவரும் உன் முன் வந்து இருந்தார்,—என்று அன்வயிக்க. உன்னை மணந்துகொண்ட முறைப்படி தழுவும் முடிவேந்தர்களாகிய பாண்டவர் ஐவரும் உன் எதிரிலே வந்திருக்கின்றனர்,- என்பது பொருள். மின் வந்தனைய நுண் இடையாய் - மின்னல் வந்து பொருந்தியது போன்ற மிக நுட்பமான இடையை உடையவளே. (இவ்வாறு பாஞ்சாலியை விளித்து) விழிநீர் சொரிந்து மெலிய உனக்கு என் வந்தது கொல் - கண்ணீர் விட்டு அழுது தளர உனக்கு என்ன நேர்ந்துவிட்டது? (ஒன்று மில்லையே). பொதுமகள் - வேசை. வேசையர்க்கு நினைத்தபோது அழுதல் அரியதன்றே; எளிமையானதுதானே. எனவே அழுகின்றாய்,— என்று துச்சாதனன் சுடச்சுடக் கடுஞ்சொல் வழங்கினான்.

மாமன் என்பதை விதுரனாகவுங் கொள்ளலாம். சபையில் உன்னை ரட்சிக்க மாமனும், கொண்ட கணவர்களும் இருக்க, நீ அழுவதேன்? காரணமின்றி அழுதலும் சிரித்தலும் பொது மகளிர்க்கு எளியதே. எனவே, அழுகின்றாய், என்று துச்சாதனன் சொல்லால் அவளைச் சுடலானான். அவசிய

மில்லாமல் திரௌபதி அழுதல் என்ற சிறப்புப் பொருளை, வேசையர்க்கு அவ்வாறு செய்தல் எளியதே. என்ற பொதுப் பொருளால் சாதிக்கும் இது வேற்றுப்பொருள் வைப்பாகும்.

திரௌபதியின் முறையீடு

233. பொல்லா வசையே புகழ்பூணாப்
புல்லன் புகல விதற்கொன்றும்
சொல்லா திருந்த பேரவையைத்
தொழுதா ளழுதாள் சோர்வுற்றாள்
மல்லார் திண்டோண் மாமாவோ
மந்தா கினியாண் மதலாயோ
எல்லா நெறியு முணர்ந்தவருக்
கிதுவோ மண்ணி லியல்பென்றாள்.

[பொல்லா வசையே புகழ் பூணா புல்லன் புகல, இதற்கு ஒன்றும் சொல்லாது இருந்த பேர் அவையை தொழுதாள், அழுதாள், சோர்வு உற்றாள்; மல் சூர் திண் தோள் மாமாவோ. மந்தாகினியாள் மதலாயோ, எல்லா நெறியும் உணர்ந்தார்க்கு, இதுவோ மண்ணில் இயல்பு என்றாள்.]

விளக்கம் :—புகழ் பூணா புல்லன் பொல்லா வசையே புகல - புகழைப் பூணாகக் கொள்ளாத அற்பனாகிய துச்சாதனன், பொல்லாத பழிச் சொற்களை வழங்க. இதற்கு எதிர் ஒன்றும் சொல்லாத சபையை நோக்கித் தொழுதும், அழுதும், ஏங்கியும் நின்ற நங்கை' மாமனையும், வீடுமனையும் முறையே விளித்து, நீதிகளை எல்லாம் நன்கு அறிந்த உங்களுக்கு, வாய் பேசாதிருக்கும் இச் செயல் அழகோ, அல்லது நல்லியல்பின்பாற் பட்டதாமோ,—என்று முறையிட்டாள், என்பதாம்.

234. இன்னற் படுஞ்சொற் பாஞ்சாலி
யிரக்கந் தனைக்கண் டிரக்கமுறா
மன்னற் கிளையோய் தவறுரைத்தல்
வழக்கோ வடமீ னனையாளை
என்னக் கழறி நீயுரைத்த
வெலா மரசற் கியம்பென்றான்
முன்னர்ப் புகலுங் குருதலத்தோர்
முதலாம் வாய்மை மொழியோனே.

[இன்னல் படும் சொல் பாஞ்சாலி இரக்கந் தனை கண்டு இரக்க முறா, மன்னற்கு இளையோய், தவறு உரைத்தல் வழக்கோ வடமீன் அனையாளை, என்னக் கழறி, (பிறகு பாஞ்சாலியை நோக்கி) நீ உரைத்த எலாம் அரசற்கு இயம்பு என்றான், முன்னர் புகலும் குருகுலத்தோர் முதல் ஆம் வாய்மை மொழியோன், (ஏ).]

**விளக்கம் :**—முதன்மைச் சிறப்புடையதாகப் பேசப்படும் குரு குலத்தோருள் வயதாலும் ஒழுக்கத்தாலும் பெரியவனும், வாய்மை கடவா மொழியினனும் ஆன வீடுமன்,—என்பது ஈற்றடியின் பொருள். அவன் கூறியதைக் கூறும் முதல் மூன்று அடிகள். (அவன், முறையிட்ட பாஞ்சாலியின்) இன்னலைத் தெரிவிக்கும் சொற்களைக் கொண்ட பாஞ்சாலியின் பொருள். மன்னனான துரியோதனனுக்குத் தம்பியாகிய துச்சாதனனே, வடமீன் (அருந்ததி) அனையளான பதிவிரதையைக் குறித்துத் தவறான சொற்களைக் கூறல் முறையாகுமோ,—என்பது இரண்டாவது அடியின் பொருள். (இவ்வாறு வீடுமன் துச்சாதனனுக்குச் சொல்லி, பின்னர் நங்கையை நோக்கி) நீ முன்னே பிராதிகாமியிடம் சொல்லிய வெல்லாம் அரசனாகிய திருதராட்டிரனிடம் சொல்க, என்றான்,—என்பது மூன்றாவது அடியின் பொருள். பாஞ்சாலியின் துயரத்தைக் காணப் பொறாத வீடுமன், வசை வழங்கிய துச்சாதனனை தய மொழிகளால் தகைந்து. பின்னர் அரசனிடம் உன் கட்சியைச் சொல்லி நியாயம் கேள், என்று கூறினான் என்க.

### திரௌபதி நியாயம் வேண்டல்

235. மன்றோற் றனன் வெஞ்சூதாகில்
வழக்காற் கொண்மின் மன்னவையின்
முன்றோற் றனனோ வென்னையுந்தான்
முன்னே யிசைத்துத் தனைத்தோற்ற
பின்றோற் றனனோ கரியாகப்
பெரியோ ருண்மை பேசுகென
மின்றோற் றனைய நுண்ணிடையாள்
விழிநீர் வெள்ள மிசைவீழ்ந்தாள்

[மன் தோற்றனன் வெம் சூது ஆகில் வழக்கால் கொள்மின் மன் அவையில் முன் தோற்றனனோ உன்னையும், முன்னே

இசைத்து தனை தோற்றபின் தோற்றனனோ? கரியாக பெரியோர் உண்மை பேசுக என, மின் தோற்று அனைய நுண் இடையாள் விழிநீர் வெள்ளம் மிசை வீழ்ந்தாள்.]

**விளக்கம் :**—மின் தோற்று அனைய நுண் இடையாள், மன் வெம் சூது வழக்கால் தோற்றனன் ஆகில் கொள்மின்; மன் அவையில் தான் (தருமன்) என்னையும் முன் தோற்றனனோ? முன்னே தனை இசைத்து தோற்றபின் தோற்றனனோ? பெரியோர் கரியாக உண்மை பேசுக, என, விழிநீர் வெள்ளம் மிசை வீழ்ந்தாள்,—என்பது அன்வயம். வழக்கு - முறை, நியாயம். என்னையும் - (மற்றப் பொருள்களோடும், தம்பியரோடும்) என்னையும். முன்னர் பிராதிகாமி கற்பித்துக் கூறியதையே இப்போது திரௌபதி கூறுகின்றாள், தருமன் என்னைத் தோற்ற பின்பு தன்னைத் தோற்றனா? அல்லது தன்னைத் தோற்ற பின்பு என்னைத் தோற்றானா? முன்னதாயின், என்னை அடிமை கொள்ளல் சூதாட்டமுறையாகும். பின்னதாயின், அடிமைக்குப் பணயம் கூற உரிமை இல்லை,—என்று சபையோரிடம் முறையிட்டாள். தோற்று என்பது எச்சத் திரிபாய்த் தோற்றால், என்ற பொருளில் நின்றது.

236. மையயோ டரிக்கண் மழைபொழிய
வாடுங் கொடியின் மொழிக்காகார்
வெய்யோ னெண்ணந் தனக்காகார்
விறல்வேல் வேந்தர் வெரூஉக்கொண்டு
பொய்யோ வன்று மெய்யாகப்
புனையோ வியம்போ லிருந்தாரே
ஐயோ வந்தக் கொடுமையையா
முரைக்கும் பொழுதைக் கதிபாவம்.

[மையோடு அரிகண் மழை பொழிய வாடும் கொடியின் மொழிக்கு ஆகார், வெய்யோன் எண்ணம் தனக்கு ஆகார் விறல் வேல் வேந்தர் வெரூஉக் கொண்டு; பொய்யோ அன்று, மெய் ஆக புனை ஓவியம் போல் இருந்தாரே! ஐயோ அந்த கொடுமையை யாம் உரைக்கும் பொழுதைக்கு அதி பாவம்.]

**விளக்கம் :**—விறல் வேந்தர் வெரூஉக் கொண்டு (துரியோதனனிடம் அச்சங்கொண்டு) திரௌபதியின் வினாவிற்கு பதில் மொழியக் கூடாதவர்களாயும், கொடியனான துரியோதனனது எண்ணத்திற்கு இணங்கிப் பேசும் மனமில்லாதவர்

களாயும், பொய் அன்று. உண்மையாகவே, எழுதப்பெற்ற சித்திரம்போல் வாய் பேசாது இருந்தார்கள்! ஐயோ, அந்தக் கொடுமையைச் சொல்லும் அப்பொழுதே பெரும் பாவம் நமக்கு உண்டாகும், என்று கவி இரங்கியபடி. பொழுதைக்கு - பொழுதில், (சொன்ன) அளவில்.

ஆற்றலுடைய வேல் வேந்தராய் இருந்தும் ஒரு பெண் அழுது புலம்புகையில், துரியோதனனுக்கு அஞ்சி நீதியை எடுத்துக் கூறாமல் இருந்நது பற்றிக் **கோழையர்** என்ற கருத்தில், அவையிருந்த அரசர்களை 'விறல் வேந்தர்' என்றார். இது கவிக் கூற்று.

**விகர்ணன் கூற்று**

237. அல்லார் கூந்தல் விரித்தமயி
லனையா ளரற்ற வதற்கொன்றும்
சொல்லா தூமர் கணம்போலத்
தொல்போர் வேந்தர் சூழ்ந்திருப்ப
மல்லார் தடந்தோள் விகருணனாம்
வாய்மைக் கடவுள் வாள்வேந்தீர்
பொல்லா நெறியி லனைவீரும்
போகா வண்ணம் புகலீரே.

[அல் ஆர் கூந்தல் விரித்த மயில் அனையாள் அரற்ற அதற்கு ஒன்றும் சொல்லாது ஊமர் கணம் போல தொல் போர் வேந்தர் சூழ்ந்து இருப்ப, மல் ஆர் தடந்தோள் விகருணன் ஆம் வாய்மை கடவுள், வாள் வேந்தீர் பொல்லா நெறியில் அனைவீரும் போகா வண்ணம் புகலீரே.]

**விளக்கம் :**—அல் - இருள். (திரௌபதி அழுது அரற்ற பழமையான குலம் வந்த போர் வேந்தர்கள் ஊமையர்கள் கூட்டம்போல் வாய் திறவாது சூழ்ந்து இருக்க) மல் ஆர் தடந்தோள் விகருணன் ஆம் வாய்மை கடவுள் - மற்போர் செய்தற்குரிய விசாலமான தோள்களையுடைய விகர்ணன் என்ற பெயரினனா சத்தியதேவதை போன்றவன், "வாள் வேந்தீர், நீங்கள் அனைவரும், பொல்லா நெறியில் (நரகம் செல்லும் பாதையில்) போகாதிருக்கும் பொருட்டு, நியாயத்தை எடுத்துக் கூறுங்கள், (என்றான்) என்பதாம்.

விகர்ணன், துரியோதனன் தம்பியரில் ஒருவன். நீதியில் நிலைத்து நிற்கும் செவ்வியன் இவன். இவன், 'வாள் வேந்தீர்'

என்று விளித்தது, "என் அண்ணனுக்கு அஞ்சி மௌனமாய் இராதீர்; நியாயத்தைக் கூறுங்கள்," என்று கூறும் கருத்தது செய்யுள். "தீங்கிற்கு உள்ளான அபலை ஒருத்திக்கு நியாயம் செய்யீரேல் நரகமே உங்களுக்கு உரிய இடமாகும்," என்று விகர்ணன் கூறியபடி. இச் செய்யுளும், இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும் ஒரு தொடர்.

238. முறையோ வென்றென் றவனிதல
முழுது முடையான் முடித்தேவி
நிறையோ டழிந்து வினவவுநீர்
நினைவற் றிருந்தீர் நினைவற்றோ
இறையோன் முனியும் மெனநினைந்தோ
விருந்தா லுறுதி யெடுத்தியம்பல்
குறையோ கண்கண் டதுநாளுங்
குலத்துப் பிறந்தோர் கூறாரோ.

[முறையோ என்று என்று அவனி தலம் முழுதும் உடையான் முடி தேவி நிறையோடு அழிந்து வினவவும், நீர் நினைவு அற்று இருந்தீர் நினைவு அற்றோ? இறையோன் முனியும் என நினைந்தோ? இருந்தால் உறுதி எடுத்து இயம் பல் குறை ஆமோ? கண் கண்டது நாளும் குலத்து பிறந்தோர் கூறாரோ]

**விளக்கம்:**—பூமி முழுதையும் உடையனான தருமனது பட்ட மகிஷி 'இது முறையோ?' என்று பல முறை சொல்லி, நிறை (மனவுறுதி) அழியா நலத்தோடு, வருந்தி நியாயம் கேட்கவும், நீங்கள் ஏதுவொன்றும் செய்யும் எண்ணம் இல்லாது (பிரதிமை போல்) இருக்கின்றீர்கள்! (இவ்வாறு மௌனமாய் நீங்கள் இருத்தற்குக் காரணம்) புத்தி சுவாதீனம் இல்லாமையோ? அல்லது அரசனான துரியோதனன் முனியும் என்று அஞ்சியோ? [நியாயம்] இருந்தால், நியாயத்தை எடுத்து உரைத்தல் குற்றமாகுமோ! நல்ல குலத்தில் பிறந்தோர் கண்ணால் கண்டதாகிய அநியாயத்தை எப்போழுதும் அநியாயம் என்று கூறாது சும்மா இருப்பார்களோ.—என்பது பொருள். பாண்டவர் துரியோதனாதியர் ஆகிய இரு திறத்தாருள்ளும், தருமன் வயதில் பெரியவனானதினாலும், இராசசூயம் முடித்து சம்ராட் என்ற பட்டம் பெற்றவனானதினாலும், 'அவனிதலம் முழுது உடையான்' என்றார். அவனுடைய மனைவி 'முடித்தேவி' எனப்பட்டாள்.

239. தன்னே ரில்லா நெறித்தருமன்
றனவென் றுரைக்கத் தக்கவெலாம்
முன்னே தோற்றுத் தங்களையு
முறையே தோற்று முடிவுற்றான்
சொன்னே ருரைக்குத் தான்பிறர்க்குத்
தொண்டாய் விட்டுச் சுரிகுழலைப்
பின்னே தோற்க வுரிமையினாற்
பெறுமோ வென்று பேசீரோ.

[தன் நேர் இல்லா நெறி தருமன் தன என்று உரைக்க தக்க எலாம் முன்னே தோற்று, தங்களையும் முறையே தோற்று முடிவு உற்றான், சொல் நேர் உரைக்கு, தான் பிறர்க்கு தொண்டாய் விட்டு; சுரிகுழலை பின்னே தோற்க உரிமையினால் பெறுமோ என்று பேசீரோ]

**விளக்கம்**; நெறி - நல்லொழுக்கம். தன - தன்னுடையன. தங்களையும் முறையே தோற்று முடிவு உற்றான் - தங்கள் ஐவரையும் முறையே பணயம் வைத்து தோற்று ஆட்டம் முடிவுறப் பெற்றான். அல்லது பணயம் வைக்கப் பொருள் இல்லாதவனாயினான். தான்பிறர்க்கு அடிமையாய்விட்ட பின் (சகுனி) எதிரில் சொல்லிய சொல்லுக்கு உடன்பட்டுச் சுரிகுழலை உரிமையினால் (ஆட்ட முறைப்படி) தோற்க உரிமை பெறுவானோ என்று (அவையோர்களே) கூறமாட்டீர்களோ,—என்பது பொருள். ஆட்ட முறைப்படி பார்த்தாலும், முதலில் அடிமையான தருமனுக்கு மனைவியை வைத்தாடும் உரிமையில்லை என்று, விகர்ணன் கூறினான், என்க.

240. என்னா மன்னர் முகநோக்கி
யெல்லா யிதயங் களுமகிழச்
சொன்னா னெவருந் தக்கோனென்
றவனுக் கொருபேர் சூட்டியபின்
நன்னா மனத்தோ டழன் மூள
நயனஞ் சிவக்க நஞ்சின்வடி(வு)
அன்னா னிளவன் முகநோக்கி
யருக்கன் குமர னறைகின்றான்.

[என்னா மன்னர் முகம் நோக்கி எல்லா இதயங்களும் மகிழ சொன்னான், எவரும் தக்கோன் என்று அவனுக்கு ஒரு பேர்

சூட்டிய பின். நல் நா மனத்தோடு அழல் மூள, நயனம் சிவக்க நஞ்சின் வடிவு அன்னான் இளவல் முகம் நோக்கி, அருக்கன் குமரன் அறைகின்றான்.]

**விளக்கம்:** என்னா - நியாயத்தை எடுத்துப் பேசீரோ என்று, மன்னர் முகம் நோக்கி...சொன்னான் - அவையிருந்தார் முகம் நோக்கி துஷ்ட சதுஷ்டர் ஒழிந்த மற்றவர்களுடைய உள்ளம் மகிழும்படி (விகர்ணன்) சொன்னான். எவரும் - (மன்னன், மாமன், தம்பி, கர்ணன் ஒழிந்த) மற்றவர் அனைவரும், தக்கோன்...சூட்டிய பின் - நல்லவன், அல்லது யோக்கியன் என்று பெயர் சூட்டியபின், கர்ணன் பேசலுற்றான். அருக்கன் குமரன் - சூர்ய புத்திரனான கர்ணன் நல் நா மனத்தோடு அழல் மூள - அவனது நல்ல நாவிலும் மனத்திலும் கோபக் கனல் மூண்டு எழவும், நயனம் சிவக்க - கண்கள் சிவக்கவும். நஞ்சின் வடிவு அன்னான் இளவல் முகம் நோக்கி - விஷத்தின் உருவம் போன்றவனான துரியோதனனது தம்பியான விகர்ணனின் முகத்தை நோக்கி, அறைகின்றான் - பேசலுற்றான். அண்ண னுக்கு முன் அவனது செயலைக் கண்டித்துப் பேசியதனால். விகரணன் **தக்கோன்** என்ற பெயருக்கு உரியவனானான், தக்கோன், என்று அவையோர் அழைத்தது, அவர்கள் இளவலது வார்த்தை ஏற்றனர், என்பதைத் தெரிவிக்கும்

**வேறு**

**கர்ணன் கூற்று**

241. இருக்கின்ற தரணிபரி னின்னறிவா
லுயர்ந்தனையோ விராச நீதி
குருக்கொண்டு முதிர்ந்தனையோ நினையொழிந்
தால்வழக்கொருவர் குறிப்பா ரற்றோ
மருக்கொண்ட தொடைமுடியாய் மொழிகென
நின்னுடன்கேட்க வந்தா ருண்டோ
உரைக்கும்போ தெவ்வுரையு முணர்ந்தன்றோ
உரைப்பதென வுருத்தான் மன்னோ.

[இருக்கின்ற தரணிபரின் இன் அறிவால் உயர்ந்தனையோ. இராச நீதி குரு கொண்டு முதிர்ந்தனையே? நினை ஒழிந்தால் வழக்கு ஒருவர் குறிப்பார் அற்றோ? மரு கொண்ட தொடை முடியாய் மொழிக என, நின்னுடன் கேட்க வந்தார் உண்டோ; உரைக்கும் போது எ உரையும் உணர்ந்து அன்றோ உரைப்பது என உருத்தான் (மன்னோ).]

**விளக்கம்:**— தரணிபர் அரசர். இன் அறிவு-தெளிவுடைய நல்லறிவு. குருக்கொண்டு முதிர்தல்-பெருமை எய்திப் பிரகாசித்தல் (குரு என்ற வடமொழிச் சொல் மிகுதிப்பொருளது) வழக்கு-நியாயம் மருக்கொண்ட தொடை முடியாய்-மணங் கமழும் மாலை தரித்த முடியை உடைய விகர்ணனே உரைக்கும் போது எவ்வுரையும் உணர்ந்து அன்றோ உரைப்பது ஒன்று பேசத் துணிந்த போது (பேசுமுன் வயதால் முதிர்ந்தோரிடம்) கலந்து ஆலோசித்தன்றோ பேச வேண்டும், மருக்கொண்ட தொடை முடியாய் என்று கர்ணன் விகர்ணனை அழைத்துக் கோபத்துடன் கூறுவான், "இங்கே கூடியிருக்கின்ற அரசர்களைக் காட்டிலும் அறிவால் உயர்ந்தனையோ; அரச நீதியின் தேர்ச்சியினால் பெருமையுற்றிருக்கின்றாயோ? நீதியை எடுத்துரைப்பார் உன்னையன்றி வேறெவரும் இல்லை என்ற எண்ணத்தில் பேசுகின்றாயோ? நீதியைக் கூறுக, என்று உன்னைக் கேட்க வந்தார் யாரேனும் உளரோ? ஒன்றைக் கூறுமுன் பலருடன் கலந்து ஆலோசித்து அதன்பின் அன்றோ பேச வேண்டும்,"—என்று கர்ணன் உருத்தான் (சினந்து கூறினான்),—என்பது பொருள். அதாவது, "வயதில் இளையவனும் அறிவு முதிராதவனுமாகிய நீ உன்னை ஒருவரும் கேளாதிருக்கையிலேயே எவரோடும் கலந்து ஆலோசிக்காமல் பேசப் புகுந்தது முறை கடந்த செய்கையாகும்" என்று கர்ணன் கடியும் கருத்தது.

242. தான்படைத்த பொருளனைத்துந் தம்பியர்க
ளுடன்றோற்றுத் தனையுந்தோற்றால்
மீன்படைத்த மதிமுகத்தா ளிவன்படைத்த
தனமன்றிவேறே கொல்லோ
வான்படைத்த நெடும்புரிசை மாநகருந்
தனதில்லும் வழங்குமாயின்
யான்படைத்த மொழியன்றே யெங்கணுமில்
லெனப்பட்டா ளில்லாளன்றோ.

[தான் படைத்த பொருளனைத்தும் தம்பியர்களுடன் தோற்று தனையும் தோற்றால் மீன் படைத்த மதி முகத்தாள் இவன் படைத்த தனம் அன்றி வேறே கொல்லோ? வான் படைத்த நெடும் புரிசை மாநகரும், தனது இல்லும் வழங்கும் ஆயின் யான்படைத்த மொழி அன்றே எங்கணும் இல் எனப்பட்டாள் இல்லாள் அன்றோ!]

**விளக்கம்:—** மீன் படைத்த மதி முகத்தாள்-இரு மீன்கள் பொருந்தியதான ஒரு சந்திரனைப் போன்ற திரௌபதி இவன் படைத்த தனம் அன்றி வேறே கொல் (ஓ)—இத்தருமன் பெற்ற பொருள்களில் இவளும் ஒன்றன்றி வேறு ஆவாளோ? வான் படைத்த-ஆகாயத்தை அளாவியுள்ள, புரிசை-மதில், இல்-வாழும் மனை; மனைவியுமாம். எங்கணும்-எல்லா நூல் வழக்கிலும் உலக வழக்கிலும் இல் எனப்பட்டாள் இல்லாள் அன்றோ - இல் எனப்படுவள் இல்லாள் (மனைவி) அன்றோ? (இது) யான் படைத்த மொழி அன்று - இது நான் கட்டிச் சொல்லும் வார்த்தை அன்று.

''தருமன் எப்பொழுது தனதாய பொருள்களை எல்லாம் தோற்றானோ அப்பொழுதே அவனது சொத்தாகிய திரௌபதியும் அவற்றில் அடங்க வேண்டியவளே, மேலும் நாடும் நகரும் இல்லும் நமக்கு வழங்கினான் என்றால் நகரோடு வாழ் மனையும் அடங்குமாதலால் இல் என்ற சொல் மனைவியையே குறிக்கும். இல்லாளை இல் என்பது உலக வழக்கோடு நூல் வழக்கும் ஆகும், இது என் கற்பனை அன்று. ஆகவே, திரௌபதி வெல்லப்பட்டவளாகின்றாள்,'' என்று போலி நியாயங்களால் விகர்ணனைக் கர்ணன் மருட்டுங் கருத்தது.

243. மைக்கோதில் கலையுடையன் மதியுடையன்
பொறையுடையன் வரிசை யாகத்
தக்கோனென் றரசரெல்லா முரைத்தபெய
ரிவன்றனக்கே தக்க தம்மா
மிக்கோர்மற் றுங்களைப்போல் வேறுண்டோ
மகிதலத்து வேந்த ராகித்
தொக்கோர்யா னுவன்றமொழிக் கெதிர்மொழி
யுண்டாமாகிற் சொல்லு வீரே.

[மை கோது இல் கலை உடையன் மதி உடையன், பொறை உடையன் வரிசை ஆக தக்கோன் என்று அரசர் எல்லாம் உரைத்த பெயர் இவன் தனக்கே தக்கது அம்மா! மிக்கோர் மற்று உங்களைப் போல் வேறு உண்டோ? மகிதலத்து வேந்தர் ஆகி தொக்கோர் யான் நுவன்ற மொழிக்கு எதிர் மொழி (ஒன்று) உண்டாம் ஆகில் சொல்லுவீரே.]

**விளக்கம் :—**முன் செய்யுளில் விகர்ணனைக் கடிந்து கூறிய கர்ணன் இப்பொழுது சபையில் உள்ளோரை நோக்கிக் கூறுவானாயினன். மைகோதில் கலை உடையன் மதி

உடையன், பொறை உடையன்; ஆதலினால் தக்கோன், என்று அரசர் எல்லாம் வரிசையாக உரைத்த பெயர் இவன் தனக்கே தக்கதாகும். அம்மா - என்ன ஆச்சரியம், அதாவது இப்பெயருக்குத் தகுதியில்லாதவன் விகர்ணன் என்று கூறும் கருத்தது. மைக்கோது இல் கலை உடையன் - குற்றம் குறை இல்லாத நூல் உணர்வு உடையவன், வரிசை - ஒழுங்கு, பரிசுப் பொருளாகக் கொடுக்கப்படும் சீர்; சிறப்பு. இங்கே, அது அரசர்கள் **சிறப்பாக** (விகர்ணனுக்கு) இட்டபெயர், என்ற பொருளதாகின்றது.

''மகிதலத்து வேந்தராகி தோக்கோர் (ஆகிய உங்களில்) மிக்கோர் உங்களைப்போல், வேறு உண்டோ?'' என்று சபை யோரைப் புகழ்ந்த கர்ணன், யான் நுவன்றதற்கு எதிர் உண்டாயின் சொல்லுக, என்றான்,—என்பதாம். தோக்கோர் - (அவையில்) நிறைந்தவர். மிக்கோர் - பெருமையில் சிறந்தவர். அம்மா, என்ற வியப்பு இடைச் சொல், விகர்ணனைத் **தக்கோன்** என்று கூறியவரை இகழும் கருத்தது. மைக்கோது, ஒரே பொருளுடைய இருசொல்.

**துரியோதனன் துகில் உரிய ஏவல்**

244. என்னவெகுண் டிடுகின்ற வெல்லைதனி
லெழுவுறழ்தோ ளிராசராசன்
தன்னனைய கொடுங்கோபத் தம்பியையின்
றும்பிதனைத் தக்கோனென்ற
மன்னவயி னெதிரேயிம் மானமிலா
வைவரையும் வழக்குவார்த்தை
சொன்னகிளி மொழியினையுந் துகிலுரிதி
யெனவுருமிற் சொன்னான் மன்னோ.

[என்ன வெகுண்டிடுகின்ற எல்லை தனில், எழு உறழ் தோள் இராசராசன் தன் அனைய கொடும் கோபம் தம்பியை (நோக்கி), இன்று உம்பி தனை தக்கோன் என்ற மன் அவையின் எதிரே இ மானமிலா ஐவரையும், வழக்கு வார்த்தை சொன்ன கிளி மொழியினையும் துகில் உரிதி, என, உருமின் சொன்னான், (மன்னோ).]

**விளக்கம்:**—எழு உறழ் தோள் - தூண்களைப் போன்ற தோள்கள். இராசராசன் - துரியோதனன். வழக்கு வார்த்தை

சொன்ன கிளிமொழி - சபையில் வழக்காடிய (நியாயம் கேட்ட) திரௌபதி,—(அவள்) ஆடைகளை உரிந்திடுக என்று இடியிடித் தால்போல் தம்பியை ஏவினான், என்க. பாண்டவர்க்குத் தீங் கிழைத்தலில் துரியோதனனை ஒத்தவனாதலால், துச்சாதனன்,'' ''தன்னையே கொடுங்கோபத் தம்பி,'' எனப்பட்டான். தன் கருத்திற்கு எதிராக விகர்ணன் பேசியதால், அவனைத் தம்பி என்று அழைக்க மனம் இல்லாமல் தீயனான துரியோதனன், உம்பி, என்றான். திரௌபதி தனது சபையில் நியாயம் வேண்டி வழக்குரைத்தா ளாதலால், அதற்குத் தண்டனையாக அவளது துகிலையும் உரிய ஏவினான், என்பது தோன்ற, ''வழக்கு வார்த்தை சொன்ன கிளிமொழி'' என்றான் ஆயிற்று.

245. இத்தகவின் மொழிசெவியி னெரிவாளி
யெனமூழ்க விருந்த வேந்தர்
தத்தமன மடிந்துருகத் தருமன்முக
மதிநோக்கித் தம்மி னோக்கி
வித்தகவெங் கதைநோக்க விறல்வீமன்
விசயனுந்தன் வில்லை நோக்க
ஒத்தமன னுடையிளையோ ருருப்பவடக்
கினனுண்மைக் குறுதி போல்வான்.

[இ தகவு இல் மொழி செவியின் எரி வாளி என மூழ்க, இருந்த வேந்தர் தம் தம் மனம் மடிந்து உருக, தருமன் முகம் மதி நோக்கி, தம்மில் நோக்கி, வித்தகம் வெம் கதை நோக்க விறல் வீமன், விசயனும் தன் வில்லை நோக்க, ஒத்த மனம் உடை இளையோர் உருப்ப, அடக்கினன் உண்மைக்கு உறுதி போல் வான்.]

**விளக்கம் :**—தகவு இல் மொழி - துரியோதனனுடைய தகுதி யற்ற வார்த்தை. மனம் மடிந்து-மனம் சோர்ந்து. வித்தக வெம் கதை - தான் பயின்று தேர்ந்த **சத்ருகாதினி** என்ற கதை. ஒத்த மனம் உடை இளைஞர்-வீமார்ச்சுனர்களோடு ஒத்த கருத்தை யுடைய நகுல சகதேவர். உருப்ப - அவர் கோபங்கொள்ள. உண்மைக்கு உறுதி போல்வான் - சத்தியத்திற்கு உயிர் நாடி போன்றவனான தருமன். அடக்கினான் - தம்பியர் நால்வரையும் (குறிப்பால்) அடங்கியிருக்கச் செய்தான். தருமனைத் தம்பியர் நோக்கியது, அவன் கருத்தை அறியும் பொருட்டு, என்க. அவர் தம்மில் ஒருவரை ஒருவர் நோக்கியது இந் நிலையில் செய்யத் தக்கது யாது, என்று துணியும் பொருட்டு, என்க.

246. தருகதுகி லெனவெழுந்து தங்களைவன்
பொடுதுச்சா தனன்சொலாமுன்
வருகவென வரைமார்பின் வாங்காத
வுத்தரியம் வாங்கியீ ந்தார்
அருகணுகி மடவரலை யஞ்சாமற்
றுகிலுரிவா னடைந்த போதில்
இருகைநறு மலர்தகைய வெம்பெருமா
னிணையடிக்கே யிதயம் வைத்தாள்.

[தருக துகில் என, எழுந்து தங்களை வன்பொடு துச்சாதனன் சொலாமுன். வருக என, வரை மார்பின் வாங்காத உத்திரியம் வாங்கி ஈந்தார், அருகு அணுகி மடவரலை அஞ்சாமல் துகில் உரிவான் அடைந்தபோதில், (அவள்) இரு கை நறுமலர் தகைய. எம்பெருமான் இணை அடிக்கே இதயம் வைத்தாள்.]

**விளக்கம் :—** வன்புடன்-கடுமையாக, வரைமார்பு-மலை போன்ற வலிய மார்பு, வாங்காத உத்திரியம் வாங்கி-இதுவரை களைந்திராத உத்திரியங்களை களைந்து; (பின்னர் துச்சாதனன் திரௌபதியை நெருங்கவும்) இரு கை மலரும் தகைய - மலர் போன்ற இரு கைகளும் சேலை உரியப் படுவதைத் தடுக்க, எம் பெருமான் அடி இணைக்கே - எம்பெருமானது இணையான திரு வடிகளில். இதயம் வைத்தாள் - தனது நெஞ்சைப் பதிய வைத் தாள், அதாவது தியானித்தாள்.

துச்சாதனன் ஆடையைக் களைய வருதலைக் கண்ட பாண் டவர், தாங்களே தமது உத்திரியங்களைக் களைந்து அவனிடம் கொடுத்து விட்டனர்; அதன் பின், அவன் பாஞ்சாலியை அணு கிய பொழுது, தன்னைக் காக்க வேண்டிய கணவர்கள் அமைப் பட்டுத் தன்னைக் காக்க முடியாத நிலையில் இருப்பதை உணர்ந்து, அவள், ஸ்ரீயப்பதியும் கருணாமூர்த்தியுமான கண்ண னது திருவடிகளில் தன் உள்ளத்தை வைத்தாள்,—என்பதாம்.

கண்ணன் அருள் புரிதல்

247. ஆறாகி யிருதடங்க ணஞ்சனவெம்
புனல்சோர வளகஞ் சோர
வேறான துகிறகைந்த கைசோர
மெய்சோர வேறோர் சொல்லும்

கூறாமற் கோவிந்தா கோவிந்தா
வென்றரற்றிக் குளிர்ந்து நாவில்
ஊறாத வமிழ்தூற வுடல்புளகித்
துள்ளமெலா முருகி னாளே.

[ஆறு ஆகி இரு தட கண் அஞ்சனம் வெம் புனல் சோர, அளகம் சோர, வேறு ஆன துகில் தகைந்த கை சோர, மெய் சோர, வேறு ஓர் சொல்லும் கூறாமல் **கோவிந்தா, கோவிந்தா,** என்று அரற்றி, குளிர்ந்து, நாவில் ஊறாத அமிழ்து ஊற, உடல் புளகித்து, உள்ளம் எலாம் உருகினாளே.]

**விளக்கம் :—**இரு தடங்கண் அஞ்சனம் வெம் புனல் ஆறு ஆகி சோர - விசாலமான இரு கண்களிலிருந்து கரைந்து வழியும் மையுடனே வெப்பமான துன்பக் கண்ணீர் ஆறாகப் பெருகி ஓட, வேறு ஆன - அவிழ்க்கப் பெற்று வேறான. துகில் தகைந்த - வஸ்திரத்தை தடுத்த. கை சோர - கைகள் சோர்ந்து நெகிழவும். மெய் சோர - யாக்கை தளரவும். வேறோர் சொல்லையும் கூறாது, — கோவிந்தா, கோவிந்தா, என்று பலமுறை கதறி அழைத்து. (நிற்க அதன் பயனாய்) குளிர்ந்து - உடல் குளிர லுற்று. நாவில் ஊறாத அமிழ்து ஊற - நாவில் இதுவரையில் ஊறியறியாத அமிர்தம் ஊற. உடல் புளகித்து - உடலில் மயிர் சிலிர்க்கப் பெற்று. உள்ளம் எலாம் உருகினாள் - உள்ளம் முழுதும் உருகலானாள்.

துச்சாதனன் பற்றி இழுத்ததால் அவிழலுற்ற கூந்தல் புரளவும், அவன் கூசாது உரிந்த துகிலைத் தகைந்த கைகள் தலைமேல் குவியவும், கோவிந்தா, கோவிந்தா என்று கூவிக் கதறவும், அந்தத் திருநாம உச்சாரணையின் பயனாய் உடல் குளிர, நாவில் அமுது சுரக்க, யாக்கை புளகிக்க, நெஞ்சம் உருகலுற்று நின்றாள்,—என்க.

248. அருமறைசொல் லியநாம மாயிரமு
முறை தழைக்க வமரர் பேரற்றும்
திருமலர்ச்செஞ் சீரடியோன் றிருச்செவியி
லிவண்மொழிசென் றிசைத்த காலை
மருமலர்மென் குழன்மானின் மன நடுங்கா
வகைமனத்தே வந்து தோன்றிக்
கரியமுகி லனையானும் பிறரெவர்க்குந்
தெரியாமற் கருணை செய்தான்.

[அரு மறை சொல்லிய நாமம் ஆயிரமும் உரை தழைக்க, அமரர் போற்றும் திருமலர் செம் சீர் அடியோன் திரு செவியில் இவள் மொழி சென்று இசைத்த காலை, மருமலர் மென் குழல் மானின் மனம் நடுங்கா வகை, மனத்தே வந்து தோன்றி, கரிய முகில் அனையானும் பிறர் எவர்க்கும் தெரியாமல் கருணை செய்தான்.]

**விளக்கம் :**—அருமறை சொல்லிய ஆயிர நாமமும் அமரர் உரை தழைக்கப் போற்றும்,—என்று இயைக்க. அரிய வேதங்களில் கூறப் பெற்ற ஆயிரம் திருநாமங்களையும், தங்கள் வார்த்தை சக்தியின் செழிக்கும்படி, தேவர்கள் சொல்லித் துதிக்கும் அழகிய தாமரை மலர் போன்ற சிவந்த சிறந்த திருவடிகளை உடையவனான கண்ணனது திருச்செவியில் இவளது மொழி பட்டபொழுது,—என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். மருமலர் மென்குழல் மான் - திரௌபதி. மனம் நடுங்கா வகை - அவள் மனங்கலங்கித் தளராதபடி. மனத்தே தோன்றி-மனத்தில் காட்சி அளித்து. கரியமுகில் போன்றவனான கண்ணன் ஆடை வளருமாறு அருள் புரிந்தான்,—என்பதாம்.

249. **உடுத்ததுகி லுணர்விலா னுரிந்திடவு**
**மாளாம லொன்றுக் கொன்றாங்(கு)**
**அடுத்தநிறம் பற்பலபெற் றாயிரமா**
**யிரங்கோடி யாடையாகக்**
**கொடுத்தருள வுரிந்தனபட் டிருந்தபெருந்**
**தனிக்கூடங் கொள்ளாதோடி**
**எடுத்தனர்பற்பல பலவீர ருரிந்தோனுஞ்**
**சலித்திருகை யிளைத்து நின்றான்.**

[உடுத்த துகில் உணர்வு இலான் உரிந்திடவும் மாளாமல் ஒன்றுக்கு ஒன்று ஆங்கு அடுத்த நிறம் பல்பல பெற்று ஆயிரம் ஆயிரம் கோடி ஆடை ஆக கொடுத்து அருள, உரிந்தன பட்டு இருந்த பெரும் தனி கூடம் கொள்ளாது. ஓடி எடுத்தனர் பல்பல வீரர்: உரிந்தோனும் சலித்து இருகை இளைத்து நின்றான்.]

**விளக்கம் :**—மாளாமல் - முடிவு இல்லாமல். ஒன்றுக்கு ஒன்று ஆங்கு. ஒன்றோடொன்று வேறுபட்டதாக. அடுத்த-பொருந்திய கோடி ஆடை - புது ஆடை. உரிந்தன - உரியப்பட்ட. பட்டு - பட்டு வஸ்திரங்கள். இருந்த பெரும்...இளைத்து நின்றான் - அரசர் கூடியிருந்த சபா மண்டபத்தால் (வஸ்திரங்களை)

தன்னிடம் அடக்கிக் கொள்ள முடியாமற் போகவே, வீரர் பலர் ஓடிச்சென்று வஸ்திரங்களை அகற்றி இடம் செய்தனர்; உரிந்தோனாகிய துச்சாதனனும் இரு கைகளும் ஒய்ந்து போய்க் களைத்து நின்றான். ஆடை வளர்தல் தெய்வ சங்கற்பத்தால் என்பதை, உணர்ந்து கொள்ளாமல், கை களைக்கும் வரை உரித்தானாதலால், **உணர்விலான்**, என்றார்.

250. கங்கைமகன் முதலான காவலர்மெய்
யுறநடுங்கிக் கண்ணீர் சோரச்
செங்கைமலர் குவித்திவளே கற்பினுக்கு
மரபினுக்குந் தெய்வமென்றார்
அங்கணகல் வானோரு மானகமும்
வலம்புரியு மதிரத்தங்கள்
பைங்கனக தருவின்மலர் மழைபொழிந்து
கருணையினாற் பரிவு கூர்ந்தார்.

[கங்கை மகன் முதலான காவலர் மெய் நடுங்கி கண்ணீர் சோர, செம் கை மலர் குவித்து, இவளே கற்பினுக்கும் மரபிற்கும் தெய்வம் என்றார்; அம் கண் அகல் வானோரும், ஆனகமும், வலம்புரியும் அதிர, தங்கள் பைங் கனகம் தருவின் மலர் மழை பொழிந்து கருணையினால் பரிவு கூர்ந்தார்.]

**விளக்கம் :**—கண்ணீர் சோர - கண்ணீர் பெருகி வழிய அம் கண் அகல்வானோர் - அழகிய இடமகன்ற (விசாலமான) வான் உலகத்தவர்: ('அங்கண்', என்று கொண்டு, 'அப்பொழுது,' என்றும் பொருள் கொள்ளலாம்). ஆனகம் - (ஆநகம்) தேவ துந்துபி என்னும் வாத்தியம். பைங்கனகம் தரு - பசிய பொன் மயமான கற்பகம் முதலிய தருக்கள். கருணையினால் அன்பு கூர்ந்தார் - கருணையோடு அன்பும் மிகுந்தாராயினர்.

அவையிருந்த வீடுமன் முதலியோர், ஆடை வளரும் புதுமையைக் கண்டு, அவளது கற்பின் மகிமையை அறிந்து, அவளைத் தெய்வமாகக் கொண்டு கை குவித்து வணங்கினார்,— என்பதாம். நங்கை நியாயம் வேண்டி நின்றபொழுது மௌன மாய் இருந்த தமது பிழையை நினைத்து, அவையிருந்த அரசர்கள் மெய்யுற நடுங்கினர், என்க. தனது கற்பு நிலையின் மகிமையால் தன்மானம் காத்துக் கொண்டதால். அவள் மரபினுக்குத் தெய்வம் ஆனாள்.

### வீமன் சினத்தல்

251. அழுதழுது கொடும்புலிவா யகப்பட்ட
மான்பிணைபோ லரற்றா நின்ற
எழுதரிய மடப்பாவை தங்கண்முகங்
களை நோக்கி யிரங்கி வீழ்ந்த
பொழுதுமனம் புகைமூளப் பூந்தடங்க
ணனன்மூளப் போரின் மூளப்
பழுதுபடா வடலாண்மைப் பவனகுமரன்
தடக்கை படைமேல் வைத்தான்.

[அழுது அழுது கொடும் புலிவாய் அகப்பட்ட மான்பிணை போல் அரற்றா நின்ற, எழுது அரிய மடம் பாவை தங்கள் முகங்களை நோக்கி இரங்கி வீழ்ந்த பொழுது, மனம் புகை மூள, பூந்தடகண் அனல் மூள, போரில் மூள, பழுதுபடா அடல் ஆண்மை பவன குமரன் தடக்கை படைமேல் வைத்தான்.]

**விளக்கம் :**—கொடும் புலி வாய் அகப்பட்ட மான்பிணை போல் அழுது அழுது அரற்றா நின்ற, எழுதரிய மடப்பாவை (பாஞ்சாலி) தங்கள்...வீழ்ந்தபொழுது,—என்று அன்வயிக்க. பழுது படா அடல் ஆண்மை பவன குமரன் - தோல்வி பெறாத வலிய ஆண்மையுடைய வாயு புத்திரனான வீமன். போரில் மூள - போர் செய்யும் எழுச்சி உண்டாக. படை - கதை. திரௌபதியின் துயர மிகுதியைக் கண்டு. பொறாத வீமன், மனத்தில் சினம் புகையக் கண்கள் அனலைக் கக்கப் போரெழும் கருத்தினனாய்த் தன் கதைமீது கைவைத்தான்,—என்பதாம்.

252. அருளாருந் தருமபதி யாகாதென்
றெமைப்பலகா லடக்க யாமும்
இருளால்வெம் பரிதிவடி வொளிப்பதுபோ
லமர்புரியா திருக்கின் றேமால்
மருளான்மெய்ம் மயங்கியொரு வலியுடையயோர்
தமைப்போல மதித்து நீங்கள்
பொருளாக விருந்தனமோ நூற்றுவரும்
வருகவெதிர் பொருக வென்றான்.

[அருள் ஆரும் தருமபதி ஆகாது என்று எமை பலகால் அடக்க யாமும், இருளால் வெம்பரிதி வடிவு ஒளிப்பதுபோல் அமர் புரியாது இருக்கின்றோம், (ஆல்); மருளால் மெய் மயங்கி

ஒரு வலி உடையோர் தமை போல மதித்து, நீங்கள் பொருளாக இருந்தனமோ! நூற்று வரும் வருக எதிர், பொருக, என்றான்.]

**விளக்கம் :**—முன் செய்யுளில், சினந்து கதையில் கை வைத்த வீமன், இச் செய்யுளில், நூற்றுவரையும் போருக்கு அழைக்கின்றான். அருள் ஆரும் தருமபதி - அருள் நிறைந்த தருமன். சினந்து பொருதல் தக்கதாகாது என்று தருமன் அடக்கியதால், இருளால் சூரியன் தனது வடிவத்தை மறைத்துக் கொள்வது போல, உங்களோடு போர் செய்யாது இருக்கின்றோம். மருள்-விபரீத ஞானம்; அதாவது திருபுணர்ச்சி. மருளால் மெய் மயங்கி, விபரீத ஞானத்தால் உண்மையை வேறொன்றாக மயங்கி, அதாவது வீரமில்லாமை யாகிய உண்மையை வீரமுடைமையாக எண்ணி ஒரு வலி உடையோர் தமைப்போல் மதித்து - நிகரற்ற வல்லமை உடையோர் தங்களைப்போல் மதித்து,—உங்களை ஒருபொருளாக எண்ணிச் சும்மா இருந்தோம் அல்லோம்; எனவே எதிர் வந்து போர் செய்க,—என்று வீமன் அழைத்தான், என்க. இரவு தோன்றச் சூரியன் மறைவது போல், எமது தமையனது கட்டளையால், எமது ஆற்றல் மறைந்து கிடக்கின்றது, என்பது இரண்டா மடியின் கருத்து, தருமனது கட்டளை, இருள்; தம்பியாது ஆற்றல், சூரியன்.

253. கொந்தளக மலர்சொரியக் கூப்பிடுவாள்
கொடிங்கற்புங் கூறை மாளா
மந்திரமு மடல்வீமன் மானமிலா
துரைக்கின்ற வலியுங் காணத்
தந்தைவிழி யிருள்போலத் தகுமனத்தோ
னுஞ்துச்சா தனனை நோக்கிப்
பைந்தொடியைக் கொணர்ந்தினியென் மடியின்மிசை
யிருத்துகெனப் பணிந்திட் டானே.

[கொந்து அளகம் மலர் சொரிய கூப்பிடுவாள் கொடும் கற்பும், கூறை மாளா மந்திரமும், அடல் வீமன் மானம் இலாது உரைக்கின்ற வலியும் காண, தந்தை விழி இருள் போல தகும் மனத்தோனும் துச்சாதனனை நோக்கி, பைந்தொடியை கொணர்ந்து இனி என் மடியின் மிசை இருத்துக என பணித்திட்டான் (ஏ).]

**விளக்கம் :**—கொந்து அளகம் - திரண்ட, அல்லது செறிந்த கூந்தல். கூப்பிடுவாள் - அரற்றி அழும் திரௌபதி. கூறை -

புத்தாடை. மாளா மந்திரம் - குறையாமல் வளரும் விந்தை, அல்லது இரகசியம். காண - காண்பதற்காக, அதாவது. திரௌபதியின் கற்பின் திறத்தை மேலும் பரிசோதித்துக் காணவும், வீமன் என் செய்வான் என்று பார்க்கவும்,— அவளைக் கொணர்ந்து தன் மடியின் மேல் இருத்துமாறு தம்பிக்குச் சொன்னான், என்பதாம். தந்தையின் விழி இருள்போலத் தகு மனத்தான் - ஊனக் குருடனான தந்தையைப்போல் அறிவுக் குருடனான துரியோதனன். மானத்தைக் காத்துக் கொள்ளும் சக்தியுடைமை பற்றிக் கொடுங் கற்பு, எனப்பட்டது. அடிமைப்பட்டிருப்பதனாலும், மனைவியின் மானங் காக்க முடியாமல் இருப்பதனாலும், வீமனைத் துரியோதனன் **மானமிலான்**, என்றான்.

254. என்றபொழு தருந்த திக்கு மெய்தாத
கற்புடையா ளிடி யே றுண்ட
வன்றலைவெம் பணிபோல நடுநடுங்கி
மாயனையு மறவா ளாகிப்
புன்றொழி லோன் யானிருக்கக் காட்டியதன்
றொடைவழியே புள்வாய் குத்தச்
சென்றிடுக வாருயிரென் றெவரும்வெரு
வுறச்சபித்தா டெய்வ மன்னாள்.

[என்ற பொழுது அருந்ததிக்கும் எய்தாத கற்புடையாள் இடி ஏறு உண்ட வல்தலை பணிபோல நடுநடுங்கி, மாயனையும் மறவாள் ஆகி, புல் தொழிலோன் யான் இருக்க காட்டிய தன் தொடை வழியே, புள்வாய் குத்த சென்றிடுக ஆர் உயிர், என்று எவரும் வெருவுற சபித்தாள் தெய்வம் அன்னாள்.]

**விளக்கம் :**—'மடியின் மிசை இருத்திடுக' என்று துரியோதனன் சொன்னபொழுது, அருந்ததிக்கும் வாய்க்காத கற்புடைய பாஞ்சாலி, இடியோசை கேட்ட நாகம்போல் நடுங்கி கண்ணனையும் தியானித்தவளாய், புன்தொழில் துரியோதனன் யான் இருக்கக் காட்டிய தொடை வழியே, பறவைகள் அலகினால் குத்தித் தின்னுமாறு, அவன் உயிர் போகக்கடவது,—என்று சபித்தாள். எல்லோரும் அஞ்சினர்,—என்பது பொருள்.

உரிய உரியத் துகில் வளரப் பெற்றமையின், அவளைத் 'தெய்வம் அன்னாள்,' என்றார். மாயன் - கூடாததைக் கூட்டுவிக்கும் திறலுடைய கண்ணன். கண்ணனது அருளால் துகில் வளரப் பெற்றாளாதலால், அவனது அருள் இருந்தால் எதுவும்

கைகூடும் என்ற நினைவில், அவனைத் தியானித்தவளாய்த் துரியோதனனைச் சபித்தாள் என்க.

**திரௌபதியும் தம்பியரும் சபதம் கூறல்**

255. அரசவையி லெனையேற்றி யஞ்சாமற்
றுகிறீண்டி யளகந் தீண்டி
விரைசெயளி யினம்படிதார் வேந்தரெதிர்
தகாதனவே விளம்பு வோரைப்
பொருசமரின் முடிதுணித்துப் புலானாறு
வெங்குருதி பொழிய வெற்றி
முரசறையும் பொழுதல்லால் விரித்தகுழ
லினியெடுத்து முடியே னென்றாள்.

[அரசு அவையில் எனை ஏற்றி, அஞ்சாமல் துகில் தீண்டி அளகம் தீண்டி, விரை செய் அளி இனம் படி தார் வேந்தர் எதிர் தகாதனவே விளம்புவோரை, பொரு சமரின் முடி துணித்து புலால் நாறு வெம் குருதி பொழிய, வெற்றி முரசு அறையும் பொழுது அல்லால் விரித்த குழல் இனி எடுத்து முடியேன், என்றாள்.]

**விளக்கம்:—** விரை செய் அளி இனம் படி தார் வேந்தர் - வாசனை வீசுகின்றதும் வண்டுகளின் கூட்டம் மொய்க்கப் பெற்றதுமான மாலை அணிந்த வேந்தர், பொரு சமர் - தாக்கிச் செய்யும் போர். அளகம் தீண்டுதலையும் துகில் தீண்டுதலையும் செய்தவன் துச்சாதனன். தகாதன விளம்பினவன் துரியோதனன். இவர் இருவரோடு, இவர்களைச் சேர்ந்தவர்களும் மாண்டு, அவர்களின் மனைவியர் தலைவிரித்து நிற்கும் வரையில் விரித்த இக்கூந்தலை முடியேன், என்று பாஞ்சாலி சபதம் செய்தாள்,— என்பதாம்.

256. பாஞ்சாலிக் கரசவையிற் பழுதுரைத்தோ
னுடலெனது படையாமேழி
பேரஞ்சாலி னிணஞ்சொரியத் துணைவரோடு
குலமாளப் பொருவேன்யானே
தீஞ்சாலி விளைபழனத் திருநாட்டீர்
கேண்மினெனச் செந்தீமூள
வெஞ்சாலி னறுநெய்போல் வெஞ்சினத்தாள்
வஞ்சினமும் விளம்புவானே.

[பாஞ்சாலிக்கு அரசு அவையில் பழுது உரைத்தோன் உடல் எனது படை ஆம் மேழி போம் சாலின் நிணம் சொரிய, துணைவரோடு குலம் மாள பொருவேன் யானே; தீம் சாலி விளை பழனம் திருநாட்டீர், கேண்மின்; என செம் தீ முள வேம் சாலின் நறுநெய்போல் வெம் சினத்தான் வஞ்சினமும் விளம்புவானே.]

**விளக்கம்:—** செம் தீ மூள வெம் சாலின் நறுநெய் போல் வெம் சினத்தான், (அவையை நோக்கி) தீம் சாலி விளை பழனம் திருநாட்டீர், கேண்மின் என வஞ்சினமும் விளம்புவான். பாஞ்சாலிக்கு அரசு அவையில் பழுது உரைத்தோன் உடல் எனது படையாம் மேழி போம் சாலின் நிணம் சொரிய துணைவரோடு குலம் மாள பொருவேன் யானே,—என்பது அன்வயம்.

படையாம் மேழி-ஆயுதம் (கதை) ஆகிய கலப்பை. சால்-(கலப்பை உழுது செல்லும்) வழி. நிணம்-கொழுப்பு. தீம் சாலி-இனிய நெல் பயிர். பழனம்-வயல். செந்தீ மூள வேம் சாலின் நறுநெய் போல்-சிவந்த தீ மூண்டு எரிய வெந்து கொதிக்கும் நல்ல மணமுள்ள நெய்யைப் போல. வெம் சினத்தான்-கொடிய சினங் கொண்ட வீமன். வஞ்சினம்-சபதம். பாஞ்சாலிக்குப் பழுது உரைத்த கொடியோனாகிய துரியோதனனது உடலாகிய வயலில், எனது கதையாகிய கலப்பையால் உழுது, உழுபடைச் சாலினின்று நிணம் வெளிப்பட்டுப் பெருகவும், அவன் துணைவரோடு குலம் அற்றுப் போகவும் நான் ஒருவனே செய்வேன், என்று சபதம் கூறினான்,—என்பதாம். சால்-முதலடியில் தாழி கடாரம் (பெரிய பாத்திரம்); இரண்டாவது அடியில் கலப்பை உழுது செல்லும் வழி; கொதிக்கும் நெய், வீமனது கோபத்திற்கு உவமையாயிற்று.

257. வண்டாருங் குழல்பிடித்துத் துகிலுரிந்தோ
 னுடற்குருதி வாரியள்ளி
உண்டாகங் குளிர்வதன்முன் னிக்கரத்தால்
 புனலுண்ணே னெருகாலென் கைத்
தண்டால்வெம் புனலெற்றி மீதெழுந்து
 விழுந்திவலை தண்ணீராகக்
கொண்டாவி புரந்திடுவ னிதுவிரத
 மெனக்கெனவுங் கூறினானே.

[வண்டு ஆரும் குழல் பிடித்து துகில் உரிந்தோன் உடல்குருதி வாரி அள்ளி உண்டு ஆகம் குளிர்வதன் முன் இ கரத்தால் புனல்

உண்ணேன், ஒரு கால், என் கை தண்டால் வெம் புனல் எற்றி மீது எழுந்து விழும் திவலை தண்ணீராக (தண்-நீராக) கொண்டு ஆவி புரந்திடுவன். இது விரதம் எனக்கு எனவும் கூறினான்(ஏ).]

**விளக்கம்:—** ஒரு கால்-ஒரு வேளை, அதாவது நீர் பருகும் அவசியம் ஏற்படும்போது, எனது கதையினால் விரும்பிய நீரை மோதி. அதனால் மேல் எழுந்து விழும் நீர்த்திவலைகளைக் குடித்து, என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வேன், இது விரதம், எனவும் கூறினான். என்பது ஈற்றடிகளின் பொருள். "குழல் பிடித்தும் துகில் உரிந்தும் திரௌபதிக்கு தீங்கிழைத்த துச்சாதனனைக் கொன்று அவனது இரத்தத்தைக் குடிக்குமுன் இக்கைகளால் நீர் அருந்தேன் என்றும் அதுவரை நீர் வேட்கை உற்றபோது கதையால் புடைத்து மேலெழுந்து விழும் நீர்த்துளி களைப் பருகி உயிர் வாழ்வேன்; இது எனது விரதம்" என்றும் வீமன் சபத மொழி கூறினான்,— என்பதாம்.

258. பகலவன்றன் மதலையுயிர் பகைப்புலத்துக்
கவர்வனெனப் பார்த்தன் சொன்னன்
நகுலனுமற் றென்கரத்தாற் சௌபல நா
யகனுயிர்க்கு நாச மென்றான்
சகுனிதனை யிமைப்பொழுதிற் சாதேவன்
துணித்திடுவேன் சமரிலென்றான்
இகநிருப ரிவர்மொழிகேட் டெளிதோவிக
கொடும்பழியென் றேங்கினாரே

[பகைவன் தன் மதலை உயிர் பகை புலத்து கவர்வன் என பார்த்தன் சொன்னான், நகுலன் மற்று என் கரத்தால் சௌபல நாயகன் உயிர்க்கு நாசம் என்றான். சகுனிதனை இமைப் பொழுதில் சாதேவன் துணித்திடுவேன் சமரில் என்றான்; இகல் நிருபர் இவர் மொழி கேட்டு எளிதோ இ கொடும் பழி என்று ஏங்கினாரே.]

**விளக்கம் :—** பகலவன் மதலை - கர்ணன் சௌபல நாயகன் சுபலனது பேரனும், சகுனியின் மகனுமான உலூகன். பாண்டவர் நால்வரும் கூறிய சபதமொழி கேட்டு, அவையிருந்த இகல் வேந்தர், (துரியோதனாதியர் இழைத்த பழி) அற்பமானதோ (அன்று மிகப் பெரியது,) என்று கூறியும், முறைகேடான காரியங்களைச் செய்து நாசத்தை தேடிக் கொண்டார்களே, என்று இரங்கியும் வருந்தினார்கள், என்றபடி.

259. மேகங்கள் வழங்காமல் விண்ணதிர்ந்திட்
டூர்கோளும் வெயிலைச் சூழ்ந்து
பூகம்பம் பிறந்துடுவு மரும்பகலே
விழுந்துடனே பொய்கைவாடி
யாகஞ்செய் நெடுஞ்சாலை யின்பாலுஞ்
செந்நீரா யிருந்த வேந்தர்
ஆகங்க ளொளிமழுங்கிற் றவிதாவென்
றணங்கனையா ளழுத போதே.

[மேகங்கள் வழங்காமல் விண் அதிர்ந்திட்டு, ஊர் கோளும் வெயிலை சூழ்ந்து, பூகம்பம் பிறந்து, உடுவும் அரும்பகலே விழுந்து, உடனே பொய்கை வாடி, யாகம் செய் நெடும் சாலை யின் பாலும் செந்நீராய் இருந்த; வேந்தர் ஆகங்கள் ஒளி மழுங் கிற்று, அவிதா என்று அணங்கு அனையாள் அழுதபோதே.]

**விளக்கம் :—**மேகங்கள் வழங்காமல் - மேகங்கள் வானில் சஞ்சரித்தல் இல்லாமல், விண் அதிர்ந்திட்டு - வானம் இடித்தும். ஊர்கோள் வெயிலை சூழ்ந்தும் - பரிவேஷம் சூரியனைச் சுற்றிக் கொண்டும். (பூகம்பம்) பிறந்து - உண்டாகியும், உடு அரும் பகலே விழுந்தும் - நட்சத்திரங்கள் நடுப் பகலில் உதிர்ந்தும். உடனே - இந் நிகழ்ச்சிகளோடு கூட. பொய்கை வாடி-குளங்கள் வற்றியும். அல்லது குளங்களிலுள்ள மலர்கள் வாடியும். யாகம் செய் நெடுஞ்சாலையின்பாலும், செந்நீர் ஆய் - யாகம் செய்யும் பெரிய யாகசாலையில் (ஓமப் பொருளாகும்) பாலும் இரத்த மாகியும். இருந்த - இருந்தன. வேந்தர் ஆகங்கள் ஒளி மழுங்கப் பெற்றது. அவிதா - ஐயோ; இரக்கக் குறிப்பினதான வடசொல். அணங்கனைய பாஞ்சாலி அவிதா என்று அரற்றி அழுதபொழுது, மேலே கூறிய உற்பாதங்கள் நிகழ்ந்தன, என்க.

வானில் மேக சஞ்சாரம் இல்லாமல் இடியிடுத்தலும், பகலில் நட்சத்திரங்கள் உதிர்தலும். யாக சாலைகளில் பால் இரத்தமாதலும் நேரப்போகின்ற கேட்டை அறிவிக்கும் உற்பாதங்கள். சூரிய சந்திரர்களைச் சுற்றி மண்டலமாகத் தோன்றுவது ஊர்கோள். இதைப் பரிவேஷம் என்பர். சூரிய னிடத்து உண்டாகும் இவ்வூர்கோள் தீமையையும், சந்திர னிடத்து உண்டாகும் ஊர்கோள் நன்மையையும், குறிக்கும் என்பது நூற்கொள்கை.

திருதராட்டிரன் கூற்று

260. உற்பாதம் பெரிதெனநெஞ் சுருகுவாரு
மென்னாமிவ் வூரென் றஞ்சி
நிற்பாரும் போம்வழிமே னினைவாரும்
பலராகி நிகழ்ந்த காலைக்
கற்பான்மிக் குயர்வேள் விக் கடன்சுமந்த
மடமயிலைக் கண ணி லாதோன்
பொற்பாத பணிந்தேத்தி யபராதம்
புரிந்தவெலாம் பொறுத்தி யென்றான்.

[உற்பாதம் பெரிது என நெஞ்சு உருகுவாரும், என் ஆம் இ ஊர் என்று அஞ்சி நிற்பாரும், போம் வழிமேல் நினைவாரும் பலராகி நிகழ்ந்தகாலை, கற்பால் மிக்கு உயர் வேள்வி கடன் சுமந்த மடமயிலை, கண் இலாதோன் பொன் பாதம் பணிந்து ஏத்தி, அபராதம் புரிந்த எலாம் பொறுத்தி என்றான்.]

**விளக்கம்:**—வரப்போகும் கேட்டினைக் குறிக்கும் உற்பாதங்கள் அதிகம் என்று எண்ணி உள்ளம் உருகுபவரும், இனி இந்த ஊருக்கு என்ன கேடு நேருமோ! என்று அஞ்சி நிற்பாரும், இனிமேல் இங்கேஇருந்து நிகழக்கூடியஆபத்திற்கு இலக்காகாமல் வெளியேறுதலைப் பற்றி நினைப்பவர்களும் பலராகி இருந்த போது, கற்பால் மிகச் சிறந்தவளும், யாக பத்தினியாய் இருந்தவளுமான திரௌபதியை, கண்ணிலாதவனாகிய திருதாரட்டிரன் (நோக்கி), அவளது அழகிய பாதங்களை வணங்கியும் துதித்தும், தன் மக்கள் புரிந்த அபராதங்களைப் பொறுத்தருளுமாறு என்று வேண்டினான்,—என்பது பொருள்.

வேள்வி செய்தல், வேதம் ஓதல், புத்திரரைப் பெறுதல் வேதம் கூறும் கடன்களாகும். தருமன் இராயசூயம் செய்வதற்கு யாக பத்தினியாய் இருந்தமை பற்றி, 'வேள்விக் கடன் சுமந்த மடமயில்' எனப்பட்டாள். மாமனாரான திருதராட்டிரன் மருகியைப் பணிந்து ஏத்தல் அமையுமோ, என்று நினைப்பவர், 'உபசார வார்த்தைகளைச் சொல்லி, இழைத்த அபராதங்களைப் பொறுக்குமாறு வேண்டிக்கொண்டான்'' என்று பொருள் கொள்ளலாம்.

261. உத்தமமாங் குலமயிலே யென்றுசிறுவ
ரறியாம லுனக்குநேரே
மைத்துனரா முறையாலிவ் வழக்கலா
தனசெய்தார் மதியில்லாமல்

எத்தனைதாழ் விவர்புரிந்தா ரென்றாலு
மவையொன்று மெண்ணாதின்னே
பித்தர்மொழி யெனக்கருதி மறந்தருளென்
றொருகோடி பிதற்றினானே.

[உத்தமம் ஆம் குல மயிலே என் சிறுவர் அறியாமையால் உனக்கு நேரே மைத்துனர் ஆம் முறையால் இ வழக்கு அலாதன செய்தார் மதி இல்லாமல் எத்தனை தாழ்வு இவர் புரிந்தார் என்றாலும் அவை ஒன்றும் எண்ணாது இன்னே பித்தர் மொழி என கருதி மறந்து அருள் என்று ஒருகோடி பிதற்றினான், (ஏ).]

**விளக்கம்:—** பாஞ்சாலியைத் திருதராட்டிரன் விளித்து, 'என் சிறுவர் மைத்துனர் ஆகின்ற முறையினால் இன்ன செய்கின்றோம் என்று அறியாமல் முறைகேடான செயல்களை செய்தனர்; மதியில்லாமையினால் எத்தனை தாழ்வு செய்தாரானாலும் அவை ஒன்றையும் மனங்கொள்ளாமல், பித்தர் கூறிய மொழியாகும் என்று கொண்டு இன்னே (இப்பொழுதே) மறந்து அருள்வாயாக.'' என்று பலபடி வேண்டிக் கொண்டான்,— என்பது பொருள்.

மைத்துன முறையால் ஆடவர் ஒருவரை ஒருவர் பரிகசித்துக் கொள்வதே வழக்கு. பெண்களைப் பரிகசிக்கும் வழக்கம் இலது. அவ்வாறாக, இங்கே, மைத்துன முறை கூறியது, தன் மைந்தர் குற்றங்களைக் குறைக்கவும், பாஞ்சாலியின் சினத்தைத் தணிவிக்கவும், கூறியதாகும். திருதராட்டின் கூறியதில் பொருத்தம் இல்லாமை நோக்கிப் புலவர், "பலகோடி பிதற்றினானே," என்றார்.

262. மைவரையுந் தடங்கண்ணாண் மனச்சோகம்
பலமுகத்தான் மாற்றி மைந்தர்
ஐவரையுந் தனித்தனியே முகங்கொண்டு
கொடுங்கோப மகற்றி நீங்கள்
மெய்வரையும் பொருபுயத்தீர் வற்போரி
விழந்தவிய னிலமுந் தேரும்
கைவரையும் பரிமாவுஞ் செல்வ மும்யா
வையுமீண்டுங் கைக்கொள் வீரே.

[மைவரையும் தட கண்ணாள் மனம் சோகம் பலமுகத்தால் மாற்றி, மைந்தர் ஐவரையும் தனி தனியே முகங்கொண்டு கொடுங்கோபம் அகற்றி, நீங்கள் மெய் வரையும் பொரு புயத்

திர், வல் போரில் இழைத்த வியல் நிலமும், தேரும் கைவரையும் பரிமாவும் செல்வமும் யாவையும் மீண்டும் கைக்கொள்வீர் (ஏ)]

**விளக்கம் :—** மை வரையும் தடங்கண் - மை தீட்டப் பெற்ற விசலாமான கண். மனச் சோகம் பல முகத்தான் மாற்றி - (பாஞ்சாலியின்) மனச் சோகத்தைப் பலவித உபசார வார்த்தைகளால் மாற்றி, முகங் கொண்டு - இனிய மொழிகளால் (பாண்டவர்) தன்பால் இனிய முகங் காட்டும்படி செய்து, மெய் வரை - வலிய, அல்லது பெரிய மலை. வல் போர் - சூதாட்டம். வியனிலம் - (உங்களதான) பெரிய பூமி. கைவரை - யானை. பரிமா - குதிரை. திருதராட்டின் பாண்டவர்களை - நோக்கி. ''நீங்கள் சூதில் இழந்தவைகளை எல்லாம் வசப்படுத்திக் கொள்க,'' என்று கூறினான், என்க. இதுவும் இதைத் தொடரும் இரண்டு செய்யுள்களும் ஒரு தொடர்.

263. கோமின்றி லருந்ததியைக் கொண்டினிநீர்
நில்லாமற் குறுக ஊரே
போமென்று வரவழைத்துத் தழீஇக்கொண்டென்
கண்மலரே போல்வா னெம்பி
யாமென்று மவனென்று மிரண்டில்லை
விளையாட்டென் றிருந்தே னிவ்வா(று)
ஆமென்ப தெனக்கொருவ ருரைத் திலரால்
யாமுமுத லறிந்திலமே

[கோ மன்றில் அருந்ததியை கொண்டு இனி நீர் நில்லாமல் குறுக ஊரே போம் என்று, வர அழைத்து தழீஇக் கொண்டு, கண் மலரே போல்வான் எம்பி, யாம் என்றும், அவன் என்றும் இரண்டு இல்லை, விளையாட்டு என்று இருந்தேன், இ ஆறு ஆம் என்பது எனக்கு ஒருவர் உரைத்திலர் (ஆல்), யாமும் முதல் அறிந்திலம். (ஏ).]

**விளக்கம்:—** கோ மன்றில் - இராஜசபை. நீர் இனி நில்லாமல் ஊரே குறுக போம் - நீங்கள் இனிமேல் இங்கே தங்கியிராமல் உங்கள் ஊரை அடையுமாறு விரைந்து செல்லுங்கள். இவ்வாறு கூறிய திருதராட்டிரன், பாண்டவரை அருகே அழைத்து அவர்களைத் தழுவிக் கொண்டு. ''என் தம்பி பாண்டு என் கண்ணைப் போன்றவன். நான் வேறு தம்பி வேறு, என்ற இரண்டினுக்கு எங்கள் உறவில் இடமில்லை, (அதாவது இருவரும் ஒருவர் போல் இருந்தோம்). சூதை நீங்கள் பொழுது போக்காக ஆடுகின்றீர், என்று இருந்தேன். இவ்வாறு தீங்காய் முடியும் என்று

எனக்கு எவரும் சொல்லவில்லை. நானும் ஆட்ட ஆரம்பத்தில், இவ்வாறு முடியும் என்று அறிந்திலேன்,'' என்று கூறினான். ''நானும் பாண்டுவும் இருவர் என்பதற்கு இடமில்லாதபடி இருந்தோம். உங்களிடத்தும் நான் ஒத்த அன்புடையவன். நீங்கள் விளையாட்டாகச் சூதாடுகிறீர், என்று நினைத்தேன்; அது இப்படி முடிந்துவிட்டது. நடந்துபோனதை மறந்து, நீங்கள் பாஞ்சாலியுடன் இப்பொழுதே உங்கள் ஊர் செல்லுங்கள்,'' என்றான்,'' என்பதாம்.

264. என்மைந்த ரிவர் நீங்க ளவன்மைந்த
ரெனநினையே னிவரேயெம்பி
தன்மைந்த ருங்களையே யென்மைந்த
ரெனவளர்த்தேன் சம்பு நாட்டு
மன்மைந்த ருவங்களைப்போல் வேறுபடாதித்
தனை நாள்வ ளர்ந்தா ருண்டோ
வின்மைந்தர் நடக்கவென விடைகொடுத்தான்
விரகினுக்கோர் வீடு போல்வான்.

[என் மைந்தர் இவர், நீங்கள் அவன் மைந்தர் என நினையேன், இவரே எம்பி தன் மைந்தர், உங்களையே என் மைந்தர் என வளர்த்தேன்; சம்புநாடு மன் மைந்தர் உங்களைப் போல் வேறுபடாது இத்தனை நாள் வளர்ந்தார் உண்டோ! வில் மைந்தர், நடக்க என விடை கொடுத்தான், விரகினுக்கு ஓர் வீடு போல்வான்.]

**விளக்கம் :**—சம்புநாடு - ஜம்புத் தீவு. மன் மைந்தர் - இராஜபுத்திரர். வில் மைந்தர் - (விளி)விற் கலையில் வித்தக முடைய மக்களே. விரகினுக்கு ஓர் வீடுபோல்வான் - தந்திரத்திற்கு ஒப்பற்ற தங்குமிடம் போன்றவனான திருதராட்டிரன்,

என் மைந்தரிலிருந்து உங்களை வேறுபடுத்தி நான் நினையேன். என் மக்களைத் தம்பியின் மக்களாகவும் உங்களை என் மக்களாகவுங் கொண்டு வளர்த்தேன். இந்த ஜம்புத்தீவில் ராஜகுமாரர்களில் உங்களைப்போல் இவ்வளவு காலம் வேறுபாடின்றி வளர்ந்தார் உண்டோ. எனவே, உங்களது பதி செல்லுங்கள் என்று, விரகினுக்கு வாழிடம் போன்றவனான திருதராட்டிரன் இதமொழி கூறி விடை கொடுத்தான் என்பது பொருள். முன் செய்யுளில் தம்பியும் தானும் மன வேறுபாடின்றி வாழ்ந்ததைக் கூறிய திருதராட்டிரன், இச் செய்யுளால்

பாண்டவரிடம் தனக்குள்ள அன்பின் மிகுதியைத் தெரிவிக்கின்றான். பரிபவப்படுத்திய தன் மைந்தர்களிடம் அவர் பகை பாராட்டாது இருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இது கூறினான். ஆதலால், விரகினுக்கு ஓர் வீடு போல்வான், என்றார்.

### சகுனியின் இடையீடு

265. படைகொடுத்தா னிவனிழந்த பார்கொடுத்தா
னரசாளப் பண்டு போல் வெண்
குடைகொடுத்தா குருகுலத்தே குலங்கொடுத்தா
னைவருக்குங் குலத்தே கொண்ட
தடைகெடுத்தா னகப்பட்டுத் தலையழிக்க
நினையாமற் றானே யம்மா
விடைகொடுத்தா னினிவிடுமோ வயப்புலியை
வாலுருவி விடுகின் றீரே

[படை கொடுத்தான், இவன் இழந்த பார் கொடுத்தான், அரசு ஆள பண்டுபோல் வெள் குடை கொடுத்தான், குருகுலத்தே குலம் கொடுத்தான், ஐவருக்கும் குலத்தே கொண்ட தடை கெடுத்தான்; அகப்பட்டும் தலை அழிக்க நினையாமல் தானே விடை கொடுத்தான், இனி விடுமோ வயம் புலியை வால் உருவி விடுகின்றீரே.]

**விளக்கம் :**—குடை, என்றது அரச சின்னங்கள் எல்லாவற்றிற்கும் உபலக்ஷணம். குருகுலத்தே குலம் கொடுத்தான் - வாயு, இந்திரன், அச்வினி தேவர்கள் என்பாருக்குப் பிறந்த பாண்டவர்க்குக் குருகுலத்தில் பிறந்தவராகும் நற்குடிப் பிறப்பைக் கொடுத்தான். குலத்தே தடை கெடுத்தான் - யமன் குருகுலத்துக்கு அடிமையானதால் உண்டான தாழ்மையை அகற்றினான் "பாண்டவர் நம் வலையில் சிக்கியும் அவர்களை அழிக்காமல் கவர்ந்த நாட்டையும் மற்ற பொருள்களையும் கொடுத்து அனுப்புவது. வயப்புலியை வால் உருவி விட்டது போலாகும். வாலுருவிட்டாரிடம் வயப்புலி கருக்கொண்டு அவர்களைக் கொல்லாமல் விடுமோ. எனவே, நீங்கள் கெட்டீர்," என்று சகுனி கூறினான், என்பது கருத்து. "வயப்புலியை வாலுருவி விடுகின்றீர்; இனி விடுமோ." என்றது. "பாண்டவர் உங்களைக் கொல்லாமல் விடார்." என்று குறிக்கும் கருத்துடையது. இது **பிறிது மொழிதல்** அணியின் பாற்படும்.

பாண்டவர்க்கும் நாடும், குடிப்பிறப்பும் வாழ்வு கொடுத்தவன் திருதராட்டிரனாதலால், **கெடுத்தான்** என்றும், துரியோதனாதியர் அதற்கு உடன்பட்டு இருந்தாமையால், **வாலுருவி விடுகின்றீர்**, என்று பன்மையிலும், சகுனி கூறியபடி. அம்மா, வியப்படைச் சொல். பாண்டவரை அழிக்காமல் விடுவிக்கும் அறிவீனத்தைச் சகுனி வியந்தபடி.

வேறு

266. யாதொரு கரும மேனு மெண்ணியே துணிக
வென்றும்
காதலிற் றுணிந்து செய்தா லெண்ணுதல் கடனன்
றென்றும்
ஓதுநூற் புலவர் சொன்னா ருமக்குள வுணர்வற்
றன்றே
பேதுற வடர்த்தும் பின்னை யுருகிநீர் பிழைசெய்
தீரே.

[யாது ஒரு கருமம் ஏனும் எண்ணியே துணிக என்றும், காதலின் துணிந்து செய்தால் எண்ணுதல் கடன் அன்று என்றும், ஓது நூல் புலவர் சொன்னார்; உமக்கு உள உணர்வு அற்று அன்றே! பேதுற அடர்த்தும் பின்னை உருகி நீர் பிழை செய்தீரே.]

**விளக்கம்** :—எந்தக் காரியத்தையும் செய்யுமுன் ஆராய்ந்து செய்ய வேண்டும் என்றும், ஆசையினால் ஒன்று துணிந்தபின், அதைப் பற்றி ஆலோசித்தல் முறையன்று என்றும், ஓதுநூல் புலவர் (சத்திர வித்தகர்) சொல்லியுள்ளார்கள், உங்களுக்குள்ள அறிவோ அப்படிப்பட்டதாய் இருக்கவில்லையே, (அதாவது நூல் விதியோடு ஒத்திருக்கவில்லையே). நீங்கள், பாண்டவர் மனம் கலங்கி வருந்தும்படி சூதாடி வென்றும், அதன்பின் மனமிரங்கித் தவறான காரியத்தைச் செய்து விட்டீர்களே,—என்பது பொருள் பேதுறல்—கலங்கல், வருந்தல்.

நீங்கள் நன்றாக ஆலோசித்துப் பாண்டவர்களை அழைத்து சூதில் வென்றபின், அவர்கள் பால் இரக்கங் கொண்டு, அடிமைத் தனத்தினின்று அவர்களை நீக்கி அரசாட்சியும் அளித்து விட்டீர்கள். உங்களால் பரிபவப் படுத்தப்பட்ட பாண்டவர்கள், நீங்கள் இழைத்த முறைகேடான செயல்களை மறவாமல், அமயம் நேரும்போது உங்களுக்குக் கேடு விளைவிக்காமல் இரார்.

முன்னமேயே நீங்கள் அவர்களை அடர்க்காதிருக்க வேண்டும். அடர்த்த பின் இரங்குதல் கேட்டையே தேடிக் கொள்வதாகும்,- என்று சகுனி கூறும் கருத்தது இது.

267. தீயினாற் சுட்ட செம்பு ணாறுமத் தீயிற் றீய
வாயினாற் சுட்ட மாற்ற மாறுமோ வடுவே யன்றோ
பேயினாற் யுடையுண் டாரோ மறப்பரா பெரியோ
ரென் றான்
வீயினாற் றொடுத்த தண்டார் வேந்தரின்
வேந்தன் மாமன்.

[தீயினால் சுட்ட செம் புண் ஆறும், அ தீயின் தீயவாயினால் சுட்ட மாற்றம் ஆறுமோ! வடுவே அன்றோ; பேயினால் புடையுண்டாரோ, மறப்பரோ பெரியோர் என்றான், வீயினால் தொடுத்த தண்தார் வேந்தரின் வேந்தன் மாமன்)

**விளக்கம் :—**வீயினால் (மலரினால்) தொடுத்த தண்தார் வேந்தர்களின் வேந்தனான துரியோதனனது மாமனாகிய சகுனி,—" தீயினால் சுட்ட புண் ஆறும்; தீயினும் கொடிய வாயினால் வழங்கிய சுடு சொல் ஒரு போதும் மறையாது. மறையாத வடுவாகவே மனத்தில் நிலைத்து இருக்கும். நீங்கள் இழைத்த பிழைகளை மறப்பதற்கு, அவர்கள் பேயினால் புடைக்கப்பெற்று தன்வசம் இழந்த நிலையினர் அல்லரே. எல்லோராலும் நன்கு மதிக்கப் பெற்ற பெரியோரான பாண்டவர்கள், இழைத்த பிழைகளை மறக்க மாட்டார்கள். எனவே, சுதந்திரராய் அவர்கள் பதி மீள்வது உங்களுக்குக் கேட்டையே விளைவிக்கும்," என்று கூறும் கருத்தது. மாற்றம் மாறுமோ, என்றும் பிரியும், தீயினால் சுட்டபுண் ஆறினும் ஆறலாம்; மற்று வாயினால் சுட்ட புண் ஒரு போதும் ஆறாது. என்றதில் ஆறாமையாகிய சிறப்பு பின்னதற்கு இருப்பதால், இது வேற்றுமை அணியின் பாற்படும். ஒப்புடைய இரண்டினை வேறு படுத்திக் காட்டல் இவ்வணியின் இலக்கணம்.

தமையன் ஏவத் தம்பி கூறல்

268. சகுனிசொன் மருகன் கேட்டு தம்பியு மங்கர்
கோவும்
முகமுக நோக்கி யெண்ணி யெம்பி நீ மொழிக
வென்றான்.

துகிலினை யுரிந்த வன்கைங் சூரனுந் தரும
ராசன்
மகனுடன் வெகுளி தோன்ற வழக்குற மொழித
லுற்றான்.

[சகுனி சொல் மருகன் கேட்டு; தம்பியும் அங்கர் கோவும் முகம் முகம் நோக்கி எண்ணி, எம்பி நீ மொழிக என்றான். துகிலினை உரிந்தவல் கை சூர னும், தருமராசன் மகனுடன் வெகுளி தோன்ற வழக்கு உற மொழிதல் உற்றான்.]

**விளக்கம்:**—மருகன் - துரியோதனன். தம்பியும் அங்கர் கோவும் முகம் முகம் நோக்கி. -துச்சாதனன் கர்ணன் ஆகிய இருவரது முகங்களை தனித்தனி நோக்கி. தம்பி நீ மொழிக - (சூதில் எமக்கு இழந்த ராஜ்யத்தைத் தந்தையின் சொல்லால் பெற்றுச் செல்வது சரியன்று என்று தருமனுக்கு) தம்பி நீ சொல்வாயாக. தருமராசன் மகன் - எமதர்மராஜனது மகனான தருமன். வெகுளி தோன்ற - தருமனுக்குக் கோபம் உண்டாகும்படி அல்லது தனது கோபம் வெளித்தோன்ற. வழக்கு உற மொழியல் உற்றான் - தனது கட்சியை விளக்கிக் கூறலானான். ஒரு பெண்ணின் ஆடையை உரிந்தானாதலால், துர்ச்சாதனன் 'வன்கை சூரன்' எனப்பட்டான்.

269. சரதமென் றுண்மை யாகச் சபையினீ யிசைந்து
தோற்ற
இரதமுங் களிறு மாவும் யாவையு மீண்டுந் தாரோம்
சுரதமென் கொடியு நீருந் தொண்டொழிந் துரியீ
ராமின்
விரதமுன் னறத்துக் கென்றும் பொய்கொலோ
மெய்யே யன்றோ

[சரதம் என்று உண்மையாக சபையில் நீ இசைந்து தோற்ற இரதமும் களிறும் மாவும் யாவையும் மீண்டும் தாரோம்; சுரதம் மெல் கொடியும் நீரும் தொண்டு ஒழிந்து உரியீர் ஆமின். விரதம் உன் அறத்துக்கு என்றும் பொய்கொலோ, மெய்யே அன்றோ,]

**விளக்கம்:**—உன் அறத்துக்கு என்றும் விரதமாய் இருப்பது பொய்கொலோ, மெய்யே அன்றோ! சரதம் என்று நீ சபையில் இசைந்து உண்மையாக தோற்ற இரதமும்—தொண்டு ஒழிந்து உரியீர் ஆமின்.—என்பது அன்வயம்.

நீ பூண்டு ஒழுகும் தர்மத்திற்கு எப்பொழுதும் பொருந்திய விரதமாய் இருப்பது பொய்யோ! உண்மையே அல்லவா?— என்பது (ஆட்டத்தில் ஜயம் தோல்விக்குக் கட்டப்படுவது) சரதம் (உறுதி) என்று சொல்லி சத்திய விரதனாகிய நீ ராஜசபையில் மனம் ஒப்பிச் சூதாட்ட முறைப்படி தோற்ற ரதம் யானை குதிரைகளையும், மற்ற எல்லாப் பொருள்களையும் மறுபடியும் தரமாட்டோம், என்று கூறினான் என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். உண்மையாக - ஆட்ட முறைப்படி, (இழந்த பொள்களைத் தர மாட்டோம். என்று கூறியவன், அதன்பின்) சுரதமென் கொடியான திரௌபதியும் நீங்களும் அடிமைத்தனம் நீங்கிச் சுதந்திரம் பெற்றவர் ஆகுங்கள்; என்றான், என்பது பொருள்.

''பொய்யை நீ விரதமாக உடையவனாயின், இழந்த அரசாட்சியை மீண்டும் பெற்றுச் செல்லலாம். நீயோ சத்திய விரதன். அவையில் அரசர் முன்னிலையில் சூதாடி எல்லா வற்றையும் இழந்தாய். வென்ற நாங்கள் உடன்பட்டுக் கொடுத்தாலன்றி, எம் தந்தையின் சொல்லால் இழந்த அரசைப் பெற்றுச் செல்லல் முறையாகாது, இழந்தவற்றை உன்னிடம் பரிசாசக் கொடுக்க இசையோம். உங்களை அடிமைத் தனத் தினின்று விடுவிகின்றோம்,'' என்று துச்சாதனன் கூறினான். என்க, சுரத மென்கொடி - போகத்திற்கு உரிய மெல்லிய கொடி போன்ற திரௌபதி. ஐவருக்கும் அவள் மனைவியாதலால் **போகமாது** என்று திரௌபதியைப் பழிக்கும் கருத்தது. தோற்றவன் தருமனாதலால் நீ என்று ஒருமையிலும், அடிமை நீங்குபவர் ஐவருமாதலால் **நீர்** என்று பன்மையிலும் கூறியபடி.

270. **தந்தைத னருளாற் பெற்றீ ருரிமையுந் தம்பி
மாரும்
பைங்கொடி தானு நீயும் பதிபெயர்ந் துயர்ந்த
வேயின்
வெந்தழ லனைய கானின் வெளிப்படா துறைமி
னின்றே
இந்தமா தரணி கைவிட் டேகுமி னெழுமி
என்றான்.**

[தந்தை தன் அருளால் பெற்றீர் உரிமையும், தம்பிமாரும் பைங்கொடி தானும், நீயும் பதி பெயர்ந்து உயர்ந்த வேயின்வெம் தழல் அனைய கானின் வெளிப்படாது உறைமின் இன்றே; இந்த மா தரணி கை விட்டு ஏகுமின். எழுமின் என்றான்.]

**விளக்கம் :—** நீங்கள் அடிமையாதலால் இங்கேயிருந்து எமக்குப் பணிவிடை செய்ய வேண்டியவர் ஆகின்றீர். எமது தந்தையின் அருளால் அடிமை நீங்கினீர். இனி எங்கள் ராஜ்யத்தில் இராமல் காடு சென்று வாழுங்கள். காடு செல்ல இப்பொழுதே எழுந்திருங்கள்; செல்லுங்கள்,—என்று துச்சாதனன் கூறும் கருத்தது இது. வேய்-மூங்கில்,

**தந்தையின் புனராலோசனை**

271. என்றலுந் தந்தை மைந்த னியம்பிய வாய்மை கேட்டு
நின்றவா நில்லா வஞ்ச நெஞ்சின னாகி மீண்டும்
வென்றிகொ ளரச னோடும் வெஞ்சிலை விதுரனோடும்
ஒன்றிய வமைச்ச ரோடு முறுவன வுசாவ லுற்றான்.

[என்றாலும் தந்தை மைந்தன் இயம்பிய வாய்மை கேட்டு, நின்ற ஆ(று) நில்லா வஞ்சம் நெஞ்சினன் ஆகி, மீண்டும் வென்றி கொள் அரசனோடும் வெம் சிலை விதுரனோடும், ஒன்றிய அமைச்சரோடும் உறுவன உசாவல் உற்றான்.]

**விளக்கம் :—** வாய்மை-வாய்ச்சொல், வார்த்தை. நின்றவா(று) நில்லா வஞ்ச நெஞ்சினான் - நின்றபடி ஒரு நிலையில் நில்லாமல் மாறுபடுகின்ற வஞ்சனையுடைய மனத்தினனான திருதராட்டிரன். வென்றி கொள் அரசன் - வீடுமன். உறுவன - செய்யத்தக்கன, உசாவுதல் - கேட்டல், உசாவலுற்றான்-கலந்து ஆலோசிக்கலானான்,

துச்சாதனன் கூறியன கேட்டு மனம் மாறுபட்ட திருதராட்டிரன், எழுந்துள்ள நிலைமைக்கு ஏற்ப என்ன செய்யலாம் என்று வீடுமன் விதுரன் முதலியவரோடு ஆலோசிக்கலானான்,—என்க. தன் மகனது துர்போதனைக்கு இணங்கிப் பாண்டவரை மண்டபம் காண அழைத்ததோடு, சூதில் தோற்று நின்ற பாண்டவரையும் தர்மவல்லியான பாஞ்சாலியையும் தன்மக்கள் பரிபவப் படுத்தியதை அனுமதித்தவனாய் இருந்து, துகில் வளர்ந்த விந்தையால் அச்சங் கொண்டு. அவர்க்கு உரிமையும் பதியும் வழங்கிய தந்தை, மகன் கூறிய மாற்றத்தால் மனம் மாறியவனாய்ப் பெரியோர்களை உசாவலுற்றா னாதலின், 'நின்றவா நில்லா நெஞ்சன்' எனப்பட்டான்.

272. மேல்வரு கரும மெண்ணா வெகுளியான மிக்க
வீரர்
நால்வரு மெம்ம னோர்க ணவின்றன சிறிதுங்
கேளார்
சேல்வரும் பழன நாட செயலறிந் தெண்ணி வேத
நூல்வரு முறைசொல் லென்றா னோன்சிலை
நூலின் மிக்கோன்.

[மேல் வரும் கருமம் எண்ணா வெகுளியால் நால்வரும் எம் அனோர்கள் நவின்றன சிறிதும்கேளார்; சேல் வரும் பழன நாட, செயல் அறிந்து எண்ணி, வேதம் நூல் வரும் முறை சொல் என்றான், நோன் சிலை நூலின் மிக்கான்.]

**விளக்கம்:**—(தங்களது தீய செயல்களின் பயனாய்) இனி மேல் விளையக் கூடிய கருமத்தை எண்ணித் தெளியாதவரும் கோபம் மிக்கவருமான வீரர்,— என்பது முதலடியின் பொருள். அத்தகையாரான துஷ்ட சதுஷ்டர் நால்வரும், நாங்கள் சொல்லியன கொஞ்சமும் கேளார்; ஆகவே, சேல்மீன்கள் சஞ்சரிக்கும் பழனங்களை உடைய குருநாட்டின் தலைவனே, நீயே செய்யத் தக்கதை ஆராய்ந்து, வேத சாஸ்திரங்களில் கூறியுள்ள முறை கடவாது சொல்க, என்று வில்லாசிரியரான துரோணன். திருதராட்டிரனுக்குக் கூறினான், என்பதாம். நால்வர் - துரியோதனன், அவனது தம்பி, மாமன், நண்பனான கர்ணன். "நாங்கள் சொல்வதை நால்வரும் கேளார்; ஆதலால், உன் மக்களது நன்மையைக் கருதும் நீயே, தர்மவிரோதம் இல்லாமல் ஆலோசித்து முடிவு கூறுக." என்று முனிவன் கூறும் கருத்தது.

**மன்னன் முடிவும் முனிவன் விளக்கமும்**

273. வின்மக னுரைக்க வேனை யமைச்சரும் விதுரன்
றானும்
மன்முறை தவறி னின்றே வசையும்வந் திசையு
மென்றார்
கன்மன நெடுங்குன் றன்னான் கருதியக் கணத்தே
மீளத்
தன்மனை யாவர் நெஞ்சுஞ் சருகெனத் தழைக்கச்
சொன்னான்.

[வில் மகன் உரைக்க ஏனை அமைச்சரும் விதுரன் தானும் மன்முறை தவறின் இன்றே வசையும் வந்து இசையும். என்றார்; கல் மனம் நெடும் குன்று அன்னான் கருதி அ கணத்தே தன்மனை (தருமனை) யாவர் நெஞ்சும் சருகு என அழைக்கச் சொன்னான்.]

**விளக்கம்:—** வில் மகன் - துரோணன். மன் முறை -அரச நீதி. மனம் கல் நெடுங்குன்று அன்னான்- திருதராட்டிரன். அ கணத்தே கருதி மீள யாவர் நெஞ்சும் சருகு என, (தன்) மனம் தழைக்க தன்மனை (தருமனை) நோக்கி சொன்னான், என்று அன்வயிக்க. அந்தக் கணத்திலேயே யோசித்து, மறுபடியும், அவையிருந்தோர் அனைவரது நெஞ்சு சருகுபோல் வாடவும், தன் மனம் கிளர்ச்சி யுறவும் தருமனைப் பார்த்து சொல்வானாயினான், — என்பது பொருள்.

தருமன் என்பது எதுகை நோக்கி தன்மன் என்று விகாரப் பட்டது. பாண்டவர் பால் அருளில்லாது கூறலுற்றா னுதலால் ''கல்மனம் நெடுங் குன்று அன்னுன்'' என்றார்.

274\. உன்னுணர் வுனக்கே யுள்ள துன்பெருந் துணைவ
ரான
கொன்னுனை வேலோர் வென்று கொண்டன
கொடுத்த லொல்லார்
பின்னுற உரிமை யாவும் பெறுதிநின் பெருமைக்
கேற்ப
மின்னுளோர் பலருஞ் செயத முறைமையே
முன்னு கென்றான்.

[உன் உணர்வு உனக்கே உள்ளது. உன் பெருந் துணைவரான கொல் நுனை வேலோர் வென்று கொண்டன கொடுத்தல் ஒல் லோர்; பின் உற உரிமை யாவும் பெறுதி நின் பெருமைக்கு எற்ப, முன் உளோர் பலரும் செய்த முறைமையை முன்னுக என்றான்.

**விளக்கம்:—**உன் உணர்வு உனக்கே உள்ளது - உன்னுடைய நல்லறிவு உன்னொருவனுக்கே உள்ளதாகும்; அதாவது உன்னைப் போன்ற அறிவாளிகள் பிறர் இல்லை, என்றபடி, கொல் நுனை வேலோர் - கொல்லுதற்குரிய கூரிய வேல் ஏந்திய துரியோதனாதியர். நின் பெருமைக்கு ஏற்ப முன்னுளோர் பலரும் செய்த முறைமையை முன்னுதி; பின்னுற உரிமையாவும் பெறுதி, என்பது பின்னிரண்டடிகளின் அன்வயம். உன் பெருமைக்குத் தக்கபடி முன்னோர் பலரும் செய்த முறைப்படி செய்தலை

எண்ணுக; அதன்பின் உனக்கு உரிய நாட்டையும் இழந்த மற்றைப் பொருள்களையும் பெற்றுக்கொள்க. என்பது பொருள்.

''நல்லறிவின் முதிர்ந்த நீ பெரியோர் முறையைப் பின்பற்றி நடத்தலே முறை. என் மைந்தர் வெற்றிப்பொருளைக் கொடுக்க மறக்கின்றனர். சில காலம் காட்டில் வசித்து, மீண்டு வந்து உனக்குரிய இராச்சியத்தை பெறுவாயாக.'' என்று திருதராட்டிரன் கூறினான், என்க. ''நீ காட்டிற்குச் செல்,'' என்று கூற அஞ்சி, மறைமுகமாக, ''பெரியோர் பலர் செய்தபடி செய்ய எண்ணுக,' என்றான், முன்னுளோர் என்றது, இராமன், நளன் முதலியோரைக் குறிக்கும்.

275. அரசன்மற் றுரைத்த மாற்ற மந்தண னுணர்ந்து செல்வ
முரசதி ரயோத்தி மூதூர் முன்னவன் கதையுங் கூறி
உரைசெய்த படியே யுங்க ளுலகினை யிழந்து சின்னாள்
வரைசெறி கானில் வைகி வருவதே வழக்கு மென்றான்.

[அரசன் (மற்று) உரைத்த மாற்றம் அந்தணன் உணர்ந்து, செல்வம் முரசு அதிர் அயோத்தி மூதூர் முன்னவன் கதையும் கூறி, உரை செய்தபடியே உங்கள் உலகினை இழந்து சின்னாள், (சில - நாள்) வரை செறி கானில் வைகி வருவதே வழக்கும் என்றான்.]

**விளக்கம்:**—அரசன் - திருதராட்டிரன், அந்தணன், துரோணன். முரசு அதிர்...கூறி,—முரசம் முழங்கப் பெற்ற செல்வச் சிறப்பு மிகுந்த அயோத்தி என்ற பழமையான ஊரில் அவதரித்த (இராமபிரான்) கதையை எடுத்து கூறி, ''உங்கள் பெரிய தந்தை கூறியபடியே காட்டில் நீங்கள் சில காலம் வசித்து, மீண்டு வரலே, (இப்பொழுதைய நிலையில்) செய்வதற்குரியதாகும்'' என்று துரோணன், திருதராட்டிரனது கருத்தை விளக்கினான், —என்க.

276. அரிவையோ டகன்று நீவி ரைவரு மடவி யெய்திச்
சுரர்தின மீரா றங்கட் டுன்னுதிர் மன்னு நாட்டின்

ஒருவரு மறியா வண்ண மொரு தின முறை
திருங்கள்
பெருவிர லரசும் வாழ்வும் பின்னுறப் பெறுதி
ரென்றான்.

[அரிவையோடு அகன்று நீவிர் ஐவரும் அடவி எய்தி, சுரர் தினம் ஈர் ஆறு அங்கண் துன்னுதிர், மன்னும் நாட்டின் ஒருவரும் அறியா வண்ணம் ஒரு தினம் உறைதிர், உங்கள் பெருவிரல் அரசும் வாழ்வும் பின் உற பெறுதிர். என்றான்.]

**விளக்கம்:—** அரிவை - திரௌபதி அடவி- காடு. சுரர் தினம் ஈராறு - தேவர் தினம பன்னிரண்டு, அதாவது பன்னிரண்டு வருஷம். துன்னுதிர் - வாழ்வீர்களாக. ஒரு தினம் - தேவ தினம் ஒன்று அதாவது ஒரு வருஷம். அதன்பின் பேராற்றலுடன் பரிபாலிக்கப்படும் உங்கள் ராஜ்யத்தையும். செல்வ வாழ்க்கையையும் பெறுவீர்களாக, என்பது ஈற்றடியின் பொருள், மனிதருக்கு ஒரு வருஷம். தேவருக்கு ஒரு தினம். தேவமானத்தால் பன்னிரண்டு நாள் வனவாசமும், ஒருநாள் அஜ்ஞாத வாசமும் செய்து, மீண்டு வந்து உங்களுக்குரிய தாயபாகத்தைப் பெற்றுக் கொள்க, என்று துரோணன் முன் செய்யுளில் கூறியதை விளக்கினான், என்க. ஒருவரும் தங்களை அறிந்து கொள்ளாதபடி வசித்தல் அஜ்ஞாத வாசம்.

277. மறைந்துறை நாளி லும்மை மற்றுளோர் ரீ
ண்டுளாரென்று
அறிந்திடின் மீண்டு மிவ்வா றரணிய மடைதி
ரென்றான்
பிறந்தவிம் மாற்றங் கேட்டுப் பிதாமகன் முதலா
யுள்ளோர்
சிறந்ததொன் றிதனி னில்லை யிசைந்ததே
செய்மி னென்றார்

[மறைந்து உறை நாளில் உம்மை மற்று உளோர் ஈண்டு உளார். என்று அறிந்திடின், மீண்டும் இவ்வாறு அரணியம் அடைதிர் என்றான்; பிறந்த இ மாற்றம் கேட்டு பிதாமகன் முதலாய் உள்ளோர் சிறந்தது ஒன்று இதனின் இல்லை. இசைந்ததே செய்மின், என்றார்.]

**விளக்கம் :**—மற்றுளோர் - பிறர். ஈண்டுளார் - இந்த இடத்திலே இருக்கின்றார்கள். அஜ்ஞாதவாசம் செய்யுங்காலத்தில் நீங்கள் இருக்கும் இடத்தை அறிந்திடின், மீண்டும் பன்னிரண்டு வருடம் வனவாசமும் ஓராண்டு அஜ்ஞாதவாசமும் செய்ய வேண்டியவர் ஆவீர், என்று துரோணன் கூறினான்.—என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். பிறந்த இம்மாற்றம் - துரோணன் வாயினின்று வெளிப்பட்ட வார்த்தை வீடுமன் முதலியோர், இவ்வாறு செய்வதினினும் சிறந்தது ஒன்றில்லை; அரசன் இசைந்ததே (சம்மதித்துக் கூறியதையே) செய்யுங்கள், என்று கூறினார், என்க.

### மறு சூதாடலும் வெல்லலும்

278. சுரிகுழ லலைய நின்ற திரெளபதி சுருதி முந்நூல்
வரபதி மொழிந்த மாற்றங் கேட்டலும் வணங்கி
ஐயவர்
அரசரு மெனது மைந்த ரைவரும் யானு மீண்டும்
உரிமையின் றெய்த வெஞ்சூ தாடுத லுறுதி
யென்றாள்.

[சுரிகுழல் அலைய நின்ற திரெளபதி சுருதி முந்நூல் வரம் பதிமொழிந்த மாற்றம் கேட்டலும், வணங்கி, ஐவர் அரசரும் எனது மைந்தர் ஐவரும், யானும் மீண்டும் உரிமை இன்று எய்த வெம் சூது ஆடுதல் உறுதி என்றாள்.]

**விளக்கம்:**—சுருதி முந்நூல் வரபதி - துரோணன். உறுதி - **நலம்**. தந்தையின் சொல்லுக்குக் கட்டுப்படாத துரியோதனாதியர், கடவநாள் கழித்து வந்த பின்னும், அடிமைத்தனம் நீங்காமையைக் காட்டி ராஜ்யங் கொடுக்க மறுக்கலாமாதலால், அடிமைத் தளையிலிருந்து நீக்கிக்கொண்டு வனம் போதலே நலமாகும் என்று திரெளபதி கூறினாள்,—என்பது கருத்து. ஐவர் அரசர் - பாண்டவர். மைந்தர் ஐவர் - உபபாண்டவர் ஐவர். திரெளபதியிடம் தருமனுக்கு **பிரதிவிந்தியன்** என்பவனும், வீமனுக்கு **சுதசோமன்** என்பவனும், அருச்சுனனுக்கு **சுருதகீர்த்தி** என்பவனும், நகுலனுக்கு **சதாநீகன்** என்பவனும் சகாதேவனுக்கு **சுருதசேனன்** என்பவனும் பிறந்தவர்

279. தையலங் குரைத்த மாற்றந் தருமனுங் கேட்டு
நாங்கள்
கையறு தொண்ட ராகிக் கான்புகல வழக்கு
மன்றால்

ஐயுறா தொருகா லின்ன மாடுது மருஞ்சூ
தென்றான்
மெய்யுற விருந்த வேந்தர் மீளவுங் காண லுற்றார்.

[தையல் அங்கு உரைத்த மாற்றம் தருமனும் கேட்டு, நாங்கள் கை அறு தொண்டர் ஆகி கான் புகல் வழக்கும் அன்று (ஆல்). ஆடுதும் அருஞ்சூது என்றான், மெய் உற இருந்த வேந்தர் மீளவும் காணல் உற்றார்.]

**விளக்கம்:**—கையறு தொண்டர் - சுதந்திரம் அற்ற அடிமையர். வழக்கு - முறை. ஐயுறாது - சந்தேகத்திற்கு இடமில்லாதபடி, மெய்யுற - சாட்சியாக. ''வனவாசம் முடித்து வந்தபின் துரியோதனாதியர் எங்களது தாய பாகத்தைக் கொடுக்காமைக்கு, எமது அடிமை நிலையைக் கருவியாகக் கொள்ளக்கூடும், என்பதோடு, தமது இச்சையின் வழி கானகம் சென்று சுதந்திரராய் வசித்தற்கும் அடிமைகளுக்கு உரிமையில்லையாதலால், அடிமை நீக்கம் அவசியமாகின்றது; எனவே, சூதாடலை செய்கின்றேன்,' என்று தருமன் கூறினான், என்பதாம்.

280. சத்திய விரதன் தானுந் தன்பெருந்தேவிசொல்லப்
புத்தியால் வணங்கி மாயன் பன்னிரு நாம மேத்தி
ஒத்தவெண் கவறு வாங்கச் சகுனியா தொட்ட
மென்றான்.
புத்தியா லவனும் யான்செய் புண்ணிய மனைத்து
மென்றான்.

[சத்திய விரதன் தானும் தன் பெரும் தேவி சொல்ல, புத்தியால் வணங்கி மாயன் பன்னிரு நாமம் ஏத்தி, ஒத்த வெள் கவறு வாங்க, சகுனி யாது ஒட்டம் என்றான்? புத்தியால் அவனும் யான் செய் புண்ணியம் அனைத்தும் என்றான்.]

**விளக்கம் :**—மாயன் பன்னிரு நாமம் - கண்ணனது பன்னிரு திருநாமங்கள். ஒட்டம் - பணயம். புத்தியால் - மனத்தெளிவோடு- திரௌபதி சொல்லியபடி மாயனை மனத்தால் வணங்கி, அவனது பன்னிரு திருநாமங்களையும் ஜபித்து, இதுவரை தான் செய்த புண்ணியம் அனைத்தையும் பணயமாய் வைத்து ஆடினான்.—என்க.

281. உருட்டிய கவறு நேமி யுடைய வனருளி னாலே
மருட்டிய சகுனி யெண்ணின் வழிப்படா துருண்ட
காலை

இருட்டிய விழியான் மைந்த னிதயமு மிருண்டு
சோரத்
தெருட்டிய யுணர்வின் மிக்கோன் செப்பிய யாவும்
வென்றான்.

[உருட்டிய கவறு நேமி உடையவன் அருளினாலே மருட்டிய சகுனி எண்ணின் வழிப்படாது உருண்டகாலை, இருட்டிய விழியான் மைந்தன் இதயமும் இருண்டு சோர, தெருட்டிய உணர்வின் மிக்கோன் செப்பிய யாவும் வென்றான்.]

**விளக்கம் :—**நேமி உடையவன் - கண்ணன். மருட்டிய சகுனி எண்ணின் வழிப்படாது - மாயம் செய்த சகுனியின் எண்ணத்தின்படி (கவறு) உருளாமல். இருட்டிய விழியான் - திருதராட்டிரன், மைந்தன் - துரியோதனன். தெருட்டிய உணர்வின் மிக்கோன் - தெளிந்த அறிவினால் மிக்கவனான தருமன். செப்பியாவும் வென்றான் - பந்தயமாகச் சொல்லிய பொருள்கள் எல்லாவற்றையும் வென்றான். தான், தம்பியர் நால்வர், திரௌபதி, அவளது மைந்தர்களாகிய உபபாண்டவர், ஆகியவர்களது அடிமைத்தளை நீக்கம், **செப்பிய பொருளாகும்** என்க.

### தருமன் கான் செல்லல்

282. வென்றுதன் னிளைஞ ரோடும் மேதகு புதல்வ
ரோடும்
மன்றலந் தெரிவை யோடும் மற்றுளோர் தங்க
ளோடும்
அன்றுதன் குரவர் பொற்றா ளன்புடன் வணங்கிக்
கானம்
சென்றன னென்ப மன்னோ செழுநில முடைய
கோமான்

[வென்று தன் இளைஞரோடும் மேதகு புதல்வரோடும் மன்றல் அம் தெரிவையோடும், மற்று உளோர் தங்களோடும், அன்று தன் குரவர் பொன் தாள் அன்புடன் வணங்கி கானம் சென்றனன் என்ப மன்னோ, செழு நிலம் உடைய கோமான்.]

**விளக்கம்:—**மேதகு புதல்வர் - உபபாண்டவர். மன்றல் அம் தெரிவை - திரௌபதி. மற்றுளோர் - பரிசனங்கள். என்ப மன்னோ. என்ற தொடர் இரக்கப் பொருளது. செழுநிலம்

உடைய கோமான் - தருமன். தருமன், பெரியோர்களை வணங்கி விடை கொண்டு, தம்பியர், மனைவி, புதல்வர், தன்னைச் சேர்ந்தோர் ஆகியவரோடு அன்றே கான் நடந்தான், —என்பதாம்.

நால்வர் ஒழிந்த மற்றவர் வருந்தல்

283. ஒழிவுசெய் கருணை நால்வ ருள்ளமு மொழிய
வேனை
வழுவிறு மன்ன ருள்ள மம்மரோ டயர்ந்து விம்மக்
குழவிபா னுகர்த லின்றிக் கொற்றமா நகரி மாக்கள்
தழலென வுயிர்த்து மாழ்கித் தனித்தனி புலம்ப
லுற்றார்.

[ஒழிவு செய் கருணை நால்வர் உள்ளமும் ஒழிய ஏனையவழு அறு மன்னர் உள்ளம் மம்மரோடு அயர்ந்து விம்ம, குழவி பால் நுகர்தல் இன்றி, கொற்றம் மா நகரி மாக்கள் தழல் என உயிர்ந்து, மாழ்கி தனிதனி புலம்பல் உற்றார்.]

**விளக்கம்:**—கருணை ஒழிவு செய் நால்வர் - கருணை நீங்கச் செய்துள்ள, (கருணை நீங்கிய) துஷ்டர்கள். மம்மர் - மயக்கம், கலக்கம். அயர்ந்து விம்ம - தளர்ந்து வருந்த, அல்லது புலம்ப. நகரிமாக்கள் - நகரத்திலுள்ள மக்கள். நெருப்பைப்போல் வெப்பமாகப் பெருமூச்சுவிட்டு வருந்தி ஒவ்வொருவரும் தனித் தனி புலம்புவாராயினர்,—என்பது, ஈற்றடியின் பொருள். "இளங்குழந்தைகள் பால் உண்ணலை விடுத்தன," என்பதால், ஏனையோருடைய துன்பத்தின் மிகுதியைப் புலவர் அளந்து காட்டியபடி.

284. நாட்டிடை யெல்லை பொற்றா ணறுமலர் சிவக்க
வேகிக்
காட்டிடைப் புகுந்த போதும கலக்கமற் றுவகை
கூர்ந்தான்
கூட்டிடை யின்ப துன்பக் கொழும்பயன் துய்த்து
மாறி
வீட்டிடைப் புகுதும் போது மெய்மகிழ் விபுதர்
போல்வான்

[நாட்டிடை எல்லை பொன் தாள் நறுமலர் சிவக்க ஏகி, காட்டிடை புகுந்த போதும் கலக்கம் அற்று உவகை கூர்ந்தான்

கூட்டிடை இன்பம் துன்பம் கொழும் பயன் துய்த்து, மாறி வீட்டிடை புகுதும் மெய் மகிழ் விபுதர் போல்வான்.]

**விளக்கம்:**—கூட்டிடை...விபுதர் போல்வானான தருமன், நாட்டிடை...கலக்கம் அற்று, உவகை கூர்ந்தான்,—என்பது அன்வயம். நாட்டிடை எல்லை - நாட்டினது எல்லை முழுவதும். பொன் தாள் நறுமலர் - அழகிய பாதங்களாகிய நல்லமலர்கள், கூடு - கர்ம சரீரம், (உடல்). கொழும் இன்ப துன்பம் - மிக்கவான இன்ப துன்பங்கள். துய்த்து-அனுபவித்து. மாறி - கரும வசப்பட்ட நிலைமை மாறி (அகன்று) வீடு-மோட்சம். மெய் மகிழ் விபுதர் - உண்மையாக மகிழும் முக்தர். தாமரை இலைத் தண்ணீரைப் போல், உலகத்தோடு ஒட்டியிருந்தும் ஒட்டாதவராய், ஊழின் பயனாய் வந்தெய்தும் இன்ப துன்பங்களைச் சமமாய் ஏற்று வாழ்ந்து, வினை அறுத்து வீடு நோக்கிச் செல்லுங்கால் முக்தர்கள் எவ்வளவு மகிழ்ச்சியோடு செல்வார்களோ, அவ்வளவு மகிழ்ச்சியோடு, யானையிலும் தேரிலும் செல்லும் தருமன், இப்பொழுது பாத சாரியாய்க் கான் நடந்தான், என்பது கருத்து. உயிர் சிலகாலம் உறைதற்கு இடமாதல் பற்றி. உடல் கூடு எனப்பட்டது.

**சூது போர்ச் சருக்கம் முற்றும்.**

**சபா பருவம் முற்றும்.**

# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

# வில்லி பாரதம்

## முதல் தொகுதி மொத்த செய்யுள்கள் 1258

பாயிரம் செய்யுள்கள் 28

தற்சிறப்புப்பாயிரம் செய்யுள்கள் 8

**1. ஆதி பருவம் செய்யுள்கள் 790**

| | | |
|---|---|---|
| 1. | குருகுலச் சருக்கம் | 147 |
| 2. | சம்பவச் சருக்கம் | 119 |
| 3. | வாரணாவதச் சருக்கம் | 136 |
| 4. | வேத்திரகீயச் சருக்கம் | 65 |
| 5. | மாலையிட்ட சருக்கம் | 109 |
| 6. | இந்திரப் பிரத்தச் சருக்கம் | 47 |
| 7. | தீர்த்த யாத்திரைச் சருக்கம் | 90 |
| 8. | காண்டவ தகனச் சருக்கம் | 77 |

**2. சபாபருவம் செய்யுள்கள் 437**

| | | |
|---|---|---|
| 1. | இராய சூயச் சருக்கம் | 153 |
| 2. | சூது போர்ச் சருக்கம் | 284 |

# வில்லி பாரதம்

## இரண்டாம் தொகுதி மொத்த செய்யுள்கள் 1448

# வில்லி பாரதம்

## மூன்றாம் தொகுதி மொத்த செய்யுள்கள் 1654

